# நா. பார்த்தசாரதி

# சிறுகதைகள்

2

தமிழ்ப்புத்தகாலயம்

# நா. பார்த்தசாரதி சிறுகதைகள்

– இரு தொகுதிகள் –

**2**

## நா. பார்த்தசாரதி

தொகுப்பு : அகிலன் கண்ணன்





## தமிழ்ப் புத்தகாலயம்

**பு.எண் 34/ப.எண். 35, சாரங்கபாணித் தெரு**
**காமராஜர் இல்லம் அருகே, திருமலைப்பிள்ளை சாலை குறுக்கே**
**தி.நகர் சென்னை – 600 017 ☎ - 28340495, 28344528**

மின்அஞ்சல் : tamilputhakalayam@yahoo.com
வலைப்பக்கம் : http://expage.com/tamilputhakalayam
http://akilan.50megs.com

# நா. பார்த்தசாரதி சிறுகதைகள்

(இரண்டாம் தொகுதி)

முதற் பதிப்பு : டிசம்பர் 2005

**விலை ரூ.950/–**

(இரு தொகுதிகளும் சேர்த்து)

NA. PARTHASARATHI SIRUKATHAIGAL
by Na. Parthasarathi
Compiled by Akilan Kannan

First edition : December 2005
Pages : 1248 (in two volume)
Cover Design: K. Uma
TAMIL PUTHAKALAYAM
N.No34/O.No.35, Sarangapani Street
Near Kamaraj House
Off : Thirumalai Pillai Road
T. Nagar, Chennai - 600 017
Phone : 28340495, Fax : 28344528
E-mail : tamilputhakalayam@vsnl.com
Website : http://expage.com/tamilputhakalayam
http://akilan.50megs.com

**Price Rs.950/-**

**ISBN No.81-89628-01-01**(set - two vol.)



Laser Typeset at : **Shree Srinivasa Designs,**
Ph : 9841384410

Printed at :
Jai Ganesh Offset Printers, Chennai - 04

## உள்ளே...

# 83. அத்தியூற்று

**பா**ரஸ்டு கார்டு பரசுராம் துப்பாக்கியைத் தோளில் மாட்டிக்கொண்டு தைரியமாக முன்னே சென்றார். நாங்கள் பயந்துகொண்டே அவரைப் பின்பற்றி நடந்தோம்.

மேற்கு மலைச் சிகரங்களில் கதிரவன் மறையும் காட்சி மனோரம்மியமாக இருந்தது. ஆனால், எங்களுக்கு இருந்த நடுக்கத்தில் அழகை நாங்கள் ரசிக்க முடியவில்லை. நாங்கள் நடந்துகொண்டிருக்கும் போதே தொலைவில் எங்கோ யானைகள் பிளிரும் ஒலி, பசியால் குரூரமாக உறுமிக் கொண்டிருக்கும் புலி ஒன்றின் குரல் இவைகளைக் கேட்டோம்.

"பரசுராம் ஸார்! கொஞ்சம் வேகமாக நடப்போம். எங்களுக்கெல்லாம் பயமாக இருக்கிறது. இருட்டுவதற்குள்ளேயாவது நாம் 'ரெஸ்ட் ஹவு'ஸில் இருக்க வேண்டாமா?" நான், பயப்படும் எங்கள் கோஷ்டியினரின் சார்பாகப் பரசுராமனிடம் இந்தப் பிரேரணையை வெளியிட்டேன்.

"ஏன் ஸார், வீணாகப் பதறுகிறீர்கள்? துப்பாக்கியே இல்லாமல் நடு ராத்திரியில் வெட்டரிவாளோடு அத்தியூற்றுக் கரைக்குப் போய்க் கரடிக் கும்பலுக்கு நடுவே தைரியமாக வெற்றி வாகை சூடி வந்தான் ஒரு சின்ன முத்துப் பண்டாரம். அவனும் நம்மைப்போல் ஒரு சாதாரண மனிதன்தான். அவனோடு பந்தயம் போட்டுத் தோற்றுப் போய் 50 ரூபாயை எண்ணிக் கொடுத்தோம். அப்போது ... அந்த ராத்திரியில் இவன் செய்த தீரச் செயல்களை இப்போது நினைத்தாலும் சதை ஆடுகிறது. நாமும் மனிதர்கள் தாமே?" பரசுராம் இப்படி எனக்கு ஆறுதல் கூறவும், சின்னமுத்துப் பண்டாரத்தைப் பற்றித் தெரிந்து கொள்ள வேண்டும் என்ற ஆசை எனக்கு உண்டாயிற்று.

நான் பயத்தை மறந்து பரசுராமைத் தூண்டினேன். 'ரெஸ்ட் ஹவு'ஸிற்குப் போனவுடன் கூறுவதாக ஒப்புக் கொண்டார் பரசுராம். எல்லாருமே வேகமாக நடந்தோம்.

நாங்கள் 'ரெஸ்ட் ஹவு'ஸை அடையும்போது மணி ஆறரை ஆகியிருந்தது. அங்கே பரசுராம் செய்திருந்த ஏற்பாட்டின்படி, ஒரு காட்டிலாகா வேலையாள் தேநீர் தயாரித்து வைத்திருந்தான். பலாச்சுளைகளை உட்கொண்டு தேநீர் பருகினோம். நாங்கள் பரசுராமைச் சுற்றி உட்கார்ந்ததும் அவர் சொல்லத் தொடங்கினார்.

* * *

**எ**ங்கள் பாரஸ்ட் ஏரியாவுக்கு அத்தியூற்று ஏரியா என்பது பெயர். ஏரியாவிலேயே முக்கியமானதும் சர்க்காருக்கு அதிக வருமானத்தைக் கொடுக்கக் கூடியதுமான இடம் அத்தியூற்று.

பலா மரங்கள் இருக்கக்கூடிய அத்தியூற்றுக் கரையைப் பற்றியோ நான் சொல்ல வேண்டியதே இல்லை. அது நீங்களே பார்த்த இடம்தானே? பயங்கரமான பள்ளத்தாக்கு அது. எவ்வளவு கரடிகள் இந்த மலைத்தொடரில் உண்டோ, அவ்வளவு கரடிகளும் பலாப்பழக் காலம் வந்து விட்டால் அத்தியூற்றுக் கரைக்கு வந்துவிடும்.

இதனால் சர்க்காரிடமிருந்து பலாமரங்களைக் குத்தகைக்கு எடுப்பதற்கு எவரும் முன் வருவதற்குத் தயங்கினார்கள். அந்த வருடம் சர்க்காருடைய அதிர்ஷ்டமோ, அல்லது கரடிகளுடைய துரதிர்ஷ்டமோ தெரியவில்லை, பலாத் தோப்பு முழுவதும் ஒரு கணிசமான தொகைக்கு ஏலம் போயிற்று.

மலையடிவாரத்தில் கான்சாபுரம் என்று ஒரு ஊர் இருக்கிறது பாருங்கள்! அந்த ஊரைச் சேர்ந்த வேல்சாமித் தேவர் என்பவர் குத்தகையைத் துணிந்து எடுத்திருந்தார்.

சின்ன முத்துப் பண்டாரம் இந்த மலைப் பிராந்தியத்தில் தலை சிறந்த வேட்டைக்காரன். வேல்சாமித் தேவருக்கு வலது கை என்றே அவனைச் சொல்லலாம். அவ்வளவு நெருக்கமான பழக்கமும் விசுவாசமும் தேவரிடம் அவனுக்கு உண்டு. வேல்சாமித் தேவருடைய குத்தகையை லாபகரமாக நிறைவேற்றி வைப்பதற்குத் தன்னால் ஆன உதவிகளையெல்லாம் செய்வதாக வாக்களித்திருந்தான்.

பலா மரங்கள் பண்டாரத்தின் காவலில் இருக்கின்றன என்ற செய்தியே, பலாப்பழம் திருட வருகிறவர்களைச் சரியானபடி எச்சரித்துத் தடுத்துவிட்டது. மனித உருவில் வருகிற இந்தத் திருடர்களின் தொல்லை ஓய்ந்திருந்தாலும் அதைப் போல் நான்கு மடங்கு தொல்லையைக் கரடிகள் கொடுத்தன. பகல் முழுவதும் தன்னுடைய வேட்டைத் திறமையினாலும் வெடிச்சத்தங்களாலும் அவற்றைத் துரத்திப் பலாப் பழங்களைப் காப்பாற்றிவிட்டான் சின்னமுத்துப் பண்டாரம். இரவிலும் ஒரு பெரிய வாகை மரத்தில் பரண் கட்டிக்கொண்டு, கரடிகள் வருகிற அறிகுறி தென்படும் போதெல்லாம், வெடிச் சத்தத்தைக் கிளப்பியும் குரல் கொடுத்தும் விரட்டி வந்தான். இருந்த போதிலும், பழங்களில் சிலவற்றைக் கரடிகள் நாள் தவறாமல் சிதைத்துக் கொண்டேதான் இருந்தன.

ஆனால், அந்தச் சிதைவினால் தேவருடைய குத்தகைக்குச் சிறிதும் நஷ்டம் ஏற்படாமல் பாதுகாத்து விட்டான் சின்னமுத்து. பலாப்பழக் காலம் தொடங்கியபின், முதல் மாத விற்பனையிலேயே குத்தகை பேசிய அசல் தொகை தேறிவிட்டது தேவருக்கு.

இந்தச் சமயத்தில்தான் எங்கள் இலாகா இன்ஸ்பெக்ஷனும் வந்தது.

அன்று மாலை மூன்று மணிக்கு நானும் இன்ஸ்பெக்ஷனுக்காக வந்திருந்த, ஏற்கனவே எனக்குப் பழக்கமான இன்ஸ்பெக்டரும் அத்தியூற்றுக் கரையில் சில இடங்களைப் பார்வையிட்டவாறே நின்று பேசிக் கொண்டிருந்தோம்.

அப்போது சின்னமுத்துப் பண்டாரம் பின்தொடர வேல்சாமித் தேவர் அங்கே வந்தார். நான் தேவரை வரவேற்று இன்ஸ்பெக்டருக்கு அறிமுகம் செய்து வைத்தேன்.

*சின்னமுத்துப் பண்டாரத்தின் வேட்டைத் திறமையைப் பற்றியும் அவரிடம் சிலாகித்துக் கூறினேன்.*

*சுவாரஸ்யமாகப் பேசிக்கொண்டே நடந்த நாங்கள் நால்வரும், பலாப்பழக் காவல் நிமித்தம் இரவில் தங்குவதற்காக மரத்தின் உச்சிக் கிளைகளுக்கிடையே பண்டாரம் பரண் போட்டிருந்த வானளாவிய வாகை விருட்சத்தின் பக்கமாக வந்து சேர்ந்திருந்தோம். கரடி மேலே ஏறமுடியாதபடி அந்த வாகை மரத்தைச் சுற்றி ஆழமான குழி வெட்டப்பட்டு, குழிக்குள் முள்ளுக் கிளைகளை வெட்டிப் போட்டிருந்தார்கள். குழியைத் தாண்டி மரத்தின் அடிப்பகுதியை அடைய ஒரு பனை முண்டு இடப்பட்டிருந்தது. பண்டாரம் பரணில் ஏறிக் கொண்டதும் அந்தப் பனை முண்டுப் பாலத்தை நீக்கிவிடுவானாம்.*

*அந்த மரத்துக்கு அருகே கீழே ஓடும் அத்தியூற்றுக் கால்வாயின் குளிர்ந்த நீர்ப்பரப்பில் காலை இட்டுக்கொண்டே நாங்கள் மூன்று பேரும் பாறை ஒன்றில் அமர்ந்தோம். சின்னமுத்துப் பண்டாரம் மரியாதைக்காக அடக்க ஒடுக்கத்தோடு கை கட்டிக் கொண்டு பவ்வியமாக அருகில் நின்றான்.*

*காட்டிலாகா இன்ஸ்பெக்டர் தேவரிடமும் என்னிடமும் வேட்டையாடும் விதங்களைப் பற்றியும், ஆங்கிலத்தில் வனமிருகங்களோடு வேட்டைக்காரர்கள் போராடும் காட்சிகளை மயிர் சிலிர்க்கும்படியான சினிமாப் படக்காட்சிகளாக எடுப்பதைப் பற்றியும், கதை கதையாகச் சொல்லிக் கொண்டிருந்தார்.*

*"ஜங்கிள் கிங் என்ற ஓர் ஆங்கிலப் படம், ஸார்! போனமாசம் 'ரீக'லில் ஓடியது. அதிலே பாருங்கள், ஒரு பயங்கரமான காட்சி. காட்டில் எட்டுப் பெரிய கரடிகளுக்கு நடுவே ஒரே ஒரு வீரன் நின்று போராடுகிறான். என்ன அற்புதமாக எடுத்திருக்கிறான்! தத்ரூபம் என்றால் தத்ரூபம்தான், போங்க" இன்ஸ்பெக்டர் சொல்லி வாய் மூடவில்லை.*

*"அதிலென்னங்க ஆச்சரியமிருக்குது? இங்கே மலங்காடுங்களிலே எத்தனையோ நாள் கரடி மந்தைங்களையே தனி ஆளாயிருந்து சமாளிச்சு மீண்டும் வர்ரதுண்டுங்களே!" சின்னமுத்துப் பண்டாரம் பெருமிதம் தொனிக்கும் குரலில் கூறினான்.*

*"சும்மா எங்கிட்டே உருட்டாதே, 'மேன்'! இங்கேதான் பலாப் பழத்துக்குக் கரடிகள் கூட்டம் கூட்டமாக வருமே? இன்று இரவே உன்னால் நிரூபித்துக் காட்ட முடியுமா? நீ கரடிகளோடு போராடுவதை இங்கு வாகை மரத்துப் பரண் மேலிருந்து நாங்கள் பார்ப்போம். நீ சொன்னபடி செய்து மீண்டும் வந்தால் நான் உனக்கு ஐம்பது ரூபாய் தருகிறேன். இல்லையானால், நீ எனக்கு ஐம்பது ரூபாய் தரவேண்டும்! சம்மதமா? சம்மதமானால் பேசு! சும்மா வாயளப்பு வேண்டாம்!" ஆத்திரத்தோடு சின்ன முத்துப் பண்டாரத்தை விரட்டிப் பார்த்தார் இன்ஸ்பெக்டர்.*

*ஆனால், அவனோ அதற்கும் அசரவில்லை. "ஓ! இப்பவே இன்னிக்கி ராத்திரியே தயாருங்க. பந்தயமா நீங்க சொன்னதுபோல அம்பது ரூவா வச்சுக்குங்க. இதோ, இந்த*

வெட்டரிவாளை மட்டும் நான் உபயோகிச்சுக்கலாமாங்க" என்று கூறிவிட்டுப் பாறையில் அரிவாளைத் தீட்டத் தொடங்கி விட்டான் சின்னமுத்துப் பண்டாரம்!

நானும் தேவரும் எவ்வளவோ தடுத்தும் பயன்படவில்லை. சின்னமுத்துவும் இன்ஸ்பெக்டரும் கடைசி வரை தங்கள் பந்தயத்திலும் தீர்மானத்திலும் உடும்புப் பிடியாக நின்றார்கள்.

இரவுச் சாப்பாட்டை முடித்துக்கொண்டு எல்லோரும் வாகை மரத்தடியில் சந்திப்பது என்று தீர்மானித்துக் கொண்டோம்.

அன்று அமாவாசைக்கு முதல் நாளாகையினால் இருட்டு மைக் குழம்பாக இருந்தது. நாங்கள் நான்கு பேரும் வாகை மரத்துப் பரண் மேல் உட்கார்ந்திருந்தோம். கீழே வனவிலங்குகளின் அட்டகாசம் பயங்கரமான ஒலிகளின் மூலம் எங்கள் செவியை எட்டிக்கொண்டிருந்தது.

வாகை மரத்திற்கு நேர் எதிரே அத்தியூற்று நீர் ஓடையின் சரிவிலிருந்த ஒரு பெரிய பலாமரத்தின்மேல் பேட்டரி லைட்டை அடித்துப் பரணிலிருந்தே பார்த்தார் தேவர். கீழே எழுபதடி பள்ளத்தில் இருபதடி தூரத்தில் அமைந்திருந்தது அந்தப் பெரிய பலாமரம்.

பேட்டரி விளக்கின் மங்கலான வெளிச்சத்தில் நாங்கள் நுணுக்கமாக நோக்கினோம். அந்த மரத்தின் தூரிலிருந்த நாலைந்து பலாப்பழங்களைச் சுற்றிலும் பூதாகாரமான கரும் பூதங்களைப்போல் ஐந்தாறு கரடிகள் மொய்த்துக் கொண்டிருந்தன. காட்டு மிருகங்களை அடிக்கடி கண்டு குளிர்விட்டுப்போன எங்களையே புல்லரிக்குமாறு செய்தது அந்தக் காட்சி.

என் கைக்கடிகாரத்தில் ரேடியோ எண்களும் முட்களும் அமைந்திருந்ததனால் நான் மணி பதினொன்று என்று இன்ஸ்பெக்டரிடம் கூறினேன்.

"நேரே அந்தப் பலாமரத்தின் தூருக்குப்போய், கரடிகள் மொய்த்திருக்கும் பலாப்பழங்களில் ஒன்றை எடுத்துக்கொண்டு, அவைகளை வென்றுவிட்டு இங்கே வரவேண்டியது. முக்கால் மணி நேரத்துக்குள் மரத்தடிக்குத் திருப்பிப் பரணுக்கு வந்துவிட வேண்டும். இவைகள் என் நிபந்தனைகள்" என்றார் இன்ஸ்பெக்டர்.

"உங்க நிபந்தனைப்படியே நான் போய் வர்ரேனா இல்லையாங்கிறதை, பேட்டரி லைட்டு அடிச்சு நல்லாப் பார்த்துக்குங்க." கூறிக்கொண்டே நீண்ட வெட்டரிவாளை இடுப்பிலே சொருகிக்கொண்டு வாகை மரத்துப் பரணிலிருந்து கீழே இறங்கினான் சின்னமுத்துப்பண்டாரம்.

"பண்டாரம்! பந்தயம், வீராப்பு, இதையெல்லாம்விட உயிர் பெரிசு, அப்பா! ஜாக்கிரதை!" தேவர் எச்சரித்தார்.

"நீங்க பேசாமே நடக்கிற வேடிக்கையைப் பார்த்துக்கிட்டிருங்க. எனக்கா அதெல்லாம் தெரியாது. உங்க இனிசுபெட்டர் ஐயாவை ஐம்பது ரூபாயை இப்பவே எண்ணி வச்சுக்கிடச் சொல்லுங்க." இப்படிக் கூறியபடி வாகை மரத்தின் கீழே இறங்கிப்

பள்ளத்தைக் கடந்து பலா மரத்தை நோக்கி உருவிய அரிவாளுடனே நடந்தான் சின்னமுத்துப் பண்டாரம்.

எனக்கு நெஞ்சு பதறியது; உடல் நடுங்கியது. தேவர் மீண்டும் பாட்டரி லைட்டின் விசையை அழுத்தினார். அதன் ஒளியில் எங்களுக்கு அரிவாள் ஏந்திய கையுடன் அடிமேல் அடி வைத்துப் பலாமரத்தை நெருங்கும் சின்னமுத்துவின் சிறிய உருவம் தெரிந்தது.

பண்டாரம் போகிற போக்கில் வெறொரு பலாமரத்திலிருந்த முதிர்ந்து கனிந்த பழமொன்றை இரு கூறாக வகிர்ந்து எடுத்துக்கொண்டு குறிப்பிட்ட பலாமரத்திற்குச் சென்றான். அவன் எதற்காக ஒரு கையில் அரிவாளையும் மற்றொரு கையில் பலாப்பழத்தையும் எடுத்துக்கொண்டான் என்பது எங்களுக்கு விளங்கவே இல்லை. பண்டாரம் அடுத்த விநாடி மயிர் சிலிர்க்கும்படியான கூச்சல் ஒன்றைப் போட்டுக் கொண்டே ஓங்கிய அரிவாளுடன் பலாமரத்தை நெருங்கிவிட்டான். என்ன பயங்கரம்! ஏககாலத்தில் அங்கே கூடியிருந்த அத்தனைக் கரடிகளும் அவனை நோக்கிப் பாய்ந்து வளைத்துக்கொண்டன.

தேவர், சின்னமுத்து உயிர் பிழைப்பது துர்லபம் என்று எண்ணிக்கொண்டு, நான் மறைவாகப் பரண்மீது ஒளித்து வைத்திருந்த துப்பாக்கியை எடுத்துக்கொண்டு கீழே இறங்கிக் கரடிகளைச் சுடத் தயாராகிவிட்டார்.

எனக்கும் இன்ஸ்பெக்டருக்கும் ரத்தம் உறைந்துவிட்டது. பேட்டரி லைட்டின் மங்கலான ஒளியில் பலாமரத்தடியில் சின்னமுத்துவின் உருவமே தெரியவில்லை. ஒரே கரடிக் கும்பலாகத் தெரிந்தது. அதற்கிடையில் லேசாக ஒரு மனித உருவம் தெரிவதுபோல் இருந்தது. காது செவிடாகும்படியான கரடிகளின் பயங்கர ஓலம்.

இந்த நிலைமையில், நாங்கள் மூவருமே திகைத்து மலைக்கும்படியான ஒரு செயலைச் சின்னமுத்து செய்தான்.

கையிலிருந்த பலாப்பழத்தோடும் அரிவாளோடும் ஒரே தாவாகத் தாவி மரத்தின் அடிக் கிளையின் மேல் நின்று கொண்டு பழத்தை இரு கூறாகப் பிளந்து கீழ் நோக்கி நீட்டினான். அவன் எதிர்பார்த்தபடியே ஒரே சமயத்தில் நாலைந்து கரடிகள் அந்தப் பழக் கீறலை நோக்கித் தலையை உயர்த்தி வாயைப் பிளந்தன. சட்டென்று உடனே பழக் கீறலை இடது கைக்கு மாற்றிக்கொண்டு வலது கையால் அரிவாளை ஓங்கினான் சின்னமுத்து. இருளில் வேகமாக அவன் அரிவாள் மின்னிப் பாய்வதையும் கரடிகள் ஓலமிட்டுக் கொண்டு கீழே விழுவதையும் நாங்கள் கண்டோம்.

**ப**ந்தய நிபந்தனைப்படி முக்கால் மணி நேரத்தில் அதே மரத்திலிருந்து முழுப்பழம் ஒன்றை அறுத்துக் கொண்டு வெற்றி வீரனாக இறுமாப்பு நடை போட்டு வந்து சேர்ந்துவிட்டான் சின்னமுத்துப் பண்டாரம். இன்ஸ்பெக்டர் வாயடைத்துப் போய் நின்றார். நானும் தேவரும் அவன் சாமர்த்தியத்தைப் பாராட்டினோம். மணி பர்ஸைத் திறந்து ஐந்து பத்து ரூபாய் நோட்டுக்களை அவனிடம் நீட்டினார் இன்ஸ்பெக்டர்.

"அத்தியூற்று சின்னமுத்துப் பண்டாரம் எப்படிப் பட்டவன்னு நீங்கள் தெரிஞ்சுக்கிட்டாப் போதும்; பணம் வேண்டாமுங்க" என்றான் சின்னமுத்து. இன்ஸ்பெக்டரோ வற்புறுத்தி நோட்டுக்களை அவன் கையில் திணித்தார்.

"அப்படின்னா ஒன்று செய்யுங்க. கீழே ஒரு நாலைஞ்சு கரடியையாவது வேலை தீர்த்திருப்பேன். அதனோட தோலை எல்லாம் நீங்க எடுத்துக்கிடுங்க. கிரயம் 50 ரூபாய்க்கு மேல் தேறும்."

"நீ செய்திருக்கும் வேலைக்கு ஆயிரமாயிரமாகக் கொடுக்கலாம்" என்றார் இன்ஸ்பெக்டர்.

"பண்டாரம் இப்படிப்பட்ட சாமர்த்திய முள்ளவனா இருந்ததனால்தான் என் பலாப்பழக் குத்தகை உருப்படியா லாபம் கொடுக்க முடியுது!" தேவர் நன்றி தொனிக்கும் குரலில் கூறினார்.

"ஒருவேளை இந்த அத்தியூற்று ஏரியாவிலிருந்து என்னை மாற்றினாலும், சின்னமுத்துப் பண்டாரம் அந்த நள்ளிரவில் கரடிகளுக்கு நடுவே துப்பாக்கி இன்றி, வெட்டரிவாளாலும் யுக்தியாலும் போராடி மீண்ட அட்டகாசத்தை என் ஆயுள் பரியந்தம் என்னால் மறக்கவே முடியாது.

பரசுராம் ஆச்சரியம் உள்ளடங்கிய குரலில் கதையைக் கூறி முடித்தார்.

"இங்கே கரடிகள் அவ்வளவு அதிகமா?" நான் சிரித்துக்கொண்டே கேட்டேன்! "இத்தனை நேரம் கேட்டபின் என்னிடமே 'கரடி' விடுகிறீர்கள் சார்!" பரசுராம் என்னைப் பதிலுக்குக் கேட்டார்.

நாங்கள் அத்தனை பேரும் அந்த ஹாஸ்யத்தை அனுபவிக்கும் பாவனையில் விழுந்து விழுந்து சிரித்தோம்.

**(1963-க்கு முன்)**

# 84. கொள்ளைக்காரன்

**மா**ந்தோப்புகளின் அழகை அநுபவிக்க வேண்டுமானால், தமிழ்நாட்டின் செங்கோட்டை, தென்காசி தாலுகாக்களில் உள்ள ஏதாவதொரு சிற்றூரில் சில நாட்கள் வசித்துப் பார்க்கவேண்டும்.

மாந்தோப்பைப் பற்றி நினைக்கும்போது பல வருடங்களுக்கு முன்னால் நடந்த அந்த பயங்கர சம்பவங்கள் என் நினைவுக்கு வருகின்றன. நினைத்துப் பார்த்தால் ஏதோ கற்பனைக் கதை மாதிரித்தான் இருக்கிறது.

ஆயிரத்துத் தொளாயிரத்து நாற்பதாம் வருடம், தென்காசியில் சப் இன்ஸ்பெக்டராக இருந்தேன். அப்போது வைகாசி மாதத்தில் ஒரு நாள், பக்கத்திலுள்ள காசி மேஜர்புரம் என்ற கிராமத்தில் ஒரு கொலைக்கேஸ் விஷயமாக நாள் முழுவதும் சுற்றி அலைந்துவிட்டு. மாலை ஆறுமணிக்குத்தான் வீடு திரும்பியிருந்தேன்.

உடுப்புக்களைக் கழற்றிவிட்டு, ஈஸிசேரில் சாய்ந்தேன். ஆபீஸிலிருந்து 'ஏட்' தலைதெறிக்க ஓடிவந்தான். "என்ன சங்கதி? ஏன் இவ்வளவு அவசரம்?" என்று கேட்டேன்.

"இலஞ்சி நெல்லையப்பப் பிள்ளை வந்திருக்கிறாருங்க; ஏதோ அவசரமா ரிப்போர்ட் செய்யணுமாம்."

"நல்ல அவசரம் போ." நான் அலுத்துக்கொண்டே புறப்படத் தயாரானேன். போலீஸ் உத்தியோகத்துக்கு நேரம் காலம் ஏது? அந்தப் பிராந்தியத்திலேயே பெரிய மனிதர் நெல்லையப்பப் பிள்ளை; நிறைய தோட்டம் துரவுகளுக்குச் சொந்தக்காரர். அவர் 'ரிப்போர்ட்' செய்ய ஓடிவந்திருக்கும்போது, நான் போகாமலிருந்தால் நன்றாக இருக்குமா? எனவே, உடனே கிளம்பினேன். ஸ்டேஷனுக்குப் போய் நெல்லையப்பப் பிள்ளை கூறிய விஷயத்தைக் கேட்டபோது, எனக்கு ஆச்சரியம் நிலை கொள்ளவில்லை.

குற்றாலத்துக்கும் இலஞ்சிக்கும் நடுவில் நெல்லையப்பப் பிள்ளைக்குச் சொந்தமான பெரிய மாந்தோப்பு ஒன்று இருந்தது. மாமரங்களைத் தவிர, பலா, தென்னை முதலிய வேறு மரங்களும் அந்தத் தோப்பில் உண்டு. இருபது, முப்பது ஏக்கர் விஸ்தீரணமுள்ள பெரிய தோப்பு அது.

மாமரங்களும் பலா மரங்களும் கிளைகள் இற்று விழுந்து விடுமோ என்று எண்ணும்படி காய்த்துக் குலுங்கின. இன்னும் ஓரிரு வாரங்களில் தோப்பைக் குத்தகைக்கு விட்டு விடலாம் என்று தீர்மானித்திருந்தார் நெல்லையப்பப் பிள்ளை.

சாதாரணமாக ஏழாயிரம் எட்டாயிரம் என்ற தொகைக்கு மேல் அந்தத் தோப்பு குத்தகை போனது இல்லை. அந்த வருடத்தில் பத்து, பன்னிரண்டாயிரம் வரைகூடக் குத்தகைக்காரர்கள் கேட்டார்கள். குத்தகைக்காரரிடம் ஒப்புவிக்கிற ஒரு பூ, பிஞ்சுகூடக் களவு போய் விடக்கூடாது என்று அக்கறையாகக் காவலுக்கு ஏற்பாடு செய்திருந்தார் பிள்ளை. ஒன்றுக்கு நாலு பேராகக் காவற்காரர்களை நியமித்திருந்தார் அவர். நாலு காவற்காரரும் இராப்பகலாகக் காத்து வந்தனர். அப்படி இருக்கும்போது தான் பயங்கரமான அந்தத் திருட்டு நிகழ்ந்துவிட்டது. நெல்லையப்பப் பிள்ளை கூறியபடியே அதை நான் எழுதுகிறேன்.

"சார்! நேற்று அமாவாசை. நான் ஒரு காரியமாகக் கடையநல்லூர் போய்விட்டு இன்று மத்தியானம்தான் திரும்பினேன். நேற்று இரவு இவ்வளவு பயங்கரமான முறையில், என் தோப்பில் கொள்ளை போகும் என்று நான் கனவில் கூட எதிர்பார்க்கவில்லை, ஸார்! இதுவரை இந்த மாதிரி களவு போனதில்லை.

"எங்கள் தோப்புக்கு நாலுபுறமும் வாசல் உண்டு. வாசல் என்றால் வேறொன்றுமில்லை. மூங்கில் பிளாச்சுகளால் செய்யப்பட்ட சாதாரண அடைப்பான் கதவுதான். காய்ப்புக் காலத்திலே நாலு பக்கத்து வாசலிலேயும் காவலாட்கள் இருப்பது வழக்கம். அதே போல் நேற்று அமாவாசை இரவும் ஆட்கள் காவலுக்குப் படுத்திருந்திருக்கிறார்கள். இன்று காலையில் போய்ப் பார்த்தபோது வடக்கு, மேற்கு, தெற்கு, ஆகிய மூன்று திசையிலும் காவல் இருந்த ஆட்கள் இரத்தம் கக்கிச் செத்துக் கிடந்தார்களாம். கிழக்குப் பக்கம் காவல் காத்துக் கெண்டிருந்த ஆள் இருபது இருபத்தைந்து கெஜதூரம் ஓடி வந்து மயங்கிக் கிடந்தானாம். சுமார் ஆயிரம் ரூபாய்க்கு மேல் பெறுமானமுள்ள நல்ல ஜாதி மாங்காய்களும் பலாப்பழங்களும் தோப்பிலிருந்து களவாடப் பட்டிருக்கின்றன. உயிரோடு பிழைத்த கிழக்குப்புறத்துக் காவலனை மயக்கம் தெளிவித்துக் கேட்டுப் பார்த்தால் அவன் கூறுவதை யாரும் நம்ப முடியவில்லை. நள்ளிரவில் பூதாகாரமான ஒரு ஆள் சிவபெருமான் மாதிரிக் கழுத்தில் பாம்பு படம் விரித்தாடக் கையில் நெருப்பு ஏந்திப் பயங்கரமாகக் குதித்துக் கொண்டு ஓடி வந்தானாம். கையில் நெருப்பு, கழுத்தில் நல்ல பாம்புமாகப் பூதம் மாதிரி இருந்த அந்த உருவம் தன்னைத் துரத்தியதாகவும் தான் கொஞ்ச தூரம் ஓடி மயங்கி விழுந்து விட்டதாகவும் அவன் கூறினான். எனக்கு நம்பிக்கை இல்லை." கூறி முடிப்பதற்குள் நெல்லையப்பப் பிள்ளைக்கு முகத்தில் முத்துமுத்தாக வியர்வை அரும்பிவிட்டது. கூறும்போது நடுநடுவே அவருக்கே வாய் குழறியது.

"ஏன் பிள்ளைவாள்? இரத்தம் கக்கிச் செத்துப் போனதாகச் சொன்னீர்களே; மூன்று காவற்காரர்கள், அவர்கள் பிரேதங்களை என்ன செய்தீர்கள்?"

"லோகல் பண்டு ஆஸ்பத்திரியிலே பரிசோதனைக்கு அனுப்பித்திருக்கிறேன். டாக்டர் உங்களையும் வைத்துக் கொண்டுதான் பரிசோதிக்க வேண்டும் என்கிறார்..."

"அது சரி! உயிர் தப்பிய காவற்காரன் உங்கள் வசம் பாதுகாப்பில்தானே இருக்கிறான்? ஆளை வேறெங்கும் விட்டுவிட வில்லையே?"

"இல்லை சார்! அவன் அங்கேதான் இருக்கிறான்."

"சரி; அப்படியானால் வாரும் போகலாம்!" நான் நெல்லையப்பப் பிள்ளையையும் அழைத்துக் கொண்டு அவரோடு உடனே இலஞ்சிக்குப் புறப்பட்டுச் சென்றேன்.

துர்மரணம் அடைந்த காவற்காரர்கள் மூன்று பேரையும் பரிசோதித்த டாக்டர் எனக்குப் பயன்படும்படியான விசேஷத் தகவல் எதனையும் கூறவில்லை. "பயம் மிகுதியில் அதிர்ச்சியடைந்து மூச்சு நின்று இறந்திருக்கிறார்கள். இவர்கள் இரத்தம் கக்கி இறந்ததற்கு வைத்திய ரீதியாக எந்தக் காரணமும் தென்படவில்லை!" அவர் கூறியதைக் குறித்துக் கொண்டு காவற்காரர்களின் பிரேதங்களை உரிய உறவினர்களிடம் ஒப்படைத்தேன். இறுதிக் கிரியைகளுக்கு ஏற்பாடு செய்யப்பட்டது. அப்போது இரவு ஏழரை மணி இருக்கும்.

"நெல்லையப்பப் பிள்ளை! ஒரு பெட்ரோமாக்ஸ் லைட்டை எடுத்துக்கொள்ளும். உயிரோடு இருக்கும் கிழக்குப் பக்கத்துக் காவற்காரனையும் கூட்டிக் கொள்ளும். இப்போதே போய் உம்முடைய தோப்பையும் பார்வையிடவேண்டும்" என்றேன் நான். அவரும் சம்மதித்தார். காவற்காரன் பெட்ரோமாக்ஸ் லைட்டோடு வந்தான். மூவரும் தோப்புக்குச் சென்றோம். அமாவாசைக்கு மறுநாள் ஆயிற்று; நல்ல இருட்டு. போகும்போதே காவற்காரனிடம் பேச்சுக் கொடுத்துப் பார்த்ததில் அவன் தோப்பிற்குள் நுழைவதற்கே நடுங்குகிறான் என்று தெரிந்தது.

"என்னப்பா? தோப்பிலே படுத்துத் தூங்கி ஏதாவது கனவு கினவு கண்டாயா? சிவபெருமான் மாதிரி அப்படி இப்படி என்று உளறுகிறாயே?" ஏதாவது புதிய உண்மையை அறியலாம் என்று அவனை நையாண்டி செய்வதுபோல் அவன் வாயைக் கிண்டினேன்.

"ஐயோ! சாமீ... நான் பொய் ஏன் சொல்றேனுங்க, சாமி?... நிசமோ, இல்லையோ; அதைக் கண்ணாலே கண்டதும், அது என்னை ஓடிப் பாஞ்சு துரத்தினதும், நான் மயங்கி விழுந்ததும் இன்னும் நல்லா நினைவிருக்குதுங்க!" - என்று கூறினான் அவன். அந்தக் குரலில் உண்மையாகவே பதற்றம் இருப்பதையும் நான் கவனித்தேன்.

பெட்ரோமாக்ஸ் லைட்டின் துணையால் மாந்தோப்பின் நான்கு பக்கமும் சுற்றிப் பார்த்தோம். காய்களும் பழங்களும் களவாடப்பட்ட மாமரங்களையும் பலா மரங்களையும் அருகில் அழைத்துச் சென்று எனக்குக் காண்பித்தார் நெல்லையப்பப் பிள்ளை. அம்மரங்களின் கீழே ஒடிந்து கிடந்த சிறு கிளைகளையும், உதிர்ந்து கிடந்த இலைகளையும் பிற அலங்கோலங்களையும் காணும்போது, திருடியவர்கள் பதற்றத்தோடும் அவசரமாகவும் திருடியிருக்கிறார்கள் என்பதை அனுமானிக்க முடிந்தது.

ஒரு பலாமரத்தின் கீழே விளக்கு வெளிச்சத்தில் ஏதோ மின்னியது. நான் விளக்கைத் தரையை ஒட்டித் தணித்து பிடிக்கச் சொன்னேன். காவற்காரன் அப்படியே செய்தான். கீழே குனிந்து அதைக் கையில் எடுத்தேன். அது ஒரு சலங்கைக் கொத்து!

நாட்டியமாடுகிறவர்கள் காலில் கட்டிக் கொள்வார்களே; அந்தப் பாணியில் வரிசையாக ஒரு பட்டுக் கயிற்றில் சலங்கைகள் தொடுக்கப்பட்டிருந்த அதைக் கைவசம் பத்திரமாக வைத்துக் கொண்டேன். மீண்டும் ஏதாவது தடையம் கிடைக்குமா என்று எல்லா மரங்களின் அடியிலும் சுற்றி விட்டுத் திரும்பினோம்.

“ஏனப்பா? நேற்றிரவு அந்தச் சிவபெருமானைப் போன்ற பயங்கர உருவம் உன்னைத் துரத்தியபோது வேறு ஏதாவது ஓசைகள் கேட்டதா? அல்லது அந்த உருவம் ஏதாவது வாய் திறந்து பேசியதா? நன்றாக யோசித்து நினைவு படுத்திக் கொண்டபின் சொல்!” - தோப்பிலிருந்து திரும்பி வரும்போது நான் காவற்காரனை நோக்கிக் கேட்டேன்.

அவன் சிறிதுநேரம் யோசித்துவிட்டு எனக்குப் பதில் சொன்னான் : “அப்போ இருந்த நடுக்கத்துலே நான் அதெல்லாம் ஒண்ணும் தெளிவா கவனிக்கலீங்க. ஏதோ வெண்கலத் தாம்பாளத்தை மடமடன்னு உருட்டின மாதிரியும், பத்து இருபது மணிகளை ஒரே சமயத்திலே குலுக்கின மாதிரியும், நடுவிலே சலங்கை ஒலியும் கேட்ட மாதிரியும் இருந்திச்சுங்க. ஆனால், அது வாயைத் திறந்து பேசலேங்கறது மட்டும் எனக்கு நல்லா நினைவிருக்குங்க!” என்று கூறினான்.

மறுநாள் காலை ஒரு கான்ஸ்டபிளை இலஞ்சிக்கு அனுப்பி நெல்லையப்பப் பிள்ளையையும் காவற்கார சிவனாண்டியையும் ஸ்டேஷனுக்கு வரவழைத்தேன். பிள்ளையிடம், முறைப்படி ஒரு ‘கம்ப்ளெயிண்’டும், காவற்காரனிடம், நடந்ததாக அவன் கூறிய செய்திகளடங்கிய ஒரு வாக்குமூலமும் எழுதி வாங்கிக் கொண்டேன்.

“பிள்ளைவாள்! இனி ஆகவேண்டியதை நான் கவனிக்கிறேன். பழைய படியே மீண்டும் தோப்புக் காவலுக்கு நாலு ஆள் நியமித்து வையுங்கள், கூட இரண்டு மூன்று பேர் நியமித்தாலும் பரவாயில்லை. ஆனால் ஒன்று. எதற்கும் அசைந்து கொடுக்காத நல்ல தைரியசாலிகளாகப் பார்த்துக் காவலுக்கு அமர்த்துங்கள். இந்த நிகழ்ச்சிகளையெல்லாம் முன்பே அவர்களுக்குக் கூறி, எதற்கும் பயப்படக் கூடாது என்று எச்சரியுங்கள். சிவனாண்டியும் பழையபடி இருக்கட்டும். அதோடு இந்த வருஷம் தோப்பைச் சொந்தத்திலேயே வைத்துக் கொள்ளுங்கள். குத்தகைக்கு விட வேண்டாம். அதனால் என்ன நஷ்டம் ஆனாலும், சரி.” - என்று சில விவரங்களை அவருக்குக் கூறியபின் அவரையும் காவற்காரனையும் அவர்கள் இருப்பிடத்துக்கு அனுப்பிவிட்டேன்.

இதற்குப் பிறகு ஏற்கனவே என்னிடம் வந்திருந்த காசி மேஜர்புரத்துக் கொலைக் கேஸ் விஷயமாக அலையும் செயலை மேற்கொண்டதனால், இந்த மாந்தோப்பு விவகாரத்தைச் சில நாட்கள் ஒரேயடியாக மறந்து போகும்படி நேரிட்டு விட்டது. நெல்லையப்பப் பிள்ளையின் ‘கம்ப்ளெயிண்’டும் சிவனாண்டியின் வாக்குமூலமும், தடையமாகக் கிடைத்திருந்த சலங்கைக் கொத்தும் என்னுடைய மேஜை டிராயரில் தூங்கின. நான் என்ன செய்வது? நான் சும்மா இருக்கவில்லையே? இதற்கு முன்பே நடந்த வேறோரு கேஸைக் கவனிக்க வேண்டிய பொறுப்பும் எனக்கு இருந்தது. காசி

மேஜர்புரத்துக் கொலையில் சம்பந்தப்பட்ட முக்கியமான ஆள் ஒருவன் ஆலப்புழையில் இருப்பதாக எனக்கு ஓர் இரகசியத் தகவல் கிடைத்தது.

மலையாளத்திற்குப் போய் ஆலப்புழையில் மறைந்திருக்கும் குற்றவாளியை நாமே தேடப்போவதா? அல்லது இலாகாவிலுள்ள ஸி.ஐ.டி.களில் யாரையாவது அனுப்பலாமா? இப்படி யோசித்துக் கொண்டிருந்தேன்.

இந்தச் சமயத்தில் நானே ஆலப்புழைக்கு போய்ச் சேர வேண்டிய வேறு ஓர் அவசியம் ஏற்பட்டது. ஆலப்புழைக்கு அருகில் அம்பலப்புழை என்று ஒரு ஊர் இருக்கிறது. அங்கே எனக்கு ஒரு பழம்பெரும் நண்பர் உண்டு. அவர் எங்கள் இலாகாவில் பெரிய உத்தியோகத்திலிருந்து ஓய்வு பெற்றவர். நாராயணமேனன் என்று பெயர். ஆவணி மாத நடுவில் மலையாளத்தில் கோலாகலமாகக் கொண்டாடப்படும் ஓணம் பண்டிகை வருகிறதென்றும், அதற்கு நான் கட்டாயம் வந்து குறைந்த பட்சம் ஒரு வாரமாவது தன்னோடு தங்கிப் போக வேண்டுமென்றும் அவர் எனக்குக் கடிதம் எழுதியிருந்தார். ஏற்கனவே, பலமுறை அவருடைய அழைப்பை நிறைவேற்ற முடியாமல் தட்டிக் கழித்திருந்தேன்; இந்தத் தடவையும் அப்படிச் செய்வதற்கில்லை. கேஸ் விஷயமாகவும் அலைந்தாற் போலிருக்கும் என்று எண்ணிக்கொண்டு, செங்கோட்டை வழியாகத் திருவனந்தபுரம் போய், அங்கிருந்து 'மோட்டார் போட்' மூலம் அம்பலப்புழை போய்ச் சேர்ந்தேன். என்னைக் கண்டதும் நாராயணமேனனுக்கு மகிழ்ச்சி நிலைகொள்ள வில்லை.

"இல்லை! இல்லை! நான் கால்வாசிதான் உங்கள் விருந்தினராக ஓணம் பண்டிகைக்கு வந்திருக்கிறேன். முக்கால்வாசி என் உத்தியோக காரியமாகச் சில ஆட்களைத் தேடி வந்திருக்கிறேன்" என்று சிரித்துக்கொண்டே அவருக்குப் பதில் சொன்னேன். வெகு நாட்களுக்குப் பின்பு ஏற்பட்ட அருமையான சந்திப்பால், பொழுது சிரித்தும் பேசியும் கழிந்து கொண்டிருந்தது. சாயங்காலம் ஆயிற்று.

"இன்று இங்கே கிருஷ்ணன்கோவில் வாசலில், கதகளி, ஒட்டந்துள்ளல் முதலிய ஆட்டங்கள் சிலவற்றுக்கு ஏற்பாடு செய்திருக்கிறார்கள். இந்தக் கதகளி நாட்டியமும் ஓட்டந்துள்ளல் ஆட்டமும் எங்கள் கேரளத்துக்கே உரிய சிறப்பான கலைகள், ஸார். நீங்கள் வராதவர் வந்திருக்கிறீர்கள். இன்றிரவுதான் இப்படிக் கழியட்டுமே; போய்ப் பார்க்கலாம், வாருங்கள்!" என்று அழைத்தார் நாராயணமேனன். நான் முதல் நாள் பிரயாணம் செய்துவந்த அலுப்பையும் பொருட்படுத்தாமல் கதகளி நாட்டியம் பார்க்கப் போவதற்கு இணங்கினேன்.

நானும் நண்பர் நாராயணமேனனும், இரவு ஏழரைமணி சுமாருக்கு அம்பலப்புழையிலுள்ள பிரசித்தி பெற்ற கிருஷ்ணன் கோவிலுக்குப் போய்ச் சேர்ந்தோம். கோவில் வாசலில் நாட்டியத்திற்காக, அலங்கரிக்கப்பெற்ற பந்தற் போட்டு அரங்கம் அமைத்திருந்தார்கள்.

**நா**ட்டியம் ஆரம்பித்தது. புராண இதிகாசங்களிலிருந்து சில காட்சிகளை நாட்டியமாக ஆடிக்காட்டினார்கள். கதகளி நாட்டியத்தின் அமைப்பும், ஆடை

அணிகளும்; பாணிகளும் ஒருவிதமான கம்பீரத்துடன், பார்ப்பவர்கள் பிரமிக்கும்படி அமைந்திருந்தன. முகமுடி, வரிந்து வரிந்து அடுக்கடுக்காகக் குஞ்சங்கள் தொங்கும் ஆடை, அவற்றின் நுனியில் சிறுசிறு மணிகள், கை, கால்களில் சலங்கைகள், இந்த அலங்காரத்தால் பூதம்போல் தோன்றும் சரீரம் -இப்படிச் சிலர் வந்து மேடைமேல் ஆடிக் கதையைச் சித்தரித்துக் காட்டினார்கள். வெண்கலத் தாம்பாளத்தில் தட்டுவது போன்ற ஓசை ஒன்று அடிக்கடி பின்னாலிருந்து இசைக்கப்பட்டது. வேகமாக ஓடித்துள்ளுகிற ஓட்டந்துள்ளல் ஆட்டமும் பார்க்க விறுவிறுப்பாக இருந்தது. நாட்டியம் முடியும்போது இரவு பத்தரை மணி. "மேனன் சார்! கேரளத்தின் சிறப்புக்கு இந்த நாட்டியக் கலையும் ஒரு காரணந்தான். இரண்டு மணி நேரத்திற்குள் என் மனத்தைக் கொள்ளை கொண்டுவிட்டதே இந்தக் கலை! என்ன அருமையான ஆட்டம்!" என்று பாராட்டினேன் நான்.

"ஆமாம்! கேசவ குரூப் ஆட்டம் என்றால், மனம் என்ன? சமயா சமயங்களில் எல்லாமே கொள்ளைபோய் விடும்!" என்று அவர் கூறினார்.

"யாரைக் 'கேசவ குரூப்' என்கிறீர்கள்? எனக்கொன்றும் புரியவில்லையே?"

"அவன்தான் சார், இந்த நாட்டியக் கோஷ்டிக்குத் தலைவன். இன்றைக்கு 'முருமகஜனனம்' நடந்தபோது சிவன் வேஷத்தில் மேடைமேல் பயங்கரமாகப் பாய்ந்து பாய்ந்து ஆடினான், பாருங்கள்! அவன்தான் கேசவ குரூப்!"

"அவனுக்கென்ன? அவனிடம் ஒரு தினுசாகச் சிரித்துக் கொண்டு ஏதோ பேசிக்கொண்டிருந்தீர்களே?" நான் ஆவலோடு மேனனைக் கேட்டேன்.

"அதில்லை! இந்தப் பயல் சிறுவயதிலிருந்து எனக்குப் பழக்கமானவன். அற்புதமான கலைஞானம் இந்தக் கதகளியில் இவனுக்கு இருக்கிறது. இருந்தென்ன பிரயோஜனம்? நடத்தை மோசம்."

"எந்த நடத்தையைச் சொல்கிறீர்கள்?"

"வேறொன்றுமில்லை; இந்த நாட்டியத்தை வைத்துக் கொண்டு இவனால் சம்பாதித்துப் பிழைக்க முடியவில்லை. இவனுடைய கோஷ்டிக்கு முழு வயிறு நிறைய இந்தக் கலை மட்டும் போதவில்லை. அதனால் நாட்டியமில்லாத இரவுகளில் கோஷ்டியாகத் திருடப் புறப்பட்டு விடுகிறான்... அதுவும் அவன் திருட்டு எல்லாம் நூதன முறைகள்."

என் சந்தேகம் வலுப்பட்டுவிட்டது. நான் மேலும் தொடர்ந்து நாராயண மேனனிடம் கேசவ குருப்பைப் பற்றியும் அவனுடைய 'கதகளி' நடன கோஷ்டியைப் பற்றியும் பல விவரங்களைக் கேட்டுத் தெரிந்துகொண்டேன்.

"ஒன்றரை மாதம் இரண்டு மாதத்துக்கு முன்னால், திடீரென்று, இவனும் இவன் கோஷ்டியாரும் 'நாட்டிய ஸீஸன்' டல்லாயிருந்தபோது, மாம்பழமும் பலாப்பழமும் விற்க ஆரம்பித்து விட்டார்கள். என் வீட்டுக்குக் கூடை நிறைய பழங்களோடு விற்பனைக்கு வந்து சேர்ந்தான் இவன். 'என்னடா, குரூப்! நீ எப்போது மாம்பழ

வியாபாரியானாய்? கதகளியும் ஓட்டந்துள்ளலும் என்ன ஆயிற்று? இதென்ன, விலைக்கு வாங்கி வந்து விற்கிற மாம்பழந்தானா? அல்லது...?'' என்று கேட்டேன் நான்.

"சும்மாக் கேலி செய்யாதீங்க. போங்க..." என்று குழைந்தான் இவன். எனக்குத் தெரிந்துவிட்டது. பயல் எவன் தோப்பிலோ சரியாகத் தேட்டைப் போட்டுக் கொண்டு வந்திருக்கிறான் என்று அனுமானித்துக்கொண்டேன். கதகளி 'சான்ஸ்' குறைந்த சமயங்களில், ரஸிகர்களின் மனத்தைக் கொள்ளைகொண்டு ஆடுவதுபோலவே வேறு விதமான கொள்ளையில் ஈடுபட்டு விடுவான் இவன்!'' நாராயணமேனன் கூறிக்கொண்டே இருந்தார். எனக்குக் கிடைக்கவேண்டிய குற்றவாளி சுலபமாகக் கிடைத்துவிட்டான்; நான் எல்லா விவரங்களையும் மேனனிடம் கூறினேன். அதோடு, கேசவ குருப்பை அன்றிரவே கைது செய்து கொண்டுபோக ஏற்பாடு செய்யவேண்டும் என்றேன்.

"ஸார்! நானும் போலீஸ் இலாகாவில் இருந்தவன்தான். ஆனால், ஒரு வேண்டுகோள். இந்தக் கேசவ குருப் செய்தது பெரிய கொள்ளைதான். தவிர மூன்றுபேர் இறக்கக் காரணமாகவும் இருந்திருக்கிறான். இவனைக் கைது செய்ய வேண்டியது அவசியம்தான். ஓணம் பண்டிகைக்கு இன்னும் மூன்று நாட்கள் இருக்கின்றன. தயவு செய்து அதுவரை வெளியே இருக்கட்டும். அல்லாமலும் ஓணத்தன்று இவனுக்குச் சில நாட்டிய புரோகிராம்கள் இருக்கின்றன. 'தான் மகிழ்வது பிறரை மகிழ்விப்பது' -என்பது எங்கள் ஓணத்தின் தத்துவம். நீங்கள் என் விருந்தினராக வந்த தோஷத்திற்காகவாவது இதற்கு இணங்க வேண்டும். ஓணம் முடிந்த மறுநாளே நான் கூட இருந்து உங்களுக்கு இவனைப் பிடித்துத் தருகிறேன்.'' நாராயணமேனன் உருக்கமாக வேண்டிக்கொண்டார். நானும் மறுக்க முடியாமல் இணங்கினேன். உடனே தென்காசியில் எங்கள் ஸ்டேஷனிலிருந்த 'ஏட்டு'க்கு ஒரு தந்தி கொடுத்தேன்; "என் மேஜை டிராயரிலுள்ள சலங்கைக் கொத்தையெடுத்துக் கொண்டு நெல்லையப்பப் பிள்ளை, காவற்காரச் சிவனாண்டி இவர்களோடு நீ உடனே புறப்பட்டு வா'' -என்று.

என் தந்தி கிடைத்ததுமே 'ஏட்டு' முதலிய மூவரும் புறப்பட்டு திருவனந்தபுரம் மார்க்கமாக அம்பலப் புழைக்கு வந்து சேர்ந்தனர். அவர்கள் மூவரும் என்னோடு நாராயணமேனனின் விருந்தாளியாகவே தங்கியிருந்தனர்.

ஓணத்தன்று இரவு முன்பு நடந்த அதே கிருஷ்ணன் கோவில் வாசலில், கேசவ குருப் கோஷ்டியார் சிவபார்வதி நடனம் ஆட இருந்தார்கள். மணிபுரி, கதக், பரத நாட்டியம் இவைகளைக் காட்டிலும் கதையை விறு விறுப்பாக அமைத்துக் காட்டும்தன்மை கதகளிக்குப் பொருந்தியுள்ளது. அதனால்தான் கதைத் தொடர்பின்றிக் கதகளி சிறப்பதில்லை.

நாராயணமேனனோடு நானும் நெல்லையப்பப் பிள்ளை, ஏட், சிவனாண்டி ஆகியோரும் அன்றிரவு சிவ பார்வதி நடனம் பார்க்கப் போயிருந்தோம். போகும் போதும் மாந்தோப்பில் அகப்பட்ட தடையமான சலங்கைக் கொத்தையும் எடுத்துச் சென்றிருந்தேன் நான். நாங்கள் அரங்கிற்கு முன் முதல் வரிசையில் வரிசையாக

உட்கார்ந்து கொண்டோம். வேண்டுமென்றே காவற்காரச் சிவனாண்டியை என் பக்கத்தில் உட்கார்த்தியிருந்தேன் நான்.

நாட்டியம் ஆரம்பமாயிற்று. அதே வெண்கல ஒலி, தபேலே, சலங்கைகளின் ஒலி எல்லாம் கலந்து ஒலித்தன. முதல் முதலாக கேசவ குரூப்தான் சிவபெருமான் வேஷத்தில் பயங்கரமான தோற்றத்துடன் முழுவும் தீப்பந்தமும் ஏந்திக் கழுத்தில் நல்ல பாம்பு அணிந்து (விஷப் பல் பிடுங்கி பழக்கப்பட்ட பாம்பு) ஒட்டந்துள்ளல் பாணியில் தாவித்தாவி மேடையதிர ஆவேசமாக ஆடினான்.. அவ்வளவுதான்! என் பக்கத்தில் இருந்த காவற்காரச் சிவனாண்டி "ஐயோ! இதே பூதம்தான்.. விடாதீர்கள்... பிடியுங்கள்..." என்று பயங்கரமாக அலறிக்கொண்டே எழுந்திருந்து விட்டான் எழுந்த வேகத்தில் மூர்ச்சையாகிப் பொத்தென்று கீழே விழுந்தான். இந்தச் சப்தத்தால் ஆட்டத்தை நிறுத்திவிட்ட கேசவ குரூப் மேடையிலிருந்து சிவனாண்டியையும் போலீஸ் உடையிலிருந்த 'ஏட்டை'யும் பார்த்துவிட்டான். குபீரென்று விளக்குகள் அணைந்தன. கேசவ குரூப் ஓடத் தயாராகிவிட்டான். நானும் 'ஏட்டு'ம் மேடைமேல் பாய்ந்தோம். வேஷத்தை அவசர அவசரமாகக் கலைத்துக்கொண்டிருந்தான் குரூப். அவனைப் பிடித்துக் கைது செய்துவிட்டோம். கையில் விலங்கு மாட்டியபோது, கேசவ குரூப்பின் வலது கையில் கட்டியிருந்த சலங்கையின் சரத்தைப் பார்த்தேன். அந்தச் சரத்தின் ஒரு பகுதி மூளியாகி இருந்தது. என்னிடமிருந்த, தோப்பில் கிடைத்த, சலங்கைக் கொத்தை அந்த மூளிப் பகுதியில் வைத்துப் பார்த்தேன். அது சரியாகப் பொருந்தியது.

இதற்குள் மேனனும் பிள்ளையுமாக சிவனாண்டியின் மூர்ச்சையைத் தெளிவித்திருந்தார்கள். கேசவ குரூப் கோஷ்டியைச் சேர்ந்த வேறு சிலரையும் கைது செய்தோம். கோஷ்டியாக ஒரு லாரியில் சென்று நாலைந்து பேர் கதகளி வேடந்தரித்து, காவற்காரர்களை மருளச் செய்தபின், தோப்பில் புகுந்து கொள்ளையடித்து, லாரியிலேயே, காய் பழங்களுடன் மலையாளம் திரும்பிவிட்டதாக நடந்ததை மறுக்காமல் குற்றத்தை ஒப்புக்கொண்டு விட்டான் கேசவ குரூப். "என்னய்யா? இவரு என் மனத்தையே கொள்ளை கொண்டு சிவபெருமான் மாதிரி ஆடினாரு. இவரைப் போய் கைதுசெய்திருக்கீங்களே!" - என்றார் பிள்ளை.

"மனத்தை மட்டுமல்ல; தோப்பைக் கொள்ளை கொண்டவனும் இவன்தான்" என்றேன் நான். மேனனுக்கு என்மேல் கொஞ்சம் வருத்தம். நிபந்தனைக்கு முன்பே 'குரூப்' பைக் கைது செய்துவிட்டேன் என்று!

**(1963-க்கு முன்)**

## 85. உயிர் காத்த நல்லாள்

**கோ**டை விடுமுறையில் கலாசாலை மூடியிருந்தபோது எங்கள் ஊருக்குப் போயிருந்தேன். போன அன்றைக்கு மாலையில், வடக்கே மலையடிவாரத்தில் உள்ள 'கல்லணை' வரைக்கும் காலார மலைக் காற்று படும்படி உலாவிவிட்டு வரலாமென்று கருதிப் புறப்பட்டேன். பேச்சுத் துணைக்கு உடன்வர ஒருவராவது அகப்பட மாட்டாரா என்று நான் கவலைப்பட்டுக் கொண்டிருந்தபோது திருவடியா பிள்ளை வந்து சேர்ந்தார். குசலப்பிரச்னமெல்லாம் வழக்கமாக முடிந்தது. 'அவர் கேட்க வேண்டும்' என்று காத்திருக்காமல் நானாகவே கருப்பட்டிப் புகையிலை, வெற்றிலை, பாக்கு, முதலிய 'காணிக்கை'களுக்கு, அருகில் இருந்த கடையில் 'ஆர்டர்' செய்து வரவழைத்துவிட்டேன். பிள்ளை மனங் குளிர்ந்தார்.

"அப்ப, நீங்க எங்ஙனே இப்பிடிக் கிளம்பிட்டிக?" பாக்கை மென்றுகொண்டே திருவடியா பிள்ளை கேட்டார்.

"வேறெங்குமில்லை, பிள்ளைவாள்! இப்படிக் கல்லணையாறு வரை காலாரப் போய்விட்டு வரலாம் என்றுதான்."

"அடேடே! கல்லணையாத்துப் பக்கமா போறிக? நாங்கூட அங்ஙனேதான் பொறப்பிட்டேன்! 'ஒரெத்த நல்லா கோயில்' வரை போகணும்... அப்பப் பொறப்பிடுங்க, போவலாம்!".

இருவரும் கிளம்பினோம். போகிற போக்கில் பேச்சுக்குச் சுவாரஸ்யமான விஷயம் வேண்டுமே என்று நான் பிள்ளையவர்களை ஒரு கேள்வி கேட்டு வைத்தேன். திருவடியா பிள்ளையைப் போன்ற ஒருவர் கூட வரும்போது பேச்சுக்குச் சரியான விஷயம் அகப்படாமலா போகும்?

"ஆமாம் பிள்ளைவாள்... எனக்குப் பல நாளாக ஒரு சந்தேகம். உங்களிடம் கேட்கவேண்டும் என்று ஆசை! கல்லணையாற்றுக் கரையிலே இருக்கிற அம்மனோட கோவிலுக்கு 'ஒரெத்த நல்லா கோவில்'னு இந்தப் பக்கத்தில் பேர் வழங்குகிறதே?.... அந்தப் பெயரின் அர்த்தமே எனக்கு விளங்கவில்லையே?"

"காலேஜிலே லெக்சரரா இருந்தாப் போதுமுங்களா? இதுக்கெல்லாம் அனுபவமிருந்தா விளங்கும்! இப்போது வழங்கும் பெயர் சரியான பெயரேயில்லை! கல்லணையாற்றுக் கரையிலுள்ள அம்மன் கோவிலின் பெயர் 'உயிர் காத்த நல்லாள் கோவில்' என்பது. நாளடைவில் பழகு தமிழில் மருவி மருவி அது அடைந்த புத்துருவமே 'ஒரெத்த நல்லா கோவில்' என்னும் பொருள் விளங்காத பெயர்" என்றார் திருவடியா பிள்ளை.

"அப்படியானால் அந்தப் பழைய பெயருக்கு ஆதாரமான வரலாறு ஏதாவது இருந்தாக வேண்டும்....? ஒரு காரணமுமின்றி அந்த அம்மனுக்கு 'உயிர் காத்த நல்லாள்' என்ற பெயர் எப்படி ஏற்பட்டிருக்க முடியும்?" இப்படி நான் மீண்டும் ஒரு சந்தேகத்தைக் கிளப்பியபோதுதான் பிள்ளையவர்களிடமிருந்து இந்தக் 'கதை' பிறந்தது.

* * *

"பல தலைமுறைகளாக இங்கே இந்தப் பக்கத்தில் நிலவி வரும் 'ஒரு நம்பிக்கை' உங்களுக்கும் தெரிந்ததுதானே? நம்மூர்க்காரர்களும் இங்கே கல்லணைக்கு மேலே மலையில் வேட்டையாடுவதற்காக வரும் வேட்டைக்காரர்களும் அந்த நம்பிக்கையை இன்றும் ஒரு கட்டுப்பாடான சம்பிரதாயமாகவே போற்றி மேற்கொண்டிருக்கிறார்கள். இங்கே முயல் முதல் பயங்கரமான வேங்கைப் புலிகள் வரை எதை வேட்டையாட வேண்டுமானாலும் மலையடிவாரத்திற்கும், ஆற்றங்கரையிலுள்ள இந்த அம்மன் கோவிலுக்கும் இடைப்பட்ட பிரதேசம் அம்மனின் ஆட்சி எல்லை. அம்மனின் ஆட்சி எல்லையில் சகல ஜீவ ஜந்துக்களும் அவள் காவலில் அடங்கியிருக்கின்றன.

"அவள் காவலுக்கு உட்பட்ட பிரதேசத்தில் எந்த ஒரு சிறு உயிருக்கும் அழிவு வரக் கூடாது. அவ்வளவேன்? ரத்தக் குறியே காணக் கூடாது. அம்மன் துடியான தேவதை. 'கட்டுப்பாட்டை மீறியவர்களைத் தண்டிக்க வேண்டிய விதத்தில் தண்டிக்காமல் விடமாட்டாள்' என்ற இந்த நம்பிக்கை அந்தக் காலத்தில் இப்போது இருப்பதைவிட இன்னும் பரிபூரணமான அளவில் இருந்தது. இப்போதும் அந்த நம்பிக்கை கெடவில்லை. ஆனாலும் கண்டும் காணாமலும் ஏதேதோ நடந்து விடுகிறது. ஆனாலும், அந்த நாட்களிலோ அவனவனுக்குத் தன் பயம் இருக்கும். இந்த மாதிரி விஷயங்களில் விளையாட்டாகக் கூட அவநம்பிக்கை ஏற்படாது. ஆனாலும், அப்படிப்பட்ட காலத்திலும் 'ஒரு முத்துவேலு நாயக்கன்' இருக்கத்தான் இருந்தான். அடாததைச் செய்தான், படாததைப் பட்டான். அம்மனுடைய சக்தியே அதனாலேதான் வெளியாயிற்று."

"அந்த, 'முத்துவேலு நாயக்கன்' அப்படி என்னதான் ஆகாத காரியத்தைச் செய்துவிட்டான்? அதனால் என்ன விளைந்துவிட்டது? சற்று விவரமாகத்தான் சொல்லுங்களேன் பிள்ளைவாள்!" என்றேன் நான்.

"அந்தக் கதையைத்தானே இப்போது நான் சொல்லத் தொடங்கினேன். நீங்கள் ஏன் இடையிலே இடையிலே மறித்துக் கேள்வி கேட்கிறீர்கள்? பேசாமல் கேட்டுக்கொண்டு வாருங்கள். எல்லாம் நானாகவே விவரமாகச் சொல்லுவேன்" - இந்த மறுமொழியால் என் குறுக்குக் கேள்விகளை நிறுத்தி விட்டு, பிள்ளை மேலே தொடர்ந்து கூறலானார்.

"நான் சொல்லுகிற இந்தச் சம்பவம் நடக்கும்போது தான் சர்க்காரிலிருந்து செலவு செய்து அம்மன் கோவிலுக்கு வடக்கே மலையடிவாரத்தில் ஆற்றின் குறுக்கே அணை

வேலையை ஆரம்பித்திருந்தார்கள். அணைக்கட்டு வேலைக்காகப் பெரிய பெரிய என்ஜினீயர்களெல்லாம் வந்து தங்கியிருந்தார்கள். அணையில் வேலை செய்யும் கூலிகளுக்கு மேஸ்திரியாக நம்மூர் முத்துவேலு நாயக்கன்தான் பொறுப்பேற்றுக் கொண்டிருந்தான். மிகவும் சாத்வீகமாகத்தான் இருப்பான். ஆனால் அவனைப் பிடித்த போதாத காலம்! கையில் நாலு காசும், சந்தர்ப்பமும் சேர்ந்து கொண்டதும் ஆள் எதற்கும் துணியலாம் என்று எண்ணியோ என்னவோ, துணிந்து விட்டான், கட்டுப்பாட்டை மீற!

என்ஜினீயர்களை மேற்பார்வை செய்வதற்காக ஒரு வெள்ளைக்காரத் துரையும் வந்திருந்தான். அவன் பேர் 'ஜான் பீட்டர்' என்றோ, என்னவோ சொல்லிக் கொண்டார்கள். இந்த வெள்ளைக்காரத் துரையை 'உயிர் காத்த நல்லா'ளினும் உயர்ந்த தெய்வமாக மதிக்கத் தொடங்கியதால்தான் முத்துவேலு நாயக்கன் 'அந்தக் கதி'யை அடைந்தான்.

அந்தக் காலத்தில் ஆகாசத்திற்கும் பூமிக்குமாக அடர்ந்து படர்ந்த மூன்று பெரிய ஆலமரங்கள் கோவிலைச் சுற்றி இருந்தன. இவைகளுக்கு இடையே இருபது தப்படி நீள அகலமுள்ள இடுப்பளவுச் சுவரோடு கூடிய 'காம்பவுண்டு'தான் அம்மனின் சந்நிதி. இந்த நான்கு புறத்துச் சுவர்களுக்கும் மேலே வெட்டவெளிதான். அதாவது கூரையோ, மேலடைப்போ கிடையாது.. இதில் ஒரு விசேஷமென்ன வென்றால் மூன்று ஆலமரத்திலிருந்தும் மூன்று கிளைகள் பிரிந்து வந்து அம்மன் வீற்றிருந்த இடத்திற்கு நேர் மேலே கூடிப் பின்னியிருந்தன. மழை பெய்தாலோ, வெய்யில் உக்கிரமாகக் காய்ந்தாலோ, ஒரு பொட்டு மழைத் துளியோ, வெய்யிலோ, அம்மன்மேல் படமுடியாமல் இந்தக் கிளைகள் இணைந்து விமானம் போலக் கூடியிருந்தன. இதனை அம்மனின் தெய்வீக சக்தியால் விளைந்ததெனக் கருதி அந்தக் கிளைகள் கூடுமிடத்தில் மூன்று பெரிய வெண்கல மணிகளைக் கட்டியிருந்தார்கள். இந்த மணிகளை அடிக்காமல் பூசை நடத்தக் கூடாது என்று ஓர் ஐதீகமும் இருந்து வந்தது. கோவில் காம்பவுண்டுச் சுவருக்கு நடுவில் பெரிய வாசல் உண்டு. ஆனால் அந்த வாசலுக்குக் கதவு, பூட்டு எதுவும் கிடையாது.

கோவிலின் சுற்றுப்புறத்தில் நாலுபக்கமும் ஏறக்குறைய ஒரு பர்லாங் தூரத்திற்கு அருகம்புல் தளதளவென்று வளர்ந்து காடாக மண்டிக் கிடக்கும். எப்போதும் இருப்பதைவிட ஐப்பசி, கார்த்திகை மாதங்களில் மழை பெய்து முடிந்திருப்பதனால் மார்கழி, தை மாதங்களில் இந்த அருகம்புல்வெளி கண் கொள்ளாக் காட்சியாகப் பச்சை மரகதத்தில் கம்பளம் செய்து போர்த்தியது போல அற்புதமாக இருக்கும். பிராணிகள் தாமாக வந்து மேயலாமே தவிர இந்தப் புல்லை யாரும் அறுத்துக்கொண்டு போக மாட்டார்கள். ஊர் மாடுகளை இங்கே மேய்வதற்கு அனுப்பினாலோ, அவைகளில் சில தப்பித் தவறி மலையடிவாரத்துப் புதர்களுக்குப் போய்த் துஷ்ட மிருகங்களால் அடித்துக் கொல்லப்பட்டுவிடும். ஆகையால் ஊர்மாடுகளைத் தீவனவசதி குறைந்துபோன தட்டுமுட்டான காலத்தில் கூட இந்தப் பக்கம் மேய்க்கக் கொண்டுவர மாட்டார்கள். இதனால் மலையிலுள்ள மான்களுக்கு மட்டுமே இந்த

'உயிர்காத்த நல்லாள்' கோவில் புல்வெளி பெரிதும் பயன்பட்டு வந்தது. மலை மேலாவது புலி முதலிய துஷ்ட மிருகங்களுக்கு மான்கள் அஞ்சி மறைவாகப் பதுங்க வேண்டியதிருக்கும். அடிவாரத்துப் புதர்களைத் தாண்டி இங்கே அம்மன் கோவில் புல்வெளிக்கு வந்துவிட்டால் நிர்ப்பயமாக மேயலாம். வேட்டைக் காரர்களாலோ துஷ்ட மிருகங்களாலோ எவ்விதமான விபத்தும் ஏற்படுவதற்கில்லை.

மார்கழி, தை ஆகிய இரண்டு மாதங்களிலும் என்றைக்கு, எப்போது இங்கே வந்தாலும் புல்வெளி நிறையப் புள்ளி மான்களைக் கூட்டம் கூட்டமாகக் காணலாம். தை மாதப் பிறப்பின் போது ஊராரெல்லோரும் சேர்ந்து 'உயிர்காத்த நல்லா'ளுக்குப் பொங்கல் படைப்பதுண்டு. 'படையலின்' போது ஊர் மக்கள் எல்லோரும் கூட்டம் கூடி வந்தாலும், அம்மனின் பாதுகாவலில் உயிர் பயத்தை அறவே மறந்தவை போல வெறித்து ஓடாமல் வழக்கம் போலவே மான்கள் தம் போக்கில் மேய்ந்து கொண்டிருக்கும். இதை நானே பல முறை கண்ணாரக் கண்டிருக்கிறேன். படையலின்போது நிகழும், கொட்டோசை, சங்கோசை, மணியோசை, எல்லோரும் சேர்ந்து 'குரவையிடும் சப்தம்' - இவ்வளவையும் கேட்டும் வெறித்து ஓடாமல் சுபாவமாகப் புல் மேய்ந்து கொண்டிருக்கும்!

அந்த வருடம் சர்க்கார் அணைக்கட்டு வேலையைத் தொடங்கும் போது கார்த்திகை மாதம். மழை காலமாக இருந்தாலும் ஆற்றுத் தண்ணீரின் போக்கை வேறு பக்கம் மடக்கித் திருப்பிவிட்டு வேலையை ஆரம்பித்திருந்தார்கள். சித்திரை வரை வேலை நடக்க முடியும் என்று திட்டமிட்டிருந்தார்கள். திட்டப்படி முடிவதற்காக வேலைகள் ஜரூராக நடந்து வந்தன. மாதம் ஒன்று கழிந்தது. அதற்கு முன்பு சீந்துவாரற்றுக் கிடந்த முத்துவேல் நாயக்கனுக்கு மேஸ்திரி வேலையை ஒட்டி ஊரில் கொஞ்சம் செல்வாக்கு ஏற்பட்டிருந்தது. அவனும் கொஞ்சம் பெரிய மனிதத் தோரணையோடு வளைய வளைய வந்து போய்க் கொண்டிருந்தான். இதையெல்லாம் விட வேறு ஓர் முக்கிய காரணமும் இருந்தது. அவனுடைய செல்வாக்கிற்கு 'பயல்' என்ன மாயம், வசியம் செய்தானோ, பீட்டர் துரையின் தயவை அதிகமாகச் சம்பாதித்துக் கொண்டிருந்தான். துரைக்குக் கோழி முட்டையிலிருந்து, 'குடி' வகைகள் வரை எது வேண்டுமானாலும் தன்னைத் தேடிக் கூப்பிடும்படி நெருக்கமான பழக்கத்தை எப்படியோ ஏற்படுத்திக் கொண்டிருந்தான்!

தை மாதப் பிறப்பிற்கு இன்னும் இரண்டு மூன்று நாட்கள் இருக்கிறபோது, ஒரு நாள் மாலை, பீட்டர் துரை முத்துவேல் நாயக்கனோடு இந்த அம்மன் கோவில் பக்கம் அருமையாக வந்திருக்கிறார். அன்றுவரை அணைக்கட்டுக்கருகிலுள்ள இடங்களிலேயே தன்னுடைய மாலை நேரத்து 'வாக்கிங்'கை நடத்திக் கொண்டிருந்த துரை, அன்று என்ன நினைத்துக் கொண்டாரோ, வேறு ஏதாவது புதிய இடத்திற்கு அழைத்துப் போகும்படி முத்துவேலு நாயக்கனிடம் கூறினார். அதனால்தான் அவன் துரையையும் அழைத்துக்கொண்டு அன்றைக்கு அம்மன் கோவில் பக்கம் வந்திருக்கிறான்!

அம்மன் கோவில் புல்வெளிக்கு அருகே நாயக்கன், துரையை அழைத்துக் கொண்டு வந்தபோது, அங்கே கூட்டம் கூட்டமாக மேய்ந்துகொண்டிருந்த மான்களைக் கண்டு ஸ்தம்பித்துப் போனார் அவர். இத்தகையதொரு காட்சியை அவர் இங்கே எதிர்பார்க்கவே இல்லை. ஆனால் கண்ணையும் கருத்தையும் கவரவல்ல இந்த அழகை 'மாமிச பட்சிணி'யாகிய பீட்டர் துரையின் கண்களால் அழகு நோக்குடன் மட்டுமே காண முடியவில்லை. 'துப்பாக்கி இருந்தால் நாலைந்து மான்களைத் தீர்த்துக் கட்டிக்கொண்டு போயிருக்கலாமே'- என்ற எண்ணம்தான் அவருக்கு உண்டாகியது.

பீட்டர் துரை தமக்கே உரிய கொச்சைத் தமிழில் தம்முடைய 'மான் மாமிச' ஆசையை முத்துவேல் நாயக்கனிடம் கூறியிருக்கிறார். முத்துவேல் நாயக்கனோ உடனே மனம் பதறி நடுநடுங்கியவனாய், அது கூடாது என்றும், அம்மனின் ஆட்சி எல்லைக்குள், அவள் காவலில் மேயும் மிருகங்களை ஹிம்சிக்கக் கருதுவது பாவமென்றும் மிகுந்த சிரமமான விவாத விளக்கங்களோடு துரைக்குக் கூறிப் பார்த்திருக்கின்றான், துரையோ அவன் கூறியதைக் கேட்டு இடி இடியென்று சிரித்து ஏளனம் செய்திருக்கிறார்.

கடைசியில் துரையின் பிடிவாதத்திற்கு முன் முத்துவேலு நாயக்கன் தாழ்ந்து போகவேண்டியதாயிற்று. அவன் மேஸ்திரி வேலை நிலைப்பது அவர் கையிலிருக்கும் போது வீணாக அவரைப் பகைத்துக் கொள்வானா? துரையின் வேண்டுகோளை மறுநாள் நிறைவேற்றிக் கொடுப்பதாக வாக்களித்து விட்டான். மறுநாளைக்கு மறுநாள் தை மாதப் பிறப்பாக இருப்பதனால், கோவிலில் படையலுக்கு ஏற்பாடுகள் நடந்து கொண்டிருந்தன. இதனால் பகலில் மான் வேட்டையாடுவது என்பது முடியாது. யாராவது கண்டால் முத்துவேலு நாயக்கனை ஊருக்குள் உயிரோடு நுழையவிட மாட்டார்கள். அம்மன் கோவில் சட்டத்திற்கு விரோதமாக நடந்து கொண்டதற்காக அவனைக் கொத்திப் போட்டுவிட்டுத்தான் மறுவேலை பார்ப்பார்கள். இதனால் யாருக்கும் தெரியாமல் துரையின் ஆசையைப் பூர்த்தி செய்வதற்கு ஓர் தந்திரமான ரகசியத் திட்டம் வகுத்துக் கொண்டான் முத்துவேலு நாயக்கன்.

மலைப் பகுதியில் மான், பன்றி முதலிய மிருகங்களை வேட்டையாடுவதற்காகக் கந்தகத் தூளையும் கரிப்பொடியையும் கொண்டு ஒருவகை நாட்டு வெடிகுண்டு செய்வது வேட்டைக்காரர்கள் வழக்கம். வெடி மருந்தை 'மாட்டுச் சவ்வு' என்ற ரப்பர் போன்ற பசைச் சுருளில் பொதியச் செய்து மேலே பச்சைக் களிமண்ணைப் பூசித் தோலால் இறுக்கித் தைத்து விடுவார்கள். மலையில் மான், பன்றி முதலிய மிருகங்கள் அதிகமாகப் பழகும் இடங்களில் இப்படிச் செய்த வெடிகுண்டுகளை அங்கங்கே போட்டு வைப்பதுண்டு. களிமண் உலர்ந்ததும், இந்தக் குண்டுகளின் இரண்டு ஓரங்களிலும் மாட்டுச் சவ்வு துருத்திக் கொண்டு வெடிக்கத் தயாராக இருக்கும்! இவ்வாறு வெடிக்கத் தயாராக இருக்கும் இந்த வெடி குண்டுகள் மிருகங்களின் கால்களில் இடறியோ, சவ்வின் வாடையினால் வாயால் மிருகங்கள் குண்டைக் கவ்வுகிறபோதோ படீரென்று வெடித்து அவைகளைக் கொன்று தள்ளிவிடும்.

மறைந்திருக்கும் வேட்டைக்காரர்கள் தாங்கள் வைத்த குண்டுகள் வெடித்து மிருகங்கள் செத்ததும் மறைந்திருந்த இடங்களிலிருந்து வெளிப்பட்டு, 'வேட்டை'களை எடுத்துக் கொண்டு போவார்கள்.

முத்துவேலு நாயக்கன், வேட்டையிலும் நல்ல பரிச்சயம் உள்ளவனாகையால் அவனுக்கும் இந்த நாட்டு வெடிகுண்டு செய்வதில் நல்ல பழக்கம் உண்டு. தைப் பொங்கலுக்கு முதல் நாள் மாலை அம்மன் கோவில் புல்வெளிக் காட்டில் ஏழு எட்டு இடங்களில் பச்சைக் களிமண் உலராத குண்டுகளைக் கொண்டுபோய் வைத்துவிட வேண்டும். நிச்சயம் நான்கைந்து மான்களாவது குண்டுகளில் சிக்கிச் சாவது உறுதி. குண்டுகள் உலர்ந்து சவ்வு மிதிபட்டு வெடிப்பதற்குள் இரவு நேரம் வந்து விடுமாகையினால் யாரும் பார்க்காமலே காரியம் நடந்துவிடும். இரவு எட்டு ஒன்பது மணிக்குள் 'வேட்டை'யில் அகப்பட்ட மான்களின் உடல்களோடு துரையைப் போய்ச் சந்திக்கலாம். இதுதான் சரியான யோசனை' என்று இவ்வாறு தனக்குள் ஒரு தீர்மானம் செய்துகொண்டிருந்தான் முத்து வேலுப் பயல். அணைக்கட்டில் பாறை உடைப்பதற்காக வந்திருந்த வெடிமருந்தில் கொஞ்சம் தயார் செய்துவைத்தான். துரையோடு உலாவப் போனதற்கு மறுநாள் மாலை தன் திட்டப்படியே புல்வெளிக் காட்டில் ஓர சாரங்களின் குண்டுகளை அங்கங்கே போட்டு வைத்துவிட்டு அவைகள் வெடிக்க இரவு ஏழரை மணிக்குமேல் ஆகுமென்று அனுமானித்துக் கொண்டு கிளம்பினான். திரும்பவும் ஏழேகால் மணிக்குத் தான் வந்தால் குண்டுகள் வெடித்து மான்கள் சாவதை மறைந்திருந்து காண்பதற்காக ஒரு புதரையும் அப்போதே அடையாளம் பார்த்து வைத்துவிட்டுத்தான் புறப்பட்டான். தன் காரியம் அவ்வளவு கச்சிதமாக வெற்றியுடன் முடியும் என்று நம்பிக்கை பயலுக்கு. மீண்டும் ஏழு மணிக்கு மேல் கோணிப் பையோடு வந்து மான்களை அடைத்துக் கொண்டு போகவேண்டிய வேலைதான் பாக்கி என்ற திருப்தியோடு ஊருக்குள் வந்துவிட்டான் நாயக்கன்.

**பொ**ங்கல் படையலன்றைக்குத் தோரணங்களிலிருந்து அம்மனுக்குப் போடுகின்ற மாலை வரைக்கும் எல்லாம் அருகம்புல்லோடு சேர்த்தே தொடுக்கவேண்டுமென்று ஓர் சம்பிரதாயம் உண்டு. இதற்கு அந்தப் புல்வெளி அருகையே பயன்படுத்த வேண்டும். முத்துவேலு நாயக்கன் வெடிகுண்டுகளை வைத்துவிட்டுப் போய் ஒரு நாழிகை கழிந்திருக்கும். மாலை, ஜாடனை வகையறாக்களுக்காக அருகம்புல் கொண்டு போவதற்காகப் பூசாரியும் வடிவேலுப் பண்டாரமும் புல்வெளிக்கு வந்திருக்கிறார்கள். வந்தவர்கள் தற்செயலாக நாயக்கன் 'உழப்பிவிட்டுப்' போன பக்கமே புல்லுக்காக இறங்கமேண்டுமா? பண்டாரம் முதலில் ஒரு களிமண் உலராத குண்டைக் கண்டெடுத்ததும் இருவருக்கும் எந்தப் பயலோ, 'மான் வேட்டைக்காக அக்கிரமம் செய்துவிட்டுப் போயிருக்கிறான்' என்ற சந்தேகம் பலமாக ஏற்பட்டு விட்டது.

இதன் விளைவாக அந்த நெட்டிற்குச் சால் பிடித்து இருவரும் அலசிப் பார்க்கத் தொடங்கினர். அரை நாழிகையில் முத்துவேலு நாயக்கன் வைத்துவிட்டுப் போயிருந்த அத்தனை குண்டுகளையும் 'வைத்தவனை' வாயாரச் சபித்துக் கொண்டே கண்டெடுத்து விட்டனர் பூசாரியும் பண்டாரமும்! "கலி காலமையா! அக்கிரமம்

பெருத்துவிட்டது'' என்று கூறிக்கொண்டே, அவ்வளவு குண்டுகளையும் தலையைச் சுற்றி அருகிலிருந்த ஒரு புதரில் வீசி எறிந்துவிட்டுக் குடலைகள் நிறைய அருகம்புல்லோடு திரும்பிச் சென்று விட்டார்கள் அவர்களிருவரும்.

இரவு ஏழேகால் மணிக்கு 'பேட்டரி லைட்டு' கோணிப்பை சகிதம் புல்வெளிக் காட்டிற்கு வந்தான் நாயக்கன். வரும்போதே அபசகுனம்போல அடுத்தடுத்து இரண்டிடங்களில் கால் இடறித் தடுக்கியது. பயலுக்கு அப்போதே மனதில் ஒரு தினுசாகப் பட்டு, 'கதக்' 'கதக்' என்றிருக்கிறது! ஆனால் துரையைத் திருப்திப்படுத்த வேண்டும் என்ற போதையில், 'இதெல்லாமே மூடநம்பிக்கை! சுத்த ஐகப் புரட்டு' என்று தன்னைத் தானே திடப்படுத்திக் கொண்டு புறப்பட்டு விட்டான். மூன்றாம் அபசகுனமாகப் பேட்டரி லைட்டில் பேட்டரி செல்கள் தீரவில்லை என்றெண்ணிக் கொண்டு வந்ததற்கு மாறாகப் பாதி தூரத்தில் வந்து போட்டுப் பார்த்தால், 'பேட்டரி' எரியவில்லை. மனம் பலவாறு குழம்பி, அடிவயிற்றில் புளியைக் கரைத்தாலும், குழப்பத்தோடு குழப்பமாக முன்வைத்த காலைப் பின் வைக்காமல் புல்வெளிக் காட்டிற்கு வந்துவிட்டான். மேகத்தில் மறைந்திருந்த மங்கலான நிலா ஒளியில் மான்கள் கூட்டம் கூட்டமாக மேய்ந்து கொண்டிருந்தன. தான் எங்கெங்கே குண்டுகளை வைத்திருந்தானோ, அந்த இடங்களில் மான் கூட்டம் அதிகமாக இருந்ததை மனமகிழ்ச்சியோடு நோக்கித் திருப்தியடைந்தான் நாயக்கன்.

குண்டுகள் வெடிக்கின்றவரை தான் சாயங்காலமே பார்த்து வைத்துவிட்டுப் போயிருந்த புதரில் மறைவாக இருந்து கொள்ளலாம் என்று அந்தப் புதரை நோக்கி நடந்தான், முத்துவேலு நாயக்கன். பீட்டர் துரை தன்னருகில் வந்து 'சபாஷ்' என்று பாராட்டி, முதுகில் தட்டிக்கொடுப்பது போல ஒரு மானஸீகத் தோற்றம் அவனை அந்த இருட்டிலும் நிமிர்ந்து ராஜநடை நடக்கும்படி செய்தது. இறுமாப்போடு அடிமேல் அடிவைத்துப் புதர்ப் பக்கம் செல்லலானான். புதருக்குப் பக்கத்தில் காலில் ஏதோ சில உருண்டையான கற்களைப்போல இடறின. அப்படி இடறியவற்றின் விளிம்பிலிருந்து கூர்மையான ஒன்று காலில் குத்தியதைப் போல வலிக்கவே, முத்துவேலு நாயக்கன் குனிந்தான்.

ஒரே ஒரு விநாடி! கீழே அவன் கண்ட பொருள்...? 'ஐயோ' என்று அலற வாயைத் திறந்தான். அதற்குள் 'படீ'ரென்று ஓர் பெரிய வெடி முழக்கம் வான முகட்டையே பிளந்துவிடுவதுபோல எழுந்தது. நாயக்கனின் 'அலறல்' அந்தப் பெருஞ் சப்தத்தில் அடங்கி ஒடுங்கிவிட்டது. பதினைந்தடி உயரம் மேலே வானத்தில் தூக்கி எறியப்பட்டது முத்துவேலு நாயக்கனின் உடல். கோணிப்பையும் பேட்டரி விளக்கும் திசைக்கு ஒன்றாகப் போய்ச் சிதறி விழுந்தன. அடுத்தடுத்து நாலைந்து தடவை மேலே தூக்கித் தூக்கிக் கீழே விழச் செய்யப்பட்டது. 'உயிர் காத்த நல்லா'ளுக்கு எதிராக வினை விதைத்தான் அவன். அவளோ வடிவேலுப் பண்டாரத்தையும் பூசாரியையும் கருவிகளாகப் பயன்படுத்திக் கொண்டு, அவன் மான்களுக்காக விதைத்து வைத்த அத்தனை குண்டுகளையும் கண்டெடுத்து, அவன் தங்க இருந்த புதரில் அவனுக்காகவே விதைத்து வைத்தாள்!

ஆனாலும் பாருங்கள்; 'உயிர் காத்த நல்லாள்' என்ற பேருக்கு ஏற்ப தான் காக்கும் உயிர்களைக் கொல்ல நினைத்த முத்துவேலு நாயக்கனுக்குக்கூட உயிர்ச் சேதம் ஏற்படுத்தி விடவில்லை அவள்! வலது காலையும் கண்களையும் பறித்துக் கொண்டு அவனை உயிரோடு விட்டு விட்டாள். மறுநாள் பொங்கல் படையலும் அதுவுமாக இந்த முத்துவேலுப் பயல் லோகல்பண்டு ஆஸ்பத்திரியில் வலது முழங்காலுக்குக் கீழே ஆபரேஷன் செய்யப்பட்டுக் கண்களில் வெடிமருந்து பாய்ந்த எரிச்சல் தாங்க முடியாமல் துடித்துக் கொண்டிருந்தான். மேலே தூக்கி எறியப்பட்டதனால், உடலின் எல்லாப் பாகங்களிலும் காயங்கள்! கை கால்களை அசைக்க முடியாமற் கிடந்தான். பீட்டர் துரை அவனுக்காக மதுரையிலிருந்து ஆபரேஷன் வேலையில் தேர்ச்சியுள்ள பெரிய டாக்டரை வரவழைத்திருந்தார். எல்லோரையும் போலப் பீட்டர்துரையும், கரும்பும் வாழைத் தாருமாக அம்மனை வழிபட்டு மன்னிப்புப் பெறுவதற்காக முத்துவேலின் வேண்டுகோளுக் கிணங்கிக் கோவிலுக்கு வந்ததுதான் யாவரையும் அந்தத் தை மாதப் பிறப்பன்று ஆச்சரியத்தில் ஆழச்செய்தது! "அந்தக் குற்றத்திற்கு முத்துவேலு காரணமில்லை! எல்லாம் என்னாலே வந்த வினை! அதைப் பரிகாரப்படுத்திக் கொள்வதற்காகவே அவன் ஆஸ்பத்திரியில் கிடக்கும் இந்த நாளில் அவன் சார்பாகக் கிறிஸ்தவனாகிய நான், உங்கள் கோவிலுக்கு வந்தேன்"- என்று துரை கொச்சைத் தமிழில் கூறியபோது, யாவரும் மனமுருகிவிட்டனர். துரை அன்று நெற்றியில் விபூதி குங்குமம்கூட இட்டுக்கொண்டார்.

* * *

ருவடியாபிள்ளை 'உயிர் காத்த நல்லாள்' என்ற பெயரின் ஸ்தல புராணத்தை மேற்கண்டவாறு உதாரணக் கதையோடு எனக்குக் கூறி முடித்தபோது, உலாவச் சென்ற நாங்களிருவரும் மேற்படி அம்மன் கோவிலின் அருகே போய்ச் சேர்ந்தோம்.

திருவடியாபிள்ளை மேல் வேஷ்டியை அரையில் வரிந்து கட்டிக்கொண்டு, வாய்க்காலில் இறங்கிக் கைகால்களைச் சுத்தம் செய்துகொள்ளத் தொடங்கினார்.

"ஆமாம்! பிள்ளைவாள், உங்களுடைய இந்தக் கதைக்கு ஏதாவது 'அதாரிடி' - அதாவது ஆதாரம் உண்டா? இல்லை - வெறுமனே கர்ண பரம்பரையா வருவதுதானா?" - நான் கேட்டேன்.

"அதென்ன அப்படிப் போனாப் போவுதுங்கறாப்பிலே ஒரு வார்த்தையைக் கேட்டிட்டியளே! இந்தத் திருவடியா பிள்ளை 'சொல்றதுலே' எப்பவும் 'பாயிண்டு' இல்லாமப் போவாதுங்க.." என்றார் பிள்ளை.

"ஆமாம்! ஆமாம்! 'பாயிண்டு' இருக்கத்தான் இருக்கிறது! நீங்கள் சொல்வதில் அது இல்லாமல் எங்கே போகும்?" - சிரித்துக்கொண்டே நான் கூறினேன்.

**(1963-க்கு முன்)**

## 86. அரண்டவன் கண்கள்

"**ப**ந்தய நாள் நெருங்க நெருங்க முனியாண்டிக்குத் துணிச்சலும், தைரியமும் எதிர்பார்த்ததற்கு மாறாகப் பெருகிக்கொண்டு வந்தன. ஆனால், மன விளிம்பில் இனம் புரியாமல் தோன்றி மறைந்துகொண்டிருக்கும் பயச்சலனத்தை அடக்க முடியவில்லை. அந்தச் சலனம் அவனுடைய சக்திக்கு அப்பாற்பட்டதாக இருந்தது. வென்று விடலாம் என்ற நம்பிக்கை மட்டும் இருந்து கொண்டிருந்தது.

ஆயிற்று! அமாவாசைக்கு இன்னும் மூன்றே நாட்கள் இருந்தன. பூந்துறை கிராமம் முழுவதும் அந்தப் பந்தயத்தின் முடிவை எதிர் நோக்கிக் காத்திருந்தது என்றால் அதில் சற்றளவும் வியப்பிற்கு இடமே இல்லை. இருந்தாலும் ஒன்று மட்டும் உண்மை - பந்தயத்தின் முடிவு பந்தயம் போட்ட முனியாண்டிக்கு வெற்றியாக இருக்காது; ஏன்? இருக்கவே கூடாது என்பது கிராமத்தின் ஏகோபித்த விருப்பம். ஏனென்ற கேள்வியை எழுப்பினால் முனியாண்டியின் பந்தயம் அத்தகைய முறையில் அமைந்திருந்தது. கிராம மக்களின் தலைமுறை தலைமுறையான நம்பிக்கையைத் தகர்த்து எறிவதாக இருந்தது அவன் பந்தயம். அவன் வெற்றி அவர்கள் நம்பிக்கையைப் பாதித்தது. அந்தப் பாதகம் ஏற்படுவதை அவர்களால் ஒருபோதும் பொறுக்க முடியாது.

ஊறிப்போன பழைய எண்ணங்களை உடனடியாக விலக்குவது என்பது அவ்வளவு எளிய காரியமல்ல. பலருடைய ஒன்று சேர்ந்த நம்பிக்கை ஒரு தனி மனிதனால் எள்ளப்படுவதை எப்படிச் சமூகமாகிய அந்தப் பலர் பொறுப்பார்கள்? எனவே, முனியாண்டிக்கு வெற்றி கிடைத்துவிடுமோ என்ற சந்தேகத்தைக் கூடத் தங்கள் மனத்தில் தோன்றவிடாமல் தடுத்துக்கொண்டிருந்தனர். நண்பர் திருவடியா பிள்ளை இவ்வாறு கூறிவிட்டுப் பொடி மட்டையை அவிழ்த்தார். "அது என்ன ஐயா? அப்படி ஆச்சரியமான பந்தயம்?" நான் வியப்புத் தாங்க முடியாமல் கேட்டேன். "அதைத்தானே சொல்லப் போகிறேன்" என்று ஆரம்பித்தார் நண்பர். எனக்கு ஞாயிற்றுக் கிழமைப் பொழுதுபோக்குச் சாதனம் பிள்ளை அவர்தான். இதோ பொடி மட்டையை உள்ளே சொருகிக்கொண்டு அவர் கனைத்த வண்ணம் கதையைத் தொடங்கிவிட்டார்.

**பி**லாவடியார் கோவில் மகிழமரம் என்றால் பூந்துறையில் அழுதபிள்ளை வாய்மூடும். பரந்து விரிந்த அந்த வயதான மகிழ மரத்தடியில் கோவில் கொண்டிருக்கும் பிலாவடிக் கருப்பண்ண சாமிக்குக்கூட அவ்வளவு ஆற்றல் இருந்ததாகச் சொல்வதற்கில்லை. பொழுது சாய்வதற்கு ஆரம்பித்து விட்டால் போதும், உயிருக்கு ஆசையுள்ளவர்கள் பிலாவடியார் கோவில் பக்கம் தலைவைத்துக்கூடப் படுக்க மாட்டார்கள். யட்சிணிகளுக்கும், மோகினி தேவதைகளுக்கும் அந்த மரம் இருப்பிடம்

என்பது கர்ண பரம்பரையாக அந்த ஊர் அறிந்து வந்த உண்மை. வருடத்தில் ஒருவராவது அந்த மரத்தடியில் பலியாகத் தவறினதே இல்லை. போன ஆனி மாசம் மாலை மயங்கும் நேரத்தில் அதே இடத்தில் ரத்தம் கக்கிச் செத்த சின்னக்கருப்பனை ஊரார் மறந்துவிட முடியுமா என்ன? இப்படிப் பல சம்பவங்கள் நடந்திருக்கின்றன. பரம்பரை நம்பிக்கையாலும் பிரத்யட்சத்தாலும் உண்மையான ஒன்றை இந்த நேற்றுப் பயல் முனியாண்டி நாலு கோணல் எழுத்தைப் படித்துவிட்டு மறுப்பதைச் சகிக்க முடியுமா என்ன? இதையெல்லாம்விட இயற்கையாகவே பிலாவடியார் கோவில் அமைந்திருந்த இடம் இருட்டின பிறகு போவதற்கு வசதியற்றது. இந்த நம்பிக்கை வேறு முனியாண்டிக்குத் தோல்வி என்று அவர்கள் கருத இடங் கொடுத்துக் கொண்டிருந்தது.

இவ்வளவுக்கும் காரணமான அந்தப் பிலாவடியார் கோயில் அமைந்திருக்கும் விதத்தைச் சற்றுத் தெரிந்து கொள்ளவேண்டும். கிழக்கு நோக்கி மேல் கீழாக அமைந்த பூந்துறை கிராமம் மூன்று புறங்களிலும் குன்றுகளால் சூழப்பட்டு இருந்தது. ஊரைச் சுற்றி முத்தாரம் இட்டது போல் சிற்றாறு ஒன்று இரண்டாகப் பிரிந்து ஓடிக் கொண்டிருந்தது. இந்தச் சிற்றாறு மேற்கேயுள்ள குன்றில் உற்பத்தியாகிறது. அது பின் இரண்டாகப் பிரிந்து ஊருக்குத் தென்பகுதியில் ஒன்றும், வடபகுதியில் ஒன்றுமாகப் பாய்கிறது. இந்த ஆறு உற்பத்தியாகுமிடத்தை ஒட்டித்தான் பிலாவடியார் கோவில் அமைந்திருக்கிறது. மலைச் சரிவில் அடர்த்தியான மரக் கூட்டத்திற்கிடையே இருந்த அந்த இடத்தில் பகற்பொழுதில் வெய்யிலே நுழைய முடியாது. ஊரிலிருந்து அதற்கு ஒரு ஒற்றையடிப்பாதை உண்டு. அந்தப் பாதையின் முற்பகுதி ஒழியப் பின்னுள்ள வழி முழுவதும் அடர்த்தியான காட்டுக்கிடையே செல்லக் கூடியது. அந்த ஒற்றையடிப் பாதையை விட்டு விலகாமல் நேரே சென்றால் மூன்று மைல்களில் பிலாவடியார் கோவிலுக்கு வந்து சேரலாம். காட்டுச் சிள் வண்டுகளின் 'கீஇஇ...' என்ற ரீங்கார சப்தம் இடை விடாது ஒலிக்கும். அந்த சப்தத்தை வெற்றி கொள்வது போல் சோவென்ற இரைச்சலுடன் முப்பது அடி உயரத்திலிருந்து அருவி ஒன்று விழுந்து கொண்டிருக்கும். கோவிலுக்குப் பின்புறம் அமைந்திருந்த மலைப் பிளவிலிருந்து விழும் இந்த நீர் வீழ்ச்சியின் தண்ணீர்தான் ஊருக்குள் ஆறாக ஓடுவது. அருவி விழும் பள்ளத்தை அடுத்துச் சிறிது சம அளவான தரைப்பகுதி இருந்தது. அதன் நடுவில் ஒரு பெரிய மகிழமரம். கொப்பும் கிளையுமாக விரிந்து படர்ந்திருந்தது. காலை நேரத்தில் அந்த இடத்திற்கு வந்தால் ஒரே மகிழம்பூ மணம் மூக்கைத் துளைக்கும். மகிழ மரத்தை ஒட்டி எப்போதோ கட்டப்பட்ட ஒரு சிறு கோவில். மதிலோடு உராய்ந்துகொண்டு வளர்ந்திருந்த ஒரு முதிர்ந்த பலாமரம். இவ்வளவுதான் குறிப்பிடத்தக்கவை. எப்பொழுதாவது கூட்டமாகச் சாமி கும்பிட வருகிறவர்கள் அடுப்பு வைத்துக் கரியேறிய குண்டுக் கற்கள் அங்கொன்றும் இங்கொன்றுமாகக் கிடக்கும். தரையில் மகிழம்பூ திரட்டுவாரற்று உதிர்ந்து கிடக்கும். அதைத் திரட்டவோ, மூக்கில் நுகரவோ தலையிற் சூடவோ கூடாது என்பது அந்தப் பக்கத்து நியதி. யட்சிணி மோகினிகள் கோபத்துக்கு ஆளாக நேரிடும் என்பது அவர்கள் பயம். ஒரு சமயம் கிராம மக்கள் சொல்வதைக் கேலி செய்த பாரஸ்ட் ரேஞ்சு ஆபீஸர் முருகப்ப முதலியார் அனுபவித்த

கஷ்டத்தை இப்பொழுதும் மேற்கோளாக எடுத்துச் சொல்வார்கள் அப்போதுதான் கணவன் வீட்டிலிருந்து வயிறும் பிள்ளையுமாக வந்த முதலியார் மகள் அப்பா கொடுத்த மகிழம்பூவை விஷயம் தெரியாமல் வைத்துக்கொண்டாள். நிறைமாசம்... பெண் குழந்தை பிறந்தது. வளர்ந்தது... இதோ இன்றைக்கு எட்டு வயசு. தலையில் மயிரே முளைக்கவில்லை. வழுக்கை, இப்படியாகப் பல பல செய்திகள்.

*　　　*　　　*

இருந்தும் முனியாண்டி தளரவில்லை. ஒப்புக்கொண்டு விட்டான். முதலில் இந்தப் பந்தயம் போடவேண்டிய அவசியம் எப்படி ஏற்பட்டது என்பதைக் காண்போம். சர்வ சாதாரணமாக ஆரம்பித்த தகராறு, பேச்சு முற்றிப் பந்தயமாக முடிந்துவிட்டது. ஊர்ச் சாவடியில், விடுமுறைக்காகப் பூந்துறை வந்திருந்த முனியாண்டி உட்கார்ந்து கொண்டிருந்தான். பல் விளக்கிக் கொண்டே அங்கே வந்து சேர்ந்தான் முத்தையா. அடுத்தாற்போல் செங்கப்படையன் வந்தான். எதை எதையோ பேசினபின் பேச்சு பிலாவடியார் கோவிலில் வந்து நின்றது. பிலாவடியார் கோவில் மகிழ மரத்தின் பிரதாபங்களைச் செங்கப் படையன் ஒரேயடியாக அளந்தான். முத்தையா அதற்கு ஒத்தூதினான். பேச்சு வளர வளரச் சாவடியில் ஊர் விடலைப் பிள்ளைகள் நிறைந்து விட்டன. முனியாண்டி எல்லாம் சுத்தப் புரட்டு என்று சாதித்தான். "மோகினியாம்...! யட்சணியாம்! அந்தக் கதையெல்லாம் மூட்டை கட்டி வை! அப்பேன், சும்மா உருட்டாதே. வேணும்னா வா அப்பேன். ஒரு பந்தயம் போட்டுவிடலாம்!" முனியாண்டி எகத்தாளமாகப் பேசிவிட்டான்.

"அப்படி வா தம்பி வழிக்கு. வர்ற அமாவாசை அன்னிக்கி இரவு பத்து மணிக்குப் புறப்பட்டுப் போய் அந்த மகிழ மரத்திலே நாங்க கொடுக்கிற ஆணியை அடிச்சுட்டு வந்துடு. ஆனா ஒண்ணு. நீ தனியாகத்தான் போகணும். போக வர ரெண்டு மணி நேரம் குடுத்திருக்கோம். இதெ நீ செஞ்சிட்டா இருபது ரூபா பந்தயம்! நான் பத்து, முத்தையாப் பய பத்து... பணம் போனாப் போவுது... எங்கே பார்க்கலாம்! உம்.. ஆம்பளை சிங்கத்தை...?" செங்கப்படையன் கொஞ்சம் அழுத்தமாகப் பேசினான்.

"ஏன்; இருக்கிற பேயி என்னைக்குந்தானே இருக்கும்? அதுக்கு அமாவாசை என்னத்துக்காம்? பேயடிக்காமப் புழைச்சுக்கிட்டாலும், இருட்லே பூச்சி பொட்டாவது கடிக்கட்டுமேன்னு பார்க்கிறீங்களா? அப்படித்தானே?"

சிரித்துக் கொண்டே முனியாண்டி இதைக் கேட்டான்.

"அப்ப ஒண்ணு செய்! இருட்டுங்கறதுக்காக ஒரு பேட்ரி லைட் வச்சுக்க; அவ்வளவுதானே?" முத்தையன் அனுதாபப்பட்ட மாதிரி இதைச் சொல்லி வைத்தான். "நிறுத்து அண்ணே! ரொம்ப அளக்காதே! உம் பந்தயப் பணம் கெடக்குது விடு... அதுக்காக இதெ நான் செய்யறேன்னு நினைச்சிராதே. உங்க முட்டாள்தனத்துக்கு ஒரு பாடம் காட்டணும்! அதுதான் என் நினைவு. இருட்டுக்குப் பயந்தவன் நான் இல்லெ. அமாவாசியானா என்ன; பௌர்ணமியானா என்ன? துணிவு இருந்தா நடக்காது...? பயந்தானே இருட்டு!"

இயற்கையாகவே துடுக்குத்தனம் நிறைந்த முனியாண்டி இப்படிப் பேசியதில் ஆச்சரியமில்லை. உண்மையில் அவன் அந்தப் பந்தயத்தைப் பற்றிக் கவலைப்பட வில்லைதான். அதற்கு மாறாகச் சந்தோஷப்பட்டான் என்று கூடச் சொல்லலாம். கல்லூரியில் படித்து வந்த அவன் விடுமுறைக்காகக் கிராமம் வந்திருந்தான். அவனுடைய கல்லூரி வாழ்வின் சூழ்நிலை இந்த அசட்டு நம்பிக்கைகளில் ஓரளவு இகழ்ச்சி ஏற்படும்படி செய்திருந்தது. அதோடுகூட இம்மாதிரி நம்பிக்கைகளைப் பொய்யாக்க வேண்டுமென்ற அழுத்தமான எண்ணம் அவனைப் பற்றியிருந்தது. அதுதான் இந்தப் பந்தயத்தை விளையாட்டும் வினையுமாக ஏற்படுத்திவிட்டது. செங்கப்படையன், முத்தையா, முனியாண்டி இவர்களெல்லாரும் இருபது இருபத்தைந்து வயதுடைய விடலைப் பிள்ளைகள். முன்னிருவரும் கிராமத்திலேயே விவசாயம் செய்து கொண்டிருந்தவர்கள். ஆகவே இது விஷயமாக நம்பிக்கை இழக்க முடியாமல் சூழ்நிலை அமைந்திருந்தது. முனியாண்டியின் வேண்டுகோளின்பேரில் இந்தப் பந்தய ஏற்பாடு கமுக்கமாக நான்கைந்து விடலைப் பிள்ளைகளுக்குள் மட்டும் தெரிந்திருந்தது. காரணம் பெரியவர்களுக்குத் தெரிந்தால் இதை நிச்சயமாகக் கலைத்து விடுவார்கள் என்பதுதான். முனியாண்டி இதை ரகசியமாக முடிப்பதற்கு ஏற்பாடு செய்தது வெறொரு காரணத்தால். அவன் தகப்பனார் காதில் இந்த விஷயம் விழுந்துவிட்டால் அவனை வீட்டை விட்டே வெளியில் போகாதே என்று சொல்லிவிடுவார். பிலாவடியானையும் மகிழ மரத்தையும் பற்றி அவருக்குச் செங்கப்படையனைக் காட்டிலும் அழுத்தமான நம்பிக்கை.

ஆனால் எல்லாம் திட்டப்படி நடக்கிறதா என்ன? எப்படியோ விஷயம் ஊர் முழுவதும் பரவியிருந்தது. நல்ல வேளையாகச் சதுரகிரி மகாலிங்கம் வரை போயிருந்த முனியாண்டியின் தாய் தந்தையர் அமாவாசைக்குப் பிறகு தான் வருவதாகச் சொல்லிப் போயிருந்தனர். ஊரில் தன்னைத் தடுத்த வேறு சில பெரியவர்களையும் உறவினர்களையும் மறுக்க முடியாதபடி தன் சாமர்த்தியமான பேச்சால் தடுத்துவிட்டான் முனியாண்டி. எப்படியோ பந்தயம் பயங்கரமானது என்று பிலாவடியைப் பற்றிக் கேள்விப்பட்டு நம்பியவர்கள் கருதினாலும் முடிவை ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருந்தார்கள். மேலே நாம் குறித்தபடி கிராமமே எதிர்பார்த்தது என்றுதான் சொல்லவேண்டும்.

அமாவாசை வந்தது. குறித்தபொழுதில் சாவடியில் ‘நண்பர்கள்’ கூடினர். சாவடிக்கு வெளியே ஒரே மைக் குழம்பாயிருந்தது. ஒன்பதரை மணிக்கு முனியாண்டி சிரித்துக் கொண்டே உள்ளே நுழைந்தான். செங்கப்படையானுக்கு முனியாண்டியின் முகச்சாயலில் பயத்தின் அறிகுறி சிறிதும் இருப்பதாகவே தெரியவில்லை. “பய! போய்ட்டு வந்தாலும் வந்திடுவான் போலிருக்கே” என்று எண்ணினான். புதிதாகக் கரண்ட் அடைத்த ஒரு மூன்று ஸெல் பாட்டரியை முத்தையா முனியாண்டியிடம் நீட்டினான். செங்கப்படையன் சாவடி மாடப் பிறையிலிருந்து தயாராக வைத்திருந்த சுத்தியலையும், சாண் நீள ஆணி ஒன்றையும் முனியாண்டியிடம் கொண்டுவந்து கொடுத்தான். முனியாண்டி புன்சிரிப்புடன் அவைகளை வாங்கிக் கொண்டான்.

கூடியிருந்த விடலைப் பிள்ளைகளுக்கு ஒரே ஆச்சரியமாயிருந்தது. பட்டணத்தில் இருட்டையே கண்டறியாத முனியாண்டி எப்படி இந்த மைக்குழம்பிலே சிறிய பேட்டரியைத் துணைகொண்டு போக முடியும்? முனியாண்டியின் கேலிச் சிரிப்பு அவர்களுக்குத் தங்கள் நம்பிக்கை கரைவது போன்ற உணர்ச்சியை உண்டாக்கியது.

மணி பத்து! முனியாண்டி விடைபெற்றுக் கொண்டான், அதே புன்சிரிப்புடன். "முனி ஜாக்கிரதை! காலையில் பொழுது விடிந்ததும் நாங்க வந்து பார்ப்போம். ஆணி குறித்த இடத்தில் அடிச்சிருக்கணும்! இங்கேயே சாவடியில் ஒரு மணிவரை காத்திருக்கோம்.. வந்திடு, பிறகுதான் வீட்டுக்குப் போவணும். என்னமோ? மனத்துலே தடம் புறண்டுச்சுன்னா திரும்பிடு! அதுக்காவ.. எக்கச்சக்கமா மாட்டிக்கிடாதே! ஏதோ விளையாட்டுப் பந்தயம்! உசிருக்கு வினையாயிடப்படாது." முத்தையாவின் குரலில் இப்போது இரக்கந்தோய்ந்திருந்தது. முனியாண்டி "என்ன அண்ணே மிரட்றே! சரியா பதினொன்றரைக்குப் பாத்துக்குவே ஆளை! வர்ரேன்!" என்று கூறிவிட்டு இருளோடு ஐக்கியமானான். முனியாண்டி போகிற போக்கில் மீண்டும் கேலியாகச் சிரித்த சிரிப்பு செங்கப்படையனை ஏதோ செய்தது. நண்பர்கள் சீட்டுக்கட்டைப் பிரித்துக்கொண்டு சாவடியில் உட்கார்ந்தனர். ஆனால் ஆட்டம் ஓடவில்லை 'இந்நேரம் முனியாண்டி எங்கே இருப்பான்? என்ன செய்வான்?' என்ற பேச்சிலேயே மணி பதினொன்றாகி விட்டது.

முனியாண்டிக்குத் தனி நடை ரொம்ப வேகமாக ஓடும். எதிர்பார்த்த நேரத்திற்கு முன்பே மகிழ மரத்தை அடைந்து விட்டான். சுற்றி ஒருமுறை நன்றாக பாட்டரி அடித்துப் பார்த்துக்கொண்டான். சோ என்று விழும் அருவி ஓசை சிள் வண்டுகளின் கீஇஇ சப்தம், வேறு ஒன்றுமே ஒலியில்லை. காற்றில் சில முதிர்ந்த இலைகள் உதிர்ந்தன. சில படபடத்தன. மரத்தையும் அதன் அமைப்பையும் லைட் அடித்து மனத்தில் நன்கு பதிய வைத்துக் கொண்டான். செங்கப்படையனை நினைத்தபோது அவனது அப்பாவி நம்பிக்கையும் நினைவுக்கு வந்தது. முனியாண்டி தனக்குள் சிரித்துக் கொண்டான். திடீரென்று அவனுக்கு ஒரு நல்ல பிளான் தோன்றியது. இருட்டில் மரத்தில் ஏறி ஆணி அடிப்பதைவிட மரத்தில் வெளிச்சம் படும்படி பாட்டரியை சாய்வாக வைத்து ஸ்விட்சையும் போட்டுவிட்டு ஏறினால் என்ன?

யாரோ அடுப்புக் கல்லாகக் கூட்டி வைத்திருந்த இரண்டு குண்டுக் கற்களுக்கிடையில் பாட்டரியைச் சாய்வாகச் சார்த்தி வைத்துப் பார்த்தான். அவன் ஆணி அடிக்க வேண்டிய இடத்தில் ஸ்பஷ்டமாக வெளிச்சம் விழுந்தது. தனது பிளானை நினைத்துத் தானே மகிழ்ந்து கொண்டான். தரையிலிருந்து சாய்வாக வைக்கப்பட்ட பாட்டரி எரிந்து கொண்டிருந்தது. அதன் வட்ட வடிவமான ஒளி விரிவு மரத்தின் குறிப்பிட்ட கிளையில் போதுமான அளவு விழுந்தது. முனியாண்டி அரை வேட்டியை வரிந்து கட்டிக் கொண்டு மரத்தில் ஏற ஆயத்தமானான் சுத்தியலை மடியில் சொருகிக் கொண்டான். ஆணியைச் சட்டைப் பைக்குள் போட்டுக் கொண்டான். சுற்றும் முற்றும் ஒருமுறை கண்ணோட்டம் விட்டுவிட்டு மரத்தில் ஏறினான். மூன்று கிளைகள் பிரியும் மரத்தின் நடு மையமான ஒரிடம் அவன் ஆணி அடிக்க

வேண்டியதாகும். அந்த இடம் நிற்க வசதியற்றுக் கப்பும், கவருமாக மண்டி அடர்ந்திருந்தது. எப்படியோ சமாளித்துக்கொண்டு ஏறி அதே இடத்திற்கு வந்து விட்டான். அப்போது பாட்டரி அதற்கு வெளிச்சத்தின் மூலம் நல்ல உதவி செய்தது.

பையிலிருந்து ஆணியை எடுத்தான். காரியம் முடியப் போகிறது என்ற சந்தோஷத்தில் இதயம் வெகுவேகமாக அடித்துக் கொண்டது. டக்..டக்..டக்.. ஒன்று! இரண்டு! மூன்று! ஆணியை இறுக அடித்தாகிவிட்டது. பச்சை மரம், ஆணி உள்ளிறங்கக் கேட்கவா வேண்டும்? சட்டை நுனி சிக்கிக் கொண்டிருந்ததை எடுப்பதற்காகச் சுத்தியலைத் தலைக்கு நேரே கவட்டை போலிருந்த இரண்டு கவடுகளுக்கிடையில் தொங்கவிட்டான். சிக்கலை எடுத்தாகிவிட்டது.

இதயம் அளவுகடந்த வேகத்தில் அடித்துக்கொண்டிருந்தது. அந்த வேகத்தில் சுத்தியலைத் தொங்கவிட்டதை அவன் மறந்துவிட்டான்.

இறங்குவதற்காக அடுத்த கொப்பில் காலை வைத்தான். 'பரட்!' வேஷ்டி கிழிந்தது. பின்னாலிருந்து யாரோ பிடித்து இழுப்பதுபோன்ற உணர்ச்சி... பட்டென்று மண்டையில் ஒரு அடி. சுத்தியல் குறி பார்த்து வைத்தாற் போல் மண்டையில் விழுந்தது. அதிர்ச்சிக்குமேல் அதிர்ச்சி. பக்கத்துப் பலாமரத்துப் பொந்திலிருந்து கோட்டான் ஒன்று கிரீச்சிட்டது. அதே சமயம் மரத்திலிருந்து நேராக விழுந்த மகிழங்கொட்டை ஒன்று சொல்லிக் கொண்டே விழுந்தாற்போலப் பாட்டரியின் அமுக்கு ஸ்விட்சின் மேல் விழுந்தது. விளக்கு அணைந்துவிட்டது. சிறு கொட்டையானாலும் உயரத்திலிருந்து விழுந்த அதிர்ச்சியால் கல் விலகிவிட்டது. லைட் கீழே உருண்டது. எல்லாம் கண்மூடித் திறப்பதற்குள் நடந்துவிட்டன. முனியாண்டி பிணமாகத் தொங்கினான்.

காரியத்தை வெற்றிகரமாக முடிக்கப் போகிறோம் என்ற பயமில்லாத சந்தோஷத்தில் தன்னை மறந்திருந்த முனியாண்டி ஆணி அடிக்கும்போது முன்தானையாகத் தொங்கிக் கொண்டிருந்த தன் வேஷ்டியையும் வைத்து நன்றாக இறுக்கி அடித்திருந்தான். கீழே இறங்கத் திரும்பும்போது பின்னே பிடித்திழுத்ததும் அவன் மரத்தோடு வைத்து அடித்திருந்த வேஷ்டி முன்தானையே. ஏதேதோ நண்பர்கள் சொன்னதெல்லாம் கண்முன் வந்தன. கண் அரண்டு விட்டது! கோட்டான் கத்தியதும் சுத்தியல் மண்டையில் விழுந்ததும், பாட்டரி அணைந்து உருண்டதும் ஒரே சமயத்தில் நடந்துவிட்டன. காக்கை உட்காரப் பனம்பழம் விழுந்த கதையாக அத்தனை சம்பவங்களும் ஒன்றுகூடி அவனுக்கு ஏதோ ஒரு பயங்கர உருவத்தை முன் நிறுத்திவிட்டன. அத்தனை நேரம் இருந்த 'அசட்டுத்' துணிவு ஓடிவிட்டது. அரண்டவன் கண்ணுக்கு இருண்டதெல்லாம் பேய்தானே. திடீர் அதிர்ச்சியில் மூச்சு நின்றுவிட்டது. முன்தானைப் பிடிப்பும் மரக்கிளையின் அடர்த்தியும் அவனை அப்படியே தாங்கிக் கொண்டன. முனியாண்டியின் உயிரற்ற சடலம் மகிழ மரத்தில் தொங்கிக் கொண்டிருந்தது. உருண்டு போன பாட்டரி கல்லிலும் கட்டியிலும் அடிபட்டுக் கண்ணாடி உடைந்து போய் ஓர் மூலையில் பாறை இடுக்கில் தடுக்கப்பட்டுக் கிடந்தது. கீழே விழுந்த சுத்தியல் மரத்தடியிலிருந்த பிள்ளையாரின்

மூக்கைக் கொஞ்சம் பேர்த்து விட்டுப் பக்கத்தில் விழுந்து கிடந்தது. காற்று ஹோ...வென்று அடித்துக் கொண்டிருந்தது. பிலாவடி ஒரு உண்மைத் துணிச்சல்காரனை அவன் கையால் நடந்த தவற்றைக் கொண்டே உயிரை வாங்கிவிட்ட பெருமையை அந்தக் காற்று அறிவித்தது போலும். பலாப் பொந்திலிருந்த கோட்டான் தைரியமாக இன்னும் 'கிரீச் கிரீச்' என்று சாவுச் சங்கீதம் பாடிக் கொண்டிருந்தது.

"மணி இரண்டே முக்காலாகி விட்டது. இங்கே சாவடியில் நண்பர் கூட்டம் நிலைகொள்ளாமல் தவித்தது. 'பய மாட்டிக்கிட்டானோ?" செங்கப்படையன் சந்தேகத்தைத் துணிந்து வெளியிட்டான்.

"சே! சே! அப்படிச் சொல்லாதே அண்ணே! தூக்க வெறிச்சா இருந்திருக்கும்! முனி வீட்டுக்குப் போயிருப்பான்." முத்தையா இப்படிச் சொல்லவும், சிலர் அதை ஆமோதித்தனர். வேறு சிலர் "அண்ணாச்சி! என்ன இருந்தாலும் நாம் இனிமேல் இப்படி இருக்கிறது நியாயமில்லை. முனி வீட்டுக்கு ஆள் அனுப்பி விசாரிச்சிக்கிட்டு ஆகிறதைச் செய்யணும்" என்றனர். முனி வீட்டுக்கு ஆள் அனுப்பப்பட்டான்.

கடைசியில் போன ஆள் திரும்பினான். கையை விரித்துவிட்டான். சாவடியை வெளிச்சம் செய்துகொண்டிருந்த அந்த ஒட்டை அரிக்கேன் லாந்தரில் எண்ணெய் ஊற்றிக்கொண்டு வேகமாகப் பிலாவடியை நோக்கிப் புறப்பட்டது அந்தக் கோஷ்டி. அவர்களிடம் பயத்தின் பரபரப்புக் காணப்பட்டது. செங்கப்படையனுக்கு வாய் அடைத்துப் போனது. பேசத் தோன்றவில்லை. முத்தையா துடிதுடித்தான். நண்பர் கூட்டம் நாலு மணிக்குப் பிலாவடியை அடைந்தது. அங்கே கண்ட காட்சி காணச் சகிக்கவில்லை. 'பய பிள்ளையார் மூக்கை உடைச்சிட்டு மரத்திலே ஏறியிருக்கான். யட்சிணி சும்மா வந்தாலே விடமாட்டாளே, சாமியை உடைக்க வேறே செய்திருக்கான். எதிர்பார்த்ததுதானே இப்படி நடக்கும்னு?' செங்கப்படையனே இவ்வாறு மனதில் நினைத்துக்கொண்டான். வெளியே சொன்னால் அப்போதிருந்த கோபத்தில் முத்தையன் அவன் கழுத்தை நெறித்திருப்பான். முனியாண்டி காலம் முடிந்துவிட்டது. முத்தையன்தான் உண்மையாக வருந்தினவன்.

"ஆமாம்.. திருவடியா பிள்ளை! இதெல்லாம் உங்களுக்கு எப்படித் தெரிந்தது?" நான் கேட்டேன். "அந்த விடலைப் பசங்களில் நானும் ஒருவனையா" என்றார் ஸ்ரீமான் பிள்ளை.

பூந்துறைக்காரரான ஸ்ரீமான் பிள்ளையிடம் விடைபெற்றுக்கொண்டு நான் எழுந்தேன்.

(1963-க்கு முன்)

# 87. தீமிதி

**ப**ங்குனி மாதம். கோடை வெய்யில் கொளுத்து கொளுத்தென்று கொளுத்திக் கொண்டிருந்தது. அமாவாசைக்கு இன்னும் நான்கு நாட்கள் இருந்தன. பங்குனி அமாவாசையன்று துரோபதை அம்மன் கோவில் தீமிதி உற்சவம். தலைமுறை தலைமுறையாகக் கிராமத்தில் நடந்துவரும் திருவிழா அது. ஊராருக்கு அந்தத் திருவிழாவில் பயபக்தி அதிகம். கோடை வெப்பத்தால் உயிர்களைச் சூறையாடும் அம்மை, கொப்புளிப்பான், வைசூரி போன்ற நோய்கள் ஊரில் பரவாமல் தடுக்கும் தெய்வீக முயற்சியாக இந்தத் திருவிழாவைக் கருதி வந்தனர்.

அந்த வருட உற்சவத்தை நடத்துவதுபற்றி விவாதிப்பதற்காகக் கோவில் குறட்டில் ஊர்த் தலைக் கட்டுகள் கூடியிருந்தனர். நாட்டாண்மைக்கார மூப்பனார் கூட்டத்திற்கு நடுவில் வசூல் நோட்டும் பென்சிலும் வைத்துக் கொண்டு உட்கார்ந்திருந்தார். கணக்குப் பிள்ளை உற்சவத்துக்கு வேண்டிய சாமான்களை 'லிஸ்ட்' எழுதிக் கொண்டிருந்தார். தலைக் கட்டுக்களில் ஒருவர் எழுந்திருந்து கேட்டார்,

"என்னங்க மூப்பனாரே! இந்தப் பெரிய பண்ணையாரு மகன் ராசகோவாலுப் பய ஏதோ நாலு விடலைப் பசங்களோடு சேர்ந்து கட்சி கட்டிக்கிட்டுத் திரியறானே! தீமிதியிலே கலகமில்ல உண்டாகும்போல இருக்குது?"

"அதென்ன விசயம்? எனக்குத் தெரியாதே. இப்பத்தான் கேள்விப்படறேன்..."

"பய பட்டணத்துலே நாலு கோண எழுத்துப் படிக்கிறானில்லே. அதுலே புத்தி தடுமாறித் திரியறான். நாம் தீ மிதித்துக் காட்டறாப்போலவே அம்மன் கோவில் நிபந்தனைகளை மீறி விரதம், கிரதம் இல்லாமே அவங்களும் தீமிதிச்சுக் காட்டப் போறானுகளாமே?"

"முடிஞ்சாக் காட்டட்டுமே? யாரு வேண்டாமின்னது?" பேச்சு வளர்ந்து கொண்டே போயிற்று. முதலில் பேசியவர் மீண்டும் ஆரம்பித்தார்.

"அதுமட்டும் இல்லீங்க! 'வழக்கம்போலத் துரோபதை அம்மன் கோவிலுக்கு முன்னாலே மிதிச்சாத்தான் சுடாதுங்கறது பொய்! விரதம், அம்மன் அருள் இதுகள்ளாம் சுத்தப் புரட்டு. ஊருலே இந்த மூடநம்பிக்கைங்களை ஒழிச்சிறணும். எங்களுக்குத் துரோபதை அம்மன் மேலே நம்பிக்கை கெடையாது. நாங்க உற்சவத்துலே தீ இறங்கறதுக்காக விரதமிருக்காமே, அம்மனைக் கும்பிடாமே, கோவில் விதியை மீறி, இறங்கிக் காட்டறோம். அப்பவாவது ஊராருக்கு இந்தப் புரட்டெல்லாம் புரியும்' என்று சொல்லிச் சவால் விட்டிருக்கானாம்."

*"கிடக்கான் உதவாக்கரை! சவத்துப் பய பேச்சை விட்டுத் தள்ளுங்க. மேலே ஆக வேண்டியதைப் பார்ப்போம்..."*

*"நாட்டாண்மைக்காரரே! இந்த விவகாரத்தைச் சிறிசா நினைச்சு விட்டிடறதுக்கு இல்லே. பெரிய வம்பு வழக்கெல்லாம் கிளம்பும் போலிருக்கு. ஒரு மண்டலத்துக்கு விரதமிருந்து, ஒரு வேளைச் சோறும் மூணு வேளைக் குளியலுமா எச்சத் தீட்டுக் கலக்காமல், வீட்டிலே கலக்காமல், நோன்பிருந்து, தீ எறங்கிக் காட்டிக்கிட்டிருக்கோம். இன்னிக்கித் தேதிவரை ஒருத்தன் கால்லே ஒரு கொப்பளம் கிளம்பிச்சுங்கிற பேச்சு உண்டா? நேத்து முளைச்ச பய; முளைச்சு மூணெலை விடலே! ஒரு நேமம், ஒரு நிஷ்டையில்லாம நானும் தீயிலே எறங்குறேன்னு பேசினா, நல்லாவா இருக்குது?"*

*"நல்லா இல்லைதான்! அதுக்கு நாமென்ன செய்யிறது? பெரிய இடத்துப் புள்ளை. அப்பங்காரன் செல்லமா வளர்க்குறான். அதிகப் படிச்ச மூஞ்சூறு கழுநிப் பானையிலே விழுந்த கணக்காத் திரியுது புள்ளை..."*

*"வீட்டிலே அடங்காததை நாட்டுலேதான் அடக்கணும்!"*

*"இந்தப் பொடிப்பய குறும்புத்தனத்தைப் பெரிசு பண்ணிச் சச்சரவை உண்டாக்குவானேன்னு பார்க்கிறேன்."*

*"தவிர இதுலே இன்னொரு தொரட்டும் இருக்குதுங்க. இந்தப் பயலுக பேச்சைக் கேட்டுச் சின்னஞ் சிறுசுக கூடக் கெட்டுப்போகுது. வழக்கமாகத் தீமிதிக்க வருகிற வாலிபப் பிள்ளைங்க ஒண்ணொண்ணா வரமாட்டேன்னு ஒதுங்குதுங்க, பாருங்க. எம்மவனைக் கூப்பிட்டு, 'ஏலே! இந்த அமாவாசிக்குத் தீமிதி வருது. விரதமிருக்கே இல்லே?' ன்னு கேட்டேன். 'என்னப்பா தீமிதி? வருசந் தவறாமே வேலையத்த வேலை' - அப்படின்னு அலுத்துக்கிட்டான். இதுமாதிரித்தானே எல்லாம் கெடும்?"*

*"நமக்கென்ன? யாரையும் வெத்தெலை பாக்கு வச்சு அழைக்கவேணாம். பய பக்தியா விரதமிருந்து தானா மிதிக்க வர்றவங்க மட்டும் வந்தாப் போதும்."*

*"அதென்ன பேச்சுப் பேசுறிங்க? ஆத்தமாட்டாத பேச்சு? நாளைக்கு வரமுறை இல்லாமே அந்தப் பசங்களும் தீமிதிச்சுக் காட்டிக் கொப்புளம் படாம வெளி வந்துட்டா, ஊர்லே எந்தப் பயலாவது நம்ம திருவிழாவைக் காற்காசுக்கு மதிப்பானா? கேக்கிறேன். பரம்பரை, பரம்பரையா வந்துக்கிட்டிருக்கிற ஊர் வழக்கத்துக்கு மதிப்பில்லாமேயில்ல போயிரும்? அப்படிப் போக விட்டிடலாமா?"*

*"கொப்புளம் படாமல் அவங்க வெளிவர முடியுமா? அதை யோசிச்சுப் பேசுங்க. காலு வெந்து ரணமாயிரும். நாம் ஏதோ துரோபதையாத்தாளை நம்பி 'தாயே! எல்லாம் நீதான். பூவை மிதிக்கிறாப்பிலே நினைச்சுத் தீயை மிதிக்கிறோம். நீ கொடுத்த காலுக, நெருப்புப் படாமக் காப்பாத்து'ன்னு நேர்ந்துக்கிட்டு, உயிர் உடம்பைத் தெரணமா மதிச்சு அவளை நம்பி, எல்லாத்தையும் அவ பாரம்னு ஒப்படைச்சிட்டுத் தீக்குழிலே காலை வைக்கிறோம். சூரிய, சந்திரங்க சாட்சியா, இன்னிக்கி வரை ஒரு தப்பும் இல்லே.*

அந்தப் பயல்களும் இது மாதிரி வந்துட்டா, உலகத்திலே சாமி, பூதம், ஒன்னுமில்லேன்னா அர்த்தம்?"

"அட வந்திருவாங்கன்னு வச்சிக்கிட்டுப் பேசுவமே? அப்போ நாம் ஊராருக்கு முன்னாலே தலை குனியணுமா இல்லியா?'

"எதுக்காக அப்பிடி வச்சுக்கிட்டுப் பேசணும்? வர முடியாதுன்னே வச்சிப் பேசுவமே? ஊராரு யாரு? நாம் யாரு? நாமெல்லாம் சேர்ந்தா ஊராருதானே? சத்தியமும் மெய்யும் என்னைக்கும் எதுக்கும் தலைகுனிஞ்சதில்லை. தலைகுனியத்தான் வச்சிருக்கு! திருடினமா? பொய் சொன்னமா? புறங் கூறினமா? எதுக்காவத் தலைகுனியனும்? ஏன் தலை குனியனும்? நாம் நம்பறதை நாம் செய்யறோம். மத்தவன் எக்கேடு கெட்டா நமக்கென்ன? அவனுக்குத் தோணினதை அவன் செய்யட்டும். துரோபதையம்மன் யாரு பக்கம் இருக்காங்கிறதையும் தான் பார்த்திடுவமே?"

நாட்டாண்மைக்கார மூப்பனார் ஆவேசம் வந்த மாதிரிப் படபடப்பாகப் பேசினார். மண்டபத்தில் அவருடைய குரல் கணீரென்று எதிரொலித்தது. அவரை எதிர்த்து வாதம் புரிந்த தலைக்கட்டுக்காரர் மேலே எதுவும் பேசத் தோன்றாமல் மௌனமானார்.

மூப்பனாரு சொல்றது நியாயந்தானே? முந்தாநாள் பொறந்த பய ராசகோவாலு போட்டித் தீக்குழி எறங்கப் போறாங்கறதுக்காக நாம் ஏன் பயப்படணும்? மனசுலே அழுக்கிருந்தாப் பயப்படணும்; அல்லாட்டா பயப்படறதுனாலே மனசிலே அழுக்கு உண்டாகணும். நமக்கு இரண்டும் இல்லே. அப்பன், பாட்டன், முப்பாட்டன் காலத்திலே எதை நம்பி, எதுக்காக எதைச் செஞ்சாங்களோ, அதை நாமும் செய்யிறோம்! அவன் பொய்யின்னா அதுக்கு வேண்டிய பாடத்தை அவன் படிச்சிக்கிடட்டும். 'ஆத்தாள்' பாடம் கற்பிக்காம விட்டிட மாட்டா." மூப்பனாருக்காக மற்றொரு தலைக்கட்டு பரிந்து பேசினார்..

"சரி! பேச்சை விடுங்க. காரியம் நெறைய இருக்கு. இன்னும் 'லிஸ்டு' எழுதியாகல்லே. மூணு தெருவுக்கு வசூல் பாக்கி கெடக்கு. அதுக்கு வேறே போகணும்.."

"நல்ல யோசனைங்க! போட்டித் தீமிதியை நாம் தடுக்கவே வேணாம். அதுவும் 'ஜோரா' நடக்கட்டும். முடிஞ்சா நம்ம தீமிதியைப் போதோடு முடிச்சிட்டு நாமும் போய் வேடிக்கைப் பார்ப்பமே?"

"பெரிய பண்ணையாரு மவன் பூப்போலக் காலை வச்சுக்கிட்டுச் சும்மா இருக்க முடியல்லே. வீணாக் காலை ரணமாக்கி ஒடிச்சிக்கிட்டுப் போகப் போவுது. படிச்சிருக்கானாமில்லே, படிப்பு, புத்தி போற போக்கைப் பாரு!"

பலவிதமான பேச்சுக்கள் கிளம்பின. இறுதியில் போட்டித் தீக்குழி பற்றிய பேச்சை முற்றிலும் நிறுத்தி விட்டுத் தங்கள் காரியங்களைக் கவனிக்கலாயினர் எல்லோரும்.

**வி**டலைத்தனத்தோடு கூடப் பிறந்த மற்றோர் குணம் முன்யோசனையில்லாமை. எதிலும் உணர்ச்சி மயமாக, ஆழ்ந்த சிந்தனையின்றிப் பலாபலன்களைப்பற்றி எண்ணாமல் இறங்கிவிடும் பருவம் அது. இராஜகோபாலுக்கு அந்தக் காரியத்தை எப்படியும் செய்து காட்டிவிட வேண்டும் என்று ஒரு பிடிவாதம் ஏற்பட்டிருந்தது.

அதைச் செய்வதனால் தான் அடையப் போகிற நன்மை என்ன? ஊரில் நான்கு பேரை விரோதித்துக் கொள்கிறோமே? என்றெல்லாம் அவன் தயங்கவே இல்லை.

துரோபதை அம்மன் கோவில் வாசலில் இருந்த தீக்குழி போலவே, இராஜகோபால் பொக்கிஷதாராக அங்கம் வகித்து வந்த 'பகுத்தறிவாளர் படிப்பக'த்தின் வாசலில் ஒரு தீக்குழி வெட்டப்பட்டுத் தயாராக இருந்தது. தன்னைப் போலவே 'சீர்திருத்த நோக்கமும்' பகுத்தறிவும் உள்ள விடலைப் பிள்ளைகளாக ஒரு பத்துப் பன்னிரண்டு வாலிபர்களைத் தீ மிதிப்பதற்கும் தயார் செய்துவிட்டான் இராஜகோபால்.

"அடே, தம்பிகளா! இதில் அருள், ஆவேசம், ஒரு கழுதையும் கிடையாது. தீக்குழியிலே வேகமாக இறங்கிப் பாதத்தையும் வேகமாகப் பெயர்த்து வைத்துக் கரையேறினால், எவனுக்கும் தீ உறைக்காது, கொப்புளம் உண்டாகாது. அதுதான் இதிலே உள்ள சூக்ஷ்மம். இந்த இரகசியத்தை அறிந்த பெரியவங்க துரோபதை அம்மன் பேரைச் சொல்லி ஆடி, ஏமாத்திக் கொண்டிருக்காங்க. அதை நீங்க அம்பலமாக்கி விடணும்" என்று தன் குழுவினருக்கு உபதேசம் செய்திருந்தான் அவன். அந்த உபதேசத்தைக் கேட்டபோது, "ஏண்டா ராசகோவாலு! எனக்கு ஒரு சந்தேகம்டா ... நம்ப தீக்குழியையும் அம்மன் கோயில் தீக்குழியைப் போலத்தானே வெட்டியிருக்கோம்? அம்மன் தீக்குழி பன்னிரண்டு கெஜ அகலமும் ஆறு கெஜ நீளமும் அளவு. இதுவும் அப்படித்தான். என்னதான் 'குடுகுடு'வென்று ஓடினால்கூடப் பாதத்திலே தீ உறைக்குமே? நீ உறைக்காது என்கிறாயே" என்று சந்தேகத்தைக் கிளப்பினான் புத்தி கூர்மையுள்ள ஒரு வாலிபன்.

"நீ ரொம்பக் கண்டவன். போடா பயந்தாங்கொள்ளிப் பயலே! துணிஞ்சிடணும். துணிஞ்சாத்தாண்டா இதெல்லாம் நிரூபித்துக் காட்ட முடியும்? முன் வச்ச காலைப் பின் வைக்கப்படாது..."

"என்னதான் துணிஞ்சாலும் எனக்கென்னமோ பயமாத்தான் இருக்குது!"

"முட்டாள்! நீ குறள் படிச்சிருக்கியே; 'எண்ணித் துணிக கருமம், துணிந்தபின் எண்ணுவம் என்பதிழுக்கு' படிச்சு என்னடா பிரயோசனம்?"

"அதே குறள்தானே; 'அஞ்சுவது அஞ்சாமை பேதைமை, அஞ்சுவது அஞ்சல் அறிவார் தொழில்' என்றும் கூறியிருக்குது?" - கேள்வி கேட்டவன் படீரென்று மற்றோர் குறளைக் கூறினான்.

"சீ போடா! எதுக்கெடுத்தாலும் எதிர்வாதம் பண்றான். சொன்னால் கேட்கணும். கட்டுத் திட்டமா ஒரு காரியத்திலே இறங்கிட்டா, கடைசிவரை கொண்டு

செலுத்தணும். உனக்குப் பிடிச்சா இதிலே சேரு. இல்லாட்டா விலகிக்க. எங்களையும் கெடுக்காதே..." - இராஜகோபால் இப்படி ஆத்திரமாகப் பேசவே, கேள்வி கேட்டவன் 'கப்சிப்' என்று அடங்கிவிட்டான். மற்ற வாலிபர்களும் இராஜகோபாலையே ஆதரித்துப் பேசியதால், அவன் மேற்கொண்டு விவாதிக்க முடியாமல் போயிற்று.

இராஜகோபால் கோஷ்டியாரின் போட்டித் தீ மிதிப்பு வைபவத்திற்குப் பகுத்தறிவுத் தலைவர் ஒருவர் தலைமை வகிக்க வருவதாக ஒப்புக்கொண்டார். ஏற்பாடுகள் எல்லாம் புதிய முறையில் நடந்தன. ஊரார் விழாவுக்கு முன்னறிவிப்பாக வேப்பிலைத் தோரணமும், கொடிகளும் கட்டினார்கள் என்றால், இவர்கள் அழகான காகிதத்தில் 'நோட்டீஸ்' அச்சடித்து வழங்கினார்கள். 'இன்னார் தலைமையில் கீழ்க் கண்ட முற்போக்கு இளைஞர்கள் 'பகுத்தறிவுத் தீ மிதிப்பு' நிகழ்த்திக் காட்டுவார்கள். அன்பர்கள் தவறாது வருக' என்று 'நோட்டீஸ்' கூறியது. இன்னும் துரோபதையம்மன் கோவில் தீ மிதிப்பைக் கேவலப்படுத்தும் அவதூறு நிறைந்த வாக்கியங்களும் அந்த நோட்டீஸிலேயே எழுதப்பட்டிருந்தன. ஊராரோ, கோவில் தலைக்கட்டுக்களோ, இந்தச் சில்லறை விஷமங்களைப் பொருட்படுத்தாமல், தங்கள் ஏற்பாடுகளில் மூழ்கியிருந்தனர்.

இராஜகோபாலின் பகுத்தறிவு இளைஞர்கள் ஆவேசமாக வேலை செய்தனர். வெறும் 'நோட்டீஸோடு' நின்றுவிடவில்லை. பெரிய பெரிய சுவரொட்டிகளை விளம்பரமாக ஒட்டி, ஏதோ தேர்தலுக்குப் பிரசாரம் செய்கிற மாதிரிச் செய்தனர். உள்ளூர் 'டூரிங்' சினிமாவில் 'சிலைடு' கொடுத்து விளம்பரம் காட்டினர். காரில் 'பேட்டரி செட்' பொருத்தி 'மைக்' வைத்து முழக்கினார்கள். இதன் பயனாக - 'நெல்லுக்கிறைத்த நீர் வாய்க்கால் வழியோடிப் புல்லுக்கும் ஆங்கே பொசியுமாம்' என்பதுபோல் - போலித் தீ மிதிப்புக்காரர்கள் செய்த இந்த ஏற்பாடுகளால் அசல் தீமிதிப்பும் பிரமாதமான விளம்பரப் பிரக்கியாதியை அடைந்துவிட்டிருந்தது.

**அ**ன்று பங்குனி அமாவாசை. கோயில் தீ மிதிப்பு மாலை ஆறரை மணி சுமாருக்கு மங்கல வேளையில் ஏற்படுத்தப்பட்டிருந்தது. போட்டித் தீ மிதிப்பு எட்டரை மணிக்கு மேல் வைக்கப்பட்டிருந்ததனால் இரண்டு வைபவங்களையும் எல்லோரும் காண்பதற்கு வசதியாக இருந்தது.

குரவை ஒலியுடனும், 'மாரியம்மன் தீ மிதிப்புக்கும்மி' என்ற புஸ்தகத்திலுள்ள பாடலைப் பாடிக்கொண்டும் கோவில் தீ மிதிப்பு ஆரம்பமாயிற்று. அதைக் காண நிறைந்த கூட்டம் கூடியிருந்தது.

அதெற்கென்று விரதமிருந்து ஒரு மண்டலம் நியம நிஷ்டையோடு வாழ்ந்த பத்துப் பதினைந்து வாலிபர்கள் தீ மிதிக்க வந்தனர். படிப்பில்லாதவர்கள் இவர்கள். கிராமாந்தரத்துப் பிள்ளைகள். பெற்றவர்களுக்கு அடங்கியவர்கள். பெரியவர்கள் சொல்வதில் கெடுதி இருக்காது என்று நம்புகிறவர்கள். வயதுக்கு மதிப்புக் கொடுத்து வணங்குகிறவர்கள். இவ்வளவுதான் இவர்களைப் பற்றிச் சொல்ல முடியும்.

உடம்பில் மஞ்சளும், சந்தனமும் அரைத்துப் பூசி, வேப்பிலை கட்டிக்கொண்டு, அம்மனை வணங்கிச் சன்னதம் வந்த நிலையில் ஒவ்வொருவராகத் தீக்குழியில் இறங்கி

மெல்ல நடந்து கரையேறினர். குழி நிறைய, இடைவெளி சிறிதும் இன்றித் தகதகவென்று கனிந்த நெருப்புக் கங்குகள் பரப்பப் பட்டிருந்தன. பூக் குவியலின்மேல் நடக்கிற மாதிரி எப்படித்தான் முகத்தைச் சுளிக்காமல், வேதனையின்றி நடந்தார்களோ? பாதத்தின் அடியில் சிறு தீப்புண், கொப்புளம், ஒன்றும் ஏற்படவில்லை. மண்ணில் நடந்து வந்த பாதம் மாதிரி மாறாமல் இருந்தது.

கோவில் தீ மிதிப்பு வெற்றிகரமாக முடிந்த பிறகு, கோவில் தலைக்கட்டுகள், தீ மிதித்தவர் உட்படக் கூட்டம் முழுவதும் நேரே பகுத்தறிவுப் படிப்பக வாசலுக்கு வேடிக்கை பார்க்கப் போய்ச் சேர்ந்தது. கோவில் தீ மிதிப்புக்குக் கூடியிருந்ததைவிட அதிகமான கூட்டம் படிப்பக வாசலில் கூடியிருந்தது.

முந்திய தீ மிதிப்பில் பூசாரி மாலை போட்டுப் பரிவட்டம் கட்டிச் சம்பிரதாயப்படி தீ மிதியை ஆரம்பித்து வைத்தது போல், தலைவர் முன்னுரை கூறி, ஆசி மொழிந்து, தீ மிதிப்பை ஆரம்பித்து வைத்தார் இங்கே.

நோட்டீஸில் வரிசையாகப் பன்னிரண்டு பெயர்களும் அவர்கள் தீக் குழியில் இறங்கிக் கரையேறுவதற்குரிய நேரமும், எல்லாம் நவீன முறையில் நிகழ்ச்சி நிரலாகக் குறிக்கப்பட்டிருந்தன. பெரிய சொற்பொழிவுகளில் பேசுபவர்களுக்கு நேரம் குறித்து நிகழ்ச்சி நிரல் அச்சிடுவார்கள் அல்லவா? அதுபோல ஒவ்வொரு தீ மிதிக்கும் ஆளின் பெயருக்கெதிரே இரண்டரை நிமிஷ அவகாசம் குறித்திருந்தது. மொத்தம் பன்னிரண்டு பேராகையால், ஆளுக்கு இரண்டரை நிமிஷம் வீதம் அரைமணி நேரத்தில் விழாவை முடித்துவிடக் கருதியிருந்தான் இராஜகோபால்.

இராஜகோபால் தீ மிதிப்பு விழாவுக்கு வந்திருந்த தலைவரை வரவேற்று மாலை அணிவித்தான். முன் வரிசையில் அமர்ந்திருந்த நாலைந்து பேர் கைகளைப் படபடவென்று தட்டிக் கரகோஷம் செய்தனர். அவ்வளவு பெரிய கூட்டத்தில் அந்தச் சிறிய கரகோஷம் எடுபடவில்லை.

தலைவர் பேச ஆரம்பித்தார் : "தோழர்களே! தோழியர்களே! நண்பர் இராசகோபாலனாரின் துணிவை நான் பாராட்டுகின்றேன். உங்கள் ஊர் இளைஞர்களின் சீர்திருத்த நோக்கம் என்னை வியப்பில் ஆழ்த்துகிறது. சமூகத்தின் பழைய கட்டுத் திட்டங்களை உடைத்துத் தகர்த்து எறிய முன் வந்திருக்கும் உங்கள் ஆவேசம் வாழ்க. தெய்வத்திற்கும் தீ மிதிப்புக்கும் சம்பந்தமில்லை என்பதை இன்று இங்கே பன்னிரண்டு பேர் நிரூபிக்கப் போகிறார்கள்..." என்று சுருக்கமான முன்னுரைக்குப் பின் தலைவர் தம் ஆசனத்தில் அமர்ந்துகொண்டார்.

ஏதோ சர்க்கஸ், தெருக் கூத்துப் பார்க்கிற மாதிரிக் கூட்டம் அந்தத் தலைவரையும், 'மைக்', மேஜை, நாற்காலி, சோடா பாட்டில், ரோஜாப்பூ மாலை எல்லாவற்றையும் மாறி மாறிப் பார்த்துக் கொண்டிருந்தது.

இராஜகோபால் நிகழ்ச்சி நிரலைக் கையிலெடுத்துக் கொண்டு, நிமிர்த்திய மார்புடன் ஜிப்பாவின் இரண்டு பக்கத்துப் பையிலும் கைகளை நுழைக்க முயன்று கொண்டே மைக்குக்கு முன் கம்பீரமாக வந்து நின்றான்.

"அன்பர்களே! சற்று முன்பு வேறோர் இடத்தில் கடவுளின் பெயரால் மனிதர்களின் அறிவை ஏமாற்றும் தீ மிதிப்பை நீங்கள் கண்டீர்கள். இதோ பகுத்தறிவின் பெயரால், புதுமையின் பெயரால், தன்னம்பிக்கையின் பெயரால், தெய்வத்தை நம்பாமல் ஆண்மையை நம்பி, நாங்கள் நடத்தும் தீ மிதிப்பையும் பார்க்கப் போகிறீர்கள். உண்மை எது என்பதை இன்னும் சிறிது நேரத்தில் உங்களுக்குப் புரிய வைக்கிறோம்! இப்போது தீ மிதிப்புக்கு முன் வந்திருக்கும் தோழர்களின் பெயரை நான் வரிசையாகப் படிப்பேன். ஒவ்வொரு பெயரையும் நான் படித்தவுடன் அந்தப் பெயருக்குரிய தோழர் தீக்குழியில் இறங்குவார். இரண்டரை நிமிஷம் குழியில் நடந்து, அவர் மேலே ஏறினதும் நான் மற்றொருவர் பெயரைப் படிப்பேன். இப்படியே நிகழ்ச்சி நடைபெறும். அன்பர்கள் கண்டு எங்கள் முயற்சியைப் பாராட்ட வேண்டும்...."

"முதல் பெயர், கே. ஆறுமுகப்பெருமாள்..." - இராஜகோபால் பெயரைப் படித்துவிட்டுச் சுற்றும் முற்றும் பார்த்தான். ஆறுமுகப்பெருமாள் வரவில்லை.

"டேய் சம்புலிங்கம்! ஆறுமுகப்பெருமாள் எங்கேடா? பார்த்துவரச் சொல்லு. சமயத்துக்கு எங்கேயோ தொலைஞ்சி போயிட்டான்!"

சம்புலிங்கம் மேடையின் பின்புறம், படிப்பகத்தின் உட்புறம் முதலிய இடங்களில் போய்த் தேடிவிட்டு "அண்ணே! ராசகோவாலு அண்ணே! ஆறுமுகப் பெருமாளு சோளக்கொல்லைக் காவலுக்குப் போகணும்னு சொல்லிக்கிட்டிருந்தான், போயிருப்பான். அவனை விட்டிட்டு அடுத்த பேரைப் படிங்க! இனிமே எங்கே வரப் போறான்?" என்று திரும்பி வந்து இராஜகோபாலிடம் கூறினான். இராஜகோபாலுக்கு முகம் தொங்கிவிட்டது. இருந்தாலும் சமாளித்துக் கொண்டு,

"முதலில் வாசிக்கப்பட்ட ஆறுமுகப்பெருமாள் எதிர்பாராத அசௌகரியங் களால் வர இயலாமற் போனதால், அடுத்து, ஆர்.எஸ்.சுப்பையா தீக்குழி இறங்குவார்" என்று மைக்கில் கூறினான்.

கூட்டத்தில் அதைக் கேட்டதும் அலை அலையாக ஏளனச் சிரிப்பொலி எழுந்தது. 'ஆய்-ஊய்' என்று கூச்சலும் கிளம்பியது. சீட்டி அடித்தார்கள் சிலர். இராஜகோபாலுக்கு அவமானம் பிடுங்கித் தின்றது.

அந்தச் சமயத்தில், "ஆர்.எஸ். சுப்பையாவுக்குத் தலை வலியாம். படிப்பகத்துக்குள்ளே படுத்து முனகிக்கிட்டிருக்காரு. அவராலே முடியாதாம். வேறே யாரையாச்சும் அவருக்குப் பதிலா இறங்கச் சொல்லுவிங்களாம்" என்று சம்புலிங்கம் வந்து சொன்னான்.

இது இராஜகோபாலுக்கு இரண்டாவது இடியாகத் தலையில் விழுந்தது.

"அன்பர்களே! திரு.ஆர்.எஸ்.சுப்பையா அவர்கள் தலைவலியால் அவதிப்பட்டுக் கொண்டிருப்பதால்..." என்று அவன் பேசி முடிப்பதற்குள், 'இந்த விழா அடுத்த வருடத்துக்கு ஒத்திவைக்கப்பட்டது' என்று சொல்லிக் கூட்டத்தினிடையேயிருந்து எவனோ ஒரு குறும்புக்காரன் இராஜகோபால் தொடங்கிய வாக்கியத்தைப் பூர்த்தி

செய்தான். அவ்வளவுதான். கூட்டத்தில் ஆகாயம் இடிந்து விழுகிறாற் போலச் சிரிப்பொலியும் கைதட்டலும் எழுந்தன.

இராஜகோபாலுக்கு அங்கேயே அப்போதே நாக்கைப் பிடுங்கிக் கொண்டு சாகலாம்போல் தோன்றியது. ஆறுமுகப் பெருமாள் மேலும் சுப்பையா மேலும் அவனுக்கு ஏற்பட்ட ஆத்திரம் கொஞ்ச நஞ்சமல்ல. ஆனால், அவர்கள் இருவரும் அப்போது அங்கில்லாமற் போகவே அந்த ஆத்திரம் முழுவதும் கூட்டத்தின் மேலே திரும்பியது.

"என்னப்பா இராஜகோபால்! சிறு பிள்ளைகளை நம்பிப் பெரிய காரியத்திலே இறங்கி, இப்படிச் சந்தி சிரிக்க வச்சுட்டியே" என்று தலைவர் வேறு முகத்தைச் சுளித்தார்.

அப்போது "அண்ணே! தலைவரையும் உங்களையும் 'லிஸ்டுலே' சேர்த்திட்டா அந்த ரெண்டுபேரு இடமும் நிறைஞ்சுபோகும். அப்படிச் செஞ்சிட்டா என்ன?" என்று சம்புலிங்கம் காதருகில் இரகசியமாக ஒரு போடு போட்டான்.

அது எரிகிற நெருப்பில் எண்ணெயை ஊற்றுகிற மாதிரி இருந்தது இராஜகோபாலுக்கு. "சீ கழுதை! யோசனையும் நீயும் நாசமாப் போக..." என்று சம்புலிங்கத்தை நோக்கிக் கத்தினான். அது மைக் வழியாக ஒலிபெருக்கியில் கேட்டு விடவே, கூட்டத்தில் முன்னைவிடப் பெரிய சிரிப்பொலி உண்டாயிற்று. கை தட்டலும், சீழ்க்கை ஒலிகளும், ஏளனப் பேச்சுக்களும், குத்திக் காட்டும் இடித்துரைகளும் கூட்டத்திலிருந்து கிளம்பின.

இராஜகோபாலின் தன்மானமோ, அல்லது கையாலாகாத சமயத்தில் இயல்பாகத் தோன்றுமே ஆத்திரம் அதுவோ, பீறிட்டு எழுந்தது. "சிரிக்காதீர்கள்! ஏன் சிரிக்கிறீர்கள்? எதற்காகக் கை தட்டுகிறீர்கள்? எங்களுக்குத் தன்மானம் உண்டு. சொன்னபடி செய்து காட்டுவோம். இதோ ஆறுமுகப் பெருமாளுக்குப் பதிலாக நானே தீக்குழி இறங்குகின்றேன். எனக்கு அடுத்தாற்போல சுப்பையாவுக்குப் பதிலாகச் சம்புலிங்கம் இறங்குவார். அதன்பின் நிகழ்ச்சி நிரலில் கண்டபடி மற்றப் பத்துப் பேரும் வரிசையாக இறங்குவார்கள்.." என்று வெறி கொண்டு மைக்கில் கத்தினான் அவன். அந்தச் சப்தமும் கூட்டத்தில் ஓரளவு அமைதியை உண்டாக்கத்தான் செய்தது.

வேஷ்டியைத் தூக்கிக் கட்டிக்கொண்டு மேடையிலிருந்து கீழே குதித்துத் தீக் குழியை நோக்கி நடந்தான் இராஜகோபால். பேசுவது எதைப் பற்றியும், எப்போதும் சுலபம்! செயலில் இறங்கும்போதுதான் மலைப்புத் தோன்றுகிறது. முதலில் போட்டிருந்த திட்டப்படி 'போட்டித் தீ மிதிப்பு'க்குக் கன்வீனர் என்ற ஹோதாவில் இராஜகோபாலும் சம்புலிங்கமும் இருந்தார்களே யொழியத் தீயிறங்குகிற பட்டியலில் தங்கள் பெயரைப் போட்டுக் கொள்ளவில்லை.

இப்போதோ நிலைமை மாறிவிட்டது. 'பன்னிரண்டு கெஜ நீளமும், ஆறு கெஜ அகலமுமாகக் கனிந்து விளங்கும் நெருப்புப் பரப்பில் இரண்டரை நிமிஷ நேரம் நடக்க

வேண்டும்' என்று எண்ணும்போதே, காலடியில் சுடுவது மாதிரி இருந்தது அவனுக்கு. தீக்குழியைப் பார்க்கும்போதே, 'இதிலா இறங்கி நடக்க வேண்டு' மென்று மலைப்புத் தட்டியது. உடல் முழுவதும் வியர்த்துக் கொட்டியது. வெடவெடவென்று கை கால்கள் நடுங்கி உதறுவதுபோல் ஒரு பிரமை தோன்றியது. மூச்சுத் திணறுவதுபோல இதயம் வேகமாக அடித்துக்கொண்டது.

தீக் குழியின் நுனியில் இத்தகைய எண்ணங்களுடன் தயங்கி நின்றான் அவன். வந்த வேகத்தில் எவ்வளவு ஆவேசம் இருந்ததோ, அவ்வளவு ஆவேசம் இறங்குவதில் இல்லை.

"ஏனய்யா? நீதான் பெரிய சூரன் கணக்காப் பேசினாயே? இறங்கேன். எதுக்கு நிக்கிறே? பயமா இருக்குதோ?" கூட்டத்தில் ஒருவன் குத்திக் காட்டிப் பேசினான். அந்தச் சொற்கள் சுரீரென்று மனத்தில் தைக்கவே, வந்தது வரட்டும்! செத்தாலும் சரி, பிழைத்தாலும் சரி என்று கண்களை இறுக மூடிக்கொண்டு வலது கால் பாதத்தைத் தீக்குழிக்குள் வைத்தான் இராஜகோபால்.

சித்திரவதை செய்யப்படுகிறவனின் முகத்தில் எவ்வளவு வேதனையைக் காணலாமோ, அவ்வளவு வேதனை அவன் முகத்தில் நிறைந்திருந்தது.

மூன்று நான்கு அடி குழிக்குள் நடந்தும் விட்டான். நடந்து கொண்டிருக்கும்போதே, அவன் உடல் துவண்டது. கால்கள் ஒன்றோடொன்று பின்னிக்கொண்டன. கண் இருண்டது.

"ஐயோ! அம்மா! கால் போச்சே" என்று குரூரமான அலறல் அவன் தொண்டையிலிருந்து கிளம்பியது. பாதங்களை மேலும் கீழுமாகத் தூக்கித் தவித்தான். அடுத்த விநாடி அறுபட்ட கொடி துவண்டு விழுகிற மாதிரித் தீக்குழியின் நடுவில் மடேரென்று விழுந்துவிட்டான். பிரக்ஞை தவறிவிட்டது.

'ஐயையோ! ஆ! இதென்ன?' கூட்டத்தில் குழப்பம் உண்டாயிற்று. கோவிலில் தீ மிதித்துவிட்டு வந்திருந்த இளைஞர்களில் இரண்டு பேர் உடனே குழிக்குள் தாவினர்.

கண்மூடித் திறக்கும் நேரத்தில் இராஜகோபாலின் உடல் மேலே கொண்டுவந்து சேர்க்கப்பட்டது. உடம்பு முழுதும் பறங்கி மொட்டுப்போல பெரிய பெரிய நெருப்புக் காயங்கள், கொப்புளங்கள், உடம்பைக் கண்கொண்டு பார்க்கச் சகிக்கவில்லை.

"அடேய்! ஓடுடா ஓடு! ஓடிப் போய்ச் சுப்பையா வைத்தியரைக் கூட்டிக்கிட்டு வா!" நாட்டாண்மைக்கார மூப்பனார் யாரையோ விரட்டினார். தலைவர் தம்மைக் கவனிக்க ஆளில்லாமல் போகவே, தாமாகவே தம்முடைய காரில் ஏறிக் கொண்டு சொல்லாமலே கிளம்பிவிட்டார். பகுத்தறிவுப் படிப்பகத்து விடலைப் பிள்ளைகள் மூலைக்கொருவராகப் பிய்த்துக்கொண்டு போய்விட்டனர். கடைசியில் அங்கு மிஞ்சியவர்கள் நாட்டாண்மைக்கார மூப்பனாரும், அவரோடு வந்திருந்த துரோபதை அம்மன் கோவில் ஆட்களும்தான்.

பெரிய பண்ணையாரும், அவர் சம்சாரமும், திருச்செந்தூருக்கு ஸ்வாமி தரிசனத்திற்குப் போயிருந்ததால் இராஜகோபாலைத் தம் வீட்டுக்குக் கொண்டு போனார் மூப்பனார்.

அவன் உடம்பில் நெருப்புக் காயம் உறுத்தாமல் இருப்பதற்காகத் தலை வாழைக் குருத்தை விரித்து விளக்கெண்ணெயைத் தடவி அதில் படுக்கவிட்டிருந்தார்கள்.

சுப்பையா வைத்தியரைத் தேடிப் போனவன் வாடிய முகத்தோடு திரும்பி வந்தான்.

"என்னடா! வைத்தியரு எங்கே? வீட்டிலே இல்லையா?"

"அவரு வரமாட்டாராம்! முந்தாநாளுச் சிவன் கோவிலுக்குப் போயிட்டிருக்கிறப்போ இராசகோவாலும் அவன் ஆட்களும் அவரை மடக்கிவிட்டு, ஏதோ எடக்காகப் பேசினாங்களாம். அதனால், நான் விசயத்தைச் சொன்னதும் அவரு, 'அந்த அதிகப் பிரசங்கிப் பயலுக்கா? போய் எவனாவது ஒரு 'பகுத்தறிவு' வைத்தியனைப் பார்த்துத் தேடிக்கிட்டுப் போ. நான் சிவன் கோவிலுக்குப் போறவன். சாமி பூதம் உண்டுன்னு நம்பறவன். என் மருந்து அவன் உடம்பிலே ஏறாது. போ! வழி அதுதான்' அப்படின்னு நிர்த்தாட்சண்ணியமாகப் பேசிட்டாருங்க" என்றான்.

"அப்படியா சேதி? நானே போறேன்" என்று மூப்பனாரே தெருவில் இறங்கி வைத்தியர் வீட்டை அடைந்தார். "சுப்பையா வைத்தியரே! நாய் கடிக்குதுன்னா நாமுமா பதிலுக்குக் கடிக்கிறது? அப்பன், ஆத்தா கூட ஊரிலே இல்லே. எனக்கு மட்டும் தலைப்பொறியா காப்பாத்தணுமினு? ஆயிரமிருந்தாலும் உசிரு பெரிசு பாருங்க. எப்போதோ சொன்ன வார்த்தையை மனசுலே போட்டுக்காதிங்க. வாங்க என் பேச்சைக் கேளுங்க..." மூப்பனார் வைத்தியர் கையைப் பிடித்துக் கொண்டு அவரைக் கெஞ்சினார். ஊருக்குப் பெரிய நாட்டாண்மைக்காரர் கெஞ்சவே, மறுக்க முடியாமல் உடன் கிளம்பினார் சுப்பையா வைத்தியர்.

**ப**த்து நாட்களுக்கு மேல் ஆகியும் இராஜகோபால் எழுந்து நடமாட முடியவில்லை. புண்! புண்! புண்! - உடம்பில் ஒரே தீப்புண்கள் இரணமாகத் தோற்றமளித்தன.

"அப்பா இராஜகோவாலு... உடம்பை அசைச்சுப் புரளாமே படுத்திரு. புண்ணு புரையேறிச் சீழ் வைத்தால் கெடுதல். இன்னும் உங்க ஐயா திருச்செந்தூரிலிருந்து வரலே! வேத்துமையா நினைக்காதே. அவங்க வருகிற வரை நம்ப வீட்டிலேயே இருக்கலாம்.." - மூப்பனார் அருகிலமர்ந்து குழைந்த குரலில் கூறினார்.

திடீரென்று விக்கி விக்கி அழுதான் இராஜகோபால். "சீ இதென்னது? குழந்தைப்புள்ளே மாதிரி அழுவலாமா? வலிக்கத்தான் வலிக்கும்... பொறுத்துக்க. என்ன செய்யிறது!"

"மாமா! மூப்பனாரு மாமா. உடம்பு வலிக்கலே! புண்ணும் வலிக்கலே! மனசுதான் வலிக்குது. நீங்கள்ளாம் எவ்வளவு பெருந்தன்மையா இருக்கீங்க. நான் இப்படிச்

*சின்னத்தனமா நடந்துக்கிட்டேனே?... என்னை நீங்க மன்னிப்பீங்களா?''... பேச முடியாமல் மீண்டும் கேவிக் கேவி அழுதான் அவன்.*

*"சரிதான் விட்டுத்தள்ளு! இதெல்லாம் வயசுக் கோளாறு தம்பீ! இப்படி வயசுக்கு ஏதாச்சும் திமிர் பிடிச்சது தோணத்தான் தோணும். பொறுப்பு வந்தா எல்லாம் தானாகத் தெரியும். நம்பறதுலேதான் எல்லாம் உண்டு. நம்பாததுலே என்ன இருக்கு? 'இருக்குன்னு' ஒப்புக் கொள்ளத்தானே பகுத்தறிவு வேணும்? இல்லை என்று சொல்லப் பகுத்தறிவே தேவையில்லையே?'' மூப்பனார் கூறிவிட்டுச் சிரித்தார்.*

*அந்தச் சிரிப்பு கபகப என்று எரியும் புண்பட்ட உடம்பைக் குளிரவைப்பது போலிருந்தது இராஜகோபாலுக்கு.*

**(1963-க்கு முன்)**



## 88. கார்த்திகைச் சொக்கப்பனை

**வெ**ளியில் உலவிவிட்டுத் தெருவில் நுழைந்தேன். கார்த்திகை மாதம்; வீடுகளில் திண்ணைகளிலும், வாயிற்படிகளிலும், மாடப்பிறைகளிலும் பொல்லென்று பூத்த நட்சத்திரப் பூக்களைப்போல அகல் விளக்குகள் மினுமினுத்துக் கொண்டிருந்தன.

'ஆகா! இந்தச் சின்னஞ் சிறிய அகல் விளக்குகளின் ஒளிக் கலவையில் என் இதயத்தைக் கவரும்படியாக அப்படி என்னதான் அடங்கியிருக்கிறது? எத்தனையோ பல நிறங்களில், எத்தனையோ பல விதங்களில், எரிகின்ற இந்த மின்சார விளக்குகளில் அந்தக் கவர்ச்சி எனக்குத் தென்படவில்லையே!

தீபம் ஒளியின் உயிருள்ள சக்தி; மின்சாரம் ஒளியின் உடலைச் சிதைத்து வடித்துப் பெருகவிட்ட இரத்தம். அதனால்தான் தீபங்களின் ஒளியிலுள்ள கவர்ச்சி மின்சாரத்தில் ஏற்படுவதில்லை...' இப்படி ஏதேதோ சிந்தனைகள் மனத்தில் கிளர்ந்தன.

"என்ன ஐயா? பராக்குப் பார்த்துக் கொண்டே எதிரே வருகிறவனைக் கவனிக்காமல் போகிறீரே?"

இப்படிக் கேட்டது யார் என்று நிமிர்ந்து பார்த்தேன். புன்முறுவல் பூத்த முகத்துடன் திருவாளர் திருவடியாப் பிள்ளையவர்கள் எதிரே வந்துகொண்டிருந்தார். "அடடே! வாருங்கள் ஏதோ சிந்தனையோடு நடந்துகொண்டிருந்தேன். நீங்கள் எதிரே வருவதைக் கவனிக்கவில்லை..."

"நீங்கள் கவனிக்காவிட்டால் என்ன? நான்தான் கவனித்து விட்டேனே? அது சரி; கோவில் பக்கமாகப் போய் விட்டு வரலாம்! வருகிறீர்களா?"

"போகலாம். கோவிலில் இன்றைக்கு என்ன?"

"இன்றைக்குக் கார்த்திகை இல்லையா? சொக்கப்பனை கொளுத்தப் போகிறார்கள். போய்ப் பார்த்துவிட்டு வருவோமே" என்றார் அவர்.

"சரி வாருங்கள், போவோம்" என்று அவரோடு திரும்பி நடந்தேன்.

அது மலையடிவாரத்து ஊராகையினால் தெரு, வில்லின் முதுகுப்புறம்போல நடுவில் மேடாகவும், இரு முனைகளிலும் பள்ளமாகவும் கிழக்கு மேற்காக அமைந்திருந்தது. தெருவின் மேற்குக் கோடியில் சேது நாராயணப் பெருமாள் கோவில், பள்ளத்திலிருந்து தலையை நீட்டி நிமிர்ந்து நின்ற அந்தக் கோவிலின் கோபுரம் தெருவின் மறுகோடியிலிருந்து பார்க்கும்போது அடிவானத்தில் முளைத்தெழுந்த அதிசயம்போல் தோன்றியது. கார்த்திகைக்காக ஏற்றப்பட்டிருந்த தீபங்கள் அந்த அதிசயத்தில் ஒளிப் பூக்களாக மினுக்கிக் கொண்டிருந்தன.

கோவிலுக்கு முன்னால் தரையில் குழி வெட்டி ஒரு பனைமரக் கம்பம் நடப்பட்டிருந்தது. கம்பத்தைச் சுற்றிலும் நன்றாகக் காய்ந்த ஓலைகளை அடர்த்தியாக வேய்ந்திருந்தார்கள். பெருமாள் கோவிலிலிருந்து புறப்பாடாகி வந்ததும், அதை முறைப்படிக் கொளுத்துவது வழக்கம். அதற்குத்தான் சொக்கப்பனை என்று பெயர்.

எனது குழந்தைப் பருவத்திலிருந்து இந்தக் கார்த்திகைச் சொக்கப்பனை கொளுத்தும் அதிசயத்தை எத்தனையோ தடவைகள் பார்த்திருக்கிறேன். ஆனால், எனக்கு ஒரு சந்தேகம் சிறு வயதிலிருந்தே உண்டு.

சமூகப் பழக்க வழக்கங்களிலோ, தெய்வீகத் தொடர்புடைய காரியங்களிலோ, நம்முடைய முன்னோர்கள் ஏற்படுத்தியிருக்கும் எந்த ஒரு முறைக்கும் ஏதாவது அர்த்தம் இருக்கவேண்டும், அல்லது நிச்சயமாக இருக்க முடியும் என்று நம்புகிறவன் நான்.

கார்த்திகையன்று கோவில் வாசலில் பெருமாளுக்கு முன்பாகப் பனைமரக் கம்பத்தில் காய்ந்த ஓலைகளைக் கட்டிக் கொளுத்துவதிலும், அதற்குச் சொக்கப்பனை என்று பெயர் வைத்திருப்பதிலும் என்ன அர்த்தம் இருக்க முடியுமென்று புரியவில்லை எனக்கு.

புரியாவிட்டாலும் தெரிந்தவர்களிடம் கேட்டுப் புரிந்து கொள்ளவேண்டுமென்ற ஆசை உண்டு. இந்தக் காலத்தில் படிப்பையும், நாகரிகத்தையும், தங்களுக்கே சொந்தமென்று உரிமை கொண்டாடுகிற சிலர், தங்களுக்குப் புரியாதது எதுவும் உண்மையாக இருக்க முடியாதென்று சாதிக்கிறார்களே அவ்வளவு தன்னம்பிக்கை அடியேனுக்கு இல்லை.

யாரிடமாவது கேட்டுத் தெரிந்துகொள்ள வேண்டுமென்று பல காலமாக நினைத்துக்கொண்டிருந்தும் இன்றுவரை அந்த வாய்ப்பு நேரவே இல்லை. இன்றைக்குத் திருவடியாப் பிள்ளையோடு சொக்கப்பனை பார்ப்பதற்குக் கிளம்பவே, அவரிடமே கேட்டுவிடலாமா என்று நினைத்தேன்.

இந்த மனிதர் திருவடியாப் பிள்ளைக்குப் பிறருடைய மனத்திலிருக்கும் நினைவை அறிகிற மந்திர வித்தை ஏதாவது தெரியுமோ, என்னவோ?

“சொக்கப்பனை கொளுத்தும் விழாவைப் பற்றி நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்? அதிகமாகத் தண்ணீர் பெருக்கெடுத்து ஓடுவதையோ, அதிகமாக நெருப்புப் பிடித்து எரிவதையோ, வேடிக்கை பார்க்கும் மனநிலை சிறுவர்களுக்குத்தான் உண்டு! கடவுளுக்குக் கூட இந்த விளையாட்டு ஆசைகள் உண்டா?” என்று ஆராய்ச்சி யுணர்வைக் கிளறிவிடும் நோக்கத்தில் கேட்பவர்போல் ஒரு கேள்வியைக் கேட்டார்.

“ஐயா! இதே கேள்வியை வேறு யாரிடமாவது கேட்கவேண்டுமென்று எனக்குப் பல நாட்களாக ஆவல் இருந்து வருகின்றது! நீங்களே விளக்கமாக விடை கூறிவிட்டால் நன்றாயிருக்கும்” என்றேன்.

பேசிக்கொண்டே இருவரும் கோவில் வாசலை நெருங்கிவிட்டோம். கோவில் வாசலில் முன் மண்டபத்துக் குறட்டில் உட்கார்ந்தோம். பெருமாள் வீதி ஊர்வலம் புறப்படுவதற்கு இன்னும் நிறைய நேரமிருந்தது. அதுவரை எதைப் பற்றியாவது பேசிப் பொழுதைக் கழிக்க வேண்டுமே? சொக்கப்பனை கொளுத்துவது பற்றிய ஆராய்ச்சி யில் ஈடுபட்டோம். நண்பர் திருவடியாப் பிள்ளை இருந்தாற் போலிருந்து, "உண்மையின் ஆற்றலைப் பற்றி நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்?" என்று ஒரு கேள்வியைத் தூக்கிப் போட்டார்.

"உண்மை அழிவதில்லை. நெருப்பைப் போலத் தன்னை அழிக்க முயலும் பொய்யைத் தான் அழித்துவிட்டு நிற்கிறது."

"ஆ! அப்படிச் சொல்லுங்கள். பன்னிரண்டு வருடங்களுக்கு முன்னால் இதே கார்த்திகை நாளில் இந்தக் கோவில் வாசலில் காயாம்பூ அம்பலக்காரன் இதேபோல் தான் கூறினான். ஆனால், அப்போது இந்த ஊர் முழுவதும் அவனை நம்பவில்லை."

"காயாம்பூ அம்பலக்காரனா? யார் அவன்? இப்படி முன்பின் தொடர்பில்லாமல் மொட்டையாகக் கூறினால், எனக்கென்ன தெரியும்?" நான் கேட்டேன். என்னுடைய கேள்விக்குக் கிடைத்த விடை சுவாரஸ்யமானது.

"இந்த ஊரில் இந்தப் பெருமாள் கோவிலில் நடந்த சம்பவம்தான். கோவில் நந்தவனத்தில் பூக்களைக் கொய்து மாலை கட்டிக் கொடுக்கும் பண்டாரமாக இருந்தான் காயாம்பூ. அந்தக் காலத்தில் பெருமாள் கோவிலில் பண்டாரத்துக்குச் சில தனிப்பட்ட மரியாதைகள் உண்டு. அந்த மரியாதைகளையும், சிறப்புக்களையும் ஏற்றுக்கொள்ளும் உரிமை அவர்களுக்கு மட்டும்தான்.

அவற்றில் திருக்கார்த்திகையன்றைக்குப் பெருமாளுக்கு முன் சொக்கப்பனை கொளுத்தும் மரியாதையும் ஒன்று. அர்ச்சகர் கையால் பண்டாரத்துக்கு மாலை, பரிவட்டம் முதலிய மரியாதைகளைச் செய்தபின், அகல் விளக்கைப் பொருத்தி, முறைப்படி அந்தச் சொக்கப்பனையைக் கொளுத்தும் உரிமை பண்டாரத்தைச் சேர்ந்தது. காயாம்பூவுக்கு இந்தத் திருக்கார்த்திகை மரியாதை தனக்குக் கிடைப்பதில் தனிப்பெருமை. சொக்கப்பனை எரியும் காட்சியைப் பார்ப்பதற்காக ஊரே கோவில் வாசலில் கூடியிருக்கும் சமயத்தில், ஊருக்கு முதல்வரான பெருமாளுக்கு முன்னால் அந்தக் காரியத்தைச் செய்பவன் பெருமைப்பட வேண்டியதுதானே?

வருடம் தவறாமல் காயாம்பூ அம்பலக்காரனுக்குக் கிடைத்து வந்த இந்தப் பெருமை, அந்த வருடம் சிறுமையாக முடிந்துவிட்டது. சந்தர்ப்பத்தின் கோளாறோ, அல்லது அவனுடைய பொல்லாத வேளையோ, எதிர்பாராத விதத்தில் அப்படி ஒரு விபரீத நிகழ்ச்சி நடந்துவிட்டது. ஒருவரா? இருவரா? அல்லது நாலைந்து பேர்களா? - ஊர் முழுவதுமே ஒரே குரலாக அந்தப் பழியைக் காயாம்பூவின் மேல்தான் சுமத்தியது.

நடந்தது இதுதான்! வழக்கம்போல் அந்தத் திருக்கார்த்திகையின் போதும் பெருமாள் புறப்பாடாகி நான்கு மாட வீதிகளையும் சுற்றிவிட்டுக் கோவில் வாசலில் சொக்கப்பனைக்கு முன் வந்து நின்றார். முன்பெல்லாம் இப்போது போடுவதைவிடப்

பெரிய சொக்கப்பனையாகப் போட்டிருப்பார்கள். கிட்டத்தட்ட ஒரு கோபுரம் தரையிலிருந்து எழுப்பப்பட்டது போல இருக்கும். பனையின் உச்சிவரை ஏறிச் செல்லுவதற்கு வசதியாக உட்புறத்தில் மூங்கில் சட்டங்கள் கொடுத்துக் கட்டியிருப்பார்கள். சொக்கப்பனையைக் கொளுத்துவதற்கு முன்னால் பண்டாரம் பனை மரத்து உச்சியில் ஏறித் தீபத்தை வைத்துவிட்டு வரவேண்டும். அவன் கீழே இறங்கி வந்தபின்புதான் சொக்கப்பனையின் அடிப்பாகத்தில் கொளுத்துவார்கள். அந்த வருடம் காயாம்பூவின் சத்தியத்தைச் சோதிப்பதுபோல் அது நடந்துவிட்டது.

ஒவ்வொரு நாள் காலையிலும் குடலையில் புதிய பூ மாலைகளைக் கொண்டுபோய்க் கொடுத்துவிட்டு, அதே குடலையில் பழைய மாலைகளைக் கழித்து வாங்கி வருவான் காயாம்பூ. விடிவதற்கு முன்பே பூக்களை எடுத்துத் தொடுத்துத் திருப்பள்ளி யெழுச்சியின்போதே கொண்டுபோய்ச் சந்நிதியில் மாலைகளைக் கொடுத்துவிடுவான். திருக்கார்த்திகை அன்றைக்குக் காலையிலும் வழக்கப்படியே சந்நிதியில் மாலையைக் கொடுத்துவிட்டுப் பழைய மாலைகளோடு திருப்பிக் கிடைக்கும் பூக்குடலைக்காகக் காத்துக் கொண்டிருந்தான்.

அந்த நாளில் கோவில்களுக்குள்ளே மின்சார விளக்கு ஏது? எண்ணெய்த் தீபங்களின் மங்கிய ஒளிதான். அர்ச்சகர் காயாம்பூவின் பூக்குடலைக்குள் பழைய மாலையைக் கழற்றி வைக்கும்போது பெருமாளின் கழுத்தில் அணிந்திருந்த தங்கப் பதக்கம் ஒன்றும் சேர்ந்து, குடலைக்குள் இடம் பெற்றுவிட்டது. வேலை அவசரத்தில் அர்ச்சகர் அதைக் கவனிக்கவில்லை. காயாம்பூவும் பூக்குடலையை வாங்கிக் கொண்டு நந்தவனத்துக்குத் திரும்பிவிட்டான்.

பெருமாளுக்குச் சார்த்திக் கழித்த பழைய மாலைகளை யார் காலிலும் மிதிபடாமல் நந்தவனத்தின் மூலையிலுள்ள பள்ளத்தில் போட்டுவிடுவது வழக்கம். காயாம்பூ பழைய மாலையைத் திருப்பிக்கொண்டு வந்ததும் அவன் மூத்த மகன் நாகலிங்கம்தான் குடலையை எடுத்துப்போய்ப் பள்ளத்தில் கவிழ்த்துவிட்டு வருவான்.

அன்று பழைய மாலையைப் பள்ளத்தில் கொட்டியதும் மாலையோடு சேர்ந்து ஏதோ மினுமினுப்பதைக் கண்டு சிறிது தயங்கி நின்றான் நாகலிங்கம். வழக்கமாக மாலையில் வைத்துக் கட்டும் ஜிகினாப்பட்டையாக இருக்கும் என்று முதலில் அலட்சியமாகப் பார்த்தவன், கண்களை அகல விரித்தான். பள்ளத்திற்குள் இறங்கி மாலையில் சிக்கிக் கொண்டிருந்த அந்தப் பொருளைத் தனியே பிரித்தெடுத்தான். பெருமாளின் தங்கப்பதக்கம் மின்னல் துணுக்கெனப் பிரகாசித்தது அவன் கையில். பெருமாளுக்குச் சார்த்தும் பூமாலை, பச்சைக் கற்பூரம், சந்தனம், பன்னீர் ஆகியவற்றின் வாசனை அந்தத் தங்கப் பதக்கத்தையும் சார்ந்திருந்ததால், மணம் அவன் நாசியைத் துளைத்தது.

ஊர்ச் சாவடியில் மூன்று சீட்டு விளையாடுவதும் நாளொன்றுக்கு எத்தனை காட்சி உள்ளூர் சினிமாக் கொட்டகையில் உண்டோ, அத்தனை காட்சிகளையும் பார்த்து விடுவதும்தான் நாகலிங்கத்தின் அன்றாடச் செயல்கள். அந்த இருபத்திரண்டு

வயது விடலைப் பையனின் கையில் பெருமாளின் விலை மதிப்பற்ற தங்கப்பதக்கம் மின்னியது.

இந்த மாதிரிக் காரியங்களுக்கெல்லாம் இரத்தினப் பத்தர்தான் சரியான ஆள்! காதும் காதும் வைத்தாற்போலக் கொடுக்கிற சாமானை வாங்கிக் கொண்டு பணத்தை எண்ணிக் கீழே வைத்துவிடுவார். அவரிடம்தான் இதைக்கொண்டு போகவேண்டும் என்று தனக்குள் மெதுவாகச் சொல்லிக்கொண்டு, அதைக் கைக்குட்டையில் சுற்றிச் சட்டைப் பைக்குள் போட்டுக் கொண்டான் நாகலிங்கம்.

சிறிது நேரம் கழித்து அவன் இரத்தினப் பத்தரைக் காண்பதற்குப் புறப்பட்டபோது, "அடே நாகு! இன்றைக்கு நீ வெளியிலே எங்கேயும் போக முடியாது. திருக்கார்த்திகை வேலை சுமந்து கிடக்கிறது. ஆறு மணிவரை இரண்டு பேருமாகச் சேர்ந்து வேலை செய்தால்தான் அத்தனை மாலைகளையும் கட்டி முடிக்கலாம். அப்புறம் எங்கே வேண்டுமானாலும் போ" என்றான் காயாம்பூ.

"சும்மா இந்தப் பக்கத்துத் தெருவரையில் போய்விட்டு ஒரு நொடியில் திரும்பி விடுகிறேன் அப்பா!" என்று தட்டிக் கழித்துவிட்டுக் கிளம்பப் பார்த்தான் பையன். "அதெல்லாம் முடியாது. என்ன காரியமானாலும் ஆறு மணிக்கு மேலே வைத்துக் கொள். வருடத்திற்கு ஒரு நாள். சாமி காரியம்! அதைக் குறைவு வராமல் செய்துவிட வேண்டும்" என்று பையனை வற்புறுத்தி, உட்கார வைத்துவிட்டான் காயாம்பூ.

கோவிலில் முக்கியமான ஒரு பெரிய திருநாளுக்கு வேண்டிய மாலை, உதிரிச்சரம், செண்டு இவ்வளவும் முடிப்பதென்றால், இலேசுப்பட்ட காரியமா? நாகலிங்கம் ஆறேகால் மணிக்குத்தான் நந்தவனத்திலிருந்து கிளம்ப முடிந்தது. காயாம்பூ இரண்டாந்தடவை நீராடி மடியாக ஈர வேஷ்டியுடன் மாலைகளும், சரங்களும் நிறைந்த பூக்குடலைகளோடு கோவிலுக்குப் புறப்பட்டான். அன்றைக்குக் கோவில் மரியாதையைப் பெற்றுக்கொண்டு சொக்கப்பனை கொளுத்தவேண்டிய கடமையும் அவனுக்கு இருந்ததே!

நாகலிங்கம் இரத்தினப் பத்தரைச் சந்திக்கும்போது ஆறேமுக்கால் மணி. அவர் அவசர அவசரமாக நகைப்பட்டறையை மூடிவிட்டு, எங்கோ கிளம்புவதற்குத் தயாராகிக் கொண்டிருந்தார்.

"வா அப்பா நாகலிங்கம்! என்ன சங்கதி?" என்று அவனை வரவேற்றார் இரத்தினப் பத்தர்.

"சும்மா! இப்படி உங்களைத்தான் பார்த்துவிட்டு வரச் சொல்லி அப்பா அனுப்பினார்" என்று பொய்யைக் கலந்தான் நாகலிங்கம். பத்தரிடத்தில் தன் தகப்பனார் பெயரைப் பயன்படுத்திக் கொள்ளாமல், தானாக எதையும் சாதித்துக் கொள்ள முடியாதென்று அவனுக்குத் தெரியும்.

"என்ன காரியம்? இப்படி வாயேன்" என்று பட்டறைக்குள் ஒதுக்குப்புறமான ஒரு இடத்துக்கு அவனைக் கூட்டிக்கொண்டு போனார் பத்தர். நகை ஈட்டின்பேரில் வட்டிக்குக் கடன் கொடுக்கும் லேவாதேவித் தொழிலையும் பத்தர் செய்து வந்தார்.

காயாம்பூ அடிக்கடி அவரிடம் கடன் வாங்கிக் கொடுக்கும் வாடிக்கையான ஆள். மகன் மூலம் ஏதாவது வட்டிப் பணம் - பாக்கி கொடுத்தனுப்பியிருப்பான் என்றெண்ணிக் கொண்டுதான் பத்தர், நாகலிங்கத்தைத் தனியே அழைத்துச் சென்றார்.

"பத்தரே! அப்பா இதை உங்களிடம் கொடுத்துப் பணமாக மாற்றிக் கொண்டு வரச் சொன்னார், அவசரமாகச் செலவுக்கு வேண்டும்" என்று சொல்லி, அந்தப் பையன் நாக லிங்கம் எடுத்து நீட்டிய பொருளைப் பார்த்தபோது, அவருக்குத் தூக்கிவாரிப் போட்டது.

அதைக் கையில் வாங்கி விளக்கு வெளிச்சத்தில் கொண்டுபோய் மேலும் கீழுமாகப் புரட்டினார். உற்றுப் பார்த்தார். இரத்தினப் பத்தரின் கைவிரல்கள் நடுங்கின. "தம்பீ! நாகு; இதை உன் தகப்பனார்தான் கொடுத்துவிட்டாரா?" மனக் கலக்கத்தின் சாயையும், சந்தேகமும், பத்தரின் குரலில் தொனித்தன. அவர் விழிகளை இமைக்காமல் நாகலிங்கத்தைக் கூர்ந்து நோக்கினார். நாகலிங்கத்திற்குச் சரியாகப் பதில் சொல்ல வரவில்லை. உளறிக் குழறி வார்த்தைகளைப் பூசி மெழுகினான்.

"பரவாயில்லை தம்பீ! இங்கேயே இருங்க... வீட்டு வரை போய்ப் பணம் எடுத்துக்கொண்டு வந்துவிடுகிறேன்" என்று நாகலிங்கத்தை அங்கே உட்கார வைத்துவிட்டுப் பட்டறையிலிருந்து இறங்கித் தெருவில் நடந்தார் இரத்தினப் பத்தர்.

நாகலிங்கத்திற்கு இதயம் வேகமாக அடித்துக் கொண்டது. பத்தர் கையோடு பதக்கத்தையும் கொண்டு போயிருந்தார். 'பத்தருக்கு அது கோவில் நகை என்று தெரிந்திருக்குமோ?' என்று அவன் மனத்தில் ஒரு பயப்பிரமை ஏற்பட்டது. 'இரத்தினப் பத்தர் இளமையிலேயே மதம் மாறியவர். கிறிஸ்தவ மதத்தைச் சேர்ந்தபின், அவர் பெருமாள் கோவிலுக்கு வந்திருக்கக் காரணமில்லை. அதனால் பெருமாளின் நகைகளைப்பற்றி அவருக்குத் தெரிந்திருக்க முடியாது!' தனக்குத்தானே சமாதானமும் செய்துகொண்டான் நாகலிங்கம்.

இரத்தினப் பத்தர் போனவர், போனவர்தான். ஆள் திரும்பி வரவே இல்லை. ஆறேமுக்கால் மணிக்கு நகைப்பட்டறைக்குள் நுழைந்த நாகலிங்கம், ஏழே முக்கால் மணி வரை காத்திருந்தான். அதற்கு மேலும் அங்கே காத்திருக்கப் பொறுமை இல்லை அவனுக்கு! 'பத்தர் எங்கே ஓடிப்போய்விடப் போகிறார்? நாளைக்கு வந்து பணத்தை வாங்கிக் கொண்டால் போயிற்று. இங்கிருப்பவர்களிடம் சொல்லிவிட்டுப் போகலாம்' என்று நினைத்துக் கொண்டு பட்டறையிலிருந்த வேலைக்காரனிடம், "பத்தர் ஐயா வந்தால், நான் நாளைக்கு வந்து பார்க்கிறேன் என்று சொல்லுங்கள்" என்று கூறிவிட்டுக் கிளம்பினான் நாகலிங்கம்.

நாகலிங்கம் இரத்தினப் பத்தரின் பட்டறையிலிருந்து புறப்பட்ட அதே நேரத்திற்குக் கோவில் வாசலில் சொக்கப்பனை விழாவைப் பார்ப்பதற்காகக் கோலாகலத்தோடு மக்கள் பெருந்திரளாகக் கூடியிருந்தனர்.

தரையில் உதித்த நட்சத்திரங்களைப் போல வரிசையாகத் தீபங்கள்; அவற்றிற்கு நடுவே 'ஒளிகளுக்கெல்லாம் பேரொளியாயிருப்பவன் நான்' என்று சொல்வதுபோல் நான்கு வீதிகளிலும் திருஉலாவை முடித்துக் கொண்டு பெருமாளின் பல்லக்கு வந்து

நின்றது. இதோ சொக்கப்பனையைக் கொளுத்திவிடப் போகின்றார்கள். கூடியிருந்த மக்கள் நன்றாகப் பார்க்கவேண்டுமென்ற ஆவலில், ஒருவரை ஒருவர் இடித்துத் தள்ளிக்கொண்டு முன்னால் வர முயன்றனர்.

'அப்பப்பா! நெருப்பு எரிவதைப் பார்ப்பதில் இந்த மனிதர்களுக்கு ஏன்தான் இவ்வளவு ஆர்வமோ? எதுவும் தன்னை பாதிக்காத வரையில் மற்றவர்களுக்கு வேடிக்கையாகத்தான் தோன்றும். ஒரு வீடு பற்றி எரிந்தால் இப்படி வேடிக்கையாகப் பார்க்கத் தோன்றுமா?'

சொக்கப்பனையைக் கொளுத்துவதற்காகக் காயாம்பூ அம்பலக்காரன் அடக்க ஒடுக்கமாகப் பயபக்தியோடு பெருமாளின் பல்லக்குக்கு முன் வந்து நின்றான்.

தர்மகர்த்தாவும், உள்ளூர்ப் பெரியதனக்காரர்களும், பல்லக்கின் கீழே மிடுக்காக நின்றுகொண்டிருந்தனர். காயாம்பூ முறைப்படி அவர்களை வணங்கினான். அர்ச்சகர் அவன் கழுத்தில் மாலை போட்டுப் பரிவட்டம் கட்டினார். அவன் வணக்கத்தோடு அவற்றை ஏற்றுக்கொண்டு, பனைமரத்தில் ஏறுவதற்குத் தயாராக வேஷ்டியை வரிந்து கச்சை கட்டிக் கொண்டான். ஒரு வெண்கலத் தாம்பாளத்தில் அகல்விளக்கைப் பொருத்திவைத்து, மரியாதையாக அவன் கையில் கொடுத்தார் அர்ச்சகர்.

காயாம்பூ ஒரு கையில் விளக்கு வைத்த தாம்பாளத்தை ஏந்திக் கொண்டு சொக்கப்பனை மரத்தில் ஏறத் தயாரான போது, இரத்தினப் பத்தரும், இரண்டு போலீஸ் கான்ஸ்டேபிள்களும் கூட்டத்தை விலக்கிக் கொண்டு உள்ளே நுழைந்தனர். பத்தர் தர்மகர்த்தாவின் காதருகே வந்து ஏதோ கூறினார். தர்மகர்த்தா பத்தரிடம் பதிலுக்கு ஏதோ கேட்டார். உடனே இரத்தினப் பத்தர் தம் பையிலிருந்து ஏதோ ஒரு பொருளை எடுத்துத் தர்மகர்த்தாவிடம் காண்பித்தார். தர்மகர்த்தா அர்ச்சகரைப் பக்கத்தில் கூப்பிட்டு, அதைக் காட்டி என்னவோ அதட்டிக் கேட்டார். அர்ச்சகர் 'திருதிரு' என்று விழித்தார். "காலையில் களைந்து கொடுத்த மாலையோடு சேர்ந்து போயிருக்கிறது. நான் இதுவரை பெருமாள் திருமேனியில் இது இல்லாததைக் கவனிக்கவே இல்லை. இந்தப் பண்டாரப் பயல் அப்போதே என்னிடம் திருப்பிக் கொடுத்திருக்க வேண்டாமோ? இவன் மோசம் செய்திருக்கிறான்" என்று தர்மகர்த்தா விடம் அர்ச்சகர் கதறினார். தர்மகர்த்தாவின் மீசை துடித்தது. கண்கள் சிவந்தன.

"அடேய் காயாம்பூ! தடிப்பயலே; விளக்கைக் கீழே வைத்துவிட்டு வா இங்கே!" என்று கூப்பாடு போட்டார். காயாம்பூ அம்பலக்காரன் விளக்கைத் தாம்பாளத்தோடு சொக்கப்பனைக்குப் பக்கத்தில் வைத்துவிட்டு, அரண்டுபோய் என்னவோ, ஏதோ என்று புரியாமல் தர்மகர்த்தாவுக்கு முன்னால் வந்து நின்றான். அவர் ஏன் அத்தனை பேருக்கு முன்னால் தன்னை அப்படி மரியாதையில்லாமல் கூப்பாடு போடுகிறார் என்பதே அவனுக்கு விளங்கவில்லை.

போலீஸ்காரர்களைப் பார்த்ததும் அவன் மனத்தில் என்னென்னவோ எண்ணங்கள் தோன்றின. தன் அருமை மகன் நாகலிங்கம் எங்காவது 'திருவிளையாடல்' புரிந்துவிட்டு, அகப்பட்டுக் கொண்டானோ? அதற்காக ஜாமீனுக்கு வந்திருக்கிறார்களோ என்றுதான் முதலில் அவன் நினைத்தான்.

"ஏண்டா! திருட்டுக் கழுதை; சாமி நகையைக் கொண்டு போய் விற்றுச் சாப்பிட வேண்டும் என்கிற அளவுக்கு எப்போதடா உனக்குத் துணிச்சல் வந்தது?" கூப்பாடு போட்டுக் கொண்டே, அவ்வளவு பெரிய கூட்டத்துக்கு நடுவில் காயாம்பூவை அடிப்பதற்குக் கையை ஓங்கிக் கொண்டு பாய்ந்துவிட்டார் தர்மகர்த்தா.

"ஆத்திரப்படாதீர்கள்! முதலில் விஷயத்தை இன்னதென்று விசாரியுங்கள்" என்று பக்கத்திலிருந்தவர்கள் குறுக்கிட்டுத் தடுத்திருக்காவிட்டால், அந்த அறை காயாம்பூவின்மேல் விழுந்தே இருக்கும்.

இரத்தினப் பத்தர் முன்னால் வந்து காயாம்பூ அம்பலக்காரனிடம் விஷயத்தைச் சுருக்கமாகச் சொன்னார். "ஐயா! நான் ஒரு பாவமும் அறியேன். குடலைக் குள்ளிருந்த பழைய மாலைகளை நந்தவனத்திற்குப் போனதும் என் மகனிடம் கொடுத்துப் பூங்கிடங்கில் கொட்டி வரச் செய்தேன். அந்தப் பயல் போக்குச் சரியில்லை. விடலைத்தனமாக ஏதோ செய்திருக்கிறான். எனக்குத் தெரிந்திருந்தால், இப்படியெல்லாம் நடக்கவிட்டிருக்க மாட்டேன். உடனே ஓடிவந்து அர்ச்சகரிடம் கொடுத்திருப்பேன்" என்று பதறிக் கூறினான் காயாம்பூ.

"சரிதான் அப்பா! யாரிடம் கதை அளக்கிறாய் நீ? பொய் சொன்னாலும் பொருந்தச் சொல்ல வேண்டும்! நீயே இந்தப் பதக்கத்தை உன் மகனிடம் கொடுத்து, என்னிடம் விற்றுப் பணம் வாங்கிக்கொண்டு வரச் சொன்னதாக உன் மகன் வந்து சொன்னான். நீ அதற்குள் உனக்கு ஒன்றும் தெரியாததுபோல் நாடகமாடி என்னிடம் மறைக்கிறாயே! இந்த ஏமாற்று வேலை எல்லாம் இங்கே பலிக்காது" என்று பத்தர் கொதிப்போடு கூறினார்.

"ஐயா! சாமி சாட்சியாகச் சொல்கிறேன். உண்மையில் எனக்கு இது தெரியவே தெரியாது" என்று அழமாட்டாக் குறையாகக் கெஞ்சினான் காயாம்பூ.

"சீ! அயோக்கியப் பயலே! வேஷமா போடறே?" தர்ம கர்த்தா பளீரென்று அவன் கன்னத்தில் அறைந்து விட்டார்.

அவ்வளவு பெரிய கூட்டத்துக்கு நடுவே அடிபட்ட காயாம்பூ, "இந்தச் சாமிக்கு கண் இருந்தால், இந்த நெருப்பு நெருப்பாக இருந்தால், உண்மையைக் காண்பிக்கவேணும்" என்று ரோஷம் பீறிட இரைந்து சப்தமிட்டான்.

அதற்குமேல் காயாம்பூவை அங்கே நிற்கவிடாமல் போலீஸ்காரர்கள் பிடித்து இழுத்துக் கொண்டு போய் விட்டனர். "திருட்டுத் தடியன்! இப்படிப்பட்ட ஆட்களெல்லாம் கோவிலில் வேலை செய்தால் கோவில் உருப்பட்டாற் போலத்தான்" என்று தர்மகர்த்தா காயாம்பூவைப் போலீஸார் பிடித்துக்கொண்டு போன பின்பும் ஆத்திரம் அடங்காமல் உறுமினார்.

இப்படி அந்த வருடம் சொக்கப்பனை உற்சவம் அலங்கோலமாக முடிந்து விட்டது. போலீஸ் ஸ்டேஷனுக்குப் போய் ஜாமீன் கொடுத்துவிட்டு ஓடி வந்தான் காயாம்பூ. ஆயிரமிருந்தாலும் பெருமாளுக்கு வழக்கமாகத் தான் செய்யும் கைங்கரியத்தைச் செய்யாமல் விட மனமில்லை அவனுக்கு.

ஆனால், அவன் இன்ஸ்பெக்டரிடம் வாதாடி ஏற்ற நபர் மூலம் ஜாமீன் கொடுத்துவிட்டு வருவதற்குள் சொக்கப்பனை கொளுத்தப்பட்டு விட்டது. உரிமையையும் மரியாதையையும் இழந்ததோடல்லாமல், திருடாமலே திருட்டுக் குற்றம் சாட்டப்பட்ட அவன் மனம் குமுறியது.

"ஆண்டவனே! நியாய தேவதைக்குக் கண் அவிந்து விடவில்லையானால், என் முறையீட்டுக்கு நியாயம் கிடைக்கட்டும். நான் திருடவில்லை என்பது உண்மையானால், இனி இந்த இடத்தில் எந்த வருடம் சொக்கப்பனை கட்டி நிறுத்தினாலும், அது எரியவே கூடாது. என் சத்தியத்துக்கு அது அடையாளம்" என்று கோவிலை நோக்கித் தெருப் புழுதியை வாரி இறைத்துவிட்டு, எரிந்துகொண்டிருந்த சொக்கப்பனை நெருப்பிற்குள் பாய்ந்துவிட்டான், காயாம்பூ.

அவனைத் தடுப்பதற்கு அங்கு நின்ற யாருக்கும் தோன்றவில்லை. "ஐயோ, அம்மா" என்று பயமும் திகைப்புமாகக் கூச்சலிட்டார்களே ஒழியத் தீக்குள் புகுந்து அவனை மீட்க யாரும் முன்வரவில்லை. கடைசியில் சொக்கப்பனையின் ஜுவாலைகள் வேகம் அடங்கித் தணிந்த போதுதான் காயாம்பூவின் உடலை வெளியேற்ற முடிந்தது. அந்த உடல்? அது வெறும் உடலாகத்தான் இருந்தது. மறுநாள் அப்பனைச் சுடுகாட்டில் அடக்கம் செய்துவிட்டு வந்த பின், நாகலிங்கம் உண்மையை வெளியிட்டுக் கதறினான். ஆனால், அப்போது அந்த உண்மை வெளி வந்துதான் என்ன பயன்? ஒரு நல்ல மானஸ்தனை அவமானப்படுத்திக் கொல்வதற்கு முன், அது வெளிவந்திருந்தால் எவ்வளவு நன்றாயிருந்திருக்கும்?

"ஆமாம். காயாம்பூ ஏதோ சாபம் கொடுத்தான் என்றீர்களே? அந்தச் சாபத்திற்குப் பிறகு சொக்கப்பனை எரியவே இல்லையா?' என்று கேட்டேன் நான்.

"அதையேன் கேட்கிறீர்கள்? அவன் இறந்த வருஷத்திற்கு அடுத்த வருஷம் திருக்கார்த்திகையன்று ஒரே அடை மழை! சொக்கப்பனை வெள்ளத்தில் மிதந்தது. அதற்கடுத்த வருடம் பனையில் தீபம் வைப்பதற்கு ஏறியவன், உச்சியிலிருந்து கீழே விழுந்து சொக்கப்பனை கொளுத்தப்படாமலே அமங்கலமாக முடிந்தது. மூன்றாம் வருஷம் காற்றுச் சகிக்க முடியாமல் வீசிக் கட்டி வைத்திருந்த சொக்கப்பனை மரத்தையே கீழே சாய்த்துவிட்டது.

"அப்படியானால் இப்போது எரிகிறதே?" என்று குறுக்கிட்டுக் கேட்டேன்.

"இதுவா? இது வேறு இடம். முன்பு சொக்கப்பனை கொளுத்திய இடத்திலிருந்து இருபதடி தள்ளிப் பனை நிறுத்தி, இப்போது சில வருஷங்களாகக் கொளுத்தி வரு கிறார்கள். அந்தப் பழைய இடத்தில் கொளுத்த முயன்றால், கடைசி விநாடியிலாவது ஏதேனும் அபசகுணம் ஏற்பட்டு நின்று போகிறது" என்றார் திருவாடியாப் பிள்ளை.

"பிள்ளை அவர்களே! உண்மை நிகழ்ச்சிகள் காலப்போக்கில் அழிந்து விடுகின்றன. இன்னும் சிலவோ காலத்தின் போக்கையே அழித்துவிடுகின்றன. உங்கள் காயாம்பூ இரண்டாவது வகையில் இடம் பிடித்துவிட்டான்" என்று பெருமிதத்தோடு சொன்னேன் நான்.

(1963-க்கு முன்)

## 89. சிவானந்தம் ஒரு 'ஜீனியஸ்'

**சி**வானந்தம் அவர்களை எப்போது எங்கே எதற்காக முதன் முதலில் சந்தித்தேன் என்பது இப்போது எனக்குச் சரியாக நினைவில்லை. ஆனால் அவரைச் சந்தித்ததும், பின்பு அந்தச் சந்திப்பை நான் மறக்க முடியாமற் போனதும் நன்றாக நினைவிருக்கிறது. 'சிவானந்தம் ஒரு ஜீனியஸ்' என்பது இங்கே என் ஒருவனுடைய அபிப்பிராயம் மட்டுமில்லை. சிவானந்தத்தைப் பொறுத்த மட்டும் அவர் 'ஒரு ஜீனியஸ்' என்பதை ஒப்புக் கொள்ளாதவர்களே கிடையாது. அப்படி ஒப்புக் கொள்வதனால் யாவருக்கும் எந்தவிதமான நஷ்டமுமில்லை. இலாபம் உண்டா இல்லையா என்பது அநாவசியமான ஆராய்ச்சி. நஷ்டமில்லை என்பதுதான் முக்கியம். பிறரைப் புகழ்ந்தாலும் நமக்கு நஷ்டமில்லாமல் புகழ வேண்டும். அதுதான் நவீன யுகத்தில் மிகப் பெரிய தந்திரம். இந்தத் தந்திரம் தெரிந்தவர்கள் அதிகமாக இருக்கிற ஓர் ஊரில்தான் சிவானந்தமும் இருந்தார்... அது எந்த ஊராக இருந்தால் என்ன?

அதோ, ஏழு மைல் இடுப்பொடிய ரிக்ஷா இழுக்க வைத்துவிட்டு காலணாவை எண்ணிக் கொடுக்கும் பணக்காரக் கஞ்சனிடம் சண்டை போடுகிற ரிக்ஷாக்காரனுக்கு ஆதரவாக மூன்றாவது குரல் ஒன்று வியவகாரம் பேச வருகிறதே; - அதுதான் சிவானந்தத்தின் குரல். மேலத் தெருக்கோடியில் தனியாகத் தண்ணீர் எடுக்கச் சென்ற தமயந்தியைப் பார்த்துக் கண்ணை வெட்டித் 'தன்னந்தனியே போறவளே' என்ற ட்யூனில் ஸீட்டியடித்த காளையை, 'நீ அக்கா தங்கச்சியோடப் பொறந்தவன் தானாடா?'ன்னு அழுத்தமாக 'டா'ன்னு போட்டு விசாரிக்கிற குரல் இருக்கிறதே; அதுவும் நம்முடைய சிவானந்தம் அவர்களுடையதுதான். தயவும் கருணையும் கிடைக்காமல் வாழக் கஷ்டப் படுகிறவர்கள் யார் யாரெல்லாம் இருக்கிறார்களோ, அவர்களுக்கெல்லாம் சிவானந்தம் ஒரு நம்பிக்கை. அவருடைய சொந்த வாழ்க்கை நம்பிக்கைகள் ஏறத்தாழ இருந்தாலும் மற்றவர்களுக்கு அவர் ஓர் அசைக்க முடியாத நம்பிக்கையாக இருந்தார். காலையில் அலுவலகத்திற்குப் போக பஸ் செலவிற்காக எடுத்துவந்த நாலணாவை வழியில் சந்திக்கிற நொண்டி, குருடுகளுக்குப் பிச்சை போட்டுவிட்டு நடந்தே போய்விடுகிற அளவுக்கு வற்றிப்போகாத தயையும், கருணையும் உள்ளவனுக்கு இந்த நூற்றாண்டு வாழ்க்கை ஏற்றதில்லைதான். ஆனாலும் சிவானந்தம் இந்த நூற்றாண்டில்தான் வேறு நூற்றாண்டு மனிதராக இருந்து வந்தார். எங்கே இருந்தார் என்கிறீர்களா? எதிலும் ஒத்துப் போகாத இந்தப் பாழாய்ப் போன தமிழ்நாட்டில் வயிற்றுக்குத் தாளம் போடுகிறவர்களின் கஷ்ட நஷ்டங்களை எடுத்துக் கூற வயிற்றுக்குத் தாளம் போடுகிற நியாய சீலர்கள் சிலரால் நடத்தப்படுகிற ஒரு பத்திரிகைக்கு ஆசிரியராயிருந்தார் சிவானந்தம். தம்முடைய தைரியத்தையும், நம்பிக்கையையும் முதலாக வைத்து அந்த முதலாகிய மூலதனத்திலிருந்து பல

இளைஞர்களை முன்னுக்குக் கொண்டு வந்த உழைப்பாளி அவர். இப்படிப்பட்ட உழைப்பாளி ஒரு சமயம் மிகவும் கஷ்டப்பட்டுத் தெருவில் நிற்கிற நிலைமைக்கு வந்துவிட்டார். மனைவிக்கு டி.பி. படுத்த படுக்கை. இருமல் இயந்திரமாகிவிட்டார் அந்த அம்மையார். பழைய வீடு. மழையில் சுவர்விழுந்துவிட்டது. கலியாணத்துக்கு நிற்கிற வயதில் நாலைந்து பெண்கள். இத்தனை பெரிய குடும்பத்தின் பாரத்தைத் தாங்கிக் கொண்டே காமசுந்தரர் மில் உழைப்பாளிகளின் பிரச்னைகளைப் பற்றியும் 'கற்பூர விநாயகர் மோட்டார் ஒர்க்ஸ்' முதலாளியின் பொய்க் கணக்குகள் பற்றியும் பேச்சாலும், எழுத்தாலும் முழக்கி வந்தார் சிவானந்தம். பிறருக்காகக் கவலைப்படாமல் ஒரு நிமிஷம்கூட வாழமுடியாத மனிதர் அவர். தமக்காகக் கவலைப்படவும் அவருக்குத் தெரியாது. இப்படிப்பட்ட மனிதர் பட்டினி கிடக்காமல் இன்னும் கொஞ்ச நாட்கள் வாழவேண்டுமென்று பத்துப்பன்னிரண்டு இளைஞர்கள் ஓர் எற்பாடு செய்தார்கள். ஏதோ 'மணிவிழா' என்று கொண்டாடுகிறார்களே; அப்படி ஒரு மணி விழாக் கொண்டாடிச் சிவானந்தத்தையும் கௌரவிக்க வேண்டுமென்று தீர்மானித்தார்கள் அவர்கள்.

"அண்ணா! இப்படியே ஊருக்கு உழைச்சிக்கிட்டிருந்தா நீங்க என்ன ஆகுறது? இந்தத் தேசத்துலே நல்ல நல்ல ஜீனியஸ் (மேதை) எல்லாம் இப்படித்தான் பாழாயிடறாங்க... சுவத்தை வச்சித்தானே சித்திரம் எழுதணும்...?" என்று ஒருவர் சிவானந்தத்திடம் இந்த ஏற்பாட்டை மெல்லப் பிரஸ்தாபித்தார்.

"ஜீனியஸ் எல்லாம் சோத்துக்கு லாட்டரி அடிக்கணும்கிறதுதான் இந்தத் தேசத்திலே வளமுறையானா அதுக்கு நான் மட்டும் விதிவிலக்காயிருக்கணுமா?" என்று சிவானந்தம் சிரித்துக்கொண்டே கேட்டார்.

"அதுக்கில்லே... நீங்க நல்லாயிருந்தால்தானே இன்னும் நாலு பொதுக் காரியங்களுக்கு ஓடியாடி உழைக்கலாம்..."

"என்னமோ...? செய்யுங்க... இப்படிச் செய்யிறதினாலே நீங்க என்னை ரொம்பப் பெரிசா அவமானப்படுத்திட மாட்டீங்கன்னு நினைக்கிறேன்."

என்று அவர் குத்தலாகப் பதில் கூறிய விதம் தன்னைக் கொண்டாடுவதையோ பாராட்டுவதையோகூட அவர் எப்படிக் குறைவான ஆவலோடு வரவேற்றார் என்பதைப் புரிய வைத்தது. பொய்யர்களையும், வஞ்சகர்களையும் புகழ்ந்து கொண்டாடுகிற உலக வழக்கத்தைப் பார்த்துப் பார்த்துப் புகழையும், பாராட்டையுமே வெறுக்கத் தொடங்கியிருந்தார் அவர். தம்மைச் சுற்றி வளைய வளைய வரும் இளைஞர்களின் ஆர்வத்தையும், விருப்பத்தையும், புறக்கணிக்க முடியாமல் ஏதோ இதற்கு ஒப்புக் கொண்டிருந்தார் அவர். ஒரு நல்ல நாளாகப் பார்த்து நிதி வசூலைத் தொடங்க வேண்டுமென்று தீர்மானித்திருந்தார்கள் அந்த இளைஞர்கள். நிதிவசூல் தொடங்கியது. அந்த ஊரில் பெரிய பணக்காரரான மில் முதலாளி ஒருவரைத் தேடி முதலில் போனார்கள். அவர் எல்லோருக்கும் வெள்ளி டம்ளரில் காப்பிக் கொடுத்துத் தாராளமாக உபசாரம் செய்தார். கடைசியில் "வந்த காரியம் என்னவோ?" என்று அவர்

கேட்டு அவர்கள் பதில் சொல்லியபோது அவருடைய முகமலர்ச்சியே குறைந்து போயிற்று.

"சிவானந்தம் ரொம்பப் பெரிய ஜீனியஸ்! அவரைப் போல பல விஷயங்களிலும் மேதையாயிருக்கிற ஒருவரைப் பாராட்ட வேண்டியதுதான்... ஆனால்... எதுக்கும் நீங்க 'ஸண்டே ஈவினிங்' வந்து என்னைப் பாருங்க" என்று நல்ல நூலை நடுவில் அறுத்துவிட்ட மாதிரி பேச்சைப் பாதியிலேயே நிறுத்திவிட்டார் அந்த 'மில்'லர். எடுத்த எடுப்பிலேயே ஏற்பட்ட இந்தத் தோல்வியைச் சகித்துக் கொண்டு இரண்டாவதாகப் பல தினசரிப் பத்திரிகைகளுக்கு அதிபராகிய ஒரு பத்திரிகை முதலாளியிடம் சென்றார்கள். 'சிவானந்தத்தைப் போல் ஒரு 'எடிட்டர்' இந்தத் தமிழ்நாட்டிலேயே இல்லை. அவரைப் போல அற்புதமான மேடைப் பேச்சாளாரும் இல்லை; அவரைப் பாராட்ட வேண்டியது அவசியம்தான்; ஆனால் அந்தப் பாராட்டு விழாக் கமிட்டிக்கு யாரைத் தலைவராகப் போட்டிருக்கீங்க?' என்று தேவையில்லாத தொரு கேள்வியைப் போட்டார் பத்திரிகை முதலாளி. பத்திரிகைகளுக்காக வாங்குகிற 'நியூஸ் பிரிண்ட்' கோட்டாவை அச்சடித்து விற்பதைவிட வெள்ளைக் காகிதமாகவே விற்பதில் அதிகக் கவலை செலுத்தக் கூடியவர் அவர். மணிவிழாக் குழுவின் தலைவராயிருக்கிற இளைஞர் பெயரைக் கூறியவுடன் அந்தப் பத்திரிகை முதலாளி முகத்தைச் சுளித்தார் சலிப்போடு. அவர்களிடம் கூறலானார். 'இன்னும் 'பாப்புலர் மேனாக' யாராச்சும் ஒருத்தரை 'பிரஸிடெண்ட்'டாகப் போடுங்க. ஒரு பெரிய விழாவுக்குத் தலைவராயிருக்கிறதுன்னா அதுக்கு ஒரு 'ஸ்டேட்டஸ்' வேணாமா?"

"ஸ்டேட்டஸும் பாப்புலாரிட்டியும் இருந்தால் மட்டும் போதுங்களா? ஓடியாடி உழைக்கிறவங்களாகவும் இருக்கணுமே" என்று மனம் பொறுக்காமல் பதில் கூறிவிட்டார் அந்தக் குழுவில் இருந்த இளைஞர் ஒருவர். பத்திரிகை முதலாளி வளைத்து வளைத்துச் சொல்லிய விதத்திலிருந்து தாமே கமிட்டித் தலைவராக இருக்க அவர் ஆசைப்படுவது தெரிந்தது. அதை அப்பட்டமாகச் சொல்ல வெட்கப்பட்டு இப்படிக் கூறினார் வெள்ளைக் காகிதத்தைக் கருப்புப் பணமாக மாற்றுவதில் வல்லவரான அந்தப் பத்திரிகை முதலாளி. தம்மால் பொருளுதவி செய்யமுடியுமா இல்லையா என்பதைக் கூறாமலே சுற்றி வளைத்து வேறு எவை எவையோ தேவையில்லாத விஷயங்களைப் பேசிக் கொண்டே போனார் அவர்.

முடிவாக ஒரு பயனும் இல்லாமலே அங்கிருந்தும் அவர்கள் வெளியேறும் படி ஆயிற்று. மூன்றாவதாக ஒரு திரைப்பட நடிகரிடம் வசூலுக்குப் போனார்கள். அந்த நடிகர் எல்லோரையும் மிக மிக ஆர்ப்பாட்டமாக வரவேற்றுப் பட்டுறை தைத்த பாங்கான சோபாக்களில் உட்கார வைத்துப் பேசினார். தமக்கு இராப்பகலாக ஓய்வு ஒழிவின்றி ஷூட்டிங் இருப்பதாகவும், தம்மால் எந்தப் பொது நிகழ்ச்சிகளிலும் கலந்து கொள்ள முடிவதில்லை என்றும் கூறினார் அவர். நண்பர்கள் சிவானந்தத்தின் மணிவிழாவைப் பற்றிச் சொல்ல ஆரம்பித்தார்கள். நடிகர் உடனே ஆரம்பித்து விட்டார்; "அவரைப் போன்ற ஜீனியஸ் எல்லாம் இப்பிடிக் குடத்து விளக்காக

அடங்கிக் கிடக்கப்படாதுங்க. நல்ல நல்ல நாடகங்களை எல்லாம் அவர் எழுதணும். இன்னும் சொல்லப் போனால் சினிமா உலகத்துக்குக்கூட அந்த மாதிரி 'ஜீனியஸ்'களின் சேவை தேவை" என்று அடுக்கினார் அந்தப் பெரும் நடிகர். கௌரவமான தொகைக்குக் கையெழுத்துப் போட்டு வசூலை அவர்தாம் ஆரம்பித்து வைக்க வேண்டுமென்று கேட்டபோது நடிகர் 'ஸைலன்ஸ் பிக்சர்' ஆகிவிட்டார்.

"நாங்க... திரைக்கலைஞர்கள் எல்லாம் சேர்ந்து தனியா ஒரு பெருந்தொகை திரட்டி அன்னாருக்கு வழங்கக் கருதியிருக்கிறோம். இந்த நோட்டு இருக்கட்டும்; இதிலே மத்தவங்க மூலமா வசூலாகிற தொகைக்கு முயற்சி செய்யுங்க. திரையுலகத்தைப் பொறுத்த மட்டில் நாங்க எல்லாருமாகச் சேர்ந்து ஏதாச்சும் செய்யிறோம்..." என்று சொல்லி மிகவும் நம்பிக்கையோடு கைகூப்பி விடை கொடுப்பதுபோல் கையை விரித்துவிட்டார் அந்த நடிகர். மூன்று நான்கு பேரிடம் படியேறி இறங்கிய பிறகு இவர்களுக்கு அலுத்துப் போய்விட்டது. சிவானந்தம் அவர்களிடம் இவ்வளவு திறமைகள் இருந்தும் எதற்காக ஒவ்வொருவரும் இப்படிச் சிரித்தபடியே அவருடைய மணிவிழாவைத் தட்டிக் கழிக்கிறார்கள் என்று புரியாமல் மருண்டார்கள் அந்த இளைஞர்கள். அன்றைய வசூல் முயற்சி அவ்வளவில் போதும் என்ற அந்தரங்கமான சலிப்போடு நண்பர்கள் ஒரு சிற்றுண்டி விடுதிக்குள் நுழைந்தபோது மிகவும் களைத்துப் பசித்திருந்தனர். காலியாயிருந்த ஒரு மேஜையைச் சுற்றிக் கிடந்த நாற்காலிகளில் உட்கார்ந்து சிவானந்தத்தின் துரதிர்ஷ்டத்தையும், வறுமையையும் பற்றி அவர்கள் பேசிக் கொள்ளத் தொடங்கியிருந்தனர். 'அவர்களுக்கு என்ன சாப்பிடுவதற்கு வேண்டும்?' என்று கேட்பதற்கு வந்த ஓட்டல் பையன் அவர்கள் சுவாரசியமாகப் பேசிக் கொண்டிருப்பதைக் கேட்டுத் தயங்கி நின்றான். கால்மணி நேரம் கழித்துதான் அவர்கள் இட்லி, வடை, பாத் என்று அவரவர்களுடைய வயிற்றுப் பசிக்குத் தேவையான பண்டங்களை ஓட்டல் பையனிடம் சொல்லி அனுப்பினார்கள். பண்டங்கள் ருசிக்கவில்லை. ஆர்வத்தோடு புறப்பட்டு முயன்ற காரியம் ஆரம்பத்திலேயே சுறுசுறுப்பில்லாமல் துவண்டு போயிற்றே என்ற மனவேதனையில் எல்லாமே கசந்தன. "பணமும் சௌகரியங்கள் உள்ளவர்களைத் தேடி வந்துதான் குவியும் போலிருக்கு. அண்ணா சிவானந்தத்தைப் போன்றவர்களுக்காக நாம் முயன்று தேடி அலைந்தாலும் அவை விலகி விலகிப் போய் நம்மை விரட்டுகின்றன" என்று வேதனையோடு கூறினார் ஓர் இளைஞர்..

"துரதிர்ஷ்டமும் வறுமையுந்தான் நிஜமான 'ஜீனியஸ்'களின் பக்க பலம் போலிருக்கிறது சார்" என்று வருத்தப்பட்டார் வேறு ஓர் இளைஞர்.

"நாம் இந்த முயற்சியில் இறங்கியிருக்கவே கூடாது. இதனால் சிவானந்தத்துக்கும் மனக்கஷ்டம். நாம் எவ்வளவோ சொல்லியும் அவர் ஒப்புக் கொள்ளாமல் மறுத்தார். கடைசியில் 'என்னை அதிகமாக அவமானப்படுத்திட மாட்டிங்கன்னு நினைக்கிறேன்' என்று கூறி இணங்கினார். இப்ப இருக்கிற நிலைமையைப் பார்த்தா... நமக்கே வேதனையாயிருக்கு... 'மணிவிழா' என்று... தம்பிடி மணியில்லாமே எதை நடத்தப்

போறோம் நாம்?... சும்மா கிடந்தவரைச் சீண்டிவிட்டுவிட்டு... அவமானப்படுத்தின கதையாத்தான் ஆகப் போறது..." என்றார் இன்னொருவர்.

அவர்கள் சாப்பிட்டுக் கைகழுவி எழுந்தபின் ஓட்டல் பையன் 'பில்' கொண்டு வந்து கொடுத்தான்.

அவன் கையில் 'பில்' காகித்தோடு அழுக்கடைந்த ஐந்து ரூபாய் நோட்டு ஒன்றும் இருந்தது. "சார்! எனக்கு இந்தச் சின்னத் தொகையைக் கொண்டாந்து கொடுக்கவே வெட்கமாயிருக்குது. இன்னிக்கிக் காலையிலே பேப்பர்லே சிவானந்தம் மணிவிழாவைப் பற்றி அறிக்கை பார்த்தேன். பார்த்ததுமே அதுக்கு அஞ்சு ரூபாயாவது கொடுக்கணும்னு எடுத்து வச்சேன். நீங்க பேசினதை எல்லாம் கேட்டுக் கிட்டுத்தான் இருந்தேன். அவரோட எழுத்தும் பேச்சும் பலரைத் திருத்தி ஒழுங்குபடுத்தியிருக்கு... என்னைப் போல இருக்கிறவங்க அவருக்கு எவ்வளவோ கடமைப்பட்டிருக்கிறோம். நீங்க இங்கே சம்பளம் போடறன்னைக்கி வந்தா இதைத் தவிர இன்னும் பதினைஞ்சு ரூபா வசூலுக்கு நான் உறுதி தர முடியும்..." என்று பயபக்தியோடு கூறியவனாக அந்த ஐந்து ரூபாயை நீட்டினான் பையன்.

நண்பர்கள் ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்துக் கொண்டார்கள். திடீரென்று யானை பலம் வந்த மாதிரி இருந்தது அவர்களுக்கு.

"அண்ணே! சிவானந்தத்துக்கும் அதிர்ஷ்டம் இருக்குது. ஆனால் அந்த அதிர்ஷ்டமே ரொம்ப ஏழையாயிருக்குது. 'ஜீனியஸ்'ங்களோட அதிர்ஷ்டம் எப்பவுமே ரொம்ப ஏழையாகத்தான் இருக்கும் போலிருக்கு" என்று சொல்லிச் சிரித்துக் கொண்டே அந்த அஞ்சு ரூபாயை வசூல் நோட்டில் முதல் பக்கத்தில் எழுதி வரவு வைத்தார் செயலாளராகிய இளைஞர். 'ராமானந்த பவன் ஸர்வர் நன்கொடை ரூபா. 5' என்று எழுத்துக்கள் நிறைந்தன அந்தப் பக்கத்தில். ஒரு ஜீனியஸைப் புரிந்து கொண்ட ஏழைப் பையனின் மரியாதை நிறைந்த முதல் நிதியாக வந்து சேர்ந்திருந்தது அந்தத் தொகை.

(தாமரை, மே, 1963)

# 90. எத்திராஜுலுவும் 'L' போர்டும்

1962ம் வருஷத்தின் தொடக்கத்தில் மார்ச் மாதத்தில் சேர்ந்தாற்போல நாலைந்து நாள் விடுமுறை வருகிறாற்போல் வாய்த்த சுபயோக சுபதினம் ஒன்றில்... உதயாதி நாழிகை 7 மணிக்குமேல் ஒரு கப் காபியைக் குடித்துவிட்டு... இரண்டு மூன்று பெருமூச்சுக்களையும் மலைப்போடும், பயத்தோடும் வெளித் தள்ளிவிட்டு அதன்பின் உயர்திரு. டாக்டர் எத்திராஜுலு... எம்.ஏ.பி.எச்.டி. அவர்கள் 'கார் டிரைவிங்' - பழகிக் கொள்ளத் தொடங்கினார்கள்.

'அது சரி! புரொபஸர் எத்திராஜுலு எப்போது கார் வாங்கினார்?' என்று உங்களில் யாருக்காவது கேள்வி கேட்பதற்குத் தோன்றலாம். இந்தக் கேள்வியை நீங்கள் இன்றையிலிருந்து சரியாக இரண்டரை மாதத்துக்கு முன்னால் - அதாவது 75 நாட்களுக்கு முன்னால் கேட்டிருக்க வேண்டும்.

சரியாக 1961ம் வருஷம் டிசம்பர் மாத நடுவில் புரொபஸர் எத்திராஜுலு ஒரு 'ஸெகண்ட் ஹேண்ட்' கார் வாங்க வேண்டுமென்று தீர்மானித்து அதற்காகச் சுமார் 4500 ரூ பணமும் ஒதுக்கி வைத்து விட்டுக் கார் புரோக்கர்களிடமும் சொல்லி வைத்தார். 1962ம் இங்கிலீஷ் வருடமும் அதோடு உயர்திரு... எத்திராஜுலு அவர்கள் வீட்டு வாசலில் சேர்ந்து வந்து நின்றன. டிரைவராக முனியப்பனும் வந்து சேர்ந்தான். மாதம் ஒன்றிற்கு 2000 ரூபாய் வருமானம் உள்ள ஆள்கூட ஒரு பழைய மாடல் காரைக் கட்டித் தீனிபோடுவது சிரமமான காரியம் என்று என்னைப்போல் நண்பர்கள், வேண்டியவர்கள் எல்லாம் எவ்வளவோ அறிவுரை கூறியிருந்தும், அவற்றையெல்லாம் பொருட்படுத்தாமல் வெறும் 800 ரூபாய் மட்டுமே சம்பாதிக்கக்கூடிய உயர்திரு. டாக்டர் எத்திராஜுலு எம்.ஏ.பி.எச்.டி. அவர்கள் கார் வாங்கியதற்குக் காரணம் உண்டு. இத்தனை வயதுக்குமேல் அவருக்கு இன்னதென்று புரியாததும், புரிந்தவரையில், ஒரு கார் இருந்தால் தீரக்கூடியதுமான வியாதி ஒன்று வந்து தொலைத்திருந்தது. இருந்தாற்போலிருந்து பத்துக் கெஜதூரம் நடந்தாலே கண்களை இருட்டிக் கொண்டு மயக்கமாக வந்தது. இரண்டொரு நாள் பிளாட்பாரத்தில் நடக்கும்போதே அவர் தலைசுற்றி மயங்கிவிழ நேர்ந்து கல்லூரிப் பையன்கள் சைக்கிள் ரிக்ஷாவில் தூக்கிப் போட்டு அவரை வீட்டில் கொண்டு வந்துவிட நேர்ந்ததும் உண்டு.

இந்த மயக்கத்துக்குப் பயந்துதான் அவர் கார் வாங்கினார். கார் வாங்கிய பின்போ அவருக்கு வேறோர் விதமான மயக்கமும் வந்து சேர்ந்தது. அதற்கு ஆகிய செலவைக் கணக்குப் பார்த்தபோது 'கிர்ர்ரென்று' தலை சுற்றியது; மாதிரிக்கு எத்திராஜுலு அவர்களின் டைரியில் கண்டபடி 1962ம் வருடம் ஜனவரி, பிப்ரவரி, இரு மாதங்களுக்கும் கார் வகையில் அவருக்கு ஆன செலவு விவரங்களைப் பார்க்கலாம்.

31.1.62 கார் செலவு மொத்தம் ரூ.472 – விவரம் வருமாறு :

| | | | |
|---|---|---|---|
| 1. | டிரைவர் சம்பளம் (அண்டு) பேட்டா | ரூ. | 180 |
| 2. | பெட்ரோல் + ஆயில் | ரூ. | 110 |
| 3. | முன்பக்க டயர் டியூப் – புதியது வாங்கின வகையில் | ரூ. | 21 |
| 4. | இண்டிகேடர் லைட் பழுது பார்த்ததற்காக | ரூ. | 15 |
| 5. | கார்புரேட்டரும் ஜெட் புதியது மற்றும் சில்லறைச் செலவுகள் | ரூ. | 146 |
| | மொத்தம் | ரூ. | 472 |

2.2.1962 கார் அவஸ்தை – கட்டுக்கடங்காத செலவு – சனியன் மொத்தம் ரூ. 515

| | | | |
|---|---|---|---|
| 1. | டிரைவர் சம்பளம் (அண்டு) பேட்டா | ரூ. | 180 |
| 2. | பெட்ரோல் பங்க்... பில் | ரூ. | 120 |
| 3. | முன்பக்க டயர் தேய்ந்திருந்ததனால் ரீட்ரேட் செய்ய | ரூ. | 80 |
| 4. | ஹெட்லைட் தகராறு | ரூ. | 25 |
| 5. | ஸைலன்ஸர் 'நாய்ஸ்' | ரூ. | 85 |
| 6. | ரேடியேட்டர் கோளாறு ஃபேன் பெல்ட் புதியது ஹாரன் தொல்லை | ரூ. | 25 |
| | மொத்தம் | ரூ. | 515 |

கட்டுக்கடங்காத இந்தச் செலவுகளின் காரணமாக வேறு எதிலாவது சிக்கனமாயிருக்க வேண்டுமென்று தவித்துத் தடுமாறி இராப்பகலாகத் தூக்கமிழந்து - அப்படியே தூங்கினாலும் சொப்பனங்களில்கூட 'ஸைலன்ஸ் பைப்பு டிரபிள்!...' 'ரேடியேட்டர் தகராறு'... 'டைனமோ சார்ஜ் ஆகவில்லை...' என்று இந்த மாதிரிச் சொப்பனங்களாகவே கண்டு அலறியடித்து எழுந்திருப்பது வழக்கமாகியிருந்தது எத்திராஜுலுவுக்கு.

எத்திராஜுலு அவர்கள் இப்படிப்பட்ட நிலையில் டிரைவர் சம்பளமாகிய ரூ.180 ஆவது மாதா மாதம் மீதப்பட்டால் நல்லதென்று கருதியவராக அதை டிரைவர் முனியப்பனிடம் எப்படிச் சொல்வதென்று சொல்லத் தயங்கினார். அந்தச் சமயத்தில் 'நுணலும் தன் வாயாற் கெடும்' என்பது போல் முனியப்பனே அவரிடம் அதைப்பற்றி ஆரம்பித்தான்.

"நீ இன்னா சார்... உடம்புக்கு முடியலேன்னாலும் வண்டியை எடுன்னு... கஸ்டப்படுத்துறே.... ஏங்கல்... தாங்கல்லே. நா வராமப் பூட்டாலும் ஒரு நா ரெண்டு நா...

நீயே சவாரி பண்றாப்லே இருக்கணும்... டிரைவிங் படிச்சுக்க ஸார்! பட்டணத்திலே கெய்வி இருக்காளே... பல்லுப்போன கெய்வி... அவகூட ஸ்டியரிங் புடிச்சிக்கினு ஓட்டிக்கினு போறா ஸார்..."

"ரொம்ப கரெக்ட் முனியப்பன்! நாளைக்குக் காலையில் ஏழு மணியிலிருந்து எனக்கு டிரைவிங் சொல்லிக் கொடுக்க வந்துடு..." என்று கடைசியில் அவனைக் குருவாக அங்கீகரித்தார் எத்திராஜுலு எம்.ஏ.பி.எச்.டி.

"இது என்னா படா வித்தை?...ரெண்டு நா... கத்துக்கினியானா... அப்புறம் நீயா... ஸ்டியரிங்கைப் பிடிச்சுக்கினு போவே..." என்று சொல்லிக் கொண்டே மறுநாள் காலையில் தானே இரண்டு பெரிய எல் - போர்டுகளும் எழுதி எடுத்துக் கொண்டு வந்துவிட்டான் முனியப்பன். அவன் இந்த விஷயத்தைப் பிரஸ்தாபிப்பதற்கு இரண்டு தினங்களுக்கு முன்பு தாமாகவே 'டிரைவிங்' கற்றுக் கொள்வதற்காக 'டெம்ப்ரரி லேர்னிங் லைசென்ஸ்' தயாராக எடுத்து வைத்திருந்தார் எத்திராஜுலு.

எனவே - ஆரம்பத்தில் கூறியபடி மேற்கண்ட சுபயோக சுபதினத்தில் காரின் நான்கு சக்கரங்களிலும் எலுமிச்சம் பழங்களை வைத்து நசுங்கச் செய்தபின் - டிரைவர் முனியப்பனுக்குக் குருதட்சிணையாக 2 ரூபாயும் கொடுத்து - அவனைப் பக்கபலமாக அருகில் அமர்த்திக் கொண்டபின் எத்திராஜுலு 'டிரைவிங்' பழகலானார்.

"ஸாரு! பராக்குப் பார்க்காதே... இங்கேயே என்னையே கவனி! 'கீ'யை 'ஆன்'லே போட்டுக்க. ஸ்டார்ட்டரை இஸ்த்துக்கினு... அதுக்கு மின்னாடியே 'கியரை' நியூட்ரல் பண்ணிக்குவே... பண்ணிக்கினியானா... என்ஜீன் ஸ்மூத்தா ஆடும்... அப்புறம்... 'க்ளச்' பெடலைக் காலாலே அமுக்கிக்கினு... 'ஃபர்ஸ்ட்' கியரைப் போடு... 'கிளச்' மேலே இருக்கிற காலை மெல்லக் கொஞ்சமா எடு... இன்னொரு... காலாலே 'ஆக்ஸிலேடரை' அமுக்கி ஸ்டடியா ரேஸ்... பண்ணு..."

'டிரைவிங்' தீட்சை கொடுக்கும் ஞானகுருவாகிய முனியப்பன் கூறியபடியே இத்தனை காரியங்களையும் உயர்திரு எத்திராஜுலு அவர்கள் செய்து முடித்த பின்னும்... பிடிவாதக்கார விருந்தாளியைப் போலக் கார் நகராமல் நின்ற இடத்திலேயே நின்றுவிட்டது. அண்டசராசரங்களும் நடுங்குகிறாற்போல என்ஜின் விட்டுவிட்டுக் குதிப்பது மாதிரி ஓசை வந்தது. அந்த ஓசை வந்த மறுகணமே என்ஜின் 'ஆஃப்' ஆகிவிட்டது. அவ்வளவுதான்! எத்திராஜுலு அவர்களின் பூர்வாசிரமத்து டிரைவரும் தற்போதைய ஞானகுருவும் ஆகிய முனியப்பனுக்கு அடக்க முடியாத கோபம் வந்துவிட்டது.

"இன்னா ஸார்... உன்னோட படா பேஜாராப் போச்சு... இதே புரியிலேன்னா காலேஜியிலே நீ எப்படி ஸார் அத்தினி பசங்களுக்குக் கத்துக் குடுக்கிறே?... இங்கே பாரு... ஸார்! 'ஆக்ஸிலேட்டரை' அமுக்கி ரேஸ் பண்றப்போ... 'க்ளச்' மேலே இருக்கிற காலை மெதுவா... நெதானமா எடுக்கணும். பொசுக்குனு எடுத்திட்டியோ வண்டி 'ஆஃப்' ஆயிப்பூடும்... எங்கே... இப்ப கரெக்டா... செய்யி பார்க்கலாம்..."

கல்லூரியில் நூற்றுக்கணக்கான மாணவர்களை அடக்கியாண்டு பயப்படாமல் வகுப்பு நடத்தும் புரொபஸர் எத்திராஜுலு இப்போது இரண்டு 'எல்' போர்டு களிடமும் ஒரு கிழ டிரைவர் முனியப்பனிடமும் மாட்டிக் கொண்டு விழித்தார்.

இரண்டாவது முறையாக இப்போது பதறாமல் 'குரு'வின் கட்டளைப்படியே எல்லாம் செய்து கியரைப் போட்டபோது... 'கர்ர் புர்ர் சர்ர்...' என்று இன்னும் எப்படி எப்படியெல்லாமோ சேர்ந்தும் கர்ணகடூரமான ஓசை ஒன்று எழுந்தது! உடனே டிரைவர் முனியப்பன் எத்திராஜுலுவை அடித்துவிடுவது போல் கூப்பாடு போடத் தொடங்கி விட்டான்.

"'க்ளச்சை' நல்லா அமுக்காமலேயே கியர் போடுறியே ஸார்! சர்த்தான்... நீ இந்த லட்சணத்துலே வண்டி கத்துக்கினியானா நாலே நாளுலே இந்த வண்டியைக் காயலான் கடைக்குத் தள்ளிக்கினு போயிடலாம்" - என்று கேலியில் இறங்கிவிட்டான் டிரைவர் முனியப்பன்.

அன்று இவ்வளவில் கல்லூரிக்குப் போக நேரமாகிவிட்டதனால் மறுபடி அடுத்த நாள் காலை மீண்டும் தொடர்ந்து கற்றுக் கொள்ளத் தொடங்கலாமென்று தீர்மானித்துக் கொண்டு குளித்துச் சாப்பிட்டுவிட்டுக் கல்லூரிக்குப் புறப்பட்டார் எத்திராஜுலு. கல்லூரிக்குப் போகும்போது அவர் தன்னோடு இருந்து தான் வண்டி ஓட்டுகிற திறனைக் கவனிப்பதற்காக அவரை முன் ஸீட்டிலேயே உட்கார்ந்து கொள்ள வேண்டுமென்று கண்டிப்பாகக் கட்டளையிட்டு விட்டான் டிரைவர் முனியப்பன்.

"நீ ஒண்ணுமே செய்ய வேணாம் ஸார்! நான் எப்படி ஓட்டுறேன்னு பார்த்துக்கினே வந்தியானாக்கூடப் பத்து நாளிலே தேறிடுவே..." என்று அவன் சொல்லியபோது பி.எச்டி. பட்டம் வாங்க 'தீஸிஸ்' எழுதினதைவிடக் கஷ்டமான காரியமாக அவருக்குத் தோன்றியது கார் டிரைவிங். கடந்த இரண்டு மூன்று நாட்களாக லாகவமாகவும், பயப்படாமலும், மிக அலட்சியமாகவும் தாங்களே டிரைவ் செய்து கொண்டு வரும் 'ஓனர்'களைப் பார்க்கும்போதெல்லாம் அவ்வளவு சுலபமாக டிரைவ் செய்யத் தெரிந்து கொண்டுவிட்டதற்காக அவர்கள் மேலெல்லாம் பொறாமைப்பட வேண்டும்போல் தோன்றியது அவருக்கு. நாலு காராவது நாலு லாரியின் மேல் மோதி - அப்படி மோதுவதன் மூலம் உலகத்தில் கார் டிரைவிங் தெரியாத மடையன்கள் இன்னும் நாலு பேராவது இருக்கிறான்கள் என்று நிரூபணமாக வேண்டும் போல அவருக்கு ஆசையாகவும் இருந்தது. தம்முடைய காரில் தாம் உட்கார்ந்து கொண்டு போகும்போது எதிரே வருகிற ஒவ்வொரு புத்தம் புதிய காரையும் ஒரு லாரியோடு மோதுவதாகக் கற்பனை செய்து மகிழும் குரூரமான சந்தோஷத்துடனே 'டிரைவிங்' போவது கற்றுக் கொள்ளத் தொடங்கியபின் இந்தச் சில தினங்களாக அவருடைய வழக்கமாகியிருந்தது.

மூன்றாவது நாள் காலை 'டிரைவிங்' கற்றுக் கொள்ளும்போது அவர் வண்டியை ஒழுங்காக 'ஸ்டார்ட்' செய்து 'கியர்' போட்டு மெயின் ரோட்டில் கொஞ்சதூரம்கூட ஓட்டிவிட்டார். அப்புறம்தான் பிடித்தது சனியன். எதிரே வந்த பிரம்மாண்டமான

வைக்கோல் போர் வண்டி ஒன்றிலிருந்து காரை விலக்குவதற்காக 'ஸ்டியரிங்கை' இந்தப் பக்கம் சுற்றுவதற்குப் பதில் அந்தப் பக்கமே சுற்றி அதன் விளைவாய் எத்திராஜுலு அவர்களும், அவர்களுடைய காரும், 'டிரைவிங்' குரு முனியப்பனுமாகச் சேர்ந்து ஒரு பெரிய பள்ளத்தில் இறங்க நேர்ந்தது. நல்லவேளையாக வண்டிக்கும் ஒன்றும் சேதமில்லை. அதிலிருந்த ஆட்களுக்கும் சேதமில்லை. பள்ளத்தில் இறங்கிய அதிர்ச்சியில் வண்டி தானாகவே ஆஃப் ஆகிவிட்டது. எப்படியோ அரும் பாடு பட்டு வண்டியைப் பள்ளத்திலிருந்து மெயின் ரோட்டுக்குத் தள்ளிக் கொண்டு வந்து வீட்டுக்குப் பத்திரமாகத் திரும்ப முடிந்தது ஆண்டவன் புண்ணியம்தான். 'இப்போது உங்கள் மோட்டாரை நீங்களே ஓட்டலாம்' என்ற புத்தகம் புரொபஸருக்கு பால பாடமாகியிருந்தது.

பின்பொரு நாள் காரின் எதிரே நகராமல் குறுக்கே வந்து நின்ற எருமை மாடு ஒன்றைக் கண்டு காலால் 'பிரேக்'கை மிதிப்பதற்குப் பதிலாகப் பதற்றத்தில் எத்திராஜுலு அவர்கள் 'ஆக்ஸிலேட்டரை'ப் பலங்கொண்ட மட்டும் மிதித்து வைக்கவே வண்டி சீறிப் பாய்ந்து பிய்த்துக் கொண்டு கிளம்பிவிட்டது. அடிபட்ட எருமை மாடு சாகவில்லையானாலும் மாட்டுக்காரன் புரொபஸர் எத்திராஜுலு வையும் அவருடைய காரையும் சுற்றிக் கூட்டம் கூட்டிச் சந்தி சிரிக்கப் பண்ணி ரூ. 200 வாங்கிவிட்டான். இது நிகழ்ந்தபோது எத்திராஜுலுவே 'சுயசாரத்யம்' செய்யத் தொடங்கியிருந்தார்.

எத்திராஜுலு இரண்டு மாதங்களாக முயன்று பழகியும் 'டிரைவிங்' அவருக்கு வரவில்லை. கீழ்க்கண்ட மாதிரிச் செலவுகள்தான் நாள் தவறாமல் வந்தன.

1. கருணாகர முதலித் தெருத் திருப்பத்தில் MSY 0832 'பியட்'டில் இடித்ததற்காக அந்தக் கார்க்காரருக்குக் கொடுத்துச் சரிக்கட்டிய வகையில் ரூ.150.00
2. மெயின்ரோட்டில் குறுக்கே வந்து மாட்டிக் கொண்டு வதைத்த எருமை மாட்டிற்கு... ரூ. 200.00
3. தெருமுனையில் வீட்டுக் காம்பவுண்டுச் சுவரில் மோதியதற்கு நஷ்டஈடு... ரூ.100.00

எத்திராஜுலு இப்படி செலவுகளைக் கண்டு 'ஸெல்ஃப் டிரைவிங்' தேவையில்லை என்று கைவிட்டதோடு அமையாமல் 'ஸெல்ப் டிரைவிங்' தொந்திரவினால் ஆகிய செலவைவிட 'டிரைவருக்கு' ரூ. 180 கொடுத்துத் தொலைப்பதே மேல் என்று மறுபடியும் முனியப்பனை வைத்துக் கொண்டார். காரில் இருந்த 'எல்'போர்டுகளைக் கழற்றிவிட்டாலும் அந்தக் கார் என்கிற அவஸ்தை தினசரி தமக்கு எதையோ பாடம் கற்றுக் கொடுத்துக் கொண்டிருப்பது போல்தான் அவருக்குத் தோன்றியது. அவருடைய சம்பளத்தில் சராசரி மாதா மாதம் ஐநூறு ரூபாய்க்குக் குறையாமல் விழுங்கிக் கொண்டிருந்தது அந்தப் பழைய கார்.

"செலவு இப்படியே ஆகிக் கொண்டிருந்தால் அந்தக் காருக்கு மாட்டி வச்சிருந்தீங்களே 'எல்'போர்டு அதை எடுத்து நீங்களும், நானுமே ஆளுக்கு ஒண்ணு மாட்டிக்கலாம்" என்று அவருடைய மனைவியே ஒருநாள் அவரை வயிற்றெரிச்ச

லோடு கேலி செய்யத் தொடங்கிவிட்டாள். கடைசியாக அடுத்த முறை நான் உயர்திரு எத்திராஜுலு எம்.ஏ.பி.எச்.டி., அவர்களைச் சந்தித்தபோது "காரோடு சேர்ந்து தெருவில் மயங்கி விழுறதைவிடக் கார் இல்லாமே நடந்து போய்க் கொண்டிருக்கிற போதே மயங்கி விழுந்து விடலாம் போலிருக்கு சார்! செலவு ஆளையே சாப்பிட்டுக் கொண்டிருக்கிறது" என்று அந்தரங்கமாகவும் மனப்பூர்வமாகவும் வருத்தப்பட்டார் அவர். அதோடு 4500 ரூ. விலைக்கு வாங்கிய அந்தப் பழைய கார் கடந்த சில மாதங்களில் ரிப்பேர் செலவு வகையறாக்களில் சுமார் 5000 ரூ சாப்பிட்டுவிட்டதாகவும் சொல்லி அழுதார். அவருடைய முகம் கவலையினால் வாடியிருந்தது. பேச்சிலும் மலர்ச்சியில்லை. தாம் வாங்கிவிட்ட பழைய காரினால் தமக்கு உண்டாகியிருந்த கஷ்டங்களுக்கு இந்தப் பாழாய்ப் போன உலகம் முழுவதுமே பொறுப்பாளி என்பதுபோல் அவர் உலகத்தை வெறுப்போடு பார்ப்பதாக எனக்குத் தோன்றியது. அவரைப் பார்க்கும்போதெல்லாம் அந்தப் பழைய காரினால் தாம் படும் அவஸ்தைகளையே அரற்றிக் கொண்டிருந்ததனால் சிறிது காலம் புரொபஸர் எத்திராஜுலுவைச் சந்திக்காமலே அவர் பார்வையில் படுவதிலிருந்தே தப்பித்துக் கொண்டு வந்தேன் நான்.

மீண்டும் நான் 1962ம் வருடம் ஆகஸ்டு மாதம் பதினைந்தாம் தேதி பாரத நாட்டிற்குச் சுதந்திரம் கிடைத்த புண்ணிய தினத்தன்று உயர்திரு. டாக்டர் எத்திராஜுலு எம்.ஏ.பி.எச்.டி. அவர்களைச் சந்தித்தபோது,

"சார்! ஒரு ... குட் நியூஸ்... நம்ம காரை... நல்ல விலைக்கு விற்றுவிட்டேன்!" அந்தக் காரினால் அவர் அதிகம் சிரமப்பட்ட பின்பு அதை ஒரு பொதுவுடைமையாக்கி - நம்ம கார் என்றே எல்லாரிடமும் சொல்லத் தொடங்கியிருந்தார். "ஒரு சினிமாப்படத் தயாரிப்பாளர் தம்முடைய படம் ஒன்றில் மலையுச்சியிலிருந்து கார் ஒன்று கீழே கவிழ்கிற காட்சியைத் தத்ரூபமாக எடுப்பதற்காக நம்ம காரை 9500 ரூ கொடுத்து வாங்கிக் கொண்டு போய்க் கவிழ்த்துவிட்டார்" என்று முகமலர்ச்சியோடு தெரிவித்தார்.

"சபாஷ்! பேஷான காரியம் செய்தீர்கள்" என்று நான் அவரைப் பாராட்டினேன்.

"ஆமாம் சார்! இந்தச் சுதந்திரதினத்தைப் போல் நான் பரிபூரணமான மகிழ்ச்சியை அடைந்த சுதந்திரதினம் வேறொன்று இருக்க முடியாது. பாரத நாட்டுக்கு அந்நியர்களிடமிருந்து விடுதலை கிடைத்ததைவிட இந்தப் பழைய காரிடமிருந்து எனக்கு விடுதலை கிடைத்தது பெரிய காரியம். என் கையை விட்டுப் போகிறதற்கு முன் இந்தக் கார் எனக்குக் கற்றுக் கொடுத்திருக்கிற விஷயங்கள் ஏராளம் சார்!"

"டிரைவிங்' ஒன்றைத் தவிர" - என்று ஞாபகமாகக் குறுக்கிட்டு அவருடைய வாக்கியத்தைத் திருத்தினேன் நான்.

**(அமுதசுரபி, ஜூன், 1963)**

## 91. நினைவின் மறுபுறம்

திடீரென்று இருந்தாற் போலிருந்து அந்தக் கூட்ட முடிவில் அங்கு எதிரே சந்தித்தவர்கள் அத்தனை பேரும் அலட்சியமாகப் பார்ப்பதற்குத் தான் ஒருத்தியே பாத்திரமாகி விட்டாற்போல் தோன்றியது அவளுக்கு. வாழ்க்கையின் பல்லாயிரம் நுணுக்கங்களை வாய் திறந்து பேசுவது போல் அமைதியாகக் கூர்ந்து நோக்கும் அவனுடைய கண்கள், சிரிப்பு உறங்கும் ஏளனமான பார்வை, வலக் கையைத் தாமரைப் பூப் போல மேலே உயர்த்தி ஆள் காட்டி விரலை ஆட்டி ஆட்டிப் பேசும் ஆணித்தரமான பேச்சு, 'மைக்'கிற்கு முன் சிங்கம் போல் வந்து நெஞ்சை நிமிர்த்திக் கொண்டு நின்ற தோற்றம் எல்லாம் மொத்தமாகச் சேர்ந்து அவளைத் தலை குனியச் செய்துவிட்டன. ஆமாம்! அவன் தலை நிமிர்ந்தபோது அவள் தலை குனிந்தாள்.

"கல்லூரி மன்றத்தின் பாரதி விழாக் கருத்தரங்கத்திலே கவியரசர் பாரதி பெண்மையை மட்டுமே போற்றிப் புகழ்ந்திருப்பதாக இதுவரை கீச்சுக் குரலிலே பேச்சும் பாட்டுமாக முழங்கிய எதிர்க் கட்சித் தலைவி தோழியர் செங்கமலம் - அதாவது அவருடைய பெயரின் முதலெழுத்துக்களையும் விட்டுவிடாமற் சொல்வதாக இருந்தால் கொ.சு. செங்கமலம் என்ற கொசு செங்கமலம்..."

அவ்வளவுதான்! அவனை மேலே பேச விடாமல் ஆடிடோரியத்தில் நிரம்பி வழிந்த மாணவ மாணவிகளின் கூட்டத்தில் கைதட்டலும் சிரிப்பும் அலையலையாகப் பொங்கின. ஹியர்! ஹியர்! என்று மாணவர்களின் உற்சாகக் குரல்கள், சபாஷ் முழக்கங்கள், 'டேய்! தண்டபாணி வெளுத்து வாங்குகிறான் பாருடா!' என்று அவன் பெயரைச் சொல்லி வியக்கும் பாராட்டுக்கள் எல்லாம் மொத்தமாக எழுந்து அடங்கின. பாரதியார் பெண்மையைப் போற்றிப் புகழ்ந்திருப்பதாக விவாதித்த பெண்களின் கட்சிக்குத் தலைவியாகிய கொ.சு.செங்கமலம் என்ற மாணவியை அடுத்துப் பாரதி ஆண்மையைப் போற்றிப் புகழ்ந்திருப்பதாகப் பேச இருந்த மாணவர்களின் எதிர்க் கட்சிக்குத் தலைவரான தண்டபாணி பேசத் தொடங்கியபோதுதான் இத்தனை அமர்க்களமும் நிகழ்ந்தது. சிரிக்கச் சிரிக்கக் குத்திக் காட்டிப் பேசினான் அவன். தண்டபாணியின் பேச்சைக் கேட்ட பின்பு செங்கமலத்திற்கு நாடி தளர்ந்துவிட்டது. அவளுக்குப் பின் அவள் கட்சியில் நின்று விவாதித்த ஒவ்வொரு பெண்ணும் நன்றாக உளறிக் கொட்டினார்கள். முடிவில் இரண்டு கட்சிக்கும் தலைவர்கள் என்ற முறையில் கொ.சு. செங்கமலமும் தண்டபாணியும் தங்கள் கட்சிக் காரர்கள் பேசிய விவாதத்தை எல்லாம் தொகுத்துரைத்து முடிவுரை வழங்கியபின், தலைமை வகித்த தமிழ்த் துறைத் தலைவர். தா.கா. கரியமாணிக்கனார் தீர்ப்புச் சொன்னபோது செங்கமலத்தின் குனிந்த தலை நிமிராமல் போய்விட்டது.

'உண்மையிலேயே மகாகவி பாரதியார் பெண்களைத்தான் அதாவது பெண்மையைத்தான் - அதிகம் போற்றிப் புகழ்ந்திருப்பதாக யான் கருதுகிறேன். ஆயினும் இந்தக் கருத்தரங்கத்திலே ஆண்மையைப் போற்றிப் புகழ்ந்திருப்பதாக வாதிட்ட மாணவர்களே மிக நன்றாகப் பேசினார்கள். அவர்களுடைய விவாதத் திறனையும், பேச்சுத் திறனையும் மதித்து நான் அவர்கள் பக்கமே தீர்ப்பு வழங்குகிறேன்' என்று முடித்துவிட்டார் தலைவர். செங்கமலத்திற்கு வெட்கம் பிடுங்கித் தின்றது. யார் முகத்தையும் ஏறிட்டுப் பார்ப்பதற்கே பிடிக்கவில்லை. எழுந்திருந்து ஓடிப் போய் ஹாஸ்டல் அறையில் கதவைத் தாழிட்டுக் கொண்டு அழுது தீர்க்க வேண்டுமென்று தோன்றியது. ஆனால் அப்படி எல்லாரும் காண எழுந்து ஓட முடியுமா? ஓடினால் சிரிக்க மாட்டார்களா? தோழிகளோடு எழுந்து நடந்தாள் அவள். குனிந்த தலை நிமிராமல் போய்க் கொண்டிருந்தவளை ஓடி வந்து வம்புக்கு இழுத்தான் ஒரு மாணவன்; "ஹார்ட்டி கண்டலன்ஸஸ் மேடம்!" என்று செவிகளில் மிக ஏளனமாக வந்து ஒலித்தது அந்தக் குரல். அறைக்குத் திரும்பி வந்ததும் தோழிகள் ஒவ்வொருத்தியாக அவளுக்கு ஆறுதல் கூறத் தொடங்கினார்கள்.

"என்ன இருந்தாலும் நீ இத்தனை 'ஸென்ஸிடிவ்'வா இருக்கப்படாதுடீம்மா! இதென்ன தோல்வி? ஏதோ விளையாட்டாகத்தானே விவாதம் செய்தோம்? அந்தத் தண்டம் (தண்டபாணியின் பெயருக்கு மாணவிகள் கண்டுபிடித்திருந்த சுருக்கம் இது) இருக்கிறானே, அவன் ஒருத்தன் பேசினதாலேதான் அந்தக் கட்சி உருப்பட்டது. அவன் மட்டும் இல்லாமற் போயிருந்தால் அத்தனை மாணவர்களும் தலையிலே துணியைப் போட்டுக் கொண்டு போக வேண்டியதுதான்!"

"ஆனாலும் இது பெரிய அநியாயம்டீ செங்கமலம்! ஏதோ நகைச்சுவையாகப் பேசுவதாக எண்ணிக் கொண்டு உன்னைக் 'கொசு செங்கமலம்' என்று அந்த தண்டம் கூறியதும் அதைக் கேட்டு அத்தனை தடியர்களும் சிரித்துக் கைதட்டி ஆரவாரம் செய்ததும் கொஞ்சங்கூட நன்றாயில்லை."

தோழிகள் ஒவ்வொருத்தியாக அரற்றிக் கொண்டிருந்தார்கள். கட்சியும் கருத்தும் தோற்பதற்கு முன்பே செங்கமலம் தோற்றுப்போய்விட்ட இரகசியத்தை அங்கு ஒருத்தியும் புரிந்து கொண்டதாகத் தெரியவில்லை. தண்டபாணியின் அந்தக் கூரிய கண்கள், சிரிப்பு உறங்கும் ஏளனமான பார்வை, இப்போது இந்த இடத்துக்கு நான்தான் ராஜா என்பதுபோல் மேடையில் வந்து நின்ற தோற்றம் எல்லாம் செங்கமலத்தின் கண்களுக்குள் இருந்தன. அச்சு மாறாமல் அப்படியே இருந்தன.

அன்று இரவு செங்கமலம் தோழிகளுடன் கல்லூரி உணவு விடுதிக்குச் சாப்பிடப் போகவில்லை. அந்த அறையிலேயே அடைந்து கிடந்து எதையாவது நினைத்துக் கொண்டிருக்க வேண்டுமென்று தோன்றியது அவளுக்கு. ஹாஸ்டல் பணிப் பெண்ணிடம் சொல்லி ஒரு கிண்ணம் பால் மட்டும் வரவழைத்துப் பருகினாள். தூக்கம் வராமல் படுக்கையில் புரண்டு கொண்டிருந்தவளைத் தண்டபாணியின் நினைவு ஆண்டு கொண்டிருந்தது; கொ.சு.செங்கமலம் என்ற கொசு செங்கமலமாமே?

'எத்தனை திமிரும் துணிவும் இருந்தால் அவ்வளவு பெரிய கூட்டத்தில் எனக்கு முன்பே என்னைப் பற்றிக் கேலி செய்து சிரிக்க முடியும்?' என்ற நினைத்தபோது உள்ளங்கையையும் புறங்கையையும் போல் ஒரே நினைவின் இரண்டு பக்கங்களாக அவனுடைய திமிர் என்ற ஒற்றை ஞாபகத்தைப் பொருளாக வைத்துக் கொண்டு அவளுள் வெறுப்பும் எழுந்தது. அன்பும் மலர்ந்தது. அந்த முரட்டுத்தனத்துக்காகவே அவனை வெறுக்க வேண்டும் போலவும் இருந்தது. அதற்காகவே அவனைக் காதலிக்க வேண்டும் போலவும் இருந்தது.

சீனியர் மாணவனான தண்டபாணியைப் பற்றி அவள் நிறையக் கேள்விப் பட்டிருந்தாள். ஓயாமல் சிகரெட் பிடிப்பானாம். வகுப்பு அறைகளில் கூட சில ஆசிரியர்களை அழ அழ வைத்திருக்கிறானாம். அது ஆண்களும் பெண்களும் சேர்ந்து படிக்கும் கல்லூரியாதலால் அங்கே சில பெண் விரிவுரையாளர்களும் உண்டு. ஒரு நாள் புதிதாக வந்திருந்த ஒரு பெண் விரிவுரையாளரின் வகுப்பில் தண்டபாணி சிகரெட் பற்ற வைத்ததாகப் பிரின்ஸிபாலிடம் விண்ணப்பித்துக் கொண்டார்கள். அவன் அப்படிச் செய்ததும் உண்மை. ஆனாலும் பிரின்ஸிபால் மாணவர்களைக் கூப்பிட்டு விசாரித்தபோது அந்த வகுப்பின் எல்லா மாணவர்களும் 'தண்டாபாணி வகுப்பில் சிகரெட்டைக் கையால் தொடக்கூட இல்லை' என்று உறுதி கூறினார்கள். அவனை விட்டுக் கொடுக்காமல் காப்பதில் சக மானவர்களுக்குள் அவ்வளவு ஒற்றுமை. குற்றச் சாட்டுக்களுக்காக அவற்றின் எண்ணிக்கையைக் கொண்டு விழாக் கொண்டாடலா மென்றால் இரண்டு பொன் விழாக் கொண்டாட முடிந்த அவ்வளவு குற்றச் சாட்டுகள் தண்டபாணியின்மேல் இருந்தன. அவன் எதிலாவது எப்போதாவது வகையாக மாட்டிக் கொண்டால் உடனே அவனை 'டிஸ்மிஸ்' செய்து காலேஜிலிருந்து வெளியே அனுப்புவதற்குத் தயாராக இருந்தார் பிரின்ஸிபால். கல்லூரியிலேயே தலை சிறந்த பேச்சாளன்; நன்றாகப் பாடுவான்; கல்லூரி ஆண்டு மலரில் அவனுடைய சிறந்த கட்டுரைகளும் கவிதைகளும் நிரம்பியிருக்கும். இருந்தாலும் இத்தனை சாமர்த்தியங்கள் சேர்ந்தும் கல்லூரியில் மாணவிகளிடமும் ஆசிரியர்களிடமும் அவன் காலிப் பயலாகவும் சண்டியாகவுந்தான் பெயரெடுத்திருந்தான்.

வலக்கண் புருவத்தின் மேலே கறுப்புத் திராட்சைக் குலை சரிந்ததுபோல் சரிந்துவிழும் கிராப்பும், அந்த முகமும், அரும்பு மீசையும், 'எவனாயிருந்தால் எனக்கென்ன? நான்தான் ராஜா' என்பது போல் சிரிக்கும் அந்தச் சிரிப்பும், ஆட்களை அடிமைப்பட வைக்கிற அந்தக் குரலும் இயற்கையாக வரும் அந்த நகைச்சுவையும் ஞாபகம் வந்து ஞாபகம் வந்து செங்கமலத்தைத் தூங்க விடாமல் செய்து கொண்டிருந்தன. இப்படி அவள் தூங்காமல் தவித்துக் கொண்டிருந்த நேரத்தில் யாரோ கதவைத் தட்டினார்கள். எழுந்திருந்து போய்க் கதவைத் திறந்தால் கல்லூரி விடுதிப் பணிப்பெண் நின்று கொண்டிருந்தாள்.

"யாரோ உங்க ஹைஸ்கூல் காலத்துத் தோழியாம்! உங்களோட போன்லே பேசணுமாம்?"

"ஹைஸ்கூல் தோழியா? நல்ல ஹைஸ்கூல் தோழி வந்தாள்! இராத்திரி பத்து மணிக்கு மேலேயா இவளுக்கு என் ஞாபகம் வர வேணும்?" என்று வேண்டா வெறுப்பாகச் சொல்லிக் கொண்டே 'டெலிபோன்' இருக்கிற இடத்தை நோக்கி நடந்தாள் செங்கமலம். போய் டெலிபோனைக் கையிலெடுத்து 'யார்? செங்கமலம் பேசுகிறேன்' என்று பேச்சை ஆரம்பித்தால் எதிர்ப்பக்கத்திலிருந்து ஒரு விநாடி குரலே இல்லை. அடுத்த விநாடி ஆண்குரல் - அந்தத் தடியன் தண்டபாணியின் குரல் ஒலித்தது.

"நான்தான் தண்டபாணி பேசுகிறேன். முதலிலே யாரோ வேலைக்காரி டெலிபோனை எடுத்தாள். அல்லியரசாணிக் கோட்டை மாதிரி இருக்கிற உங்கள் லேடீஸ் ஹாஸ்டலிலே இராத்திரி பத்து மணிக்கு மேலே நான் ஆண் குரலிலே பேசினால் விடுவார்களா? அதனாலே ஒரு தந்திரம் பண்ணினேன். குரலைப் பெண்கள் பேசுகிற மாதிரி மாற்றிக் கொண்டு உன் ஹை ஸ்கூல் காலத்துத் தோழியாக மாறி உன்னோடு உடனே பேசியாக வேண்டுமென்றேன்."

"நான்ஸென்ஸ், வெட்கமாயில்லை. உங்களுக்கு?" என்று கடுமையாகக் கேட்டுவிட்டு எதிர்ப்பக்கத்தில் காது உடைவதுபோல் கேட்கும்படி டெலிபோனை 'ணங்' கென்று வைத்துவிட நினைத்தாள் அவள். ஆனால் அப்படி மூஞ்சியில் அடித்தாற்போல் வைத்துவிடவும் மனம் வரவில்லை. இந்த அர்த்தராத்திரி வேளையில் அவன் தனக்கு எதற்காக டெலிபோன் செய்தான் என்று தெரிந்து கொள்ள வேண்டும் போலவும் ஆசையாக இருந்தது. பக்கத்தில் கூட யாரும் இல்லை. விடுதிப் பணிப்பெண் வேறு எங்கோ போயிருந்தாள். செங்கமலமும்; டெலிபோனும் அந்த இடத்தில் போனுக்காக எரிந்து கொண்டிருந்த மங்கலான மின்சார விளக்கும் இரவும் அமைதியும் தவிர அந்தப் பிரதேசம் தனிமையாக இருந்தது.

டெலிபோனில் எதிர்ப்புறமிருந்து குரல் குழைந்தது. "நான் பேசுகிறது பிடிக்கவில்லை போலிருக்கிறதே!"

"பேசுவதற்கு இன்னும் என்ன மீதம் வைத்திருக்கிறீர்கள்? அதுதான் பேச வேண்டியதை எல்லாம் சாயங்காலம் கூட்டத்தில் பேசிவிட்டீர்களே!"

"அதெல்லாம் சும்மா தமாஷ். ஏதோ கூட்டத்திற்குச் சிரிப்பு மூட்ட வேணும் என்பதற்காகச் சொன்னதை எல்லாம் பெரிதாக நினைத்து மனசிலே வைக்கக் கூடாது. நானே கூட்டம் முடிந்ததும் உன்னைப் பார்த்து மன்னிப்புக் கேட்க நினைத்திருந்தேன். நீ விடுவிடென்று புறப்பட்டுப் போய்விட்டாய்."

"உங்களுக்கென்ன? ஜெயித்த கட்சிக்காரர்கள் எதை வேண்டுமென்றாலும் எப்படி வேண்டுமென்றாலும் இப்போது மாற்றிச் சொல்லிக் கொள்ளலாம்."

"தப்பு. உண்மையிலேயே நீதான் ஜயித்த கட்சிக்காரி. நீல நிறத்தில் வெள்ளைக் பூப்போட்ட வாயில் புடவையோடு மேகத்தைச் சுற்றிக்கொண்டு மின்னல் வந்து நின்ற மாதிரி நீ மேடையில் நின்று பேசியபோது நான் முதலில் உன்னுடைய அழகுக்குத் தோற்றுப் போனேன் என்ற இரகசியம் உனக்குத் தெரியுமோ செங்கமலம்? உன்னுடைய அழகுக்குத் தோற்ற பின்பு அந்த இரகசியத் தோல்வியினால் நான் பெற்ற விழிப்புதான்

பேச்சில் எனக்கு முழு வெற்றியைக் கொடுத்தது. கேலி செய்தால்கூட அந்தக் கேலி உன்னைப் பற்றியதாயிருக்கிறது என்ற பெருமிதத்தினால் தான் கம்பீரமாக நிமிர்ந்து நின்று பேசினேனாக்கும்!"

"செய்வதையும் செய்துவிட்டு இப்போது அதற்கு இப்படி ஒரு விளக்கமா?"

"இன்று நீ எவ்வளவு அழகாகக் காட்சியளித்தாய் என்று நினைத்து நினைத்து அந்த நினைப்பின் ஏக்கத்திலேயே சிறிது நேரத்திற்கு முன் நான் ஒரு கவிதை இயற்றியிருக்கிறேன், செங்கமலம்! அதைப் பாடிக் காட்டுவதற்குத்தான் இந்த அகால வேளையில் உன்னை டெலிபோனில் கூப்பிட்டேன்."

"நான்ஸென்ஸ்! வெட்கமாயில்லை, உங்களுக்கு?"

இப்போதும் இப்படிச் சொல்லிச் சீற்றத்தோடு டெலிபோனை வைக்க நினைத்து அவளால் அப்படிச் செய்ய முடியாமல் போய்விட்டது. காரணம்? அந்தக் கவிதையில் அவன் என்ன தான் பாடியிருப்பான் என்று அறிந்து கொள்ளும் ஆவல் செங்கமலத்தைத் தடுத்தது.

"கவிதை மிக அழகாக வாய்திருக்கிறது செங்கமலம்! அதை இப்போதே உன்னிடம் பாடிக் காட்டாவிட்டால் எனக்குப் பைத்தியம் பிடித்துவிடும் போலிருக்கிறது!"

"நீங்கள் கடைசியாகச் சொன்னது உங்களுக்கு இனிமேல்தான் பிடிக்க வேண்டுமா என்ன?"

"இல்லை! உன்னைப் பார்த்த முதல் விநாடியிலிருந்தே பிடித்துவிட்டது, செங்கமலம்! பாட்டைப் படிக்கிறேன், கேள்!"

செங்கமலம் அவனுக்குப் பதில் சொல்லுவதற்குள் விடுதிப் பணிப்பெண் அருகே வந்துவிட்டாள்.

"என்னம்மா இது? முக்கால் மணி நேரமாக டெலிபோனைக் கீழே வைக்காமல் பேசிக் கொண்டேயிருக்கீங்களே!' ஹை ஸ்கூலிலே விட்டுப் பிரிஞ்சப்புறம் நீங்களும் உங்க தோழியுமா பரஸ்பரம் வாழ்க்கை வரலாற்றையே போனிலே பேசிடுவீங்க போலிருக்கே!" என்று கேட்டுச் சிரித்தாள் அந்தப் பணிப் பெண். செங்கமலத்தின் நிலை தர்மசங்கடமாகிவிட்டது. டெலிபோனில் எதிர்ப்புறமிருந்து பேசுகிறவருடைய குரல் ரீஸீவரையும் மீறி வெளியே கேட்க முடிந்த அளவு அருகில் வந்து நிற்கிறாள் விடுதிப் பணிப்பெண். தண்டபாணியோ டெலிபோனில் கவிதை பாட ஆரம்பித்துவிட்டான்.

"கருமேகக் காட்டினிலே - நீ ஓர்

கனக மின்னலடீ!..."

பணிப் பெண்ணைத் தன் பக்கத்தில் நிற்க விடாமல் செய்வதற்காகக் குடிக்கத் தண்ணீர் வேண்டுமென்பது போல் ஜாடை காட்டினாள் செங்கமலம். பணிப்பெண் தண்ணீர் கொண்டு வருவதற்காகப் போனாள். அவள் தலை மறைந்ததோ இல்லையோ, செங்கமலம் டெலிபோனில் சீறினாள். இல்லை; சீறுவதுபோல் ஆரம்பித்துச் சாதாரணமாகவே பேசினாள்.

"மிஸ்டர் தண்டபாணீ! உங்களைத்தானே? ஹல்லோ! பாடுவதை நிறுத்துங்கள். உங்களுக்குக் கோடி புண்ணியமாகப் போகிறது. உங்களுடைய அருமைக் கவிதையை அழகாக ஒரு தாளில் எழுதிக் கண்ணாடிச் சட்டம் போட்டு வேண்டுமானால் கொடுங்கள்; படித்துக் கொள்கிறேன். இப்படி அர்த்த ராத்திரியில் உயிரை வாங்காதீர்கள்" என்று கடுமையாக நினைத்துச் சொல்லாக வெளிவரும்போது நினைப்பிலிருந்த கடுமை சரிபாதி தவிர்ந்துபோய்ச் சமாதானமாகப் பேசுவது போலவே அவனிடம் பேசி டெலிபோன் ரீஸிவரை வைத்தாள் செங்கமலம். இப்போதும் எந்தக் காரணத்துக்காக அவனை வெறுக்க வேண்டுமென்று தோன்றியதோ அதே காரணத்துக்காகவே அவனைக் காதலிக்க வேண்டும் போலவும் தோன்றியது அவளுக்கு.

அறைக்குத் திரும்பிப் போகும்போது 'கருமேகக் காட்டினிலே நீ ஓர் - கனக மின்னலடீ' என்று மெல்ல முணுமுணுப்பதுபோல் தனக்குத் தானே சொல்லிப் பார்த்துக் ரெகண்டாள் அவள். 'மின்னலடீ என்று அடி போட்டுப் பாடியிருக்கிறானே! இந்த முரடனுக்கு எத்தனை துணிச்சல்!' என்று எண்ணிய போது எரிச்சலாகவும் இருந்தது. அடுத்த கணமே அப்படிப் பாடியிருப்பதிலுள்ள முரட்டுத்தனத்தையே எதற்காகவோ இரசிக்க வேண்டும் போலவும் இருந்தது. செங்கமலம் அன்றிரவு படுக்கையில் படுத்துப் போர்வையால் போர்த்திக் கொண்டு தூங்கினாள் என்பதற்குப் பதில் நளினமான நினைவுகளையே போர்த்துக் கொண்டு தூங்கினாள் என்று வருணிப்பதுதான் மிகவும் பொருத்தமாக இருக்கும்.

என்ன ஆச்சரியம்! மறுநாள் காலை அவள் சொன்னபடியே செய்துவிட்டான் தண்டபாணி. முதல் பாடவேளையின்போது வெளிவராந்தாவின் பக்கமாக நடந்து தண்ணீர் குடிக்கப் போய்க் கொண்டிருந்த செங்கமலத்தைக் கைத் தட்டிக் கூப்பிட்டு, "இந்தா, நீ சொன்னபடியே செய்துவிட்டேன்!" என்று படம் போல் சட்டமிட்டுக் காகிதத்தில் கட்டிய ஒரு பொட்டலத்தை அவளிடம் நீட்டினான். தண்டபாணி அதை அவளிடம் கொடுக்கும் போது அவனோடு அரட்டையிலும் விடலைத்தனத்திலும் பெயர் பெற்ற இரண்டு மூன்று மாணவர்களும் சிரித்தபடி கூட நின்றார்கள். மின்னல் மின்னுகிற நேரத்தில் அதை அவள் கையில் கொடுத்துவிட்டு அவன் போய்விட்டான். அதைக் கையில் வைத்துக் கொண்டு வகுப்புக்குள்ளும் போக முடியாமல் வெளியிலேயும் போக முடியாமல் செங்கமலம் திண்டாடினாள். ஒரு முழு 'புல்ஸ்கேப்' தாளைக் கண்ணாடிச் சட்டம் போட்டால் எவ்வளவு பெரிதாயிருக்குமோ அவ்வளவு பெரிதாயிருந்த அந்தப் படத்தை எடுத்துக் கொண்டு வகுப்புக்குள் போனால் மானம் போய்விடும். ஹாஸ்டலுக்குப் போய் வைத்துவிட்டு வரலாமென்றால் வகுப்பில் அதற்குள் பாடம் ஆரம்பமாகிவிடும்.

தன்னை அவமானப்படுத்துவதற்காகவே சக மாணவர்களை ஜமா சேர்த்துக் கொண்டு வந்து தண்டபாணி அதை அங்கே தன்னிடம் கொடுத்துவிட்டுப் போயிருப்பதாகத் தோன்றியது அவளுக்கு. தன்னிடம் கொண்டு வந்து கொடுப்பதற்கு முன் தண்டபாணி அதை உடன் இருந்த மாணவர்களிடமும் படித்துக் காட்டிப்

பெருமைப்பட்டுக்கொண்டு வந்திருப்பானோ என்று நினைத்தபோது அவளால் தன் ஆத்திரத்தை அடக்கவே முடியவில்லை. வகுப்புக்குப் போகாவிட்டாலும் பரவாயில்லை! முதலில் இவனுடைய கொட்டத்தை ஒடுக்கிவிட்டுத்தான் மறுவேலை. இப்படி நினைத்தபோது தண்டபாணி என்ற இரசிகனை அவள் மறந்து போனாள். தண்டபாணி என்ற காலிப்பயல்தான் அப்போது அவளுக்கு நினைவிருந்தான். கையில் அந்தப் படத்தோடு நேரே ஹாஸ்டலுக்குப் போய் அறைக் கதவைத் திறந்து அதைப் படித்தால் என்ன என்று ஒரே ஒரு கணம் ஒரு சிறு எண்ணம் மனத்தின் ஒரு மூலையில் முளைத்து அங்கே மூண்டிருந்த ஆத்திரத்தை எதிர்த்து வளர முடியாமல் அங்கேயே கருகிவிட்டது.

அந்தப் படத்தோடு புயல் புகுந்ததுபோல் பிரின்ஸிபாலின் அறைக்குள் நுழைந்துவிட்டாள் செங்கமலம். பிரின்ஸ்பால் நிமிர்ந்து பார்த்தபோது கண்களில் நீர் முட்டி அழுதுவிடுவது போன்ற கோலத்தில் செங்கமலம் நின்றாள்.

படத்தைப் பிரித்துக் கொடுத்து விவரத்தையும் கூறியபோது பிரின்ஸிபால் எரிமலையாக மாறிவிட்டார்.

"நீ அழாதேம்மா! அந்தப் போக்கிரி தண்டபாணியை டிஸ்மிஸ் செய்து தீர்த்துக் கட்டி வெளியே அனுப்ப நானே சரியான குற்றச்சாட்டை எதிர்பார்த்துக் காத்துக் கொண்டிருக்கிறேன். இது போதும் எனக்கு, நீ போய் நிம்மதியாக வகுப்பில் உட்கார். நான் பார்த்துக் கொள்கிறேன். பயல் இன்றோடு தொலைந்தான்" என்று சொல்லிச் செங்கமலத்தைச் சமாதானப்படுத்தி அனுப்பினார் பிரின்ஸிபால்.

நன்றாகப் பழி வாங்கிவிட்ட திருப்தியோடு அவள் திரும்பவும் வகுப்புக்குள் வந்து உட்கார்ந்தபோது, "என்னடீ, அழுதாயா? கண்ணெல்லாம் சிவந்திருக்கிறதே!" என்று பக்கத்தில் உட்கார்ந்திருந்த பெண் கேட்டாள். செங்கமலம் அவளுக்குச் சரியாகப் பதில் கூறாமல் மழுப்பிவிட்டாள். நேரமாக ஆகச் செங்கமலத்துக்கு வகுப்பில் இருப்புக் கொள்ளவில்லை. தான் செய்த காரியம் சரிதான் என்று திருப்தியாகவும் இருந்தது. 'அநியாயமாக ஒரு தீரனைக் காலை ஒடித்து அனுப்பப் போகிறாய் நீ' என்று அவளுடைய மனச்சாட்சியே அவளை எதிர்த்துக் கேட்டதற்குத் 'தான் செய்தது சரியல்ல' என்று அதிருப்தியாகவும் இருந்தது. நிம்மதியின்றித் தவித்தாள் அவள். அங்கிருந்தால் பைத்தியமே பிடித்துவிடும் போலிருந்தது. அரைநாள் லீவு சொல்லிவிட்டு ஹாஸ்டலுக்குத் திரும்பிவிட்டாள் செங்கமலம். இடைவேளையின் போது ஹாஸ்டலுக்குச் சாப்பிட வந்திருந்த தோழி ஒருத்தி அவளுடைய அறையைத் தேடி வந்து சில விவரங்களைக் கூறி விட்டுப் போனாள்.

"நீ ஒன்றும் சொல்லாவிட்டாலும் தானாக எல்லாம் தெரிந்து விட்டதடீ செங்கமலம். பிரின்ஸிபால் சாயங்காலம் மூன்று மணிக்கு அந்தத் 'தண்டத்தை'த் தமது அறைக்கு வந்து தம்மைப் பார்க்கச் சொல்லியிருக்கின்றாராம். காலேஜ் பூராவும் இதே பேச்சுத்தான். அநேகமாகக் காலேஜிலிருந்தே 'டிஸ்மிஸ்' செய்துவிடுவார்களாம். ஆனால் அவன் என்னவோ சிறிதுகூடக் கவலைப்படாமல் வழக்கம்போல் சிரித்துப்

பேசிக்கொண்டுதான் இருக்கிறான். இன்னொன்றுகூடக் கேள்விப்பட்டேன். அவன் உன்னிடம் கொடுத்தானே அந்தக் கண்ணாடிச் சட்டத்துக்குள் எழுதி வைத்திருக்கிற கவிதையில் அவனுடைய கையெழுத்தே இல்லையாமே? எழுத்து அச்சுக் குண்டாக இருக்க வேண்டும் என்பதற்காக யாரோ சிநேகிதனை விட்டு வெறும் கவிதையை மட்டும் 'காப்பி' பண்ணச் சொல்லி அதை அப்படியே சட்டம் போட்டு உன்னிடம் கொடுத்துவிட்டானாம். அதனால் பிரின்ஸிபால் தன்னைக் கூப்பிட்டு விசாரிக்கும் போது. 'இதை நான் எழுதவுமில்லை. கொடுக்கவும் இல்லை' என்று ஒரேயடியாகப் புளுகிவிட்டுத் தப்பித்துக் கொள்ளலாமென்றுதான் அவன் சிறிதும் கவலைப்படாமல் சிரித்துப் பேசிக் கொண்டிருக்கிறான் என்றும் ஒரு வதந்தி நிலவுகிறது. அவன் அப்படிச் செய்தாலும் ஆச்சரியப்படுவதற்கு இல்லையடியம்மா! எமகாதகனாச்சே?" என்று தோழி சொல்லிக் கொண்டே வந்தபோது அவள் கடைசியாகக் கூறிய வதந்தியைக் கேட்டுச் செங்கமலத்துக்கே ஆறதலாக இருந்தது. 'பெண்ணையும் சபலத்தையும் ஒரே மூலப் பொருளிலிருந்துதான் செய்திருக்கிறார்கள்' என்ற வாக்கியத்துக்கு அப்போது பிரத்தியட்ச உதாரணமாக இருந்தாள் செங்கமலம். ஏதோ ஓர் ஆத்திரத்தில் தன்னைக் கட்டுப்படுத்திக் கொள்ள முடியாத வெறியோடு அந்தப் படத்தையும் அதில் அடங்கியிருந்த கவிதையையும் அதைப் படித்துப் பார்க்காமலே பிரின்ஸிபாலிடம் கொண்டுபோய்க் கொடுத்துப் புகார் செய்துவிட்டு வந்திருந்தாலும், இப்போது அவள் மனம் கிடந்து தவித்தது. தாறுமாறாக ஏதேனும் நடந்து தண்டபாணி அந்தக் கல்லூரியை விட்டு வெளியேறும்படி ஆகிவிடக் கூடாதே என்று புழுவாகத் துடித்தது அவள் அந்தரங்கம்! செங்கமலம் தன்னைத் தேடி வந்த தோழியைக் கேட்டாள். "நிஜமாகவா அப்படிப் பேசிக் கொள்கிறார்கள்? அதில் அவர் கையெழுத்தே கிடையாதா?"

"ஏன்? உனக்குத் தெரியாதா? நீ அதைப் படித்தே பார்க்கவில்லையா, செங்கமலம்?"

"இல்லை! அப்படியே கொண்டுபோய்க் கொடுத்துவிட்டேன்."

"எப்படிக் கொடுத்திருந்தால் என்னடீ? அவன் அதிருஷ்டக்காரன்! அவனை இந்தப் பழியிலிருந்து காப்பாற்ற வேண்டுமென்பதற்காக இந்தக் கல்லூரியிலேயே இன்னும் யாராவது ஒரு மாணவன், 'தண்டபாணிக்கு ஒரு பாவமும் தெரியாது. அந்தக் கவிதையை எழுதியவன் நான்தான் ஸார்' என்று குற்றத்தைத் தன் தலையில் ஏற்றுக்கொண்டு தியாகம் செய்தால்கூட ஆச்சரியப் படுவதற்கில்லை. மாணவர்கள் மத்தியிலே அவ்வளவு செல்வாக்கு இருக்கிறது அவனுக்கு. அவன் 'டிஸ்மிஸ்' ஆனாலோ நாளைக்குக் காலையிலேயே அத்தனை மாணவர்களும் வேலை நிறுத்தம் அது இது என்று கலகம் பண்ணக்கூட ஆரம்பித்து விடுவார்கள். இப்போதே கல்லூரியில் அத்தனை மாணவர்களும் உன் தலையை உருட்டுகிறார்கள். 'எல்லாம் அந்தக் கிளியோபாட்ராவின் வேலை' என்று என் காதில் கேட்கும்படியாகவே ஒருத்தன் உன்னைப் பற்றிச் சொல்லிக் கறுவிக் கொண்டு போனான்."

செங்கமலம் யோசித்தாள். 'கருமேகக் காட்டினிலே நீ ஓர் கனக மின்னலடீ' என்று அந்த முரடனின் இனிய குரல் இன்னும் அவள் செவிகளில் ஒலிப்பது போலிருந்தது.

திரும்பிப் போய்ப் பிரின்ஸிபாலைச் சந்தித்துத் தானே தன்னுடைய புகாரையும் அந்தக் கவிதையையும் வாபஸ் வாங்கிக்கொண்டு வந்துவிடவேண்டும் என்று நினைத்து, "அப்படிச் செய்வதும் இனிமேல் சாத்தியமில்லையே" என ஆற்றாமையோடு மனம் புழுங்கினாள் அவள். "எப்படியும் அவன் தப்பித்துக் கொள்வான் அல்லது யாராவது ஒரு மாணவன் பழியைத் தான் ஏற்றுக் கொண்டு அவனைத் தப்பச் செய்து விடுவான்" என்று வந்திருந்த தோழி உறுதியாகச் சொன்னாள்.

மூன்று மணிக்கு விசாரணையின்போது பிரின்ஸிபால் அவளையும் கூப்பிட்டனுப்பிவிட்டார். பிரின்ஸிபால் அறை வாசலில் கல்லூரி மாணவ மாணவிகள் திருவிழாக் கூட்டம் போல் கூடிவிட்டார்கள்.

உள்ளே பிரின்ஸிபால், வைஸ் பிரின்ஸிபால், தண்டபாணி, செங்கமலம் - நான்கு பேருமே இருந்தனர். பிரின்ஸிபாலின் மேஜைமேல் முத்து முத்தாக 'இண்டியன் இங்கி'ல் எழுதிச் சட்டம் போட்ட அந்தக் கவிதையும் இருந்தது. செங்கமலம் அதற்கு மிக அருகில் அதைப் படிக்க முடிந்த தொலைவில் தான் நின்று கொண்டிருந்தாள். அவளுடைய கண்கள் கலங்கியிருந்தன. இன்னொரு பக்கம், வைஸ் பிரின்ஸிபாலின் மேஜைக்கு நேரே குற்றவாளியாகக் கொண்டு வந்து நிறுத்தப்பட்டிருந்த தண்டபாணியோ, ஸ்லாக் ஷர்ட்டின் காலரைக் கடித்தபடி குறும்புச் சிரிப்போடு நின்று கொண்டிருந்தான். அவனைப் பார்த்தால் குற்றவாளி நிற்கிற மாதிரி பாவனையே இல்லை. மத்தியானம் இடைவேளையின்போதுதான் புதிதாக மாற்றிக் கொண்டு வந்த மாதிரி புதுப் பாண்ட், புது ஸ்லாக், அலை அலையாக வகிடெடுத்து வாரிய கிராப். சிரிப்பு உறங்கும் ஏளனமான பார்வை, ராஜா நிற்பது போல் கம்பீரம் - எல்லாம் வழக்கம் போலவே இருந்தன. பிரின்ஸிபாலும் வைஸ் பிரின்ஸிபாலுந்தாம் அவனுக்கு முன்னால் குற்றவாளிகள் உட்கார்ந்திருப்பதுபோல் பயந்துபோய் உட்கார்ந்திருந்தனர். அவன் நின்ற நிலை செங்கமலத்துக்கும் பெருமையாயிருந்தது. 'ராஜா! நீங்கள் எப்படியும் தப்பித்துக் கொண்டு விடுவீர்கள்' என்று அப்போது அவனை நினைத்துத்தான் கண் கலங்கிக் கொண்டிருந்தாள் அவள். ஆனால் அவள் அவனை நினைத்துக் கண் கலங்குகிறாள் என்பது அங்கே யாருக்குப் புரியப் போகிறது?

விசாரணை ஆரம்பமாயிற்று. பிரின்ஸிபாலின் இடிமுழக்கக் குரலின் ஒலி கணீரென்று ஒலிக்க ஆரம்பித்தது. "மிஸ்டர் தண்டபாணி!"

"யெஸ் ஸார்."

"நான் கேட்கப் போகிற கேள்விக்குப் பதில் சொல்."

"சரி ஸார். சொல்கிறேன்."

"இந்தக் கவிதையை நீயே எழுதிச் சட்டம் போட்டுச் செங்கமலத்திடம் இன்று காலை நீ நேரில் கொடுத்தாய் அல்லவா?"

"சந்தேகம் இல்லாமல் நிச்சயமாக நானே எழுதி நானே கடைக்குப் போய் நானே பக்கத்திலிருந்து சட்டம் போட்டுக் கட்டிக் கொண்டு வந்து இவளிடம் கொடுத்தேன் ஸார். அப்புறம்?"

அவன் பதிலைக் கேட்டுச் செங்கமலம் அப்படியே அயர்ந்து போனாள்! அவளுக்குத் தலை சுற்றியது. அவள் நினைத்ததற்கு நேர்மாறாக எல்லாம் முடிந்துவிட்டது.

"ஆல் ரைட்! நீங்கள் ரெண்டு பேரும் போகலாம்."

எல்லாம் சுருக்கமாக முடிந்துவிட்டது. தண்டபாணி சிரித்துக் கொண்டே போய்விட்டான்.

மறுநாள் தண்டபாணியை 'டிஸ்மிஸ்' செய்துவிட்டதாகக் காலேஜ் விளம்பரப் பலகையில் அறிக்கை தொங்கியது. செங்கமலம் அன்று கல்லூரி வகுப்புக்கே போகவில்லை. காலையிலிருந்து ஒரே தலைவலியும் ஜுரமுமாகப் படுத்திருந்தாள்.

பகல் பன்னிரண்டரை மணிக்கு விடுதிப் பணிப்பெண் வந்து, "நேற்று இராத்திரி கூப்பிட்டார்களே, அதே ஹைஸ்கூல் தோழி உங்களோடு பேச வேண்டுமென்று டெலிபோனிலே கூப்பிடுகிறார்கள் அம்மா. உங்களுக்கு உடம்பு சரியில்லையென்று சொல்லிவிடட்டுமா? நீங்களே வந்து பேசப்போகிறீர்களா?" என்று கேட்டாள்.

செங்கமலம் போர்வையை உதறிவிட்டுப் படுக்கையிலிருந்து எழுந்து ஓடினாள்.

"செங்கமலம் பேசுகிறேன்..."

"கருமேகக் காட்டினிலே - நீ ஓர் கனக மின்னலடீ...." என்று எதிர்ப்புறத்திலிருந்து பாட்டுக் கேட்டது.

செங்கமலம் டெலிபோனில் அழுதே விட்டாள்; "நீங்கள் அதை ஒப்புக் கொண்டிருக்கக் கூடாது. அதில்தான் உங்கள் கையெழுத்தே இல்லையே! நான்தான் ஏதோ ஆத்திரத்தில் புத்தி கெட்டுப்போய் அதைக் கொண்டு போய்க் கொடுத்து விட்டேனென்றால் நீங்களுமா அப்படி உண்மையைச் சொல்ல வேணும்?"

"பொய் சொல்லித் தப்பித்துக் கொள்ளலாம் செங்கமலம். ஆனால் அந்தப் பாழாய்ப் போன காலேஜிலே ஐயா ஒருத்தரைத் தவிர வேறே எந்த முட்டாளுக்கும் அத்தனை அழகாகக் கவிதை எழுதத் தெரியாதே, நீ என்ன நினைக்கிறே?"

செங்கமலம் டெலிபோனைக் கீழே வைத்தபோது அவள் கண்களிலிருந்து மளமளவென்று நீர் பெருகியது. எதற்காக அவனை வெறுக்க வேண்டுமென்று தோன்றியதோ, அதற்காகவே அவனைக் காதலிக்க வேண்டும் போலவும் தோன்றியது அவளுக்கு. ஆனால் இனிமேல் அப்படித் தோன்றித்தான் என்ன பிரயோசனம்?

**(கலைமகள், தீபாவளி மலர், 1963)**

## 92. 'செக்ஸ் அப்பீல்'

'**அ**றவிளக்கு' பத்திரிகை மிகவும் கௌரவமான குடும்பப் பத்திரிகை என்று பெயர் பெற்று, அந்தக் கண்ணியமான பெயரைக் கடந்த கால் நூற்றாண்டுக் காலத்துக்கும் மேலாகத் 'தமிழ்நாட்டு ஆஸ்தீகப்' பெருமக்களிடமும் 'உயர்ந்த' குடும்பப் பெண் மக்களிடமும் நிலைத்த விதத்தில் காப்பாற்றிக் கொண்டு வந்திருக்கிறது. அதன் ஆசிரியர் உயர்திருவாளர் சிவகாமிநாதன் அவர்கள் 'கௌரவமான குடும்பப் பத்திரிகை என்பதற்கு ஏதாவது இலக்கணம் வேண்டுமானால் நாங்கள் வெளியிட்டுக் கொண்டிருக்கிற 'அறவிளக்கு' மாத இதழைப் பாருங்கள்; கௌரவத்துக்கும் கண்ணியத்துக்கும் எடுத்துக்காட்டாக அதை நாங்கள் நடத்திக் கொண்டு வருகிறோம்; 'அறவிளக்கில்' வருகிற எந்தக் கதையைப் பற்றியும் நீங்கள் உங்கள் தாயுடனும் சகோதரியுடனும்கூடத் தாராளமாகப் படித்துப் பேசி விவாதிக்க முடியும்; உங்கள் தாயுடனோ, சகோதரியுடனோ நீங்கள் பேசி விவாதிக்கக் கூசுகிற எந்த விஷயத்தையும் நாங்கள் 'அறவிளக்கில்' வெளியிடுவதேயில்லை' என்று அடிக்கடி (தற்) பெருமையோடு சொல்லிக் கொள்வார். நெற்றியில் பட்டை பட்டையாகத் திருநீறு பூசி அதன் நடுவே குங்குமத் திலகமும் இலங்க, அரையில் கச்சம் கட்டிய கோலமும் வங்காளிகளைப் போல் ஜிப்பாவின் மேல் யோக வேஷ்டியாக அங்கவஸ்திரத்தை வலது தோளுக்கும் இடது இடுப்புக்குமாய்க் குறுக்கே போர்த்திய தோற்றத்தில் 'அறவிளக்கு' ஆசிரியரை நீங்கள் நேரில் சந்தித்தீர்களானால் அப்படியே அயர்ந்து போவீர்கள். அவரோடு போனால் போகிறதென்று ஒரு பத்து நிமிஷம் பேசிக் கொண்டிருந்தீர்களோ இன்னும் நிச்சயமாய் அயர்ந்து போவீர்கள்! 'காதல்' என்கிற தமிழ் வார்த்தையே 'சீப்' (மட்டம்) என்பார் அவர்.

"வர வர 'ரைட்டர்ஸ்' எல்லாம் 'அஃப்ஸீனா' (ஆபாசமாக) எழுதறதுன்னே கங்கணம் கட்டிண்டிருக்கா போலத் தோன்றது... பல புதுப் பத்திரிகைகள் எல்லாம் 'செக்ஸ் அப்பீலா'ப் படம் போட்டுச் சின்னஞ்சிறுசுகளைக் குட்டிச் சுவராக்கறதுக்குன்னே தலையெடுத்திருக்கு... பொது இடத்திலே கையிலே வச்சுண்டு பிரிச்சுப் படிக்கறதுக்குக் கூசணுங்கிற மாதிரி எல்லாம் படம் வரைய ஆரம்பிச்சுட்டா... 'அறவிளக்கிலே' நாங்க இந்த 'ஸ்டண்ட்' எல்லாம் பண்றதில்லே. நம்ம தர்மம் என்ன? பக்தி என்ன? எல்லாத்தையும் காத்திலே பறக்க விட்டுப் பிட்டு... மத்தவாளைப் போல 'சீப்பா' எறங்குறதுக்கு நான் ஆசைப்படலே..." என்பார்.

'நம்ம ஜனங்களுக்கு நோபிள் அவுட் லுக்கே' இல்லாமப் போயிடுத்து ஸார்! பாருங்கோ... இந்தப் பத்திரிகையிலே இதோ... அட்டையிலே ஒரு பெண்ணைப் போட்டிருக்கானே; ... பானை பானையா... ரெண்டு மார்பைப் போட்டிருக்கான்...

இப்பிடி நீரும் நானும்... பார்க்கற உலகத்திலே யாருக்கு சுவாமி இருக்கு? வேணும்னே... 'ஸெக்ஸ் அப்பீலு'காகத்தானே... இதெல்லாம் பண்றான்?

"கசங்காத மொட்டு, மஞ்சத்திலே ஒரு சிங்காரி, கணவனின் காதலி, மனைவியின் காதலன் என்றெல்லாம் பெயர் வைத்துப் புத்தகங்கள் போட்டு விற்கறா...! இப்படியே போயிட்டிருந்துதோ... பிஞ்சு மனசுகள்... பாழாய்ப் போயிடும்..."

இப்படியெல்லாம் பேசுவதையோ, குறைப்பட்டுக் கொள்வதையோ, கேட்டு அறவிளக்கு ஆசிரியர் ஆசிரியர் நாதன் அவர்களை 'ஒழுக்கச் சீலர்' என்றோ, கடுமையான 'டிஸிப்ளினேரியன்' என்றோ தீர்மானமாகச் சொல்லிவிட முடியாது. 'யார் யாருக்கு எது எது பற்றாக்குறையோ அதைப் பற்றி மிகவும் வற்புறுத்திப் பேசிக் கொண்டிருப்பார்கள்' என்பது போலத் தம் சொந்தப் பலவீனத்தை மறைத்துக் கொள்ளவும்கூட அவர் இப்படி வாய் ஓயாமல் அரற்றிக் கொண்டிருக்கலாம். இந்த நாட்டின் எல்லா முதலாளித்துவப் பத்திரிகைகளையும் போல் அறவிளக்கும் 'புராக்ரஸி' (அதிகார வர்க்கத்தின்) ஆட்சியில் சிக்கிக் கொண்டிருந்த ஓர் இரண்டுங்கெட்டான் பத்திரிகைதான். அந்தப் பத்திரிகையின் முதலாளிக்கு எத்தனையோ கம்பெனிகள். ஓர் உரத் தயாரிப்புக் கம்பெனி, இரண்டு பஞ்சாலைகள், ஒரு சிமெண்ட் தயாரிக்கும் தொழிற்சாலை இவ்வளவோடு தர்மத்தையும் காப்பதற்காக, அவர் 'அறவிளக்கை' நடத்திக் கொண்டிருந்தார். அந்த முதலாளியின் தொழில் நிறுவனங்களில் அவர் மானேஜிங் டைரக்டர். அவருடைய மச்சினன் ஒரு டைரக்டர், தம்பி எக்ஸிகியூடிவ் டைரக்டர், மாப்பிள்ளை ஒரு டைரக்டர், கடைசியாக அவருடைய அத்தை பிள்ளை ஒரு டைரக்டர். பத்திரிகை நிர்வாகமும் அதேமாதிரித் தான் நடைபெற்று வந்தது. சிவகாமிநாதன் அதற்கு நிர்வாக ஆசிரியர். முதலாளிகளுக்கு நஷ்டம் ஏற்பட்டுவிடாமல் 'அறவிளக்கை' ஓட்டிக் கொண்டு போகிற தந்திரம் அவர் ஒருவருக்குத்தான் தெரிந்திருந்தது என்பதாலோ, அல்லது யாராவது செய்ய வேண்டிய காரியத்தை அவர்தான் செய்து தொலைக்கட்டுமே என்ற அலட்சிய மனப்பான்மையினாலோ பத்திரிகையை அவரிடம் விட்டிருந்தார்கள். 'குடும்பப் பத்திரிகை' என்று அதன் கண்ணியத்தையும், கௌரவத்தையும் நிலைநாட்டுவதற்காகச் சிவகாமிநாதன் அதைக் குறிப்பிட்டுச் சொல்லிக் கொண்டு வந்த பெயரை உள்ளூர்க் 'கிரிடிக்'குகளும், குறும்பர்களுமாகிய சிலர் 'மச்சினன், மாப்பிள்ளை, தம்பி, ஆகிய குடும்ப உறுப்பினர்களே நிர்வாகம் செய்யும் பத்திரிகை என்று விநோத வியாக்கியானம் செய்து சிரித்துக் கொண்டிருந்தார்கள். 'சிவகாமிநாதன்' ஒரு மாதிரி மனிதர். 'ஸ்நாபெரி' (தன்னைத்தானே பகட்டாக உயர்த்திப் பேசிக் கொள்ளுதல்) என்பார்களே, அந்தக் குணம் அல்லது குற்றம் அவரிடம் உண்டு. தம்மைச் சமூகமும் மற்றவர்களும் நிஜமாகவே ஒரு கௌரவமான மனிதனாகவோ, ஆஸ்தீகனாகவோ, கர்மசீலனாகவோ, மதிக்கிறார்களோ, இல்லையோ என்ற பயத்தின் காரணாகவே அவர் இப்படிப் பேசிக் கொண்டு 'நான் ஒரு கௌரவமான மனிதன்தான்' என்பதை நிரூபித்துக் கொள்ள முயல்கிறாரோ என்று எனக்குள் ஒரு சந்தேகம் உண்டு. ஒருநாள் இந்த சிவகாமிநாதனுக்கும், எனக்கும் 'ஆபாசம் என்பது என்ன?' என்ற கேள்வியை மையமாக வைத்துக் காரசாரமானதொரு விவாதம் எழுந்தது.

"எந்த உணர்ச்சியாயிருந்தாலும் சரி; அந்த உணர்ச்சியைப் பற்றிப் பரிபூரணமாகச் சொல்லவோ எழுதவோ தெரியாமல் அரைகுறையாகச் சொல்வதுதான் ஆபாசம். பரிபூரணமான 'காதல்' என்பது இலக்கிய குணம். அதைப் பரிபூரணமாகச் சொல்லத் தெரியாததுதான் ஆபாசம். நிச்சயமாக ஆபாசமாயிருப்பது எதுவோ அதில் அழகு இருக்க முடியாது. அதைப் போலவே நிச்சயமாக அழகாயில்லாதது எதுவோ அது ஆபாசமாகத்தானிருக்க முடியும். பெண்ணின் படத்தை வரைந்தால் அழகிய மார்புகளையும் சேர்த்துதான் வரைய முடியும்! பெண்ணுக்கு அழகு இருப்பதுதான் இலட்சணம். அழகில்லாததுதான் ஆபாசம். பெண்ணின் படத்தை அழகாக வரைவதே ஆபாசம் என்று 'அறவிளக்கு' பத்திரிகை ஆசிரியராகிய நீங்கள் நினைக்கிறீர்கள்! ஓர் அழகிய பெண்ணின் படத்தை அழகாகவும், எடுப்பாகவும், வரையாமலிருந்தால்தான் ஆபாசமென்று நான் வாதிடுகிறேன்."

"நீங்கள் சொல்கிறபடி பார்த்தால் எல்லாப் பத்திரிகைகளையும் நிர்வாணப் பத்திரிகைகளாக மாற்றினால்தான் அழகு என்று ஆகும்!"

இப்படி உடனே என் மேல் சீறினார் சிவகாமிநாதன். நானும் அவரைச் சும்மாவிடவில்லை.

"அப்படியில்லை மிஸ்டர் சிவகாமிநாதன்! 'செக்ஸ் அப்பீல்' என்கிற அம்சத்தை உங்களைவிட அதிகமாக வெறுக்கிறவன் நான். படத்தின் போலி அழகையும், நியாயத்தை மீறிய கவர்ச்சியையும் சாதனங்களாக ஆக்கிக் கொண்டு சிந்தனை இயக்கமாகிய பத்திரிகைகள் விற்பனைக்குப் போட்டியிடுவது எனக்கும் பிடிக்கவில்லை. ஒரு நோக்கமும் இல்லாமே ஒரு பெண் ஓர் ஆணைப் பலவீனப்படுத்துகிற கோணத்தில் தன் அழகை ஆபாசமாகக் காண்பித்துக் கொண்டிருக்கிறாற்போல் படம் வரைவதை விபச்சாரத்தைக் காட்டிலும் மட்டான தொழிலாக நான் நினைக்கிறேன். நிறைய விற்கிற எல்லாப் பத்திரிகைகளுமே இந்தக் காரியத்தை ஓரளவு செய்து கொண்டுதான் இருக்கின்றன. ஆனால் ஒன்றை நீங்கள் நன்றாகச் சிந்திக்க வேண்டும். அழகிற்கும் ஆபாசத்திற்கும் உள்ள நுணுக்கமான வித்தியாசமே கடிகாரத்தில் சிறிய முள் ஓடுவதற்கும் பெரிய முள் ஓடுவதற்கும் உள்ள வித்தியாசம்தான்! நிதானத்தை மீறினால் ஆபாசம்! அதுவே நிதானத்தோடு தான் நிற்கிற எல்லையிலே நின்றால் அழகு. உலகில் அழகு ஆபாசம் என்ற முரண்பட்ட விளைவுகள் இரண்டிற்கும் ஒரே விதமான பொருள்கள்தான் பெரும்பாலும் காரணமாயிருக்கின்றன. அழகின் எல்லையில்தான் ஆபாசம் தொடங்க இருக்கிறது. அழகு எல்லை மீறினால்தான் ஆபாசம்... காதல் தன்மை அமையாத முழுமையாக அமையாத ஒரு காதல் கதையுங்கூட ஆபாசம்தான். பக்தித்தன்மை முழுதும் அமையாத அரைகுறை பக்தியும் ஆபாசம்தான்! 'காதல்' என்ற உணர்வைப் பற்றி எழுதுவதே மட்டமென்று நீங்கள் கருதுவதாயிருந்தால் காளிதாஸனிலிருந்து பாரதியார் வரை காதலைப் பற்றி எழுதியிருப்பவர்கள் எல்லாம் ஆபாசமாகத்தான் எழுதியிருக்கிறார்கள் என்று கொள்கிறீர்கள்! 'ஸெக்ஸ்' ஒன்று மட்டுமே ஆபாசமில்லை. ஸெக்ஸ் அப்பீல்தான் ஆபாசம். ஆபாசங்கள் எத்தனையோ விதத்தில் பெருகியிருக்கின்றன!

உங்களுடைய 'அறவிளக்கு' பத்திரிகையில் ஒரு பரம பக்தர் 'பாகவதபுராணத்தை'ப் பற்றித் தொடர்ந்து எழுதிக் கொண்டிருக்கிறாரே, அந்தப் பக்திக் கட்டுரைத் தொடரில் போன வாரம் கிருஷ்ணன் ஜல க்ரீடை செய்ததைப் பற்றி எழுதுகிற இடத்தில் கோபிகாஸ்தீரிகளுடைய தனபாரங்கள் பருத்த செவ்விள நீர்க் காய்களைப் போலிருந்ததாகவும், அவற்றின் நுனியில் பவழ மொட்டுக்களைப் போல் காம்புகள் இருந்ததாகவும் அரைப் பக்கத்துக்கு மேல் அந்த விஷயத்தையே வருணித்துத் தள்ளியிருக்கிறார். வருணிப்பதைத் தவறென்று சொல்லவில்லை. அழகாகவும், நயமாகவும் வருணிக்கத் தெரியாததால் கொச்சையாக, நடுவார்ந்தரமாக வருணித்து, அந்த வருணைனையோ ஆபாசமாகப் பண்ணியிருக்கிறார். அது 'ஸெக்ஸ் அப்பீல்' இல்லையா?

"பகவத் விஷயம்! அதைப் பற்றி எல்லாம் குறை சொல்லி இப்படி நீங்கள் நாஸ்திகவாதம் பேசினால் என்ன பண்ணுகிறது?"

"இருக்கலாம்! ஆனால் பகவத் விஷயத்தை நயமாக எடுத்துச் சொல்வதற்கும் ஒரு மனப்பக்குவம் வேண்டும். உங்கள் பத்திரிகையில் 'பகவத் விஷயம்' எழுதுகிறவருக்கு அது இல்லை..."

"ஆனால் நாங்க... கண்டபடி ஆபாசமாகப் படமே போடறதில்லை. கௌரவமான படங்களாகத்தான் போடுறோம்..."

"நிச்சயமாக இல்லை! நீங்கள்தான் ஆபாசமாகப் படம் போடுவதில் முன் நிற்கிறீர்கள்! மற்றவர்கள் ஆபாசமாகப் படம் போடுவதாகச் சொல்லிக் கொண்டே அப்படிப் போடுகிறார்கள்! நீங்களோ கௌரவமாகப் படம் போடுவதாகச் சொல்லிக் கொண்டே ஆபாசமாகப் படம் போடுகிறீர்கள்! உங்கள் பத்திரிகையில் படமாக வருகிற பெண்கள் எல்லாம் 'பெண்கள்' என்று சுட்டிக் காட்டப்படுவதற்குரிய முக்கிய மான அடையாளங்கள்கூட இல்லாமல் பேடிகளைப் போல் காட்சியளிக்கிறார்கள். இதுதான் நிஜமான ஆபாசம் என்று நான் சொல்லுகிறேன். உங்களைப் போல் பெண்களையும், அழகையும், காதலையும், வெறுக்கிற பத்திரிகைகளும்கூட ஆபாசம்தான்! பெண்களின் மார்பைப் பெரிதாகப் போடுவதனாலும் அசட்டுக் காதல் கதைகளை மட்டுமே அரைகுறையாக எழுதுவதனாலும், விற்பனையைப் பெருக்கிக் கொள்கிற பத்திரிகைகள் எவ்வளவு அதிக ஆபாசமாக நடக்கின்றனவோ அதே அளவு ஆபாசத்தோடுதான் வேறொரு விதத்தில் அசிங்கமாகி மாறுபட்டு நிற்கிறீர்கள் நீங்கள்! 'அழகு' என்ற எல்லைப் புள்ளியின் ஒருபுறம் நீங்களும், மற்றொருபுறம் அவர்களுமாக அதை நெருங்க முடியாமல் விலகி நிற்கிறீர்கள் என்றுதான் நான் சொல்வேன். உங்களைவிடப் படமே போடாமல் விஷயங்களை மட்டும் வெளியிடுகிற பத்திரிகைகள் எவ்வளவோ தேவலை. அவற்றில் நிச்சயமாக எந்த ஆபாசமும் கிடையாது. இயற்கையில் அழகாக இருக்கிற ஒரு பெண் அழகாகத் தோன்றுவது ஆபாசமில்லை. அழகில்லாத ஒரு பெண் தன்னைப் பெரிய அழகியாக நிரூபித்துக் கொள்ள முயன்று பகட்டுவது தான் ஆபாசம். இனஅழகு தவறில்லை! இனக் கவர்ச்சிக்கு முயல்வதுதான் தவறு!" என்று அடித்து கூறினேன் நான்.

"குடும்பப் பெண்களும், இளம் பிள்ளைகளும் குட்டிச்சுவராய்ப் போகத்தான் நீங்கள் இந்த வழி சொல்லுகிறீர்கள்..."

"ஓய்! பிதற்றாதீர்! நீர் சொல்லுகிற அந்த உயர்குடும்பத்துப் பெண்கள்தான் சுவாமி இத்தனை ஆபாசமான தோற்றங்களையும், அசிங்கமான அலங்கார முறைகளையும் கண்டுபிடித்து வளர்த்துப் பத்திரிகைப் படங்கள் வரைக்கும் 'ஃபேஷன்'களாக அவற்றை அனுப்பியிருக்கிறார்கள். அப்படியிருக்கும்போது அவர்களுடைய மானத்தைக் காப்பாத்தறத்துக்காகத்தான் நீர் மார்பில்லாத பேடிப் பெண்ணையும், மயக்கும் தன்மையில்லாத மங்கை நல்லாரையும் படமாக வரைவதாகப் பெருமைப்பட்டிருக்கிறீர்! கூலிக்காரக் குப்பனுடைய மனைவியும் சம்மட்டி அடிக்கிற சன்னாசியின் மகளும் அழகாயிருந்தால்கூட அப்படித் தாங்கள் அழகாயிருக்கிறோம் என்கிற உண்மையையே மறந்து - அதை நிரூபிக்கவும் ஆசைப்படாமல் வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள். உம்முடைய மைலாப்பூர், மாம்பலம் அழகிகளும், அம்மாமிகளுமோ...? பிரேஸியர்ஸ்... ஃபோம் ரப்பர் திணித்த ப்ரேஸியர்ஸ் என்று விதம் விதமாக வாங்கிக் கட்டிக்கறதும், நாளுக்கொரு 'ஹேர் ஸ்டைல்' மாத்திக் கொண்டை போட்டுக்கறதுமாகத் தங்கள் அழகை - அல்ல - ஆபாசத்தை நிரூபித்துக் கொள்ள நாளும் முயலுகிறார்கள். நீர் என்னடான்னா, அவாளோட கௌரவத்தைக் காப்பாத்தறதாகச் சொல்லிக்கிறீர்! உம்ம 'அறவிளக்கிலே' வருகிற பெண்களின் படத்தைப் பார்த்துக் கெட்டுப் போகாதவாள் எல்லாம்கூட அதைப் படித்துக் கொண்டிருக்கிற உயர் குடும்பப் பெண்களின் தோற்றத்தைப் பார்த்து நிச்சயமாகக் கெட்டுப் போக முடியுமே ஐயா?"

".... என்னமோ ஸார்! உங்க வாதமே புதுமையாயிருக்கு... நான் என்ன பதில் சொல்றதுன்னே நேக்குப் புரியலே..."

"ஏன் புரியப் போகிறது? ஆண்மையும் ஒரு கம்பீரமான குணம்! பெண்மையும் ஒரு கம்பீரமான குணம். பேடிமை - அலித்தன்மை இருக்கே... அது குணத்திலேயே அடங்காத பிறவி ஆபாசம்! நீர் பத்திரிகை நடத்துகிற இலட்சணமும் அப்படித்தான் இருக்கு!"

இதைக் கேட்டுச் சிவகாமிநாதன் அவர்களுக்கு என்மேல் அடக்க முடியாத கோபம் வந்துவிட்டது. என்னைக் 'கன்னாபின்னா' என்று வாயில் வந்தபடி திட்டிவிட்டுப் போய்விட்டார். இது நடந்து ஒரு வாரத்துக்குப் பின் - மைலாப்பூரிலே எங்கே ஒரு மூலையில் ஏதோ ஒரு மாதர் சங்கத்திலே ஆண்டு விழா ஒன்று நடந்தது. அந்த விழாவில் 'உயர்திரு சிவகாமிநாதன் - ஆசிரியர் - அறவிளக்கு' தலைமையில் நான் சொற்பொழிவாற்றினேன். லிப்ஸ்டிக் பூச்சு, அஜந்தா, குதிரைவால் ஹேர்ஸ்டைல்கள், சொந்தமாகவே செழித்த மார்புகள், ஃபோம் ரப்பர் திணித்த ஃப்ரேஸியர்ஸ்களால் நிமிர்ந்த கச்சுக்கள் - என்று தங்கள் அழகை நிரூபித்துக் கொள்ளும் முயற்சியில் ஆபாசமாகத் தோன்றிக் கொண்டிருந்த நூற்றுக்கணக்கான உயர் குடும்பத்துப் பெண்களுக்கு முன்னே இந்த ஆண்டு விழாக் கூட்டத்தில் பெண்மையின் சிறப்பைப் பற்றியும், புனிதத்தன்மையைப் பற்றியும் வேத வேதாந்த உபநிஷத மேற்கோள்களுடன்

ஒரு மணிநேரம் தலைமையுரை கூறியருளினார் திரு.சிவகாமிநாதன். நான் அரைமணி நேரம் ஏதோ பேசினேன். பேசிவிட்டு உட்கார்ந்ததும் என் அருகே தலைவராக வீற்றிருந்த சிவகாமிநாதனிடம், "இந்தக் கூட்டத்திலே இருக்கிற நாலு பெண்களைப் பார்த்துக் கெட்டுப்போவதைவிட எந்த விதத்திலும் அதிகமாகக் கெட்டுப் போவதற்கு ஜனரஞ்சமாக ஒரு தமிழ்ப் பத்திரிகையில் வருகிற படங்கள் தூண்டிவிட முடியாது" என்று கூறினேன் நான். அவர் கோபத்தினால் எனக்குப் பதிலே சொல்லவில்லை. மேடைக்கு நேரே எதிர் நாற்காலியில் - கீழே முதல் வரிசையில் 'செக்ஸ் அப்பீல்' என்ற பதத் தொடர்ச்சிக்கே நிரூபணம் போல் உட்கார்ந்திருந்த ஒரு பெண்மணியைப் பார்த்து, அந்தப் பெண் தன்னைச் செயற்கையாக அலங்கரித்துக் கொண்டு எடுப்பாகவும் திமிராகவும் உட்கார்ந்திருந்த தோரணையைப் பார்த்து எரிச்சலோடு நான் மீண்டும் சிவகாமிநாதன் அவர்களின் காதருகே சென்று, "அதோ அந்த அம்மாளைப் பார்த்தீரா? பேரன் பேத்தி எடுத்துப் பாட்டியான பிறகும் என்ன திமிரான அலங்காரம் ஐயா? 'செக்ஸ் அப்பீலுக்கு' இதைவிட வேறே ஃபெர்ஸானிபிகேஷன் (உருவகம்) வேண்டவே வேண்டாம்..." என்றதும் அவர் முகம் பேதிக்குச் சாப்பிட்ட மாதிரி ஆகிவிட்டது. "இரைந்து பேசாதீர்! அவள்தான் என்னுடைய சம்சாரம்!" - என்று வெட்கத்தோடு சிவகாமிநாதன் எனக்குப் பதில் கூறியதும்...

"ஐ ஆம் வெரி... ஸாரி... எக்ஸ்க்யூஸ்... மீ..." என்று அவரிடம் மன்னிப்புக் கேட்டுக் கொள்வதைத் தவிர என்னால் வேறு எதுவுமே சொல்ல முடியவில்லை. நான் அடைந்த திகைப்பு அவ்வளவு இவ்வளவு இல்லை.

அழகைக்கூட ஆடாசம் என்று வெறுக்கிற 'ஸினிக்'குகளில் ஒருவராக அவர் ஏன் ஆனார் என்ற மர்மம் அவருடைய தர்மபத்தினியைப் பார்த்ததுமே இன்று எனக்குப் புரிந்துவிட்டது!

ஐயோ பாவம், சிவகாமிநாதன்!

**(தாமரை, நவம்பர், 1963)**

## 93. பெயர்ப் பொருத்தம்

**த**ன்னுடைய இலட்சியத்தைப் பரப்புவதற்கென்று தானே ஒரு புதுப் பத்திரிகை வெளியிடுவதென்கிற முடிவுக்கு வந்துவிட்டான் கைலாசம். என்ன பேர் வைப்பதென்பதுதான் முடிவாகவில்லை. வாசகர்களுடைய கவனத்தைக் கவர்கிற பேராக இருக்க வேண்டுமென்பது அவன் விருப்பம். ஆனால் அப்படிப்பட்ட பேர் ஒன்றுகூட மீதமில்லாதபடி எல்லோரும் வைத்து முடித்திருந்தார்கள். தன்னுடைய நண்பர்கள் திருவேங்கடம், நாராயணசாமி, பராங்குசம் எல்லோரையும் சாயங்காலம் வீட்டுக்கு வரச்சொல்லியிருந்தான் கைலாசம். 'திருவேங்கடம் இலக்கிய ஆர்வமுள்ளவன். நாராயணசாமி அரசியல்வாதி. பராங்குசம் சரியான அரட்டைக்கல்லி. இம்மூன்று பேரையும் கலந்து ஆலோசித்தால் இலக்கியம், அரசியல், நகைச்சுவை, மூன்று தரத்துப் பேர்களும் நிறையக் கிடைக்கும். அதில் ஏதாவது ஒன்றைப் புதுப் பத்திரிகைக்குச் சூட்டி விடலாம்' என்பதுதான் அவன் நண்பர்களை அழைத்திருந்ததற்குக் காரணம்.

நண்பர்களுக்காகக் கொஞ்சம் டிபனும், காப்பியும் செலவாகும்! அதைப் பார்த்தால் முடியுமா? பத்திரிகைக்குப் பேர் கிடைக்க வேண்டுமே!

சரியாக நாலு மணிக்கு நண்பர்கள் வந்துவிட்டார்கள். சிற்றுண்டி, காப்பி முடிந்தது. வெற்றிலை பாக்கு வேள்வியும் முடிந்தது.

"ஏண்டா கைலாசம்! 'தாம்பூலம்' என்றே உன் பத்திரிகைக்குப் பேர் வைத்துவிடேன். மங்களகரமான பெயர், புதுமையாகவும் இருக்கும்!" என்றான் அரட்டை பராங்குசம்.

"வைக்கலாம்! ஆனால் அதிலே ஒரு வம்பு இருக்கிறது. அப்பனே! 'சர்க்குலேஷன்' பாயிண்டிலே உதைக்கும். பத்திரிகைகளின் விற்பனை எல்லாம் பெரும்பாலும் வெற்றிலை பாக்குக் கடைகளில்தான். அங்கே போய் ஒரு வாசகன் 'தாம்பூலம்' கொடு என்று கேட்டால் கடைக்காரன் நிஜமாகவே தாம்பூலம் கொடுத்துவிடுவானே? நம் பத்திரிகை உருப்படாற்போல்தான்!" என்று அந்தப் பேரைக் கைலாசம் மறுத்துவிட்டான்.

நாராயணசாமி ஆரம்பித்தார் : "அரசியல் ஆவேசம்தான் இன்று பத்திரிகை விற்பனைக்கு முக்கியமான தூண்டுதல்! நான் ஆவேசமும் உத்வேகமும் நிறைந்த ஒரு பேர் சொல்லுகிறேன். 'அக்கினி' என்று வைத்துவிடு!"

"அங்ஙனம் புகலற்க! யாம் அப்பெயரை வன்மையாக மறுக்கின்றோம். 'நெருப்பு' என்னும் பைந்தமிழ்ச் சொல் இருக்கும்போது அதைப் புறக்கணித்துவிட்டு 'அக்கினி'

என்று வடமொழிப் பெயரை வைப்பதாவது? அஃது அறமன்று; ஒழுங்கன்று!" என்று திருவேங்கடம் தனித்தமிழ் உணர்வோடு மறுத்தான். அவன் முகம் சினத்தால் சிவந்துவிட்டது.

"நெருப்பு என்று பத்திரிகைக்குப் பேர் வைப்பதைவிடப் பத்திரிகையிலேயே அதை அள்ளி வைத்துவிடலாமே!" என்று அதைக் கிண்டல் செய்தான் பராங்குசம்.

"இந்த வம்பெல்லாம் வேண்டாம். நான் சொல்கிறபடி கேள். 'நீட்டா' 'கைலாசம்'னு உன் பெயரையே பத்திரிகைக்கும் வைத்துவிடு. கச்சிதமாக இருக்கும். கைலாசம் - ஆசிரியர் 'கைலாசம்'னு போட்டுக் கொள்ளலாம்" என்றார் நாராயணசாமி.

"ஐயய்யே, அபசகுனம் மாதிரி இருக்கிறது.கைலாசம் என்றால் சிவனின் இருப்பிடம், சிவனிடம் அழித்தல் தொழில் உண்டு. நம் கைலாசமும் இதற்கு முன் நான்கு 'டெய்லி'யும் மூன்று 'வீக்லியும்', இரண்டு 'மந்த்லி'யும் தொடங்கி அழித்திருக்கிறான். அதை நினைவுபடுத்துவதுபோல் இருக்கிறது கைலாசம் என்ற பெயர். கைலாசம் என்றாலே சம்ஹாரத் தொழில்தான் நினைவு வருகிறது. அது வேண்டாம்" என்று பராங்குசம் அதற்கு அஸ்துப் பாடினான்.

"யாம் புகல்வேம்! கேண்மின். அருவிக்குத் தூய தமிழில் 'மலைபடுகடாம்' என்று பெயர். 'அருவி' என்றால் எல்லோருக்கும் புரிந்துவிடும். எனவே புரியாத மாதிரியில் தமது இதழுக்கு 'மலைபடுகடாம்' எனப் பெயர் வைத்திடுக' என்றார் திருவேங்கடனார்.

"ஐயன்மீர்! நமது பத்திரிகையின் பேரைப் புகல்வோர் பல்லுடை படலாகுமோ?' 'கலைபடுமடாம்' என்ற பேர் வாயில் நுழையாதே?"

"பிழை! பிழை! மலைபடுகடாம் என்று சொல்."

"பேரே மங்கலமாக இருக்க வேண்டும். பழைய பத்திரிகைகளைப் போல் நின்று போகாமல் இதுவாவது தீர்க்காயுசாக நடக்கும்படியான பேரைச் சொல்லுங்கள்."

"அப்படியானால் ஆவி, உயிர்; சிரஞ்சீவி, ஆயுள்மணி என்கிற மாதிரி ஏதாவது ஒரு பெயரை வைத்துவிடு."

"ஏய் பராங்குசம், உன்னை உதைத்து விடுவேன். உன் கிண்டல் அத்துமீறிப் போகிறது."

"பத்திரிகைக்குத் தகுந்த பெயர் ஒன்று என் மனத்தில் இருக்கிறது. நீ கோபித்துக் கொள்ளாவிட்டால் சொல்கிறேன்" என்று பராங்குசம் ஆரம்பித்தான்.

"கோபமென்ன? கிண்டல் இல்லாமல் சொல்லு."

"'அவியல்' என்று வைத்துவிடு. நிம்மதியாகப் போய்விடும். உன் சகலவிதமான இலட்சியங்களுக்கும் அலட்சியங்களுக்கும் பொருத்தமாக இருக்கும்."

என்ன ஆச்சரியம்! கைலாசம் உதைக்கப் போகிறான் என்று பயந்து கொண்டே இதைக் கூறிய பராங்குசத்துக்கு, அவன் 'சபாஷ்!' போட்டதும் வியப்பாகிவிட்டது.

"பராங்குசம்! இந்தப் பேர் ஏ ஒன்! நாளைக்கே 'விளம்பரம்' கொடுத்து விடுகிறேன்" என்றான் கைலாசம்.

"'அவியல்' என்பது நல்ல தமிழ்ச் சொல்லே! விகுதி பெற்ற தொழில் பெயராம். அதனை வைத்திடுதல் பொருத்தமே" என்றார் திருவேங்கடனார். அரசியல் நாராயணசாமிக்கு அந்தப் பெயர் விருப்பமில்லை. ஆனால் மறுத்துச் சொல்லாமல் சும்மா இருந்துவிட்டார்.

"அவியல் சிறந்த வார இதழ். ஆசிரியர் கைலாசம் - இன்றே வாங்கிப் படியுங்கள்" என்று விளம்பரம் கொடுக்கலாமா?" என்று கைலாசம் கேட்டான்.

"சே! சே! வழவழ வென்று அதிக வார்த்தைகளைப் போட்டு விளம்பரத்தைக் கவர்ச்சியற்றதாகச் செய்யாதே. விளம்பரத்திலும் 'சஸ்பென்ஸ்' வேண்டும். சுருக்கமாக 'கைலாஷின் அவியலை நுகர்ந்து மகிழுங்கள்' என்று விளம்பரம் கொடு. அதே வார்த்தைகளை மூவர்ணச் சுவரொட்டியாகப் பெரிய அளவில் ஏராளமாக அச்சடித்துச் சினிமாச் சுவரொட்டிபோல் மூலைக்கு மூலை ஒட்டச் செய். முதல் இதழ் பத்தாயிரம் பிரதிகள் போகவில்லையானால் என்னை ஏனென்று கேள்!" என்று கூறினான் பராங்குசம்.

முதல் இதழ் வெளிவருமுன் எல்லாத் தினசரிகளிலும், 'கைலாஷின் அவியலை நுகர்ந்து மகிழுங்கள்' என்று கொட்டை எழுத்துக்களில் விளம்பரம் வந்தது. சினிமாச் சுவரொட்டிகளை விடப் பெரிய மூவண்ணச் சுவரொட்டிகளில் 'கைலாஷின் அவியலை நுகர்ந்து மகிழுங்கள்' என்று அச்சிட்டு ஒட்டப் பெற்றது. சினிமாவில் அதே விளம்பரம் சிலைடாகக் காட்டப் பெற்றது.

புதுப் பத்திரிகை வெளிவந்தது. பராங்குசத்தின் யோசனைக்கு மேல் அதிகப்படி ஓர் ஐயாயிரம் சேர்த்து பதினையாயிரம் பிரதியாக முதல் இதழ் அச்சிட்டுவிட்டான் கைலாசம். விற்பனையாளர்களுக்குப் பிரதிகள் பறந்தன. எங்கு நோக்கினும், 'அவியல்' தொங்கிற்று. மக்கள் நிலையறிய மாறுவேடத்தோடு இரவில் நகர்ப்பரிசோதனைக்குப் போகிற அரசன் மாதிரிப் பத்திரிகை வெளியான அன்று கைலாசம் மாறுவேட மின்றியே பகலிலேயே தன் பத்திரிகையைப் பற்றி அறிவதற்குக் கிளம்பினான்.

பஸ் ஸ்டாண்டு அருகில் 'அவியல்' தொங்கின வெற்றிலை பாக்குக் கடையின் முன்னால் இரண்டு மாணவர்கள் நின்று பேசிக் கொண்டிருந்தனர். "அவியல் ரொம்பப் பிரமாதம் பிரதர்!" இதைக் கேட்டதும் கைலாசத்துக்குத் தன் பிறவியே சாபல்யமடைந்துவிட்ட து போலிருந்தது.

இன்னும் சிறிது தூரம் சென்றதும் மளிகைக்கடை வாசலில் இரண்டு கிழவர்கள், "கைலாசம் அவியல் நன்றாகப் போகிறான் அப்பா" என்று பேசிக் கொண்டிருப்பதைக் கைலாசமே கேட்டான்.

'சே! சே! நம்மைப் பற்றி இவர்களெல்லாம் இத்தனை பெருமையாகப் பேசிக்கொள்கிறார்கள். நாம் தரையில் நடந்து போவதாவது' என்று ஒரு டாக்சியைக்

கூப்பிட்டு ஏறிக் கொண்டான் கைலாசம். 'அவியலின் எடிட்டர்' என்றால் அதற்கு ஒரு 'ரெஸ்பெக்ட்' வேண்டாமா?

ஒரு 'புக் ஷாப்பில்' அழகிய இளநங்கை ஒருத்தி அவியலின் அட்டைப்படத்தைப் பார்த்து வியந்து நிற்பதையும் கைலாசம் டாக்ஸியில் போகும்போதே பார்த்தான். அவனுக்குப் பெருமை தாங்கவில்லை.

ஊரெங்கும் 'கைலாஷின் அவியலைப்' பற்றிய பேச்சு.

ஆனால் என்ன பரிதாபம்! முதல் இதழ் விற்பனைக் கணக்கு முடிந்து பதினாலாயிரத்துத் தொள்ளாயிரத்து எண்பது பிரதிகள் திரும்பி வந்துவிட்டன. இருபது பிரதிகள் நண்பர்களுக்குக் 'காம்ப்ளிமெண்டரி'யாகக் கொடுத்திருந்தான் கைலாசம்.

'என்ன அநியாயம்! ஊரெல்லாம் 'அவியலை' பற்றிப் பிரமாதமாகப் பேசிக் கொள்வதை என் காதாலேயே கேட்டேனே! எப்படி விற்காமல் போயிற்று?' என்று திகைத்தான் கைலாசம். கோளாறு எங்கே என்று அவனுக்குப் புரியவில்லை. அவ்வளவும் நஷ்டம்! 'கைலாசம்' என்றாலே அழித்தல் தொழில்தானா? நான் தொடங்கி நின்று போன இதழ்களின் சோக வரலாற்றிலே, அவியலின் புதிய அத்தியாயமும் சேர வேண்டியதுதானா?' என்று கண்கலங்கி வருத்தத்துடன் வீற்றிருந்தான் கைலாசம்.

அப்போது பராங்குசம் வந்து சொன்னான் : "என்னை மன்னித்துவிடு, கைலாசம்! பஸ் ஸ்டாண்டுக்குப் பக்கத்தில் ஒருத்தன் 'ஹோட்டல் கைலாஷ்' என்று வைத்திருக்கிறான். அவன் ஓட்டலில் அவியல் தினசரி போடுகிறான். நீ செய்த விளம்பரப் பயன் அவனுக்குப் போய்விட்டது. அவன் கடையில் கூட்டம் தாங்கவில்லை! ஊரெல்லாம் அவன் கடை அவியலைப் பற்றித்தான் பேச்சு. முடிந்தால் நீ கூடப் போய்ச் சாப்பிட்டு விட்டு வா. நான் போயிருந்தேன் மத்தியானம். அவியல் 'ஏ ஒன்'" என்று சொல்லிக் கொண்டே நகர்ந்துவிட்டான் பராங்குசம். கைலாசத்திடம் அடிவாங்க அவன் தயாராயில்லை.

(கல்கி, 1964)

## 94. பதினேழாவது நம்பருக்கு ஒரு பதில்

**அ**ன்றும் கௌரிக்கு ஏமாற்றம்தான்!

"ஒண்ணும் இல்லீங்க அம்மா!" என்று வார்த்தைகளால் சொல்லியதை விளக்குவதுபோல் இடது கையிலிருந்த கடித அடுக்கை நழுவவிட்டு விடாமல் ஜாக்கிரதையாக வலது கையை மேலே தூக்கி விரல்களை விரித்துக் கிடையாதென்று மறுப்பதற்கு அபிநயமாக ஒரு சுழற்றுச் சுழற்றி அதைச் சைகையாலும் நிரூபித்த பின், 'இருந்தால் கொடுக்க மாட்டானா?' என்பதுபோல் தெரியத் தனக்குத் தானே சிரித்தபடி மேலே நடந்துவிட்டார் தபால்கார நாயுடு. நாள் தவறாமல் கடிதங்களை 'சார்ட்' செய்யும்போது கௌரி நம்பர் 17, கனகம்மாள் ஸ்டிரீட் என்று விலாசமிட்ட, ஒரு கார்டையோ, கவரையோ, இண்லண்ட் கவரையோ ஆவலோடு எதிர்பார்த்துத் தேடுவது கடந்த சில மாதங்களாக நாயுடுவுக்கு ஒரு வழக்கமாகியிருந்தது. 'தபால்காரன் என்பவன் பலருடைய கடிதங்களைச் சுமந்து கொண்ட போய்ச் சேர்க்க வேண்டும். அப்படிச் சுமந்துகொண்டு போகிற கடிதங்களில் அவற்றை அடையப் போகிறவர் களின் சுகமும் இருக்கலாம், துக்கமும் இருக்கலாம். அதிர்ச்சியும் இருக்கலாம். ஆனந்தமும் இருக்கலாம். ஆனால் அவற்றைத் தபால்காரன் சுமப்பதில்லை. என்றாலும் இந்தப் பதினேழாம் நம்பர்ப் பெண்ணுக்குப் பதில் கடிதம் ஒன்றும் கொடுக்காமலே போகிற சுமை நாயுடுவின் மனத்தில் நாளுக்கு நாள் கனத்துக்கொண்டே போயிற்று. ஒவ்வொரு நாளும் சுற்றுமுடிந்து கடிதங்களைப் பட்டு வாடா செய்தான பின் அவருடைய கைகளின் பாரம் குறைகிற சமயம் மனத்தின் பாரம் அதிகமாகும்படி செய்திருக்கிறாள் இந்தப்பதினேழாம் நம்பர்ப் பெண்.கடந்த இருபத்தைந்து வருடங்களுக்கு மேற்பட்ட சர்வீஸில் தபால்கார நாயுடு இப்படி யாருக்காகவும் மனமிரங்கி உருகியதும் தவித்ததுமில்லை.

"நாங்க குங்குமம் சொமக்கிற கழுதைம்பாங்களே; அது மாதிரிங்க கொண்டு போய்க் கொடுக்கிற கடுதாசிலே நல்லதோ கெட்டதோ, சுகமோ, துக்கமோ எது வேணுமானா இருக்கலாம். அதுனாலே நாங்க பாதிக்கப்படறதில்லே" என்று நாயுடு சில சமயங்களில் விலாசதாரர்களிடம் வேதாந்தபரமாகப் பேசுவதும் உண்டு. அப்படிப் பேசும்போது ஏதோ கை நிறையச் சுகதுக்கங்களை அல்லது இன்ப துன்பவங்களை அடுக்கிக் கொண்டு போய் அவரவர்களுக்குச் சேர வேண்டியதை அவர்களுடைய விலாசம் தவறாமல் உதறிவிட்டுப் பாரத்தைக் குறைத்துக் கொள்ளும் விதியின் நடுநிலைமை பிறழாததொரு நாயகனைப் போல் அவருடைய குரல் ஒலிக்கும். தபால்காரன் வருகின்ற நேரத்தை எதிர்பார்த்து அந்த நேரத்தை நம்பும் ஆவலிலேயே மற்ற நேரத்தையெல்லாம் போக்கிவிட்டு நிற்கும் அசடுகளை அவர் நிறையப்

பார்த்திருக்கிறார். அப்படி அசடுகளில் ஒருத்தியாக இந்தப் பதினேழாம் நம்பர்ப் பெண்ணை அவரால் நினைக்க முடியாது. பதினேழாம் நம்பர் வீடு என்கிற எட்டு ஒண்டுக் குடித்தனங்களடங்கிய நீண்ட இருள் மாளிகையில் ஏதோ ஒரு சின்ன அறையில் அந்தப் பெண்ணும் அவளுடைய இரண்டு குழந்தைகளும் இருக்கிறார்கள்; தினந்தோறும் காலையில் அதே பத்துமணிக்குத் தபால்கார நாயுடு முதல் டெலிவரிக்கான கடிதங்களோடு கனகம்மாள் தெருமுனையில் திரும்பி உள்ளே நுழைவதற்கும் அந்தப் பெண் குழந்தைகள் பின் தொடர வாசலுக்கு வந்து ஏக்கத்தோடு நிற்பதற்கும் சரியாக இருக்கும்.

“கௌரீன்னு ஏதாவது இருக்கான்னு பாருங்க நாயுடு?” என்று அந்தப் பெண் பொறுமையையும்,நம்பிக்கையையும் விட்டுவிடாமல் நான் தவறாமல் நிதானமாகக் கேட்கிறபோது,‘இவளுக்கு இல்லை என்று சொல்லியாக வேண்டியிருக்கிறதே’ என்ற ஏக்கத்தோடுதான் நாயுடுவும் பதில் சொல்லியிருக்கிறார். சில வெள்ளிக்கிழமைகளில் தலை முழுகி ஆறவிட்ட கூந்தல் முதுகிலே காடாய்ப் புரள நெற்றியில் குங்குமமும் கண்களில் தாபமுமாக சாட்சாத் மகாலட்சுமியே நேரில் வந்து நின்றுவிட்டது போல், ‘எனக்கு ஏதாவது கடிதாசு இருக்கா பாருங்க?’ன்னு அந்தப் பெண் கேட்கிறபோது ‘ஒண்ணும் இல்லீங்களே அம்மா’ என்று சொல்லிக் கையை விரிப்பதற்குள் அவர் மனம் இரகசியமாக உள்ளேயே அழுது ஓய்ந்திருக்கிறது. அந்தப் பெண் கௌரியின் கணவன் குருமூர்த்தி பக்கத்து பஜாரில் உள்ள கிருஷ்ண பவான் ஹோட்டலில் சர்வராக இருந்து படிப்படியாக முதலாளியின் அபிமானத்தைக் கவர்ந்து முடிவில் காஷியராக உயர்வு பெற்றுக் கல்லாவில் உட்கார்ந்திருந்தான். இரண்டு மூன்று மாதங்களுக்கு முன் ஒருநாள் கிருஷ்ண பவான் கல்லாவில் நிறையப் பணம் திருட்டுப் போய்விட்டதாம். பில் போடுகிறவர்களின் ஒத்துழையாமையினாலோ பொறாமையினாலோ காஷில் பணம் குறைந்திருக்கலாம். அல்லது குருமூர்ததியைத் தவிர கல்லாவில் உட்கார்ந்து பணம் வாங்கிப் போடுகிற மற்றொரு நபரான முதலாளியின் சிறிய மகன் சுந்தரம் ஏதாவது மைனர் விளையாட்டுக்காகப் பணத்தைச் சொல்லாமலே கையாடியிருக்கலாம். பழி என்னவோ குருமூர்த்தியின் தலையில்தான் வந்து விழுந்தது. முதலாளி அவனைக் கன்னா பின்னாவென்று பேசி வேலையிலிருந்தும் துரத்திவிட்டார். செய்யாத குற்றத்தை மறுக்கவும் திராணியின்றித் தலை குனிந்தபடியே விலகி வெளியில் வரும் சமூகக்கோழைகளில் குருமூர்த்தியும் ஒருவன். செய்த குற்றத்தை மறைத்துத் தப்பித்துக் கொள்வது எப்படிச் சமூகத் துரோகமோ அப்படியே செய்யாத குற்றத்தை ஒப்புக் கொள்வதும் ஒரு வகையில் சமூகத் துரோகம்தான். ஏனென்றால் தான் செய்யாத குற்றத்தைத் தன் தலையில் போட்டுக் கொண்டு நிமிர்ந்து பார்க்காமல் குனிந்தபடியே வெளிவருகிற கோழை அந்தக் குற்றத்தை உண்மையில் செய்தவனைக் காப்பாற்றிக் கொடுக்கிற சமூகத் துரோகத்தையும் செய்ய உடந்தையாகிறான். குருமூர்த்தி என்றுமே அப்பாவி. வேலை போன மறுநாள் எங்கோ பக்கத்து நகரத்துக்குப் போய் வருவதாகச் சொல்லிவிட்டுக் கௌரியிடம் ஐந்து ரூபாய் பணம் வாங்கிக் கொண்டு போனவன் நாளது தேதி வரை என்ன ஆனான், எங்கே போனான் என்ற தகவலே தெரியாமல்

கிணற்றில் கல் போட்ட மாதிரி இருக்கிறது. தபால்காரர் நாயுடுவுக்குக் குருமூர்த்தியை அதிகம் தெரியாதென்றாலும் ஓரளவுக்குத் தெரியும். வருகிற தபால்களிலிருந்து மனிதர்களை ஓரளவுக்குக் கணித்து வைத்திருந்தார் நாயுடு. இந்தக் குருமூர்த்திக்குச் சாமியார்கள், பண்டாரங்கள், சோதிடர்கள் ஆகியவர்கள் மேல் பித்தும், அபிமானமும் அளவுக்கதிகமாய் உண்டு. ஆண்டி மலை ஸ்வாமிகளிடமிருந்து அவனுக்கு வாரா வாரம் தபாலில் விபூதியோ ஏதேனும் ஓர் இரட்சைக் கயிறோ வரும். இருந்தாற் போலிருந்து திடீரென்று, குருமூர்த்தி இரண்டு மூன்று நாள் ஊரில் தென்படமாட்டான். மூன்றாம் நாள் திரும்பி வந்தபின் 'ஆண்டிமலைக்குப் போய்ச் சுவாமியைத் தரிசனம் பண்ணிவிட்டு வந்தேன் அண்ணா! அப்புறம்தான் மனசு நிம்மதியாச்சு! பேசிண்டே இருந்தப்ப சுவாமி ஒரு பிடி மண்ணை அள்ளி என் கையிலே போட்டார். அது சந்தனமா வந்து விழுந்தது' என்று யாரிடமாவது பெருமையாகச் சொல்லிக் கொண்டிருப்பான். மனிதனை அவன் வாழ்ந்து கொண்டிருக்கிற அசல் சுகதுக்கங்கள் நிறைந்த மண்ணின் மேலும், சுற்றியிருப்பவர்கள் மேலும் நம்பிக்கையில்லாமல் பண்ணி விடுகிற எந்தச் சாமியாரையும் நாயுடுவுக்குப் பிடிக்காது. ஆனாலும் குருமூர்த்தியின் மேல் மட்டும் அவருக்கு ஏதோ ஓர் அபிமானம் உண்டு. 'வம்பு தும்புக்குப் போகாதவன் - நாணயமான பையன்' என்கிற அபிமானம்தான் அது. எனவே ஊரில் பலர் நம்பியது போல் கிருஷ்ணபவான் கல்லாப் பெட்டியிலிருந்து குருமூர்த்தி கால் காசுகூடத் திருடியிருக்க முடியாதென்றுதான் நாயுடுவும் நம்பினார்.

குருமூர்த்தி ஊரிலிருந்து காணாமல் போன ஆறாவது நாளோ, ஏழாவது நாளோ வழக்கமாக அவருக்குப் பிரசாதமோ, இரட்சைக் கயிறோ, அனுப்பும் சாமியார்கள் யாரையாவதுதான் தேடிக் கொண்டு போயிருப்பார் என்ற அநுமானத்தோடு, ஆர்.எம்.குருமூர்த்தி, கேர்ஆஃப் ஸ்ரீ ஆண்டிமலைச் சித்தர் சுவாமிகள் மடம் - ஆண்டி மலை - போஸ்ட் என்ற விலாசத்துக்கு ஒரு கவர் எழுதித் தபாலில் சேர்த்துவிடச் சொல்லி நாயுடுவிடம் கொடுத்திருந்தாள் கௌரி. அவள் அந்தக் கடித உறையை ஒட்ட வில்லை. நாயுடுவும் அதை அவளிடமிருந்து வாங்கிக் கொண்டு போய் அப்படியே ஒட்டித் தபாலில் சேர்த்துவிடத்தான் நினைத்தார். இருந்தாலும் ஏதோ ஓர் ஆவலால் தூண்டப்பபட்டு அதைப் படித்துவிட முனைந்தார். மிக இளம் வயதிலேயே குடும்ப பாரத்தை அதிகமாகத் தாங்கிக் கொண்டு திணறும் ஓர் ஏழைக் கணவனின் ஏழை மனைவி படுகிற வேதனைகளையெல்லாம் கொட்டி அவள் அதைத் தன் புருஷனுக்கு எழுதியிருந்தாள். கடிதத்தைப் படிக்கத் தொடங்கிய நாயுடு கண் கலங்கினார்.

'தேவரீர் திருவடிகளில் அடியாள் கௌரி அநேக நமஸ்காரம் செய்து எழுதிக் கொள்வது. இன்றுடன் நீங்கள் புறப்பட்டுப் போய் ஏழு நாட்கள் ஆகின்றன. எங்கே இருக்கிறீர்கள், என்ன செய்கிறீர்கள்? ஒரு தகவலும் தெரியாமல் மனசுக்கு ரொம்பவும் வேதனையாக இருக்கிறது. குழந்தைகள் கமலியும், பாபுவும் 'அப்பா எங்கே போயிருக்கிறார் சொல்லும்மா'ன்னு சதா என்னைப் பிய்த்து எடுக்கிறார்கள். ஸ்டோர்க்காரக் கிழவர் வீட்டு வாடகைக்காக மூணுதரம் ஆளனுப்பிவிட்டார். எனக்கானால் ஒரே கவலையாயிருக்கிறது; பயமாகவும் இருக்கிறது. நீங்கள் போன

இடத்திலிருந்து ஒரு வரி கடுதாசு எழுதக்கூடவா ஒழியலை? குழந்தைகளை வைத்துக் கொண்டு நான் தனியாகக் கஷ்டப்படறேன். இந்தக் கையிலே கமலி, அந்தக் கையிலே பாபு; போறாததற்கு வயித்திலே ஒண்ணு... என்னை எல்லாரும் நச்செடுக்கறா. பால்காரன் பாக்கி, மளிகைக்கடை பாக்கி... எல்லாம் பாக்கி நிற்கிறது. பொறுப்பில்லாதவர் மாதிரி இப்பிடிப் போயிட்டா என்ன பண்றது..."

... இப்படி ஒன்றா இரண்டா? கடந்த மூன்று மாதங்களுக்குள் குருமூர்த்தி - போயிருக்க முடியுமென்று அவர்கள் நினைத்து அநுமானித்த மடங்கள், சோதிடர்கள், சித்தர்கள், சிநேகிதர்கள், உறவினர்கள் எல்லாருக்குமாகப் பத்துப் பதினைந்து கடிதங்களுக்கு மேல் எழுதியாயிற்று. ஒரு கடிதத்துக்கும் பதில் இல்லை. பதினேழாம் நம்பர் வீட்டுக்கு - கௌரிக்கு ஒரு பதில் கடிதத்தையாவது கொடுத்து விட்டுத் தம் உத்தியோகத்திலிருந்து ரிடையராக வேண்டுமென்பது தபால்கார நாயுடுவின் ஆசை.

பாவம்! அவர் ரிடையராவதற்கு இன்னும் பத்து நாட்கள்தான் இருந்தன. கடந்த கால் நூற்றாண்டுக் காலத்துக்கும் மேலாகத் தம் கைப்படக் கொண்டுபோய் வழங்கிய பல்லாயிரம் கடிதங்களுக்காக அவர் எவ்வளவோ பெருமைப்படலாம். அவரோ வழங்க வேண்டிய கடிதமொன்றை எதிர்பார்த்து இன்னும் கைக்கு வந்து சேராத கடிதமொன்றை இனி வரும் வரும் என்று கருதித் தவித்துக் கொண்டிருந்தார். வந்து சேராத அந்தக் கடிதமும் வந்து சேர்ந்து அதைக் கௌரியிடம் கொண்டு போய்க் கொடுத்தாலொழியத் தமது உத்தியோக வாழ்க்கை குறைவுடையதாகவே முடியும் என்பதுபோல் நாயுடுவுக்கு 'ஸெண்டிமெண்டலாக' ஒரு தவிப்பு வந்துவிட்டது. கடைசி நாளில், கடைசி டெலிவரியிலாவது 'ஒண்ணுமில்லிங்களே, அம்மா!' என்ற வழக்கமான எதிர்மறை வார்த்தைகளை மாற்றி, 'அம்மா உங்களுக்கு ஒரு கடிதாசு வந்திருக்கு' என்று முகம் மலர அகம் மலர எடுத்துக் கௌரியிடம் கொடுத்துவிட வேண்டுமெனத் தவித்தார் நாயுடு. கனகம்மாள் தெரு - பதினேழாம் நம்பர் - கௌரி என்ற விலாசம் ஒன்பதாவது பீட் போஸ்ட்மேன் நாயுடுவின் எத்தனையோ பல விலாசங்களில் சாதாரணமான ஒன்றல்ல. அந்த விலாசத்தின் கீழ்ப் பஞ்சடைந்த கண்களும், எண்ணெய் காணாத தலையும், கிழிந்த ஆடையுமாக மூன்று உயிர்கள் ஊசலாடிக் கொண்டிருந்தன. வெளிப்படாத இன்னோர் உயிரும் அந்தத் தாயின் மடியில் இருந்தது. விலாசதாரர்கள் தங்களுக்கு வராத அல்லது வர வேண்டிய ஒரு கடிதத்துக்காகத் தவிக்கும் இயல்பை நாயுடு பலமுறை கண்டிருக்கிறார். இந்த ஒரு விலாசதாரரோ தனக்கு ஒரு பதில் கடிதம் கொடுக்க முடியாத தபால்காரரையே அதற்காகத் தவித்து ஏங்க வைத்துக் கொண்டிருக்கிறாள்.

"நாயுடு! என் ஜன்மம் விடியவே விடியாது போலிருக்கு. அவரும் இப்படிச் சொல்லாமல் கொள்ளாமல் எங்கோ போய்விட்டார். நல்லதங்காள் மாதிரிக் குழந்தைகளையும் தள்ளிப்பிட்டு நான் கிணத்திலே விழுந்துட வேண்டியதுதான்! வயிறும் பிள்ளையுமாத் தனியாகத் தவிக்கிறேன். ஏதோ வீட்டுலே ஒத்த ஓட்டைத் தையல்மிஷின் இருக்கு. அதுலேயும் எத்தனை பேருக்குத் தச்சுக் கொடுத்துச் சம்பாதிக்க

முடியும்?'' என்று ஒருநாள் முதல் டெலிவரி சுற்றுக்காகப் போன நாயுடுவிடம் கௌரி அழுதே விட்டாள்.

"அழாதீங்கம்மா! எப்படியும் நான் ரிடையராகறதுக்குள்ளார உங்களுக்கு ஒரு நல்ல பதில் கடிதாசு கொடுக்காம ரிடயராக மாட்டேன்'' என்று நாயுடுவும் கௌரிக்கு நாள் தவறாமல் ஆறுதல் கூறிக் கொண்டிருந்தார்.

மார்ச் மாதம் இருபதாம் தேதிக்கு இன்னும் மூன்றே மூன்று நாட்கள்தான் மீதமிருந்தன. இன்றைக்குத் தேதி பதினேழு. பதினெட்டு, பத்தொன்பது, அப்புறம் இருபது. மூன்று நாட்களில் இரண்டே இரண்டு நாட்கள் மட்டும்தான் முழுமையாக இரண்டு டெலிவரிக்கும் நாயுடு கடிதங்களோடு போவார். இருபதாம் தேதியோ ஒன்பதாவது பீட்டில் எல்லாரிடமும் சொல்லிக் கொண்டு பின்பு ஆபீஸ் வந்து அங்கேயும் எல்லோரிடமும் விடைபெற்றபின் வீட்டுக்குப் போய்விடுவார். சாயங்காலம் தபால்காரர்கள் எல்லாருமாகச் சேர்ந்து போஸ்ட் மாஸ்டர் தலைமையில் அவருக்கு ஒரு பிரிவுபசார விருந்துக்கு ஏற்பாடு பண்ணியிருந்தார்கள். மனைவி மக்களோடு அந்த விருந்துக்கு வந்து விட்டு வீடு திரும்பினால் அப்புறம் மறுநாளிலிருந்து காக்கி உடையில் அவரைக் காண முடியாது. எல்லாரையும் போல் வெள்ளை வேஷ்டியும் முழுக்கைச் சட்டையுமாக கார்டு கவர் வாங்கத் தபாலாபீசுக்கு வந்து போக வேண்டியதைத் தவிர, அவருக்கு வேறு உத்தியோகக் கடமையோ, காரியமோ இல்லை. கால் நூற்றாண்டுக் காலத்துக்கும் மேலாகப் பொறுமையோடும், நிதானமாகவும் எல்லோருக்கும் முகம் மலரப் பதில் சொல்லிய ஒரு பழைய தலைமுறை மனிதனை அல்லது கிழவனை - இருபத்தொன்றாம் தேதி காலையிலிருந்து இனி தபாலாபீசில் காண முடியாது.

நாட்கள்தான் என்ன வேகமாக ஓடுகின்றன! பதினெட்டாம் தேதியும் பதினேழாம் நம்பர் கௌரிக்குப் பதில் கடிதத்தைக் கொண்டு வராமலே ஓடிவிட்டது. இருபதாம் தேதி முதல் டெலிவரிக்கு லெட்டர்களை சார்ட் செய்து கொண்டிருந்தபோது அன்றும் பதினேழாம் நம்பர்ப் பெண்ணுக்கு ஒரு பதில் கடிதம் வராமலே போய்விடுமோ என்ற பயத்தில் நாயுடுவுக்குக் கைகள் நடுங்கின. அவள் எழுதிக் கொடுத்து அவர் வாங்கித் தபாலில் குருமூர்த்திக்குப் போட்ட கடிதங்களெல்லாம் ஒவ்வொன்றாக 'அட்ரஸி நாட் நோன்' என்ற சிவப்பு மை அடிப்புடன் திரும்பி வந்ததைத் தவிர பதில் கடிதம் ஒன்றுகூட இதுவரை அவளுக்கு வந்ததில்லை. வயிறும் பிள்ளையுமாகத் தவிக்கும் ஒரு சுமங்கலியை ஏமாற்றிவிட்டு ரிடையராகி நடப்பதைவிட அவள் முகத்தில் சிரிப்பைப் பார்த்துவிட்டு ரிடயராகிவிடுகிற ஆத்மதிருப்திக்கு நாயுடு ஆசைப்பட்டார்.

தெய்வம் அவருடைய ஆசையைப் பாழாக்கவில்லை. கடிதங்களை சார்ட் செய்து கொண்டே வந்தவர் பின்புறமாகக் கார்டின் அட்ரஸ் இருக்கும் அஞ்சலட்டையின் முதுகுப் பக்கத்தில் 'கௌரி அம்மாள் - 17, கனகம்மாள் தெரு' என்ற விலாச எழுத்துக்களைப் படித்துவிட்டுத் துள்ளிக் குதித்துப் பரவசமானார்! 'கடைசி

கடைசியாக இந்தப் பதினேழாம் நம்பருக்கு ஒரு பதில் வந்துவிட்டது. என்ன ஆனந்தம்!'

வெறும் கார்டுதான்! கார்டானாலும் அது ஒரு பதில்தானே? கார்டோ கவரோ கடிதம் என்பது செய்தியைத் தாங்கி வரும் ஒரு வாகனம். மதிப்பு என்னவோ எல்லாத்துக்கும் ஒண்ணுதான். 'இப்போதே 'பீட்'டின் மற்ற வீதிகளை யெல்லாம் விட்டு விட்டு நேரே போய் இதைப் பதினேழாம் நம்பர் வீட்டுப் பெண்ணின் கையில் கொடுத்து விட்டு உடனே ரிடையராகிவிட்டால் என்ன?' என்று ஆனந்தமும் பரவசமும் மேலிடத் தனக்குள் நினைத்தார் நாயுடு. ஆனால் அப்படிச் செய்ய முடியுமா? முறை என்று ஒன்று இருக்கிறதே? ஒன்பதாம் நம்பர் பீட் நாயுடுவின் ஆறு தெருக்களில் நான்காவது சுற்றில்தான் கனகம்மாள் தெருவே வரும். அன்று அவருக்கிருந்த குதூகலத்தில் மற்ற மூன்று தெருக்களையும் முக்கால் மணி நேரத்தில் சுற்றிக் கடிதங்களைப் பட்டுவாடா செய்துவிட்டு விரைவாகக் கனகம்மாள் தெருவுக்குப் பறந்தார். கனகம்மாள் தெருவுக்குள் நுழைந்தாலும், பதினேழாம் நம்பருக்கு முன்னால் பதினாறு வீடுகள் இருக்கின்றனவே? அதில் சராசரி பத்து வீட்டுக்காவது நாள் தவறாமல் கடிதங்கள் இருக்கும். பொறுமையாக அவற்றையும் பட்டுவாடா செய்து முடித்து விட்டு மேலாக இருந்த 'கௌரி அம்மாள் - பதினேழு - கனகம்மாள் தெரு' என்ற கார்டின் முதுகுப்புறத்தைப் புரட்டி, என்னதான் பதில் வந்திருக்கிறது? இந்தக் குருமூர்த்தி எங்கேதான் போய்த் தொலைந்திருக்கிறான்? தெரிந்து கொள்ளலாமே! என்ற ஆவலோடு முன் பக்கமாகத் திருப்பி அந்தக் கார்டைப் படித்தவர் அப்படியே பேயறை பட்டவர் போல் திகைத்து நின்றார். கண்களிலிருந்து நீர் வடிய ஆரம்பித்தது. உடம்பு கிடுகிடுவென்று நடுங்கியது. அதுவரை அவர்கள் குருமூர்த்திக்குக் கடிதமே எழுதித் தேடாது விட்டிருந்த ஒரு புதுச்சாமியாரின் மடத்திலிருந்து அக்கடிதம் வந்திருந்தது.

"ஸ்ரீமதி கௌரி அம்மாளுக்குக் கடுவன் மலை சித்தானந்த சாமிகள் மடத்துக் காரியஸ்தர் எழுதுவது : இதில் எழுதப் போகிற செய்தியைத் தாங்கிக் கொள்கிற மனப்பக்குவத்தையும் கடவுள்தான் உங்களுக்குக் கொடுக்க வேண்டும். உங்கள் கணவர் ஸ்ரீகுருமூர்த்தி அவர்கள் நம் சாமிகளைப் பார்க்க சில மாதங்களுக்கு முன் இங்கு வந்தார். வாழ்வில் தமக்கு மிகவும் போதாத காலமாகிவிட்டதென்றும் காரியசித்தி ஆக ஏதாவது பரிகாரத்தைக் கூற வேண்டும் என்றும் சாமிகளைக் கேட்டார். சாமிகள் 'சில மாதங்கள் இங்கே தங்கி மௌனவிரதம் இருந்து அதிகாலை ஐந்து மணிக்கு எழுந்து மலையுச்சியில் உள்ள கோவிலை ஒன்பது தரம் சுற்றிப் பிரார்த்திக்க வேண்டும். நாளடைவில் தனியாக ஒரு ஓட்டலே நடத்துகிற உயர்நிலை கைகூடும்' என்று உங்கள் கணவருக்குக் கூறியருளினார். சாமிகள் கூறியபடியே செய்து வருகையில் இரண்டு மூன்று தினங்களுக்கு முன் அதிகாலை இருளில் மலையைச் சுற்றும்போது மழை பெய்து வழுக்கலாயிருந்த பாறையில் சறுக்கி மலையிலிருந்து ஸ்ரீ குருமூர்த்தி அவர்கள் மூவாயிரம் அடி பள்ளத்தில் விழுந்து துர்மரணம் அடைந்துவிட்டார்கள் என்பதை மிக்க வருத்தத்துடன் தங்களுக்குத் தெரிவித்துக்கொள்கிறோம்."

"கடிதாசு ஒண்ணும் இல்லியா நாயுடு?"

நாயுடு அதைப் படித்து முடிப்பதற்குள் கௌரி தன் வழக்கமான கேள்வியுடன் குழந்தைகளோடு வாசலுக்கு வந்துவிட்டாள்.

இரண்டு நிமிஷங்கள் பதிலே சொல்லத் தோன்றாமல் கண்களில் நீர் பெருகிட அவள் முகத்தை ஏறிட்டுப் பார்த்த நாயுடு மிகுந்த பொறுப்புணர்ச்சியோடு மனத்தைத் திடப்படுத்திக் கொண்டு "ஒண்ணுமில்லிங்களே அம்மா!" என்று உடைந்த குரலில் பதில் சொல்லிவிட்டுத் தயங்கித் தயங்கி மேலே நகர்ந்தார். இருபத்தைந்து வருட காலத்துக்கு மேலாக நாணயமாகப் பணிபுரிந்த அந்தத் தபால்காரர், ரிடையராவதற்குச் சில மணி நேரங்களுக்கு முன் ஒரு விலாசதாரரின் கடிதத்தை அவரிடம் கொடுக்காமலே தனியாகவும் பத்திரமாகவும் எடுத்துப் போய்க் கிழித்தெறிகிற குற்றத்தைச் செய்யும்படி அன்று நேர்ந்துவிட்டது. அவர் அன்று மறைத்துவிட்டதனால் இந்த அவலம் வாழ்நாள் முழுவதுமே பதினேழாம் நம்பர் பெண்ணுக்கும் தெரியாமலிருந்துவிடப் போவதில்லை. ஆனால் அதை அவளிடம் கொடுத்து விட்டு அவள் படுகிற துயரைச் சகிக்கும் தைரியம் அல்லது கடுமை நாயுடுவிடம் இல்லை, என்றுதான் கூற வேண்டும். 'தபால்காரன் என்பவன் பலருடைய கடிதங்களைச் சுமந்து கொண்டு போய்ச் சேர்க்க வேண்டும். அப்படிச் சுமந்து கொண்டு போகிற கடிதங்களில் அவற்றை அடையப் போகிறவர்களின் சுகமும் இருக்கலாம், துக்கமும் இருக்கலாம். அதிர்ச்சியும் இருக்கலாம், ஆனந்தமும் இருக்கலாம். இருப்பினும் அவற்றைத் தபால்காரன் சுமப்பதில்லை என்பதுதான் உத்தியோகத்தைப் பொறுத்த வரையில் நாயுடுவின் சித்தாந்தம். ஆனால் இந்தப் பதினேழாம் நம்பர்ப் பெண்ணுக்குக் கடைசி நாளில் ஒரு நல்ல பதில் கடிதத்தைக் கொடுக்க முடியாமல் போன ஏக்கம் அவருடைய மண்டை உள்ள வரையில் வேகாது.

அன்று சாயங்காலம் தபாலாபீசில் போஸ்ட் மாஸ்டர் தலைமையில் நடந்த விருந்தில் தபால்காரர் சங்க யூனியன் காரியதரிசியாகிய அரசு இளம்பாலன் என்ற இளைஞர் "நாயுடு மலர்ந்த முகத்தினர், அவருடைய கால் நூற்றாண்டுக்கும் மேற்பட்ட சேவை நமக்கு ஓர் இலட்சியப் பாடம்" என்று ஏதேதோ பாராட்டிப் பேசினார். பக்கத்தில் உட்கார்ந்திருந்த நாயுடுவோ தலைகுனிந்து கண்ணீர் விட்டுக் கொண்டிருந்தார். அது ஆனந்தக் கண்ணீர் என்று மற்றவர்கள் நினைக்கலாம். உண்மையில் ஓர் அழகிய சுமங்கலிக்கு நேர்ந்துவிட்ட அவலத்தை மனத்தில் தாங்கி அவர் கண்கலங்கிக் கொண்டிருந்தார். பாற்கடலின் விஷத்தைத் தன் நெஞ்சில் வாங்கி வைத்துக் கொண்டு மற்றவர்களை எல்லாம் காப்பாற்றிய பரமசிவனைப் போல் பதினேழாம் நம்பருக்கு வந்த பதிலின் துக்கத்தை முழுவதும் தன் மனத்துக்குள் வாங்கி வைத்துக் கொண்டு நாயுடு அழுவது யாருக்குப் புரியும்?

**(கல்கி, 9.8.1964)**

## 95. ஒரு மான் + ஒரு வலை

இந்த முறை எப்படியும் அந்த அழகிய பறவை தன் வலையில் வந்து விழுந்துவிடும் என்றே அவன் உறுதியாக நம்பினான். இதற்கு முன்பு எப்போதும் அவனுடைய எந்த ஒரு கடிதத்துக்கும் அவளிடமிருந்து இப்படி ஒரு பதில் கிடைத்ததே இல்லை; அதாவது ஆதரவான பதிலும் கிடைத்ததில்லை. ஆட்சேபணையான பதிலும் கிடைத்ததில்லை. இப்போதுதான் முதன் முறையாக அந்தப் பூஞ்சிட்டு தன் பொன்னிறக் கரத்தினால் அவனுக்கு மறுமொழி எழுதியிருக்கிறது.

ஒரே ஒரு வரியில்தான் அந்தப் பதில் அமைந்திருந்தது. அதை ஒரு முழு வாக்கியம் என்றுகூடச் சொல்லிவிட முடியாது. 'உங்கள் விருப்பப்படியே - சாயங்காலம் ஆறு மணிக்கு ஆறுமுகம் பூங்காவில், மேற்குக் கோடியிலுள்ள புல்வெளியில் சந்திக்கலாம்' என்று தான் அதில் எழுதப்பட்டிருந்தது. ஒரு வாக்கியமானால் என்ன? முக்கால் வாக்கியமானால் என்ன? பதில் ஒன்று வந்திருக்கிறது என்பதே பெரிய காரியம்தான். பதிலே ஒரு நல்ல சூசகம். அந்தச் சிங்கார நளினக் குறுநகைச் செல்வியை எப்படியும் வசப்படுத்திவிட முடியும் என்ற நம்பிக்கை இப்போது அவனுக்கு இருந்தது. தேர்ந்த வேட்டுவனின் சாமர்த்தியத்துடனே இலக்குத் தப்பாமல் இடம் தப்பாமல் இந்த முறை வலையை வீசியிருந்தான் அவன். வீசுவதற்கென்ற தனி வலைகள் அவனுக்குத் தேவையில்லை. அவனே ஒரு பெரிய வலைதான். தன்னைப் பற்றிச் சக மாணவர்களும், கல்லூரியின் விரிவுரையாளர்களும், பேராசிரியர்களும் மறைவில் ஒரு தினுசாகப் பேசிச் சிரிப்பதும், தனக்குக் 'கோயில் காளை' என்று பட்டப் பெயர் சூட்டியிருப்பதும் அவனுக்குத் தெரியாத விஷயங்களல்ல; எந்த விஷயமானாலும் 'முயற்சி திருவினை ஆக்கும்' என்பதில் அவனுக்கு அயராத நம்பிக்கை. ஹாஸ்டல் செலவுகளுக்கும், பாக்கெட் மணிக்கும் மாதா மாதம் பிறந்தால் ஆயிரம் ரூபாய்க்குச் செக் அனுப்பி வைக்கிற பணக்காரத் தகப்பனுக்கு ஒற்றைக்கொரு மகனாயிருக்கிறவன். கொஞ்சம் தாராளமாகச் செலவு செய்தால்தான் என்ன குடி முழுகிப் போகிறதாம்?

பல வேளைகளில் அவன் தன்னைப் பற்றித் தனக்குத் தானே பின்வருமாறு நினைப்பதுண்டு.

'நான் வாழ்க்கையை அனுபவிக்கப் பிறந்தவன். இந்த மருத்துவக் கல்லூரியின் அதிகாரிகளும், நிர்வாகிகளும் பெண்கள் ஹாஸ்டலுக்கும், ஆண்கள் ஹாஸ்டலுக்கும் நடுவில் இவ்வளவு பெரிய சுவரை எழுப்பி விட்டதற்காகப் பெருமையும் திருப்தியும் பட்டுக் கொள்ளலாம். ஆனால் இந்தச் சிமெண்ட் சுவரையும் கடந்து போய் ஆர். எஸ். ராஜாவின் காரியங்களும்,செல்வாக்கும், காதல் கடிதங்களும் பரவ முடியும் என்பதை யாருமே மறுக்க முடியாது.'

அந்த மெடிகல் காலேஜ் எல்லைக்குள் அவன்தான் ராஜா. குறிப்பிட்ட ஏதாவதொரு கோணத்திலிருந்து பார்த்தால் மட்டும் ராஜாவானால் போனால் போகிறதென்று விட்டுவிடலாம். அவனோ எந்தக் கோணத்திலிருந்து பார்த்தாலும் எப்படிப் பார்த்தாலும் எப்போது பார்த்தாலும் ராஜாதான். தோற்றம், சக மாணவர்களுக்காகப் பணத்தைத் தண்ணீராகச் செலவழிப்பது, அழகும் தளுக்கும், மினுக்குமுள்ள பகட்டு நிறைந்த மாணவிகளை மாட்னி ஷோ'வுக்கு அழைத்துப் போவது, வருட ஆரம்பத்தில் புதிய மாணவ மாணவிகளை அளவுக்கதிகமாகவே 'ராகிங்' வம்புகளுக்கு ஆளாக்கி மகிழ்வது போன்ற பல காரியங்களில் ஏகசக்ராதிபதி அவன். 'ஒரு கொழுப்பு நிறைந்த கோயில் காளையின் திமிரும், மாதம் ஆயிரம் ரூபாய் செலவழிக்க முடிந்த ஒரு தத்தாரியின் அல்லது ஊதாரியின் சுகானுபவங்களும் உள்ளவன் எங்காவது ஒரு நல்ல மாணவனாக இருக்க முடியுமா?' என்று நீங்கள் கேட்க விரும்பலாம். நல்லவனாயிருப்பது வேறு; வல்லவனாக இருப்பது வேறு; இந்த இருபதாவது நூற்றாண்டில் பல விதத்திலும் நல்லவனாக இருப்பதைக் காட்டிலும் வல்லவனாக இருப்பதுதான் புத்திசாலித்தனமான காரியம். எனவே நமது திரு. ஆர்.எஸ். ராஜா நல்லவனாக இல்லாவிடினும் பல விஷயங்களில் வல்லவனாக இருந்தான். சீனியர் மாணவன் என்ற முறையில் மற்றவர்களையும் கட்சி சேர்த்துக் கொண்டு அந்த ஆண்டுக் கல்லூரித் தொடக்கத்தில் புதிதாக வந்த மாணவ மாணவிகளை ஆர்.எஸ். ராஜா படுத்திய 'ராகிங்' கொடுமைகளை மாதிரிக்குக் கொஞ்சம் பார்க்கலாம்.

சில மாணவிகளின் இரட்டைப் பின்னல்களில் ஊசிப் பட்டாஸ்கள் சரம் சரமாகக் கட்டி வெடிக்கப்பட்டன. மாணவர்களைப் பனியனோடு நிறுத்தி முதுகு வழியாகப் பனியனுக்குள் ஐஸ் கட்டிப் போடப்பட்டது. டான்ஸ் தெரிந்த தோஷத்திற்காக ஒரு புதிய மாணவி 'குறத்தி' டான்ஸுக்குரிய குறவஞ்சி வேஷம் போட்டுக் கொண்டு வரச்சொல்லி வற்புறுத்தப்பட்டாள். வேறு வழியின்றி அவளும் அப்படியே செய்ய வேண்டியதாயிற்று. இந்த மாதிரி 'ராகிங்' ஆர்.எஸ்.ராஜாவின் ஒவ்வொரு நாள் வாழ்விலும்கூட உண்டுதான். ஒரு பெரிய பணக்கார வியாபாரியின் ஏகபுத்திரனாகிய திரு. ஆர். எஸ். ராஜாவின் மருத்துவக்கல்லூரி வாழ்க்கையில் விசேஷ அம்சங்கள் இரண்டு. ஒன்று ஹாஸ்டல் முதலிய செலவுகளுக்காகவும் மாதா மாதம் ஆகிற ஆயிர ரூபாய்ச் செலவு. இரண்டு நாளொரு மாணவியும் பொழுதொரு கேர்ள் பிரெண்டுமாக அவன் சினிமா தியேட்டர்களையும் நவநாகரிக ஸில்க் புடவைக் கடைகளையும் சுற்றிக்கொண்டிருப்பது. இதைத் தவிர கிரிக்கெட் மேட்ச், ஸ்விம்மிங்பூல், பிக்னிக், கல்லூரியின் சக மாணவர்களோடு அரட்டை எல்லாம் வகைக்குக் கொஞ்சமாக அவனிடம் உண்டு; மாணவிகளை - அதுவும் கொஞ்சம் அழகாக நிறமாக இருக்கிற மாணவிகளைக் கண்டால் ஆர்.எஸ்.ராஜா வலுவில் போய் எதிர்கொண்டு சிரித்துச் சிரித்துப் பேசுவான். அவ்வளவு சொல்லுவானேன்? அவன் மற்றவர்களுக்கு விரிக்கிற வலை என்று தனியாக ஏதுமில்லை; அவனே ஒரு பெரிய வலைதான்!

"மிஸ் நளினி! யூ ஆர் லுக்கிங் ஸோ நைஸ் வித் திஸ் புளூ ஸாரி..." என்று திடீரென்று அந்த நளினியே வெட்கப்படுமாறு அந்த உடையின் வண்ண வனப்பை

அவளிடமே வியப்பான் திரு.ஆர்.எஸ்.ராஜா. வாயரட்டையிலும் தங்கள் அழகோடு சார்த்தப்பட்டு வெளிவரும் புகழிலும் மயங்காத பெண் பிள்ளைகளும் இந்த நவநாகரிக உலகில் உண்டா? எனவே திரு.ஆர்.எஸ்.ராஜாவின் புகழ் வலையில் விழுகிற மாணவி - பலவீனமான மனமுள்ளவளாயிருந்தால் அடுத்த சில நாட்களில் அவனோடு ஏதாவது ஒரு சினிமாத் தியேட்டரில் ஒரு மாடினி ஷோவில் அவளையும் சேர்த்துப் பார்க்கலாம்.

திரு. ஆர். எஸ். ராஜாவுக்கு மெடிகல் காலேஜில் பிராக்டிகல், தியரி என்று மாற்றி மாற்றி உயிரை எடுக்கும் வைத்திய சாஸ்திர வகுப்புகளிலே சொல்லிக் கொடுக்கப்படுகிற கனமான விஷயங்களைத் தவிர வெளி உலகிலுள்ள மற்ற எல்லா விஷயங்களும்தான் நன்றாகப் பிடிப்பட்டன. பெர்ரிமாஸான். குவாலிடி ஐஸ்கிரீம், புதுப்புதுத் திரைப்படங்கள், அவ்வப்போது அருகில் வந்து நெருங்கிப் பழகியதும் சலித்துப்போகிற ‘கேர்ள் ஃபிரண்டுகள்’, நல்ல கோல்ட் பிளேக் சிகரெட், பாய் மீட்ஸ் கேர்ள் கதைகள் இவற்றில் எல்லாம் சுவை இருந்த மாதிரி மெடிகல் காலேஜின் படிப்பில் அவனுக்குச் சுவை தெரியவில்லை. காரணம் ஒழுக்கமும், உழைப்பின் சிரமமும் தெரியாத ஒரு பணக்கார அப்பாவின் ஒரே ஒரு பிள்ளையாகப் பிறந்துவிட்ட அவனை மூப்புப் பிணி சாக்காடு அறியாதபடி ‘புத்தரை’ வளர்த்ததுபோல் படிப்பு, ஒழுக்கம், உழைப்பின் மகிமை அறியாத கோயில் காளையாக அவன் பெற்றோர் வளர்த்துவிட்டதுதான். புத்தி ஒன்றாவது ஏழையின் சொத்தாக இருப்பதற்குப் பணக்காரர்கள் மீதம் விட்டிருக்கிறார்களே என்பதுதான் திரு.ஆர்.எஸ்.ராஜாவைப் பார்த்து மற்ற ஏழை மாணவர்கள் பெருமைப்படுவதற்கு மீதமிருந்த ஒரே ஒரு விஷயம்.

பேராசிரியர்கள், விரிவுரையாளர்கள் அவனைக் கடிந்து கொண்டு ஒன்றும் சொல்வதில்லை. சொல்லவும் முடியாது. லைப்ரரி புத்தகத்தில் அல்லது நாவல் புத்தகத்தில் காதல் கடிதம் எழுதி வைத்து மாணவிகளிடம் கொடுப்பது, அதே போல் மடிப்புக் காகிதம் சொருகி வைத்து மாணவிகளைச் சினிமாவுக்கு அழைப்பது போன்ற காரியங்கள் அவனுடைய அன்றாடக் கல்லூரி வாழ்நாளில் சர்வ சகஜமாக நிகழ்பவை. அவர் தன்னைக் கவர்கிற கல்லூரி மான்களுக்கு விரிக்கிற முதல் வலை நேரிடையாகப் புகழ்வது, அல்லது புத்தகங்களில் கடிதம் வைத்துக் கொடுப்பதுதான். பெரும்பாலும் இந்த வலைகளில் மான்கள் விழுவதுண்டு. அபூர்வமாக விழாமல் போவதும் உண்டு. காலம் பொறுத்துத் தயங்கித் தயங்கி விலகிப்போய்ப் பின்னால் நிதானமாக வந்து விழுகிற மான்களும் உண்டு. வலையை அறுக்கிற அளவு வன்மையான முரட்டு மான்கள் அவனிடம் இதுவரை எதிர்ப்பட்டதே இல்லை.

அந்த வருடம் முதலாண்டு எம்.பி.பி.எஸ்ஸில் சேர்ந்திருக்கிற புள்ளிமான் ஒன்றிற்குக் குறிவைத்து ஆர்.எஸ்.ராஜா வீசிய வலைகள் எல்லாம் கடந்த ஆறு மாத காலமாகத் தப்பிக் கொண்டேயிருந்தன. அந்தப் புள்ளிமானின் பெயர் மனோரஞ்சிதம். வயது - அதைப் பதினேழு என்றோ பதினெட்டு என்றோ நம்பரில் சொல்வதைவிட - ‘இளமை மெருகேறி நகை புரியும் இன்ப வாலிபம்’ என்று இப்படிப் பாஷையால் சொல்வதுதான் சாலப் பொருத்தம்.

மனோரஞ்சிதத்தின் நடை, உடை, புன்னகை, பேச்சு, குரல், சரீர வாளிப்பு எல்லாவற்றையும் பார்த்துப் பார்த்து நமது கதாநாயகனான திரு.ஆர்.எஸ்.ராஜா நாளுக்கு நாள் உருகிக் கொண்டிருந்தான். கடைசியில் அந்த உருக்கத்துக்கும் தவிப்புக்கும் இப்போது வழி பிறந்துவிட்டது.

அவன் புத்தகங்களில் சொருகிச் சொருகி அனுப்பிய காதல் கடிதங்களுக்கும், நேரில் குழைந்து குழைந்து பேச முயன்ற காதல் மொழிகளுக்கும் செவி சாய்க்காமல் மில்லியன் டாலர் பெறுகிற ஒரு மயக்குப் புன்னகையை மட்டும் உதிர்த்துவிட்டு அலட்சியமாகப் போய்க் கொண்டிருந்த மனோரஞ்சிதப் புள்ளிமான் கடைசியில் அவனைச் சந்திப்பதற்கு ஆறுமுகம் பூங்காவைத் தேடி வருவதாக இப்போது இப்படி ஒப்புக் கொண்டுவிட்டது. அவன் இந்த மனோரஞ்சித மானுக்கு எழுதிய கடைசிக் கடிதத்தில் அவள் புகைப்படம் ஒன்றைக் கேட்டு வைத்திருந்தான்; ஒருவேளை அவள் புகைப்படத்தோடு வந்தாலும் வரலாம் என்ற எண்ணம் ஞாபகம் வரவே அவளிடம் கொடுப்பதற்குத் தன்னுடைய புகைப்படம் ஒன்றையும் உடனே தயார் செய்து ஞாபகமாக எடுத்து வைத்துக்கொண்டான் திரு.ஆர்.எஸ். ராஜா. அன்று அவனுடைய நினைவில் ஆறுமுகம் பூங்காவையும் சாயங்காலம் ஆறுமணியையும் அங்கு தன்னைச் சந்திக்க வரப்போகும் மனோரஞ்சித மானைப் பற்றியுமே எண்ணங்கள் மோதிச் சுழன்று கொண்டிருந்தன.

'ஏ! ஆர். எஸ். ராஜா! உனக்கு மற்றவர்களை வளைக்க வேறு வலை எதற்கடா? நீயே மற்றவர்களை வீசிப் பிடிக்கும் ஒரு பெரிய வசீகர வலையாயிற்றே?'

இது நிற்க. ஆறுமுகம் பூங்காவைப் பற்றி இங்கு சில வார்த்தைகள் அவசியம் சொல்லியாக வேண்டும். அந்த மெடிகல் காலேஜ் கட்டிடங்களின் வலது பக்கத்தில் பெண்கள் ஹாஸ்டலுக்கும் மாணவர்கள் ஹாஸ்டலுக்கும் பின்புறமாக உள்ள சந்து வழியைக் கடந்து பத்தடி நடந்தால் எதிரே தென்படும் இந்தப் பெரிய பூங்காவின் முக்கியத்துவம் அந்தக் கல்லூரியின் ஒவ்வொரு மாணவனுக்கும் தெரியும். அந்தக் காலேஜின் 'லவ் மியூஸியம்' அல்லது 'லவ்வர்ஸ் வாக்' இதுதான். அந்த நகரில் எந்தக் காலத்திலோ முனிசிபல் சேர்மனாக இருந்து மறைந்துவிட்ட யாரோ ஓர் ஆறுமுகத்தின் பெயரையே இந்தப் பூங்காவுக்கு வைத்திருந்தார்கள். வகுப்புகளுக்கு மட்டம் போடுகிற மாணவர்கள் போய் உட்கார்ந்து மற்ற மாணவ மாணவிகளிடம் அரட்டை அடிக்கிற இடமும் இந்த ஆறுமுகம் பூங்காதான். சில நாட்களில் வகுப்புகளிலே அட்டெண்டன்ஸ் நிறையும்படி பிரஸண்ட் போட வேண்டுமானால் ரிஜிஸ்தரை இந்தப் பூங்காவுக்கே எடுத்துவந்துவிட வேண்டும் போல நிலைமை அவ்வளவு மோசமாகிவிடும். சுருக்கமாகச் சொல்ல வேண்டுமானால் ஆறுமுகம் பூங்கா அந்த மெடிகல் காலேஜின் பிருந்தாவனமாக இருந்தது. மாணவர்களாகிய கோபாலர்கள் கோபிகைகளை நாடும் கலியுக பிருந்தாவனமாக ஆறுமுகம் பூங்கா விளங்கி வந்தது என்று வேண்டுமானால் இன்னும் தெளிவாக வைத்துக் கொள்ளுங்களேன்.

அன்று ஒரு வெள்ளிக்கிழமை. மேற்படி சுபயோக சுபதினத்தில் சரியாகச் சாயங்காலம் ஆறு மணிக்குப் படிய வாரிவிட்ட தலையும் நன்றாக டிரஸ்செய்து

கொண்டிருந்த தோற்றமுமாக ஒரு காதல் கதாநாயகனுக்குரிய சகல லட்சணங்களுடன் ஆறுமுகம் பூங்காவின் தென் திசைக்கோடியில் - யமன் திசையில் பிரவேசித்தான் நமது கதாநாயகனாகிய திரு. ஆர். எஸ். ராஜா. மிஸ் மனோரஞ்சிதம் அங்கே அவனை எதிர்பார்த்துத் தயாராகக் காத்திருந்தாள். மஞ்சள் வாயில் புடவையும் நீலப்பட்டு ரவிக்கையும் ரோஸ் தாவணியுமாக மனோரஞ்சிதம் அன்று பிரமாதமாக டிரஸ் செய்து கொண்டு வந்திருந்தாள். அவளுடைய 'மில்லியன் டலார் ஸ்மை'லாகிய அந்தக் கவர்ச்சிக் குறுகை அவனை வரவேற்றது. அவளருகே ஒட்டினாற்போல் அமர்ந்துகொண்டு,

"ஓ! யூ ஆர் லுக்கிங் வெரி நைஸ் டு டே.... ஸோ ப்யூட்டி புல்..." என்று வழக்கம் போலவே கம்பீரமாக ஆரம்பித்தான் திரு. ஆர். எஸ். ராஜா. அவள் அதை அவ்வளவு சுவாரஸ்யமாகவோ இலட்சியம்செய்தோ கேட்காவிட்டாலும் போலியாக நாணுவதுபோல நடித்தாள். கையில் கொண்டு வந்திருந்த சிறிய காகித உறையைப் பிரித்துத் தன்னுடைய புகைப்படத்தை அவள் புல் தரையில் மௌனமாகச் சிரித்துக்கொண்டு எதிரே எடுத்து வைத்தவுடன் - தனக்காகத்தான் அவள் அதை கொடுக்கிறாள் என்று எண்ணிக் கொண்ட அசட்டு ஆர்.எஸ்.ராஜா உடனே தன்னுடைய சட்டைப் பையிலிருந்து தனது புகைப்படத்தை எடுத்து அவள் படத்துக்குப் பதிலாக மாற்றிக் கொள்வதுபோல் புல் தரையில் எதிரே வைத்தான். அவன் தன் படத்தை எடுத்து எதிரே வைத்ததைப் பார்த்ததும் அவள் பொறுக்க முடியாமல் கொல்லென்று சிரித்துவிட்டாள்.

ஆ! அது ஒரு ஐம்பது மில்லியன் டாலர் பெறுகிற சிரிப்பாக இருந்தது.

"என்ன மிஸ்டர் ராஜா விளையாடுகிறீர்களா நீங்கள்? வருகிற மாதம் நம் மாணவர் யூனியனிலிருந்து ஷயரோக நிவாரண நிதிக்காக வெளியிடப் போகிற சிறப்பு மலருக்குக் கட்டுரை கொடுப்பவர்களும், புகைப்படம் கொடுப்பவர்களும் உங்களிடமே தரவேண்டுமென்று முந்தாநாள் சர்க்குலர் வந்ததே? நீங்களே அதை மறந்து விட்டீர்களா? நாங்களெல்லாருமே உங்களிடம் படத்தைக் கொடுக்க வேண்டியிருக்க நீங்கள் உங்களது படத்தை என்னிடம் கொடுத்து என்ன ஆகப்போகிறது? இரண்டு படமும் உங்களிடமே இருக்கட்டும்."

இதைக் கேட்டதும் ஆர்.எஸ்.ராஜாவின் முகத்தில் நிச்சயமாக அசடு வழிந்தது. அவன் தன்னுடைய நூற்றுக்கு நூறு சதவிகித ஏமாற்றத்தை வெளிக்காட்டிக் கொள்ளாமல்,

"மலரில் வெளியிட 'பிளாக்' எடுத்ததும் உங்களது இந்தப் படத்தை நானே வைத்துக் கொள்ளப்போகிறேன் மிஸ் மனோரஞ்சிதம்!" என்றான் திரு.ஆர்.எஸ்.ராஜா.

"ஓ! பேஷாக வைத்துக்கொள்ளுங்கள் மிஸ்டர் ராஜா! இதோ இப்பொழுதே படத்தின் பின்புறம் உங்களுக்கென்று எழுதிக் கையெழுத்துக்கூடப் போட்டுத் தந்துவிடுகிறேன்" என்று கூறியபடியே அந்தப் படத்தை எடுத்து, 'அருமைச் சகோதரர் மாணவ நண்பர், திரு.ஆர்.எஸ்.ராஜா அவர்களுக்கு என் நினைவாக' என்று எழுதிச்

சிரித்துக் கொண்டே அவள் கையெழுத்திட்டபோது ஆர்.எஸ்.ராஜாவின் முகத்தில் அசடு வழிவது மாறித் தீர்மானமாக அரை லிட்டர் ஆயிலே வழிந்தது.

"பரவாயில்லை மனோரஞ்சிதம், உங்களது படத்தை நான் உங்கள் ஞாபகமாக வைத்துக் கொள்வதுபோல் என் ஞாபகமாக நீங்கள் எனது இந்தப் படத்தையாவது வைத்துக் கொள்ளலாம்" என்று அவன் தன் படத்தை எடுத்து அவளிடம் நீட்டியபோது,

"நோ! நோ! வெறும் படத்தைச் சும்மா கொடுத்தால் எப்படியாம்? ஏதாவது எழுதிக் கையெழுத்துப் போட்டுக் கொடுத்தால்தான் நல்லது; இதோ நானே உங்கள் படத்தின் பின்புறம் எழுதுகிறேன்; நீங்கள் கையெழுத்து மட்டுமாவது போட்டுக் கொடுங்கள்" என்று சொல்லி மூன்றாவது முறையாகவும் ஒரு மில்லியன் டாலர் 'ஸ்மைலை' உதிர்த்துவிட்டு 'என் உடன்பிறவாச் சகோதரி அருமைத் தங்கை மனோரஞ்சிதத்துக்கு என் பாசத்தின் நினைவாக' என்று எழுதி - அப்படி எழுதியதைக் கையால் மறைத்துக்கொண்டு, "ப்ளீஸ்! இங்கே கீழே ஒரு கையெழுத்து மட்டும் போடுங்க" என்றதும் ஆர்.எஸ்.ராஜா, அவள் சுட்டிக்காட்டிய இடத்தில் உடனே கையெழுத்துப் போட்டுவிட்டான். தேதியும் போடச் சொல்லிவிட்டு மற்றொரு மில்லியன் டாலர் ஸ்மைலை அவள் உதிர்த்தாள். ஆர்.எஸ்.ராஜா தேதியும் போட்டுக் கொடுத்தபிறகு தான் அவள் மேலே மறைத்திருந்த தன் கையை எடுத்தாள். 'உடன் பிறவாச் சகோதரி மனோரஞ்சிதத்துக்கு' என்பது போல அங்கு எழுதியிருந்ததைப் பார்த்தவுடனே ஆர்.எஸ்.ராஜாவின் முகத்தில் இன்னும் அரை லிட்டர் ஆயில் அதிகமாக வழிந்தது. ஆர்.எஸ்.ராஜா முயற்சி திருவினை ஆக்குவதில் இப்போது இறுதி யாக நம்பிக்கை இழந்தான். அந்தகோ! அவனுக்கு உங்கள் அனுதாபங்கள் தேவை!

இப்போது அவள் தொடங்கினாள். "பை தி பை மிஸ்டர் ஆர்.எஸ்.ராஜா! நான் இன்னிக்கு உங்களை இங்கே சந்திக்க வந்ததே ஒரு முக்கியமான காரியமாகத்தான். அதை மறந்தே போயிட்டேனே... பேரண்ட்ஸ்கிட்ட இருந்து மணியார்டர் இன்னும் வரல்லே, ஹாஸ்டல் பீஸ் கட்டணும்... ஷாப்பிங் வேறே இருக்கு. ஒரு நூறு ரூபாய் பணம் அவசரமா வேணுமே... உங்களுக்கு ரொம்ப இளகின மனசுன்னு எல்லாருமே சொல்லிக் கேள்விப்பட்டிருக்கேன். நீங்க அவசியம் இப்பவே தந்துதான் ஆகணும். ஒன் வீக்கிலே இதை நான் திரும்பத் தந்துடுவேன்."

உடனே ஆர்.எஸ்.ராஜா தன் சட்டைப் பையிலிருந்து நல்ல சலவை நோட்டுக்களாகப் பத்துப் பத்து ரூபாய் நோட்டுக்களை எடுத்து எண்ணி அவளிடம் கொடுத்தான். அவள் அதை வாங்கிக் கொண்டு ஒரு மில்லியன் டாலர் ஸ்மைலை ஐந்தாவது தடவையாக உதிர்த்துவிட்டு, "அகோ! சுந்தர கேசரிப் பதுமையே கேளும்!" என்கிற விக்கிரமாதித்தன் கதைப்பாணியில் அவனைக் கோபத்தோடு விளித்துப் புகல்வாள்.

"மிஸ்டர் ராஜா!... நன்றாகக் கேட்டுக் கொள்ளும்! இனிமேல் நீர் யாரிடமாவது என்னைக் காதலிப்பதாகப் பேசிக் கொண்டு திரிந்தாலோ, எனக்கே புத்தகத்தில் கடிதம்

வைத்துக் கொடுத்தாலோ, இந்தப் போட்டோவில் 'உடன் பிறவாச் சகோதரிக்கு' என்று நீரே எழுதிக் கையெழுத்திட்டிருப்பதைக் காண்பித்து உம்முடைய மானத்தை வாங்கிவிடுவேன். அப்புறம் மரியாதை தவறிவிடும். என்ன என்று நினைத்துக் கொண்டிருக்கிறீர் நீர்? கண்ட கண்ட இடத்தில் எதிரே வந்து நின்று பல்லை இளிப்பதும், குழைவதும் கொஞ்சம்கூட நன்றாயில்லை. நாங்களெல்லாம் படிப்பதற்காக ஆயிரம் சிபாரிசு பிடித்து அலைந்து மெடிகல் காலேஜ் அட்மிஷனுக்கு வழி செய்து கொண்டு மிக மிகச் சிரமப்பட்டு இங்கே வந்திருக்கிறோம். உம்மைப் போன்ற சோம்பேறிகளைக் காதலிப்பதைவிட எத்தனையோ முக்கியமான காரியங்களெல்லாம் எங்களுக்கு இருக்கின்றன."

திரு.ஆர்.எஸ். ராஜாவுக்கு ஒரே அதிர்ச்சி. அவன் வழக்கம்போல் மானுக்கு வலை விரித்தான். வழக்கமில்லாத அபூர்வமாக அதில் ஒரு புலிக்குட்டி வந்து விழுவதுபோல் விழுந்து அவனையும் அவன் வலையையும் சேர்த்தே கடித்துக் குதறி எறிந்துவிட்டது.

"ரெண்டு மூணு தமிழ் சினிமாப் படத்திலே வர்ர காதல் சீனைப் பார்த்துவிட்டு அஞ்சாறு தமிழ்ப் பத்திரிகையிலே வர்ர 'பாய் மீட்ஸ் கேர்ள்' கதைகளைப் படிச்சிப்பிட்டு இனிமேலாவது இப்படி அசடாகத் திரியாதீர் மிஸ்டர் ஆர்.எஸ்.ரா!" என்று கடைசியாக அவள் இரைந்து சாடி விட்டுப் புலியாக எழுந்து விரைந்தபோது நமது கதாநாயகனான ஆர்.எஸ்.ராஜா ஆறுமுகம் பூங்காவின் புல் தரையில் நிராதரவாகக் கிடந்தான்.

'அவன் விரிப்பதற்குத் தனி வலை தேவையில்லை. அவனே ஒரு பெரிய வலை' என்ற அவனது ஆதிகாலத்து ஒரிஜினல் புகழ் அன்றுடன் காலாவதி ஆனதுபோல் பாவித்துக்கொண்டு காதல் போர்க்களத்தில் தோற்ற தோல்வியைக் கொண்டாடு முகத்தான் அன்றிரவே ஒரு முழுப் பெர்ரி மாஸானையும் - இருபது 'பாய் மீட்ஸ் கேர்ள்' கதைகளையும் ஒரே மூச்சில் படித்துவிட்டு அப்புறம் நம் திரு. ஆர். எஸ். ராஜா தூங்க முயன்ற சமயத்தில் இநத் உலகத்தில் பொழுது விடிந்திருந்தது! பாவம்! அதனால் என்ன? விடிந்தால் தூங்கக்கூடாதென்று யார் சொன்னது? இரவில் தூங்காமல் இருப்பதற்கு நம் ஆர்.எஸ்.ராஜாவுக்கு எவ்வளவு உரிமை உண்டோ அவ்வளவுக்குப் பகலில் தூங்குவதற்கும் உரிமை உண்டு. "காலேஜ் என்ன ஆகிறது? படிப்பு என்ன ஆகிறது?" என்று நீங்கள் கேட்கிறீர்களா? அதற்காகவா நம் ராஜா இங்கு வந்திருக்கிறான்? பெர்ரி மாஸன், குவாலிடி ஐஸ்கிரீம், கோல்ட்பிளேக் சிகரெட், 'பாய் மீட்ஸ் கேர்ள்' கதைப் புத்தகங்கள், கேர்ள் ஃப்ரண்ட்ஸ், மாட்னி ஷோ - இப்படி எவ்வளவோ இருக்கும்போது படிப்பு ஒன்றை மட்டும் கட்டிக் கொண்டு அழ யாரால் முடியும்? யாரால் முடிந்தாலும் நம் ஆர்.எஸ்.ராஜாவுக்கு அந்தத் தாகமெல்லாம் வருவதற்குக் குறைந்த பட்சம் அவன் சோற்றுக்கு லாட்டரி அடிக்கிற ஏதாவதொரு ஏழைக் குடும்பத்திலாவது பிள்ளையாகப் பிறந்திருக்க வேண்டுமோ என்னவோ?

**(கல்கி, 15.11.1964)**

# 96. பிரதிபிம்பம்

அந்த வாரப் பத்திரிகைக்காரர்கள் ஃபோன் செய்தபோது முதலில் மேனகாதேவி சரி என்றுதான் சொல்லியிருந்தாள். ஆனால் சிறிதுநேரம் கழித்து இரண்டாவது எண்ணமாக அதற்குச் சம்மதித்திருக்க வேண்டாமோ என்றும் தோன்றியது அவளுக்கு. தன் வயதென்ன, அனுபவம் என்ன, முதுமை என்ன? - யாரோ ஒரு முந்தாநாள் கத்துக்குட்டி நடிகையைத் தான் எதற்காகச் சந்தித்து அவளோடு சரிசமமாக எதிரும் புதிருமாய் உட்கார்ந்து பேசுவது என்று எண்ணியபோது முதலிலேயே சரி என்று சொல்லியிருக்க வேண்டாமோ என்று இப்போது பட்டது அவளுக்கு.

ஒரு வாரப் பத்திரிகை சமீபகாலமாக இரண்டு தலைமுறைகள் என்ற தலைப்பின் கீழ் தொழில், கலை, அரசியல் ஆகிய துறைகளில் ஐம்பது வயதை எட்டிய பிரமுகர் களையும், அப்போதுதான் அடியெடுத்து வைக்கும் இளம் தலைமுறையினரையும் சந்திக்கச் செய்து அவர்கள் பேசுவதைத் தொகுத்து வெளியிட்டு வந்தது.

அதில் கலை என்ற வகையில் முந்திய தலைமுறையின் சிறந்த நடிகையாகிய தான் இளைய தலைமுறையின் புதிய நடிகையான குமாரி ஜெயமாலாவைச் சந்தித்து உரையாட வேண்டும் என்று பத்திரிகைக்காரர்கள் கேட்டபோது மறுத்துச் சொல்லாமல் சம்மதித்திருந்தாலும் இப்போது மீண்டும் எண்ணியபோது அந்தச் சந்திப்பு வேண்டாமென்று பட்டது மேனகாதேவிக்கு. மறுபடியும் அந்தப் பத்திரிகைக்காரர்களைக் கூப்பிட்டுத் தனது சம்மதமின்மையை எப்படிச் சொல்வதென்று இப்போது மேனகாதேவி யோசித்துக் கொண்டிருந்தாள்.

'இசையிலும் நடிப்பிலும் சக்கரவர்த்திகளைப் போல் விளங்கிய கடந்த காலக் கதாநாயகர்களோடு நடித்துப் புகழ்பெற்ற நான் எப்படி இந்த ஊர் பேர் தெரியாத புது நடிகையைச் சந்தித்துப் பேச ஒப்புக்கொண்டேன்?' - என்று எண்ணியபோது அவள் மனம் அதற்கு மறுத்தது.

நேரடியாக மறுப்பதற்குப் பதில் சாக்குப் போக்குச் சொல்லியே அதைத் தட்டிக் கழித்துவிடலாம் என்று மேனகாதேவி எண்ணினாள்.

நகரில் உள்ள ஏதோ ஓர் ஐந்து நட்சத்திர ஓட்டலில் பகல் உணவுக்கோ இரவு டின்னருக்கோ ஏற்பாடு செய்து அங்கேயே அவர்கள் சந்திக்கவும், பேசவும், அதை அந்தப் பத்திரிகைக்காரர்கள் சுருக்கெழுத்தில் குறிப்பெடுத்துக் கொள்ளவும் திட்டமிடப்பட்டிருந்தது.

"என்னால் ஓட்டலுக்கெல்லாம் வர முடியாது. யார் என்னைப் பார்த்துப் பேச வருவதானாலும் என் வீட்டுக்குத்தான் வர வேண்டும்" என்று சொல்லிச் சந்திப்பதைத் தட்டிக் கழித்துவிட எண்ணினாள் மேனகாதேவி. அந்த நிபந்தனைக்குக் குமாரி ஜெயமாலா ஒப்புக்கொள்ளமாட்டாள் என்று மேனகாதேவி நினைத்துக் கொண்டிருந்தாள்.

ஆனால் அதுவும் பலிக்கவில்லை. மேனகாதேவி போன் செய்து அந்தப் பத்திரிகைக்காரர்களிடம் தன்னால் ஓட்டலுக்கு வர முடியாது என்று கூறிய பத்து நிமிஷங்களுக்கெல்லாம் மறுபடியும் அவர்களே அவளை போனில் கூப்பிட்டு 'உங்கள் வீட்டுக்கே வந்து உங்களைச் சந்திப்பதில் தனக்கு முன்னைவிட அதிக மகிழ்ச்சி என்று ஜெயமாலா தெரிவிக்கச் சொன்னார்!' என்பதாகக் கூறிவிட்டார்கள்.

என்னவென்று பெயர் சொல்லிச் சுட்டிக்காட்ட முடியாத ஓர் உணர்வு காரணமாக அந்த இளம் நடிகை குமாரி ஜெயமாலாவை வெறுத்தாள் மேனகாதேவி. புதிதாகத் தலையெடுத்து வந்திருக்கும் அத்தனை இளம் நடிகைகளும் தத்தாரிகள், ஓடுகாலிகள் என்பதுபோல் ஓர் அசூயை அவள் மனத்தில் புகைந்தது. அதைத் தனியாக அசூயை என்று மட்டுமே சொல்லிவிட முடியாது. கலைஉலகின் பொற்காலம் எல்லாம் தன் நாட்களோடு தீர்ந்து போய்விட்டது என்று நினைக்கும் ஒருவித மனப்பான்மையோடு அதன் மறுபுறமாக இந்த அசூயையும் கலந்திருந்தது.

அதோடு கொஞ்சம் நிதானமாக யோசித்துப் பார்த்ததில் அந்தப் பத்திரிகைக் காரர்களின் குறும்பும் புரிந்தது; தான் ஏதோ மறைந்துவிட்ட தலைமுறையைச் சேர்ந்த ஒரு நட்சத்திரம் போலவும் அந்தக் குமாரி ஜெயமாலா வளரும் தலைமுறையைச் சேர்ந்த ஒரு நட்சத்திரம் போலவும் அபிப்பிராயம் வரும்படி பேட்டியை அவர்கள் அமைத்திருப்பதாகத் தோன்றியது. அதையே ஒரு குற்றச்சாட்டாகச் சொல்லி அதற்கு இணங்காமல் மறுத்துவிடலாமா என்று யோசித்தாள் மேனகா.

இந்த யோசனைப்படி மேனகாதேவி தன் ஆட்சேபணையைச் சொல்லியபோது பத்திரிகை ஆசிரியர் அதை மிகவும் நாசூக்காக மறுத்துவிட்டார்.

"பேட்டி உங்களுடைய சர்வீசையும் ஸீனியாரிட்டியையும் பெருமைப் படுத்துகிற மாதிரித்தான் இருக்கும். இதில் உங்களுக்குக் கொஞ்சம்கூடச் சந்தேகமே வேண்டாம்..."

மேனகாதேவிக்கு மனம் ஒரு நிலைக்கொள்ளாமல் தவித்தது. அப்போது பகல் மணி மூன்று. ஏர்க்கண்டிஷன் செய்யப்பட்டிருந்த படுக்கை அறைக் கதவைத் திறந்து கொண்டு உள்ளே வந்து வேலைக்காரி காப்பி டிரேயை வைத்து விட்டு, "அம்மா, காப்பி" என்று குரல் கொடுத்தாள்.

"முத்தம்மா! இந்தா! உன்னைத்தான்... வெளியிலே ஹாலுக்குள்ளார டீப்பாயிலே கிடக்கிற பத்திரிகை புஸ்தகங்களையெல்லாம் இங்கே கொண்டு வந்து வை" என்று வேலைக்காரிக்கு உத்தரவு போட்டுவிட்டு முகங்கழுவிக் கொள்ள எழுந்து போனாள் மேனகாதேவி.

குளியலறையிலிருந்து அவள் திரும்பவந்து காப்பி குடிக்க அமர்ந்தபோது பல வண்ண அட்டைகளோடு கூடிய ஐந்தாறு சினிமாப்பத்திரிகைகளும், தினசரிகளும் அங்கே காப்பி டிரே அருகில் கொண்டு வந்து வைக்கப்பட்டிருந்தன.

அந்தப் பத்திரிகைகளில் சிலவற்றில் மேனகாதேவியை அன்றிரவு ஏழரை மணிக்குச் சந்திக்கப் போகும் குமாரி ஜெயமாலாவின் படங்கள், வாழ்க்கை வரலாறு குறிப்புக்கள் எல்லாம் வந்திருந்தன. அதில் ஒரு பத்திரிகை ஜெயமாலாவின் மூவர்ணப்படம் ஒன்றை அட்டையிலேயே பிரசுரித்திருந்தது. ஜெயமாலா மிகவும் அழகாயிருந்தாள். அவளுடைய முகமும், கண்களும் துறுதுறுவென்று அழகாக இருந்தன. முல்லை அரும்புகள் சரம் கோர்த்தது போல் படத்தில் காண்போர் மயங்கச் சிரித்துக் கொண்டிருந்தாள் ஜெயமாலா. ஒல்லியுமில்லை, பருமனுமில்லை, அழகாக, அளவாக உடற்கட்டு.

ஜெயமாலாவின் படத்தைப் பார்த்ததும் திடீரென்று தன்னுடைய இளமைக்காலத்து ஆல்பங்களை எடுத்துப் பார்க்க வேண்டும் என்று மேனகாதேவிக்கு ஆசையாயிருந்தது. எதிரே தன் அறையில் ஒரு பீரோ நிறைய ஆல்பங்கள் இருந்தன. பீரோவைத் திறக்குமுன் அதில் பதிந்திருந்த ஆளுயர நிலைக்கண்ணாடியில் தன் உருவத்தைத் தானே ஒருமுறை நன்றாகப் பார்த்துக் கொண்டாள் மேனகாதேவி.

கண்ணாடியின் மேல் அவளுக்குக் கோபம் கோபமாக வந்தது. இன்னும் தன் கண்களுக்குள் அப்படியே நினைவிருக்கும் கட்டுவிடாத நெருக்கமான ஜெயமாலாவின் முல்லைப் பல் வரிசையை மறக்க முடியாமல் தன் பற்களைக் கண்ணாடியில் பார்த்துக் கொண்டபோது மேனகாதேவிக்குப் பெருத்த ஏமாற்றமாக இருந்தது.

“இளமைக்கும் உனக்கும் இடைவெளி அதிகமாகிறது என்பதற்கு முன்னடையாளமாக உன் பல் வரிசையில் இடைவெளி அதிகமாகும்” என்று எங்கோ படித்திருந்தது அவளுக்கு நினைவு வந்தது. நேற்று வரை சகித்துக்கொள்ளவும் ஏற்றுக் கொள்ளவும் முடிந்த அந்த முதுமை இன்று உறுத்துவது போலிருந்தது. தன் முதுமையைத் தானே ஏற்றுக் கொள்ளவும் அங்கீகரிக்கவும் அவள் அருவருப்புக் கொண்டாள்.

நிகழ்கால முதுமையை மறக்கவும் மறைக்கவும் அந்தப் பழைய ஆல்பங்கள் பயன்படும் என்பதனால் பீரோவின் கதவைத் திறந்து ஆல்பங்களை எடுத்தாள் அவள்.

ஒவ்வோர் ஆல்பமாகப் பார்க்கப் பார்க்க நேரம் போனதே தெரியவில்லை. இளமையில் இன்று ஜெயமாலா எப்படி இருக்கிறாளோ இதைவிட தான் அழகாயிருந்திருக்கிறோம் என்று பெருமையாயிருந்தது அவளுக்கு.

மாலை மணி ஆறு. இரண்டு மூன்று மணி நேரம் எப்படி ஓடியதென்றே தெரியவில்லை. நாடக மேடைக் காலத்திலிருந்து எடுத்த பல புகைப்படங்களைப் பார்த்ததில் மேனகாவுக்குத் தெம்பு பிறந்தாற்போலிருந்தது.

இப்போது தன்னுடைய கடந்த காலத்தின் சாதனைகளையெல்லாம் நினைவு கூர்ந்துவிட்டு மறுபடியும் எண்ணியபோது ஜெயமாலாவைப்போல் ஒரு கத்துக்-குட்டியை நினைத்துத் தன்னைப்போல் ஒருத்தி பொறாமைப்பட்டதே தவறென்று தோன்றியது அவளுக்கு.

*சிங்கம் கொசுவை நினைத்துப் பொறாமைப்படுவதாவது?*

டெலிபோன் மணி அடித்தது. வேலைக்காரி இருந்தால் போனை முதலில் அவள்தான் எடுத்து யார் என்று கேட்க வேண்டும். அவள் இல்லாததால் மேனகாதேவியே போனை எடுத்தாள்.

எதிர்ப்பக்கம் ஓர் இனிய குரல் ஒலித்தது.

"வணக்கங்க. நான்தான் ஜெயமாலா பேசறேன்."

"உம்ம்... வணக்கம். என்ன விஷயம்?..."

"ஒண்ணுமில்லேங்க... அதான் அந்தத் 'தாழம்பூ' வார இதழ் பேட்டி விஷயமா உங்க வீட்டுக்கு வரணுமே...?"

"எப்படி வரப்போறீங்க? நான் வண்டி அனுப்பட்டுமா? டாக்ஸின்னா கிடைக்கிறது கஷ்டம்... செலவும் ரொம்ப ஆகும்..."

"அதொண்ணும் சிரமமில்லீங்க... எங்கிட்ட ஒரு சின்ன வண்டி இருக்கு... டிரைவர் இன்னிக்கு வரலே... அவன் வரலேன்னா எப்பவாவது நானும் ஓட்டறதுண்டு; இன்னிக்கு உங்க வீட்டுக்கு நானே ஓட்டிக்கிட்டு வரலாம்னு இருக்கேன்."

"நாலு படத்திலே நடிக்கிற பொண்ணு நீயே காரை ஓட்டிக் கிட்டு வந்தால் தெருவிலே வேடிக்கை பார்ப்பாங்களே...?" முதலில் கொடுத்த 'நீங்க' மரியாதையை மாற்றி மேனகாவே 'நீ' போட்டாள்.

"அதெல்லாம் பழைய காலம். இப்பல்லாம் அப்படி யாரும் பார்க்கமாட்டாங்க..."

"சரி! உன் இஷ்டப்படி நீயே ஓட்டிக்கிட்டுத்தான் வாயேன்..."

போனை வைக்கும்போது எரிச்சலோடு வைத்தாள் மேனகாதேவி.

'நடிக்க ஆரம்பிச்சுப் பத்து வருஷங்களுக்கு அப்புறம்தான் அந்த நாளிலே நான் ஒரு காரைப் பற்றியே யோசிக்க முடிஞ்சுது. இப்ப என்னடான்னாப் போன வருஷம்தான் நடிக்கத் தொடங்கின இந்தக் கத்துக்குட்டி இப்பவே தங்கிட்டக் கார் இருக்குங்கிறா. ஏதோ இவதான் நவீன நாகரிகத்தின் பிரதிநிதி போல, 'அதெல்லாம் பழைய காலம்'னு என்னைக் குத்திக் காட்டிப் பேசறா. ஓட்டத் தெரியாம ஓட்டி எங்கேயாவது கையைக் காலை, ஒடிச்சுக்கப் போறா, என்று மேனகாதேவி நினைத்தாலும் அவளுடைய உள்மனம் வேறு எதை எதையோ எண்ணிப் புகைந்தது.

'நான் பார்க்காத காரா? பெட்ரோல் விலை ஏறினதாலே சின்ன வண்டியை வைச்சிக்கிட்டுப் போன வருஷம்தான் கப்பல் போன்ற காடிலாக்கை விற்றேன். ஒரு

மரியாதைக்கு நான் இங்கேயிருந்து வண்டி அனுப்பட்டுமான்னு கேட்டால் உடனே தங்கிட்டவும் வண்டி இருக்குன்னு சொல்லிக் காமிக்கிறா. சரியான திமிர்ப்பிடித்தவளா இருக்கிறாளே.'

மணி ஆறரைக்குத் தாழம்பூ ஆசிரியர் போன் செய்து தங்கள் அலுவலக உதவி ஆசிரியர் புறப்பட்டு விட்டதாகவும், ஜெயமாலா அவளுடைய வண்டியிலேயே வந்துவிடுவாள் என்பதாகவும் தெரிவித்தார்.

'ஜெயமாலா வருகிறாள்' என்று கட்டியம் கூறுவதுபோல் அவளும் மற்றவர்களும் சொன்னது மேனகாதேவிக்கு எரிச்சலூட்டியது.

'வந்தால் வரட்டுமே! இதற்கு ஏன் இத்தனை 'பராக் பராக்' போடுகிறார்கள்? நான் என்ன வாசலில் போய் ஆரத்தி எடுக்க வேண்டுமோ?' என்று தனக்குத்தானே முணுமுணுத்தாள் அவள். அந்த ஆத்திரத்தில் வேலைக்காரி முத்தம்மாவைக் கூப்பிட்டு,

"இந்தா முத்தம்மா! யாரோ வெட்டிப் பசங்க பார்க்க வராங்க. காப்பி, டிபன், எதுவும் வேணாம். கேட்டால் மட்டும் குடிக்கத் தண்ணி குடு, போதும்!" என்று கடுமையாக உத்தரவு பிறப்பித்தாள். பின்பு தன்னை அலங்கரித்துக் கொண்டு தயாராக முன் ஹாலில் வந்து உட்கார்ந்தாள்.

முதலில் பத்திரிகை உதவி ஆசிரியரும் சுருக்கெழுத்தரும் ஒரு ஸ்கூட்டரில் வந்தார்கள். அப்புறம் கால் மணி நேரம் கழித்து பியட்கார் மெல்ல வந்து நின்றது. அதிலிருந்து குமாரி ஜெயமாலா இறங்கி வந்தாள்.

படத்தில் தெரிந்ததைவிட நேரில் அவள் மேலும் அதிக அழகோடு இருப்பதாக மேனகாதேவி உணர்ந்தாள்.

என்றாலும் கொஞ்சம் அமுத்தலாகவே அவளை வரவேற்றாளே ஒழிய உற்சாகம் காட்டவில்லை. மலர்ச்சியாகவும் இல்லை.

"நீங்கள் எனக்கு அம்மா மாதிரி. என்னை ஆசீர்வாதம் பண்ணனும்" என்று வணங்கிவிட்டு ஜெயமாலா கூறியபோதுகூட அவள் தன் வயதைச் சுட்டிக்காட்டிக் கிண்டல் செய்யவே 'அம்மா' மாதிரி என்று சொல்வதாக மேனகாவுக்குக் கோபம் வந்தது.

பேட்டி தொடங்கியதுமே அந்தக் கோபத்தைத் தன் பதிலில் காட்டினாள் மேனகாதேவி.

"எங்க நாளிலே எல்லாம் இந்தக் காலத்தைப்போல யாராவது ரெண்டு புரொட்டியூஸருக்கு முன்னாலே பல்லிளிச்சுக் காட்டி மறுநாளே ஹீரோயினா ஆயிட முடியாது. எவ்வளவோ உழைச்சு நடிச்சாத்தான் படிப்படியா முன்னுக்கு வரமுடியும்; இன்னிசை மன்னர் எல்லப்ப பாகவதர் பதினைஞ்சு வருஷங்கள் முடிசூடா மன்னராக இருந்தார். அப்ப இந்த ஃபீல்டிலே அவருக்கு ஈடுகொடுத்து நடிக்கவும் பாடவும் முடிந்த கதாநாயகி நான் ஒருத்திதான். இப்ப மாதிரி வாயசைச்சு யாரோ பின்னாலே இருந்து பாடற காலமில்லே அது."

இதைக் கேட்டு ஜெயமாலா மிகவும் கடுமையாகப் பதில் சொல்லக்கூடும் என்று மேனகாதேவி நினைத்தாள். ஆனால் அப்படி எதுவும் நடக்கவில்லை. இதற்குப் பின்பும் ஜெயமாலா மிகவும் வினயமாகவும் அடக்கமாகவுமே பதில் சொன்னாள்.

"இவங்க சொல்றது உண்மை. அந்த நாளிலே இவங்க உழைச்ச அவ்வளவு உழைப்பு இன்னிக்கு நடிக்கிற எங்ககிட்டே இல்லே. ஆனா அந்த நாளிலே இவங்களுக்குக் கிடைக்காத பல வசதிகளெல்லாம் எங்களுக்கு இப்பக் கிடைக்குது. அதிகத் தியேட்டர்கள் பெருகித் தொழில் வளர்ந்ததுதான் காரணமே ஒழிய எங்கள் உழைப்பு, வளர்ந்தது என்று கூற முடியாது. இந்த வகையிலே மேனகா அக்கா மாதிரி இருக்கிறவங்கதான் எங்க குரு மாதிரி இருந்து வழி காட்டணும்."

அவள் தனக்கு அக்கா பட்டம் போட்டதுகூடத் தன் முதுமையைத் தனக்கு ஞாபகப்படுத்துவதற்குத்தானோ என்று தோன்றியது மேனகாவுக்கு.

மேலும் முக்கால் மணிநேரம் அவர்கள் உரையாடல் நீடித்தது. முதலிலிருந்து ஜெயமாலாவையும் அந்தப் பத்திரிகைக்காரர்களையும் தன் எதிரிகளாகப் பாவித்துக் கொண்டதால் மேனகாதேவியின் பதில்களெல்லாம் காரமாகவும் இளம் நடிகைகளையும் புதுக் கதாநாயகிகளையும் குத்திக் காட்டுவதாகவுமே இருந்தது. ஆனால் ஜெயமாலாவின் பதில்கள் எல்லாம் நிதானமாகவே இருந்தன. இறுதியாக, "சென்ற தலைமுறையின் சிறந்த நடிகை என்ற முறையில் நீங்கள் கலைத்துறையில் விரும்புவது என்ன?" என்ற கேள்வியை மேனகாவிடம் கேட்டபோது, அவள் காட்டமாக, "புதிய தலைமுறைக் கத்துக்குட்டி நடிகைகளுக்குப் பாடம் புகட்டுவதற் காகவாவது ஒரு படத்தில் கதாநாயகியாக நடித்துக் காட்ட விரும்புகிறேன்" என்று பதில் சொன்னாள். ஆனால் அதே கேள்வியை, "புதிய தலைமுறையின் இளம் நடிகை என்ற முறையில் நீங்கள் விரும்புவது என்ன?" என்று குமாரி ஜெயமாலாவிடம் கேட்டபோது,

"நான் தாயில்லாப் பெண்ணாக வளர்ந்தவள். மேனகாதேவியைப் பார்க்கும்போது என் அன்னையிடம் எழும் மரியாதை எனக்கு எழுகிறது. வாழ்வில் இல்லாவிட்டாலும் ஒரு படத்திலாவது அவர்கள் என் அன்னையாக வர நான் மகளாக நடிக்க வேண்டும் என்று ஆசைப்படுகிறேன்" என்று பவ்யமாகப் பதில் கூறினாள்.

இந்தப் பதில் மூலம்கூட மேனகாவின் கோபம் தணியவில்லை. 'நீ அம்மாவாக நடிக்கத்தான் லாயக்கு' என்று தன்னை அவள் நாசூக்காகக் கேலி செய்கிறாளோ என்று சந்தேகமாக இருந்தது மேனகாவுக்கு.

"என்ன காரணமோ தெரியவில்லை. இந்தச் சந்திப்பு, பேச்சு எல்லாமே மேனகாவும் ஜெயமாலாவும் ஒருவர் மீது ஒருவர் நடத்திய பட்டி மண்டபம் போல் அமைந்துவிட்டது. ஜெயமாலா பக்கம்தான் நிதானம் தெரிகிறது.

"மேனகாதேவி பக்கத்திலிருந்து ஒரே தாக்குதல் மயம் தான்" என்று பத்திரிகையிலிருந்து வந்திருந்த இருவரும் தங்களுக்குள் பேசிக் கொண்டார்கள். பேட்டி அவர்கள் எதிர்பார்த்தபடி அமையவில்லை.

ஜெயமாலாவுக்கோ தான் இவ்வளவு விட்டுக் கொடுத்து வினயமாயிருந்தும் மேனகாதேவி தன்மேல் ஏன் அவ்வளவு விரோத பாவம் கொண்டாடுகிறார் என்பது புரியவில்லை. அவள் மனம் உள்ளூறப் புண்பட்டது. அதை வெளியே காட்டிக் கொள்ளாமல் சமாளித்தாள் அவள். மேனகாதேவியைப்போல் முதிர்ந்த நடிகை இவ்வளவு தூரம் தொழிற் பொறாமை உள்ளவளாக இருக்க முடியும் என்று ஜெயமாலா எதிர்பார்க்கவேயில்லை. தன்னைப்போல் படித்துப் பட்டம் பெற்று ஓர் ஆவலோடு கலைத்துறையில் பிரவேசித்திருக்கும் இளம் நடிகையிடம் மேனகாதேவிக்கு ஏன் இவ்வளவு வெறுப்பு என்று புரியாமல் - அதை எல்லார் முன்னிலையிலும் வெளிக் காட்டிக் கொள்ளவும் முடியாமல் பதறினாள் ஜெயமாலா.

பேட்டி முடிந்ததும் அதைப் பற்றித் திருப்தி இல்லாத நிலையில் அரைகுறை மனத்தோடு முதலில் பத்திரிகையாளர்கள் விடைபெற்றுக் கொண்டு வெளியே புறப்பட்டார்கள். அவர்கள் புறப்பட்டதும் மேனகாதேவி தன்னிடம் ஏதாவது பேசுவாள் - அப்படிப் பேசினால் அவளுடைய தேவையில்லாத கடுமையையும் வெறுப்பையும் விரோத பாவத்தையும் மாற்ற முயற்சிக்கலாம் என்று எண்ணிச் சிறிது நேரம் அங்கேயே தாமதித்தாள் ஜெயமாலா.

ஆனால் அந்தத் தாமத்துக்கு ஒரு பயனும் விளையவில்லை.

“அப்போ... எனக்குக் கொஞ்சம் வேலையிருக்கு...” என்று வெட்டிவிட்டாற்போலக் கூறிவிட்டு மேனகாதேவி எழுந்துவிடவே ஜெயமாலாவும் புறப்பட வேண்டியதாயிற்று.

“நான் வரேன் அக்கா!” என்று வணங்கிவிட்டுப் புறப்பட்ட ஜெயமாலாவுக்குக் கையும் காலும் பதறியது. மேனகாதேவி முகத்தை முறித்தாற்போல் தன்னை அனுப்புவதாகப் பட்டது அவளுக்கு. இவ்வளவு பாசத்தோடும் மரியாதையோடும் பழகிய தன்னிடம் மேனகாதேவி ஏன் அவ்வளவு கடுமையாக இருக்கிறாள்?’ என்றெண்ணிக் குழம்பிய மனத்தோடு காரை ஸ்டார்ட் செய்த ஜெயமாலா பதற்றத்திலும், மனக்குழப்பத்திலும் கியரை நியூட்ரல் செய்யாமல் கிளப்பவே மின்வெட்டும் வேகத்தில் காரியம் கைமீறி விட்டது. கார் சீறிப் பாய்ந்து போர்டிகோ சுவரில் மோதி ஸ்டியரிங்கில் ஜெயமாலாவின் முகம் இடித்து மூக்கிலும் நெற்றிப் பொட்டிலும் இரத்தம் கசியத் தொடங்கியது. கார் மோதிய சத்தம் கேட்டு மேனகாதேவியும் வேலைக்காரி முத்தம்மாவும் வெளியே ஓடிவந்து பார்த்தார்கள்.

மோதிய சுவர் சரிந்து வண்டி நின்றுபோய் என்ஜின் ஆஃப் ஆகிவிட்டது. ஜெயமாலா டிரைவர் ஸீட்டிலேயே நினைவு தப்பி மூர்ச்சை ஆகியிருந்தாள்.

“அடிபாவி! என்ன காரியம் பண்ணினே? பார்த்து ஓட்டப்படாதா?” என்று பதறிக் கூவியபடியே ஓடிவந்த மேனகாதேவி வேலைக்காரியின் உதவியோடு முன் ஸீட்டின் கதவைத் திறந்து ஜெயமாலாவைத் தூக்கிக் கொண்டு போய் வீட்டுக்குள் படுக்கையில் கிடத்தினாள். முதலுதவிகளைச் செய்துவிட்டு முகத்தில் தண்ணீர் தெளித்து மூர்ச்சையிலிருந்து ‘பிரக்ஞை’ வந்ததும் டாக்டருக்கு போன் பண்ணினாள்.

"என்ன? ஏன் இப்படி ஆச்சு? பார்த்து ஓட்ட வேண்டாமா?" என்று மேனகா கேட்டபோது, "ஏதோ மனக்குழப்பதிலே ஓட்டினேன், இப்படி ஆயிடுச்சு. என்னாலே வீணா உங்களுக்குச் சிரமம்?" என்று ஜெயமாலா பயந்தபடியே சொன்னாள். நல்லவேளை சிராய்ப்பைத் தவிர பெரிய காயம் எதுவுமில்லை.

"அசடுமாதிரிப் பேசாதே! தலைக்கு வந்தது தலைப்பாகையோடு போச்சுன்னு நான் தெய்வத்தைப் பிரார்த்திச்சேன். எனக்கென்ன சிரமம்? சுவர் போனால் கட்டிக்கலாம். உயிர் போனா வருமாம்மா? நீ இனிமே கார் ஓட்டப்படாது" என்று சொல்லிக் கொண்டே படுக்கையில் அருகே அமர்ந்து அவள் தலையை ஆதரவாகக் கோதிவிட்டாள் மேனகா.

ஜெயமாலாவால் இந்தப் பரிவை நம்பவே முடியவில்லை. சற்றுமுன் அவ்வளவு கடுமையாக இருந்த மேனகாவா இப்படி மாறினாள் என்று வியப்போடு அவளை ஏறிட்டுப் பார்த்தாள் ஜெயமாலா.

"யார் கண்ணோ பட்டிருக்குதம்மா! திருஷ்டி கழிக்கணும்..." என்றாள் அருகே நின்ற வேலைக்காரி முத்தம்மா.

"பாவி! என் கண்ணேகூடப் பட்டிருக்கும்டீ!" என்று மேனகாவே வாய் திறந்து கூறியபோது,

"அப்படிச் சொல்லாதீங்க அக்கா! என் ஆசை இப்ப நிறைவேறிடிச்சு. ஒரு படத்திலேயாவது நீங்க என் அம்மாவா நடிக்கணும்னு நான் ஆசைப்பட்டேன். இப்ப நிஜமாவே நீங்க என் அம்மா மாதிரி ஆயிட்டீங்க!"

"என் செல்லக்கிளியே! நீ கொள்ளை அழகும்மா ஆண்டவன் புண்ணியத்திலே உன் முகத்துக்கு ஒரு குறையும் வராமத் தப்பினியே; எனக்கு அது போதும்!"

"நீங்க இப்படிப் பேசணும்னு தவிச்சுத்தான் நான் மனம் பதறினேன் அக்கா..."

"என்னவோ என் புத்தியைச் செருப்பாலே அடிக்கணும். பொறாமை என் கண்ணை அவிச்சுது. என்னென்னமோ பேசினேன். பாவி என் கண்ணேறுபட்டே இப்படி ஆகியிருக்கும்" என்று சொல்லிக் கொண்டே அந்தப் பத்திரிகை ஆசிரியர் வீட்டுக்குப் போன் பண்ணி, "இன்னிக்கு எடுத்த பேட்டியைப் போட வேண்டாம் ஸார், அதிலே எங்க ரெண்டு பேருக்குமே திருப்தி இல்லே. நாளைக்கு வரை ஜெயமாலா இங்கே எங்க வீட்டிலேதான் இருப்பா. மறுபடியும் நாளைக்கு உங்க உதவி ஆசிரியரையும் ஸ்டெனோவையும் இங்கே அனுப்புங்கோ" என்றாள் மேனகா. கார் விபத்தை அவள் பத்திரிகை ஆசிரியரிடம் சொல்லவில்லை.

டாக்டர் வந்தார். மூக்கில், நெற்றியில் சின்ன பிளாஸ்திரி போட்டுவிட்டு ஓர் ஏடிசி இன்ஜெக்ஷன் கொடுத்தார்.

"பெரிசா ஒண்ணுமில்லே. ரெண்டு நாள் ஸ்டுடியோ பக்கம் எங்கேயும் போக வேண்டாம். கம்ப்ளீட்டா ரெஸ்ட் எடுத்துக்கணும்" என்று சொல்லிவிட்டுப் போனார்.

"ஏன் அக்கா அந்தப் பேட்டி வேணாம்னீங்க?" என்றாள் ஜெயமாலா.

"பேட்டியா அது? அதை யாராவது படிச்சா என் வயிற்றெரிச்சல்தான் அதில் தெரியும்."

ஜெயமாலா பதில் சொல்லாமல் சிரித்தாள்.

"ஏன் சிரிக்கிறே?"

"ஒண்ணுமில்லே! அந்தப் பேட்டி முடியறப்போ நீங்க ஓர் உயர்ந்த கலைஞர்னு மட்டுமே நினைச்சேன். உங்களை உயர்ந்த மனிதப் பண்புள்ளவங்கன்னும் இப்போ புரிஞ்சுக்கறேன். நாம ரெண்டுபேரும் கலைஞர்கள் என்பதைவிட மனிதர்கள் என்பதுதான் நிரந்தரமான உண்மை அக்கா."

"என்னை மன்சிச்சுடும்மா! நான் ஒரே காழ்ப்பு வெறியிலே இருந்தேன். என்னென்னமோ உளறிக் கொட்டினேன்" என்று கூறியபடி கண்களில் நீர் நெகிழ மேனகாதேவி ஜெயமாலாவின் பக்கம் திரும்பியபோது தற்செயலாக எதிரே நிலைக்கண்ணாடியில் தெரிந்த தன் பிரதிபிம்பத்தைத் தானே பார்த்துக் கொண்டாள். தான் மூத்திருப்பதாகவோ, கிழடு தட்டியிருப்பதாகவோ இப்போது அவளுக்குத் தெரியவில்லை. எப்போது அகங்காரம் அழிகிறதோ அப்போதுதான் பெண் தாயாகிறாள்.

மூப்பு, துயரம், பகை எல்லாமே சொந்த அகங்காரத்தின் பிரதிபிம்பமாகத்தான் இருக்க வேண்டும் என்று இப்போது மெல்ல மெல்ல அவளுக்குப் புரிந்தாற்போல் இருந்தது. பிறரைப் பொறுத்துக்கொள்ள முடியாதபோது ஏற்படுகிற காழ்ப்புணர்ச்சியின் பிரதிபிம்பம்தான் மூப்பாகிவிடுமோ என்னவோ? அந்த மூப்பு இப்போது அவளிடம் இல்லை.

**(அமுதசுரபி, தீபாவளி மலர், 1964)**

## 97. மனப்பான்மை

'**அ**மராவதி ஆட்டோமொபைல்ஸ்' உரிமையாளர் ஆராவமுதன் - அமெரிக்காவிலிருந்து ஊர் திரும்பிச் சில நாட்களே ஆகியிருந்தன. ' டெட்ராய்ட்' நகரிலுள்ள மாபெரும் மோட்டார்த் தொழிற்சாலைகளையெல்லாம் சுற்றிப் பார்த்து விட்டுத் திரும்பியிருந்தார் அவர். வரவேற்பு உபசாரங்கள், 'அமெரிக்காவில் என் அனுபவங்கள்' என்ற பெயரிலே ஏதோ ஒரு பத்திரிகையில் வழக்கமான கட்டுரைத் தொடர் - 'அமெரிக்காவில் நான்' என்ற பொருளில் பல பள்ளிக்கூடங்களிலும், கல்லூரிகளிலும், ரோடரி கிளப்பிலும் சொற்பொழிவுகள் எல்லாம் அவர் ஊர் திரும்பியது முதல் தடபுடல்பட்டுக் கொண்டிருந்தன. பக்கத்து நகரத்திற்குப் போய்த் திரும்பக்கூடப் பணவசதியில்லாத ஏழைகள் நிறைந்த இந்தத் தேசத்தில் - சௌகரியமுள்ள சிலர் ஆறாயிரம் மைலுக்கப்பாலும், பத்தாயிரம் மைலுக்கப்பாலும் பறந்து போய்விட்டுத் திரும்பி வந்து - சொர்க்க பூமிக்கே போய்த் திரும்பியவர்களைப் போலப் பூமியில் கால் பாவாமல் (பறந்து வந்த ஞாபகத்திலேயே) இங்கு மிதப்பதும் அவர்களைப் பார்த்து வசதியில்லாத மற்றவர்கள் பிரமிப்பதும் ஒருவகை அநாகரிகமான பரம்பரைச் சமுதாய அவமானமாக நிலவிவருவது இந்தத் தேசத்தில்தான் ஒன்றும் புதுமையில்லையே? ஆராவமுதனும் அப்படித்தான்- இந்திய முதலாளிகளால் சநாதன சொர்க்க பூமியாகப் பாவிக்கப்பட்டு அங்கீகாரம் பெற்ற அமெரிக்காவிற்குப் போய் விட்டு வந்த பெருமையில் மிதந்துக் கொண்டிருந்தார். தம்முடைய தொழிற்சாலை ஊழியர்களாகிய எண்ணூறு பாட்டாளிப் பெருமக்கள் அடங்கிய கூட்டமொன்றில் அவர் அமெரிக்காவிலிருந்து திரும்பி வந்த மறுநாள் கீழ்க்கண்டவாறு சொற்பொழிவாற்றியிருந்தார் :-

"நான் சுற்றிப் பார்த்துவிட்டு வந்த மோட்டார்த் தொழிற்சாலையின் தொழிலாளிகளில் நூற்றுக்கு எண்பது சதவிகிதத்தினர் சொந்தமாகக் கார் வைத்திருக்கிறார்கள். சாதாரண ஃபிட்டர், கார்ப்பெண்டர், எலெக்ட்ரீஷியன் கூடத் தன்னுடைய சொந்தக் காரைத் தானே சாரத்தியம் செய்து கொண்டு தொழிற்சாலை வாயிலில் வந்து இறங்குகிறான். ஒரு தொழிலாளியும், அவனுடைய முதலாளியும் பக்கத்தில் பக்கத்தில் தங்களுடைய சொந்தக் கார்களை நிறுத்திக் கீழிறங்கிச் சந்தித்ததும் பரஸ்பரம் வணங்கிக் கொள்கிறார்கள். தொழிலாளி தன்னுடைய முதலாளியை, "மிஸ்டர் ஹென்றி! குட்மார்னிங்" என்று பெயர் சொல்லி அழைத்து 'குட்மார்னிங்' கூறி வணங்குகிற அளவுக்கு உரிமையும் தாராள மனப்பான்மையும் பெருகியிருக்கிறது அங்கே. நம்முடைய நாட்டில் கார் வைத்திருப்பது ஒரு 'ஸ்டேட்டஸ்' ஆகவும் அந்தஸ்தாகவும் கருதப்படுகிறது. அமெரிக்கா போன்ற பொருள்வளமுள்ள நாடுகளிலோ நேரத்தைக் குறைத்து வேலையைப் பெருக்கி அதிகம்

பாடுபடுவதற்காக வாகனம் ஒரு கருவியாகக் கருதப்படுகிறதே ஒழிய 'ஸ்டேட்டஸ்' ஆகக் கருதப்படுவதில்லை. அதை வைத்து மனிதனுடைய மதிப்புக் கணிக்கப்படுவதும் இல்லை."

- என்று அவர் ஆற்றிய சொற்பொழிவைச் செவிமடுத்த அமராவதி ஆட்டோமொபைல்ஸ் தொழிலாளர்கள் எண்ணூறு பேரில் எலெக்ட்ரீஷியன் துரைராஜுவும் ஒருவன். தன் முதலாளியைப் பற்றி நீண்டநாட்களாக அவன் வைத்திருந்த ஓர் அபிப்பிராயம் இந்தச் சொற்பொழிவைக் கேட்டதனால் மாறியது. துரைராஜுவின் குடும்பம் பெரியது. துரைராஜுவின் தகப்பனார் - மூன்று தம்பிகள், ஒரு பெரிய தமையன் எல்லாருமே உழைப்பாளிகள். துரைராஜு அமராவதி ஆட்டோமொபைல்ஸில் ஆட்டோ எலெக்ட்ரிஷியனாக வேலை பார்ப்பது தவிர - அவன் தம்பிகளும், மூத்த தமையனுமாகச் சேர்ந்து மெயின்ரோடில் ஒரு பிரைவேட் 'ஆட்டோ எலெக்ட்ரிகல் ஒர்க்ஷாப்' வைத்து நடத்திக் கொண்டிருந்தார்கள். குடும்பம் ஒன்றாகவும், ஒற்றுமையாகவும் இருந்ததனால் வருமானம் தாராளமாக இருந்தது. எனவே கையிலும் கொஞ்சம் கணிசமான தொகை சேர்ந்திருந்தது. குடும்பம் ஒன்றாகவும், ஒற்றுமையாகவும் இருந்ததனால் வருமானம் தாராளமாக இருந்தது. எனவே கையிலும் கொஞ்சம் கணிசமான தொகை சேர்ந்திருந்தது. குடும்பம் முழுவதும் கார் சம்பந்தமான தொழிலேயே பழகியிருந்ததனால் கார்களை வாங்கவும், விற்கவும், உதவுகிற தரகர்கள் பலர் துரைராஜுவுக்கு நண்பர்களாகியிருந்தனர். ஒரு சமயம் அப்படி நண்பராகியிருந்த தரகர் ஒருவருடைய சிபாரிசின் காரணமாக துரைராஜு கொஞ்சம் மலிவான விலைக்கு வந்த பழைய கார் ஒன்றை விலைக்கு வாங்கும்படி நேர்ந்தது. ஒரு காரை வைத்து ஆள வேண்டுமென்ற கௌவரத்துக்காகவோ, பெருமைக்காகவோ ஆசைப்பட்டுத் துரைராஜ் அந்தக் காரை வாங்கிவிடவில்லை. நல்ல கண்டிஷனில் இருந்தும் மிக மலிவான விலைக்குக் கிடைத்ததனால் அதை அவன் வாங்க நேர்ந்தது. வாங்கிய பின்போ விற்க மனம் வரவில்லை. அதன் அவசியமும், இன்றியமையாமையும், உபயோகமும் தவிர்க்க முடியாதவையாகிவிட்டன. அவன் வேலை பார்த்த அமராவதி ஆட்டோமொபைல்ஸ் தொழிற்சாலையிலிருந்து பன்னிரண்டு மைல் தொலைவிலும், தம்பிமார்களும், தமையனும், வைத்திருந்த ஒர்க்ஷாப்பிலிருந்து பத்து மைல் தொலைவிலுமாக அந்தப் பெரிய நகரத்தின் மற்றொரு கோடியில் இருந்தது அவர்கள் குடியிருந்த வீடு. எனவே அவ்வப்போது வீட்டுக்குப் போகத் திரும்ப என்று சிக்கனமாகப் 'பெட்ரோலை' உபயோகித்துக் காரை வைத்துக் கொள்வதென்று முடிவு செய்திருந்தார்கள் சகோதரர்கள். தம்பிகளும் தமையனும் வைத்திருந்த 'ஒர்க்ஷாப்பில்' மாதம் சராசரி ஆயிரத்து முந்நூறு ரூபாயும், துரைராஜுவின் அமராவதி ஆட்டோமொபைல்ஸ் சம்பளம் இருநூறு ரூபாயுமாக ஐந்து சகோதரர்களுக்கும் சேர்த்து ஆயிரத்தைந்நூறு ரூபாய் கிடைத்துக் கொண்டிருந்ததனால் அவசியத்துக்காகவும், சௌகரியத்துக்காகவும் அந்தப் பழைய காரைப் பராமரிப்பது ஒரு பாரமாக அவர்களுக்குத் தோன்றவில்லை. மூத்த தமையனைத் தவிர மற்றவர்கள் எவருக்கும் திருமணமாகாததனால் குடும்ப பாரமும் அதிகமில்லை. சகோதரர்கள் ஐவருக்கும் கார் டிரைவிங் கை வந்த கலை. அதனால்

யாரும் எப்போதும் எங்கும் தயங்காமல் காரை எடுத்துக் கொண்டு புறப்பட முடியும். சின்ன ரிப்பேர் முதல் பெரிய ரிப்பேர் வரை எதுவானாலும் - வெளியார் ஒர்க் ஷாப்பில் கொண்டு போய்விட்டுச் செலவு வைக்காமல் ரிப்பேரைத் தாங்களே பார்த்துச் சரி செய்துவிடுவார்கள். மேற்படி காரணங்களால் மிகவும் சிக்கனமாக மாதம் நூற்றைம்பது - அல்லது அதிகமாகப் போனால் இருநூறு ரூபாய்க்குள் அந்தக் காரை அவர்களால் பராமரிக்க முடிந்தது. துரைராஜு வேலை பார்த்த அமராவதி ஆட்டோமொபைல்ஸ் கார்த் தொழிற்சாலை - சகோதரர்களின் சொந்த ஒர்க் ஷாப்பிற்கு அப்பாலும் இரண்டு மைல் தள்ளி இருந்ததனால் தினசரி காலையில் சகோதரர்கள் ஐவரும் வீட்டிலிருந்து புறப்பட்டால் துரைராஜு மற்ற நால்வரையும் சொந்த 'ஒர்க் ஷாப்பில்' இறக்கிவிட்டு விட்டுக் காரைத் தன்னுடைய அமராவதி ஆட்டோமொபைல்ஸ் தொழிற்சாலையின் அருகே காம்பவுண்டுக்கு வெளியே எங்காவது பார்க் செய்து பூட்டிக் கொண்டு வேலைக்குப் போய்விடுவது வழக்கம். திரும்பும்போது மாலையில் சொந்த ஒர்க் ஷாப்பிற்கு வந்து கொஞ்ச நேரம் காத்திருந்து சகோதரர்களையும் அழைத்துக் கொண்டு வீடு திரும்புவான் துரைராஜ். இப்படித் தாராளத்திலும் ஒற்றுமை - சிக்கனத்திலும் ஒற்றுமை - என்று அந்தத் தொழிலாளிக் குடும்பம் நிம்மதியாக வாழ்ந்து வந்தாலும் - சகோதரர்கள் காரில் வருவதும் போவதும் பலர் கண்களை உறுத்தியது. சௌகரியமாகப் போய்வருவது - இவர்களை ஒத்த மற்ற உழைப்பாளிகளாலேயே அசூயைக் கண்கொண்டு பார்க்கப்பட்டது. இவர்கள் நிலைக்கு மேற்பட்ட பணக்கார வர்க்கத்தினரால் கேலி செய்து எள்ளி நகையாடப்பட்டது. இவ்வளவுக்கும் அவர்கள் வைத்திருந்த பழைய கார் பார்ப்பதற்குப் பளீரென்றுகூட இராது. அங்கங்கே 'பெயிண்ட்' உதிர்ந்து - உள்ளே 'ஸீட்டுக்கள்' கிழிந்து அழுக்கடைந்து போயிருக்கும். ஆனால் உடம்புக்கு உள்ளே மனிதனுடைய ஆத்மாவைப்போல் அந்த ஓட்டைக் காருக்குள்ளே 'என்ஜின்' மட்டும் பரம சுத்தமாக ஓடும். துரைராஜு உலகியல் தெரிந்தவன். கார் வாங்கிய தினத்திலிருந்து ஒருநாள்கூட அவன் அமராவதி ஆட்டோமொபைல்ஸ் தொழிற்சாலை கேட் அருகே தன் காரைக் கொண்டு போய் நிறுத்தி இறங்கியதில்லை. சராசரி இந்திய மனப்பான்மையின்படி ஏழையானாலும் சரி, பணக்காரனானாலும் சரி - இன்னொருவன் கொஞ்சம் அதிக சௌகரியமுள்ளவனாயிருப்பதைப் பொறுத்துக் கொள்ளவோ மன்னிக்கவோ தயாராயிருக்கமாட்டார்கள். ஒன்று அதிகமாகக் கேலி செய்வார்கள், அல்லது அதிகமாகப் பொறாமைப்படுவார்கள். மேடைகளில் எல்லோரும் சமதையான செல்வம் அடைய வேண்டுமென்று பேசுவார்கள். நடைமுறையில் தொழிலாளி வெள்ளையாக உடுத்தினால் முதலாளிக்குப் பிடிக்காது. வேலைக்காரன் தலைநிமிர்ந்து நடந்தால் எஜமானனுக்குக் கோபம் வருகிற தேசம் இது. அமராவதி ஆட்டோமொபைல்ஸ் முதலாளி ஆராவமுதன் எப்படி நினைப்பாரோ என்ன சொல்வாரோ என்று பயந்துதான் எலெக்ட்ரிஷியன் துரைராஜு காரைப் பார்க் செய்வதற்கென்று தொழிற்சாலைக்குள் இருந்த இடத்திற்குத் தன் காரைக் கொண்டு வராமல் வெளியில் எங்கெங்கோ நிறுத்திவிட்டு நடந்து வந்து கொண்டிருந்தான். அப்படி வெளியில் கண்ட கண்ட இடத்தில் நிறுத்தி விட்டு வருவதனால் காருக்குப்

*பல தொல்லைகள் வந்தன. கதவின் மேல் விடலைச் சிறுவர்கள் எதையாவது கீறிக் கிறுக்கிவிடுவார்கள். எவனாவது குறும்புக்காரன் டயரில் காற்றைப் பிடுங்கிவிட்டுப் போய்விட்டிருப்பான்.*

*இப்படியெல்லாம் தொல்லைகள் இருந்தும் தொழிற்சாலைக்குள் பாதுகாப்பான இடத்தில் காரைக் கொண்டுவந்து நிறுத்தத் தயங்கி வெளியிலேயே நிறுத்திக் கொண்டிருந்த துரைராஜு இன்று அமெரிக்காவைச் சுற்றிப் பார்த்துவிட்டுத் திரும்பிய தன் முதலாளி செய்த சொற்பொழிவைக் கேட்டு மனம் மாறினான். 'டெராய்ட்' மோட்டார்த் தொழிற்சாலையில் தொழிலாளியும், முதலாளியும் அருகருகே காரில் வந்து இறங்குவதாக அவர் தம் சொற்பொழிவில் வருணித்த காட்சியைக் கேட்டுத்தான் அவனுடைய மனத்தில் இந்த மாறுதல் ஏற்பட்டிருந்தது. 'தொழிற்சாலைக்குள்தான் கார்களைப் பார்க்க செய்வதற்கென்று ஏராளமான பகுதி இடம் ஒதுக்கப் பட்டிருக்கிறதே? முதலாளியோ முன்பு எப்படி இருந்தாலும் இப்போது இந்த அமெரிக்கச் சுற்றுப்பயணத்திற்குப் பின்பு பரந்த மனமுள்ளவராக மாறியிருப்பார்' என்றெல்லாம் சிந்தித்து ஒரு முடிவுக்கு வந்திருந்தான் துரைராஜு.*

*'அமராவதி ஆட்டோமொபைல்ஸ்' தொழிற்சாலையில் உள்ளே கார் பார்க் செய்வதற்குரிய பிரதேசத்தில் நாலு கார்களை பார்க் செய்வதற்கு வெள்ளைக் கோடுகளால் அடையாளம் போட்டிருக்கும். ஆனால் அங்கு நிறுத்தப்படுவ தென்னவோ முதலாளி ஆராவமுதனின் 'காடிலாக்' கார் ஒன்று மட்டும்தான். வேறு உயர் அதிகாரிகளை நாலைந்து பேரை வீட்டில் கொண்டு போய் விடுவதற்கும், ஆபீஸுக்கு அழைத்துக் கொண்டு வருவதற்குமாக ஒரு 'ஆபிஸ் வான்' உண்டு. அதைக்கூடக் காம்பவுண்டினுள்ளே எங்காவது ஒரு மூலையில்தான் நிறுத்துவார்களே ஒழியக் 'கார் பார்க்'கில் முதலாளியின் 'காடிலாக்' நிற்கிற இடத்தில் அதனோடு சேர்த்து நிறுத்துவது வழக்கமில்லை.*

*முதலாளி அமெரிக்காவிலிருந்து ஊர் திரும்பியதும் தொழிற்சாலையில் தொழிலாளர்களுக்காகச் சொற்பொழிவு செய்த மறுதினமே - தைரியமாகவும், பெருமிதமாகவும், தனது பழைய காரைத் தொழிற்சாலைக் கார் பார்க் வரை கொண்டுவந்து நிறுத்திவிட்டு அப்புறம் உள்ளே வேலைக்குப் போனான் எலெக்ட்ரிஷியன் துரைராஜ். அவன் காரை நிறுத்தும்போது, கேட் அருகே இருந்து கவனித்துக் கொண்டிருந்த கூர்க்கா, ஆத்திரத்தோடு பரபரப்பாக ஓடிவந்து "இங்கே வேறெந்தக் காரையும் நிறுத்தக்கூடாது. 'படா ஸாப்... கி காடி' (பெரிய ஐயாவின் கார்) நிற்கிற இடம் இது..." என்று தடுத்துப் பார்த்தான். ஆனால் துரைராஜு அவன் தடுத்ததை ஒப்புக் கொள்ளாமல் பெரிய ஐயா முதல்நாள் அமெரிக்கா அனுபவங்களைப் பற்றிச் செய்த சொற்பொழிவை மனத்தில் கொண்டு, "பெரிய ஐயா கேட்டால் நான் வந்து பதில் சொல்லிக் கொள்கிறேன். நீ உன் வேலையைப் பார்த்துக் கொண்டு போ" என்று திமிராகப் பதில் சொல்லிவிட்டான். அதன் பிறகு அவன் தன் வேலைக்குப் போய்ச் சேர்ந்தான். 'தன் துணிவைப் பெரிய ஐயா பெருந்தன்மையாகப்*

பாராட்டினாலும் பாராட்டுவார்' என்று துரைராஜுவின் மனம் கற்பனை செய்தது. அமெரிக்க மோட்டார்த் தொழிற்சாலைத் தொழிலாளிகளில் பெரும்பாலோர் சொந்தமாகவே கார் வைத்திருக்கிறதைப் பற்றியும் தொழிலாளி ஜான் முதலாளி ஹென்றியின் காருக்கருகே தன் காரைக் கொண்டு வந்து நிறுத்திக் கீழிறங்கி, 'குட்மார்னிங் மிஸ்டர் ஹென்றி!' என்று முதலாளியைப் பெயர் சொல்லி அழைத்து 'குட்மார்னிங்' போடுவதைப் பற்றியும் ஆராவமுதன் ஆற்றிய சொற்பொழிவைப் பற்றியே துரைராஜுவின் மனம் நினைத்துப் பூரித்துக்கொண்டிருந்தது.

ஆனால் நடந்ததென்னவோ முற்றிலும் நேர் மாறான காரியங்களாக இருந்தன. பகல் சாப்பாட்டுக்காக விடப்படும் இடைவேளையின் போது துரைராஜு வெளியில் வந்து பார்த்தால் அவனுடைய பழைய காரை நிறுத்தியிருந்த இடத்தில் காணவில்லை. அந்தப் பிரதேசம் முழுவதும் ஏக சக்ராபதிபதிபோல ஒற்றைக்கொரு தனிக்காராக - முதலாளி ஆராவமுதனின் 'காடிலாக்' மட்டும் பளீரென்று மின்னும் ஒளியுடன் கொலுவீற்றிருந்தது. சாவி தன் கையில் இருக்கும்போது தன் பழைய காரை யார் எதற்காக வெளியே எடுத்துக்கொண்டு போயிருக்க முடியுமென்று புரியாமல் துரைராஜு மலைத்து நின்றபோது முதலாளியின் 'காடிலாக்' டிரைவர் ஓடிவந்து துரைராஜுவை நோக்கி இரைந்தான் :

"உன் ஓட்டை வண்டியை இங்கே பார்க் பண்ணச் சொல்லி யார் உன்னே உள்ளார நுழைய விட்டாங்க? பெரிய ஐயா பார்த்ததும் கன்னா பின்னான்னு இரைய ஆரமிச்சாரு... விசாரிச்சதிலே வண்டி உன்னிதுன்னு தெரிஞ்சிது. அவர் கையிலே சொன்னேன்.

"சோத்துக்கு வழியில்லாத பசங்கள்ளாம் காரு வச்சுக்கணுமின்னு ஆசைப்படறதிலே கொறைச்சல் இல்லை..."ன்னு கோபமாகக் கத்தினாரு. அப்புறம் என்னைத் தனியே கூப்பிட்டு, "நீயும் கூர்க்கா ஆளுங்களுமாகச் சேர்ந்து இந்தத் தள்ளு மாடல் ஓட்டைக் காரை உடனே காம்பவுண்டுக்கு வெளியிலே போயி நிக்கிற மாதிரித் தள்ளிட்டுப் போயிடனும்... நான் திரும்பி லஞ்ச் டயத்திலே வீட்டுக்குப் போரத்துக்காக வர்றப்போ இது இங்கே நின்னுதோ நெருப்பை வச்சுப்பிடுவேன் நெருப்பை"ன்னு கூச்சல் போட்டாரு. நல்லவேளையா நீ வண்டியை கியர்லே போடாமே நியூட்ரல்லே விட்டிருந்தே. அதுனாலே உன் வண்டியை வெளியிலே கொண்டு போய்த் தள்ளி நிறுத்தியிருக்கிறோம்" என்றான் காடிலாக் டிரைவர். இதைக் கேட்ட துரைராஜ் பெருமூச்சு விட்டபடியே கீழே தரையில் தனது கார் தள்ளிக் கொண்டு போகப்பட்டதன் அடையாளமான டயர் தடயங்களைப் பார்த்துக்கொண்டு சிறிதுநேரம் தயங்கி நின்றான். பின்பு தைரியமாகத் தலைநிமிர்நது நின்று தனக்குள் நினைக்கலானன்.

'மனிசனோட அனுபவம் வேறே, மனப்பான்மை வேறே... அபிப்பிராயம் வேறே, நடைமுறை வேறே. இந்தத் தேசத்துலே தலைமுறை தலைமுறையா வெறும் உபதேசம் பண்ணுறவங்களாகவே பெருகிப் போயிட்டாங்க. மனப்பான்மை வளராததுக்கு இது ஒரு காரணம். உபதேசப்படி வாழ்ந்து காட்ட ஆள் இல்லாதப்போன காரணம்

*எல்லாருமே உபதேசம் பண்ணுறதிலேயே கவனமாயிருந்திட்டதுதான். அமெரிக்காவுக்குப் போனா என்ன? ஐரோப்பாவுக்குப் போனா என்ன? இந்திய முதலாளித்துவ மனப்பான்மையிங்கறது ஒரே மாதிரித்தான் இருக்குது. 'தான் அனுபவிக்கிற செளகரியங்கள் தன்னிடம் ஊழியம் புரிய வருகிறவர்களுக்கு எட்டாததாக இருக்க வேண்டும்' என்று நினைக்கிற மனப்பான்மை இந்த நாட்டு முதலாளிகளின் பிறப்புரிமை. அதை இன்னொரு நாட்டுப் பிரயாண அனுபவம்கூட மாற்றிவிட முடியாதுதான்' என்று நினைத்தபடியே, சர்வ சுதந்திரமாக நடந்து காம்பவுண்டுக்கு வெளியே போய்த் தன் காரை ஸ்டார்ட் செய்து சகோதரர்களின் ஒர்க் ஷாப்புக்குச் சென்று அவர்களோடு சேர்ந்து பகலுணவை முடித்துக்கொண்டு திரும்பவும் அமராவதி 'ஆட்டோமொபைல்ஸ்' வாசலுக்கு வந்து ஞாபகமாகக் காரைக் காம்பவுண்டுக்கு வெளியிலேயே விட்ட பின் மகாதீரனாக நடந்தபடி உள்ளே போனான்.*

*ஆமாம்! அவனால் இதற்கெல்லாம் கவலைப்பட முடியாது! ஏனென்றால் நாளைய உலகம் அவனுடையதுதான்! இனி நாளைய வெற்றியும் அவனுடையதுதான்.*

(தாமரை, டிசம்பர், 1964)



## 98. இது சத்தியம்

"**எ**ன்ன சௌக்யமா?" என்று கேட்டுக் கொண்டு வந்து உட்கார்ந்தாள் கலா. கட்டிலில் என் பக்கதில் அவள் வந்து அமர்ந்த விதமும் நெருக்கமாக இடைவெளியில்லாமல் அமர்ந்ததும் கண்டு நான் ஆச்சரியப்பட்டேன். காலம் மிகவும் முன்னேறிவிட்டது. இதற்குப் பெயத்தான் முன்னேற்றமா என்று நான் சிந்தனைச் சூழலில் மூழ்கினேன்.

"என்ன ரொம்பப் பலமான யோசனை? எந்தக் கோட்டையைப் பிடிக்க பதிலே போசமாட்டேன் என்கிறீர்கள்?" என்றாள் கலா.

நான் அவளையே உற்றுப் பார்த்தேன். அவளுக்கு வயது பதினைந்துதான் இருக்கும். உடல் வளர்ச்சி பத்தொன்பது வயதைக் காட்டிற்று. பளிச்சென்று கவனத்தைக் கவரும் தாழம்பு நிறம். அவள் கண்கள் எல்லாவற்றையும் தொட்டு, கேட்டு, வாங்கி, அனுபவித்துப் பார்த்துவிட வேண்டும் என்கிற ஆர்வத்தையும் அதன் முடிவை அறியாத அறியாமையையும் ஒருங்கே காட்டின.

மனத்தில் எழுந்த உணர்ச்சிக் கிளுகிளுப்பை அடக்கிக் கொண்டு, "வா, இப்போதுதான் வருகிறாயா? இன்னும் யார் உன்கூட வந்தது கலா?" என்றேன்.

"அம்மா கூடத்தான் வந்தேன். உள்ளே போயிருக்கிறாள். நான் வந்ததுகூடத் தெரியாமல் என்ன யோசனையோ?"

"ஒன்றும் இல்லை, ஆபீஸ் விஷயம்!" என்று ஒரு பொய்யைச் சொன்னேன்.

ஆபீஸில் கேட்டால் வீட்டு விஷயம் என்றும், வீட்டில் கேட்டால் ஆபீஸ் விஷயம் என்றும் என்னுடைய திடீர் திடீர் சமாதிக்குக் காரணம் சொல்லிப் பழக்கமாகிவிட்டது.

"பஸ்ஸில் வந்தது ஒரே அலுப்பு. ஐந்து மணி நேரம் பிரயாணம். ஒரே கூட்டம். நெரிசல். எப்படா வந்து சேரப் போகிறோம் என்றாயிற்று என்று கலா தன் கைகளைத் தூக்கி உடலை நெளித்து சோம்பல் முறித்தாள். அப்படியே சாய்ந்தவளாக மல்லாக்கப் படுத்துவிட்டாள். அவள் தாவணி இலேசாக நழுவியிருந்தது.

நான் திடுக்கிட்டுப் போனேன். 'இது என்ன பெண்ணா? பெண்மையின் பயந்த சுபாவத்தையே காணோமே! சீ, சீ என்னதான் உறவாகட்டுமே; அதற்காக இப்படியா? நானல்லவா பயந்து பழிக்குப் பயந்து, நாலு பேர் கண்களுக்குப் பயந்து ஒதுங்க வேண்டியிருக்கிறது? நான் மாமன் உறவுதான். அவளும் அக்காள் பெண் உறவுதான். உள்ளே என் ஒன்றுவிட்ட அக்காவும் மனைவியும் பேசிக் கொண்டிருந்தது காதில் விழுந்தது.

"ரொம்ப நாளாயிற்றே. பஸ் ஸ்டாப்பிலே இருந்து இங்கே பக்கத்திலேதானே வீடு, பார்த்துவிட்டுப் போகலாமே என்று வந்தேன். நான் உடனே இப்போது மயிலாப்பூருக்குப் போய் சம்மந்தியாம்மாவைப் பார்த்துவிட்டு மறுபடியும் நாளைக்கே ஊர் திரும்ப வேண்டும். எனக்குத்தான் இந்த வயதிற்கு இது ஒரு கால் கட்டு இருக்கிறதே. வயது வந்த பெண்ணைத் தனியே விட்டு வர முடிகிறதா? அந்தத் தடியன்களை (தன் பிள்ளைகளை) யெல்லாம் பார்த்துக் கொள்ளச் சொன்னால், வீட்டில் நின்று பேச அவர்களுக்கு அவகாசம் இருந்தால் தானே?" என்று கமலா அக்கா பேசிக் கொண்டே போனாள்.

"கலா, வா காப்பி சாப்பிட்டு விட்டுப் போ!" என்றாள் என் மனைவி.

"மாமி, இங்கேயே கொண்டு வந்து விடுங்களேன்" என்று கொஞ்சுதலாய் வேண்டினாள் கலா.

காப்பி கொண்டு வந்து வைத்துவிட்டு, என்னையும் ஒரு முறைப்புப் பார்த்து விட்டுப் போனாள் என் மனைவி. அவளுக்குக் கலாவைவிட ஏழெட்டு வயதுதான் அதிகம் இருக்கும். கலாவைப் போல அழகில்லை.

'சீ சீ! அழகைப் பற்றிப் பேசிவிட்டு, பிறகு வாய் கொப்பளித்துவிட்டுத்தான் அவளைப் பற்றி பேச வேண்டும். அழகுக்கும், என் மனைவிக்கும் அவ்வளவு நெருக்கம்.'

நானும் என் மனைவியும் போன மாதம் மதுரைக்குச் சென்றிருந்தோம். காலையில் கோயிலுள் நுழைந்த நான் பிற்பகல் இரண்டு மணிக்குத்தான் அரைகுறை மனத்துடன் வெளியே வந்தேன். ஒவ்வொரு சிற்பத்திற்கு முன்பும் குறைந்தது அரைமணியாவது நின்று ரசித்தேன் என்றால் நான் அவ்வளவு சீக்கிரம் வெளியே வந்தது பொறுமையிழந்த என் மனைவிக்காகத்தான்!

"உம், உம் போகலாம், வாருங்கள். பசிக்கிறது. ஒரே மாதிரி பொம்மையை எத்தனை தரம் பார்த்துக் கொண்டு நிற்பீர்கள். கால் வலிக்கிறது!" என்று என் மனைவி துரிதப்படுத்திக் கொண்டிருந்தாள்.

"இதோ ஆச்சு, இதோ ஆச்சு!" என்று சிற்பங்களை வியந்த வண்ணம் புறப்பட்டேன்.

அப்படி ரசனையுள்ளமும், அழகை உபாசிக்கும் உள்ளமும் பெற்ற எனக்கு, இப்படி ஒரு மனைவி வாய்த்தாள் என்றால் அது திருமணங்கள் மேலுலகத்தில் நிச்சயிக்கப்படுகின்றன என்பதை உறுதிப்படுத்தத்தானோ என்னவோ?

"கிளம்பு கலா! நாழிகையாகிறது. சோம்பல் படாமல் போனால்தான் வேலை நின்று போகாமல் முடியும்" என்றாள் கமலா அக்காள் உள்ளேயிருந்து வந்தபடியே.

"போம்மா! நான் வரவில்லை. நீயே போய் எல்லாவற்றையும் பார்த்துக் கொள். உடம்பெல்லாம் ஒரே வலி. எனக்குக் கொஞ்சம் தூங்கினால்தான் உடம்பு தேறும்." கலா சிணுங்கினாள். அந்தச் சிணுங்கலில்கூட அவள் அழகு மின்னிற்று.

"கலா, இங்கேதான் இருக்கட்டுமே! நாளைக் காலை இங்கிருந்துதான் ஊருக்குப் போயேன். கூடவே பஸ் சார்ஜ் செலவழித்துக் கொண்டு போகணுமா?" என்று நான் என்னை அறியாமல் சொல்லி வைத்தேன்.

உள்ள 'நச்'சென்று டம்ளரை வைத்த விதத்திலிருந்து அது என் மனைவிக்குப் பிடிக்கவில்லை என்று தெரிந்தது.

"சரி போ! அதுவும் நல்லதுதான். அடி லக்ஷ்மி, நான் போய் வருகிறேன்" என்று என் மனைவியிடம் குரல் கொடுத்துவிட்டு வெளியே சென்றாள் கமலா அக்கா.

* * *

**அ**ன்று ஞாயிற்றுக்கிழமை. நான் சாப்பிட்டுவிட்டு ஒரு புத்தகத்தை எடுத்துக் கொண்டு சாய்வு நாற்காலியில் வந்து அமர்ந்தேன். கலாவும் குளித்துச் சாப்பிட்டுவிட்டு அருகில் அமர்ந்தாள். அதிகமான ஆபரணங்கள் இல்லாவிட்டாலும் தங்கச் சிலைபோல் செதுக்கிவிட்ட அளவான தோற்றமும் ரோஜாப்பூ போன்ற மென்மையும், முல்லைச் சிரிப்பும், நதியின் 'கலகல'வென்னும் ஒலியைப்போல் சிரிப்பொலியும் உள்ளவள் கலா. நான் படிப்பதை விட்டு அவளையே பார்த்தேன்.

"என்ன மாமா, பார்க்கிறீர்கள்?" என்று கலா முறுவலித்தாள்.

நீண்ட பெருமூச்சொன்று வெளிவந்தது, என்னிடமிருந்து. தெளிந்த குளத்தில் பெரிய பாறாங்கல்லைப் போட்டுக் குழப்பி, கலங்கடிப்பது போல் என் மனத்தை என்னவோ செய்தது.

ஏதேதோ நிராசைகள், ஆசைக் கனவுகள், மீன்கள் என அந்தக் குழம்பிய குளத்தின் மேலே நீந்தி வந்தன.

நான் மெதுவாகச் சமாளித்துக் கொண்டு, "கலா! உனக்கு நன்றாகப் பாட வருதாமே! பாடேன் கேட்கலாம்?" என்றேன். அந்தச் சமயத்தில் அந்தக் குழப்பத்திலிருந்து மீள்வதற்கு ஏதோ வழி தேவைப்பட்டது.

கள்ளம் கபடமற்ற அந்தப் பெண் உடனே இணங்கினாள். பாடுவதற்குத் தன்னைச் சுதாரித்துக் கொண்டு அமைதியாய்த் தயார்ப்படுத்திக் கொண்டாள்.

'பாவயாமி ரகுநாமம்' என்ற பாட்டு! மலைப்பகுதியின் கரடுமுரடான ஏற்ற இறக்கங்களிலிருந்து சமவெளியில் பிரவேசிக்கும் நதியைப்போல, நிர்மலமாய் நிரந்தர கதியாய் தொடங்கிற்று அவள் குரல்! குரலிசையில் மயங்கினேனோ, பாட்டின் பொருட் செறிவில் மயங்கினேனோ. இரண்டும் கலந்து இராமாயணக் காட்சிகளை ஒவ்வொன்றாகக் கொண்டு வந்து கண்முன் நிறுத்திய அவளது திறமையில் மயங்கினேனோ என்று சொல்ல முடியாதபடி மெய் மறந்திருந்தேன்.

"ஆஹா! ரொம்பப் பிரமாதமாகப் பாடுகிறாள் கலா" என்றாள் என் மனைவி.

நான் பாராட்டு வழங்கக்கூடத் தெரியாமல் தடுமாறி நின்றேன். அடைந்தால் இப்படிப்பட்ட பெண்ணையல்லவா துணையாக அடைய வேண்டும் என்று என் உள்

மனம் புலம்பிற்று. புயலாய் உருவெடுத்த ஏக்கப் பெருமூச்சை அடக்கினேன். அது கண்களில் கண்ணீராய்த் துளிர்ந்து நின்றது.

"என்ன மாமா அழுகிறீர்கள்?" என்றாள் கலா கேலியாக.

"சீ, சீ! அழவில்லையே, இவ்வளவு பிரமாதமாக நம் மருமாள் பாடுகிறாள் என்று ஆனந்தம்! பூரிப்பு!" என்றேன், கண்களைத் துடைத்துக்கொண்டு.

என் குரலின் போலித்தன்மை அந்தப் பேதைக்குப் புரியாவிட்டாலும், என் மனைவிக்குப் புரிந்தது. முகத்தைச் சுளித்துக் கொண்டு உள்ளே சென்றாள்.

* * *

என் மனைவிக்கு அது மூன்றாவது பிரசவம். வாழ்க்கையின் எல்லாப் பொருமல்களையும் உள்ளத்தின் விம்மல்களையும் மீறி பூர்ண திருப்தியைத் தரவல்லது தாம்பத்திய உறவுதான்! அந்தத் தத்துவம் மட்டும் இல்லாவிடில் எண்ணிலடங்கா ஏக்கங்களையும் ஏமாற்றங்களையும் சகித்துக் கொண்டு மனித குலம் வாழ்ந்துவிட முடியுமா? அப்படித்தான் நானும் வாழ்ந்தேன். ஒன்று, இரண்டு, மூன்று என்று மணமாகி நான்கு ஆண்டுகளுக்குள் ஒன்று என்னைப்போல், மற்றொன்று அவளைப்போல, மூன்றாவது 'நான் தனி என்னைக் கண்டுபிடிக்க முடியாது' என்பது போல் மூன்று ஒட்டு மாஞ்செடிகள்!

பேறுபெற்ற முதல் மாதத்திற்குள் இவ்வளவு நெருக்கத்தையும் திணிப்பையும் தாங்க முடியாதது போல 'பட்'டென்று என் மனைவியின் சரீரம் உடைந்து, முளைத்து, செடியாகி, மரமாகி கப்பும் கிளையுமாய் வாழ்ந்து திடீரென்று நான் மொட்டை மரமாகிவிட்டதுபோல் என்னுள் ஒரு தவிப்பு! மூன்று பெரும் சுமைகளை எனக்குள் திணித்துவிட்டு நான் நிரப்பி இருந்த சூன்யத்தை இனி யாரைக் கொண்டாவது நிரப்பிக் கொள்ளுங்கள் என்று பறந்துவிட்டாள்.

"பாவயாமி ரகுநாமம்," - சூன்யத்தின் அந்தரத்தின் அந்தரத்திற்குள்ளிருந்து மெல்லிய இன்னிசை கேட்டது. அந்த எண்ணத்தை நாம் உதறித் தள்ளத் தள்ள அது வலுவடைந்து என்னால் முடியும் என்று விஸ்வரூபமெடுத்து என் மனதை நிரப்பி என்னையும் மூழ்கடித்தது.

கலா என் வாழ்க்கையில் பங்கு பெற்றாள்! அவள் அன்று பாடியபோது, "கலா, உன்னையும் உன் இசையையும் ரசிக்கும் நல்ல மாப்பிள்ளையைத் தேடித் தருகிறேன்" என்று மனமுவந்து சொன்னது இப்படியாகும் என்று நான் எதிர்பார்க்கவேயில்லை.

இன்று கலா வருகிறாள்! எது எட்டாக்கனி, இனி கிட்டாது என்று மருகினானோ, அதுவே ஆச்சரியப்படத்தக்க விதத்தில் எனக்குக் கிட்டிவிட்டது. எந்த அழகைத் தொட முடியாமல் பூஜிக்க முடியாமல் தவித்தேனோ, எந்த இசையை என்னுள் எனக்கு மாத்திரம் என்று நிரப்பிக் கொள்ளத் துடித்தேனோ, அதையெல்லாம் எடுத்துக் கொண்டு முன்னிலும் பன்மடங்கு எழில் மங்கையாகத் தன்னை அர்ப்பணித்துக்

*கொள்ள கலா வருகிறாளாம். ஆம், இன்று நல்ல நாளாம். இரவு நெருங்க நெருங்க என் உள்ளம் படபடத்தது! இன்னும் சிறிது நேரத்திற்குள் அப்படியே அணைத்து.......*

* * *

***ச**ட்டென்று என் தூக்கம் கலைந்தது. நடு நிசி! ஆம் இதுவரை நான் கண்டதெல்லாம் கனவுதான்! இதோ என் மனைவி லக்ஷ்மிதான் என் அருகிலேயே. சீ சீ... என்ன கெட்ட கனவு! தூரத்தில் கலாவும் என் குழந்தைகளும் வாயிற்படி அருகே படுத்து இருப்பது தெரிந்தது.*

*என் மனைவியின் சாந்த முகத்தில், நிறைந்த நெஞ்சிலிருந்த வழிந்த புன்னகை அந்த இருட்டிலும் தேங்கி நிற்பது தெரிந்தது. அவள் புரண்டுபடுத்து என் கைகளைப் பற்றிக் கொண்டாள். என் நெஞ்சை என்னவோ செய்தது. என் உணர்ச்சி, வேகம், சுடுசொல், சிடுசிடுப்பு, அலுப்பு, வெகுளி, வெறுப்பு, கோபம், தாபம் இவை அவ்வளவையும் தாங்கிக் கொள்ள 'நானிருக்கிறேன், நீங்கள் நிச்சிந்தையாக எதை வேண்டுமானாலும் ரசியுங்கள். ஆனால் என்னைப் பிடித்திருக்கும் பிடியை மட்டும் தளரவிடாதீர்கள். அந்த ஆதரவுதான் என் நெஞ்ச நிறைவுக்குக் காரணம்!' என்று கையைப் பற்றிக் கொண்டதன் மூலம் இந்தப் பேதை உணர்த்துகிறாளோ? இவளை எக்காரணம் கொண்டும் கைவிடமாட்டேன். இது சத்தியம்! பொங்கி எழுந்த என் உணர்ச்சிகளை அடக்கிக் கொள்ள, 'இது சத்தியம்' என்று வாய் முணுமுணுக்க அவள் கைகளை இறுகப் பற்றினேன்.*

**(காதல், ஏப்ரல், 1965)**



## 99. நான் ஒரு அரிஸ்டாக்ரட்

'**நா**ன் யார்' என்பதைத் தெரிந்து கொள்ள நீங்கள் ஆசைப்படலாம். நான் யார் என்கிறதைப் பற்றி உங்களுக்கு ரொம்பச் சொல்ல வேண்டியதில்லை. எங்க பூர்வோதரம் ரொம்ப ரொம்ப சிரேஷ்டமானது. 'கரிமங்கலம் ஃபேமிலி'யைத் தெரியாதவா மெட்ராஸிலே மட்டுமென்ன டெல்லியிலேகூட இருக்க முடியாது. கரிமங்கலம் கணபதி சாஸ்திரிகள் குமாரர் சம்பு சாஸ்திரி - ஹைகோர்ட் நீதிபதியாயிருந்து 'ரிடயர்ட்' ஆனதை யார் தான் மறந்திருக்க முடியும்?

அந்த சம்பு சாஸ்திரியின் திருக்குமாரன்தான் நான். என் சிற்றப்பன் ஓர் ஐ.ஸி.எஸ். என்னுடைய மாமாக்கள் எல்லாம் அட்வகேட்டுகளும், டாக்டர்களுமாக மாதம் இரண்டாயிரத்துக்குமேல் மூவாயிரத்துக்குக் குறையாமல் சம்பாதிக்கிறாளாக்கும். எங்க தாத்தா கணபதி சாஸ்திரிகள் இருந்தாரே, அவர் வேதங்களையும், சாஸ்திரங்களையும் கரைத்துக் குடித்தவராம். இந்த மைலாப்பூரிலே கரிமங்கலம் கணபதிசாஸ்திரிகளைப் பற்றிச் சொல்லிப் பெருமைப்படாத ஆஸ்திகாள் எங்குமே கிடையாது. எங்க தாத்தா கணபதி சாஸ்திரிகள் செய்திருக்கிற தர்மங்களுக்குக் கணக்கு வழக்கே இல்லையாம். தாத்தா செய்திருக்கிற தருமங்களுக்காக எங்க அப்பாவுக்குத் 'தர்ம சிந்தாமணி' என்று போன மாதம் ஏதோ ஒரு விழாவிலே யாரோ பெரிய மனிதர்கள் எல்லாம் சேர்ந்து ஒரு கெளவரப்பட்டம் வழங்கியிருக்கா. யாராவது பள்ளிக்கூடத்து விழாவிலே, பேசறதுக்கோ, பரிசு வழங்கறதுக்கோ எங்க ஃபாதரை 'இன்வைட்' பண்றதுக்கு வந்தான்னு வச்சுக்குங்கோ - அப்போ எங்க ஃபாதர் அந்த 'இன்விடேஷன்'லே தர்ம சிந்தாமணி ஆஸ்தீக ரத்தினம் - சம்பு சாஸ்திரிகள் - ரிடயர்ட் ஹைகோர்ட் நீதிபதி-ன்னு இவ்வளவு பட்டமும் போடணும்கிறதிலே ரொம்ப ரொம்பப் பர்டிகுலரா இருப்பார். எங்க ஃபாதருக்கு சங்கீதத்திலே அபார டேஸ்ட் உண்டு. சங்கீத அகாடெமியிலேகூட வைஸ்பிரஸிடெண்டாவோ என்னவோ இருக்கார். சங்கராச்சாரிய சுவாமிகள்னா எங்க ஃபாதர் உயிரை விட்டுடுவார் போங்க! அத்தனை பக்தி அவருக்கு. இப்படிப்பட்டவருக்கு பிள்ளையாப் பிறந்த நான் பெருமைப்படறதுக்கு எவ்வளவோ நியாயமிருக்கு. ஆனாலும் என்னாலே பெருமைப்பட முடியலே. என்ன காரணங்கிறேளா? காரணம் எத்தனையோ இருக்கு. ஒண்ணு ரெண்டை மட்டும் இங்கே சொல்றேன். எங்க அம்மா... இருக்காளே... ஒரு மாதிரி, அப்பா மட்டும் என்ன?... அவரும் ஒரு மாதிரித்தான். 'ஒரு மாதிரின்னா' என்ன அர்த்தம்? 'அவா ரெண்டு பேரும் எதிலே ஒரு மாதிரின்னு நீங்கள் கேட்பேள்!' ஆனால் உங்க கேள்விக்குப் பதில் சொல்ல நேக்குத் தெரியாது. 'அம்பீ'ன்னு கொஞ்சம் உரத்துக் கூப்டுட்டேள்னாலே நா அழுதுப்பிடுவேன். நா அத்தனை பயந்தாங்கொள்ளி போங்கோ. ஒரு மாதிரின்னா - ஒரு மாதிரின்னுதான் நேக்குச் சொல்லத் தெரியும். நான்

சொல்லப் போறதுலேருந்து எந்த மாதிரியின்னு நீங்க புரிஞ்சிக்க முடியும். எங்க அம்மா இருக்காளே... அவளுக்குத் திமிர் அதிகம். இது நேக்கு எப்படித் தெரியும்னு கேட்பேள்... அதைத்தானே சொல்லப்போறேன் இப்போ... எங்கம்மா... தினம் தினம் சாயங்காலம் ஷோக்கா டிரஸ் பண்ணிட்டு ராமாயணம் கேட்கப் போவா. அம்பத்திரெண்டு வயசுக்கு மேலே பட்டுப் புடவையும், நகையும், பவுடர் பூச்சும், சந்திரப்பிறை மாதிரி மல்லிகைப்பூவைச் சுற்றிவிட்டுக் கொண்டை போட்டுக்கறதும் நேக்கே... பிடிக்கலை... இதைப்பற்றி எங்க வீட்டுக் கார் டிரைவர் ஒருநாள் தனக்குத்தானே பேசிக்கிறாப்பிலே எங் காதுலையும் கேட்கும்படி சொன்னான் : அவன் சொன்னதைக் கேட்டு நேக்குக் கோபம் வரலை.

“பல்லெல்லாம் பொக்கையாயித் தலை நரைச்சுப் பேரன் பேத்தி எடுத்தாச்சு. ஆனா... மனசிலே என்னமோ இன்னும் ரதி கணக்காகத்தான் எண்ணிக்கிட்டிருக்கா...” - டிரைவர் இப்படிச் சொன்னது கேலியா, குத்தலா, கிண்டலா - என்னன்னு நேக்குத் தெரியாது. ஒரு பெரிய மனுஷாள் வீட்டுக் கார் டிரைவர், அவா மேலே கொஞ்சம்கூடப் பயபக்தி இல்லாமே இப்படி எல்லாம் பேசலாமோன்னு நீங்க சந்தேகப்படுவேள். ஆனா, எங்காத்து நிலைமை வேறே. டிரைவரைக் கண்டா அம்மாவுக்குப் பயம். அப்பாவுக்கும் பயம். ரெண்டு பேருமே அவனை எதிர்த்துப் பேசமாட்டா. அவா ரெண்டுபேரும் ஓரளவுக்கு அவன் கிட்டப் பயப்படறதும் நேக்குத் தெரியும். அம்மா இருக்காளே அம்மா; அவ தன்னையொத்த பணக்காரர் வீட்டுலே கொழந்தை பொறந்தா - அந்தக் கொழந்தைக்குத் தொட்டில் இடற நாள்லே போய்ப் பார்த்துட்டு வருவா. வெள்ளிக்கிண்ணம் ‘எவர்ஸில்வர்ப் பாலாடைன்னு’ ஸ்டேட்டஸ்க்குத் தகுந்த மாதிரிப் பிரஸன்டேஷனும் எடுத்திண்டு போயிட்டு வருவா. டிரைவர், தோட்டக்காரன், இவாள் வீட்டுலேயும் கொழந்தை பிறக்கும். ஆனா அதுக்கெல்லாம் தொட்டில் கிடையாது. அம்மாவும் போகமாட்டா. எப்பவாவது டிரைவரையோ, தோட்டக்காரனையோ பார்க்கறப்போ, “ஏண்டா! நோக்குக் கொழந்தை பெறந்திருக்காமேடா? என்னது? ஆணா? பொட்டையா?” என்ற விசாரிப்பதோடு நிறுத்திண்டுடுவா அம்மா. எங்க ஸ்டேட்டஸுக்குத் தகுந்த மத்தப் பணக்கார வீடுகளிலே நடக்கிற கலியாணம், இழவு, எல்லாத்துக்கும் அம்மாவும் அப்பாவும் காரிலே தவறாமல் போயிட்டு வந்திடுவா. மத்தப் பணக்காராளும் அதே மாதிரி எங்க வீட்டுக்கு வருவா. கார் டிரைவர் ஒருநாள் அம்மாவுக்கு முன்னாலே (அம்மா வந்து நின்னது தனக்குத் தெரியாதுங்கிறது டிரைவரோட வாக்குமூலம்) சிகரெட் பிடிச்சான்னு அம்மா தாறுமாறாக் கத்திண்டிருந்தா. டிரைவரோ “உங்களுக்குப் பிடிக்கலேன்னா என்னை வீட்டுக்கு அனுப்பிசிடுங்கம்மா! ஆனா வார்த்தை செலவழிச்சிப் பேசாதீங்க... நான் ரோஷக்காரன். பதிலுக்கு எதைக் கேட்பேன்? எப்படி வாயிலே வரும்னு தெரியாது...” என்று டிரைவர் முறைச்சதும் அம்மா அப்பா ரெண்டு பேருமே அவனைத் தன்னைக் கட்டிக்கிண்டு சாந்தமாப் பேச ஆரம்பிச்சா. அதான் எனக்குப் புரியலை. டிரைவர் தனக்கு முன்னாலே சிகரெட் பிடிச்சான்னு கோவிச்சிக்கிற இதே அம்மா முந்தாநாள் பிரமீளா ஆத்துக்காரர் (அவர் ஒரு வெள்ளைக்காரன் கம்பெனியிலே மாசம் மூவாயிரம் ரூபாய்க்கு மேலே சம்பளம் வாங்குகிறவர். பிரமீளா

அம்மாவின் தங்கை பெண்) வந்திருந்தப்போ அவர் சிகரெட் பிடிக்கிறதுக்காக ஆஷ்டிரேயைத் தானே எடுத்திண்டு போய் மேஜை மேலே வச்சாளே! அது மட்டும் ஏனாம்? நான் ஒருநாள் அம்மாவைக் கேட்கவே கேட்டுப்பிட்டேன். "ஏம்மா! மோட்டார் கம்பெனி டைரக்டர் மோகனராவ் வீட்டுலேயும், சார்ட்டர்ட் அகௌண்டண்ட் சாரநாத ஐயர் வீட்டுலேயும், சோனியும், சூம்பலுமாப் பெறக்கிற கொழந்தையைப் போய்ப் பார்த்துக் கொஞ்சித் தொட்டிலிடறதுக்கும் போயிட்டு வரயே?... நம்மாத்துக் கார் டிரைவர் கன்னையனுக்கும் தோட்டக்காரச் சுப்பனுக்கும் குண்டு குண்டா அழகான குழந்தை பொறந்திருக்கு... அதைப் பற்றிக் கேட்கறப்போ மட்டும் தோட்டக்காரனிட்டயும், டிரைவரிட்டவும், ஏதோ மாடு கன்னு போட்டதைப் பற்றி விசாரிக்கிற மாதிரிப் பரம அலட்சியமா விசாரிக்கறயே! அது ஏன் அப்படி?"ன்னு நான் கேட்ட கேள்விக்குப் பதிலே சொல்லாமே மூஞ்சியைச் சுளிச்சிட்டுப் போயிட்டா அம்மா. அப்பாவிடம் கேட்டேன். "போடா அசடு! உன் வேலையைப் பார்த்திண்டு போ..." என்று பதில் வந்தது அப்பாவிடமிருந்து. எனக்கு நல்லது கெட்டது தெரியற வயசாகலேன்னு அப்பாவும் அம்மாவும் சொல்றா. ஆனா அது பொய். அப்பா செய்யற கெட்டதும் எனக்குத் தெரியறது. அம்மா செய்யற கெட்டதும் எனக்குத் தெரியறது. ஆனா நான் அதை எல்லாம் சொல்றதுக்கு முடியாது. 'எனக்குச் சித்த ஸ்வாதீனமில்லே'ன்னு அப்பாவும் அம்மாவும் எல்லாரிட்டயும் சொல்லியிருக்கா. ஏதோ 'டெலீரியம்'னு ஒரு பைத்திய வியாதியாமே! அது எனக்கு வந்திருக்காம். "நான் பண்ண பாவம்! பிள்ளையாப் பெறந்தது ஒண்ணு! அதுவும் இப்படி டெலீரியத்தோடப் புத்தி இல்லாமே வந்து வாய்த்தது" என்று அப்பா அடிக்கடி என்னைப் பற்றிக் குறிப்பிட்டுக் குறைப்பட்டுக் கொள்வார். ஆனாலும் எனக்கு அப்பாவைப் பிடிக்காது. காரணம் என்னங்கிறேளா? அப்பாவோட ரகசியமெல்லாம் நேக்குத் தெரியும்... பகல்லே சங்கராச்சாரியார் படத்தை வச்சிப் பூஜை பண்றவர் ராத்திரிலே கிளப்புக்குப் போய்ச் சீட்டாடறார். காசு வச்சிச் சீட்டு விளையாடறார்னு டிரைவர் சொல்றான். இன்னொரு விஷயம் - அப்பாவோட பெட்ரூம்லே ஒரு ரகசிய அலமாரி இருக்கு. அதை மறந்து கூட அப்பா திறந்து வைக்கமாட்டார். ஒரு நா, தப்பித் தவறி திறந்து போட்டுட்டார். நா அடக்க முடியாத ஆசையோடு போய்ப் பார்த்தா அலமாரிலே பாட்டில் பாட்டிலா இருந்தது. பாட்டில் மேலே எல்லாம் விஸ்கி, பிராந்தின்னு அழகான இங்கிலீஷ் எழுத்திலே எழுதியிருந்தது. விஸ்கி, பிராந்தின்னா என்னன்னு நேக்குப் புரியலே. டிரைவர்தான் இதுலே எனக்குக் குரு. அவன்கிட்டப் போய் கேட்டேன். "உங்கப்பன் ஒரு குடிகாரண்டா!"ன்னு அவன் ஆத்திரத்தோடு ஆனால் இரகசியமான குரலில் என் காதருகே வந்து முணுமுணுத்தான். எனக்கு ஆத்திரம் ஆத்திரமா வந்தது. கரி மங்கலம் கணபதி சாஸ்திரி குமாரர் ஆஸ்திக ரத்தினம் சம்பு சாஸ்திரி ஒரு குடிகாரர்னு அவர் பிள்ளையாகிய நானே கோவில் கோபுரத்தின் மேலே ஏறிச் சொன்னாக்கூட யாரும் கேட்கமாட்டாளே. அப்புறம் இன்னொரு ரகசியத்தை நானே என் கண்ணாரக் காணும்படியாச்சு. எங்க வீட்டுலேயிருக்கிற அத்தனை பாத்ரூமையும் கழுவறத்துக்காக ஒரு ஒட்டச்சி - சின்ன வயசுக் குட்டி அவ பேரு மாரியாத்தாளோ, காளியாத்தாளோ, என்னவோ - வருவா, ஒரு நா, அவ இருட்டோட இருட்டாக் காலம்பற அஞ்சு மணிக்கு

வந்துட்டா; அப்பாவோட பாத்ரூமைக் கழுவறதுக்காக மாடிக்குப் போனா...நான் அடுத்த ரூமிலே தூக்கம் கலைந்து முழிச்சிண்டே படுக்கையில் புரண்டுண்டிருந்தேன். ஒட்டச்சி ஏதோ தேளோ, பாம்போ பிடுங்கிட்ட மாதிரி கூப்பாடு போட்ட குரலைக் கேட்டு நான் எழுந்திருந்து ஓடிப்போய்ப் பார்த்தேன். பார்த்தா...? என்ன அநியாயம் இந்த ஒட்டச்சி வாஷ்பேசினைக் கழுவறதுக்காக அதுக்கிட்ட நிண்டிருந்தவளை எங்கப்பா - ஆஸ்திகரத்தினம் தர்மசிந்தாமணி சம்பு சாஸ்திரிகள் - முந்தானையைப் பிடிச்சி இழுத்துப் பலத்காரமா என்னமோ பண்ணிண்டிருந்தார். அதைப் பார்த்திண்டு அங்கே இன்னமும் நிற்கிறது பாவம்னு நேக்கு தோணித்து. இதை இப்படியே அம்மா கிட்ட ஓடிப்போய்ச் சொன்னா என்னன்னு தோணித்து. அம்மாவோட 'பெட்ரூம்' பக்கத்திலே தனியாயிருந்தது. பத்து நிமிஷத்துக்கு மின்னாலேதான் சமையற்காரர் அம்மா பெட்ரூமுக்குக் 'காபி' எடுத்திண்டு போனதைப் பார்த்தேன். அதிலேருந்து அம்மா எந்திருந்தாச்சுனு தெரிஞ்சுது. ஓடினேன். அம்மா பெட்ரூம் கதவு சாத்தி உள் பக்கமாத் தாழ் போட்டிருந்தது. இப்பத்தானே சமையற்காரர் காபி எடுத்திண்டு வந்தார். அதுக்குள்ளே காபியைக் கொடுத்திட்டு அவர் எப்படித் திரும்பியிருக்க முடியும்னு எனக்குச் சந்தேகமாயிருந்தது. அடைச்சிருந்த கதவின் நடுவே சாவித் துவாரத்து வழியா உள்ளே எட்டிப் பார்த்தேன். ஐயையோ...! எனக்கு ஒரே அசிங்கமாயிருந்தது. சமையற்காரரும், அம்மாவும்... நினைக்கவே ஆபாசமாயிருந்தது. அங்கே அப்பா ஒட்டச்சியை கஷ்டப்படுத்திண்டிருந்த மாதிரி, இங்கே அம்மா சமையற்காரரைக் கஷ்டப்படுத்திண்டிருந்தாள். நான் எங்கேயாவது ஆத்துலே, குளத்துலே, குதிச்சுத் தற்கொலை பண்ணிக்கணும் பேலத் தோணிடுத்து. எனக்கு என்ன இரசாபாசம்? உயர்ந்த சாதி, உயர்ந்த ஆசாரம். உயர்ந்த அனுஷ்டானம்னு ஊரை ஏமாத்திண்டு புருஷனுக்கு மனைவியாயிராத அம்மாவும், மனைவிக்குப் புருஷனாயிராத அப்பாவுமாக வாய்த்ததுக்காக நான்தான் தற்கொலை பண்ணிக்கணும். டிரைவர் கன்னையனிடம் அப்பாவும், அம்மாவும் ஏன் பயப்படறான்னு இப்பத்தான் தெரியறது. டிரைவர் கன்னையன் அடிக்கடி சொல்வானே, அதுக்கும் அர்த்தம் இப்பத்தான் புரியறது. அர்த்தம் என்னான்னு ரொம்ப நன்னாப் புரியறது இப்போ.

"மானங்கெட்டுப் போனவன்லாம் டீக்கா டிரஸ் பண்ணிண்டு கார்லே போயிண்டிருப்பான். இங்கே உள்ளர எப்படி வாழறாங்கன்னு பார்த்துட்டா அப்புறம் ஊர் சிரிச்சிப்பிடும்" என்று அம்மா அவனைக் கோபித்துப் பேசிய ஒரு தினத்தில் வீட்டுக்குத் திரும்பும்போது தனக்குத்தானே முனகிக்கொண்டு போனான் டிரைவர். அவன் அப்படி முனகிண்டு போனதை நானும் கேட்டேன். அதுக்கு என்ன அர்த்தம்னு அன்னிக்கு நேக்குப் புரியலே. ஆனா இன்னிக்குப் புரிஞ்ச மாதிரி இருக்கு. புரியாத மாதிரியும் இருக்கு. இந்த மாதிரி ஒரு விஷயத்தைப் பற்றித் தோட்டக்காரனும் டிரைவரும் ஒருநாள் பேசிண்டிருந்தா. நானும்கூட உட்கார்ந்திருந்தேன். எனக்கு இதெல்லாம் புரியாது. நான் சித்த ஸ்வாதீனமில்லாத பிள்ளைன்னு நம்பி அவா ரெண்டுபேரும் ரொம்ப ஃப்ரீயா பேசிண்டா. அந்தப் பேச்சை முடிக்கிற போது டிரைவர் சொன்னான். 'இன்னைக்கு இந்த மாதிரி 'அரிஸ்டாக்ரடிக்' ஃபேமிலியிலே இதெல்லாம் ரொம்ப சர்வசாதாரணம் அண்ணே. பத்து இடம் பார்த்தா அதிலே

*ஒன்பது இடத்திலே இப்படித்தான் இருக்குது; விட்டுத்தள்ளு...' என்று கூறிவிட்டு வேஷ்டியைத் தட்டிக் கொண்டு எழுந்திருந்தான். அதை இப்ப நினைச்சுப் பார்த்தா எனக்குப் புரியறது. நா வேதனைப்படறேன் கரிமங்கலம் கணபதி சாஸ்திரிகள் குமாரர் ஆஸ்திகரத்தினம் சம்பு சாஸ்திரிகளுக்கு மகனாகப் பிறந்து தொலைந்ததைவிட டிரைவர் கன்னையனுக்கோ தோட்டக்காரச் சுப்பனுக்கோ மகனாகப் பிறந்திருந்தால்கூட நான் மானத்தோடே நிமிர்ந்து நடக்க முடியும். அம்மா இராமாயணம் கேட்கப் போற அழகு நாளுக்கு நாள் சூர்ப்பனகையா மாறிண்டு வரா. அப்பா சங்கராச்சாரியரைப் போய்ப் பார்த்துப் பேசிப்பிட்டுப் பஞ்சகச்சம் கட்டிண்டு கிருத்திகை விரதம், ஏகாதசி விரதம், துவாதசி பாரணை எல்லாம் இருந்து உலகத்தை மருட்டிப்பிட்டுச் சூதாட்டமும் குடியும் கூத்துமாக இருக்கார். நல்ல 'அரிஸ்டாக்ரஸி' இது! என்னையும் நாளைக்கி உலகம் இப்படித்தானே ஓர் 'அரிஸ்டாக்ரட்'னு சொல்லும். ஐயையோ! வேண்டவே வேண்டாம். நா செத்துப்பூட்டாக்கூடத் தேவலை. இந்த அப்பா அம்மாவுக்குப் பிள்ளையாப் பொறந்ததுக்காகப் பெருமைப்படறதுக்கு ஒண்ணுமில்லை. கோபத்துலே ஒருநாள் டிரைவர்கூட, 'ஏலே! அம்பீ! நீ யாரை அப்பான்னு கூப்பிடறே? சமையற்கார ஐயரை அப்பான்னு கூப்பிடுடா. பொருத்தமாயிருக்கும்'னு ஒரு தினுசாச் சிரிச்சிண்டே சொல்லிப்பிட்டான். எனக்கு ரோஷம் வரலை. கோபமும் வரலை. ரோஷமும் கோபமும் வராப்பிலேதான் எங்க அப்பா அம்மா என்னைப் பெறலையே? நா எண்ண பண்ணட்டும்?*

(1967-க்கு முன்)



## 100. வாத்தியங்கள்

**வி**டுதியின் எதிரே புல் வெளியை வெறித்துப் பார்த்துக் கொண்டிருந்தாள் வார்டன் சாவித்திரி. பூமி சிரிப்பதுபோல் எத்தனை அழகான புல்வெளி! எழிலார்ந்த மலைச் சரிவிலே அந்தக் கல்லூரி அமைந்திருந்தது. பெண்களுக்கான அந்தக் கல்லூரியின் விடுதிகளும் மலைச் சரிவிலேயே அமைந்திருந்தன. சாவித்திரி தான் அந்தக் கல்லூரி விடுதிகளில் பெரியதும் - சுமார் முந்நூறுக்கு மேற்பட்ட வயதுவந்த மாணவிகள் தங்கிப் படிப்பதுமான 'கஸ்தூரிபா விடுதி' - என்ற பெரிய 'பிளாக்'கிற்கு வார்டனாக நியமிக்கப்பட்டிருந்தாள். இதற்கு முன்னால் அந்த விடுதிக்கு வார்டனாக இருந்தவர்கள் எல்லாருமே நாற்பது வயதுக்கு மேற்பட்ட பேராசிரியைகள்தாம். முதன்முதலாக இந்த ஆண்டுதான் திருமணமாகாதவளும் - இளம் வயதினளும் அநுபவம் குறைந்தவளுமான சாவித்திரியைப் போன்ற ஒரு இளம் விரிவுரையாளருக்கு அந்தப் பதவி கொடுக்கப்பட்டிருந்தது. அதனால் கல்லூரி முதல்வி இந்தப் பொறுப்பை ஒப்படைத்து ஆர்டர் போடுமுன் சாவித்திரிக்கு ஒரு பெரிய உபதேச விரிவுரையே ஆற்றியிருந்தாள்.

'இதோ பார்! மிஸ் சாவித்திரி! உன்னிடம் மிகவும் நம்பிக்கையோடு இந்தப் பொறுப்பை ஒப்படைத்திருக்கிறேன். ரிஸர்வ்ட் ஆகவும் கடுமையாகவும் இருக்க வேண்டும். படிக்கிற பெண்களுக்கும் உனக்கும் வயதிலோ தோற்றத்திலோ அதிக வித்தியாசமில்லை. கலகலவென்று நெருங்கிப் பழகினியோ உன்னையும் ஸ்டூடண்ட் மாதிரி ஆக்கி-மட்னி ஷோவுக்கு இழுத்துக் கொண்டு போய் விடுவார்கள். ஜாக்கிரதை" - என்று பிரின்சிபால் அம்மாள் கடுமையாக வற்புறுத்தி இருந்தாள்.

புல் வெளியில் சாயங்கால வேளையில் தனியாக உட்கார்ந்திருந்த போது - அந்தத் தனிமையே மனத்தில் ஒரு வேதனையாக உறுத்த அதற்குக் காரணமான பிரின்சிபால் அம்மாளின் உபதேசமும் நினைவிற்கு வந்தது. வர வரத் தான் செயற்கையாக நாட்களைக் கடத்துவதுபோல் சாவித்திரிக்கு ஒருணர்வு வந்து கொண்டிருந்தது. கலீர்கலீரென்று வாத்தியங்கள் போல் சிரிக்கும் இளம் மாணவிகளோடு நெருங்கிப் பழகத் தவித்தாள் அவள்.

விடுதியின் பிரதான நுழை வாசலை ஒட்டி வார்டனின் அறை. பிரின்ஸ்பால் அம்மாளின் உத்தரவுப்படி தான் வார்டனாகப் பதவி பெற்ற முதல் தினம் சாவித்திரி செய்த முதல் காரியம் "உத்தரவின்றி யாரும் உள்ளே நுழையக்கூடாது" - என்ற போர்டுதான். அதையும் மீறி யாராவது மாணவி அநுமதிபெற்று உள்ளே நுழைந்து விட்டாலோ வார்டன் அமர்ந்திருக்கும் நாற்காலிக்கு மேலே, "குறையப் பேசி நிறைய உணர்த்து" - "அநாவசியமாகச் சிரிக்காதே" - "சிரிப்பு என்பது பெண்மையின் விலை

*மதிப்பற்ற மூலதனம்" - என்பது போன்ற போர்டுகள் தென்பட்டுப் பயமுறுத்தும். இவை எல்லாம் பிரின்ஸிபால் அம்மாள் அளித்த போர்டுகள்.*

*இந்த போர்டுகளையோ, சாவித்திரியையோ, யாராவது மாணவி கேலி செய்தால்கூட உடனே அந்த மாணவியைப் பற்றி தனக்கு ரிப்போர்ட் செய்யுமாறு கூறியிருந்தாள் பிரின்ஸிபால் அம்மாள்.*

*'சாவித்திரிக்'குப் பயந்து பாதிப் பேர் - பிரின்ஸிபால் அம்மாளுக்குப் பயந்து பாதிப்பேர் - என்று மாணவிகள் இந்தக் கட்டுப்பாடுகளுக்கு அடங்கியிருந்தார்கள்.*

*ஆனால் உண்மையில் சாவித்திரிக்குத்தான் மனப்பூர்வமாக இந்தக் கடுமையில் விருப்பமில்லை. சமீப காலம் வரை ஒரு கல்லூரியில் கலகலப்பான மாணவியாக இருந்து விட்டு வந்து இப்போது கலகலப்பான மாணவிகளை இப்படி அடக்குவதைச் சிரமமான வேலையாகவே உணர்ந்தாள் அவள். தன் தலைக்கு மேலும் அறைக்கு மேலும் தொங்கிய போர்டுகள் எல்லாம் அவளுக்கே காட்டுமிராண்டித் தனமாகத் தோன்றின. எப்படியோ என்றாலும் இந்த வார்டன் பொறுப்பை ஏற்று ஓர் ஆறு மாதம் ஒட்டியாயிற்று.*

*எத்தனையோ இளம் பெண்களிடம் புதிய டிசைன் புடவையிலிருந்து அந்த ஊரில் நல்ல வாசனையான மல்லிகைப்பூ எங்கே கிடைக்கும் என்பதுவரை விசாரிக்க வேண்டும், சிரித்துப் பேச வேண்டும், அரட்டையடிக்க வேண்டும் என்றெல்லாம் அவளுக்கும் உள்ளூற ஆசை உண்டு.*

*ஒருநாள் மின்சாரக் கோளாறினால் விடுதியில் இரவு ஏழு மணிக்கு எல்லா விளக்குகளும் போய்விட்டன. எலக்ட்ரிசிடி அலுவலகத்துக்கு ஃபோன் செய்துவிட்டு மிஸ்.சாவித்திரி எம்.ஏ. வராண்டாவில் நின்று கொண்டிருந்தாள். அவள் அங்கு நிற்பது இருளில் தெரியாததால் எதிர்த்த அறை வாயிலில் கூடியிருந்த பெண்கள் கூட்டம் ஒன்று சிரிப்பும் கேலியுமாகத் தங்களுக்குள் உரையாடலாயிற்று.*

*"ஏண்டீ! நம் வார்டன் மிஸ். சாவித்திரி இப்பவே இப்பிடியிருக்காளே....? ஒரு வேளை இங்கே இப்பிடிக் கடுமையாயிருந்து பழகிப் பழகி நாளைக்குக் கலியாணமானால் புருஷன்கிட்டக்கூடக் கடுமையாகவே எல்லாம் வந்துவிடும். 'குறையப் பேசி நிறைய உணர்த்து' -'அநாவசியமாகச் சிரிக்காதே' - என்றெல்லாம் கணவனுக்கே உத்தரவு போடுவாள் இல்லையா?"*

*"அதனால்தான் ஒரு காலேஜ் வாத்தியாரம்மாவுக்கும் கணவனே கிடைப்பதில்லை..."*

*இந்த உரையாடலின் போதே திடீரென்று விளக்கு வந்தால் தான் அங்கு நிற்பதை அவர்கள் பார்த்துக் கூச்சமும் பயமும் அடையப் போகிறார்களே என்று உள்ளூற வருந்திய சாவித்திரி உடனே இருளில் தன் அறைக்கு விரைந்தாள்.*

*ஆனால் என்ன துரதிர்ஷ்டம்? அவள் இரண்டடி எடுத்து வைத்ததுமே எல்லா விளக்குகளும் பளிச் சென்று எரியத் தொடங்கிவிட்டன.*

மாணவிகள் குரல் ஒலிகள் மந்திரம் போட்டது போல் அடங்கின. மிஸ். சாவித்திரியும் அங்கேயே நிற்பது தெரிந்தவுடன் ஒருத்திக்காவது முகத்தில் ஈயாடவில்லை. சாவித்திரியோ ஒன்றுமே அறியாதவள் போல், "அதுதான் லைட் வந்துவிட்டதே....? ஏன் நிற்கிறீர்கள்? அவரவர் அறைக்குப் போய்ப் படியுங்களேன்? நேரத்தை வீணாக்கக் கூடாது" என்று சுபாவமாகச் சிரித்துக் கொண்டே கூறிவிட்டு வந்தாள்.

ஆனால் அறைக்கு வந்ததும் அந்தக் கேலிக்குரல்களே காதில் மறுபடி மறுபடி ஒலித்தன.

'ஏண்டீ மிஸ் சாவித்திரிக்குத் திருமணமானால்....?'

அந்தக் குரல்களுக்குரியவர்களை அவளுக்கு நன்றாகத் தெரியும்!

'ஒரு காரியம் செய்தால் என்ன?' - என்று தோன்றியது சாவித்திரிக்கு. அப்படிப் பேசியவர்களையே வரவழைத்து, "பெண்களே! நீங்கள் நினைப்பதுபோல் நான் ஒன்றும் அவ்வளவு கடுமைக்காரி இல்லை. ஏதோ கடமைக்காக பிரின்ஸிபால் அம்மாள் சொன்னதை அப்படியே கடைப்பிடிக்கிறேன். என்னுடைய கல்லூரி நாட்களில் உங்களை விடக் கலகலப்பாக இருந்தவள் நான்..." என்று சொல்லிவிட்டால் என்ன? இந்தக் கடுமைத் திரையை இப்படிப்பட்ட சந்தர்ப்பத்தில் கிழித்தெறிந்தால் தான் என்ன? என்று தோன்றியது அவளுக்கு. முதல் வேலையாகக் காலையில் அந்த மாணவிகளைக் கூப்பிட்டனுப்பிப் பேசுவது என்று முடிவு செய்து கொண்டாள் சாவித்திரி.

அந்தக் கல்லூரியில், மட்டும் ஒரு வழக்கம் உண்டு. எவ்வளவுக்கு எவ்வளவு கடுமையோ அவ்வளவுக் கவ்வளவு குற்றத்தை ஒப்புக்கொள்ளுகிற மாணவிகளை பிரின்ஸிபால் மன்னித்து விடுவாள். இருந்தும் கூட இந்தப் போர்டுகளும் இந்த இளம் வயதிலேயே ஒரு சட்டாம்பிள்ளைக் கடுமையும் - சாவித்திரிக்குச் சலிப்பாயிருந்தன.

காலையில் விடிந்ததும் காபி டயம் முடிந்தவுடன் ஒரு துண்டுத் தாளில் முதல் நாளிரவு - மின் விளக்கு அணைந்த இருளில் - தன்னைப் பற்றிக் கேலி பேசிய மாணவிகளின் பெயர் - அறை எண் எல்லாம் குறித்து ஹாஸ்டல் ப்யூனை கூப்பிட்டு அவர்களை அழைத்து வரச் சொன்னாள்.

- சிறிது நேரத்தில் ப்யூன் திரும்பி வந்து அவர்கள் அறையில் இல்லை என்று தெரிவித்தான்.

'இத்தனை அதிகாலையில் எங்கே போயிருப்பார்கள்?' - என்று முதலில் வார்டன் என்ற முறையில் கோபம் தலை எடுத்தாலும் சாவித்திரி அதை அடக்கிக் கொண்டாள்.

சிறிது நேரம் கழித்து வார்டன் அறையிலிருந்த டெலிபோன் மணி கிணுகிணுத்தது. சாவித்திரி ஓடிப்போய் ரிஸீவரை எடுத்தாள்.

"ஹலோ! யாரு? மிஸ். சாவித்திரியா? நான் தான் பிரின்ஸிபால் பேசறேன். ஸ்டூடன்ஸ் வனஜா. அம்மு குமுதா-மூணு பேரும் இங்கே வந்திருக்காங்க. நேத்தி ராத்திரி

கரண்ட் பெயிலானப்ப - நீ வராண்டாவிலே நின்னுக் கிட்டிருக்கிறது தெரியாமே உன்னைப்பத்தி ஏதோ கிண்டலாப் பேசினாங்களாமே... அதைத் தாங்களே வந்து எங்கிட்டச் சொல்லி, "இனிமே அப்பிடிப் பேசலே! வார்டனே இதைப்பத்தி உங்களுக்கு ரிப்போர்ட் பண்ணுவாங்க. நீங்க இந்தத் தடவை எங்களை மன்னிச்சிடணும்"கிறாங்க.... ஆனா நான் அதை ஒத்துக்கலை. தலைக்கு அஞ்சு ரூபாய் ஃபைன் போட்டிருக்கேன், உங்கிட்ட வந்து மன்னிப்பும் கேட்கச் சொல்லியிருக்கேன்..."

சாவித்திரி உடனே அவசரமாகக் குறுக்கிட்டாள்.

"சே! சே! அவ்வளவு சீரியஸ்ஸா பனிஷ் பண்ணியிருக்க வேண்டாமே! நானே இதை ஒண்ணும் தப்பா எடுத்துக்கலே... தயவு செய்து ஃபைனை மட்டுமாவது கான்ஸல்.... பண்ணிடுங்களேன்..."

"நோ! நோ! உனக்குத் தெரியாது. இதெல்லாம் ஸ்டிரிக்ட்டா இருக்கணும். ஐ ஷல் ஸெண்ட் தி கேர்ல்ஸ்.... டு யுவர் ரூம்..." என்று கண்டிப்பாகச் சொல்லி ஃபோனை வைத்துவிட்டாள் பிரின்ஸிபால் அம்மாள்.

- மிஸ். சாவித்திரிக்கு மிக மிக வேதனையாக இருந்தது. ஓர் உறவை மிக மிகச் சுமுகமாக்க அவள் முனைந்த வேளை பார்த்து இப்படி அது மிகமிகக் கடுமையானதில் அவள் நொந்து போனாள். ஒன்றும் ஓடவில்லை.

மாணவிகள் வந்தார்கள். "வாருங்கள்! நீங்கள் இதை ஏன் பெரிது படுத்திக்கொண்டு பிரின்ஸிபாலிடம் போனீர்கள்...? நானே இதை ஒண்ணும் தப்பா நினைக்கலியே! நான் படிக்கறப்ப எங்க லெக்சரர்ஸைப் பற்றி எத்தனையோ தடவை இப்படிப் பேசியிருக்கேன். இதெல்லாம் சகஜம்...."

- என்று சாவித்திரி கூறியதற்கு விளைவே இல்லாமல் மூன்று பேருமே இயந்திரங்கள் பேசுவது போல் இயங்கி,

"எங்களை மன்னிக்கணும்" - என்று மட்டும் கூறிவிட்டு நகர்ந்தார்கள். சாவித்திரிக்கு என்னவோ போலிருந்தது அவர்கள் தன் சுமுக பாவத்தை நம்பவில்லை என்றே தோன்றியது. அவள் சித்தபிரமை பிடித்தாற்போல் உட்கார்ந்து விட்டாள்.

அன்று மாலையிலேயே மறுபடியும் இரண்டு போர்டுகள் பிரின்ஸிபால் அம்மாளின் உத்தரவுப்படி அவள் அறையிலே கொண்டு வந்து மாட்டப்பட்டன.

"வார்டனைப்பற்றிப் புறம் பேசுவது தவறு"

"நீங்கள் புறம் பேசும் ஒவ்வொரு சொல்லும் யாரைப் பற்றியோ அவர்களுக்கும் செவி உண்டு"

- மிஸ். சாவித்திரி எவ்வளவோ மறுத்தும் கேட்காமல் பிரின்ஸிபால் அம்மாள் அந்த போர்டுகளை வார்டனின் அறையில் மாட்டியே தீர வேண்டுமென்று உத்தரவு போட்டுவிட்டாள்.

போர்டுகள் நிரந்தரமாயின. அவற்றால் கடுமையும் அதிகமாயிற்று. இளம் மாணவிகள் என்ற நளின வாத்தியங்களின் நரம்புகளை வருடி இனிய பண்களை வாசிக்கலாமென்று கனவு கண்ட மிஸ். சாவித்திரியின் எண்ணம் மீண்டும் வறண்டது.

போர்டுகள் மாட்டப்பட்ட நாலாம் நாள் இரவு மீண்டும் ஒரு மின்சாரக் கோளாறு காரணமாக விளக்குகள் போயின.

வார்டன் மிஸ். சாவித்திரி ஃபோன் செய்து விட்டு வராந்தாவுக்கு வந்தாள். வராந்தாவில் ஒரே மாணவிகள் கூட்டம். ஒருவரை ஒருவர் காண முடியாத இருள்.

"அத்தனை கருணை உள்ளவள் என்றால் ஏன் புதிதாக ரெண்டு போர்டை வேறு எழுதி வாங்கி மாட்டணுமாம்?"

"பேச்செல்லாம் சுத்த வேஷம்...."

"நாமாக முந்திக் கொண்டோமோ தலைக்கு ஐந்து ரூபாய் ஃபைனோடு போயிற்றே? வார்டனே ரிப்போர்ட் செய்திருந்தால் டிஸ்மிஸ்ஸே ஆகியிருக்கும்... நல்லவேளை....." பளிச்சென்று விளக்கு வந்தது. மிஸ். சாவித்திரி எம்.ஏ நிற்பதை அவர்கள் பார்த்தார்கள். ஆனால்.....? இப்போது ஒரு வித்யாசம்...

இன்று வார்டனைப் பார்த்த பின்னும் பேச்சு - சிறிப்பு - கேலி எதுவுமே நிற்கவில்லை. அதிலிருந்து தப்ப சாவித்திரிதான் தன் அறைக்கு விரைய வேண்டியிருந்தது. அந்தக் கல்லூரி வேலையை இராஜிநாமா செய்து எழுதுவதற்கு முன் அவள் நொந்த மனதோடு தனக்குத்தானே இப்படிச் சொல்லிக் கொண்டாள்.

"இந்த இனிய வாத்தியங்களை நான் இனி என்றும் வாசிக்கவே முடியாதபடி இறுக்கிக் கட்டிவிட்டார்கள்! பாவம்....."

(தாமரை - 1967க்கு முன்)

## 101. வாத்தியங்களும் விரல்களும்

"**வெ**ய்ட்டிங் ஃபார் ரிஸல்ட்" என்று அப்ளிகேஷன் போட்டதும், ரிஸல்ட் வந்ததும் அவசர அவசரமாகப் பாஸாகி விட்டதைத் தெரிவித்ததும் எவ்வளவு வேகமாக நடந்தனவோ அவ்வளவு வேகமாக "ஆர்டர்" வந்ததும் ஆச்சரியமாகவே இருந்தது. டெம்பரரியாக ஒரு வருஷத்துக்குத்தான் 'ஆர்டர்' போட்டிருந்தார்கள் என்றாலும் அதுவாவது கிடைத்ததென்பதே அவனைப் பொறுத்தவரை பெரிய விஷயம்தான். சமஸ்கிருதம் உள்ள பள்ளிகளே குறைவு. அதிலும் ஒரு முழு நேர ஆசிரியர் போடுகிற அளவு சமஸ்கிருத மாணவர்கள் உள்ள பள்ளிக்கூடங்கள் நாளுக்கு நாள் குறைந்து வந்தன. அதனால் நாற்பது மைல் தள்ளி உள்ள கிராமமென்பதை அவன் ஒரு குறைவாக எண்ணவே இல்லை. ஒப்புக்கொண்டு மறுதினத்தன்றே புறப்பட்டு மாலையில் போய்ச் சேர்ந்தான்.

மறுநாள் விடிந்ததும் அந்தக் கிராமத்தின் விடிகாலை நேர வனப்புகள் எல்லாமே அவன் மனத்தைக் கவர்ந்தன. ஸ்கூல் ப்ரேயர் நடந்து கொண்டிருந்தது. கைக்கெட்டுகிற தூரத்தில் வரிசை வரிசையாகப் பட்டுப்பூச்சிகள் போல அணிவகுத்து நின்று கொண்டிருந்த பெண்களின் கூந்தல் மல்லிகை கம்மென்று பாய்ந்து வந்து நாசியை நிறைத்தது. ப்ரேயர் பாடலின் தேன் நெகிழ்வது போன்ற குரலினிமை, புஷ்பங்களின் எல்லையற்ற வாசனை, காலை நேரத்தின் சுகம், வேப்பமரங்களின் மெல்லிய இலை யசைவு, தொலைவில் சாம்பல் பூத்த நிறத்தில் தெரியும் சில மலைகள் எல்லாம் சேர்ந்து சுந்தரராஜனின் மனத்தைக் கவ்வி எதையோ தூண்டின. முந்தாநாள் "அப்பா யிண்ட்மெண்ட் ஆர்டர்" கிடைத்து, நேற்று மாலையில் கலாசாலை மூடுவதற்கு முக்கால் மணி நேரம் இருக்கும்போது பஸ்ஸில் நாற்பது மைல் பிரயாணம் செய்து வந்து அவசர அவசரமாக "ஜாயினிங் ரிப்போர்ட்" எழுதிக் கொடுத்துவிட்டு "புது சான் ஸ்கிரிட் பண்டிட்" என்ற பெயருடன் இன்று காலையில்தான் அந்தப் பள்ளிக் கூடத்தின் முதல் முழுநாளைச் சந்திப்பதற்கு உள்ளே வந்திருந்தான் சுந்தரராஜன்.

ஒரு பெரிய நகரத்தின் நாற்பதாவது மைலில் சுற்றிலும் பல மைனர் பஞ்சாயத்துக் கிராமங்களையும், மலையடிவாரத்துச் சிற்றூர்களையும் கொண்ட மேஜர் பஞ்சாயத்து ஊர் ஒன்றில் ஒரு பள்ளி ஆசிரியருக்குப் பிரமுகரின் அந்தஸ்து என்பது எட்ட முடியாத விஷயம் ஒன்றுமில்லை. ஒரு சாதாரண மனிதனுக்குக் கிடைப்பதைவிடக் குறைவான வாழ்க்கை வசதிகளையும், அதிகமான அல்லது அநாவசியமான அந்தஸ்தையும், வேண்டாமென்றாலும் கேட்காமல் ஓர் ஆசிரியனுக்குத் தந்து விடுவது கிராமங்களில் தவிர்க்க முடியாதது. ஓரியண்டல் காலேஜில் ஐந்து வருஷம் படித்து விட்டு ரிஸல்ட் வந்தவுடன் கிடைத்த முதல் உத்தியோகமாகையினால் ஊரைப் பற்றிப்

பொருட்படுத்தாமல் அதற்கு ஒப்புக் கொண்டான் அவன். ரா கிராஜுவேட்டாகக் கல்லூரியிலிருந்து வெளிவரும் ஒரு அன்ட்ரெயின்ட் டீச்சருக்கு இந்த நாட்களில் வேலை கிடைப்பதிலுள்ள சிரமங்கள் எல்லாம் அவனுக்கும் தெரியும். இதையெல்லாம்விடப் பெரிய விஷயம் அரு ஒரு கோ - எஜுகேஷனல் ஸ்கூல். வயது முதிர்ந்த சமஸ்கிருதப் பண்டிதர் ஒருவரையே அவர்கள் தேடிக் கொண்டிருந்தார்கள். கிடைக்காத காரணத்தால்தான் தன்னைப் போல் ஓர் இளைஞனை "அப்பாயின்ட்" செய்ய சேர்ந்தது என்பதும் அவனுக்குத் தெரியும். வயது முதிர்ந்தவர் கிடைத்தால் தன்னைத் தூக்கி விடுவார்கள் என்பதும் அவனுக்குத் தெரியும்.

அந்த ஊர் அவனுக்கு மிகவும் பிடித்திருந்தது. அந்த ஊரின் ஆற்றங்கரையும், மாந்தோப்பும், கால்களில் கொலுசு அணிவதை இன்னும் அநாகரிகமாகக் கருதாத பேதைமை நிறைந்த பெண்களும், அவர்களின் பேசுவது போன்ற பார்வையும், பார்ப்பது போன்ற புன்னகையும், புன்னகை போன்ற நோக்கும் அவனுக்கு மிகவும் பிடித்திருந்தன.

அவனுடைய பொழுது போக்கு பத்திரிகைகளுக்குக் கதைகள் எழுதுவது. அந்தக் காரியத்திற்கு இந்த ஊர் மிகவும் பொருத்தமாயிருக்கும் போலத் தோன்றியது. எந்த இடத்தில் பூக்களின் மணம் மனத்துக்குள்ளே மறைந்து கிடக்கும் வேறு பல்லாயிரம் மணங்களைக் கிளரச் செய்கிறதோ, எந்த இடத்தில் கேட்கும் இசை மனதிற்குள் கேளாமலிருக்கும் வேறுபல இசைகளைச் சுருதி கூட்டி மீட்டுகிறதோ அந்த இடத்தில் பிறவாத கற்பனை வேறெந்த இடத்தில்தான் பிறக்கப் போகிறது?

ஃபோர்த் பாரம், பிஃப்த் பாரம், எஸ்.எஸ்.எல்.சி. ஆகிய மூன்று உயர் வகுப்புகளில் மொத்தம் பதினேழு பேர். மாணவர்களும் மாணவிகளுமாக சமஸ்கிருதம் எடுத்திருந்தார்கள். ஃபோர்த் பாரத்தில் மூன்று பேர். பிஃப்த் பாரத்தில் ஆறுபேர், எஸ்.எஸ்.எல்.சியில் எட்டுப் பேர். இவ்வளவுதான் அந்தப் பள்ளியில் சமஸ்கிருத மாணவிகளின் எண்ணிக்கை. அவன் வேலை மிக மிகக் குறைவுதான்.

நாலாவது பாரத்தில் இருவர் பையன்கள், ஒருத்தி பெண். ஐந்தாவது பாரத்தில் நாலு பையன்கள், இரண்டு பெண்கள். எஸ்.எஸ்.எல்.சி. வகுப்பில் சமஸ்கிருதம் எடுத்திருந்த எட்டுப் பேருமே பெண்கள்.

நாலாவது பாரம் அவனுக்கு ருசிக்கவில்லை. மொத்தம் மூன்று பேர். அதில் இரண்டு பையன்களும் நோட்ஸ், நோட்ஸ் என்று பரீட்சைக்கு நோட்ஸ் கேட்பதிலேயே கண்ணாயிருப்பவர்கள். ஒருத்தி பெண். அவளும் ஊமைக் கோட்டான். பேசவே மாட்டாள். ஐந்தாவது பாரத்தில் பையன்கள் நாலுபேரும் சுமார். பெண்கள் இருவரும் படு அரட்டைகள். விஷயங்களின் நயங்களை ரசித்து ஆசிரியருக்குச் சொல்லித் தருவதில் ஊக்கம் தருவதற்கோ ஹாஸ்யத்தில் ஈடுபட்டுச் சிரிப்பதற்கோ கூடப் பயப்படும் வயது அவர்களுக்கு. ஆகவே அந்த வகுப்பிலும் சுந்தரராஜன் என்ற வாலிப வயது ஆசிரியனுக்கு உற்சாகமில்லை.

அவனுடைய உற்சாகமெல்லாம் எஸ்.எஸ்.எல்.ஸி. வகுப்பில்தான். அந்த வகுப்பில் எல்லோருமே நினைவறிந்த "பெரிய" பெண்கள். அவர்களின் விழிப்பார்வை,

புன்னகை, கலீர் கலீர் என்று ஹாஸ்யத்துக்குச் சங்கீதமாய் நகைக்கும் ரசிகத் தன்மை, எல்லாமே அந்த வகுப்புக்கு எப்போது போவோம், எப்போது போவோம் என்று அவனையே எண்ணி ஏங்கச் செய்தன.

எஸ்.எஸ்.எல்.ஸி வகுப்பிலிருந்த எட்டுப் பெண்களில் இருவர் மிகவும் சிறியவர்கள். பாவாடை, சட்டை தாண்டாத வயது. நாலு பேர் தாவணி போடுகிற பருவத்தினர். இருவர் ஆறு கெஜம் புடவை, ஜாக்கெட் அணிகிற அளவு செழிப்பான இளமையின் எல்லையில் வந்து நிற்கிறவர்கள். அவர்களில் ஒருத்தி புவனேஸ்வரி. ஒவ்வொரு நாளும் ஒரு தடவையாவது அவளைப் பார்த்துவிட வேண்டும் என்று அவனை அந்தரங்க மாகத் தவிக்கச் செய்தவள் அவள். இவ்வளவு அழகான பெண்ணை இது வரை வாழ்க்கையில் அவன் பார்த்ததில்லை. அவனுக்குக் கற்பிக்கப்பட்ட காவியங்களில் மட்டுமே பார்த்திருந்தான். இப்போதுதான் முதன் முதலாக வாழ்வில் பார்த்தான்.

அவன் அந்தப் பள்ளிக்கூடத்தில் வேலைக்குச் சேர்ந்து மூன்று மாதமாகியும் ‘புது வாத்தியார்’ப் பட்டம் மட்டும் அப்படியே இருந்தது.

நாலாவது மாதம் ‘குவார்டர்லீ’ பரீட்சை முடிந்து மறுபடி பள்ளிக்கூடம் திறக்க முதல் தினத்தன்று ஐந்தாவது பீரியடு சமஸ்கிருத வகுப்பில் எஸ்.எஸ்.எல்.ஸி.யைச் சேர்ந்த பெண் ஒருத்தி முற்றிலும் எதிர்பாராத ஒரு கேள்வியை அவனிடம் கேட்டு அவனையும் வகுப்பையும் ஒரே வேளையில் ஆச்சரியத்தில் மூழ்கச் செய்தாள்:

“சண்பகம் என்ற இலக்கியப் பத்திரிகையில் எஸ். ராஜன் என்கிற பெயரில் கதைகள் எழுதுவது நீங்கள்தானா சார்?”

இந்தக் கேள்விக்குப் பதில் சொல்லுமுன் புவனேஸ்வரியின் அழகிய முகத்தையும் கவர்ச்சி நிறைந்த கண்களையும் பார்த்தான் அவன். அந்தக் கண்களில் ஆவல் ததும்பி நின்றது.

அவன் சிரித்துக் கொண்டே பதில் கூறினான் :-

“ஆமாம்! நான்தான்.”

உடனே வகுப்பு முழுவதும் ஒருவருக்கொருவர் வியந்து பேசும் மெல்லிய குரல்கள் பூத்து நிறைந்தன. ஒரு பேருண்மையைக் கண்டு பிடித்தது போன்ற மலர்ச்சி அங்கே பிறந்தது. அபூர்வமான மனிதர் ஒருவரைத் தங்களிடையே திடீரெனக் கண்ட ஒரு கூட்டத்தின் வியப்பும் பரபரப்பும் அந்த எட்டுப் பேரடங்கிய சிறிய வகுப்பறையில் உண்டாயிற்று. அந்தப் பரபரப்பு அவனது எழுத்தாள மனத்துக்குப் பிடித்தாலும் வாத்தியார் மனத்துக்குப் பிடிக்கவில்லை.

“ஸைலன்ஸ்” என்று குரல் கொடுத்தான் சுந்தரராஜன். வகுப்பில் அமைதி நிலவியது. உடனே ரகுவமிசம் - இந்துமதியின் சுயம்வரம் பாடம் விளக்கப்பட்டது. மாணவிகளிடையே மறுபடி அமைதி பிறந்தது.

“இந்துமதி ஒவ்வோர் அரசனையும் கடந்தபோது இருண்ட வீதி ஒன்றில் கொண்டு போகப்படும் தீபமானது பின்னால் இருளைப் பரவவிட்டு அடுத்து எதிர்வரும்

பகுதிகளில் எல்லாம் ஒளியைப் பரப்புவதுபோல, அவள் மாலையிடாமல் பின்னடைய விட்ட அரசர்கள் முகத்தில் இருளையும், 'நமக்கு அணிவிப்பாள்' என்ற மகிழ்ச்சியில் மீதமிருந்த எதிர்வரும் அரசர் முகங்களில் ஒளியையும் தோற்றுவித்தாள்" என்று கூறியபடியே புவனேசுவரியின் முகத்தைப் பார்த்தான் சுந்தரராஜன். அவளை நேராகவோ, திருட்டுத்தனமாகவோ பார்த்தால் கூட உடனே அவனுக்கு வியர்த்துக் கொட்டியது.

அவன் காவியத்தில் படித்த இந்துமதி அங்கே புவனேஸ்வரியாக அமர்ந்திருந்தாள். அவள் கவனித்துக் கேட்கிறாள் என்பதற்காகவே அப்பகுதியைப் பிரமாதமாக வருணித்தான் அவன். அப்போது அவள் அவனது தூண்டுதலாயிருந்தாள்.

அவளுடைய குரலை அன்றும் ஒருமுறை கேட்கும் ஆசையோடு அவளையே ஒரு கேள்வியும் கேட்டான் அவன்.

புவனேஸ்வரி எழுந்து பதில் கூறினாள். அவளுடைய சங்கீதக்குரல் அவனுள் உறைந்திருந்த சங்கீதங்களை மீட்டியது. "போங்க சார்! நீங்க எப்பக் கேள்வி கேட்டாலும் புவனாவை மட்டுமே கேட்கிறீங்களே?" என்று மற்றொரு மாணவியிடமிருந்து பொறாமை வெடித்தது.

அவளையும் ஒரு கேள்வி கேட்டுச் சமாதானப் படுத்தினான் சுந்தரராஜன். வகுப்பு முடியப் பத்து நிமிஷங்கள் மீதமிருந்தன. தன்னுடைய கதைகளில் எதையாவது 'சண்பக'த்தில் புவனேஸ்வரி படித்திருக்கிறாளா என்று தெரிந்து கொள்ள அவனுக்கு ஆசையாயிருந்தது. ஆனால் அதை நேருக்கு நேர் அவளிடம் மட்டுமே கேட்க அவனுக்கு வகுப்பில் தயக்கமாயிருந்தது. துணிந்து முதலில் கேள்வி கேட்ட பெண்ணிடமே அந்த வினாவைத் தொடங்கினான் அவன். அவள் பதில் கூறினாள்:-

"எனக்குத் தெரியாது சார்! கதை எழுதறது நீங்க தானான்னு உங்களைப் புவனாதான் கேட்கச் சொன்னா சார்" என்று பதில் சொன்னாள் அந்தப் பெண்.

"அவளே கேட்டால் என்ன? அவளுக்காக நீ கேட்டது ஏன்?"

"அவ உங்ககிட்டக் கேட்கப் பயப்பட்டா சார்!"

சுந்தரராஜன் புவனேஸ்வரியைப் பார்த்தான். நாணமும், நகையும் குழம்பி அவள் முகம் சிவந்தது. அவள் அவனை நேரே பார்க்கத் தயங்கி இருந்தாள். அவ்வளவில் மணி அடித்தது. சம்ஸ்கிருத வகுப்பும் கலைந்தது. சுந்தர ராஜனின் மனத்தில் பூக்கள் மணந்தன. இசைகள் சுருதி கூட்டி ஒலித்தன. அன்று மாலை ஸ்கூல் விட்டதும் அறைக்குப் போய் அவன் ஒரு கதை எழுதினான். துணிந்து அந்தக் கதையில் வரும் பெண்ணுக்குப் புவனேஸ்வரி என்றே பெயர் வைத்தான் - எங்கோ இருக்கும் வாத்தியத்தை அவன் மனம் பாவனைகளில் மிருதுவாக மீட்டியது. அது மிகவும் சுகமாக இருந்தது. கதையைத் தபாலில் சேர்ப்பித்த பின் பெயர் விஷயம் அவனுக்கு மறந்துவிட்டது. மேலும் இரண்டு மூன்று வாரத்தில் அந்தக் கதை எப்போது

வெளிவரும் என்பதைக்கூட அவன் ஞாபகம் வைத்துக் கொள்ளவில்லை. மெல்ல மெல்ல அதை மறந்துவிட்டான்.

* * *

அரைப் பரீட்சைக்கு முன்பு ஒரு வாரம் இருக்கும்போது திடீரென்று சம்ஸ்கிருத வகுப்பில் முன்பு கேள்வி கேட்ட அதே பெண் எழுந்திருந்து அவனை ஒரு கேள்வி கேட்டாள்:-

"இந்த மாத 'சண்பகம்' பத்திரிக்கையிலே உங்க கதை ரொம்ப நல்லாயிருக்கு சார்! கதையிலே வர்ர பெண்ணுக்குக் கூடப் 'புவனேஸ்வரி'ன்னு பேர் வைச்சிருக்கீங்களே...?"

"சண்பகம், எப்போது வந்தது? எனக்கு இன்னும் கிடைக்கலியே? தபாலில் தவறி விட்டதா?" என்று பேச்சை மாற்ற முயன்றான் சுந்தரராஜன். உண்மையிலேயே அவனுக்கு அந்த மாதச் 'சண்பகம்' தபாலில் கிடைக்கவில்லை. எனவே கதை வந்திருந் ததும் அவனுக்குத் தெரியாது. அந்தப் பெண் ஸ்கூல் லைப்ரரியில் அதைப் படித்திருக் கிறாள். அந்தக் கதை வெளிவந்ததை அறிந்த அவனுக்கு மகிழ்ச்சியாயிருந்தது.

"நீ அதுக்குள்ளே படிச்சாச்சா?" - என்று அந்தப் பெண்ணையே மேலும் கேள்வி கேட்டு வாயைக் கிளறினான் அவன்.

"நிஜமாச் சொல்றதா இருந்தா நான் அதை முதல்லே படிக்கலே சார்! முதல்லே படிச்சது புவனாதான். ஆனா..."

"ஆனா... என்ன?... சும்மாச் சொல்லேன்..."

"முதல்லே தான் படிச்சதாக உங்ககிட்டச் சொல்லப் பிடாதுன்னு அவதான் என்னைப் பயமுறுத்தினாள்."

"இதிலே பயம் என்ன?"

"அவளுக்குப் பயம்தான்."

அவன் புவனாவைப் பார்த்தான். மேகத்தில் மறையும் சந்திரனைப் போல் அவள் முகம் கருங்கூந்தலோடு மெல்லக் கீழே குனிந்தது. இதழ்களில் நாணம் மூடி மறைக்க முயன்றும் மலர்வது தவிராத நகை இழையோடிக் கொண்டிருந்தது. முதலில் கேள்வி கேட்ட பெண் படு வம்புக்காரியாக இருந்தாள். மீண்டும் அவளுடைய கேள்வியே தொடர்ந்தது.

"புவனா மேலே எப்பவுமே உங்களுக்குக் கொள்ளைப் பிரியம் சார்! இல்லையா?"

"கதையிலே பேர் வச்சால் பிரியம்னு ஆயிடுமா? உலகத்திலே இவ ஒருத்திதான் புவனாவா? எத்தனையோ பேருக்குப் புவனேஸ்வரின்னு பேர் இருக்கே? அந்தப் பேரு இவளுக்கு மட்டுமே சொந்தமா, என்ன?"

"ஐயையோ! அப்பிடீன்னா நீங்க நம்ம புவனேஸ்வரி பேரை எழுதலியா சார்?"

"இல்லை! இல்லை! கற்பனைக்கும் நிஜத்துக்கும் சம்பந்தமே படுத்தக்கூடாது..."

வகுப்பினரிடமிருந்து தன் ஆசிரியத் தன்மையின் கௌரவத்தை நிலைநிறுத்திக் கொள்வதற்காகக் கண்டிப்பான குரலில் இப்படிப் பதில் கூறினான் அவன். வகுப்புத் தொடர்ந்தது.

ஐந்து நிமிடத்திற்குள் வகுப்பில் திடீரென்று யாரோ விசும்பி அழும் மெல்லிய ஒலி கேட்டது.

"சார்! புவனா அழறா சார்!"

"ஏன்? அவளுக்கு என்னவாம்?"

"தெரியலே சார்!"

"எதுக்காக அழறே? கிளாஸ்லே அழுதா எப்பிடிப் பாடம் நடத்தறது...?"

பதில் பேசாமல் எழுந்து தலைகுனிந்து நின்றாள் புவனேஸ்வரி.

"ஏன் அழுதாய்?'

"..............."

"பதில் சொல்லித் தொலையேன்!"

"..............."

"பதில் சொல்லாட்டா இப்படியே நிற்க வேண்டியது தான்..." அவள் குனிந்த தலை நிமிராமல் நின்று கொண்டே இருந்தாள். பரிதாபமாகவும் இருந்தது. அவளை நிற்க வைத்துவிட்டு வகுப்பைத் தொடரவும் அவனுக்கு மனமில்லை. வயதுவந்த பெண் வகுப்பில் கண்ணீர்விட்டு அழுவதையும் பொறுக்க முடியவில்லை. ஹெட்மாஸ்டர் வேறு திடீரென்று 'ஸுபர் விஷனுக்'கு வந்தால் பெரிய வம்பாகிவிடும். நிறுத்தி வைத்திருந்தாலும் வயது வந்த பெண்ணை ஏன் நிறுத்தி வைத்திருக்கிறீர்கள் என்று அவர் சுந்தரராஜனைக் கூப்பிட்டுக் கேட்கலாம். அழுதுகொண்டே இருந்தாளானால் 'ஏன் அழுகிறாள்' என்று ஹெட்மாஸ்டர் கேட்கக்கூடும்.

"நீ கிளாஸில் இருக்க வேண்டியதில்லை. அழுவதானால் வீட்டில் போய் அழலாம்..."

அவள் தயங்கித் தயங்கிப் புத்தகக் கட்டை மார்பில் அணைத்தவாறே வகுப்பை விட்டு வெளியேறினாள். வகுப்புத் தொடர்ந்தது. பாடம் நடத்துவதில் அவனுக்கு மனம் செல்லவில்லை. பாடத்தில் ஓரிடத்திலே "சீதையும், ராமனும் கோதாவரி நதிக்கரையில் இருந்தபோது" - என்று சொல்வதற்கு பதில் "புவனேஸ்வரியும் ராமனும் கோதாவரி நதிக் கரையில் இருந்தபோது" என்று வாய்தவறி உளறிவிட்டான். வகுப்பில் எல்லாப் பெண்களும் உடனே சிரித்து விட்டார்கள்.

அன்று முழுவதுமே அவனுக்கு வேதனையாயிருந்தது. ஏதோ விளையாட்டாக ஆரம்பித்து அநாவசியமாக ஒரு பேதை மனத்தைப் புண்படுத்த நேர்ந்துவிட்டதே என்று அவன் மனம் வருந்தியது.

மறுநாள் காலையிலும் அவள் வகுப்பிற்கு வரவில்லை. இடைவேளையின் போது அவளுடைய தோழி ஒரு கடிதத்தை அவனிடம் அக்கம்பக்கம் பார்த்துக் கவனமாகத்

*தனியே இருக்கும் போது கொண்டு வந்து கொடுத்தாள். சுந்தர ராஜன் முதலில் அதை வாங்கத் தயங்கினான்.*

*“புவனா கொடுத்தா சார்!” என்றபடி அவன் முன்னே மேஜையில் வைத்துவிட்டு ஓடிவிட்டாள் அந்தப் பெண்.*

*அதை எடுத்துப் பிரித்தான் சுந்தரராஜன்.*

“மதிப்பிற்குரிய சம்ஸ்கிருத வாத்தியாருடைய பாதார விந்தங்களுக்கு அடியாள் புவனேஸ்வரி கோடி நமஸ்காரம். வகுப்பில் “ஏன் அழுதாய்” என்று நேற்றுக் கேட்டீர்கள். உங்கள் கதையில் என் பெயர் வந்தது பற்றி நான் என் தோழிகளிடம் எல்லாம் சொல்லிப் படித்துக் காட்டிப் பெருமையடித்துக் கொண்டிருந்தேன். நீங்களோ திடீரென்று, “கதையில் பேர் வச்சாப் பிரியம்னு ஆயிடுமா? உலகத்திலே இவ ஒருத்தி தான் புவனாவா? எத்தனையோ பேருக்குப் புவனேஸ்வரின்னு பேர் இருக்கே. அந்தப் பேரு இவளுக்கு மட்டுமே சொந்தமா என்ன?”ன்னு கோபமாகக் கேட்டீங்க. எனக்குத் தெரிஞ்சு நம்ம ஸ்கூல்லே புவனேஸ்வரீங்கற பேரு எனக்கு மட்டும்தான் இருக்கு. என் தோழிகளிடம் நான் கதையைப் படித்துக் காட்டிப் பெருமையடித்துக் கொண்டதை எல்லாம் ஒரு நிமிஷத்தில் கேலிக் கூத்தாக்கி என்னைத் தலைகுனிய வச்சாச்சு. இனிமே உங்களைப் பார்க்கவே எனக்குப் பயமாயிருக்கு. நீங்க ரொம்பக் கோபக்கார சார் மாதிரி ஆயாச்சு. நான் கிளாஸுக்கு வரவா, வேண்டாமா? தயவுசெய்து (இக்கடிதம் கொண்டு வரும்) வத்ஸலாவிடம் சொல்லி அனுப்பவும்.

உங்கள்,<br>
சா. புவனேஸ்வரி<br>
ஆறாம் படிவம் ஏ–பிரிவு<br>
ஆர்.பி. போர்டு உயர்பள்ளி

*கடிதத்தைப் படித்ததும் சுந்தரராஜனின் மனத்தில் தென்றல் வீசியது. பதினைந்து நிமிஷத்திற்குப் பின் அந்தப் பெண் வத்ஸலா-அவள்தான் புவனாவின் தோழி-மெல்லத் தலையை நீட்டினாள். அவன் முகம் கடுமையாயிருக்க முயன்றது.*

*“இந்தா! மத்தியான மணி அடிக்க இன்னும் பத்து நிமிஷம் இருக்கு. உன் சிநேகிதியை நான் கூப்பிட்டேன்னு கூட்டிக் கொண்டு வா! பரீட்சைக்கு நாள் குறைவாயிருக்கு. ஸெலபஸ் கவராகணும்” என்று அதிகாரத் தோரணையோடு இரைந்து கூறிவிட்டு அப்படிக் கூறிய சுவட்டோடேயே புன்னகையுடன், “வத்ஸலா? அவகிட்டச் சொல்லு; நீ வராட்டா அவருக்குக் கிளாஸ் நடத்தவே பிடிக்கலியாம்னு சொல்லு” - என்று குரலைத் தணித்து விரல்களை அழுத்தாமல் சலனத்திலேயே இசைக்கும் ஒரு நுண்ணிய வாத்தியத்தை மீட்டுவது போல் மிருதுவாகச் சொல்லியனுப்பினான் சுந்தரராஜன்.*

*வத்ஸலா ஓடினாள்.*

*புஷ்பங்கள் எல்லையற்று மணந்தன. வேப்பமரங்களில் மெல்லிய இலையசைவில் காற்றுச் சலசலத்தது. தொலைவில் சாம்பல் பூத்த நீல நிறத்தில் மலைகள் தெரிந்தன. பள்ளியில் மத்தியான வகுப்புக்களுக்கு ஆரம்ப மணி அடித்தது.*

**(தாமரை, ஜூலை, 1967)**

# 102. ஒரு மணிவிழாக் கதை

**வெ**ள்ளிவிழா எழுத்தாளர் வேங்கடநாதனை உங்களுக்கு ஏற்கனவே தெரிந்திருக்க வேண்டும். அப்படித் தெரிந்திருக்காவிட்டாலும் அது ஒரு பெரிய குற்றமாகிவிடாது. அதென்ன எழுத்தாளர் வேங்கடநாதன் என்று மட்டும் போடாமல் 'வெள்ளிவிழா எழுத்தாளர்' என்று போட்டிருக்கிறீர்களே என்பதாக நீங்கள் கேட்க வரலாம், அதற்குச் சரியான காரணம் இருப்பதனால் தான் அப்படிப் போட்டிருக்கிறது.

வேங்கடநாதன் ஒரே ஒரு துறையில் மட்டும் திறமைசாலி அல்ல. அவர் பல்வேறு துறைகளில் திறமைகள் நிறைந்தவர். 1916ம் ஆண்டு முதல் நான்கு ஆண்டுகள் கல்லூரிப் பேராசிரியராக இருந்திருக்கிறார். பின்பு பத்து ஆண்டுகள் ஒரு தினசரியில் செய்தி ஆசிரியர், அதன் பின் இருபது ஆண்டுகளாக ஓர் அயல் நாட்டுத் தூதரகத்தின் செய்திப் பிரிவில் பதவி வகித்தார். இறுதியில் ஒரு பத்து ஆண்டுகள் ஒரு டியூடோரியல் கல்லூரியில் பேராசிரியர். இப்படியாக அவரது வாழ்வு ஆசிரியர் பதவியில் தொடங்கி ஆசிரியர் பதவியிலேயே வந்து செக்குமாடு வட்டம் சுற்றினாற் போல நின்று விட்டது. குடும்ப வாழ்க்கையில் அவருக்கு ஒரு குறையுமில்லை. பதவிகளிலிருந்து ஓய்வு பெற்ற பின்பும் வீடு, வாசல், கார், டெலிபோன், பேங்கில் ரொக்கமாக ஓர் ஐம்பதினாயிரம் சேமிப்பு எல்லாம் இருந்தன.

இருந்தும் அவரை இடைவிடாமல் வாட்டியது ஓர் நைப்பாசை. அது தான் மணிவிழா ஆசை. ஏறக்குறைய எழுபது ஆண்டுகளுக்கு மேலாகியும் தம்முடைய மணிவிழாவை ஒருவரும் கொண்ட முன் வரவில்லையே என்பது தான் அவருடைய பெருங்கவலையாக இருந்தது. தாம் வாழ்ந்த துறைகளில் எந்தத் துறை மணிவிழாவுக்குப் பொருத்தமானது என்று சிந்தித்தார். அயல்நாட்டுத் தூதரக அலுவலைத் தவிர்த்து - பத்திரிகை - எழுத்து ஆசிரியர் தொழில்களில் பணியாற்றிய ஆண்டுகளைத் தொகுத்து மொத்தமாக ஒரு சேவைத் தகுதியைக் கற்பித்துக் கொண்டு - அந்தச் சேவைக்குப் பாராட்டு இல்லையே என்று கவலைப்பட்டார். மூன்று லட்ச ரூபாய்க்குச் சொத்துள்ள 'முத்தமிழ்ச்சரடு' ஆசிரியர் மூக்கையனார் - தமக்கு மூன்று லட்ச ரூபாய்க்கு மேல் கடனிருப்பதாக அறிக்கை விட்டு - மணிவிழா நிதி திரட்டிக் கொண்டதையும், பாவலர் பன்னீர்ச்செல்வம் - பசிக்கொடுமை தாளாமல் பஞ்சப்பாட்டாகப் பாடி நாற்பதாண்டு நிறைவதற்குள்ளேயே மணிவிழாக் கொண்டாடி (கொண்டு+ஆடி) 'வறுமைக் கவிவாணர்' என்ற பட்டத்தையும் - முப்பதினாயிரம் ரூபாய்ப் பொற்கிழியையும் பெற்றதையும் கண்டு கண்டு மனம் குமுறியவர் வேங்கடநாதன். இந்த மனக்குமுறல் தான் அவரை ஓரளவு மணிவிழாப் பித்துக் கொள்ளச் செய்திருந்தது.

அந்த வேளையாகப் பார்த்து இவரைத் தேடிவந்து சேர்ந்தான் அன்பரசன். அன்பரசன் நகரத்தின் பொது வாழ்வில் ஒரு பிரமுகன். பாராட்டு விழாவும் மணிவிழாவும், பொன்விழாவும் நடத்தி அறிஞர் பெருமக்களின் ஆவலை நிறைவேற்றுவதே அவன் வாழ்வின் குறிக்கோள். அன்பரசன் 'மணிவிழா அண்ட் பொன்னாடை பிரைவேட் லிமிடெட் கம்பெனியின் மானேஜிங் டைரக்டர்' என்றுகூடச் சிலர் இதைக் கேலியாகக் கூறுவதுண்டு. அதைப் பற்றியெல்லாம் நம் அன்பரசன் கவலைப்பட்டதே கிடையாது. பொது வாழ்வில் நாலுபேர் நாலுவிதமாகச் சொல்வார்கள். அதையெல்லாம் பெரிது படுத்தக்கூடாது என்று அவனுக்குத் தெரியும்.

ஒரு பெரிய மனிதரை அன்பரசன் தேடி வருகிறான் என்றாலே அவருக்கு மணிவிழாவோ, பொன் விழாவோ கொண்டாட வேண்டிய வயது வந்து கொண்டிருக்கிறது என்று அர்த்தம்.

"என்னண்ணா! இந்த நன்றி கெட்ட தமிழகத்தைப் பார்த்தீர்களா? எழுபதாண்டுகள் உழைத்து உழைத்துத் தேய்ந்த உங்களுக்கு உருப்படியாய் ஒரு பாராட்டுக்கூடச் செய்யாமல் விட்டுவிட்டார்களே!" என்று வேங்கடநாதனிடம் வாயைக் கிளறினான் அன்பரசன் - இன்னாரிடம் இப்படி இப்படித் தான் பேச்சைத் தொடங்க வேண்டும் என்று அன்பரசனுக்கு அத்துப்படி.

"விட்டுத்தள்ளுங்க. இங்கே இப்படி மறப்பது சகஜம்" என்று அலுத்துக் கொண்டார் வேங்கடநாதன்.

"நீங்க் விட்டுவிடலாம், அண்ணா! ஆனா என்னைப் போலொத்தவங்க அப்படி விட்டுவிட முடியாது!"

"முடியாட்டா... என்னதான் செய்யணுங்கறீங்க?"

"இன்னும் ஒரு வாரத்திலே ஒரு கமிட்டி செட் - அப் பண்றேன்... பாருங்க..."

"பண்ணி...?"

"அதை இப்பவே சொல்வானேன்? போகப் போக நீங்களே தெரிஞ்சுக்குவீங்க..."

"ஆகா! உங்க நல்லெண்ணத்தை எப்படிப் பாராட்டுறது? கடவுள் தான் உங்களுக்கு நல்லது செய்யத் துணை நிக்கணும்..." என்று தம்மையும் மறந்து உருக்கமாகப் பேசினார் வேங்கடநாதன். முதலில் பிகு செய்வதுபோல் பேசத் தொடங்கியவர் கடைசியில் அன்பரசனிடம் வழிக்கு வந்து விட்டார். அதிகமாகப் பிகு செய்து கொண்டால் எங்கே அன்பரசன் விட்டுவிட்டுப் போய்விடுவானோ என்ற பயம் அவருக்கே வந்து விட்டது.

"அதிலே பாருங்க, மிஸ்டர் அன்பரசன்! இன்னிக்கி இந்த ஊரிலே டெய்லி பேப்பர்லே இருக்கற அத்தனை ஸீனியர் ஜெர்னலிஸ்டுகளும் 'ஜெர்னலிஸம்'னா என்னங்கறதையே எங்கிட்டத்தான் படிச்சுக்கிட்டாங்க."

"எனக்குத் தெரியாதுங்களா? உங்க செர்வீஸ் என்ன? அனுபவம் என்ன? 'வெடெரன்' ஆச்சுங்களே...?" என்று துதிபாடினான் அன்பரசன். அவ்வளவுதான்! வேங்கடநாதன் சரியாக வலையில் விழத் தொடங்கினார்.

"ஆமாம்! கமிட்டி கூட்டறத்துக்கு, மணிவிழா வசூல் அலைச்சலுக்கு எல்லாம் முதல்லே கையிலேருந்து நிறையச் செலவழியுமே...?"

"செலவழியத்தான் செலவழியும்! பொதுக்காரியத்திலே இதெல்லாம் பார்த்தா முடியுமா? இந்த மாதிரி சமயங்களிலே நான்அறிஞ்ச மட்டிலே ஒரே ஒருத்தர் தான் ரொம்ப 'ஜெண்டில்மனா' நடந்துக்கிட்டார்."

"யார் அது?"

"நம்ம பரசூர் பண்ணப்பர் மணிவிழாக் கமிட்டியிலே நான் ஈடுபட்டிருந்தப்ப பண்ணப்பரே கமிட்டி மீட்டிங்குக்கு முதல்நாள் என்னைக் கூப்பிட்டனுப்பினார். போனேன். "இந்தா பார், அன்பரசன்! உன் கஷ்டம் எனக்குத் தெரியும். பிஸினஸ்லைக்கா இருப்போம். ஆரம்பகால அலைச்சல்களுக்காக ஒரு பைசாக்கூட நீ உன் கையிலிருந்து செலவழிக்கப்படாது. இந்தா, இதிலே ரூபாய் முந்நூறு இருக்கு, 'ஆரம்பச் செலவுக்காக ஓர் அன்பர் நன்கொடை'ன்னு புக்கிலே வரவு வச்சுக்க"ன்னு ஒரு கவர்லே புத்தம் புதுசா மூணு நூறு ரூபாய் நோட்டை வச்சி எங்கிட்டே நீட்டினார்."

"அப்பிடியா? அப்ப ஒண்ணு செய்யுங்க...? நம்ப மணிவிழா ஆரம்பச் செலவுக்கூட அப்பிடியே செய்துடலாம். நானே ஒரு முந்நூறு தந்துடறேன்..."

"அடடே... என்னங்க இது? நான் சும்மா, ஒரு இதுக்குச் சொல்ல வந்தா...? நீங்களே பணம் தர்ரேங்கிறீங்களே... பரவாயில்லிங்க... வேணாம்..."

"நோ, நோ! நீங்க அப்படிச் சொல்லக்கூடாது. உங்க கையிலேருந்து செலவழிச்சுக் கட்டுபடியாகுமா?"

"சரி! ரொம்ப வற்புறுத்தறீங்க... அப்புறம் உங்க இஷ்டம்."

வேங்கடநாதன் உள்ளே போய் முந்நூறு ரூபாய் கொண்டு வந்து அன்பரசனிடம் கொடுத்தார். அன்பரசன் அதிகக் கூச்சத்தோடும் வெட்கத்தோடும் அதை வாங்கிக் கொண்டான்.

"ஒரு விஷயம்... நீங்க நல்லா ஞாபகம் வச்சிக்கணும், மிஸ்டர் அன்பரசன்!"

"என்ன சார்?"

"மணிவிழா வசூலுக்கு முன் எனக்கு - நிறையக் கடன் இருக்குங்கிற மாதிரி சொல்லறத்துக்கு மறந்துடாதீங்க... இல்லாட்டி வசூல் டல்லாயிடும். இதெல்லாம் நானே சொல்லிக் கொடுக்கறது நல்லா இருக்காது... உங்களுக்குத் தெரியாதது இல்லே... எல்லாம் நீங்களே பார்த்துச் செய்யுங்க..."

"எனக்குத் தெரியாதுங்களா எல்லாம்? எத்தினி மணி விழாவுக்கு அலைஞ்சிருப்பேன்? எவ்வளவு ஆளுங்களைப் பார்த்திருப்பேன்...?"

"ஆமாமா... உங்களுக்குத் தெரியாததை நான் என்ன சொல்லிவிடப் போறேன்?"

"அப்ப இப்பிடி வரட்டுங்களா? அடிக்கடி வந்து நிலைமையை ஐயாவுக்குத் தெரிவிக்கிறேன்."

அன்பரசன் விடை பெற்றுக்கொண்டு போய்ச் சேர்ந்தான். ஒரு வாரம் கழித்துப் பத்திரிகைகளில் எல்லாம் சிறியதாக ஏழாம் பக்கத்தில் ஆறாம் பத்தியில் அடியோரத்தில் 'வேங்கடநாதன் மணிவிழா'வுக்குச் செயற்குழு அமைக்கப்பட்டு - அன்பரசன் அதன் செயலாளராகத் தேர்ந்தெடுக்கப்பட்ட செய்தி பிரசுரிக்கப் பட்டிருந்தது. அந்தச் செய்தியின் கட்டிங்குகளை வேங்கடநாதனுக்கு அனுப்பி வைத்தான் அன்பரசன்.

"பல இடங்களுக்கு மணிவிழா விஷயமாக அலைந்து கொண்டிருப்பதனால் நேரில் வர இயலாததற்கு மன்னிக்கவும்" என்று கூடவே ஒரு கடிதத்தில் அவரிடம் மன்னிப்புக் கேட்டிருந்தான் அவன். அதன் பின் இரண்டு மாதம் வரை ஒரு தகவலும் இல்லை. மூன்றாவது மாதம் முதல் வாரம் அன்பரசனிடமிருந்து வேங்கடநாதனுக்கு ஒரு கடிதம் வந்தது. அதில் அன்பரசன் எழுதியிருந்தான் :-

"தவறாக நினைக்காமல் உடன் உதவ வேண்டுகிறேன். மணிவிழா வசூல்களுக்காக அலைந்து கொண்டிருக்கிறோம். சுமார் ஐம்பதினாயிரமாவது தேற்றி விட வேண்டும் என்று எங்களுடைய குழு விரும்புகிறது. ஆரம்பச் செலவுகளால் வசூல் தடைப்படக்கூடாது என்பதை நீங்களும் ஒப்புக் கொள்வீர்கள். எனவே, வசூல் செலவுகளுக்காக மேலும் ஓர் இருநூறு ரூபாய் அனுப்புமாறு வேண்டுகிறேன். பின்னால் வசூலில் அட்ஜஸ்ட் செய்து கொள்ளலாம். சிரமத்துக்கு மன்னிக்கவும்.

இப்படிக்கு,
மு. அன்பரசன்
செயலாளர் - மணிவிழா"

இருநூறு ரூபாயை அனுப்பாவிட்டால் ஐம்பதினாயிரம் ரூபாயை இழக்க நேரிட்டு விடுமோ என்ற அச்சத்தினால் உடனே இருநூறு ரூபாய்க்கு ஒரு 'டிராப்ட்' எடுத்து அன்பரசனுக்கு அனுப்பி வைத்தார் வேங்கடநாதன்.

வருடம் ஒன்று கடந்துவிட்டது. அதற்குள் நாட்டில் பல மாறுதல்கள் - தேர்தல், மந்திரி சபை மாற்றம், விலைவாசிகள், மொழிப் பிரச்னை, மழையின்மையால் பஞ்சம், மழையினால் வேதனை, எல்லாம் வந்திருந்தன.

வேங்கடநாதன் மணிவிழாவின் குழு சுகமாக நித்திரை புரிந்து கொண்டிருந்தது. ஒரு செய்தியுமில்லை. வசூல் என்ன ஆயிற்று? எங்கெங்கே ஆயிற்று? இன்னும் எங்கெங்கே ஆகவேண்டும்? எப்போது மணிவிழா நடைபெறும்? ஒரு விவரமும் தெரியவில்லை. நடுவில் ஒருமுறை வெள்ளிவிழா எழுத்தாளர் வேங்கடநாதன் அன்பரசனுக்கு 'நாசூக்காக' ஒரு கடிதம் எழுதினார்.

"தங்களிடம் சில விஷயங்கள் பேச வேண்டியிருப்பதால் தயது செய்து நாளை மாலை என் இல்லத்திற்கு வருமாறு உங்களை அன்போடு வேண்டுகிறேன்.

தங்களன்புள்ள,
வேங்கடநாதன்."

அதற்கும் பதில் இல்லை. ஆனால் ஒரு வாரம் கழித்து அன்பரசனே போனில் பேசினான்.

"தப்பா நினைச்சுக்காதீங்க ஐயா! மதுரை வசூல் அவ்வளவு திருப்தியா இல்லே. மதுரையிலே பத்தாயிரம் டார்ஜெட். ஆனா ஏழாயிரம் தான் முடிஞ்சுது. நாளைக்குக் கோயம்புத்தூர் புறப்படறோம். கோயம்புத்தூர்லே ஒரு பதினையாயிரம் எதிர்பார்க்கிறோம். அநேகமா முடியும்னு தோணறது. இன்னிக்கு ஸாட்டர்டே. அதனாலே மத்தியானம் 12 மணியோட பாங்க் சரியாயிடும். நாங்களோ நாளைக் காலையிலே கோயம்புத்தூர்லே இருக்கணும். இன்னிக்கி ராத்திரி ரயில்லே புறப்படணும். பாங்க்லே பணம் எடுக்கற நேரம் தள்ளிப் போச்சு. தப்பா நினைக்காமே ஒரு நூறு ரூபா கொடுத்தனுப்பிச்சீங்கன்னா கோயம்புத்தூர் வசூலுக்குக் குறித்த நாளையிலே போய் வந்துடலாம்! எல்லாம் பின்னாலே அட்ஜஸ்ட் பண்ணிக்கலாம்."

"முன்னாலேயே ஒரு தடவை இருநூறு, இன்னொரு தடவை முந்நூறுன்னு ஐநூறு வரை கொடுத்திருக்கேனே...? இப்ப வேறே?"

"அதெல்லாம் நீட்டா 'அக்கவுண்ட்' எழுதி வச்சிருக்கேன். இப்ப நீங்க கொடுத்தனுப்பற ஹண்ட்ரடோட - உங்க வசமிருந்து மொத்தம் ஸிக்ஸ் ஹண்ட்ரட் ஆகிறது. அதை நாங்க பின்னாலே 'அட்ஜஸ்ட்' பண்ணிடறோம்."

"எங்கே கொடுத்தனுப்பணும், இப்ப?"

"என் வீட்டுக்கு அனுப்புங்க போதும்."

வேங்கடநாதன் ஓர் ஆள்வசம் அன்பரசனின் வீட்டுக்கு நூறு ரூபாய் கொடுத்தனுப்பினார்.

மேலும் ஆறுமாதம் கடந்து விட்டது. வேங்கடநாதன் மணிவிழாக் குழு என்ன ஆயிற்றென்றே தெரியவில்லை. வேங்கடநாதனும் கேட்பதற்குக் கூச்சப்பட்டுக் கொண்டும் வேதனையோடும் சும்மா இருந்தார்.

கடைசியில் ஒருநாள் பொறுமையிழந்து கோபமாக அன்பரசனுக்கு ஒரு கடிதம் எழுதினார்.

பம்பாய் - கல்கத்தா - டில்லி ஆகிய வடஇந்திய நகரங்களில் உள்ள தமிழன்பர்களிடம் வசூல் நடைபெற்றுக் கொண்டிருப்பதாக மறுமொழி வந்தது.

மேலும் ஒருவருடம் ஓடிவிட்டது. மணிவிழா நடைபெற்றுப் பணம் கைக்கு வந்து சேருவதற்குள் தாம் இறந்து போய் விடக்கூடாதே என்று வேங்கடநாதனே கவலையும் பயமும் கொள்ளத் தொடங்கிவிட்டார். அன்பரசன் தட்டுப்படவே இல்லை. மதுரை வசூல், கோவை வசூல், பம்பாய், டில்லி, கல்கத்தா வசூல் எல்லாம் என்ன ஆயிற்று என்றும் தெரியவில்லை.

வெள்ளிவிழா எழுத்தாளர் வேங்கடநாதனுக்கு ஆத்திரம் ஆத்திரமாக வந்தது. ஒரு ஞாயிற்றுக்கிழமை மாலை 'வாக்கிங் ஸ்டிக்'கை ஊன்றியபடியே அவரே அன்பரசனைத் தேடிப் புறப்பட்டார்.

*அன்பரசனின் வீட்டில் முன்புற அறையில் அமைதியாக ஒரு கூட்டம் நடந்து கொண்டிருந்தது. பத்துப் பன்னிரண்டு பேர் உட்கார்ந்து ஏதோ பேசிக் கொண்டிருந்தனர். வாசலில் வேங்கடநாதனின் தலை தெரிந்ததும் உட்கார்ந்திருந் தவர்களில் ஒருவர் ஓடோடி வந்து அவரை எதிர் கொண்டார்.*

*"என்ன கூட்டம் உள்ளே?" என்று உடனே கோபத்தை அடக்கிக் கொண்டு அமைதியான குரலில் விசாரித்தார் வேங்கடநாதன்.*

*"அடடே! உங்களுக்குத் தெரியாதா, சார்? அடுத்த ஆண்டுடன் நம்முடைய தொண்டர் திலகம் அன்பரசனுக்கு அறுபது ஆண்டுகள் நிறைகின்றன. அவருடைய மணிவிழாவின்போது அறுபதினாயிரம் ரூபாய் பணமுடிப்பு அளிப்பதாக முடிவு செய்து பேசிக் கொண்டிருக்கிறோம். நீங்களும் வாங்க..."*

*"அப்படியா? அன்பரசனுக்கே மணி விழாவா?" என்று பதில் சொல்ல முடியாமல் தலைசுற்றி மயக்கமாக வந்தது வெள்ளிவிழா எழுத்தாளருக்கு. மூர்ச்சை போட்டு விழுந்துவிடாமல் வீடு திரும்பினார் வேங்கடநாதன். வந்தவுடன் முதல் வேலையாகத் தமது கணக்குப் புத்தகத்தை எடுத்து அதில் கீழ்வருமாறு எழுதினார் :*

*அன்பரசன் மணிவிழாவுக்காக நம் வகையில் நன்கொடை ரூ. 600 (செலவுக் கணக்கு).*

*மறுபடி அன்பரசன் மணிவிழாக் கணக்கில் அட்ஜஸ்ட் செய்வதக முன் பணம் கேட்டு எப்போதாவது தனக்கு போன் செய்துவிடக்கூடாதே என்ற பயம் நீண்டநாள் வரை வேங்கடநாதனை நடுங்கச் செய்து கொண்டிருந்தது.*

**(சுதேச மித்ரன், தீபாவளி மலர், 1967)**

## 103. சண்பகப்பூவும் லண்டன் ஸ்கூலும்

**பை**யன் பி.காம். பரீட்சையில் தேறிவிட்டான் என்றாலும் அவன் 'டிஸ்டிங்ஷன்' வாங்கவில்லை என்பது அவருக்குக் கவலையளிக்கத்தான் செய்தது. முதல் வகுப்பு இல்லை, இரண்டாம் வகுப்பும் இல்லை. சாதாரணமாகத் தேறியிருந்தான்.

திவான் பகதூர் திருவேங்கடம் பிள்ளை பேரப் பையன் பரீட்சை தேறியிருக்கும் லட்சணத்தைக் கண்டிப்பதற்காக அவன் அம்மாவை - அதாவது தம்முடைய ஒரே மகள் நாச்சியாரைக் கூப்பிட்டனுப்பினார். நாச்சியார் வந்தாள். எதிர்த்துப் பேசினால் அப்பாவுக்குக் கோபம் வரும். கோபம் வந்தால் ப்ளட்ப்ரஷர் அதிகமாகும் என்றெல்லாம் தெரிந்திருந்ததனால் அடக்க ஒடுக்கமாக அப்பாவுக்கு முன்வந்து நின்றாள் மகள். கிழவர் இரைந்தார்; "பார்த்தியா, உன் பிள்ளையாண்டான் பாஸ் பண்ணியிருக்கிற லட்சணத்தை? இவனை நம்பி நான் என்ன என்னவோ கோழிக்கனாக் கண்டுக்கிட்டிருக்கேன். ஒரு செகண்ட் கிளாஸ்கூட வாங்கலை. இவனை நம்பி 'லண்டன் ஸ்கூல் ஆஃப் காமர்ஸிலே' இடத்துக்கு எழுதினேனே! இப்ப என்ன செய்யிறது?"

"அவன் தலையிலே எழுதியிருக்கிறது அவ்வளவு தான் அப்பா! அதுக்கு நீங்க என்ன செய்வீங்க?"

"இந்தப் போர்டிலே பளிச்சுப் பளிச்சுனு எழுதி வச்சிருக்கே; இதெல்லாம் நாளைக்கு யாரை நம்பி விடறது?" என்று கூறிக் கொண்டே வாக்கிங் ஸ்டிக்கால் முகப்பில் இருந்த அந்தப் பெரிய பித்தளைப் போர்டை மகளுக்குச் சுட்டிக் காட்டினார் திவான் பகதூர். திருவேங்கடம் கெமிக்கல்ஸ் அன்ட் இன்டஸ்ட்ரிஸ், திருவேங்கடம் ஃபெர்டிலைஸர்ஸ், மெட்ராஸ் மெஷின் டூல்ஸ் அன்ட் அல்லயட் பிராடக்ட்ஸ் என்று கம்பெனிகளின் பெயர்கள் பளீரென்று பாலிஷ் செய்திருந்த பித்தளை எழுத்துக்களில் மின்னின.

"என்னமோ போம்மா, ஒண்ணுமே நல்லாயில்லை. பி ஃபார்ம் தொந்தரவு, ஃபாரின் எக்ஸ்சேஞ்ஜ், எல்லாத்தையும் சமாளிச்சு, எப்பிடியோ தலைகீழே நின்று, பழைய சிநேகிதன் ராபர்ட்ஸனுக்கு லெட்டர் மேலே லெட்டராப் போட்டு நச்சரிச்சு 'லண்டன் ஸ்கூல் ஆஃப் காமர்ஸ்'லே இடம் பிடிச்சேன். உலகத்திலே இருக்கிற கோடீசுவரன் களோட பிள்ளைகள் எல்லாம் படிக்க வருகிற இடம் அது. இப்ப இவனை அங்கே எப்படித் தள்ளி விடறதுன்னே புரியலை."

"அனுப்புங்கப்பா, எல்லாம் அங்கே போய்ப் படிச்சா மாறிடுவான்" என்று கூறிவிட்டு நாச்சியார் மெல்ல நழுவிவிட்டாள்.

*திவான் பகதூருக்கு அவளுடைய மறுமொழிகளினால் சமாதானம் ஏற்பட்டு விட்டது என்று கூறுவதற்கில்லையானாலும் மனத்தின் பாரத்தை இன்னொருவரிடம் பகிர்ந்து கொண்டோம் என்ற அமைதி கிடைத்தது. கோடி கோடியாக முதல் போட்டு மாபெரும் தொழில்களை நடத்தும் ஒரு பெரிய இண்டஸ்டிரியலிஸ்ட் தம் வாரிசாக எதிர்பார்த்து வளர்க்கும் ஒரு பையன் கொஞ்சங்கூட அந்த வழியில் வரவில்லை என்பது அவருக்கு ஏமாற்றத்தையும் பயத்தையும் அளித்தது. பங்களா காம்பவுண்டில் அவன் படிப்பதற்கென்று ஒதுக்கிவிட்டிருந்த அறையில் எகனாமிக் அட்வைஸர், பிஸினஸ் வீக்லி, கமர்ஷியல் டைம்ஸ் என்று தொழிலுக்கு உதவும் பத்திரிகைகளை வாங்கிக் குவித்திருந்தார் அவர். புத்தகங்களையும் வாங்கி அடுக்கியிருந்தார். மாகாணத்திலேயே அந்தத் துறையில் தேர்ச்சிமிக்க பேராசிரியர் ஒருவரைக் கொண்டு டியூஷனுக்கும் ஏற்பாடு செய்திருந்தார். பட்டம் வாங்கியதும் வெளிநாட்டுப் படிப்புக்கு அனுப்பவும் ஏற்பாடாகியிருந்தது.*

*பெண் நாச்சியாருக்கு எவ்வளவோ தேடித் தேடி வரன் பார்த்துப் பெரிய தொழிலதிபரின் ஒரே மகனுக்குக் கொடுத்தார். அவளுடைய கணவன் விமான விபத்தில் வெளிநாட்டில் மாண்டான். ஒரு மகனோடு வாழாவெட்டியாகத் தந்தை வீட்டுக்கு வந்து சேர்ந்தாள் மகள். பேரனைக் குழந்தைப் பருவத்திலேயே தம் பொறுப்பில் வளர்க்கத் தொடங்கியும் அவனை அவர் நினைத்தபடி உருவாக்க முடியவில்லை.*

*சில மாதங்களுக்கு முன் டியூஷன் வாத்தியார் ஒரு விஷயத்தைத் திவான் பகதூரின் கவனத்துக்குக் கொண்டு வந்தார். அப்போதே நம்பிக்கை ஆட்டம் கண்டுவிட்டது.*

*"ஒண்ணுமில்லை, சாதாரண விஷயந்தான். நான் ஏதோ புரொடக்ஷன், கன்ஸம்ப்ஷன்னு பாடம் ஆரம்பிச்சா உங்க பேரப்பிள்ளையாண்டான், 'ஸார் ஸார்! நான் ஒரு கவிதை எழுதியிருக்கேன். படிச்சுக் காட்டட்டுமா?'ன்னான். 'சரி! படீ'ன்னேன். 'ரோஜாப்பூ ஏன் சிவப்பாயிருக்கிறது?'ன்னு கவிதைக்குத் தலைப்பாம். தலைமுறை தலைமுறையாக உழைக்கிறவங்க ரத்தம் எல்லாம் பூமிக்குள்ளே பாய்ந்து தேங்கிக் காய்ந்து போயிருக்கிறதனாலே தான் ரோஜாப்பூச் சிவப்பாப் பூக்கிறதுன்னு பாட்டு எழுதியிருக்கான்" என்று சொல்லிக் கொண்டே ஒரு துண்டுக் கடிதத்தைப் பெரியவரிடம் எடுத்து நீட்டினார் டியூஷன் வாத்தியார்.*

*பெரியவர் அதை வாங்கிக் கண்ணாடியை எடுத்து மாட்டிக் கொண்டு படிக்கத் தொடங்கினார் :*

**"ஆயிரமாயிரம் ஆண்டுகளாய்**
**ஆடி அயர்ந்தே இருகரமும்**
**ஓய உழைப்பார் உழைப்பெல்லாம்**
**உதிரம் பெருக்கிப் பரந்தபின்னே**
**காயும் நிலத்துள் கரந்தந்தக்**
**கைகள் உழைத்த காந்தியினால்**
**பூவாய்ப் பூத்து மலர்ந்ததுவே**
**புத்தம் புதிய ரோஜாவாம்."**

படித்ததும் திவான் பகதூருக்கு எரிச்சல் பற்றிக் கொண்டு வந்தது.

"ஸார்! உங்கக்கிட்டக் காண்பிக்கிறதுக்காக நான் எனக்கு வேணும்னு சொல்லிப் பையனிட்ட எழுதி வாங்கிக் கொண்டு வந்தேன். நீங்க இதை அவனிட்டக் கேட்க வேண்டாம். அப்புறம் என்னை மிஸ்டேக் பண்ணிப்பான். தயவுசெய்து இதை மறந்துடுங்க. எல்லாம் படிப்படியாகச் சரியாயிடுவான்" என்றார் டியூஷன் வாத்தியார்.

கோபத்தோடு காகிதத்தைக் கிழித்துக் கசக்கி எறிந்தார் திவான் பகதூர்.

"பாட்டா இது? கண்றாவி! ஒரு டிரேட் யூனியன் லீடர் மாதிரியின்னா பிதற்றி வச்சிருக்கான்?" என்று கோபத்தோடு கூப்பாடு போட்டார் திவான்பகதூர்.

அன்று மாலையிலேயே வீட்டுக்குப் பத்திரிகைகள் புத்தகங்கள் சப்ளை செய்து வந்த கடைக்காரனை வரவழைத்து, "அவன் கேக்கிற புக்ஸை அனுப்பு. ஆனா அது என்ன என்ன புக்ஸ்னு எனக்கும் ஒரு லிஸ்ட் கொடுக்கணும் நீ. அவன் வேண்டாம்னாலும், பிஸினல் வீக்லி, காமர்ஸ் ரெவ்யூ, அட்வான்ஸ் எகனாமிக் ரீடர் அதெல்லாம் நிறுத்திடப்பிடாது. ஜாக்கிரதை!" என்று எச்சரித்து அனுப்பினார் திவான் பகதூர்.

அடுத்த வாரமே புத்தகக் கடைக்காரன் கிழவருக்கு ஒரு லிஸ்ட்டும் பில்லும் அனுப்பியிருந்தான். பேரப்பிள்ளையாண்டானுக்கு அவராகக் கொடுக்கச் சொல்லியிருந்த புத்தகங்களைத் தவிர அவனே கேட்டு விரும்பி வாங்கிக் கொண்ட புத்தகங்களின் பெயர்களைப் பார்த்தபோது அவருக்கு எரிச்சல் மூண்டது.

'வர்ஜின்ஸ் அன்ட் வைன்யார்ட்ஸ்' என்ற கவிதைத் தொகுதி, பால்கிரேவ் தொகுத்த 'கோல்டன் டிரெஷரி ஆஃப் இங்கிலீஷ் போயம்ஸ்', பாரதியாரின் குயில் பாட்டு, பாரதிதாசனின் 'அழகின் சிரிப்பு', ரவீந்திரரின் கீதாஞ்சலி என்று எல்லாப் புத்தகங்களுமே கவிதைகளாக இருந்தன. அவனாக விரும்பி வாங்கிய அந்தப் புத்தகங்களின் பட்டியலில், ஒரு புத்தகமாவது அவர் விரும்புகிறபடி இருந்திருந்தால் கூட மற்றவை பற்றி அவருக்கு அவன் மேல் கோபம் வந்திருக்காது. ஆனால் எல்லாமே அவர் விரும்பாத துறையாக இருக்கவே தான் கோபம் தாங்க முடியவில்லை. 'இப்படிப் புத்தகங்களை அவன் கேட்டால் கொடுக்காதே' என்று புத்தகக் கடைக்காரனிடம் கண்டிக்கவும் மனம் வரவில்லை. சிறுவயதிலிருந்து மடியில் வைத்துக் கொஞ்சி வளர்த்த பேரனை முகம் சிணுங்கச் செய்யவும் பாசம் இடம் கொடுக்கவில்லை. ரங்கராஜன் என்று பெயர் வைத்திருந்தாலும் பிரியத்தைக் காட்டுவதற்காகச் செல்லப்பா, செல்லப்பா என்றுதான் அவனை வாய்நிறையக் கூப்பிடுவார் பெரியவர்.

வாத்தியாரைக் குறைசொல்லிப் பயனில்லை. அவருக்குக் கொடுத்த டியூஷன் பணத்துக்குச் செல்லப்பாவைப் பாஸ் செய்ய வைத்துவிட்டார். அவனை வெளிநாட்டுக்கு அனுப்பியாக வேண்டும். லண்டன் ஸ்கூல் ஆஃப் காமர்ஸில் படித்துவிட்டுத் திரும்பும் போது பையன் மாறி வருகிறானா என்று பார்க்க ஆர்வமாக இருந்தார் பெரியவர். பணத்தின் செல்வாக்கும், தொழிலதிபராக இருப்பதன்

பெருமிதமும் செல்லப்பாவுக்கு உறைக்க வேண்டும் என்பதற்காக 'ஸ்டூடன்ஸ் கன்ஸெஷன்' டிக்கட் வசதி இருந்தும் விமானத்தில் முதல் வகுப்பில் அவனை லண்டனுக்கு அனுப்ப முடிவு செய்தார் பெரியவர்.

அவனுக்குள் வியாபார உலகின் நுணுக்கங்களே இல்லை. அவன் போக்கே புதுமையாக இருந்தது பெரியவருக்கு. அவுட் ஹவுஸில் அவன் படிப்பதற்காக விட்டிருந்த கீழ்ப்பகுதி அறையின் முன்னால் பூந்தொட்டிகளில் புதிய புதிய பூக்கள் பூக்கும் போதெல்லாம் அவன் சிறு குழந்தை போல் அதைக் கொண்டாடினான். மேற்கே சாயங்கால மேகம் ரோஜாப் பந்துகளாகச் சுருண்டிருப்பதை மொட்டை மாடியில் நின்று பருகுவது போல் பார்த்துக் கொண்டிருந்தான் செல்லப்பா. இந்த நிலையில் அவனை அடிக்கடி பார்த்திருந்தார் பெரியவர்.

"இந்த மாதிரிப் புத்தகம்லாம் இனிமே வாங்காதே செல்லப்பா! பேரே கேக்க அசிங்கமா இருக்கு. 'வர்ஜின்ஸ் வைன்யார்ட்ஸ்' இதெல்லாம் உனக்கு எதுக்கு?" என்று ஒரு நாள் பேரனைக் கண்டித்துப் பார்த்தார் திவான்பகதூர். பேரன் அவரை விடவில்லை.

"பேர்லே என்ன இருக்கு தாத்தா? ஹரீந்திரநாத் சட்டோபாத்யாயா எழுதினது இது. இன்னிக்கி இந்தியாவிலேயே சிறந்த கவி அவர் தான். அவரோட முதல் புத்தகத்துக்கு யோகி அரவிந்தரே பாராட்டுக் கொடுத்திருக்கிறார்" என்று பேரன் தாத்தாவிடம் விவாதத்துக்கே வந்துவிட்டான்.

ஒருமுறை ஆல் இண்டியா மானுபாக்சரர்ஸ் அஸோஸியேஷன் கூட்டம் ஒன்றுக்காக டில்லி போனபோது அவனையும் விமானத்தில் அழைத்துப் போயிருந்தார் அவர். அவனுக்கு அப்போது கல்லூரி விடுமுறையாக இருந்ததனால் தம் வழியைப் பழக்கிவிட்டு விடலாம் என்று எண்ணித்தான் அவர் அவனை அழைத்துச் சென்றிருந்தார். அவனோடு அவரோடு சுற்றுவதில் சலிப்படைந்து, டில்லியிலிருந்து தாஜ்மகால் போவதும், ஹரித்துவார் போவதும், திரும்பி வந்து அவற்றை ஒரு குழந்தையின் வியப்போடு கிழவரிடமே வருணிப்பதுமாக இருந்தான். ஒரு தேர்ந்த வியாபாரியின் திறனோடு அவனை உரையாடப் பழக்க வேண்டும் என்று, "திஸ் இஸ் தி ஸிட்டி ஆஃப் வி. ஐ. பிஸ் அண்ட் டிப்ளமேட்ஸ். யூ மஸ்ட் லேர்ன் திங்க்ஸ் ஃப்ரம் அதர்ஸ்" என்று டில்லியைப் பற்றி அவர் ஆரம்பித்தால், "என்ன தாத்தா நீங்கள்?" என்று பதிலுக்குத் தமிழில் ஆரம்பித்தான் அவன். "பல மொழிகளில் சாமர்த்தியம் காட்ட முடியாமைக்குக் காரணம் ஒரு கவி மனப்பான்மையினாலும் ஒரு சிறிதும் 'லிங்க்விஸ்டிக்' ஆக இருக்க முடியாமைதான்" என்று டியூஷன் வாத்தியார் அதற்குப் பின்னால் எப்போதோ கிழவரிடம் இது பற்றி விளக்கம் கூறினார்.

செல்லப்பா சில பத்திரிகைகளில் கவிதை எழுதி அச்சில் வெளிவருவதாகவும் டியூஷன் வாத்தியார் மூலம் அவர் கேள்வியுற்றிருந்தார். மிகவும் கடுமையாக அவனை எப்படிக் கண்டிப்பதென்று அவருக்கு விளங்கவில்லை. பாசமும் தடுத்தது.

சிலசமயங்களில் காரில் அவனை அழைத்துக் கொண்டு வெளியே எங்காவது போகும்போது "ஸீரியஸ்லி ஐயாம் டெல்லிங் திஸ், யூ மஸ்ட் பிகம் ஏ பிஸினஸ் மேக்னட்! டோன்ட் வேஸ்ட் யுவர் டைம்" என்று அவனிடம் ஆரம்பித்திருக்கிறார் அவர். அதையும் அவன் சிரித்து மழுப்பிக் கொண்டே கேட்டிருக்கிறானே ஒழிய, ஸீரியஸ்ஸாகக் கேட்டதில்லை. ஒருநாள் இப்படி அவர் ஏதோ கண்டிக்க முற்பட்டபோது, "தாத்தா, போன தடவை பெங்களூர் போனப்ப நாம் தங்கியிருந்த வீட்டிலே மாடி ஜன்னலோரமா ஒரு சண்பக மரம் பூத்திருந்ததே; அது ரொம்ப நல்லா இருந்திச்சு. விடிய காலம்பர அறை முழுவதும் சண்பக வாசனை நிரம்பியிருந்திச்சு. அது மாதிரி ஒரு சண்பக மரம் அதே சாதிச் செடி கொண்டாந்து என் அவுட்ஹவுஸ் கிட்ட தோட்டத்திலே வைக்கணும். என்ன சொல்றீங்க?" என்று சம்பந்தமில்லாமல் அவன் பதிலுக்கு அவரைக் கேட்டான். அவருக்குச் சிரிப்பதா, அழுவதா என்று தெரியவில்லை. பெங்களூரிலிருந்து ஒரு நர்ஸரி மூலம் சண்பகச் செடி வரவழைத்து நட ஏற்பாடு செய்தர். பேரனை மனம் புண்படச் செய்யவும் அவருக்குத் துணிவில்லை.

சண்பகமரம் பெரிதாகி வளர்ந்து தன் அறை ஜன்னலருகில் பூத்து மணம் பரப்புவதைப் பற்றி அவன் ஒருநாள் டியூஷன் வாத்தியாரிடம் வியந்து சொல்லிக் கொண்டிருந்தான்.

மேற்படிப்புக்காக அவன் லண்டனுக்குப் புறப்படு முன் அம்மாவுக்கு இரகசியமாகச் சொல்லிவிட்டுப் போன செய்தி, "தோட்டக்காரன் மறந்துடப் போறான், நீ தினம் சொல்லி அந்தச் சண்பகச் செடிக்குத் தண்ணி ஊத்தணும்! தாத்தாக்கிட்டச் சொன்னா சண்டைக்கு வருவாரு" என்பதுதான். அவளுக்குச் சிரிப்புத்தான் வந்தது இதைக் கேட்டு.

"அத்தினிதூரம் சமுத்திரத்தைத் தாண்டிப் போறவன் ரொம்ப முக்கியமான சங்கதிதான் சொல்லிட்டுப் போறே, இதை வேற யாராவது கேட்டாச் சிரிப்பாங்க, போடா போ" என்று அவனுடைய தாய் அவனைக் கேலி செய்தாள்.

"எரையாதே! தாத்தா காதிலே விழுந்திடப் போகுது. ப்ளேனுக்குப் புறப்படற சமயத்திலே கோபிச்சுக்கப் போறாரு" என்று சொல்லிச் சிரித்தான் செல்லப்பா.

அவள் பதில் சொல்லவில்லை. திவான் பகதூர் பம்பாய் வரையில் போய் அவனை வழியனுப்பி வந்தார்.

"லண்டன்லே போனதுமே ராபர்ட்ஸனைப் பாரு. அவரு சொல்றபடி எல்லாம் செய். நடுவே பத்துநாள் பன்னிரண்டுநாள் லீவு வரபோது மத்த நாடுகளைப் பாரு. ஸ்விஸ்சர்லாந்து, ரோம், ஜெனிவா, ப்ராங்க்பர்ட் எல்லாத்தையும் வியாபார நோக்கத்தோடே பாரு. ராபர்ட்ஸன் எல்லா உதவியும் பண்ணுவாரு. பணம் தேவையானப்ப எழுது. பீ.காம். தான் இப்பிடிப் போச்சு. அங்கேயாவது டிஸ்டிங்ஷன் வாங்கணும்" என்றெல்லாம் படித்துப் படித்துச் சொல்லிப் பம்பாயில் அவனை வழியனுப்பி வைத்தார் திவான்பகதூர். பலமுறை போய்வந்தபோது தமக்குப் பழக்கமாகியிருந்த லண்டன் நண்பர்களுக்குக் கடிதம் வேறு கொடுத்திருந்தார் அவனிடம்.

"இங்கிலாந்திலிருந்து இங்கிலீஷ் சானல் வழியாகவும் பிரான்ஸ் போகலாம். ஆனால் நீ ப்ளேன்லேயே போய்ப் பாரு. லண்டன் டு பிரான்ஸ் 'ஏர் ஃப்ரான்ஸில்' ஜெட் ப்ளைட் நாற்பது நிமிஷந்தான். இங்கிலீஷ் சானல் வழியாப் போட்'லே போய்ச் சிரமப்படாதே" கிழவர் தொணதொணவென்று கூறித் தீர்ந்திருந்தார். செல்லப்பன் சிரித்தபடியே கேட்டான். பிரியப்போகிற நேரத்துப் பாசமும் பிரியமும் அவன் மனத்தைப் பிசைந்தன.

விமானம் புறப்பட்டதும் தாத்தாவைப் பிரிவதையும் பாசத்தையும் அவன் மிக அதிகமாக உணர்ந்தான். சொந்த மண், சொந்த மனிதர்கள், பாசம் எல்லாம் எப்படி இரத்தத்தோடு இரத்தமாக, உணர்வோடு உணர்வாக ஒன்றியவை என்பதை அவன் அப்போது உணர்ந்ததுபோல் அதற்கு முன் எப்போதும் உணர்ந்ததில்லை எனலாம்.

லண்டனிலிருந்து அவன் அவருக்கு எழுதிய இரண்டாவது கடிதத்தில் லேக் டிஸ்டிரிக்ட்டுக்குப் போய்க் கவி வேர்ட்ஸ்வொர்த் பிறந்து வாழ்ந்த பகுதியைப் பார்த்து விட்டு வந்ததை வியந்து வர்ணித்து எழுதியிருந்தான். தாத்தாவுக்கு மறுபடி கவலை பிறந்தது. மகள் நாச்சியாரிடம் சொல்லிக் குறைப்பட்டுக் கொண்டார்.

"படிக்கப்போன இடத்திலேயும் இவன் மாறலை! என்னதான் ஆகப் போகுதோ!" என்று வருத்தப்பட்டுக் கொண்டார். பையனைக் கவனித்துக் கொள்ளும்படி நண்பர் ராபர்ட்ஸனுக்கு விரிவாக ஒரு கடிதம் எழுதிப் போட்டார்.

ராபர்ட்ஸன் அவருக்கு எழுதிய பதிலில், "ஹி ஹாஸ் காட் எ ரேர் பொயடிக் டாலென்ட். டோன்ட் ஸஸ்பெக்ட் ஹிம்" என்று எழுதவே, ராபர்ட்ஸன் மேலும் கோபம் கோபமாக வந்தது அவருக்கு. உலகமே தமக்கு எதிராகத் தம் பேரனைக் கெடுக்கச் சதி செய்வதுபோல் தோன்றியது.

ஆறு மாதம் கழித்து ஒரு கிறிஸ்துமஸ் லீவில் ஸ்விஸ்சர்லாந்து போய் அங்கிருந்து ஸ்விஸ்மலைகள் ஏரிகளின் அழகைக் கவிதையில் வருணித்து ஒரு தமிழ்க் கடிதம் அவருக்கு எழுதியிருந்தான் பேரன். முன்பு செய்தது போல் என்ன காரணத்தினாலோ அந்தக் கவிதையைக் கிழித்துக் கசக்கி எறிய மனம் வரவில்லை அவருக்கு.

**"பளிங்கிற் பதித்த நீர்நிலைகள் – இளம்**
**பச்சை மரகதப் புல்வெளிகள்"**

என்று ஆரம்பமான அந்தக் கவிதையை அவரால் வெறுக்கவும் முடியவில்லை. பேரனின் இந்தப் போக்கை விரும்பவும் முடியவில்லை. படிப்பைக் கவனிக்குமாறு கடிதம் எழுதிக் கண்டித்தார். 'அவன் குடிக்கிறான், கண்டபடி அலைகிறான்' என்றெல்லாம் கேள்வியுற்றிருந்தால்கூட அவருக்கு இவ்வளவு கவலை ஏற்பட்டிருக்காது. அப்படி எல்லாம் செய்தால் கூட அவன் தேர்ந்த வியாபாரியாக மாறிவிட முடியும் என்று நம்பினார். ஒருவன் பிறரிடம் மறைக்கப் பழகும் இரகசிய உணர்வு அடைந்தாலே அந்த அளவு வியாபாரியாகி விடுகிறான் என்பது அவருடைய நம்பிக்கை. பேரப்பிள்ளையாண்டான் அப்படியும் இல்லையே என்பதுதான் அவருடைய வருத்தமாக இருந்தது. கவலைப்படும் ஒவ்வொரு சமயமும் நண்பர்

ராபர்ட்ஸனுக்கு ஒரு கடிதம் எழுதிப் பேரனைக் கவனிக்குமாறு வேண்டுவது அவர் வழக்கமாகியிருந்தது. ஒருமுறை ராபர்ட்ஸனே திவான் பகதூருக்கு விரிவான கடிதம் எழுதியிருந்தார் :-

"நீங்களும் நானும் நம்முடைய தலைமுறை இளைஞர்களைப் போலவே இன்றைய இளைஞர்களும் இருக்க வேண்டும் என்று எண்ணுவது தவறு. இன்றைய இளைஞர்கள் உருவாகிற விதமே பலவிதங்களில் நமக்குப் புரிவதில்லை; புதிராகவும் இருக்கிறது. பெற்றோருக்கு அடங்கி அவர்கள் காட்டுகிற பாதையிலேயே போக வேண்டுமென்று 'கன்ஸர்வேடிவ்' ஆக அவர்கள் எண்ணுவதே இல்லை. உங்களுடைய பேரனுக்கு மிக நளினமாகவும் மென்மையாகவும் ஒரு மனம் வாய்த்திருக்கிறது. அப்படிப்பட்ட மனத்தை வியாபாரிக்கு உரிய கபடு, சூது எல்லாம் உடையதாக ஆக்கிவிட நீங்கள் அவசரப்படுகிறீர்கள். எனக்கு உங்கள்மேல் கோபந்தான் வருகிறது. ஓர் அற்புதமான கவி கடுமையான வியாபாரியின் குடும்பத்தில் தவறிப் பிறந்துவிட்டானே என்று உங்கள் பேரன்மேல் எனக்கு அனுதாபமாகவும் இருக்கிறது" என்று எழுதியிருந்தார். வழக்கம் போல் அதைப் படித்ததும் ராபர்ட்ஸன் மேல்தான் திவான் பகதூருக்குக் கோபம் வந்தது.

எப்படியோ பேரப் பிள்ளையாண்டான் லண்டனுக்குப் புறப்பட்டுப் போய் வருடம் ஒன்று ஓடிவிட்டது. விடுமுறைகளில் ஊருக்கு வரவிடாமல் ஐரோப்பாவில் ஒவ்வொரு நாடாகச் சுற்றிப் பார்த்து அவன் வியாபார அனுபவம் பெறும்படி ஏற்பாடு செய்திருந்தார் திவான்பகதூர். மொத்தம் இரண்டு வருடம் படிக்க வேண்டும், இரண்டு வருடமும் முடிந்து அவன் திரும்பும்போது தம்முடைய தொழில் பொறுப்புக்களில் சிலவற்றை அவனிடம் ஒப்படைக்க வேண்டுமென்று அவர் எண்ணியிருந்தார்.

அவன் போன ஐந்தாறு மாதங்களில் அவருடைய தொழில் நிறுவனங்களிலும் சில குழப்பங்கள் ஏற்பட்டன. ஸ்டிரைக், போனஸ் தகராறு, கோ ஸ்லோ, வேலை நிறுத்தம் என்றெல்லாம் குழப்பங்களை எதிர்கொள்ள வேண்டியிருந்தது. வயது முதிர்ந்த காலத்தில் அவ்வளவு கஷ்டங்களையும் தாங்கிக் கொண்டு, சமாளிப்பதற்கு அவர் சிரமப்பட்டார். தளராத மனத்திடமும், தொழில்துறை நிபுணர்த்துவமும், விவகார ஞானமும் இருந்ததனால்தான் அந்த வயதிலும் அவரால் அவற்றை ஒழுங்கு செய்ய முடிந்தது. ஆயினும் அவருக்கு மன அமைதி இல்லை. இராத்தூக்கம் போயிற்று. 'பிளட் பிரஷர்' தொந்தரவு அதிகமாயிற்று.

வியாபாரத் தந்திரங்களிலும் தொழில்துறை நுணுக்கங்களிலும் வல்லாளகண்டர் என்று பெயரெடுத்த தமக்கே இப்படி என்றால் சூதுவாது அறியாத பேரப்பிள்ளை செல்லப்பா எதிர்காலத்தில் இவற்றைக் கட்டிக் கொண்டு என்ன என்ன கஷ்டப்படப் போகிறானோ என்று சிந்தித்து அவர் மனம் குழம்பினார். நாட்டில் தொழில் நடத்துகிறவனுக்கும், தொழிலில் பணிபுரிகிறவர்களுக்கும் இடையே சகஜமாக இருந்த நல்லுறவைக் குழப்பக்காரர்களும் அரசியல்வாதிகளும் சுயநலத்துக்காகப் படிப்படியாய்க் கெடுத்துக் குட்டிச்சுவராக்கி விட்டனர் என்பது அவருக்குப் பெரிய வேதனையாக இருந்தது.

மனவேதனையோடு அவர் உடல்நலம் குன்றிப் படுத்த படுக்கையாக இருந்த போது செல்லப்பாவின் பழைய டியூஷன் வாத்தியார் அவரைப் பார்த்துவிட்டுப் போக வந்திருந்தார்.

"நாடு போகிற நிலையைப் பார்த்தால் இத்தினி தொழிலிலே முதலீடு செய்திருக்கவே வேண்டாம்னு தோணுது. இந்தத் தொழில்களாலே ஆயிரக்கணக்கான குடும்பங்களுக்கு வேலை கொடுத்துக் காப்பாத்தறோம். ஆனாலும் குழப்பக் காரன்களும் அரசியல்வாதிகளும் அவர்களுக்கும் நமக்கும் இடையே சண்டை மூட்டிவிடறாங்க. மனநிம்மதி கெட்டுப் போச்சு" என்று புரொபஸரிடம் அலுத்துக்கொண்டார் பெரியவர்.

அப்போது புரொபஸர் சிரித்துக் கொண்டே பெரியவரை ஒரு கேள்வி கேட்டார். "திரும்பி வந்ததும் உங்க பேரனுக்கும் இப்படிப்பட்ட சிரமங்களை எல்லாம் கொடுத்து அவனைக் கஷ்டப்படுத்தப் போறீங்க, இல்லியா?"

திவான்பகதூரால் இதற்குப் பதில் சொல்ல முடியவில்லை. தம்மைப் போன்ற வல்லாளகண்டராலேயே சமாளிக்க முடியாத பிரச்னைகளை ஒரு சூதுவாதும் அறியாத பேரன் எப்படி எதிர்கொள்ளப் போகிறானோ என்பது தான் அவருடைய பயமாகவும் இருந்தது. அதையே வாத்தியார் கேட்கவும் கிழவன் திகைத்தா்ா.

"புரொபஸர்! செல்லப்பா ஸ்வித்சர்லாந்திலேருந்து ஒரு கவிதை எழுதியனுப்பியிருந்தான். அது கொஞ்சம் நல்லாவே இருந்தது. நானே அதை ரஸிச்சேன்" என்று திவான் பகதூர் கூறியபோது புரொபஸரால் தம் காதுகளையே நம்ப முடியவில்லை. ராபர்ட்ஸனுடைய கடிதம் பற்றியும் பெரியவர் புரொபஸரிடம் குறிப்பிட்டார். புதிய தலைமுறை இளைஞர்கள் பற்றிப் புரொபஸரும் அதே கருத்தைப் பெரியவரிடம் தெரிவித்தார். அப்புறம் கொஞ்சநேரம் பேசிக் கொண்டிருந்துவிட்டுப் புரொபஸர் போய்விட்டார். போகும்போது திவான்பகதூரிடம் ஏற்பட்டிருக்கும் மனமாற்றத்தைப் பற்றிச் சிந்தித்துக் கொண்டே தான் போனார்.

பெரியவரோ உடல்நலமும் மனநலமும் கெட்டுப் படுத்த படுக்கையானதிலிருந்து பேரனின் நினைவாகவே இருந்தார். அந்த வேளைகளில் அவர் பேரனின் கடிதங்களையும், ராபர்ட்ஸனின் கடிதங்களையும் திரும்பத் திரும்ப எடுத்துப் படிக்கலானார். அது அவருக்கு மனச்சந்துஷ்டி அளித்தது.

ராபர்ட்ஸன் எழுதியிருந்த வரிகள் இப்போது அவருக்கு வெறுப்பைத் தரவில்லை. டியூஷன் ஆசிரியர் கேட்ட கேள்வி இன்னும் கிழவரின் மனத்தை விட்டு அகலாமல் சுழன்றது.

'பூப்போன்ற மெல்லிய மனத்தோடு கபடு சூதுவாது இன்றி இருக்கும் பேரப்பிள்ளையாண்டானை இந்த உலகின் துரோகங்களிலும் வஞ்சகங்களிலும் முக்கி எடுத்துக் கஷ்டப்படுத்துவது அவசியந்தானா? பூக்களின் மலர்ச்சியிலும், நீரூற்றின் சிலிப்பிலும், சண்பகமலரின் வாசனையிலும், சாயங்கால மேகங்களின் அழகிலும் மனத்தை லயிக்க விடும் ஒருவனை இன்வெஸ்ட்மென்ட், எஸ்டாபிலிஷ்மென்ட்,

பாலன்ஸ்ஷீட், போனஸ், இன்ஸென்டிவ் போனஸ் என்றெல்லாம் நினைக்க வைத்து மனம் வறளச் செய்வது அவனுக்குச் செய்யும் நன்மையாக முடியுமா? என்று அவர் மனம் தீவிரமாகச் சிந்திக்கத் தொடங்கியது.

ஒரு பூவை நெருப்பில் எடுத்துப் போடுவதா, கூடாதா என்பது போன்ற தயக்கமாக இருந்தது அது. அதே சமயம் அவன் பாடிய பழைய ரோஜாப்பூ கவிதையை நினைத்தபோது அவன் மேல் கடுங்கோபமும் மூண்டது. அது ஏதோ ஒரு புரட்சிக்காரனுடைய சிந்தனை மாதிரி தோன்றி அவரை மிரட்டியது. எதிர்காலத்தில் தம்முடைய தொழில் நிறுவனங்கள் அனைத்தையும் கவனித்துக் கொள்ளும் ஒரு 'டிப்பிகல் இன்டஸ்டிரியலிஸ்ட்' ஆக அவனை அவர் எதிர்பார்த்தார். அவர் எதிர்பார்த்தது பயனளிக்கவில்லை. தொழில்களும் தொழிலாளர்களும் போகிற போக்கைப் பார்த்தால் எதிர்காலத்தில் அவனால் அந்தப் பொறுப்பைத் தாங்க முடியும் என்று அவராலேயே நம்பமுடியவில்லை.

திவான் பகதூரின் இரண்டு கம்பெனிகளில் 'லாக் அவுட்' ஆறு மாதத்துக்கு மேல் நீடிக்கலாயிற்று. ஒரு கம்பெனியில் ஸ்டிரைக். இன்னொரு கம்பெனியில் மானேஜரைக் 'கேராவ்' செய்து கொடுமைப்படுத்தியதனால் ஆபீஸ் முழுவதும் போலீஸ்காரர் காவலுக்கு நின்றார்கள். மற்றொரு தொழிலகத்தில் 'கோ ஸ்லோ'வினால் பொருளுற்பத்தி மிகமிகக் குறைந்தது. ஆறேழு மாதம் அவர் படுக்கையிலிருந்து எழுந்திருக்கவே இல்லை. மானேஜர்களும், அட்மினிஸ்டிரேடிவ் ஆபீஸர்களும், அந்தரங்கக் காரியதரிசிகளும், தொழில் சம்பந்தமான பிரச்னைகளை அவரிடம் வீட்டிலேயே வந்து கலந்து ஆலோசித்துக் கொண்டு போனார்கள். நாளுக்கு நாள் குழப்பங்கள் அதிகமாயின. அரசியல் சார்புடைய சுயநல நோக்கமுள்ள தொழிற் சங்கவாதிகள் நல்ல தொழிலாளர்களைக்கூடக் குழப்பமான பாதைகளுக்கு அழைத்துச் சென்றனர். இன்னொரு வருடமும் ஓடிவிட்டது. நிலைமையில் எந்த வித மாறுதலும் இல்லை.

அடுத்த வெள்ளியன்று டிரான்ஸ்வோர்ல்ட் ஏர்லைன்ஸ் விமானத்தில் பம்பாய் வந்து, பம்பாயிலிருந்து செல்லப்பா சென்னை வருகிறான். பேரனை வரவேற்க விமான நிலையத்துக்குக்கூடப் போக முடியாத நிலையில் இருந்தார் திவான்பகதூர். டியூஷன் வாத்தியாரும், நாச்சியாரும், திவான் பகதூரின் கம்பெனி நிர்வாகிகளும் மீனம்பாக்கம் போய்ப் பேரனை அழைத்து வந்தனர்.

செல்லப்பா வெளிநாட்டுச் சூழ்நிலையில் நன்றாக அழகாக வெளுத்திருந்தான். ஆளும் திடீரென்று மிகவும் உயர்ந்துவிட்ட மாதிரித் தோற்றமளித்தான். தாத்தா படுக்கையிலிருந்து எழுந்து அவனைக் கட்டித் தழுவிக் கொண்டார். ஆஜானுபாகு வாகச் செழித்திருக்கும் பேரனைக் கண்டதும் அவருக்குத் தாங்க முடியாத மகிழ்ச்சி.

"ராபர்ட்ஸன் உங்களை விசாரித்தார்" என்றான் பேரன்.

"ஹௌ இஸ் ஹி நௌ? டிட் யூ ஹாவ் எ நைஸ் டிரிப்?" என்று ஆங்கிலத்தில் ஆரம்பித்தார் கிழவர். பேரன் தமிழிலேயே பதில் சொன்னான். வெளிநாட்டில் நாவுக்கு

ருசியாகச் சாப்பிட முடியாமல் இரண்டு வருடத்தைக் கழித்து விட்டு வந்திருக்கும் பிள்ளைக்கு வாய்க்கு ருசியாகச் சாப்பாடுபோட அழைத்துக் கொண்டு போனாள் நாச்சியார். மற்றவற்றையும் அப்புறம் பேசிக் கொள்ளலாம் என்று கிழவரும் பேரனை டைனிங் டேபிளுக்கு அனுப்பி வைத்தார். கம்பெனி அதிகாரிகள் தொழில் நிர்வாகத்தில் பேரனுக்கு என்ன என்ன பொறுப்புக்களை அளிப்பது என்பது பற்றிக் கலந்து பேசுவதற்காகக் கிழவரின் படுக்கையருகில் சூழ்ந்தார்கள்.

உள்ளே டைனிங் டேபிளில் திடீரென்று அம்மாவுக்கும் பிள்ளைக்கும் ஏதோ பலத்த வாக்குவாதம் நடப்பது தடித்த குரல்களில் கேட்கவே அது என்ன என்று அறிந்து கொள்வதற்காக மகளைக் கூப்பிட்டனுப்பினார் கிழவர். மகள் வந்தாள்.

"வந்ததும் வராததுமா அவங்கிட்ட என்ன சத்தம் போடறே நாச்சியார்?"

"அவனுக்கு வேற வேலை என்ன? ஊருக்குப் போற போது ஏதோ சண்பகச் செடி நட்டுட்டுப் போனானாம், அதுக்கு நான் தோட்டக்காரனிடம் சொல்லி ஒழுங்காத் தண்ணிவிட்டுக் கவனிக்காததனாலே அது பட்டுப் போச்சாம். அதைப் பார்த்து அவனுக்கு மனசே சரியில்லையாம். சாப்பிடக்கூடப் பிடிக்கலையாம். கத்தறான், கூப்பாடு போடறான்."

கிழவர் முகத்தில் புன்முறுவல் மலர்ந்தது. "எனக்கு உடம்பு கெட்டுப் போயி நான் படுத்த படுக்கையா இருக்கறதைப் பத்திக்கூட அவன் கவலைப்படலை. சண்பகச் செடி பட்டுப் போனதைப் பத்தி மட்டும் எவ்வளவு உருகறான் பாத்தியா நாச்சியாரு?"

"ஆமா! அசட்டுப்பிள்ளை, ஒண்ணுமே தெரியலே."

கிழவர் தம்மைச் சுற்றியிருந்த அதிகாரிகளிடம், "எக்ஸ்க்யூஸ்மி ஃப்ரண்ட்ஸ்! ஹி இஸ் டூ யங், டூ டெண்டர் டு டேக் சார்ஜஸ் இன் தி ஆபீஸ், லீவ் ஹிம் நௌ" என்று கூறினார். அவர்கள் விடைபெற்றுச் சென்றனர். அவர் மனத்தில் பாரம் அகன்றாற் போலிருந்தது.

அன்று அவருக்கு ப்ளட்ப்ரஷர் அதிகமாகவில்லை. போன இடங்களைப், பார்த்த நாடுகளை, சந்தித்த மனிதர்களைப் பற்றி எல்லாம் பேரன் கவித்துவம் பொங்கச் சொல்லியவற்றை அவர் அமைதியாக ரசித்துக் கேட்டுக் கொண்டிருந்தார்.

**(கலைமகள், தீபாவளி மலர், 1968)**

## 104. கிழிசல்

"**எ**ன்ன ஐயா! ரோடு ரிப்பேர் நடந்து கொண்டிருக்கிறது போலிருக்கிறதே? குறுக்கே பள்ளம் வெட்டியிருக்கான். மோட்டார் சைக்கிள் போகாது."

"என்ன செய்கிறது?" பின்புறம் காரியரில் உட்கார்ந்து கொண்டிருந்த நண்பர் என்னைக் கேட்டார். சைக்கிள் என்னுடையதானாலும் நான் சைக்கிளோடு அவரைச் சந்திக்கிறபோதெல்லாம் இலவசச் சவாரி செய்யும் உரிமை அந்த நண்பருக்கு உண்டு.

"பக்கத்து சந்து வழியாக விட்டுக் கொண்டு போய் விடலாமா?" நான் மெல்லச் சிரித்துக் கொண்டே கேட்டேன்.

"பக்கத்துச் சந்தா? ஐயையோ! வேண்டவே வேண்டாம்... நான் பேசாமல் இறங்கி நடந்தே போய் விடுகிறேன்."

"ஏன் அப்படிப் பயந்து சாகிறீர்?"

"ஏனா? உமக்கு ஒன்றுமே தெரியாதா? அல்லது வேண்டுமெனறே என் வாயைக் கிண்டுகிறீரா?"

நான் பதில் சொல்லாமல் முன்போலவே அவரைப் பார்த்துக் குறும்புத்தனமாகச் சிரித்தேன். மேற்படி சந்துக்குள் நுழைந்து செல்ல நண்பர் பயப்பட்டது நியாயந்தான். சாதாரணமாக மாலை ஐந்தரை மணிக்கு மேல் எவ்வளவு திட வைராக்கியமுள்ள ஆண்பிள்ளையானாலும் சரி; அந்தச் சந்தின் ஒரு கோடியில் நுழைந்து மறுகோடி வழியாக வெளியேறி விடுவதென்பது சுலபத்தில் முடிகிற காரியமில்லை. அப்படி நுழைந்து வெளியேறாமலிருப்பதற்காகவே காரிலும், ஜட்காவிலும், கால்நடையாகவும், தரத்துக்கேற்றபடிப் பல உல்லாஸ புருஷர்கள் அந்தச் சந்திற்கு 'வாடிக்கையாக' வந்து போவதுண்டு.

ஆம்! அது ஒரு தனி உலகம்! அந்தக் காலத்தில் தேவதாசிகளென்றும், அதற்குப் பின் கணிகையர்களென்றும் கூறப்பட்டு இந்தக் காலத்தில் எந்தப் பெயரால் அழைப்பதென்றே தெரியாமலிருக்கும் அழகின் பிம்பங்கள். கேளிக்கைக்காக நாடி வருபவரையும், நாடாது தெருவோடு போகிறவரையும், வலை போட்டு இழுக்க வழிமேல் விழி வைத்து நிற்கும் போக பூமிதான் அந்தச் சந்து.

"என்ன ஐயா, சந்து வழியாக வேண்டாமென்றால் வேறு எப்படித்தான் போவது? அதையாவது சொல்லுமேன்...?"

"திரும்பி மெயின் ரோடு வழியே போனால் என்ன?"

"அப்படிப் போனால் இரண்டு மைல் அதிகமாகச் சுற்ற வேண்டும்? பெட்ரோல் செலவாகுமே, என்று பார்க்கிறேன்..."

"வேறே என்னதான் செய்கிறது?"

"இந்தச் சந்து வழியாகப் போயிடறதாயிருந்தால் இவ்வளவு யோசனை பண்ண வேண்டாம். நீர்தான் ஒரேயடியா நடுங்குகிறீரே..."

"நடுங்குகிறேனோ நடுங்கவில்லையோ, வரமுடியாதென்றால் வர முடியாது. உமக்கு அவசரமானால் நீர் தாராளமாகச் சந்து வழியே போகலாம். நான் இரண்டு மைல் நடந்தாவது போய்க் கொள்வேன்..."

"அட! நீரொண்ணு... நெருப்பைப் பார்த்தாக்கூடவா சுட்டுடும்? என்னமோ பெரிசாக் கதைக்கிறீரே!"

"பனைமரத்துக்குக் கீழே நின்னு பாலைக் குடிச்சாலும் கள்ளுதான்..."

"ஏதேது! பெரிய பீஷ்மராட்டமாப் பேசறீரே..."

"சார்! இந்தாங்க... உங்களுக்கும் உங்க மோட்டார் சைக்கிளுக்கும் ஒரு பெரிய நமஸ்காரம். என்னைத் தயவு செய்து விட்டுடுங்க."

நண்பர் கோபித்துக் கொண்டு கிளம்பிவிட்டார். "சும்மா விளையாட்டுக்குச் சொன்னேன்! வாரும், உம் இஷ்டப்படியே மெயின்ரோடு வழியாகத் திரும்பிப் போகலாம்" என்று அவரைச் சமாதானப்படுத்திச் சைக்கிளில் ஏற்றிக் கொண்டு கிளம்பினேன்.

மெயின்ரோடும், கடற்கரைக்குப் போகும் வழியும் சந்திக்கின்ற இடத்திற்குச் சென்ற போது, நண்பர் திடீரென்று திட்டத்தை மாற்றினார். "சார்! இப்ப உடனே வீட்டுக்குப் போய்த் தான் என்ன செய்யப் போகிறோம்? பீச்சிலே போய்க் கொஞ்ச நேரம் நிம்மதியாக் காத்து வாங்கிட்டுப் போகலாமே!"

"ஓ! எஸ். அப்படியே செய்தால் போச்சு." நான் மோட்டார் சைக்கிளைக் கடற்கரைக்குப் போகும் வழியில் திருப்பினேன்.

கடற்கரையில் ஆண்களும், பெண்களும், குழந்தைகளும் குட்டிகளுமாக ஒரே கூட்டம். ஒரு கடல் முடிகிற இடத்தில் இன்னொரு கடல் ஆரம்பமாவது போல் தோன்றியது, அந்தக் கூட்டத்தைப் பார்க்கும் போது.

மணலில் வெகுதூரம் நடந்து சென்று, ஒதுக்குப்புறமாகக் கூட்டமில்லாத இடத்தில் உட்கார்ந்தோம். நண்பர் எதையோ சிந்தித்துக் கொண்டே என்னோடு உட்கார்ந்திருக்கிறார் என்று அவர் முகத்திலிருந்து அனுமானிக்க முடிந்தது. 'கேட்டுவிடலாமா?' என்று எண்ணினேன். ஆனால் கேட்கத் தோன்றவில்லை. பேசாமல் கடலைப் பார்க்கத் தொடங்கினேன். அவரும் கடலைப் பார்த்தார். புறக்கண்கள் தான் கடலைப் பார்த்தனவே ஒழிய அகக்கண்கள் உள்முகமாக ஆழ்ந்து எதையோ துழாவிக் கொண்டிருக்க வேண்டுமென்று தோன்றியது.

இருவரும் ஒன்றும் பேசிக் கொள்ளாமலேயே கால் மணி நேரம் கழிந்துவிட்டது. திடீரென்று நண்பர் வாயைத் திறந்தார். அவர் அவ்வளவு நேரமாகச் சிந்தித்துக் கொண்டிருந்த பிரச்னை வெளிவந்து விட்டது.

"சார்! நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்...? ஒழுங்கீனத்தையே உல்லாசமாக நினைக்கும் ஒருவகைப் பெண்மை சமூகத்தில் எப்படி ஏற்பட்டிருக்க முடியும்? யாருடைய அஜாக்கிரதையால் ஏற்பட்டிருக்க முடியும்?"

"நீங்கள் எதைக் கேட்கிறீர்கள்? உங்கள் கேள்வி எனக்குத் தெளிவாக விளங்க வில்லையே?" நான் வேண்டுமென்றே அவர் கேட்பது இன்னதென்று தெரிந்தும் தெரியாதது போல் கேட்டேன். என்னை ஏறிட்டுப் பார்த்தார் அவர். ஒரு நிமிஷம் அந்தப் பார்வை அப்படியே நிலைத்தது. கொஞ்சம் தயங்குவதுபோல் தெரிந்தது. "இல்லை! கற்பும் ஒழுக்கமுமே இரண்டு கண்களாக விளங்கும் நமது நாட்டுப் பெண் சமூகத்தில் இந்த மாதிரி வரம்பற்ற வகை ஒன்று ஏற்படக் காரணமென்ன என்று கேட்கிறேன்?"

நண்பர் துணிவை வரவழைத்துக் கொண்டு நேரடியாகவே என்னைக் கேட்டார்.

"இந்தக் கேள்வியை என்னிடம் கேட்க வேண்டுமென்ற எண்ணம் உங்கள் மனத்தில் எப்போதிருந்து உண்டாயிற்று?" நான் அவரைச் சரியானபடி மடக்கினேன்.

"ஏன்? இப்போதுதான்! சிறிது நேரமாக இதைப் பற்றிச் சிந்தித்துக் கொண்டிருந்தேன்."

"அப்படியானால் அந்தச் சந்து முனையில் நமக்குள் நடந்த விவாதத்தை நீர் இன்னும் மறக்கவில்லை... இல்லையா?"

"ஆமாம்! அதற்கென்ன?"

"ஒன்றுமில்லை! சும்மாக் கேட்டேன்." நான் மெல்லச் சிரித்துக் கொண்டேன். அதை எப்படியோ நண்பர் பார்த்து விட்டார்.

"ஏன் சிரிக்கிறீர்கள்? நான் கேட்டதில் என்ன தப்பு?"

"தப்பாவது, ஒன்றாவது? அதெல்லாமில்லை. அந்தப் பிரச்சனை உம்முடைய மனத்தில் எவ்வளவு முக்கியத்துவம் பெற்றிருக்கிறதென்று நினைத்துப் பார்த்தேன். சிரிப்பு வந்தது."

"அது சரி! நீங்கள் இன்னும் என் கேள்விக்குப் பதில் சொல்லவே இல்லையே?"

"சொல்கிறேன்! தோட்டத்துக்கு வேலி போடுகிறார்கள். ஆனால், வேலிக்கு என்ன பாதுகாப்பு? வேலி இருப்பதனால் தானே தோட்டம் அடைய வேண்டிய துன்பங்களையும், அழிவுகளையும் அது அடையாமல், தானே தாங்கிக் கொள்கிற அளவிற்கு வேலி பயன்படுகிறது?"

"ஊம்! அப்புறம்...?"

"இந்த மாதிரிப் பரத்தையர் கூட்டம் இன்று நேற்று ஏற்பட்டதல்ல! மனித குலத்தில் பெண்களின் பிரவேசம் என்று ஏற்பட்டதோ அன்றிலிருந்து பரத்தைமையும் இருக்கிறது!"

"பொய்! சுத்தப் பொய்! இந்தச் சமூகம் ஒரு சிலரை வேண்டுமென்றே குட்டிச்சுவராக்கிவிட்டது. ராஜாக்களும், பிரபுக்களும், கோவில்களுமாகச் சேர்ந்து பணக்கொழுப்பினாலும், பக்திக் கொழுப்பினாலும் பரத்தைமையை வளர்த்துவிட்டார்கள்..."

"சார்! நீங்கள் ஆவேசமாகப் பேசுகிறீர்கள். கொஞ்சம் உண்மையையும் சிந்தித்துப் பார்க்க வேண்டும். இந்தக் குற்றத்தை ராஜாக்களின் மேலும் மதத்தின் மேலும் சுமத்திவிட்டுத் தப்பித்துக் கொள்ள முடியாது. ஒவ்வொரு தனி மனிதனும், அவ்வளவேன்? நீரும் நானும் உட்பட, இந்தச் சமூகம் முழுவதும் இது விஷயத்தில் குற்றவாளி தான்! யாருமே தப்ப முடியாது!"

"உம்மை வேண்டுமானால் குற்றவாளி என்று சொல்லிக் கொள்ளும். என்னைச் சொல்லாதீர். நான் இதை வன்மையாகக் கண்டிக்கிறேன்!" அவர் கோபமடைந்து மறுத்துப் பேசினார். அவர் தம்மைக் குற்றவாளியாக்குவதை விரும்பவில்லை. நான் மேலும் விவாதத்தை வளர்த்தேன்.

"நான் கேட்கிற கேள்விகளுக்குக் கொஞ்சம் நிதானத்தோடு பொறுமையாகப் பதில் சொல்வீரா?"

"என்ன? கேளுமே சொல்கிறேன்..."

"தோட்டத்துக்கு இருக்கிற கட்டுக்காவல், பாதுகாப்பு எல்லாம் அதைக் காக்கிற வேலிக்கு மட்டும் ஏன் இருப்பதில்லை?"

"பாதுகாப்பை உண்டாக்கும் வஸ்து எதுவோ அதற்குப் பாதுகாப்பு தேவை இல்லை! பாங்கு கட்டிடத்திற்குக் காவலாக நைட் வாட்ச்மேன் (இரவுக் காவல்காரன்) போடுகிறார்கள். அவனுக்குக் காவலாக இன்னொரு காவல்காரனா போடுகிறார்கள்?" நண்பர் என் கேள்விக்குப் பதிலாக மற்றொரு கேள்வியையே கேட்டார். அது எனக்குச் சாதகமாகவே அமைந்துவிட்டது.

"ஆல்ரைட்! சரியான கேள்வி. சமூகக் கட்டுப்பாட்டுக்கு உட்பட்ட பெண்கள் வழி தவறாமல், அழிவடையாமல், கெடாமல் இருக்க வேண்டுமானால் இப்படிச் சிலர் வேலியாக அமைய வேண்டும். இல்லையானால் வேலிக்கு ஏற்படும் அழிவு தோட்டத்துக்கே ஏற்பட்டு விடும்!"

"தர்க்கரீதியாக இந்த முடிவு சரியாக இருக்கலாம். ஆனால் இது அநியாயம்! கொடுமை! ஒரு சிலரை நிரந்தரமாகக் கெடுக்கும் சூழ்ச்சி?"

ஆவேசமாக என்னை எதிர்த்து முழங்கினார் அவர்.

"'ஃபயர் பெல்ட்' என்று கேள்விப்பட்டிருக்கிறீரா? காட்டிலாகாவில் வேலை பார்த்திருந்தால் தெரியும். காட்டிலுள்ள பயன்மிக்க நல்ல மரங்களில் தீப்பிடித்துக் கொள்ளக்கூடாதே என்பதற்காக ஒரு பயனுமில்லாத சில வெற்று மரங்களை அவற்றைச் சுற்றிப் பயிரிட்டிருப்பார்கள். தீப்பிடித்தாலும் அந்த வெற்று மரங்களோடு அழிவு நின்றுவிடும். மற்ற மரங்களில் பற்றாமல் அணைத்து விடுவார்கள்.

பரத்தையர்கள் இந்த மாதிரிச் சமூகத்திற்கு ஒரு 'ஃபயர் பெல்ட்'டாக இருந்து காத்து வருகிறார்கள்."

"இப்படி முடிவு செய்வது நாகரிகமடைந்த சமூகத்தின் அறிவுக்கும் ஆண்மைக்குமே ஒரு பெரிய களங்கம். இதை நான் ஒப்புக்கொள்ளவே மாட்டேன்."

"எது களங்கம்? வீடெல்லாம் சாக்கடைத் தண்ணீரால் அசிங்கமாகி விடக்கூடாதே என்பதற்காக வீட்டின் ஒரு மூலையில் சிறிய சாக்கடை வைத்துக் கட்டுகிறோம். அப்படிக் கட்டுவதால் அது வீட்டுக்கே களங்கம் என்று கூறி விட முடியுமா?" என்னுடைய கேள்வி ஆணித்தரமாக இருந்தது.

நண்பர் 'முழி முழி' என்று விழித்தார். எனக்கு எப்படிப் பதில் சொல்வதென்றே உடனே அவருக்குப் புரியவில்லை.

"வேறொன்றிற்காகவும் நான் உங்களிடம் இந்தக் கேள்வியைக் கேட்கவில்லை. நம்முடைய சமூகத்தில் கண்ணகிக்கும் சீதைக்கும் விழா நடத்துகிறோம். 'இது மாதிரி ஊழல்களை ஒழிக்க முடியவில்லையே' என்று வருந்தித்தான் கேட்டேன்" நண்பரின் தொண்டை கரகரத்தது.

"சமூகத்தில் பெண்ணின் உடல் சம்பந்தமான தேவை மனிதனுக்கு இருக்கிறவரை ஒழிக்க முடியாத பிரச்சனை இது! சொல்லப் போனால் இந்த ஊழல் இருப்பதனால் தான் சீதையையும் கண்ணகியையும் புகழ முடிகிறது. இவர்கள் போல் வாழாமல் நன்றாக வாழ்ந்ததற்காகத் தானே அவர்களுக்குப் பெருமை? எல்லாருமே சீதைபோல், கண்ணகிபோல் வாழ்ந்தால் அவர்களுக்கென்று தனிப்பெருமை ஏற்பட்டிருக்க முடியுமா? நன்றாக யோசித்துப் பாரும்!"

"உங்கள் விவாதம் வெகு அழகாக இருக்கிறது. மறுப்புச் சொல்ல முடியாமல் பேசுகிறீர்கள். ஆனால் இவ்வளவு திறமையும் ஒழுங்கீனத்தை அங்கீகரிப்பதற்குப் பயன்படுகிறதே என்பதைத்தான் என்னால் பொறுத்துக்கொள்ள முடியவில்லை." நண்பருக்கு என்மீது மிகுந்த வருத்தம்.

"மணி எட்டரை ஆகிவிட்டதே! புறப்படலாமா?" நண்பர் எழுந்திருந்தார். நானும் எழுந்திருந்தேன். இருவரும் கடற்கரையிலிருந்து புறப்பட்டோம்.

இதன் பிறகு பத்துப் பதினைந்து நாட்கள் நான் அந்த நண்பரைச் சந்திக்கவே இல்லை. பின்பு திடீரென்று ஒருநாள் ஹோட்டலில் சாப்பிட்டுக் கொண்டிருக்கும்போது சந்தித்தேன்.

"என்ன சார்? எங்கே? பத்துப் பதினைந்து நாட்களாக ஆளையே காணோம்! ஊரில் இல்லையோ?" என்று விசாரித்தேன்.

"வீட்டிலே பிரசவ டயம்! அவளை மாமனார் வீட்டில் கொண்டு போய் விட்டு வரப் போயிருந்தேன். போன இடத்திலே ஒரு வாரம் தங்கச் சொல்லி வற்புறுத்தினார்கள். இருந்துவிட்டு வந்தேன்!"

"அப்போ சாப்பாடெல்லாம் ஹோட்டல் தானா?"

"ஆமாம்! வீட்டிலே ஒருத்தரும் இல்லைன்னா வேறென்ன செய்யிறது?"

"அது சரிதான்! வீட்டில் இல்லையானால் ஹோட்டல்லேதான் சாப்பிடணும்?"

சாப்பிட்டு முடிந்ததும் அவர் என்னிடம் விடைபெற்றுக் கொண்டு போய்விட்டார்.

ஏழெட்டு நாள் கழித்து ஒருநாள் அதிகாலையில் அவசர காரியம் ஒன்றின் நிமித்தம் மோட்டார் சைக்கிளில் வெளியே போக வேண்டியிருந்தது. குழந்தைக்கு ஜுரம். மருந்து வாங்குவதற்குப் போக வேண்டும்.

'அந்தச் சந்து' வழியாகப் போனால் சுருக்கப் போய் விடலாம். மெயின்ரோடு சுற்றிப் போனால் அரைமணி அதிகமாகும். பொழுது புலர்ந்தும் புலராமலும் இருக்கிற கருக்கிருட்டு நேரம். 'யார் எப்படி நினைத்தாலென்ன? காரியம் அவசரம்' என்று எண்ணிக் கொண்டு, சந்து வழியாகவே கிளம்பினேன். வழக்கமாகச் சாயங்கால நேரங்களில் இருக்கும் கலகலப்பு அப்போது அந்தத் தெருவில் இல்லை. ஆள் வசிக்கிற தெருவாகவே தெரியவில்லை. சந்தின் ஒரு வீட்டு வாயிற்கதவு திறக்கப்படும் ஒலி கேட்டது. தாழ்ப்பாள் நீங்கும் ஒலியோடு கலகலவென ஒரு பெண்ணின் சிரிப்பொலியும் வளையல் ஒலியும் கேட்டன.

அதையடுத்து முகம் மறைந்தும் மறையாமலும் அங்கவஸ்திரத்தால் தலையில் முட்டாக்குப் போட்டுக்கொண்டிருந்த மனிதர் ஒருவர் அந்த வீட்டுப் படிகளிலிருந்து இறங்கித் தெருவில் நடந்தார்.

நான்தான் பராக்குப் பார்த்துக் கொண்டே சைக்கிளை விட்டுவிட்டேனோ, அல்லது அந்த மனிதர்தான் பராக்குப் பார்த்துக் கொண்டே நடந்து வந்தாரோ? எப்படி நடந்ததென்று தெரியவில்லை!

மோட்டார் சைக்கிளின் முன் சக்கரம் இலேசாக அவர் மேல் மோதிக் கீழே தள்ளிவிட்டது. நிலைதடுமாறி விழுந்த வேகத்தில் கால்கள் பின்னியதால் அவருடைய அரை வேஷ்டி கறையோரத்தில் 'பர்'ரென்று கிழிந்தது. தலையை மூடியிருந்த அங்கவஸ்திரம் விலகித் தூரப் போய் விழுந்தது. உயர்ந்த ரக செண்ட்டின் வாசனை அவர் ஆடைகளிலிருந்து கிளம்பி வந்து மூக்கைத் துளைத்தது. நான் சைக்கிளை நிறுத்திவிட்டுத் தூக்கிவிடுவதற்கு ஓடினேன். காயம் ஒன்றுமில்லை. அதிர்ச்சியில் விழுந்துவிட்டார். அருகில் நெருங்கியதும் திடுக்கிட்டேன். அவர் என் நண்பர்.

"அடேடே! சார்வாளா? ஏது? இத்தறுவாய்க்கு இந்தத் தெருப் பக்கம்!" என் கேள்விக்கு அவர் பதில் சொல்லவில்லை.

"போம் ஐயா நீர் சைக்கிளை விட்டுக் கொண்டு வந்த லட்சணம்; நல்ல வேஷ்டி கிழிந்துவிட்டதே?"

"கிழிசல் இப்போதுதானா ஏற்பட்டது? அடடா!" என்னுடைய கேள்வியின் சிலேடைப் பொருளை அவர் புரிந்து கொண்டாரோ, இல்லையோ?

**(1969-க்கு முன்)**

## 105. வண்டு

இப்போதும் அப்படியே நடந்தது. கைகளும், கால்களும் சண்பகப் பூங்கொத்துக்களாய்த் துவளப் பொன்கொண்டு பூசினாற்போன்று மின்னும் உடம்போடு வெள்ளை விழிகளினிடையே திராட்சைக் குண்டுகளாய்க் கருமை உருள ஒவ்வொரு பார்வையிலும் ஓர் புதிய மருட்சியை உண்டாக்கியபடி தெருவைப் பார்த்துக்கொண்டிருந்த அந்தக் குழந்தை அவரைக் கண்டதும் பயந்து முகத்தை திருப்பிக்கொண்டு குடுகுடுவென்று குடிசைக்குள் ஓடிப்போய்விட்டது. மறுபடி வெளியில் வரவே இல்லை. அவர் காத்திருந்தது வீணாகத்தான் போய்விட்டது. அந்தக் குழந்தை நேற்றும் அப்படித்தான் ஓடியது. அதற்கு முந்திய பல தினங்களிலும் கூட அப்படித்தான் ஓடியிருந்தது.

அவருக்கு ஓர் ஆசை. தங்கத்தில் செதுக்கி மெருகிட்டு உயிரும் ஊட்டித் தவழவிட்டது போன்ற அந்தக் குழந்தையைச் சில விநாடிகள் எடுத்துக் கொஞ்ச வேண்டும். அதன் பிஞ்சுக் கைகள் தன் கழுத்தைச் சுற்றி வளைக்கும்படி, நீண்ட மூக்கைப் பிடித்து இழுக்கும்படி, கன்னங்களைக் கிள்ளும்படி - இன்னும் விதவிதமாக எல்லாம் விளையாட வேண்டுமென்று அந்தக் குழந்தைக்கு ஆசையிருக்கிறதோ அந்த விதமாக எல்லாம் விளையாடும்படி தன்னை அதனிடம் ஆளக் கொடுத்துவிடுவதற்குத் தயாராயிருந்தார் அவர்.

அவரைப் போன்ற நிலையில் உள்ள ஒருவர் இப்படிக் கொஞ்சுவதற்கு ஆசைப்படும் போது குழந்தைகளுக்கா பஞ்சம்? தம்முடைய காரியதரிசியை அழைத்து இப்படி ஓர் ஆசை மனத்தில் ஒளிந்து கொண்டிருப்பதாக அவர் குறிப்பாய் இரண்டொரு வார்த்தைகள் சொன்னால்கூடப் போதும். அவருடைய பெரிய பங்களாவின் வாசலில் ஒரு குழந்தை எக்ஸிபிஷனே நடத்தலாம் போல் அவ்வளவு குழந்தைகள் கூடிவிடும்.

ஆனால் புதருக்குள் பூத்த பூவைப்போல் வெளிப்பார்வைக்குத் தெரியாமல் உள்ளேயே மணக்கும் அந்தரங்கமான ஆசையாயிற்றே இது. இந்தக் குழந்தையைப் பார்த்த கணத்தில்தான் இப்படி ஓர் ஆசையே அவருக்கு ஏற்பட்டது. தற்செயலாய்க் காற்றில் விரித்துவிட்ட புத்தகத்தின் பக்கத்தைப்போல முன்பின் தொடர்பின்றி இந்தக் குழந்தையைப் பார்த்த முதற்கணத்தில் உண்டாகி அந்தக் கணத்துக்கு அப்பாலும் நிலைத்துவிட்ட ஆசை இது.

இந்த ஆசையை அவருடைய தினசரி வழக்கங்களில் ஒன்றாகப் புரிந்து கொண்டு விட்ட கார் டிரைவர் அந்தக் குடிசை வாசலை நெருங்கியதும் வேகத்தைக் குறைத்து மெல்ல நிறுத்துவான். பின்பக்கத்து ஸீட்டின் நடுப்பகுதியிலிருந்து ஓரத்துக்கு நகர்ந்து

*அந்த வயதுக்கு எந்த அளவு அவசரப்பட முடியுமோ அவ்வளவு அவசரப்பட்டுக் காரின் கதவைத் திறந்து கொண்டு அவர் கீழே இறங்குவதற்குள் அந்தக் குழந்தை உள்ளே ஓடிவிடுகிறது. அப்படி ஓடுமுன் ரோஜாமொட்டுக்களைப் போன்ற உதடுகளை மலர்த்தி வலது கைக்கட்டை விரலை இதழோரமாகச் சப்பிக் கொண்டிருக்கும் கோலத்தில் அது நின்றதே; அந்தக் காட்சியை மட்டும் அவர் கண்கள் பதிய வைத்துக் கொள்கின்றன. கண்ணுக்கு நம்பிக்கையாலும், ஆசையினாலும் தோன்றும் பொய்யான பிரமைக்காட்சியாய் அந்த இடத்திலேயே அந்தக் குழந்தை நிற்பது போலத் தோற்றுகிறது. நிற்பது போலத்தானே தவிர நிற்பதாக அல்ல. இப்படிச் சில அழகான குழந்தைகளாகப் பிறந்துதான் தெய்வம் இந்த மண்ணில் தவழ்கிறது என்ற நினைப்போடு காரில் ஏறிக் கொண்டு புறப்பட்டார் மில் முதலாளி மீனாட்சிசுந்தரம்.*

*அறுபத்தேழு வயது வரை தனக்கு மனைவியும் மனைவிக்குத் தானும் குழந்தையாக இருந்ததைத் தவிர வேறு குழந்தைகளைப் பெற்றுக் கொஞ்சுவதற்கு வாய்ப்பில்லாத 'தந்தை'யின் மனநிலையைக் கற்பனை செய்து பார்க்க முடியுமானால் திருவாளர் மீனாட்சிசுந்தரத்தின் துன்பங்களை நாமும் புரிந்து கொள்ள முடியும். நாமும் தவிக்க முடியும்.*

*'தந்தை'யாவது ஒன்றாவது? அவரைத் தந்தையென்று சொல்வதற்கு யார் இருக்கிறார்கள்? யாரைப் பெற்று வளர்த்திருக்கிறார் அவர்?*

*'கலைத் தந்தை' 'தொழில் தந்தை' என்று செல்வத்தையும் செல்வாக்கையும் மதித்து உலகத்தார் கூட்டம் கூடிப் புகழும் பட்டங்கள் அவரை எது எதற்காகவோ 'தந்தை' என்று கூறிக் கொண்டிருந்தன. அப்படி எவ்வெவ்வற்றிற்கு எல்லாம் அவர் புகழ்த் தந்தையாக்கப்பட்டிருந்தாரோ அவற்றை அவர் பெற்றதுமில்லை; வளர்த்தது மில்லை. பெறாமலும் வளர்க்காமலுமே தந்தையாயிருக்க முடியுமா? பெறாததற்கும், வளர்க்காததற்கும் கூடத் தந்தையாக இருக்க முடிந்த உலகமா இது? இருந்தும் என்ன பயன்? பெறுவதற்கும் வளர்ப்பதற்கும் ஆசைப்பட்டதை அவர் இன்னும் அடையவில்லையே!*

*இந்த விநாடியில் அவர் ஒரு வார்த்தை சொன்னால் போதும். அவருடைய வசதியுள்ள உறவினர்கள்கூடத் தங்கள் குழந்தைகளில் ஏதாவதொன்றை அவர் சுவீகாரம் செய்து கொள்ளும்படி கொடுத்துவிடத் தயாராயிருந்தனர். அவருடைய செல்வச் செழிப்பை ஆதாரமாகக் கொண்டுதான் உறவினர்களுக்கு இந்த ஆசை தோன்றியிருந்தது. மற்றவர்கள் அவருடைய பணத்துக்கு ஆசைப்பட்டுக் கொண்டிருந்தனர். அவரோ பணத்தினால் வாங்கிவிட முடியாத ஓர் அன்புக்காகத் தவித்துக் கொண்டிருந்தார். தம்முடைய மனத்தில் ஏதோ ஒரு வறுமை இருப்பது அவருக்கே புரிந்தது.*

*இந்தக் குழந்தையைப் பார்க்க நேர்ந்ததிலிருந்து அந்த வறுமை அதிகமாகியிருப்பது போலவும் புரிந்தது. குடிசையின் வாயிலில் நின்று கொண்டிருந்து விட்டு தன்னைக் கண்டதும் உள்ளே ஓடும் இந்தப் பொன்னிறக் குழந்தையோ*

தன்னைத் தொட்டுத் தழுவிக் கொஞ்ச முடியாத காரணத்தினால் அவரை இன்னும் பெரிய ஏழையாக்கியிருந்தது. பெரிதும் ஏக்கமுடையவராக்கியிருந்தது.

சாயங்காலம் மில்லிருந்து வீட்டுக்குத் திரும்பும்போது வேறு விதமாக இந்தக் குழந்தையை நெருங்க முயன்றார் அவர்.

அந்தக் குடிசைக்குச் சிறிது தொலைவு முன்னாகவே காரை நிறுத்தச் சொல்லிக் கீழே இறங்கிக் கொண்டு தாம் மட்டும் தனியே நடந்தார் அவர். எதிர்பார்த்தது வீண் போகவில்லை.

குடிசை வாயிலில் சாக்கடை ஓரமாகத் தெருப் புழுதியில் விளையாடிக் கொண்டிருந்தது குழந்தை. சட்டைப் பையில் வாங்கி வைத்துக்கொண்டிருந்த சாக்லேட் துண்டுகளை எடுத்துக்கொண்டு பட்டுப்பூச்சி பிடிப்பதற்காகப் புதர் அருகே பதுங்கிப் பதுங்கி கிடக்கும் சிறுவனைப் போல் அந்தக் குழந்தையைப் பிடிப்பதற்காக அது தன்னைப் பார்த்துவிடாமல் அடிமேல் அடி வைத்து நடந்து நெருங்கினார் அவர்.

அவருடைய வலது கையில் வர்ணத்தாளில் சுற்றிய சாக்லேட் துண்டுகள் நடுங்கின. ஆயிற்று! அவருடைய ஆசை நிறைவேறிவிட்டது. பூ மாலையைத் தொடுவது போல் அந்தக்குழந்தையின் பட்டு மேனியைத் தீண்டித் தோள் உயரத்துக்குத் தூக்கிவிட்டார். சாக்கடைச் சேற்றில் அழுந்தியிருந்த அதன் செவ்விளம் பாதங்களை அவருடைய வெள்ளைச் சட்டையில் பட்டு அழுக்காக்கி விடுகின்றன.

அழுக்காவது...? இந்த அழுக்குத்தான் அவர் அடைய விரும்புகிற பரிசுத்தம். ரோஜாப் பூக் குவியலைத் தீண்டுவதுபோல எவ்வளவு சுகமாயிருக்கிறது இந்தக் குழந்தையின் உடம்பு?

திடீரென்று பின்புறமாக யாரோ வந்து தொட்டுத் தூக்கிவிட்ட அதிர்ச்சியிலேயே பாதி மிரண்டு போயிருந்த அந்தக் குழந்தை தன் கண்களுக்கருகே அவருடைய முகத்தைப் பார்த்துவிட்டு வீலென்று அலறியது.

"நாயினா... பூச்சாந்தி... பூச்சாண்டி!" என்று குடிசைப் பக்கமாகக் கையை நீட்டிக் கொண்டு வீறிட்டது குழந்தை. அவருடைய கையிலிருந்த சாக்லேட் துண்டுகளைத் தட்டி விட்டுவிட்டது. குழந்தையின் உடம்பும் அவருடைய பிடியிலிருந்து விடுபட்டு இறங்கி ஓடுவதற்காகத் திமிறியது.

முகத்தில் சரிபாதி அடர்ந்த தாடியும் தாடியில்லாத இடங்களில் வெட்டுக் காயங்களுமாகக் கோரமான தோற்றத்தை உடைய மனிதன் ஒருவன் குடிசைக்குள்ளிருந்து ஓடிவந்தான்.

"நாயினா... பூச்சாந்தி..." என்று கூறிக் கொண்டே குழந்தை அவனை நோக்கித் தாவியது.

அவன்தான் அந்தக் குழந்தையின் தந்தை போலிருக்கிறது. அவர் குழந்தையை அவனிடம் விட்டுவிட்டார். வீறிட்டு அழுததில் அதன் முகம் குங்குமக் குழம்பாய்ச்

சிவந்திருந்தது. ஆனால் குழந்தையை அவரிடமிருந்து வாங்கிக் கொண்டவனோ அதைக் கீழே நிற்கச் செய்து விட்டு அடக்க ஒடுக்கமாக அவரருகே ஓடிவந்து இரண்டு கைகளையும் சேர்த்துக் கூப்பினான். அவன் உடம்பு பாதாதிகேசப் பரியந்தம் நடுங்கிக் கொண்டிருந்தது.

அவன் தன்னுடைய மில்லில் வேலை பார்க்கிறவர்களில் ஒருவனாயிருக்க வேண்டுமென்று அவருக்குப் புரிந்தது.

"ஐயா! குழந்தை உங்கள் சட்டையெல்லாம் சேறாக்கிட்டுதுங்களே... துக்கிரியப்ப மவ...நாலு வெக்கணும் முதுகிலே..." என்று குழந்தையைப் பிடித்து அறைவதற்கு இருந்த அவனைத் தடுத்துக் கையமர்த்தினார் அவர்.

"குழந்தையை ஒண்ணும் செய்யாதே! நான்தான் அதைத் தூக்கினேன்..."

"................"

"என்ன வயசாகுது குழந்தைக்கு?..."

"மூணு வருஷம் ரெண்டு மாசமிருக்கும்..."

"என்ன பேரு வச்சிருக்கே...?"

"'வண்டு'ன்னு வச்சிருக்கா எம் பொஞ்சாதி... துறுதுறுன்னு எப்பவும் ஏதாச்சும் செய்தியிட்டேயிருக்குது... அதான் 'வண்டு'ன்னு வச்சிருக்கா..."

"ரொம்பப் பொருத்தமான பேர்தான்..."

"ஏன்?... சுட்டித்தனமா உங்ககிட்ட என்னவாவது செஞ்சிட்டாளா?..."

"அப்படி ஒண்ணுமில்லே... அழகான குழந்தை... கண்ணு - பார்வை துறுதுறுன்னு நடத்தை - பேச்சு எல்லாமே வண்டு போலத்தான் இருக்கு..."

"ஏதோ... எசமானுக்குப் பிடிச்சுப் போச்சு. ரொம்பப் புகழறீங்க..."

"நான் வரேன்..." அவர் புறப்பட்டார். பின்னால் பத்துப் பதினைந்து கெஜதூரம் கார் நிறுத்தியிருந்த இடம் வரை நடந்து போய் ஏறிக் கொண்டார். அவர் மனம் மட்டும் அந்தக் குழந்தையைச் சுற்றி நின்று கொண்டது.

டிரைவர் அதுவரை காரருகே நின்றுகொண்டே அந்தக் குடிசை வாசலில் நடந்ததை எல்லாம் பார்த்துக் கொண்டேதான் இருந்தான். அவன் மனத்தில் ஒரு யோசனை தோன்றியது. அந்த யோசனையை அந்தரங்கமாக வைத்துக் கொண்டான் அவன்.

அவரைப் பங்களாவில் இறக்கியதும் காரை போர்டிகோவில் அப்படியே விட்டுவிட்டு வந்த வழியே திரும்பி நடந்து புறப்பட்டான் டிரைவர். அதே குடிசை வாசலுக்குப் போய் நின்று கொண்டு கைதட்டினான். குழந்தை இப்போதும் சாக்கடையருகேதான் விளையாடிக் கொண்டிருந்தது.

குழந்தையின் தந்தை குடிசைக்குள்ளிருந்து வெளியே வந்து பார்த்தான். டிரைவரைப் பார்த்ததும் அவனுடைய தாடிக்கு நடுவே சிரிப்பு மலர்ந்தது.

"வாங்க... என்ன சங்கதி...?"

"சங்கதிதான்...ரொம்பப் பெரிய சங்கதி."

மில் கூலியின் தாடிக்கு நடுவே மறுபடி சிரிப்பு மலர்ந்தது.

"ஆமா... நீயும் உன் சம்சாரமும் ரெண்டு பேருமா மில்லிலேதானே வேலை பார்க்கிறீங்க...?"

"ஆமாங்க..."

"எத்தினி குழந்தைங்க... உங்களுக்கு?"

"ஆறு பொண்ணு... ரெண்டு பையன்..."

"அப்பாடீ!... தாங்குமா...?"

"தாங்குதோ...தாங்கலியோ...பெத்துட்டாக் கிணத்துலே பிடிச்சுத் தள்ளிட முடியாதுங்களே... வளர்த்துத்தானே ஆவணும்..."

"நீயேதான் வளர்க்கணுமா...? வேறெங்கேயாவது வளரலாமா?"

"நீங்க சொல்றதொண்ணும் புரியலீங்களே?..."

"இப்பிடி வா, சொல்றேன்... புரியும்..."

டிரைவரும் மில் கூலியும் காதருகே இரகசியம் பேசுவது போல் சிறிது நேரம் பேசினர். கூலி தயங்கினான்.

"அவ சம்மதிக்கமாட்டாளுங்க... இந்தக் குழந்தை மேலே அவளுக்கு உசிர்... வண்டு...வண்டுன்னு இதுமேலே கொள்ளை ஆசை அவளுக்கு... 'ராஜா வீட்டுலே பெறக்கற ராணியாக்கும் இது'ன்னு அவ சொல்லிப் புகழாத நாளில்லே..."

"அட சர்த்தான்யா... புகழ்லே என்னா பெரயோசனமிருக்கு...? நெஜமாவே ராணியாக்கிப் பார்க்க முடியும் போல சந்தர்ப்பம் வந்திருக்கு. பெரிய ஐயா இந்தக் கொழந்தைக்காக 'மில்லையே எழுதி வைங்கன்'னாலும் வச்சிடுவார்... நீ நா சொல்றபடி செய்யி... எட்டுக் கொழந்தைலே ஏழு பத்தாதா உன் சொந்தத்துக்கு?"

"பார்க்கலாம்... எனக்கு யோசிக்க டயம் கொடுங்க... அவளைக் கலந்து பேசிச் சொல்றேன்..."

இது நடந்த மறுநாள் மீனாட்சிசுந்தரம் கோடை வாசத்துக்காக ஊட்டிக்குப் போய்விட்டார். டிரைவரும் உடன் சென்றான். இனி ஒரு மாதம் ஊட்டியில்தான். குளிர்ந்த சூழலில் உதகமண்டலத்தின் வைத்துத் தன் யோசனையை அவருக்குச் சொன்னான் டிரைவர்.

"அந்தக் கொழந்தை மட்டும் கிடைக்கிறதாயிருந்தா இந்த உலகத்தையே அதுக்கு ஈடாகக் கொடுக்கலாம்..." என்று உணர்ச்சிவசப்பட்டுச் சொன்னார் அவர். அந்தக் குழந்தையின் மேல் அவ்வளவு ஆசை அவருக்கு.

அந்தக் குழந்தைக்குத் தன்னைத் தந்தையாக நினைத்துப் பார்ப்பதில் ஒரு பெருமிதத்தை உணர்ந்தார் அவர். வண்டு அவர் மனத்திலேயே இடைவிடாமல் சுழன்று கொண்டிருந்தாள். அவளுடைய சுறுசுறுப்பான கண்கள், பேச்சு, ரோஜாப்பூ போன்ற மெல்லிய மேனி - எல்லாவற்றையும் நினைத்து நினைத்து உதகமண்டலத்தி லிருந்து திரும்பும் நாட்களை எண்ணிக் கொண்டிருந்தார் அவர். ஏப்ரல் 15ந் தேதி புறப்பட்டவர் மே 16ந்தேதிதான் ஊருக்குத் திரும்பி வர முடிந்தது.

ஊருக்குத் திரும்பிய முதல்நாள் வீட்டிலிருந்து மில்லுக்குக் காரில் புறப்பட்டபோது முப்பது நாள் அந்தக் குழந்தையைப் பார்க்காமல் இருந்துவிட்ட பிரிவின் தாபம் எல்லாம் ஏங்குகிற மனத்தோடு போய்க் கொண்டிருந்தார் அவர்.

ஆனால் என்ன ஏமாற்றம்? குடிசை வாசலில் வண்டு நிற்கவில்லை. அந்த ஏமாற்றத்தை அவரால் தாங்கிக் கொள்ள முடியவில்லை. சாயுங்காலம் மில்லிலிருந்து திரும்பும்போது பார்க்கலாம் என்று நம்பினார். திரும்பும்போதும் வண்டு தென்படவில்லை. மறுநாளும் அப்படியே. வண்டு எங்கும் பறக்கவில்லை. அந்த வாசல் வாடியிருந்தது.

மூன்றாம் நாள் காலையில் அவரே அந்தக் குடிசையின் வாசலில் இறங்கிக் கைகளைத் தட்டி உள்ளேயிருந்த வண்டின் தந்தையை அழைத்தார். வண்டின் தந்தை தளர்ந்து போயிருந்தான். அவர் முகத்தை ஏறிட்டுப் பார்த்தவன் கோவென்று அழ ஆரம்பித்துவிட்டான். அவன் உதடுகள் உணர்ச்சிவசப்பட்டுத் துடித்தன.

"என்னடாது...? ஏன் அழறே? வண்டு எங்கே காணலே...?"

"வண்டு பறந்துட்டா எசமான்... நாலு நாள்... அம்மையிலே கிடந்து... உடம்பெல்லாம் பொரிப் பொரியாகக் கொப்புளமாகி..."

அவர் இதயம் தாங்க முடியாத அதிர்ச்சியோடு வீடு திரும்பினார். போர்டிகோவில் காரை நிறுத்திக் கதவைத் திறந்துவிட்டு "சார்... வீடு வந்தாச்சு" என்று குல் கொடுத்தான் டிரைவர். தூங்குவதுபோல் உட்கார்ந்திருந்த அவர் தலை சாய்ந்தது. சரிந்தாற்போல் காருக்குள்ளேயே அவர் உடலும் சாய்ந்தது. அந்த உடம்பைத் தாங்கிய டிரைவர் அதில் உயிர் இல்லை என்பதை உணரச் சிறிது நேரம் ஆயிற்று!

(1969-க்கு முன்)

## 106. காக்கை வலிப்பு

**வீ**ட்டு வாயிற்படியில் நின்று பார்த்தேன். முன்புறத்தில் தோட்டம் மிக அழகாக இருந்தது. ஒழுங்காகக் கத்திரித்து விடப்பட்ட அழகிய செடிகள். பத்தி பத்தியாய்ப் பாத்தி பாத்தியாய்ப் பல நிறப் பூக்கள்; அவ்வளவும் மணமற்றவை. மணமில்லாத வையானால் என்ன? பார்ப்பதற்கு அழகாயிருக்கின்றனவே, அது போதாதா? பார்ப்பதற்கு அழகாயிருந்தால் வேறு எது இல்லாவிட்டாலும் மன்னிக்கலாம் தானே?

நாளைக்கு விடிந்தால் என்னுடைய இந்தச் சிறந்த பூந்தோட்டம் பரிசு வாங்கப் போகிறது. யாரிடம் பரிசு வாங்கப் போகிறது? எதற்காகப் பரிசு வாங்கப் போகிறது? என்று கேட்கிறீர்களா? அடப்பாவமே! இதுகூடத் தெரியாமலா இந்த ஊரில் இருக்கிறீர்கள்? நகரத்திலுள்ள பங்களாக்களின் தோட்டங்களில் மிகச் சிறந்ததாக எது வளர்க்கப்பட்டிருக்கின்றதோ அதை அந்த வருடத்தின் சிறந்த பூந்தோட்டமென்று தேர்ந்தெடுத்து மாநகராட்சியினர் பரிசு கொடுக்கிறார்கள். மாநகராட்சியினர் கூட இதெல்லாம் செய்கிறார்களா என்று சந்தேகம் வேண்டாம். நகரத்தின் அழகை அதிகமாக்குபவர்களை உற்சாகப்படுத்த வேண்டாமா? அதற்காகத்தான் இப்படியெல்லாம் பரிசு கொடுக்கிறார்கள். 'பங்களாக்களும், பூங்காக்களும், விண்ணைத் தொட நிமிர்ந்த நிற்கும் சிமிண்டுச் செழிப்புக்களும் தான் நகரத்திற்கு அழகா?' என்று இடக்காகக் கேட்காதீர்கள். ஓட்டைக் குடிசைகளிலும், சாக்கடை புகுந்து ஓடும் சேரிகளிலும் பரிசு கொடுக்க என்ன இருக்கிறதாம்? 'ப்யூட்டி' வேணும் சார், ப்யூட்டி! இந்த 'ஸென்ஸ் ஆப் ப்யூட்டி' (அழகு உணர்ச்சி) இருக்கிறதே, அது தமிழனுக்குச் சுத்தமா இல்லே சார்! பார்ப்பதற்கு அழகாயில்லாவிட்டால் வேறு எது இருந்தாலும் மன்னிக்கக்கூடாது தானே?

நாளைக் காலையில் சரியாக ஏழு மணிக்கு நீதிபதிகள் தோட்டத்தைப் பார்க்க வந்துவிடுவார்கள். எல்லாப் பங்களாக்களின் தோட்டங்களையும் பார்த்து எதற்குப் பரிசு கொடுக்கலாம் என்பதைத் தீர்மானம் செய்வதற்கு ஒவ்வொரு வருடமும் கார்ப்பொரேஷன் சில பெரிய மனிதர்களை நீதிபதிகளாக நியமிக்கிறது. அந்த நீதிபதிகள்தான் விடிந்ததும் இங்கேயும் வரப்போகிறார்கள். வரட்டுமே! வந்து பார்த்ததுமே மூக்கில் விரலை வைத்து வியக்கப் போகிறார்கள். சாதாரணமாகவா வைத்திருக்கிறேன் இந்தத் தோட்டத்தை? மூன்று மாதக் காலமாக முயன்று அப்படியே பிருந்தாவனமாக அல்லவா மாற்றியிருக்கிறேன். தோட்டக்காரப் பனையப்பனை ஒரு விநாடி சும்மா நிற்க விட்டிருப்பேனா? பம்பரமாகச் சுழன்றல்லவா அவனை வேலை வாங்கியிருக்கிறேன். அவனை இந்த மாதிரி வேலை வாங்கியிராவிட்டால் அதோ அந்த ரோஜாப் பாத்தியில் அவ்வளவு பூக்கள் அத்தனை விதமான நிறத்தோடு பூத்திருக்க

*முடியுமா? அந்த 'டேலியா'ப் பூக்கள் இப்படிப் பூத்துக் குலுங்கியிருக்க முடியுமா? கேந்தி, பிச்சி, மல்லிகை, சூரியகாந்தி எல்லாம் எவ்வளவு பூத்திருக்கின்றன. நீதிபதிகள் இதைப் பார்த்தவுடனேயே இதற்குத்தான் முதற்பரிசு என்று உறுதியாக நினைத்துக் கொள்வதைத் தவிர வேறு என்ன செய்ய முடியும்? பார்க்கலாம்! நாளைக்கு விடிந்தால் தானே தெரிந்து விடுகிறது. அப்பப்பா! விடிவதற்கு இன்னும் பன்னிரண்டு மணி நேரம் இருந்து தொலைக்கிறதே. நாளைக்கு மட்டும் சற்று விரைவாகவே பொழுது விடியக்கூடாதோ? நாளைக்கு மாலையில் கார்ப்பரேஷன் மைதானத்தில் நடைபெற விருக்கும் பரிசளிப்பு விழாவில், "திருவாளர் சுகவனம், ஐ.ஸி.எஸ். அவர்களின் தோட்டம் முதற் பரிசு பெறுகிறது" என்று எட்டுத் திக்கும் ஒலிபெருக்கியில் முழங்கப் போற என் பெயரின் வெற்றி முழக்கத்தை இப்போதே கேட்டுவிட வேண்டும்போல் செவிகள் ஆசையால் துடிக்கின்றனவே! செவிகளே, பொறுத்திருங்கள்! நாளை மாலை வரை பொறுத்திருங்கள்!*

*பரிசு கிடைத்தால் இந்தப் பயல் பனையப்பனுக்கு ஏதாவது செய்ய வேண்டும். கொஞ்சங்கூட அயராமல் உழைத்திருக்கிறான். ஒரு சோடி புது வேட்டியும் பொங்கல் செலவுக்குப் பத்துப் பதினைந்து ரூபாய் பணமும் கொடுத்துவிட வேண்டியதுதான். தோட்டக்காரனுடைய ஒத்துழைப்பு இல்லாவிட்டால் இதை இப்படிப் பரிசுக்குத் தயாராக்கியிருக்க முடியுமா? அவனுக்கும்கொஞ்சம் நன்றி செலுத்த வேண்டியதுதான். ஆள் மாடாக உழைத்திருக்கிறான்.*

*முடிவு வெளியானதும், "என்ன சுகவனம்! இந்த வருடம் உன்னுடைய 'கார்டன்' பிரைஸ் வாங்கியிருக்கிறதாமே?" என்று நண்பர்களெல்லாம் அன்புடன் விசாரிக்கப்போவதைக் கற்பனை செய்கிறேன் நான். இப்படிக் கற்பனை செய்வது மனத்துக்கு எவ்வளவு சுகமாக இருக்கிறது! கார்ப்பரேஷன் கமிஷனரோ, சேர்மனோ, பரிசு வழங்கும்போது அதை நான் மேடையேறி வாங்குகிற காட்சியை உள்ளூர்ப் பத்திரிகைக்காரர்கள் புகைப்படம் எடுப்பார்கள். மறுநாள் காலையில் பத்திரிகைகளில் அந்தப் படம் முதல் பக்கத்தில் பிரமாதமாக வெளிவரும். அடடா! புகழையும் வெற்றிப் பிரதாபத்தையும் கற்பனை செய்வது கொட்டையேயில்லாத பழத்தைச் சுவைத்துச் சாறு உறிஞ்சுவது போல் பரம சுகமாக இருக்கிறதே! பொழுது விடியட்டும் பார்க்கலாம்!*

*ஒரு வழியாகப் பொழுது விடிகிறது. தோட்டத்தைப் பார்க்க நீதிபதிகள் காரில் புறப்பட்டு வந்து கொண்டிருப்பதாக டெலிஃபோனில் தகவல் வருகிறது. நான் அவசர அவசரமாகத் தயாரானேன். நீதிபதிகளை வரவேற்றுத் தோட்டத்தைச் சுற்றிக் காட்ட வேண்டாமா? தோட்டத்தைச் சுற்றிக் காட்டுகிற முறையிலும் ஒவ்வொன்றையும் பற்றி நான் விவரித்துக் கூறுகிற சாமர்த்தியத்திலுமே அவர்கள் மயங்கிப் போக வேண்டுமே.*

*என்னைத் தயார் செய்துகொண்டு நீதிபதிகளை வரவேற்க வாசலுக்கு வருகிறேன்.*

*இதென்ன? ஐயையே! பின்புறம் புல்வெளியில் 'மூசு மூசு' என்று மூச்சு இரைக்கும் விகாரமான ஒலி. திரும்பிப் பார்க்கிறேன். அடடா! இதென்ன அசிங்கம்? இன்றைக்குப்*

பார்த்தா பனையப்பனுக்கு 'இது' வர வேண்டும்? நீதிபதிகள் வருகிற அந்த நல்ல நேரத்தில் ரோஜாப் பாத்திகளுக்கு அருகில் மல்லாந்து விழுந்து, கைகளையும் கால்களையும் வலித்து உதைத்துக் கொண்டு கிடந்தான் பனையப்பன். வாயில் இதழோரங்களில் நுரை துள்ளிக் கொண்டிருந்தது. அவனுக்கு இந்த அசிங்கமான வலிப்பு நோய் உண்டு என்பது எனக்குத் தெரியும். எப்போதாவது இரண்டு மூன்று மாதங்களுக்கு ஒருமுறை தோட்டத்திலோ அதன் ஒரு மூலையிலிருக்கும் தன் குடிசையிலோ இந்த அவஸ்தைக் கோலத்தில் பார்ப்பேன் நான். ஆனால் இது சாதாரண வழக்கமாக இருந்தது. இந்தக் கோலத்தில் பார்த்ததும் ஒருபெரிய இரும்புச் சாவியை வேலைக்காரனை விட்டு அவன் கையில் திணிக்கச் சொல்வேன். இதுதான் அவனுக்கு மாமூல் வைத்தியம். சிறிதுநேரத்தில் தெளிந்து எழுந்து மறுபடியும் வேலை செய்ய ஆரம்பித்துவிடுவான் அவன்.

இன்றும் அப்படிச் செய்ய நினைத்து வேலைக்காரனைக் கூப்பிட்டேன். ஆனால், வேலைக்காரன் வந்து நிற்பதற்கும், வாயிலில் நீதிபதிகளின் கார் வந்து நிற்பதற்கும் சரியாக இருந்தது. சமாளிக்க நேரமே இல்லை.

'சே! இதென்ன அசிங்கம்? இவர்கள் கண்ணில் இந்த ஆபாசம் படக்கூடாது' என்று என் மனம் நினைத்தது. வேலைக்காரனிடம் ஏதோ சொல்ல நினைத்தவன், வாயிலில் காரைப் பார்த்ததும் அபிப்பிராயத்தை மாற்றிக் கொண்டு, "நான் சிறிதுநேரம் அவர்களை வாசலிலேயே வரவேற்றுப் பேசிச் சமாளிக்கிறேன். அதற்குள் நீயும், கூர்க்காவுமாக இவனை மெல்லக் கிளப்பி அந்த மூலையில் மனோரஞ்சிதப் புதருக்குப் பின்னால் போட்டு விடுங்கள். மற்றதை அப்புறம் பார்த்துக் கொள்ளலாம்" என்று வேலைக்காரனுக்கு ஆணையிட்டு விட்டு நீதிபதிகளை வரவேற்க விரைந்தேன். வேலைக்காரன் அப்படியே செய்துவிடுவதாகத் தலையாட்டினான்.

அவன் அப்படியே செய்தும் விட்டான். அவன் அப்படிச் செய்துவிட்டது எனக்கு எப்படித் தெரிந்தது என்றால் நான் நீதிபதிகளை அழைத்துச் சுற்றிக் காட்டிக் கொண்டே ரோஜாப் பாத்திகளுக்கு அருகே வந்தபோது அங்கே தோட்டக்காரன் வலித்துக் கொண்டு கிடக்கவில்லை. பூக்கள்தாம் சிரித்துக் கொண்டிருந்தன. புற்கள்தாம் பசுமை காட்டிக் கொண்டிருந்தன.

எல்லாம் பார்த்தாயிற்று. நீதிபதிகளுக்குப் பரம திருப்தி. எல்லாம் சுற்றிக் காட்டிவிட்டுக் கார் வரை போய் அவர்களை வழியனுப்பினேன். போய் ஒரு மணிநேரத்தில் டெலிஃபோனில் முடிவு சொல்வதாகக் கூறிச் சென்றார்கள். முடிவுதான் எனக்குத் தெரியுமே! என்னைத் தவிர வேறு எவன் பரிசு வாங்க முடியும்?

ஒருமணி நேரத்தில் டெலிபோன் வந்தது. உங்கள் தோட்டத்துக்குத்தான் முதற் பரிசு! என்று என் செவிக்கு இனிமையான குரலாக ஒலித்தது முடிவு. எனக்கு உடனே பனையப்பனின் நினைவு பாய்ந்து வந்தது. அவன் கையில் உருவான அழகு தோட்டமல்லவா இது? வேலைக்காரனைக் கூப்பிட்டுக் கேட்டேன்.

"பனையப்பன் எங்கேடா?"

"இதோ பார்த்துக் கொண்டு வருகிறேனுங்க" என்று கூறிவிட்டு ஓடினான் அவன்.

சிறிது நேரங் கழித்து அவன் திரும்பி வந்து தலைகுனிந்து நின்றான்.

"என்னடா? பனையப்பன் எங்கே?"

"வாங்க காட்டுறேன்!" நான் அவனைப் பின் தொடர்ந்தேன்.

மனோரஞ்சிதப் புதரருகில் அவன் உடம்பு நீலம் பாரித்துக் கிடந்தது.

"என்னடா?"

"இந்தப் புதர்லே நிறைய நல்ல பாம்பு உண்டுங்க."

"அடப் பாவி!"

"நாங்க என்ன செய்யிறதுங்க. நீங்க போடச் சொன்னீங்க, கொண்டு வந்து போட்டோம்?"

"கையிலே சாவியைக் கொடுத்துப் போடலியாடா?"

"நீங்க அப்படிச் சொல்லலீங்களே..."

"நான் சொல்லணுமா அதை...?"

அன்று மாலை திருவாளர் சுகவனம் ஐ.ஸி.எஸ். அவர்கள் தமது அழகிய தோட்டத்துக்கு முதல் பரிசு வாங்கிக் கொண்டிருந்த நேரத்தில் தோட்டக்காரப் பனையப்பன் சுடலையில் எரிந்து கொண்டிருந்தான். அதற்கென்ன செய்வது?

பார்ப்பதற்கு அழகாயில்லாவிட்டால் வேறு எது இருந்தாலும் மன்னிக்கக் கூடாதுதானே?

(1969-க்கு முன்)

## 107. காந்தி நூற்றாண்டு விழா

**மா**மா குமாரசாமி எவ்வளவோ எடுத்துச் சொல்லியும் நாச்சியப்பன் முரண்டு பிடித்தார். எப்படியும் பம்பாய்க்குப் போக வேண்டும் என்ற வெறியோடு இருந்தார் நாச்சியப்பன். அபூர்வமாக மாமாவின் வார்த்தைக்கு அவர் கட்டுப்படுவது உண்டு. அது தெரிந்துதான் அந்தக் குடும்பத்தினர் பல சந்தர்ப்பங்களில் மாமா குமாரசாமியை அழைத்து அவருக்கு உபதேசம் செய்யச் சொல்லியிருக்கிறார்கள்.

இன்றோ மாமா குமாரசாமி தமக்காகவே நாச்சியப்பனிடம் மன்றாடிக் கொண்டிருந்தார். "நான் சொல்றதைக் கேட்டுக்க. அப்புறம் நீ இஷ்டப்படி செய்யி. ஏற்கனவே டாக்டர் கடுமையாகச் சொல்லியிருக்காரு. நீ ஹார்ட் பேஷண்டு வேறே. அல்ஸரும் இருக்கு. இந்த வாரத்திலே இருந்தாவது இந்தப் பாழாய்ப்போன பழக்கத்தை விட்டுத் தொலை. உங்கப்பா நினைவா நீ நடத்தற பள்ளிக்கூடத்துக்கு 'மகாத்மா காந்தி ஸ்கூல்'னு பேர் வச்சு அதுக்கு என்னைக் கரஸ்பாண்டெண்டாகவும் நியமிச்சிருக்கே. ஆனா அந்தக் காந்திங்கற கங்கை இந்தத் தேசத்திலே ஓடத் தொடங்கி நூறு வருஷம் நிறையற சமயத்திலே கூட இந்தப் பாழாய்ப்போன கெட்ட பழக்கங்களை நீ விடலேன்னா அர்த்தமே இல்லே."

"என்ன செய்யறது மாமா? இந்த வருஷம் அக்டோபர் முதல் தேதியிலிருந்து நானே குடிக்கிறதை விட்டிடறதா டாக்டரிட்ட ப்ராமிஸ் பண்ணினேன். நான் விட்டாலும் அது என்னை விடாது போலிருக்கிறதே! என்னாலே முடியலியே! என்ன பண்ணட்டும்?"

"முடியாமல் என்ன? பம்பாய்க்கு வாங்கியிருக்கிற பிளேன் டிக்கெட்டை கான்ஸல் பண்ணிட்டு, மனத்தைக் கட்டுப்படுத்திக்கிட்டு என் கூட வா. இன்னிக்கு அக்டோபர் மாசம் ரெண்டாம் தேதி. பள்ளிக்கூடக் குழந்தைகளுக்கு எல்லாம் காந்தி பேட்ஜும் மிட்டாயும் கொடுக்க ஏற்பாடு செஞ்சிருக்கேன். அதை நீ வந்து உன் கையாலேயே ஒவ்வொரு குழந்தைக்கும் கொடு. தெண்டத்துக்குக் குதிரையிலேயும் குடியிலேயும் கூத்துலேயும் பணத்தை ஏன் வீணாக்கனும்? அத்தினி குழந்தைங்களைச் சேர்த்து ஒண்ணாப் பார்க்கறப்பவே உன் மனசுக்கு நிம்மதியா இருக்கும். வா சொல்றேன்" என்றார் குமாரசாமி.

"அதில்லே மாமா! நாளைக்குப் பாம்பே ரேஸ்லே சந்திக்கிறதா நாலஞ்சு நண்பர்களுக்கு லெட்டர் எழுதிட்டேனே!"

"லெட்டர் என்ன பிரமாத லெட்டர்? நீ போகாம இருந்திட்டா வரலேன்னு தானாத் தெரிஞ்சுக்கிறாங்க." எழுபது வயதுத் தள்ளாமையையும் பொருட்படுத்தாமல்

மாமா தேடிவந்து சொல்லியும் நாச்சியப்பனுக்கு உறைக்கவில்லை. 'இந்தப் பசி' வந்தால் அவருக்கு எல்லாமே பறந்துவிடும்.

அது ஒரு வேடிக்கையான குடும்பம். மாமா குமாரசாமி காந்தி கட்சி. தேசப் போராட்டக் காலத்தில் சிறை சென்று மீண்டவர். கையால் நூற்றுச் சிட்டம் போட்டுத்தான் வேட்டி துணிமணி வாங்குவார். மருமகன் நாச்சியப்பன் அந்தக் காலத்தில் ஜஸ்டிஸ் கட்சி. இந்தக் காலத்தில் எந்தக் கட்சியுமில்லாமல் எல்லாத் தொழிலதிபர்களையும் போல் அவ்வப்போது பதவியில் இருக்கிறவர்களை விரோதித்துக் கொள்ளாமல் வாழப் பழகி விட்டவர். வயது ஐம்பத்தொன்பது. அடுத்த வருடம் அறுபதாண்டு நிறைவும் கொண்டாடியாக வேண்டும். ஆனால் அதைக் கொண்டாடுவதற்குப் பிள்ளைகள் இல்லை. பெண்களும் இல்லை. குடும்ப வாழ்வின் கலகலப்பு வீட்டில் இல்லாததால் வெளியே பழகுவதற்குக் கெட்ட பழக்கங்களை ஒவ்வொன்றாக ஏற்படுத்திக் கொண்டு விட்டார் நாச்சியப்பன். பெங்களூர் ரேசின் போது பெங்களூர், ஹைதராபாத் ரேசின் போது ஹைதராபாத், பம்பாய் ரேசின் போது பம்பாய் என்று சுற்றுவது அவர் வழக்கமாகி விட்டது; அதை ஒட்டி வேறு பல கெட்ட பழக்கங்களும் ஏற்பட்டிருந்தன. அதில் பயங்கரமானது குடிப்பழக்கம்.

"இன்னும் தொடர்ந்து ஒரு வருஷ காலம் இப்படிக் குடிச்சீங்களோ குடலே இருக்காது. குடலை முழுக்க அரிச்சிப்பிடும்" என்று சில வாரங்களுக்கு முன் மாமா குமாரசாமியும் அருகில் இருந்த போதே எச்சரித்திருந்தார், குடும்ப டாக்டர். அப்போது மாமா குமாரசாமியின் வேண்டுகோளுக்கு இணங்கி, "அடுத்த மாதம் காந்தி நூற்றாண்டு மாதம், அக்டோபர் ஒண்ணாந்தேதியிலிருந்தே நான் குடிக்கப் பிடாதுங்கறீங்க. எனக்கு மதுவிலக்கு, அஹிம்சை இதிலெல்லாம் நம்பிகை இருந்த தில்லை. ஆனா நீங்க இதையெல்லாம் நம்பறீங்க; கடைப்பிடிக்கிறீங்க. உங்களுக்காக வேண்டியாவது அடுத்த மாதம் முதல் தேதியிலிருந்து இதையெல்லாம் விட்டுடறதா ப்ராமிஸ் பண்றேன், மாமா!" என்று அப்போது தாம் செய்த உறுதியையும் இப்போது நாச்சியப்பன் மறந்து விட்டார். நாச்சியப்பனின் மனைவி வந்து தன் அண்ணா வயதுள்ள குமாரசாமியிடம் அழுதாள். குமாரசாமிக் கிழவர் தள்ளாமையையும் பொருட்படுத்தாமல் வந்து நாச்சியப்பனைக் கண்டித்துப் பார்த்தார். பச்சைப் பிள்ளையாகவோ குழந்தையாகவோ இருந்தால் இன்னும் அதிகமாகக் கண்டிக்கலாம். ஐம்பத்தொன்பது வயதுக் கிழவனுக்கு இதைவிட இன்னும் கடுமையாக என்ன சொல்ல முடியும்?

"அவன் கேட்கமாட்டான் போலிருக்கிறது அம்மா! அவன் வளர்ந்த விதம் அப்படி. நீ வருத்தப்பட்டதுக்கு நான் தேடி வந்து சொல்லியாச்சு. அவன் கேட்கலை. குடிச்சுக் குடிச்சுத்தான் சாகணும்னு அவன் தலையிலே எழுதியிருந்தா நாம என்ன செய்ய முடியும்?" என்று மாமா குமாரசாமிக் கிழவர் நாச்சியப்பனின் மனைவியிடத்தில் அலுத்துக் கொண்டு புறப்படத் தயாரானார்.

நிர்வாகி என்ற முறையில் அவர் அன்று காலையில் தமது நிர்வாகத்தில் இருந்த மகாத்மா காந்தி பள்ளிக்கூடத்துக்குப் போக வேண்டியிருந்தது. குழந்தைகள் பள்ளி மைதானத்தில் தேசத் தந்தை காந்திக்கு அஞ்சலி செய்யக் கூடுகிறார்கள். அவர்கள் ஒவ்வொருவருக்கும் எனாமல் காந்தி பேட்ஜும் மிட்டாயும் வழங்குவதற்கு ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. அதற்காக அவர் போய்ச் சேர்ந்தாக வேண்டும்.

இப்போது காலை ஒன்பது மணி. அவர் பள்ளிக்கூடத்துக்குப் புறப்பட்டார். நாச்சியப்பனுக்குக் காலை பத்து மணிக்கு விமானம். வீட்டிலிருந்து ஒன்பது நாற்பதுக்குப் புறப்பட்டாலும் போதும். தியாகராய நகரிலிருந்து விமான நிலையத்துக்குப் போவதற்கு இருபது நிமிஷங்கள் தாராளமாகப் போதும். அவருடைய சவர்லே - இம்பாலா பன்னிரண்டு நிமிஷங்களில் விமான நிலையத்துக்குப் போய்ச் சேர்த்து விடும். பல தடவை போய்ப் பழகிவிட்டதனால் இப்போதெல்லாம் அங்கே போய்க் காத்திருப்பதற்கு அவர் தயாராயில்லை. ஒவ்வொரு தொழிலிலும் நிறைய லாபம். முதலீடு செய்திருந்த எல்லாம் நாலு மடங்காக லாபம் தரும் நிலை. குழந்தை குட்டி இல்லாத குடும்பம். எவ்வளவு செலவழித்தாலும் தீராத வசதி. கொஞ்சம் தேசபக்தியோ தெய்வபக்தியோ உள்ளவராக வளர்ந்திருந்தால் நாச்சியப்பன் இப்படிக் கெட்டுப் போயிருக்க முடியாது. ஆனால் இரண்டுமே இல்லை. அவர் இதுவரை செய்திருந்த ஒரே நல்ல காரியம் தந்தையின் நினைவாகக் கட்டிய ஒரு பள்ளிக்கூடம் தான். அதற்குக் காந்தி மகான் பெயரைச் சூட்டியதற்குக்கூட மாமா குமாரசாமிக் கிழவரின் வற்புறுத்தல்தான் காரணம். 'பழனியப்பர் ஞாபகார்த்த மகாத்மா காந்தி பள்ளிக்கூடம்' என்று இரண்டு பெயரையும் சேர்த்தே பள்ளிக்குச் சூட்டச் செய்திருந்தார் மாமா. அந்தப் பள்ளிக்கூடம் சம்பந்தமான கணக்கு வழக்கு வரவு செலவு எல்லாம் கூடக் கிழவருக்குத் தான் தெரியும். நாச்சியப்பன் கணக்கு வழக்குகளில் கவனம் செலுத்துவதே இல்லை. 'செக்'கில் கையெழுத்துப் போடுவது, வருட முடிவில், 'பாலன்ஸ் ஷீட்' பார்ப்பது தவிரத் தொழில் நிறுவனங்களை, அன்றாட நிர்வாகங்களை அவருடைய தந்தையின் காலத்திலேயே வேலைக்குச் சேர்ந்திருந்த விசுவாசமான ஊழியர்கள் தாம் கவனித்தார்கள். அதனால் பழுதுபடாத பழகிய யந்திரங்களைப் போல் எல்லாம் அவருடைய கவனிப்பின்றியும் நன்றாகவே இயங்கி வந்தன.

இளமையிலிருந்தே கிளப் வாழ்க்கை, ரேஸ், மதுப்பழக்கம் இவற்றினால் ஓரளவு பாழாகியிருந்த நாச்சியப்பன் குடும்ப வாழ்வின் செல்வமாகிய மக்கட் செல்வமும் இல்லாமற் போகவே விரக்தியில் இன்னும் மோசமாக மாறினார். தந்தை காலமானபின் அவரைத் தட்டிக்கேட்க ஆளில்லாது போயிற்று. மாமா குமாரசாமி அகிம்சாவாதி. சாது. எதையும் எடுத்துச் சொல்லி அறிவுரை கூறுவாரே ஒழிய மனம் புண்படும்படி கூறி நிர்ப்பந்திக்க அவருக்குத் தெரியாது. நாச்சியப்பனின் குடும்பத்தோடு சேர்ந்து குடியிருக்காமல் கிழவர் தனியாக வேறு வீட்டில் குடியிருந்ததற்குக் காரணமே அவருடைய பழக்க வழக்கங்களும் தம்முடைய பழக்க வழக்கங்களும் ஒத்துக் கொள்ள மாட்டா என்பதனால்தான்.

சரியாக ஒன்பதடித்து முப்பத்தொன்பதாவது நிமிஷத்தில் டிரைவர் கப்பல் போல் நீண்ட காரைப் போர்ட்டிகோவில் கொண்டு வந்து நிறுத்தினான். நாச்சியப்பனின் காரியதரிசி ஐயாயிர ரூபாய் ரொக்கம் அடங்கிய சூட்கேஸ் ஒன்றைக் கொண்டு வந்து அவரிடம் கொடுத்தான். வீட்டம்மாள் வெளியே அவரை வழியனுப்ப வரவே இல்லை; அன்று கிழவர் வீடு தேடிவந்து அவருக்குச் சொன்ன அறிவுரையை அவர் கேட்க வில்லை என்று அவளுக்குக் கோபம். டாக்டரிடம் சத்தியம் பண்ணிக் கொடுத்தபடி காந்தி நூற்றாண்டு வருடத்திலிருந்து அவர் குடிப்பழக்கத்தை விடப் போவதில்லை என்று அறிந்த பின்போ அவள் கோபம் இன்னும் இரண்டு மடங்காகியிருந்தது.

சரியாக ஒன்பது நாற்பதுக்குக் கார் போர்ட்டிகோவிலிருந்து புறப்பட்டது. உள்ளே ரேடியோவில் காந்தி நூற்றாண்டை ஒட்டி உள்ளத்தைப் பிழியும் குரலில் யாரோ 'ரகுபதி ராகவ' பிரர்த்தனை பாடுவது கார் புறப்படுகையில் அவருக்குக் கேட்டது. அந்தக் குரலில் ஒரு விநாடி நாச்சியப்பன் வசப்பட்டார். அடுத்த விநாடியில் திரும்பத் தெருவில் இறங்கிவிட்டது; வீதிச் சுவர்களில் எல்லாம் மகாத்மா காந்தியின் பெரிய பெரிய படங்கள். பெரிய பெரிய பானர்கள்.

'பொதுமக்கள் அனைவருக்கும் பகிர்ந்தளிக்கப்படாத எந்தச் சுகத்தையும் நான் ஏற்கமாட்டேன்.'

'சத்தியாகிரகத்தில் தோல்வி என்ற பேச்சே கிடையாது.'

'உழைக்காமல் இருப்பவனுக்கு உண்பதற்கு மட்டும் என்ன உரிமை இருக்கிறது?'

இவ்வாறெல்லாம் அந்தச் சிலைகளில் வாசகங்கள் எழுதியிருந்தன. அங்கங்கே பிளாட்பாரங்களிலும் தெருமுனைகளிலும் சிறுசிறு பந்தல் போட்டு அதில் காந்தி படம் வைத்து மாலையிட்டு ஊதுவத்தி கொளுத்தி வைத்து அலங்கரித்திருந்தார்கள். சட்டையில் எனாமல் காந்தி சின்னங்களை அணிந்து தெருக்களிலும் மேடைகளிலும் கூட்டம் கூட்டமாகப் பள்ளிக்கூடச் சிறுவர் சிறுமியர் போய்க்கொண்டிருந்தனர்.

கார் மவுண்ட்ரோடு திரும்பி மீனம்பாக்கத்துக்காகத் தெற்கு நோக்கி விரைந்தது. ஓர் சத்தியப் பெருந் திருவிழாவில் நகரமே குதூகலமாக இருக்கும்போது தாம் எங்கோ மயானத்தைத் தேடித் தனியே போய்க் கொண்டிருப்பது போல் ஒரு விநாடி அவருக்கு பிரமை உண்டாயிற்று.

'குழந்தைகள், இளைஞர்கள், ஆண்கள், பெண்கள், கிழவர்கள், நடுத்தர வயதினர் - எல்லாரும் கொண்டாடும்படி இந்தக் கிழவன் ஏதோ பெரிய விஷயங்களை இந்த நாட்டுக்குக் கொடுத்துவிட்டுப் போயிருக்கிறான்.

எதிரே வந்த சிறுவர் சிறுமியர் ஊர்வலத்தினால் கார் போவது தடைப்பட்டது. எங்கும் எல்லா இடத்திலும் காந்தி என்னும் மகா கங்கையில் மூழ்கித் திளைத்துக்கொண்டிருந்தது ஊர். தாம் மட்டும் ரூபாய் நோட்டுக்களின் துணையோடு எங்கோ எதையோ பொய்யான சுகம் தரும் பொருளைத் தேடி அநியாய வேகத்தில் ஓடிக் கொண்டிருப்பதுபோல உணர்ந்தார் அவர். ஊர்வலம் சாலையைக் கடக்கிறவரை

சில நிமிஷங்கள் கார் நிற்க வேண்டியதாயிற்று. அந்தக் காலை வேளையிலே அத்தனை சிறுவர் சிறுமியரின் முகங்களைக் காண்பதற்கு உற்சாகமாக இருந்தது; தம்.வீட்டில் இப்படி எந்தக் குழந்தையும் இல்லை என்ற நினைவு வந்தபோது நெடுமூச்சு வந்தது அவருக்கு. நெஞ்சை இதற்கு முன்பு எப்போதுமே பிசைந்திராத சில உணர்வுகள் பிசைவதாக இந்த விநாடியில் இன்று உணர்ந்தார் நாச்சியப்பன். விமான நிலையத்திற்குப் போய்ச்சேர நேரமாகி விட்டதே என்ற அவசரத்தில் முழு ஊர்வலமும் கடந்து நாலைந்து பையன்கள் மட்டும் பின்தங்கி வந்து கொண்டிருந்த நிலையில் ஒரு ஹார்ன் கொடுத்துவிட்டுக் காரைச் செலுத்தினான் டிரைவர். திடீரென்று கப்பலைப் போல பெரிய கார் எதிரே பாய்ந்து வரவும், அந்த நாலைந்து பையன்களும் இந்தப் பக்கமும் அந்தப் பக்கமுமாகச் சிதறி ஓடினர். அப்படி ஓடியபோது ஒரு பையன் பதற்றத்தில் தன் கையில் இருந்த காந்தி பொம்மை ஒன்றைக் கீழே போட்டுவிட்டுப் பொம்மை உடைந்த நஷ்டத்தில் ஓடவும் தோன்றாமல் நடுத்தெருவில் நின்று அப்படியே அழத் தொடங்கிவிட்டான். அழுது கொண்டே நடுரோட்டில் நின்ற சிறுவனை விலக்க டிரைவர் எவ்வளவோ ஹாரன் அடித்தும் பையனின் அழுகைதான் அதிகமாயிற்று.

"கொஞ்சம் நிறுத்து" என்று சொல்லி நாச்சியப்பனே கீழே இறங்கி அந்தப் பையனருகே சென்று, "இந்தா தம்பி! அழாதே! இந்த ரூபாயை வச்சுக்க. புதுக் காந்தி பொம்மை வாங்கிக்க. இப்ப வழி விடு. நீ ரொம்ப நல்ல பையனாச்சே!" என்று ஒரு புத்தம் புதிய ஐந்து ரூபாய் நோட்டை எடுத்து அவனிடம் நீட்டினார்.

"ஊவா வேணாம், பொம்மை தான் வேணும். உம் ஊம்" என்று பையன் விடாமல் அழவே அவருக்கு என்ன செய்வதென்று தெரியவில்லை. பையனுக்கு அப்பாவோ, அம்மாவோ, பெரியவர்கள் யாரும் அக்கம்பக்கத்தில் நிற்பதாகத் தெரியவில்லை. பின்னால் ஏராளமான கார்களும் பஸ்களும் லாரிகளும் சேர்ந்து ஒரே ஹாரன் முழக்கங்களாக ஒலித்துக் கொண்டிருந்தன. பையனோ அசையாமல் நடுரோட்டில் நின்று காந்தி பொம்மை தான் வேண்டுமென்று அடம் பிடித்தான். பின்னால் இருந்த எல்லா வண்டிகளிலிருந்தும் நாச்சியப்பனை நோக்கிப் பல பார்வைகள் முறைத்தன; கடுகடுத்தன. என்ன செய்வதென்றே தெரியவில்லை அவருக்கு. முதலில் வண்டிப் போக்குவரத்தை ஒழுங்கு செய்து கொள்ள எண்ணி, "பொம்மை வாங்கித் தருகிறேன்! என்னோட காரிலே வா" என்று நயமாகச் சொல்லிப் பையனைக் காரில் ஏற்றிக் கொண்டு மற்றக் கார்க்கு வழிவிட்டுத் தம் காரை ஒதுக்கி நிறுத்தச் சொன்னார். ஒதுக்கி நிறுத்தியபின்பும், "அஞ்சுரூபா போறாதுன்னா பத்து ரூபா தரேண்டா கண்ணு. ஒண்ணுக்கு ரெண்டு காந்தி பொம்மையா வாங்கிக்கோ" என்று மன்றாடிப் பார்த்தார். பையன் பொம்மை தான் வேண்டுமென்று பிடிவாதமாக அழுது அடம் பிடித்தான்.

விமானத்துக்கு நேரம் ஆகிவிட்டது. பையனை அப்படியே அழுதால் அழட்டும் என்று தெருவோரமாக இறக்கி விட்டு விமான நிலையத்துக்கு விரைந்துவிடலாம். அப்படிச் செய்ய எந்தத் தடையும் இல்லை. ஆனால் செய்ய மனம் வரவில்லை. அந்தப் பையனின் பால் வடியும் முகம் அவரை ஆட்கொண்டது. குழந்தையில்லாத மலட்டுத்

தந்தையான அவருக்கு ஓர் அழகான குழந்தையை ஏமாற்றுவதற்கும் துணிவில்லை. எத்தனையோ கெட்ட பழக்கங்கள் உள்ள பணக்காரராக இருந்தும் குடும்பத்தின் பரம்பரைப் பெருந் தன்மை அவரிடம் இருந்தது. யாரையும் அவர் ஏமாற்றியதில்லை. வார்த்தைகளைக் காப்பாற்றாமல் மோசம் செய்ததில்லை. ஆனால் பழக்கதோஷம் காரணமாக மதுவிலக்குப் பற்றி டாக்டருக்குக் கொடுத்த வாக்கை மட்டும் அவரால் காப்பாற்ற முடியவில்லை.

"சரி! வண்டியைத் திருப்பிப் பாண்டிபஜாரிலே ஏதாவது ஒரு பொம்மைக் கடைக்கு விடு. நவராத்திரி வர்ரதே. தெருவிலேயே பொம்மைக்கடை நிறைய இருக்கும்" என்று டிரைவருக்கு உத்தரவிட்டார் நாச்சியப்பன்.

"பாண்டிபஜார் போய் வர்ரதுக்குள்ளே பிளேன் போயிடுங்க!"

"பரவாயில்லே! என்ன செய்யிறது? பையன் கேட்கமாட்டேங்கிறானே!"

கார் திரும்பிப் பாண்டிபஜாருக்குப் போயிற்று. பிளாட்பாரத்தின் மேலேயே பெஞ்சுகள் போட்டுப் பொம்மைகளை அடுக்கியிருந்த ஒரு கடையருகே காரை நிறுத்தச் சொல்லி கீழே இறங்கினார் அவர். பொம்மைக் கடையைப் பார்த்தும் பையனும் அழுகையை நிறுத்தி விட்டு அவரோடு இறங்கினான்.

காந்தி ஊன்றுகோலுடன் நிற்பது போன்ற பொன்னிற வர்ணமடித்த பொம்மைகள் இரண்டே இரண்டுதான் கடையில் இருந்தன. ஒரு பொம்மை பன்னிரண்டு ரூபாய் என்று கடைக்காரன் விலை சொன்னான். இரண்டு பொம்மைகளுக்குமே பணம் கொடுத்து வாங்கிக் கொண்டார் அவர். ஒரு பொம்மையைப் பையன் கையில் கொடுத்தபோது அவன் அதை மிகவும் பத்திரமாக வைத்துக் கொள்கிறவனைப்போல் அந்தப் பொம்மையை நெஞ்சோடு அணைத்து வைத்துக் கொண்டிருந்தான். அவரும் பையனும் பொம்மைகளுடன் காரில் ஏறியதும், "எங்கே போக?" என்று கேட்டான் டிரைவர்.

"திரும்ப வீட்டுக்கே விடு."

கார் வீட்டை நோக்கித் திரும்பியது. கார் போர்ட்டிகோவில் நின்றதும் பையனை உள்ளே அழைத்துச் சென்றார் நாச்சியப்பன். உள்ளே இருந்த அவர் மனைவி வெளியே கார் ஓசை கேட்டு வந்தாள். நாச்சியப்பன் அவளை நோக்கி முகம் மலர்ந்தபடியே, "இந்தா இந்த வருஷத்திலிருந்து நம்ம வீட்டுக் கொலுவிலே இந்தப் பொம்மையையும் ராமர், கிருஷ்ணன், புத்தர், விவேகானந்தர் பொம்மையோட அதே வரிசையிலே சேர்த்து வை. இன்னிக்கி வரை இந்தப் பொம்மையை வைக்கும் யோக்கியதை இந்த வீட்டுக்கு இல்லாமல் இருந்தது; இனிமே அது வந்துடும்" என்று கூறித் தம்மிடம் இருந்த மற்றொரு பொம்மையை அவளிடம் கொடுத்தார்.

பிரிஜ்ஜை திறந்து பையனுக்கு ஓர் ஆப்பிள் எடுத்துக் கொடுத்த போது ஞாபகமாக அதில் புத்தம் புதிதாய் அடுக்கியிருந்த மதுப்பாட்டில்களை எல்லாம் ஜன்னல் வழியே வெளியில் எடுத்தெறிந்தார் நாச்சியப்பன்.

அந்த ஆச்சரியத்தைக் கண்குளிரப் பார்த்துக் கொண்டிருந்தாள் அவர் மனைவி. உடனே பள்ளிக்கூடத்துக்குப் போன் செய்து குமாரசாமிக் கிழவருக்கும் அந்த அதிசயத்தைத் தெரிவித்தாள் அவள். "அப்போ உங்க வீட்டிலேயும் காந்தி நூற்றாண்டு விழாவைக் கொண்டாடியாச்சுன்னு சொல்லு" என்று அவளுக்கு உற்சாகமாக மறுமொழி கூறினார் அவர்.

பையனை அவனுடைய வீட்டில் கொண்டு போய் விடுவதற்கு முன் தம்முடைய வாழ்க்கையில் புதிய அத்தியாயத்தை தொடங்கி வைத்த அவன் பெயர் என்னவென்று அறிந்துகொள்வதற்கு ஆவலுடன், "உன் பேரென்ன ராஜா?" என்று நாச்சியப்பன் கேட்டபோது கணீரென்ற குரலில், "என் பேரு காந்தி" என்று பையன் பதில் சொன்னான். நாச்சியப்பனுக்கு ஒருகணம் மெய்சிலிர்த்தது. "எங்கே இன்னொரு தரம் சொல்லு" என்று மறுபடியும் அந்தப் பெயரை அவனிடமே கேட்டார் அவர். கங்கையில் எத்தனை முறை மூழ்கினாலும் புண்ணியந்தானே?

**(கலைமகள், தீபாவளி மலர், 1969)**



## 108. பனையூர் என்றொரு பல்கலைக்கழகம்

**வி**மான நிலையத்துக்கு வந்திருந்த நண்பன் தான் அந்தக் கடிதத்தைச் சுகுமாரனிடம் கொடுத்தான். கடிதம் பெரியம்மா சொல்வதுபோல் பக்கத்து வீட்டுப் பெண்ணின் கையெழுத்தாலோ அல்லது வேறு யாருடைய கையெழுத்தாலோ எழுதப்பட்டிருந்தது. பெரியம்மா அவனைக் கண்டிப்பாக ஒரு நடை கிராமத்துக்கு வந்துவிட்டுப் போகச் சொல்லி எழுதியிருந்தாள்.

ஸ்டேட்ஸிலிருந்து பம்பாயில் வந்து இறங்கியதும் இறங்காததுமாக உடனே சென்னைக்குப் போய் அங்கிருந்து முந்நூறு மைலுக்கு மேல் ஓர் இரவு மேலும் ஒரு மணி நேரமும் இரயிலில் பயணம் செய்து கிராமத்துக்குப் போக வேண்டும் என்று நினைத்தபோதே சுகுமாரனுக்குச் சலிப்பாகவும் அலுப்பாகவும் இருந்தது. பெரியம்மா மிகவும் சாமர்த்தியமாக அவன் பம்பாய் வந்து இறங்கியதுமே நிச்சயமாக அவனைச் சந்திக்கிற ஓர் உறவுக்கார நண்பனின் விலாசத்துக்கு அந்தக் கடிதத்தை அனுப்பி அவனிடம் வந்ததுமே சேர்க்கச் சொல்லியிருந்தாள். நண்பன் கர்மசிரத்தையாக அந்தக் கடிதத்தை அவனிடம் சேர்த்ததோடு மட்டுமின்றிக் கிராமத்துக்குப் போய்விட்டு வரச் சொல்லி அவனை வற்புறுத்தவும் செய்தான்.

சலிப்பும் அலுப்பும் ஒருபுறம் இருக்கக் கிராமத்துக்குப் போய்ப் பெரியம்மாவைப் பார்க்க அவனுக்குக் கூச்சமாகவும் தயக்கமாகவும் இருந்தது. எதற்காக அழைத்திருப்பாள், என்ன கேட்பாள் என்பதையும் இங்கிருந்தே அவன் அனுமானிக்க முடிந்தது. ஜூலியோடு கிராமத்துக்குப் போவதா, தனியாகப் போவதா என்பதும் ஒரு சிந்தனைக்குரிய பிரச்னையாயிருந்தது. ஒருவேளை ஜூலியைப் பற்றிப் பேசுவதற்கும், கோபித்துக்கொள்வதற்குமே பெரியம்மா கூப்பிட்டிருந்தால், ஜூலியோடு அவள் முன் கிராமத்தில் போய் நிற்பது நன்றாயிராது. பெரியம்மாவுக்கும் அது எரிச்சலூட்டுவது போல் இருக்கும். அவன் யோசித்தான். மேற்படிப்புக்காகப் போன இடத்தில் அமெரிக்கப் பல்கலைக்கழகம் ஒன்றில் தங்கிப் படித்துக் கொண்டிருக்கும்போது ஜூலியை அவன் காதலித்துத் திருமணம் புரிந்து கொள்ள நேர்ந்திருந்தது. இந்த விஷயம் முதலில் பம்பாயிலிருக்கும் தம் உறவினர்களுக்கும், நண்பர்களுக்கும் மெல்லத் தெரிந்து அப்புறம் பராபரியமாகக் கிராமத்தில் இருந்த பெரியம்மாவுக்கும் எட்டியிருக்க வேண்டும் என்பதை அவனால் சுலபமாக அனுமானிக்க முடிந்தது.

"வயதான காலத்தில் உன் முகத்தை ஒரு தடவை பார்க்கணும்னு ஆசைப்பட்டு வரச்சொல்லி எழுதியிருக்கா. போயிட்டுத்தான் வாயேன். நீ வெளிநாடு போய்ப் படிக்கத் தேவையான பண உதவி பண்ணினதுக்காகவும் நீ உங்க பெரியம்மாவுக்கு நன்றிக் கடன் பட்டிருக்கே..." என்றான் நண்பன்.

ஜூலியைத் தனியே பம்பாயில் விட்டு விட்டுப் போவதா அல்லது தன்னோடு சென்னை வரை அழைத்துச் சென்றுவிட்டு அங்கேயே கன்னிமரா ஹோட்டலிலாவது வேறெங்காவது தங்கச் செய்த பின் தான் மட்டும் கிராமத்துக்குப் போய்ப் பெரியம்மாவைப் பார்த்துவிட்டுத் திரும்புவதா என்று சுகுமாரன் சிந்தித்தான். இன்னும் சில வாரங்களில் டில்லியிலோ, வேறு ஏதாவது வட இந்திய மாநிலத் தலைநகரங்களிலுள்ள ஒரு பல்கலைக்கழகத்திலோ ஸ்பேஸ் டெக்னாலஜி - விண்வெளி சம்பந்தமான துறை ஒன்றின் தலைமைப் பதவியை அவன் ஏற்க வேண்டியிருக்கும். கிராமத்துக்கு போய் பெரியம்மாவைப் பார்த்துவிட்டுத் திரும்புவதாயிருந்தால் அதற்கு முன்பே போய்விட்டுத் திரும்பினால்தான் உண்டு.

நிறைய நிலபுலன் சொத்துடன் பால்யத்திலேயே விதவையாகி விட்ட அந்தப் பெரியம்மாதான் - தாய் தந்தையற்று அநாதையாகிவிட்ட அவனைச் சிறுவயதிலேயே எடுத்து வளர்த்துப் படிக்க வைத்து ஆளாக்கியிருந்தாள். கல்லூரிப் படிப்பு வரை அவனுடைய செலவுகளைக் கவனித்துக் கொண்டதோடு மட்டுமின்றிப் படிப்பு முடிந்ததும் அவன் சில ஆண்டுகள் விரிவுரையாளராக இருந்தபின் மேற்படிப்புக்காக மேல்நாடு புறப்பட்டபோது அதற்குப் பணஉதவி செய்ததும் பெரியம்மாதான். இவற்றையெல்லாம் நினைத்தபோது கிராமத்துக்குப் போய் பெரியம்மாவைப் பார்க்காமல் தட்டிக் கழிப்பது நியாயமில்லை என்றே தோன்றியது.

மேல்நாட்டிலிருந்து வந்து இறங்கிய தினத்தன்று மேல் நாட்டுப் பாணி வாழ்வில் பழகிய ஒரு தென்னிந்திய மலையாளி சிநேகிதனின் குடும்பத்தோடு அவனும் ஜூலியும் பம்பாயில் தங்கினர். ஓர் இடத்துக்குப் போகும் முன்னோ, தங்கும் முன்னோ அந்த இடம் ஜூலிக்கு அசௌகரியம் இல்லாமல் இருக்குமா என்பதையும் இப்போது அவன் நினைத்துப் பார்த்தாக வேண்டியிருந்தது.

"சென்னை வரை விமானத்தில் போய் அப்புறம் கிராமத்துக்கு இரயிலில் போய்த் திரும்பிவிட்டு மறுபடியும் சென்னையிலிருந்து பம்பாய்க்கு விமானத்திலேயே திரும்பினீர்களாயின் நாலைந்து நாட்களை மீதப்படுத்தலாம். ஜூலியைப் பற்றிக் கவலை வேண்டாம். நீங்கள் திரும்பி வருகிறவரை அவள் இங்கேயே எங்கள் குடும்பத்தோடு ஒரு குறைவும் இன்றி இருக்கலாம்" என்றார் சிநேகிதர்.

சுகுமாரன் இந்தப் பிரயாண விஷயமாக ஜூலியைக் கலந்தாலோசித்தபோது, 'தன்னைத் தவிர்த்துவிட்டு அவன் தனியே பெரியம்மாவைப் பார்க்கப் போக வேண்டும்' என்று கூறியதை மட்டும் அவளால் புரிந்து கொள்ள முடியவில்லை. "ஏன்? உங்கள் பெரியம்மாவையும், ஓர்அமைதி நிறைந்த இந்தியக் கிராமத்தையும் காண நானும் உங்களுடன் கூட வருவதில் என்ன தவறு?" என்று கேட்டாள் அவள். அவளுக்கு விளக்குவது அவனுக்குத் தர்மசங்கடமாயிருந்தது.

"நீ நினைப்பதுபோல் எங்கள் இந்தியக் கிராமங்களில் அமைதியும் அழகும் மட்டும் இல்லை. வம்பு பேசுவதும் நாகரிகக் குறைவான வார்த்தைகளால் நேருக்கு நேர் விசாரிப்பதும், புதுமையை அங்கீகரிக்கவும் ஏற்கவும் தயங்குகிற கிணற்றுத் தவளை

மனப்பான்மையுமே இன்னும் எங்கள் கிராமங்களில் இருக்கின்றன தாராள மனப்பான்மை குறைவு. புறம்பேசுதல் அதிகம். ஆழமான விருப்பு வெறுப்புக்கள் நிறைய இருக்கும்."

இப்படி அவன் கூறியதை அந்த அமெரிக்க யுவதி உடன் நம்பிவிடவில்லை. "நீங்கள் அநாவசியமாக மிகைப்படுத்திச் சொல்கிறீர்களோ என்று எனக்குச் சந்தேகமாக இருக்கிறது" என்றுதான் சிரித்தபடி அவள் அவனிடம் கூறினாள். அவளை ஒருவாறு பம்பாயில் இருக்கும்படி சமாதானப்படுத்தி ஒப்புக் கொள்ளச் செய்தபின்பே மறுநாள் காலை அவன் சென்னைக்கு விமானம் ஏறினான்.

கிராமத்தில் எந்தக் கேள்வியை அவன் அநாகரிகமாக எதிர்பார்த்தானோ, அதைப் பம்பாயிலும், சென்னையிலுமே பலர் அவனைக் கேட்டுவிட்டார்கள்.

பம்பாயில் அவன் வந்து இறங்கியபோதும், ஜூலி அருகிலிருந்தபோதும் அவனைக் கேட்கத் தயங்கிய கேள்விகளையெல்லாம் தனியே அவனிடம் கேட்டே விட்டார்கள். கொச்சையாகவும், பச்சையாகவுமே கூடக் கேட்டார்கள்.

"எங்கேடா பிடிச்சே இந்த வாளிப்பை?" என்றான் ஒரு சம வயது நண்பன்.

"அவள் உங்கிட்ட மயங்கினாளோ நீ அவள் கிட்ட மயங்கினியோ?" என்றான் இன்னொரு குறும்புக்காரச் சிநேகிதன்.

"முதல் குழந்தைக்கு என்ன பெயர் வைக்கப் போறே? அவ சொல்ற பேரா? நீ நினைக்கிற பேரா?" என்றார் ஒரு நடுத்தர வயது நண்பர்.

வேடிக்கையாகவும் சகஜமாகவும் இந்தக் கேள்விகளை அவன் எடுத்துக் கொண்டாலும் ஒரு தனிமனிதனின் சொந்த விஷயம் - அதாவது - பிரைவேட் அஃபேர் பற்றிப் படித்த நண்பர்கள்கூட இந்தியாவில் இவ்வளவு அலட்டிக் கொள்வது ஏன் என்றுதான் அவனுக்குப் புரியவில்லை. இழுத்து நிறுத்தி வைத்துச் சொல்லத் தொடங்கினாலும் அடுத்தவனுடைய சொந்த விஷயத்தைப் பற்றி அலட்டிக் கொள்ளாத நாகரிகமும் பண்பும் உள்ள நாடுகளில் சில ஆண்டுகள் வாழ்ந்துவிட்டுத் திரும்பிய பின் இங்கே படித்த இந்தியன் கூடப் பின்தங்கியிருப்பதாகவே தான் தோன்றியது சுகுமாரனுக்கு.

முதலில் ஸ்பேஸ் டெக்னாலஜி கற்றுக் கொடுப்பதற்கு முன் காசியிலிருந்து கன்னியாகுமரி வரை உள்ள இந்தியர்களுக்கு 'பிளீஸிங் மேனர்ஸ்' கற்றுக் கொடுப்பதற்குப் பலநூறு பல்கலைக்கழகங்களை உடனே திறக்க வேண்டும்போல் சுகுமாரன் எண்ணினான்.

'ஒன்ஸ் மேரேஜ் இஸ் எ பிரைவேட் அஃபேர்' என்று சிரித்துக்கொண்டே கூறும் பல வெளிநாட்டு நண்பர்கள் அவன் நினைவுக்கு வந்தனர்.

சென்னை விமான நிலையத்தில் அவனைச் சந்தித்த உறவினர் சுற்றுமுற்றும் பார்த்துவிட்டு அவன் செய்த மிகப் பெரிய திருட்டு ஒன்றுக்காக அவனை விசாரிப்பது போன்ற குரலில், "ஏண்டா ஒரு அமெரிக்கன் லேடியைக் கூடவே கூட்டிண்டு

வந்திருக்கியாமே?" என்று கேட்டபோது அவனுக்குத் தாங்க முடியாத எரிச்சல் மூண்டது. அவர் விசாரித்த விதம் அப்படி இருந்தது. அவன் ஜூலியைத் திருமணம் செய்து மனைவியாக அழைத்துக்கொண்டு வந்ததைக்கூட ஒப்புக் கொள்ளாமல் 'கூடவே கூட்டிண்டு வந்திருக்கியாமே?' என்று எதையோ எப்படியோ கேட்பதுபோல் அவர் விசாரித்ததைக் கண்டு,

'கடவுளே! என் நாட்டவருக்கு முதலில் நாகரிகத்தைக் கற்றுக் கொடு' என்று வாய்விட்டுக் கதற வேண்டும் போலிருந்தது அவனுக்கு. புகழ் வாய்ந்த பழமையும் குழப்பமான தற்காலமும், புரியாத எதிர்காலமும் உள்ள ஒரு நாட்டின் பண்பாட்டு வறட்சியைப் பொறுக்க முடியாமல் தவித்தான் அவன்.

சென்னையில் அவன் கிராமத்துக்கு இரயிலேறுவதற்கு முன் தங்கியிருந்த அரை நாளில் எதிர்கொள்ள முடியாததும் அவன் பதில் கூறத் தர்மசங்கடப்படுவதுமான உரையாடல்களை இப்படி நிறையக் கேட்டு விட்டான்.

சென்னையில் அவன் தங்கியிருந்த வீட்டிலே அவன் உட்கார்ந்திருந்த அறையின் ஜன்னலருகே அந்த வீட்டின் படித்த நாட்டுப் பெண்கள் இருவரே கீழ்வருமாறு உரையாடியதை அவன் கேட்க நேர்ந்தது:

"ஜூலியோ, கோலியோ, யாரோ ஒரு பெண்ணை இழுத்துண்டு வந்துட்டானாமே?"

"ஆமா! அவளைப் பெரியம்மாவுக்குப் பயந்து பம்பாயிலேயே விட்டுட்டு வந்திருக்கானாம். இவனைத் திட்டித் தீர்க்கறதுக்காகப் பெரியம்மா கிராமத்துக்கு வரச் சொல்லியிருக்களாம். அதான் வந்திருக்கிறான். இன்னி ராத்திரி ரயில்லே போறான் பனையூருக்கு..."

"சொத்தெல்லாம் செலவழிச்சுப் படிக்க வச்சதுக்குக் கிழவிக்கு இதுவும் வேணும்! இன்னமும் வேணும்! பாவம் அவ யாரோ கோமுவையோ ஜானுவையோ ஜாதகத்தைத் துருவித் துருவிப் பார்த்துத் தயாரா இவனுக்காக வைச்சுண்டிருந்திருப்பா. இப்போ இப்படிக் கேள்விப்பட்டாக் கிழவிக்கு ஏமாத்தமா இருக்காதா பின்னே?"

இந்த உரையாடலைக் கேட்க நேர்ந்ததும் பனையூருக்குப் போய்ப் பெரியம் மாவைப் பார்க்காமலே திரும்பிவிடலாமா என்றுகூடத் தோன்றியது அவனுக்கு. தெற்கே போகப்போகக் கிணற்றுத் தவளை மனப்பான்மை அதிகமாகிறதோ என்றும் அவனுக்குப் பயமாயிருந்தது. யாரோ, "இங்கே ஏன் வந்தாய்? வந்த வழியே திரும்பி ஓடிப்போய்விடு" என்று பிடித்துத் துரத்துவதுபோல் இருந்தன இந்தப் பேச்சுக்கள். 'ஒருபுறம் உலகளாவிய பரந்த மனப்பான்மையைப் பற்றிய மேடைப் பேச்சுக்கள், மறுபுறம் சாதாரண விஷயங்களைக்கூட சகஜ பாவத்தோடு ஏற்காத குறுகலான புத்தி. இந்த இரண்டும் தான் இன்றைய இந்தியாவாக இருக்கிறதோ' என்றெண்ணி அஞ்சினான் அவன். இன்னும் பனையூருக்குப் போனால் பெரியம்மா எதை எதையெல்லாம் தன்னைக் கேட்டு வயிற்றெரிச்சலைக் கொட்டிக் கொள்ளப்

போகிறாளோ என்று தயங்கினாலும் அவன் பனையூருக்குப் போவதை நிறுத்தவில்லை. ஒரே ஒருநாள் தானே?பொறுத்துக் கொள்ளலாம் என்று புறப்பட்டான்.

ரிஸர்வ் செய்திருந்தபடியே அன்று இரவே பனையூரில் நிற்கிற பாஸஞ்சர் இரயிலாகத் தேடிப் பிடித்து ஏறிப் புறப்பட்டிருந்தான் சுகுமாரன்.

பனையூர் இரயில்வே ஸ்டேஷனிலிருந்து கிராமத்துக்குள்ளே போக ஆற்றோரமாக மூன்று மைல் நடந்து வேறு ஆக வேண்டும். காலை ஏழு மணிக்குப் பனையூர் வந்து சேர வேண்டிய பாஸஞ்சர் வண்டி ஒரு மணி முப்பத்தைந்து நிமிஷம் லேட்டாக எட்டு முப்பத்தைந்துக்கு வந்து சேர்ந்தது.

இரயிலிலிருந்து இறங்கி அவன் நடந்து கிராமத்துக்குள் போய்ச் சேர்ந்தபோது காலை ஒன்பதரை மணி ஆகிவிட்டது.

அவன் வீட்டுக்குள் நுழைகிறபோது பெரியம்மா காப்பி போட்டுக் கொண்டிருந்தாள்.

"வா..."

"............"

"சௌக்கியமா? சித்தே இரு! முதல் டிகாஷன் இறங்கியிருக்கு... நல்ல காப்பியாத் தரேன், சாப்பிடு..." வெகு தூரத்திலிருந்து அமெரிக்காவிலிருந்து அவளுக்குப் பிடிக்காத எதையெதையோ பண்ணிக்கொண்டு வந்துவிட்டவனை வரவேற்பதுபோல் இல்லாமல் பக்கத்து ஊரிலிருந்து வருகிறவனை வரவேற்பது போல் சுகுமாரனுக்கு இந்த வார்த்தைகள் இயல்பாகவே இருந்தன. அவனும் தயங்கித் தயங்கிப் பெரியம்மாவைச் சௌக்கியம் விசாரித்தான்.

காப்பியை அவனிடம் நீட்டும்போது, "நீ கொஞ்சம் வெளுத்திருக்கே" என்றாள் அவள். அவன் புன்முறுவல் பூத்தான்.

"குளிர் தேசமோல்லியோ!" என்று அதற்குக் காரணம்போல மேலும் இரண்டு வார்த்தையையும் அவளே சேர்த்துச் சொல்லிக் கொண்டாள்.

இந்த அமைதி, இந்தப் பதவாகம், இந்த நறுவிசு எல்லாம் அவள் எந்தக் கணத்திலும் எவ்வளவு வேகமாகவும், தன்மேல் போர் தொடுக்கத் தொடங்கலாம் என்பதற்கு முன்னடையாளங்கள் போல் அவனுக்குத் தோன்றின. ஆனால் உடனே அப்படி எதுவும் நடக்கக் காணோம். பெரியம்மா வீட்டுப் பண்ணையாளைக் கூப்பிட்டு, "தோட்டத்திலே நல்ல பிஞ்சுக் கத்திரிக்காயா இருந்தாப் பறிச்சிண்டு வா! வந்திருக்கிறவருக்குக் கத்தரிக்காய் எண்ணெய் வதக்கல்னா ரொம்பப் பிடிக்கும்" என்று அவன் முன்னேயே உத்தரவிட்டாள்.

இப்போதில்லாவிட்டாலும் பகல் சாப்பாட்டின்போது பெரியம்மா அந்தச் சண்டையை ஆரம்பிக்கலாம் என்று தோன்றியது அவனுக்கு. இரயிலில் தூக்கம் இல்லாததால் நன்றாகத் தூங்கிவிட்டுப் பகல் பன்னிரண்டு மணிக்குமேல் தான்அவன் எழுந்திருந்தான். குளித்து உடை மாற்றிக் கொண்டு தயாரானபோது பெரியம்மா வந்து

சாப்பிடக் கூப்பிட்டாள். சாப்பாடு எல்லாம் ரொம்பப் பிரியமாகக் கேட்டுக் கேட்டுத்தான் பரிமாறினாள். அதில் ஒன்றும் குறைவில்லை.

பெரியம்மாவின் அமைதி அவனுக்கு ஆச்சரியத்தையே அளித்தது. அவளிடமிருந்து இரண்டு விதமான தாக்குதல்களைஅவன் எதிர்பார்த்தான். ஒன்று ஜூலி விஷயத்தை நேரடியாகக் குறிப்பிட்டு, 'ஏன்டா, இப்படித் தலையெடுத்தே நீ?' என்று திட்டுவாள். அல்லது பெண்களுக்கே உரிய சாமர்த்தியத்தோடு, 'இங்கே நல்ல பொண்ணாகப் பார்த்திருக்கேன்டா! ஜாதகமெல்லாம் பிரமாதமாப் பொருந்தியிருக்கு. பண்ணிக்கிறியா?' என்று ஆரம்பிப்பாள் என்பதாக அவன் எதிர்பார்த்தான்.

ஆனால் இரண்டுமே நடக்கவில்லை, ரொம்ப அதிசயமாக வழக்கமில்லாத வழக்கமாகச் சாப்பிட்டு முடித்ததும் வெற்றிலை, பாக்குச் சுண்ணாம்போடு ஒரு தட்டை அவன் முன் நகர்த்தினாள் பெரியம்மா. பிரம்மச்சாரிகள் வெற்றிலை பாக்குப் போட்டுக் கொள்ளக்கூடாது என்ற அழுத்தமான கொள்கையை உடைய பெரியம்மா தனக்குத் தாம்பூலம் வைத்துக் கொடுத்தது, 'நீ செய்தது எனக்குத் தெரியும்டா திருடா' என்பதுபோல் குத்திக் காட்டுவதாகத் தோன்றியது, சுகுமாரனுக்கு. அவன் தாம்பூலம் போட்டுக் கொண்டான். மறுபடியும் ஓர் இரண்டு மூன்று மணி நேரம் தூக்கம் போட்டான். விழித்து எழுந்திருக்கும்போது மாலை ஐந்துமணி. அவனுக்கு மிகவும் பிடித்தமான ரவா கேசரி, வெங்காய அடை, (வெண்ணையுடன்) சிற்றுண்டி தயாராக இருந்தது.

ஒருவேளை டிபனைக் கொடுக்கும்போது பெரியம்மா அந்தப் பேச்சை ஆரம்பிக்கலாமோ என்று பயந்தான் அவன்.

ஊஹூம்! பெரியம்மா அப்போதும் தன் போரைத் தொடங்கவில்லை.

"இன்னும் ரெண்டு அடை சாப்பிடுடா! உனக்காகச் சிரமப்பட்டுப் பண்ணியிருக்கேன். நாக்குச் செத்துப் போய் வந்திருப்பே" என்றாள். அவன் தான் அன்றே புறப்பட்டுப் போக இருப்பதை அவளிடம் சொன்னான்.

"சாயங்காலம் ஏழு மணி பாஸஞ்சருக்குத் திரும்பறேன், பெரியம்மா! வேலை ஆர்டர் இன்னும் கிடைக்கலே. டெல்லியிலேயோ, கல்கத்தாவிலேயோ, எங்கே கிடைக்கும்னும் இன்னும் தெரியலே... ஜாயின் பண்ணினப்புறம் சாவகாசமா இன்னொரு தரம் வரேன்..."

"மகராஜனாப் போயிட்டு வா! ஒண்ணுமில்லே, உன்னைப் பார்க்கணும்போல இருந்தது. என்னமோ ஓர் ஆசையிலே மனசு கிடந்து அடிச்சுண்டுது. அதான் வரச் சொல்லிக் கடிதாசு எழுதினேன். மேல்நாட்டிலேர்ந்து வந்து இறங்கினதும் இறங்காததுமா உன்னைக் கஷ்டப்படுத்திட்டேனோ என்னமோ, நான் பழைய காலத்து மனுஷி! எனக்கு ஒரு நாகரிகமும் தெரியாதுடா... நீ என் கடிதாசை மதிச்சு வருவியோ வரமாட்டியோன்னு கூட நினைச்சேன்! வந்துட்டே! அந்தமட்டிலே எனக்கு ரொம்ப சந்தோஷம்..."

அவனுக்குக் குற்றமுள்ள நெஞ்சு குறுகுறுப்பது போல் குறுகுறுத்தது. பெரியம்மா தன் கன்னத்தில் இரண்டு அறை ஓங்கி அறைந்திருந்தால்கூட அவனுக்குத் திருப்தியாக இருந்திருக்கும் போலிருந்தது. அவள் எதையுமே கேட்காதது அவனுக்கு என்னவோ போல் இருந்தது. மனம் தவித்தது.

ஆயிற்று. இரயிலுக்குப் புறப்பட வேண்டிய நேரமும் நெருங்கிவிட்டது. "சின்னையா! வண்டியைக் கட்டுடா. ஐயாவை ஸ்டேஷனுக்குக் கொண்டு போய் விட்டுட்டு வரணும்" என்று பெரியம்மா வேலைக்காரனுக்கு இரைந்த குரலில் உத்தரவு போட்டுக் கொண்டிருந்தாள். "வழியிலே கண்டதை வாங்கிச் சாப்பிட்டு வயத்தைக் கெடுத்துக்காதே! இந்தா, இதை வச்சுக்கோ" என்று இரவு உணவாக இரயிலில் சாப்பிடுவதற்கும் ஒரு பொட்டலம் கொடுத்தாள் பெரியம்மா. அதைவிடப் பெரிய ஆச்சரியம் வண்டியில் பெரியம்மாவும் ஏறிக் கொண்டு ஸ்டேஷன் வரை அவனோடு வழியனுப்பப் புறப்பட்டது தான்.

அவன் கேட்டான். "நீ ஏன் சிரமப்படணும், பெரியம்மா! நான் போயிக்க மாட்டேனோ? நீ ரயிலடிக்கு வழியனுப்ப வரணுமா என்ன?"

"இருக்கட்டும்டா! இதிலே என்ன தப்பு? நீ அத்தனை தூரத்திலிருந்து அவ்வளவு பெரிய படிப்புப் படிச்சிட்டு வந்தவன் என் கடிதாசை மதிச்சு இங்கே வந்திருக்கே! நான் உன்னை வழியனுப்பக்கூட ரயிலடி வரை வரக்கூடாதா என்ன?"

ஒன்றும் எழுதப் படிக்கத் தெரியாத அந்தப் பெரியம்மாவின் நாட்டுப்புறப் பெருந்தன்மையை இதயம் நிறையத் தாங்கி ஏற்று மரியாதை செய்ய வேண்டும் போலிருந்தது அவனுக்கு. ஆனால் பம்பாய், சென்னையில் படித்த உறவினர்கள், ஐ.ஏ.எஸ். உறவினர்கள் நாகரிகத்தின் உச்சாணிக் கொம்பில் இருப்பதாக நினைக்கும் நகர நண்பர்கள் எல்லாரும் கேட்டதுபோல் ஒரு கொச்சையான அல்லது பச்சையான கேள்வியை இன்னும் பெரியம்மா ஏன் தன்னிடம் கேட்கவில்லை என்பதைத்தான் உள்ளூற எண்ணி எண்ணி வியந்து கொண்டிருந்தான் அவன். ஸ்டேஷன் வந்தது. அவன் வண்டியிலிருந்து இறங்கி டிக்கெட் வாங்கினான். பெரியம்மா இறங்கி அவனுடைய பைகளில் ஒன்றைக் கையில் எடுத்துக்கொண்டு அவனுடன் உள்ளே வந்தாள். வெறிச்சோடிக் கிடந்த கிராமாந்தர ஸ்டேஷனின் உட்புறம் வேப்ப மரத்தடியில் அவர்கள் இரயிலை எதிர்பார்த்து நின்று கொண்டிருந்தனர்.

அந்தக் கடைசி நிமிஷத்திலாவது பெரியம்மா, 'ஏண்டா, எங்களுக்கெல்லாம் தெரியாமே அமெரிக்காவிலேயே ஒரு பொண்ணைக் கலியாணம் பண்ணிட்டு வந்திருக்கியாமே?' என்று பச்சையாகத் தன்னைக் கேட்டு விட்டால் கூட நல்லது போல் தோன்றியது சுகுமாரனுக்கு. அவள் அப்படிக் கேட்காவிட்டால் குற்ற உணர்வில் இங்கே தன் நெஞ்சே வெடித்துவிடும் போலிருந்தது. ஆனால் அவள் கேட்கவில்லை. தொலைவில் இரயில் புகையும் தெரியத் தொடங்கிவிட்டது.

"எங்கேயிருந்தாலும் உடம்பைக் கவனிச்சுக்கோ...! எண்ணெய்க் குளி தவறாதே..."

பெரியம்மா சகஜமாக விடை கொடுக்கும்போது சொல்லும் வார்த்தைகளைச் சொல்லத் தொடங்கினாள். சொல்லும்போது அவளுக்குக் கண்கலங்கிவிட்டது.

புறப்படுவதற்குள் தானாகவே அதைச் சொல்லாத பட்சத்தில் பெரியம்மா அதைப் பற்றி கேட்கவே மாட்டாள் என்று தோன்றிவிட்டது அவனுக்கு. சொல்லாமல் போனால் அவன் நெஞ்சே வெந்துவிடும்போல் இருந்தது. இரயிலும் அருகே தென்பட்டது.

"பெரியம்மா! உங்கிட்ட ஒரு விஷயம்... வந்து..."

"என்னது?... சொல்லேன்... எங்கிட்ட என்னடா வெட்கம் வேண்டிக் கிடக்கு?"

"நான் அமெரிக்காவிலே படிக்கிறப்பவே ஜூலின்னு ஒரு பெண்ணைக் காதலிச்சுக் கலியாணம் பண்ணிண்டு வந்திருக்கேன். அவளும் இங்கே என்னோட வந்திருக்கா. நீ கோபிச்சுப்பியோன்னு நான் இங்கே அவளை அழைச்சிண்டு வரலை. பம்பாயிலேயே விட்டுவிட்டு வந்திருக்கேன்."

"தெரியும்டா! நானும் கேள்விப்பட்டேன். அது உன் சொந்த விஷயம்; நீயாச் சொல்லாதபோது உன்னை எப்படி அதைக் கேக்கறதுன்னு தான் நான் அதைக் கேக்கலை..."

"நீ கோபிச்சிப்பியோன்னு-நான் சொல்லலை..."

"நீ தப்பா நினைச்சிப்பியோன்னு தான் நான் கேட்கலை..."

"நீ இப்படி இருப்பேன்னு தெரிஞ்சிருந்தா அவளையும் என்னோட கூட்டிண்டு வந்திருப்பேன் பெரியம்மா!"

"கூட்டிண்டு வராதது உன் தப்புதான். வந்திருந்தா நானும் சந்தோஷப் பட்டிருப்பேண்டா."

சுகுமாரனுக்குத் தன் செவிகளையே நம்ப முடியவில்லை. 'பெரியம்மா எந்தப் பல்கலைக்கழகத்தில் நாகரிகம் படித்தாள்? அவளுக்கு இப்படி இருக்க யார் கற்பித்தார்கள்?' என்று எண்ணி எண்ணித் தன் மனம் கொள்ளாமல் வியப்பதைத் தவிர அவனால் அவளிடம் ஒன்றும் பதில் பேச முடியவில்லை. இரயில் வந்து புகையை கக்கிக்கொண்டு பெருமூச்சு விட்டபடி நின்றது. அவன் முதல் வகுப்புப் பெட்டியைத் தேடி ஏறிக் கொண்டான். பிளாட்பாரத்து வேப்ப மரத்தடியில் கண்கலங்க நிற்கும் பெரியம்மாவைப் பார்த்துக் கையை ஆட்டினான்.

கையைப் பதிலுக்கு ஆட்டிவிட்டு வெள்ளைப்புடவைத் தலைப்பால் கண்ணீரைத் துடைத்துக் கொள்வது தெரிந்தது. இரயில் சிறிது தொலைவு சென்றதும் அவன் வளைவிலிருந்து திரும்பிப் பார்த்தபோது, அட்டையில் கட்டியது போன்ற சிறிய ஸ்டேஷன் கட்டமும் வேப்பமரமும் வில்வண்டியும் பெரியம்மாவும் ஒரு தெளிவான படத்தில் தெரிவது போல் தெரிந்தார்கள்.

*இந்த உலகிலேயே மிகவும் நாகரிகமான ஒரு பெரிய மனுஷியைப் பார்ப்பது போல பெரியம்மாவின் உருவத்தைப் பயபக்தியோடு திரும்பிப் பார்த்தான் அவன். பின்பு மெல்லத் தனக்குத் தானே சொல்லிக் கொண்டான் :-*

*'இந்தக் கிராமத்தில் ஒரு பல்கலைக்கழகம் இருந்தால் நான் இங்கேயே வேலைக்கு வந்துவிடலாம். ஆனால்?'*

*'வேண்டாம்! வேண்டவே வேண்டாம்! இதன் நாகரிகமும் அமைதியும் சீரழியும்படி இங்கு ஒரு பல்கலைக்கழகம் வேண்டாம். இது இப்படியே இருக்கட்டும்.'*

*பனையூருக்கு எதற்குத் தனியான ஒரு பல்கலைக்கழகம்?*

*பனையூரே ஒரு பல்கலைக்கழகம் தானே!*

*அவன் கண்களில் மெல்ல நீர் கரைந்து பார்வை உழன்றது. இரயிலின் வேகம் அதிகமாயிருந்தது.*

**(கல்கி, தீபாவளி மலர், 1970)**



## 109. அமெரிக்காவிலிருந்து ஒரு பேராசிரியர்

டில்லியில் மத்திய அரசாங்க உதவிக் காரியதரிசியாக உத்தியோகம் பார்க்கும் தன் மைத்துனன் கே.கிருஷ்ணமூர்த்தி என்னும் கே.கே.மூர்த்தியிடமிருந்து அன்று பகல் வேளையில் இரண்டாவது டெலிவரியில் கிடைத்த கடிதத்தை மற்ற எல்லாக் கடிதங்களையும் பிரித்துப் படித்த பின் கடைசியாகத் தான் பிரித்தார் கைலாசநாதன். காரணம்? பரஸ்பரம் க்ஷேமலாப விசாரணையைத் தவிர அதில் வேறு எதுவும் முக்கிய சமாசாரம் இராது என்ற அனுமானம் தான்.

அன்று வந்திருந்த கடிதத்தைப் பொறுத்தவரை அவருடைய அனுமானம் பொய்யாய்ப் போய்விட்டது. மைத்துனன் மூர்த்தி தன் பொறுப்பில் டில்லியிலிருந்து கிராமத்துக்கு அனுப்பி வைக்கப் போகிற ஒரு முக்கியமான விருந்தாளியைப் பற்றி கடிதத்தில் எழுதியிருந்தான்.

"நான் அமெரிக்கா போயிருந்தபோது எனக்கு மிகவும் உதவியாயிருந்தவரும் ஆந்த்ரபாலஜிப் பேராசிரியருமான மிஸ்டர் ஜான்ஸன் தன் மனைவியுடன் இப்போது இந்நாட்டில் மூன்று மாதம் சுற்றுப்பயணம் மேற்கொண்டு வந்திருக்கிறார். தென்னிந்திய கிராம வாழ்க்கையை ஆராய்ந்து ஒரு புத்தகம் எழுதப் போகிறார் அவர். கிராமத்தின் பழமையான வழக்கங்கள், பண்டிகைகள், ஆடல் பாடல்கள், மக்கள் இயல்பு எல்லாம் அவருக்குத் தெரிய வேண்டும். உங்களுக்குத் தெரிந்த கிராமம் ஒன்றை எனக்குச் சொல்லுங்கள்' என்று என்னைக் கேட்டார் அவர். நீங்கள் வேண்டிய ஒத்தாசையைச் செய்வீர்கள் என்ற நம்பிக்கையில் நான் நம் அல்லிப்பட்டி கிராமத்தை அவருக்கு சிபாரிசு செய்திருக்கிறேன். உங்கள் சாதகமான பதிலை உடன் தந்தி மூலம் எனக்குத் தெரிவிக்கவும்" என்று எழுதியிருந்தான் மூர்த்தி.

தாமதமில்லாமல் உடனே பதில் தந்தியைக் கொடுத்தார் கைலாசநாதன். இதில் அவருக்கு எந்த சிரமமும் இல்லை. அல்லிப்பட்டியின் எளிய சூழ்நிலையில் ஓர் அந்நிய நாட்டு விருந்தாளியை வாரக் கணக்கில் தங்க வைத்துக் கொள்வது எப்படி என்ற யோசனை தான் கொஞ்சம் மலைக்கச் செய்தது. ஆனால் ஒருவார காலத்திற்குள் முடிந்த ஏற்பாடுகளைச் செய்து விடலாம் என்ற நம்பிக்கை அவருக்கு இருந்தது. அல்லிப்பட்டி மேஜர் பஞ்சாயத்தின் தலைவர் அவர் தான் என்பதாலும் ஊரின் முக்கியப் பிரமுகர் என்பதாலும் அவருக்கு நிறையச் செல்வாக்கு உண்டு அங்கே.

அந்நியநாட்டிலிருந்து ஒரு வெள்ளைக்காரர் மனைவியோடு வந்து தங்குவதற்கு ஏற்ற முறையில் தம் வீட்டு மாடி அறையைத் துப்புரவு செய்து, அந்த அறையோடு இணைந்தாற்போல் குளிக்கக் கொள்ள வசதி செய்தார் அவர். கிராமத்தில் முக்கியமானவர்களிடமும் அந்த விஷயத்தைப் பறை சாற்றிவிட்டார்.

"நம்மூருக்கு ஒரு ஃபாரினர் புக் எழுதறத்துக்காக வரப்போறான். இங்கே நம் கிராமத்தோட கௌரவத்தைக் காப்பாத்தற மாதிரி நாம் நடந்துக்கணும்" என்று பெருமாள் கோவில் அர்ச்சகர், சிவன் கோவில் குருக்கள், வேளாளர் தெருப் பஞ்சாயத்து உறுப்பினர் வீரபத்திரபிள்ளை எல்லாரிடமும் சொல்லியிருந்தார் கைலாசநாதன். செய்தி கிராமம் முழுவதும் வேகமாகப் பரவிவிட்டது.

நாலைந்து நாட்களுக்குள் டில்லியிலிருந்து இரண்டாவது கடிதமும் வந்துவிட்டது.

1. ஆற்றங்கரையில் அரச மரத்தடியில் அந்தணர்கள் குழுவாக அமர்ந்து ஜபம் செய்யும் காட்சி.
2. வயலில் நாற்று நடும் பெண்கள் பாடும் கிராமீயப் பாட்டுக்கள். ஒரு கிராமீயக் கல்யாணம்.
3. கிராமத்துப் பெண்கள் கோலாட்டம் ஆடும் காட்சி, திருவிழாவின்போது பெருமாளுக்குப் பின், பிரபந்தம் சொல்லியபடி செல்லும் பிரபந்தம் சேவிப்பவர்களின் குரல்; சிவன் கோவிலில் ஓதுவார் பாடும் தேவாரம்.
4. கிராமத்தின் நெற்களம், வனபோஜனம், காமன் பண்டிகை போன்ற பொது விழாக்கள்.

இவ்வாறு பேராசிரியர் ஜான்சன் காணவும் ஒலிப்பதிவு செய்யவும் விரும்புகிற அயிட்டங்களை வரிசையாகக் குறித்தே அனுப்பியிருந்தான் மூர்த்தி.

ஜான்சனையும் அவர் மனைவியையும் அல்லிப்பட்டி ஸ்டேஷனிலிருந்து கிராமத்துக்குள் எப்படி அழைத்து வருவது என்று யோசித்தார் கைலாசநாதன். ஸ்டேஷனிலிருந்து கிராமத்துக்கு இரண்டரை மைல் தொலைவு. அந்த வட்டாரத்தில் இரண்டு கார்கள்தான் உண்டு. இரண்டும் கலியாண ஊர்வலங்களில் மாப்பிள்ளை அழைப்புக்காக வாடகைக்கு விடப்படும் கார்கள். கலியாண சீஸன் முடிந்ததும் பேட்ரி, டயர் எல்லாவற்றையும் கழற்றி ஓடாத காலங்களில் தேர் நிலையில் நிற்பதுபோல் நிற்க வைத்துவிடுவார்கள் அந்தப் பழைய கார்களின் சொந்தக்காரர்கள். இரண்டுமே இருபத்தைந்து வருஷத்துக்கு முற்பட்ட மாடல். அவற்றின் உரிமையாளர்களில் ஒருவரைச் சந்தித்துக் காரை ஓட்டத்துக்கு ரெடியாக்கச் சொல்லி அட்வான்ஸ் கொடுத்துவிட்டு வந்தார் கைலாசநாதன்.

ஜான்சன் தம்பதி அல்லிப்பட்டிக்கு வந்து சேருகிற தினத்தன்று காலையில் ஐந்து மணிக்கே எழுந்து தயாராகி விட்டார் அவர். பெட்டியில் மீதமிருந்த ஒரே சலவை வேஷ்டியையும் எடுத்தபோது அது நடுவாகக் கிழிந்திருந்தது. சட்டையில் வாழைத் தோட்டத்துக் கறைப் பட்டிருந்தது.

"நீங்களும் உங்க லட்சணமும்! இதைக் கட்டிண்டு போனா சிரிக்கப் போறா! அம்பி போன தடவை லீவுக்கு வந்திருந்தப்போ இங்கே மறந்துவிட்டுப் போன சூட்டையும்

கோட்டையும் சலவைக்குப் போட்டு வெச்சிருக்கேன். தட்டிச் சொல்லாம எடுத்து மாட்டிக்குங்கோ...'' என்று வற்புறுத்தினாள் அவர் மனைவி.

முதலில் கைலாசநாதனுக்குக் கூச்சமாகவும் தயக்கமாகவும் இருந்தது. சாதாரண மாகக் கிராமத்தில் இருக்கிற நாட்களில் அவர் சட்டைகூடப் போடுவதில்லை. திடீரென்று இத்தனை நாள் அப்படி இருந்ததற்கு வட்டியும் முதலுமாக மாறுவது போல் சூட்டும் கோட்டும் போட நேர்ந்துவிட்டதை ஒரு மனம் ஏற்காவிட்டாலும் இன்னொரு மனத்தில் அவற்றைப் போட்டுக் கொள்ள வேண்டும் போல ஒரு நைப்பாசையும் இருந்தது.

இறுதியில் நைப்பாசையே வென்றது. கைலாசநாதன் சூட்டும் கோட்டுமாக மாப்பிள்ளைக் கோலத்தில் தயாரானபோது அந்த யோசனையை அவருக்குக் கூறிய அவர் மனைவிக்கே தன் கணவனுக்குத் திருஷ்டி கழிக்க வேண்டும் போலிருந்தது. அதைவிடப் பெரிய ஆச்சரியம் ஜான்சனை வரவேற்க ஸ்டேஷனுக்கு வரச்சொல்லி அவர் அழைத்திருந்த மற்றவர்களும் சூட்டுக் கோட்டோடு வந்ததுதான். ஒருவர்கூட அந்தக் கிராமத்தின் சகஜமான உடையில் இல்லை. எல்லார் கையிலும் மாலைகள், பூச்செண்டுகள் தயாராய் இருந்தன. நேற்று மாலைதான் ஓட்டத்திற்கு ஆயத்தம் செய்யப்பட்ட அந்தப் பழைய மாடல் ஃபோர்டு கார் நிலையத்தின் வெளியே நின்றது.

ரயில் வந்தது. முதல் வகுப்புப் பெட்டிகளை ஒவ்வொன்றாக நோட்டம் விட்டபின் வெள்ளை முகம் காணாமல் ஏமாற்றம் அடைந்தார் கைலாசநாதன். ஜான்சன் தம்பதி வரவில்லையோ என்று அவர்கள் தயங்கியபோது மல்லிகைப் பூப் போல் கிளாஸ்கோ மல் வேஷ்டியும் பஞ்சக்கச்சமும் ஜிப்பாவும், கழுத்தில் துளசி மணிமாலையுமாக ஒரு வெள்ளைக்காரன் மூன்றாம் வகுப்பிலிருந்து இறங்கினான். அவனை அடுத்துக் காஞ்சிபுரம் பட்டுப் புடவையும், ரவிக்கையும் நெற்றியில் குங்குமத் திலகமுமாக ஒரு வெள்ளைக்காரியும் இறங்கினாள். "ஐ யாம் ஜான்சன்" என்று அவன் தன் மனைவியோடு அருகே வந்து கை கூப்பியபோது கைலாசநாதன் அவனோடு கை குலுக்க வலது கையை நீட்டிக் கொண்டிருந்தார். அவன் கைகுலுக்க முன்வராமல் வணங்கிக் கொண்டே, "ஹேண்ட் ஷேக்கிங் இஸ் நாட் அன் இன்டியன் கஸ்டம்" என்றான்.

கைலாசநாதன் முகத்தில் அசடு வழிய மாலையை அவனுக்கும் அவன் மனைவிக்கும் அணிவித்தார். நூற்றுக்கு நூறு சதவீதம் இந்திய உடையில் வந்திருக்கும் வெளிநாட்டினரை அந்நிய உடையில் வரவேற்க வந்ததை எண்ணிக் கூசுவதற்குக் கூட அவர்களுக்குத் தோன்றவில்லை. எல்லார் முகத்திலும் விளக்கெண்ணெய் வழிந்தது. எல்லாரும் அறிமுகம் செய்து கொண்டனர். அதற்கேற்றாற்போல் காரில் போகும்போது சிரித்துக் கொண்டே, "இந்த உடையில் நீங்கள் மிகவும் செயற்கையாகத் தோன்றுகிறீர்களே? தினசரி நீங்கள் இதைத்தான் அணிவீர்களா?" என்று ஜான்சன் கேட்டபோது கைலாசநாதன் பதில் என்ற பெயரில் ஏதோ பூசி மெழுகினார்.

மாலையில் ஆற்றங்கரை அரசமரத்தடியில் அந்தணர்கள் ஜபம் செய்வதைக் காண அவனையும், அவன் மனைவியையும் அழைத்துப் போனார் கைலாசநாதன். சினி கேமரா, ஃபிளாஷ் பல்புகள், பேட்டரி சகிதம் ஒலிப்பதிவுச் சாதனங்களுடன் வந்தார்கள் அந்த விருந்தாளிகள். அல்லிப்பட்டியில் முறையாகப் படித்த சாஸ்திரிகள் இரண்டே இரண்டு பேர் தான் இருந்தனர். கூட்டமாக அரச மரத்தடியில் ஜபக்கோலத்தில் உட்காரச் செய்யப் பத்து பேராவது வேண்டுமே என்று அந்த இரண்டு சாஸ்திரிகளோடு, பஞ்சாயத்துப் போர்ட் ஹெட்கிளார்க் பரசுராமராவ், ஸெகண்டரி கிரேடு டீச்சர் நாராயணய்யங்கார், கோவில் மணியம் குப்புசாமி ஐயர், இன்னும் ஐந்தாறு சீட்டாட்ட மிராசுதார்கள் எல்லாரையும் திறந்த மார்போடு அமரச் செய்து ஒரு சினிமாவுக்கு ஸெட் தயார் செய்து நடிகர்களையும் உட்காரச் செய்வது போல் அமரச் செய்திருந்தார் கைலாசநாதன். நடுவே ஒரு பூர்ணகும்பமும் வைக்கப்பட்டிருந்தது. அந்தக்கூட்டத்தில் இருந்த இரண்டு நிஜமான சாஸ்திரிகளைத் தவிர வேறு யாருக்கும் எந்த மந்திரமும் தெரியாது. கூட்டத்தோடு கூட்டமாக எதையாவது முணுமுணுத்துவிடுங்கள்” என்று அவர்களுக்கு சொல்லி வைத்திருந்தார் கைலாசநாதன்.

ஜான்சன் தம்பி வந்ததும் ஜபம் ஆரம்பமாயிற்று. டேப்ரிக்கார்டரை ஒலிப்பதிவுக்கு உரியதாக இயக்கிவிட்டு, மனைவியிடம் படம் எடுக்கும் வேலையை ஒப்படைத்தபின், அமர்ந்திருந்தவர்களுக்கு அருகே வந்து உற்றுக் கேட்கத் தொடங்கினான் ஜான்சன்.

“நீங்களும் இதே வகுப்பைச் சேர்ந்தவர்தானே? உங்களுக்கு மட்டும் இந்த ஜபம், அநுஷ்டானம் எதுவுமே கிடையாதா?” என்று திடீரென்று ஜான்சன் தன் பக்கம் திரும்பிக் கேட்கவே கைலாசநாதனின் நிலைமை எக்கச்சக்கமாகப் போயிற்று. அவர் உடனே சட்டென்று தோன்றிய “ஐ யாம் நாட் எ புரோஹித்” என்ற வாக்கியத்தைக் கூறியவுடன், “புரோஹிதர்கள் மட்டும்தான் பிராமணர்களா?” என்று பதிலுக்கு மடக்கினான் ஜான்சன். ‘இதென்னடா வம்பாகப் போயிற்று’ என்று வேண்டா வெறுப்பாகச் சட்டையைக் கழற்றித் துண்டு போல் இடுப்பில் சுற்றிக் கொண்டு அவர்களோடு சேர்ந்து கைலாசநாதனும் சப்பணம் கூட்டி அரசமரத்தடியில் உட்கார்ந்தார்.

மந்திரத்தை முணுமுணுத்துக் கொண்டே வெற்றிலைச் செல்லத்தைத் திறந்து சாங்கோபாங்கமா வெற்றிலை புகையிலை போடத் தொடங்கிய ஒருவரையும், பொடி மட்டையைத் தட்டிப் பொடி உறிஞ்சத் தொடங்கிய ஒருவரையும் சுட்டிக்காட்டி, “இது மாதிரிப் புனித காரியங்களின்போது புகையிலை போடுவது, பொடி போடுவது வழக்கமா?” என்று கேட்டான் ஜான்சன். அவனுக்கு என்ன பதில் சொல்வதென்று அவர்களுக்குத் தெரியவில்லை. வெற்றிலையும் பொடி மட்டையும் உடனே மறைக்கப்பட்டன. தங்களைச் சுட்டிக்காட்டி அந்த வெள்ளைக்காரன் ஏதோ கேட்பதைக் கண்டு பயந்தனர் அவர்கள். அடுத்த சில நிமிஷங்களில் அவர்கள் உச்சரித்த மந்திரங்களைக் கூர்ந்து கேட்ட அவன், கைகள் இரண்டையும் உயர்த்தி நிறுத்தச் சொல்லி ஜாடை காட்டிவிட்டு டேப் ரிக்கார்டரையும் ஆஃப் செய்தான். சாஸ்திரிகள்

இருவரையும் சுட்டிக்காட்டி, “இவர்கள் இருவரும்தான் புருஷஸூக்தம் சொல்கிறார்கள். மற்றவர்கள் எதையோ முணுமுணுக்கிறார்கள்... திஸ் இஸ் நாட் கரெக்ட்” என்று இரைந்தான். ‘இந்த வெள்ளைக்காரனுக்குப் புருஷஸூக்தம் எது, மற்றது எது என்றுகூடத் தெரிந்திருக்கிறதே!’ என்று அவர்களுக்கு ஆச்சரியமாகப் போயிற்று.

அடுத்த கணமே எப்படி ஒரு சீரான குரலில் சொல்லுவது என்று காட்டுவதற்காக அந்த வெள்ளைக்காரனே,

“ஸஹஸ்ர சீருஷாப் புருஷ” என்று ஸ்பஷ்டமான உச்சரிப்போடு தொடங்கிய போது அவர்களால் தங்கள் ஆச்சரியத்தை அடக்கிக் கொள்ளவே முடியவில்லை.

ஜபம் எல்லாம் முடிந்ததும் ஜான்சனின் அருகில் வந்து, “சாஸ்திரிகள் இருவருக்கும் இருபது இருபது ரூபாய் வீதமும், மற்றவர்கள் எல்லாருக்கும் தலைக்குப் பத்து பத்து ரூபாய் வீதமும் பணம் தர வேண்டும்” என்று கைலாசநாதன் ஆங்கிலத்தில் கேட்டபோது, “ஆச்சரியமாக இருக்கிறதே? இந்த ஜபதபங்களை எல்லாம் நீங்கள் தினசரி மாலை சுபாவமான அநுஷ்டானமாகச் செய்வீர்கள் என்றல்லாவா நான் கேள்விப்பட்டிருந்தேன்? ஞாயிறன்று நாங்கள் சர்ச்சுக்குப் போவது போல் இது உங்கள் அன்றாட வழக்கம் இல்லையா? இது எனக்காக மட்டும் ஏற்பாடு செய்யப்பட்டதோ? இந்த மாதிரி நான் எதிர்பார்க்கவில்லையே... பரவாயில்லை, இந்தாருங்கள்; கொடுத்துவிட்டு மீதத்தைத் திருப்பித் தாருங்கள்” என்று ஒரு கத்தை ரூபாய் நோட்டுகளைக் கைலாசநாதனின் கையில் திணித்தான் ஜான்சன்.

அன்றிரவு அவன் அமெரிக்கனாயிற்றே என்ற எண்ணத்தில் யாரோ பெர்மிட் ஹோல்டரிடமிருந்து வாங்கிய வெளிநாட்டு மதுபானப்புட்டி ஒன்றையும் சிகரெட் பாக்கெட்டையும் கொண்டு போய்க் கொடுத்தார் கைலாசநாதன். அவன் சிரித்துக்கொண்டே மறுத்துவிட்டு, “நான் புகை பிடிப்பதுகூட இல்லை; மன்னிக்க வேண்டும். இந்தியாவில் மது வெறுக்கப்படுகிறது என்றும், மதுவிலக்கை அரசாங்கக் கொள்கையாக வைத்திருக்கிறார்கள் என்றும் கேள்விப்பட்டு இருக்கிறேன் நான். அவ்வாறிருந்தும் இது எப்படி சாத்தியம்?” என்று கேட்டான்.

கைலாசநாதன் ஏதோ சொல்லி மழுப்பினார்.

“யூ ஹாவ் நோ நாலட்ஜ் ஆஃப் சான்ஸ்கிரிட். யூ டோண்ட் நோ வேதாஸ் அண்ட் யூ நெவர் மீட் யுவர் ப்ரீஸ்ட் தென் வாட் மேக்ஸ் யூ எ ஸெப்பரேட் அண்ட் எலிவேடட் ஸெக்ஷன் ஆஃப் தி ஸொஸைட்டி?” இப்படி அவன் கேட்டபோதும் அவர் சிரித்து மழுப்பத்தான் செய்தார்.

மறுநாள் நாற்று நடும் வயலில் பெண்கள் பாடிய பாட்டுக்களை ரெகார்ட் செய்யும் போதும் இப்படியே நடந்தது. அவற்றில் ஒன்றாவது கிராமத்தின் புராதனமான பாட்லாக இல்லை.

**“பவுடர் மணம் கமகமக்கப்**
**பல்லழகு ஜொலி ஜொலிக்க**

நாற்று நடும் ரங்கம்மா
ஏற்றமிறைக்கும் வேளைக்குள்ளே
ஏரோப்ளேன் ஏறி வாரேன்
நாற்று நடும் வேளைக்குள்ளே
ராக்கெட்டில் பறந்து வாரேன்"

என்று பாடப்பட்ட ஒரு பாட்டை அதிலுள்ள வார்த்தைகளைக் கேட்டே அது புராதனமான கிராமீயப் பாட்டு இல்லை என்று கண்டுபிடித்து மறுத்துவிட்டாள் ஜான்சனின் மனைவி. அவள் மீண்டும் மீண்டும் துளைப்பதுபோல் கேட்ட பின்னே அந்தப் பாடல் சென்ற வருடம் ரிலீஸான ஒரு தமிழ்ப்படத்தில் வருவது என்ற உண்மையைக் கைலாசநாதன் ஒப்புக் கொண்டார்.

அதே தினம் மாலையில் ஜான்சன் காண்பதற்காகவே ஏற்பாடு செய்யப்பட்ட ஒரு கலியாண மாப்பிள்ளை அழைப்பு ஊர்வலத்தில், மாப்பிள்ளை, சூட்டு, கோட்டு, டை தரித்துக் காரில் அமர்ந்து வந்ததை ஜிப்பா பஞ்சகச்சத்தோடும், புடவை ரவிக்கையோடும் இருந்து கண்ட ஜான்சன் தம்பதி அதுபற்றிக் கைலாசநாதனை விசாரித்தனர். கைலாசநாதன் பதில் கூறினார்:-

"மாப்பிள்ளை ரொம்பவும் படித்தவரானால் இப்படி டிரஸ் தைத்துத் தர வேண்டியது அவசியம்!"

"ஓ! யூ கேன் ரெக்கன்னைஸ் அன் எஜுகேடட் மேன் பை ஹிஸ் டிரெஸ் ஒன்லி?" என்று சிரித்துக்கொண்டே வினவினான் ஜான்சன்.

அடுத்தநாள் கோலாட்டத்துக்குச் சரியான கோல்கள் கிடைக்காததால் டஜன் கணக்கில் கலர்ப் பென்சில்களை விலைக்கு வாங்கிஅடிக்கச் சொல்லிப் பெண் குழந்தைகளிடம் கொடுத்திருந்தார் கைலாசம். கோலினால் எழும் இனிய நாதம் குச்சிகள் போன்ற பென்சிலால் எழாததாலும் அதிலும் நவீன சினிமாப்பாடல்களே பாடப்பட்டதாலும் ஜான்சன் திருப்தியடையவில்லை. பிரபந்தம் பாடுவதைக் கேட்ட அவன், பாடல்களின் சொற்கள் அதிகம் சிதைக்கப்பட்டு உச்சரிக்கப்படுவதைக் கண்டுபிடித்துச் சொன்னான். அவனுக்குத் தமிழும் நன்றாகத் தெரியும் என்பதை அப்போதுதான் கைலாசம் புரிந்து கொண்டார்.

"அமெரிக்கன் தானே ஓய்! பத்து ரூபா கொடுத்தால் வறண்டா போயிடும்? லட்சம் லட்சமா டாலரைஅள்ளிண்டு புஸ்தகம் எழுத வந்திருக்கான். தரட்டுமே - தந்தாக் குறைஞ்சா போயிடுவான்?" என்று முதல்நாள்அரசமரத்தடி ஜபத்தின்போது அவனுக்குத் தமிழ் தெரியாதென்ற நினைப்பில் தான் இரைந்து கூறியதை அவன் புரிந்துகொண்டிருப்பானோ என்ற சந்தேகம் இப்போதுதான் கைலாசத்துக்கு வந்தது. இதை இந்த வெள்ளைக்காரன் டில்லியில் போய் மூர்த்தியிடம் சொல்லிவிடுவானோ என்றும் நினைத்துத் தயங்கியது அவர் மனம்.

பெருமாள் கோவிலில் தீர்த்தம், சடாரிக்குப் பின்பு துளசிக்குப் பதிலாக ரோஜாப் பூ இதழ்களைக் கொடுத்ததும் "துளசி அல்லவா கொடுக்கப்பட வேண்டும்" என்று ஞாபகமாக அர்ச்சகரைக் கேட்டான் ஜான்சன்.

"மன்னிக்கணும்; கோயில் நந்தவனத்திலே இருந்த துளசிச்செடி எல்லாம் பட்டுப் போச்சு! அதனாலேதான்" என்றார் அர்ச்சகர். துளசி கிடைக்காத வைஷ்ணவக் கோயிலை நினைக்கவே வேதனையாக இருந்தது ஜான்சனுக்கு. அது அவனுடைய கடைசி ஏமாற்றம். அதுவே அவனது எல்லா ஏமாற்றங்களையும் உருவகம் செய்வதாகவும் அமைந்தது.

ஒரு மாதம் தங்குவதற்குத் திட்டமிட்டு வந்திருந்த ஜான்சனும் அவன் மனைவியும் நான்காம் நாளே அல்லிப்பட்டியை விட்டுப் புறப்பட்டு விட்டார்கள். அந்த நான்கு நாட்களில் பணம் நிறையச் செலவாகியிருந்தும் விஷய லாபம் சிறிதும் கிடைக்கவில்லை. பழையதான ஓர் இந்தியக் கிராமத்தை அவன் புரிந்து கொண்டிருந்த அளவுகூட அந்தக் கிராமத்தில் இருப்பவர்களே புரிந்து கொண்டிராதது அவனைத் திடுக்கிட வைத்தது. சென்னை நகரத்துக்குத் திரும்பி வந்ததும் அவன் இரண்டு விமானத் தபால்களை அவசர அவசரமாக எழுதினான். அவற்றில் ஒரு கடிதம் தான் எழுத இருக்கும் புத்தகத்தை வெளியிடப் போகும் அமெரிக்கப் பதிப்பாளருக்கு; மற்றொன்று டில்லியிலுள்ள கே.கே.மூர்த்திக்கு.

அமெரிக்கப் பதிப்பாளருக்கு எழுதிய கடிதத்தில் "புத்தகத்தின் தலைப்பை ஸவுத் இன்டியன் வில்லேஜ் - என்பதற்கு பதில் 'டீ ஜெனரேஷன் ஆஃப் எ ஸவுத் இன்டியன் வில்லேஜ்' என்று தயை கூர்ந்து மாற்றிவிடவும்" என்று எழுதியிருந்தான்.

மூர்த்திக்கு எழுதிய கடிதத்திலோ, "உங்கள் கிராமத்துப் பெருமாள் கோயில் நந்தவனுக்குள் துளசிச் செடி பட்டுப் போனதைப் போல் பழைமையான பல விஷயங்களும் பட்டுப் போய்விட்டன. ஒரு கிராமத்தில் நதி வற்றலாம்; நாகரிகம் வற்றக் கூடாது. பல ஆயிரம் மைல்களுக்கு அப்பாலிருந்து வேதங்களையும் தமிழிலக்கியங் களையும் படித்து நான் அறிந்த தென் இந்தியக் கிராமத்தைப் பற்றி அந்தக் கிராமத்தில் இருப்பவர்களுக்கே என்னைப் போல் அந்நியன் ஒருவன் தான் ஞாபகமூட்ட வேண்டியிருக்கிறது" என்று எழுதியிருந்தான் அந்த வெளிநாட்டுப் பேராசிரியன்.

**(கலைமகள், தீபாவளி மலர், 1970)**

## 110. குரோட்டன்ஸ்

**கா**ரை ஷெட்டில் விட்டுவிட்டுச் சொல்லிக் கொண்டு போக வந்தபோது டிரைவரின் கையில் ஒரு கட்டுக் கரும்பும் மஞ்சள் கொத்தும் பெரிதாக ஒரு சீப் வாழைப்பழமும் இருந்தன.

"நாளைக்குப் பண்டிகைங்க..."

"அதாவது நீ வரமாட்டாய் இல்லையா?"

அவன் சிரித்தான். உடனே போய்விடாமல் தயங்கினாற்போல நின்றான். டம்பப் பையை எடுத்துத் திறந்து ஒரு பத்து ரூபாய் நோட்டை அவனிடம் நீட்டினாள் அவள். அவன் போவதற்கு முன், "உனக்கு எத்தினி குழந்தைங்க?" என்று இதுவரை அவனைக் கேட்டிராத கேள்வி ஒன்றைக் கேட்டாள். அவன் முதலில் கொஞ்சம் நாணினாற்போல் தெரிந்தது. அப்புறம் வேறெங்கோ பார்த்தபடி பதில் சொன்னான் : "ரெண்டு பசங்க..." மேலும் ஏதாவது கேட்கக்கூடுமோ என்ற தயக்கத்தில் சிறிது நின்றுவிட்டு, அப்படி ஒன்றுமில்லை என்பது உறுதியானதும் புறப்பட்டான் அவன்.

வெளியே தோட்டத்தில் கூர்க்கா நடந்து செல்கிற 'சரக் சரக்' ஒலி மாடி வரை கேட்டது. இந்த வீட்டுக்குக் குடிவந்த நாளிலிருந்து இவ்வளவு சலிப்பூட்டும் தனிமையை அவள் உணர்ந்ததே இல்லை. டெலிபோன் ஏதாவது வந்தால்கூட வெளியே கூர்க்கா ஓடிவந்து எடுக்காவிட்டால் அவளேதான் எடுத்துப் பேச வேண்டும். இதற்கு முன்பு இப்படி நேர்ந்ததே இல்லை. இரசிகர்களின் தொந்தரவுக்குப் பயந்து அவள் போனை எடுப்பதே கிடையாது. யாராவது எடுப்பார்கள். அவளே பேசித் தீர வேண்டிய அவசியம் இருந்தாலொழிய அவளிடம் கொடுக்கமாட்டார்கள்.

முந்தியநாளே சமையற்காரி ஊருக்குப் போக வேண்டும் என்று போய்விட்டாள். வருவதற்குப் பத்துநாள் ஆகலாம். காரியதரிசியாக, பி.ஏ. படித்த பெண் ஒருத்தி இருந்தாள். அவளுக்குப் போன வாரம் குருவாயூரில் கல்யாணம்; மறுபடி அவள் வேலைக்கு வருவாளா என்பது சந்தேகந்தான். இந்தக் கல்யாணத்துக்கு நேரில் போய் வர எண்ணியிருந்தும் கடைசியில் ஏதோ ஒரு வகைக் கூச்சமும் தயக்கமும் தடுத்ததனால் அவள் போகாமல் விட்டுவிட்டாள். அந்தப் பெண் கணவனோடு மீண்டும் தன்னைப் பார்த்துவிட்டுப் போக இங்கே வந்தால் தானே வேண்டியவர்களை எல்லாம் அழைத்து ஒரு வரவேற்புக்கும் விருந்துக்கும் ஏற்பாடு செய்யலாம் என்று உள்ளூற ஓர் ஆவல் உண்டு. ஆனால் அவள் வர வேண்டுமே. கல்யாணத்துக்கு தான் நேரில் வரவில்லை என்ற கோபத்தினால் அவளும் வராமல் இருந்துவிடுவாளோ என்றும் தோன்றியது.

அப்படியே வந்தாலும் இனி அதிக நாள் இங்கே தங்கி வேலை பார்க்கமாட்டாள். கணவனோடு அவன் வேலை பார்க்கிற ஊருக்கு அவள் போக வேண்டியிருக்கும். அவள் போய்விட்டால் அப்புறம் ஒரு நம்பிக்கையான புதுக்காரியதரிசியைத் தேடி அமர்த்திக் கொள்ள வேண்டியிருக்கும்.

முப்பத்தெட்டு வயதுவரை 'குமாரி'யாகவே இருக்கும் அவளைப் போன்ற ஒரு புகழ்பெற்ற நடிகையால் அந்தச் சமயத்தில் புதிதாகத் திருமணமான பெண்ணின் மனநிலை எப்படி எப்படி இருக்கும் என்று முழுமையாகக் கற்பனை செய்ய முடியாமல் இருந்தது. பல படங்களில் திருமணக் காட்சிகளில் அவள் மணமகளாக நடித்திருக்கிறாள்; குடும்பம் நடத்தியிருக்கிறாள்; குழந்தை குட்டிகளைக் காப்பாற்றும் தாயாக வேடந் தாங்கியிருக்கிறாள். ஆனால் அவை எல்லாமே நடிப்பு. வாழ்க்கை நடிப்பிலிருந்து வேறுபாடுடையதாகத் தான் இருக்க வேண்டும்.

அது என்ன வேறுபாடு, எந்த அளவு வேறுபாடு என்பதைத்தான் அவளால் துல்லியமாக உணரவோ நினைக்கவோ முடியாமல் இருந்தது. ஆவலால் உந்தப் பட்டவளாக அறைக்குள் போய் மேஜையில் கிடந்த பல கடிதங்களுக்கும் அழைப்பிதழ் களுக்கும் நடுவே தேடி அந்தக் கல்யாணப் பத்திரிகையை மட்டும் தனியே எடுத்தாள்.

ஒரு விநாடியில் படித்து முடித்து விடக்கூடிய அந்தக் கல்யாணப் பத்திரிகையை ஒருமணி நேரமாகக் கையில் வைத்துத் திரும்பத் திரும்பப் படிப்பதும் யோசிப்பதுமாக இருந்தாள் அவள்.

அவளுடைய காரியதரிசிப் பெண்ணைக் குருவாயூரில் மணந்து கொள்ள இருந்த மாப்பிள்ளைக்குப் பம்பாயில் உத்தியோகம் என்பதை அழைப்பிதழிலிருந்து தெரிந்து கொள்ள முடிந்தது. கணவன் பம்பாயிலும், அவள் சென்னையிலுமாக உத்யோகம் பார்ப்பது என்பது சாத்தியமல்ல. உடனே இல்லாவிட்டாலும் ஒரு மாதம் கழித்தாவது அவள் இந்த வேலையை விட்டுப் பம்பாய் போய்விடுவாள் என்பதை இப்போது சுலபமாகவே அநுமானம் செய்து கொள்ள முடிந்தது.

ஒருநாளும் இல்லாத புதுமையாக அன்று தான் ஏன் அப்படி டிரைவரிடம் போய், "உனக்கு எத்தனை குழந்தைங்க..." என்று கேட்டு வைத்தோம் என்பதை இப்போது நினைத்தபோது அதைக் கேட்டே இருக்க வேண்டாம் என்று பட்டது அந்தக் கேள்விக்கு அவன் பதில் கூறியபோது தன் முகத்தை நேருக்கு நேர் பார்க்கக் கூசி வேறெங்கோ பார்த்துக் கொண்டே பதில் சொல்லியதையும் இப்போது நினைவுகூர்ந்தாள் அவள்.

கீழே கூர்க்கா பங்களாவின் முன்புறத்து விளக்குகளுக்கான சுவிட்சுகளை ஒவ்வொன்றாக அணைக்கும் ஒலி கேட்டது. இரவு மணி பத்துக்கு மேல் ஆகியிருக்க வேண்டும்; சரியாக இந்த நேரத்துக்கு விளக்குகளை அணைத்துவிட்டு முன்புறம் கேட் அருகே உள்ள தன் அறைக்குத் தூங்கப் போய்விடுவான் கூர்க்கா. அதற்குப்பின் தான் எங்காவது ஸ்டுடியோவிலிருந்து தாமதமாகத் திரும்பினால் கதவுகளைக் காருக்காகத் திறந்துவிட்டு மூடும் வேலைதான். நேற்றோ, இன்றோ, நாளையோ தான் எங்கும்

வெளியில் போய்த் திரும்பப் போவதில்லை என்பதை அவள் அவனிடம் சொல்லியிருந்தாள். ஸ்டுடியோக்கள் எல்லாம் விடுமுறை; கால்ஷீட் எதுவும் கொடுக்கவில்லை. முழு ஓய்வு. சமையற்காரி ஊரில் இல்லாததனால் ஹோட்டலுக்கு அவ்வப்போது போய்வரும் வேலையும் கூர்க்காவிடம் சுமந்திருந்தது.

அவள் மாடி ஹால் விளக்குகளை அணைத்துவிட்டுப் படுக்கையறைக்குப் போனாள். படுக்கையறைக்கு நேரே தெருவைப் பார்த்த பால்கனியின் சுவரில் தொட்டிகளில் இருந்த பூஞ்செடிகள் கொஞ்சம் வாடியிருந்தன. இரண்டு மூன்று நாட்களாக அந்தச் செடிகளுக்கு யாரும் தண்ணீர் ஊற்றவில்லை என்பது ஞாபகம் வந்தது. குளியலறைக்குள் போய் பிளாஸ்டிக் வாளியில் கொஞ்சம் கொஞ்சமாகத் தண்ணீர் எடுத்துச் சென்று ஊற்றினாள். ஒரு வாளி நிறையத் தண்ணீர் எடுத்துக் கொண்டு போனால் ஒரே நடையில் மூன்று தொட்டிச் செடிகளுக்கும் அதையே ஈவு வைத்துச் சிறிது சிறிதாகப் பிரித்து ஊற்றிவிடலாம். ஆனால் அப்படிச் செய்துவிட்டால் ஒரே நடையில் வேலை முடிந்துவிடும். அப்போதிருந்த மனநிலையில் எதையாவது உடனே முடிந்துவிடாத எதையாவது செய்து கொண்டிருக்க வேண்டும் போல உணர்ந்திருந்தாள் அவள். எதையாவது தாறுமாறாக நினைக்கிற மனத்தை எதையுமே நினைக்கவிடாமல் உறங்கச் செய்துவிட்டுக் கைகளை எந்தச் செயலிலாவது பிணைத்துக் கொள்ள வேண்டும் போலிருந்தது. ஆனால் அப்படிப் பிணைத்துக் கொள்கிற எந்தச் செயலிலும் தரிக்கவும் முடியவில்லை. எவ்வளவோ மெதுவாக ஊற்றியும் பத்து நிமிஷங்களில் தண்ணீர் ஊற்றி முடிந்துவிட்டது.

வழக்கமாகப் பார்க்கும் இரசிகர்களின் பாராட்டுக் கடிதங்களை ஒரு கற்றை அள்ளி வந்து படுக்கையில் குவித்துக் கொண்டு ஒவ்வொன்றாகப் படிக்கலானாள். சோர்வாகவும், தனிமையாகவும் உணர்ந்த வேளைகளில் இந்தக் கடிதங்களைப் படித்து அவள் புத்துணர்ச்சி பெற்றிருக்கிறாள். இன்றோ சோர்வும் தனிமையும், அந்த இரண்டும் அல்லாத, அவற்றையும் விடப் பெரிய வேறொன்றும் மனத்தை உறுத்திக் கொண்டிருந்தன. அது இன்னதென்று தெளிவாகப் புரியவில்லை; புரிந்து கொள்ள முடியவும் இல்லை.

சில இரசிகர்கள் தங்களுக்கு இருக்கும் அபார உற்சாகத்தில் விலாசங்கூட முழுமையாக எழுதாமல் 'நடிகை பிரேமகுமாரி - சென்னை' என்று மட்டுமே போட்டிருந்தார்கள். அவளுடைய பிராபல்யத்தால் கடிதங்கள் தவறாமல் வந்து சேர்ந்திருந்தன.

அன்று என்னவோ வழக்கத்துக்கு மாறாக நாலைந்து கடிதங்களைப் படித்ததுமே அவையும் சலிப்பூட்டின. எல்லாப் பாராட்டுக் கடிதங்களுமே ஒரே ராகத்தைத் திரும்பத் திரும்பக் கேட்பது போல் இருந்தன. காரண காரியங்களை உணர்ந்து பாராட்டாத குருட்டுப் புகழாகவும் அவை தோன்றின. அவளுடைய உடலழகிலும், அதனால் விளைந்த விடலை மயக்கத்திலுமே அந்தப் பாராட்டுக்கள் பிறந்திருந்தனவே தவிர, நடிப்புத் திறமையை உணர்ந்து எழுதப்பட்டதாக ஒரு கடிதமும் தோன்றவில்லை. காதற் கடிதமாக நேரடியாய் எழுதத் தெம்பில்லாத ஆட்கள் பாராட்டுக் கடிதங்கள்

என்ற பெயரில் அவற்றை எழுதியிருந்தார்கள். சிலர் அதிலும் துணிந்து பச்சையான காதற் கடிதங்களாகவே எழுதியிருந்தார்கள்.

கடிதங்களும் படிப்பதற்கு அலுப்பூட்டும்படி அன்று தனக்கு வந்த மன வேதனை என்ன என்று தானே புரிந்து கொள்ள முடியாமல் தவித்தாள் அவள்.

விளக்கை அணைத்துவிட்டு இருளின் சுகத்தில் தூங்கிவிட முயன்றாள். அரைமணி நேரம் புரண்டு புரண்டு படுத்தபின் தூக்கமும் வரவில்லை. மறுபடியும் விளக்கைப் போட்டு ஒரு கிளாஸ் தண்ணீர் குடித்தாள்.

இருந்தாற்போலிருந்து முப்பது வயது வரை திருமணம் செய்து கொள்ளாமலே படங்களில் நடித்துப் புகழேணியின் உச்சிக்குப் போய் விட்டு அப்புறம் திடீரென்று ஒருநாள் திருப்பதியிலோ குருவாயூரிலோ போய்க் கல்யணம் செய்து கொண்டு விட்டுப் படிப்படியாய் நடிப்பதைக் குறைத்துக் கொண்டு கணவனோடு வாழத் தொடங்கி விட்ட சில சக நடிகைகளைப் பற்றி நினைத்தாள் அவள். அந்த நினைவை விரைந்து தவிர்க்க முனைந்தும் திரும்பத் திரும்ப அவள் மனத்தில் அதுவே வட்டமிட்டது.

திடீரென்று மேஜை டிராயரைத் திறந்து பாங்குப் பாஸ் புத்தகங்கள், டிபாசிட் ரசீதுகள், கணக்கு வழக்கு எல்லாவற்றையும் பார்த்தாள்.

பாங்கில் பிக்ஸட் டிபாஸிட் மட்டும் இருபது லட்சத்துக்கு மேல் இருந்தது. லாக்கரில் மூன்று லட்சத்துக்கு நகைகள் இருந்தன. கணக்கில் வராத தொகையைச் சில தனி ஆட்களுக்கு வட்டிக்குக் கொடுத்திருந்தாள். பங்களா மதிப்புப் பதினைந்து லட்சம் இருக்கும். ஒரு பெரிய கார். மற்றொரு சிறிய கார். மகாபலிபுரம் போகிற வழியில் பத்து ஏக்கர் அளவில் ஒரு தென்னந்தோப்பு. இப்போது ஒப்பந்தமாகியிருக்கிற படங்களோடு விட்டு விடுவதானால் கூட இன்னும் ஏழு படங்கள் இருந்தன.

மற்ற நடிகைகளுக்கும் தனக்கும் உள்ள ஒரு வேறுபாடும் அவளுக்கு இப்போது ஞாபகம் வந்தது. எப்போதாவது தீர முடியாத மனவேதனை வந்தால் அவர்களுக்கு எல்லாம் ஆறுதல் கூற அம்மாவோ, அப்பாவோ, உறவினரோ இருந்தார்கள். தனக்கு யாருமில்லை என்பதை நினைத்தபோது அவள் தவிப்பு வளர்ந்தது. முதற் படத்தை முடித்துக் கொஞ்சம் பெரிய வீட்டைத் தேடி வாடகைக்குக் குடிபோன வருஷம் அம்மா காலமானதை எண்ணியபோது அவள் கண்களில் நீர் நெகிழ்ந்தது. அம்மா போன பின்புதான் மளமளவென்று படங்கள் வந்தன. பணம் வந்தது; புகழ் வந்தது. 'என்ன வந்து என்ன ஆகப் போகிறது? நான் தனி' என்பதை அவள் பல முறை உணர்ந்து தவித்திருந்தாலும் இன்று படுகிற அளவு கொடுமையான சலிப்பையும் தனிமையையும் அவள் என்றுமே பட்டதில்லை.

பாங்குப் பாஸ் புத்தகங்கள், கணக்கு வழக்குகளை டிராயரில் திணித்து மூடினாள். அதிலும் மனம் செல்லவில்லை. பால்கனிக்குப் போய் நின்று பங்களாவின் தோட்டத்தையும் புல்வெளியையும் பூஞ்செடிகளையும் அந்த நேரத்தில் அவை யனைத்தும் எழுதி வைத்த சித்திரம் போல் தெரிவதையும் பார்த்தாள். இரவும், பனியும்,

மங்கிய தெருவிளக்குகளும் எல்லாம் நீலநிற மஸ்லின் துணியால் போர்த்தினாற்போல் தென்பட்டன. தண்ணீர் ஊற்றிய பின்பும் பால்கனியிலிருந்த தொட்டிச் செடிகள் இன்னும் வாடித்தான் இருந்தன. காலையில்தான் அவை சரியாகும் என்று அவளாக நினைத்துக் கொண்டு உள்ளே திரும்பினாள். மறுபடியும் மேஜையருகில் போய் அந்தக் குருவாயூர்க் கல்யாணப் பத்திரிகையை எடுத்துப் பார்த்தாள். பெருமூச்சு விட்டாள். 'உனக்கு எத்தனை குழந்தைகள்' என்று டிரைவரிடம் கேட்டதை நினைத்துக் கொண்டாள். நடிப்பை நிறுத்திக் கொண்டு இருந்தாற் போலிருந்து கல்யாணம் செய்து கொண்டு குடும்ப வாழ்வில் ஈடுபட்ட புகழ்மிக்க சக நடிகைகளைப் பற்றி மீண்டும் நினைத்தாள்.

மறுபடியும் ஒரு கிளாஸ் தண்ணீர் குடித்தாள். திரும்பத் திரும்பச் செய்ததையே செய்து கொண்டிருந்தாள். புதிதாக என்ன செய்வது என்று அவளுக்குப் புரியவில்லை.

உடனே தூக்க மாத்திரை சாப்பிட்டு விட்டுத் தூங்கலாமா என்று நினைத்தாள். 'ஓவர் டோஸ்' ஆகிவிடுமோ என்று பயமாகவும் இருந்தது. சில நாட்களில் அப்படியும் ஆகிச் சமையற்காரி டாக்டருக்குப் போன் செய்து வரவழைக்க நேர்ந்திருக்கிறது. இன்று அப்படி ஆனால் ஃபோன் செய்து டாக்டரைக் கூப்பிடச் சமையற்காரிகூட இல்லை. தூக்கம் வரவில்லையே என்ற வெறியில் கை கட்டுப்பாடின்றி மாத்திரைகளை எடுத்து வாயில் போட்டாலும் போட்டுவிடும். படுக்கையறை விளக்கை அணைக்காமலே கீழே இறங்கி ஒவ்வொன்றாக எல்லா விளக்குகளையும் போட்டுக் கொண்டு தோட்டத்தில் போய் உலாவினாள். பவழமல்லிகை மணம் குப்பென்று வந்து மோதியது. வழக்கமாக அந்த முன்நேரத்திலேயே அது பூத்துவிடும். விளக்குகள் எரிவதையும் தோட்டத்தில் யாரோ நடப்பதையும் கண்டு கூர்க்கா எழுந்து வந்தான். நடப்பது எஜமானி தான் என்று புரிந்ததும் ஒரு சலாம் வைத்துவிட்டு மௌனமாகத் திரும்பினான் அவன். அவனால் எப்படி இரவில் தூங்காமல் இருக்க முடிகிறது என்று அவளுக்கு ஆச்சரியமாக இருந்தது. நிலா ஒளியில் அவன் நடந்து வந்தது ஒரு கம்பீரமான ராணுவக்காரன் வருவது போலிருந்தது. தக்காளிப் பழம்போல் செழித்த கன்னமும் உள்ளாழ்ந்த இடுங்கிய கண்களும் மீசையுமாக அவன்கூடத் திடீரென்று மிக மிக அழகாயிருப்பதுபோல் பட்டது அவளுக்கு.

அப்படியே தோட்டத்தில் கொஞ்ச நேரம் சுற்றிவிட்டு மறுபடி மாடிப் படியேறி மேலே போகும்போது விளக்குகளை அணைக்க அவள் மறந்திருந்தாள்.

அவள் மேலே போய்ப் படுக்கையறையில் நுழைந்தபோது கீழே கூர்க்கா வந்து மறுபடி பொறுமையாக ஒவ்வொரு ஸ்விட்சாக அணைக்கிற சப்தம் அவளுக்குக் கேட்டது.

ஏதோ நினைத்துக் கொண்டவள்போல் படுக்கையறையில் இருந்த ஆளுயரக் கண்ணாடி முன் போய் நின்றாள் அவள். புருவங்கள் கத்தரிக்கப்பட்டு மேக்கப் இல்லாமல் திடீரென்று ஒரு சீனாக்காரிபோல் தன் முகம் தெரிவதாகத் தோன்றியது அவளுக்கு. அங்கங்களும் உடற்கட்டும் செயற்கையானதொரு செழிப்பைக்

காட்டினாலும் முகம் முற்றியிருப்பதை அவளே உணர்ந்தாள். கண்ணிமையின் கனிவும் குறுகுறுப்பும் தெரியும் வேறு பல இளம்பெண்களின் முகத்திலிருந்து தன் முகம் வேறுபடுவதை இப்போது தன் மேல் தனக்கே ஏற்படும் ஒருவித நிர்தாட்சன்யத்தோடு உணர்ந்தாள் அவள். மேக்கப் போட்டு காமிராவில் பிடித்துப் படமாகப் போகும் போது இந்த முகந்தான் பலரது உள்ளங்களைச் சூறையாடும் என்பதை நம்புவது இப்போது அவளுக்கே அசாத்தியமாக இருந்தது. ஒப்பு நோக்கி உணர்வதற்காக அவளே பென்சிலை எடுத்துப் புருவங்களைத் தீட்டிக் கொண்டு பவுடர் பூசி, நகைகளை அணிந்து மறுபடி பார்த்தாள். இப்போது நம்பிக்கை அளிக்கிற வசீகரம் தெரிந்தது.

இரவு மணி இரண்டை நெருங்கியிருக்க வேண்டும். தெருவில் இரண்டாவது ஆட்டம் சினிமா விட்டுப் போகிற கூட்டத்தின் குரல்கள் திடீரென்று வால்யூமை அதிகப்படுத்தின ரேடியோவிலிருந்து கேட்பதுபோல் கேட்டன. அதில் யாரோ ஒருத்தன் கொச்சையாகவும் பச்சையாகவும் அவளைப் பற்றி உரத்த குரலில் தன்னுடன் வருகிறவனிடம் பேசிக் கொண்டு போன வாக்கியத்தை அவளும் கேட்டாள்.

உடனே தூங்க வேண்டும். எல்லாவற்றையும் மறந்துவிட்டுத் தூங்க வேண்டும். பணம், புகழ், வேதனை, பெயர் புரியாத ஊமை அவஸ்தை அத்தனையையும் மறக்கத் தூங்குவதுதான் ஒரே வழி. ஆனால் தூக்கமும் வரவில்லை. அந்தக் கல்யாணப் பத்திரிகை, குழந்தை குட்டிகளோடு மறுநாள் வீட்டில் தங்கிப் பண்டிகை கொண்டாடப் போன டிரைவர், கல்யாணமாகி நடிப்பதை நிறுத்திவிட்ட நடிகைகள் எல்லாருமே திரும்பத் திரும்ப நினைவு வந்து தூக்கத்தை வரவிடாமற் செய்து கொண்டிருந்தனர்.

எப்படியும் தூங்கியே தீருவதென்று விளக்கை அணைத்துவிட்டுப் படுத்தாள் அவள். இன்னதென்று சொல்ல முடியாமல், ஏதோ மனத்தைக் குடைந்தது; அதை ஒரு வாக்கியத்திலும் சொல்ல முடியாது; ஓராயிரம் வாக்கியத்திலும் சொல்ல முடியாது போலிருந்தது.

படுக்கையில் புரண்டபடியே எதை எதையோ ஒழுங்காகவும், தாறுமாறாகவும் நினைத்தாள்: செழுமையான முகமும், அரும்பிய மீசையுமாக அந்தக் கூர்க்கா தோட்டத்தில் நடந்து வருவதை மனக்கண்ணில் மீண்டும் பார்த்தாள். தெருவில் இரண்டாவது ஆட்டம் படம் விட்டுப் போனவர்கள் பேசிக் கொண்டு போனதை மீண்டும் நினைத்தாள். படுக்கை ஒரு கொந்தளிக்கும் சமுத்திரமாகியது. உறக்கம் மட்டும் வரவில்லை. கரையும் தெரியவில்லை.

அந்தக் கரை தெரிகிறவரை நீந்தியே ஆகவேண்டும். கரையும் தெரியவில்லை. உறக்கமும் வரவில்லை. ஆனால் அதற்குள் காலை வந்துவிட்டது. வீடு பெருக்கித் தரை மெழுகிக் கோலம் போடுகிற ஆயா வந்தாள். அவள் படுக்கையறையை பெருக்க வந்தபோதும் பிரேமகுமாரி விழித்தபடி படுத்திருந்தாள். படுக்கையிலிருந்தே நேர் எதிரில் தெரிந்த பால்கனியின் தொட்டிச் செடிகள் இன்னும் வாடியே தென்பட்டன.

அவளுக்கு முன் இரவில் தான் தண்ணீர் ஊற்றியது நினைவு வந்தது. அப்படியும் அந்தச் செடிகள் வாடியிருக்கவே தான் ஊற்றிய நீர் போதாதோ என்று நினைதது, "ஆயா! நீ பெருக்கறதுக்கு முன்னே அந்தத் தொட்டிச் செடிங்களுக்குக் கொஞ்சம் தண்ணி ஊத்திட்டு அப்புறம் பெருக்கு. நேற்று நான் ஊத்தினேன். அது போதாது போலிருக்கு" என்றாள் அவள். ஆயா வாளியில் தண்ணீர் எடுத்துக்கொண்டு போனாள். போனவள் சில விநாடிகளில் திரும்பிவந்து, "தண்ணி ஊத்தாததுனாலே கோளாறு இல்லிங்கம்மா. தொட்டிலே மண் மாத்தணும், அடி மண் செத்துப் போச்சு. செடிக்கு வேரூன்றதுக்கு இடம் இல்லே. எவ்வளவு தண்ணீ ஊத்தினாலும் வேரூன்றத்துக்கு மண் இல்லாட்டி வாடித்தானம்மா போவும்."

"..........."

"தோட்டத்திலே மரத்தைப் பாருங்கம்மா. நாம தண்ணி ஊத்தாட்டியும் அது ஜிலுஜிலுன்னுதான் நிக்குது. தொட்டிச் செடி அப்பிடியா? கொஞ்ச மண்ணிலே வேர் பரவறதுக்கு எடம் எது? அந்தக் கொஞ்ச மண்ணும் உரம் செத்துப் போனா இன்னா செய்யிறது?"

"..............."

பிரேமகுமாரிக்கு மெய் சிலிர்த்தது. இரவெல்லாம் அவளுக்கு ஒரு வாக்கியத்திலும் சொல்லத் தெரியாமல் இருந்த வேதனை எதுவோ அதை இந்த ஆயா ஒரே வர்ககியத்தில் துல்லியமாகச் சொல்லியே விட்டாள்.

"வேரூன்ற மண் வேண்டும்."

உறக்கமின்றி ஓயாமல் நீந்தி நீந்தி அலுத்தபின் கரை தெரிந்தாற்போலிருந்தது. ஆனால் அந்தக் கரையை அடைவதற்கு இன்னும் நெடுந்தூரம் நீந்த வேண்டும் போலவும் இருந்தது.

சிறிதுநேரத்துக்கெல்லாம் கூர்க்காவைக் கூப்பிட்டு வாடிப்போன அந்த மூன்று தொட்டிக் குரோட்டன்ஸ்களையும் தோட்டத்தின் ஒரு மூலையில் கொண்டுபோய் போட்டு உடைத்து விடும்படி கட்டளையிட்டாள் அவள்.

தொட்டிச் செடிகளை எடுத்தபின் பால்கனி வெறிச் சென்றிருந்தது. ஆனால் நேர் எதிரே தோட்டத்தின் மகிழ மரமும், வேப்ப மரமும் பச்சென்று அடர்த்தியாய்த் தெரிந்தன.

**(கல்கி, தீபாவளி மலர், 1971)**

## 111. ரிடயர்ட் ஆபீஸர் + என்.ஜி.ஓ. + காலை நேரம்

**கா**லையில் அது நினைவில்லை. சட்டை வேஷ்டி ரொம்ப அழுக்காகிவிட்டது. ஆபீஸ் புறப்படுமுன் பெட்டியைத் திறந்தபோதுதான் சட்டையோ, வேஷ்டியோ, சலவை செய்தது எதுவும் மீதம் இல்லை என்று தெரிந்தது. லாண்டரி தெருத் திருப்பத்தில்தான். ஒரே ஓட்டத்தில் போய் வாங்கி வந்துவிடலாம். லாண்டரி பில் மூணு ரூபாய் எழுபது காசு. தேதியோ இருபத்தேழு. மணிபர்ஸில் பஸ் சார்ஜுக்கே சில்லறைகளைத் தேடும் வறட்சி. பக்கத்து வீட்டு நண்பரிடம் கடன் கேட்கலாம். பக்கத்து வீட்டு நண்பர் குருபாதம் ரிட்டயர்ட் மத்திய சர்க்கார் ஊழியர். பொழுது போக்கு - அரசாங்கத்தைக் கண்டித்து அவ்வப்போது ஆங்கிலப் பத்திரிகைகளுக்கு ஆசிரியர் கடிதங்கள் எழுதுவது. எப்போது தேடிப் போனாலும் நிறையப் பேசுவார். பேச்சு ஆரம்பமாகும். முடிப்பது எப்படி, எப்போது என்று தெரியாது. எல்லா ரிட்டயர்ட் ஆபீஸர்களுக்கும் இருப்பது போல் நேரம் நிறைய உண்டு.

அவன் தயக்கத்தோடு பனியனை மாட்டிக் கொண்டு பக்கத்து வீட்டில் நுழைந்தான். குருபாதம் பேப்பர் பார்த்துக் கொண்டிருந்தார். நுழைந்ததும் நுழையாததுமாக, "ரொம்ப அவசரம். ஒரு அஞ்சு ரூபா இருந்தாக் கொடுங்கோ! சம்பளம் வாங்கினதும், திருப்பித் தந்துடறேன்" என்று உடனே கேட்கத் தயங்கி,

"என்ன, பேப்பர் பார்த்து ஆகலையா இன்னும்?" என்று ஆரம்பித்தான். அவர் உற்சாகமாக வரவேற்றார்.

"ஆமாமா! வாங்கோ... இப்ப நிக்ஸன் அந்த சீனாவை ஐ.நா.விலே விட்டுட்டான்னா செக்யூரிட்டி கவுன்ஸில்லே வீட்டோ பவர் தைவானுக்கு இல்லைன்னு ஆயிடாதோ? ஒரே சீனவா மாஸேதுங் சீனாவையே ஒப்புத்துக்கறான்னுதானே இதுக்கு அர்த்தம்? இல்லையா?"

"சந்தேகம் என்ன? நீங்க சொல்றதுதான் சரி..."

"அப்படீன்னா பார்மோஸா, செவன்த் பிளீட் எல்லாம் என்ன ஆறது...?"

"........"

"கீஸிங்கர் ஜேம்ஸ்பாண்ட் மாதிரின்னா சீனாவுக்குப் போயிட்டு வந்திருக்கான்..."

"சும்மாவா, பின்னே...?"

"சூடான்ல பாருங்களேன்... என்னமோ நினைச்சோம்... நூமேரி நான்தான்னு நிரூபிச்சுட்டானே ஐயா..."

"ஆமாமா நீங்க சொல்றதுதான் சரி..."

தலையை ஆட்டிவிட்டுக் கைக்கடிகாரத்தைப் பார்த்தான். மணி ஒன்பது இருபது. ஒன்பதரைக்குள்ளாவது லாண்டரியிலிருந்து திரும்பினால்தான் அவசர அவசரமாக ஒரு வாய் அள்ளிப் போட்டுக் கொண்டு பஸ்ஸை ஓடிப் பிடித்துப் பத்தேகாலுக்கு ஆபீஸ் போகலாம். எனவே துணிந்து குறுக்கிட்டு,

"ரொம்ப அவசரம்... வந்து... ஒரு சின்ன ஹெல்ப்."

"புரட்சியை என்னமா ஒடுக்கியிருக்கான் பாருமேன்..."

"சும்மாவா பின்னே...?"

"நாளைக்கு இதைப் பத்தி ஒரு லெட்டர் அனுப்பலாம்னு இருக்கேன். நம்ம ஃபாரின் பாலிஸியை உடனே மாத்தியாகணும். சுத்த காயலான் கடை பாலிஸியாய்ப் போச்சு..."

"சந்தேகம் என்ன? நீங்க சொல்றது தான் சரி... இப்ப நான் வந்தது..."

"நீர் எப்ப வந்தாலும் கால்லே வெந்நீரைக் கொட்டிண்டே வர்ரீர்... என்ன அவசரம் இப்ப...?"

"ஆபீஸ் போகணுமே...? லேட்டாயிடுமே?"

"என்ன லேட்? பிரமாத லேட்.... உங்களை எவன் கேக்கறான் இப்பல்லாம். அந்த நாள்லே... பாருங்கோ... பிரிட்டீஷ்காரன்.."

"சும்மாவா பின்னே...?"

"ரெண்டு கொரியாவும்கூட ஒண்ணாகணும்னு நினைக்கிறதாமே ஐயா?..."

மணி ஒன்பது நாற்பத்தைந்து. இன்னும் குருபாதம் செவி சாய்க்கவில்லை. ஐந்து ரூபாய் கைமாற்றுக்காகக் குருபாதம் இழுத்த இழுப்புக்கெல்லாம் கொரியாவோ, சூடானோ, தைவானோ, பீகிங்கோ அங்கெல்லாம் இழுபட்டான். அவரிடம் எப்போதும் அவன் சிக்குவதில்லை. ஜாக்கிரதையாக ஞாயிற்றுக்கிழமைதான் போவது வழக்கம். மற்ற நாட்களில் போனால் தப்ப முடியாது. இன்று அழுக்குத் துணியோடு ஆபீஸ் போக மனமில்லாததால் இப்படி வகையாக வந்து மாட்டிக் கொண்டான்.

"இன்னும் அதுக்கு நீங்க பதிலே சொல்லலியே...? அதுதான் அந்த செக்யூரிட்டி கவுன்ஸில் விஷயம்..."

"எந்த ஸெக்யூரிடி கவுன்ஸில் விஷயம்?..."

"ஐ.நா. ஸெக்யூரிடி கவுன்ஸில் விஷயம்?..."

அவனுக்கு ஐ.நா. மேலும் அதன் உலக மகா சக்தி வாய்ந்த ஸெக்யூரிட்டி கவுன்ஸில் மேலும் கோபம் கோபமாக வந்தது. மணி பத்து. இனிமேல் லாண்ட்ரி போய்த் திரும்பி வந்து சாப்பிட்டுவிட்டு ஆபிஸ் போன மாதிரித்தான்.

*"மாஸேதுங்கின் சீனாவை ஐ.நா.விலே சேர்த்துண்டு, இவனே சியாங்-கே ஷேக்கை மாட்டி வச்சுடப் போறான்..."*

*"ஆமாமா... நீங்க சொல்றபடிதான் நடக்கும்..."*

*"அதில்லே ஐயா! நான் சொல்றதிலே உள்ள தாத்பரியம் உமக்குப் புரியணும்! எப்படியும் அந்தச் சீனாவை ஐ.நா.விலே சேர்க்கறதுதான் உலகத்துக்கு நல்லது... என்ன சொல்றீர்...?"*

*"ஆமாமா... நீங்க சொல்றதுதான் சரி... இப்ப நான் வந்தது..."*

*"என்னய்யா இது? ஆடிக்கொருதரம், அமாவாசைக்கு ஒருதரம் வரீர்... வந்தால் பறக்கிறீரே..."*

*"இல்லே சார் நான்... இப்ப வந்தது எதுக்குன்னா...?"*

*"எல்லாமே திடீர் திடீர்னு மாறிண்டிருக்கு... நிக்ஸன் அமெரிக்காவிலிருந்து சீனா போகப் போறான்..."*

*"சும்மாவா... பின்னே?"*

*"அதையடுத்து செஞ்சீனா ஐ.நா.விலே சேர வழி பிறக்கப் போறது..."*

*மணி பத்தே முக்கால். இனிமேல் ஆபீஸுக்கு லீவு போடுவதைத் தவிர வேறு வழியில்லை.*

*"அப்புறம் செக்யூரிட்டி கவுன்ஸிலே... வீட்டோ..."*

*- ஐ.நா. மேலும், செக்யூரிட்டி கவுன்ஸில் மேலும், சீனா மேலும் நியூஸ் பேப்பர்கள் மேலும், ரிடயர்ட் ஆபீஸர்கள் மேலும் மீண்டும் கோபம் கோபமாக வந்தது அவனுக்கு.*

**(கணையாழி, ஆகஸ்டு, 1971)**

## 112. மிகை

பார்வதிபுரம் எக்ஸ்டென்ஷன் காலனியில் சுமார் நானூறு, நானூற்றைம்பது வீடுகள் வரை இருக்கலாம். எல்லாக் காலனி வாசிகளுக்கும் அதன் தொடக்க காலத்தில் உள்ள சாலை வசதியின்மை, தண்ணீர் தட்டுப்பாடு போன்ற மனத்தாங்கல்கள் இங்கேயும் உண்டு. ஓர் இடத்தில் ஏதாவது அஸோஸியேஷன் உண்டாக வேண்டுமானால் ஒன்று அளவுக்கதிகமான குறைகள் இருக்க வேண்டும். அல்லது பரிபூரணமான வசதிகள் இருக்க வேண்டும். குறைகள் இருந்தால் 'காலனி வெல்ஃபேர் அஸோஸியேஷன்' என்றும் நிறைகள் இருந்தால் சங்கீத சபா அல்லது ரெக்ரியேஷன் கிளப் என்றும் ஏதாவது ஒரு சங்கம் தோன்றலாம். தோன்றுவதற்கு நியாயம் உண்டு.

இங்கேயும் பார்வதிபுரத்தில் இன்னும் நிறைவுகள் ஏற்படாததால் முதல் வகையைச் சேர்ந்த காலனி வாசிகளின் சங்கம் ஒன்று இருந்தது. அந்தச் சங்கத்தின் விசேஷக் கூட்டம் ஒன்றை உடனே வருகிற ஞாயிற்றுக்கிழமை காலையில் நடத்தியாக வேண்டும் என்று கமிட்டி உறுப்பினர்களில் ஏழு பேர் தமக்கு எழுதியிருப்பதாக அஸோஸியேஷன் காரியதரிசி வெங்கடராகவன் தலைவர் சாமிநாதனுக்குத் தகவல் கூறினார்.

"கூட்டம் நடத்தறதைப் பற்றி எனக்கு ஒண்ணும் ஆட்சேபணை இல்லை. ஆனால் கூட்டத்துக்கு 'அஜெண்டா' என்ன?"

"இம்மாரல் டிராஃபிக் இன் காலனி."

"என்னது? என்னது? இனனொரு தரம் சொல்லேன்..."

வெங்கடராகவன் 'அஜெண்டாவின்' ஒரே அயிட்டத்தை இன்னொரு முறை சொன்னான்.

"வெறும் 'டிராஃபிக்'குக்கே இங்கே ரோடுகள் சரியாயில்லே?... நீ சொல்ற 'டிராஃபிக்' வேற இருக்கா?"

"இருக்கும் போலத்தான் தோணறது சார்..."

"யார் சொன்னா அப்பிடி?"

"கூட்டத்தைக் 'கால்ஃபார்' பண்ணி எழுதியிருக்கிற ஏழு பேரும் நிரூபிக்கத் தயாராயிருக்கா சார்..."

"எந்தத் தெருவிலே இருக்காம் அது?"

"நம்ப அஸோஸியேஷன் டிரெஷரர் அனந்தாச்சாரி வீட்டுக்குப் பக்கத்து வீட்டிலேயே இருக்காம் சார்..."

"அனந்தாச்சாரி வீணா மனசை அலட்டிக்கிறார்... தப்பா நினைச்சு யார் பாவத்தையாவது கட்டிக்கணுமா, என்ன?"

"நேத்து ராத்திரி அவர் வீட்டிலேயே வந்து யாரோ கதவைத் தட்டிக் கலாட்டா பண்ணிட்டாங்களாம்..."

"சரி! எனக்கென்ன வந்தது? ஞாயிற்றுக்கிழமை மீட்டிங்குக்கு சர்க்குலர் அனுப்பிடு! ஆனா அஜெண்டாவிலே 'இம்மாரல் டிராஃபிக்'னு போடாதே. 'சில முக்கிய விஷயங்கள்'னு மட்டும் போட்டு அனுப்பு, போதும்."

"சரி! சார்... அப்படியே போட்டு அனுப்பறேன். நீங்க அன்னிக்குக் கண்டிப்பா வந்துடணும்..."

* * *

**ஞா**யிற்றுக்கிழமை காலை காலனி அஸோஸியேஷன் அறையில் கூட்டம் கூடியது. தலைவர் சாமிநாதன் அமைதியாக இருந்தார். கூட்டத்தை வேண்டிக் கடிதம் எழுதிய அனந்தாச்சாரி முதலியவர்கள் உணர்ச்சிவசப்பட்டுச் சத்தம் போட்டார்கள். அனந்தாச்சாரி மிகவும் கோபமாக முறையிட்டார்.

"இப்படியே விட்டுட்டா இந்தக் காலனியிலே ஒரு குடும்பஸ்தன்கூட மானமா நடமாட முடியாது. ராத்திரி பகல்னு பாராமே ஸ்கூட்டர்லியும், டாக்ஸியிலுமாக ஆள்கள் வராங்க. சிலர் குடிவெறியிலே வந்து எந்த வீடுன்னு தெரியாமே அக்கம்பக்கத்து வீட்டிலே கதவைத் தட்றாங்க. ரசாபாசமா இருக்கு; இதை உடனே போலீஸ் கமிஷனருக்கு எழுதியாகணும்."

"இந்தத் தொல்லையை ஒடுக்க முடியாட்டா நம்ம அஸோஸியேஷன் இருந்தே பிரயோசனம் இல்லே..."

"நம்ம தலைவர் சாமிநாதன் இதுக்கு ஏன் இவ்வளவு தயங்கணும்னுதான் புரியலை..."

"நீங்க சொல்றபடி இருந்தா அதைப்பற்றிக் கமிஷனருக்கு எழுதறதுலே எனக்கு ரெண்டாவது அபிப்பிராயம் கிடையாது. ஆனா நாம ஓர் அட்ரஸைக் குடுத்து அந்த அட்ரஸிலே தப்பு நடக்கறதுன்னும் எழுதி அங்கே அது நடக்கலைன்னா அதுனாலே யார் யார் மனசு புண்படும்னும் பார்க்கணும்..."

"அவா மனசு புண்படுமோ இல்லியோ உங்க மனசு இப்பவே புண்படறதாகத் தெரிகிறது..."

இதைக் கேட்டுச் சாமிநாதனுக்குக்கூடக் கொஞ்சம் கோபம் வந்துவிட்டது. அவர் கறாராக ஆனால் அதே சமயத்தில் பதறாமல் பதில் சொன்னார்.

"வீண் பேச்சு எதற்கு? நான் நம்ம அஸோஸியேஷன் சார்பில் உடனே போலீஸ் கம்ப்ளெயின்ட் தரத் தயார்; ஆனால் அதுக்கு முன்னே அந்த 123 பி மாடிக்கு ஒரு தடவை போய்ப் பார்த்து உறுதிப்படுத்திக்காம அதைச் செய்யக்கூடாது. எத்தனை பேர் என்னோட வர்றீங்க...?"

எல்லோரும் முகத்தைச் சுளித்தார்கள்.

"புகை வர இடத்திலே தீ இருக்கான்னு போய்ப் பார்த்துத்தான் தெரிஞ்சுக்கணுமோ?"

"ஆமாம்! தெரிஞ்சுக்கணும்... ஏன்னா நீங்க படற சந்தேகம் எனக்கு இல்லே..."

"அப்ப நீங்களே போய்ப் பார்த்துட்டு வாங்கோ..."

"நான் பார்த்துட்டு வந்து சொன்னா அதை நீங்க நம்பணுமே, ஐயா?"

"அந்த வீட்டுலே ஒரு மலையாளத்துக் கிழவன்இருக்கான்! அவன்தான் இதை நடத்தறானாம்."

"நான்கூட மலையாளத்தான்தான்! கிழவனுக்கு ஆகிற வயசு எனக்கும் ஆச்சு..." என்றார் சாமிநாதன்.

"நீங்களும் மலையாளம், அவாளும் மலையாளம். அதான் உங்களுக்கு க் கரிசனை வந்திட்டது போலிருக்கு...."

"நோ, நோ, சட்னு இப்படிச் சொல்லப்படாது நீங்க... இதோ இப்ப மணி பத்து... பத்தரை மணிக்கு இப்படியே நாம் எல்லோருமா அந்த 123 பி மாடிக்குப் போவோம். அங்கே நீங்க சொல்றபடி இருந்தா உடனே நானே போலீசுக்கு போன் பண்றேன்."

சாமிநாதனின் சவாலை மற்றவர்கள் ஏற்றேயாக வேண்டியிருந்தது. பத்தரை மணிக்கு எல்லோருமாகப் புறப்பட்டார்கள். போகும்போதே அங்கே இருக்கும் இரண்டு மலையாள யுவதிகள் பற்றியும் அவர்கள் தளுக்குவது, மினுக்குவது பற்றியும் ஆத்திரத்தோடு சொல்லிக் கொண்டு வந்தார் அனந்தாச்சாரி. சாமிநாதன் பதில் பேசவே இல்லை. அனந்தாச்சாரிக்குச் சாமிநாதனின் மௌனம் கோபமூட்டுவதாயிருந்தது.

"நான் இவ்வளவு சொல்றேனே; சார் அசையறாரா பாருங்களேன்...? நம்ம காலனியிலே இப்படி ஒண்ணு இருக்கும்னு அவர் நம்பவே தயாராயில்லே."

இதற்கும் சாமிநாதன் மறுமொழி எதுவும் கூறவில்லை. 123 பி மாடிப்படிக்குத் தெருவிலிருந்தே கதவு இருந்தது. சாமிநாதனைத் தவிர மற்றவர்கள் வீதியிலேயே தயங்கினர். கதவில் குருவாயூரப்பன் படம் ஒட்டியிருந்தது. சாமிநாதன்தான் கதவைத் தட்டினார்.

அனந்தாச்சாரி சொல்லிய இரண்டு மலையாள யுவதிகளில் ஒருத்தித்தான் வந்து கதவைத் திறந்தாள். அவள் நெற்றியில் மெல்லிய சந்தனக்கீற்று, அந்த நெற்றியின் பொன் நிறத்தோடு பொருந்தியிருந்தது. நீராடிய கூந்தல் மேகமாய் முதுகில் அலைய வெண்நிற

நேரியல் கட்டியிருந்தாள் அவள். கையலகச் சரிகைக் கரையுடன் கூடிய அந்த வெள்ளை முண்டு அவளுடைய அழகுக்கு அழகு செய்வதாயிருந்தது.

சாமிநாதன் மலையாளத்தில் அவளிடம் ஏதோ விசாரித்தார். அவள் அவர்களை உள்ளே அழைத்துக் கொண்டு சென்றாள். சாமிநாதன் முதலிலும் மற்றவர்கள் தயங்கித் தயங்கிப் பின்னாலுமாகப் படியேறினார்கள். மாடி முகப்பு ஹாலில் வரிசையாகப் போட்டிருந்த சோபாக்களில் அவர்களை உட்காரச் சொல்லிவிட்டுச் சாமிநாதன் மட்டும் உள்ளே போனார். போனவர் சற்று நேரத்துக்கெல்லாம் நெற்றியில் சந்தனக்கீற்றோடு திரும்பினார்.

"நீங்களும் வாருங்கள்" என்று அவரே மற்றவர்களை அழைத்தார்.

எல்லாரும் முகம் கோணியபடி சாமிநாதனைப் பின் தொடர்ந்தார்கள். சாம்பிராணி ஊதுவத்தி வாசனை கோயிலில் இருப்பது போன்ற உணர்வை ஏற்படுத்தியது.

சாமிநாதன் அவர்களை அழைத்துச் சென்ற இடம் பூஜையறை. அதில் அந்த மலையாளத்துக் கிழவர் அமர்ந்து பூஜை செய்துகொண்டிருந்தார். சிவப்பழமாக அமர்ந்திருந்தார் அவர். எல்லாரும் மறு பேச்சுப் பேசாமல் பன்னீர் இலை மேல்வைத்து அவர் கொடுத்த சந்தனத்தை வாங்கிக் கொண்டார்கள்.

"ஏண்டா சாமீ! இத்தனை வருஷத்து விரோதத்துக்கு அப்புறம் இன்னிக்காவது இங்க வர வழி தெரிஞ்சுதா உனக்கு?" என்று கிழவர் தொடங்கியதும் மற்றவர்கள் ஒன்றும் புரியாமல் ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டு விழித்தார்கள். சாமிநாதன் கூறினார் :

"மன்னிக்க வேண்டும், மிஸ்டர் அனந்தாச்சாரி! இவர் என் சிற்றப்பா சந்திரசேகரன். ரொம்ப காலமாக என் தகப்பனார் நாளிலிருந்து எங்கள் குடும்பங்களுக்குள் பகை இருந்தது. இவர் சமீபத்தில் இங்கே குடிவந்த பின்பும் நாங்கள் ஒருவருக்கொருவர் பார்த்துக் கொள்ளவில்லை. இவர் இங்கே வந்திருப்பது தெரிந்தும்கூட நான் இவரைப் பார்க்க வரவில்லை. இவருக்குத் தொழில் ஜோஸியம். இரவு பகல் பாராமல் நிறைய வியாபாரிகளும், நண்பர்களும் வாடிக்கைக்காரர்களும் ஏதாவது 'பிரச்னம்' கேட்க இவரிடம் வருவார்கள். பெண்கள் இருவரும் இவருடைய குழந்தைகள். தாயில்லாக் குழந்தைகளாக இவரால் வளர்க்கப்பட்டவர்கள். அவர்களுக்கு இன்னும் கல்யாணமாகவில்லை. உங்களால்தான் இன்று நாங்கள் சந்திக்கவும் பேசவும் நேர்ந்திருக்கிறது. இதை ஈசுவர கிருபை என்றுதான் சொல்ல வேண்டும்."

அனந்தாச்சாரிக்கும் மற்றவர்களுக்கும் முகத்தில் அசடு வழியத் தொடங்கியது. அரைமணி நேரம் பேசிக் கொண்டிருந்தபின் பெண்கள் இருவரிடமும், பெரியவரிடமும் சொல்லிக் கொண்டு புறப்பட்டார் சாமிநாதன்.

*கீழே படியிறங்குகிறவரை பெண்கள் வழியனுப்ப வந்தார்கள். யாரோடும் யாரும் பேசிக் கொள்ளவில்லை. தெருமுனை திரும்பியதும், அனந்தாச்சாரி சாமிநாதனை நெருங்கி "என்னை நீங்க ரொம்ப மன்னிக்கணும். நான் அடிமுட்டாள். பெரிய பாவம் பண்ணிப்பிட்டேன்" என்று நா தழுதழுக்க ஆரம்பித்தார். பதில் சொல்லாமல் சாமிநாதன் புன்னகை பூத்தார். சிறிது நேர மௌனத்துக்குப் பின்பே அவரிடமிருந்து பதில் வந்தது.*

*"சில விஷயங்களை நாம் மிகைப்படுத்தியே நினைக்கப் பழகி விடுகிறோம். திரித்து நினைக்கவும் பழகிவிடுகிறோம். அதனாலே வர வினை இது. நம்ம மனசு சரியாயிருந்தா எல்லாம் சரியா இருக்கும். நம்ம மனசிலேயே 'இம்மாரல் டிராபிக்' ஏற்பட்டுட்டா சுத்தி ஒழுங்காவே இருக்கிற எல்லாத்தையுமேகூட 'இம்மாரலா' நினைக்கத் தோன்றுகிறது" என்று ஆத்திரமில்லாமல் சுபாவமாகப் பதில் சொன்னார் சாமிநாதன். அவருடைய நிதானமும், தெளிவும் மிகையில்லாத அம்சங்களாயிருந்தன. 123 பிக்குப் புறப்பட்டு வரும்போது எப்படிச் சுபாவமாக வந்தாரோ அப்படியே சுபாவமாகத் திரும்பியபடியே நண்பர்களிடமும் பேசிக் கொண்டு வந்தார் அவர். முதலில் அனந்தாச்சாரியின் பரபரப்பு எப்படி மிகையாயிருந்ததோ அப்படியே இப்போது மௌனமும் மிகையாயிருந்தது.*

(கல்கி, தீபாவளி மலர், 1972)



## 113. ஒரு கிராமவாசி சுதந்தர தினத்தன்று சிறைப்படுகிறான்

ஐயனார் ஊருணியிலிருந்து நகரத்துக்குப் புறப்படும் கடைசிப் பஸ் இரவு ஏழரை மணிக்கு இருந்தது. அப்போது மணி ஏழு. வேல்சாமியின் கையில் பனைமரத்தில் நுங்குவெட்டுவதற்காகக் கொண்டு வந்திருந்த வீச்சரிவாள் இருந்தது. அரிவாளைக் கொண்டு போய்க் குடிசையில் போட்டுவிட்டுப் பஸ் ஏற நேரமில்லை. ஊருக்குள் போய் அரிவாளைக் குடிசையில் போட்டுவிட்டு வருவதற்குள் கடைசிப் பஸ் போய்விடும். அரிவாளுடனேயே நகரத்துக்குப் பஸ் ஏற அவனுக்குக் கூச்சமாக இருந்தது. நகரத்துக்குச் சென்று திரும்பும் நைப்பாசையையும் அவனால் விட முடிய வில்லை. சுதந்திரதின வெள்ளி விழாவுக்காக நகரை ஒளிமயமாக அலங்கரித்திருக்கிறார் களாம். அந்த வெள்ளி விழா அலங்காரத்தின் கோலாகலத்தைப் போய்ப் பார்க்கும் ஆசையில் மாலையிலிருந்தே கிராமத்தில் பலர் நகரை நோக்கிப் பஸ் ஏறியிருந்தார்கள்.

அதிகத் தூரமில்லை. ஒரு மணி நேரப் பயணந்தான். ஏழேகால் பஸ்ஸைப் பிடித்தால் எட்டேகாலுக்குப் போய்ச் சேர்ந்துவிடலாம். சுதந்தர தினக் கோலாகலத்தைச் சுற்றிப் பார்த்துவிட்டு இரண்டாவது ஆட்டம் படம் பார்த்தபின், பஸ் ஸ்டாண்டுக்கு வந்து கொஞ்சம் தூங்கினால் காலை நாலரை மணிக்கு முதல் பஸ்ஸில் கிராமத்திற்குத் திரும்பிவிடலாம். முடிவில் ஆசைதான் வென்றது. பனைமேட்டிலிருந்து களத்தில் குறுக்கே நடந்து மெயின் ரோட்டில் இறங்கிப் பஸ் நிற்கிற இடத்துக்கு வந்து சேர்ந்தான் வேல்சாமி. சட்டைப் பையில் மூன்று ஒரு ரூபாய்த் தாள்களும் ஐந்து பத்துப் பைசாக்களும் இருந்தன. பஸ் வந்தது; இடித்துப் பிடித்து ஏற முடிந்தும் விட்டது.

"எங்கேய்யா போவணும்? மீசையைப் பார்த்தாலே அருவா மாதிரி இருக்குது. அருவா வேறே எடுத்தாந்துட்டியே? பயமாருக்குப்பா..." என்று கேலி செய்தபடியே டிக்கட்டைக் கிழித்தான் கண்டக்டர்.

அரிவாளை வைத்துவிட்டு வந்திருக்க வேண்டும் என்று தோன்றியது வேல்சாமிக்கு.

"நுங்கு வெட்ட எடுத்தாந்தேனுங்க. மறுபடி வூட்டாண்டே போயி வச்சிட்டு வரலாம்னா அதுக்குள்ளார பஸ்ஸை விட்டுனு போயிடுவீங்க. அதான் இப்படியே வந்திட்டேன்" என்று உள்ளே எழுகிற ஒருவிதத் தாழ்வு மனப்பான்மையுடன் அந்தக் கண்டக்டருக்கு அவன் பதில் சொன்னான். மனம் நகரத்தையும் அதன் விளக்கொளி

அலங்காரங்களையும் காணும் ஆவலில் படபடத்தது. பஸ்ஸிலேயே பலர் அதைப் பற்றித்தான் பேசிக் கொண்டு வந்தார்கள்.

"இத்தினி ஸீரியல் ஸெட், அலங்காரங்களை இந்த இருபது வருசத்திலே நான் பார்த்ததில்லை. ஊரே ஜெகஜோதியா இருக்குது. முதல் சுதந்தர தினத்தன்னைக்குக் கூட நான் இவ்வளவு வெளக்குப் பார்க்கலை..."

"ஸில்வர் ஜூப்ளி இல்லியா? பின்னே...?"

வேல்சாமி பக்கத்துப் பிரயாணியை விசாரிக்கலானான். "ஒரு மணி நேரத்துலே பார்க்கணும்னா எதை எதைப் பார்க்கலாங்க?"

"பஸ் ஸ்டாண்டிலே எறங்கினதும் எதிர்த்தாப்ல முனிசிபல் ஆபீஸ் பாரு. பிரமாதமா அலங்கரிச்சிருக்காங்க. அப்புறம் பக்கத்திலேயே சுதந்திர நாள் பூங்கா. ரெயில்வே ஸ்டேஷன் எல்லாம் பாரு..."

பஸ் நகரில் நுழைந்துவிட்டது. நகரத்தின் விளக்கு ஒளிகளும், ஒலி பெருக்கிச் சப்தங்களும், ரேடியோ இசைகளும், ரோட்டைத் தேய்க்கும் டயர்களின் இழுவையும் ஒரே சமயத்தில் செவியைத் தாக்கின. கண்களைக் கூச வைத்தன.

வேல்சாமி பஸ் ஸ்டாண்டிலேயே ஓர் ஓட்டலில் இட்டலி, தோசை சாப்பிட்டு விட்டுப் பணம் கொடுக்க'கேஷ்' கவுண்டரின் அருகே போனதும் அரிவாளை எங்கேயாவது வைத்து விட்டுத்தான் மடியிலிருந்து பணம் எடுக்க முடியும் போலிருந்தது. பணத்தை வைக்க வேண்டிய மேஜையில் அரிவாளை வைத்ததும், வாங்குகிறவன் ஒருகணம் துணுக்குற்றான். மடியைத் திறந்து பணம் எடுத்துக் கொடுத்ததும், "நல்ல ஆளப்பா நீ! பில் கொடுக்கிற இடத்திலே அருவாளையா வைக்கிறது? என்னவோ ஏதோன்னு பயந்தே போனேன்" என்றான் கேஷில் இருந்தவன்.

வேல்சாமிக்கு மறுபடியும் கூச்சமாக இருந்தது. முனிசிபல் ஆபிஸ் பிரமாதமாக வண்ண வண்ணப் பல்புகளால் அலங்கரிக்கப்பட்டிருந்தது. நீரூற்றுக்கள்கூட நீலம், பச்சை, சிவப்பு, மஞ்சள் என்று நிறம் நிறமாகப் பீச்சிக் கொண்டிருந்தன. வெளியிலே ஒரு நடைபாதை ஸ்டுடியோக்காரன் பிரம்மாண்டமான மூவர்ணக் கொடியைக் கட்டிவைத்து அந்தக் கொடியோடு சேர்த்துப் போஸ்ட்கார்டு சைஸ் படம் எடுத்துக் கொள்ள மூன்று பிரதிகளுக்கு இரண்டு ரூபாய் தான் என்று கூப்பாடு போட்டு ஆள் சேர்த்துக் கொண்டிருந்தான். வேல்சாமிக்கும் அப்படி ஒரு போட்டோ எடுத்துக் கொள்ள ஆசையாக இருந்தும் பணம் குறைவாக இருப்பது காரணமாக அந்த எண்ணத்தைக் கைவிட்டான். முனிசிபல் ஆபீஸைப் பார்த்து முடிக்கிறபோதே ஒன்பதேகால் மணி ஆகியிருந்தது. சுதந்திர நாள் பூங்காவைப் பார்க்கப் புறப்பட்டான் அவன். முதல் சுதந்திர தினமான 1947 ஆகஸ்டு பதினைந்தாம் தேதிதான் இந்தப் பூங்காவை முனிசிபாலிட்டியார் இந்திய சுதந்திரத்தின் நினைவாக அமைத்தார்கள். இப்போது சுதந்திரத்துக்கும் இந்தப் பூங்காவுக்கும் இருபத்தைந்து வயதாகியிருந்தது.

பூங்காவில் மரங்களில், செடிகளில், கொடிகளில் எங்கும் வண்ண வண்ண விளக்குகள் பளிச்சிட்டன. அந்தப் பூங்காவின் நடு மையமாக மகாத்மா காந்தி சிலையொன்று உண்டு. மிகப்பெரிய அந்தப் பூங்காவின் எல்லாப் பகுதிகளையும் சுற்றிப் பார்த்துவிட்டு வேல்சாமி காந்தி சிலை அருகே வரும்போது பத்து மணிக்கும் மேலே ஆகிவிட்டது. சிலையைச் சுற்றி இருட்டாக இருந்தது. தட்டி, மூங்கிற்பாய் வைத்துக் கீழ்ப் பகுதியை மறைத்திருந்தார்கள். மேலே காந்தி சிலை இருட்டாக இருந்தது. வேல்சாமி துணுக்குற்றான். அவ்வளவு ஒளிமயமாகப் பூங்காவை அலங்கரித்தவர்கள் காந்தி சிலையை மட்டும் ஏன் இருளில் மூழ்கவிட்டு விட்டார்கள் என்பது புரியவில்லை. பக்கத்தில் இருவர் அவனைப் போலவே சந்தேகப்பட்டு அதைப் பற்றி விவாதித்துக் கொண்டு போனது அவன் காதில் விழுந்தது.

"இப்ப இருக்கிற முனிசிபல் சேர்மனுக்கு இந்தச் சிலையைப் பிடிக்காது. அதான் இருட்டிலே தவிக்கவிட்டிட்டாரு. ஏன்னா இது பழைய சேர்மன் காலத்துலே திறந்துவச்சது..."

"எந்த சேர்மன் திறந்து வச்சதானா என்ன?சிலை யாருதுங்கறதுதான் முக்கியமே ஒழிய யார் திறந்து வச்சாங்கங்கறதெல்லாம் முக்கியமில்லை. காந்தி சிலையை அலங்கரிக்காமே ஒரு சுதந்திர வெள்ளி விழா நடக்கலாமா?"

"நடக்கிறதே?"

மூன்றாவதாக எதிர்ப்பட்ட வேறொருவர் இந்த இருவரின் பேச்சில் குறுக்கிட்டார். "சே! சே! நீங்க ரெண்டு பேருமே தப்பாச் சொல்றீங்க. சிலையோட கீழ்ப்பாகம் உப்புப் பரிஞ்சி ரிப்பேர் நடக்குது. ரிப்பேர் முடியலை. அலங்கரிக்காததுக்கு அதுதான் மெய்யான காரணம். இதோ கீழே தட்டி போட்டு மூடியிருக்கிறதைப் பார்த்தாலே தெரியலை?"

அதில் எது உண்மை என்று வேல்சாமிக்குப் புரியவில்லை; எது உண்மையில்லை என்றாலும் காந்தி சிலை அப்போது இருட்டில் இருந்தது என்ற உண்மையை அவன் கண்ணாரக் கண்டான். அவன் மனம் வேதனைப்பட்டது. ஐயனார் ஊருணி கிராமத்து முச்சந்தியிலுள்ள காந்தி சிலைக்கு அவனும் மற்றக் கிராமவாசிகளும் வெள்ளிக்கிழமை தவறாமல் அகல் விளக்கு ஏற்றி 'ரகுபதி ராகவ' பாடுவது உண்டு; அந்த மரியாதைகூட இந்த முனிசிபல் காந்திக்குச் சுதந்திர தின வெள்ளி விழா நாளில் கிடைக்கவில்லை என்பதைப் பார்த்தபோது அவன் மனம் கொதித்தான். நகரங்களில் காந்தியை மறந்துவிட்டார்களா என்றுகூடத் தோன்றியது அவனுக்கு. சுதந்திரதின வெள்ளி விழாவில், சுதந்திரநாள் பூங்காவில் காந்தி இருட்டில் கிடப்பதை அவனால் பொறுத்துக் கொள்ள முடியவில்லை. இரண்டாவது ஆட்டம் படம் பார்க்கும் எண்ணத்தை அவன் கைவிட்டு விட்டான்.

உடனே அந்தப் பூங்காவிலிருந்து வெளியேறிக் கடை வீதிக்குப் போனான் அவன். இரவு பதினொரு மணிக்கு அவன் அங்கே மீண்டும் திரும்பியபோது, அவன் கையில் ஓர் அகல் விளக்கு எண்ணெய் நிரப்பப்பட்டுத் திரியிடப்பட்டு இருந்தது. அதை அவன்

*சிலையின் பீடத்தினடியிலே மூங்கில் தட்டி ஓரமாக வைத்துவிட்டுத் தீப்பெட்டியை எடுத்துப் பற்ற வைத்தான்.*

*வேல்சாமியின் பின்னால் பூட்ஸ் சத்தம் கேட்டது. அவன் தீக்குச்சியைக் கீழே போட்டுவிட்டுத் திரும்பினான். இரண்டு போலீஸ்காரர்களும் பார்க் வாட்ச்மேனும் நின்றனர்.*

*"ஏண்டா காலிப்பயலே! காந்தி சிலைக்கு நெருப்பு வைக்கவா பார்க்கிறே? அப்பவே 'வாட்ச்மேன்' வந்து சொன்னான். 'ஒரு ஆளு அருவாளும் கையுமா காந்தி சிலையைச் சுத்திச் சுத்தி வரான், பயமாயிருக்குதுன்னு. நடடா ஸ்டேஷனுக்கு."*

*"இல்லிங்க எசமான், நான்..." வேல்சாமியை அவர்கள் பேசவிடவே இல்லை. பிடரியில் கையைக் கொடுத்து ஒரு தள்ளுத் தள்ளினான் கான்ஸ்டபிள். காந்தி சிலையின் கீழே கும்பிடுவதுபோல் தலைகுப்புற விழுந்தான் வேல்சாமி.*

*அவனுடைய நெற்றியில் காந்தி சிலை அடித்தளத்தின் சிமிண்டு விளிம்பு மோதி இரத்தம் கசிந்தது. அவனுடைய விளக்கத்தைக் காதில் ஏற்றுக்கொள்ளாமலே போலீஸ் ஸ்டேஷனுக்குக் கூட்டிக் கொண்டு போய், 'காந்தி சிலையருகே நள்ளிரவில் அரிவாளும் கையுமாக வந்து நெருப்பு வைக்க முயன்றதாக'ச் சார்ஜ் ஷீட் எழுதி விலங்கு மாட்டி அவனை உள்ளே தள்ளினார்கள் போலீஸ்காரர்கள்.*

*வேல்சாமி சிறைக்குள் மௌனமாக அமர்ந்து கண்ணீர் சிந்திக் கொண்டிருந்த போது முனிசிபல் கட்டிடத்தின் வாசலிலிருந்து,*

"ஆடுவோமே பள்ளுப்்
பாடுவோமே
ஆனந்த சுதந்திரம் அடைந்து
விட்டோமென்று ஆடுவோமே..."

*என்று ஒலிபெருக்கியின் மூலம் பாட்டு எழுந்து ஒலிக்கத் தொடங்கியது. இருண்ட சிறையின் மூலையில் ஓர் இந்தியக் கிராமவாசி விலங்கு பூட்டிய தன் கைகளோடு குத்த வைத்து உட்கார்ந்து அழுது கொண்டிருந்தான். அந்தச் சுதந்திர வெள்ளிவிழா நாளில் அவன் மட்டுந்தான் தனியாக அழுதானா? இல்லை! பூங்காவின் இருளில் ஓர் உத்தமனின் சிலையுங்கூட அழுதிருக்கக்கூடும், கற்களுக்கும் அழும் சக்தி இருக்குமானால்.*

**(கலைமகள், தீபாவளி மலர், 1972)**

## 114. ஒரு கவி இந்த வழியாகத்தான் நடந்து செல்வான்

**கா**தல் பிறந்தபின் கடிதங்களைப் பரிமாறிக் கொள்வார்களா அல்லது கடிதங்களைப் பரிமாறிக் கொண்டபின் தான் காதலே பிறக்குமா என்பதெல்லாம் அவளுக்குத் தெரியாது. அவளைப் பொறுத்த வரை கடிதம் பிறந்தபின்புதான் காதல் பிறந்தது. பனியும் இருளும் பிரியாத ஒரு மார்கழி மாதத்து வைகறையில் சாக்கடையும், அசுத்தமும் நிறைந்த தங்கள் வீட்டு முகப்பில் அவள் கீழே குனிந்து கோலம் போட்டுக் கொண்டிருந்தபோது கோலத்தின்மேல் பூ உதிர்வது போல் அந்தக் கடிதம் உதிர்ந்தது. நிமிர்ந்து பார்த்தால் அவன் திரும்பி நோக்கிச் சிரித்துவிட்டுப் போனான். அவனை அவளுக்குத் தெரியும். ஆனால் அவன் இப்படி ஒரு காரியம் செய்கிற அளவு துணிந்தவன் என்பது இதுவரை அவளுக்குத் தெரியாது. "கல்லூரிப் படிப்பைப் பாதியில் விட்டுவிட்டுச் சினிமாவுக்குப் பாட்டு எழுதப் போகிறேன் பேர் வழியே என்று சுற்றிக் கொண்டிருக்கிறான்" என்று அவள் தந்தை ஒருநாள் அவனைப் பற்றி அம்மாவிடம் தெருவைச் சுட்டிக்காட்டிச் சொல்லி விமர்சித்ததை அவள் கேட்டிருந்தாள்.

ஆனாலும் அவன்மேல் அவளுக்கு என்ன காரணத்தாலோ ஓர் அநுதாபம். அது அநுதாபமா, தாபமா, பரிவா என்பதெல்லாம் முதலில் அவளுக்குப் புரியவில்லை. ஒல்லியாக, சிவப்பாக, உயரமாக ஒளி மின்னும் கண்களும் கூரிய நாசியும், லெனின் தாடிபோல் முகத்தில் குறுந்தாடியுமாக அவன் தெருவில் வரும்போதெல்லாம் தன் அறை ஜன்னல் வழியே அவள் அவனைப் பார்த்திருக்கிறாள். அப்படி அவனை அவள் பார்த்த இரண்டொரு வேளைகளில் அவன் பார்வையும் அவளைச் சந்தித்ததுண்டு. அதன்பின்புதான் ஒருநாள் அந்தக் கடிதத்தை எழுதி அவன் அவளுடைய கோலத்தின் மேல் போட்டுவிட்டுப் போனான்.

"சாக்கடை நீரும் சேறும் சகதியுமான இந்தச் சந்தில் உன் தந்த நிறக் கைகளால் நாள் தவறாமல் கோலம் போட்டுப் பூப்பறித்து நடுகிறாயே; இதெல்லாம் யாருக்காக என்று நான் தெரிந்து கொள்ளலாமா?" என்று நடுவாக ஒரு கேள்வி மட்டுமே எழுதியிருந்தது அந்தத் தாளில். அதை ஒரு கடிதம் என்றுகூடச் சொல்ல முடியாது. கையெழுத்து இடப்படாதது எப்படிக் கடிதமாக முடியும்! மறுநாள் அவளும் அதேபோல ஒரு தாளை எடுத்து அதில் :

"ஒரு கவி நடந்து போகிற பாதையை அலங்கரிக்க வேண்டாமா? அதனால் தான் நாள் தவறாமல் கோலம் போடுகிறேன்" - என்று எழுதி மடித்துக் கோலப் பொடி டப்பாவில் எடுத்துச் சென்று அவன் அந்தப் பாதையாக வரும் போது அவன்

பார்வையில் படும்படி கோலத்தின்மேல் வைத்தாள். அவனும் சிரித்தபடியே குனிந்து, கவனமாக அதை எடுத்துக் கொண்டு போனான்.

அதற்கு அடுத்த நாள் காலையில் மீண்டும் அவன் ஒரு துண்டுத்தாளில் 'ஒரு கவி நடந்து போகும் தெருவைச் சாக்கடையும் சேறும் சகதியும் அலங்கரிப்பதைவிட அதிகமாக நீ அலங்கரித்து விட முடியும் என்றுகூட நினைக்கிறாயா?' என்று எழுதிப் போட்டு விட்டுப் போனான். இதற்கு என்ன பதில் எழுதுவதென்று அவளுக்குத் தெரியாததால் அவள் ஒன்றும் எழுதவில்லை. மறுநாள் காலை அவளுடைய கோலத்தையே பார்த்துக் கொண்டு தெருவில் நடந்து வந்து அவன் ஏமாந்து போனான்.

அதற்கு அடுத்த நாளன்று அவன் அவளுக்காக எழுதிப் போட்ட துண்டுத்தாளில், 'தெருவில் எழுத நேரம் இருக்கிறதே; எனக்கு எழுத நேரம் இல்லையா, மனம் இல்லையா?' என்று இருந்தது.

"தெருவில் எழுதுவதே உங்களுக்காகத்தான். ஒரு இளங்கவி நடந்து போகும் பாதை இது! இதைச் சூனியமாக விட்டுவிடக்கூடாதென்றுதான் நான் கோலமே போடுகிறேன்" என்று அதற்குப் பதில் எழுதி மடித்து அவனை அடையச் செய்தாள் அவள்.

நாலைந்து நாள் கழித்து ஒருநாள் இருந்தாற்போலிருந்து வீட்டுக்கூடத்தில் அப்பாவும் அவனும் பேசிக் கொள்ளும் குரலைக் கேட்டு எட்டிப் பார்த்தாள் அவள். அவள் பார்க்கும்போது அப்பா அவனுக்கு ஏதோ அறிவுரை சொல்லிக் கொண்டிருந்தார். "இதோ பார் ரகு! நீ படிப்பைப் பாதியிலே நிறுத்தினது எனக்குக் கட்டோடு பிடிக்கவில்லை. கனவுலகத்திலே வாழ முடியாது. நீ இன்னும் கொஞ்சம் 'ப்ராக்டிகலா' இருக்கணும். இந்தக் கவிகள் மகாநாடு, இலக்கியக் கூட்டம், இதையெல்லாம் வேற யாராவது வசதியா இருக்கறவங்ககிட்டே விட்டுடு."

"வசதியாயிருக்கறவங்க இதையெல்லாம் எங்கே மாமா கவனிக்கிறாங்க? உங்க மாதிரி என் மாதிரி இந்தச் சாக்கடைச் சந்திலே குடியிருக்கிற மத்தியதரவர்க்கம்தான் வீட்டுக் கவலைகளோடு இந்தக் கவலையையும் சேர்த்துப்பட வேண்டியிருக்கு."

"நல்லாப் பேசறே நீ! இத்தனை சாமர்த்தியமும் தொடர்ந்து மேலே படிக்கிறதுக்குப் பயன்பட்டிருந்தால் நான் சந்தோஷப்படுவேன். உனக்குப் படிக்கணுங்கற ஆசை ஏன் இல்லே? இப்ப என் பெண் ராஜி இருக்கா, அவ படிப்பை நான்எஸ்.எஸ்.எல்.ஸி.யோட நிறுத்திட்டேன். ஏன்னா என்னிக்கிருந்தாலும் அவள் கல்யாணமாகி இன்னொருத்தன் வீட்டுக்குப் போகப் போறவள். நீ அப்பிடி இல்லை பாரு? உங்க அப்பா இன்னும் ரெண்டு வருஷத்திலே ரிடையர் ஆயிடுவார். அதுக்குள்ளே நீ ஒரு வேலைக்குப் போகலேன்னா உங்க குடும்பம் கஷ்டப்படும்."

"உலகமே ஒரு பெரிய கஷ்ட ஜீவனக் குடும்பம்தான் மாமா! அதை நினைத்துக்கொண்டே நாம் 'வீப்பிங் பிலாஸபி' அதாவது அழுகுணிச் சித்தர் வேதாந்தம் பேசிக்கொண்டிருக்கக் கூடாது."

இந்த இடத்தில் தன் அறையிலிருந்தபடியே அவனுக்காக ஒரு கரகோஷமே செய்யலாம் போலிருந்தது ராஜிக்கு. அவன் பயப்படாமல் எதிர்த்துப் பேசினான். வயது, மூப்பு என்று தயங்காமல் மனத்தில் பட்டதை எல்லாம் பளிச் பளிச்சென்று சொல்லி அப்பாவை மேலே பேசவொட்டாமல் திணற அடித்துக்கொண்டிருந்தான் அந்தக் கோபக்கார இளங்கவிஞன்.

அவன் பேச்சைக் கேட்கக் கேட்க ராஜிக்குக்கூடத் துணிச்சல் வந்தது. மெதுவாகத் தன் அறையிலிருந்து நழுவிச் சமையலறைக்குப் போய், "ஒரு காபி கலந்து குடும்மா! இந்த அப்பாவுக்குக் கொஞ்சம்கூட இங்கிதமே தெரியலை. இத்தனை நாழியாகப் பேசிக் கொண்டிருக்கிறாரே, 'ஒரு காப்பி சாப்பிடேன்' என்று சொல்கிறாரா, பாரேன்!" என்று அம்மாவிடம் சொல்லிக் காபி கலந்து வாங்கிக் கொண்டு போய் அப்பாவுக்கும் அவனுக்கு நடுவிலிருந்த ஸ்டூலில் வைத்து விட்டு அவனை நோக்கி இரகசியமாக அவனுக்கும் மட்டும் புரியும் அர்த்தத்தில், 'இந்த வீட்டில் உன்னை மதிக்கவும் உனக்காக உருகவும் உனக்காக ஏங்கவும்கூட ஒரு ஜீவன் இருக்கிறது' என்று புன்னகை மூலம் புலப்படுத்தி விட்டுத் திரும்பினாள் ராஜி.

மறுநாள் அதிகாலையில் அவள் எதிர்பார்த்ததுபோலவே அவளுடைய கோலத்தின் மேல் அவன் மடித்துப் போட்ட தாள் விழுந்தது. "நாளைய உலகத்துக்குக் காப்பியம் பாடப் போகும் எனக்குக் காபி போட்டுக் கொண்டு வந்து கொடுத்ததற்கு நன்றி. உன் கையால் காபி சாப்பிட்ட அதிர்ஷ்டமோ என்னவோ, நேற்று என்னுடைய பாடல் ஒன்று ஒரு படத் தயாரிப்பாளரால் ஏற்றுக்கொள்ளப்பட்டிருக்கிறது. அடுத்த வாரம் ரேடியோவில் என் கவிதைகள் சிலவற்றை நானே சொல்லி விளக்கப் போகிறேன். ஞாயிறு இரவு எட்டேகால் மணிக்கு அதை நீ கேட்கலாம். கேட்க வேண்டும். கேட்டால் நான் சந்தோஷப்படுவேன்."

அன்றிலிருந்து அடுத்த வாரம் என்பது ஞாயிற்றுக்கிழமையாகவே அவளுக்குள் மாறியிருந்தது. அடுத்த வாரத்திலிருந்து ஞாயிற்றுக்கிழமையைத் தவிர மற்ற எல்லாக் கிழமைகளுமே தொலைந்து தவிர்ந்து போய்விடக்கூடாதா என்றுகூட அவள் எண்ணினாள். அந்த ஒரு வாரத்துக்கு மட்டும் ஞாயிற்றுக்கிழமை ஒன்றே கிழமையாயிருக்க வேண்டும்போல் தோன்றியது அவளுக்கு.

அந்த ஞாயிற்றுக்கிழமையும் வந்தது. ரேடியோ அடியிலேயே பழி கிடந்து அந்தக் கவிதைகளைக் கேட்டாள் அவள். அதில் ஒரு கவிதை தெருவில் கோலமிடும் பெண்ணைப் பற்றி இருந்தது. தன்னை நினைத்து அவன் அதை எழுதியிருக்க வேண்டும் என்று அவளுக்குத் தோன்றியது. அதில் ஒரு பாடலில் பல வரிகள் திரும்பத் திரும்பச் சொல்லி அவளுக்கு மனப்பாடமே ஆகிவிட்டன.

**"ஞாலம் எழும் தனி வேளையிலே ஒரு**
**ஞாயிறு கிழக்கினில் முளைக்கையிலே**
**காலம்எனும் தேர்ச் சாலையிலே ஒரு**
**காலை புலர்ந்து புவி மலர்கையிலே**

கோலம் இடும் பெண்ணிவள் கைகளினால்
கூட்டி இழுத்தே வரைகின்றாள்
நீலமுகில் தரு நீளவிசும்பிற் கதிரவனே
நீ வரவேணும் நீ வரவேணுமென்றே"

அவளோடு அமர்ந்து அதே கவிதையைக் கேட்ட அவள் தந்தை. "பயல் நன்றாகத்தான் பாடியிருக்கிறான். ஆனால் வயசுக்கு மீறின கற்பனை. இந்தக் காலத்திலே எல்லாமே இப்படித்தான் பிஞ்சில் பழுக்கிறதுகள்" என்றார் அவர். அவனை எவ்வளவுக்கு எவ்வளவு கிண்டல் செய்தாரோ அவ்வளவுக்கு அவ்வளவு அவளுக்கு அவன் மேல் பிரியம் ஏற்பட்டது. மறுநாள்அவள் அவனுக்கு எழுதினாள்.

"உங்கள் கவிதைகளை - உங்கள் குரலை ரேடியோவில் கேட்டேன். என்னைப் பற்றிக்கூடப் பாடினீர்கள். அந்தக் 'கோலமிடும் பெண்' நான்தானே?"

அவன் அவளுக்குப் பதிலும் எழுதினான் : "கோலமிடும் பெண் மட்டுமில்லை. என் கவிதைகளிலும் வாழ்விலும் எதிர்ப்படும் ஒரே பெண் நீதான். ஒவ்வோர் இளைஞனையும் யாராவது ஒரு பெண் கவியாக்கி விடுகிறாள். என்னை நீ கவியாக்கியிருக்கிறாய். உனக்குத் தெரியுமோ தெரியாதோ, ஜன்னல் வழியே தெரியும் பூர்ண சந்திரிகை போன்ற உன் குறுகுறுப்பான முகத்தை, கண்களை, இதழ்களை, புன்னகையை, கோலமிடும் கைகளை, நீ குனியும் அழகை, நிமிரும் நேர்த்தியை, அவ்வப்போது நேரும் அவயவங்களின் வனப்பை ரசித்து ரசித்தே நான் கவியானேன். நான் கவியாயிருக்கிறேன் என்பதைவிட என்னுள் நீ கவியாக வந்து தங்கியிருக்கிறாய் என்று சொல்வதே பொருத்தமாயிருக்கும். உன்னால் எனக்குக் கவிதை வருகிறது. உன் அப்பாவால் என் கவிதைகள் போய்விடுகின்றன. 'வாட்டர் ப்ரூஃப்' கடிகாரம் என்பதுபோல் 'கவிதை ப்ரூஃப்' மனம் அவருக்கு."

அவன் பாடல் எழுதிய அந்தப் படம் ரிலீஸானதுமே அவள் போய்ப் பார்த்துவிட்டு வந்தாள். டைட்டில்கள் காண்பிக்கும்போது அவன் பெயரையும் காண்பித்தபோது அவளுக்கு மிகவும் மகிழ்ச்சியாயிருந்தது. அம்மாவும் அந்தப் படத்துக்கு அவளோடு வந்திருந்தாள். "வசந்தகாலத்துப் பின்னிரவுகளே, நீங்கள் மீண்டும் மீண்டும் வர வேண்டும்" என்ற அவனுடைய அந்த ஒரு பாட்டு மட்டுமே அந்தப் படத்திலேயே சிறப்பாக அமைந்திருப்பதாய் அதைப் பார்த்தபோது அவளுக்குத் தோன்றியது. அந்தப் படம் ரீலீஸான மறு ஞாயிற்றுக்கிழமை மத்தியானம் யாரோ எதிர்பாராத விதமாக அவளைப் பெண் பார்க்க வந்தார்கள். சாதாரணமாக ஒரு மத்திய தரக் குடும்பத்துப் பெண் எப்படித் தன் உணர்ச்சிகளை மறைத்துக்கொள்ள முடியுமோ அப்படியே அவளும் தன் உணர்ச்சிகளை மறைத்துக்கொண்டாள். பெண்பார்க்க வந்தவர்கள் பாடச் சொன்னார்கள், பாடினாள். வந்தவர்களுக்கு அவளைப் பிடித்திருந்தது. தொடர்ந்து சில வாரங்களுக்குள் கல்யாணம் நிச்சயமும் ஆகிவிட்டது.

அந்தக் கல்யாணம் நிச்சயமான பின் வீட்டில் அவளை அதிகம் வெளியே நடமாடவிடவில்லை. கல்யாணத் தேதிக்குள் அவனை எப்படியும் ஒருமுறை பார்த்துவிட வேண்டும் போல் ஆசையாயிருந்தது அவளுக்கு. தினம் காலையில் கோலம்போட அவள் போக முடியாதபடி அம்மாவே முன்னால் எழுந்திருந்து வாசல் தெளித்துக் கோலத்தைப் போட்டு முடித்துக் கொண்டிருந்தாள். நடுவே ஒரு மூன்று நாள் அவள் கோலம் போடப் போகமுடியாதபடி அறையிலேயே இருக்க வேண்டியதாயிற்று. கல்யாணத் தேதிக்கு இடையூறின்றி முன்கூட்டியே அவள் உட்கார்ந்ததில் அம்மாவுக்குப் பெரிய நிம்மதி.

அவள் குளித்த தினத்தன்று காலை அறையில் ஈரத்தலைக்குச் சாம்பிராணிப் புகை போட்டுக் கொண்டிருந்தாள். கல்யாண வேலைகளுக்காக ஒருமாதம் ஆபீஸுக்கு லீவு போட்டிருந்த அப்பா பிரஸ்ஸிலிருந்து அச்சடிக்கக் கொடுத்திருந்த திருமணப் பத்திரிகைகளை வாங்கி வரப் போயிருந்தார். அம்மா தெருக்கோடியிலிருந்த கறிகாய்க் கடைக்குப் போயிருந்தாள். ஏனோ இன்னும் திரும்பவில்லை.

கால்மணி கழித்து அம்மா திரும்பி வந்தபோது தற்செயலாக ராஜியிடம் அந்தச் செய்தியைச் சொன்னாள் :

"ராஜி, சமாசாரம் தெரியுமோ? அந்தப் பிள்ளை ரகு - அதான் கவி கிவி எழுதிண்டிருக்குமே, அது இன்னிக்குக் காலம்பர மெயின் ரோட்டில் ஏதோ யோசனையிலே பராக்குப் பார்த்திண்டே போயிருக்கு... பஸ் மோதி அங்கேயே உயிர் போயிடுத்தாம். ரொம்பக் கண்ணராவி... அவா வீட்டிலே ஒரே அழுகுரல். பால்யச் சாவோல்லியோ...? யாருக்குத்தான் தாங்கிக்க முடியும்?"

அவள் இதயமே நின்றுவிடும் போலிருந்தது. நல்லவேளையாக அவள் தலைவிரி கோலமாக முகத்தை மறைத்துக்கொண்டு புகைகாட்டியபடி இருந்ததால் கண்களில் நீர் சுரப்பதை அம்மா பார்த்துவிடாமல் மறைத்துக் கொள்ள முடிந்தது.

"அவா வீட்டு முன்னாலே தெருவே கூடியிருக்கு. இன்னம் ஆஸ்பத்திரியிலேர்ந்து கொண்டு வரலியாம்..."

அம்மாவுக்கு அவள் பதிலே சொல்லவில்லை. அவளையும் மீறி ஒரு விம்மல் வெளியேறப் பார்த்தது. சிரமப்பட்டு அடக்கிக் கொண்டாள். கண்களில் நீர் மல்குவது மட்டும் நிற்கவே இல்லை. உலகின் வெளிப்படையான போர்வைகளும், மரபுகளும் கற்பிதங்களும் குறுக்கிட்டுத் தடுக்க முடியாத அவளுடைய உள்ளந்தரங்கத்தில் தான் அந்தக் கணமே விதவையாகிவிட்டாற்போல் தோன்றியது. ஆம்! கல்யாணத்துக்கு முந்தியே விதவையாகிவிட்டது போல உணர்ந்தாள் அவள். அந்த உணர்வை அவளால் அப்போது தவிர்க்க முடியவில்லை.

**(சுதேசமித்திரன், தீபாவளி மலர், 1972)**

## 115. தேனிலவும் ஒரு சாமியாரும்

**சா**மியார்களையும், துறவிகளையும், பண்டாரங்களையும் கண்டால் சண்முகசுந்தரத்துக்கு அறவே பிடிக்காது. பள்ளிப் பருவத்திலிருந்து கல்லூரியில் கற்கும் நாட்கள் வரை இந்தச் சாமியார் வெறுப்பு உணர்ச்சி என்ன காரணத்தினாலோ அவனுள் முறுகி வளர்ந்திருந்தது. இன்னும் அது குறையவில்லை என்றுதான் சொல்ல வேண்டும். திருமணத்தின்போதும், மாலையில் வரவேற்பின்போதும் பிரேமாவின் குடும்பத்தாருக்கு வேண்டிய சாமியார்கள் சிலர் வந்திருந்தார்கள். அவர்களிடம்கூட அவன் சுமுகமாக நடந்து கொள்ளவில்லை. தன் மனைவியின் குடும்பத்தாருக்குச் சில சாமியார்களைத் தெரிந்திருக்கிறது என்பதையே சகித்துக் கொள்ள முடியாதவனாக இருந்தான் அந்த இளம் மாப்பிள்ளை. பிரேமா அந்தச் சாமியார்களின் பாதங்களைத் தொட்டு வணங்குவதற்காகக் குனிந்தபோது அவனெதிரே கைகுலுக்கித் தன் திருமணத்தை வாழ்த்த வந்திருந்த நவநாகரிக நண்பர்களிடம் பேசுகிற சாக்கில் ஒதுங்கிவிட்டான். சாமியார்களைப் பொருட்படுத்தவுமில்லை; வணங்கவும் இல்லை.

“ஏதேது? ரிஸப்ஷனில் ஒரே சாமியார் மயமாய் இருக்கிறதே?” என்று ஒரு நண்பன் அவனைக் கேட்டதற்கு, “என் மாமனார் ஒரு சாமியார்ப் பைத்தியம். அவரே முக்கால் சாமியார்னு சொல்லலாம்” என்பதாகச் சிரித்துக்கொண்டே மெதுவான குரலில் பதில் சொல்லியிருந்தான் சண்முகசுந்தரம். நண்பன் அதோடு விடவில்லை.

“ஆமாம்! அவர் கால் வாசியாவது சாமியாராக இல்லாமல் இருந்ததால்தான் உனக்கு இப்படி ஒரு பெண்ணைப் பெற்றுக் கட்டிக் கொடுத்திருக்காரு. இல்லாட்டி நீயும்...” என்று கிண்டலில் இறங்கினான்.

“பெரியவங்க தப்பா நினைச்சுக்கப் போறாங்க. ஒப்புக்காவது கும்பிடறாப்பல நடியுங்க” என்று சாமியார்கள் வந்து போனவுடன் பிரேமா அவன் காதருகே கொஞ்சலாகச் சொல்லிப் பார்த்தாள். அவனோ பிடிவாதமான குரலில், “அது மட்டும் நடக்காது! இந்தியாவைப் பிடித்த துரதிர்ஷ்டமே பிச்சைக்காரங்களும், சாமியாருங் களும்தான். கல்லூரியிலே படிக்கிறப்போ நானும் என் நண்பர்களும் நடத்திய பல பகுத்தறிவு விவாதக் கூட்டங்களிலே இதை நாங்க கடுமையா விமர்சிச்சிருக்கோம். உனக்கு இதைப் பத்தி ஒண்ணும் தெரியாது. நீ சும்மா வாயை மூடிக்கிட்டு இரு. உங்க குடும்பமே ஒரு சாமியார்க் குடும்பம். அதனாலேதான் நீ இப்பிடிப் பேசறே” என்று அவள் வாயை அடக்கிவிட்டான். அதன்பின் அவள் பயந்து, பேசாமல் இருந்து விட்டாள். திருமணம் முடிந்து இரண்டு மூன்று நாள் கழித்துப் பிரேமாவும் அவளுடைய கணவன் சண்முகசுந்தரமும் தேனிலவு புறப்படுகிற தினத்தன்றுகூட இந்தச் சண்டை தொடர்ந்தது.

மணமகள் பிரேமாவின் குடும்பம் தெய்வபக்தி நிறைந்தது. மணமகன் சண்முக சுந்தரத்தின் குடும்பமும் அப்படித்தான் என்றாலும் சண்முகசுந்தரம் மட்டும் புதுமைவாதியாக உருவாகியிருந்தான். தன்னைப் பகுத்தறிவு மார்க்கக்காரன் என்று சொல்லிக் கொண்டான்.

"தேனிலவுக்கு எங்கே போகலாம்?" என்று தனியறையில் அந்தரங்கமாகப் பேசிக் கொண்டிருந்தபோது பிரேமா அவனைக் கேட்டாள்.

"எங்கே வேணும்னாலும் போகலாம். ஆனால் கோயில், குளம், சாமியார், மடம், அது இதுன்னு எதுவும் இல்லாத ஊராப் பார்த்துப் போகணும்."

"ஏன்? அவங்க இருந்தா உங்களுக்கு என்னவாம்? அவர்கள் பாட்டுக்கு இருந்திட்டுப் போறாங்க."

"அதுக்கில்லே; அப்பிடி ஊர்னாலே எனக்குப் 'போர்' அடிக்கும்."

"அது மாதிரி எல்லாம் இல்லாத ஒரு ஊரை இனிமே நீங்கதான் புதுசா உண்டாக்கணும்." இதைச் சொல்லி விட்டுச் சண்முகசுந்தரத்தின் முகத்தை ஏறிட்டு நோக்கிச் சிரித்தாள் அவள்.

அவர்கள் நீண்டநேர விவாதத்துக்குப்பின் கரடிமலைக் கோடை வாசஸ்தலத்தில் போய் ஒருவாரம் தேனிலவை அனுபவிப்பது என்று முடிவு செய்தார்கள். அப்போது கோடைக்காலம் இல்லை என்பதால் கரடி மலையில் கூட்டமும் இராது என்று தோன்றியது. கரடிமலை அவ்வளவு பெரிய கோடைவாச நகரமும் அல்ல. சில ஆண்டுகளுக்கு முன் அங்கே கட்டப்பட்ட ஓர் அணைக்கட்டு, மின்சார உற்பத்தி நிலையம் ஆகியவற்றால்தான் அது ஒரு சிறிய ஊராகி இருந்தது. அரசாங்கத்துக்குச் சொந்தமான ஒரு சுற்றுலா மாளிகையும் அங்கே இருந்தது. சுற்றுலா மாளிகையில் அதிக அறைகள் இல்லை என்பதால் முன் ஜாக்கிரதையோடு ஓர் அறைக்காகத் தந்தி மூலம் ஏற்பாடு செய்தான் சண்முகசுந்தரம். அறை கிடைத்துவிடும் என்று உறுதியாயிற்று.

சென்னையிலிருந்து கரடி மலைக்குப் போக இரண்டு மார்க்கங்கள் இருந்தன. சென்னையிலிருந்து ரெயில் மூலமாகக் கரடி மலை ரோடு ரெயில்வே நிலையம் வரை பிரயாணம் செய்து அடிவாரத்தில் இறங்கி அங்கிருந்து அறுபது மைல் வரை மலைச்சாலைகளில் பஸ் மூலமோ, கார் மூலமோ பயணம் செய்து போகலாம்; அல்லது சென்னையிலிருந்தே நேராகக் கரடி மலை செல்கிற அரசாங்க எக்ஸ்பிரஸ் பஸ் மூலம் பயணம் செய்யலாம். சில நூறு மைல் தொலைவு தொடர்பாக பஸ்ஸில் பயணம் செய்வதிலுள்ள சிரமத்தைப் புரிந்து கொண்டு அப்படிச் செய்ய வேண்டாம் என்று கருதினர் புது மணத்தம்பதிகள். கரடி மலை ரோடு ரெயில் நிலையம் வரை புகைவண்டிப் பயணம் செய்து அப்புறம் மலைமேலுள்ள அறுபது மைல் தொலைவைப் பஸ்ஸில் போய்க்கொள்ளலாம் என்று முடிவு செய்து கொண்டார்கள் அவர்கள். ரெயிலில் புதுமணத் தம்பதிகளுக்கு வசதியான 'கூபே' முதல் வகுப்புப் பெட்டியே கிடைத்துவிட்டதால் சண்முகசுந்தரத்தின் மகிழ்ச்சி இரட்டிப்பாகியது.

கரடி மலைக்கு அடிவாரத்து ரெயில் நிலையத்திலிருந்து புறப்படும் மாலை ஐந்து மணி பஸ்தான் கடைசி பஸ். அது மலையுச்சியை அடைய இரவு எட்டரை மணி ஆகிவிடும். அவர்கள் பிரயாணம் செய்த ரயில் கரடி மலை ரோடு ரெயில் நிலையத்தை அடையும்போது பிற்பகல் நாலே முக்கால் மணி ஆகியிருந்தது. ரெயிலிலிருந்து இறங்கியதும் நிலைய வாயிலில் பிரயாணிகளை எதிர்பார்த்துத் தயாராகக் காத்திருந்த பஸ்ஸில் அவர்கள் ஏறிக் கொண்டார்கள்.

அது நல்ல குளிர்காலத்தின் ஆரம்பமாகையால் அடிவாரத்திலிருந்த ரெயில் நிலையத்தில் இறங்கியபோதே காற்றுச் சில்லென்று வந்து முகத்தில் உராய்ந்தது. காதுகள் வெடவெடத்தன. ஐந்து மணிக்கே இருட்டி விட்டாற்போல வானம் மூடிக் கொண்டிருந்தது. பஸ் புறப்படச் சிறிதுநேரம் ஆகுமென்று தெரிந்ததனால் பிரேமாவையும் அழைத்துச் சென்று எதிரே இருந்த உணவு விடுதியில் தேநீர் குடித்துவிட்டு வந்தான் சண்முகசுந்தரம்.

பஸ் புறப்பட்டது. சாலை வளைந்து வளைந்து மேலே ஏற ஏறக் குளிரும் ஈரவாடையும் அதிகமாயின. நாலு திருப்பங்களில் திரும்பி ஆயிரம் ஆயிரத்தைந்நூறு அடி உயரம் ஏறுவதற்குள்ளேயே பஸ்ஸில் இரண்டொருவர் வாந்தி எடுத்து விட்டார்கள். முன்னெச்சரிக்கையாக ரெயில் நிலைய வாசலில் இருந்த சர்பத் கடையில் பிரேமாவுக்கு ஓர் எலுமிச்சம் பழம் வாங்கிக் கொடுத்திருந்தான் சண்முகசுந்தரம்.

"வாந்தி வருகிறாற்போலிருந்தால் இந்த எலுமிச்சம் பழத்தை மோந்து பார்! சரியாயிடும்" என்று அவளிடம் சொல்லியிருந்தான் அவன். குளிர் அதிகமாயிருந் தாலும் பயணம் உல்லாசமாயிருந்தது. பஸ்ஸின் வலப்பக்கம் மூன்றாவது வரிசையில் இருவர் மட்டுமே அமர முடிந்த இருக்கை ஒன்றில் சேர்ந்து உட்கார்ந்து பயணம் செய்தார்கள் அவர்கள். பஸ்ஸில் அதிகக் கூட்டம் இல்லை. அவர்களுக்கு முன் இருக்கை பின் இருக்கை இரண்டுமே காலியாக இருந்தன. அதனால், அவர்கள் இஷ்டம்போல் சிரித்துப் பேசியபடி பயணம் செய்ய முடிந்தது. சிரிப்பும் கும்மாளமும் பஸ்ஸையே கலகலக்கச் செய்தன.

பஸ் ஐயாயிரம் அடி உயரமுள்ள பகுதிக்கு வந்ததும் அங்கே ஒரு சிறிய ஊர் இருந்தது. அந்த ஊர் பஸ் ஸ்டாண்டில் பத்து நிமிஷம் பஸ் நின்று மறுபடி புறப்பட்டபோது அவர்களுக்கு முன்புறம் இருந்த ஸீட்டின் ஓரமாகக் காவி ஜிப்பா, காவி வேஷ்டி கோலத்தில் இளம் சாமியார் ஒருவர் ஏறி உட்கார்ந்தார். அவருடைய கழுத்தும் பிடரியுமே பின்னாலிருந்து பார்த்தால் தெரிந்தன. அந்தக் கழுத்தின் பின்புறம் அரிநெல்லிக்காய்ப் பருமனுக்குப் பாலுண்ணி போல் ஒரு தடிப்பு இருந்தது. ஏறி அமர்ந்திருப்பவர் சாமியார் என்பதாலும், தங்கள் தனிமைக்கு இடையூறாக அவர் வந்தவர் என்பதாலும் சண்முகசுந்தரத்திற்குத் தாங்க முடியாத ஆத்திரம் அந்தச் சாமியார் மேல் மூண்டுவிட்டது; வெறியும் கிளம்பிவிட்டது.

தனக்கு முன்னால் உட்கார்ந்திருப்பவர் காது கேட்கும்படியே சாமியார்களைத் திட்டிப் பேசத் தொடங்கிவிட்டான் அவன்.

"மெல்லப் பேசுங்க! அவர் காதிலே விழப் போகுது."

"விழுந்தா விழட்டுமே! யார் பயப்படறாங்க அதுக்கு?"

"போனாப் போகுது. தமிழிலே வேண்டாம். இங்கிலீஷிலியாவது பேசுங்க. அவருக்குப் புரியாமலாவது இருக்கட்டும்."

"ஓகோ! உனக்கு இங்கிலீஷ் தெரியும்கிற பெருமையோ?"

அதற்குப் பின் ஆங்கிலத்தில் அந்தச் சாமியாரையும் வேறு சாமியார்களையும் பற்றித் தாறுமாறாக ஏதேதோ சிறிது நேரம் திட்டிக் கொண்டிருந்தான் அவன். ஆனால் முன்புறம் அமர்ந்திருந்த அந்தச் சாமியார் அவர்களுக்குப் பயந்தோ அல்லது அளவற்ற சகிப்புத்தன்மை காரணமாகவோ திரும்பவோ உறுத்துப் பார்க்கவோ செய்யாமல் உட்கார்ந்தது உட்கார்ந்தபடியே அசையாமல் இருந்துவிட்டார். பஸ் கரடி மலையை அடைவதற்குள் ஆலங்கட்டி மழை போலத் திடீரென்று பெருமழை பெய்யத் தொடங்கிவிட்டது.

கரடிமலையில் பஸ் நின்றவுடன் அவர்கள் இறங்கவே முடியவில்லை. சாமியாரிடமும் வழக்கமான அவ்வூர் ஆட்களிடமும் மழைக்கோட்டு இருந்ததால் பஸ்ஸுக்குள்ளேயே மழைக் கோட்டை அணிந்து கொண்டு அவர்கள் கீழே இறங்கி நடந்துவிட்டார்கள். பஸ் கண்டக்டரை விசாரித்ததில் சுற்றுலா மாளிகை அந்த இடத்திலிருந்து அரைபர்லாங்கு தூரத்தில் இருக்கிறது என்று அவன் கூறினான். அந்த மழையில் கூலிகள் யாரும் அங்கே தென்படவில்லை. வாகன வசதிகளும் அந்த வேளையில் அந்த மழையில் கிடைக்கும் என்று தோன்றவில்லை.

மழை நிற்கிறவரையில் அவர்கள் பஸ்ஸுக்குள்ளேயே நிற்க வேண்டியதாயிற்று. பஸ்ஸிலும் ஓரங்கள் எல்லாம் மழைநீர் வாரியடித்தது. பெட்டி படுக்கைகளை ஸீட்டில் வைத்துவிட்டு நடுவாக நின்று கொண்டார்கள் அவர்கள்.

ஒரு மணி நேரத்துக்குப் பின்பே மழை நின்றது.

"பகலில் வந்திருக்க வேண்டும், இப்படி இரவில் மழையில் வந்து மாட்டிக் கொண்டது தப்பு" என்றான் சண்முகசுந்தரம்.

"அப்பாவிடம் சொல்லி டிரைவரோடு காரை எடுத்துக் கொண்டு வந்திருக்கலாம்; நீங்களே தனிமை தனிமை என்று பறந்து இப்படி வரலாம் என்றீர்கள்" என்று அவனைக் குறை சொன்னாள் பிரேமா.

"ஹனிமூன் நமக்கா அல்லது டிரைவர், கார் எல்லாத்துக்குமா?"

"அப்படிக் கேட்டால் இந்தக் கஷ்டத்தைப் பொறுத்துக் கொள்ள வேண்டியதுதான்" என்றாள் அவள்.

பெட்டி படுக்கைகளைப் பங்கிட்டுச் சுமந்து கொண்டு மேட்டில் ஏறி உயரமான சுற்றுலா மாளிகை விடுதியை நோக்கி நடந்தார்கள் அவர்கள்.

அங்கே அவர்களுக்கு எதிர்பாராத இன்னொரு புதிய அதிர்ச்சி காத்திருந்தது. சுற்றுலா மாளிகை வாட்ச்மேன், "ஸார்! மன்னிக்கணும்! திடீர்னு பி.டபிள்யூ டி இலாகா மந்திரி, டிவிஷனல் இஞ்சினீயர் எல்லாருமாகக் குடும்பத்தோடு வந்திட்டாங்க. அதினாலே இங்கே இருக்கிற ஆறு 'சூட்'டும் நிரம்பிடிச்சு. உங்களுக்கு 'அலாட்' ஆகியிருந்த 'சூட்' கான்ஸலாயிடிச்சு" என்றான்.

"இந்த நடுராத்தியில் எங்கப்பா போறது? திரும்பற பஸ்ஸும் இனிமே இல்லே. மழையும் குளிரும் பயங்கரமாய் இருக்கு. நீதான் பார்த்து ஏதாவது உதவி பண்ணேன்" என்று சண்முகசுந்தரம் அவனைக் கெஞ்சினான்.

"நான் ஒண்ணும் பண்றதுக்கில்லே ஸார்" என்று வாட்ச்மேன் கையை விரித்துவிட்டான். மேலே இவர்கள் சொல்வதைக் கேட்டுக் கொண்டு நிற்கக்கூடத் தயாராயில்லை என்பதுபோல் திரும்பி உள்ளேயும் போய்விட்டான் அவன்.

"நல்ல ஹனிமூன் வந்தோம் போங்க! சிவனேன்னு ஊர்லியே இருந்திருக்கலாம். இல்லாட்டி அலுப்பில்லாமப் பிருந்தாவன் எக்ஸ்பிரஸில் பெங்களூர் புறப்பட்டுப் போயிருக்கலாம். தனிமை தனிமைன்னு இங்கே ஓடிவந்து இப்பிடித் தவிக்க வேண்டாம்" என்று பிரேமா வேறு அவனைக் குத்திக் காட்டுவது போல் பேசத் தொடங்கிவிட்டாள்.

"எனக்குத்தெரியும். பஸ்ஸிலே எப்ப அந்தச் சாமியாரைப் பார்த்தமோ அப்பவே நம்ம துரதிர்ஷ்டம் ஆரம்பமாயிடுச்சு."

"அவரு தலையை ஏன் உருட்டறீங்க? உங்களுக்குத் தங்க இடம் கிடைக்காட்டி அதுக்கு அவரு என்ன செய்வாரு?"

அவர்கள் மறுபடி பஸ் நிலையம் வரை திரும்பி நடந்து வந்தார்கள்.

"சுற்றுலா மாளிகை, வழிப் பயணிகளுக்கான டிராவலர்ஸ் பங்களா எல்லாத்திலியும் இனிமே 'சர்க்காருக்கு மட்டும்'னு ஒரு போர்டே மாட்டிவிடலாம். மத்தவங்களை நடுத்தெருவிலே நிறுத்தறது, திண்டாட விடறதுங்கிறது இவங்களுக்கு ஒரு பழக்கமாகவே ஆயிடிச்சு" என்று சபித்துக் கொண்டே வந்தான் சண்முகசுந்தரம்.

பஸ் நிலையத்தருகே இருந்த சாப்பாட்டு ஓட்டலையும் மூடியிருந்தார்கள். பசி வயிற்றைக் கிள்ளியது. அந்தக் குளிர்ந்த சூழலில் சுடச்சுட நிறையச் சாப்பிட வேண்டும் போல் இருந்தது. தெரு விளக்குகள் மங்கலாக எரிந்து கொண்டிருந்த அந்த ஏழாயிரம் அடி உயரத்து மலை நகரம் இருளில் அடங்கியிருந்தது. மின்னல்களும் இடியுமாக வானம் வேறு குமுறிக் கொண்டிருந்தது.மறுபடி எந்த விநாடியிலும் மழை வரலாம் என்று தோன்றியது. தேனிலவுக்காக வந்த அவர்கள் நள்ளிரவில் நடுத்தெருவில் தவித்துக் கொண்டு நின்றார்கள். பஸ் நிலையத்தருகே மேட்டில் தெருவிளக்கு எரிந்து கொண்டிருந்த ஒரு வீட்டு முகப்பிலிருந்து யாரோ 'டார்ச்'சுடன் இறங்கி வருவது தெரிந்தது. மழைக் கோட்டு, குல்லாயில் ஆளே தெரியவில்லை. ஒரு நிமிஷம் இவர்களருகே தயங்கிய அந்த ஆளிடம் சண்முகசுந்தரமே சென்று தங்கள் நிலையை விவரித்தான். உதவுமாறு வேண்டினான்.

"நானே கேட்கணும்னுதான் வந்தேன். அடடா! இந்த டூரிஸ்ட் பங்களாவை நம்பியா 'ஹனிமூன்' புறப்பட்டு வந்தீர்கள். இது பெரும்பாலும் காலியாயிருப்பதே வழக்கமில்லையே. ப்ராஜெக்ட் ஆபீஸர், டிவிஷனல் என்ஜினியர், பி டபிள்யூ டி அதிகாரிகள்ன்னு யாராவது தங்கிக் கொண்டே இருக்காங்களே ஒழிய எனக்குத் தெரிஞ்சு இதிலே உங்களை மாதிரி வர்ரவங்களுக்கு இடமே கிடைச்சதில்லையே?"

"நான் தந்தி கொடுத்து ரிசர்வ் செய்யச் சொல்லியிருந்தேன் ஸார்!"

"இருந்தால் என்ன? நடு ராத்திரியிலே வந்துகூட உங்க பெட்டி படுக்கையைத் தூக்கி வெளியே போட்டுவிட்டு ஓர் அதிகாரி இதில் தங்கிக்க முடியுமே! சர்க்கார் சுற்றுலா மாளிகையை நம்பி யாராவது ஹனிமூன் வருவாங்களா?"

"தெரியாத்தனமா வந்து மாட்டிக் கொண்டாச்சு. இப்ப என்ன செய்யறது?"

"பரவாயில்லை! என்கூட வாங்க. இன்னிக்கு நீங்க தங்கிக்கொள்ள நான் உதவ முடியும்."

"உங்களுக்கு ரொம்ப நன்றிக்கடன் பட்டிருக்கோம் ஸார்."

"சே! சே! அதெல்லாம் சொல்லாதீங்க. இந்த நிலையிலே நான் இருந்தா நீங்க என்ன உதவி செய்யமுடியுமோ அதைத்தான் நான்செய்யறேன். வேறொண்ணும் இல்லை. அது சரி, நீங்க ரெண்டுபேரும் சாப்பிட்டாச்சா?"

"சாப்பாட்டைப் பத்தி என்ன சார்? இந்தக் குளிர்ல ஒண்டிக்க இடம் கிடைச்சாலே போதும்."

"அப்படியில்லே; பட்டினியோட தூங்கக்கூடாது. வாங்க, ஏதாவது செய்ய முடியுமான்னு பார்க்கலாம்."

அவர்கள் அந்த மனிதரைத் தொடர்ந்தனர். அவர் அவர்களை அழைத்துச் சென்றது ஓட்டு வீடு. வீடு மிக மிகச் சிறியது. அந்த வீட்டில் உள்ளே மின்சாரம் கிடையாது. தெருவிளக்கின் மின்சார ஒளிதான் கீழே இருந்து பார்க்கும்போது அந்த வீட்டைக் காட்டியிருந்தது. அரிக்கேன் விளக்கு ஒளியில் ஓர் அறை. அதற்கு வெளியே நீர் தேங்கிய முற்றம்; அந்த முற்றத்து ஓரமாகச் சார்ப்பு இறக்கிய தகரத்தின் கீழே காட்டுக் கட்டைகளை வைத்து அடுப்பு எரிய விட்டு, மண் சட்டியில் உலை கொதித்துக்கொண்டிருந்தது; எல்லாம் தெரிந்தன. அறையிலிருந்த ஒரே கட்டிலைக் காட்டி, அவர்களை உட்காரச் சொன்னார் அவர். சுவரில் பெரிய மான் தோல் ஒன்று தொங்கிக்கொண்டிருந்தது. அதை அடுத்து விவேகானந்தர், ராமகிருஷ்ண பரமஹம்ஸர், சாரதாமணி படங்கள் தொங்கிக் கொண்டிருந்தன. மான் தோலைப் பார்த்து அவர் வேட்டையில் ஆர்வமுள்ளவரோ என்று முதலில் நினைத்த சண்முகசுந்தரத்துக்கு அருகே மாட்டியிருந்த படங்களைக் கண்டதும் அப்படி இராதோ என்றும் சந்தேகமாக இருந்தது. அந்த மனிதர் அதிகம் பேசவே இல்லை. அரைமணி நேரத்தில் இரண்டு தட்டுக்களில் சுடச்சுட ஆவி பறக்கும் வெண்பொங்கலும், துவையலும் வந்தன. குடிப்பதற்கு வெந்நீரும் வந்தது.

"இந்த நேரத்தில் இதைத் தவிர உங்களுக்கு அதிகமாக நான் எதுவும் செய்ய முடியவில்லை. மன்னியுங்கள்" என்றார் அந்த மனிதர்.

"மன்னிப்பதாவது! இதுவே அதிக உதவி" என்றார்கள் தம்பதிகள்.

அடுப்பிலிருந்த கட்டைகளையே அந்த அறையின் கணப்பில் கொண்டுவந்து போட்டு மேலும் கட்டைகளை அடுக்கிக் கணப்பை எரியவிட்டு, "நீங்கள் இந்த அறையில் தங்கலாம்" என்று கட்டிலைக் காண்பித்தார் அந்த மனிதர். "நீங்கள்..." என்று கேட்ட சண்முகசுந்தரத்தை இடைமறித்து, "எனக்கு வேறு இடம் இருக்கிறது. நீங்கள் அது பற்றிக் கவலைப்படவே வேண்டாம். நீங்கள் தூங்கலாம்" என்று கூறிவிட்டுச் சுவரில் தொங்கிய அந்த மான்தோலை மட்டும் எடுத்துக்கொண்டு வெளியேறி விட்டார் அவர். அவ்வளவு நேரத்திலும் அந்த உபகாரியை முழுமையாக அடையாளம் காணக்கூடப் போதுமான வெளிச்சம் அங்கு இல்லை என்பதுதான் சண்முகசுந்தரம், பிரேமா இருவருக்குமே வருத்தத்தை அளித்தது.

"ரொம்பத் தங்கமான மனிதர்" என்றாள் பிரேமா.

"தானே தேடிவந்து உதவி செய்திருக்கிறார்" என்றான் சண்முகசுந்தரம். அதிக நேரம் அந்தப் பரோபகாரியை வியந்தே பேசிக் கொண்டிருந்தார்கள் அவர்கள். இரவு இரண்டரை மணிக்கோ மூன்று மணிக்கோ கண்விழித்த போது உள்ளே இருந்த டார்ச் லைட்டை எடுத்து முற்றத்துக் கதவைத் திறந்து விளக்கு ஒளியைப் பாய்ச்சிய சண்முகசுந்தரம் அங்கே தெரிந்த காட்சியைக் கண்டு அதிர்ச்சியடைந்தான்.

அவர்களுக்காகக் கட்டிலையும் அறையையும் தியாகம் செய்த அந்த உபகாரி முற்றத்தின் கோடியில் மாட்டுக் கொட்டம் போல் தோன்றிய ஓரிடத்தில் மான்தோலை விரித்து உட்கார்ந்தபடியே பனியில் சிரமப்பட்டுத் தூங்கிக் கொண்டிருந்தார். முழங்காலில் முகத்தைப் புதைத்தபடி தூங்கிய அந்த மனிதரின் பிடரியில் விளக்கொளி பட்டபோது இன்னோர் அதிர்ச்சியும் காத்திருந்தது அவனுக்கு. பஸ்ஸில் தங்களுக்கு முன்புறம் அமர்ந்து வந்த சாமியாரின் பிடரியில் இருந்ததுபோல் ஒரு சிறு கட்டி இந்த மனிதரின் பிடரியிலும் இருக்கவே, அந்தச் சாமியார்தாம் இவரோ என்று சந்தேகம் தோன்றியது. இரவில் அதை மேலும் தெளிவாக அறிய முடியவில்லை.

திரும்பி உள்ளே வந்து, "பிரேமா நமக்காக அறையைக் கொடுத்துவிட்டு அந்த மனிதர் மாட்டுக்கொட்டத்துப் பனியிலே உட்கார்ந்தபடியே தூங்கறாரு" என்றான் சண்முகசுந்தரம். தனது மற்றொரு சந்தேகத்தை அப்போது அவளிடம் சொல்லவில்லை அவன்.

விடிந்ததும் அந்தப் புதிரும் விடுபட்டது. முதல்நாள் பஸ்ஸில் முன்புறம் அமர்ந்து வந்த இளம் சாமியாரே அவர்தான். பஸ்ஸில் சாமியார்களைப் பற்றிப் பேசியது, திட்டியது எல்லாவற்றையும் எண்ணி இப்போது மிகவும் கூச்சம் அடைந்தான் சண்முகசுந்தரம். சாமியாரோ அதிகாலையில் நீராடித் திருநீறு குங்குமம் துலங்கும் நெற்றியுடன் பால்போல் வெண்மையான கறையற்ற தூய பல்வரிசை தெரிய சிரித்தபடி

அவர்களுக்குத் தேநீர் கலந்து எடுத்துக் கொண்டு வந்தார். தேநீரை நீட்டிக் கொண்டே திடீரென்று சரளமானதும் அழகியதுமான நல்ல ஆங்கிலத்தில் அவர் உரையாடத் தொடங்கவே, சண்முகசுந்தரம் மேலும் மேலும் கூச்சம் அடைந்து குன்றிப் போனான்.

"சாமீ! நீங்க என்னை ரொம்ப மன்னிக்கணுங்க" என்று நாத்தழுதழுக்க அவன் தொடங்கியபோது, "இந்த மலைப் பகுதி எஸ்டேட் கூலிகளுக்குக் கல்வி, சமய ஒழுக்கங்களைப் பரப்ப எங்க மிஷன் என்னை இங்கே அனுப்பியிருக்கு. எளியேன் பெயர் பிரம்மச்சாரி சீலானந்தன்" என்று தம்மை அடக்கமாக அறிமுகப்படுத்திக் கொண்டார் அந்த மனிதர். அவர் முகத்தில் பாலமுருகனின் களை கொஞ்சியது. பற்கள் முத்துப்போல் பளீரென்று ஒளிவீசின.

"உங்களுக்கு சாமியார்கள்மேல் இருக்கிற கோபத்தைப் பார்த்ததும் நான் யார்னு தெரிஞ்சா நீங்க ராத்திரி இங்கே என்னோட தங்கக்கூட மாட்டீங்களோன்னு பயந்து போனேன். அதனால்தான் விடியறவரை நான் யார்னு உங்களைத் தெரிஞ்சுக்கவிடலை."

"தப்பு! நான் ராத்திரியே அதைத் தெரிஞ்சுக்கிட்டேன் சாமி!"

"ஆமாம்! அதுவும் எனக்குத் தெரியும்! நள்ளிரவில் நீங்க டார்ச்சுடன் முற்றத்துக்கு வந்தீங்க. அப்ப நான் கண்விழித்திருப்பது தெரிந்தால் நீங்கள் என்னோடு தர்க்கித்து நேரத்தை வீணாக்குவீர்களோ என்று அஞ்சிய நான் முழங்கால்களில் முகத்தைப் புதைத்துக் கொண்டு தூங்குவதுபோல் இருந்தேன்."

"சுவாமி! உங்க உபகாரம் ரொம்பப் பெரிசு."

"எந்த உபகாரமும் பெரியதில்லை. உங்களைப் போன்ற கோடிக்கணக்கான கிருகஸ்தர்களுக்கு உதவவே எங்களைப் போல நூற்றுக்கணக்கானவர்கள் சந்நியாசிகளாகிறோம். நாங்கள் உங்களுடைய தொண்டர்கள் என்பதை நீங்கள் மறந்துவிடக் கூடாது."

விதண்டாவாதக்காரனும் வம்புக்காரனுமாகிய தன் கணவன் சண்முகசுந்தரம் முதல் முதலாக ஒரு சாமியாரை நோக்கிக் கண்களில் நீர் நெகிழக் குழைந்து கை கூப்பி நிற்கும் விநோதத்தைப் பிரேமா அப்போது பார்த்தாள். அவளுக்கு உடல் சிலிர்த்தது.

இரண்டு நாளைக்குப் பின் கரடி மலையிலிருந்து ஊர் திரும்பியபோது சென்னையில் ரெயில் நிலையத்தில் சண்முகசுந்தரம் தம்பதிகளைத் தற்செயலாகச் சந்தித்த ஒரு நண்பன், "என்ன ஹனிமூன் எப்படி?" என்று சிரித்தபடி கேட்டான்.

"ரொம்ப நல்லாயிருந்திச்சு. கரடி மலையிலே நல்ல கிளைமேட். அங்கே போனப்பறம் என் மூளையேகூடத் தெளிவாகி இருக்கு" என்று பிரேமாவை நோக்கிக் கண்சிமிட்டியபடி நண்பனுக்கு மறுமொழி கூறினான் சண்முகசுந்தரம். நடுங்கும் குளிரில் ஹனிமூன் வந்தவர்களுக்கு இருந்த ஒரே கட்டிலையும் அறையையும் ஒழித்துக் கொடுத்துவிட்டு முற்றத்தில் மான் தோலில் அமர்ந்தபடி சிரமப்பட்ட அந்த இளம் சாமியாரை நினைத்தபோதெல்லாம் மெய்சிலிர்த்த சண்முகசுந்தரம்,

திருமணமானபின் ஹனிமூனிலிருந்து திரும்பியதும் ஏன் அப்படித் தலைகீழாக மாறினான் என்பது மட்டும் அவனுடைய பழைய நண்பர்களுக்குப் பல நாள்வரை புரியாத புதிராக இருந்தது. உண்மை தெரியாத அவர்கள் தங்களுக்குள்ளே, "அவனோட மாமனார் ஒரு சாமியார்ப் பைத்தியம், இவனும் கல்யாணமானப்பறம் சாமியார்ப் பைத்தியமா மாறிட்டான். இதுதான் விஷயம்" என்று அவனுடைய மாற்றத்துக்குச் சாதாரணமான காரணங்களைச் சொல்லிக் கொண்டிருந்தார்கள்.

அவனோ அந்தரங்கமான காரணத்தை விளம்பரப்படுத்தி அதன் பெருமையைக் குறைத்துவிடாமல் அதை மனப்பூர்வமாகப் போற்றிக் கொண்டிருந்தான்.

(கலைமகள், தீபாவளி மலர், 1973)



# 116. பெண்ணுக்கு மரியாதை

**ச**ங்கீதசபையின் வருடாந்தரப் பேரவைக் கூட்டம் அந்த ஞாயிற்றுக்கிழமை காலை காபி, சிற்றுண்டியுடன் தொடங்கியது. இதற்கு முன்பெல்லாம் 'ஜெனரல் பாடி' கூட்டத்துக்கு வரச் சொல்லி ஒரு தபால்கார்டு மட்டும்தான் அழைப்பாக வந்து சேரும். இந்த வருடம் சபையின் பொருளாதார நிலைமை மிகவும் திருப்திகரமாக இருந்ததாலோ, உறுப்பினர்கள் நிறைய வர வேண்டும் என்பதற்கு ஒரு கவர்ச்சி அம்சமாகவோ கார்டில் கீழே ஒரு குறிப்பாக 'உறுப்பினர்களுக்குக் காலைச் சிற்றுண்டி காபி கூட்டத்திலேயே வழங்கப்படும்' என்றும் சேர்த்து அச்சிட்டிருந்தார்கள். அப்பா காலமானபின் நாலு மாதத்துக்கு முன் குடும்பத்தின் 'மெம்பர்ஷிப் கார்டு' தன் பெயருக்கு மாற்றப்பட்டதிலிருந்து இன்றுவரை சுந்தரேசன் சபா பக்கமே போக நேரவில்லை. நடுவே இரண்டொரு நாடகங்களுக்காக வந்த டிக்கெட்டைக்கூட நண்பர்கள் யாரிடமோ கொடுத்தனுப்பியிருந்தான். அம்மா போக முடியாது. அவனும் போக விரும்பவில்லை. டிக்கெட் வீணாக வேண்டாம் என்றுதான் நண்பர்களை அனுப்பியிருந்தான் அவன்.

சுபாவத்தில் அவன் பெரிய சங்கோஜி. அளவுக்கு அதிகமான கூச்சக்காரனும்கூட. கூட்டத்தில் திடீரென்று நாலைந்து பேராக அவனருகே பேச வந்துவிட்டால்கூடத் திணறிப் போவான் அவன். அந்த நாலைந்து பேரில் யாராவது ஒரு பெண்ணும் இருந்துவிட்டால் சொல்லவே வேண்டாம். 'என்ஜினீயரிங்' கல்லூரியில் சேர்ந்ததும் 'ராகிங்' தொல்லைகளுக்குப் பயந்து கொண்டு முதல் மாதம் முழுவதும் உடல்நலமில்லை என்று டாக்டர் சர்டிபிகேட் வாங்கிக் கொடுத்து விட்டு வீட்டிலேயே அடைந்து கிடந்திருக்கிறான் அவன். அவ்வளவு பயந்த சுபாவம்.

"உன்னைப் போல் இருக்கிறவனைத் திருத்திவிட முடியுமானால் 'ராகிங்' கூட அவசியம்தான்னு தோன்றது" என்று அப்போதெல்லாம் தந்தையே அவனைக் கேலி செய்திருக்கிறார். போகட்டும். அதெல்லாம் பழங்கதை. அப்பா காலமான புதிதில் சபாவுக்குப் போனால் யார் யார் அங்கேயே தன்னை துக்கம் விசாரிக்கக் கூடுவார்கள் என்று எண்ணி அவர்களுக்குக் கூசியே அங்கே போகாமலிருந்தான் அவன். இப்போது மாதங்கள் சில ஆகிவிட்டதால் இன்றையப் பேரவைக் கூட்டத்துக்குப் போகலாம் என்று கொஞ்சம் துணிவு வந்தது சுந்தரேசனுக்கு.

சிறப்பம்சமாகக் காபி - சிற்றுண்டிக்கு ஏற்பாடு செய்திருந்ததனால் காலை எட்டு மணிக்குப் பேரவையைக் கூட்டியிருந்தார்கள். சுந்தரேசன் சபாவுக்குப் போய்ச் சேரும்போது மணி எட்டேகால் ஆகியிருந்தது. கூசிக்கூசி உள்ளே நுழைந்தான் அவன். நல்லவேளையாக அது பேரவைக் கூட்டமாகையினால் இளம் பெண்கள் அதிகமாகத்

தென்படவில்லை. ஆண்களைப் போல துணிவு, பார்வை, தைரியம் எல்லாம் பெற்றுவிட்ட சில நடுத்தர வயது மாமிகள் மட்டும் தென்பட்டனர். மற்றவர்கள் அனைவரும் சிற்றுண்டியில் தீவிரமாயிருந்தனர். சுந்தரேசனின் நல்லவேளையோ, போதாத வேளையோ அவன் உள்ளே நுழைந்ததும் சபையின் தலைவர் ஓய்வு பெற்ற பெரு நீதிமன்ற நீதிபதி உத்தமனூர் கணபதி சாஸ்திரியின் பார்வையில் பட்டுவிட்டான். "ஹலோ! உங்க ஃபாதர் இந்த சபையிலே இருபது வருஷம் எவ்வளவோ 'ஆக்டிவ்' ஆக இருந்தார். ஃபவுண்டர் மெம்பர் வேறே. நீ என்னடான்னா இந்தப் பக்கம் எட்டிப் பாக்கிறதுகூட இல்லை. உன்னைப் போல வாலிபப் பிள்ளைகள் எல்லாம் நிறைய ஒத்துழைக்கணும் அப்பா" என்று சாஸ்திரி அவனை மிகவும் உற்சாகமாக வரவேற்கவே அவன் திணறிப் போனான்.

சாஸ்திரிக்கு அருகே அவருடைய பெண் வயிற்றுப் பேத்தி பஞ்சாபி டிரஸ்ஸில், திமிறிக்கொண்டு பாய்வதற்குத் தயாராகக் காத்திருக்கும் அரபிக்குதிரை போன்ற உடற்கட்டுடன் நின்று கொண்டிருக்கவே, சுந்தரேசனின் கூச்சம் அதிகமாயிற்று. சாஸ்திரியின்பெண்ணும் மாப்பிள்ளையும் டேராடூனில் இருந்தாலும், பேத்தி கல்லூரிப் படிப்புக்குச் சென்னையைத் தேர்ந்தெடுத்திருந்தாள். தாத்தா, பாட்டியோடு தங்கிப் படித்துக்கொண்டிருந்தாள். சங்கீத சபா வாலிபர்களிடையே இவள் அழகும் கவர்ச்சியும் எல்லாம் போதுமான அளவு விளம்பரம் பெற்றிருந்தன. நாலைந்து வழுக்கைத் தலைகளும், ஐந்தாறு கிழங்களும்கூட அவளருகே சூழ்ந்து நின்று கொண்டு, 'இந்த டிரஸ் உனக்குப் பிரமாதமா இருக்கு, பேபி' என்று புகழ்ந்து கொண்டிருந்தன. சாஸ்திரி தம் பேத்தியைச் செல்லமாக அழைக்கும் பெயர் பேபி என்பது.

"பேபீ! இவனைத் தெரியுமா? நம்ம சபேசனோட ஸன். பி.இ. முடிச்சிட்டு ஃபாதரோட கன்ஸர்ன்ஸ் எல்லாம் கவனிச்சுக்கிறான்" என்று சாஸ்திரி தம்முடைய பேத்திக்கு சுந்தரேசனை அறிமுகப்படுத்தியபோது, அந்த அரபிக்குதிரை அபிநயம் பிடிப்பதுபோல் அழகாகக் கைகுவித்து, அவனை வணங்கியது. அவள் முகத்தையும், அப்புறம் அந்த முகத்தில் மாதுளை மொட்டுப் போல் உதடுகளையும், அப்புறம் அதில் சிரிப்பையும் ஒருமுறை நன்றாக நிதானமாகப் பார்த்துவிட வேண்டும் என்று உள்ளே ஆசை தவித்தும் தைரியமில்லாமல் அவன் பராக்குப் பார்த்துச் சமாளித்தான். கேசத்திலிருந்து கால்கள் வரை, மறுபடி கால்களிலிருந்து கேசம் வரை அவளை ஒருமுறை - இருமுறை பலமுறை பார்த்துவிடத் துடித்தும் அவனால் துணிய முடியவில்லை. அதட்டுவது போன்ற குரலில் கணபதி சாஸ்திரி அவனிடம் கூறினார்.

"எங்கேயாவது மூலையில் போய் உட்கார்ந்து விடாதே! முதல் வரிசையில் உட்கார். ஆல் தி ஃபவுண்டர் மெம்பர்ஸ் ஷுட் பி இன் த ஃபர்ஸ்ட் ரோ. தெரிஞ்சுதா?"

சுந்தரேசன் பயந்தபடியே சரி என்பதற்கு அடையாளமாகத் தலையை ஆட்டி வைத்தான். ஆனால் தன்னை அவர் எதற்காக அப்படி முதல் வரிசையில் அமரச் செய்தார் என்பது மட்டும் அவனுக்குத் தெரிந்திருந்தால் அவன் அங்கிருந்து சொல்லாமல் கொள்ளாமல் ஓடிப் போயிருப்பான்.

ஜெனரல்பாடி கூட்டத்திற்கு சாஸ்திரி தலைமை வகித்தார். கூட்டத்தின் 'அஜெண்டா'வில் அன்று செய்யவிருந்த காரியங்களாகக் குறித்திருந்தவை ஒரு செயலாளர், ஒரு கூட்டுச் செயலாளர், நிர்வாகக் குழுவினர் ஆகியோரைத் தேர்ந்தெடுப்பதாகும். சாஸ்திரி மேடையில் போய் அமர்ந்ததும் அவரோடு இருந்த அவர் பேத்தி முதல் வரிசையில் சுந்தரேசனுக்கு அருகே காலியாயிருந்த நாற்காலியில் வந்து அமர்ந்தாள். அவளுடைய நளினமான வாசனைகள், பவுடர், ஹேர்ஆயில் கமகமப்பு, மல்லிகைப்பூவின் மணம் எல்லாமாகச் சேர்ந்து நிராயுதபாணியாக இருந்த சுந்தரேசன் மேல் ஒன்று கூடிப் படையெடுத்தன. கால் மேல் கால் போட்டு சுதந்திரமாக உட்கார்ந்திருந்த சுந்தரேசன் மெல்லக் காலை எடுத்துவிட்டு நாற்காலியோடு ஒட்டினாற்போல் ஒடுங்கி இடுங்கி உட்காரத் தொடங்கியதைக் கண்டு,

"ஸிட் யுவர் ஸெல்ஃப் கம்ப்பர்ட்டபிலி; ஐ திங்க் ஐ யாம் நாட் டிஸ்டர்பிங் யூ" என்று சொல்லிப் புன்முறுவல் பூத்தாள் பேபி. அப்போதும் அவள் முகத்தை ஏறெடுத்துப் பார்க்க முயன்று முடியாமல் தோற்றான் அவன். உடனே பொருத்தமாக அவள் நெஞ்சில் போய் இறங்கிச் சுகமாகத் தங்கும்படி நாலு இங்கிதமான வார்த்தைகளைப் பதிலாகச் சொல்ல எண்ணி வார்த்தைகளும் துணிவும் வராததால் சும்மா இருந்துவிட்டான். அவன் சும்மா இருந்ததைக் கண்டு 'மேனர்ஸ்' தெரியாதவன் என்று அவள் அவனைப் பற்றி நினைத்திருக்கக்கூடும். அவள் அப்படி நினைத்துவிடக்கூடாதே என்றும் அவன் மனம் தயங்கியது. அவள் அருகே அமர்ந்திருக்கிற பரபரப்பில் அவனுக்கு ஒரு வேலையுமே ஓடவில்லை. ஒன்றுமே பேசவரவில்லை. ஒன்றுமே செய்ய முடியவில்லை.

சபாவின் செயலாளர் பதவிக்கு முந்திய ஆண்டில் இருந்தவருடைய பெயரே பிரேரேபிக்கப்பட்டது. கூட்டுச் செயலாளர் பதவி என்ற ஒன்றே முந்திய ஆண்டில் கிடையாது. செயலாளருக்கு அதிகமாயிருக்கும் வேலைகளைப் பகிர்ந்து கொள்வதற்கு என்று இந்த ஆண்டு அந்தப் பதவிக்கு ஒருவரை தேர்ந்தெடுக்க முடிவு செய்தனர். அந்த சபாவில் தலைவர் கணபதி சாஸ்திரியின் செல்வாக்கு நிரந்தரமானது. அவர் ஒரு பதவிக்கு யாருடைய பெயரையாவது குறிப்பிட்டு அதற்குப் போட்டி வருமென்பது நடவாத காரியம். அவர் வார்த்தைக்கு எல்லாருமே கட்டுப்படுவார்கள்.

திடீரென்று சுந்தரேசன் முற்றிலும் எதிர்பாராதபடி கூட்டுச் செயலாளர் பதவிக்கு அவன் பெயரையே பிரேரேபணை செய்து வைத்தார் கணபதி சாஸ்திரி.

"இந்தச் சபையை உருவாக்குவதில் அந்தக் காலத்தில் எனக்குத் துணையாயிருந்த காலஞ் சென்ற தொழிலதிபர் சபேசனின் புதல்வர் சுந்தரேசனைக் கூட்டுச் செயலாளர் பதவிக்குப் பிரேரணை செய்கிறேன்" என்று சாஸ்திரி கூறியதும், அந்தப் பிரேரணை ஏக மனதான ஏற்றுக் கொள்ளப்பட்டுவிட்டது. அவன் எழுந்து மறுக்கவும் முடியவில்லை.

"கங்கிராஜுலேஷன்ஸ்!" என்று அவன் காதருகே இனிய குரலில் கிளுகிளுத்தாள் அருகே உட்கார்ந்திருந்த பேபி. அந்தப் பாராட்டுக்கு நன்றி சொல்லவும் அவனால்

முடியவில்லை. தன்னுடைய அடக்கத்தையும் மரியாதையையும் அவள் சரியாக எடுத்துக் கொள்வாளா, அல்லது தன்னை பயந்தாங்கொள்ளி என்று எடுத்துக் கொள்வாளா என்பதாக அவனுள்ளே அப்போது ஒரு சிந்தனை ஓடியது.

வெறும் பயம் மட்டும் மரியாதையாகிவிடாது; உலகில் எல்லா இடங்களிலும் பயபக்தியினாலேயே மரியாதை செலுத்திவிட முடியாது; பயமின்றி மரியாதை செலுத்தும் இடங்களும் உண்டு என்று அவன் மனத்தில் இன்னொரு குரல் அவனை இடித்துக் காட்டவும் செய்தது. தான் இயலாமையினால் பயப்படுகிறோமே ஒழிய மரியாதையால் பயப்படவில்லை என்று அவன் மனமே அவனை இடித்துக்காட்டவும் தவறவில்லை. கூட்ட முடிவில் சபாவின் மூத்த உறுப்பினர்களும் நண்பர்களும் கூட்டுச் செயலாளராக அவன் தேர்ந்தெடுக்கப்பட்டிருப்பதற்காக அவனைப் பாராட்டினர். அப்படி அவர்கள் எல்லாரும் தன்னை வந்து பாராட்டும்போது பேபியும் அருகே நின்று கொண்டிருந்ததனால் தன் அருகே அவள் சேர்ந்து நிற்பதைப் பற்றி அவர்களெல்லாம் என்ன நினைத்துக் கொண்டு போவார்களோ, என்ன பேசிக் கொண்டு போவார்களோ என்று அவன் மனம் தயங்கியது.

'கணபதி சாஸ்திரியின் பேத்தியும் சுந்தரேசனும் ரொம்ப நெருக்கம் போலிருக்கிறது' என்று யாராவது பேசிக் கொண்டு போனால் அது எவ்வளவு மரியாதைக் குறைவாக இருக்கும் என்று எண்ணிப் பயந்தான் அவன்.

'சரிதான்! கணபதி சாஸ்திரி இவனை இதற்காகத்தான் இங்கே கூட்டுச் செயலாளராகத் தேர்ந்தெடுத்திருக்கிறார் போலிருக்கிறது' என்று யாரோ பேசிக் கொண்டு போவது போல் அப்போதே ஒரு பிரமை அடைந்து விட்டான் சுந்தரேசன்.

உடனே அவள் பக்கத்தில் நிற்கும் அந்த இடத்திலிருந்து நகர விரும்பி, மெல்ல வெளிப்பக்கம் நகர்ந்தான் அவன். அப்படிப் போகும்போது அவளிடம் சொல்லிக் கொள்ள நினைத்து ஓர் இளம் பெண்ணிடம் ஓர் இளைஞன் சொல்லி விடைபெற்றுக் கொள்வது போன்ற உற்சாகமோ, உவகையோ இல்லாமல், பயபக்தியோடு விலகி நாலடி தள்ளி, ஒரு வி.ஐ.பி.க்கு வணக்கம் செலுத்துவதுபோல் பேபிக்கு வணக்கம் செலுத்தினான் சுந்தரேசன்.

பேபி அவன் எதிர்பார்த்ததுபோல் பதிலுக்கு அவனை வணங்காதது அதிர்ச்சியளிப்பதாயிருந்தது. அவன் விலகி நின்று கைகூப்பியதற்குப் பதிலாக அலட்சியமான புன்னகை ஒன்றை இதழ்களில் சிந்தினாள் அவள். சபாவுக்குள் வந்ததும், 'இவன் நம்ம சபேசனோட சன்' என்று சாஸ்திரி அவளுக்குத் தன்னை அறிமுகப்படுத்தியபோது கன்னங்கள் கனிய நாணிச் சிரித்து, இங்கிதமாக கைகூப்பிய அவள்தான் இப்படி அலட்சியமாகச் சிரித்துக் கொண்டு நிற்கிறாள் என்பதை இப்போது அவன் நம்பவே முடியாமலிருந்தது.

தான் இவ்வளவு கவனமாக மறந்துவிடாமல் செலுத்திய மரியாதைக்குப் பதில் மரியாதைகூடச் செலுத்தாமல் அவள் ஏன் இப்படி அலட்சியமாக மரம் போல் நிமிர்ந்து நின்று சிரிக்கிறாள் என்பது புரியாமல் அவன் குழம்பினான்.

வீட்டுக்குத் திரும்பி வந்த பின்னும் பேபியைப் பற்றி இந்த சிந்தனையை விட முடியாமல் இதையே நினைத்துத் தவித்துக் கொண்டிருந்தான் சுந்தரேசன். திடீரென்று தான் சபாவுக்கு எந்தக் கோலத்தில் போயிருந்தானோ, அந்தக் கோலத்தில் நிலைக் கண்ணாடிக்கு முன்னே போய் நின்று தன்னை அழகு பார்த்துக்கொண்டான் அவன். தன்னுடைய இந்தத் தோற்றம் அவளுடைய கண்களைக் கவர்ந்து மனத்தில் பதிந்திருக்குமா இல்லையா என்று தெரிந்து கொள்ள ஆசைப்பட்டுத்தான் இப்படிக் கண்ணாடியில் பார்த்துக்கொண்டான் அவன். ரொம்பவும் 'ஸ்மார்ட்டாகவும்' அழகாகவும்தான் இருந்தது. 'டியூக் ஆஃப் எடின்பரோ' போல் உயரம்; 'கிரிகிரிபெக்'கின் முக அமைப்பு எல்லாமே ஸ்மார்ட் ஆகத்தான் இருந்தன. இந்த உவமைகள் எல்லாம் அவன் நண்பர்கள் பலமுறை அவனிடம் கூறி அலுத்தவை.

சங்கீத சபையில் இருந்து புறப்படுமுன் அவளிடம் எப்படிச் சொல்லி விடைபெற்று வணங்கினானோ அப்படியே கண்ணாடிக்கு முன் வணங்கிப் பார்த்தும் சந்தேகத்தைப் போக்கிக் கொண்டான் அவன். எதிரே மகாத்மா காந்தியையோ, விவேகானந்தரையோ பார்த்ததுபோல் அவ்வளவு பயபக்தியோடுதான் அவளை வணங்கியிருக்கிறோம் என்பதும் உறுதியாயிற்று. 'அளவு கடந்த மரியாதையோடு பழகிய தன்னிடம் அவள் ஏன் விடைபெறும்போது இவ்வளவு அவமரியாதையாக நடந்து கொண்டாள்?' என்பதுதான் அவனுக்குப் புதிராக இருந்தது.

சாஸ்திரி அறிமுகப்படுத்தியதும் நாணிச் சிரித்த அதே நளினம். நான் அவளிடமிருந்து விடைபெறும்போது எங்கு போயிற்று? திடீரென்று அவள் ஏன் என்னிடம் மாறினாள்? அவள் அப்படி மாறும்படி எந்த விதத்திலும் நான் அவளிடம் மரியாதைக் குறைவாக நடந்து கொள்ளவில்லையே?

இரண்டு மூன்று நாட்களுக்குப் பின் கன்னிமராவில் ஜுனியர் சேம்பர் கூட்டத்துக்குப் போய்விட்டு அவன் மாலை ஏழு மணிக்கு வீடு திரும்பியபோது சாஸ்திரி போனில் அவனைக் கூப்பிட்டார். அடுத்து வரும் மாதங்களில் நடைபெற வேண்டிய சபா 'புரோகிராம்களை' எல்லாம் பேசி முடிவு செய்வதற்காகச் செயலாளர் வந்திருப்பதாகவும் கூட்டுச் செயலாளராகிய அவனும் உடனே வர வேண்டும் என்றும் சொன்னார் அவர்.

ஜுனியர் சேம்பரிலிருந்து வந்தவன் உடையைக்கூட மாற்றிக் கொள்ளாமல் அப்படியே மறுபடி காரை எடுத்துக்கொண்டு புறப்பட்டான்.

சாஸ்திரி வீட்டுக்குள் அவன் நுழைந்தபோது கூடத்து ஸோபா கம் பெட்டில் சாய்ந்து 'உமன்' மேகஸினைப் பார்த்துக்கொண்டிருந்தாள் பேபி. அவனைப் பார்த்த பின்னும் அவள் எழுந்திருக்கவில்லை. அந்த மரியாதையற்ற வரவேற்பு அவனைத் துணுக்குறச் செய்தது. அவன் தயங்கினான். 'ஹலோ' என்று வாய் நுனிவரை வந்துவிட்ட வார்த்தை அதை முதலில் சொல்ல வேண்டிய அவள் சும்மா இருந்ததினால் அடங்கிவிட்டது. அதற்குள் மிஸஸ் சாஸ்திரி உள்ளேயிருந்து வந்துவிட்டாள். அவன் மிஸஸ் சாஸ்திரியை எதிர்கொண்டான். "மாடியிலே

இருக்கார் போங்கோ... உங்களுக்கு ஃபோன்கூடப் பண்ணினாரே'' என்று அந்த அம்மாள் கூறியதும் மாடிக்கு விரைந்தான் சுந்தரேசன். பேபியினுடைய நடத்தை அவனுக்குப் புதிராயிருந்தது.

மாடியில் அவனுக்கும் சபா செயலாளருக்கும் டீ கொண்டு வந்து கொடுத்து உபசரித்ததுகூட மிஸஸ் சாஸ்திரிதான். பேபி அந்தப் பக்கம் வரவே இல்லை. சபா நிகழ்ச்சிகளை முடிவு செய்ய ஒரு மணி நேரத்துக்கும் மேலாயிற்று. போகும்போது செயலாளரை 'டிராப்' செய்துவிடச் சொல்லி சுந்தரேசனை வேண்டினார் சாஸ்திரி. அவன் மகிழ்ச்சியுடன் ஒப்புக் கொண்டான். இருவரையும் கார் வரை வந்து வழியனுப்பும்போதுகூட சாஸ்திரியும் அவருடைய மனைவியும்தான் வந்திருந்தார்கள்.

காரில் திரும்பும்போது "சாஸ்திரியோட கிராண்ட் டாட்டருக்கு உடம்பு சௌகரியமில்லையா என்ன? காணவே இல்லியே?'' என்று செயலாளரிடம் மெல்லப் பேச்சுக் கொடுத்தான் சுந்தரேசன்.

"அதெல்லாம் ஒண்ணுமில்லியே? நான் வந்தப்ப என்கூட ரொம்ப நாழி ஹால்லே பேசிண்டிருந்தாளே... மாமா! அடுத்த மாச ப்ரோக்ராம்லே பாலமுரளிகிருஷ்ணாவைக் கண்டிப்பாகச் சேர்க்கணும்னுகூடச் சொன்னாளே!''

சுந்தரேசன் பதில் சொல்லாமல் கேட்டுக் கொண்டே வந்தான். இரண்டு நிமிஷ மௌனத்திற்குப் பின் மறுபடியும் தாமாகவே,

"ஷீ இஸ் ஸ்மார்ட் அண்ட் ஜோவியல்!'' என்று செயலாளர் கூறியபோது,

"யெஸ் யெஸ்! ஷீ இஸ் வெரி வெரி வெரி ஸ்மார்ட் அண்ட் ஜோவியல்'' என்று உதட்டளவில் அவனும் முணுமுணுத்தான். ஒரு விஷயம் இப்போது அவனுக்குத் தெளிவாகிவிட்டது. செயலாளர் வந்தபோது பேபி, அவரை ஜோவியலாக வரவேற்றுப் பேசியிருக்கிறாள்; வேண்டுமென்றே தான் வரும்போது இவள் தன்னைக் கவனிக்காததுபோல் இருந்துவிட்டாள் என்பது அவனுக்குத் தெளிவாய்ப் புரிந்தது.

"பிஃபோர் மீ ஷீ வாஸ் அன் ஸெரிமோனியல் அண்ட் இன் எ பாய்காட்டிங் மூட்...'' என்று கறுவிக் கொள்வது போல் வார்த்தைகளை நினைத்து அதை உடன் வந்து கொண்டிருந்த செயலாளரிடம் சொல்லிவிடாமல் தன்னைத் தடுத்துக் கொண்டான் சுந்தரேசன்.

அடுத்த வாரம் ஞாயிற்றுக்கிழமை மாலை சபா நிகழ்ச்சி இருந்தது. எல்லாரையும் வரவேற்று உட்காரச் செய்ய வேண்டும் என்பதற்காக அரைமணி நேரம் முன்னாலேயே அவனும் செயலாளரும் சபா கட்டிடத்துக்குப் போய்விட்டார்கள்.

ஒவ்வொருவராக வரவேற்று அழைத்துப் போய் உட்கார வைத்துக் கொண்டிருந்த சுந்தரேசன், நீல வாயில் புடவை அசைய ஒரு பெண்ணுருவம் தென்பட்டதும் சரியாக நிமிர்ந்துகூடப் பார்க்காமல், "மேடம்! ப்ளீஸ் கம்... திஸ் வே...'' என்று சொல்லிவிட்டு, அபூர்வமாக ஏற்பட்டுவிட்ட ஏதோ ஒருவிதத் துணிச்சலுடன் ஏறிட்டுப் பார்த்தபோது, எதிரே பேபி நின்று கொண்டிருந்தாள். அவனை வெட்டி விடுவது போல் முறைத்துப் பார்த்து விட்டுத் தலையைத் திருப்பிக் கொண்டு உள்ளே போய்விட்டாள் அவள்.

தான் அவளை 'மேடம்' என்று கூப்பிட்டது அவளுடைய 'ஸ்மார்ட்னெஸ்ஸை' அவமானப்படுத்தி இருக்குமோ என்பதாகத் தோன்றியது அவனுக்கு. என்ன செய்வது? பேசிய ஒரு வார்த்தையை மறுபடி விழுங்க முடியாதே?

அன்றைய சபா நிகழ்ச்சி முடிந்து ஒன்பதரை மணிக்கு அவன் வீட்டுக்குப் போய் உடை மாற்றிக் கொண்டு டைனிங் டேபிளில் சாப்பிட உட்கார்ந்தபோது எதிர்பாராதவிதமாக டெலிபோன் மணி அடிக்கத் தொடங்கியது. அவன் ஓடிப்போய் எடுத்தான். எதிர்ப்புறமிருந்து ஒரு பெண்குரல் சீறியது. அது பேபியின் குரல் என்று அவன் அடையாளம் புரிந்து கொள்ளவே சில விநாடிகள் ஆயின.

"மிஸ்டர், உங்களுக்கு என்னைப் பிடிக்கலேன்னா வரவேற்காம இருந்துடலாம், அதுக்காக 'மேடம், மாமி, அத்தை, பாட்டி' அப்படீன்னெல்லாம் கூப்பிட்டு இப்படி அவமானப்படுத்த வேண்டியதில்லே... தெரிஞ்சுக்குங்கோ..."

இதைக் கேட்டு அவன் திணறிப் போனான்.

"அது ஒரு மரியாதை வார்த்தைன்னு மட்டும் நீங்க புரிஞ்சுண்டா அதிலே தப்பா எடுக்கிறதுக்கு ஒண்ணுமே இல்லியே" என்று அவன் ஏதோ பதில் சொல்ல முயன்றபோது அவள் குறுக்கிட்டு, "ஒரு பெண்ணுக்கு எப்படி மரியாதை செய்யறதுன்னு நீங்க இனிமேல்தான் படிச்சுக்கணும். நல்ல வேளை...! 'அத்தைப் பாட்டீன்னு' கூப்பிடாம இருந்தமட்டிலே சரி..." என்று கடுமையாகச் சீறி ஃபோனை வைத்துவிட்டாள்.

மறுபடி அவளைத் தானே கூப்பிட்டுச் சமாதானமாகப் பேசலாம் என்று அவனுக்குத் தோன்றியது. ஃபோனை அவள் எடுக்காமல் சாஸ்திரியோ, மிஸஸ் சாஸ்திரியோ எடுத்துத் தொலைத்தால் என்ன செய்வது என்ற தயக்கம் தடுக்கவே அந்த எண்ணத்தைக் கைவிட வேண்டியதாயிற்று. ஆனால் இந்த நிகழ்ச்சி அன்றிரவு அவனைத் தூங்கவிடாமல் செய்துவிட்டது. ஓர் இளம் பெண்ணின் முகத்தில் நாணத்தை வரவழைக்க முடியாமல் போகுமளவுக்குத் தன்னிடம் எது குறைகிறதென்று அவனுக்கே புரியாமலிருந்தது. 'இவள்என் பேத்தி' என்று சாஸ்திரி முதன்முதலாக அவளைத் தனக்கு அறிமுகப்படுத்திய தினத்தன்று தளதளக்கும் அரபிக் குதிரை போல இளமை திமிறிக் கொண்டு பாயஅவள் நின்ற அந்தத் தோற்றத்தையும், அப்போது அவள் முகத்தில் தோன்றிய நாணச் சிரிப்பையும் எண்ணி எண்ணி உருகினான் சுந்தரேசன். மறுபடி அந்த நாணத்தை அவள் முகத்தில் வரவழைக்கும் மாயம் புரியவில்லை அவனுக்கு.

மறுநாள் காலை இதை மறக்கும்படி வேறொரு தலைவலி வந்து சேர்ந்தது. திருவொற்றியூரில் அவனுடைய ஃபவுண்டரியில் ஏதோ 'லேபர்அன்ரெஸ்ட்' வந்து, அது கடைசியில் உள்ளிருப்பு வேலை நிறுத்தத்தில் முடிந்தது. தொடர்ந்து நாலைந்து தினங்களாக அவன் அது சம்பந்தமாக யூனியன் தலைவர்களையும் தொழிலாளர்களையும் சந்தித்துக் காரண காரியங்களோடு கண்டிப்பாகப் பேச வேண்டியிருந்தது. தினம் மாலையில் ஃபவுண்டரியிலிருந்து வீடு திரும்ப ஐந்து மணி

ஆறு மணி என்று ஆகிக் கொண்டிருந்தது. அவனே நேரில் தொழிலாளர்களோடு பேசி அவர்களும் அவனும் நியாயமாக ஒரு முடிவுக்கு வந்து எல்லாம் சமரசமாக முடிவாயிற்று. அந்தச் சமரசம் நேர்ந்த வெற்றிக் களிப்போடு அன்று தானே காரை டிரைவ் செய்து கொண்டு பீச் ரோடு வழியாக வீடு திரும்பிக் கொண்டிருந்தான் அவன். துணிவாகவும், நியாயமாகவும் முயன்றால் எதையும் சமாளிக்க முடியும் என்ற தைரியமான மனநிலையில் அவன் அன்று இருந்ததனால் வழக்கத்திற்கு விரோதமாக அதிகபட்ச வேகத்தில் காரைச் செலுத்திக் கொண்டிருந்தான் அவன்.

விவேகானந்தர் சிலையைக் கடந்து ராணி மேரி கல்லூரி அருகே வந்தபோது கையில் புத்தக அடுக்குடன் அங்கே பேபி நிற்பதைப் பார்த்துவிட்டு அவன் காரை 'ஸ்லோ' ஆக்கி அவளைக் கையசைத்துக் கூப்பிட்டான். அதே பஞ்சாபி டிரஸ். அதே இளமைத் திமிறிப் பாயும் தோற்றம்! புத்தகங்கள் கையில் இருந்ததால் இன்னும் அதிகம் 'ஸ்மார்ட்டாக'த் தோன்றினாள் அவள். அவன் கூப்பிட்டதைப் பார்க்காதது போல் முகத்தைத் திருப்பிக் கொண்டாள் அவள். அவன் விடவில்லை. காரை விட்டு இறங்கி அருகே நெருங்கிச் சென்று "ஹேய் பேபீ! உன்னைத்தான்... நான் கொண்டுபோய் வீட்டிலே 'டிராப்' பண்றேன்; ஏறிக்கோ" என்றான்.

அவள் திரும்பிப் பார்த்தாள். தயங்கினாள். அப்புறம் மெதுவாக நடந்து வந்தாள். அவனுக்கு வெற்றி. மகத்தான வெற்றி! பின் ஸீட்டில் ஏறிக் கொள்ளப் போனவளை முன் ஸீட் கதவைத் திறந்துவிட்டு அங்கே ஏறிக் கொள்ளச் சொன்னான் அவன். அவள் மறுக்கவில்லை. காரை ஸ்டார்ட் செய்து திடீரென்று இடது பக்கம் திரும்பிக் கடற்கரை உள்சாலையில் செலுத்தினான் அவன்.

"எங்கே...?" என்றாள் பேபி.

"இப்ப என்ன அவசரம்? கொஞ்ச நாழி பீச்லே உட்கார்ந்திட்டுத்தான் போகலாமே?"

இதற்கும் அவள் மறுக்கவில்லை. கடற்கரை உட்புறச் சாலையில் காரைப் பார்க் செய்துவிட்டு இருவரும் மணலுக்குப் போவதற்காகச் சாலையில் குறுக்கே நடந்தபோது தலைகுனிந்து நடந்த அவள் ஒரு ஐஸ்கிரீம் வண்டியில் மோதிக் கொள்ள இருந்தாள். சட்டென சுந்தரேசன் அவள் கையைப் பிடித்துப் பின்னுக்கு இழுத்தான். அவள் முகம் சிவந்தது.

"கையை விடுங்கோ..."

அவள் குரலிலும், முகத்திலும், சிரிப்பிலும் எந்த நாணத்தைக் கடந்த பல வாரங்களாக அவன் எதிர்பார்த்து வெற்றி கொள்ளத் தவித்தானோ அந்த நாணம் ஒலித்தது, தெரிந்தது, ஒளிர்ந்தது.

'பேபீ! தேர் யூ ஆர்...' என்று அவன் மனம் எக்காளமிட்டது.

"ஒரு கோல்ட் ஸ்பாட் சாப்பிடறியா?"

அவள் 'ஆகட்டும்' என்பதற்கு அடையாளமாகத் தலையை ஒயிலாக அசைத்தாள்.

இருவரும் பக்கத்தில் இருந்த ஒரு ஸ்டாலில் கோல்ட் ஸ்பாட் சாப்பிட்டார்கள். இப்போது அவள் அவனிடம் நிமிர்ந்து பார்த்துப் பேசவே நாணப்பட்டாள். கூச்சப்பட்டாள். ஆயிரம் தொழிலாளர் பிரச்சினையைச் சமாளித்ததைவிட இன்று அவனுக்கு இது பெரிய வெற்றி.

கடற்கரை மணலில் அமர்ந்திருந்தபோதும் கீழே பார்த்து மணலைக் கீறிக் கோடு போட்டுக் கொண்டிருந்தாள் அவள்.

“பேபி! உன்னை ஒண்ணு கேக்கணும்...”

“கேளுங்கோ...”

“அன்னிக்கி ஃபோன்லே கோபமாப் பேசினியே, அப்ப, ஒரு பெண்ணுக்கு எப்படி மரியாதை செய்யறதுன்னு நீங்க இனிமேல் தான் படிச்சுக்கணும்’னியே இன்னிக்கு நான் அதை ரொம்பச் சரியாப் படிச்சிண்டுட்டேன்னு நினைக்கிறேன், சரிதானே?”

அவள் பதில் சொல்லவும் இல்லை; தலை நிமிரவும் இல்லை. இன்பக் கிளுகிளுப்புடன் கூடிய சிரிப்பு மட்டும் அவளிடமிருந்து ஒலித்தது. அந்தச் சிரிப்பே அவன் சொல்வது சரிதான் என்று ஒப்புக் கொள்வதாக இருந்தது.

“அம்பிகாபதி அமராவதிக்கும் பில்ஹணன் தன்னைக் காதலித்த ராஜகுமாரிக்கும், துஷ்யந்தன் கண்வருடைய மகளுக்கும் செய்த மரியாதை இதுதானே?”

இதைக் கேட்டு அவள் முகம் கனிந்து சிவப்பதை அவன் தலை தாழ்த்திப் பார்க்கிறான். பதில் சொல்லவும் நாணி ஒடுங்கிவிட்டாள் அவள் என்பது அவனுக்குப் புரிகிறது; நன்றாகப் புரிகிறது.

‘தேர் யூ ஆர்!’

அவன் மனம் குதூகலத்தால் துள்ளுகிறது. ஓர் இளம் அரபிக் குதிரையைப் பழக்கி வசப்படுத்திவிட்ட ஆண்மைப் பெருமிதத்தால் பூரிக்கிறது.

திரும்புவதற்காக இருவரும் காரருகே வரும்போது கொழுகொம்பைச் சார்ந்த கொடிபோல்அவனருகே துவண்டு தளர்ந்து துடியிடை அசைய நடந்தாள் அவள். பழைய குதிரை நடை இல்லை இப்போது.

காரில் ஏறுமுன் -

“உங்களைத்தானே! பீச்சுக்கு வந்தது தாத்தாவுக்குத் தெரிய வேண்டாம்” என்று மெல்லிய குரலில் பயத்தோடு அவள் கூறியபோது, “ஏன் பயந்து சாகிறாய், பேபி?” என்று அவன் ஆண்சிங்கமாகப் பதில் சொன்னான். அவள் அதை எதிர்த்துச் சொல்லவில்லை. அவன் பயந்தவரை முற்றிலும் அவனை மதிக்காமல் இருந்துவிட்டு, அவனே துணிந்த பின் அவள் அவனுக்குப் பயந்து மரியாதை செய்தாள்.

வீட்டு வாசலில் அவளை இறக்கிவிட்டபோது அவன், “மறந்துடாதே, ராத்திரி போன் பண்ணு” என்று கூறியவுடன், “உஷ்! மெதுவாச் சொன்னால் என்ன?” என்று

சிணுங்கினாள் அவள். அப்போது அவள் முகத்தில் நாணத்தின் எல்லையைக் கண்டான் சுந்தரேசன்.

'தேர் யூ ஆர்...'

அவளிடம் இவ்வளவு நாணம் எப்படி, எங்கே இருந்து வந்தது என்பதே அவனுக்கு ஆச்சரியமாயிருந்தது. சில வாரங்களுக்கு முன் தன்னிடமிருந்த அவ்வளவு நாணமும் அவளிடமும், அவளிடமிருந்த அவ்வளவு துணிச்சலும் இப்போது தன்னிடமும் இடம் மாறிவிட்டதை உணர்ந்தான் அவன்.

'பெண்ணைப் பெண்ணாக அங்கீகரித்துப் பெண்ணாகப் புரிந்து கொண்டு, பெண்ணாகவே நடத்துவதைவிடப் பெரிய மரியாதையை எந்த ஆணும் ஒரு பெண்ணுக்குச் செய்துவிட முடியாது' என்று அறிந்தபோது அவன்தான் ஓர் ஆண்மகன் என்பதை நன்றாக உணர முடிந்தது. திடீரென்று அவன் பெரியவனானான். இப்போது ஒரு பெண்ணின் 'ஸ்மார்ட்னெஸ்'ஸை மதிக்க அவனுக்கு வழி தெரிந்துவிட்டது. 'பேபீ! தேர் யூ ஆர்' என்று அவளை அவன்சரியாகக் கண்டுபிடித்துவிட்டான். அடுத்த வாரம் முதல்முதலாக அவன் மீசையும் வைத்துக் கொண்டான்.

(1974-க்கு முன்)



## 117. ஓர் அரண்மனை ஏலத்துக்கு வருகிறது

"இளையராஜாவை யாரோ பார்க்கணும்னு வந்திருக்காங்க..." குரலைக் கேட்டு ஆத்திரத்தோடு திரும்பிய ரகுநாத பாண்டிய ராஜ பூபதி என்ற ஆர்.பி.பூபதி.

"இந்தா மருதமுத்து! உனக்கு எத்தினி வாட்டி சொல்லியிருக்கேன், 'இளையராஜா' அந்த ராஜா இந்த ராஜா எல்லாம் கூடாது. சும்மா 'ஐயா' னு கூப்பிட்டாப் போதும்னு..." என்று வேலைக்காரனை இரைந்தான். அவனுடைய முகத்தில் கடுங்கோபம் தெரிந்தது. வேலைக்காரன் 'விஸிட்டிங் கார்டு' ஒன்றை நீட்டிக் கொண்டே கூறினான். "வளமுறையை எப்பிடி விட முடியும் இளையராஜா?"

"பார்த்தியா, பார்த்தியா, மறுபடியும் 'இளையராஜா' வா! அதானே வேணாம்னு இவ்வளவு நேரமாத் தொண்டை தண்ணி வற்றினேன். ஆயிரத்தித் தொள்ளாயிரத்து எழுபத்தி மூணாம் வருசத்திலே... இதெல்லாம் என்ன பைத்தியக்காரத்தனம்; நம்மை நாமே ஏமாத்திகலாம்னா இப்பிடி எல்லாம் கூப்பிட்டுச் சந்தோஷப்பட்டுக்கலாம்."

"அப்படியில்லீங்க - வந்து?"

"வந்தாவது, போயாவது, இந்தக் கோட்டை மதில் சுவருங்க இருக்கே, இதை வெளி உலகமே நம்ம கண்ணுக்குத் தெரியாதபடி அந்தக் காலத்திலே ரொம்ப உயரமாக கட்டிப்பிட்டாங்க. அதான் உங்களுக்கெல்லாம் வெளி உலகமே தெரியலே. காலம் ஓடிக்கிட்டு இருக்குங்கிறதும் தெரியலே. சொப்பனத்துலே வாழறீங்க. பீமநாதபுரம் சமஸ்தானம் அஸ்தமிச்சு இருபத்தியாறு வருசம் ஆகப் போகுது. அது அஸ்தமிச்சுப் போச்சுங்கிறது இன்னும் வெளிப்புறத்து மதில்களைத் தாண்டி இங்கே உள்ளே தெரியலே. அதுதான் கோளாறு. முதல்லே இந்த மதில் சுவர்களை இடிச்சுத் தள்ளணும்..."

"வந்திருக்கிறவரு... காத்துக்கிட்டிருக்கிறாரு..."

"வரச் சொல்லு..."

மிடுக்காக உடையணிந்த ஒரு நடுத்தர வயது மனிதர் வந்தார். அங்கே கிடந்த பழைய காலத்து அலங்கார நாற்காலிகளில் ஒன்றைக் காட்டி அவரை உட்காரச் சொன்னான் பூபதி.

"ஹைனெஸ்ஸை இவ்வளவு சீக்கிரமாச் சந்திக்கிற பாக்கியம் கிடைக்கும்னு இந்த ஏழை நினைக்கலே" என்று பவ்யமாக வணங்கிய அந்த நடுத்தர வயது மனிதர், நாலைந்து யுவர் எக்ஸெலன்ஸி எல்லாம் போட்டுப் பேசவே எரிச்சலடைந்தான் பூபதி.

“ஐ யாம் பூபதி. ப்ளீஸ் ஸே மிஸ்டர் பூபதி... தட் இஸ்... எனஃப்” என்று அவரை மடக்கினான்; எரிச்சலோடு இரைந்தான்.

“நான் ஒரு வாரத்துக்கு முன் பெரிய ராஜாவை பெங்களூர் ரேஸில் சந்திச்சுப் பேசற பாக்கியம் கிடைச்சுது...”

“அதாவது எங்க ஃபாதரை பெங்களூர் ரேஸ்லே பார்த்தேன்கிறீங்க... பெங்களூர் ரேஸ்லே மட்டும் என்ன, எங்கே ரேஸ் நடந்தாலும், அவரைப் பார்க்கலாம்...”

“நோ நோ... அப்படிச் சொல்லப்படாது, பெரிய ராஜா...”

“மிஸ்டர்!... உங்க பேரென்ன...? சாமிநாதனா...? சாமிநாதன்! இதா பாருங்க... சுற்றி வளைக்காமே வந்த காரியத்தை ஸிம்பிளா சொல்லுங்க... இப்ப இந்த இடம் சமஸ்தானமும் இல்லை. நான் சின்ன ராஜாவும் இல்லே. எங்க அப்பா பெரியராஜாவும் இல்லே. எல்லாரையும் போல நாங்களும் ஜனங்கதான். இந்த மதிற் சுவர், கோட்டை, நந்தவனம் இதை எல்லாம் விட்டு விட்டு, வேற வீடு புதுசாக் கட்ட வசதி இல்லாததாலேதான், இன்னும் நாங்க இதிலேயே குடி இருக்கோம். இதிலேயே தொடர்ந்து இருக்கறதுனாலே நாங்க ராஜாக்கள் ஆயிட மாட்டோம். நாங்க ராஜாவா இருந்ததை நாங்களே மறக்க ஆசைப்பட்றப்போ நீங்க அதை நினைப்பு மூட்டிவிடறீங்களே, அதிலே உங்களுக்கு என்ன சந்தோஷம்...?”

“தப்பா ஏதாவது பேசியிருந்தால் இளையராஜா இந்த ஏழையை மன்னிக்கணும்...”

“இன்னமும் தப்பாத்தான் பேசிக் கிட்டிருக்கீங்க மிஸ்டர் சாமிநாதன்! போகட்டும் வந்த வேலையையாவது ‘சிம்பிளா’ சொல்லுங்க...”

“அந்த மோகினி பெயிண்ட்டிங்க்ஸ் விஷயமா பெரியராஜாகிட்டப் பேசினேன்...”

“என்ன பேசினீங்க?”

“அந்த பிரஞ்சுக்காரன் இந்த ‘சீரிஸ்’ முழுவதையும் பதினையாயிரம் ரூபாய்க்குக் கேட்கிறான்.”

“மிஸ்டர் சாமிநாதன்! உங்களுக்கு நான் சில உண்மைகளைச் சொல்லுகிறேன். எங்க ஃபாதரோடு நீங்க ரொம்ப நாளாப் பழகறீங்க. அதனாலே அவரோட எல்லா ‘வீக்னஸ்ஸும்’ உங்களுக்குத் தெரியும். அவருடைய புத்திர பாக்கியங்களிலே என்னைத் தவிர மீதி மூணு பேர் காலேஜிலே படிச்சிக்கிட்டிருக்காங்க. ஒவ்வொருத்தனுக்கும் மாசம் பிறந்தா எழுநூறு ரூபாய்க்கு பேங்க் டிராஃப்ட் எடுத்து மெட்ராஸுக்கு அனுப்ப வேண்டியிருக்கு. சாதாரணமா மத்தக் குடியானவங்க வீட்டுப் பையன் இதே படிப்பை முந்நூறு ரூபாய்க்கும் குறைவாச் செலவழித்துப் படித்துவிடுவான். ‘பீமநாதபுரம் யுவராஜா’ என்கிற பொய்யான பிரமையிலே என் தம்பிகள் அதிகமாகச் செலவழிக்கிறாங்க. அரண்மனைங்கிற இந்தப் பெரிய மாளிகையிலே கலியாணங் கட்டிக் கொடுக்க வேண்டிய பெண்கள் இன்னும் ஒரு டஜன் எண்ணிக்கைக்குச் சரியா இருக்காங்க.

ஃபாதரோ பிரிட்டிஷ்காரன் காலத்தில் இருந்த மாதிரியே இன்னும் ஜபர்தஸ்தா இருக்காரு. அவரோடு பழகறவங்களும் அப்படித்தான் இருக்காங்க. ஃபாதரோட கிளப் மெம்பர்ஷிப் பில்களே மாசம் மூவாயிர ரூபாய்க்கு மேலே வந்திடுது. ஸ்பென்சர் சுருட்டு, ஸ்காட்ச் விஸ்கி, ரேஸ், சீட்டாட்டம் எதையும் அவர் விடமாட்டேங்கிறாரு. வீட்டு வரவு செலவு, நிர்வாகம், எல்லாம் என் தலையிலே விழுந்திருக்கு. மாசா மாசம் பணக் கஷ்டம் தாங்க முடியலே... எதை எதையோ விற்று எப்படி எப்படியோ சமாளிக்கிறேன். எங்கப்பாவிலேருந்து இந்த மாளிகையிலே ராணிகள் என்ற பேரிலும், ராஜகுமாரிகள் என்ற பேரிலும், சின்ன ராஜாக்கள், சின்ன ராணிகள் என்ற பேரிலும் அடைந்து கிடக்கிற யாருக்கும் இங்கே உள்ள அசல் வறுமைகள், அசல் சிரமங்கள் எதுவுமே தெரியாது. யாருமே ரியாலிட்டியை ஃபேஸ் பண்ண எப்பவுமே தயாராயில்லை. வாழ்க்கை சிரமங்கள் தெரியாமல் எங்க வீட்டிலே ஒவ்வொருத்தரும் பீமநாதபுரம் ராஜா, பீமநாதபுரம் ராணி, பீமநாதபுரம் சின்னராணின்னு கூப்பிட்டுக் கொண்டும் கூப்பிடச் சொல்லியும், எழுதியும் எழுதச் சொல்லியும் போலியாப் பெருமைப்பட்டிக்கிட்டிருக்காங்க. இங்கேருந்து மெட்ராசுக்கு முதல் வகுப்பு ரெயில் டிக்கெட் வாங்கறப்பக்கூட ரிஸர்வேஸன் 'சார்ட்'லே இடச் சுருக்கத்துக்காக வி.ஆர்.பி.பூபதின்னு போட்டா எங்கப்பா கோபிக்கிறாரு. 'ராஜா விஜய ராஜேந்திர பீமநாத பூபதி'ன்னு முழுப் பெயரும் போடாட்டி அந்த ரெயில்லே ஏறிப் போகமாட்டேங்கறாரு. ஆனா அந்த ரயில் டிக்கெட்டை நான் எப்படி வாங்கறேன், எதை விற்று வாங்கறேன்னு தெரிஞ்சா அவருக்குத் தன் நிலைமை புரியும்.

நவராத்திரி சதஸ், மன்னர் பிறந்தநாள், அன்னதானம் என்று பழைய நாளில் ஆயிரம் இரண்டாயிரம் பேருக்குச் சோறு வடிக்க, சாம்பார் வைக்க என்று ஏராளமான அண்டாக்கள், குண்டாக்கள், தூக்கு வாளிகள், பாத்திரங்கள் எல்லாம் இங்கே ஒரு கட்டிடம் நிறைய அடைஞ்சு கிடக்குது. இந்த வீட்டின் மாதாந்திர வரவு-செலவு இப்போது எல்லாம் அப்படிப் பழைய பண்டங்களை விற்றுத்தான் நடக்குது. கீழவெளி வீதியிலே உள்ள சோமநாத நாடார் பாத்திரக் கடையிலே பின்பக்கமாகப் போய் நீங்க நுழைஞ்சா அங்கே எங்க பாத்திரங்களைப் புதுப்புதுப் பாத்திரமா வார்ப்பதற்காக அடித்து உடைத்து உருக்கிக் கொண்டிருப்பாங்க. அந்தப் பெரிய பாத்திரங்களிலே ரெண்டு, மூணு, ஆள்கூட உள்ளாறப் புகுந்து உட்காரலாம். இப்ப விற்கிற காப்பர் விலை, பித்தளை விலையிலே, அதை எல்லாம் நல்லா விற்க முடியுது. பாத்திரங்களிலே 'பாலஸ் - பீமநாதபுரம்'னு பேர் வெட்டியிருக்காங்க. கடைக்காரரு அதை உருக்கி வேற பாத்திரமாக்கறப்போ எப்பிடி அந்தப் பேர்களும் எழுத்துகளும் அழிஞ்சிடுமோ அப்படியே எங்களைக் குறித்த, காலத்துக்கும் மணிபர்ஸுக்கும் ஒத்து வராத டம்பங்களும் ஆடம்பரங்களும் இன்றும் இனிமேலும் அழிந்துவிட வேண்டும் என்று நானே ஆசைப்படுகிறேன்.

இந்த நாலு மதில் சுவருக்கும் உள்ளே இவ்வளவு பெரிய மாளிகையிலே மொத்தம் எட்டு நூறு பல்புகளும், நூற்றைம்பது டியூப்லைட்டுகளும் இருநூற்று எழுபது மின்சார விசிறியும், நாலு கார்களும், ஏழு ஃபிரிஜிடேரும், நாலு ஏர்கண்டிஷன்

பிளாண்டும் இருக்கு. இதுக்கு மாசா மாசம் எலெக்ட்ரிக் பில்லே ஆயிரம் ரூபாய்க்கு மேலே வருது. இங்கே இந்த மதில் சுவருக்கு உள்ளே இருக்கின்ற கோவிலின் சிப்பந்திகள் உள்பட கார் டிரைவர் நாலு பேரையும் சேர்த்து மொத்தம் முப்பத்தாறு பேர் இங்கே வேலை பார்க்கிறாங்க. இவங்களோட மாதாந்திரச் சம்பளம் அலவன்ஸ் வகையிலே மட்டும் மாசம் ஆறாயிரம் ரூபாய் வரை செலவாகுது. இதிலே யாரையும் வேலையிலிருந்து நிறுத்த ஃபாதர் சம்மதிக்கமாட்டேங்கறாரு. இந்த வீட்டோட வரவு - செலவு எனக்குத்தான் பச்சையாய்த் தெரியும். எதை எதையோ விற்று ஒவ்வொரு மாசமும் ஓட்டிக்கிட்டிருக்கேன். சிரமங்கள் புரியாம எல்லாருமே பழைய ராஜா-ராணி மனப்பான்மையிலே இருக்காங்க. ஒருத்தரும் ஒரு சௌகரியத்தையும் குறைச்சுக்கத் தயாராயில்லே... எதுக்குச் சொல்ல வந்தேன்னா... இந்த நிலைமை உங்க காதுவரையும்கூட எட்டியிருக்கு... அது தெரிஞ்சுதான் வெளிநாடுகளுக்குச் சிலைகள், ஓவியங்கள், சிற்பங்கள், புராதனப்பொருள்களை ஏற்றுமதி செய்கிற 'ஏன்ஷியண்ட் ஆர்ட் டிரேடர்ஸ்' கம்பெனி வைத்திருக்கிற நீங்க என்னையும் ஃபாதரையும் சுற்றிச் சுற்றி வர்றீங்க..."

"நோ... நோ... உங்களுக்கு இஷ்டமில்லேனா நான் வற்புறுத்தலே... நல்ல விலை வருது... அதுதான் தேடிவந்தேன்..."

"அவசரப்படாதீங்க மிஸ்டர் சாமிநாதன்! நான் சொல்றதை முழுக்கக் கேளுங்க..."

"சொல்லுங்க..."

"போனவாரம் ஒரு ஈவினிங்கிலே போலீஸ் இன்ஸ்பெக்டர் திடீர்னு என்னைத் தேடி வந்தாரு. என்னிடம் ஒரு வெள்ளி சந்தனக் கும்பாவை எடுத்துக்காட்டி அதிலே எங்க குடும்பத்து முத்திரை இருந்ததையும் என் கவனத்துக்குக் கொண்டுவந்து, 'இதை உங்க அரண்மனை வேலைக்காரி ஒருத்தி வெள்ளிக் கடையிலே நிறுத்து விலைக்குப் போட வந்தா. கடைக்காரர் போலீஸ் ஸ்டேஷனுக்குப் ஃபோன் பண்ணினாரு. நாங்க போயி உடனே வேலைக்காரியை லாக் அப்பிலே வச்சிட்டு உங்களைத் தேடி வந்திருக்கோம். தயவு செய்து என்ன பண்ணலாம்னு சொல்லுங்க'ன்னாரு. "அந்த வேலைக்காரியைப் பார்த்துக் கேட்கணும். நானே போலீஸ் ஸ்டேஷனுக்கு வரன்னேன்." 'நீங்க வரவேண்டாம்! அவளை இங்கேயே கூட்டிக்கிட்டு வரச் சொல்றேன்'னு இன்ஸ்பெக்டர் ஸ்டேஷனுக்கு போன் பண்ணினாரு. கால் மணி நேரத்துக்கெல்லாம் ஒரு கான்ஸ்டபிள் அந்த வேலைக்காரியை அழைத்துக் கொண்டு வந்து சேர்ந்தான்."

"ஏம்மா, நீயா இதைக் கடைக்குக் கொண்டு போனியா அல்லது இங்கேருந்து யாராவது கொடுத்து வித்துக்கிட்டு வரச் சொன்னாங்களா?"

அவள் பதில் சொல்லத் தயங்கினாள். அழுதாள், நான் அவளை மேலும் தூண்டினேன்.

"சொல்லும்மா - பயப்படாதே! உனக்கு ஒரு கெடுதலும் வராது..."

மீண்டும் அவள் தயங்கினாள். நான் அவளிடமிருந்து உண்மையை வரவழைக்கத் தூண்டினேன். கடைசியாக அவள் கண்ணீருக்கிடையே உண்மையைக் கக்கினாள்.

"சோப்பு, ஷாம்பு, பேஸ் பவுடர், ஹேர் ஆயில் எல்லாம் வாங்கப் பணம் இல்லேன்னு சின்னராணி பத்மாம்பாள் இதைக் கொண்டு போய் வெள்ளிக்கடையிலே நிறுத்துப் போடச் சொன்னார்... நீங்க இதை ராணிக்கிட்ட சொன்னீங்கன்னா என்னைக் கொன்னுடுவாக... என் வேலை போயிடும்"னு கதறினாள் அந்த வேலைக்காரி. இன்ஸ்பெக்டர் என்னிடம் வருத்தம் தெரிவித்துவிட்டுப் போய்ச் சேர்ந்தார். வேலைக்காரியைக் காப்பாற்றுவதற்காக நானே பாத்திரத்தை வாங்கி வைத்துக் கொண்டு, சோப்பு, சீப்பு, ஹேர் ஆயில் ஷாம்பு எல்லாம் வாங்கப் பணம் கொடுத்து அவளை அனுப்பினேன். எதுக்குச்சொல்ல வந்தேன்னா ராயல் ஃபேமிலி அது இதுன்னு நீங்க வச்சுக்கிட்டிருக்கிற வீண் பிரமையை எல்லாம் இனிமேலாவது விட்டுடணும். எல்லாரையும் போல நாங்களும் மனுஷங்க. எங்களுக்கும் தேவைகளும் வறுமைகளும் உண்டு. அர்த்தமுள்ள வறுமைகளும் உண்டு. ஃபேஸ் பவுடருக்காக வெள்ளிப் பாத்திரத்தை விற்கிற மாதிரி அர்த்தமில்லாத வறுமைகளும் உண்டு... அதை எல்லாம் நீங்க தெரிஞ்சுக்கணும்..."

"ஐ ட்டு ரியலைஸ் இட்... யுவர் எக்ஸலென்ஸி..."

"பார்த்திங்களா... பார்த்திங்களா? 'யுவர் எக்ஸலென்ஸி' தானே வேணாம்கிறேன்."

"இந்த மாதிரி சிரமங்கள் எல்லாம் இருக்கறதுனாலேதான் அந்த பிரெஞ்சுக்காரனோட 'ஆஃபரை' ஒத்துக்கலாமான்னு கேட்க வந்திருக்கேன்..."

"அதுக்குத்தான் இப்போ நான் கிளியர் கட்டா உங்களுக்குப் பதில் சொல்லப் போறேன் மிஸ்டர் சாமிநாதன்! இந்த அரண்மனைங்கிற சத்திரத்தைக் கட்டிக் காக்க எதை எதையோ தெரிஞ்சும் தெரியாமலும் விற்கிறோம். சோப்பு சீப்புக்காக வெள்ளிப் பாத்திரத்தை இரகசியமா விற்கிறவங்க... ஸ்பென்சர் சுருட்டுக்காகத் தங்க நகையை விற்கிறவங்க, ரெயில் டிக்கெட்டுக்காகப் பாத்திரங்களை எடை போடறவங்க, எல்லாரும் இந்த மதில் சுவர்களுக்குள்ளே இருக்கோம். எங்க மான அவமானங்களை வெளியே உள்ளவர்களுக்குத் தெரியவிடாமல் இந்த மதில் சுவர்கள் மறைத்து விடுகின்றாற்போல் உயரமாக அந்தக் காலத்திலேயே இதைக் கட்டி வைத்திருக் கிறார்கள். இதெல்லாம் நடக்கலாம். ஆனா இங்கே உள்ள ரேர் புக்ஸ் எல்லாம் அடங்கின லைப்ரரி, அருமையான பெயிண்டிங்க்ஸ் அடங்கிய கலைக்கூடம், பிரமாதமான பஞ்சலோகச் சிலைகள் அடங்கிய சிற்பசாலை இவை மூன்றை மட்டும் நான் எக்காரணத்தைக் கொண்டும் விற்கமாட்டேன். மற்றவர்களை விற்க விடவும் மாட்டேன். இவை இந்தக் குடும்பத்தில் என்றோ ஒரு தலைமுறையில் இண்டெலக்சுவல்ஸ் இருந்திருக்கிறார்கள் என்பதற்கும் மிகச் சிறந்த கலாரசிகர்கள் இருந்திருக்கிறார்கள் என்பதற்கும் இன்றைய அடையாளங்கள். இவற்றிலிருந்து ஒரு துரும்பு விற்கப்பட்டாலும் நான் தூக்குப் போட்டுக் கொண்டு செத்துப் போவேன், மிஸ்டர் சாமிநாதன்! இதை நீங்கள் புரிந்து கொள்ள வேண்டும். என் தாத்தா பாஸ்கர

பூபதி பெரிய கலை ரசிகர். அவர் பீமநாதபுரம் ராஜாவாக இருந்தவர் என்பதைவிட மாபெரும் கலாரசிகராக இருந்தவர் என்பதற்காகவே நான் பெருமைப்படுகிறேன். அந்தப் பெருமையை நான் விலைபேசி விற்கமாட்டேன். பேரம் பேசமாட்டேன். இங்கே உள்ள பெயிண்டிங்க்ஸிலேயே மிக அருமையான கலெக்ஷன் அந்த மோகினி சீரிஸ்தான். அதைப் பேரம் பேச நீங்கள் வந்திருக்கிறீர்கள் இல்லையா...?"

"உங்களுக்கு விருப்பமில்லை என்றால் வேண்டாம். பெரிய ராஜா பெயிண்டிங்க்ஸை விலைக்குக் கொடுத்து விடலாம் என்பதுபோல் என்னிடம் சொன்னார்... அதுதான் இப்போது தேடி வந்தேன்..."

"நன்றி! இந்த விஷயமாக இனிமேல் தேடி வராதீர்கள்... ஒரு நிமிஷம் இருங்கள்... குடிப்பதற்கு என்ன கொண்டு வரச் சொல்லட்டும்... காபியா, டீயா...? 'எகானமிடிரைவ்' காரணமாக இப்போதெல்லாம் இங்கே தேடிவருகிறவர்களுக்கு நான் குடிக்க எதுவுமே தருவதில்லை. ஆனால் உங்களை அதிக நேரம் காக்கும்படி செய்துவிட்டேன்..."

"பரவாயில்லை, எனக்கு ஒன்றும் வேண்டாம்! நான் வருகிறேன்..."

"சரி! உங்கள் இஷ்டம்" என்று அவரை அதிகம் வற்புறுத்தாமல் எழுந்து கைகூப்பி விடைகொடுத்தான் பூபதி. வந்தவர் போனதும் வேலையாள் மருதமுத்துவைக் கூப்பிட்டு, "இந்தா மருதமுத்து! காரியஸ்தர் நாகராஜ சேர்வையிடம் போய் லைப்ரரி, கலைக்கூடம், சிற்பசாலை மூணுக்கும் உள்ள சாவிக் கொத்துக்களை உடனே வாங்கிட்டு வா. இனிமே அது எங்கிட்டத்தான் இருக்கணும். இல்லாட்டி எனக்கு தெரியாமலே சுருட்டுக்கும், விஸ்கிக்கும் ரேசுக்குமாக ஒண்ணொண்ணா வித்துப்பிடுவாங்க..." என்று இரைந்தான் அவன். பத்து நிமிஷங்களில் வேலைக்காரன் மூன்று சாவிக் கொத்துக்களை வாங்கி வந்து பூபதியிடம் கொடுத்துவிட்டுச் சென்றான். பூபதி மேல் எல்லாருக்கும் அதிக மதிப்பு உண்டு. வாசனைச் சோப்பு, சில்க் சட்டை, தங்கச் செயின் என்றெல்லாம் மினுக்கும் மற்ற அரச குடும்பத்து இளைஞர்களோடு மாறுபட்டு எளிய உடை, எளிய பழக்கவழக்கங்கள், ஆடம்பரங்களில் வெறுப்பு, காந்தி, மார்க்ஸ், லெனின் ஆகியோரின் கோட்பாடுகளில் பற்று என்று முக்கால் கம்யூனிஸ்டு போல வாழ்ந்தான் அவன். அவனிடம் போலித்தனம் எதுவுமே கிடையாது. ராஜாவின் எட்டாவது வைப்பாட்டியின் மூன்றாவது பெண்கூட, அந்த மாளிகை எல்லையி லிருந்து வெளியே போகக் கார் இல்லாமல் நடந்து போகாதபோது பூபதி நடந்தே வெளியே உலாவச்செல்வான். எல்லாரிடமும் சகஜமாகப் பழகுவான். நன்கு உழைப்பான். அவனைக் கண்டால் அவனுடைய அப்பாவும் பெரிய ராஜாவுமான விஜய்ராஜேந்திர பீமநாத பூபதிக்குக்கூடப் பயந்தான்.

"எங்க அப்பாவைப் போல் பூர்ஷ்வாக்கள் ஒழிந்தால்தான் நாடு உருப்படும்" என்று பூபதியே தன் நண்பர்களிடம் தந்தையைப் பற்றிக் கிண்டல் செய்வது உண்டு. ஒரே ரெயிலில் ஒரே ஊருக்குப் போகும்போதுகூடத் தந்தை ரெயிலில் ஏஸி வகுப்பிலும் அவன் மூன்றாவது வகுப்பு ஸ்லீப்பிங் பெர்த் கோச்சிலும்தான் பயணம் செய்வார்கள். அந்த அளவிற்கு அவன் தீவிரவாதி. அவன் இருக்கிறவரை பீமநாதபுரம்

அரண்மனையின் ஓவியங்கள், பஞ்சலோக சிலைகள் எதையுமே மலிவான விலைக்கு வாங்கி அந்நியநாடுகளுக்கு அனுப்பிப் பணம் பண்ண முடியாதென்று எண்ணி 'ஏன்ஷியண்ட் ஆர்ட் டிரேடர்ஸ்' உரிமையாளர் சாமிநாதன் தந்திரமாக வேறு முயற்சிகளில் இறங்கினார். சாமிநாதனிடம் தமிழ்நாடு முழுவதிற்கும் ஓடியாடித் திருடி வந்து சேர்க்கக்கூடிய சிலை திருடும் நாகரிகமான ஏஜெண்ட்டுகள் பலர் இருந்தனர். பீமநாதபுரம் பெரிய ராஜாவோ பலவீனங்கள் நிறைந்தவர். அவரைச் சந்தித்து அவ்வப்போது ஐயாயிரம், பத்தாயிரம் என்று 'பிராமிஸரி நோட்' எழுதி வாங்கிக் கொண்டு தாராளமாகக் கடன் கொடுக்கத் தொடங்கினார் சாமிநாதன். அங்கே பீமநாதபுரம் அரண்மனைக் கலைச் செல்வங்கள் எல்லாம் கிடைத்தால் அவை மொத்தம் பத்து லட்ச ரூபாய்க்கு மேல் பெறும் என்று சாமிநாதன் ஒரு மதிப்பீடு வைத்திருந்தார். மகன் பூபதிக்குத் தெரியாமலே பெரிய ராஜா பீமநாதபூபதி சாமிநாதனிடம் கணக்கின்றி அவ்வப்போது பணம் வாங்கி வந்தார்.

அந்த வருஷ இறுதியில் பெரிய ராஜாவின் கடன் பன்னிரண்டு லட்சம் வரை போய்விட்டது. நடுவே சாமிநாதனின் கூட்டுறவோடு 'பீமநாத் புரொடக்ஷன்ஸ்' என்று ஒரு புது சினிமாக் கம்பெனியும் ஆரம்பித்தார். அது நிறைய நஷ்டத்தைத் தேடித் தந்தது. எல்லாக் கடன்களும் அரண்மனை மேல்தான் வாங்கப்பட்டிருந்தன. ஒருநாள் பூபதிக்கும் இது தெரிய வந்தது. ஆனால் அதற்குள் நிலைமை எல்லை மீறி அரண்மனை ஜப்திக்கு வந்துவிட்டது. பத்திரிகைகளில் ஏல நோட்டீஸ்கூடப் பிரசுரமாகிவிட்டது. அரண்மனை வாசலில் பொருள்களும், கட்டிடமும் ஏலத்துக்கு வந்தபோது, சாமிநாதன் தன் ஆட்களையே பணத்துடன் நிறுத்தி வைத்து லைப்ரரி, ஓவியங்கள், சிற்பங்கள் எல்லாவற்றையும் ஏலத்தில் எடுத்துவிட்டார். அரண்மனையும் அதைச் சுற்றியிருந்த இடங்களும்கூட ஏலத்துக்குப் போய் விற்றுவிட்டன.

ஏலத்தை வேடிக்கை பார்க்கக் கூடியிருந்த கூட்டத்திலிருந்த உள்ளூர்ப் பிரமுகர் ஒருவர், பூபதியின் அருகே வந்து, "ரொம்ப வருத்தப்படறேன் இளையராஜா! உங்கள் தந்தை பெரிய ராஜா இப்படிப் பண்ணியிருக்க வேண்டாம்... எல்லாம் காலக் கோளாறு" என்றார்.

"நான் வருத்தப்படலே! இந்த உயரமான மதிற்சுவர்களுக்கு வெளியே தெருவில் தூக்கி எறியப்பட்ட பின்பு, இனியாவது என் தந்தைக்கும் மற்றவர்களுக்கும் வாழ்க்கை எத்தகையது என்பது புரிந்தால் சரிதான். இந்த அரண்மனை ஏலம் போவதில் எனக்கு மனக்கஷ்டமே இல்லை. இது போகும்போதாவது எங்கள் குடும்பத்தைப் பிடித்த பீடைகளான சோம்பல், வறட்டுக் கவுரவம், டம்பம், எல்லாம் தொலைந்தால் சரிதான். இன்று நான் வருந்துவதெல்லாம் இங்கே இருந்த அறிவுநூல்கள், சிற்பங்கள், ஓவியங்கள் எல்லாம் அந்நிய நாடுகளுக்குச் சோரம் போகின்றனவே என்பதற்காகத்தான். முடிந்தால் மறியல் செய்து அதைத் தடுப்போம், அல்லது அரசாங்கமே இவற்றை மீட்டு இங்கேயே ஒரு மியூஸியமும் லைப்ரரியும் அமைக்க வேண்டும் என்று கலெக்டர் மூலம் மனுக் கொடுப்போம்" என்று, நிதானமாகவும் திட்டத்தோடும் மறுமொழி கூறினான் பூபதி. அடுத்த கணம் அவன் தன்னுடைய

நோக்கத்தை நிறைவேற்றும் வகையில் மறியலுக்காகவும் கலெக்டரிடம் மகஜர் தரச் செல்லும் ஊர்வலத்துக்காகவும் காலதாமதமின்றிக் கூட்டம் சேர்க்கத் தொடங்கினான். அந்தக் கூட்டத்தை அவனால் மிகக் குறுகிய நேரத்திலேயே பெரிய அளவில் சேர்த்துவிட முடிந்தது.

"சிலைத் திருடர்கள் ஒழிக! சொந்த நாட்டுக் கலைப் பொருள்களை அந்நிய நாடுகளில் விற்றுச் சோரம் போகாதே" என்று கோஷங்களோடு லைப்ரரியிலும், கலைக்கூடத்திலும், சிற்பச்சாலையிலும் பொருள்களை ஏற்ற வந்த 'ஏன்ஷியண்ட் ஆர்ட் டிரேடர்ஸ்'ஸின் லாரிகளை மறித்தார்கள் அவர்கள். உள்ளூரின் எல்லா அரசியல் கட்சிகளும் இதில் பூபதியோடு ஒத்துழைத்தன. ஏலம் முடிந்தும்கூட அது ஒரு பொதுஜன இயக்கமாக உருவெடுத்தது. அரண்மனையிலிருந்து கார்கள், ஃபிரிஜிடேர்கள் எதை எடுக்கும்போதும் மறியல்காரர்கள் தடுக்கவில்லை. குறிப்பாக லைப்ரரி, கலைக்கூடம், சிற்பச்சாலை மூன்றிலிருந்தும் ஒரு துரும்புகூட வெளியேறாமல் தடுத்துவிட்டார்கள் அவர்கள்.

சில மாதங்கள் வரைஅந்த மறியல் நீடித்தது. முடிவில் மறியல்காரர்களுக்கு வெற்றியும் கிடைத்தது. அரசாங்கப் பழம் பொருள் பாதுகாப்பு இலாகா உரியதும் நியாயமானதுமான காம்பென்சேஷன் தொகையைக் கொடுத்து ஏலம் எடுத்தவர்களிடம் இருந்து சிலைகள், லைப்ரரி, ஓவியங்களை மீட்டுத் தந்து உள்ளூரிலேயே அவற்றை ஒரு புதிய கட்டிடத்தில் காட்சிக்கு வைக்கவும் உத்தரவு பிறப்பித்துவிட்டது. பூபதிக்கு இந்த வெற்றி பெரும் திருப்தியை அளித்தது. 'ஏன்ஷியண்ட் ஆர்ட் டிரேடர்ஸ்' சாமிநாதன் மட்டும் ரொம்ப நாள் வரை தன் சிநேகிதர்களிடம் 'பீமநாதபுரம் பாலஸ் ஆக்ஷன்' பற்றி பேச்சு வரும் போதெல்லாம், 'எல்லாம் அந்த இளையராஜா பூபதியாலேதான் கெட்டுப் போச்சு, அவன் பெரிய கலகக்காரன்! காருக்காகவும் ஃபிரிஜிடேருக்காகவுமா அந்த அரண்மனையை நான் அவ்வளவு சிரமப்பட்டு ஏலத்துக்குக் கொண்டு வந்தேன்? லட்ச லட்சமாகப் பெறுகிற பிரமாதமான சிலைகள், ஓவியங்கள், ரேர் புக்ஸ், எல்லாம் கிடைக்கும்னு ஆசைப்பட்டுத்தான் குடிகாரனான பெரிய ராஜாவைக் குளிப்பாட்டி ரூபாயாலே அவனை அபிஷேகம் பண்ணினேன். இந்த பூபதி எல்லாத்தையும் பாழாக்கி மியூஸியம் கட்டி அதிலே கொண்டு போய் வச்சுட்டான்' என்று சலிக்காமல் பூபதியைத் திட்டிக் கொண்டிருந்தார். பூபதியோ அதற்கு நேர்மாறாக, அரண்மனை என்ற 'வெள்ளை யானை' அபாயத்திலிருந்து மீட்டுத் தன் குடும்பத்தை வெளியே அனுப்பி, அவர்களை இந்தக் கால உலகுக்குரிய உழைப்பாளிகளாகவும், கஷ்டம் தெரிந்த மனிதர்களாகவும் மாற்றியதற்காகச் சாமிநாதனை அடிக்கடி வாயார வாழ்த்திப் புகழ்ந்து கொண்டிருந்தான்.

**(1974-க்கு முன்)**

## 118. ஒரு கவியின் விலை

முதலில் விமான நிலையத்துக்குக் கார் அனுப்பினால் போதும் என்றுதான் அவள் நினைத்தாள். போட்டி அதிகமாக இருக்கும் போல் தோன்றவே தானே நேரில் போகாவிட்டால் சரிப்பட்டு வராதென்று தோன்றியது. வேறு யாராவது நேரில் போய் அவரும் அவர்களோடு தங்கிக் கொள்ளலாம் என்று புறப்பட்டுப் போய்விட்டால் அவளுடைய மதிப்பு என்ன ஆவது? அவள் தோழிகளிடம் சொன்னதெல்லாம் வீணாகிவிடுமே?

கிளப்பிலும், தோழிகளிடமும், தெரிந்தவர்களிடமும், "ஹி வில் ஸ்டே வித் அஸ்" என்று தினம் வாய் அலுக்காமல் சொல்லித் தீர்த்தாயிற்று. மற்றவர்கள் எல்லோரும், "ஐ யாம் ஹிஸ் ஃபேன்" என்று பணிவாகச் சொல்லியபோது அவள் அதே வாக்கியத்தைத் திமிராகச் சொல்லியதன் மூலம் 'ஹி இஸ் மை ஃபேன்' என்பதுபோல் பொருள்படப் பேசிக் கொண்டிருந்தாள். அவரோடு இணைத்துக் கொள்வதில் அவ்வளவு பெருமை அவளுக்கு.

'இன்றைய கவிதைகளின் நிலைமை' என்ற பொருளில் நுண்கலைக் கழகத்தில் ஒரு சிறப்புப் சொற்பொழிவாற்றத்தான் அவர் இங்கே வருகிறார். நுண்கலைக் கழகச் செயலாளர் என்ற முறையில் எங்கள் வீட்டில்தான் தங்க ஏற்பாடாகியிருக்கிறதாம். இவரே சொன்னார்" என்றாள் நுண்கலைக் கழகக் காரியதரிசியின் மனைவி.

"அதெல்லாம் இல்லை. ஓட்டல் பிரம்மப் பிரகாஷில் ஒரு ஏஸி சூட் ரிசர்வ் செய்யச் சொல்லித் தந்தி வந்திருக்கிறதாம்" என்றாள் நீதிபதி சுகவனத்தின் மனைவி.

கவி குமுதசந்திரன் தன்னுடைய பள்ளித்தோழன் - சிறுவயதிலிருந்தே அவனுடைய பல கவிதைகள் தன்னுடைய தூண்டுதலில்தான் தோன்றின; அவன் தன்னோடுதான் தங்குவான் என்று எல்லோரிடமும் சொல்லிவந்த அவளுக்கு இந்தப் பேச்சுக் களெல்லாம் எரிச்சலூட்டின. விமான நிலையத்திற்கு நேரிலேயே போய் அவனை மயக்கி வளைப்பதென்று முடிவு செய்தாள் அவள். அவளால் அதைச் செய்யவும் முடியும். இளம் வயதிலேயே அந்தக் கவி தன்னைக் காதலித்தான் என்றுகூட அவள் சில அந்தரங்கமான தோழிகளிடம் சொல்லிச் செருக்குக் காட்டியிருக்கிறாள். அவன் தன் வீட்டில் இன்று வந்து தங்கும்படி செய்யாவிட்டால் அவ்வளவும் பொய்யாகிவிடும் இப்போது. அவைகளை மெய்யாக்க வேண்டும் அவள்.

உயர்தர இராணுவ அதிகாரியாகிய தன் கணவனைப் பற்றி அவளுக்குக் கவலையே இல்லை. அவர் தனக்கு முழு சுதந்திரம் எடுத்துக் கொண்டதுபோல் அவளுக்கு முழுச் சுதந்திரம் கொடுத்திருக்கிறார். குழந்தையும் இல்லாததால் கட்டுக்குலையாத மேனியோடு பத்து வயது குறைவாகவே மதிப்பிடும்படி இருந்தாள் அவள். ஒரு

யுவதியின் மெருகும் மினுமினுப்பும் கொண்டு வயதில் மட்டும் பேரிளம் பெண்ணா யிருந்த அவளுக்கு எழுத்து, கதை, நாவல், கவிதைகள், பத்திரிகைகள் என்றால் கொள்ளை ஆசை. அவளே எழுத முயன்று தோற்றவள். அதனால் எழுதி வென்றவர்கள் மேல் எல்லாம் தீராத தாபமும் தவிப்பும் உண்டு. அதுவும் வாலிப வயதினனான கவி குமுத சந்திரனிடம் அவள் பித்துக் கொண்டிருந்தாள் என்றே சொல்ல வேண்டும்.

"முதலில் அவன் மன்மதன்! பிறகு கவியும்கூட" என்று சில சமயங்களில் தோழிகளிடம் இம்மாதிரி ஏக்கத்தோடு பேசியிருக்கிறாள் அவள். உயர் வர்க்கப் பெண்களின் அந்தரங்கமான வம்புகளில் இப்படி அவரவர்கள் தங்களுக்குப் பிடித்த வசீகரமான ஆண்பிள்ளைகளைப்பற்றி மற்றவர்களிடம் தாராளமாக மனம் விட்டுச் சொல்வதும் உண்டுதான்.

அவர்களில் ஒவ்வொருவரும் ஒரு ரகசியத்தையாவது மற்றவர்களிடம் சொல்லியிருப்பார்களாதலால் அந்த ரகசியம் வெளியே போகக்கூடாது என்ற கவலையில் யாருடைய எந்த ரகசியத்தையும் எவரும் வெளியிட மாட்டார்கள் என்ற பொதுப் பாதுகாப்பு நிச்சயமாக உண்டு. கன்னக்கோலை ஒளித்து வைக்க எந்தத் திருடனுக்கும் இடம் கிடைப்பதில்லை; அவர்கள் எல்லோருமே அப்படி ஒளித்து வைக்க இடமில்லாமல் நினைவுகளைப் பகிர்ந்து கொண்டவர்கள். உண்மைகளையும் பொய்களையும் கலந்து பேசியவர்கள் ஒருவருடைய பொய்யை மற்றொருவர் சந்தேகித்ததுகூடக் கிடையாது. மெய்யைப் பாராட்டியதும் கிடையாது. பொய்களைத் துவேஷிக்கவும் உண்மையை வியந்து கொண்டாடவும்கூட முடியாமல், 'ஸொபிஸ்டிகேஷன்' அவர்களைத் தடுத்ததுண்டு. இருந்தாலும் இன்று ஒரு விஷயம் நேருக்கு நேர் பொய்யாகி விடாமல் இருப்பதற்கும் உண்மையாவதற்குமாக அவள் சிரத்தை எடுத்துக் கொள்ள வேண்டியிருந்தது; கவலைப்பட வேண்டியிருந்தது. அசட்டுக் கவுரவம்தான். ஆனாலும் அதை விட முடியவில்லை.

தன் தோழிகளிடம் அவள் சொல்லியிருந்ததெல்லாம் முழுப் பொய்யுமல்ல, அந்தப் புகழ் பெற்ற கவி அவளது பள்ளித் தோழன் என்பது மட்டும் உண்மைதான். அதை அவனுக்கே எழுதி, 'அவளை மறுபடி சந்திப்பதில் தான் மகிழ்ச்சியடைவதாக' அவன் கைப்படப் பதிலும் அவளுக்குக் கிடைத்திருந்தது. அந்தப் பதில் கிடைத்த துணிவில்தான் அவள் விமான நிலையத்துக்கு அவனை அழைத்துவர நம்பிக்கையோடு புறப்பட்டிருந்தாள் அன்று.

சந்தன நிறத் தோள்களின் செழுமை தெரியும்படி 'ரவிக்' அணிந்து கூந்தலின் மேல் மல்லிகை சூடி, கழுத்திலும் நெஞ்சிலும் வசீகரமான வாசனையுள்ள 'செண்ட்'டை ஸ்பிரே செய்து கொண்டு விமானநிலையம் சென்றாள் அவள்.

**"ஆடைகளை நான் சபிக்கிறேன்**<br>
**அவை மறைக்கப் பிறந்தவை**<br>
**உன்னிடமுள்ள இரகசியங்களை**<br>
**அவை எனக்கு மறைக்கின்றன**

என்னிடமுள்ள இரசனைக்கும்
உனக்கும் நடுவே திரைகள் எதற்கு?
திரைகளும் ஆடைகளும் எல்லாம்
அடுத்த பிறவியில் அந்தகர்களாகப்
பிறந்து அவலப்படட்டும்"

என்ற பொருளில் கவிதை ஒன்று எழுதியிருந்தான் அவன். மிக இளமையில் அவன் எழுதிய கவிதை இது. அதனால் கொஞ்சம் விரசம் என்றுகூடச் சில விமர்சகர்கள் இந்த வகைப் பாடல்களை அவனுடையவற்றிலிருந்து தனியே பிரித்துச் சாடுவது உண்டு. செழுமையான தோள்களும் பின்னும் முன்னும் இடையிலும் பொன்சதைமேடுகளும் தங்க வாய்க்காலும் மின்ன ரவிக் தரித்துப் புறப்பட்டபோது அவனது இந்தப் பழங்கவிதையையே அவள் நினைத்தாள். விமான நிலையத்திற்கு அவனை வரவேற்கவும் அழைத்துச் செல்ல முயல்வதற்கும் யார் யார் வந்திருப்பார்கள் என்று அவள் எதிர்பார்த்தாளோ அதைவிட அதிகமாகவே வந்திருந்தார்கள். பலர் கைகளில் மாலைகள் இருந்தன. தானும் ஒரு மாலை வாங்கி வந்திருக்கலாமே என்பது அவளுக்கு அப்போதுதான் தோன்றியது. அந்தரங்கத்தில் தானே ஒரு பூமாலைப்போல் அவன் நெஞ்சில் சரியவும் தயாராயிருந்தாள் அவள். அவனைப் பொறுத்தவரை அவள் எல்லாச் சிறைகளையும் தளைகளையும் உடைத்துக் கொண்டு நிற்கவும் ஆசைப்பட்டாள். அவள் கணவன் ஊரில் இல்லை. ஏதோ அலுவலக டெல்லி போயிருந்தான். அவன் டெல்லிக்குப் போனால் வர நாளாகும். அங்கே சிநேகிதர்களும் சிநேகிதிகளும் அவனுக்கு அதிகப் பேர் உண்டு.

கணவனைப் பற்றி நினைப்பதை நிறுத்திவிட்டு விமான நிலையத்திற்கு வந்திருந்தவர்களை நோட்டம் விட்டாள் அவள்.

"ஹலோ இந்து...!"

தன்னைக் கூப்பிடுவது யாரென்று அவள் திரும்பினால் விஜயா நின்று கொண்டிருந்தாள். விஜயாவைப் பார்த்ததும் அவளுக்குப் பொறாமையாய் இருந்தது. தன்னைவிட அன்று அவள் நன்றாக அலங்கரித்துக் கொண்டு வந்திருந்ததாகத் தோன்றியது அவளுக்கு. வரப் போகும் 'மன்மதனை' விஜயா தன்னோடு அழைத்துக் கொண்டு போய்விடுவாளோ என்றுகூடப் பயமாக இருந்தது. இந்துவும் விஜயாவும் பேசிக் கொண்டிருக்கும்போதே ஹேமா நுண்கலைக் கழகக் காரியதரிசியின் மனைவி வந்தாள்.

"உனக்குத் தெரியுமா இந்து? குமுதசந்திரனுடைய 'வசந்த காலத்து இரவுகள்' கவிதைத் தொகுதி பிரெஞ்சிலே மொழி பெயர்ப்பாகி நல்ல விற்பனையாம். உனக்குத் தெரிஞ்சிருக்கணுமே இது? நீதான் கவிஞருடைய பள்ளித் தோழியாச்சே? உனக்குத் தெரியாதது என்ன இருக்கு?" என்று ஹேமா தன்னிடம் கூறியபோது அவள் தன்னைக் கிண்டல் செய்கிறாளா அல்லது சுபாவமாகத்தான் பேசுகிறாளா என்பதைப் புரிந்து கொள்ள முடியாமல் இந்து திணறினாள்.

ஏர்ப்போர்ட் லவுன்ஜ் வாசனைகளாலும் வர்ணங்களாலும் பெண்களாலும் நிரம்பி வழிந்தது. ஒவ்வொரு பெண்ணும் ஒவ்வொரு நறுமலராக மலர்ந்து கொண்டிருந்தாற் போலிருந்தது. ஒவ்வொருத்தியிடமிருந்தும் ஒரு சுகமான இங்கித நறுமணம், பூ, வாசனைப் பவுடர், ஏதோ ஒரு செண்ட், மூன்றும் கலந்து உருவான வாசனைக் கூட்டணி. கண்கள் உணர்ந்து லயிக்க விரும்பும் வர்ணங்களும் நாசி விட்டுவிட விரும்பாத நறுமணங்களுமாக அப்போது அங்கே ஒரு வசீகரச் சூழ்நிலை உருவாகியிருந்தது.

சவர்லே, இம்பாலா, கடிலாக், பென்ஸ் என்று வரிசை வரிசையாக விமான நிலைய முகப்பில் நின்ற கார்களையும் தன்னுடைய காரையும் பார்த்துப் பெருமூச்சுவிட்டாள் அவள். தன்னுடைய காரில் ஏறித் தன்னோடு உடன் வராமல் வேறு யாரோடாவது அந்தக் கவிஞன் போய்விடுவானோ என்று நினைக்கவும்கூட முடியாமல் தவித்தாள் அவள்.

விஜயா மறுபடி வியந்த குரலில் பேசத் தொடங்கினாள் : "உனக்குத் தெரியுமோ அது? அடுத்த மாதம் உலக சமாதானத்தை முன்னிட்டு ஜெனிவாவில் யூனெஸ்கோ கலாசாரப் பிரிவினர் ஒரு பெரிய கவி சம்மேளனத்திற்கு ஏற்பாடு பண்ணியிருக்கிறார்களாம். அதற்காக நம் நாட்டின் சார்பில் அனுப்பப்பட இருக்கிற ஒரே கவிஞராக இவரைத்தான் தேர்ந்தெடுத்திருக்காங்களாம்!"

"வேறே யார் அதற்குப் போக முடியும், இவரைத் தவிர!"

"அது சரி இந்து! இவர் ஏன் இன்னும் தனிக்கட்டையாகவே இருக்கிறார்? எங்களைவிட இந்த விஷயம் உனக்குத்தான் அதிகம் தெரிஞ்சிருக்க முடியும்?"

"பதினான்கு வருஷங்களுக்கு முன் என் தலையில் வேறுவிதமாக எழுதப்பட்டிருந்தால் இன்று அவர் தனிக்கட்டை ஆகியிருக்க முடியாது. இன்று நானும் இங்கே இப்படி உங்களோடு நின்று கொண்டிருக்கமாட்டேன். நீங்கள் இப்போது யாரை எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறீர்களோ அவரோடு கைகோர்த்தபடி விமானத்திலிருந்து கூட இறங்குவேன். ஒரு மாலை கொண்டு வந்திருப்பதற்குப் பதில் நீங்கள் எல்லோரும் இரண்டு மாலைகளோடு வந்திருக்க வேண்டியிருக்கும்" என்று கொஞ்சமும் தயங்காமல் விஜயாவுக்கு உடனே பதில் சொன்னாள் இந்து.

"இந்து திடீரென்று இன்றைக்குக் கல்யாணப் பெண் போல் அழகாயிருக்கிறாள்" என்று சிரித்துக் கொண்டே சொல்லி அவளை வம்புக்கு இழுத்தாள், அதுவரை சிறிதுநேரம் பேசாமல் இருந்த ஹேமா.

"நான் மட்டுமென்ன? எல்லோருமே இன்று கல்யாணப் பெண்களைப் போலத்தான் சிங்காரித்துக் கொண்டு வந்திருக்கிறீர்கள்."

"என்ன சிங்காரித்துக் கொண்டு வந்து ஆகப்போவது என்ன? வருகிறவரை நீ கொத்திக் கொண்டு போகப் போகிறாய்."

"டோண்ட் பி ஸில்லி."

விமான நிலைய முன்னறிவிப்பு ஒலித்தது. சில விநாடிகளில் அந்த விமானம் தரையிறங்கியது. தரையில் வேகமாக வந்து அமரும் வெண்ணிற அன்னப்

பறவையைப்போல் அழகாயிருந்தது அந்த ஆவ்ரோ 74 விமானம். எல்லாருடைய மனமும் பரபரப்பு அடைந்தது.

கவி குமுதசந்திரன் விமானம் நின்றதும் அதில் பொருத்தப்பட்டிருந்த படிக்கட்டுகளின் வழியே கீழே இறங்கி லவுஞ்ஜுக்கு வருகிறவரை காத்திருக்க அவர்கள் யாருக்கும் பொறுமையில்லை. எல்லாரும் விமானம் நின்று கொண்டிருந்த இடத்தை நோக்கி ரன்வேயில் நடந்து போய் முண்டியடித்துக் கொண்டு நின்றார்கள். அப்படி விரைந்து சென்றவர்களில் முன்னால் இருந்தாள் இந்து. தோள்பட்டையிலும் கழுத்திலும் நெஞ்சிலும் எம்பிராய்டரி பூவேலை செய்த லக்னோ வெள்ளை வாயில் ஜிப்பாவும் அதே நிறத்தில் பைஜாமாவும் கூலிங்கிளாஸுமாக இறங்கி வந்தான் கவி குமுதசந்திரன். நல்ல சிவப்பு. பின்புறமாக வாரிய அமெரிக்கன் கிராப். சுருள் சுருளான கேசம். கருந்திராட்சைக் கொத்திலிருந்து ஒன்று தனியே விலகி வந்த மாதிரி முன்நெற்றியில் ஒரு சுருள்கேசம் அழகாக வந்து சரிந்திருந்தது. கவி மன்னனாகிய அவன் ரசிகர்கள் புடைசூழ இறங்கி நடந்து வருவது இளவரசன் பரிவாரங்களோடு வருவது போலிருந்தது. சிங்கம் நிமிர்ந்து நடந்து வருகிறமாதிரி ஒருவித ராஜ கம்பீர நடை அவனுடையதாயிருந்தது. இந்து புன்னகையோடு முன் சென்று தன்னைத்தானே அவனுக்கு அறிமுகப்படுத்திக் கொண்டாள்.

"நான் இந்து! அந்த நாளில் உங்கள் பள்ளித் தோழி. இப்போதுகூட நான் எழுதிய கடிதத்துக்கு நீங்கள் பதில் எழுதியிருந்தீர்கள். தங்குவதற்கு எல்லா ஏற்பாடும் நானே செய்துவிட்டேன்."

"உங்களை மறுபடியும் சந்திக்க நேர்ந்ததில் மிகவும் மகிழ்ச்சி."

அவன் 'உன்னை' என்று சொல்லியிருந்தால் தன் இளமையையும் உரிமையையும் அங்கீகரித்தது போலிருக்குமே என்று ஏங்கினாள் அவள்.

மாலைகள் கழுத்தை நிறைத்தன. புகைப்படங்கள் எடுக்கப்பட்டன. கவியின் மிக அருகே அவனை வேறு யாரும் தங்களோடு தங்க அழைத்துக்கொண்டு போய்விடாமல் பாதுகாப்பாகவும் பிடிவாதமாகவும் அவள் நின்று கொண்டு தடுத்துவிட்ட காரணத்தால் எல்லாப் புகைப்படங்களிலும் அவள் நிச்சயமாக உடன் இருப்பாள். நுண்கலைக் கழகத்தின் சார்பில் அழைக்கப்பட்டு வந்திருக்கிற அவனை ஒரு பொது இடத்தில் தங்குமாறு வற்புறுத்த வேண்டுமென்று எண்ணியிருந்தவர்கள்கூட அருகே நின்று அவனை 'எஸ்கார்ட்' செய்து, அழைத்துப் போவது போலிருந்த இந்துவின் முகத்தை முறித்துக் கொள்ளப் பயந்து பேசாமல் இருந்துவிட்டார்கள். இந்துவுக்காக மட்டும் பயப்படவில்லை. அவள் மாதம் மூவாயிரம் ரூபாய்க்கு மேல் சம்பளம் வாங்கும் ஒரு பெரிய அதிகாரியின் மனைவி. அவளோடு தங்குவதை அந்தக் கவிஞனே விரும்புகிறானோ என்ற 'டெலிகேட்டான' சந்தேகம் வேறு எல்லாருக்கும் இருந்தது. அந்தத் தனிப்பட்ட சிநேகிதத்தை மாற்று உறைத்துப் பார்க்க அவர்கள் யாருமே விரும்பவில்லை.

"நான் பந்தயம் வேண்டுமானால் கட்டுகிறேன். பார்த்துக் கொண்டே இருங்கள். அவர் என்னோடுதான் தங்குவார்" என்று அவள் முன்கூட்டியே பெருமை அடித்துக் கொண்டிருந்ததனால் எல்லாருமே தயக்கத்தோடு அவளிடமே விட்டுவிட்டார்கள். இந்துமதியின் வீட்டில் அவனைத் தங்கவிடாமல் தடுத்தால் அவளுக்குக் கோபம் வருமோ என்று கவலைப்பட்டதைவிட அவனுக்கே அதனால் கோபம் வந்துவிடுமோ என்றுதான் அவர்கள் எல்லாருமே பயந்தார்கள்.

அழைத்தவர்கள் நாசூக்காக நடந்து கொள்ளாத கூட்டத்திலோ கவியரங்கத்திலோ பேசவும் பாடவும் மறுத்துப் பாதியிலேயே கோபித்துக் கொண்டு போயிருப்பதாக இந்தக் கவிஞனைப் பற்றி நிறையச் சம்பவங்கள் கேள்விப்பட்டிருந்தார்கள் அவர்கள்.

"சாயங்காலம் நாலுமணிக்குக் கூட்டம். மூன்றரை மணிக்கு வந்து கூப்பிட்டுக் கொண்டு போக வருகிறோம்" என்று மட்டும் பயபக்தியோடு கவிஞனின் அருகே வந்து சொன்னார் நுண்கலைக் கழகக் காரியதரிசி.

"அவசியமில்லை; மூன்றே முக்காலுக்கு நானே இவரை அழைத்துக் கொண்டு வந்துவிடுவேன்" என்று அவனைப் பதில் சொல்லவிடாமல் தானே முந்திக் கொண்டு அவனுக்காகப் பதில் சொன்னாள் இந்து.

கவிஞன் இதைக் கேட்டுப் புன்னகை பூத்தான். தான் காரியதரிசிக்குச் சொல்லிய பதிலை அந்தப் புன்னகை மூலம் அவனும் அங்கீகரிப்பதாக இந்து புரிந்து கொண்டாள். மாலைக்குவியல்களுக்கு நடுவே காரில் பின்சீட்டில் கவிஞன் அமர்ந்திருந்தான். டிரைவிங் அவள் பொறுப்பாக இருந்தது. கார் நகர்ந்ததும் யாரோ ஒருத்தி இன்னொருத்தியிடம், "இந்து ஒரு கவியை அழைத்துச் செல்கிற மாதிரி அவரை அழைத்துப் போகவில்லை. கைதியை இழுத்துப் போகிற மாதிரி இழுத்துப் போகிறாள்" என்று யாரோ குத்தலாகச் சொல்லியது அவள் காதிலேயே அரைகுறையாக விழுந்தது. அவன் காதிலும் விழுந்திருக்குமோ என்று அவளுக்கு பயமாக இருந்தது. செய்கிற உபசாரத்தில் இந்த வார்த்தைகளை அவன் கேட்டே இருந்தாலும் மறந்து போகும்படி பண்ணிவிடலாம் என்று நம்பினாள் அவள்.

இந்து காரை லாவகமாக ஓட்டிக் கொண்டே அவனோடு பேச்சுக் கொடுத்தாள் :

"என் கணவர் ஊரில் இல்லை! டில்லிக்குப் போயிருக்கிறார். நீங்கள் வரப்போவதும் நம் வீட்டில் தங்கப்போவதும் அவருக்குத் தெரியும்! நீங்கள் வருகிற நேரத்தில் தான் வீட்டில் இருந்து உபசரிக்க முடியாமற் போனதற்காக உங்களிடம் மன்னிப்புக் கேட்கச் சொல்லிவிட்டுப் போயிருக்கிறார் அவர்."

"அடடா, உங்களுக்கு வீண் சிரமம்... அவர் ஊரில் இல்லாதபோது..."

"தான் இல்லை என்ற குறை வைக்காமல் கண்ணுங்கருத்துமாக உங்களைக் கவனித்துக் கொள்ளும்படி அவரே சொல்லிவிட்டுப் போயிருக்கிறார்."

"..................?"

அழகிய அடர்ந்த தோட்டத்திற்குள் புகுந்து நெடுந்தூரம் உள்ளே சென்று போர்டிகோவில் கார் நின்றது. அவள் அவசர அவசரமாக முன்பக்கக் கதவைத் திறந்து

கொண்டு இறங்கி வந்து பின் கதவைத் திறந்துவிட்டாள். ஒரு கையில் சூட்கேசும் மற்றொரு கையில் ரோஜாப் பூ மாலைகளுமாக இறங்கினான் அவன்.

"என்னிடம் கொடுங்கள்! நான் கொண்டு வருகிறேன்" என்று மாலை, பெட்டி இரண்டையுமே வாங்கிக்கொள்ளக் கைகளை நீட்டினாள் அவள். பெட்டியை வைத்துக்கொண்டு மாலைகளை மட்டுமே நீட்டினான் அவன். மாலைகளை வாங்குவதற்குள் அவனது பூப் போன்ற கையை ஒருதரம் நன்றாக ஸ்பரிசிக்க முடிந்தது அவளால். போலியாக ஒரு மன்னிப்பும் கேட்டாள் அவள்.

"மன்னிக்க வேண்டும்! உங்கள் கை எது, ரோஜாப் பூ மாலை எது என்று தெரியவில்லை. இரண்டும் ஒரே நிறமாக இருக்கின்றன."

"நான் அவ்வளவு சிவப்பில்லை. ரொம்பவும் என்னைப் புகழ்கிறீர்கள் நீங்கள்."

"நீங்கள் எவ்வளவு சிவப்பு என்று உங்களுக்கே எப்படித் தெரியும்? உங்கள் அழகை நாங்கள்தானே சொல்ல முடியும்?"

"நானே அழகைத் தேடிக் கொண்டிருப்பவன், கவிஞன். நீங்கள் என்னிடம் எப்படி அதைத் தேட முடியும்."

"கவிதையைப் போலவே பேசவும் செய்கிறீர்கள்."

"இதைச் சொல்வதிலிருந்து உங்களுக்கு எவ்வளவு தூரம் கவிதை ரசனை இருக்கிறது என்பதுதான் தெரிகிறது." என்று கொஞ்சம் குத்தலாகப் பதில் வந்தது அவனிடமிருந்து. இந்துவுக்கு அது கிண்டல் என்று புரிந்தாலும் பதிலுக்கு அவள் அவனைச் சாடவில்லை.

"நான் ஏதாவது தப்பாகச் சொல்லியிருந்தாலும் தயவுசெய்து மன்னித்து விடுங்கள்" என்று மேலும் பணிவாக இறங்கிப் பேசினாள் அவள். காரியத்தைச் சாதிக்க முடிந்த பணிவினால் தவறு எதுவும் கிடையாது.

ஹாலில் அவனை உட்கார வைத்துவிட்டு, "சீதா, சீதா!" என்று உட்புறம் நோக்கிக் குரல் கொடுத்தாள் இந்து. அவளைவிட உடற்கட்டும் இளமையும் உள்ள இன்னொரு யுவதி வந்தாள். சின்னப் பெண்தான். ஆனால் இந்துவைவிடத் துறுதுறு வென்றிருந்தாள். இந்துவைவிட லட்சுமீகரமான களையுள்ள முகம் அவளுடையது. "ஐயாவோட சூட்கேஸை ஏ.ஸி. ரூம்லே கொண்டு போய் வை..." என்று இந்து அந்தப் பெண்ணுக்குக் கட்டளையிட்டதிலிருந்து அவள் வேலைக்காரி என்று அநுமானிக்க முடிந்தது. முன்னும் பின்னும் பக்கங்களிலும் எப்படிப் பார்த்தாலும் தாமிரத்தில் செதுக்கி எடுத்தது போன்ற நிறத்தில் வடிவில் அவள் சூட்கேஸை எடுத்துக் கொண்டு நடந்தபோது அந்த நடையோடு கூடிய முதுகுப்புறமும் கால்களும் மிக நளினமாக இயங்குவதை அவன் பார்த்தான்.

அவன் அவளை அப்படிப் பார்ப்பது பிடிக்காதவள் போல் "எங்க வேலைக்காரி! நம்ம பக்கம்தான். சின்ன வயசிலேயே வந்தா. மத மதன்னு வளர்ந்துட்டா... ரொம்ப நல்லாச் சமைக்கிறா. எஸ்.எஸ்.எல்.ஸி. வரை படிச்சிருக்கா... அவளுக்கும் உங்கள் கவிகள்னா உயிர்..."

"அப்படியா?"

"நிமிஷமாப் பூத்தொடுப்பாள்..."

"தேவலையே..."

"பிரயாணம் செய்து வந்த உடற்களைப்புக்கு இதமாக இருக்கும்; கொஞ்சம் பீர் சாப்பிடுங்களேன். ஃப்ரிஜிலே வச்சிருக்கேன். கொண்டு வரட்டுமா?"

அவன் தலையை ஆட்டினான்.

கிளாஸ் நிறைய நுரை கொப்பளிக்கும் பீரோடு வந்தாள் அவள்.

"இந்து! சின்ன வயசிலே ஸ்கூல்லே படிக்கிறப்போ பேசவே பயப்பட்டு நடுங்குவீர்கள் நீங்கள்..."

"அத்தனைக்கத்தனை இப்ப வாயாடி ஆயிட்டேன். இவருடைய உத்தியோகம் அப்படி. ஆபீஸர்ஸ் மெஸ்லே வாரம் தவறாமே புதுசு புதுசா எத்தனைப் பேரைப் பார்க்கணும், பழகணும், பேசணும், சோஷலா இருக்கணும்..."

"அதனாலே ரொம்பவும் சோஷலா மாறியாச்சு... இல்லியா?"

"ஆமாம்."

காலியான பீர் கிளாஸை டேபிளில் வைத்தான் அவன். "இப்ப மணி பதினொண்ணரை. லஞ்ச் எத்தனை மணிக்கு வச்சுக்கலாம்?"

"ஒரு மணிக்கு வச்சுக்கலாம். அதுவரை நான் கொஞ்சம் தூங்கலாம்னு பார்க்கிறேன்..."

"போகலாம்... வாருங்கள்..."

அவன் அவளைப் பின் தொடர்ந்தான். ஏ.ஸி. ரூமில் கொண்டுவந்து விட்ட பின்பும் தன்னைத் தூங்கவிடாமல் அவள் உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்தது அவனுக்குப் பிடிக்கவில்லை.

"ஆடைகள் கண்ணிழக்க வேண்டும் என்ற உங்கள் கவிதை எனக்கு மிகவும் பிடிக்கும்! அதை நான் பலமுறை திரும்பத் திரும்பப் படித்திருக்கிறேன்."

"இப்போது எனக்கே அந்தக் கவிதை பிடிக்காது! மிகவும் சிறுபிள்ளைத்தனமான தொரு திமிரில் அன்று அந்தக் கவிதையை எழுதிவிட்டேன்."

"அந்தக் கவிதையிலுள்ள இந்தத் திமிர்தான் எனக்குப் பிடித்திருக்கிறது..."

மேலே சம்பாஷணை வளர இடங்கொடுக்காமல் கைகளைத் தூக்கிச் சோம்பல் முறித்துக் கொட்டாவி விட்டான் அவன்.

"சரி! உங்களுக்குத்தூக்கம் வருகிறது, தூங்குங்கள்..." என்று சொல்லிக் கொண்டே வெளியே போனாள் அவள். போனவள் மறுபடி திரும்பி வந்து ஒரு புன்முறுவலை மெல்ல உதிர்த்தபடி, "டிஸ்டர்ப் பண்றதா நினைக்காதீங்க... உங்களுக்கு எது வேணும்னாலும் கூச்சமில்லாமக் கேட்கலாம்... இதை உங்கள் வீடு மாதிரி நினைச்சுக்கணும்..."

"மன்னிக்கணும் இந்து! எனக்கு வீடுன்னு எதுவுமே கிடையாது. நான் ஒரு புகழ் பெற்ற நாடோடி."

"சும்மா ஒரு உபசாரத்துக்காக இப்படி நீங்கள் சொல்லிக்கலாம்...!"

"உபசாரமில்லை! நிஜமே அதுதான்..."

"எங்களைப் போல் உங்களால் கொள்ளை கொள்ளப்பட்ட ரசிகைகளின் வீடுகள் எல்லாம் உங்களுடையவையாயிருக்கும்போது நீங்கள் எப்படி நாடோடியாயிருக்க முடியும்?"

"என்னைக் கொள்ளைக்காரன் என்கிறீர்களா?"

"இல்லை, நீங்கள் இப்படிப்பட்ட கொள்ளைக்காரராவதை நாங்களே விரும்புகிறோம்..."

"என்ன சொல்கிறீர்கள்? புரியவில்லையே?"

அவள் மறுபடியும் புன்னகை செய்தாள். அவசியமில்லாமலே சரியாத தோள் புடவையைச் சரிய விட்டு மறுபடியும் நேர் செய்து அணிந்து கொண்டாள். அங்கேயே பிடிவாதமாக எதற்காகவோ நின்றாள்.

அவன் மறுபடி கொட்டாவி விட்டான். ஒருநிமிடம் திரும்பி நடந்து புன்னகையோடு மீண்டும் எதற்கோ தயங்கினாற்போல் நின்றுவிட்டு, "சரி தூங்குங்கள்... ஒன்றே கால் மணிக்கு எழுப்புகிறேன்" என்று கூறியபடி மெல்ல வெளியேறினாள் அவள்.

அவள் வெளியேறும்போது கதவைச் சற்று அதிகமாகவே அழுத்திச் சாத்தியிருக்க வேண்டும். அவ்வளவு அதிக ஓசை அவனுக்குப் பிடிக்காது. காதைக் குத்தியது. எப்போதும் இனிய இங்கிதமான ஓசைகளில் லயிப்பவன் அவன்.

பகல் உணவுக்கு எழுப்ப இந்து வரவில்லை. வேலைக்காரிதான் வந்தாள். இந்துவின் வெண் தந்த நிற முகத்தையும் தோள்களையும்விட இவளுடைய கோதுமைநிறம் அவனுக்கு மிகவும் பிடித்திருந்தது. அந்த நிறம் வெறும் நாசூக்கைத்தான் காட்டும். இந்த நிறமோ ஆரோக்கியத்தின் அடையாளம். அவன் தன்னையே வைத்த கண் வாங்காமல் பார்ப்பது கண்டு அவள் சிரித்தாள். அந்தச் சிரிப்புக் கபடமில்லாத லட்சுமிகரமான சிரிப்பாயிருந்தது. அவளுடைய பல் வரிசை இடைவெளியில்லாமல் முத்துக்களைக் கோத்தது போலிருந்தது. அவளிடம் ஏதாவது பேசவேண்டும்போல் ஆசையாயிருந்து அவனுக்கு. அவன் பேசுவதற்குள் அவளே பேசிவிட்டாள். "அம்மா உங்களைச் சாப்பிடக் கூப்பிட்டாங்க."

"அது சரி... நீ நன்றாகப் பூத் தொடுப்பாயாமே?..."

"ஆமாம்; உங்களுக்குத் தொடுத்துத் தரட்டுமா...? நான் பூத் தொடுப்பேன்னு அம்மா சொன்னாங்களா?"

"அம்மா சொன்னாங்க... சொல்லாவிட்டாலும் எனக்கே தெரியும். உன்னைப் போல் அழகாயிருக்கிற பெண்ணுக்கு அழகாயிருக்கிற எல்லாமே தெரிஞ்சிருக்கணும்."

அவள் நாணத்தோடு தலைகுனிந்தாள். சிரித்தாள். அதற்குள் இந்துவே கதவைத் திறந்து கொண்டு வந்துவிட்டாள். சாப்பாட்டுக்குக் கூப்பிடப் போன வேலைக்காரி ஏ.ஸி. ரூமில் அதிக நேரம் தாமதிக்கவே இந்துவுக்குச் சந்தேகம் வந்திருக்க வேண்டும்.

"சாப்பிடக்கூட்டிண்டு வரச் சொன்னால் இங்கே என்னடி வம்பளந்துண்டு நிக்கறே?"

"இல்லே... நான்தான் பூத்தொடுக்கத் தெரியுமான்னு அவளைக் கேட்டேன்..."

அவன் அவர்களோடு சாப்பிடப் போனான். பகல் உணவின்போது இந்து அவனிடம் அதிகம் பேசவில்லை. வேலைக்காரியும் அடக்க ஒடுக்கத்தோடு அமைதியாகப் பரிமாறினாள். சாப்பிட்டதுமே இந்து அவனிடம் வந்து, "இன்னிக்கி ராத்திரி உங்களோட என் ஃப்ரண்ட்ஸ் அஞ்சாறு பேரும் நுண்கலைக் கழகப் பிரமுகர்களும் சேர்ந்து சாப்பிடறா. நான் அவங்களை எல்லாம் போய் அழச்சிட்டு வரணும். நீங்க ரெஸ்ட் எடுத்துங்குங்க. மூணு மூணேகாலுக்கு எழுந்திருந்தாப் போதும்" என்று சொல்லிவிட்டுப் போய்விட்டாள்.

மூணேகால் மணிக்கு அவன் எழுந்து முகம் கழுவி உடை மாற்றிக் கொண்டு, கூட்டத்திற்குத் தயாரானபோது இந்து காபியுடன் வந்தாள். இப்போது பகலில் அணிந்திருந்தது போல் அவள் 'ரவிக்' அணிந்திருக்கவில்லை. அவ்ள் காபி கொண்டு வருவதற்குள்ளேயே அவன் ஹாலுக்கு வந்திருந்ததனால் காபியோடு வந்த அவளை அவன் ஹாலிலேயே சந்திக்க நேர்ந்தது. அவளைத் தனியாக ஏ.ஸி. ரூமில் சந்திக்க அவன்தான் கூச வேண்டியிருந்தது. காரணம் அவளிடம் எந்தக் கூச்சங்களுமே இல்லை. அவள் ரொம்ப 'சோஷலாக' இருந்தாள்.

அவர்கள் வெளியேறிக் காருக்காகப் போர்டிகோவுக்கு வந்தபோது தோட்டத்தில் பூத்திருந்த அவ்வளவு பிச்சிப் பூக்களையும் பறித்துக் கொட்டி அவசர அவசரமாக மாலை தொடுத்துக் கொண்டிருந்தாள் வேலைக்காரி சீதா.

"என்னடி மாலை தொடுத்தாகறது? பூஜை படத்துக்கா?" இந்துவின் கேள்விக்கு வேலைக்காரி பதில் சொல்லவில்லை. ஆனால், வெளியே போகும் எஜமானியை வழியனுப்ப மரியாதையாக எழுந்து நின்றாள் அவள். கவிஞரைப் பார்த்து ஒரு புன்முறுவல் பூத்தாள். அவனும் பதிலுக்குப் புன்முறுவல் பூத்தான். "டின்னருக்கு எல்லாம் கொண்டு வரச் சொல்லி 'பிரம்ம பிரகாஷ் கேட்டரிங்'லே அரேஞ்ச் பண்ணியிருக்கேன். முன் பக்கத்து லான்லே டேபிள் டெகரேஷனெல்லாம் நீயேகூட இருந்து கவனிச்சுக்கோ..."

"சரியம்மா.. பார்த்துக்கறேன்" அடக்கமாகப் பதில் சொன்னாள் சீதா.

அவனுடைய கவிதைகளில் பித்துக் கொண்ட இளைஞர்களும் யுவதிகளும் அந்த நகரில் ஏராளமாக இருந்ததால் சொற்பொழிவுக்குப் பெருங்கூட்டம் வந்திருந்தது. ஒரு

மணி நேரத்திற்கு மேல் தேன்மழைபோல் அவன் செய்த சொற்பொழிவுக்கு இடையிடையே பலத்த கரகோஷங்கள் இருந்தன. கூட்டம் முடிந்ததும் அவன் ஆட்டோகிராப் வேட்டையிலிருந்து மீளவே இன்னும் ஒருமணி நேரமாயிற்று.

அத்தனை ஆட்டோகிராபிலும் அவன் கையெழுத்துப் போடுகிறவரை இந்து பொறுமையாகக் காத்திருந்தாள். அப்புறம் இந்து வீட்டுத் தோட்டத்து லானில் முக்கியமான உள்ளூர்ப் பிரமுகர்களோடும் இந்துவின் சினேகிதிகளோடும் விருந்துண்டான் அவன். சிரிப்பும் பேச்சுமாக விருந்து முடிய இரவு பதினோரு மணிக்கு மேலாகிவிட்டது.

கவிஞன் ஊர் திரும்ப வேண்டிய விமானம் மறுநாள் காலை ஏழு மணிக்கு இருந்ததால் ஓய்வு கொள்வதற்காக அவன் விரைவில் தூங்கப் போனான். அறையில் முற்றிலும் எதிர்பாராத அன்பளிப்பு ஒன்று ஒரு சிறிய கடிதத்தோடு வைக்கப்பட்டிருந்தது அவனுக்கு.

அவன் தன் கழுத்தில் அணிந்து கொள்வதற்குரிய அளவு பெரிதான ஒரு பிச்சிப்பூ மாலையை தொடுத்துப் படுக்கை மேல் வைத்திருந்தாள் சீதா. அதன்மேல் உறையிட்டு ஒட்டி இருந்த சிறிய கடிதத்தை அவன் பிரித்துப் படித்தான்.

"பிரியமுள்ள கவிஞருக்கு,

வேலைக்காரி சீதா அநேக வணக்கங்கள். சொற்களால் எத்தனை எத்தனையோ மாலைத் தொடுக்கும் உங்களுக்கு நான் இந்தப் பூமாலையைத் தொடுத்து வைத்திருக்கிறேன். 'நல்லாப் பூத்தொடுக்கத் தெரியுமாமே?' என்று என்னைக் கேட்டீர்கள். நான் நன்றாகத் தொடுக்கிறேனா இல்லையா என்பதை இனி நீங்கள்தான் சொல்ல வேண்டும். நீங்கள் இருவரும் கூட்டத்துக்குப் போகும்போது 'மாலை, பூஜை படத்துக்கா?' என்று அம்மா கேட்டது உங்களுக்குத் தெரியும். படங்களுக்குத் தினந்தோறும் பூஜை செய்கிறேன். இன்று உங்களைப் பூஜிக்க நேர்ந்தது என் பாக்கியம். நான் இந்தக் கடிதம் எழுதினது அம்மாவுக்குத் தெரிய வேண்டாம்."

'உங்கள் கவிதைகளைப் பூஜிக்கும் சீதா' என்று அதில் எழுதியிருந்த வாக்கியங்கள் அவன் மனதுக்கு இதமாக இருந்தன. இரண்டு மூன்று மணி நேரம் ஏர்கண்டிஷன் அறையில் இருந்ததன் காரணமாக அந்த மாலை அறையையே மணத்தினால் நிரம்பச் செய்திருந்தது. அந்த நறுமணத்தில் அவன் சுகமாகத் தூங்கினான்.

காலையில் சீதா காபி கொண்டு வந்த நேரத்தில் அப்போது கைவசமிருந்த தன் கவிதைத் தொகுதியின் ஒரே ஒரு பிரதியை கையொப்பமிட்டு அவளுக்கு ஏதோ எழுதிக் கொடுத்தான் அவன்.

சிறிது நேரத்தில் விமான நிலையத்துக்கு அவனை அழைத்துச் செல்ல வந்தாள் இந்து. அவனும் தயாராயிருந்தான். கார் காம்பவுண்டைத் தாண்டுகிறவரை சீதா வீட்டு வாயிலில் நின்று பார்ப்பதைக் கவிஞன் காரிலிருந்தே கவனிக்க முடிந்தது. அவன் பெருமூச்சுவிட்டான்.

கவிஞர் புறப்பட்டுப் போன மறுதினமோ என்னவோ பகலில் எங்கோ வெளியில் போய்விட்டு வந்த இந்து சீதாவைக் கூப்பிட்டு வாய் ஓயுமட்டும் குரல் கொடுத்து அலுத்தபின் அவளைத் தேடி மாடிப்படியருகே கீழே அவள் உபயோகத்துக்கும் ஸ்டோர் ரூமுக்காகவும் சேர்த்துவிட்டிருந்த அறையில் போய்ப் பார்த்தபோது சீதா அயர்ந்து தூங்கிக் கொண்டிருந்தாள். அவள் கையருகே ஏதோ - தூங்குமுன் அவள் படித்துக் கொண்டிருந்த புத்தகம் நழுவியிருந்தது. வேலைக்காரி என்ன புத்தகதைப் படித்துக் கொண்டிருக்கிறாள் என்று சாதாரணமாக அவள் பார்க்க விரும்பமாட்டாள். ஆனால் இன்று என்னவோ அதை எடுத்துப் பார்க்க வேண்டும் போல ஆவலாயிருந்தது அவளுக்கு. மெல்ல ஓசைப்படாமல் அதை எடுத்துப் பிரித்தாள் இந்து. முதல் பக்கத்தில் -

'அழகும் மணமும் நிறைந்த மாலைகளைத் தொடுக்கும் நல்ல கைகளுக்கு' - அன்புடன் - கவி குமுதசந்திரன் - என்று எழுதித் தேதியிட்டுக் கையொப்ப மிட்டிருந்ததைக் கண்டதும் இந்துவின் முகத்தில் எள்ளும் கொள்ளும் வெடித்தது. அப்பாவி போல் தூங்கும் அந்த வாலிப வேலைக்காரியின் மேல் அவளுக்குத் திடீரென்று கோபமாகவும் பொறாமையாகவும் இருந்தது. கழுத்தை நெரித்து அவளைக் கொன்றுவிட வேண்டும் போல் வெறி வந்தது.

'கவிஞன் தனக்கு ஒரு புத்தகத்தை இப்படிக் கையொப்பமிட்டுக் கொடுத்திருந்தால் அதை ஊரெல்லாம் சொல்லிப் பெருமைப்பட முடியும். அந்தக் கவிஞனின் நோக்கில் என் வீட்டு வேலைக்காரியின் பெருமானம்கூட நான் மதிப்புப் பெறவில்லையா?' என்றெண்ணியபோது இந்துவுக்கு அழுகையே வந்துவிடும் போலிருந்தது. விழாவன்று மாலை தானும் அவரும் புறப்படும்போது வேலைக்காரி சீதா மாலை தொடுத்துக்கொண்டிருந்தது இந்துவுக்கு ஞாபகம் வந்தது. அவர் புத்தகத்தின் முதல் பக்கத்தில் எழுதிக் கையொப்பமிட்டுக் கொடுத்திருப்பதையும் சீதா மாலை தொடுத்துக் கொண்டிருந்ததையும் சேர்த்து நினைத்தபோது என்ன நடந்திருக்க முடியும் என்பதை இந்துவால் அனுமானிக்க முடிந்தது .

ஒரு கவியின் அன்பைப் பெறுவதற்காக அளவுக்கதிகமான விலையைக்கூட கொடுக்க இந்து துணிந்திருந்தாள். மற்றொருத்தியோ ஒரு சர்வ சாதாரணமான விலைக்கு அதை வாங்கியிருக்கிறாள். சீதாவின் மேலேற்பட்ட கோபவெறி தணிந்து தனக்குத்தானே வாய்விட்டுக் கோவென்று கதறி அழுதுவிட வேண்டும் போலிருந்தது இந்துவுக்கு. சிரமப்பட்டு அழுகையை அடக்கிக் கொண்டு ஓசைப்படாமல் புத்தகத்தைத் தூங்குகிறவளின் கையருகே எடுத்த இடத்திலேயே வைத்துவிட்டு -

'ஒரு கவியின் விலையை நிர்ணயம் செய்வதில் என் அளவுகோல் எங்கோ ஒரு நூலிழை தவறிவிட்டது' என்று மனத்திற்குள் நினைத்தபடி நடைப்பிணம் போல் மெதுவாக அங்கிருந்து நகர்ந்தாள் இந்து.

**(1974-க்கு முன்)**

## 119. விதிவிலக்காக ஒரு வியாபாரம்

டெல்லியிலிருந்து ஒருவார விடுமுறையில் சென்னை வந்த சப்த ரிஷி தன் பழைய நண்பர்களில் யார் யாரைச் சந்திக்கலாம் என்று யோசித்தபோது முதலில் எழுத்தாளர் சண்டமாருதனுடைய நினைவே வந்தது. சண்டமாருதனுடைய சொந்தப் பெயர் எஸ்.கே.வி.ரங்கசாமி. புனைபெயராகச் சண்டமாருதன் என்பதை வைத்துக் கொண்டிருந்தான். சப்தரிஷிக்கு ஊர் லால்குடி. ரங்கசாமிக்கு ஊர் ஸ்ரீரங்கம். இருவரும் திருச்சியில் கல்லூரி ஆண்டுகளில் ஒன்றாகப் படித்தவர்கள். கல்லூரிக்கு அப்பால் இருவருடைய வாழ்க்கை வழிகளும் திசைகளும் வேறு வேறாகப் பிரிந்துவிட்டன. சப்தரிஷி ஹானர்ஸ் முடித்து ஐ.எஃப்.எஸ். பரீட்சை எழுதி பாரத அரசாங்கத்தின் வெளி உறவு இலாக்கா அமைச்சரகத்தில் வேலைக்குச் சேர்ந்தான். ரங்கசாமி பி.ஏ. இறுதி ஆண்டு தேர்வே எழுதாமல் பாதியில் படிப்பை விட்டுவிட்டுச் சென்னைக்கு வந்து ஒரு புதிய பத்திரிகையில் வேலைக்குச் சேர்ந்து, அது பாதியில் நின்று போனதனால் எழுத்தையோ, பத்திரிகைப் பணிகளையோ முழு நேரத்துக்கும் நம்பி வாழ முடியாது என்று புரிந்து கொண்டபின், மவுண்ட்ரோடில் இருந்த ஒரு பெரிய ஏலக் கம்பெனியில் வேலைக்குச் சேர்ந்து எழுத்தை உபதொழிலாகச் செய்து காலம் தள்ளி வந்தான்.

அவனுடைய குரல் கணீரென்று இருக்கவே, 'இந்த வெண்கலத் தொண்டை ஆசாமியையே ஏலம் போடுகிறவராகப் பயன்படுத்திக் கொண்டால் என்ன?' என்று கம்பெனிக்குத் தோன்றியது. ரங்கசாமியைக் கூப்பிட்டுக் கேட்டார்கள். ஏற்கனவே வாங்கிக்கொண்டிருந்த நானூறு ரூபாய் சம்பளத்தோடு இன்னும் ஒரு நூறு ரூபாய் சேர்ந்துத் தருவதாகச் சொன்னார்கள். ஏலம் போடுகிற வேலை வாரத்தில் ஒருநாள் மட்டுமே. மற்ற நாட்கள் அலுவலக வேலைதான். ஞாயிற்றுக்கிழமை காலையில் தொடங்கும் ஏலத்துக்காக சனிக்கிழமையன்று பொருள்களை ஒழுங்குபடுத்த வேண்டியிருந்ததனால் அன்று அலுவலகத்துக்கு விடுமுறை. ரங்கசாமி அடிக்கடி எழுதிய கடிதங்களிலிருந்தும் நேரில் சென்னையில் சந்திக்க நேர்ந்த நேரங்களில் கூறியதிலிருந்தும் இந்த விவரங்களை எல்லாம் சப்தரிஷி தெரிந்து கொண்டிருந்தான் :

சப்தரிஷி சென்னைக்கு விமானத்தில் வந்து இறங்கிய தினம் சனிக்கிழமை. மறுநாள் ஏலத்துக்குப் பண்டங்களைத் தயார்படுத்தி வைப்பதற்காகக் காலையில் கம்பெனிக்கு அரைநாள் போய்விட்டு ரங்கசாமி பிற்பகலில் வீடு திரும்பிவிடுவான் என்று சப்தரிஷிக்குப் புரிந்தது. சனி ஞாயிறு இரண்டு நாட்களும் சென்னை யிலிருந்துவிட்டு ஞாயிற்றுக்கிழமை இரவு மெயிலில் லால்குடி போக வேண்டும் என்பது சப்தரிஷியின் திட்டம்.

*நினைத்தபடி அன்று எழுத்தாளர் சண்டமாருதன் என்னும் தன் கல்லூரி நண்பன் எஸ்.கே.வி.ரங்கசாமியைச் சந்திக்கச் சென்றான் சப்தரிஷி. ரங்கசாமி என்ற சண்டமாருதன் சப்தரிஷி தேடிச் சென்றபோது வீட்டில்தான் இருந்தான். அவன் ஏதோ பத்திரிகைக்குக் கதை எழுதிக் கொண்டிருந்தான் போலிருக்கிறது. சண்டமாருதனின் மனைவிதான் சப்தரிஷியை வரவேற்றாள்.*

*"அப்பா! டில்லி மாமா வந்திருக்காருப்பா" என்று சண்டமாருதனுடைய ஐந்தரை வயதுப் பையன் மழலையில் குரல் கொடுத்தான். அவனுக்காகச்சாந்தினி சௌக் வரை தேடிப் போய் வாங்கி வந்திருந்த 'ட்ரைஃப்ரூட்ஸ்' பொட்டலங்களை அவனிடம் கொடுத்துவிட்டுச் சண்டமாருதனின் அறைக்குள் நுழைந்தான் சப்தரிஷி.*

*"வாப்பா! எப்போ வந்தே? உன்னை எங்கோ நைஜீரியாவிலோ, லிபியாவிலோ ஹைகமிஷனராய் போட்டிட்டதாக யாரோ சொன்னாங்களே?"*

*"ஏண்டா பாவி! எவண்டா சொன்னான் அப்பிடி? சொன்னதுதான் சொன்னான், லண்டன், பாரீஸ், ஃபிராங்பர்ட்னு ஏதாவது நல்ல இடமாச் சொல்லியிருக்கப் படாதோ? எதுக்கு நைஜீரியாவையும் லிபியாவையும் சொன்னான்?"*

*"அது அவனைப் போய்க் கேட்கணும். என்னைக் கேட்டா நான் என்ன சொல்றது?"*

*"சரி! அப்படியே நைஜீரியாவிலோ, லிபியாவிலோ போட்டிருந்தாக்கூட நான் போய் வேலை பார்ப்பேன்னு வச்சுக்கோ. மெட்ராஸிலோ நீ 'தாம்ஸன் அண்ட் ஃப்ரடரிக் ஆக்ஷன் கம்பெனி'யில் ஒரு தரம் ரெண்டு தரம்னு கூவிக் குவி ஏலம் போடறதைவிட அது ஒண்ணும் மோசமில்லேடா."*

*"நீ தெரியாமல் பேசறே. ஒரு வகையிலே இந்த ஏலக் கம்பெனி வேலை எனக்கு ரொம்பப் பிடிச்சுப் போச்சு. என்னைச் சுத்திப் பழகற மனிதனும், ஒவ்வொரு ஏலப் பொருளும் ஒரு கதையாயிருக்கும். வாரா வாரம் ஞாயிற்றுக்கிழமை காலை எட்டரை மணி முதல் பகல் ஒண்ணரை மணி வரை ஏலம் விடற சமயத்திலே விதவிதமான உணர்ச்சிகளும் தாபங்களும் தவிப்புகளும், நிறைந்த மனிதர்களைச் சந்திக்கிறேன் நான்."*

*"பழைய பீரோக்கள், கட்டில்கள், நாற்காலிகள் ஏலம் போடற வேலையிலே இத்தனை கர்வமா?"*

*"கர்வந்தான். எங்க கம்பெனியிலே மரச் சாமான்கள் மட்டுமே ஏலத்துக்கு வரலை. கடிகாரங்கள், எலக்ட்ரிகல் அயிட்டங்கள், கட்டில்கள், ஸோபா ஸெட்டுகள், சமையல் ஸ்டவ்கள் இன்னும் என்னனென்னவோ ஏலம்விட வருது. ஒவ்வொரு பண்டத்துக்கும் நம்பர் கொடுத்து லிஸ்ட் பிரிண்ட் பண்ணித் திங்கட்கிழமை முதலே அதை வர்ரவங்களுக்குக் கொடுக்க ஆரம்பிச்சிடுவோம். லிஸ்டிலே இருக்கிற அதே நம்பர் பண்டங்களின் மேலேயும் ஒட்டியிருக்கும். லிஸ்டை வைத்துக்கொண்டு ஏலம் எடுக்க வருகிறவர்கள் பண்டங்களைப் பார்த்துவிடலாம். ஞாயிற்றுக்கிழமை காலை ஏலம் விடறப்போ நம்பரை மட்டும் சொல்லிவிட்டுப் பொருளைப் பத்தி ஒரு சிறு வர்ணனை*

கொடுப்போம். பெருங்கூட்டம் வந்திருக்கும். எங்க கம்பெனிக்கு வேண்டிய புரோக்கர்களையும் நிறுத்தி வைத்திருப்போம். அவங்க விலையை ஏத்திவிடுவாங்க. சமயங்களிலே பண்டங்களை ஏலத்துக்குக் கொடுத்தவங்களே வந்து ஆட்களோட நின்னு விலையை ஏத்திவிடுவாங்க. விற்கிற பண்டங்களின் விலை மேலே எங்களுக்குப் பன்னிரண்டு சதவிகிதம் கமிஷன் உண்டு.

ஏலம் எடுத்தவங்க முழுப்பணத்தையும் அன்னிக்கே கட்டணும்னு அவசியமில்லை. மொத்தத் தொகையிலே இருபத்தஞ்சு சதவீதம் உடனே கட்டினால் போதும். மீதத்தை அந்த வார இறுதிக்குள் கட்டிப் பொருளை டெலிவரி எடுத்துக் கொள்ளலாம். இந்த ஏலத்தில் பெறுமானம் மதிப்பீடு எல்லாம் கூடவோ குறையவோ இருக்கும். நீ எங்கள் ஏலக் கம்பெனிக்கோ வேறு எந்த ஏலக் கம்பெனிக்கோ போனதில்லை என்று நினைக்கிறேன். போய்ப் பார்த்தால் ஆச்சரியப்படுவாய். ஏழு ரூபாய்கூடப் பெறாத ஒரு கள்ளிப் பலகையிலான நாற்காலி எழுபது ரூபாய் விலைக்குப் போய்விடும். ஆக்ஷன் ஷாப்பிலே ஒவ்வொரு பண்டத்துக்கும் சாதாரணமான விலை ஒன்று, ஸென்டிமென்டல் விலை ஒன்று இருக்கும். ஒரு வெல்வெட் தலையணை முப்பது ரூபாய்கூடப் பெறாதது. முந்நூறு ரூபாய்க்கு ஏலம் போச்சு. அதிலே ஒரு பெரிய சோகக் கதையே இருந்ததுன்னா நீ நம்புவியோ?''

“நம்பமாட்டேன். நீ எழுத்தாளன். அதனாலே ஏலம் போன தலையணையை வியாஜமாக் வச்சுக்கொண்டு நீயே ஒரு கதை அளந்துடுவே.”

“அப்படிச் சொல்லாதே. ஒரு நாற்காலி, ஒரு கட்டில், தலையணை எல்லாமே வரலாறாக மாறிய பின்னும் அதைத் தாங்களே வாய்விட்டுச் சொல்ல முடியாத, மௌன அநுபவங்களாக ஊமைக் கதாபாத்திரங்களாக - பேச முடியாத சாட்சிகளாகவே ஏலக் கடைக்கு வருகின்றன. அவை மட்டும் பேச முடியுமானால் மனிதர்கள் சொல்லாத, சொல்லக் கூசுகின்ற எத்தனையோ அனுபவங்களை அவற்றிடமிருந்து நாம் அறியலாம். மனிதர்களின் பழைய அனுபவங்களை ஏலம் போட்டால் விற்காது. ஆனால், அவர்கள் ஆண்டு அனுபவித்த மேசை, நாற்காலி, பாத்திரம், பண்டம் எல்லாம் ஏலம் போட்டால் விற்கும்.”

“அனுபவங்களை ஏலம் போட்டு விற்கத்தான் உன்னைப் போன்ற எழுத்தாளர்கள், பிரசங்கிகள், கவிஞர்கள், நாடகாசிரியர்கள் எல்லாரும் புறப்பட்டிருக்கிறீர்களே?”

“அப்படியானால் நான் ஒருவனே இரண்டு வகையில் ஆக்ஷனராக இருக்கிறேன். மனித அனுபவங்களை ஏலம் போடுகிற சண்டமாருதனை உனக்குத் தெரியும். ஆனால் மேசை, நாற்காலி, கட்டில், சோபாக்களை ஏலம் போடுகிற எஸ்.கே.வி.ரங்கசாமியை உனக்குத் தெரியாது. நீ என்னுடைய கம்பெனிக்கு வந்ததே இல்லை. நாளைக்கு என்னோடு வா. அங்கே ஒவ்வொரு சாதாரணப் பொருளுக்கும் ஒரு ‘ஸென்டிமென்டல் வேல்யூ’ இருப்பதை நீ புரிந்து கொள்ளலாம். அப்புறம் நாளை இரவு நீ ரெயிலேறுவதற்கு முன் நான் சந்தித்த ஒரு சுவாரசியமான கதாபாத்திரத்தைப் பற்றி உனக்குச் சொல்லுகிறேன்.”

"என்னைப் பொறுத்தவரை எங்க வெளியுறவு இலாக்காவின் பால பாடமே எழுத்திலோ, பேச்சிலோ ஸெண்டிமென்டல் அப்ரோச்சோ, ஸென்சேஷனல் அப்ரோச்சோ கூடாது என்பதுதான்."

"சர்க்கார் உத்தியோகத்துக்கு அது அவசியமாயிருக்கலாமடா சப்தரிஷி! ஆனால் மனித உணர்வுகளும், மனக்கிளர்ச்சிகளுமே என் போன்ற இலக்கிய கர்த்தாக்களுக்கு ஜீவ ஊற்று. அவை இல்லாத உலகத்தில் புத்தி மட்டுமே இருக்கும். உணர்வுகளே இல்லாத புத்தி, உலகை வறளச் செய்துவிடும் புத்தி என்பது வெறும் கால்குலேஷன்தான். வேறொன்றும் இல்லே."

"ஆனாலும் நம்மவர்கள் எப்போதும் எதிலுமே அளவுக்கு மிஞ்சி 'ஸெண்டிமெண்டலாக' இருக்கிறார்கள். அது எனக்குப் பிடிப்பதில்லை."

"உன்னுடைய செண்டிமெண்டலான ஒரு நிலைமையை நீ சந்திக்கிறவரை இப்படித்தான் மற்றவர்களிடம் எல்லாம் சொல்லிக் கொண்டிருப்பாய்."

"சரி! நாளைக்கு உன்னோடு ஆக்ஷன் ஹாலுக்கு வருகிறேன். போதுமா?" என்றான் சப்தரிஷி. அவ்வளவில் அந்தப் பேச்சு முடிந்தது. சண்டமாருதனின் மனைவி காபி சிற்றுண்டி கொண்டு வந்தாள். நண்பர்கள் இருவரும் காபி சிற்றுண்டியை முடித்துக்கொண்டு அடையாற்றில் தங்களுக்கு மிகவும் வேண்டியவனான மற்றொரு நண்பனைக் காணச் சென்றார்கள். அந்த நண்பன் சப்தரிஷி, சண்டமாருதன் இருவரையும் தன்னோடு முதல் ஆட்டம் சினிமாவுக்குக் கூப்பிட்டான். தட்டிச் சொல்ல முடியவில்லை. இருவரும் அந்த நண்பனோடு சினிமாவுக்குப் போனார்கள். கடற்கரைக்குப் போய்ப் பேசிக் கொண்டிருக்க ஆசைப்பட்டான் சப்தரிஷி; ஆனால் நண்பனின் பிடிவாதமே வென்றது.

இரவு ஒன்பதேமுக்கால் மணிக்குச் சினிமா முடிந்ததும் உட்லண்ட்ஸில் போய்ச் சாப்பிட்டார்கள். சப்தரிஷி அங்கேயே தங்கியிருந்ததனால் அப்படியே தன் அறைக்குப் போய்விட்டான். அடையாறு நண்பன் தன் காரிலேயே சண்டமாருதனை வீட்டில் கொண்டுவந்து விட்டுப் போனான். மறுநாள் ஞாயிற்றுக்கிழமை காலை எட்டரை மணிக்கே ஏலத்துக்குப் போக வேண்டும் என்பதால் சண்டமாருதன் சீக்கிரமே படுத்துத் தூங்கிவிட்டான். வழக்கமாக இரவு ஒரு மணிக்கு மேலும் கண்விழித்து எழுதிக் கொண்டிருக்கக்கூடிய அவன் அன்று சீக்கிரமே படுத்தது அவன் மனைவிக்கே ஆச்சரியமாக இருந்தது.

மறுநாள் காலை சரியாக ஏழரை மணிக்கே சண்டமாருதனின் வீட்டுக்கு வந்துவிட்டான் சப்தரிஷி. அங்கேயே காலைச் சிறறுண்டியை முடித்துக்கொண்டு சப்தரிஷியும் சண்டமாருதனும் மவுண்ட்ரோடில் மிகவும் பிரதானமான இடத்திலிருந்த 'தாம்ஸன் அண்ட் ஃபிரடரிக் ஆக்ஷன்' ஹாலுக்குப் போய்ச்சேர்ந்தார்கள்.

ஆக்ஷன் ஹால் ஏலத்துக்கு வந்த பொருள்களாலேயே பிரமாதமாக அலங்கரிக்கப்பட்டிருந்தது. ஏலம் கேட்க வந்தவர்கள் உட்காருவதற்கு ஏலத்துக்காக வந்த நாற்காலிகள், சோபாக்கள், பெஞ்சுகளாலேயே இடவசதி செய்திருந்தார்கள். ஒரு

கோர்ட்டில் நீதிபதி ஆசனம் எவ்வளவு உயரத்தில் இருக்குமோ அவ்வளவு உயரத்தில் அதே அமைப்பில் ஏலம் கூறுகிறவரின் ஆசனம் இடப்பட்டிருந்தது. நவநாகரிகப் பெண்கள், பழங்கால மடிசார் மாமிகள், முதியவர்கள், இளைஞர்கள், வியாபாரிகள், குடும்பஸ்தர்கள் என்று கூட்டம் அங்கே அலைமோதியது. ஆக்ஷன் ஹால் வாசலில் அன்றைக்கென்றே சில தற்காலிக டீ, கோகோ கோலா ஸ்டால்கள் முளைத்திருந்தன. சில வெளிநாட்டுக்காரர்கள் கூடக் கூட்டத்தில் தென்பட்டனர். மிகச் சமீபகாலத்து ஃபேஷன்களையும் அந்தக் கூட்டத்தில் காண முடிந்தது. லுங்கி, பெல்பாட்டம், ஜீன்ஸ் அணிந்த பெண்கள்கூட அங்கே ஏலம் கேட்க வந்து உட்கார்ந்திருந்தனர்.

சரியாக எட்டு அடித்து இருபத்தொன்பதாவது நிமிஷத்தில் ஏலம் கூறுவதற்காகச் சண்டமாருதன் நீதிபதி ஆசனம் போல் உயரத்தில் இடப்பட்டிருந்த ஆசனத்தில் அமர்ந்தான். பக்கத்தில் சற்றே தணிவான இருக்கையில் ஏல விவரங்களைக் குறித்துக்கொள்வதற்காக மற்றொருவர் அமர்ந்தார்.

ஏலம் ஆரம்பமாயிற்று. சண்டமாருதனின் கண்களும், வாயும் சுறுசுறுப்பாகப் பார்த்தன; பேசின. 'இருநூறு ரூபாய் ஒரு தரம், இரண்டு தரம்' என்பதுபோல் அவனுடைய வெண்கலக் குரலில் கூவி அவ்வளவு பெரிய கூட்டத்தில் எந்த மூலையில் யார் எதைச் சொல்லி விலையை உயர்த்தி விட்டாலும், அந்தப் பக்கம் விரைந்து பார்வையைப் பாய்ச்சி அவர்களைக் கண்டுகொள்ளும் விரைவு எல்லாம் அதிசயிக்கத்தக்க வேகத்தில் இருந்தன. சண்டமாருதன் அஷ்டாவதானம் செய்தான். துரிதமாக இயங்க வேண்டிய பல காரியங்கள் அடங்கிய வேலையாகிய அந்த ஏலத்தை ஒரு சிறு பதற்றமும் இல்லாமல் மிகவும் அநாயாசமாகச் செய்தான் சண்டமாருதன்.

ஆக்ஷன் பட்டியலில் 647 அயிட்டங்கள் போட்டிருந்தன. அவ்வளவும் எட்டரை மணியிலிருந்து பகல் ஒன்றரை மணிக்குள் ஏலம் போட்டு முடிக்கப்பட்டுவிட்டன. பதினொன்றரை மணிக்கே கூட்டம் மெல்ல மெல்லக் கலையத் தொடங்கியது.

முதலில் கடிகாரத்தில் தொடங்கி எலெக்ட்ரிக்கல் சாமான்கள், சமையல் ஸ்டவ்வுகள், குக்கர்கள் எல்லாம் ஏலம் போடப்பட்டபின் பன்னிரண்டரை மணிக்கு மரச்சாமான்கள் ஏலத்துக்கு வந்தன. மரச்சாமான்களே அதிகம். அப்படியிருந்தும் ஏலம் ஒன்றரை மணிக்கே முடிந்துவிட்டது.

ஏலம் முடிந்ததும் சப்தரிஷியைத் தன் வீட்டுக்குச் சாப்பிட அழைத்துச் சென்றான் சண்டமாருதன். சாப்பாடு முடிந்ததும், 'நேத்துச் சொல்லியிருந்தேனே; அந்தக் கதையை இப்போது கேட்கிறாயா?' என்று சண்டமாருதனே தொடங்கினான். சப்தரிஷியும் கதை கேட்கச் சம்மதித்தான்.

"எனக்கு 'சென்டிமென்ட்ஸ்' எதுவும் இல்லே. ஆனாலும் உன்னுடைய ஸெண்டிமெண்டல் கதையைக் கேட்க ஆட்சேபணை கிடையாது" என்றான்.

"நீ செண்டிமென்டல் ஆசாமியா இல்லையா என்பதைக் கதையை நான் முடித்ததும் பார்ப்போமே!" என்று சொல்லி விட்டுக் கூறத் தொடங்கினான் சண்டமாருதன்.

"இரண்டு மாசத்துக்கு முன்னே சென்னை அடையாறு பகுதியிலிருந்த சோமாபுரம் அரண்மனையை இடித்து அங்கே ஐந்து நட்சத்திர ஹோட்டல் கட்ட அஸ்திவாரம் போட்டார்களே. அப்போது அந்த அரண்மனையைச் சேர்ந்த கட்டிடங்கள், அவுட் ஹவுஸ்கள் ஆகியவற்றின் மரச்சாமான்கள், லஸ்தர் விளக்குகள், சுவர்க் கடிகாரங்கள், அலங்காரக் கதவுகள்,கட்டில்கள், வெல்வெட் மெத்தைகள், அபூர்வ வேலைப்பாடு அமைந்த தலையணைகள் எல்லாமே எங்கள் கம்பெனி மூலமே ஏலத்துக்கு வந்தன. அந்தப் பண்டங்கள் ஏலத்துக்கு வந்து நாங்கள் அவற்றுக்கு நம்பர் கொடுத்து லிஸ்ட் போட்டு ஒரு விசேஷ விளம்பரத்தையும் பத்திரிகைகளில் கொடுத்தோம். 'அருமையான' வேலைப்பாடுகள் அடங்கிய சோமாபுரம் அரண்மனைப் பொருள்கள் ஏலத்துக்கு வருகின்றன என்று விளம்பரப்படுத்திய மறுநாளிலிருந்து பொருள்களைப் பார்ப்பதற்கே 'தாம்ஸன் அண்ட் பிரடெரிக் ஆக்ஷன்' ஹாலில் கூட்டம் அலைமோதிற்று.

"சோமாபுரம் ஆந்திராவில் ஒரு பழைய சமஸ்தானம் என்பது உனக்குத் தெரியும். பாலஸ் 'பர்னிச்சர்ஸ்' ஏலம் பற்றி நாங்கள் விளம்பரம் செய்த மறுநாளிலிருந்தே எங்களுக்கு ஹைதராபாத், விஜயவாடா, கர்நூல் என்று எங்கெங்கிருந்தோ டிரங்க் கால்கள் வந்தன. பம்பாய், டெல்லி, கத்கத்தாவிலிருந்து சில சினிமா ஸ்டுடியோ உரிமையாளர்கள், சில பெரிய ஹோட்டல் அதிபர்கள்கூட அந்த ஆக்ஷன் நடக்கிறபோது சென்னை வந்து தங்களுக்குத் தேவையானவற்றை ஏலம் எடுக்கப் போவதாகக் கூறி ஃபோன் செய்திருந்தார்கள். சோமாபுரம்அரண்மனைப் பொருள்கள் காரணமாக எங்கள் கம்பெனியே பரபரப்பு அடைந்திருந்தது. ஒரே டிரங்க் கால்கள், விசாரணைகள், பிரமுகர்களின் விஜயங்கள் என்று கம்பெனியே அல்லோல கல்லோலப்பட்டுக் கொண்டிருந்தது. அரண்மனைக் கட்டில்களில் விரித்திருந்த பெட்ஷீட், பெர்ஸியன் கம்பளங்கள் எல்லாம்கூடப் பல ஆண்டுகள் ஆகியும் புத்தம் புதியனவாக அப்படியே இருந்தன. அவற்றுக்கே ஏகப்பட்ட போட்டி இருந்தது.

"அரண்மனைப் பண்டங்களை எங்கள் ஆக்ஷன் ஹாலில் அடுக்கவே மூன்று நான்கு நாட்கள் பிடித்தன. மற்றவற்றை ஒதுக்கிவிட்டு அவற்றை நன்றாக 'டிஸ்பிளே' செய்ய வேண்டியிருந்தது. அந்த ஆக்ஷனுக்குச் சில மந்திரிகள், கவர்னர், அந்நிய நாடுகளின் தூதர்கள்கூட வருவார்கள் என்று எங்களுக்குத் தகவல் தெரிவிக்கப் பட்டிருந்தது. அதனால் ஏலக் கூடத்தைச் சுத்தமாகவும் அழகாகவும் வைத்திருக்க நாங்கள் பெருமுயற்சி செய்தோம். அந்த அரண்மனையது அரச பரம்பரையின் உறவினர்கள், நண்பர்கள்கூட அப்பொருள்களில் மிகவும் அக்கறை காட்டினர். அதிகாரபூர்வமாக ஏலம் நடப்பதற்கு முன்பிருந்தே, 'இதை எனக்கு எப்படியாவது தந்துவிடுங்கள்; எவ்வளவு விலையானாலும் தருகிறேன்' என்று கேட்டு ஒவ்வொரு பண்டத்துக்கும் கிராக்கி இருந்தது. எங்கள் கம்பெனிச் சட்டமோ, 'எந்தப் பொருளையும் ஏலம் போட்டு மட்டுமே விற்பது' என இருந்தது.

"இருந்தும் சில சமயங்களில் அதை மீறி விதிவிலக்காக சில விற்பனைகளைச் செய்திருக்கிறோம். ஏலம் போட்டு விற்றதுபோலக் கணக்கில் எழுதிக் கொண்டு ஏலம்

போடாமலேயே அவற்றை விற்றிருக்கிறோம். ஆனால், இந்தச் சோமாபுரம் அரண்மனைப் பொருள்களுக்கு ஏலத்தில் கடும் போட்டி இருக்கும் போலத் தோன்றியதால் கம்பெனி டைரக்டர் போர்டே விசேஷக் கூட்டம் நடத்தி 'எல்லாப் பொருளையும் கண்டிப்பாக ஏலம் கூறியே விற்பது' என்று முடிவு எடுத்து அறிவித்துவிட்டது.

ஆவலோடும், பரபரப்போடும் எதிர்பார்த்த அந்த ஏலத்துக்கு இன்னும் இரண்டு நாட்களே இருந்தன. ஞாயிறன்று ஏலம் என்றால் வியாழக்கிழமை பிற்பகல் இரண்டரை மணிக்கு ஒரு விநோதமான அனுபவம் எனக்கு ஏற்பட்டது.

பொருள்களைப் பார்க்க வந்த கூட்டத்தினிடையே ஒரு முதிய தெலுங்கர் அரண்மனைக் கட்டில்கள் வைத்திருந்த பகுதியில் ஒரு கட்டிலில் உட்கார்ந்து தலையணையை எடுத்து மார்போடு அணைத்துக் கொண்டு கதறி அழ ஆரம்பித்துவிட்டாரென்றும், கம்பெனி ஊழியர்கள் எவ்வளவோ தடுத்தும் கேட்காமல் அவர் கட்டிலிலிருந்து எழுந்திருக்க மறுக்கிறார் என்றும் என் அறையில் வந்து எனக்குத் தகவல் கூறப்பட்டது. உடனே எங்கள் கம்பெனி ஜெனரல் மானேஜர் ஜம்புநாதன் போலீஸுக்குப் போன் செய்யலாம் என்றார்.

நான் அப்படிச் செய்யக்கூடாது என்றேன். 'நானே போய்ப் பார்த்துப் பேசி அந்த ஆளைக் கிளப்பி வெளியேற்றுகிறேன். போலீஸ் எதற்கு?' என்று கூறிவிட்டு எங்கள் அலுவலக அறையிலிருந்து ஆக்ஷன் ஹாலில் அரண்மனைக் கட்டில்கள் வைத்திருந்த இடத்துக்கு விரைந்தேன் நான்.

அங்கே ஒரேயடியாகக் கூட்டம் கூடியிருந்தது. சுமார் அறுபத்தெட்டு வயது மதிக்கத்தக்க ஆஜானுபாகுவான ஓர் ஆந்திரக்காரர் கட்டிலில் அமர்ந்து அதில் இருந்த வெல்வெட்டுத் தலையணையை நெஞ்சோடு அணைத்தபடி கண்களில் நீர் சோர வீற்றிருந்தார். அவரை முதற்பார்வையிலேயே ஒரு பழைய நாடக நடிகர் அல்லது கலைஞர் என்று அனுமானிக்க முடிந்தது. ஆனால், அவரிடமே கேட்டதில் என் அனுமானம் பொய்த்துவிட்டது. அவர் ஒரு கல்லூரியில் ஆசிரியராக இருந்து ஓய்வு பெற்றவர் என்று மட்டும் தம்மைப் பற்றிச் சொல்லிக் கொண்டார். பெயர் ஊர் எதையும் சொல்ல மறுத்துவிட்டார். பதில் கூறுமுன் பாதியிலேயே மறுபடி அழ ஆரம்பித்துவிட்டார். ஆனால், அதே கூட்டத்தில் இருந்த மற்றோர் ஆந்திர சகோதரர் என்னைக் கூப்பிட்டு, 'அவர் வெறும் கல்லூரி ஆசிரியர் மட்டும் இல்லை. ஆந்திராவில் பெரிய கவி. பூர்வீகத்தில் சோமாபுரம் அரண்மனையோடு தொடர்புடையவர். பாவம்! அவரை ஒன்றும் தொந்தரவு செய்துவிடாதீர்கள்' என்றார்.

'தொந்தரவு செய்யாமல் எப்படி? பொது இடத்தில் இப்படி நியூசன்ஸாக....' என்று நான் பதிலுக்கு அவரைக் கேட்டாலும் என் மனத்தில் ஓர் அனுதாபம் சுரந்துவிட்டது. "யாருக்கும் இடையூறு இல்லாமல் பத்து நிமிஷம் உட்கார்ந்து விட்டு எழுந்து போகாவிட்டால் நாங்கள் அவரை வெளியேற்ற வேண்டியதாகிவிடும்."

"பாவம்! ஒன்றும் செய்யாதீர்கள். அவரே எழுந்து போய்விடுவார்" என்றார் முதலில் பேசிய மனிதர்.

"ஆனால், மாலையில் கடை அடைக்கிறவரை அந்த ஆள் எழுந்திருக்கவில்லை. முரட்டடியாக அவரை எழுப்பவும் எனக்கு மனம் வரவில்லை. யாருடனும் எதுவும் பேசாமல் நினைவுகளை எங்கோ உலாவ விட்டவர்போல் மோட்டு வளையைப் பார்த்தபடி தலையணையை அணைத்துக் கொண்டு ஆடாமல் அசையாமல் வீற்றிருந்தார் அவர். அவரது உடலில் முதுமையைக் கழித்துவிட்டுப் பார்த்தால் பால்ய வயதில் அவர் அதி சௌந்தர்யவானாக விளங்கியிருக்க வேண்டும் என்று உய்த்துணர முடிந்தது.

"இரவு மணி ஏழு. எங்கள் ஆக்ஷன் கம்பெனி மானேஜர் மறுபடி போலீஸைக் கூப்பிடலாம் என்றார். ஏழரைக்குக் கடை அடைப்பது வழக்கம். கடை அடைப்பதற்குள்ளாவது அந்த ஆளை வெளியேற்ற வேண்டுமே."

"தயவுசெய்து போலீஸைக் கூப்பிட வேண்டாம். வாட்ச்மேன் மட்டும் இருக்கட்டும். நீங்கள் எல்லோரும் போகலாம். நான் பார்த்துக் கொள்கிறேன். அவர் ஆந்திராவில் பெரிய கவியாம். ஒரு கவியை நாம் அவமானப்படுத்திவிடக்கூடாது. நான் இதமாகச் சொல்லி வெளியேற்றுகிறேன்" என்று நான் பொறுப்பேற்றுக் கொண்டு மற்றவர்களை வீட்டுக்கு அனுப்பி வைத்தேன். கடையில் கூட்டம் குறைந்து தனிமை வாய்த்தது.

ஆக்ஷன் ஹாலைப் பூட்டுவதற்காக ஒரு வாட்ச்மேன் மட்டும் வெளியே கதவருகே காத்திருந்தான். கடைக்குள் என்னையும் அந்தக் கிழட்டுத் தெலுங்குக் கவியையும், அரண்மனைப் பொருள்களையும் தவிர வேறு யாரும் இல்லை.

"ஓர் எழுத்தாளன் என்ற முறையில் அந்த விஷயத்தை மிகவும் சிரத்தையோடும் பொறுமையோடும் கவனித்தேன் நான். சிறிதுநேரத்தில் அந்தக் கவி தலையணையை நெஞ்சில் அணைத்தபடியே கட்டிலிலிருந்து எழுந்திருந்து அரண்மனை ஓவியங்கள் அடுக்கப்பட்டிருந்த பகுதிக்குப் போய் அங்கே நிலைக் கண்ணாடி உயரத்துக்கு இருந்த சோமாபுரம் இளவரசியான விஜய சௌந்தர்யா தேவியின் அழகிய ஓவியத்தின் முன் பித்துப் பிடித்தவர்போல நின்றார். ஒரு தெலுங்குக் கவிதையை உரத்த குரலில் பாடினார். எனக்குக் கொஞ்சம் தெலுங்கு மொழி தெரியுமாகையினால் அதன் அர்த்தத்தைப் புரிந்து கொள்ள முடிந்தது. அந்த அர்த்தம் என் மனத்தை உருக்கியது."

"உனது வைகறைகளிலும், இரவுகளிலும், வசந்தங்களிலும், பனிக்காலங்களிலும், சுகங்களிலும், துக்கங்களிலும், வாழ்விலும், மரணத்திலும் நான் அருகே இல்லா விட்டாலும் என் நினைவுகளை நீ உன் அருகிருத்திக் கொள். உனது விழிப்புகளில் நான் ஒரு கனவு. உனது கனவுகளில் நான் ஒரு விழிப்பு. உனது தலையணையில் என்னுடைய நினைவுகளால் நீ சிந்தும் கண்ணீர் நனையும்போது, எங்கோ தவிக்கும் என் சூடான இதயம் அதில் குளிரும்' என்ற பொருளுள்ள கவிதை அது.

"பின்பு ஏதோ ஒரு தீர்மானத்துடன் (மன அமைதியுற்றவர்போல்) என் பக்கம் திரும்பி, 'தயவுசெய்து என்ன விலையானாலும் இந்த ஓவியத்தையும், இந்தத் தலையணையையும் இப்போதே எனக்கு விற்க முடியுமா?' என்று கெஞ்சுகிற குரலில் கேட்டார் அவர்.

"முதல் முதலாக என்னிடம் அந்த முதியவர் அப்போதுதான் வாயைத் திறந்து பேசினார்.

"எங்கள் கம்பெனி விதிப்படி எதை விற்பதானாலும் ஏலம் கூறித்தான் விற்க முடியும். ஞாயிறு காலை எட்டரை மணிக்கு ஏலம். நீங்களே வந்து இதை ஏலம் கேட்டு எடுக்கலாமே?" என்றேன்.

"என்னை விரும்பாத இதே அரச குடும்பத்துக்கு வேண்டிய வேறு பலருங்கூட அந்த ஏலத்துக்கு வருவார்கள். ஏலம் எவ்வளவு உயர்ந்து போனாலும் அவர்கள் நான் இவற்றை எடுக்க முடியாதபடி விலையை மேலே மேலே தூக்கிவிட்டு விடுவார்கள். என் மேல் அவ்வளவு கோபம் அவர்களுக்கு வரக் காரணம் உண்டு. என்னை எண்ணித் தவித்துத் திருமணமாகாமலேயே மாண்டாள் இவள். இவளை எண்ணித் தவித்துப் பிரம்மசாரியாகவே மூத்துக் கவியாகித் திரிகிறேன் நான். இதற்குமேல் எங்கள் அந்தரங்கங்களை நான் உங்களிடம் கூற விரும்பவில்லை. இவள் கிடைக்காததால் நான் கவியானேன். நான் கிடைக்காததால் இவள் பிணமானாள்..."

அவரது பேச்சு உணர்ச்சிவசமாகி மறுபடியும் அழுகையில் போய் முடிந்தது.

ஒரு கவி என்பவன் ரசிக்கத்தக்கவன்; அவன் செண்டிமென்டலாக இருக்கும் போதோ, மேலும் ரசிக்கத் தக்கவனாகிவிடுகிறான். அவருடைய நிலை என்னை மனமிளகச் செய்துவிட்டது. கம்பெனி சட்ட திட்டம், வியாபார நேரம் முடிந்துவிட்டதே என்ற நிலை எல்லாவற்றையும் மறந்தேன்; அந்தத் தலையணையும், அந்த ஓவியமும் என்ன விலைக்கு ஏலத்தில் போக முடியுமோ அந்த விலையைச் சொல்லி அவருக்கு விற்றுவிட்டுத் தேதி போடாமல் ரசீதும் கொடுத்துப் பணம் வாங்கியாயிற்று. அவர் அவற்றை எடுத்துக்கொண்டு போக ஒரு டாக்சி கொண்டுவரச் சொல்லி வாட்ச்மேனையும் அனுப்பி வைத்தேன். அவர் என்னை வெகுவாக வியந்து பாராட்டினார்.

"என் வரலாற்றைக் கேட்டு விசாரித்துத் தொந்தரவு செய்யாமல் என் கோரிக்கையை மதித்து விதி விலக்காக இவற்றை எனக்கே விற்ற உங்களுக்கு எப்படி நன்றி சொல்வது?"

"நன்றி எதுவும் சொல்ல வேண்டாம். உங்கள் சோகக் கதை எனக்குப் புரிகிறது. நீங்கள் ஒரு கவி. நான் ஒரு கதாசிரியன். கவிகளுக்கு இலக்கணமேகூட விதி விலக்குத் தருகிறது. வளைந்து கொடுக்கிறது. விட்டுக் கொடுக்கிறது. வியாபாரம் விதி விலக்குத் தருவதா பெரிது? போய் வாருங்கள்" என்றேன்.

அவரையும் படங்களையும் ஒரு பெரிய டாக்சியில் ஏற்றிவிட்டு விட்டு அன்றிரவு நான் கடையைப் பூட்டும் போது இரவு மணி ஒன்பது. 'இன்டர்ஸ்டேட் லைசென்ஸ்' உள்ள அந்தப் பெரிய டாக்சியை அவர் 'விஜயவாடா வரை வர முடியுமோ?' என்று கேட்டுக்கொண்டிருந்தபோது தான் நானும் வாட்ச்மேனும் ஏலக்கடையைப் பூட்டிவிட்டுப் புறப்பட்டோம்.

பின்பு மறுநாள் என்னுடைய இந்தச் செயல் கம்பெனி மானேஜிங் டைரக்டர் வரை போயிற்று. கூப்பிட்டு என்னைக் கடுமையாக விசாரித்தார்கள்.

நான் நடந்ததைச் சொன்னேன்; அவர் அந்த இளவரசி படத்தின் முன் பாடிய கவிதையை விவரித்தேன்; 'கவிகள் விதி விலக்கானவர்கள். அவர்களுக்கு எந்த விதியும் பொருந்தாது. எந்த விதியும் அவர்களைக் கட்டுப்படுத்தாது; உங்கள் தாம்ஸன் அண்ட் பிரடெரிக் ஆக்ஷன் கம்பெனியின் விதி மட்டும் எம்மாத்திரம்?"

ரசிகத்தன்மை உள்ள எங்கள் கம்பெனி மானேஜிங் டைரக்டர் என்னை உடனே மன்னித்துவிட்டார். இந்த ஆக்ஷன் கம்பெனியில் வேலைக்கு வந்ததிலிருந்து நான் அடைந்த மெய்சிலிர்க்கச் செய்யும் அனுபவம் இது" என்று சண்டமாருதன் கூறியதும், "நன்றாகத்தான் இருக்கிறது. எங்கே, அந்த தெலுங்குக் கவிதையின் சுருக்கத்தை இன்னொரு தடவை சொல்லு! பார்க்கலாம். பொருள் நிறைந்து அழகாக இருக்கிறதே" என்று ஆவலோடு கேட்டான் நண்பன் சப்தரிஷி.

"உனது வைகறைகளிலும், இரவுகளிலும், வசந்தங்களிலும், பனிக்காலங்களிலும், சுகங்களிலும், துக்கங்களிலும், வாழ்விலும், மரணத்திலும், நான் அருகே இல்லாவிட்டாலும் என் நினைவுகளை நீ உன் அருகிருத்திக் கொள். உனது விழிப்புகளில் நான் ஒரு கனவு. உனது கனவுகளில் நான் ஒரு விழிப்பு. உனது தலையணையில் என்னுடைய நினைவுகளால் நீ சிந்தும் கண்ணீர் நனையும்போது எங்கோ தவிக்கும் என் சூடான இதயமும் அதில் குளிரும்."

இதைக் கேட்டுச் சண்டமாருதனின் நண்பன் சப்தரிஷி சில நிமிஷங்கள் அப்படியே மிகவும் உணர்ச்சிவசப்பட்டுச் சென்டிமெண்டலாகி ஒன்றும் பேசத் தோன்றாமல் கண் கலங்கி அமர்ந்திருந்தான்.

**(கலைமகள், தீபாவளி மலர், 1974)**

## 120. மறுபடியும் ஒரு மஹிஷாசுர வதம்

மார்ச் மாதம் பதினைந்தாம் தேதி அரசுப்பட்டியில் ஒரு புதிய அரசாங்கப் பெண்கள் கலைக் கல்லூரிக்கான விரிவுரையாளர்களைத் தேர்ந்தெடுக்க விண்ணப்பங்களைக் கோரிப் பத்திரிகைகளில் விளம்பரங்கள் வெளிவந்திருந்தன.

அந்தக் கல்லூரி புதிதாக மே மாதம் பதினைந்தாம் தேதி மாண்புமிகு அமைச்சரொருவரால் திறந்து வைக்கப்பட இருந்தது. ஏப்ரல் 10ந் தேதி விரிவுரையாளர்களைத் தேர்ந்தெடுக்க இண்டர்வியூக்கு நாள் குறித்திருந்திருந்தார்கள். கட்டிடங்கள் போதுமான அளவு உருவாகவில்லை என்றாலும் கல்லூரிக்காக ஒதுக்கப்பட்ட நாற்பது ஏக்கர் நிலத்தில் சில கூரை ஷெட்டுகளை அவசர அவசரமாக அமைத்துக் கல்லூரியைத் தொடங்க இருந்தார்கள். இந்த அவசரத்திற்குக் காரணம் ஜூலை மாத நடுவில் அந்த வட்டாரத்தில் பாராளுமன்ற உபதேர்தல் ஒன்று நடக்க இருந்தது. அந்த உபதேர்தலில் வெற்றி பெறக் காரணமாக அங்கே தாங்கள் சாதித்திருக்கும் சாதனைகளின் பட்டியலில் இந்தப் பெண்கள் கல்லூரியும் இடம் பெற்றிருக்க வேண்டும் என்று தான் அரசாங்கம் இதற்கு இவ்வளவு தவித்துப் பறந்து ஏற்பாடு செய்து கொண்டிருந்தது. அந்த வட்டாரத்தில் அதிகமாக வசித்த ஓர் இனத்தையும் அந்த இனத்தின் ஏராளமான வாக்காளர்களான பெண்கள் ஓட்டையும் கவருவதற்காக முன்கூட்டியே இது திட்டமிடப்பட்டிருந்தது. தேர்தல் மட்டும் வரவில்லை என்றால் அங்கே அவ்வளவு அவசரமாகக் கல்லூரி வந்திருக்காது. இண்டர்வியூவை எதிர்பார்த்து விண்ணப்பித்திருந்தவர்களில் மாயாண்டி அம்பலத்தின் பேர்த்தி முத்தம்மாளும் ஒருத்தி. அவள் முந்திய ஆண்டு தான் பக்கத்தில் அறுபது மைல் தொலைவிலுள்ள பெரிய நகரின் பெண்கள் கல்லூரி ஒன்றில் படிப்பை முடித்துத் தமிழ் எம்.ஏ. தேறி அரசுப் பட்டிக்கு வந்து ஒரு வருடகாலம் வேலையில்லாமல் இருந்தாள்.

முத்தம்மாள் தாத்தாவிடம் வளர்ந்தவள். முத்தம்மாளுக்கு ஐந்து வயதாயிருந்தபோது அவள் தகப்பன் இரவில் பருத்திக் காட்டுக் காவலுக்குப் போயிருந்த இடத்தில் வரப்பு மேட்டில் வைத்து இரவோடிரவாகச் சில ஜன்ம விரோதிகளால் தூங்கும் போது வெட்டிக் கொலை செய்யப்பட்டான். அதனால் விதவையான மாயாண்டி அம்பலத்தின் ஒரே மகள் குழந்தையோடு தகப்பன் வீடு வந்து சேர்ந்தாள். ஒரே மகள் வயிற்றுப் பேத்தியைச் செல்லமாக வளர்த்துப் படிக்க வைத்தார் முத்தம்மாள் தைரியத்தில் தன் தந்தையைக் கொண்டிருந்தாள். அவளுடைய பள்ளிப் பருவத்தில் ஒருநாள் வகுப்பு முடிந்து வீடு திரும்பும்போது வழியில் கண்ட நல்ல பாம்பு ஒன்றைப் பயப்படாமல் துரத்தி அடித்துக் கொன்று மூங்கில் கழி நுனியில் அடித்த

பாம்புடன் தாத்தாவுக்கு முன் தோன்றி பாராட்டுப் பெற்றிருக்கிறாள் அவள். சிறு வயதில் பயம் என்பதே என்ன வென்று அறியாமல் வளர்ந்தவள் அவள்.

"அப்பனை அப்படியே உரித்து வைத்திருக்கிறது. ஆனால், பெண்ணாகப் பிறந்திருக்கே" என்று தாத்தா மாயாண்டி அம்பலம் வாய்க்கு வாய் அவளைப் பற்றிச் சொல்லி வியப்பது வழக்கமாயிருந்தது.

"அதுதான் எனக்கு பயமாயிருக்கு அப்பா! அவரு அத்தினி அடாவடித்தனமா நிமிர்ந்து இருந்ததுனாலேதான் பருத்திக் காட்டிலே தூங்கறப்போ நாலஞ்சு பேராச் சேர்ந்து சதி பண்ணிக் கொன்னுட்டாங்க. இந்தப் பெண்ணுக்கும் அதே தைரியம் இருக்குதே... எப்படி ஆகுமோ, என்ன ஆகுமோன்னு எனக்கே பயமாயிருக்குது அப்பா" என்பாள் முத்தம்மாளின் தாய்.

பருவம் அடைந்த பின்பு முத்தம்மாளுடைய அழகும் தைரியத்தோடு போட்டி போட்டுக் கொண்டு செழித்திருந்தது. பாயத் தயாராக நிற்கும் அரபிக் குதிரை மாதிரி மதமதவென்று வளர்ந்துவிட்டாள் முத்தம்மாள். நல்ல உயரம். வாளிப்பான அங்கங்கள்; குறுகுறுப்பான விழிகள். துறுதுறுப்பான முகம். வெள்ளை வெளேரென்ற அளவான பல்வரிசை. கணீரென்ற குரல். அவளைப் பார்க்கிற எந்த ஆண்பிள்ளையும் இன்னொரு முறை திரும்பிப் பார்த்துவிட்டுத்தான் போக வேண்டுமென்ற நப்பாசையைத் தவிர்க்கவே முடியாது. நடந்துவரும் போதோ அவள் அழகைச் சொல்லிமாளாது. அலங்கரிக்கப்பட்ட தங்கத் தேரோ கோபுரமோ புறப்பட்டு வருவதுபோல எடுப்பாக இருக்கும். முடிந்தாலும், அவிழ்ந்து தொங்கினாலும் எடுப்பான நீண்ட கருங்கூந்தல் ஆற்றில் அலையோடி வற்றிய இடத்துக் கருமணல் போல் எண்ணெய்ப் பளபளப்புடன், நெளி நெளியாக மின்னும். அவள் கூந்தற் கருமை மனத்தைக் கொள்ளை கொள்ளும் தன்மையை உடையது.

ஏற்பட இருந்த அரசப்பட்டி அரசினர் பெண்கள் கல்லூரி தமிழ் விரிவுரையாளர் வேலைக்கு விண்ணப்பித்திருந்தாள் அவள். ஏப்ரல் மாதம் பத்தாம் தேதி இண்டர்வியூவிற்கு முன்பே பிரின்ஸிபாலாக கல்வி மந்திரிக்கு மிகவும் வேண்டியவரென்று சொல்லப்பட்ட ஓர் அம்மாள் நியமிக்கப்பட்டுவிட்டார்.

மற்றப் பதவிகளுக்கு இண்டர்வியூ செய்ய மூவர் கொண்ட குழு ஒன்றை அரசாங்கம் நியமித்திருந்தது. பிரின்ஸிபாலாக நியமிக்கப்பட்டிருந்த அம்மாள் தவிர அரசுப்பட்டி வட்டார எம்.எல்.ஏ. அரசை, அத்தியழகன், பல்கலைக்கழகப் பிரதிநிதியாக ஒருவர் ஆக மூவர் ஏப்ரல் 10ந் தேதி அரசப்பட்டி டிராவலர்ஸ் பங்களாவில் அந்த இண்டர்வியூவை நடத்தினர். காலை பத்து மணிக்கு இண்டர்வியூ தொடங்கியது. ஏப்ரல் மாதம் ஆகையால் வெய்யில் கடுமையாக இருந்தது வெளியேதான். உள்ளே அந்த டிராவலர்ஸ் பங்களாவில் இரண்டு முறை முதலமைச்சர் வந்து தங்கியிருந்ததனால் அவருக்காக சர்க்கார் செலவில் அது ஏர்க்கண்டிஷன் செய்யப்பட்டிருந்தது.

முதலில் மற்ற மற்றப் பாடப்பிரிவுகளுக்கான விரிவுரையாளர்களின் இண்டர்வியூ முடிந்ததும் பதினொன்றரை மணிக்குத் தமிழ் விரிவுரையாளர் பதவிக்கு விண்ணப்பித்திருந்தவர்கள் ஒவ்வொருவராக உள்ளே அழைக்கப்பட்டனர். மொத்தம் பதினாறு பெண்கள். அதற்காக விண்ணப்பித்திருந்தனர். அந்தப் பதினாறு பேரிலும் பார்க்க எடுப்பாக அகாக இருந்தவள் முத்தம்மாள் மட்டும்தான். மற்றப் பதவிகளுக்கு இண்டர்வியூ முடிந்து வெளியே வந்தவர்கள் சொன்ன அபிப்பிராயத்திலிருந்து பிரின்ஸிபால் அம்மாளுக்கோ, பல்கலைக்கழகப் பிரதிநிதியாக வந்திருந்த முதியவர் ஒருவருக்கோ அதிகம் செல்வாக்கு இல்லை என்றும் எம்.எல்.ஏ.வான அரசை அந்தியழகன்தான் அதில் செல்வாக்குள்ள புள்ளி என்றும் எல்லாரும் பேசிக் கொண்டார்கள். அரசை அந்தியழகன் சிபாரிசு செய்கிற நபருக்கு வேலை நிச்சயமாகக் கிடைக்கும் என்று தெரிந்தது. அதை ஒட்டி அரசை அந்தியழகனை எப்படி திருப்திப்படுத்துவது என்ற முணுமுணுப்பான பேச்சுக்கள், விமரிசனங்கள் வெளியே காத்திருந்தவர்களிடையே சில கணங்கள் பரிமாறிக் கொள்ளப்பட்டன.

ஒவ்வொருவராகக் காத்திருந்தவர்கள் உள்ளே அழைக்கப்பட்டனர். முதலில் உள்ளே போய்விட்டு வந்த பெண் வெளியே திரும்பி வந்ததும் சொன்னாள் : "எம்.எல்.ஏ. சார் ஒண்ணுமே கேட்கலை. பிரின்ஸிபால் அம்மாள் ஒரு கேள்வியும், பல்கலைக்கழகப் பிரதிநிதி ஒரு கேள்வியுமாக இரண்டு கேள்வி கேட்டுவிட்டுப் போகச் சொல்லிவிட்டார்கள்" - இரண்டாவதாக உள்ளே போய்விட்டு வந்த பெண், "எம்.எல்.ஏ. சார் வகுப்புக்கு எப்படிக் கவர்ச்சியாக உடையணிந்து செல்வீர்கள்?" என்று ஒரு கேள்வி கேட்டார். "நீங்க எப்படி அணிந்து போகச் சொல்றீங்களோ அப்படி அணிந்து கொண்டு போகிறோம் சார்" என்று நான் பணிவாகப் பதில் சொல்லிவிட்டு வந்தேன்" என்றாள்.

முத்தம்மாள் உள்ளே போனபோது அரசை அந்தியழகன் அவளையே வைத்த கண் வாங்காமல் விழுங்கிவிடுவதுபோல் பார்த்தான். மற்ற இருவரும் ஏதேதோ கேள்விகள் கேட்டார்கள். முத்தம்மாள் பதில் சொன்னாள். அரசை அந்தியழகன், "உங்கப்பா பேரு என்னம்மா? அவரு என்ன செய்யிறாரு?" என்று முத்தம்மாளை ஒரே கேள்வி மட்டும் கேட்டான்.

"எங்கப்பா இல்லே. இறந்து போயிட்டாரு. அம்மாவும் தாத்தாவும்தான் இருக்காங்க" என்றாள் அவள்.

அதற்குமேல் அவன் எதுவும் கேட்கவில்லை. அவள் அவனைப் பார்த்து ஓரளவு அருவருப்பு அடைந்தாள். அவன் முகம் எருமை மாட்டின் மூஞ்சியைப் போலிருந்தது. மேலே தலை சிறுத்துக் கீழே வரவரப் பீப்பாய் போன்ற உடலுடன் எருமைத் தலையைப் பீப்பாயில் ஒட்ட வைத்து அதற்குக் கையும் காலும் முளைக்கச்செய்தது போல இருந்தான் அரசை அந்தியழகன். இண்டர்வியூ முடிகிறவரை அவனுடைய மாட்டு முழிகள் இரண்டும் அவளது உடலிலேயே லயித்திருந்தன. இண்டர்வியூ முடிந்து அவள் வெளியேறும்போதும், "நீ கொஞ்சம் வெளியே இரும்மா!

போயிடாதே, உங்கிட்டக் கொஞ்சம் பேசணும்" என்று அவளிடம் சொன்னான் அந்தியழகன்.

அவள் நம்பிக்கையோடு வெளியே வந்து காத்திருந்தாள். அப்படிக் காத்திருந்தபோது தனக்கு அந்த வேலை கிடைக்காது என்று தானே நினைக்கும்படியாகச் சில விஷயங்கள் அவளுக்குத் தெரிந்தன. தன்னோடு இண்டர்வியூ செய்யப்பட்ட பிற பதினைந்து பேரில் மூன்று முதல் வகுப்பு எம்.ஏ.க்களும், ஆறு இரண்டாம் வகுப்பு எம்.ஏ.க்களும் இருக்கும்போது சாதாரணமாக மூன்றாம் வகுப்பில் எம்.ஏ. தேறியிருந்த தனக்கு அது கிடைக்குமா என்ற சந்தேகம் அவளுக்கே வந்துவிட்டது. ஆனாலும் எம்.எல்.ஏ. இருக்கச் சொல்லி வேண்டியிருப்பது அவளுக்கு நம்பிக்கையூட்டியது. தன் குடும்பமும், தாத்தாவும், அம்மாவும் இருக்கிற கஷ்ட நிலைமையில் ஐநூறு ரூபாய்க்கு மேலாக வருமானமுள்ள ஓர் உத்தியோகம் உள்ளூரிலேயே தனக்குக் கிடைத்தால் எவ்வளவு சௌகரியமாக இருக்கும் என்று எண்ணினாள் அவள்.

இண்டர்வியூ அநேகமாக முடிந்தது. மற்றவர்கள் ஒவ்வொருவராகப் புறப்பட்டுவிட்டனர். எம்.எல்.ஏ. அரசை அந்தியழகன் வெளியே வந்தான்.

முத்தம்மாளை மட்டும் தனியே ஒரு மரத்தடிக்கு அழைத்துச் சென்று சிரித்துச் சிரித்து நயமாகப் பேசினான் எம்.எல்.ஏ. அவள் என்ன சாதி என்பதை விசாரித்தான். சாதியைச் சொன்னவுடன், 'அடேடே! நீ நம்ம வகையறாவைச் சேர்ந்த பொண்ணுன்னு சொல்லு. கவலையே படாதே. இண்டர்வியூ எல்லாம் சும்மா கண்துடைப்புக்குத்தான். நான் சொல்ற ஆளுக்கு இங்கே ஆர்டர் போடுவாங்க. நீ இன்னிக்குச் சாயங்காலமே ஏழு ஏழரை மணிக்கு இங்கே வந்து ஆர்டரை நேரே வாங்கிப் போய்விடு. எங் கையாலேயே உங்கிட்டத் தர்ரேன்..."

"தபால்லே அனுப்பிடுங்களேன் சார்..."

"அட நீ வாம்மா... கரும்பு தின்னக் கூலியா?"

"அப்போ நாளைக்கு காலையிலே நேரே வந்து வாங்கிக்கிறேனே சார்!"

"நாளைக்கா? நாளைக்கு என்னை நீ இங்கே பார்க்கவே முடியாது. இன்னிக்கு ராத்திரி ஒன்பது மணி ரயில்லே நான் மெட்ராஸ் போயாகணும். நாளைக்கு அசெம்பிளி இருக்கு."

"இன்னிக்கே கண்டிப்பா வரணுமா சார்?"

"ஆமாம், இன்னிக்கு ராத்திரி ஏழு மணிக்கு. இதே டி.பி.யிலே இண்டர்வியூ நடந்த இதே ஏ.ஸி. ரூம்லே ஆர்டரோட நான் உனக்காகக் காத்துக்கிட்டிருப்பேன்."

"சரி சார்! வரேன், நீங்கள் இவ்வளவு நிச்சயமா சொல்றப்ப நான் எப்பிடி சார் தட்ட முடியும்?"

முத்தம்மாள் எம்.எல்.ஏ.யிடம் விடைபெற்றுக் கொண்டு புறப்பட்டாள்.

அரசுப்பட்டி டிராவலர்ஸ் பங்களா ஊர் எல்லையிலிருந்து ஒதுக்குப்புறமாக இருந்தது. அதிலிருந்து ஒரு பர்லாங் தூரத்தில் ஒரு மேட்டில்தான் காலேஜ் அமையப் போகிற காம்பஸ் இருந்தது. ஆர்டரை ஏன் காலேஜில் வைத்துக் கொடுக்காமல் டி.பி.க்கு வரச் சொல்லிக் கொடுக்கிறேன் என்று எம்.எல்.ஏ. சொல்கிறார் என்பது சந்தேகப்படத்தக்கதாக இருந்தது முத்தம்மாளுக்கு. அந்தச் சந்தேகத்தை அங்கிருந்து புறப்பட்டுச் சிறிது தொலைவு சென்று மீண்டும் திரும்பிப் போய் எம்.எல்.ஏ.யிடம் கேட்டபோது... "அட நீ என்னம்மா, பயித்தியக்காரப் பொண்ணாயிருக்கே? ஏழு மணிக்கு நீ இங்கே வர்ரப்போ பிரின்ஸிபால் அம்மாளும் இங்கேதான் எங்கூட இருப்பாங்க" என்றார் எம்.எல்.ஏ. பிரின்ஸிபால் அம்மாளும் உடன் இருப்பார்கள் என்று அறிந்தவுடன் முத்தம்மாளின் சந்தேகங்கள் அகன்றன. அவள் நிம்மதியாக வீடு திரும்பினாள். தாத்தாவிடமும் அம்மாவிடமும் நடந்தவற்றைச் சொன்னாள்.

"அதான் பிரின்ஸ்பால் அம்மாளும்கூட இருப்பாங்கன்னு சொல்லியிருக்காரே, போயி ஆர்டரை வாங்கிட்டு வா..." என்றார் தாத்தா.

மாலையில் ஆறரை மணிக்கு வீட்டிலிருந்து புறப்பட்ட முத்தம்மாள் அரசுப்பட்டி ஊரெல்லையில் இருந்த முத்தாலம்மன் கோவிலில் சூடம் கொளுத்தி அம்மனைக் கும்பிட்டு விட்டு டிராலர்ஸ் பங்களா காம்பவுண்டில் போய் நுழையும்போது நன்றாக இருட்டிவிட்டிருந்தது. டி.பி.காம்பவுண்டில் எம்.எல்.ஏ. அந்தியழகனின் கார் நின்றது. கார் ஓரமாக பீடியைப் புகைத்தவாறு டிரைவர் நின்று கொண்டிருந்தான். "ஐயா இருக்காங்களா?" என்று அவள் டிரைவரைக் கேட்டாள். அவன் பதில் சொல்லாமல் அவளை ஏற இறங்கப் பார்த்துவிட்டு உட்புறமாகக் கையைக் காண்பித்தான். அப்போது டிராவலர்ஸ் பங்களா காம்பவுண்டில் அந்தக் காரையும், டிரைவரையும் தவிர ஈ காக்காய் இல்லை; அந்த இடம் வெறிச்சோடிக் கிடந்தது.

அவள் தயங்கியபடியே ஏ.ஸி. அறையைத் திறந்து கொண்டு உள்ளே நுழைந்தாள். சிகரெட் புகையும் வேறு ஏதோ வாடையும் நெட்டித் தள்ளியது. உள்ளே மேஜையில் நாலைந்து சோடா புட்டிகளும், கண்ணாடிப் புட்டிகளும் கிளாஸ்களும் இருந்தன. பிரின்ஸிபால் அம்மாளைக்காணவில்லை. எம்.எல்.ஏ. ஆடை அவிழ்ந்தது தெரியாமல் மார்பில் பனியன்கூட இன்றிப் படுக்கையில் நிலைகுலைந்து சாய்ந்திருந்தார். அவளைப் பார்த்ததும் எழுந்து வந்தார் அவர்.

"சார்! பிரின்ஸிபால் அம்மா இன்னும் வரலியா?"

"இதோ அவங்க பக்கத்து அறையில்தான் இருக்காங்க; கூப்பிடறேன். எனக்குக் கொஞ்சம் உடம்பு சரியில்லே. நீ உட்காரும்மா" என்று பிரின்ஸிபால் அம்மாளைக் கூப்பிடப் போகிறவரைப்போல் வாயிற் கதவு வரைசென்று குபீரென்று கதவை உட்புறமாகத் தாழிட்டார் எம்.எல்.ஏ. துணுக்குற்ற முத்தம்மாள் கதவை நோக்கி ஓடினாள். எம்.எல்.ஏ.யின் எருமை போன்ற முரட்டு உடல் அவளை நோக்கித் தாவிப் பாய்ந்தது.

"பயப்படாதே தங்கம்! இப்படி ஆர்டர் வாங்கிக் கொடுக்கிறதுக்கு ஒவ்வொருத்தன் ரெண்டாயிரம் மூவாயிரம்னு பணமா லஞ்சம் கேட்டு வாங்கறான். எனக்கு அதெல்லாம் வேணாம்! இது போதும்" என்று முத்தம்மாளின் செழிப்பான பூப்போன்ற தோள் பட்டைகளில் தன்னுடைய எருமைக் கரங்களை அழுத்திப் பிடித்தான் எம்.எல்.ஏ.

முத்தம்மாள் கூச்சலிட முயன்றாள். வாய் பொத்தப்பட்டது. பின் சாமர்த்தியமாக அங்கே கூச்சலிட்டுப் பயனில்லை என்று உணர்ந்து கூச்சலிடாமல் எம்.எல்.ஏ.க்கு இணங்குவதுபோல் போக்குக் காட்டி அவனைப் படுக்கை வரை அழைத்துச் சென்று கட்டிலில் தள்ளினாள். அவன் நம்பிக்கையோடு சாய்ந்ததும் சரேலென்று திரும்பிய அவள் இரண்டு கைகளிலும் இரண்டு காலி சோடா பாட்டில்களுடன் கட்டிலின் மீது பாய்ந்தாள். நீண்ட நாட்களுக்கு முன் பள்ளிக்கூடத்திலிருந்து வீடு திரும்பும்போது தன்னைக் கடித்து விடுமோ என்று அஞ்சிய ஒரு நல்ல பாம்பை அடித்தபோது என்ன உணர்ச்சி வேகம் அவளை ஆட்கொண்டதோ அதே உணர்ச்சி வேகம் இப்போதும் அவளை ஆட்கொண்டது.

பதினைந்தே நிமிஷங்களில் அரசை அந்தியழகனின் மண்டை இரத்தக் களரியாகிவிட்டது. லாரியில் அறைபட்டதொரு நாய்போல் படுக்கையில் கிடந்த அவன் உடலைப் பார்த்து வெறி தணியாமல் நுனி உடைந்த சோடா பாட்டில்களால் தாக்கிக் கொண்டே இருந்தாள் அவள். ஏ.ஸி. அறையாகையினால் யாருடைய கூச்சலும் வெளியே கேட்கவில்லை.

அரை மணிக்குப் பிறகு அவள் வெளியேறியபோது டி.பி. வாசலில் காரருகே பீடி குடித்துக் கொண்டிருந்த டிரைவரையும் காணோம். கையிலிருந்த இரத்தம் குழம்பிய சோடா புட்டியை வீசி எறியவும் தோன்றாமல் மகிஷாசுரமர்த்தினிபோல் வீடு நோக்கி நடந்தாள் முத்தம்மாள்.

கொல்லைப்புற வழியாக வீட்டுக் கதவைத் தட்டிய முத்தம்மாளை முதலில் எதிர்கொண்டவர் தாத்தா மாயாண்டி அம்பலம்தான். அப்போது முத்தம்மாளின் அம்மா வீட்டில் இல்லை.

"என்னம்மா கண்ணு? ஏன் கொல்லை வழியாக வந்தே? ஆர்டர் கிடைச்சுதா?"

தாத்தாவுக்குக் கண் பார்வை கொஞ்சம் மங்கல். பேத்தி முத்தம்மாள் இப்போது கொஞ்சமும் பதறாமல் அவருக்குப் பதில் சொன்னாள்.

"தாத்தா! ரொம்ப நாளைக்கு முன்னே நான் ஸ்கூல்லே படிக்கறப்போ ஒரு நாகப்பாம்பை அடிச்சுக் கொண்டாந்தேனே, நினைவிருக்கா?"

"அதெப்படிம்மா மறக்கும்? நல்லா நினைவிருக்கு! ரொம்ப நல்லா நினைவிருக்கு..."

"அதைவிடப் பெரிய கருநாகத்தை இன்னிக்கி ரெண்டு கையாலேயும் அடிச்சுக் கொன்னுப் போட்டு வந்திருக்கேன்..."

"எங்கேம்மா? தோலுக்காவும்னு செத்த பாம்பைக் கொண்டாந்துட்டியா?"

"இல்லே தாத்தா! பெரிய பாம்புன்னாலே தூக்கிக் கொண்டாற முடியலை. என்னைக் கொத்தப் பார்த்திச்சு. கொத்தறதுக்குக்குள்ளார அடிச்சுத் தீர்த்துப் போட்டேன்..."

முன்னால் வாயிற்புறம் கதவு பலமாகத் தட்டப்பட்டது. பூட்ஸ் கால்கள் தரையை மிதிக்கும் ஓசைகள் கேட்டன.

"வாசல்லே யாரோ கதவைத் தட்டுறாங்கம்மா! வா... போகலாம்" என்றார் தாத்தா.

"நீங்க இருங்க தாத்தா! நான் போய்த் திறக்கிறேன்" என்று அவள் அவரை முந்திக் கொண்டு வாயிற்புறம் விரைந்தாள். வந்திருப்பவர்கள் போலீஸ்காரர்கள்தான் என்பது அவளுக்குப் புரிந்தது. இனி வரவிருப்பதை நினைத்தும் அவள் கால்களோ,நெஞ்சமோ சிறிதும் நடுங்கவில்லை. ஏனெனில், தான் எந்தத் தவறும் செய்ததாக அவளுக்குத் தோன்றவில்லை. அன்றொருநாள் ஆதிபராசக்தி மாகாளி துர்க்கை மஹிஷாசுரனை மிதித்துக்கொன்றது தவறு என்றால்தானே இன்று இவள் செய்ததும் தவறாகும்.

**(தீபம், தீபாவளி மலர், 1974)**



## 121. அனுதாபக் கூட்டம்

தியாகி கந்தப்பப்பிள்ளை அமரராகி ஏழு நாட்கள் கழிந்து விட்டன. பாவி மனிதர் இன்னும் நாலைந்து மாதங்கள் இருந்துவிட்டுப் போயிருந்தால் 200 ரூபாய் பென்ஷனைச் சிறிது காலமாவது வாங்கியிருக்கலாம். பென்ஷன் அறிவித்து வந்த முதற்பட்டியலிலேயே அவர் பெயரும் வந்துவிட்டது. பத்திரிகையில் அந்த அறிவிப்பைப் பார்த்த மறுதினம் அவர் காலமாகிவிட்டார். உள்ளூர் தேசபக்தர்கள் அவருக்குச் செய்த இறுதி மரியாதை என்பது அவர் சடலத்தின் மேல் போர்த்திய மூவர்ணக் கொடி மட்டும்தான். ஊரிலிருந்த ஒரு சில தேச பக்தர்களும், பத்துப் பன்னிரண்டு கதர் ஜிப்பா ஆட்களும், இரண்டு மூன்று சிறுவர்களும்தான் கந்தப்பப் பிள்ளையின் அந்திம ஊர்வலத்தில் உடன் சென்றவர்கள். எல்லாருக்கும் போய்விட்டார் என்பதில் இருந்த வருத்தத்தைவிட அறிவிக்கப்பட்ட பென்ஷனை வாங்காமலேயே போய்விட்டாரே என்பதில்தான் அதிக வருத்தம். லாபம் வரும்போது பார்த்தா மனிதர் இறப்பார்?

80-வது வயதில் ஒருவர் இறப்பது என்பது அப்படி ஒன்றும் அசாதாரணமானதில்லை; சாகிற வயதுதான் என்றாலும் குடும்பத்தினரும் மற்றவர்களும் துயரப்படுவதற்குக் காரணங்கள் இருந்தன. அவை மெய்யான காரணங்கள் :

தியாகி கந்தப்பப்பிள்ளை இந்த உலகில் இருந்து புறப்பட்டுப் போகும்போது எதையும் கொண்டு போகவில்லை. என்றாலும் குடும்பத்தினருக்குப் பாரமாக நிறைய விஷயங்களை விட்டுச் சென்றிருந்தார். இந்தத் தேசத்தின் பொருளாதாரத்தை விடப் படுமோசமான பொருளாதார நிலையில் உள்ள குடும்பம் அது. இன்னும் கலியாணமாகாத வயது வந்த இரண்டு பெண்கள். ஏராளமான கடன் சுமை. வீட்டு வாடகைப் பாக்கி; எல்லாவற்றையும் விட்டுச் சென்றிருந்தார் கந்தப்பப் பிள்ளை; சிரமத்துக்கு இவை போதாதா?

அவருக்கு மொத்தம் ஆறு பெண்கள்! முதல் நான்கு பெண்களுக்கு அவர் அதிக மூப்படைவதற்கு முன்பே திருமணமாகி அவர்கள் கணவர் வீடுகளுக்குப் போய்ச் சேர்ந்திருந்தார்கள். காலமாவதற்கு முன் கடைசி இரண்டு பெண்களுக்கும் திருமணம் நடத்த அலைந்து சிரமப்பட்டுக் கொண்டிருந்தார் அவர். அவரது சாவுக்கே அந்தக் கவலையும் மனவேதனையும்தான் காரணம் என்று அக்கம் பக்கத்தாரும் உறவினரும் பேசிக் கொண்டார்கள். கந்தப்பப்பிள்ளையின் மனைவி கோமதியம்மாள் கூடத் துக்கத்துக்கு வந்தவர்களிடம் அப்படித்தான் சொன்னாள். உண்மையும் அதுதான் என்பதை யாரும் மிகச் சுலபமாகவே ஊகித்துக் கொள்ளலாம். கந்தப்பப்பிள்ளை

காலமான தினத்தன்று உள்ளூர்ப் பெரிய மனிதரும், பிரமுகரும் பஞ்சாயத்துத் தலைவருமான மாவடியாப் பிள்ளை ஊரில் இல்லை. ஏதோ பஸ் தேசிய மய விஷயமாகச் சென்னையிலுள்ள வக்கீலைக் கலந்து பேசப் போயிருந்தார். அவருக்கு ஒரு பஸ் ரூட் இருந்தது. 'ஃப்ளீட் ஓனர்களில்' அவரும் ஒருவர்.

தியாகி கந்தப்பப் பிள்ளையைப் போல் உப்பு சத்தியாகிரகம், தனிநபர் சத்தியாக்கிரகம், ஆகஸ்டுப் போராட்டம் எதிலும் எதற்காகவும் சிறை செல்லவோ, அடி உதைபடவோ செய்யவில்லை என்றாலும் மாவடியாபிள்ளை 1950க்குப் பின் கதர்ச் சட்டையை மாட்டிக் கொண்டு தேர்தல் நிதிகளுக்குத் தாராளமாக நிதி உதவி செய்ததன் மூலம் முன்னுக்கு வந்துவிட்டவர். ஊரில் தியாகி கந்தப்பப்பிள்ளைக்கு வராத செல்வாக்கும் சமூக அந்தஸ்தும் மாவடியாப் பிள்ளைக்கு வந்துவிட்டது. பதவி வந்தது. பஸ்ரூட் வந்தது. கட்சியும் கைக்கு வந்தது. ஒன்பதாண்டுச் சிறைவாசம் செய்த கந்தப்பப் பிள்ளைக்கும் கிடைக்காத வசதிகள் எல்லாம் சுதந்திரம் கிடைத்த பின் தேசபக்தராக மாறிய மாவடியாப் பிள்ளை குடும்பத்துக்குக் கிடைத்தது. சுதந்திரப் போராட்ட காலத்தில் மாவடியாப் பிள்ளையின் தந்தை ஜஸ்டிஸ் கட்சி; சுதந்திரம் கிடைத்த பின் ஒரு மகனைக் காங்கிரஸில் உறுப்பினராக்கி வைத்தார் அவர். மற்ற மகன்களை வேறு கட்சிகளில் நுழைத்துவிட்டார்; இன்று இந்த நாட்டில் உள்ள பல பணக்காரக் குடும்பங்களுக்கு எந்தக் கட்சி ஆளவந்தாலும் யார் அதிகாரிகளாக வந்தாலும் கவலை இல்லை. ஏனெனில் அவர்கள் மிகவும் முன் ஜாக்கிரதையோடு தங்கள் குடும்பத்தில் ஒவ்வொருத்தரை ஒவ்வொரு கட்சியில் பிரமுகராக்கி வைத்திருக்கிறார்கள். ஏழைகளும் மத்திய தர வர்க்கத்தினருமே அப்பாவித்தனமாக 'ஒன்றே - கொள்கை - ஒருவனே தலைவன்' என்று நம்பிக்கைக் கொண்டு தனி வாழ்க்கையிலும், பொது வாழ்க்கையிலும் திண்டாடிக் கொண்டிருக்கிறார்கள்; மாவடியாப் பிள்ளையோ, அவருடைய குடும்பத்தினரோ எந்தக் காலத்திலும், எதற்காகவும் இப்படித் திண்டாடியதில்லை. அவர்களுக்கு இங்கிதம் தெரிந்திருந்தது.

சென்னையிலிருந்து திரும்பியதும் கந்தப்பப் பிள்ளை காலமான செய்தி அறிந்த மாவடியாப் பிள்ளை உடனே கந்தப்பப் பிள்ளையின் குடும்பத்தினரைப் பார்த்துத் துக்கம் கேட்கச் சென்றார். ஒரு பெரிய அனுதாபக் கூட்டத்துக்கும் ஏற்பாடு செய்தார். கந்தப்பப் பிள்ளை குடும்பத்துக்கு நிதி உதவிக்கு ஒரு குழுவும் அமைத்தார். அனுதாபக் கூட்டத்துக்குத் தான் நேரில் போக முடியாத கந்தப்பப் பிள்ளையின் மனைவி மணமாகாமல் வீட்டில் இருந்த பெண்கள் இருவரையும் அனுப்பி வைத்திருந்தாள்.

மாலை ஐந்து மணிக்கு அனுதாபக் கூட்டம் என்று விளம்பரம் செய்யப் பட்டிருந்தது. டவுன் ஹாலில் கூட்டம் நடக்கும் என்று விளம்பரப்படுத்தியிருந்தார்கள். ஆறு மணிக்குத்தான் கொஞ்சம் கூட்டம் சேர்ந்திருந்தது. "ஹால் நிறையக் கூட்டம் சேர்ந்ததும் எனக்கு போன் பண்ணு! அப்புறம் நான் வர்ரேன்" என்று கூட்டத்துக்குத் தலைமை வகிக்கும் மாவடியாப் பிள்ளை செயலாளரிடம் சொல்லி வைத்திருந்தார். மற்றப் பேச்சாளர்கள் எல்லாம்கூட வந்தாயிற்று; ஆறரை மணிக்குத்தான் மாவடியாப் பிள்ளை ஒரு பெரிய காரில் சில்க் ஜிப்பா மினுமினுக்க விரல்களில் வைரமோதிரங்கள்

மின்ன வந்து இறங்கினார்; எதிர்ப்பட்ட கூழைக் கும்பிடுகளுக்குப் பதில் கும்பிடு போட்டபடி அவர் உள்ளே நுழைந்து தலைவர் ஆசனத்தில் அமர்ந்தார். உடனே கதர் ஜிப்பா அணிந்த ஒல்லியான ஆள் ஒருவன் - அப்போதுதான் முதல் முதலாக மைக்கில் பேசுகிறானோ - என்னவோ மைக்கையே வாயால் கடித்துவிடுவது போல் அவ்வளவு நெருக்கமாக நின்று கொண்டு பேசினான்!

"பொதுமக்களே! நாம் ஆவலோடு எதிர்பார்த்துக் கொண்டிருந்த வள்ளல் மாவடியாப் பிள்ளை அவர்கள் வந்துவிட்டதால் கூட்டம் தொடங்குகிறது" என்று அறிவித்துவிட்டு, "மறைந்த தியாகி கந்தப்பப் பிள்ளைக்கு அஞ்சலி செய்வதற்காக எல்லாருமே இரண்டு நிமிஷம் மௌனமாக எழுந்து நிற்க வேண்டும்" என்று கூட்டத்தினரை நோக்கி வேண்டினான் அவன். உடனே எல்லாரும் எழுந்திருந்து மௌனமாக நின்றார்கள். இரண்டு நிமிஷங்கள் ஆனதும் முதலில் கூட்டத் தலைவர் மாவடியாப் பிள்ளை தம் இருக்கையில் அமர்ந்தார். தொடர்ந்து மற்றவர்களும் அமர்ந்தார்கள். மாவடியாப் பிள்ளையைக் கூட்டத்துக்கு தலைமை வகிக்கச் சொல்லி ஒருவன் முன்மொழிய மற்றொருவன் வழிமொழிந்த பின் கூட்டம் தொடங்கியது. முதலில் பஸ் அதிபர் மாவடியாப் பிள்ளை பேசினார் :

"நண்பர்களே! எனக்குத் துக்கம் தொண்டையை அடைக்கிறது. கந்தப்பப் பிள்ளை சிறநத தேச பக்தர். அவரைப் போன்றவர் இன்னும் சிறிதுகாலம் வாழ என் உயிரையும்கூட நான் அளித்திருப்பேன். என் முன்னேற்றத்தைக் கண்டு பூரித்த பெருமகன் அவர். அவர் ஆசியோடு முன்னேறியவன் நான். அவருக்கு ஒரு நினைவுமண்டபம் கட்ட இதோ இந்த கூட்டத்திலேயே பத்தாயிரம் ரூபாய் நன்கொடையாக அறிவிக்கிறேன்" என்று கூறி அவர் பேச்சை முடித்தார். அதற்குப் பின் பேசிய யாரும் கந்தப்பப் பிள்ளை இறந்தது பற்றி பேசவோ, வருந்தவோ இல்லை. எல்லாருமே பஸ் அதிபர் மாவடியாப் பிள்ளையின் தாராள குணத்தை வியந்தும் அவர்ப் பத்தாயிரம் ரூபாய் தருவதாக அறிவித்ததைப் புகழ்ந்துமே பேசினார்கள். கடைசிப் பேச்சாளர் வரை மாவடியாப் பிள்ளையின் வள்ளல் தன்மையைப் புகழ்ந்து தான் பேசினார்கள். அது கந்தப்பப் பிள்ளை இறந்ததற்காக நடத்தப்பட்ட அனுதாபக் கூட்டம் என்பதைவிட மாவடியாப் பிள்ளையைப் பாராட்ட நடத்தப்பட்ட கூட்டம் என்பது போல நடந்து முடிந்துவிட்டது. கூட்டத்திற்கு வந்திருந்த கந்தப்பப் பிள்ளையின் மகள்கள் இரண்டுபேரும் ஒரு ஓரமாக உட்கார்ந்திருந்து கேட்டுவிட்டு அவசரம் அவசரமாக வீடு திரும்பினார்கள்.

"என்னடி? என்ன பேசினாங்க? பண உதவிக்கு எதினாச்சும் வழி உண்டா? மானமா உங்களைக் கட்டிக் கொடுத்துப் புருசன் வீட்டுக்கு அனுப்ப முடியுமா?" என்று திருமதி கந்தப்பப் பிள்ளை அவர்களைக் கேட்டபோது,

"அங்கே முதல்லே பேசினவரு அப்பா பெயரிலே மண்டபம் கட்டப் பத்தாயிரம் ரூபாய் நன்கொடை தரேன்னு சொன்னாரு. அவ்வளவுதான். அதுக்கப்புறம் பேசினவுங்க யாருமே அப்பாவைப் பற்றி எதுவுமே பேசலை. நன்கொடை தரேன்னு சொன்னவரைப் பத்தித்தான் உசத்தியாப் புகழ்ந்து பேசினாங்க. அப்புறம் கடைசிவரை

அப்பா பேரே வரலை. கூட்டம் முடிஞ்சிட்டுது. புறப்பட்டு வந்துட்டோம்" என்று அவர்களிடமிருந்து தாயை நோக்கிப் பதில் வந்தது.

"குடும்பத்துக்கு உதவி செய்ய நிதி உதவிக்குழு அமைக்கப் போறதா அந்த மாவடியாப் பிள்ளை இங்கே துக்கத்துக்கு வந்தப்பச் சொல்லியிருந்தாரே; அதைப் பற்றி ஒண்ணும் அங்கே பேசினவங்க சொல்லலியா?"

"சொன்னாங்க. 'நிதி உதவி செய்யறதைவிட அவர் பேரும் புகழும் எண்ணைக்கும் நிலைச்சி நிற்கிறமாதிரி ஒரு நினைவு மண்டபம் கட்டிடறதே நிலைத்த சின்னமாக அமையும்'னு வரவேற்புரை கூறினவர் யோசனை கூறினார். அந்த யோசனைப்படியே தலைவர் பேசினார். மற்றவர்களும் அதையே ஆதரிச்சுப் பேசிட்டாங்க. அதுக்கப்புறம் யாரும் குடும்பத்தைப் பத்தியே எதுவும் சொல்லலே."

"குடும்பம் நடுத்தெருவில் நிற்கும்னு நினைச்சாங்களா?"

"என்ன நினைச்சாங்களோ தெரியலை, எல்லாருமா அந்த மாவடியாப் பிள்ளையை இந்திரன் சந்திரன்னு புகழ்ந்தே பேசிக் கூட்டத்தை முடிச்சுப்பிட்டாங்க."

"அப்டீன்னா, இங்கே வா! நான் எழுதறாப்ல அந்த மாவடியாப் பிள்ளைக்கு உடனே ஒரு லெட்டர் எழுது. 'உயர்திரு மாவடியாப் பிள்ளை அவர்கள் சமூகத்துக்கு இறந்த தியாகி கந்தப்பப் பிள்ளையின் மனைவி கோமதியம்மா எழுதுவது. தாங்கள் என் கணவர் பெயரில் கட்ட இருக்கும் நினைவு மண்டபத்துக்கு அஸ்திவாரம் தோண்டியதும் எங்களுக்குத் தகவல் தெரிவித்தால் நானும் என்னுடைய மணமாகாத இரு பெண்களும் அங்கு வருகிறோம். எங்களை உள்ளே தள்ளி மூடிவிட்டு அதன்மேல் நினைவு மண்டபத்துக்கு அஸ்திவாரம் போடுவதுதான் ரொம்பப் பொருத்தமாயிருக்கும். தயவுசெய்து அப்படியே செய்யக் கோருகிறேன்."

"அம்மா! அம்மா! ஏம்மா இவ்வளவு ஆத்திரப்படறே?"

"ஆத்திரப்படாமே என்னடீ செய்யச் சொல்றே? உங்கப்பா தியாகியாகச் சாகாமல் ஒரு தொழிற்சாலைக் கூலியாகச் செத்திருந்தால்கூட பி.எஃப். அது இதுன்னு ரெண்டாயிரம், மூவாயிரம் கைக்கு வரும். தியாகியாகச் செத்ததினாலே அனுதாபக் கூட்டம் போட்டது தவிர வேறென்ன மிச்சம்?" என்று கைகளைச் சொடுக்கினாள் கோமதி ஆச்சி. அவளுடைய கேள்விகளுக்குப் பதில் சொல்லப் பெண்களால் முடியவில்லை. அவர்கள் ஒன்றும் பேசத் தோன்றாமல் கண்கலங்கி நின்றார்கள்.

**(1975-க்கு முன்)**

## 122. பரபரப்பாக ஒரு செய்தி

**சு**ப்புரத்தினம் வேர்க்க விறுவிறுக்க ஓடிவந்தார். ஒன்றுமில்லாத காரியத்துக்காக அப்படி ஓடிவருவதும் அலட்டிக் கொள்வதும் அவருக்கு வழக்கம்தான். சரியான சாமியார்ப் பைத்தியம் அவர்.

"ஒரு நியூஸ் கொடுக்கணும். தபால் இன்னும் அனுப்பலியே?"

"நீர் ஓடிவருகிற லட்சணத்தைப் பார்த்தால் ஏதோ கொலை கொள்ளை மாதிரித் தலைபோற தந்தி நியூஸ் போல அத்தனை பயங்கரமா இருக்கே சுவாமீ...!"

இப்படிச் சொல்லிய நிருபர் சுவாமிநாதன் சிரித்துக் கொண்டே சுப்புரத்தினம் பிள்ளையை வரவேற்றார்.

"அபசாரம்! அபசாரம்! நான் அன்னை பரிசுத்தாதேவியின் பஜனை கோஷ்டி இங்கே முகாம் செய்யப் போறதைப் பற்றி சைவத் திருமுறைக் கழகத்தின் சார்பில் அதன் காரியதரிசி என்கிற முறையில் நியூஸ் குடுக்க வந்தால் நீர் என்னமோ கொலை, கொள்ளை'ன்னு இல்லாத வார்த்தையை எல்லாம் சொல்லி மிரட்டறீரே... ஐயா?"

"உமக்கு அது மிரட்டல், எனக்கு அதுதான் ஐயா நியூஸ். ஸென்சேஷன் இல்லாமே சும்மா இப்படி பஜனை மடத்து நியூஸா அனுப்பி என்ன பிரயோஜனம்? உம்ம பரிசுத்தாதேவியும் அவர் கோஷ்டியும் இந்த ஊருக்கு வராங்கங்கிறது நியூஸே இல்லே. மாசம் பிறந்தா அவங்க தவறாமல் இங்கே வந்து போய்க் கொண்டுதானே இருக்காங்க? இந்த ஊரைப் பொறுத்தவரை அவங்க இங்கே வர்றாங்கங்கிறது நியூஸே இல்லே. வரலேங்கிறதுதான் நியூஸ்! பளீர்னு தந்தி அடிக்கிற மாதிரி ஒரு நியூஸ் இல்லாமே இதெல்லாம் என்னய்யா நியூஸ்?"

"கிண்டல் போதும் சார்! 'இன்னிக்கி டெஸ்பாட்சிலேயே இந்த நியூஸையும் தயவுசெய்து அனுப்பி வச்சிடுங்க..."

"ஆமாம்! தலைபோகிற சமாசாரம் பாருங்க... இதை இன்னிக்கி டெஸ்பாட்சிலேயே அனுப்பலேன்னாக் குடி முழுகிப் போயிடும்!..."

"தயவுசெய்து 'அன்னையார்' விஷயத்திலே மட்டும் இப்படிச் பேசாதீங்க. இந்த யுகத்திலே பரிபூரணமான தெய்வப்பிறவி அவங்க. முழுமையடைந்த மனித அவதாரம்..."

"அதெல்லாம் சரிதான்! நல்லாப் பாடறாங்க. அவங்களும் அவங்க கோஷ்டியைச் சேர்ந்த மற்றப் பெண்களும் தூய வெள்ளை மல் புடவை அணிந்து பரிசுத்தமாக எதிரே வந்து நிற்கும்போது சாட்சாத் சரஸ்வதியே வந்து நிற்கிற மாதிரி இருக்கு..."

"அது மட்டுமா? வேற்று மதத்தவரான நம்ம ஊர் சுலைமான் சேட்கூட அவங்க பஜனையின்னா - திருமுறைக் கழகத்தைத் தேடி வந்து இடுப்பிலே வேஷ்டியைக் கட்டிக்கிட்டுப் பயபக்தியோட நிற்கிறாரு. அன்னை பரிசுத்தாதேவி கொடுத்தால் விபூதி குங்குமத்தைக்கூட மறுக்க முடியாமே வாங்கிப் பூசிக்கிறாரு. அவங்க ஒவ்வொரு தடவை வர்றப்பவும் தன் வீட்டுக்கு அழைச்சு சைவ உணவு வகைகளோட அவங்களுக்கு விருந்து வைக்கிறாரு..."

"சுலைமானுக்கு அன்னையார் மேல் அபார பக்தி. சுலைமான் ஒரு முழு மனிதர். அவரைப்போல் தர்மசிந்தனையாளர் வேறு ஒருவரைக் காண முடியாது" என்று அன்னையார் அடிக்கடி சுலைமானைப் புகழ்வார். சுலைமான் சேட்டோ அன்னையார் பேரைக் கேட்டதுமே கண்களிலே நீர் மல்கி கருணைப் பெருக்குடனே, "அவங்க ஒரு பரித்தமான ஆத்மா! முழுமையான மனித தெய்வம்"னு கைகூப்பறாரு..."

"சுலைமான் சேட்டு ஒருத்தர் மட்டுமில்லை, இந்த ஊரிலே எல்லாருமே அன்னையாரைக் கண்கண்ட தெய்வமா நினைக்கிறாங்க..."

"ஆனால், கருவாட்டு வியாபாரமும், உப்பளங்களும் தவிர வேறு எதுவுமே இல்லாத இந்தச் சமுத்திரக் கரையோரத்துக் கிராமத்துக்கு மட்டுமே அன்னையார் ஏன் திரும்பத் திரும்ப வந்து முகாம் செய்யணும்கிறதுதான் எனக்குப் புரியலே. பல ஊர்களுக்கு முகாம் செய்து பக்தியைப் பரப்ப வேண்டியவங்க இங்கே மட்டுமே வந்துக்கிட்டிருந்தா மற்ற ஊர்களுக்கு அந்த அருள்மழை எப்போதுதான் பெய்யறதாம்?"

"நீங்க, கேட்கிறது நியாயம்தான் நிருபர் சார்! ஆனால், அன்னையார் இந்த ஊரில் மட்டுமே ஏதோ விசேஷ ஆன்மிக அமைதியைக் காண்கிறார். இவ்வூர் மக்களின் மேல் அவர் அளவற்ற அன்பும் அருளும் காட்டுகிறார்...!"

சுப்புரத்தினம் பிள்ளையின் விளக்கம் திருப்தி அளிக்காவிட்டாலும் நியூஸை வாங்கி அன்று அனுப்ப இருந்த டெஸ்பாட்ச்சில் சேர்த்தார் நிருபர்.

அலைக்கரைப்பட்டி அப்படி ஒன்றும் பெரிய கிராமமில்லை. தமிழ்நாட்டின் கிழக்குக் கடற்கரை ஓரமாயிருந்த வறண்ட ஜில்லா ஒன்றின் கடற்கரை ஓரத்துக் கிராமம் அது. சுலைமான் சேட்தான் கிராமத்தில் பெரிய மீன் வியாபாரி. தேங்காய் வியாபாரமும் உண்டு. அதைத் தவிர மொத்தம் இருபது பெரிய முஸ்லீம் குடும்பங்கள். பத்துப் பதினைந்து இந்துக் குடும்பங்கள் அடங்கிய சிறு கடலோரத்துக் கிராமம்தான் அலைக்கரைப்பட்டி.

இந்தக் கிராமத்தில் இருந்த பதினைந்து சைவவேளாளர் குடும்பங்களும் மிகுந்த சமயப்பற்றுள்ளவை. அவர்கள் ஒன்று சேர்ந்துதான் 'சைவத்திருமுறைக் கழகம்' என்று ஒரு சங்கம் வைத்திருந்தனர். சுப்புரத்தினம் பிள்ளைதான் அதன் நிரந்தரக் காரியதரிசி. கடற்கரை ஓரத்தில் சுலைமான் சேட்டுடைய தென்னந்தோப்பு இரண்டு மைல் நீளம் கடலுக்கு வேலி எடுத்தது போல் அமைந்திருந்தது. இந்தத் தென்னந்தோப்பிற்கும்

ஊர்ப் பஞ்சாயத்துப் போர்டு கட்டிடத்திற்கும் நடுவே கிராமத்தில் ஒரு முருகன் கோவில் அமைந்திருந்தது. அந்த முருகன் கோவில் கட்டிடத்தின் முகப்பான தகரக் கொட்டகைதான் திருமுறைக் கழகத்தின் நிகழ்ச்சிகள் நடைபெறுகிற அரங்கமாகப் பயன்பட்டு வந்தது. சைவவேளாளர் மகமை வசூல் பணத்திலிருந்து கோவில் நடந்து வந்தது. திருமுறைக் கழகக் காரியதரிசி சுப்புரத்தினம்தான் இதற்கும் தர்மகர்த்தாவாக இருந்து வந்தார்.

கோவிலுக்கு வடக்கே, பஞ்சாயத்து போர்டு கட்டிடத்திற்கு மேற்கே இரண்டு பர்லாங் தூரத்தில் பெரிய மசூதி. கிராமத்தின் மிகப் பெரிய செல்வந்தர்கள் எல்லாம் முஸ்லீம்களாக இருந்ததனால் மசூதி பெரிதாகவும் அழகாகவும் நன்றாகவும் புதுப்பித்துக் கட்டப்பட்டிருந்தது.

அலைக்கரைப்பட்டி கிராமத்தில் யாரும் பிரசாரம் செய்யாமலே மதச்சார்பற்ற மனப்பான்மை நெடுங்காலமாக இருந்தது. சுலைமான் சேட் முருகன் கோவிலுக்கு வந்து அருள்பாடல்களைக் கேட்டு உருகுவதோ, இந்துக்கள் மசூதி வாயிலில் உள்ள மௌல்வியிடம் பயந்த குழந்தைகளுக்கு மந்திரித்துக் கொண்டு வருவதோ அங்கு மிகவும் சகஜமாக நடந்து கொண்டிருந்தன. ஒவ்வொரு பௌர்ணமியிலும் அலைக்கரைப்பட்டி முருகன் கோவில் அன்னை பரிசுத்தாதேவி குழுவினரின் பக்திப் பாடல்கள் ஒலிப்பது என்னும் வழக்கம் கடந்த சில ஆண்டுகளாகவே சகஜமான நிகழ்ச்சியாகி இருந்தது. சுலைமேன் சேட் இந்த அருள் இசைக் கச்சேரிகளுக்கு மிகவும் உதவி புரிந்ததைக் கொண்டாடாத இந்துக்கள் உள்ளூரில் இல்லை. அருளரசி அன்னை பரிசுத்தாதேவியின் வயதை யாராலும் கணிக்க முடியாமலிருந்தது. அவர் பதினெட்டு வயதுக் குமரி போல் இளமையாயிருந்தார். ஆனால், அவருடைய முகபாவத்தில் முதிர்ந்த ஞானப்பக்குவம் தெரிந்தது. நல்ல உயரமும் மயக்கக்கூடிய அழகும் உள்ள கட்டுடலோடு அவர் வெள்ளை நிற அழகில் துளசி மணிமாலை மின்னக் கையில் தம்புராவுடன் பாட வரும்போது சாட்சாத் மீரா தேவியே எதிரில் வந்து நிற்பது போல் இருக்கும். அவருடைய கோஷ்டியில் மொத்தம் அவரைத் தவிர பதினோரு பெண்கள். எல்லாருமே அதிரூப சுந்தரிகள். ஆனால், வெள்ளை மல் புடவை, துளசி மணி மாலை, காவியேறாத முத்துப் பற்கள்; ஒளி வீசும் துறவுக் கோலத்தில் எளிமையாகவே அனைவரும் விளங்கினர். அவர்களில் இருவர் சுருதிப் பெட்டி, ஒருவர் ஆர்மோனியம், இருவர் மிருதங்கம், இருவர் வீணை, இருவர் தபேலா, இருவர் ஃபிடில் என்று வாத்தியங்களுடன் தோன்றி உடன் பாடினர். அவர்களுடைய குரலினிமையும், பக்திப் பாடல்களும் அனைவரையுமே பரவசப்படுத்தின. ஒவ்வொரு முறையும் அருளரசி அன்னை பரிசுத்தாதேவி குழுவினர் அலைக்கரைப்பட்டியை அடைவதற்காகச் சென்னையிலிருந்து புறப்பட்டுப் பக்கத்து நகரத்துக்கு ரயில் மார்க்கமாகவோ விமான மூலமாகவோ வந்து சேருவதற்கும், அங்கிருந்து கிராமத்திற்கு வருவதற்கும் சுலைமான் சேட் நிறைய சிரமம் எடுத்துக் கொண்டார்.

பக்கத்து நகரத்துக்குப் போய் அவர்களை அழைத்துவர அவருடைய சவர்லெட் இம்பாலா கார் ஒன்றும், மெர்ஸிடீஸ் பென்ஸ் கார் ஒன்றும் பறக்கும். பெட்ரோல்

விலை பயங்கரமாக ஏறியிருக்கும் இந்தக் காலத்திலும் அன்னையாரையும் அவர் குழுவினரையும், அழைத்து வரவும் கொண்டு போய் விடவும், அதே பெரிய கார்களையே சுலைமான் சேட் தொடர்ந்து கொடுத்து வந்ததை அவருடைய பெருந்தன்மை என்று கொண்டாடிப் புகழ்ந்தது ஊர்.

"நம்பளுக்கு ஆண்டவன் கொடுக்கிறான். நம்பள் நல்ல காரியங்களுக்கும் நல்லவங்களுக்கும் கைநிறையக் கொடுக்கிறோம்" என்று சுலைமான் சேட் அடர்ந்த தாடியினிடையே வெற்றிலைக் காவியேறிய பற்கள் தெரியச் சிரித்தபடி அடிக்கடி சொல்லுவார்.

சுலைமான் சேட்டின் பெருமுயற்சியால் அலைக்கரைப்பட்டிக்கும் அதன் சுற்றுப்புறத்துக் கடற்கரை ஊர்கள் சிலவற்றுக்குமாக அலைக்கரைப்பட்டியில் ஒரு தந்தி ஆபீஸ் வந்திருந்தது. சுலைமான்சேட் போன்ற பெரிய வர்த்தகர்களுக்கு அங்கே அவசரமான துரிதச் செய்திப் போக்குவரத்துக்காகத் தந்தி அலுவலகம் வந்தது மிகவும் வசதியாயிருந்தது.

ஆனால், தந்தி அலுவலகம் வந்து பல ஆண்டுகள் ஆகியும் அதைப் பயன்படுத்திக் கொள்ள முடியவில்லையே என வருந்தும் ஓர் ஆத்மா அந்தக் கிராமத்தில் உண்டு என்றால் அதுதான் நிருபர் சாமிநாதன். பக்கத்து நகரத்திலிருந்து வெளி வரும் தினசரிகள், தலைநகர் சென்னையிலிருந்து வெளிவரும் தினசரிகள் எல்லாவற்றுக்கும் அந்த வட்டாரத்து நிருபர் அவர்தான்.

தபால் தந்தி டெலிபோன் கட்டணங்கள் மானாவாரியாக உயர்ந்துவிட்ட பின் பல தினசரிகள் தங்களுடைய நிருபர்களுக்கு ஒரு சுற்றறிக்கை அனுப்பிச் சாதாரணமான - அதிமுக்கியமில்லாத எந்தச் செய்தியையும் டெலிபோனிலோ, தந்தியிலோ அனுப்பினால் அதற்கான செலவை நிச்சயமாகக் காரியாலயம் அனுமதிக்காது என்றும், சாதாரணச் செய்திகளைச் சாதாரணத் தபாலில் அனுப்பினால் போதும் என்றும் அறிவித்துவிட்டன. அந்தச் சுற்றறிக்கையிலேயே எந்தச் செய்தியை டெலிபோனிலோ, தந்தியிலோ அனுப்பலாம் என்பதற்கும் முன்மாதிரியான சில செய்திகளும் தந்திருந்தார்கள். அந்த மாதிரியான ஒரு செய்தி அங்கே ஆறாண்டுகளில் ஒரே ஒருமுறைதான் கிடைத்தது. ஆனால், துரதிர்ஷ்டவசமாக அதைத் தந்தியிலோ டெலிபோனிலோ அனுப்ப முடியாமல் போய்விட்டது. அதாவது அக்டோபர், நவம்பர், டிசம்பர் - அடை மழைப்புயல் காலங்களில் கடல் கொந்தளிக்கும். அத்தகைய ஒரு ஸீஸனில் ஒருமுறை கடல் கொந்தளிப்பு அதிகமாகிக் கடலுக்குள் முதல் நாளிரவு மீன் பிடிக்கப் போயிருந்த இருபத்தைந்து செம்படவர்கள் மாண்டுபோக நேரிட்டுவிட்டது. ஊருக்குள் புயல் கொந்தளிப்பில் தந்தி - டெலிபோன் போக்குவரத்தும் சில நாட்கள் துண்டிக்கப்பட்டுப் போனதால் அந்த அதிமுக்கிய நியூஸை அலைக்கரைப்பட்டி கிராமத்திலிருந்து நிருபர் சாமிநாதன் தந்திமூலம் அனுப்ப முடியாமலே போய்விட்டது. பக்கத்து நகரத்திலிருந்து கலெக்டர் வெளியிட்ட புயல்சேதம் பற்றிய அறிக்கை நிருபரை முந்திக் கொண்டது. கலெக்டரின் அறிக்கை வெளியான மறுநிமிஷமே அதிமுக்கியமான அந்த நியூஸ் பழசாகிவிட்டது.

நிருபர் சாமிநாதனுக்கு அதில் மிகப்பெரிய ஏமாற்றம். அடித்த புயல் தந்திக் கம்பங்களை மட்டும் விட்டுவிட்டு அடித்திருக்கக்கூடாதோ என்று ஏங்கி வருத்தப்பட்டார் நிருபர் சாமிநாதன். நிருபர் வேலையே சலிப்பாக இருந்தது அவருக்கு. "தந்தி அடிக்கிற மாதிரியோ, டெலிபோன் பண்ணுகிற மாதிரியோ தினசரியின் முதல் பக்கத்திலே ஹெட்லைன் எட்டுக்காலம் தலைப்புப் போடுகிற மாதிரியோ அஞ்சாறு வருஷத்திலே ஒரு தடவைகூட இங்கே இருந்து ஒரு நியூஸ் அனுப்ப முடியாமல் இது என்ன நிருபர் வேலை வேண்டிக் கிடக்கிறது?" என்று நண்பர்களிடமும் தெரிந்தவர்களிடமும், பிரமுகர்களிடமும் நிருபர் சாமிநாதன் அடிக்கடி அலுத்துக் கொள்வது ஒரு வழக்கமாகவே ஆகிவிட்டது.

"நிருபர் பதவிங்கிறது எங்கேயும் எப்போதும் நுழையறதுக்கு ஒரு பாஸ்போர்ட் மாதிரி! அதனால்தான் இதை வச்சிட்டிருக்கேன். நீர் என்னடான்னா மாதந்தவறாமே 'அருளரசி அன்னை பரிசுத்தாதேவி குழுவினர் அலைக்கரைப்பட்டி விஜயம்'னு அவங்க வர்ரப்ப ஒரே தலைப்பிலே ஒரே விஷயத்தைக் கடந்த பல வருஷமாக் கொடுத்துக்கிட்டிருக்கீரு! அவங்க ஊர் திரும்பினதுமோ, 'அலைக்கரைப் பட்டியிலிருந்து அருளரசி தேவியார் ஊர் திரும்பினார்'னும் ஒரு பழைய பல்லவிதான். எப்பத்தான் அருளரசி பரிசுத்தாதேவி அலைக்கரைப்பட்டிக்கு வரவில்லை என்றோ, வந்தபின் ஊர் திரும்பவில்லையென்றோ ஒரு நியூஸ் தரப் போறீரு?" என்று சாமிநாதன் சைவத் திருமுறைக் கழகக் காரியதரிசி சுப்புரத்தினம் பிள்ளையிடம் கேலி செய்து பேசும்போது, "அபசாரம்! அபசாரம்! அந்த மாதிரி நியூஸ் எல்லாம் என் கையிலேருந்து உமக்கு என்னிக்குமே கிடைக்காது" என்று சுப்புரத்தினம் பிள்ளை சிரித்துக் கொண்டே பதில் சொல்லிவிட்டுப் போவார்.

1974ம் வருஷம் அக்டோபர் மாதத்தில் சுப்புரத்தினம் பிள்ளை நிருபர் சாமிநாதனைச் சந்தித்து, "நிருபர் சார்! இந்த மாசம் புதுமையா எல்லாம் ஏற்பாடாகி இருக்கு. அருள் அரசியார் வழக்கத்துக்கு மாறாக ஒரு வாரம் இங்கே தங்கறாங்க. அப்புறம் திரும்பறப்போ கார்லே போகாமல் அவங்க கோஷ்டியோட பாதயாத்திரையாகவே திரும்பறாங்க. போற வழியில் ஒவ்வொரு கிராமத்திலும் அருளிசை முழக்கமும் உண்டு!" என்றார்.

"இந்த நியூஸ்லே என்னய்யா புதுமை இருக்கு? ஒருநாள் தங்கறவங்க இங்கே ஒரு வாரம் தங்கறாங்க. காரிலே திரும்பறவங்க பாதயாத்திரையாக நடந்து போகப் போறாங்க."

"அதுதான் புதுமை சார்!"

"சரி! நியூஸை அனுப்பி வைக்கிறேன். போங்க! இந்த பஜனை நியூஸ்கூட இல்லாட்டி நான் அனுப்புறத்துக்குத்தான் இங்கே வேறே என்ன இருக்கு? போடறதும் போடாததும் அவங்க இஷ்டம் -

* * *

ஒரு வாரம் கழிந்தது. அருளரசி அன்னை பரிசுத்தாதேவியார் குழுவினருடன் அலைக்கரைப்பட்டியில் நிகழ்ச்சிகளை முடித்துக் கொண்டு பாதயாத்திரையாகத் திரும்பப் புறப்பட்டுவிட்டார். பகல் முழுவதும் கிராமங்களில் தங்கல், இரவில் குழுவினருடன் நடை என்று அவர்கள் பாத யாத்திரைத் திட்டம் வகுக்கப்பட்டிருந்தது. ஏழு நாட்கள் முடிந்த பின் அன்னை பரிசுத்தாதேவி குழுவினர் அலைக்கரைப்பட்டியை விட்டுப் புறப்பட்ட மூன்றாம் நாளோ நான்காம் நாளோ இரவு பதினொன்றரை மணிக்கு அவசர அவசரமாக இரு எக்ஸைஸ் இலாகா இன்ஸ்பெக்டர்கள் ஜீப்பில் தேடிவந்து திண்ணையில் தூங்கிக் கொண்டிருந்த நிருபர் சாமிநாதனை எழுப்பினார்கள். தங்கள் ஐடெண்டி கார்டுகளைக் காண்பித்தார்கள். ஒரு முக்கியமான நியூஸை விரிவாக எழுதித் தினசரிகளுக்குத் தந்தி மூலம் தெரிவிக்க வேண்டியிருப்பதால் தங்களோடு ஜீப்பில் வர வேண்டும் என்று சாமிநாதனை உடனே அழைத்தார்கள். சாமிநாதன் உற்சாகமாகப் புறப்பட்டார்.

அப்புறம் விடியற்காலை மூன்று மணிக்கு அவர்களே சாமிநாதனை அலைக்கரைப்பட்டி தபால் தந்தி அலுவலகத்தில் இறக்கிவிட்டார்கள்.

“இந்த நேரத்தில் தந்தி வாங்கமாட்டாங்களே சார்...?” என்றார் சாமிநாதன்.

“இதெல்லாம் இன்னிக்கி மட்டும் வாங்குவாங்க. ஸ்பெஷல் ஏற்பாடு இருக்கு. உள்ளே வாங்க. போஸ்ட்மாஸ்டரை எழுப்பி நான் சொல்றேன்” என்று எக்ஸைஸ் இலாகா உயர் அதிகாரியும், இன்ஸ்பெக்டரும் சாமிநாதனை உள்ளே அழைத்துப் போய் போஸ்ட்மாஸ்டரை எழுப்பி ஏற்பாடு செய்து கொடுத்தார்கள். தந்தியைக் கொடுத்துவிட்டு ‘டீடயில்டு வெர்ஷன் பாலோஸ்’ என்றும் போட்டுவிட்டு வீடு திரும்பினார் சாமிநாதன். வீடு திரும்பியதும் உடனே தாம் நேரில் பார்த்ததை வைத்து ‘ஸ்டோரி பில்ட் அப்’ பண்ணித் தலைப்புக் கொடுத்து எழுதி முடித்தபோது கிழக்கு வெளுத்து விடிந்துவிட்டது. இதுபோல ஒரு பரபரப்பான நியூஸை அவர் தமது நிருபர் வாழ்விலேயே கண்டதில்லை. எழுதி முடித்த சாமிநாதன் சோம்பல் முறித்தபடி கொட்டாவியோடு திண்ணையிலிருந்து எழுந்திருந்தபோது,

“நிருபர்வாள்! ஒரு முக்கியமான செய்தி! உடனே பத்திரிகைக்கு அனுப்பணும். பாதயாத்திரையில் அருளரசியாருக்கு விவரம் புரியாத சில விஷமிகளால் இடையூறு நேர்ந்துவிட்டது. இன்னியிலிருந்து அதைக் கண்டிச்சு அன்னையார் மௌனவிரதம் இருக்காங்க...” என்று சுப்புரத்தினம் பிள்ளை பரபரப்பாகக் கூறியபடி வேர்க்க விறுவிறுக்க வந்தார். சாமிநாதன் அவர்மேல் எரிந்து விழுந்தார்.

“இந்தாங்க பிள்ளைவாள்! அன்னையாராவது புண்ணாக்காவது? உம்ம நியூஸை உடைப்பிலே கொண்டுபோய்ப் போடும். இப்போ இன்னும் ஒரு வாரத்துக்கு எனக்கு நியூஸ் இருக்கு, ஏன்? இந்தக் கிராமமே இனிமே நியூஸ் மயம்தான்!”

“என்ன சொல்றீங்க? புரியலியே?”

“புரியாட்டி இதோ இதைப் படியுங்க...”

*"பாதயாத்திரை என்ற பெயரில் தங்கம் கடத்திய பெண்கள் அலைக்கரைப்பட்டி வட்டாரத்தில் சுலைமான் சேட் கைது! அருளரசி பரிசுத்தாதேவியும் அவர் குழுவினரும் பாதுகாப்பில் வைக்கப்பட்டுள்ளனர். எக்ஸைஸ் இன்ஸ்பெக்டர்கள், ராகவன், வீரமணி இருவரும் தங்கள் குழுவினருடன் நேற்று நள்ளிரவு பன்னிரண்டு மணிக்கு அலைக்கரைப்பட்டிக்கும் மதுரைக்கும் நடுவே 'பாதயாத்திரை' செய்து கொண்டிருந்த அருளிசைக் கோஷ்டி என்ற பெயரிலான இரகசியக் கடத்தல் குழுவினரிடம் வீணை, தம்புரா, மிருதங்கம், ஆர்மோனியம், சுருதிப் பெட்டிகளில் ஒளித்து வைக்கப்பட்டிருந்த பல லட்சம் பெறுமானமுள்ள தங்கத்தைப் பிடித்தனர். அருளரசி பரிசுத்தாதேவியின் முகமூடி கிழிப்பட்டது. இவர் ஏற்கனவே பம்பாயில் எட்டாண்டுகளுக்கு முன் வைரக் கடத்தலில் பிடிபட்ட ஆயிஷாதேவி தான் என்ற உண்மையும் வெளிப்பட்டது. இவரையும், இவர் குழுவினரையும் பயன்படுத்தித் திருமுறைக் கழகம் என்ற பஜனை மடத்தில் பாடச் செய்வது போல் ஏற்பாடு செய்து ஒவ்வொரு மாதமும் வழக்கமாக இந்தத் தங்கக் கடத்தலை நடத்தியவர் அலைக்கரைப் பட்டி சுலைமான் சேட் என்பது கண்டுபிடிக்கப்பட்டது. அலைக்கரைப்பட்டி வட்டாரத்தில் இச்செய்தி பெரும் பரபரப்பை ஏற்படுத்தி உள்ளது. மேலும் பல கடத்தல்காரர்கள் பிடிபடலாம் என்று அதிகாரிகள் நம்பகமாகக் கூறுகிறார்கள்" என எழுதி 'ஸ்டோரி ஃபாலோஸ்' என்பதாக மேலும் தொடர்வதாகச் சொல்லி முடித்திருந்தார் நிருபர் சாமிநாதன். சுப்புரத்தினம் பிள்ளை இதைப் படித்ததும், "என்ன பிள்ளைவாள்! நம்ப முடியுதா? இல்லியா?" என்று சாமிநாதன் அவரைக் கேட்டார்.*

"வேறென்ன செய்யிறது? நம்பத்தான் முடியுது! நீங்க ரொம்ப நாளா இந்த ஊர்லேருந்து ஸென்ஸேஷனலா நியூஸ் எதுவும் கிடைக்கலேன்னு வருத்தப்பட்டீங்க. இப்பக் கிடைச்சிருக்கு. இனிமேலும் தொடர்ந்து கிடைக்கும்னு தோணுது. இந்த நல்ல வேளையிலே எனக்கொரு சின்ன உபகாரம் மட்டும் நீங்க பண்ணனும்?"

*"என்னது? என்ன உபகாரம்?"*

"இந்த நியூஸ்ல 'திருமுறைக் கழகம்'னு எங்க சங்கத்தோட பேர் வருது. தயவுசெய்து அந்த இடத்திலே 'இவர் குழுவினரைப் பயன்படுத்திப் பஜனை மண்டபத்தில் பாடச் செய்வதுபோல்'னு மட்டும் போட்டுக்குங்க... திருமுறைக்கழகம் ஒரு பாவமும் செய்யலை. அநாவசியமா அதும் பேரை இதிலே இழுக்காதீங்க..."

*"அதெப்படி முடியும்?"*

"நீங்க மனசு வெச்சா முடியும் நிருபர்வாள்!"

*நிருபர் சாமிநாதன் தாம் எழுதி வைத்திருந்த செய்தியை எடுத்துத் 'திருமுறைக் கழகம்' என்ற பெயர் வந்த இடத்தில் அதை அடித்துவிட்டு, 'இவரையும் இவர் குழுவினரையும் பயன்படுத்திச் சுலைமான் சேட் தனது தென்னந்தோப்புக்கு அருகிலுள்ள ஒரு தகரக் கொட்டகையில் பஜனை பாடச் செய்வதுபோல நடிக்கச் செய்து' என்று திருத்தியபின் மீண்டும் அதைப் பிள்ளைவாளிடம் காண்பித்தார்.*

இப்போது பிள்ளை திருப்தியோடு புன்னகை பூத்தார். உடனே நிருபர் சாமிநாதன், “நீர் எதோ ஒரு ஃபிராட் நியூஸ் சொல்ல வந்தீரே? அதை யார் சொல்லி அனுப்பிச்சாங்க?”

“அதுவா? அது பொய்யாயிருக்கணும். சுலைமானோட மாமன் ‘ஃபார்ச்சூன் பகுருதீன்’ சொன்னான்; அதை நம்பாதீங்க...”

சாமிநாதன் தந்தி ஆபீசுக்கு ஓடினார். எக்ஸைஸ் அதிகாரிகளுக்கு மிகுதியான கடத்தல் தங்கத்தைக் கண்டுபிடித்துவிட்ட மகிழ்ச்சியைவிட அலைக்கரைப்பட்டி வட்டார நிருபர் சாமிநாதனுக்குத் தம் வாழ்நாளில் ஸென்சேஷனலாக எட்டுக் காலம் தலைப்புக்குரிய ஒரு முழு நியூஸ் கிடைத்ததில் ஏற்பட்ட மகிழ்ச்சிதான் மிகவும் அதிகமாயிருந்தது என்று சொல்ல வேண்டும்.

(1975-க்கு முன்)



## 123. ஒரு கதாபாத்திரம்

மளிகைக் கடை விநாயகம் பிள்ளையைத் தெரியாதவர்கள் எங்களூரில் அநேகமாக இல்லை. அதாவது இருக்க முடியாது; இருக்கவும் கூடாது. அவரை ஒரு சாதாரண மனிதர் என்று சொல்வதைவிட அவரே ஒரு தத்துவம் என்று சொல்வதுதான் ஏற்கும். சென்ற பன்னிரண்டு ஆண்டுகளாக அல்லது அப்பட்டமான வியாபார மொழியில் சொல்வதாயிருந்தால் ஒரு 'டசன்' வருடங்களாக வியாபாரம் என்கிற தத்துவத்துக்கு ஒரு நிலையான அத்தாட்சியாக வீற்றிருப்பவர் போல் அந்தக் கல்லாப் பெட்டியை இழுத்து மூடித் திறந்து கொண்டிருக்கிறார் அவர்.

"என்ன அண்ணாச்சி? சீனாக்காரன் இப்படி இமயமலை எல்லையிலே வந்து கழுத்தை நெரிச்சிக்கிடுருக்குதானே?" என்று கடைக்கு வருகிற வாடிக்கைக்காரர் யாராவது பேச்சை ஆரம்பித்து வைப்பார்.

"ஆமாம் வேய்! சவத்துப் பய இப்பிடிச் செய்வான்னு தெரிஞ்சிருந்தாக் கர்ப்பூரம் நிறைய வாங்கி ஸ்டாக் முடக்கியிருக்கலாம். பார்த்துக்கிட்டே இரியும். இன்னும் கொஞ்ச நாளானப் பெறவு கர்ப்பூரம் கிடைக்காமல் நம்மூர்ச் செங்கழு நீர்ப் பிள்ளையாரிலிருந்து தீர்த்தபுரிசுவரப் பெருமான் வரை எல்லாச் சாமிகளும் இருட்டிலே திக்குமுக்காடப் போறாக..." என்று சீன ஆக்கிரமிப்பைக்கூடத் தம்முடைய மளிகைக் கடைக் கல்லாப் பெட்டியிலிருந்து எந்தக் கோணத்தில் பார்க்க முடியுமோ அந்தக் கோணத்தில் பார்த்து அபிப்பிராயம் சொல்வார் விநாயகம் பிள்ளை. விநாயகம் பிள்ளை மிகவும் அழுத்தமான பேர்வழி. ஒரு பிரச்னை யார் யாரைப் பாதிக்கிறதோ அப்படிப் பாதிக்கிற அத்தனை பேருடைய கோணங்களிலிருந்தும் பார்த்து அந்தப் பிரச்னையைப் பற்றிக் கவலைப்பட அவருக்குத் தெரியாது. கவலைப் படுவதைக்கூடச் சிக்கனமாகவும், அவசியத்தைத் தவிர்க்க முடியாமலும் செய்கிறவர் அவர்.

"அட நீரொருத்தர்... வேலையற்றுப் போய்க் கண்ட கண்ட விஷயத்துக்கெல்லாம் கவலைப்படலாமா? நாற்பது ரூபாய் வருமானமுள்ள காரியத்துக்கு இருபது ரூபாய்ப் பெறுமானத்துக்கு மேலே கவலைப்படப்பிடாது. உங்க கவலை இருக்கே; அதுக்குக்கூட ஒரு பொருளாதார மதிப்பீடு இருக்கணும் வேய்...! நாம் கவலைப்படற பிரச்சினையாலே நமக்கு நஷ்டமிருந்தாலொழியக் கவலைப்படறதை விட்டுடணும்... என்ன? புரியுதா நான் சொல்லற 'பாயிண்ட்'?..." கடுகு மிளகு விற்காத நேரத்தில் மளிகைக் கடையிலிருந்து சாமர்த்தியத்தை விற்று விளம்பரம் செய்து கொண்டிருப்பார் விநாயகம் பிள்ளை. உயர்திருவாளர் விநாயகம்பிள்ளை அவர்களிடம் பொடி போடுவதைத் தவிர வேறு எந்தவிதமான கெட்டப் பழக்கமும் (பொடி போடுவது ஒரு கெட்ட பழக்கமாக இருக்குமானால்) கிடையாது. அந்தத்

தேவையைக்கூட அவர் கவலைப்பட்டோ சிரமப்பட்டோ நிறைவேற்றிக் கொள்வதில்லை. 'பாலமுருகன் மளிகை ஸ்டோர்ஸி'ல் (விநாயகம் பிள்ளையின் கடை) லாகிரி வஸ்துக்களான பொடி, புகையிலை, சிகரெட், பீடி ஆகியவற்றை விற்பதில்லையானாலும் கடைப்பக்கம் வந்து போகிறவர்களில் யார் யார் பொடி போடுகிறவர்கள் என்பது விநாயகம் பிள்ளையவர்களுக்கு மனப்பாடம். அவருக்குப் பொடி போடத் தோன்றும் வேளையில் சரியாகச் சொல்லி வைத்து வரச் சொல்லியிருந்தது போல் யாராவது வந்து சேருவார்கள். பிறருடைய வரவிலிருந்து அவருடைய தேவைகள் நிறைவேறிவிடும்.

"அண்ணாச்சி! கொஞ்சம் மட்டையை இந்தப் பக்கம் நீட்டுதியளா..." என்று இரவல் கேட்பதையே நிர்ப்பயமாகவும் சுதந்திரமாகவும் கேட்டு நிறைவேற்றிக் கொள்வார் விநாயகம் பிள்ளை. பிறருடைய நஷ்டத்தைப் பற்றி அவர் எப்போதுமே அதிகமாகக் கவலைப்பட்டதில்லை. விநாயகம்பிள்ளையின் வியாபாரத் தத்துவங்களில் அதுவும் ஒன்று. "வியாபாரியாக இருக்கப்பட்டவன் தன்னுடைய நஷ்டத்துக்கு மட்டுமேதான் கவலைப்பட வேண்டுமே ஒழியப் பிறருடைய நஷ்டத்துக்காகச் சிறிதும் கவலைப்படக்கூடாது" என்பது அவரே அடிக்கடி சொல்லுகிற வாக்கியம். அந்த வாக்கியத்தை அவர் சொல்கிறபடியே ஒரு வார்த்தைகூட நஷ்டப்படாமல் இங்கே எழுதியிருக்கிறேன்.

உயர்திரு விநாயகம் பிள்ளையவர்களின் 'பாலமுருகன் மளிகை ஸ்டோர்ஸில்' உபதேசத்தைத் தவிர எல்லாப் பண்டங்களும் ரொக்க வியாபாரம்தான். 'இன்று ரொக்கம் நாளைக் கடன்' என்று சில வியாபாரிகள் போர்டு மாட்டியிருப்பதுபோல் விநாயகம் பிள்ளையவர்களின் கடையில் எந்த விதமான போர்டும் வாடிக்கைக் காரர்களை மிரட்டிக் கொண்டு தொங்காது. காரணம், திருவாளர் விநாயகம் பிள்ளையே அவருடைய கடைக்கு ஒரு நிரந்தரமான போர்டு மாதிரி. அங்கே கிடைப்பவை, கிடைக்காதவை விலை, பேரம் எல்லாம் அவருடைய முகத்திலும் கண்களிலும் தெளிவாக எழுதப்பட்டாற்போலத் தெரிந்து கொண்டிருக்கும். போர்டுகளில் இல்லாத - இருக்க முடியாத கறார் - கண்டிப்பு உணர்ச்சியும் அதிகப்படியான தகுதியாக அந்த முகத்தில் இருக்கும். போர்டுக்கும், அவருக்கும் இது ஒரு வித்தியாசம்.

திருவாளர் விநாயகம் பிள்ளைக்குத் தானதருமங்களில் அவ்வளவாக நம்பிக்கை கிடையாது. அப்படியே நம்பிக்கை இருந்தாலும் அதை வெறும் நம்பிக்கையாக மட்டும் வைத்துக் கொள்வதில் அவருக்கு எந்தவிதமான ஆட்சேபணையும் கிடையாது. செயலாக ஆக்கிக் கொள்வதற்கு மட்டும் அவருக்கு அவகாசம் இல்லை.

"நான் சொல்ல வர்ரது என்னான்னு கேட்டுக்கிடுங்க... அதுவும் பெறவு நீங்க சொல்லறதைத் தாராளமாகச் சொல்லலாம். என்னைப்போல வியாபாரியா இருக்கிறவங்களுக்கு வியாபாரத்தைச் செம்மையாய்ச் செய்துக்கிட்டிருக்கிறதே பெரிய தருமந்தான். அப்புறம் வேறே தருமம் எதுக்குங்க...? நாங்க யாரிட்டவும் தருமத்துக்கு

வராமல் இருந்துக்கிடிருக்கோமே; அதுவே பெரிய தருமமாச்சே..." என்று சாதுரியமாக எதிராளியை மடக்கிப் பேசுவார் விநாயகம் பிள்ளை. இப்படிச் சொல்லிவிட்டு இரண்டு கைகளையும் மேலே முழ உயரத்துக்குத் தூக்கி ஒரு தாராளக் கும்பிடு போட்டு விட்டு 'நீங்கள் போகலாமே' என்ற அர்த்தத்தில் ஒரு சிரிப்பும் சிரித்துவிட்டால் அதற்கு அப்புறம் விநாயகம்பிள்ளைக்கு முன்னால் நிதிவசூல் நோட்டோடு வருகிற எந்தப் பயலும் தயங்கி நிற்க முடியாது. அந்தச் சிரிப்புத்தான் முற்றுப்புள்ளி. அதற்கு அப்புறமும் நெளிந்து குழைந்து முன்னால் நின்று கொண்டிருக்கிற ஆட்கள் அவர் முகத்தில் சிரிப்பைக் காணமுடியாது. ஒரு நாளைக்கு ஒருதரம் சூரியன் உதிக்கிற மாதிரித்தான் அந்தச் சிரிப்பும். அதற்கு 'ஒன்ஸ்மோர்' (இரண்டாந்தடவை) கிடையவே கிடையாது.

நமது திரு.விநாயகம்பிள்ளையின் கடையில் ஒரே ஒரு தர்மம் மட்டுமே கடந்த பன்னிரண்டு ஆண்டுகளாகக் கோவில் கர்ப்பக்கிருகத்தின் நந்தா விளக்கைப் போல அணையாமல் நடந்து கொண்டு வருகிறது. அதைப் பற்றிய விவரங்கள் கீழ்வருமாறு :

அவருடைய கடையில் பீடி, சிகரெட், சுருட்டு வகையறாக்களை விற்பதில்லை என்றாலும், எதிர்ப்பக்கம் ஒரு சிறிய பெட்டிக்கடை இருந்தது. அந்தப் பெட்டிக் கடையில் பீடி, சிகரெட், சுருட்டு இத்யாதிகளை வாங்கிக் கொண்டு மளிகைக் கடைப் பக்கம் வருகிறவர்களுக்கு இனாம் சர்வீஸாக இருபுறமும் ஒட்டை செய்யப்பட்ட தகர டப்பா ஒன்றில் தேங்காய் நார்க்கயிறு நீளமாக நுனியில் நெருப்போடு புகைந்து கொண்டிருக்கும். பெட்டிக்கடையும் சுற்றுப்புறமும், ஓலைக்கீற்றுக்களால் வேயப்பட்டிருந்ததனால் தற்காப்பை உத்தேசித்து இந்த 'ஃபயர் செர்வீஸை' - விநாயகம்பிள்ளை வசத்தில் ஒப்படைத்திருந்தான் பெட்டிக்கடைக்காரன்.

"ஐயா! நெருப்பு இருக்குதுங்களா?" என்று கேட்டுக் கொண்டு வருகிற ஆட்களை,

"அன்னா... அங்ஙான இருக்குது... எடுத்துப் பத்த வச்சிக்க..." என்று சொல்லிப் பெட்டிக் கடையிலிருந்து வருகிற ஆட்களுக்கெல்லாம் நெருப்பு வைத்து அனுப்பிக் கொண்டிருந்தார் விநாயகம்பிள்ளை.

அவர் ரொம்ப அசுவாரஸ்யமாகவும் வெறுப்பாகவும் இருக்கிற வேளைகளில் இந்தப் பதில் கொஞ்சம் மாறி வெளிப்படுவதும் உண்டு.

"இங்கேதான் எங்கெயாச்சும் இருக்கும். வேணமட்டும் அள்ளி வச்சிக்க."

"நான் என்ன எந்தலை மேலேயா அள்ளி வச்சிக்கிட்டிருக்கேன்...? அங்ஙனே பாரு... தகர டப்பாவிலே கயிறு இருக்கும்..."

என்று விதவிதமாக ஆளுக்குத் தகுந்தாற்போல் விநாயகம்பிள்ளையிடமிருந்து பதில் வரும். சில சமயங்களில் பதிலே வராது. கை மட்டும் நெருப்புப் புகைந்து கொண்டிருக்கிற இடத்தைச் சைகை காட்டி வைக்கும். மளிகைக் கடைப் பையன்களிடம் அவர் நடந்து கொள்கிற விதமே ஒரு கம்பீரமான தன்மை வாய்ந்ததாயிருக்கும்.

"ஏலே மூதி! உன்னெயத்தாண்டா கேக்குதேன்... இந்தப் பாலமுருகன் மளிகை ஸ்டோர்ஸிலே பொட்டணம் மடிக்கிறதுக்கு முன்னாலே முந்திரிப் பருப்புக் கசக்குமா இனிக்குமான்னு கூடத் தெரியாதேடா உனக்கு... களவாணிப் பயலே...? முந்திரிப் பருப்பா கேட்குது உனக்கு? முந்திரிப் பருப்புத் திங்கிற முகரையைப் பாரு... திருடித் தின்ன வெட்கமாயில்லை...?

- என்று பொட்டணம் கட்டும்போது கைக்கு இசைவாக இருந்த காரணத்தால் இரண்டு பருப்பை வாயில் போட்டு மென்றுவிட்ட சிறுவனைத் தாக்கு தாக்கென்று தாக்கித் தள்ளிவிடுவார்.

"நாக்கு நீளக்கூடாதுடா பயலே! பொது எடத்துலே இருக்கறவன்... தோணினபடி திருடித் திங்கிறதுன்னு வந்துப்புட்டா அப்புறம் உலகத்திலேயே நியாயம், தர்மம், ஒண்ணும் இல்லாமல் போயிடும்டா...?

என்று அந்த முந்திரிப் பருப்புக் குற்றத்துக்கே ஒரு 'இண்டர்நேஷனல் கிரைம்வியூ'வைக் கொடுத்துப் பெரிதுபடுத்திப் பேசுவார் விநாயகம்பிள்ளை.

"சரிதான் விட்டுத் தள்ளுங்க. ரெண்டு முந்திரிப் பருப்புக்கு ஏன் இப்படித் தொண்டைத்தண்ணி வத்துதிய...? சின்னஞ்சிறுசுக அப்பிடித்தான் இருக்கும். தெரிந்தும் தெரியாமலும் இருந்திடணும்" என்று கடைக்குச் சாமான் வாங்க வந்த முதியவர்கள் யாராவது மத்தியஸ்தம் செய்ய வந்தால் விநாயகம்பிள்ளை அவர்களாலே அந்த மத்தியஸ்தத்தைப் பொறுத்துக் கொள்ள முடியாது.

"நீங்க சும்மா இரியுங்க... இது வியாபார விவகாரம். நாணயமில்லாட்டி வியாபாரம் குட்டிச் சுவருதான். இன்னிக்கு ரெண்டு முந்திரிப் பருப்புலே நீளற கை, நாளைக்குக் கல்லாப் பெட்டிவரை நீளும்... இதெல்லாம் அப்பப்போ ஒட்ட நறுக்கி எறிஞ்சிடணும்..." என்று மத்தியஸ்தத்துக்கு வந்தவர்களிடம் எறிந்து விழுவார் விநாயகம்பிள்ளை.

தன் வாழ்க்கையில் நடந்த இரண்டே இரண்டு சுவாரஸ்யமான சம்பவங்களை எப்போதாவது கதையைப் போல் இரசமாக அனுபவித்துச் சொல்வார் விநாயகம்பிள்ளை.

அதில் ஒன்று அவர் உழவு மாடு பிடித்துக் கொண்டு வருவதற்காகச் சங்கரன் கோயில் மாட்டுத் தாவணிக்குச் சென்றுவிட்டுத் திரும்பியபோது இராத்திரி வேளையில் வழிப்பறிக் கொள்ளைக்காரர்கள் அவரை மறித்துக் கொள்ளையடிக்க முயன்று முடியாமல் தோற்று ஓடிப்போன சம்பவமாயிருக்கும்.

மற்றொன்று பழைய காலத்து இராச கம்பீரத்தோடு கூடிய மைசூர் தசராவுக்கு அவர் போய்விட்டு வந்ததைப் பற்றிய வருணனையாக இருக்கும். ஆனால், அதில் ஒரு சுவாரஸ்யம் உண்டு. மைசூர் தசராவோ, மகாராஜாவோ அந்த வருணனையில் முக்கியமாயிருக்க மாட்டார்கள். திருவாளர் விநாயகம்பிள்ளை அந்த யாத்திரையை வருணிக்கும்போது அவரே மைசூர் மகாராஜாவாயிருப்பார்.

இந்த இரண்டு சம்பவங்களும் சாதாரணமானவை. எல்லோருடைய வாழ்விலும் நிகழ்பவை என்று மற்றவர்கள் நினைக்கலாம். ஆனால், எல்லோருடைய வாழ்விலும் நிகழும்போது வேண்டுமானால் இவை சாதாரணமானவையாயிருக்கலாம். விநாயகம்பிள்ளையின் வாழ்வில் இவை சாதாரணமாய் நேர்ந்ததாக அவர் ஒருபோதும் ஒப்புக் கொள்ளவே மாட்டார்.

"கேளுங்க... எதுக்குச் சொல்ல வந்தேன்னா... மைசூரிலே நான் தசராவுக்குப் போயிருந்தபோது..." என்று ஆரம்பித்துவிட்டாரானால் அப்புறம் அந்தப் பேச்சு சங்கரன்கோவில் மாட்டுத் தாவணிக்குப் போய்விட்டுத் திரும்பியபோது வழிப்பறிக் கொள்ளைக்காரர்களைச் சமாளித்த தீரம் வரை சொல்லப்பட்ட பின்புதான் முடிவு பெறும். நடுவில் அவரை யாராலும் தடுத்து நிறுத்திவிட முடியாது. அவருடைய இந்தச் சுய புராணத்தைத் தப்பு என்றும் சொல்லிவிட முடியாது. 'நான் கண்ட மைசூர்' என்ற தலைப்பில் ஒரு பிரயாணப் புத்தகம் எழுதவோ கட்டுரைத் தொடர் வெளியிடவோ அவரால் முடியாமலிருக்கலாம். இப்படி வாய் வார்த்தையாகப் பேசிக் கொள்ளக்கூடவா அவருக்கு உரிமை கிடையாது?

"மைசூரில்... இப்பொழுது நடக்கிறதே தசரா; தசராவா அது? குப்பை...! பார்த்திருந்தா அந்த நாளிலே தசராவைப் பார்த்திருக்கணும்..." என்று விநாயகம்பிள்ளை அவர்கள் வக்கணையாய்ப் பேசும்போது அந்த நாள் தசராவைப் பார்க்கக் கொடுத்து வைக்கவில்லையே என்று நமக்கும்கூட வருத்தமாகத்தான் இருக்கும்.

நல்லவேளையாக, அந்த நாள் தசராவைப் பார்த்து விட்டு இந்த நாளிலும் நம் கண் காண இருக்கிற விநாயகம்பிள்ளையைப் பார்க்கும்போதே பழைய தசராவைப் பார்த்த திருப்தி ஏற்பட்டுவிடும், எனக்கு.

நான் இங்கு சொல்லியவற்றைத் தவிர இன்னும் எத்தனையோ சுவாரஸ்யமான அம்சங்கள் விநாயகம்பிள்ளையிடம் இருக்கின்றன. அவற்றை எல்லாம் தனித்தனியே விவரிக்க இயலவில்லையே என்பதில் எனக்கும் வருத்தம்தான். அப்படி விவரிக்க இந்த மாதிரி ஒரு சிறிய நடைச் சித்திரம் போதாது.

சுருக்கமாக ஒன்று சொல்ல முடியும். உயர்திருவாளர் விநாயகம்பிள்ளை அவர்கள் பாலமுருகன் மளிகை ஸ்டோர்ஸ் முதலாளி மட்டும் இல்லை. அவர் சுவையான கதாபாத்திரம். அவரே ஒரு கதை. அதில் ஒரே ஹீரோ அவர்தான். இன்னொரு ஹீரோவுக்கு இடமில்லை.

**(1975-க்கு முன்)**

# 124. மறத்திற்கும் அதுவே துணை

ஜான்சன் துரையை நான் முதல் முதலாகச் சந்தித்தது அப்பர் கூனூரில் உள்ள 'சிம்ஸ்' பூங்காவில் தான். எங்கள் இருவருக்குமிடையே நட்பு வளரக் காரணமாக இருந்தது நாய் வளர்ப்பதில் இருவருக்கும் இருந்த பொது அக்கறையே. நான் முதலில் ஜான்சன் துரையைக் கண்டபோது தன்னுடைய கம்பீரமான பதினாறடி வேங்கை போன்ற 'ஹவுண்ட்' நாயைப் பிடித்தவாறு 'சிம்ஸ்' பூங்காவின் புல்வெளியில் அவன் உலாவிக் கொண்டிருந்தான். உண்மையைச் சொல்ல வேண்டுமென்றால் நான் முதலில் நாயைத்தான் பார்த்திருந்தேன். பிறகுதான் துரையைப் பார்த்தேன். அந்த நாயின் கம்பீரமான ஆகிருதியே என் கவனத்தைக் கவர்ந்தது.

அதன்பின் நான் வலுவில் சென்று என்னைத் துரைக்கு அறிமுகப்படுத்திக் கொண்டேன். எங்கள் உரையாடல் ஆங்கிலத்தில் நிகழ்ந்தது. பரஸ்பர அறிமுகங்கள் முடிந்தபின், "மிஸ்டர் ஜான்சன்! ஐ லைக் திஸ் டாக் வெரிமச்" என்று ஆரம்பித்ததுமே, துரை அவசர அவசரமாகக் குறுக்கிட்டு, டோன்ட் கால் ஹிம் டாக். ஹிஸ் நேம் இஸ் ஸீஸர். ஹி இஸ் மோர் தென் மை ஸன்" என்று என்னைத் திருத்தினான்.

அந்த நாயின் மேல் அவன் வைத்திருந்த பாசத்தையும் பிரியத்தையும் கண்டு நான் அயர்ந்து போனேன்.

அதற்கு மறுவாரம் உதகை நாய்க் காட்சியில் மீண்டும் அவனையும் அந்த 'ஹவுண்டையும்' கண்டேன். அவனுடைய ஸீஸர்தான் அந்தக் காட்சியில் சிறந்த நாய்க்கான முதற் பரிசைப் பெற்றது. அந்த நாயின் மேல் எனக்கு அலாதிப் பிரியமே ஏற்பட்டு விட்டது. கன்னிங்ஹாம் எஸ்டேட் உரிமையாளனான ஜான்சன் துரைக்கு வயதாகி விட்டது. நாலைந்து ஆண்டுகளுக்கு முன் அவன் மனைவியும் காலமாகி விட்டாள். அவனுக்குக் குழந்தைகள் இல்லை. அவன் மனைவி காலமானதிலிருந்தே எந்தச் சமயத்திலும் எஸ்டேட்டை விற்று விட்டு அவன் ஊர் திரும்பலாம் என்று கூனூரில் பேசிக் கொண்டார்கள். ஊர் திரும்புகிறவர்கள், அதுவும் நாடு விட்டு நாடு செல்கிறவர்கள், வளர்ப்பு நாயை உடன் கொண்டு செல்ல வசதி இல்லை என்பதால் அவன் ஊருக்குச் செல்லும்போது என்ன விலை கேட்டாலும் கொடுத்து அந்த 'ஹவுண்டை' வாங்கி விடுவது என்று நினைத்துக் கொண்டிருந்தேன். என்னிடம் வேறு சில நாய்கள் இருந்தாலும் அந்த ஹவுண்டின்மேல் எனக்கு ஒரு மோகம் பிறந்துவிட்டது.

சென்னையிலும், உதகையிலும் அப்பர் கூனூரிலுமாக மூன்று மேல் நாட்டுப் பாணியிலான ஓட்டல்களை நடத்தி வரும் எனக்கு இந்த மூன்று ஊர்களிலும் மாற்றி மாற்றி இருக்க வேண்டியிருக்கும். வேட்டை நாய் வகையைச் சேர்ந்த ஹவுண்டிலும்

ஜான்சன் துரையின் ஸீஸர் தனி ரகம். அதனுடைய குறிப்பறிதலும், மோப்ப சக்தியும், புரிந்து கொள்ளும் தன்மையும் இணையற்றவை. ஒரு சமயம் ஜான்சன் துரையின் பங்களாவில் ஏதோ குழாய் ரிப்பேர் முடித்து விட்டுப் போகிறபோது ஒருவன் பாத்ரூமிலிருந்து ஒரு சோப்பையும், நாலைந்து புத்தம் புது கில்லெட் பிளேடுகளையும், ஒரு பழைய ரேஸரையும் எடுத்து ட்ரெளஸர் பாக்கெட்டில் அடைத்துக்கொண்டு கிளம்பியிருக்கிறான்; அவ்வளவுதான். அந்தப் பிளம்பர் காம்பவுண்ட் கேட்டைத் தாண்டுவதற்குள் ஸீஸர் புலியைப் போல் பாய்ந்து அவனைக் கவ்விப் பிடித்து அவன் கால் சட்டையைப் பிராண்டத் தொடங்கிவிட்டது.

அதன் பிடியில் கால்மணி நேரம் அவன் திணறிவிட்டான். துரை சத்தம் கேட்டு வெளியே வந்து பார்த்ததும்தான் உண்மை புரிந்ததாம். அப்புறம் அவன் திருடிய சாமான்களைக் கொடுத்துவிட்டுத் துரையிடம் மன்னிப்புக் கேட்டுக்கொண்டு போய்ச் சேர்ந்தானாம். இன்னொரு சமயம் துரையும் ஸீஸரும் காரில் எஸ்டேட் பகுதிக்குப் போயிருக்கிறார்கள். காரையும், காருக்குள் ஸீஸரையும், டிரைவரையும் ஒரு மரத்தடியில் விட்டு விட்டுத் துரை எஸ்டேட்டுக்குள் நடந்து போயிருக்கிறான். காருக்குள் 'டேங்க்' நிறைய முப்பது முப்பத்தெட்டு லிட்டர் வரை பெட்ரோல் இருந்திருக்கிறது. எஸ்டேட் பகுதிக் கார்களில் பெட்ரோல் திருடித் தருகிற டிரைவர்களுக்குப் பணம் கொடுத்துப் பெட்ரோல் வாங்கிக் கொள்ளும் தரகன் ஒருவன் டின்னோடும் டாங்கிலிருந்து பெட்ரோல் எடுக்கிற ட்யூபோடும் வந்து பெட்ரோல் திருடுகையில் ஸீஸர் கார்க் கதவைத் திறந்துகொண்டு குதித்து அவனைப் பிடித்துக் குரைக்கத் தொடங்கி விட்டது. நாய் குரைப்பதைக் கேட்டுத் துரை ஓடிவந்து விபரம் புரிந்து, அந்தத் திருட்டு டிரைவரை வேலையை விட்டு நிறுத்தினானாம். துரை முதுமலைக் காட்டுக்கு வேட்டைக்குப் போய்க் கொண்டிருந்த நாட்களில் ஸீஸர் அவனுக்கு அபார உதவிகள் எல்லாம் செய்திருக்கிறதாம். ஸீஸர், துரைக்குப் பி.ஏ. மாதிரி பயன்பட்டு வந்தது என்றார்கள்.

எனக்கோ அதுமாதிரி நாய் ஒன்று கட்டாயம் தேவைப்பட்டது. என்னுடைய கூனூர் ஓட்டல் ஸ்டோர் ரூமிலிருந்து பண்டங்கள் தாறுமாறாகத் திருடு போய்க் கொண்டிருந்தன. டூட்டி முடிந்து வீடு திரும்பும்போது, வேலை ஆட்கள் சட்டைப் பை, டிராயர் பை, தொப்பி என்று எங்கெங்கோ மறைத்து வைத்துப் பொருள்களைத் திருடிக் கொண்டு போனார்கள். கூர்க்காவை விட்டுப் பைகளைச் சோதிக்கச் சொன்னால் வேலையாட்கள் அதைத் தன்மானப் பிரச்சனையாக்கி யூனியன் மூலம் வேலை நிறுத்த நோட்டீஸ் கொடுத்தார்கள்; அல்லது கூர்க்காவையே தன்னைக் கட்டிக்கொண்டு அல்லது மிரட்டித் தொடர்ந்து திருடிக் கொண்டே இருந்தார்கள். பாதாம் பருப்பு, ஏலக்காய், சர்க்கரை, குங்குமப்பூ, நெய் என்று விலையுயர்ந்த பொருள்களாகத் திருடு போயின. கூர்க்காவுக்குப் பக்கத்தில் ஸீஸர் மாதிரி ஒரு நாயைக் கட்டி வைத்துவிட்டால் அந்த விஷயம் சுலபமாகி விடும் என்று எனக்குத் தோன்றியது.

இந்த எண்ணத்துடனேயே ஸீஸரை நன்கு பழக்கப்படுத்திக் கொண்டு விட வேண்டும் என்று நான் ஜான்சன் துரை வீட்டுக்கு அடிக்கடி போய் வரத்

தொடங்கினேன். துரை அந்த நாயை வைத்திருந்த சவரணையைப் பார்த்ததும் எனக்குப் பயமாகவும், தயக்கமாகவும் கூட இருந்தது. ஓர் இளவரசனை வளர்ப்பதுபோல் ராஜோபசாரத்தோடு அந்த நாயை வளர்த்து வந்தான் ஜான்சன் துரை. அதற்கென்று தனிக்கட்டில், மெத்தை பிளாங்கெட் எல்லாம் கூட இருந்தன. அவன் அதற்குப் போடுகிற பிஸ்கெட் ஹாலந்திலிருந்து வந்தது. அதைக் குளிப்பாட்டுகிற சோப், பூசுகிற பவுடர், எல்லாம் கூட விலை உயர்ந்தவையாக இருந்தன. அவனுடைய பங்களாவில் அதற்கு இறைச்சி வைக்கவும், உணவு படைக்கவும் அவன் வீட்டுப் பட்லர் பயன்படுத்தியது போல் பீங்கான் தட்டுக்களை என் ஹோட்டலில் டீலக்ஸ் ரூமில் தங்குகிறவர்கள் சூப் குடிப்பதற்குக் கூட நான் பயன்படுத்த முடிந்ததில்லை. கண்ணை இமை காப்பது போல் அந்த நாயைக் கட்டிக் காத்தான் ஜான்சன்.

அதற்கென்று தனி பட்லர், தனியாக வாரா வாரம் வந்துபார்க்க ஒரு வெட்டர்னரி டாக்டர். உண்ணி ஒட்டாமல் ரோமம் கத்திரித்து விட்டு உடம்பில் ஆலிவ் ஆயில் போட்டு மஸாஜ் செய்ய ஒரு சலூன்காரன். இப்படி எல்லாரும் இருந்தார்கள். ஸீஸரின் உடம்பு வெல்வெட் போல வழவழப்பாக இருந்தது. ஸீஸரின் மேல் ஒரு துரும்பு பட்டால் கூட ஜான்சனால் பொறுத்துக் கொள்ள முடியாது. அதற்குக் கச்சிதமாக நேரம் தவறாமல் வேளை வேளைக்கு எல்லாம் சாப்பிட வைத்தாக வேண்டும். ஒரு விநாடி முன் பின்னாகிவிட்டாலும் வேலைக்காரர்களைத் திட்டித் தீர்த்து வீட்டுக்கு அனுப்பி விடுவான் துரை. 'ஸீஸர் இஸ் மோர் தென் மை ஸன்' என்று அவன் என்னிடம் கூறியது நூற்றுக்கு நூறு பொருந்தும் என்று இப்போது தோன்றியது.

ஆரம்பத்தில் நான் ஜான்சன் துரை பங்களாவுக்குப் போன போதெல்லாம் என்னை வேற்றாளாகக் கருதிச் சீறிப் பாய்ந்து குரைத்த ஸீஸர் நாளடைவில் என்னோடு பழகிவிட்டது. ஒவ்வொருமுறை நான் போகிறபோதும் ஜான்சன் எனக்கு ஒரு சுவாரசியமான அநுபவத்தைச் சொல்வான். அந்த முறை முன்பு நடைபெற்ற உலகப் போரில் தான் இராணுவத்தில் பணியாற்றியபோது ஒரு 'டாங்க்' சண்டையில் முழங்கால்களையும் கைகளையும் இழந்த தன் இளம் சகாக்கள் இருவரைப் பற்றிச் சொன்னான்.

"நான் அந்த இரு இளம் வீரர்களை உயிருக்குயிராக நேசித்தேன். ஒரு மழை இரவில் டாங்க் சண்டையில் பயங்கரமாக அங்கஹீனப்பட்டு அவர்கள் நடுக்கும் குளிரில் திறந்த வெளியில் விழுந்து கிடந்தார்கள். அந்த முனையையே நாங்கள் காலி செய்துவிட்டுப் பின்வாங்க வேண்டிய நிலைமை. எங்களுக்கான சப்ளைகள் எல்லாம் எதிரிகளால் துண்டிக்கப்பட்டு விட்டன. வைத்திய உதவிக்கு வழி இல்லை.

நாங்கள் வைத்திய வசதி, வாகன வசதி, வயர்லெஸ் சாதனங்கள் எல்லாவற்றையும் இழந்து விட்டோம். மூன்று முனைகளில் ஜெர்மன் ஸோல்ஜர்கள் எங்களைத் தேடிப் பூண்டோடு அழிக்க விரைந்து முன்னேறிக் கொண்டிருந்தார்கள். தப்புவதற்கு ஒரே ஒரு முனைதான் இருந்தது. நான் ஒருவன் தான் அதில் உயிர் பிழைத்தவன். நான் எப்படியும் தப்பியாக வேண்டிய அவசரம்.

அங்கஹீனப்பட்ட நண்பர்களைத் தூக்கிச் செல்ல முடியாது. அவர்கள் பனியில் சித்திரவதையாகி அணு அணுவாகச் சாவதோ, துன்பப்படுவதோ கூட என்னை வேதனைப் படுத்தக் கூடியவை தாம். எனக்கு மிகவும் பிரியமானவர்களைப் பற்றி நான் ஒரு கணத்தில் முடிவெடுக்க வேண்டியிருந்தது. பார்த்தேன், பசியிலும், பனியிலும் மெல்ல மெல்லச் சாவதைவிட அவர்கள் உடனே நிம்மதியாகச் சாகட்டும் என்று முடிவு செய்து, நான் என் கைத் துப்பாக்கியால் அவர்களைச் சுட்டு விட்டுத் தப்பி ஓடினேன். நீங்களே சொல்லுங்கள். எது தர்மம்? அப்போது அவர்களை நான் கொன்றுவிட்டு வந்தது தான் அவர்களுக்குச் செய்த மிகப் பெரிய உதவி. நான் கொல்லாமல் விட்டுவிட்டு வந்திருந்தால் கழுகுகளும், நரிகளும் வந்து கொத்தி அவர்களைச் சித்திரவதை செய்யலாம். அணு அணுவாக அவமானப்பட்டுச் சித்திரவதையாகச் சாவதைவிட உடனடியான மரணம் என்பது மகத்தானது என்பது என் கருத்து. என்னுடைய உயிருக்குயிரான நண்பர்களுக்கு நான் அந்த வேளையில் அன்று செய்ய முடிந்த உதவி அவ்வளவுதான். என்ன செய்யலாம்?"

இந்த அனுபவத்தை மனமுருகி என்னிடம் விவரிக்கும் போதே ஜான்சனுக்குக் கண்களில் நீர் மல்கிவிட்டது. அவன் உணர்ச்சி மயமாகிவிட்டான். அவனால் துயரத்தைக் கட்டுப்படுத்திக்கொள்ள முடியவில்லை. அவனுக்கு உயிர் இழந்த தன் பழைய நண்பர்களின் நினைவு வந்து விட்டது.

சில மாதங்களில் நான் ஆவலோடு எதிர்பார்த்த சந்தர்ப்பமும் வந்தது. ஜான்சன் துரை எஸ்டேட்டையும், பங்களாவையும், காரையும் விலை பேசிக் கொடுத்துவிட்டு நாடு திரும்பப் போவதாகப் பேச்சு அடிபடத் தொடங்கியது. கடைசியில் அது உறுதியும் ஆயிற்று.

எஸ்டேட், பங்களா, எல்லாவற்றையும் விலை பேசி முடித்தாயிற்று. ஸீஸர் விஷயமாகப் பேசுவதற்கு நான் ஜான்சனைச் சந்திக்கச் சென்றேன். சுற்றி வளைத்து வேறு ஏதேதோ விஷயங்களைப் பேசிவிட்டு, ஸீஸரைப் பற்றி ஆரம்பித்தேன்.

"எஸ்டேட், வீடு எல்லாவற்றையும் விற்க ஏற்பாடு செய்து விட்டீர்கள் மிஸ்டர் ஜான்சன்! ஸீஸரை என்ன செய்யப் போகிறீர்கள்? நீங்கள் விரும்பினால் அதை ஒரு நல்ல விலை பேசி எனக்கு விற்கலாம் அல்லவா?"

இதைக் கேட்டு ஜான்சன் பதில் சொல்லாமல் என்னை ஏற இறங்கப் பார்த்தான். சிறிது தயங்கினான்; பின்பு சிரித்துக்கொண்டே சொல்லத் தொடங்கினான்:-

"எஸ்டேட், வீடு எல்லாவற்றையும் போல ஸீஸரை விற்கமுடியாது. யாராவது சொந்த மகனை விலைக்கு விற்பார்களா? நீங்கள் கேள்விப்பட்டிருக்கிறீர்களா?"

"வேறு வழி என்ன? நீங்கள் ஸீஸரை உங்களோடு விமானத்தில் கொண்டு போவதும் சாத்தியமில்லையே!"

"அது எனக்குத் தெரியும். நான் ஸீஸரைக் கொண்டு போவது சாத்தியமில்லை தான். ஆனால் நான் எப்படி அவனைக் கண்ணும் கருத்துமாகப் பேணிப் போற்றி வளர்த்தேனோ அப்படி வளர்க்கிற ஒருவர் கிடைத்தால், விலையின்றியேகூட அவனைச் சுவீகாரம் கொடுக்கலாம்."

“நான் அப்படி வளர்க்க முடியுமென்று நம்புகிறேன் மிஸ்டர் ஜான்சன்! எனக்கும் ஸீஸரைப் போன்ற ஒரு மகன் தேவை.”

“இந்தியர்களாகிய நீங்கள் ‘நாய்க்கு இவ்வளவு செலவா?’ என்று பல சமயங்களில் கஞ்சத்தனமாகக் கணக்குப் பார்ப்பீர்கள்! என் ஸீஸரோ இளவரசனைப்போல் செல்லமாக வளர்ந்தவன். எனது பராமரிப்பு இல்லாமல் அவன் ஏங்கவோ தவிக்கவோ நேருவதைவிட மரணம்கூட மேலானதாயிருக்கும். ஸீஸரின் ‘ஸ்டேட்டஸ்’ தாழ்ந்து போகக்கூடாது; ஸீஸருக்கு ரோஷம் அதிகம்”.

“ஒரு பத்து நாள் என் பராமரிப்பில் ஸீஸரை விட்டுப் பாருங்கள். உங்களுக்குத் திருப்தி ஏற்பட்டால் எனக்குச் சுவீகாரம்போல் செய்யலாம்.”

நீண்ட வாதப் பிரதிவாதங்கள், நிபந்தனைகளுக்குப்பின் ஜான்சன் ஸீஸரைப் பத்து நாள் என் பராமரிப்பில் விட்டுப் பார்க்கச் சம்மதித்தான். அவன் நாடு புறப்பட இன்னும் பத்துப் பதினைந்து நாட்களே இருந்தன.

மறுநாள் காலை ஜான்சனே காரில் ஸீஸரை அழைத்து வந்து, என் பங்களாவில் கொண்டு வந்து விட்டுப் போனான். என் பங்களாவில் அதற்கான ஏற்பாடுகள் சரியாகவும் கௌரவமாகவும் இருக்கின்றனவா என்பதையும் சரி பார்த்தான்.

அவன் ஸீஸரைக் கொண்டு வந்து விட்டுப்போன சிறிது நேரத்துக்குப்பின் எனக்குச் சென்னையிலிருந்து ஒரு தந்தி கிடைத்தது. எனது சென்னை ஓட்டலில் வேலை நிறுத்தம் என்றும், உடனே நான் புறப்பட்டு வரும்படியும் தந்தி வந்தது. அந்தப் பதற்றத்தில் நான் அடுத்த கணமே காரில் கோவை விரைந்து கோவையிலிருந்து விமான மூலம் சென்னை போய்ச் சேர்ந்தேன்.

தொழிலாளர்கள் வேலை நிறுத்தத்தால் ஓட்டலுக்கு நிறையச் சேதம். இருபது நாட்கள் நான் சென்னையிலிருந்து நகர முடியவில்லை. லட்சக்கணக்கில் நஷ்டம் வரும்போல் இருந்தது. இதனால் நான் ஸீஸரையே மறந்துவிட்டேன்.

நடுவே வீட்டிலிருந்து எனக்கு ஒரு கடிதம் வந்தது. நான் சென்னை வந்தபின் ஒரு நாள் காலை ஜான்சன் துரை கூனூரில் என் வீட்டுக்குத் தேடி வந்ததாகவும், அவன் வரும்போது. ஸீஸர் வீட்டு முகப்பில் குப்பைத் தொட்டியருகே நின்றதைப் பார்த்து, அவன் என் வேலைக்காரனிடம் என் பொறுப்பற்ற தன்மையைப்பற்றிக் கன்னா பின்னா வென்று திட்டிவிட்டு, நாயைத் திரும்ப அழைத்துப் போய்விட்டதாகவும் கடிதத்தில் குறிப்பிடப்பட்டிருந்தது. கடிதத்தைப் படித்தவுடன் சிறிது நேரம் மனம் வேதனைப்பட்டாலும், அப்போது அதைவிடத் தலைபோகிற பிரச்னைகள் இருந்ததனால் அதை உடனே மறந்துவிட முடிந்தது. சென்னை ஓட்டல் நிலைமைகள் சரியாகி மூன்று வாரங்களுக்குப்பின் நான் மறுபடி கூனூர் திரும்பியபோது ஜான்சன்துரை லண்டனுக்குப் புறப்பட்டுப் போய்விட்டது தெரியவந்தது. ஸீஸர் என்ன ஆயிற்று என்ற விவரம் மட்டும் தெரியவில்லை. துரையிடம் பட்லராக இருந்த ஜோஸப்பைக் கூப்பிட்டு அனுப்பினேன். அவன் வந்தான்; விசாரித்தேன். அவன்

சொல்வதற்குத் தயங்கினான். வற்புறுத்தியபோது "துரை அதை யாரிடமும் சொல்லக்கூடாதுன்னிருக்காருங்க" என்று இழுத்தான்.

"துரைதான் லண்டனுக்குப் போயாச்சே! நீ இனிமே என்ன செய்யப் போறே? என் ஓட்டல்லேயே ஒரு நல்ல வேலையாத் தரேன். பார்க்கறியா?" என்று நான் சொன்னதும் அவன் சிறிது வழிக்கு வந்தான்.

"சொல்றேங்க! ஆனா அதை நீங்க வேற யாரிட்டவும் சொல்லக்கூடாது உங்க வீட்டிலே ஸீஸரைச் சரியாக் கவனிக்கலேன்னு துரைக்கு உங்க மேலே ரொம்பக் கோபம். உங்களை வாய் ஓயாமத் திட்டிக்கிட்டிருந்தாரு. அப்புறம் நாயை விமானத்திலே அழைச்சிட்டுப் போக எழுதிக் கேட்டுப் பார்த்தாரு. ஒண்ணும் முடியற வழியாயில்லே.

"கடைசியிலே அவரு புறப்படறன்னிக்குப் பகல் பன்னிரண்டு மணிக்குக் கோயம்புத்தூர்லே பிளேன் ஏறனும்னு முடிவாச்சு. அதற்கு முதல் நாளே எஸ்டேட், பங்களா, கார் எல்லாம் வித்தாச்சு. ஏர் போர்ட்டுக்கு கூட என்னை டாக்ஸி தான் பேசச் சொன்னாரு. புறப்படற அன்னிக்கு என்னை அதிகாலையிலேயே போட்டோ கிராஃபரையும் கூட்டிக் கிட்டு வரச் சொன்னாரு.

மறுநாள் காலையிலே போட்டோகிராஃபரோட பங்களாவுக்கு ஆறு மணிக்கே போயிட்டேன். துரை முதல் நாள் ராத்திரி தூக்கமில்லாமே நிறையக் குடிச்சிருக்கணும்னு தெரிஞ்சிச்சு.

"டே ஜோசப்! வேறு யாரிட்ட விட்டாலும் நான் கவனிச்ச மாதிரி இத்தினி ராஜோபசாரமா என் ஸீஸரை இன்னொருத்தன் கவனிப்பானாடா?"ன்னு கேட்டாரு.

"அது ரொம்பக் கஷ்டம் தொரை! நீங்க அதை உயிருக்குயிராப் பெத்த மகன் மாதிரி வளர்க்கிறீங்க. அப்படி எவனும் செய்ய மாட்டான்"னேன்.

"நான் சொன்னதைக் கேட்டுத் துரை பெருமூச்சு விட்டாரு. கொஞ்சம் யோசிச்சாரு. அப்புறம், 'ஆல் ரைட்! போட்டோ கிராஃபரைக் கொஞ்ச நேரம் இருக்கச் சொல்லு. நீ ஸீஸருக்கு பிரியமான இறைச்சியைச் சமைச்சுக்கொண்டா. ரெண்டு கார்லண்ட்ஸுக்குச் சொல்லி அனுப்புன்னாரு. ஸீஸரை அவரே குளிப்பாட்டி வாசனைப் பவுடர் போட்டாரு. நான் போட்டோகிராஃபரை இருக்கச் சொல்லி விட்டு மாலைக்குச் சொல்லி அனுப்பியபின் இறைச்சி சமைக்கச் சமயலறைக்குள் நுழைந்தேன்.

"கறி சமைத்ததும், தன் கையாலேயே வாங்கி ஸீஸரை மடியில் வைத்துப் பிரியமா வயிறு நிறைய ஊட்டினார் துரை. ஸீஸரும் பிரியமாகச் சாப்பிட்டது. அப்புறம் வழக்கமில்லாத வழக்கமா அதுக்கு ஆப்பிள்கூட நறுக்கிக் கொடுத்தாரு. 'ஜோசப்! போட்டோகிராஃபரைக் கூப்பிடு! மாலைகளைக் கொண்டா'ன்னாரு. நான் மாலைகளைப் பிரித்துக் கொடுத்தேன். தன் கழுத்தில் ஒன்றும், நாய் கழுத்தில் ஒன்றுமாகப் போட்டுகிட்டாரு. படம் எடுக்கச் சொன்னாரு. ஸீஸரை உட்கார வைத்து அவரு பக்கத்திலே நிற்கிறாப்போல, அது அவரைத் தழுவிக்கிறாப்போல, அவரு மேலே

அது தாவி ஏறுகிறாப் போலன்னு நிறையப் படங்கள் எடுத்து தள்ளினான், போட்டோகிராஃபர்.

“போட்டோகிராஃபருக்குப் பணம் குடுத்து, பிலிம்ரோலை அப்படியே வாங்கிக் கொண்டு அவனைப் போகச் சொன்னாரு. வெளிக் கேட்டை சாத்திப் பூட்டச் சொன்னாரு. பிஸ்டலைக் கொண்டான்னாரு. எனக்கு எதுக்குன்னு புரியலே. ஆனா உடனே எடுத்துக் குடுத்தேன். ஸீஸரை அழைச்சிக்கிட்டுத் தோட்டத்து வடகோடியிலே ஒரு சண்பக மரம் உண்டுங்களே அங்கே போனாரு. நான் பின்னாடியே போனேன். ஸீஸரைச் சண்பகமரத்திலே கட்டினாரு. பிஸ்டலை எடுத்தாரு. கொஞ்ச நேரம் சின்னப் புள்ளை கணக்கா விக்கி விக்கி அழுதாரு. அப்புறம் திடீர்னு ஸீஸரை நோக்கி மூணு வாட்டி சுட்டாரு. ஸீஸர் கதறித் துடித்து ரத்த வெள்ளத்தில் விழுந்தது. நான் தடுக்கமுடியலே. சுட்டதும் பிஸ்டலைக் கீழே எறிஞ்சுட்டு ஸீஸரோட உடலைக் கட்டிக்கிட்டு அரைமணி நேரம் கதறி அழுதாரு. அப்புறம் கல்லறையிலே எழுத்துச் செதுக்கற ஆளைக் கூட்டியாரச் சொன்னாரு. ஸீஸரை அந்த மரத்தடியிலேயே புதைச்சு அதும் மேலே பதிக்கிற கருங்கல்லிலே, ‘ஜான்சனுக்குப் பிரியமுள்ள ஸீஸரின் இனிய உயிர் இங்கே உறங்குகிறது’ன்னு தேதி, மாசம், வருஷத்தோடு தமிழிலேயே செதுக்கணும்னு பேசி அதுக்குப் பணமும் கொடுத்தாரு. அப்புறம் டாக்ஸியிலே ஏர்ப்போர்ட் போறவரை மெல்ல அழுதுகிட்டே வந்தாரு. நானும் வழியனுப்பப் போயிருந்தேன்.”

இவ்வாறு பட்லர் ஜோஸப் சொல்லி முடித்தான்.

“ஆமாம்! பங்களாவை விலைக்கு வாங்கினவங்க சண்பக மரத்தடியிலே நாய் சமாதி இருக்கச் சம்மதிச்சாங்களா?”

“துரை அவங்ககிட்டக் கொடுக்கச் சொல்லி ஒரு லெட்டர் குடுத்தாரு. அதை நான் அவங்ககிட்டக் குடுத்துட்டேன். சமாதியை அவங்க ஒண்ணும் பண்ணலே. துரையோட ‘ஸென்டிமென்ட்ஸை’ அவங்க மதிக்கிறாங்கன்னே தெரியுது.”

உடனே ஜோஸப்போடு அந்த மரத்தடிக்குப் போய்ப் பார்த்தேன். கறுப்புச் சலவைக் கல்லில் வெண்ணிற எழுத்துக்களில் ‘ஜான்சனுக்குப் பிரியமுள்ள ஸீஸரின் இனிய உயிர் இங்கே உறங்குகிறது’ என்று செதுக்கியிருந்தது.

அதைப் பார்த்ததும், முன்பு உலகப் போரின்போது தன் நெருங்கிய சிநேகிதர்களை ஓர் இக்கட்டான சமயத்தில் தானே சுட்டுக் கொன்றதாக ஜான்சன் என்னிடம் கூறிய சம்பவம் நினைவு வந்தது.

பேணி வளர்ப்பது மட்டுமே பிரியத்துக்கும் அன்புக்கும் அடையாளம் என்று நான் அன்றுவரை புரிந்து கொண்டிருந்தேன். பிரியமாகப் பேணி வளர்க்க முடியாதபோது அழித்து விடுவதும்கூட அன்பின் உயர்ந்த பக்குவத்துக்கு அடையாளந்தான் என்று இப்போது புதிதாகப் புரிந்துகொள்ள முயல்கிறேன்! ஆம்! பிரியத்துக்கு மறுபக்கம் ஒன்றும் இருக்கத்தான் செய்தது.

**(கலைமகள், தீபாவளி மலர், 1975)**

## 125. துல்லியமாக ஒரு மதிப்பீடு

நல்லப்பன்பட்டி அப்படி ஒன்றும் பெரிய நகரமுமில்லை; சிறிய கிராமமுமில்லை. பல நடுத்தர விவசாயக் குடும்பங்கள், சில பெரிய மிராசுதார்கள், நாலைந்து ரைஸ் மில்கள், பத்திருபது வட்டிக் கடைகள், அடகு பிடிக்கும் நிலையங்கள் எல்லாம் உள்ள ஒரு நடுத்தரமான ஊர் அது. என்ன காரணத்தாலோ அந்த ஊரில் வட்டிக் கடைகளுக்கும், அடகுக் கடைகளுக்கும் பிரமாதமாக லாபம் வந்தன. அதனால் புதிது புதிதாகப் பலர் வந்து வட்டிக் கடைகளும், அடகுக் கடைகளும் போட்ட வண்ணமாக இருந்தனர்.

எத்தனை கடைகள் வந்தாலும் புராதனமான பழ. சொ. என்ற இரண்டெழுத்து விலாசத்துக்கு உள்ள மகிமை ஒன்றும் குறையவில்லை. பழ. சொ. என்ற இரண்டெழுத்துக்களைச் சொன்னாலே ஊரில் அனைவருக்கும் உடனே புரியக்கூடிய பழ. சொக்கநாதன் செட்டியார் சர்வசாதாரணமான 'பான்புரோக்கர்'களில் ஒருவர் மட்டுமல்லர். அவர் பெயருக்கு மகிமை உண்டாக்கும் வேறு சில நல்ல குணங்களும் அவரிடம் இணைந்திருந்தன. அதனால் அவ்வூரில் அவர் பெயருக்குத் தனித் தன்மை இருந்தது.

பழ. சொ. குறள், கம்பராமயணம், வில்லிபாரதம், கந்தபுராணம், திருவிளையாடல், பெரியபுராணம் போன்ற இலக்கியங்களில் நல்லரசனையும், பொதுவாகக் கவிதைகளில் ஈடுபாடும் உள்ளவர். தமிழ்ப் புலமை, கவிதை, இவற்றுக்கு மட்டும் நெகிழ்ந்து கொடுக்கக்கூடிய அவர் மனம் வட்டிக் கடை விஷயங்களில் நெகிழ்ச்சியே இல்லாத கருங்கல்லாகி விடும். பண விஷயம் - வரவு செலவுகளில் பழ. சொ. ரொம்பவும் கறாராகவும் கச்சிதமாகவும் இருப்பார். கால் காசு கூட இன்னொருவருக்காக விட்டுக் கொடுக்கமாட்டார்.

நல்லப்பன்பட்டியில் ஒரு திருக்குறள் கழகம் இருந்தது. அதற்குப் பழ. சொ. தான் பொக்கிஷதார். ஒரு சமயம் வட்டிக் கடைக்கு வந்த வாடிக்கைக்காரன் ஒருவன், "என்ன செட்டியார் சார்? திருக்குறள் கழகத்திலே ஈகையைப் பத்திப் பேசறீங்க. வட்டிக் கடைக்கு வந்தா ஈவு இரக்கமில்லாம நடந்துக்கிறீங்க. ஒண்ணுக்கொண்ணு சம்பந்தமே இல்லையே?" என்று கேட்டுவிட்டான்.

"சம்பந்தம் இருக்கணும்னு எந்த சாஸ்தரத்திலே தம்பீ சொல்லியிருக்கு? ஈகையைப் பத்திச் சொன்ன அதே வள்ளுவர் பெருமான் தானே ஐயா 'பொருள் செயல் வகை'ன்னும் பத்துக் குறள் சொல்லி வச்சிருக்காரு. 'செய்க பொருளை'ன்னு ஓங்கி முதுகிலே ஓர் அறை வச்சில்ல சொல்றாரு". என்று பழ. சொ. தயங்காமல் அந்த ஆளுக்குப் பதிலடி கொடுத்தார்.

அப்படிக் கேட்ட வாடிக்கைக்காரன் ஓர் இளைஞன் தான். பி.யூ.சி. பெயிலாகி மேலே படிப்பும் வராமல், ஊரோடு விவசாய வேலைகளைப் பார்க்கவும் முடியாமல் ஓர் இரண்டுங்கெட்டான் கிராமத்தில் தங்கிவிட்ட வேல்சாமி என்ற இளைஞன் தான் ஒரு நாள் குத்தலாகப் பழ. சொ. விடம் இப்படிக் கேட்டுவிட்டுப் பதிலுக்கு வாங்கிக் கட்டி கொண்டான்.

வேல்சாமியின் தற்காலிக வேலை கவிதைகள் எழுதிப் பத்திரிக்கைகளுக்கும் பதிப்பகங்களுக்கும் அனுப்புவது. எதிர்கால இலட்சியம் சினிமாக்களுக்குப் பாட்டெழுதிப் பிரபலமாக வேண்டுமென்பது. ஆனால் இரண்டாலும் அப்போதைக்கு ஒரு பைசாக்கூட அவனுக்கு வருமானமில்லாமல் இருந்தது. அவன் வறுமையில் சிக்கித் தவித்தான்.

தமிழ் இலக்கிய ரசிகர் என்ற முறையில் வேல்சாமியின் மேல் பழ. சொ. வுக்குக் கொஞ்சம் அபிமானம் உண்டு. அவனுக்குப் படிப்புதான் வரவில்லையே ஒழிய கவிதை எழுதப் பிரமாதமான திறமையிருந்தது. திருக்குறள் கழகக் கவி அரங்கங்களிலே வேல்சாமிக்கு அடிக்கடி வாய்ப்புக் கொடுத்து வந்தார். பழ. சொ.

"நீ, முன்னுக்கு வந்துடுவே தம்பீ! பழைய கவிதைகளிலே மட்டுமே காண முடிஞ்ச வாக்குவளம் உன் பாட்டிலே இருக்கு" என்று அடிக்கடி மனநிறைவோடு வேல்சாமியைப் பழ. சொ. பாராட்டிக் கொண்டிருந்தார். 'தம்பீ! தம்பீ!' என்று அவர் தன்னிடம் இழைவதில் நம்பிக்கை வைத்து ஒரு நாள் அவருடைய வட்டிக் கடைக்குப் படியேறிப் போய் ஐந்து ரூபாய் கை மாற்றுக் கேட்டான் வேல்சாமி. உடனே அவனை ஏற இறங்கப் பார்த்து விட்டுக் கொஞ்சம்கூட மலர்ச்சியில்லாத முகத்தோடு கறாரான வியாபாரக் குரலில் "தரேன். ஆனா எதும் மேலே கடன் கொடுக்கச் சொல்றேன்னேன்? ரிஸ்ட் வாட்ச்சா, மோதிரமா? உன் கையிலே எதையும் காணலியே? மூளியாவில்லே வந்திருக்கே?" என்று பதிலுக்குக் கேட்டார் பழ. சொ.

அப்போதுதான் பழ. சொ. வுக்கும் வேல்சாமிக்கும் மேற்கண்ட வாக்குவாதம் நடந்தது.

"என்னை நம்பி ஓர் அஞ்சு ரூபா தரப்பிடாதா நீங்க?"

"நம்பறது நம்பாதது எல்லாம் வேறவேறே விஷயம் தம்பீ! அடகுக் கடைன்னு வந்தாச்சின்னா அதுக்குன்னு தனி வளமுறை, இலக்கணம் எல்லாம் இருக்கு. அடகு பிடிக்கிறதுன்னே இந்தத் தொழிலுக்குப் பேரு. நான் நூறு ரூபாய் மதிக்கற ஒரு பொருளை நம்பி இவ்வளவு கடன் கொடுக்கலாம். இருநூறு ரூபாய் மதிக்கற பொருளை நம்பி இவ்வளவு கடன் கொடுக்கலாம்னெல்லாம் ஒரு துல்லியமான மதிப்பீடு இருக்கு. அதை மீறி எதையும் இங்கே செய்யறதில்லை...."

"அஞ்சு ரூபா கைமாத்துக்குக் கூடவா அடகு அது இது எல்லாம்?"

"அஞ்சுபைசாவுக்குக் கூடத்தான்னு வச்சுக்கவேன்! நட்பு வேறே. தொழில் வேறே. 'மயிர் ஊடாடா நட்பின் பொருள் ஊடாட கெடும்'னு வசனம் சொல்லுவாங்க, தம்பீ!"

"அப்போ, ரிஸ்ட் வாட்ச், மோதிரம், பாத்திரம், பண்டத்தை நம்பித்தான் கடன் தருவீங்க!....என்னை மாதிரி ஓர் ஏழைக் கவிஞனை நம்பித் தரமாட்டீங்க இல்லையா?"

"ரிஸ்ட் வாட்ச்சா, மோதிரமா, பாத்திரமா, பண்டமாங்கிறது முக்கியமில்லை தம்பீ! நீ கொண்டாற பொருள் எதுவோ அது துல்லியமாக நான் மதிக்கற பொருளா இருக்கணும். அடகுக் கடையோட தத்துவம் அது."

"நீங்க மதிக்கறது துல்லியமா இருக்கணும்னு என்ன கட்டாயம்? பல அடகுக் கடைகளிலே மோசடிதானே அதிகமா இருக்கு?"

"மத்தவங்க எப்படியோ தம்பீ? என்னைப் பொருத்தவரை ஏறக்குறைய மூணு மாமாங்கமா இந்தத் தொழில்லே இருக்கேன். என் மதிப்பீடு ஒரு நாளும் தப்பினதில்லே. ரொம்பத் துல்லியமா இருக்கும். நான் ஒரு நாளும் நஷ்டத்துக்கு வியாபாரம் பண்ணினதில்லே. என்னோட வாடிக்கைக்காரங்களையும் நஷ்டப்பட விட்டதில்லை.."

வேல்சாமி மேற்கொண்டு எதிர்வாதம் பண்ணாமல் எழுந்திருந்து போய்ச் சேர்ந்தான். பழ. சொ. சாமர்த்தியமாகப் பதில் பேசிவிட்டாலும் ஐந்து ரூபாய் கைமாற்றுத் தர மறுத்து விட்டாரே என்ற ஏமாற்றம் வேல்சாமியின் மனத்தில் இருக்கத்தான் செய்தது.

சில மாதங்களில் நல்லப்பன்பட்டி மிராசுதார் ஒருவர் நிலங்கரைகளை எல்லாம் விற்றுச் சினிமாத் தொழிலில் முதலீடு செய்து படத் தயாரிப்பில் ஈடுபட்டார். அவருடைய தயவில் வேல்சாமிக்கு யோகம் அடித்தது. பழ. சொ. உட்படப் பலருடைய சிபாரிசின் பேரிலும் அந்தத் தயாரிப்பாளர் தம் சொந்த ஊரான நல்லப்பன் பட்டிக்கு வரும் போதெல்லாம் வேல்சாமி நேரில் போய்ப் பார்த்து மன்றாடியதன் காரணமாக வும் திடீரென்று ஒரு நாள் வேல்சாமிக்கு அவருடைய கம்பெனியிலிருந்து சென்னைக்குப் புறப்பட்டு வரச்சொல்லிக் கடிதம் வந்தது.

நல்லப்பன்பட்டியிலிருந்து சென்னை போவதற்கு எவ்வளவு குறைந்தபட்சமாகச் செலவழித்தாலும் ரூபாய் முப்பது ஆகும். அந்த அதிர்ஷ்டம் நிறைந்த கடிதம் கிடைத்த உற்சாகத்தில் அங்கே இங்கே அலைந்து ஐந்தும் பத்துமாக வாங்கி வெகு சிரமப்பட்டு இருபது ரூபாய் வரை தயார் பண்ணி விட்டான் வேல்சாமி. மாலை ஐந்தே முக்கால் மணிக்கு ரயில் ஏறவேண்டும். நாலு மணி வரை நிதி நிலைமை இருபது ரூபாயைத் தாண்டவில்லை.

பழ. சொ. விடம் போகலாம் என்றால் அவரிடம் அடகு வைக்க மதிப்பீடுள்ள பொருள் எதுவும் வேல்சாமியிடம் இல்லை. 'நீ கொண்டாற பொருள் எதுவோ அது துல்லியமாக நான் மதிக்கறதா இருக்கணும்' என்று பழ. சொ. முன்பு சொல்லியிருந்த வாக்கியம் வேல்சாமிக்குத் திரும்பத் திரும்ப நினைவு வந்தது.

திடீரென்று ஏதோ ஞாபகம் வந்தவனாக டிரங்குப் பெட்டியைக் குடைந்து ஒரு பழைய நாற்பது பக்கம் நோட்டுப் புத்தகத்தைத் தேடி எடுத்துக் கொண்டு பழ. சொ.

கடையை நோக்கிப் புறப்பட்டான் வேல்சாமி. அப்போது மாலை நாலரை மணி ஆகியிருந்தது.

பழ. சொ. கடையில்தான் இருந்தார். யாரோ ஒரு பெண் பெரிய பித்தளைக்குடம் ஒன்றைக் கொடுத்துப் பணம் வாங்கிக் கொண்டிருந்தாள். அவளை அனுப்பிவிட்டு வேல்சாமியின் பக்கம் திரும்பி,

"வா, தம்பீ! கேள்விப்பட்டேன். ரொம்ப சந்தோஷம். நம்மூர்க் கருணேசர் சமேத மெய்யம்மை நாயகி அருளால் நீ சுபிட்சமா வளர்ந்து முன்னுக்கு வரணும்கிறது என் ஆசை" என்று பழ. சொ. அவனை வாழ்த்தி வரவேற்றார்.

"இதைக் கொஞ்சம் பாருங்க? 'வறுமை நாற்பது'ன்னு ஒரு சின்னப் பிரபந்தம் நம்மூர் மெய்யம்மை நாயகியை முன்னிலைப்படுத்திப் பாடியிருக்கேன். நீங்க பார்த்து ரெண்டு நல்ல வார்த்தை சொன்னீங்கன்னா எனக்குத் திருப்தியாக இருக்கும்" என்று அந்த நாற்பது பக்கம் நோட்டுப் புத்தகத்தைப் பழ. சொ. விடம் நீட்டினான் வேல்சாமி.

காப்பு, கடவுள் வாழ்த்துப் பாடல்களை மனத்துக்குள்ளேயே படித்துக்கொண்ட பழ. சொ. நூலின் முதல் பாடலை உற்சாக மிகுதியால் தேவாரம் பாடுவதுபோல் வாய்விட்டே அப்போது பாடத் தொடங்கிவிட்டார்.

**"கொல்லும் பசிப்பிணியின் துன்பத்தால்**
**பெருங் கொடுமை தாளாமல் நான்**
**கும்பிட்ட கைக்குப் பதில் கூப்பல்**
**அறியாத வண்கணாளர்முன்**
**பல்லும் முகமும் மலரப் பரிந்து**
**பரிந்துரைத்த சொல்லெதுவும் பலிக்காமல்**
**பரிதவித்துப் பரிதவித்து வயிறெரிந்த**
**துயரத்தின் நினைவுகளை**
**அல்லும் பகலும் அனவரதமும்**
**எப்போதும் தனித்திருந்தே**
**ஆற்றாமை மிகுந்திடவே கையற்று**
**வகையற்று வழியற்று**
**மெல்லும் படிக்கென்னை மிகநலிய**
**விடலாமோ நல்லை நகர்**
**மெய்யம்மையே கருணேசர் நேசிக்கும்**
**மிகப் பெரிய நாயகியே!"**

ஒருமுறை, இருமுறை, மும்முறை, ஆசை தீர வாய்விட்டுப் பாடியபின் "இந்த வாக்கு அட்சர லட்சம் பெறும் தம்பீ! நீ இப்படி உருகிப் பாடினது பொறுக்க முடியாமத்தான் அப்பா அந்த மெய்யம்மை கண் திறந்து உனக்கு ஒரு வழி விட்டுருக்கா" என்றார் பழ. சொ.

"துல்லியமாகப் பார்த்துதான் சொல்றீங்களா? இல்லே சும்மாவாச்சும் என்னை உற்சாகப் படுத்தறீங்களா?"

"முகஸ்துதிக்காக நான் எப்பவும் எதையுமே சொல்றதில்லை. தம்பீ! என் மதிப்பீடு எப்பவுமே துல்லியமா இருக்கும். அட்சர லட்சம் பெறுகிற நயமான வாக்கு இது."

"அப்போ இந்த அட்சரலட்சம் பெறுகிற நோட்டுப் புத்தகத்தை வச்சுக்கிட்டு ஒரு பத்து ரூபாய் கடன் கொடுங்க. எனக்கு மெட்ராஸ் போக சார்ஜுக்கு பணம் கொறையுது".

ஒரு கணம் பழ. சொ. தயங்கினார். வேல்சாமியிடம் வாங்கிய நோட்டுப் புத்தகத்திலிருந்த மற்ற முப்பத்தொன்பது பாடல்களையும் நிதானமாகப் படித்தார். பின்பு எதுவும் பேசாமல் சிட்டை, பேரேடு, நோட்டு எல்லாவற்றையும் முறையாக எடுத்து நகை, பாத்திரம் முதலிய மற்ற அடகுப் பொருள்களுக்குப் பதிவது போல் பதிவுசெய்து கையெழுத்து வாங்கிக்கொண்டு ஒரு பத்து ரூபாய் எடுத்து வேல்சாமியிடம் நீட்டினார். நோட்டுப் புத்தகத்துக்கு இரசீதும் கொடுத்தார்.

அப்போது மணி நாலு அடித்து ஐம்பது நிமிஷம். வேல்சாமி பணத்தை வாங்கிக் கொண்டு இரயிலுக்கு நேரமாகி விட்டதே என்று விரைந்தான்.

"தம்பீ! அதிகமில்லை. ஒரே வட்டிதான் போட்டிருக்கேன். வட்டி மாசத்துக்குப் பத்துப் பைசாத்தான் வரும்..." என்று ஏதோ சொல்லத் தொடங்கிய பழ.சொ.வைக் கூட அவன் சரியாகக் காதில் வாங்கிக் கொள்ளவில்லை. பழ. சொ. நகைகள், வெள்ளிப் பாத்திரங்களைப் பத்திரப்படுத்தி, வைப்பதைப்போல் அந்த நாற்பது பக்கம் நோட்டுப் புத்தகத்தையும் எடுத்து அடகுக் கடை இரும்புப் பெட்டியில் பத்திரப்படுத்திவைத்துப் பூட்டினார்.

பழ. சொ.வை வசமாக மடக்கிப் பத்து ரூபாய் வாங்கி விட்டதாக உள்ளூற மகிழ்ந்தபடி சென்னைக்கு இரயிலேறினான் வேல்சாமி. இதன்பின் அவனுடைய நல்லகாலம் ஆரம்பமாயிற்று. முதல் படத்துக்கு அவன் எழுதிய பாடல்கள் எல்லாமே 'ஹிட் சாங்ஸ்' ஆகிப் புகழ் பெற்று எங்கும் ஒலித்தன. படிப்படியாகப் பேரும் புகழும் பொருளும் வளர்ந்தன. அவன் பெரிய ஆளாகிவிட்டான்.

ஐந்து வருடங்கள் வரை வேல்சாமி ஊர்ப்பக்கம் திரும்பவே இல்லை. அந்த ஐந்து வருடங்களில் திரைப்படப் பாடல்களின் மூலம் புகழும் பொருளும் சேர்த்தது தவிர ஏராளமான கவிதை நூல்களையும் எழுதி வெளியிட்டிருந்தான். அவை நன்றாக விற்றுக் கொண்டிருந்தன. ஏதோ பிரபல பத்திரிக்கை அவனைப் பேட்டி கண்டபோது, நீங்கள் 'இது வரை எழுதியவற்றில் உங்களுக்கு மிகவும் பிடித்த பாடல் எது?' என்று கேட்டதற்கு, "நான் சிறு வயதில் எழுதிய 'வறுமை நாற்பது' என்ற தலைப்பிலான கவிதைகள் தான் எனக்கு மிகவும் பிடித்தவை" என்று அவன் பதில் சொல்லியிருந்தான். உடனே அவனுடைய பதிப்பாளருக்கு அந்த வறுமை நாற்பது என்ற கவிதைத் தொகுதியை விசாரித்து இரசிகர்களின் கடிதங்கள் குவிந்தன. பதிப்பாளர் வேல்சாமியிடம் வந்து 'வறுமை நாற்பது' பாடல்கள் புத்தகமாக வெளி வர வேண்டிய

அவசியத்தை வற்புறுத்தி ஐயாயிரம் ரூபாய்க்கு ஒரு 'செக்'கும் உடனே எழுதி நீட்டினார்.

"அது எங்க கிராமத்தில் ஒரு பெரிய விடாக்கண்டன் கொடாக் கண்டன் கிட்டச் சிக்கியிருக்கு. நேரே போனாத்தான் முடியும்" என்றான் வேல்சாமி.

பதிப்பாளர், "இந்தாங்க! இதையும் எதுக்கும் கையோட வச்சுக்குங்க... அந்த விடாக்கண்டன் ஏதாவது தகராறு பண்ணினால் என்ன செய்யறது?" என்று மேலும் ரொக்கமாக ஆயிரம் ரூபாய் வேறு தனியே ஒரு கவரில் வைத்து வேல்சாமி வசம் கொடுத்தார். எப்படியாவது புத்தகம் வெளி வந்தாக வேண்டும் அவருக்கு.

அடுத்த வாரம் கவிஞன் வேல்சாமி காரிலே நல்லப்பன்பட்டி கிராமத்துக்குப் புறப்பட்டான். ஒரு காலத்தில் தன்னை நம்பிக் கடன் கொடுக்க மறுத்த பழ. சொக்கநாதன் செட்டியாரை மருட்ட வேண்டும் என்பதற்காக ஒரு பளீரென்ற சவர்லே இம்பாலா காரில் போய் இறங்கிக் "கணக்கு கிணக்கு ஒண்ணும் பார்க்க வேண்டாம்! இந்தாங்க. ஆயிரம் ரூபாயை வைச்சுக்குங்க. அந்த நாற்பது பக்கம் நோட்டுப் புத்தகத்தை அடகு மீட்டுக்கறேன்" என்பதாகச் சொல்லி பழ. சொ. வைத் திணற அடிக்க வேண்டும் என்றெல்லாம் கற்பனை செய்து கொண்டே காரில் போனான் வேல்சாமி. கார் மாலை மூன்றரை மணிக்கு நல்லப்பன் பட்டியை அடைந்தது.

கடை வாசலில் தீடீரென்று கப்பல் போல் ஒரு பெரிய கார் வழுக்கிக் கொண்டு வந்து நின்றதைப் பார்த்ததும் பழ. சொ. மூக்குக் கண்ணாடியை அணிந்து கொண்டு மீண்டும் உற்றுக் கவனித்தார்.

"மறந்துட்டீங்களா? நான்தான் வேல்சாமி. அந்த நாளிலே உங்க திருக்குறள் கழகக் கவியரங்கத்திலே எல்லாம் பாடியிருக்கேனே? ஞாபகம் இல்லையா?"

"அடேடே! தம்பியா? வாங்க, தம்பி! உட்காருங்க... ஆளே அடையாளம் தெரியாமே மாறிப்போயிட்டீங்களே?... நல்லா இருக்கீங்களா? செளக்கியம் எல்லாம் எப்படீ? இன்னிக்குதான் உங்களை நினைச்சேன். பழைய பாக்கி எல்லாம் சேர்த்துப் பார்க்கறப்ப அந்தப் பத்து ரூபாய் சொச்சம் அப்படியே இருந்திச்சு..."

"நானும் அதுக்காகத்தான் வந்தேன் செட்டியார் சார்! கணக்குக் கிணக்கு ஒண்ணும் நீங்க பார்க்க வேண்டாம். அன்னிக்கு அந்தப் பத்து ரூபாய் நீங்க தரலேன்னா நான் மெட்ராஸ் புறப்பட்டுப் போய் இன்னைக்கி இவ்வளவு நல்லா இருக்க முடியாது. ஏதோ நீங்க நல்ல மனசோட உதவி பண்ணினீங்க. நான் இன்னிக்கு வசதியா இருக்கேன். இந்தாங்க! இதைக் கொடுத்திட்டு என்னோட நாற்பது பக்கம் நோட்டுப் புத்தகத்தை நான் அடகு மீட்டுக்கறேன்" என்று ஆயிரம் ரூபாய் அடங்கிய கவரை எடுத்துப் பழ. சொ.விடம் நீட்டினான் வேல்சாமி.

பழ. சொக்கநாதன் செட்டியார் அதைக் கையில் வாங்கிப் பிரிக்காமலே கீழே வைத்துவிட்டுப் பேரேட்டை எடுத்துப் புரட்டிப் பார்த்து, "தம்பி! ரசீது

கொண்டாந்திருக்கீங்களா? நீங்க தர வேண்டியது பதினேழு ரூபாய் எண்பத்தாறு காசு ஆகுது. வட்டியும் முதலுமாகச் சேர்த்துதான் சொல்றேன்'' என்றார்.

''செட்டியார் சார்! இப்போ நான் ஒண்ணு கேட்கிறேன். தப்பா நினைச்சுக்காதீங்க. நான் திரும்பி வந்து அடகைத் திருப்ப முடியாமல் போயிருந்தா உங்களுக்கு இந்தப் பதினேழு ரூபாய் எண்பத்தாறு காசு நஷ்டம் தானே? அப்படி நஷ்டமாகியிருந்தா நீங்க முன்னே அடிக்கடி சொல்வீங்களே, என் மதிப்பீடு ரொம்பத் துல்லியமா இருக்கும்! நான் ஒரு நாளும் நஷ்டத்துக்கு வியாபாரம் பண்ணினதில்லே. என்னோட வாடிக்கைக் காரங்களையும் நஷ்டப்பட விட்டதில்லைன்னு. அது பொய்யாய்ப் போயிருக்கும். இல்லையா?''

''யார் சொன்னா? நீங்க அடகு திருப்ப வராட்டி அந்த நாற்பது பக்க நோட்டிலே இருக்கிறதை நானே நம்மூர்க் கோவில் பெரிய திருவிழா சமயத்திலே சின்னப் புஸ்தகமா அச்சடிச்சுப் போட்டு எட்டணாவோ, முக்கால் ரூபாயோ விலைவெச்சு வித்து எனக்குச் சேரவேண்டிய பதினேழு ரூபாய் எண்பத்தாறு காசை வரவு வெச்சுக்கிட்டுப் பேப்பர், பிரஸ் பைண்டிங் செலவு போக லாபத்தைக் கோவில் உண்டியல்லே போட்டுடலாம்னு இருந்தேனாக்கும்'' என்றார் செட்டியார்.

வேல்சாமி அதைக் கேட்டு அசந்து போனான்.

''கவரை எடுத்துப் பிரிச்சுப் பாருங்க!''

பழ.சொ. கவரை எடுத்துப் பிரித்துப் பத்து நூறு ரூபாய் நோட்டுக்கள் இருப்பதை கண்டு மலைத்தபோது, ''எடுத்துக்குங்க! அவ்வளவும் உங்களுக்குத்தான். இவ்வளவு நாட்கள் நீங்க அந்த நோட்டுப்புஸ்தகத்தைக் காப்பாத்தித் தந்ததுக்கு என் வெகுமதி.''

''வெகுமதியாவது ஒண்ணாவது... அதெல்லாம் நான் வாங்குற வழக்கமில்லை...'' என்று 982 ரூ, 14 நயா பைசாவைத் திருப்பிக் கொடுத்த பழ.சொ. அடகு ரசீதை வற்புறுத்திக் கேட்டார்.

''ரசீது இல்லே! எங்கேயோ தவறிப்போச்சு. நான் வேணா என் அடகுப் பண்டத்தைத் திருப்பி வாங்கிக்கிட்டதாக எழுதிக் கையெழுத்துப் போட்டுக் கொடுத்துடறேன்.''

''அப்போ சரி! நான் சொல்றபடி எழுதுங்க, தம்பீ!'' என்று தொடங்கிப் பழ.சொ.வே அவன் எழுதிக் கொடுக்க வேண்டிய கடிதத்தை 'டிக்டேட்' செய்யத் தொடங்கினார். அந்தக் கடிதத்தில் ரசீது தொலைந்து போனதை அவனே தெரிவிப்பது போல் எழுதச் செய்திருந்தார். பழைய ரசீதின் அடிக்கட்டையிலும் அடகு மீண்டதாக அவன் கைப்பட எழுதிக் கையெழுத்து வாங்கிக் கொண்டார். இவ்வளவும் முடிந்த பின்னரே, இரும்புப் பெட்டியைத் திறந்து அந்த நாற்பது பக்க நோட்டுப் புத்தகத்தை எடுத்துக் கண்களில் ஒத்திக்கொண்டு மரியாதையாக வேல்சாமியிடம் திருப்பிக் கொடுத்தார் பழ.சொ. வேல்சாமி அதை வாங்கிக் கொண்டு சிரித்தபடியே பழ.சொ.வை நோக்கி வினவினான்:-

"நமக்குள்ளே இவ்வளவு பிஸினஸ் லைக்கா இருக்கணுமா செட்டியார் ஸார்? நீங்க இந்தப் பணத்தைத் திருப்பிக் கொடுத்தது எனக்குக் கட்டோட பிடிக்கலை... நீங்க அன்னிக்குச் சமயத்திலே பத்து ரூபா தந்திருக்கலேன்னா நான் ஊரை விட்டே புறப்பட்டிருக்க முடியாது. எதை நம்பி அன்னிக்கு நீங்க கடன் கொடுத்தீங்க? இந்த நாற்பது பக்க நோட்டை மட்டும் நம்பியா? என்னை நம்பியா?"

"நிச்சயமா இந்த நாற்பது பக்கம் நோட்டை நம்பித்தான் கடன் கொடுத்தேன். என் மதிப்பீடு ஒரு நாளும் சோடை போகாது தம்பி! என்னிக்காவது ஒரு நாள் இந்தக் கவிதை லட்சம் லட்சமா விலை போகும்னு அன்னிக்கே மதிச்சவன் நான்."

"அப்படி மதிச்சவர் கணக்கா ஏன் பத்து ரூபா மட்டும் கடன் கொடுத்தீர்களாம்?"

"அது என் தப்பில்லே தம்பீ! நீங்க அன்னிக்கு என் கிட்டக் கடனாகக் கேட்டது அவ்வளவுதான். கேட்கிறதுக்கு மேலே நாங்க கொடுக்கப்படாது. இப்பக்கூட அஞ்சு வருஷத்துச் சில்லறை மாசத்துக்கு கணக்காகப் பத்து ரூபாய் முதலுக்கு ஒன்று வட்டி வீதத்துக்கு என்ன ஆகுதோ அதுக்கு மேலே கால் தம்பிடி நான் உங்க கிட்டே வாங்கலே தம்பீ..."

"ஏன் வாங்காம இருக்கணும்? நீங்க அப்படி வாங்க மாட்டேன்னு பிடிவாதம் பிடிக்கிறதுதான் எனக்குப் பிடிக்கலே."

"அது நியாயமில்லே தம்பீ! அடகுக் கடையிலே மீட்டுக்கிட்டுப் போற பொருள் மேலே என்ன பற்று இருக்குதோ அதை வரவு வச்சிக்கிட்டுப் பொருளைத் திருப்பிக் கொடுத்துடறதுதான் வளமுறை. அதுக்கு மேலே நான் வாங்கறதோ, வாங்க ஆசைப்படறதோ நியாயமா இருக்காது. நான் ஒரு நாளும் நஷ்டத்துக்கு வியாபாரம் பண்ணினவன் இல்லே. என் வாடிக்கைக் காரங்களையும் நஷ்டப்பட விட்டதில்லை. அது என் தொழில் தர்மம். அதை நான் விட்டுட முடியாதுங்க தம்பீ... நீங்க என்னை மன்னிச்சுடணும்" என்று கைகூப்பினார் பழ. சொ.

வேறு வழியின்றிக் கவிஞர் வேல்சாமியும் பதிலுக்குக் கைகூப்பிவிட்டுப் புறப்பட எழுந்திருக்க வேண்டியதாயிற்று.

**(கல்கி, தீபாவளி மலர், 1975)**

# 126. தலைமுறை இடைவெளி

துணைவேந்தர் மிகவும் அமைதி இழந்து காணப்பட்டார். ஒரு வேலையும் ஓடாமல் பரபரப்படைந்த நிலையில் இருந்தார் அவர். காந்தளூர்ப் பல்கலைக்கழக எல்லை ஏறக்குறையப் போர்க்களம் போல ஆகியிருந்தது. விடுதிகளைக் காலி செய்து மாணவ-மாணவிகளை வெளியே அனுப்புவதா, காம்பஸுக்குள் போலீஸை வரச் சொல்வதா என்பதைப் பொறுத்துத் துணைவேந்தருக்கும் பிரபுவுக்கும் கருத்து வேறுபாடு இருந்தது.

வார்டனாகிய டாக்டர் பிரபு, இளைஞர். ஓரளவு மாணவர்களோடு நெருங்கிப் பழகுகிறவர். அந்தப் பல்கலைக்கழகத்தில் ஆங்கிலத் துறையின் தலைவர். கலகலப்பாகவும் தாராளமாகவும் பழகும் இயல்புள்ளவர். துணைவேந்தர் குலசேகரன் இதற்கு நேர்மாறான இயல்புள்ளவர். முன்கோபி. பதற்றப்படுகிறவர். ‘இந்தத் தலைமுறையிலும் இனிமேலும் படிக்க வருகிற பையன்கள் உருப்படவே மாட்டார்கள். அரசியல்வாதிகள் அவர்களைக் கெடுத்துக் குட்டிச் சுவராக்கி விட்டார்கள்’ என்று அடிக்கடி வெறுத்துச் சொல்லுகிறவர்.

“நான் அப்படி நினைக்கவில்லை ஸார்! மாணவர்களை வழிக்குக் கொண்டு வரலாம் என்ற நம்பிக்கை எனக்கு இருக்கிறது” என்று டாக்டர் பிரபு ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும் துணைவேந்தரிடம் வாதாடுவார். மாணவர்களின் கட்சியை எடுத்துச் சொல்லுவார்.

இந்த முறை ஏற்பட்ட தகராறு மிகவும் சாதாரணமாகத் தான் தொடங்கியது. ஆனால் நொடியில் மிகப் பெரிதாக வளர்ந்துவிட்டது.

ஹாஸ்டல் ‘பி’ பிரிவு மெஸ்ஸில் காலைச் சிற்றுண்டியின் போது இட்டிலிக்கு வழங்கப்பட்ட சட்டினியில் எப்படியோ ஒரு கரப்பான் பூச்சி விழுந்து கலந்து, ஒரு மாணவனின் பிளேட் வரை வந்துவிட்டது. மெஸ்ஸில் அப்போது சாப்பிட்டுக் கொண்டிருந்த அத்தனை மாணவர்களும் உடனே கரப்பான் பூச்சியோடு கூடிய அந்தத் தட்டுடன் ஊர்வலமாக உணவு விடுதிக் கண்காணிப்பாளரும் பொது உறவு அதிகாரியுமாகிய பி.ஆர்.ஓ.வைச் சந்திக்கப் போயிருக்கிறார்கள். இந்தப் பொது உறவு அதிகாரி யாரோ ஓர் அமைச்சருக்கு உறவினர். அதனால் தம்மை யாரும் எதுவும் செய்துவிட முடியாதென்று இறுமாப்பாக இருப்பவர். துணைவேந்தரை விடத் தம்மை அதிகச் செல்வாக்குள்ளவராக நினைப்பவர். வறட்டுப் பிடிவாதக்காரர். விட்டுக் கொடுக்காத முரண்டு உள்ளவர்.

சந்திக்க வந்த மாணவர்களை வரவேற்று அன்பாக இரண்டு வார்த்தை பேசி, "இனி, இப்படி நடக்காமல் கவனித்துக் கொள்கிறேன். சமையற்காரர்களையும் கண்டிக்கிறேன். தவறு நேர்ந்ததற்கு மன்னியுங்கள்" என்று அவர் ஆறுதலாகச் சொல்லியிருக்கலாம். ஆனால் அவர் அப்படிச் செய்யத் தவறியதோடு எரிகிற நெருப்பில் எண்ணெயை வார்ப்பதுபோல், "எல்லாம் நீங்க படிச்சுக் கிழிக்கிற லட்சணத்துக்கு இது போதும், போங்கடா" என்பது போல் எடுத்தெறிந்து பேசிவிட்டார்.

உடனே அது பெரிய போராட்டமாக வெடித்துவிட்டது. பொது உறவு அதிகாரி காம்பஸுக்குள் இருந்த தம் வீட்டிலிருந்து வெளியேற முடியவில்லை. மாணவர்கள் அவர் வீட்டைச் சூழ்ந்து கொண்டனர். கண்ணாடி ஜன்னல்கள் நொறுங்கின. நாற்காலிகள், மேஜைகள் உடைந்தன. கற்கள் பறந்தன. ஒரே களேபரம். மெஸ்ஸிலும் பயங்கரமான சேதங்கள் ஏற்பட்டன. பொது உறவு அதிகாரி மன்னிப்புக் கேட்டாலொழிய விடமாட்டோம் என்றார்கள் மாணவர்கள். பொது உறவு அதிகாரியோ மன்னிப்புக் கேட்க முடியவே முடியாது என்றார்.

அவருக்கு ஒரு குறைவும் வராமல் பார்த்துக் கொள்ளும்படி மந்திரி டெலிஃபோன் மூலம் துணைவேந்தரை வற்புறுத்தினார். மந்திரியை எதிர்த்துக்கொண்டால் இன்னும் ஓர் ஐந்தாண்டு பதவியில் நீடிப்பது போய்விடும் என்ற பயம் துணைவேந்தருக்கு இருந்தது. அதனால் பொது உறவு அதிகாரி மேல் அவர் எந்த நடவடிக்கையும் எடுக்கவில்லை. ஹாஸ்டல் சொத்துக்கள், விடுதியைச் சேர்ந்த பொருள்கள் ஆயிரக்கணக்கில் சேதம் அடைந்துங்கூடத் துணைவேந்தர், சம்பந்தப்பட்ட அதிகாரியைக் கண்டிக்கவில்லை; அவரைக் கடிந்து கொள்ள முயலவும் இல்லை. பையன்களின் கோபம் இதனால் அதிகமாயிற்று.

"படிக்கிற பையன்கள் பணிவாகத்தான் போக வேண்டும். விநயம் இல்லாவிட்டால் வித்தையைக் கற்க முடியாது" என்றார் துணைவேந்தர்.

"நான் அப்படி நினைக்கவில்லை சார்! பணிவாக இருப்பது எப்படி என்று நாம்தான் அவர்களுக்கு நடந்து காட்ட வேண்டும். நாமோ வீண் பிடிவாதம், வறட்டுக் கர்வம் இவற்றை வைத்துக்கொண்டு சுலபமாகத் தீர வேண்டிய பிரச்னையைக்கூட இழுத்தடிக்கிறோம். பணிவற்ற விதத்தில் பணிவைக்கூடக் கற்றுக் கொடுக்க முடியாது ஸார்."

"எதைச் சொல்கிறீர்கள் மிஸ்டர் பிரபு? நான் அவர்களிடம் போய் மன்னிப்புக் கேட்க வேண்டும் என்கிறீர்களா?"

"நான் உங்களைச் சொல்லவில்லை ஸார்! தவறு செய்தவர்களுக்கு அந்தப் புத்தி இருக்க வேண்டும்."

"ஏதோ மூத்தவன் சொன்னான் என்று மன்னித்து மறந்து விட்டுவிட வேண்டியதுதானே?"

*“மன்னிப்பு ஒரு வழிப்பாதை அல்ல. நாம் மன்னித்தால்தான் அவர்கள் மன்னிக்க முடியும். இந்தக் காலத்து இளைஞர்கள் மூப்பு என்பதைத் தவறு செய்யும் உரிமையாக ஏற்றுக் கொள்ள மாட்டார்கள் ஸார்! யார் செய்தாலும் தவறு தவறு தான் என்பார்கள்.”*

*“நீங்களே மாணவர்களைப் போலப் பேசுகிறீர்களே! இந்தப் பல்கலைக்கழகத்தின் வார்டன் நீங்கள்தான் என்பதை நினைவு வைத்துக் கொண்டு பேசுங்கள்.”*

*“பதவிகளையே நினைத்துக் கொண்டிருந்தால் மனிதத்தன்மைகள் மறந்து போய் விடுகின்றன, ஸார்!”*

*“எனக்கு இந்தப் பையன்களோடு மாரடித்து மாரடித்து அலுத்துவிட்டது. பல்கலைக் கழகத்தை ஒரு மாத காலத்துக்கு மூடிவிட்டுக் காவலுக்காகப் போலீஸை உள்ளே அழைப்பதைத் தவிர வேறு வழியே இல்லை.”*

*“அப்படிச் செய்தால் சுலபமாகத் தீரக்கூடிய பிரச்சினை மேலும் குழப்பமாகிவிடும். உண்ணும் உணவிலே புழு பூச்சியும் அசுத்தமும் இருந்தால் உங்கள் பையனோ என் சகோதரனோகூடக் கோபப்பட நியாயம் இருக்கிறது. கமிஷன் கொடுக்கிறார்கள் என்கிற ஒரே காரணத்துக்காக மட்டமான கடைகளில் பல்கலைக்கழக உணவு விடுதிக்கான காய்கறிகள், சாமான்களை வாங்குகிறார்கள். அதனால் வருகிற வினைதான் இது.”*

*“ஏதேது? நீங்களே மாணவர்களுக்குச் சொல்லிக் கொடுப்பீர்கள் போல் இருக்கிறதே!”*

*“உண்மையை ஏன் ஸார் மறைக்க வேண்டும்? தவறு நம் பக்கம் இருந்தால் நாம் ஒரு குழந்தையிடங்கூட வயது வித்தியாசம் பாராமல் துணிந்து உடனே மன்னிப்புக் கேட்கத் தயாராக இருக்க வேண்டும் ஸார்!”*

*“உங்களுக்கு வயதும் அநுபவமும் குறைவாக இருப்பதனால்தான் நீங்கள் இப்படி எல்லாம் பேசுகிறீர்கள் பிரபு! பையன்களிடம் விட்டுக் கொடுத்தால் அப்புறம் நம்மை அவர்கள் மதிக்கமாட்டார்கள்.”*

*“இந்தக் காலத்து இளைஞர்கள் வறட்டுப் பிடிவாதத்தையும் முரண்டு களையுந்தான் மதிக்கமாட்டார்கள்; மன்னிக்கமாட்டார்கள். நாம் சிறிது விட்டுக் கொடுத்தால் அவர்களை நிச்சயம் வழிக்குக் கொண்டு வந்துவிடலாம். ‘இனிமேல் இப்படி நடக்காமல் பார்த்துக் கொள்கிறோம்’ என்று ஹாஸ்டல் பி.ஆர்.ஓ. ஊர்வலமாக வந்த மாணவர்களிடம் ஒரு வார்த்தை ஆறுதலாகச் சொல்லியிருந்தால் இவ்வளவு தூரம் இந்தப் பிரச்னை வளர்ந்திருக்காது ஸார்!’*

*“சரி! உமக்கும் எனக்கும் ஒரு பந்தயம். நாளைக் காலை வரை டயம் தருகிறேன். மாணவர்களோடு கலந்து பேசி உம் கொள்கைப்படியே விட்டுக் கொடுத்து நிலைமையைச் சரி செய்தால் என் கையிலிருந்து உமக்கு ஆயிரம் ரூபாய் தருகிறேன்.*

உம்மால் முடியுமா? முடியாவிட்டால் நாளைக் காலையில் பல்கலைக்கழகத்தைக் கால வரையறையின்றி மூடும்படி உத்தரவிட்டு விட்டுப் பாதுகாப்புக்குப் போலீஸை அழைக்க வேண்டியதுதான்."

"நாளைக் காலைவரை அவசியம் இல்லை, ஸார்! இன்றிரவே நிலைமையைச் சரி செய்ய என்னால் முடியும். ஆனால் ஒரு நிபந்தனை."

"என்ன நிபந்தனை?"

"பையன்களிடம் திமிராகப் பேசிய ஹாஸ்டல் பி.ஆர்.ஓ.வைத் தற்காலிகமாக வாவது சஸ்பெண்ட் செய்து நீங்கள் ஓர் ஆர்டர் தர வேண்டும்."

"அது முடியாத காரியம். நான் மந்திரிக்கும் பயந்தாக வேண்டும். பி.ஆர்.ஓ. மந்திரிக்கு மிகவும் வேண்டியவர்."

"அவர் மட்டும் மாணவர்களிடம் 'நீங்கள் படித்துக் கிழிக்கிற லட்சணத்துக்கு இது போதும் போங்க'ன்னு சொல்லியிருக்காவிட்டால் இவ்வளவு தூரம் வந்திருக்காது."

"என்ன செய்யறது? அவர் போதாத வேளை! சொல்லித் தொலைத்திருக்கிறார்."

"அது உங்களுக்கும் எனக்கும் பல்கலைக்கழகத்துக்கும் அல்லவா போதாத வேளையாக முடிந்துவிட்டது?"

இதற்குத் துணைவேந்தர் பதிலெதுவும் கூறவில்லை. பிரபுவே மேலும் பேசினார் :

"ஒரு தனி நபருடைய பிடிவாதத்துக்காகப் பல்கலைக்கழகத்தையே மூட முடியாது. அவரைச் சஸ்பெண்ட் செய்ய முடியாவிட்டாலும், ஹாஸ்டலுக்குக் காய்கறி, பலசரக்குச் சாமான்கள் வாங்குகிற பொறுப்பை அவரிடமிருந்து வார்டனாகிய என் பெயருக்கோ வேறு ஒருவர் பெயருக்கோ உடனே மாற்றுங்கள். அடுத்த நிமிஷமே இந்த ரெஸிடென்ஷியல் யூனிவர்ஸிடி முழுவதும் அமைதியடைந்து பழைய நிலைக்குத் திரும்பச் செய்துவிடலாம். 'நாங்கள் செய்த எந்தத் தவற்றுக்காகவும் வருந்தமாட்டோம். மாணவர்களே பணிந்து போக வேண்டும்' என்று நீங்கள் எதிர்பார்த்தால் அது நடக்காது. பிடிவாதம் மற்றொரு பிடிவாதத்தை வெல்லாது; பிடிவாதத்தை அன்பாலும் விட்டுக் கொடுப்பதாலுமே ஜெயிக்க முடியும்."

துணைவேந்தர் தயங்கினார். சிந்தித்தார். நீண்ட நேரச் சிந்தனைக்குப் பிறகு வேறு வழி இல்லை என்ற காரணத்தால் வேண்டா வெறுப்பாக வார்டனின் நிபந்தனைக்கு அவர் இணங்க வேண்டியதாயிற்று.

"பி.ஆர்.ஓ.வைச் சஸ்பெண்ட் செய்தால்தான் அவருக்கும் அவருக்கு வேண்டிய மந்திரிக்கும் கோபம் வரும். 'ஹாஸ்டலுக்கு வேண்டிய காய்கறி, பலசரக்கு, பால் தயிர் முதலிய சாமான்கள் வாங்கும் பொறுப்பை இனிமேல் வார்டனே கவனித்துக் கொள்வார்' என ஆர்டர் போடுவதில் எனக்குச் சிரமம் எதுவும் இல்லை, பிரபு!"

"உங்களுக்குச் சிரமம் இருக்காது ஸார்! ஆனால் பி.ஆர்.ஓ. அதனால் சிரமப்படுவார். சாமான்கள் வாங்குவதில்தான் அவருக்கு லாபம் இருக்கிறது."

"புரிகிறது" என்றார் துணைவேந்தர். அடுத்த அரைமணி நேரத்துக்குள்ளே ஹாஸ்டலுக்குச் சகல சாமான்களும் வாங்கும் 'பர்ச்சேஸிங் அதாரிடி'யாக வார்டன் பிரபுவுக்கு அதிகாரம் அளிக்கும் ஆர்டரை அவர் கையில் தந்தபடியே,

"இந்த ஆர்டரை மட்டும் வைத்துக்கொண்டு இவ்வளவு பெரிய கொந்தளிப்பை எப்படித்தான் அடக்கப் போகிறீர்களோ, எனக்குத் தெரியவில்லை. ஆனாலும் நீங்கள் சொன்னபடியே செய்கிறேன். உமக்கும் எனக்கும் பந்தயம் வேறு இருக்கிறது" என்றார் துணைவேந்தர்.

"பந்தயத்தில் நிச்சயமாக நான் ஜெயிக்கிறேன். ஆயிரம் ரூபாய் தயாராக இருக்கட்டும்!" என்று கூறிவிட்டுப் புறப்பட்டார் டாக்டர் பிரபு.

அப்போது மாலை ஆறு மணி. துணைவேந்தர் பிரபு திரும்பி வர இரவு எவ்வளவு நேரமானாலும் அதுவரை தம் அலுவலகத்திலேயே காத்திருப்பதாகச் சொல்லியிருந்தார்.

துணைவேந்தருக்கு நம்பிக்கை இல்லை. ஒரு சிறு அதிகார மாறுதல் உத்தரவை மட்டும் வைத்துக் கொண்டு மாணவர்களின் கொந்தளிப்பை அடக்கிவிட முடியும் என்று தோன்றவில்லை. 'பி.ஆர்.ஓ.வை டிஸ்மிஸ் செய்' என்றுதான் மாணவர்கள் வற்புறுத்துவார்கள் என்று எண்ணினார் துணைவேந்தர். பிரபு நிச்சயமாகப் பந்தயத்தில் தோற்றுப் போய் ஆயிரம் ரூபாயைத் தம்மிடம் எண்ணி வைக்கும்படி நேரப் போகிறது என்றுதான் துணைவேந்தர் நம்பினார்.

ஆறே முக்கால் மணிக்கு அறையின் முகப்பில் பால்கனிக்கு வந்து வெளியே பார்த்தபோது, ஹாஸ்டல் புல்வெளியில் மாணவர்கள் கூட்டத்தின் நடுவே பிரபு பேசிக் கொண்டிருப்பதைத் துணைவேந்தர் குலசேகரன் கவனித்தார். உள்ளூரிலுள்ள பிரபல ஹோட்டலின் 'காட்டரிங் சர்வீஸ் வேன்' ஒன்று சிற்றுண்டி காப்பியுடன் ஹாஸ்டலுக்குள் நுழைவதையும் கண்டார்.

சிறிது நேரத்தில் மாணவர்களுக்குச் சிற்றுண்டி காபி வழங்கப்படுவதையும் துணைவேந்தர் கவனித்தார். பிரபு தண்டச்செலவு செய்வதாகத் தோன்றியது அவருக்கு. அறைக்குத் திரும்பி யூனிவர்ஸிடி கிராண்ட்ஸ் கமிஷன் ஃபைலை எடுத்துப் புரட்டத் தொடங்கினார். துணைவேந்தரின் மனம் ஃபைலில் செல்லவில்லை.

ஏழே கால் மணிக்கு, "மே ஐ கம் இன் ஸார்?" என்ற வேண்டுதலோடு இரண்டு மாணவர்கள் பின் தொடரத் துணைவேந்தர் அறைக்குள் நுழைந்தார் வார்டன் பிரபு.

முதலில் தம்முடன் வந்த மாணவர்களைத் துணைவேந்தருக்கு முன் அமரச் செய்துவிட்டுப் பின் பிரபுவும் அமர்ந்தார். வந்திருக்கும் மாணவர்கள் இருவரும் மாணவர் யூனியனின் தலைவரும் செயலாளரும் என்பது துணைவேந்தருக்குத் தெரியும்.

"ஸார்! நாங்கள் போராட்டத்தை நிறுத்திக் கொள்கிறோம். பிரச்னையைச் சுமுகமாகவும் மாணவர்களாகிய எங்கள் மேல் அநுதாபத்துடனும் தீர்த்து வைத்த

டாக்டர் பிரபுவுக்கு நாங்கள் மிகவும் கடமைப்பட்டிருக்கிறோம்" என்றார்கள் மாணவர் பிரதிநிதிகள் இருவரும்.

துணைவேந்தருக்குத் தம் செவிகளையே நம்ப முடியவில்லை. பிரபுவிடம் ஏதாவது வசிய மருந்து இருக்குமோ என்று வியப்பாக இருந்தது அவருக்கு.

"இனி நீங்கள் போகலாம்" என்று பிரபுவே மாணவர்களிடம் கை குலுக்கி விடை கொடுத்தார். துணைவேந்தரோடும் கை குலுக்கி விடைபெற்றுக்கொண்டு மாணவர்கள் சென்றார்கள்.

அவர்கள் சென்றதும், "மிஸ்டர் பிரபு! என்னிடம் ரொக்கமாக அவ்வளவு பெருந்தொகை இல்லை. ஒரு செக் தருகிறேன்" என்று கூறியபடியே ஆயிர ரூபாய்க்குச் செக் எழுதத் தொடங்கினார் துணைவேந்தர்.

"பரவாயில்லை. எப்படி ஆனாலும் சரி. உங்கள் 'செக்'கை நான் பணமாக மாற்றப் போவதில்லை, ஸார்! சும்மா ஒரு நற்சான்றிதழைப்போல் ஃப்ரேம் போட்டு மாட்டப் போகிறேன்" என்றார் பிரபு. "உங்கள் இஷ்டம்" எனப் புன்முறுவல் பூத்தவாறே பிரபுவிடம் செக்கைக் கொடுத்துவிட்டு, வியப்பு மேலிட்ட குரலில், "என்ன ஐயா மந்திரம் போட்டீர்? ஆறு மணிக்குப் புறப்பட்டுப் போய் ஏழரை மணிக்குள் காரியத்தை வெற்றிகரமாக முடித்துக்கொண்டு வந்துவிட்டீரே!" என்று வினவினார் துணைவேந்தர்.

"ஒரு மந்திரமும் இல்லை. எல்லாத் தரப்பு மாணவர்களையும் கூப்பிட்டு அன்போடு பேசினேன். அவர்கள் சொல்வதையும் பொறுமையோடு கேட்டேன். பின்பு ஹாஸ்டலுக்குச் சாமான்கள் வாங்கும் பொறுப்பு மாற்றம் பற்றிய உங்கள் ஆர்டரைக் காட்டினேன். அப்படிக் காட்டிய சுவட்டோடு 'ஹாஸ்டலுக்குக் காய்கறி, பால், தயிர், பலசரக்கு வாங்கும் விஷயத்தில் எனக்கு ஆலோசனை கூற, 'ஸ்டூடண்ட்ஸ் அட்வைஸரி பேனல்' ஒன்று தேவை. அதற்கு நீங்களே பெயர்களைத் தாருங்கள்' என்று கூறி, அவர்களில் பன்னிரண்டு பேர் கொண்ட ஓர் 'அட்வைஸரி பேனல்' அமைத்தேன். முடிந்ததும் என் சொந்தச் செலவில் வெளியே இருந்து குட்லண்ட்ஸ் ஓட்டல் காட்டரிங் ஸர்வீஸ் மூலம் மாணவர்களுக்கு ஒரு டீ கொடுத்தேன். பிரச்னை சுலபமாக முடிந்துவிட்டது."

"உண்மையாகவா? பிரமாதம்!"

"பிரமாதம் ஒன்றும் இல்லை. சாதாரணமாகத்தான் இதை நான் செய்தேன். கடுமையாக இருப்பதனால் எந்தச் சிக்கலும் தீராது. தாராள மனப்பான்மை ஒன்றுதான் சிக்கலைத் தீர்க்கும்" என்றார் பிரபு.

துணைவேந்தர் எதிரே நிற்கும் அந்த முப்பத்திரண்டு வயது இளைஞரின் மலர்ந்த முகத்தை நிமிர்ந்து பார்த்தார்.

வயதில் மட்டுமல்லாமல் சிந்தனையிலும், பிரச்சினைகளை அணுகும் முறையிலும்கூட, அவருக்கும் தனக்கும் கால் நூற்றாண்டு இடைவெளி இருப்பது போல் தோன்றியது துணைவேந்தருக்கு. தம் இருக்கையிலிருந்து புதிய மரியாதையோடு எழுந்து நின்று, "ரொம்ப நல்லது! உங்களைப் பாராட்டுகிறேன், மிஸ்டர் பிரபு" என்று கைக்குலுக்கி விடை கொடுத்தார் அவர்.

வெளியே காம்பஸில் இரண்டு நாட்களாகக் கேட்டுக் கொண்டிருந்த 'ஒழிக டௌன், டௌன்!' என்ற குரல்கள் ஓய்ந்திருந்தன. அமைதியினிடையே மாமரத்துக் குயில் நிதானமாக அகவுவது கேட்கத் தொடங்கியிருந்தது.

**(கலைமகள், தீபாவளி மலர், 1977)**



# 127. இன்னும் எழுதப்படாத ஒரு கவிதை

'**கா**விய கங்கை' - என்னும் அந்த மலையடிவாரத்துத் தோட்டம் நிலா ஒளியில் ஒரு சொப்பன உலகம் போல் அத்தனை அழகாக இருந்தது. அந்தத் தோட்டத்தின் கழுத்திற்கு மாலையிட்டதுபோல் அதன் வலது பக்கம் ஒன்றும் இடதுபக்கம் ஒன்றுமாக இரண்டு காட்டாறுகள் மலையிலிருந்து கீழிறங்கிச் சமவெளியில் சிறிது தொலைவு வரை ஓடிப் பின் ஒன்று சேர்ந்தன. மலைச்சரிவில் வெயில் உள்ளே நுழைய முடியாதபடி மரஞ்செடி கொடிகளால் அடர்ந்த அந்தத் தோட்டம் அமைந்திருந்தது. ஒரு மதிப்பீட்டில் ஐம்பது ஏக்கர் அல்லது அதற்கு மேலும் பரப்பு இருக்கலாமென்று தோன்றியது. தோட்டம் முழுவதும் எங்கே திரும்பினாலும் புள்ளிமான்கள் மேய்ந்துகொண்டிருக்கிற அழகையும் அங்கே காண முடிந்தது. பூக்கள், பசுமை, பாக்கு மரங்களின் பாளைகள் இவற்றின் ஒருங்கிணைந்த வாசனை வேறு. தோட்டத்தில் மயில்கள் தோகை விரித்தாடிக்கொண்டிருந்தன.

நான் மாலை இரயிலில் அந்த மலைப்பகுதிக்கு அருகே இருந்த சமீபத்து இரயில் நிலையத்தில் போய் இறங்கி, அங்கிருந்து ஒரு வாடகைக் காரில் பயணம் செய்து இருட்டத் தொடங்குகிற சமயத்துக்குக் 'காவிய கங்கை'யில் நுழைந்திருந்தேன். 'காவிய கங்கை'யின் நிர்வாக அலுவலகத்துக்குச் சென்று ஏற்கெனவே எங்கள் பத்திரிகையின் சார்பில் அவர்களுக்கு எழுதியிருந்த கடிதத்தை நினைவூட்டி என்னை அறிமுகப் படுத்திக் கொண்டேன். அவர்கள் அன்போடு வரவேற்றார்கள்.

"இன்றிரவு நீங்கள் அவரைப் பார்க்க முடியாது. நாளை அவருடைய தொண்ணூறாவது பிறந்ததினம். நாளைக்கு முழுவதும் நீங்கள் அவரோடு இருந்து கவனித்து உங்களுக்கு வேண்டியதை எழுதிக் கொள்ளலாம். அதற்கு வேண்டிய ஏற்பாடுகள் செய்கிறேன்" என்று கூறிய அலுவலகப் பொது உறவு அதிகாரி நான் அங்கே தங்கிக் கொள்ள விருந்தினர் விடுதியில் ஓர் அறையும் ஏற்பாடு செய்து கொடுத்தார். அதை ஓர் ஆசிரமம் என்பதா அல்லது சாந்தி நிகேதனத்தைப் போல ஒரு புதுமைச் சர்வ கலாசாலை என்பதா? எப்படிச் சொல்வதென்று என்னால் ஒரு முடிவுக்கு வர இயலவில்லை. அந்தப் பகுதி முழுவதற்கும் சேர்த்து மொத்தமாகக் 'காவிய கங்கை' என்று பெயர் சூட்டியிருப்பதில் கூட அவருடைய கவித்துவத்தின் ஆழமான சாயல் தெரிந்தது. பொருள் ஆழமும் அந்தப் பெயரில் இருந்தது.

தோட்டத்தில் சுற்றிக் கொண்டிருந்த புள்ளி மான்களை விட அழகான இளம் பெண்கள் மாவிலைத் தோரணங்கள் கட்டுவதும், வண்ணக் கோலங்கள் போடுவதுமாக இருந்தார்கள். ஒரு கோலாகலமான விடியற்காலையை எதிர் பார்க்கும் சுறுசுறுப்பான முந்திய இரவாக இருந்தது அது. காவிய கங்கையின் உணவு விடுதியில்

இரவு உணவை முடித்துக் கொண்டு இஷ்டம் போல் சுற்றிப் பார்க்கலானேன். ஒரு பக்கம் பெண்கள் கோலாட்டம் ஆடிக் கொண்டிருந்தார்கள். இன்னொரு பக்கம் சில இளைஞர்களும், குரலழகு மிக்க பெண்களும் சேர்ந்து கவி குமுத சந்திரரின் கவிதைகளை இனிதாக இசைத்துக் கொண்டிருந்தார்கள். மற்றொரு பக்கம் மாமரத்தடியில் பெண்கள் கும்மியடித்துக் கொண்டிருந்தார்கள். ஒரு மூலையிலிருந்து புல்லாங் குழலிசை காற்றில் மிதந்து வந்தது. நாதஸ்வர இசையும் ஒரு பக்கத்திலிருந்து ஒலித்தது. அந்த மலைச்சாரலின் மந்தமாருதமே ஒலியுருப் பெற்றாற்போல் யாரோ வீணையும் வாசித்துக் கொண்டிருந்தார்கள். சில மாதங்களுக்கு முன் வேறு ஓர் ஆங்கிலப் பத்திரிகையில் காவிய கங்கையை 'கார்டன் ஆஃப் ஆர்ட்ஸ்' என்று வர்ணித்திருந்தது எனக்கு நினைவு வந்தது. உண்மையில் அது ஒரு கலைத் தோட்டமாகத்தான் இருந்தது.

மகா கவி குமுத சந்திரர் ஓர் அபூர்வமான கவிஞர். அவருடைய கவிதைகள் தேசத்தின் சொத்துக்களாக விளங்கின. தமிழிலிருந்து உலகின் பல மொழிகளில் அவர் மொழி பெயர்ப்பாகி இருந்தார். தேசத்தின் சுதந்திரப் போராட்டம் என்ற மாபெரும் வேள்வியில் ஈடுபட்டபோது அவருக்குக் கிடைத்த துணைப் பயன்களில் கவிதையும் ஒன்று. அவருடைய கவிதைகள் ஆங்கிலத்தில் மட்டும் பிறரால் மொழி பெயர்க்கப்படவில்லை. அவராலேயே எழுதப்பட்டன. கூடியவரை அதனால் உணர்ச்சி வேகம் குன்றாமல் இருந்தன.

காவியம், கவிதை, கலைகள் இவைதான் அவரது குடும்பம். வேறு குடும்பம் அவருக்கு இல்லை. நைஷ்டிகப் பிரம்மசாரி. கவிதைத் திறமையால் ஈட்டிய செல்வத்தை எல்லாம் காவியகங்கையை உருவாக்குவதில் செலவிட்டிருந்தார். சில வெளிநாட்டு இளைஞர்கள்கூட அங்கே தங்கி அவருடைய கவிதைகள் பற்றியும் இந்தியக் கவிதை இயல் பற்றியும் ஆராய்ந்து கொண்டிருந்தார்கள். நாளடைவில் காவிய கங்கை பல வெளிநாட்டு மாணவர்களையும் ஆராய்ச்சியாளர்களையும் கவரத் தொடங்கியது. தென்னாட்டில் அது அமைந்திருந்த இயற்கைச் சூழலும், அதன் நூறு சதவிகித ஆசிரம வாழ்வை ஒத்த நடைமுறைகளும், அவர்களுக்கு மிகவும் பிடித்திருந்ததுதான் காரணம். சராசரி இந்தியப் பல்கலைக் கழகங்களில் இருந்த அர்த்தமற்ற முரண்பாடுகளும் ரெட் டேப்பிஸமும் 'காவிய கங்கை'யில் இல்லை. ஒரு செடியில் அரும்பிப் பின் மெல்ல மலரும் பூவின் மலர்ச்சியைப்போல்தான் அறிவு சம்பந்தப்பட்ட விஷயங்கள் அங்கு இருந்தன. கவிதையையோ, கலைகளையோ அது பாடங்களாக மட்டும் சொல்லித் தரவில்லை. இரசிக்கும்படி அங்கே வருகிறவர்களை அதில் தோய வைத்தது. தன் மாணவர்களை விண்ணப்பம் போட வைத்து அதன் பின் தேர்ந்தெடுக்கும் வழக்கம் அங்கு இல்லை. மாணவர்கள் என்போர் வயது சாதி மத வித்தியாசமின்றி, பால் இன வித்தியாசமின்றி இந்தியக் கவிதையியல் அல்லது கலையியலைக் கற்கும் இடமாகத் தாங்களே அதனைத் தேர்ந்தெடுத்தனர். "காவிய கங்கை காலகேந்திரத்திற்கு இங்கே இறங்கவும்" - என்று சமீபத்து இரயில் நிலையத்தில் போர்டு இருக்குமளவு அது

தென்னிந்திய இரயில்வே வரை படத்தில் முக்கிய இடம் பெற்றிருந்தது. அந்த அளவிற்கு அதன் புகழ் நிலை பெற்றிருந்தது.

இரவு பத்துமணி சுமாருக்கு நான் தங்கியிருந்த அறைக்குத் திரும்பிய போது காவியகங்கையின் பொது உறவு அதிகாரியிடமிருந்து அனுப்பப்பட்ட 'கவர்' ஒன்று எனக்காகத் தயாராகக் காத்திருந்தது. அறைக்கதவைத் திறந்து விளக்கைப் போட்டுக் கொண்டு அந்த உறையைப் பிரித்துப் படிக்கத் தொடங்கினேன். விவரங்கள் தமிழில் சுத்தமாக டைப் செய்யப்பட்டிருந்தன. மறுநாள் நான் நடந்து கொள்ள வேண்டிய முறைகள் விளக்கிக் கூறப்பட்டிருந்தன.

"நாளைக் காலை 6 மணிமுதல் மாலை 6 மணி வரை காவிய கங்கையில் நிகழும் கவி சிரேஷ்டரின் தொண்ணூறாவது ஜன்மதினம் முழுவதையும் உடனிருந்து காணவும், புகைப்படங்கள் எடுக்கவும் இதன் மூலம் அனுமதி வழங்கப்படுகிறது.

கவிசிரேஷ்டர் குமுத சந்திரரின் தளர்ந்த உடல்நிலை காரணமாக அவரிடம் நேரடியாக எதுவும் கேள்விகள் கேட்பது தவிர்க்கப்பட வேண்டும். பொதுவாக, அவரது ஒவ்வொரு பிறந்த நாளும் 'செண்டிமெண்டல் அட்டாச்மெண்ட்' நிறைந்தது. அவருக்கு நாளைய தினமும் அப்படியே. கடந்த காலங்களில் அவர் உள்நாட்டு வெளிநாட்டுப் பத்திரிகைகளுக்கு அளித்திருக்கும் எல்லாப் பேட்டிகளிலும் தவறாமல் ஒரு விஷயத்தை வற்புறுத்தியிருப்பதை நீங்கள் அறிவீர்கள்.

"எனது மௌனங்களிலும் தனிமைகளிலும் நான் இதுவரை எழுதாத ஒரு புதிய கவிதைக்குத் தயாராகிறேன். நான் எல்லாவற்றையும் அற்புதமாக எழுதி முடித்துத் தமிழை வளப்படுத்தி விட்டதாகச் சொல்லுகிறார்கள். எழுதியவற்றை மறந்து விடுவதும், எழுதப்பட வேண்டியவற்றுக்காக ஏங்குவதும், எழுதப்பட முடியாமல் நழுவுகிறவற்றுக்காகத் தவிப்பதும் ஒவ்வொரு சிரஞ்சீவிக் கவிஞனும் அடைகிற வேதனைகளே" என்பது கவிசிரேஷ்டர் குமுத சந்திரரின் கருத்து.

ஆகவே, அவருடைய மௌனத்தையும், அந்த மோனத்தின் மூலம் அவர் புரியும் கவிதைத் தவத்தையும் கலைக்கக் கூடாது. இந்தப் பிறந்தநாள் விழாக் கூடக் காவிய கங்கை நிர்வாகம் விரும்பிக் கொண்டாடுகிறதே ஒழிய, விழாக்களும் ஆரவாரங்களும், பரபரப்பும் அவரை ஒரு போதும் பாதிப்பதில்லை. அவர் அவைகளுக்கு அப்பாற்பட்டவர்.

இவை தவிர, வேறு விவரங்கள் தேவையானால் காவிய கங்கையின் பொது உறவு அதிகாரியை அணுகி அறிந்து கொள்ளவும்" என்று குறிப்பிட்டிருந்தது. கவி குமுதசந்திரரின் தொண்ணூறாவது பிறந்தநாள் விழா நிகழ்ச்சிகள் பற்றிய அச்சிட்ட விவரமும் இணைக்கப்பட்டிருந்தது. மறு நாள், அதற்கடுத்த நாள் ஆகிய இரண்டு தினங்களுக்குமான உணவு விடுதிக் கூப்பன்களும் உறைக்குள் வைக்கப்பட்டிருந்தன. 'காவிய கங்கை' காம்பஸின் விவரமான வரைபடமும் கவி சிரேஷ்டரின் புகைப்படம் ஒன்றும் உறையிலிருந்தன. கையோடு ஊரிலிருந்து எடுத்து வந்திருந்த கவி குமுதசந்திரரின் எல்லாக் கவிதைகளும் அடங்கிய தொகுப்பை எடுத்துப் புரட்டினேன்.

பல நூறு பதிப்புக்கள் விற்றிருந்த அந்தப் புத்தகத்தின் எல்லாப் பிரதிகளிலும் முதல் பக்கம் முதல் கவிதை இருக்க வேண்டிய இடம் 'இன்னும் எழுதப்படாத ஒரு கவிதை' என்ற தலைப்புடன் காலியாக விடப்பட்டிருந்தது. இதை அவரிடமே நேரில் கேட்டு விடுவது என்று எண்ணிக் கொண்டு வந்திருந்தேன் நான்.

ஆனால், இப்போது 'காவிய கங்கையின்' பொது உறவு அதிகாரி விதித்திருக்கும் நிபந்தனைப்படி கவி குமுதசந்திரரிடம் நேருக்கு நேர் அதைக் கேட்டறிய வாய்ப்பில்லை.

எல்லாக் கவிதைப் புத்தகங்களிலும் முகப்பில் அழகிய வண்ணத்தாளில் கவி குமுதசந்திரரின் புகைப்படம் அச்சிடப் பட்டிருந்தது. தாடி மீசையோடு கூடிய அந்த முகத்தை அரவிந்தரின் முகத்துடனோ, இரவீந்திரநாத் தாகூரின் முகத்திடனோ ஒப்பிட முடியாது. இந்த இருவரையும் விட அதிக கம்பீரமும், ஆண்மையும் ஒளிரும் முகமாக இருந்தது அது. அந்த முகத்தின் முதிர்ச்சியில் தெரிந்தது கிழட்டுத்தனமாக இல்லை. முதுமைக் கனிவாக இருந்தது. கண்களின் ஒளியும் கூர்மையும் சிறிது கூடக் குறையவில்லை.

எப்படியும் இந்தப் புகைப்படம் பிடிக்கப்பட்டுப் பத்து வருடங்களாவது ஆகி இருக்க வேண்டும். இப்போது அவர் எப்படி இருக்கிறார் என்பதை நாளைக்கு நேரிலேயே பார்த்து விடலாமே. காலையில் ஞாபகமாகக் காமிராவில் ஃபிலிம் லோட் செய்து கொள்ள வேண்டும். 'காவிய கங்கை'யைப் பொறுத்த வரை முந்திய இரவி லேயே விடியப் போகிற நாளின் கோலாகலங்கள் தொடங்கி விட்டாற்போலக் கலகலப் பாக இருந்தது. திருவிழாவிற்கு முந்திய கொடியேற்ற நாள் போல விளங்கியது அன்று.

மகாகவி குமுதசந்திரரைப் பொறுத்தவரை எனக்கு இரண்டு விஷயங்கள் புரியாத புதிராக இருந்தன. அந்த இரண்டு விஷயங்கள் மட்டும் தெளிவாகி விட்டால் கூட நான் எங்கள் பத்திரிகைக்குக் 'காவிய கங்கை'யைப் பற்றிய அற்புதமான கட்டுரை ஒன்றை உருவாக்கி அளித்துவிட முடியும். ஆனால், இரண்டு விஷயங்களும் தெரிந்தாக வேண்டுமே?

ஆயிரக்கணக்கான கவிதைகளை எழுதியிருக்கும் அவர் ஏன் இன்னும் தனது முதல் கவிதையை எழுதவே இல்லை என்கிறார்?

பெண்களையும் அவர்கள் அழகு, நளினம், இயல்புகள் எல்லாவற்றையும் இத்தனை சிறப்பாகப் பாடியுள்ள அவர் ஏன் இன்னும் நைஷ்டிகப் பிரம்மசாரியாக வாழ்கிறார்?

என் மனத்தில் 'காவிய கங்கை'யையும் கவி குமுத சந்திரரையும் பற்றி நினைக்கும் போதெல்லாம் கடந்த பல ஆண்டுகளாக உறுத்தும் இரு கேள்விகள் இவை. இந்தக் கேள்விகளுக்கு விடை கிடைத்தால் அந்த மகா கவியைப் பற்றிய புது உண்மைகள் உலகுக்குத் தெரியலாம். கவித்துவத்தாலும், செல்வாக்கினாலும் உருவாகிய மாபெரும் கலாகேந்திரமாகிய காவிய கங்கையை உருவாக்கியவர் என்ற முறையில் இன்று உலகம். அவரைப் பற்றி அறிய அதிக ஆவலுடன் காத்திருக்கிறது. அதிக மரியாதையோடும் எதிர்பார்த்திருக்கிறது.

மறுநாள் அதிகாலையில் எழுந்திருக்க வேண்டும் என்பதால் இரவு நெடு நேரம் கண் விழிக்க விரும்பாமல் உறங்கிவிட்டேன் நான்.

காலையில் நான் கண் விழித்தபோது கவி சிரேஷ்டரின் புகழ்பெற்ற உதய கீதம் மரஞ்செடி கொடிகளின் அடர்த்தியினிடையே ஒலித்துக் கொண்டிருந்தது. 'கீழ்வானத்தில் குங்கும ரேகைகள் படர்கின்றன. காலதேவன் இன்னொரு புதிய கவிதையை எழுதத் தொடங்கி விட்டான். கேட்பதற்காக உங்கள் துயிலெழிலை எதிர்பார்த்திருக்கின்றான். நீங்கள் இன்னும் தூங்கிக் கொண்டிருக்கிறீர்களே?' என்பது போன்ற பொருளுடன் தொடங்கும் பாட்டு அது.

வேறு துணைக் கருவிகளே இல்லாமல் வீணை ஒலியுடன் பூபாளத்தில் ஒலித்த இந்த உதயகீதப் பாட்டுடனேதான் கவி சிரேஷ்டரின் 90வது ஜன்ம தினக் கொண்டாட்டம் 'காவிய கங்கை'யில் தொடங்கியது என்று சொல்ல வேண்டும்.

நான் எழுந்திருந்து நீராடி உடை மாற்றிக்கொண்டு தயாரானேன். காமிராவில் ஃபிலிம் அடைத்து, எதற்கும் சில சமயங்களில் தேவைப்படலாம் என்ற எண்ணத்துடன் 'பிளாஷ்-அட்டாச்மெண்ட்'டைச் சரிசெய்து கொண்டு புறப்பட்டேன். காவிய கங்கை திருவிழாக் கோலத்தில் பொலிந்தது. எங்கு பார்த்தாலும் அகல் விளக்குகள் ஏற்றி வைக்கப்பட்டிருந்தன. காவிய கங்கையின் நெசவுப் பகுதியில் தயாரிக்கப்படும் புகழ்பெற்ற டிசைனுடன் கூடிய அழகிய வண்ணக் கைத்தறிப் புடவைகளை அணிந்து, கைகளில் தாமரை மலர்களுடன் பெண்கள் 'கியூ' வரிசையில் நின்றார்கள். கவி சிரேஷ்டரின் வாசஸ்தலமான குடிலை நோக்கி அந்தக் கியூ வரிசை நீண்டிருந்தது. இன்னொரு பக்கம் ஆண்களின் வரிசையும் கைகளில் தாமரைப் பூக்களோடு காத்திருந்தது. அந்த இடத்திலும் அதன் சுற்றுப் புறங்களிலும் தாமரைப் பூக்களுக்குப் பஞ்சமேயில்லை. திரும்பிய பக்கமெல்லாம் தாமரைத் தடாகங்கள். எல்லாத் தடாகக் கரைகளிலும் தாமரைப் பூக்கள் கொய்து குவிக்கப்பட்டிருந்தன.

காபி, சிற்றுண்டியை முடித்துக்கொண்டு நானும் கவி சிரேஷ்டரின் குடில் வாயிலில் போய்க் காத்திருந்தேன். எனக்கும் தாமரைப் பூக்கள் கிடைத்தன.

குடிலின் முன்புறம் சரியாக ஆறு மணியாவதற்கு ஐந்து நிமிஷம் இருக்கும்போது படுக்கைபோல் தணிவான மெத்தை இணைத்த சாய்வு நாற்காலி ஒன்று கொண்டு வந்து போடப்பட்டது. அதையடுத்து 'காவிய கங்கை' வாசிகளான இரண்டு பெண்கள் ஆள் உயரக் குத்து விளக்குகள் இரண்டைப் பக்கத்திற்கு ஒன்றாகக் கொண்டுவந்து வைத்து ஏற்றினர். விளக்குகள் பளீரென்று துலக்கப்பட்டிருந்தன.

குடிலின் கடிகாரம் மணி ஆறு அடிப்பதற்கும், அதே பெண்கள் கைத்தாங்கலாக மெல்ல நடத்தி வந்து கவி சிரேஷ்டரை அந்தச் சாய்வு நாற்காலியில் அமரச் செய்வதற்கும் சரியாயிருந்தது. முதுமை காரணமாய்ச் சற்றே மலர்ந்து கசங்கிய ரோஜாப் பூ போன்ற சிவந்த முகம். அந்த முகத்தின் கீழ்ப் பகுதியை வெண்மேகம் போன்ற தாடி மறைத்தது. புருவங்களும் இமைகளும் இறங்கித் தொங்கித் தொய்ந்து

போயிருந்தன. அவற்றுக்குள் தேஜஸ் கனிந்த கண்கள். அருள் ஒழுகும் நோக்கு. சிரித்துக்கொண்டே இருப்பது போன்ற முகம்.

பூக்களைச் சமர்ப்பித்தபின் அவரை வணங்கி விட்டு நான் என்னுடைய முதல் புகைப்படத்தை எடுத்துக் கொண்டேன். வரிசைகளில் காத்திருந்தவர்கள் ஒவ்வொரு வராக முன் வந்து அவருடைய பாதங்களின் கீழ் தாமரைப் பூக்களை வைத்து வணங்கினார்கள். இதே பாத பூஜை நிகழ்ச்சி நீண்ட நேரம் தொடர்ந்தது. 'காவிய கங்கை' வாசிகளைவிட அதிகமாக உலகெங்குமிருந்து கவி சிரேஷ்டரின் ரசிகர்கள் அன்று அங்கு வந்திருந்தார்கள். அதனால் பகல் உணவு நேரம் வருகிறவரை பாத பூஜையிலேயே கழிந்துவிட்டது.

சிலர் பாத பூஜை நேரத்தின் போதே கவி சிரேஷ்டரின் கவிதைகளை இசைத்துக் கொண்டிருந்தார்கள். அன்றைய தினம் 'காவிய கங்கை'யை நோக்கி வந்திருந்த கூட்டம் முழுவதுக்கும் அங்கே தங்க இட வசதி போதாத காரணத்தால் பலர் வந்து இறங்கியதும் அப்படியே பக்கத்தில் மலையடிவாரத்து அருவியில் நீராடி உடை மாற்றிக்கொண்டு வந்து கவி சிரேஷ்டரை வழிபட்டு விட்டு உடனே ஊர் திரும்பத் தயாராகிக் கொண்டிருந்தார்கள். பிறந்த தின வைபவத்துக்காகவே வந்த யாத்ரீகர் கூட்டம் அன்று அதிகமாகவே இருந்தது.

நடுவே ஒரு முறை நான் பொது உறவு அதிகாரியை அணுகி, "கவி சிரேஷ்டரிடம் இரண்டே இரண்டு கேள்விகள் மட்டும் கேட்க அனுமதியுங்கள். அதற்கு மேல் ஒரு சிறு தொல்லை கூட என்னால் அவருக்கு ஏற்படாது" என்று கெஞ்சினேன்.

"நிச்சயமாக முடியாது. கவி சிரேஷ்டருடைய உடல் நிலையையும் வயதையும் நினைத்துப் பாருங்கள்! நீங்கள் கோருவதைப் போலவே 'ஒரு நிமிஷம் பேசினால் போதும் - அரை நிமிஷம் பேசினால் போதும்' என்று - வெளி நாட்டிலிருந்து வந்திருக்கும் சில இரசிகர்களும்கூட கோருகிறார்கள். அவர்களிடமும் உங்களிடமும் மட்டும் பேசுவதற்காகவே ஒதுக்கினால் கூட அவருடைய இரண்டு முழு நாட்களும் உடல் நலமும் கெட்டு விடும். ஆகவே, தயவு செய்து மறுபடி கேட்காதீர்கள். அது சாத்யமில்லை" என்று கண்டிப்பாக மறுத்துவிட்டார் பொது உறவு அதிகாரி.

என் சொந்த ஆர்வம் காரணமாக நான் ஆசைப்பட்டிருந்தாலும் அந்த அதிகாரி சொன்ன பதில் என்னவோ எனக்கு நியாயமானதாகவே பட்டது.

பிற்பகல் இரண்டு மணிக்குக் 'காவிய கங்கை'யின் ஒரு மூலையிலிருந்த பாழ்மண்டபம் ஒன்றில் அதே சாய்வு நாற்காலியோடு அப்படியே பல்லக்குப் போலத் தூக்கிச் சென்று கவிசிரேஷ்டரை அமர்த்தினார்கள். அவர் பார்வையில் படுகிறார் போல எதிரே தூண் ஒன்றில் சார்த்திக் கையில் கஞ்சிக் கலயத்துடன் நிற்கும் கட்டழகு மிக்க மலைப் பளிஞர் குலப் பெண் ஒருத்தியின் ஓவியத்தையும் அங்கே வைத்தார்கள். அதன் பின் மாலையில் இருட்டுகிற வரை அவரை யாரும் தொந்தரவு செய்யக் கூடாதென்று அறிவித்துவிட்டு எல்லோரையும் அங்கிருந்து கலைந்து போகுமாறு வேண்டிக் கொண்டார்கள்.

என் மனத்தில் ஏற்கெனவே நான் அவரைக் கேட்கக் கருதியிருந்த இரண்டு கேள்விகளோடு இப்போது மூன்றாவதாக ஒரு கேள்வியும் தோன்றியது! இந்தப் பாழ் மண்டபத்தில் ஏதோ ஒரு முக்கியமான விஷயம் இருக்கிறது. இந்தப் பாழ் மண்டபத்திற்கும் கடைந்தெடுத்த சிற்பம் போன்ற தோற்றத்தோடு ஓவியத்தில் இருக்கும் பளிஞர் நங்கைக்கும் கவி சிரேஷ்டருக்கும் வாழ்க்கையில் ஏதோ மறக்க முடியாத தொடர்புகள் இருக்க வேண்டும். அவற்றின் அந்தரங்கம் கவி சிரேஷ்டரின் இதயத்திற்கு மட்டுமே தெரியும் போலும். மறுபடியும் நான் அடக்க முடியாத ஆவலோடு பொது உறவு அதிகாரியை அணுகினேன். எனது சந்தேகத்தையும் அநுமானத்தையும் சொல்லி வினவினேன்.

"உங்களுடைய ஆவலும் ஆர்வமும் எனக்குப் புரிகிறது. ஆனால், இன்று உங்களோடு ஒரு பத்து நிமிஷம் உட்கார்ந்து பேசவும் எனக்கு நேரமில்லை. கவி சிரேஷ்டருடைய வாழ்க்கையின் பல அபூர்வ சம்பவங்களை வெளியிடவேண்டிய கேள்விகளை நீங்கள் கேட்கிறீர்கள். இவற்றுக்கெல்லாம் விவரித்துப் பதில் சொல்லிக் கொண்டிருக்கக் கூடிய உடல் நிலையில் அவர் இப்போது இல்லை. இவற்றில் சில கேள்விகளுக்குப் பதில் சொல்லக் கூடிய நிலையில் அவர் உடல் இருந்தாலும் இந்த வயதில் இந்தக் கேள்விகளும் விசாரணைகளுமே அவர் உடல் நிலையைப் பாதிக்கலாம். உணர்ச்சி வசப்பட்டு ஆவேசமடையாமல் இவற்றுக்குப் பதில் சொல்ல முடியாது. அப்படி உணர்ச்சி வசப்படும்போது அவருக்கு இரத்த அழுத்தமோ இரத்தக் கொதிப்போ ஏற்பட நேரலாம். காவிய கங்கையின் மூலகங்கோத்ரியை - விலை மதிப்பற்ற செல்வத்தை அப்படிப்பட்ட துன்பத்துக்கெல்லாம் ஆளாக்க நீங்கள் விரும்ப மாட்டீர்கள் என்று நம்புகிறேன். உங்கள் கேள்விக்கெல்லாம் நானே பதில் சொல்கிறேன். நாளைக் காலை வரை தயவுசெய்து பொறுத்திருங்கள்" என்றார் அந்த அதிகாரி.

நான் அதற்கு இணங்குவதைத் தவிர எனக்கு வேறு வழி இருப்பதாகப் படவில்லை.

அன்று பகல் மூன்று மணிக்கும் ஆறு மணிக்கும் இடையே ஒரு முறை நான் தனியே சென்று காவிய கங்கையின் ஒரு மூலையிலிருந்த அந்தப் பாழ் மண்டபத்தைப் பார்த்தேன்.

சாய்வு நாற்காலியில் சாய்ந்தபடியே எதிர்ப்புறம் இருந்த பளிஞர் மங்கையின் மிகப் பெரிய ஆயில் பெயிண்டிங்கைப் பார்த்துக் கொண்டிருந்த கவி சிரேஷ்டரின் கண்களில் ஈரம் பளபளப்பதையும் அவை நனைந்திருப்பதையும் நன்றாகக் கவனிக்க முடிந்தது.

அந்தக் காட்சியை யாரும் கவனித்து விடாதபடி ஒரு புகைப்படமும் எடுத்துக் கொண்டேன் நான்.

கவி சிரேஷ்டரைப் பற்றிய என்னுடைய மூன்று கேள்விகளுக்குமான ஒரே பதில் அந்தப் பாழ் மண்டபத்தில்தான் இருக்கிறது என்பது போல் இப்போது எனக்குத் தோன்றியது.

'ஒரு மாபெரும் கவிஞரின் மிக முக்கியமான வாழ்க்கை இரகசியங்களை எழுதி வெளியிடப் போகும் முதல் வாய்ப்பை நான் ஒருவன்தான் பெறப்போகிறேன். ஒரு மாபெரும் தேசப் போராட்ட வீரர், ஒரு மாபெரும் கவிஞர், ஞான பீடமாக விளங்கும் ஒரு மாபெரும் கலாகேந்திரத்தை உருவாக்கிய ஞானி, தன்னுடைய முதல் கவிதையை ஏன் இன்னும் எழுதவில்லை என்ற காரணம் என் மூலம்தான் உலகத்துக்குத் தெரியப் போகிறது' என எண்ணிப் பெருமிதப்பட்டது என் மனம்.

மாலை 6 மணி முதல் 8 மணி வரை கவி சிரேஷ்டர் தம்முடைய குடிலில் ஓய்வு கொண்டார். இரவு 8 மணி முதல் ஒரு மணிவரை அவருடைய கவிதைகளிலிருந்து இசைக் கச்சேரிகள் என்று, நாட்டிய நாடகங்கள் என்று, சொற்பொழிவுகள் என்று, 'காவிய கங்கை'யில் பிரிவு பிரிவாக விழா நிகழ்ச்சிகள் தொடர்ந்தன.

மறுநாள் விடிந்தபொழுது விழா நடந்து முடிந்த இடங்களுக்கே உரிய மங்கல அயர்வு காவிய கங்கையிலும் தெரிந்தது. ஆனால், அந்த இனிய அயர்வு அதன் நடைமுறைகளைப் பாதிக்கவில்லை. காவிய கங்கையின் பொது உறவு அதிகாரி எனக்கு வாக்களித்திருந்தபடி அவரிடம் எனது கேள்விகளைக் கேட்கச் சென்றேன். அவருடைய அறையில் என் பார்வையில் படுகிற விதத்தில் அந்த ஆயில் பெயிண்டிங் இருந்தது, பளிஞர் குலப் பெண்ணின் படம்தான்.

மனத்தில் உடனே வந்து பதிந்துவிடும் அழகுடன் கூடிய அந்த மலைப் பளிஞர் யுவதி மலையடிவாரத்துப் பாழ் மண்டபத்தில் குறுந்தாடியுடன் கூடிய இளைஞர் ஒருவருக்குக் கஞ்சி வார்ப்பதைப்போல் மற்றோர் ஓவியமும் அறையின் பிறிதொரு பகுதியில் இருந்தது.

காவிய கங்கையின் பொது உறவு அதிகாரி எனக்குப் பேட்டியளிக்கத் தயாராக வந்து அமர்ந்தார்.

நான் குறிப்பு நோட்டுப் புத்தகத்தையும் பென்சிலையும் எடுத்து வைத்துக் கொண்டு அவரைக் கேட்கத் தயாரானேன். அவர் நிபந்தனை போட்டார்:

"இன்றைக்கு நிறைய அலுவலக வேலைகள் காத்திருக்கின்றன. ஒரு மணி நேரத்திற்குள் நீங்கள் என்னை விட்டு விடவேண்டும்."

"ஒரு மணி நேரம் எதற்கு? அவ்வளவு நேரம் ஆகாது! இதோ எனது முதல் கேள்வி: கவி சிரேஷ்டர் குமுத சந்திரர் ஏன் தமது எல்லாப் பதிப்புக்களிலும் தம்முடைய, 'முதல் கவிதை இன்னும் எழுதப்படவில்லை' என்கிறார்? வெளி வந்திருக்கும் பல நூறு கவிதைகளில் ஏதாவ்து ஒன்று முதல் கவிதையாகத்தானே இருந்திருக்க வேண்டும்?"

"அப்படியில்லை, தமது முதல் கவிதையை இன்னும் தாம் எழுதவில்லை என்பதை உபசாரத்துக்காகவோ, தன் அடக்கமாகவோ அவர் அப்படிச் சொல்லவில்லை. அதில் மிக உருக்கமான வரலாறு ஒன்று அடங்கியிருக்கிறது."

"என்ன வரலாறு?"

*"இதோ இந்த ஓவியத்தைப் பாருங்கள்! இதில் உள்ள மலைப் பளிஞர் பெண் மட்டும் இல்லை என்றால் கவி குமுதசந்திரரின் கவிதைகள், காவிய கங்கை எதுவுமே இல்லை."*

*"ஏன் அப்படிச் சொல்கிறீர்கள்?"*

*"பல ஆண்டுகளுக்கு முன் கல்லூரிப் படிப்பைப் பாதியில் விட்டுவிட்டு வெளியேறித் தானும் தன்னை ஒத்த சில தோழர்களும் சேர்ந்து தேசபக்திப் புரட்சிச் சங்கம் ஒன்று அமைத்தார் குமுத சந்திரன். துப்பாக்கி சுடும் பயிற்சி முதலிய இரகசியப் பயிற்சிகளை அடைந்து - இந்தியாவில் ஆட்சிப் பொறுப்பில் இருக்கும் பிரிட்டிஷ்காரர்களைச் சுட்டுத் தள்ளுவது அதன் நோக்கம். அந்த நோக்கத்தின்படி முதல் பிரிட்டிஷ் ஆளாக அவர்கள் தேர்ந்தெடுத்த உள்ளூர் கலெக்டர் துரையைச் சுட்டு முடித்ததுமே சதித்திட்டம் எப்படியோ வெளியாகிவிட்டது. புரட்சிச் சங்கத்தில் குமுதசந்திரனைத் தவிர அனைவரும் போலீஸில் பிடிபட்டுச் சிறையிலடைக்கப்பட்டு விட்டனர்.*

*குமுதசந்திரன் மட்டும் தலைமறைவாகி இதோ இப்போது காவிய கங்கையாக உருவாகியிருக்கிறதே - இந்த மலையடிவாரத்துக் காட்டுப் பகுதியில் ஒரு பாழ்மண்டபத்தைப் புகலிடமாகக் கொண்டு வசித்து வந்தார். அப்போது அவரை ஆதரித்து - அவர் மறைந்து வாழ உதவி செய்து - அவருடைய உணவுத் தேவைகளைப் பூர்த்தி செய்தவள் இந்தப் பளிஞர் யுவதிதான், இவள் இல்லாவிடில் அவர் தலைமறைவாக வாழ்ந்திருக்க முடியாது. நல்ல மன வளர்ச்சி மிக்க பருவத்தில் தேசபக்தி எழுச்சியும் இயற்கை எழில் மிக்க மலைச்சாரல் சூழலும், தலைமறைவு வாழ்க்கையுமே அவரைக் கவிஞராக்கின.*

*ஒரு மழைக்கால இரவில் அவருக்காக உணவு தேடி வரச் சென்ற அவள் வருகிற வழியில் காட்டாற்றில் அளவற்றுப் பெருகிய வெள்ளம் காரணமாக அடித்துப் போகப்பட்டாள்.*

*'ஒளி திரும்பாத இரவு' - என்று அன்று அவர் எழுத எண்ணிய கவிதை துயர அழுத்தத்தால் வெகு நாள் உருப் பெறவே இல்லை. முதலில் அவர் எழுத முயன்ற, எழுதத் தவித்த கவிதை அதுதான்... ஆனால், அது இன்றுவரை எழுதப்படவே இல்லை. இந்த நிகழ்ச்சிக்குப் பின் அவர் அந்த மலையடிவாரத்தைவிட்டே வெளியேறிப் பிரிட்டிஷ் அதிகாரம் செல்லுபடியாகாத பிரெஞ்சுப் பகுதி ஒன்றிற்குப் போய்ப் பல வருஷங்கள் இருந்தார். நிறையக் கவிதைகள், நூல்கள் எழுதினார். புகழ் பெற்றார். உலகப் பிரசித்தி பெற்ற பரிசுகள் கிடைத்தன. பொருள் சேர்ந்தது.*

*பின்னால் 'காவிய கங்கை'யை அமைக்க முடிவு செய்தபோது ஞாபகமாகத் தம்மைத் தமது பழைய தலைமறைவு வாழ்க்கைக் காலத்தில் கவியாக்கிய இதே இடத்தைத் தேர்ந்தெடுத்தார் கவிசிரேஷ்டர் குமுதசந்திரர்."*

"எல்லாம் சரி. ஆனால், 'ஒளி திரும்பாத இரவு' என்ற அந்த ஒரு கவிதையை எழுதாததற்காக இத்தனை ஆண்டுகளாக அந்த முதல் இடத்தைக் காலியாகவே விடவேண்டுமா?"

"தமக்குத் தொண்டு செய்து தம்மைக் காப்பாற்றிய அந்த மலைப் பளிஞர் யுவதியின் ஞாபகத்துக்கு அவர் செய்யும் மரியாதை அது. அதில் குறுக்கிட நாம் யார்?"

"இன்னும் எழுதப்படாத ஒரு முதற் கவிதைக்காக இத்தனை ஆண்டுகள் தவமா?"

"தவம் என்றுதான் அவர் சொல்லுகிறார்! ஒரு ஜோடி கிரௌஞ்சப் பறவைகளில் ஒன்றின் மரணத்தால் மற்றொன்று தவித்து அழிய நேர்ந்ததைக் கண்டு மாறிக் கிராதக உள்ளத்தினனான வேடன் மகாகவி வால்மீகியானான். ஒவ்வொரு கவியும் பிறக்கிறான். பௌதீகப் பிறப்பு எடுத்த பின்னும் மறுபடி ஞானப்பிறப்பு எடுக்கிறான். இந்த ஞானப்பிறப்பே அவனது கவிதை வடிவம். கவி குமுத சந்திரரின் ஞானப் பிறப்புப் பல ஆண்டுகளுக்கு முன் வனாந்தரமாக இருந்த இந்தப் பிரதேசத்தில்தான் நேர்ந்தது. அவருடைய காவிய சரஸ்வதி இநதப் பளிஞர் குலப் பெண்தான். எழுதப் படிக்கத் தெரியாத இந்தச் சரஸ்வதியின் கடாட்சம்தான் அவரைக் கவியாக்கியது என்று அவரே நினைக்கிறார்."

"நீங்கள் சொல்லுகிற இந்தக் கருத்துக்கள் எல்லாம் அவருடைய அங்கீகாரம் பெற்றவைதாமா?"

"இதில் அங்கீகாரம் என்ற பேச்சுக்கே இடமில்லை. அவருடைய சுய சரிதம் முதல் முறையாக இப்போது அச்சாகிக்கொண்டிருக்கிறது. இன்னும் இரண்டு மூன்று மாதங்களில் வெளி வந்துவிடும். அதில் உள்ள விவரங்களைத் தான் இப்போது நான் உங்களுக்குச் சொல்லிக் கொண்டிருக்கிறேன்."

"தயவு செய்து வெளிவரப் போகும் அந்தச் சுய சரித நூலின் பெயரைச் சொல்ல முடியுமா?"

"இன்னும் எழுதப்படாத ஒரு கவிதை."

"அப்படி ஒரு சுய சரிதத்தை ஏன் இவ்வளவு காலதாமதமாக வெளியிடுகிறீர்கள்?"

"நாங்களாகச் செய்யவில்லை. கவி சிரேஷ்டரின் கட்டளை அப்படி."

"என்ன கட்டளை அது?"

"நான் எந்த வருடம் பேசுவதை அறவே நிறுத்தி மௌனத்தில் நிறைந்து விடுகிறேனோ அந்த வருடம் இதை அச்சிட்டு வெளியிடவும் என்று அவரே இந்தச் சுயசரிதைக் கையெழுத்துப் பிரதியின் முதற்பக்கத்தில் எழுதியிருக்கிறார். அதன்படி இந்த ஆண்டு இது வெளிவர இருக்கிறது. அவருடைய பிற காவியங்களுக்கு இணையாக இந்தச் சுயசரிதை எழுதப்பட்டிருக்கிறது."

எங்கள் பேட்டி முடிந்தது. பொது உறவு அதிகாரி எனக்கு விடையளித்து அனுப்பத் தயாரானார். நான் அந்த மலைப் பளிஞர் யுவதியின் ஆயில்

பெயிண்ட்டிங்கை 'குளோஸ் அப்'பாக ஒரு படம் எடுத்துக் கொள்ள அனுமதி கேட்டுப் படம் எடுத்துக் கொண்டேன். கவி சிரேஷ்டர் குமுத சந்திரரை அவரது குடிலில் சென்று மௌன விரதத்துக்குப் பங்கமின்றி ஒருமுறை தரிசிக்கவும் படமெடுக்கவும் வேண்டினேன். பொது உறவு அதிகாரியே அழைத்துச் சென்றார். தளர்ந்த ரோஜா மேனியின் காட்சி கிடைத்தது. 'காவிய கங்கை'யில் நான்பெற்ற அனுபவம் மெய்சிலிர்க்கச் செய்வதாக இருந்தது. அச்சாகிக் கொண்டிருந்த 'இன்னும் எழுதப் படாத கவிதை' - புத்தகத்தின் பகுதிகள் சிலவற்றைப் பொது உறவு அதிகாரி எனக்குக் காட்டினார்.

அப்புத்தகத்தில் கவி குமுத சந்திரரின் வாக்கியங்களிலிருந்து என் நினைவில் நீங்காமல் நின்றவை பல.

"ஒவ்வொரு கவியும் ஒரு முயற்சிதான். தான் எழுத வேண்டிய ஒரு பரிபூரணமான கவிதைக்காக ஓராயிரம் சாதாரணக் கவிதைகளை அவன் எழுத முயல்கிறான். சிலருடைய வாழ்க்கை முயற்சியிலேயே முடிந்துவிடுகிறது. இன்னும் சிலருடைய வாழ்க்கை முயற்சிக்கு முன்பேயும் முடிந்து விடுகிறது.

நானோ பல்லாயிரம் பரிபூரணமான கவிதைகளை எழுதிவிட்டேன். ஆனால், எங்கே எந்த வினாடியில் எந்தச் சோகத்தால் நான் கவிஞன் ஆனேனோ, அதை மட்டும் இன்னும் என்னால் எழுத முடியவில்லை. எழுத வரவில்லை. தசரதன் இராமனைக் காட்டுக்கு அனுப்பிப் பிரிந்த சோகத்தை ஊனுருகப் பாடிய கம்பன் தன் சொந்த மகன் அம்பிகாபதியின் சாவுக்கு இரங்கி அப்படி ஒரு சிறு பாட்டுக்கூடப் பாட முடியாமல் போனது போலத்தான். என்னைப் பாடவைத்தவள் எழுதப் படிக்கத் தெரியாதவள். அவளுக்குத் தெரிந்த மலைப் பளிஞர் மொழி எனக்குத் தெரியாது. எனக்குத் தெரிந்த தமிழோ ஆங்கிலமோ அவளுக்குத் தெரியாது. ஆனால், அவள் வார்த்த கஞ்சி, அவள் பார்த்த பார்வை, அவள் சிரித்த சிரிப்பு எல்லாம் சேர்ந்துதான் என்னைக் கவியாக்கின. மகா கவியாக்கின. 'காவிய கங்கை'யை ஸ்தாபிக்கச் செய்தன. அவளும், நானும் சந்தித்துக் கொண்ட அந்த வனாந்தரமும் பாழ் மண்டபமும் இருந்த அதே பகுதியை வாங்கிக் கலாகேந்திரம் அமைக்குமளவு நான் பெரிய செயல்களைச் செய்ய முடிந்தது.

ஓர் அஞ்ஞானியால் நான் ஞானியானேன். அந்த மகத்தான அஞ்ஞானியைச் சித்திரித்துப் பாடமுடியாத முறையின்போது மறுபடி நானும் ஞானஹீனப்பட்டு நிற்பது போல் உணர்வைத் தவிர வேறென்ன செய்வது?"-

இவை அவரது சுயசரிதத்தில் நான் படித்தவை.

அந்தச் சுயசரிதமும் இன்னும் முடிக்கப்படாத ஒரு சுயசரிதமாகவே இருந்தது. ஆனால், மிக அருமையான கவிதை நடையில் உருக்கமாக எழுதப்பட்டிருந்தது. அந்தச் சுயசரிதத்துக்கு அவர் சூட்டியிருந்த பெயரின் பொருட்கனிவைத் தான் மீண்டும் நினைத்து நினைத்து வியந்தேன் நான்.

**(1978-க்கு முன்)**

## 128. ‘இது பொது வழி அல்ல’

**க**ண்ணப்ப முதலியார் கார்ப்பரேஷன் தேர்தலுக்கு நிற்பார் என்று யாருமே எதிர்பார்க்கவில்லை. அந்தத் தொகுதியில் கடந்த இருபது வருஷங்களுக்கும் மேலாக அவர் செல்வாக்கும் புகழும் பெற்றிருந்தும் கூட முந்திய தேர்தல்களில் நின்றதில்லை. தொகுதியிலுள்ள பல காலி மனைகளுக்கும் வீடுகளுக்கும் சொந்தக்காரர் அவர். அவரிடம் குடக்கூலிக்கு இருப்பவர்களும், அவருக்குச் சொந்தமான மனைகளில் குடிசைகள் போட்டுக் குடியிருப்பவர்களும் ஓட்டுப் போட்டாலே போதும். இந்த மாபெரும் வசதி இருந்தும் கடந்த பல ஆண்டுகளில் அவர் ஏன் தேர்தலுக்கு நிற்கவில்லை என்பதும், இந்த ஆண்டில் திடீரென்று ஏன் நிற்கிறார் என்பதும் சேர்ந்தே பலருக்கு வியப்பாயிருந்தது. அதுவும் எந்தக் கட்சிச் சார்பும் அற்ற சுயேச்சை வேட்பாளராக இப்போது அவர் நிற்கிறார். பூட்டுச் சின்னம் வேண்டுமென்று கேட்டுப் பெற்றிருந்தார் அவர்.

அதனால் ‘பூட்டுக்கு வோட்டு’ - என்று எதுகை நயத்தோடு அழகாக கோஷம் போட்டு ஓட்டுக் கேட்க வசதியாயிருந்தது. வேறு தேர்தல் சின்னம் பெற்றிருந்தால் இப்படி எதுகை நயத்தோடு ஓட்டுக் கேட்க முடியுமோ, முடியாதோ? பூட்டுக் கிடைத்ததே நல்லதாய்ப் போயிற்று. ‘பூட்டுக்கு வோட்டு’ என்றுஅவருடைய ஆட்கள் எதுகை நயத்தோடு கூறியதையே எதிர்த் தரப்பினர் காலை ஒடித்துவிட்டு ‘பூட்டுக்கு வேட்டு’ - என்று கிண்டல் செய்து வந்தனர். அவருடைய ஆட்கள் சுவரில் எழுதியவற்றிலும், ஒட்டியவற்றிலும் ‘பூட்டுக்கு வோட்டு’ - என்பதில் காலை அழித்து. வேட்டு வைப்பதிலும் எதிர்த்தரப்பு அக்கறை காட்டியது. கண்ணப்ப முதலியார் தேர்தலுக்கு நின்றதற்குக் காரணம் கடந்த பல ஆண்டுகளாய் அந்தத் தொகுதியின் கவுன்சிலராய் இருக்கும் முனிவேலனோடு அவருக்கு ஏற்பட்ட ஒரு தகராறுதான் என்று சிலர் சொல்லுகிறார்கள். கவுன்சிலரான சில ஆண்டுகளிலேயே முனிவேலன் பத்து டாக்ஸி, ஒரு பங்களா, செம்பரம்பாக்கத்தில் இருபது ஏக்கர் சவுக்குத் தோப்பு ஆகிவற்றுக்கு அதிபதி ஆகிவிட்டதைப் பார்த்து முதலியாருக்கும் நைப்பாசை தட்டியிருக்க வேண்டும் என்று சிலர் வம்படியாகவும் சொல்லுகிறார்கள். எது காரணமாயிருந்தாலும் அவர் நிற்கிறார் என்பது உறுதியாகிவிட்டது. அதில் சந்தேகமில்லை. ஜெயிப்பார் என்பதிலும் சந்தேகமில்லை என்றுதான் கூறவேண்டும்.

போட்டியும் நேரடிப் போட்டிதான். அவருக்கும், முனிவேலனுக்கும் ‘ஸ்டிரெயிட் கண்டெஸ்ட்’. முனிவேலன் தேர்தலுக்குச் செலவு செய்யவில்லை. வரவைப் பற்றித்தான் எப்போதுமே அவனுக்குக் கவலை. செலவு செய்ய அவனுக்குத் தெரியாது. செலவு செய்யவும் பிடிக்காது. அதனால் முதலியார் நிச்சயம் வந்துவிட முடியும் என்றே

எல்லாரும் நம்பினார்கள். தவிர முனிவேலன் கவுன்சிலர் பதவியை வைத்து நிறையப் பணம்பண்ணி விட்டதாக ஒரு கெட்ட பெயர் இருந்ததால் அவனுக்கு இந்தத் தடவை ஓட்டு விழாது என்றும் பேசிக் கொண்டார்கள். அது ஓரளவு உண்மையாகவும் இருந்தது.

முதலியார் தேர்தலுக்காக நிறையவே செலவு செய்தார். அவருடைய பங்களாவுக்குப் பின்னால் ஒரு பெரிய குடிசைப் பகுதி. அதில் மட்டும் மொத்தம் ஆறாயிரம் ஓட்டு இருந்தது. அவ்வளவும் அவருக்குத்தான் விழும் என்று நம்ப முடிந்த ஓட்டுக்கள். மற்ற இடங்களிலும் நிலைமை சாதகமாகவே இருப்பதாய்த் தெரிந்தது. ஒரு கெட்டவனை எதிர்த்து நல்லவர் ஜெயிக்க வேண்டியது நியாயமாகவும் இருந்தது. முதலியார் தோற்கக் காரணமே இல்லை என்பதும், முதலியாரை எதிர்க்கும் முனிவேலன் ஜெயிக்கக் காரணமே இல்லை என்பதும் தெளிவாகத் தெரியத் தொடங்கி விட்டன. முதலியாருடைய ஒழுக்கமும் தர்ம சிந்தையும் நிச்சயமாக வெற்றி பெறும் என்றாகி விட்டது. இருந்த போதிலும் நம்பிக்கை போய்விடாமல் முனிவேலனும் அலைந்து கொண்டிருந்தான். அதிகம் செலவு செய்யாமல் சும்மா அலைந்து கொண்டிருந்தான் என்பது குறிப்பிடத்தக்கது.

தேர்தலுக்குச் சில தினங்களுக்கு முன் முதலியாரும், முனிவேலனும் தற்செயலாக ஒரு தெருவில் சந்தித்துக் கொள்ள நேர்ந்தது. அவன் அவருக்குப் பெரிதாக ஒரு கும்பிடு போட்டான். தோல்வி அடையப் போகிறவனுடைய கும்பிடு மாதிரித் தெரியவில்லை அது. பேச்சும் சிரிப்புமாக இருவரும் எதிரிகள் போல் அன்றி நண்பர்கள் போலவே சந்தித்துக் கொண்டார்கள். திடீரென்று சிரித்துக் கொண்டே முதலியாருக்கு ஒரு சவால் விடத் தொடங்கினான் முனிவேலன்.

"முதலியாரே! நீங்க ஜெயிக்க மாட்டீங்க... பாவம்! அநாவசியமாப் பணத்தைத் தண்ணியாச் செலவு செய்யறீங்க. ரெண்டு கலர்லே ஆயிரக் கணக்கான போஸ்டர் ஒட்டியிருக்கீங்க. நான் போஸ்டரே ஒட்டலை. ஆனா ஒங்களோட ஆயிரக் கணக்கான போஸ்டரினாலே விளையற லாபத்தை ஒரே ஒரு சின்ன போர்டு எழுதி வச்சு நான் தட்டிக்கிட்டுப் போயிட முடியும்."

"முடிஞ்சா செய்யேன்! உன்னைப் போலப் பணம் பறிக்கிற ஆள் இனிமே இந்தத் தொகுதியிலே ஜெயிக்கலாம்னு கனவுகூடக் காணமுடியாது."

"யார் சொன்னாங்க அப்பிடி? என்னைப்போல இருக்கறவங்கதான் வரமுடியும். வந்துக்கிட்டும் இருக்காங்க. உம்மைப்போல நல்லவனா இருக்கறவங்க வேணா வர முடியாமப் போகலாம். இப்ப நான் சொல்றதை அப்பிடியே எழுதிவச்சிக்குங்க முதலியாரே! நான்தான் ஜெயிக்கிறேன். நீர் தோற்கிறீரு..."

"பார்க்கலாமே..."

முதலியாருக்குச் சிரிப்புத்தான் வந்தது. முனிவேலனின் 'மனோபொலி'யை உடைக்கவே அந்தத் தடவை அவர் போட்டியிட்டார். இப்போது அவன் ஜம்பம் பேசியது வேறு அவர் ஆத்திரத்தை அதிகமாகக் கிளறிவிட்டது.

பங்களாவுக்குப் பின்புறமுள்ள குடிசைப் பகுதி ஓட்டு ஆறாயிரமும் யாருக்குக் கிடைக்குமோ அவர்கள் தான் அந்தத் தொகுதியில் வெற்றி பெற முடியும் என்பது ஊரறிந்த உண்மை. அந்த ஆறாயிரம் ஓட்டும் தமக்கே கிடைக்கும் என்ற நம்பிக்கை முதலியாருக்கு வந்துவிட்டது. முனிவேலன், 'ஒரே ஒரு போர்டு எழுதிவைத்து அவ்வளவு ஓட்டையும் தன் பக்கம் திருப்பிவிட முடியும்' என்று ஏதோ சொல்லி விட்டுப் போனானே அதுதான் என்னவென்று அவருக்குப் புரியவில்லை. புரியாததற்காக அவர் கவலைப்படவும் இல்லை. அவருடைய பங்களா இருந்த அதே வரிசையில் தென் கோடியில் மெயின்ரோட்டையும் குடிசைப் பகுதியையும் இணைக்கும் காலிமனை ஒன்றிருந்தது. அந்த மனை முதலியாருக்குச் சொந்தமானது. அதன் வழியாகத்தான் குடிசைப் பகுதிக்குள் போகவும், வரவும் பாதை ஏற்பட்டிருந்தது. முதலியார் தம்முடைய அந்தக் காலி மனையை ஒரு முள்வேலி எடுத்துத் தடுத்திருந்தால் குடிசைப் பகுதியினர் இரண்டு பர்லாங் தூரம் சுற்றுவழியாக நடந்து தான் மெயின் ரோடுக்கு வரவும் போகவும் நேரிடும். குடிசைப் பகுதியினரின் நன்மையை உத்தேசித்து அவர் அந்த மனைக்கு வேலியெடுக்காமல் விட்டிருந்தார். தேர்தலுக்குச் சில தினங்களுக்கு முன் அந்தக் காலி மனையில் மாபெரும் பந்தல் போட்டு ஏழைகளுக்கு உணவும், பெண்களுக்கு ரவிக்கைத் துண்டு, மஞ்சள்கிழங்கும், குடிசைப்பகுதிக் குழந்தைகளுக்கு சிலேட்டு பென்ஸிலும் வழங்க ஏற்பாடு செய்தபோதுகூட 'ஸ்லம் ஓட்டு முழுவதும் தமக்கே' என்று உறுதிப்படுத்திக் கொண்டிருந்தார் முதலியார். ஜனங்கள் அவரிடம் அவ்வளவு விசுவாசமாயிருந்தார்கள். 'இந்த விசுவாசத்தை முனிவேலனோ, இன்னொருவரோ அவ்வளவு சுலபமாக மாற்றிவிட முடியாதே? ஒரு நல்லவனைத் தோற்கச் செய்வதென்பது அவ்வளவு எளிதாக நடந்து விட முடியாதே? முனிவேலன் கைநிறைய வாங்கி வாங்கியே பங்களாவும், டாக்ஸிகளுமாகப் பணக்காரனாகி விட்டான். அவனுக்கு ஓட்டுப் போட்டவர்கள் லாபமடையவில்லை. அவன் லாபமடைந்து விட்டான். என்னைப்போல் பரம்பரையாக வசதியுள்ளவன் ஜெயித்தால் ஜனங்களிடம் கை நீட்டி வாங்கும் ஈனத்தனமான காரியத்தைச் செய்து விடப்போவதில்லை. பரம்பரைப் பண்பாடே கையை நீள விடாமல் தடுக்கும்'- என்று பலவாறாகச் சிந்தித்துக் கொண்டிருந்தார் முதலியார். வெற்றியைப் பற்றி அவருக்கு எள்ளளவு சந்தேகமும்கூட இருக்கவில்லை.

ஒரு வழியாகத் தேர்தல் நாள் நெருங்கியது. காலிமனையில் போட்ட பந்தல், சாப்பாடு, இரவிக்கைத் துண்டு - சிலேட் பென்ஸில் வகையிலேயே பதினையாயிரம் ரூபாய்க்கு மேல் முதலியாருக்குச் செலவாகிவிட்டது. பந்தலைப் பிரித்து விட்டுச் சற்று முன்புதான் காண்ட்ராக்டர் கணக்குப் பார்த்துப் பணம் வாங்கிக் கொண்டு போனான். அவருடைய சொத்துக்கு இது ஒரு செலவே இல்லை.

முதலியார் பக்திமான். காந்தியடிகள் மேல் அபார நம்பிக்கை கொண்டவர். புத்தரைப்போல், சங்கரரைப் போல் காந்தியடிகளையும் அவதாரமாக மதிக்கிறவர். தேர்தலுக்காகச் செலவு செய்வது அவருக்குப் பிடிக்கவில்லை என்றாலும், முனிவேலனின் லஞ்ச ஏகாதிபத்தியத்திலிருந்து அப்பாவி ஏழை ஜனங்களை எப்படியும் விடுவிக்க வேண்டும் என்ற ஆசையில்தான் செலவும் செய்துவிடத்

துணிந்தார். முனிவேலன் ரொம்பவும் சிக்கனமாக இருந்த அதே சமயத்தில், செலவு செய்வதால் தம் சொத்துக் கரைந்து போகுமே என்றும் அவர் வருந்தவில்லை. 'ஜனங்களைப் பணத்தினால் மருட்டுவது பாவம்' - என்று கருதியே அவர் நாணினார். கஞ்சத்தனம் அவர் குடும்பத்துக்கே தெரியாத வார்த்தை. பல ஊர்க் கோவில்களில் 'கருணாகர முதலியார் கட்டளை' என்று அவர் தாத்தா ஏற்படுத்திய கட்டளைகளும், தந்தையார் செய்தளித்த வெள்ளித் தேர்களும் இன்னும் நடை பெற்றுப் பெயர் சொல்லிக் கொண்டிருக்கின்றன. அந்தக் குடும்பத்தின் சொத்துக்கள் எல்லாமே கொடுத்துக் கொடுத்து வளர்ந்தவையே தவிரக் கொடுக்காததனால் தேங்கியவையல்ல. முனிவேலனின் புதுப்பணம் வாங்கி வாங்கிச் சேர்த்தது என்றால் முதலியாரின் பரம்பரைப் பணம் கொடுத்துக் கொடுத்து வளர்ந்ததாகும். வாங்கிச் சேர்த்த சொத்துக்கும் கொடுத்துப் பெருகிய சொத்துக்கும் எவ்வளவு வித்தியாசமிருந்தது?

தேர்தல் நாள் வந்தது. முதலியாருக்காக அறுபது கார்கள், இருபது டாக்ஸிகள், பல ரிக்ஷாக்கள் எல்லாம் வேலை செய்தன. முதலியார் வெளியே போய்த் தாம் ஓட்டுப் போட்டது தவிர எங்கும் அலையவில்லை. நம்பிக்கையோடு வீட்டிலேயே இருந்து விட்டார். முனிவேலனுக்காக அதிகம் ஆட்களோ, வாகனங்களோ வேலை செய்யவில்லை. முதலியாரின் ஆட்கள் பம்பரமாய் அலைந்தனர்.

மாலை நாலே முக்கால் மணிக்குப் 'போலிங்' முடிவதற்கு ஓர் அரைமணியோ, கால் மணியோ, இருக்கும்போது முதலியாருடைய தம்பி மகன் அவசரமாய் ஓடிவந்து பரபரப்பாக ஒரு செய்தியைச் சொன்னான் :

"ஏன் பெரியப்பா இப்படிப் பண்ணினீங்க? அவ்வளவு காரியத்தையும் தலை கீழாக்கிக் கெடுத்துப் புட்டீங்களே? ராத்திரியோட ராத்திரியா அந்த வேலியைப் போட்டு போர்டு மாட்டாட்டி இப்ப என்ன குடி முழுகிப்பிடும்னு அப்பிடிப் பண்ணினீங்க?"

முதலியாருக்கு அவன் என்ன கேட்கிறான் என்பதே முதலில் புரியவில்லை. திகைத்தார்.

"நீ என்ன சொல்றே! என்ன வேலி? என்ன போர்டு?"-

"செய்யறதையும் செஞ்சுப்பிட்டு உடனே மறந்துட்டீங்களா? வாங்க என்னோட... புரியும்படியாக் காண்பிக்கிறேன்" என்று அவரைத் தன்னோடு கூப்பிட்டான் தம்பி மகன். அவர் அவனோடு உடனே விரைந்தார்.

தெருவின் தென்கோடியில் இருந்த அவருக்குச் சொந்தமான காலி மனையைச் சுற்றி சவுக்குக் கட்டை நட்ட இரும்பு-முள் கம்பியால் முற்றாக அடைத்திருந்தது.

"ப்ராப்பர்ட்டி ஆஃப் கண்ணப்ப முதலியார். இது பொது வழி அல்ல. மீறி நடப்பவர்கள் போலீசார் வசம் ஒப்புவித்துத் தண்டிக்கப்படுவார்கள்" - என்று தமிழிலும் ஆங்கிலத்திலுமாகப் பெரிதாக ஒரு போர்டும் எல்லார் பார்வையிலும் படும்படியாக அந்த வேலியில் எழுதித் தொங்கவிடப்பட்டிருந்தது.

"இது யார் செய்த வேலை?" - என்று கோபமாகத் தம்பி மகனைப் பார்த்து இரைந்தார் கண்ணப்ப முதலியார்.

"என்னைக் கேட்டா எப்பிடி? எனக்கென்ன தெரியும்? நானே இப்பத்தானே பார்த்தேன். நீங்கதான் எழுதி வச்சிருப்பீங்கன்னு நான் நினைச்சேன்" - என்றான் அவன். கோபத்தோடு போர்டைக் கழற்றி எறிந்துவிட்டுக் கடிகாரத்தைப் பார்த்தார் முதலியார். மணி மாலை ஐந்து இருபத்தைந்து. 'போலிங்' முடிந்து ஓட்டுப் பெட்டிகளை மூடிச் சீல்வைத்துக் கொண்டிருப்பார்கள். இனி ஒன்றுமே செய்ய முடியாது.

"ஓட்டுச் சாவடிக்குக் கூப்பிட்டப்பவே 'ஸ்லம்' ஆட்களில் சிலர் நம் தொண்டர்களைக் காரணமின்றி முறைத்தார்கள். காலையிலேருந்தே இப்படி நடந்தது. சிறிது நேரத்திற்கு முன் ஒருத்தனை ஓட்டுச் சாவடிக்குக் கூப்பிட்டப்ப "போய்யா முதல்லே போய் இன்னும் பெரிசா வேலிபோட்டு வழியை அடை! நிறைய ஓட்டு விழும்" என்று அவன் பரிகாசமாகச் சொன்னபோதுதான் நானே இங்கே வந்து பார்த்துவிட்டு உங்களிடம் ஓடிவந்தேன்" என்றான் முதலியாரின் தம்பி மகன்.

முதலியாருக்குப் புரிந்தது. 'ஒரே ஒரு போர்டு எழுதி வச்சு உங்களை ஜெயிக்கிறேனா இல்லியா பாருங்க' என்று முனிவேலன் அன்று தன்னிடம் சவால் விட்டது நினைவுக்கு வந்தது அவருக்கு. அவசர அவசரமாக வீடு திரும்பி வக்கீலுக்கு ஃபோன் செய்தார் முதலியார்.

"இப்படி இரவோடு இரவாக ஒரு சதிபண்ணி அத்தனை ஜனங்களும் நான்தான் வேலி போட்டதாக நம்பச் செய்து காரியத்தைக் கெடுத்துவிட்டான். இதற்குக் 'கேஸ்' போடணும்."

"கேஸ் போடறது சரி! முனிவேலன் தான் இதைச் செய்தான்கிறத்துக்குச் சரியான ஃப்ரூப் வேணுமே? அப்படி ஏதாவது இருக்கா? 'போலிங்' முடிஞ்சு பெட்டியை சீல் வச்சப்பறம் நீர் இனிமே என்ன பண்ணப் போறீர்? காலையிலேயே பார்த்திருந்தாலும் எலெக்ஷன் கமிஷனருக்குப் புகார் பண்ணியிருக்கலாம். கண் கெட்ட பிறகு சூரிய நமஸ்காரம் பண்ற மாதிரி இப்ப என்ன பண்ண முடியும்?" என்றார் வக்கீல்.

அவர் சொல்வதில் தவறில்லை என்று பட்டது முதலியாருக்கு. தன்னிடமிருந்து எவ்வளவோ நன்மைகளை அடைந்திருந்தும் ஒரு சின்னக் குழப்பத்தில் - குழம்பிவிட்ட ஜனங்களின் அந்தத் திடீர் மாறுதலைதான் அவரால் நம்பவே முடியவில்லை. ப்ளாஸ்டிக் யுகத்தில் மக்களின் விசுவாசம் கூடச் சுலபமாக உடைய முடியும் போலிருந்தது; முப்பது வருஷமாகப் புரிந்து கொண்டிருந்த தம் நல்லெண்ணத்தையும், தர்ம சிந்தனையையும் ஒரே ஒரு போர்டு எழுதி வைத்து இரவோடு இரவாகக் கெடுத்தவனுடைய குறுக்கு வழி சாமர்த்தியம்தான் இன்றைய அரசியலுக்குத் தேவை போலிருக்கிறது. இன்றைய அரசியலில் ஒரு நல்லவன் ஜெயித்தான் என்பதுதான் ஆச்சரியமாக இருக்குமே ஒழியத் தோற்றான் என்பது ஆச்சரியமாக இராதென்றே தோன்றியது. ஒரு நல்லவன் நிச்சயமாகத் தோற்கத்தான் முடியும் என்ற ஆரோக்கியமற்ற

அரசியல் களத்தில் அவர் நுழைந்திருக்கக் கூடாது தான். நுழைந்ததற்குப் பயன் கைமேல் கிடைத்தது.

மறுநாள் மாலை தேர்தல் முடிவுகள் அறிவிக்கப்பட்டன. முனிவேலன் ஐயாயிரம் ஓட்டு வித்தியாசத்தில் அவரை ஜெயித்தான்.

அந்த வாரக் கடைசியில் தம்பி மகனைக் கூப்பிட்டுக் கீழ்க்கண்ட உத்தரவைக் கண்டிப்பாகப் பிறப்பித்தார் முதலியார்.

"நம்ம காலி மனையைச் சுற்றி நாலுபக்கமும் பெரிசாச் சுவரெடுத்து, நாலு பக்கமுமே 'பிராபர்ட்டி ஆஃப் கண்ணப்ப முதலியார். இது பொது வழி அல்ல. மீறிப் பிரவேசிப்பவர்கள் கண்டிப்பாகப் போலீசார் வசம் ஒப்புவித்து தண்டிக்கப்படு வார்கள். டிரஸ் பாஸர்ஸ் வில் பீ பிராஸிகியூடட்' என்று எழுதிடணும்."

"அதான் வேலியும் போர்டும் ஏற்கனவே இருக்கே?"

"அந்த வேலியும் போர்டும் முனிவேலன் போட்டது. அதைப் பிரிச்சி அவன் வீட்டிலேயே கொண்டு போய்ப் போட்டுடு. ஊர் சொத்து நமக்கு வேணாம். இப்ப நாமே நமக்காகச் சுவரெடுக்கணும்.."

"ஜனங்க மனசு சங்கடப்படுமேன்னுதான் பார்க்கிறேன்?"

"நான் அப்படி முப்பது வருசமாப் பாத்தாச்சு; அதுக்கு எந்த விசுவாசமும் பதிலாகக் கிடைக்கலே. நான் வியாபாரி. லாபம் தராத 'இன்வெஸ்மென்ட்' இனிமே எதுக்கு?"

முதலியாரின் தம்பி மகன் பதில் பேசவில்லை. சுவரெடுக்க செங்கல் வருவதற்காக பிரிக்ஒர்க்ஸுக்கு ஃபோன் செய்யப் போனான். கண்ணப்ப முதலியார் புத்தக அலமாரியிலிருந்து தேவாரப் புத்தகத்தை எடுத்தார்.

(1978-க்கு முன்)

## 129. இரண்டாவது விமர்சகன்

தனக்கே நம்பிக்கையில்லாத பொய்களைச் சொல்லிச் சொல்லி முடிவில் அந்தப் பொய்களும் அவை யாருக்காகப் படைக்கப்பட்டனவோ, அவர்களுடைய முகமன் வார்த்தைகளும் - அவருக்கு ஒருங்கே சலித்துப்போயின. உலகமே தன்னை வியந்து நோக்கிக் கொண்டிருப்பதாகத் தனக்குத் தானே கற்பித்து மகிழ்ந்து கொண்டிருந்த பொய்ப் புகழ்கூட அவருக்கே அருவருப்புத் தட்டிவிட்டது. உணர்வினால் வாழ முடியாத உயரத்துக்குத் தங்களையே உயர்த்திக்கொண்டு விட்டவர்களுக்கு இப்படி ஒரு சலிப்பு வருவதும் இயற்கைதான். தனி அறிவினால் மட்டுமே வாழ்ந்தால் - உணர்வின் ஈரப்பசையில்லாத அந்த அறிவு வாழ்க்கை ஒரு நாள் காய்ந்து முறிந்து போகுமென்று தோன்றியது. திருவாளர் பொன்னப்பாவும் அப்படிக் காய்ந்து முறிந்துபோகிற ஒரு நிலையில்தான் இருந்தார். இப்போது அவரை யாரும் கவனிப்பாரில்லை. அவருடைய அபிப்பிராயங்களையும் யாரும் இலட்சியம் செய்வதில்லை. சமுதாய வளர்ச்சி என்ற பாதையில் கருத்துக்கள் வளராமலும் மனம் விரிவடையாமலும் - முடமாகிப் போன சிந்தனையாளனைப்போல் பின்தங்கி விட்டார் அவர். பரந்த சிந்தனையும், மற்றவர்களையும் தழுவிக் கொள்கிற பொது நோக்கமும் அறவே போய் எதற்கெடுத்தாலும் தன்னைச் சுற்றியே நினைக்கிற சிந்தனை மலட்டுத்தனம் வந்ததன் விளைவாக இப்போது அவர் விமர்சகர் ஆகிவிட்டார். தன்னைக் கவனிக்காத சமூகத்தைப் பழிதீர்த்துக் கொள்ளும் ரோஷமும், கொதிப்பும் அவரிடமிருந்து விமரிசனங்களாக வெளிவந்தன. தான் சொல்கிற ஒரு கருத்து அல்லது அபிப்ராயம் நியாயமா, தனக்கே மனப்பூர்வமானதா என்று சிந்தித்துச் செயற்படுவதைவிடத் தான் சொல்கிற கருத்து அல்லது அபிப்ராயத்தை - மற்றவர்கள் கவனிக்கிறார்களா- என்று சிந்தித்துச் செயல்படும் தாழ்வு மனப்பான்மை அவருக்கு வந்துவிட்டது. தன் அபிப்ராயத்தால் பலரும் உடனே பாதிக்கப்பட வேண்டுமென்று எதிர்பார்க்கும் ஒரு வக்கிர குணமும் அவருக்கு வந்திருந்தது. எதைப்பற்றி எழுதினாலும் தீவிரமாகத் தாக்கி எழுதவேண்டும் என்ற வெறியும் அவரிடம் முறுக்கேறியிருந்தது. சராசரியான நல்ல அறிவாளி ஒருவனுக்குச் சமூகத்தையும், மற்றவர்களையும் பொறுத்து இருக்கவேண்டிய குறைந்தபட்சமான சுமுக பாவமும் இல்லாமல் வறண்டு போயிருந்தார் அவர். அப்பாவித் தமிழ்ப் பண்டிதர்கள் மேலும், புதிதாக முன்னேறும் இந்தத் தலைமுறை எழுத்தாளர்கள் மேலும் அக்கினித் திராவகத்தை வாரி இறைப்பது அவருடைய பேனாவின் மரபாகிவிட்டது. பி.சு. பொன்னப்பா - என்பது அவருடைய முழுப் பெயராக இருந்தாலும் ஓர் இலக்கிய அரக்கனுக்காகப் பயப்படும்- பயங்கலந்த நிர்ப்பந்த மரியாதையோடு 'பி.எஸ்.பி.' என்று அன்பர்கள் மெதுவான குரலில் அவர் பெயரைச் சொல்லி வந்தார்கள்.

'பி.எஸ்.பி.' யின் விமர்சனம் சில சமயங்களில் பக்தர்கள் புரிந்துகொள்ள முடியாத 'பரம்பொருள் தன்மை' போல் ஆகிவிடும். அவருடைய விமரிசனக் கணைகளுக்கு நிகழ்கால ஆசிரியர்கள் மட்டுமல்லாமல் கடந்தகால மேதைகளும் ஆளாவதுண்டு. ஒரு முறை, "கம்பனில் சில பகுதிகளைத் தவிர மற்றவைகளைக் குப்பைத் தொட்டியில் போட வேண்டியதுதான்" என்று ஒரு கருத்தை வெளியிட்டு அது காரசாரமான அபிப்ராய பேதங்களைக் கிளப்புவது கண்டு மகிழ்ந்தார். இன்னொருமுறை 'திருக்குறளைத் தலையைச் சுற்றி நெருப்பில் போடவேண்டும்' என்று ஒரு குண்டைத் தூக்கிப் போட்டார். இவ்வளவுக்கும் திருக்குறளையோ கம்பனையோ அவர் முழுதும் படித்ததுகூட இல்லை. ஏனோ காரணமில்லாமல் தமிழ்ப் பண்டிதர்கள் மேல் ஏற்பட்டுவிட்ட ஒரு வெறுப்பைப் போலக் கம்பன்மீதும் குறள்மீதும்கூட அவருக்கு வெறுப்பு ஏற்பட்டுவிட்டது. முதல் நாள் கம்பனையும், திருவள்ளுவரையும் இப்படித் தூக்கி எறிந்து எழுதிய இதே பேனாவால் மறுநாள் 'யாருக்கு அதில் எந்த நயமிருக்கிறது' என்றே புரியாத ஓர் ஏழாந்தரமான கொச்சைத் தமிழ் நாவலை - முதல் தரமானது என்று பாராட்டிப் புகழ்மாலை சூட்டுவார் பி.எஸ்.பி. 'கம்பனை ஏன் குறை கூறுகிறீர்கள்?' - என்று கேட்டால், "மில்டனைப் போலவோ, ஹோமரைப் போலவோ அவன் பாடவில்லையே?"- என்று விநோதமாக அதற்கும் ஒரு பதில் ரெடிமேடாய் வைத்திருப்பார்.

"அது ஏன்? கம்பன் எதற்காக மில்டனையும், ஹோமரையும் போலிருக்க வேண்டும்?" - என்று கேட்டால் பதில் வராது அவரிடமிருந்து,

"இன்ன நாவலைப் புகழ்கிறீர்களே; அது ரொம்ப சுமாராக இருக்கிறதே?" என்று கேட்டாலோ,

"அதெப்படி? ஜேம்ஸ் ஜாய்ஸ், காஃப்கா போன்று தமிழில் எழுத முயன்றிருக்கிறாரே அவர்?" என்பதாக அதற்கும் ஒரு விநோதமான பதில்தான் வரும் அவரிடமிருந்து. விநோதமில்லாத பதில்கள் அவரிடமிருந்துதான் வராதே.

தமிழை எப்படி வேண்டுமானாலும் எழுதலாம் என்று சொல்கிற அவர் தெரியாத காரணத்தால் யாராவது இங்கிலீஷில் சிறு தவறுபட எழுதினாலோ, பேசினாலோ, அசிங்கமாகக் கேலி செய்வார். அதற்கு என்பதை 'அதுக்கு' என்றும் 'சிறியது' என்பதைச் 'சின்னது' என்றும் தோன்றினாற் போலத் தமிழில் தாம் எழுதுவதை மற்றவர்கள் கேலி செய்ய முடியாதபடி மிரட்டி வைத்திருக்கும் அவர் - மற்றவர்களைத் தாராளமாகக் கேலி செய்வார். விதேசி மனப்பான்மையோடு சுதேசி மொழிகளையும் நூல்களையும் விமர்சனம் செய்து வந்தார் அவர். அவருடைய விருப்புக்கள் விநோதமானவை. வெறுப்புக்களும் கூட விநோதமானவை.

பன்னீராயிரம் பொற்கொல்லர்களைப் பலிகொடுத்துக் கண்ணகிக்கு விழாக் கொண்டாடினானாமே ஒரு பைத்தியக்காரப் பாண்டியன்; அதுபோல் முடிந்தால் தொண்ணூறாயிரம் தமிழ்ப் பண்டிதர்களைக் காவு கொடுத்துப் புதுமை இலக்கியத்திற்கு ஒரு விழாக் கொண்டாட வேண்டுமென்பது அவர் ஆசை. நல்ல வேளையாக அந்த ஆசை இன்றுவரை நிறைவேறவில்லை. ஆனால், வேறு ஓர் ஆசை

மட்டும் நிறைவேறியது. காரசாரமான அபிப்பிராயங்களோடு கடுமையான விமர்சனப் பத்திரிகை ஒன்று நடத்த வேண்டுமென்ற ஆசை அவருக்கு நீண்ட காலமாய் இருந்தது. பத்திரிகைக்கு 'இலக்கிய ராட்சஸன்' - என்று பெயர் வைத்தார். பத்திரிகையின் இலட்சியங்கள் பின் வருமாறு வெளியிடப்பட்டிருந்தன :

1. இந்தப் பத்திரிகைக்கு முந்நூறு வாசகர்கள் போதும்.
2. தமிழ்ப் பண்டிதர்கள், மரபு வழிக் கவிதை எழுதுவோர் ஆகியவர்கள் இந்தப் பத்திரிகையைப் படிக்கக் கூடாது.
3. இந்தப் பத்திரிகை கடைகளில் தொங்காது.
4. எல்லாப் பத்திரிகைகளும் அட்டையில் இளம் பெண்கள் படத்தைப் போடுவது போலல்லாமல் இந்தப் பத்திரிகையில் கிழவிகள் கிழவர்கள் படமே போடப்படும்; இளம் பெண்கள்போல் தோன்றும் கிழவிகள் படம் கூடப் போடப்பட மாட்டாது.
5. இந்தப் பத்திரிகையில் சோதனைகளுக்கே முதலிடம் உண்டு.

இத்யாதி நிபந்தனைகளுடன் பத்திரிகை வெளி வந்தது. முதல் இதழில் முதல் பக்கத்தில் பி.எஸ்.பி. எழுதிய புதுமுறை வசன கவிதை ஒன்று வெளி வந்திருந்தது. அக்கவிதை பின் வருமாறு.

**விளக்கெண்ணெயின் 'வழ வழ'**

**"ஜிலு ஜிலுக்கும் விளக்கெண்ணெய்**
**சிவு சிவு பிசு பிசு -**
**சிவு சிவு வழ வழ**
**வழ வழ கொழ கொழ**
**கொழ கொழ விளக்கெண்ணெய்**
**கரு கரு மயிர்க் கும்பல்**
**கருத்தடரும் உயிர்க்காடு" -**

- இக்கவிதையில் மனத்தினால் எட்டிப் பிடிக்க முடியாத பல அரிய உண்மைகள் அடங்கியிருக்கும் மர்மங்களை இதைப் படைத்த கவிஞராகிய பி.எஸ்.பி. அவர்களே அதே இதழில் கட்டுரையாக எழுதியிருந்தார். துர்த்தேவதைகளுக்கும் பக்தர்கள் ஏற்படுவது போல் பி.எஸ்.பி.யின் இலக்கிய ராட்சஸனுக்கென்று சில வக்கிரமான வாசகர்களும் உக்கிரமான மூளைக்கொதிப்படைந்த பக்தர்களும் கிடைத்தனர். ஒட்டு மொத்தமாகத் தமிழ்நாட்டை அலசும் ஒரே ஏடு - என்று பீடு மொழியுடன் இலக்கிய ராட்சஸன் பவனி வரத் தொடங்கினான். இலக்கிய ராட்சஸனின் 250 பிரதிகள் தமிழ்நாட்டை அலசின.

'எஸ்ராபவுண்டின் கவிகளும் எழுத்தச்சனும்,' உருஉத்திப் பார்வையும் கரு - அமைந்த கதைகளும்', 'முட்டைக்கடை முகுந்தன் கவிதை நூல் விமர்சனம்' 'காஃப்காவும் கருணைக் கிழங்கு லேகியமும்' போன்ற சில மூளைக்குழப்பத் தலைப்புக்கள் இலக்கிய ராட்சஸனில் அடிக்கடி தென்படலாயின.

இலக்கிய ராட்சஸனில் எழுதும் எழுத்தாளர்களுக்கும் துர்த்தேவதைகளை வழிபடுகிறவர்களுக்கு வருவதைப் போல் பி.எஸ்.பி. யின் உயிரற்ற தமிழ்நடை வக்கிரத் தாக்குதல்கள் எல்லாம் ஏகலைவன் நியாயமாகக் கைவந்தன. அதில் மர்ம-பலராமன் என்றொரு இளைஞர் அடிக்கடி வெளுத்துக் கட்டிக் கொண்டிருந்தார். இலக்கிய ராட்சஸன் ஆசிரியன் கூட இந்த மர்ம - பலராமனின் குழப்பக் கட்டுரைகளை வெகுவாகப் பாராட்டி வந்தார். மர்ம-பலராமன் எழுதாமல் ஓர் இலக்கிய ராட்சஸன் ஏடு கூட வராது என்ற அளவிற்கு ஒரு பிணைப்பு இருவருக்கும் ஏற்பட்டு விட்டது. இந்த நிலையில் ஒருநாள் இலக்கிய ராட்சஸன் ஆசிரியர் பி.எஸ்.பி.யைச் சந்திக்க மர்ம - பலராமன் வந்து சேர்ந்தார். பி.எஸ்.பி. மர்ம - பலராமனை உற்சாகமாக வரவேற்றார். "உங்க அபிப்பராயங்கள் எழுத்துக்களிலே முப்பதுகளுக்கு முந்தியதைப் பாராட்டியும் - இருபதுகளுக்குப் பிந்தியதைத் தாக்கியும் காரசாரமாக எழுதுறீங்க. ரொம்ப அழுத்தமும் இருக்கு - ஆழமும் இருக்கு" - என்று இருபத்தேழு வயது நிரம்பாத மர்ம - பலராமனைப் பாராட்டினார் பி.எஸ்.பி. மர்ம பலராமனுக்கு உற்சாகம் அதிகமாகி விட்டது. "கம்பனைக் குப்பையிலே போடு" என்றொரு திறனாய்வு எழுதியிருப்பதாக உடனே பி.எஸ்.பி.யிடம் கூறினார் மர்ம - பலராமன். "ஆகா! தாராளமாக வெளியிடலாம்" - என்று அதை வாங்கிக் கொண்டார் பி.எஸ்.பி. மர்ம - பலராமனுக்குத் துணிவு குடம் குடமாகப் பொங்கலாயிற்று.

விமர்சகர் பி.எஸ்.பி. 'விவாகரத்து' என்று ஒரு நாவல் எப்போதோ எழுதியிருந்தார். ஒரு விதவை மாமி மாவரைப்பதில் ஆரம்பமாகிற நாவல், அந்த மாமி மாவரைத்து முடிகிறவரை நூறுபக்கம் நினைவோட்டமாக வளர்கிற பாணி. அந்த நாவலை 'தமிழிலக்கியத்தில் வெளிவந்துள்ள யதார்த்த இலக்கிய சிகரம்' என்பதாக வர்ணித்து மர்ம - பலராமன் இலக்கிய ராட்சஸனிலேயே ஒரு கட்டுரை எழுதினார். அதுவும் இலக்கிய ராட்சஸனில் அபாரமாக வெளிவந்தது. பி.எஸ்.பி. எதாவது ஸெமினார்கள், இலக்கிய அரங்குகளில் பேசினால் கூடத் தமிழ் இலக்கியத்தில் பிதாமகர்களாகக் குறிப்பிடும் பத்துப் பேர் மர்ம - பலராமனைப் போல் 'இலக்கிய ராட்சஸனி'ல் - வக்கிரக் கட்டுரைகளைப் படைப்பவர்களாகத்தான் இருப்பார்கள். மர்ம பலராமனை பி.எஸ்.பி. உற்சாகப்படுத்த அவர் சிறுபிள்ளைத்தனமாக எழுதுவதில் கடைசி எல்லைக்குப் போய்க் கொண்டிருந்தார்.

ஒருநாள் திடீரென்று மர்ம - பலராமனிடமிருந்து வந்த ஒரு கட்டுரையைப் படித்து பி.எஸ்.பி. திடுக்கிட்டார். ஏனென்றால் "பி.எஸ்.பி.யின் சமீபகாலத்து நாவலான 'அடுப்பங்கரை'யில் ஆழமோ - பாத்திரங்களின் வார்ப்படமோ - சரியாக இல்லை என்றும் பி.எஸ்.பி. இனிமேல் நாவலே எழுதக்கூடாது" என்றும் மர்ம - பலராமன் தனக்குத் துரோணர் போன்ற பி.எஸ்.பி. யையே கடுமையாகத் தாக்கியிருந்தார். 'இந்த இருபத்தேழு வயதுப் பயலுக்குத் தாக்குகிற துணிவு வருவதாவது?' - என்று திகைத்துச் சீறினார் பி.எஸ்.பி. பஸ்மாசுரனுக்கு வரம் கொடுத்த சிவபெருமானாக இருந்தார் அவர் இப்போது. மர்ம பலராமனிடம் பெருகிய துணிவுவெள்ளம் 'பி.எஸ்.பி.யினது சமீப நாவல் வெறும் குப்பை' என்று அடித்துச் சொல்கிற அளவு முறுகி வளர்ந்திருந்தது.

அந்தக் கட்டுரையைப் போடாமல் நிறுத்தியதோடு உடனே 'சமீப காலமாக உனக்கு மூளை குழம்பிவிட்டது' என்று கோபமாக மர்ம - பலராமனுக்குக் கடிதமும் எழுதினார் குரு பி.எஸ்.பி.

"உங்களுக்குத்தான் மூளை குழப்பியிருப்பதாக நீங்கள் எனக்கு எழுதிய கடிதத்திலிருந்து தெரிகிறது-" என்று உடனே அவருக்குக் காரமாகப் பதில் எழுதினான் மர்ம - பலராமன். 'தான் மற்றவர்களைத் திட்டுவதற்குச் சரியான கருவியாகப் பயன்படும் ஓர் ஆள் இவன்' என்று தானே தேர்ந்தெடுத்து முறுக்கி விட்ட ஒரு பொடியன் 'தன்னையே திட்டுவதா?' - என்று கொதித்தெழுந்தார் பி.எஸ்.பி. உடனே கொதிப்போடு கொதிப்பாக மர்ம பலராமனின் கட்டுரையைத் திருப்பியனுப்பியதோடு நிற்காமல், அந்த இதழ் இலக்கிய ராட்சஸனில் "இலக்கிய விமர்சனமும் சிறுபிள்ளைத் தனங்களும்" - என்ற தலைப்பில் மர்ம - பலராமனைத் தாக்குதாக்கென்றுத் தாக்கித் தள்ளினார், அப்போதுதான் தம்முடைய இணையற்ற குருஸ்தானம் நினைவு வந்தவர் போல். அவர் சீடனைத் தாக்கிய மூன்றாம் நாள் சீடன் 'இலக்கியக் கொம்பன்' என்ற பேரில் புதிய விமரிசனப் பத்திரிகை ஒன்று தொடங்கியிருப்பது தெரிய வந்தது. மர்ம - பலராமனை ஆசிரியராகக் கொண்ட இலக்கியக் கொம்பனில் - "பி.எஸ்.பி.யின் சமீபக் குப்பைகள்" - என்ற கட்டுரை முதல் இதழிலேயே வந்திருந்தது. அதில் பி.எஸ்.பி.யைக் காரமாகத் தாக்கியிருந்தார், மர்ம - பலராமன். பி.எஸ்.பி.க்கு கோபமான கோபம் வந்தது. மர்ம-பலராமனைக் கழுத்தை நெறித்துக் கொன்று விடவேண்டும் போலக் கோபம் அவ்வளவு அதிகமாக வந்தது பி.எஸ்.பி.க்கு.

வரண்டு போன ஒரு விமர்சகன் அளவுக்கு மீறிக் கோபப்படும் போதுதான் இரண்டாவது விமர்சகன் பிறக்கிறானோ என்னவோ? ஆனால், இந்த பி.எஸ்.பி. என்ற பரமசிவனிடம் வரம் வாங்கிய பஸ்மாசுரனோ இவர் தலையில் கையை வைத்துப் பொசுக்கியே விட்டான். எப்படி என்று கேட்கிறீர்களா? இரண்டே மாதங்களில் 'இலக்கிய ராட்சஸன்'நின்று விட்டது. புதிய பத்திரிகையாகிய 'இலக்கியக் கொம்பன்' பிரமாதமாக நடக்கத் தொடங்கி விட்டது. இப்போது பி.எஸ்.பி.யின் துர்த்தேவதை ஸ்தாபனம் பறிபோயிற்று. புதிய விமர்சனத் துர்த்தேவதையாக இருபத்தேழே வயது நிரம்பிய மர்ம - பலராமன் உருவாகிவிடவே - பழைய துர்த்தேவதையின் பக்தர்களாகிய விமர்சகக் குஞ்சுகள் எல்லாம் புதிய மர்ம - பலராமனின் சீடர்களாகிவிட்டனர். மர்ம பலராமன் 'தனக்கு முன்னும் தமிழே இல்லை. தனக்குப் பின்னும் தமிழே இல்லை' - என்ற பாணியில் ஹுங்காரச் சவால் விடலானான். 'திருவள்ளுவர் ஆழமாக எழுதத் தவறிவிட்டார்', 'கம்பர் வசன கவிதை எழுதத் தெரியாதவர்' - போன்ற கண்டனக் கட்டுரைகள் இ-கொம்பனில் வெளி வந்து தமிழர்களின் மூளையைக் குழப்பலாயின.

இனிமேல் 'இ. கொம்பனின்' கொழுப்பு எப்போது அடங்குமென்றுதானே கேட்கிறீர்கள்?

இ. கொம்பனிலிருந்து இன்னொரு இரண்டாவது விமர்சகன் பிரியும்போது நிச்சயமாக இ. கொம்பன் பொசுங்கிப் போகும். கவலைப்படாதீர்கள். அது வரை பொறுமையாயிருங்கள்.

**(1978-க்கு முன்)**

## 130. உலகனூர் பஞ்சாயத்தில் ஒருமைப்பாட்டு விழா

**லோ**கல் அட்மினிஸ்டிரேஷன் மற்றும் பஞ்சாயத்து நிர்வாகிகளுக்காக அரசாங்கம் அனுப்பிய விசேஷ அவசர சர்க்குலர் ஒன்று அன்று பகல் ஒரு மணித் தபாலில் உலகனூர் பஞ்சாயத்து யூனியனுக்கு வந்து சேர்ந்தது.

காலையிலிருந்து கடும் தலைவலியோடு மேஜையின் மேல் கால்களைத் தூக்கிப் போட்டுக் கைக்குட்டையால் முகத்தை மூடியபடி தூங்கிக் கொண்டிருந்த கமிஷனர் - அல்லது தூங்க முயன்று கொண்டிருந்த கமிஷனர் கண்ணாயிரம் அவர்களை எழுப்பி, அந்தக் கடிதத்தைக் கொடுத்தான், அட்டெண்டர் ஆரோக்கியசாமி. கண்ணாயிரம் அவன்மேல் 'வள்'ளென்று எரிந்து விழுந்தார்.

"தூங்கறபோது எழுப்பாதேன்னு உனக்கு எத்தினி வாட்டி சொல்றது?"

"ஏதோ சர்க்கார் கடிதாசி வந்திருக்குங்க... அதான் எழுப்பினேன்" என்று கூறிக்கொண்டே தலையைச் சொரிந்தான் ஆரோக்கியசாமி. அவன் ஏன் தலையைச் சொரிந்தான் என்று வாசகர்கள் கேட்டுப் பயனில்லை. பியூன் தலையைச் சொரிவது என்பது உலகத்தில் பியூன்கள் ஏற்பட்ட நாளிலிருந்து மரபாக இருந்து வருகிறது. உலகனூர் பஞ்சாயத்து யூனியன் ஆபீஸில் ஆரோக்கியசாமிக்கு அட்டெண்டர் வேலையென்று பெயர் இருந்தாலும் அவன் செய்து கொண்டிருந்தது என்னவோ பியூன் வேலைதான்.

கடிதத்தைப் பிரித்துப் படித்துவிட்டு மீட்டிங் கிளார்க்கைக் கூப்பிட்டு யூனியன் மெம்பர்களுக்கும் சேர்மனுக்கும் ஸர்க்குலர் அனுப்பச் சொன்னார் கமிஷனர்.

"ஸர்க்குலர் அனுப்பறது சரி... அஜெண்டாவிலே என்னன்னு போடறது?..." என்று சந்தேகத்தைக் கிளப்பினார் மீட்டிங் கிளார்க்.

"தேசீய ஒருமைப்பாட்டு விழாவைக் கொண்டாடணுமாம், கவர்மெண்ட் 'ஸர்க்குலர்' ஒண்ணு வந்திருக்கு. அதை முதல்லே எழுது. அப்புறம் 'அஜெண்டா'விலே வழக்கமா உள்ளதெல்லாம் போட்டுக்க. 'ஸ்டிரீட்லைட் பெஸிலிட்டிஸ்' - பஞ்சாயத்து லைப்ரரீஸ்னு இன்னும் ரெண்டு மூணு அயிட்டமும் போட்டுக்க".

"தேதி எல்லாருக்கும் ஒத்து வரணுமே; சேர்மனுக்குத் தேதி ஒத்து வந்தா - வைஸ் சேர்மனுக்கு ஒத்து வராது. இரண்டு பேருக்கும் ஒத்து வந்தா மெம்பர்ஸுக்கு ஒத்து வராது...?"

"ஏன் நிறுத்திப்பிட்டே?... பாக்கியையும்தான் சொல்லிப்பிடேன் - அத்தினி பேருக்கும் ஒத்து வந்தாக் கமிஷனருக்கு ஒத்து வராதுன்னு."

மீட்டிங் கிளார்க் சிரித்துக் கொண்டார். ஸர்க்குலர் தயாராயிற்று. அஜெண்டா கீழ்க் கண்டவாறு அமைந்திருந்தது:-

1. டு அரேன்ஜ் நேஷனல் இண்டகரேஷன் ஸெமினார்.
2. ஸ்டிரீட் லைட் ஃபெஸிலிட்டீஸ்
3. பஞ்சாயத்து லைப்ரரீஸ்.

ஸர்க்குலரில் கையெழுத்துப் போட்டு. "இன்னிக்கே எல்லாருக்கும் கையெழுத்துக்கு அனுப்பிச்சிடு" - என்று கூறினார் கமிஷனர் கண்ணாயிரம்.

ஸர்க்குலர் கையெழுத்துக்குப் போயிற்று. சேர்மனும் வைஸ் சேர்மனும், மெம்பர்களும் ஒவ்வொரு காரணத்துக்காக ஒவ்வொரு கோபத்தை வைத்து முணு முணுத்துக் கொண்டே கையெழுத்துப் போட்டார்கள். மீட்டிங் தினத்தன்று எல்லோருக்கும் காபி வழங்குவதா, பாதாம்கீர் வழங்குவதா என்பது பற்றி சேர்மனுக்கும் கமிஷனருக்கும் கூட்டம் தொடங்கும் முன் அரை மணி நேரம் காரசாரமாக விவாதம் நடந்தது. கடைசியில் பாதாம்கீரே வாங்கி வரப்பட்டது. மீட்டிங் தொடங்கியதும் கமிஷனர் சர்க்காரிடமிருந்து வந்திருந்த ஸர்க்குலரைப் படித்துவிட்டு அஜெண்டாவில் முதல் அயிட்டமான தேசீய ஒருமைப்பாட்டு விழாவைப் பற்றிக் கூறினார். உடனே சேர்மன் தமது கனத்த சரீரத்தைத் தூக்க முடியாமல் தூக்கிக் கொண்டு எழுந்திருந்து."ஒருமைப் பாட்டு விழாவைக் கொண்டாடணும்கிறதிலே எனக்கோ, உங்களுக்கோ அதிக ஆட்சேபணை இருக்க முடியாது. ஆனா, அதை எப்படிக் கொண்டாடணும்கிறதைத் தான் மெம்பர்ஸ் எல்லாம் இப்பச் சொல்லணும்...." என்றார்.

"மாஸ் ஸ்கேல்ல ஒரு பெரிய ஒருமைப்பாட்டு ஊர்வலம் நடத்தணும் 'யாதும் ஊரே யாவரும் கேளிர்'னு பெரிய பானர் ஒண்ணையும் வள்ளுவர் படத்தையும் ஊர்வலத்தில் முன்னாடிக் கொண்டு போகணும்" - என்று தி.மு.க. உறுப்பினர் திருமாவளவன் உடனே எழுந்திருந்து தமது கருத்தைத் தெரிவித்தார்.

"சமதர்ம சமாதான சமுதாயத்திலே வர்க்கப் போராட்டத்திற்கு இடமே இருக்கக் கூடாது என்று லெனின் கூறியிருக்கிறார். ஊர்வலம் நடத்தும்போது அது நினைவிருக்க வேண்டும்" - என்றார் வலது கம்யூனிஸ்ட் உறுப்பினர் வாழ வந்தான். திடீரென்று சம்பந்தமில்லாமல் லெனினை இழுக்கவே இடது கம்யூனிஸ்ட் உறுப்பினருக்கே கோபம் வந்துவிட்டது. மீசையை அரிவாள் போல் முறுக்கிவிட்டுக் கொண்டு சுத்தியலால் அடிப்பது போல் வார்த்தைகளை விட்டார் அவர்.

"நண்பர்களுக்கு நானொன்று சொல்லிக் கொள்ள ஆசைப்படுகிறேன். மாவோ சொன்னார் ஆயிரம் பூக்கள் மலர வேண்டுமென்று. அதிகாரம் துப்பாக்கிக் குழாயிலிருந்து பிறக்கிறது. தோழர் வாழ வந்தான் அநாவசியமாக இங்கு சித்தாந்தப் போராட்டத்தை எழுப்புகிறார். விளைவு விரும்பத் தகாததாக இருக்குமென்பதை மட்டும் அவருக்கு நினைவூட்ட விரும்புகிறேன்" என்று சீறினார் இடது கம்யூனிஸ்ட் தோழர் இடிந்தகரை பாலகிருஷ்ணன். கடுங்கோபம் அடைந்த சுதந்திரா உறுப்பினர்,

"இப்போது தேசீய ஒருமைப்பாட்டு விழாவைப் பற்றிப் பேசுகிறோமா? அல்லது சித்தாந்தப் போராட்டங்களைப் பற்றிப் பேசுகிறோமா? என்பது எனக்குத் தெரியவேண்டும்" என்று எழுந்திருந்து கூப்பாடு போட்டார். "பிற்போக்குவாதி களுக்குச் சித்தாந்தப் போராட்டம் பற்றிக் கேட்டாலே பயம் வந்து விடுகிறதே?" என்று வலது, இடது தோழர்கள் இருவருமே ஒன்றாக எழுந்து சுதந்திரா உறுப்பினர்மேல் பாய்ந்தனர். தலைவர் குறுக்கிட்டுச் சமாதானப்படுத்த வேண்டியதாயிற்று.

"அமைதி! அமைதி! வீணான அரசியல் சர்ச்சைகள் இங்கு வேண்டாம். நாட்டின் ஒருமைப்பாட்டைப் பற்றிய விழா இது. அதற்கான யோசனைகளை மட்டுமே இங்கு கூற வேண்டும். தி.மு.க. உறுப்பினர் திருமாவளவன் கூறிய அருமையான யோசனை எனக்கும் பிடித்திருக்கிறது. ஒருமைப்பாட்டு ஊர்வலத்தை எங்கிருந்து தொடங்கலாம்?"

"மறவர் தெரு முக்கிலிருந்து ஊர்வலத்தை ஆரம்பிக்கலாம்" - என்றார் முக்குலத்தோர் பிரதிநிதி முருகையாத்தேவர். உடனே முஸ்லிம் லீக் பிரதிநிதி வஹ்ஹாப் சாகிப் தாடியை உருவிக்கொண்டே எழுந்து நின்று, "இந்தப் பஞ்சாயத்தில் எந்த நல்ல காரியத்திலும் முஸ்லீம் பெருமக்கள் புறக்கணிக்கப்படுவதையே நான் தொடர்ந்து காண்கிறேன். ஊர்வலத்தை மறவர் தெரு முக்கிலிருந்து ஏன் தொடங்க வேண்டும்? காஜியார் தெரு பள்ளிவாசல் முன்பிருந்து ஏன் தொடங்கக்கூடாது?" என்பதாக இரைந்தார்.

"இவை எல்லாவற்றையும் விடப் பெருமாள் கோவில் முன்னாலிருந்து தொடங்குவதுதான் பொருத்தம்" - என்றார் ஜனசங்கப் பிரதிநிதி சக்ரபாணி அய்யங்கார்.

"ஏன் இத்தனை வம்பு? தாலுக்கா காங்கிரஸ் கமிட்டி அலுவலகம் ஊர் நடுத் தெருவிலிருக்கிறதே! அங்கிருந்தே ஊர்வலத்தைத் தொடங்கலாமே?" என்று சேர்மன் மெதுவாக ஆரம்பித்தபோது "கூடாது! கூடவே கூடாது" என்று பல குரல்கள் கடுமையாக எதிர்த்தன.

சேர்மன் குரல் அந்த எதிர்ப்பில் ஒடுங்கியே போய்விட்டது.

"காந்தி சாவடியில் மகாத்மா சிலை அருகிலிருந்து தொடங்கலாமா? அதில் உங்களுக்கு ஆட்சேபணை இருக்க முடியாதென்று நினைக்கிறேன்?" என்றார் வைஸ் சேர்மன். காங்கிரஸ் மெம்பர்கள் இதைக் கரகோஷம் செய்து வரவேற்றனர்.

"அந்த இடம் பஜனை பாடத்தான் லாயக்கு" என்று மெல்ல ஆரம்பித்தார் இடிந்தகரை பாலகிருஷ்ணன்.

"பஜனையைத் தூஷிக்காதே! நாக்கு அழுகிவிடும்...." என்று சீறினார் ஜனசங்கப் பிரதிநிதி. உடனே ஜனசங்கப் பிரதிநிதியை நோக்கி மடக்கு நாற்காலியைத் தூக்கி வீசினார், இடிந்தகரை. முக்குலத்தோர் பிரதிநிதி முருகையாத் தேவர் குறுக்கே புகுந்து அந்த நாற்காலியைப் பிடித்து மீண்டும் அதை இடிந்தகரையின் மேல் திருப்பிவிட்ட

போது வலது கம்யூனிஸ்ட் உறுப்பினர் இ.க.வுக்கு ஃபெல்லோ டிராவலராகி மற்றொரு நாற்காலியை எடுத்து வீசினார். அது குறிதவறி முஸ்லீம் லீக்கைச் சேர்ந்த வஹ்ஹாப் சாகிப்பின் மேல் விழுந்துவிடவே, "அரே! பத்மாஷ்" ... என்று கத்தியபடியே மேஜைமேல் கிடந்த டேபிள் வெயிட் கண்ணாடிக் குண்டை எடுத்து வாழ வந்தானின் மண்டையில் வீசினார் அவர். வாழ வந்தானின் முன் நெற்றியில் விழுந்து காயப்படுத்திற்றுக் கண்ணாடிக்குண்டு. முன் நெற்றியில் இரத்தம் வடிவதைப் பார்த்ததும் வ.க. உறுப்பினருக்குக் கடுங்கோபம் மூண்டது. மேஜையை கருட வாகனம் போல் இரு கைகளாலும் அலக்காகத் தூக்கினார் அவர். உடனே அங்கே பிரளயம் மூண்டது. நாற்காலிகள் நொறுங்கின. மேஜைகள் உடைந்தன. ஒரு குட்டி கலாசாரப் புரட்சியே மூண்டு விட்டது போல மகிழ்ந்தார் இ.க. உறுப்பினர். சேர்மன் பயந்து போய் எழுந்து ஓடிவிட்டார். கமிஷனர் போலீஸுக்கு ஃபோன் செய்ய எழுந்து ஓடினார். அட்டெண்டர், மீட்டிங் கிளார்க், காஷியர் எல்லாம் இதைப் பற்றி அலட்டிக் கொள்ளாமல் வரவழைத்திருந்த பாதாம்கீர் அண்டாவில் மீதமிருந்ததைச் சுகமாகக் குடித்துக் கொண்டிருந்தனர்.

வைஸ்சேர்மன் வரதராஜனின் முகத்தில் யாரோ சிவப்பு மைப்புட்டியை வீசி அடித்துவிடவே, அவர் தன் முகத்தில் தெறித்துவிட்ட சிவப்பு மையையே இரத்தமாகக் கருதிப் பயந்து 'வீல்' என்று கத்தினார். வீசப்பட்ட மை சிவப்பாக இருந்ததனால் அவ்வளவு பதற்றத்திலும் கச்சிதமாகச் சிவப்பு மையையே தேடி எடுத்து வீசியது கம்யூனிஸ்ட் உறுப்பினராகவே இருக்கக் கூடும் என்ற காங்கிரஸ் வைஸ் சேர்மனுக்குத் தோன்றியது. அவர் முகத்தில் - சட்டையில், வேஷ்டியில் எங்கும் சிவப்புக் கரையோடு ஓடியதை அரைகுறையாகக் கவனித்த அட்டெண்டர் ஆரோக்கியசாமி, வைஸ் சேர்மன் ரத்தக் கரையோடு ஓடறார். அவரை யாரோ குத்திட்டாங்க போலிருக்கு' - என்று ஒதுங்கி நின்ற 'தினப் பளீர்' நிருபரிடம் கூறவும் அந்தப் 'பளீர்' நிருபர் உடனே 'வைஸ் சேர்மனுக்குக் கத்திக்குத்து! இரத்தக் கறையோடு ஓடினார். உலகனூர்ப் பஞ்சாயத்து மீட்டிங்கில் கலகம்' - என்று அதை நியூஸாகவே எழுதத் தொடங்கி விட்டார். நடக்காத நியூஸுக்குத்தான் அவர் எப்போதும் நிருபர்.

கலகத்தில் கமிஷனரின் மூக்குக் கண்ணாடியை யாரோ உடைத்து விட்டார்கள். போலீஸ் வந்தபோது ஸ்தலத்தில் யாருமே இல்லை. சாயங்காலம் கணக்கெடுத்தபோது உலகனூர் பஞ்சாயத்து ஆபீஸில் பத்து மடக்கு நாற்காலிகள், நாலு மேஜை, மூன்று மைப்புட்டி, ஐந்து டேபிள் வெயிட்கள், இருபது கண்ணாடி கிளாஸ்கள் உடைந்து போயிருப்பது தெரிந்தது. பஞ்சாயத்து கமிஷனருடைய மூக்குக் கண்ணாடியும் வஹ்ஹாப் சாஹிப்பின் மண்டையும் உடைந்துபோன நஷ்டம் தவிர பாக்கி எல்லா நஷ்டங்களும் யூனியன் ஆபீஸின் நஷ்டமாகவே வாய்த்தன.

* * *

மறுநாள் மீட்டிங்கிளார்க், மீட்டிங் புது ஸர்குலர் விஷயமாகப் பஞ்சாயத்துக் கமிஷனரை அணுகியபோது, "இந்தாப்பா ஸர்குலர்லே இந்தவாட்டி முதல்லே வேறெதையாவது அஜெண்டா நெம்பர் ஒண்ணுன்னு போடு. ஒருமைப்பாட்டை மட்டும் போட்டுடாதே, என்னாலே மறுபடி மூக்குக் கண்ணாடி வாங்க முடியாது" என்றார் அவர், "சரி சார்! இந்தத் தெருக் குப்பைத் தொட்டிகள் வைக்கிற விஷயம் ரொம்ப நாளா அஜெண்டாவிலே சேரலே. அதைப் போட்டுடறேன்" என்று உற்சாகமாக மறுமொழி கூறினார் மீட்டிங் கிளார்க். ஒரு வேளை மறுபடியும் பாதாம் கீர் கிடைக்கலாம் என்ற சந்தோஷம் அவருக்கு வந்திருக்கலாம்.

(1978-க்கு முன்)



## 131. பகைமையின் எல்லை

**ஹா**ஸ்டலுக்கு எதிரே இருந்த பூங்காவில் நடுநாயமாக விளங்கியது அந்த மகிழமரம். தழைத்துப் படர்ந்து பசுமை கவிந்த அதன்கீழ் அன்று சுபத்ராவும் மாலதியும் தனியாகப் பிரிந்து வந்து உட்கார்ந்து கொண்டிருந்தார்கள். ஊசி ஊசியாக மெல்லிய பூஞ்சாரல் விழுந்துகொண்டிருந்தது. அதில் நனைந்துகொண்டே புல்வெளியில் கும்பல் கும்பலாகக் கூடி அரட்டை அடித்துக் கெண்டிருந்தனர் மற்ற மாணவிகள். மகிழ மரத்தடியில் சுபத்ராவும் மாலதியும் மட்டும் அமர்ந்து தங்களுக்குள் ஏதோ சம்பாஷித்துக் கொண்டிருந்தனர்.

பேச்சுக்கு நடுவே எப்படியோ, சுபத்ரா, நாராயணனைப் பற்றி ஏதோ சொல்ல வேண்டியதாகப் போயிற்று. அவ்வளவுதான், அவள் சரியாக மாலதியிடம் மாட்டிக்கொண்டு விட்டாள்.

“ஏண்டி சுபத்ரா! உனக்கு அந்த ‘தரித்திர’ நாராயணனைப் பற்றிப் பேசாவிட்டால் பொழுது போகாதோ? நல்ல நாராயணன் வந்தானடி! ஆமாம்! அவனுக்குக் குளிப்பதற்கு, சாப்பிடுவதற்கு, தூங்குவதற்கு ஏதாவது நேரம் மீதி இருக்கிறதோ, என்னவோ? ஐயோ பாவம்! உன் நாராயணன் காலேஜ் படிப்பை முடித்துவிட்டு வெளியேறும்போது அதிகப் படிப்பினால் மூளைக்கோளாறாக முடிந்து கீழ்ப்பாக்கத்திற்குப் போகாமல் இருக்கவேண்டும்!” - மாலதி தன் வெண்கலச் சிரிப்பிற்கிடையே சுபத்ராவைக் கிண்டல் செய்தாள்.

சுபத்ரா,. அர்த்தபுஷ்டியோடு கூடிய புன்னகை ஒன்றை இதழ்களில் ஓடவிட்டுக் கொண்டே மாலதிக்கு விடை கூறினாள்: “உனக்கு என்ன குரோதமோ தெரிய வில்லையேடி! அந்த நாராயணனைப் பற்றிப் பேசத் தொடங்கினாலே கரித்துக் கொட்டுகிறாயே? ஏ அப்பா! தான் உண்டு, தன் காரியம் உண்டு என்று இருக்கிற மனிதனை உலகம் எவ்வளவு குரோதம் பாராட்டுகிறது? நீ மட்டும் இல்லையடி மாலு! இந்தக் காலேஜில் படிக்கும் அத்தனை அரட்டைக் கல்லிகளும் நாராயணன் என்றால் கரிக்கிற கரிப்பு.. அதைச் சொல்லி முடியாது. ‘புத்தகப் புழு, புத்தகப் புழு’ என்று வாய்க்கு வாய் திட்டி ஆளைக் கோட்டாப் பண்ணிவிட்டால் உங்களுக்கு என்னதான் பிரயோஜனம் கிட்டுகிறதோ? படிப்பில் ஒரு மண்ணையும் காணோம்! கேலிக்கு மட்டும் குறைச்சலில்லை. நாராயணன் கால் தூசி பெறமாட்டீர்கள்!” - சுபத்ராவின் பேச்சு விளையாட்டாகப் பேசப்பட்டதுபோல இருந்தாலும் மாலதிக்கு அதைக் கேட்டதும் கோபம் வந்துவிட்டது.

அவள் சுபத்ராவை உறுத்துப் பார்த்த பார்வையில் அந்தக் கோபம் பளிங்கிலே பிரதிபலிக்கும் சிவப்பு நூல்போல வெளிப்படையாகத் தெரிந்தது. சுபத்ரா, சட்டென்று

அதைப் புரிந்துகொண்டவள் போலப் பேச்சை அதோடு நிறுத்தினாள். மாலதியின் முன்கோப இயல்பும் படபடப்பும் அவளுக்கு நன்றாகத் தெரியும். அதற்கு மேல் மாலதியிடம் வாயைக் கொடுத்தால் அவள் ஏதாவது ஏடாகூடமாகச் சொல்லித் தாறுமாறாக நடந்துகொள்வாள் என்பதை சுபத்ரா பழக்கத்தில் அறிந்திருந்தாள். அன்று அதற்குப் பின்பு ஹாஸ்டல் மணி அடிக்கின்றவரை இருவரும் எதைப் பற்றியும் பேசிக் கொள்ளவில்லை. மௌனமாக அமர்ந்திருந்துவிட்டு மணி அடித்ததும் எழுந்து சென்றனர்.

ஹாஸ்டலில் அவர்கள் இருவரும் ஒரே ரூமில் வசிப்பவர்கள். ஒன்றாகப் பழகுகின்றவர்கள். அந்தரங்க சிநேகிதிகள். தங்களுக்குள் எதையும் மனம் விட்டுப் பேசிக்கொள்ளும் அளவிற்கு நெருங்கிய நட்பு இருந்தது. ஆனால், குணங்களில் மட்டும் அளவு படுத்த முடியாத ஏற்றத் தாழ்வு இருந்தது. சுபத்ராவுக்குப் பிடித்தது மாலதிக்குப் பிடிக்காது. மாலதியின் வழி தனக்கு விருப்பமில்லாவிட்டாலும் சுபத்ரா அதை வெறுத்ததில்லை. குணங்களின் ஏற்றத்தாழ்வு ஒருபுறம் இருந்தாலும், அதை ஒரு வியாஜமாக வைத்துக்கொண்டு அடிக்கடி சண்டை சச்சரவுகளுக்கு இடங்கொடுத்ததில்லை அவர்கள்.

தான் எவற்றையெல்லாம் நவநாகரிகமாகக் கருதுகின்றாளோ, அவற்றின்படி தன் நடையுடை பாவனைகளை அமைத்துக் கொண்டிருந்தாள் மாலதி. ஆடம்பரத்திலும், பிறரைக் கவர்கின்ற விதத்தில் தன்னை அலங்கரித்துக் கொள்வதிலும் அவளுக்கு அதிகமான பிரியம் உண்டு. ஆண்களானாலும் சரி, பெண்களானாலும் சரி; தன்னைப்போல ஆடம்பரத்தை விரும்பாதவர்களை அவள் அலட்சியத்தோடு தான் நோக்குவாள். அந்த இயல்பு நீக்க முடியாதபடி அவளோடு அவளாகப் படிந்திருந்தது. வேண்டுமென்றே அவள் இப்படி நடந்து கொள்வதாகச் சொல்லி விடுவதற்கும் இல்லை. அது ஒரு போக்கு. அலாதியான தன்மையுடையது.

சுபத்ராவின் இயல்பு இவைகளுக்கு நேர்மாறானது. அவள் எளிமையையே விரும்புகின்றவள். "நாகரிகம் என்பது உடல் அளவில் அமையவேண்டியது இல்லை. உள்ளத்தோடும் குணங்களோடும் அமையவேண்டிய பண்பாடு அது" என்று அழுத்தமாக நம்புகின்றவள். நடையுடை பாவனைகள், பிறரிடம் பழகுவது எல்லாவற்றிலும் எளிமையைக் கடைப்பிடித்தாள் அவள்.

இதன் விளைவாக ஏற்பட்ட வம்பு என்னவென்றால் அந்தக் காலேஜில் மாணவர்கள், மாணவிகள் ஆகிய இரு சாராரும் மொத்தமாக ஒன்றுசேர்நது சுபத்ராவையும் நாராயணனையும் ஒருவிதமாக ஒதுக்கிப் பேசிக் கிண்டல் செய்வது வழக்கமாகி விட்டது. அதுவும் மாலதி ஒருத்தியே அதைத் தனிப்பட்ட சிரத்தையோடு செய்துவரத் தவறுவதில்லை. சுபத்ராவையாவது அவள் சில சமயங்களில் விட்டு வைப்பாள். நாராயணனைத் தான் என்ன காரணத்தாலோ, அவள் தன் முழு வைரியாக எண்ணி வந்தாள். அவனைப் பற்றிப் பேசுவதற்கு எங்கே, எப்போது வாய்ப்பு நேர்ந்தாலும் சரி, அவள் அவன் மீது தனது முழுக் குரோதத்தையும் கொட்டிப் பேசத் தவறமாட்டாள். அது அவளுக்கு ஒரு பொழுது போக்கு; ஒரு வேடிக்கை.

இவ்வளவிலும் ஆச்சரியப்படக் கூடிய விஷயம் என்னவென்றால், அவள் தன்னைப் பற்றி அப்படிக் கண்டபடி பேசுகிறாள் என்பதை நன்கு அறிந்திருந்தும், நாராயணன் அதைப் பற்றிக் கண்டித்து அவளிடம் ஒரு வார்த்தை கூடப் பேசாததுதான். "நீங்கள் என்னைப்பற்றிப் பல சந்தர்ப்பங்களில் அநாவசியமாக ஏதேதோ பேசி வருகிறீர்களாம். இது அவ்வளவு தூரம் நல்லது இல்லை" -என்று தன்னிடம் நாராயணன் கூறுவதற்கு வருவான் - ஏன், கூறவேண்டும் என்று ஆவலாக அவள் எதிர்பார்த்தது வீணாயிற்று. 'அவன்தன்னை லட்சியம் செய்யாமல் நடந்து கொள்கிறான்' என்பதை எண்ணும்போது கொதி பொறுக்காத நொய்யரிசி போலப் பொங்கி அசூயையால் குமுறும் அவள் மனம். ஆவலில் விளைந்த அந்த அசூயையை நாளடைவில் பகையாக மாற்றிக்கொண்டுவிட்டது அவள் உள்ளம். இந்த மானஸீகப் பகைமை மாலதியின் உள்ளத்தில் வேரூன்றி வளரத் தொடங்கிய நாளிலிருந்து சுபத்ராவை அவள் கேலி செய்வது நின்றுவிட்டது. நாராயணன் ஒருவனே அதற்குப் பரிபூரணமாகப் பாத்திரன் ஆனான். அவனுடைய அடக்க ஒடுக்கமான தோற்றம் அவள் நவநாகரிகக் கண்களுக்குப் 'பழைய பத்தாம்பசலி' ஆகத் தெரியும். ஆனால், இப்படித் தெரிவது மாலதியின் கண்களுக்கு மட்டும்தான். அவள் உள்ளம் குரோதத்தால் புகையும் அந்த நிலையிலும், மனத்தின் அந்தரங்கத்திற்கும் அந்தரங்கமாகி ஆத்தரிகமாக விளங்கும் அவள் உள் மனமோ என்றால் நாராயணனது அந்தத் தோற்றத்தில் ஏதோ ஒருவகைக் காம்பீர்யம் இருப்பதாக ரஸிக்கும். இது அவளது உள்ளத்திற்கு மட்டும் தெரிந்த உண்மை; அவளுக்கும் அவள் சரீரத்துக்கும், அந்த சரீரத்தின் மனோபாவங்களை மதிப்பிடுவதற்கு முயலும் உலகத்திற்கும்கூடத் தெரியாத உண்மை - மறைந்த உண்மை.

நாராயணன் ஐந்தே முக்கால் அடி உயரம் வளர்ந்திருப்பான். வாரி முடிந்த கட்டுக்குடுமி. கருகருவென்று சுருண்டு வளர்ந்திருக்கும் அந்தக் குடுமி, அவனுடைய தோற்றத்திற்குப் பிரதானமான சௌந்தர்ய முத்திரை. காதுகளில் புஷ்பராகக்கல் பதித்த இரண்டு வெள்ளைக் கடுக்கன்கள். பரந்த நெற்றியில் சிறு சந்தனப் பொட்டு. நீண்ட நாசி, பார்வையிலேயே நகைபொதிந்த பிரகாசமான நயனங்கள். எப்போதும் வாய்விட்டுச் சிரிக்கும் பழக்கமேஇன்றி அசைவிலேயே புன்னகை செய்யும் மென்மையான உதடுகள். முக்கோண வடிவாக நீண்டிருந்த அவன் முகத்தால் குடுமியும், குடுமியால் முகமும் பரஸ்பரம் கவர்ச்சி பெற்றன. முழுக்கைக் கதர் ஜிப்பாவும், நாலு முழம் வேஷ்டியும்தவிர, ஆடை விஷயத்தில் எந்தவிதமான ஆடம்பரமும் அவனை அண்டியதே இல்லை. இத்தகைய தோற்றத்தோடு அவன் நடந்துவரும்போது பார்த்தால் கொடியுடனே கூடிய வெண்தாமரைப் பூ ஒன்று காற்றிலே வேகமாகப் பறந்து வருவதுபோல் தோன்றும்.

சிதம்பரத்திலே மிகப் பெரிய செல்வந்தராகிய, வைதிக கனபாடிகள் ஒருவரின் ஏக புத்திரன் அவன். இயற்கையாகவே சாந்த குணமும் அடங்கிய சுபாவமும் அவனிடம் அமைந்திருந்ததனால், தகப்பனால் கண்டிக்கும்படியான நடையுடை பாவனைகள் தன்னை நெருங்காமல் அவனாகவே கவனத்தோடு நடந்து கொண்டான். அதுதான்,

'பத்தாம் பசலி, கட்டுப்பெட்டி, உம்மணாமூஞ்சி' என்ற பெயர்களை மாலதி போன்ற பெண்களிடமிருந்தும் சக மாணவர்களிடமிருந்தும் அவன் அடையக் காரணமாக இருந்தது.

ஆனால், பிறர் தன்னைப்பற்றி என்ன எண்ணுகிறார்கள், என்ன பேசுகிறார்கள், தன்னிடம் எப்படி நடந்துகொள்வார்கள் என்பனவற்றில் அதிக கவனத்தைச் செல்லவிடாமல், தான் தனக்காகக் காலேஜ் வாழ்வை எப்படி நடத்திக் கொள்ளவேண்டும் என்பதில் மட்டும் கவனத்தைப் பயன்படுத்தி இலட்சியங்களை ஏற்படுத்திக்கொள்ளும் பண்பு நாராயணனிடமிருந்தது.

இந்தப் பண்புதான் காலேஜ் வாழ்க்கையில் அவனுக்கு ஒரு நல்ல தற்காப்புக் கவசத்தைப்போல உபயோகப்பட்டு வந்தது. மற்ற மாணவர்கள், மாணவிகள் தன்னிடம் அசட்டுத்தனமாக நடந்து கொள்ளும் சில சந்தர்ப்பங்களில் அவன் மனத்திலும் ஆக்ரோஷம் தலைகாட்டும். ஆனால், "'இரண்டு கைகளையும் தட்டினால் தானே சப்தம்?' நாம்தான் பொறுத்துக்கொள்வதால் என்ன குடிமுழுகிப் போய்விடும்?" என்று அப்போது தன் மனத்தை அடக்கிக் கொள்ள அவன் பழகியிருந்தான்.

'லேபரேடரி'யில் பரிசோதனைகள் நடக்கும்போது, மாணவர்களையும் மாணவிகளையும் தனித்தனியே பிரிக்காமல் எல்லோரையும் சேர்த்து மொத்தத்தில் நான்கைந்து 'க்ரூப்'களாக இணைத்து விட்டுவிடுவார் அந்தப் பேராசிரியர்.

அதனால் சில வகுப்புக்களில் மாலதி, நாராயணன் 'குரூப்பில்' இருந்து அவன் கீழ் அன்றைய 'எக்ஸ்பெரிமெண்டு'களை நடத்தவேண்டியதாக நேர்ந்துவிடும். அப்போதெல்லாம் தன் தோழிகளிடம் சொல்வதுபோல நாராயணன் காதில் நன்றாக விழும்படி, "அடி வனஜா! இன்றைக்கு என்னை அந்தத் 'தரித்திர' நாராயணன் 'குரூப்'பிலே மாட்டி விட்டுவிட்டாரடி இந்தப் புரொபஸர். பாரேன் வேடிக்கையை! பரிசோதனையைச் செய்து முடிப்பதற்குள் 'போதும்' போதும்' என்று ஓடும்படி படாதபாடு படுத்திவிடுகிறேன்" - என்று உரத்த குரலில் சிரித்துக்கொண்டே கூறுவாள்.

அதைக் கேட்டு மாணவர்கள் உள்பட யாவரும் நகைப்பார்கள். சுபத்ரா ஒருத்திதான் மனமார நாராயணனிடம் அனுதாபம் காட்டுவாள். ஆனால், இதைக் கேட்டவுடன், மாலதியின் கண்களில் நன்கு படும்படி மிகவும் சர்வசாதாரணமான அலட்சியப் புன்னகை ஒன்றை உதடுகளில் நெளிய விட்டுக்கொண்டே பரிசோதனை வேலையில் ஆழ்ந்துவிடுவான் நாராயணன்.

அவனது அந்த அசாத்திய மௌனமும் அலட்சியப் புன்னகையும்தான் மாலதியின் உள் மனத்தை அணு அணுவாகச் சுட்டுக்கொண்டிருந்தது. ஆனால், வெளிக்குத் தெரியாமல் குரோதப் புகையில் அந்தச் சுடுநெருப்பு மறைந்திருந்தது. வேறுவிதமாகச் சொன்னால் அவள் உள்ளத்தை வற்புறுத்தி மறைக்க முயன்றாள் என்றுதான் சொல்லவேண்டும்.

கந்தக அமிலத்தில் இரண்டொரு துளிகளைத் தற்செயலாகக் கொட்டி விடுவது போல நாராயணன் வேஷ்டியிலே தெறிக்கச் செய்வாள். அமிலம் தெரித்த இடங்களிலே வேஷ்டி எரிந்து வட்ட வட்டமாகக் கருகிப்போகும். நாராயணன் தலைநிமிர்ந்து தன் வேட்டியையும் அவளையும் இமை கொட்டாமல் மாறிமாறிப் பார்ப்பான். கம்பீரமான அந்தப் பார்வை அவளை அம்பாகத் துளைக்கும். "தவறிப் பட்டுவிட்டது, மிஸ்டர்! மன்னித்துவிடுங்கள்" என்று உதட்டிலிருந்து பிறந்த அனுதாபமற்ற போலிச் சொற்களால் பூசி மெழுகி மன்னிப்புக் கேட்பதுபோல நடிப்பாள் அவள். அப்படி அவள் மன்னிப்புக் கேட்பது போன்ற பாவனையிற் பேசிய பின்பாவது, 'பரவாயில்லை' என்ற ஒரே ஒரு வார்த்தையாவது நாராயணன் வாயிலிருந்து வெளி வரவேண்டுமே! அதுதான் இல்லை! வெளிப்படையாக நாராயணனின் பரம வைரிபோல் நடந்து கொண்ட மாலதி, உள்ளூர அந்த ஒரே ஒரு வார்த்தைக்காகத் தவித்தாள் - ஏங்கினாள் என்றே சொல்ல வேண்டும்.

"காலேஜில் தமிழ் வகுப்பு நடந்து கொண்டிருக்கும். நாராயணன் தமிழ்ப் புரொபஸர் கூறுவதில் ஆழ்ந்த ஈடுபாட்டுடனே கவனத்தைச் செலுத்திக் கொண்டிருப்பான். சுற்றி மடித்த காகிதச் சுருள் ஒன்று பெண்கள் பகுதியிலிருந்து அவன் டெஸ்கின்மேல் வந்து விழும். அதை வீசி எறிந்து விட்டு ஒன்றும் தெரியாதவள் போலப் பாடத்தில் கவனங்கொண்டு விடுவாள் மாலதி. புரொபஸர் கண்கள் கண்டு கொள்ளாமல் நடக்கும் இந்தக் கடிதத் தாக்குதல். ஆனால், பாடத்தை முடித்துவிட்டுப் புரொபஸர் அங்கிருந்து வெளியேறும்வரை நாராயணன் அந்தக் காகிதச் சுருளைக் கையால் தொடக்கூட மாட்டான். புரொபஸர் இருக்கும்போது அதைப் பிரித்து அவரிடம் காட்டிவிட அவனுக்குத் தெரியாது என்பதில்லை. அவன் அப்படிச் செய்தால் மாலதிக்கு ஒரு 'ரிமார்க்'கும் 'ஃபைனு'ம் நிச்சயமாகப் பழுத்துவிடும். அதோடு போகாமல் நாராயணன்மேல் அதிகமான அன்பும் அனுதாபமும் கொண்ட அந்தப் புரொபஸர் வகுப்பில் அத்தனை பேருக்கும் நடுவில் மாலதியைத் தலைகுனியச் செய்துவிடுவார். நல்லவேளையாக நாராயணன் அதற்கெல்லாம் இடமளிக்கவில்லை. கடிதத்தைப் பிரித்துப் பார்த்தால் நாராயணனைப் பற்றி ஏதாவது இகழ்ந்து எழுதியிருப்பாள். சில சமயங்களில் அது ஒரு கவிதை போலக்கூட அமைந்திருக்கும்.

**"கொட்டை வட்டக் கடுக்கன்**
**கொப்பரைக் காய்க் குடுமி**
**நெட்டை வற்றல் உருவம்**
**நீண்ட மூக்குச் சாமி?"**

என்று ஏதோ அவளுக்குத் தோன்றியதைக் கைபோன போக்கில் எழுதியிருப்பாள். நாராயணனை இகழ்வதாக எண்ணிக்கொண்டு அவள் இதை எழுதியிருந்தாலும் நாராயணன் இதைப் படித்துவிட்டு அலட்சியமாகத் தனக்குள் சிரித்துக்கொள்வான். சிரித்துக் கொண்டே அதே காகிதத்தில் அந்தப் பாட்டின் கீழேயே,

**"உருவுகண்டு எள்ளாமை வேண்டும்**
**உருள்பெருந் தேர்க்கு**
**அச்சாணி அன்னார் உடைத்து"**

என்ற திருக்குறளை எழுதுவான். பின் அந்தக் காகிதச் சுருளைக் கையில் எடுத்துக் கொண்டு சென்று அவள் அமர்ந்திருக்கும் பெஞ்சியின் டெஸ்க்கில் அவள் கண்காண வைத்து விட்டு வகுப்பிலிருந்து வெளியேறுவான். இதையெல்லாம் விடப் பெரிய வேடிக்கை என்னவென்றால் அவன் அந்தக் காகிதச் சுருளை டெஸ்க்கில் வைக்கும்போது, மாலதி பெஞ்சில் அமர்ந்துகொண்டிருந்தும் அவள் பக்கம் கண்களைத் திருப்பாமல் பாராமுகமாகச் சென்றுவிடுவான்.

அவன் தன் பெஞ்சை நோக்கி வரும்போது அவள் நெஞ்சு 'படபட' என்று அடித்துக்கொள்ளும்; உதடு துடிக்கும். என்ன செய்கிறோம் என்ற உணர்வே இன்றி அவள் தன் இடத்தில் எழுந்து நின்றுகொள்வாள். அப்படியும் அவன் காகிதத்தை வைத்துவிட்டுக் கவனிக்காதவன் போலச் சென்றுவிடுவான்.

காலேஜ் வருடாந்திர விழா வந்தது. அதுகூட ஆச்சரியப்படவேண்டிய விஷயம் என்று சொல்வது தவறு. காலேஜ் பிரின்ஸிபாலிலிருந்து ஜூனியர் இண்டரில் வந்து சேர்ந்திருக்கும் நேற்றைய புது மாணவன் வரை எல்லோரும் மூக்கிலே விரலை வைத்து ஆச்சரியமடையும் படியான சம்பவம் வேறு ஒன்று நடந்தது. சகுந்தலை - துஷ்யந்தன் நாடகத்திற்கு ஏற்பாடு செய்த ஸம்ஸ்கிருத புரொபஸர் மாலதியை சகுந்தலை வேடத்திற்குத் தேர்ந்தெடுத்தார். துஷ்யந்தனாக யாரைத் தேர்ந்தெடுப்பது என்று அவர் யோசித்துக் கொண்டிருந்த நிலையில் மாலதியே அவரிடம் சொல்லிய யோசனை அவரை ஒரு கணம் திகைத்துத் திக்குமுக்காடி வியக்குமாறு செய்து விட்டது.

நாராயணனைத் துஷ்யந்தனாக நடிக்கச் சொல்லி ஏற்பாடு செய்யும்படி மாலதி ஸம்ஸ்கிருத புரொபஸரிடம் கூறினாள். 'நாராயணனின் முதல்தர விரோதியான அவள் வாயிலிருந்தா அந்த யோசனை பிறந்தது?' என்று எண்ணி வியப்படைந்தார் ஸம்ஸ்கிருத புரொபஸர். ஆனால், நாராயணனைத் தனியே அழைத்து, 'நாடகத்தில் துஷ்யந்தனாக நடிக்கச் சம்மதமா?' என்று கேட்டபோது அவனும் அவரிடம் மறுக்கவில்லை. தன்னோடு சகுந்தலையாக நடிக்க இருப்பவள் கடந்த மூன்றரை வருடங்களாகத் தன்னுடனே பகைமை பாராட்டிவரும் அந்தக் குறும்புக்காரப் பெண் மாலதிதான் என்பதைப் புரொபஸர் வாயிலாகக் கேள்விப்பட்ட பின்பும் அவன் தயங்கவில்லை - ஒதுங்கித் தளரவில்லை - சம்மதத்திற்கு அறிகுறியாக மௌனத்தோடு ஒப்புக்கொண்டுவிட்டான். அப்படி ஒப்புக்கொண்டபோது, ஓர் அழகான யுவதியுடன் நடிக்கும் சான்ஸ் கிடைத்ததற்காக மற்ற மாணவர்கள் இயற்கையாக அடையும் மகிழ்ச்சியும் ஆர்வமும் கூட அவனுக்கு ஏற்பட்டன என்று சொல்லி விடுவதற்கில்லை. தன் சம்மதத்தை மிக அமைதியும் மென்மையும் கூடிய முறையில் அவன் புரொபஸரிடம் வெளியிட்டான். 'அவன் எந்த உணர்ச்சியோடு, எத்தகைய எண்ணங்களின் தூண்டுதலால் சம்மதித்திருக்க முடியும்?' என்பது புரொபஸருடைய அனுமானத்திற்குக்கூட எட்டவில்லை.

சுபத்ரா, மாலதியைக் கிண்டல் செய்தாள். அவள் கையில் காலேஜ் வருடாந்திர விழாவின் 'புரோகிராம்' இருந்தது. "ஏதேது? எதிரியோடு 'ஹீரோயினாக' நடிக்கத் துணிந்துவிட்டாற்போல் இருக்கிறதே! இதன் அந்தரங்கம் என்னடி அம்மா? எனக்குத்தான் கொஞ்சம் சொல்லேன்! 'பகையாளி குடியை உறவாடிக் கெடுக்க-வேண்டும்' என்ற சித்தாந்தமாக இருக்குமோடி?"

சக மாணவர்கள் நாராயணனைக் கண்டபோது எல்லாம் அவன் காதில் விழும் படியாக, "யோகம் என்றாலும் இப்படிப்பட்ட யோகம் அடிக்கக் கொடுத்துவைக்க வேண்டுமடா! நேற்றுவரை இந்தப் பயலைக் கரித்துக் கொண்டிருந்தாள் அவள்! நாள் தவறாமல் வம்புக்கு இழுத்துக் கொண்டிருந்தாள்! இன்றைக்கு என்னடா என்றால், 'நான்தான் சகுந்தலை, நீதான் துஷ்யந்தன்' என்கிறாள்! இந்தக் காலத்திலே பெண்கள் மனசுகூட பிளாஸ்டிக் ரப்பராகப் போய்விட்டது அப்பா! எதையுமே நம்பி ஒரு தீர்மானத்திற்கு வரமுடிவதில்லை" - என்று பாதி வேடிக்கையாகவும், பாதி வினையாகவும் பேசிக் கொண்டனர். நாராயணன் எப்போதும் போல அவர்களது இந்தப் பேச்சையும் லட்சியம் செய்யவில்லை. அவன் தன் போக்கில் இருந்துவந்தான்.

கோடை விடுமுறைக்குப் பின் காலேஜ் திறந்தபோது, நாராயணனும் மாலதியும் ஜோடியாக பிரின்ஸிபாலின் அறைக்குள் நுழைந்தனர். சூரியனும் சந்திரனும் ஒரே நேரத்தில் ஒன்றாக வந்த காட்சியைக் கண்டவர்போல மலைத்தார் பிரின்ஸிபால்!

மாலதி புன்னகை செய்துகொண்டே மரியாதையாக அவரிடம் ஒரு கவரை நீட்டினாள். அதே சமயத்தில் நாராயணனும் ஒரு கவரை நீட்டினான். பிரின்ஸிபால் இரண்டையும் ஏககாலத்தில் வாங்கிக்கொண்டார். கவர்களை ஆவலோடு பிரித்தார்.

இரண்டு கவர்களிலும் ஒரேவிதமான மஞ்சள் நிறக் கலியாணப் பத்திரிகைகள் இருந்தன. இருவரும் அவருக்கு மாணவ முறை உடையவர்கள். ஆகையால் தனித்தனியே உரிமை பாராட்டிப் பத்திரிகை கொடுத்திருந்தனர்.

பிரின்ஸிபால் ஆச்சரியக் கடலில் ஆழ்ந்தார். நமட்டுச் சிரிப்பு அவர் இதழ்களில் தவழ்ந்தது. "நாடகத்தில்தான் ஏதோ பகையை மறந்து நடித்தீர்கள் என்று எண்ணி யிருந்தேன். வாழ்க்கையில் சகுந்தலையும் துஷ்யந்தனுமாக நடிப்பதற்காகத்தான் இங்கே காலேஜ் 'அனிவர்ஸரி'யில் ஒத்திகை நடத்தினீர்கள் போல இருக்கிறது! மிஸ் மாலதி! உங்களுக்குத் தனியாக ஒரு வார்த்தை - காலேஜில்தான் மிஸ்டர் நாராயணனைப் படாத பாடு படுத்தி ஆட்டி வைத்தீர்கள். நாள் தவறினாலும் உங்கள் 'கம்ப்ளெயிண்ட்' இங்கே எனக்கு வரத் தவறாது! போகிறது. நிஜ வாழ்க்கையிலாவது ஒற்றுமையாக இருங்கள்! இரண்டு பகைவர்கள் வாழ்க்கையில் தம்பதிகளாக வருவது குறித்து எனக்குப் பரம சந்தோஷம்!" - பிரின்ஸிபால் சிரிப்புக்கிடையில் இப்படிக் கூறிப் பேச்சை நிறுத்தினார்.

"ஸார்! கல்யாணம் இங்கே சிதம்பரத்தில்தான் நடக்கிறது! உங்கள் வரவை அவசியம் எதிர்பார்ப்போம். வந்து ஆசீர்வாதம் செய்யவேண்டும்." நாராயணன் கூறினான்.

மாலதி தலையைக் குனிந்துகொண்டாள். கால் கட்டை விரல் தரையைத் தேய்த்தது. முகத்திலே கன்னங்கள் கன்றிச் சிவந்தன. இருவரும் பிரின்ஸிபாலிடம் விடைபெற்றுக் கொண்டு வெளியேறினர்.

காலேஜில் புதிதாக அட்மிஷனுக்கு வந்து காத்துக் கொண்டிருந்த மாணவர்களும், ஏற்கனவே அவர்களுக்கு அறிமுகமான பழைய மாணவர்களும், நாராயணன் - மாலதி இருவரும் ஜோடியாகச் செல்வதைக் குறும்புத்தனம் ஒளிரும் கண்களால் பார்த்துக்கொண்டிருந்தனர்.

முகூர்த்தம் முடிந்ததும், தன் பெயருக்கு வந்திருந்த சுபத்ராவின் அன்பளிப்புப் பார்சலையும் கடிதத்தையும் பிரித்தாள் மாலதி. "அன்புத் தோழி மாலதி நாராயணனுக்கு, நீ நம்பினாலும் சரி, நம்பாவிட்டாலும் சரி; உங்களின் இந்த ஐக்கியம் நான் அன்றே எதிர்பார்த்ததுதான். எல்லா மாறுபட்ட உணர்ச்சிகளும் தத்தம் எல்லைகளை மிக மிக நெருக்கமாகவே அமைத்துக்கொண்டிருக்கின்றன. மண்ணின் எல்லை கடல். கடலின் எல்லை மண். வானத்தின் எல்லை பூமி; பூமியின் எல்லை வானம். பகையின் மறுகோடியில் எல்லையாக இருப்பது அன்பும் நட்புமே. அசூயையின் எல்லை விருப்பம்தான். உலகமே உருண்டை வடிவாகத்தான் இருக்கிறது. எங்கே புறப்பட்டாலும், எல்லை சுற்றி வளைத்து நெருக்கமாகவே வந்து சேருகிறது. உங்கள் தாம்பத்தியம் நலமுற என் மனமார்ந்த வாழ்த்துக்கள்.

**– உன் தோழி சுபத்ரா"**

உள்ளே நுழைந்த நாராயணனிடம் சிரித்துக்கொண்டே அந்தக் கடிதத்தை நீட்டினாள் மாலதி.

**(1978-க்கு முன்)**

## 132. உயிர் என்ற எல்லை

அறைவாசலில் நிழல் தெரிந்தது. நாற்காலியில் உட்கார்ந்தபடியே தலையைப் பின்புறமாகத் திருப்பினேன். ராஜம் தலையைக் கோதி முடிந்தவாறே நின்று கொண்டிருந்தாள். அவள் நின்று கொண்டிருந்த குறிப்பைப் பார்த்தால், எதையோ சொல்ல வந்தவள் மாதிரித் தோன்றியது.

"என்ன ராஜம்!"

"ஒன்றுமில்லை! இன்றைக்குக் கார்த்திகை சோமவாரம்"

"இருக்கட்டுமே! அதற்கென்ன?"

"திருப்பரங்குன்றம் வரை போய்விட்டு வரலாமென்று?"

"ஏது திடீரென்று இப்போது முருக தரிசனத்திற்கு ஆசை வந்துவிட்டது?"

"ஆசை என்ன ஆசை வேண்டிக்கிடக்கிறது? குழந்தையா குட்டியா? ஒன்றுமில்லாமல் இப்படி வீட்டில் அடைந்து கிடந்தால், ஏதாவது தோன்றுகிறது!"

"நீயும் நானுமடி எதிரும் புதிருமடி என்று ஏதாவது உட்கார்ந்து அரட்டையடித்தால் போயிற்று...."

"ஏன் பேச்சை வளர்த்துகிறீர்கள்? மூன்றும் மூன்றும் ஆறேயணா - பஸ் சார்ஜு! நிம்மதியாகப் போய்விட்டு வந்து விடுவோம்! வரச் சம்மதமா? இல்லையா?"

"நான் வருகிறேன். மாட்டேனென்று சொல்லவில்லை. இன்னும் பழைய அசடாகவே இருக்கிறாயே என்றுதான் எனக்கு ஆச்சரியமாக இருக்கின்றது!"

"நான் அசடுதான்! அசடாகவே இருந்துவிட்டுப் போகிறேன். நீங்கள் நல்ல சமர்த்தாக இருங்கள். இப்போது வரமுடியுமா, முடியாதா?"

"இந்தப் பெரிய மதுரையிலே எத்தனை சினிமாவில் இன்றைக்கு 'மாட்டினி' நடக்கிறது. அதையெல்லாம் விட்டுவிட்டு டவுன் பஸ்ஸுக்குக் க்யூவில் நின்று திருப்பரங்குன்றமா போக வேண்டுமென்று சொல்கிறாய்?"

ராஜம் என்னை முறைத்துப் பார்த்தாள். உண்மையில் அவள் போக்கு இந்த ஆறு வருஷங்களாக எனக்குப் பிடிபடாத ஒன்றாகவே இருக்கிறது. நல்ல அழகி. இளம் பெண்தான். ஆனால், அந்த இளமைக்கும் அழகுக்கும் உரிய கிளர்ச்சியோ, எழுச்சியோ சிறிதும் இல்லை. 'குழந்தை குட்டிகள் இல்லையே' என்ற ஏக்கமா? அப்படி அந்த ஏக்கத்தாலும் அவள் அதிகம் உருகுவதாகத் தெரியவில்லை. அழகு என்னவோ சொக்குப் பொடி போட்டு ஆளை மயக்குகிற மாதிரி அந்த உடலில் கிளுகிளுத்துக்

கொண்டிருந்தது. சண்பகப் பூவின் இதழ் நுனியைப்போல் அவளுக்கென்றே அமைந்த ஒரு நிறம். எச்சில் விழுங்கினால் கழுத்தில் தெரியும்.

ஆனால், கோவில் குளம், தீர்த்தம் என்று அவள் வழி ஒரு தினுசாயிருந்தது. சினிமா, சபா, டாய்லெட் ஸெட், ஜார்ஜெட் புடவை என்று அவளை நாகரீக போதையில் மூழ்கச் செய்து, அதன் வெறியை நான் ரஸிக்க வேண்டுமென்று ஆசை. ஆனால் அவளோ, என்னையும் தன் வழிக்கு இழுத்துச் சென்றுகொண்டிருந்தாள். அப்ஸரஸைப்போல ஒரு மனைவியும் வாய்த்துக் குழந்தை குட்டி என்று பிடுங்கல் எதுவுமின்றி அமுத கலசம் போலக் கெடாத உடலும் இருந்துவிட்டால் ஒரு வகையில் கணவனுக்கு அது பாக்கியம்தான். ஆனால், அத்தகைய மனைவி ஒரு வைதிகக் கட்டுப் பெட்டியாக மட்டும் இருந்துவிடக் கூடாது. கணவன் 'லிப்ஸ்டிக்' தடவிக் கொள்ளச் சொன்னால், அவன் திருப்திக்காக உடனே அதைச் செய்யக் கூடியவளாக இருக்க வேண்டும்.

என் ராஜம் அப்படி இல்லை, ஆளைக் கிறங்கச் செய்கிற அழகுக்கு உள்ளே அண்ட முடியாத ஒரு தனித்தன்மை மறைந்து கிடந்தது. மஞ்சள், குங்குமம் தவிர, வேறெந்த ஆடம்பரப் பொருள்களையும் அவள் தொடுவதே இல்லை.

"என்ன, இப்படி உட்கார்ந்து யோசித்துக்கொண்டிருந்தால் எப்போது புறப்படுகிறதாம்? இருட்டுவதற்குள் திரும்பிவிட வேண்டுமே?..."

"இதோ வந்துவிட்டேன்! கொஞ்சம் இரு..." நான் எழுந்து முகங் கழுவிக் கொள்ளச் சென்றேன்.

எதை எதையோ பாக்கியம் என்கிறார்களே! அழகான மனைவி அருகிலே வர நடந்து செல்லும் பாக்கியத்தை விடச் சிறந்தது வேறொன்று இருக்கிறதா? தென்றல் வீசுவதுபோல் மனத்தில் நிலவும் இப்படிப்பட்ட ஒருவகைப் பெருமிதத்திற்கு ஈடு இணை உண்டா?

ராஜம் வலப்பக்கம் நடந்து வந்து கொண்டிருந்தாள். என் உயரத்துக்குச் சரியான உயரம். நேரே எதிர்ப்புறம் நிமிர்ந்து பார்க்கத் தயங்கும் பார்வை. பூங்கொடி அசைவது போல அவளுக்கென்றே அமைந்த ஒருவகை நடை. குழந்தை குட்டிகளைப் பெறுகின்ற பாக்கியம் இல்லாவிட்டால்தான் என்ன? இப்படி ரதியைப்போல ஒரு மனைவி இருந்தால் போதாதா? கணவனுக்கு மனைவி குழந்தை, மனைவிக்குக் கணவன் குழந்தை! பரஸ்பரம் குழந்தையாகிவிட்டால், பின் வேறு குழந்தை எதற்கு?

"உங்களைத்தானே! பஸ்ஸுக்குக் கூட்டம் அதிகமாக இருக்கும் போலிருக்கிறதே?"

"பின் என்ன? கூட்டமில்லாமலா இருக்கும்! சொன்னால் நீ கேட்கிறாயா, என்ன? எப்படியும் போய்த்தான் ஆகவேண்டும் என்கிறாய்! என்ன செய்வது? கூட்டத்தோடு கூட்டமாக முண்டியடித்துக் கொண்டுதான் போக வேண்டும்..."

அவள் ஓரக்கண்ணால் ஒரு வெட்டு வெட்டினாள். என் பேச்சு 'கப்'பென்று நின்றது. ஆண் வாயைத் திறந்து வார்த்தைகளைச் சொல்லித் தடை செய்ய

வேண்டியதைப் பெண் தனது கண்ணின் ஓரத்தை ஒரு சுழற்றுச் சுழற்றுவதனாலேயே தடுத்து நிறைவேற்றிக் கொண்டு விடுகிறாள்.

சிற்பியின் கைகளில் தந்தத்தால் உருவாக்கப்பட்டவை போன்ற அந்தப் பாதங்கள் தார் ரோடில் நடந்து லேசாகக் கன்றிச் சிவந்திருந்தன.

"செருப்பு வாங்கிக்கொள் என்று படித்துப் படித்துச் சொல்றேனே, நீ கேட்கிறாயா? தார் ரோடில் வெறுங் காலோடு நடந்து, காலைக் குட்டிச் சுவராக்கிக் கொள்ள வேண்டும் போலிருக்கிறது!"

"எனக்கு ஒன்றும் அந்தப் பவிஷு எல்லாம் வேண்டாம்."

"பவிஷுக்குச் சொல்ல வரவில்லை ராஜம்! தார் ரோடில் செருப்பில்லாமல் நடப்பது எப்போதும் கெடுதல். அதற்காகச் சொல்ல வந்தால்"....

அவள் பதில் பேசவில்லை. பஸ் ஸ்டாப்பை அடைந்து விட்டோம். அவள் பெண்கள் 'க்யூ'வில் போய் நின்றாள். நான் ஆண்கள் க்யூவில் நின்றேன்.

கண்களில் பார்வைப் புலனை ஓட விட்டதில் வேடிக்கையான ஒரு நினைவு சரம் தொடுத்தது. க்யூவில் நின்று கொண்டிருந்த வரிசை வரிசையான பெண் உருவங்களை மெல்ல விழிக்கடைகளால் நிறுத்தி நிறுத்திப் பார்த்துக் கொண்டிருந்தேன். ராஜம் அத்தனைப் பேருக்கும் கடைசியில்தான் நின்றாள். ஆனால், எனக்குள், என் மனத்தின் எண்ண வளையங்களுக்குள் பெருமிதமான ஓர் பிரமை! வரிசையில் நின்றுகொண்டிருந்த அத்தனைப் பெண்களைக் காட்டிலும் என் ராஜத்தின் அழகு விஞ்சி நிற்கிறார்போல ஓர் உணர்வு. பெங்களூர்ப் பட்டு, நவநாகரிக அலங்காரங்கள், விதவிதமான பட்டுப் பாதரட்சைகள், இவற்றோடு நிற்கும் பெண்களுக்கு இடையே, அரக்குக் கலர் சாதாரணத் துணிப்புடைவையும் பச்சை ரவிக்கையுமாக நிற்கும் என் ராஜம், சௌந்தரியத்தின் முடிவுக்கு ஒரு முடிவு காட்டிக் கொண்டிருக்கிறாள்.

"சார், முன்னால் நகருங்கள்! எங்கேயோ பராக்குப் பார்த்துக்கொண்டு நிற்கிறீர்களே?... உங்களுக்கு முன்னால் 'க்யூ' எவ்வளவு தூரம் போய்விட்டது பாருங்கள்" என்று எனக்குப் பின்னால் நின்று கொண்டிருந்தவர் என்னை விரட்டினார்.

சட்டென்று திரும்பி உதட்டைக் கடித்துக்கொண்டே, முன்னேறினேன். கூட்டத்தின் நடுவே உணர்வு வரம்பை மீறிக் கண்களையும் கண்களின் வழியே எண்ணத்தையும் ஓட விட்டுவிட்டதற்காக என்னை நானே கடிந்துகொண்டேன். பொருள் தனக்குச் சொந்தமானது என்பதற்காக அதன் அழகை எப்போது வேண்டுமானாலும், எந்த இடத்தில் வேண்டுமானாலும் அனுபவித்துவிட எண்ணலாமா? தப்புத்தான்! அழகான பெண் தனக்கு மனைவி என்று எண்ணுவதிலும், ஒதுங்கி நின்று அதன் உண்மையை ஆராய்ந்து பார்க்க முயலுவதிலும் திருப்திக்காக ஏங்குகிற ஓர் ஆசை இருக்கத்தான் இருக்கிறது! ஆனால், அதற்கு ஒரு கட்டுப்பாடு வேண்டாமா? 'க்யூ' முன்னேறியது. நான் பஸ்ஸில் ஏற வேண்டிய நேரம் வந்தது.

கண்டக்டர் இரண்டு ஆள்களுக்குத்தான் இடமிருக்கிறது என்றான். எனக்கு முன்னால் நின்று கொண்டிருந்தவர் ஏறிவிட்டார். நான் ராஜத்தைப் பார்த்துத் தயங்கி நின்றேன்.

"என்ன சார் ஏறவில்லையா?" - முதலில் ஏறியவர் பஸ்ஸிலிருந்து தலையை வெளியே நீட்டி, என்னைப் பார்த்துக் கேட்டார். நான், "இல்லை! நீங்கள் போங்கள். வீட்டில் அழைத்துக் கொண்டு வந்திருக்கிறேன்..." என்றேன்.

"அடேடே! அப்படியானால் நீங்கள் இருவரும் முதலில் ஏறிக் கொள்ளுங்கள். எனக்கு அவசரமில்லை. நான் அடுத்த பஸ்ஸில் வருகிறேன்." அவர் இறங்கி விட்டார்.

நானும் ராஜமும் ஏறிக்கொண்டோம். பெண் கூட வந்தால், அதை ஒட்டி ஆணுக்குத் தனி மதிப்புத்தான். பச்சாத்தாபத்தை வருவிக்கும் சக்தி அப்படி என்னதான் பெண்ணிடம் இருக்கிறதோ?

திருப்பரங்குன்றத்தில் கார்த்திகை சோமவாரம்! கூட்டம் ஜே ஜே என்றிருந்தது. கூட்டத்தில் நுழைந்து, தரிசனத்தை முடித்துக்கொண்டு வெளியே வந்தபோது மணி நாலே கால்.

"அப்படியே பஸ் ஸ்டாப்பிற்குப் போய் பஸ் ஏறி, டவுனுக்குத் திரும்பிவிடவேண்டும்" என்றேன் நான்.

"வெகு நாளாக எனக்கு ஒரே ஓர் ஆசை. அதை இன்று நிறைவேற்றிக் கொண்டுவிட நினைக்கிறேன். கிரிப் பிரதட்சிணம் செய்வோம்! வாருங்கள்" என்றாள் அவள்.

"அதெல்லாம் இப்போது முடியாது! ஒன்றரை மைல் இரண்டு மைல் நடக்க வேண்டுமே? இன்னொரு நாள் பார்க்கலாம். இன்றைக்கு வேண்டாம்..."

"முடியாது! இன்றைக்கு நீங்கள் என்ன சொன்னாலும் நான் கேட்கப் போவதில்லை. செய்வதுதான் செய்யப்போகிறோம். கார்த்திகை சோமவாரத்தில் கிரிப் பிரதட்சணம் செய்தால், எவ்வளவோ நல்லது. வாருங்கள், அதிகமாகப் போனால் ஒன்றரை மணி நேரத்திற்கு மேல் ஆகாது." அவள் பிடிவாதம் பிடித்தாள்.

அவள் இஷ்டத்தைத் தான் கெடுப்பானேன்? கிரிப்பிரதட்சிணத்தை முடித்துக் கொண்டு ஆறரை மணிக்கு ரயிலில் மதுரைக்குத் திரும்பிவிடலாம் என்று எண்ணினேன். கிரிப்பிரதட்சிணம் முடிகின்ற இடத்தில் மேற்கு ஓரமாகத்தான் ரயில்வே ஸ்டேஷனும் இருந்தது. பஸ்ஸைவிட ரயிலில் சுலபமாக இடம் கிடைக்கும்.

"சரி! வா" - என்று கூட்டிக்கொண்டு கிழக்குப் புறமாக மலையடிவாரத்திலிருந்து கிரிப்பிரதட்சிணத்தை ஆரம்பித்தேன்.

அந்தப் பழைய பெருமிதம் - ராஜம் பக்கத்திலே தோளோடு தோள் நடந்து வருகிறாள் என்ற கர்வம் - தனிமையையும் துணையாக்கிக்கொண்டு மனத்தில் நிலவியது. சாதாரணமாகப் புதிதாகக் கல்யாணம் செய்து கொண்டவர்களுக்கு இந்த மாதிரி ஒரு கர்வம் இருப்பதும் ஏற்படுவதும் இயற்கை. ஆறு, ஏழு வருஷங்கள் நெருங்கி வாழ்ந்த பிறகும் அந்த உணர்விலிருந்து என்னை நான் விடுவித்துக்கொள்ள

முடியவில்லை, அல்லது அவ்வுணர்வு என்னை விடவில்லை என்றாலும் பொருந்தும். மலை அடிவாரத்தை ஒட்டிக் கிழக்குப்புறத்தில் நீர் நிறைந்த கண்மாய். காற்று சிலுசிலுவென்று குளிர்ச்சியோடு வீசிக்கொண்டிருந்தது.

ராஜத்தின் தலைமயிர் புஸுபுஸுவென்று பிரிந்து சுருள் சுருளாக முன் நெற்றியில் விளையாடியது. துவளத் துவள நடந்துகொண்டிருந்தாள்.

"என்ன, கிரிப்பிரதட்சிணம், கிரிப்பிரதட்சிணம் என்று பறந்தாயே ஒழிய நடை ஓடவில்லையே! அதற்குள் தளர்ந்து துவண்டுவிட்டாயே!..."

"நான் ஒன்றும் தளரவில்லை. நீங்கள் ஏதாவது வாயைக் கிண்டி, வம்பு பண்ணாமல் பேசாமல் வந்தாலே போதும்."

உண்மைதான்! அவள் வாயைக் கிண்டி விட்டு, அந்த முகத்தின் நெளிவு சுளிவுகளை அழகு பார்ப்பதில்கூட எனக்குத் தனிப்பட்ட ஒருவகை ஆசை. முகத்தையே பார்த்துக் கொண்டிருப்பேன். இல்லையென்றால் பாதங்களைப் பார்த்துக் கொண்டிருப்பேன். இரண்டும் முடியாத போது கோபமுண்டாகிற விதத்தில் ஏதாவது பேசிவிடுவேன்.

எனக்கு அது ஒரு ரஸமான பொழுது போக்கு என்றுதான் சொல்ல வேண்டும்.

"ராஜம்! இந்தக் கண்மாயைப் பார்த்தாயா? கரையை முட்டமுட்ட நீர் தளும்புவதில் ஒரு கவர்ச்சியிருக்கிறது -"

"இந்த மலையின் நிழலும் கோவிலும் கோபுரமும் கூடக் கண்மாய் நீர்ப்பரப்பில் தெரிகிறதே!"

கார்த்திகைச் சோமவாரக் கூட்டம் ஊருக்குள்ளும் கோவிலிலும் நெரிசல் பட்டதே ஒழியக் கிரிப்பிரதட்சணை வழியில் ஈ, காக்காய் கூட இல்லை. தனிமையின் அரசாட்சிதான்.

பேசிக்கொண்டும், பேசிக்கொள்ளாமலும் நடந்தோம். கண்முன்னே நீண்டு கொண்டிருந்த வழியில் மலையின் தென்புறத் திருப்பம் வளைந்தது.

"இந்தத் தென்புறத்து மலையில் ஏதோ ஒரு குகைக்கோவில் இருப்பதாகச் சொல்கிறார்களே! அதை மறந்து விடாதீர்கள். கண்டிப்பாக அதற்குள் போய்ப் பார்த்துவிட்டுப் போகவேண்டும்."

"தேவியின் உத்தரவு எப்படியோ, அப்படியே செய்யக் காத்திருக்கிறேன்"

"இந்தக் கேலிக்கெல்லாம் ஒன்றும் குறை இல்லை...?"

தென்புறம் மலையடிவாரத்துப் பாறைகளில் சரளைக் கற்களை உடைத்துக் குவித்துக் கொண்டிருப்பவர்களின் கூட்டம் அதிகமாக இருக்கும். ஆனால், அன்றைக்கு அதுவுமில்லை. கண்ணுக்கெட்டிய தூரம்வரை மனித சஞ்சாரமே இல்லை. தெற்கே கப்பலூர் ஸ்டேஷனை நோக்கிச் செல்லும் ரயில்பாதை, அரக்கு நிறச்சுக்கான் குன்றுகளுக்கு நடுவே வளைந்து நெளிந்து சென்றுகொண்டிருந்தது. அதற்கும் அப்பால் மில்காலனியும், திருநகர் பங்களாக்களும் மரக்கூட்டங்களுக்குள்ளே தென்பட்டன.

"உன்னைப்போல அசடு கிடையவே கிடையாது ராஜம்! எத்தனை ஆயிரம்பேர் சோமவாரத்திற்காக இங்கே வந்திருக்கிறார்கள்; யாராவது 'கிரிப்பிரதட்சிணம் செய்கிறேன்' என்று கிளம்பியிருக்கிறார்களா, பார்! உன் பேச்சைக் கேட்டுக் கொண்டு நான்தான் அசட்டுத்தனமாகக் கிளம்பினேன்."

"கிளம்பினதால் இப்போது என்ன குடிமுழுகிப் போய்விட்டதாம்? இதோ நிம்மதியாகக் காற்று வாங்கிக் கொண்டு காலார நடக்கிறோம்.."

தென்புறத்தில் சரியாக நடுமையத்திற்கு வந்துவிட்டோம். எதிரே மிக அருகில் மலைப்பாறையில் செதுக்கப்பட்ட அந்தக் குகைக் கோவில் தெரிந்தது. அந்தக் குகைக் கோவிலைப் பற்றி ஏதேதோ சொல்வார்கள். ஆதிமுருகன் கோவில் திருப்பரங்குன்றத்தில் இந்தக் குகையில்தான் இருந்தது என்றும், நக்கீரர் பூதத்தினால் சிறையில் வைக்கப்பட்ட போது, இந்த முருகனைப் பாடியே விடுதலை பெற்றார் என்றும் கூறுவார்கள்.

குகைக்குள் பகலிலேயே இருட்டு மண்டிக் கிடக்கும். உட்புறம் சுவர்போலத் தாங்கிக்கொண்டிருந்த மலைப்பாறையின்மேல் முருகன் சிலை செதுக்கப்பட்டிருந்தது. வெளிப்பக்கத் தோற்றத்தில் குகை தூண்களோடு கூடிய ஒரு மண்டபம். இந்த மண்டபத்தில் தற்கொலை. சூதாட்டம், கொலை, கொள்ளை, கள்ளச்சாராயம் காய்ச்சுதல், என்று அசம்பாவிதமான செய்திகள் பத்திரிகைகளில் அடிக்கடி வந்தவண்ணம் இருந்தன.

"இந்த மண்டபத்துக் குகைக்குள் போக வேண்டும் என்றா சொல்கிறாய்?"-

"போய்விட்டுத்தான் வருவோமே? இத்தறுவாய்க்கு நீங்கள் கூட வரும்போது பயமா, என்ன?"

"அஜந்தா குகை பாழ்போகிறதா என்ன? உள்ளே போக வேண்டாம். வெளியிலிருந்தே பார்த்துவிட்டுப் போய்விடலாம்."

"முடியாது! நீங்கள் வேண்டுமானால் வெளியே நின்று கொள்ளுங்கள். ஆதிமுருகன், வரப்பிரசாதி. நான் பார்க்காமல் வரவே மாட்டேன்." ராஜத்தின் பிடிவாதத்திற்குக் கேட்கவா வேண்டும்?

மண்டபத்தில் ஏறிக் குகை வாசலை நெருங்கினோம். குகைக்குள் மங்கலாக இருள் பரவியிருந்தது. நான் முன்னால் நடந்தேன். ராஜம் என் வலது கையைப் பிடித்துக் கொண்டு என்னைப் பின்பற்றினாள்.

பாதி தூரம்கூட வந்திருக்கமாட்டோம். திடீரென்று 'ஐயோ! என் கழுத்துலே கைபோடறானே பாவி!" - என்று ராஜம் பயங்கரமாக அலறினாள். நான் பின்புறம் திரும்புவதற்குள் வலிமை வாய்ந்த முரட்டுக் கை ஒன்று என் வாயை இறுக்கிப் பொத்தியது. வேறு இரண்டு கைகள் உடும்புப் பிடிபோல என் இடுப்பை வளைத்துப் பிடித்தன. நான் அசைய முடியவில்லை. அவள் கழுத்திலிருந்து சங்கிலியையும் கையிலிருந்து வளையல்களையும் கழற்றிக் கொள்வதை என் கண்கள் இரண்டும்

*இருளில் கூர்ந்து நோக்கின. ஆனால், நான் என்ன செய்ய முடியும்! ராஜத்தின் வாயையும் யாரோ ஒரு முரடன் இறுக்கிப் பொத்திக்கொண்டிருந்தான். பின்புறமாகத் திருகி அவள் கைகளை இறுக்கிப் பிடித்துக்கொண்டே, அவற்றில் இருந்த வளையல்களைக் கழற்றிக் கொண்டிருந்தான் இன்னொருவன். நான் திமிறிக்கொண்டு பாய முயன்றேன். மின்னல் கீற்றுப்போல இருளில் பளபளக்கும் கத்தி ஒன்று என் நெஞ்சுக் குழிக்கு மிக அருகில் காட்டப்பட்டது. நான் அசையாமல் நின்றேன். ஓர் அங்குலம் முன்னுக்கு நகர்ந்தாலும் அந்தக் கத்தி என் நெஞ்சில் புகுந்துவிடும்.*

*அலங்கோலமான நிலையில், பூவைக் கசக்கி அத்தர் எடுப்பது போலத் திமிறவிடாமல் கையையும் கால்களையும் வாயையும் கட்டிப்போட்டு, ராஜத்தின் நகைகளை எல்லாம் எடுத்துக் கொண்டார்கள்.*

*வேலை முடிந்தது. என்னை இறுக்கியிருந்த கைகள் விலகின. ராஜம் துவண்டு போய்க் கீழே விழுந்தாள். குகைக்கு வெளியே தடதடவென்று காலடிகள் பதிய ஆட்கள் ஓடும் ஓசை.*

*நான் அலறினேன். என் அலறலும் கூப்பாடும் குகைப் பாறைகளில் முட்டி மோதி வெளியேறும் ஆற்றலின்றி, அங்கேயே மடித்துவிட்டன. ராஜம் விக்கி விக்கி அழுதாள். 'நீங்கள் அப்போதே சொன்னீர்களே! நான் கேட்டேனா? பாவி! எனக்கு நன்றாக வேண்டும். இதுவும் வேண்டும்; இன்னமும் வேண்டும்.'*

*நான் அவளை எதிர்த்துத் திட்ட வேண்டுமென்று குமுறிக் கொண்டிருந்தேன். ஆனால், அவள் அழுகை என் குமுறலைத் தணித்துவிட்டது. என் கைகால்களில் வெடவெடப்பும் நடுக்கமும் இன்னும் ஓயவில்லை. மார்பு கொள்ளை போகிற மாதிரி (கொள்ளைதான் போய் விட்டதே) அடித்துக்கொண்டது.*

*கைத்தாங்கலாக அவளை மெல்ல நடத்திக் கூட்டிக் கொண்டு குகைக்கு வெளியே மண்டபத்துக்கு வந்தேன். திருடர்கள் போன சுவடே தெரியவில்லை! அந்த மலையடிவாரத்துப் பாறை இடுக்குகளிலும் தோப்புத் துரவுகளிலும் ஓடி ஒளிவதா பிரமாதம்? ராஜம் ஒப்பாரிவைக்கத் தொடங்கிவிட்டாள். அவளை அப்படியே சித்திரவதை செய்துவிடலாம் என்ற அளவுக்கு முறுகிக்கிடந்த என் கோபம், இருந்த இடம் தெரியாமல் மெழுகாய் உருகிவிட்டது. எப்படியாவது ஆறுதல் சொல்லி, இருட்டுவதற்குள் அவளை அங்கிருந்து கிளப்பிக்கொண்டு போனால் போதும் என்றாகிவிட்டது. "இந்தா! ஏன் வீணாக அழுது கதறுகிறாய்? நான்தான் குகைக்குள் போகவேண்டாம்! வழியோடு போய்விடுவோம்' - என்று அப்போதே சொன்னேனே! நீ கேட்டாயா? போனது போகட்டும். ஆறு பவுன் சங்கிலியும் நாலு பவுன் வளையலும் போய்விட்டன. ரயிலையும் தவற விட்டுவிட்டு இங்கே சோற்றுக்குத் திண்டாட வேண்டாம். வா! போவோம்."*

*அவள் வேண்டா வெறுப்பாக எழுந்திருந்து நடந்தாள். முன்போலவே என் வலது பக்கம் தோளோடு தோளாகத் தான் நடந்தாள். என் மனத்தில் மட்டும் அந்தப் பழைய பெருமிதம் இல்லை. ஏதோ இனம் புரியாத அருவருப்பு ஒன்றுதான் நிறைந்திருந்தது.*

பஸ் ஸ்டாப்பில் க்யூவில் நிற்கும்போதும், தெருவில் நடந்து சொல்லும்போதும் கிரிப்பிரதட்சிண ஆரம்பத்தில் கண்மாய்க் கரை ஓரமாக நடந்தபோதும், 'அழகு! அழகு! அழகின் பிம்பம் நமக்குச் சொந்தமாக அருகில் நடந்து வருகிறது' என்றிருந்த கர்வம், இப்போது எங்கே போயிற்றோ தெரியவில்லை.

பத்துப் பவுன் தங்க நகைகளைப் பறிகொடுத்தது எனக்கு மறந்துவிட்டது. எனக்குரிய ஸௌந்தரியவதியின் உடம்பை இரண்டு மூன்று முரடர்கள் தொடுவதற்குப் பறிகொடுத்துவிட்ட வேதனைதான் இதயத்தை நிறைத்துக் கொண்டு நின்றது. பஸ் ஸ்டாப்பிலோ, தெருவிலோ, தவறுதலாகக் கூட ஒரு பர புருஷனின் கை அவள் மேல் பட்டிருக்குமானால், அவன் கன்னத்தைப் பழுக்க வைத்திருப்பேன். அது என்னால் முடியும்! இப்போதோ...?

"இந்த அவஸ்தைகள், ஆசாபாசங்கள் எல்லாம் உயிருக்கு ஆபத்து வருகின்றவரை தானா? கழுத்துக்கு முன்னால் கத்தியை நீட்டிவிட்டால், அழகு என்ன, எந்தப் பெரிய உரிமையையும் விட்டுக் கொடுக்க வேண்டியதுதான் போலும்!"

ராஜம் துவண்டுபோய்த் தளர்ந்து என் கையைப் பிடித்தாள். ஏதோ ஆபாசத்தைத் தொடுவது போலிருந்தது எனக்கு. சடக்கென்று கையைப் பின்னுக்கு இழுத்துக் கொண்டேன்.

"கொஞ்சம் கையைப் பிடித்துக் கொள்ளுங்களேன்! ஓய்ந்து போய் வருகிறது".

அருவருப்போடு கையைப் பிடித்துக் கொண்டேன். 'ராஜம் கையைப் பிடித்துக் கொள்ளச் சொல்லமாட்டாளா?' என்று ஏங்கிய நாட்கள் எத்தனையோ! ஆனால், இப்போதோ மனம் அருவருக்கிறது.

"கொஞ்சம் இப்படியே சரவணப் பொய்கைக்குப் போய் விட்டு, அப்புறம் ரயில்வே ஸ்டேஷனுக்குப் போகலாம்?"

"ஏன்? சரவணப் பொய்கையில் என்ன காரியம்? திருட்டுக் கொடுக்க இன்னும் ஏதாவது மீதமிருக்கிறதா?"

"எனக்குக் குளித்துவிட்டு வரவேண்டும்!"

தெருத் திருப்பத்தை அடைந்துவிட்டோம். மலைவழி பின்னால் மங்கி மறைந்து விட்டது. ராஜம் சரவணப் பொய்கையில் குளித்தாள். நல்ல காற்று! அரை நாழிகையில், ரயில்வே ஸ்டேஷனுக்குப் போவதற்குள்ளேயே, ஈரப்புடவை உலர்ந்து காய்ந்து விட்டது.

அவள் உடலைக் கழுவிவிட்டாள். என் மனத்தில் ஏற்பட்ட அந்தச் சின்னஞ்சிறிய அருவருப்பின் கோர ரூபத்தை நான் எங்கே போய்க் கழுவுவது?

ரயில்வே ஸ்டேஷனுக்குப் போகிற பாதையில் இரண்டு மூன்று சிறுவர்கள் ஒரு செத்த பாம்பின்மேல் கல்லை வேடிக்கையாக விட்டெறிந்து கொண்டிருந்தார்கள். உயிர் இருந்தால் பாம்பு எதிர்த்திருக்கலாம்; எதிர்க்காமல் ஓடியும் இருக்கலாம். இருந்தால்தானே?

*ராஜம் குனிந்த தலை நிமிராமல் நடந்து வந்து கொண்டிருந்தாள். என்னோடு பேச அவளுக்குப் பயம். அவளோடு பேச எனக்கு அருவருப்பு. மூளிக்கழுத்து, மூளிக்கைகள். அழகு என்னவோ குறைந்துவிடவில்லை. பழைய மோகக் கிறக்கம் அந்த வாட்டத்திலும் கிளம்பிக்கொண்டிருந்தது.*

*ஸ்டேஷனில் தெரிந்த மனிதர் ஒருவர் எதிர்ப்பட்டார்.*

*"என்ன சார் 'அவங்களுக்கு' எதாவது உடம்பு சரியில்லையா? ஏன் ஒரு மாதிரி இருக்காங்க" என் மனைவி ராஜத்தைக் குறித்துக் கேட்டார் அவர்.*

*"ஒன்றுமில்லை! சரவணப் பொய்கையில் குளித்தாள். குளிக்கும்போது தவறி விழுந்துவிட்டாள். அந்த அதிர்ச்சி இன்னும் நீங்கவில்லை போலிருக்கிறது".*

*பச்சைப் புளுகுதான். ராஜம் என்னை ஒரு தினுசாக ஏறிட்டுப் பார்த்தாள். நான் துணிந்துதான் புளுகினேன். சமயா சமயங்களில் மானத்தைக் காப்பாற்றிக் கொள்ள இந்தப் 'பொய்' என்ற சாதனம் தான் எவ்வளவு அருமையாகப் பயன்படுகிறது! உயிர்களின் அவஸ்தைக்கு அது ஒரு எல்லையோ?...*

**(1978-க்கு முன்)**



## 133. புகழ்த் துறவு

'**க**லீர், கலீர்' என்று சிலம்புகள் ஒலித்தன, தண்டைகள் குலுங்கின. கை வளைகள் 'கல்'லென்ற சுநாதத்தால் பொருள் விளங்காத இன்பக் காவியம் ஒன்றைப் பாடிக் கொண்டிருந்தன. மிருதங்கமும் தபேலாவும் பதத்துடனே ஒத்து முழங்கின.

முத்துக்குமார நட்டுவனார் ஓர் ஓரமாக விரித்திருந்த விரிப்பில் அமர்ந்து பதம் பிடித்துக் காட்டிக் கொண்டிருந்தார். தில்லைவடிவு அற்புதமாக அபிநயம் பிடித்து ஆடிக் கொண்டிருந்தாள். கொடிபோலச் சுழன்று ஆடினாள். கலையின் நுணுக்கம் பூர்ணமாக விளங்கிச் சோபிக்கும்படியான ஒவ்வோர் அம்சமும் அவளது நிருத்தியத்தில் குறைவற நிறைந்திருந்தன. அங்கங்களின் ஒவ்வொரு சின்னஞ்சிறு அசைவிலும் பாவம் கனிந்து பரிணமித்தது.

பூவணைநல்லூர் வேதநாத சுவாமி கோவிலில், ஒரு சதிர்க்காரியின் நடனத்திற்காக இவ்வளவு 'நடன ரசிகர்கள்' கூடியது என்பது இதுதான் முதல் தடவை என்று துணிந்து கூறலாம். 'கீதமினிய குயிலே!' என்று தொடங்கும் திருவாசகம் குயிற்பத்தில் உள்ள பாடலைப் பாடி முக்கால் மணி நேரமாக அதற்கு அபிநயம் பிடித்துக் கொண்டிருந்தாள் தில்லைவடிவு. மாணிக்கவாசகரின் வாக்கே, மனமுருக்கும் சுவையையுடையது; தேன்போன்றது! அந்தத் தெய்வீகத் தேனில் தனது அபிநய ஸௌந்தரியம் என்கிற அமுதத்தைக் கலந்து, கூடியிருந்தவர்களுக்கு ஊட்டிக் கொண்டிருந்தாள் தில்லை. எல்லோரும் கண்களாரச் செவியார மாந்தி மயங்கிக் கட்டுண்டு சிலைகளைப் போல மயங்கி நின்று கொண்டிருந்தனர்.

தம்மை மறந்த ஈடுபாட்டுடன் பதம்பிடித்துத் தாளம் மீறாமல் தில்லையை இயக்கிக் கொண்டிருந்தார் முத்துக்குமார நட்டுவனார்.

அர்ச்சகர் அர்த்தநாரீஸ்வரக் குருக்கள் கூட்டத்தை விலக்கிக்கொண்டு பரபரப்பாக நட்டுவனாரை நெருங்கி வந்தார்.

"என்ன நட்டுவனாரே இது? கால்நேரம் தெரிந்துகொள்ள மாட்டேன் என்கிறீர்களே? தில்லை எங்கே ஓடிப்போகிவிடப் போகிறாள்? நேற்றுத்தானே பொட்டுக் கட்டியிருக்கிறது! இனிமேல் அவள் பணிதானே வேதநாதனுக்கு? இன்று சுவாமி புறப்பாட்டுக்கு நேரமாகிவிட்டது. கொஞ்சம் சீக்கிரம் முடியுங்கள்!" நட்டுவனார் மட்டுமில்லை; ஏக காலத்தில் இப்படி இரைந்து பேசிய குருக்களை, அப்படியே எரித்து பஸ்மம் ஆக்கிவிடுவதுபோல நோக்கியது கூட்டம் முழுவதுமே. ஆனால், நட்டுவனாரும் அநேகமாக அந்தப் பதத்தோடு முடித்துவிடக் கருதினார். 'குருக்கள் கூறுவதும் ஒரு வகையில் நியாயம்தானே?' என்று தோன்றியது நட்டுவனாருக்கும். நாட்டியம் முடிந்தது. கூட்டமும் மெல்ல மெல்லக் கலைந்தது.

ஆனால்...

விதி என்கின்ற ஒரு சூத்திரக் கயிற்றை வைத்து இறைவன் மனித வாழ்க்கையை எவ்வளவோ விதமாகக் கணத்திற்குக் கணம் ஆட்டி அலைத்து மாற்றுகிறான்! அதில்தான் எவ்வளவு அற்புதங்கள் அடங்கி இருக்கின்றன? முதல் நாள் 'பரம்பரைப் பாத்தியதை' என்ற பேரில் தன் கோவில் தேவதாசியாகப் பொட்டுக்கட்டிக்கொண்ட அந்த இளந் தேவதாசியை வாழ்வின் இணையற்ற ஒளி வெள்ளத்தின் இடையே தவழவிட்டு விட்டு, பின் மீண்டும் தன் பணியை நாடி ஓடிவரச் செய்யவேண்டும் என்பது சர்வேசுவரனான வேதநாதப் பெருமான் திருவுள்ளக் கருத்தானால் அதை மாற்றுவதற்குக் கேவலம், இந்த அர்த்தநாரீஸ்வரக் குருக்களும், அந்த முத்துக்குமார நட்டுவனாரும் யார்? ஏன், தில்லை வடிவைப் பத்து மாதம் சுமந்து பெற்றெடுத்த அவள் தாய் பொன்னியே தலைகீழாக நின்று பிடிவாதம் செய்தும் அதை மாற்ற முடியவில்லையே! விதியின் நிகழ்ச்சிகளுக்கு ஈஸ்வர ரீதியாக உள்ள மூல காரணம் அவன் மட்டுமே அறிந்தவை. அதன் பலாபலன்களும் அவனுக்கே வெட்டவெளிச்சம். ஜீவ குலத்தோடு எத்தனையோ கோடானு கோடி மார்க்கங்களில் விளையாடுகிறான் அவன். அவற்றில் ஒவ்வொன்றிற்கும் ஓர் உள்ளர்த்தம் இருக்கிறது. அது அவன் மட்டும் அறிந்தது. தில்லைவடிவையும் அப்படி ஒரு விளையாட்டு விளையாடி வேடிக்கை பார்த்தான் வேதநாதப்பெருமான்.

## 2

சுவாமி புறப்பாட்டிற்கு அறிகுறியாக வாசலில் அதிர்வேட்டுக்கள் போடத் தொடங்கியபோது, முத்துக்குமார நட்டுவனாரும், தாய் பொன்னியும் புடை சூழக் கோயில் மரியாதைகளைப் பெற்றுக்கொண்டு வீட்டிற்குக் கிளம்பத் தயாராகிக் கொண்டிருந்தாள் தில்லைவடிவு. அவளும், உடன் வந்து கொண்டிருந்த தாயும் நட்டுவனாரும் கோபுரவாசலை அடைவதற்காகக் கோவிலின் தேவஸ்தான காரியாலயத்தின் அருகே வந்த சமயம், கோவில் நிர்வாக அதிகாரி வடிவேலுப் பிள்ளை, வெள்ளைக்காரன் போன்று உடையணிந்து கொண்டிருந்த ஒருவரோடு அவர்களை நோக்கி எதிரே வந்தார். அவர்கள் எதிரே நின்றனர், வருகின்றவர்களை எதிர்மறித்துக் கொண்டுபோக முடியாமல்.

வடிவேலுப் பிள்ளையும் சூட்டும் கோட்டும் முகம் நிறைந்து காட்டும் கருப்புக் கண்ணாடியுமாக வந்த அந்த மனிதரும், நேரே தங்களை நோக்கித் தான் வருகின்றார்கள் என்பதைத் தில்லை முதலியவர்கள் சீக்கிரமே புரிந்து கொண்டார்கள்.

"நட்டுவனாரே! இவர் என் சிநேகிதர். பட்டணத்தில் ஒரு சினிமாக் கம்பெனியிலே பெரிய வேலை இவருக்கு. தில்லையைப்பற்றி ஒரு விஷயம் பேசிக் கலந்து கொள்ள வேண்டுமென்கிறார் இவர். இன்றைக்குத் தில்லையின் நாட்டியத்தைப் பார்த்தாராம். அப்போதிருந்து என்னிடம் வாய் ஓயாமல் புகழ்ந்து கொண்டிருக்கிறார். தில்லையின் அதிர்ஷ்டத்தைஇவர் மூலமாக வேதநாதன் அனுப்பிவைத்திருக்கிறான். பரவாயில்லை!

நீங்கள் நாட்டியம் முடிந்து வீட்டிற்குப் புறப்பட்டு விட்டீர்கள் போலிருக்கிறது. பொன்னீ! தில்லையோடு நீயும் நட்டுவனாரும் வீட்டிலேயே இருங்கள். நானும் இவரும் சுவாமி புறப்பாடு முடிந்ததும் அங்கே வருகிறோம். சாவகாசமாக விஷயத்தைப் பேசிக் கொள்ளலாம்."

"சரிங்க! புறப்பாடு முடிந்து வாங்க." ஏக காலத்தில் நட்டுவனார், பொன்னி, இருவருமே வடிவேலுப் பிள்ளைக்கு இப்படி விடை கூறினர். வடிவேலுப்பிள்ளை பேசிக்கொண்டிருக்கும் போதே, இடையிடையே அந்தச் சினிமாக்கார மனிதர் தாமும் பேசுவதற்கு முயலும் ஆர்வத்தை முகத்திலே புலப்படுத்திக் காட்டினார். ஆனால் வடிவேலுப்பிள்ளை அவரை இடையிலே பேசவிட்டால்தானே? அவர் தில்லையையே வைத்த கண் வாங்காமல் கலைக் கண்களோடு கூர்மையாகப் பார்த்துக் கொண்டிருந்தார்.

அவர்கள் விடை பெற்றுக்கொண்டு வீட்டிற்குச் சென்றனர். நிர்வாக அதிகாரி வடிவேலுப்பிள்ளை சுவாமி சந்நிதியை நோக்கி நடந்தார். ஆனால், அவரோடு கூடவந்த அந்த மனிதரோ, கோபுரவாசல் படிகளில் அன்னமும் நாணும் நடையுடன், மின்னல் இடை துவள நாட்டிய உடையுடனேயே ஏறிச் சென்று கொண்டிருக்கும் தில்லையை நயன ஜோடிகளின் நோக்குத் தினவு தீரப் பார்த்துக்கொண்டிருந்தார்.

"என்ன மிஸ்டர் பத்ரிநாத்! அங்கேயே நின்றுவிட்டீர்கள்? நீங்கள் பின்னால் வருவதாக நினைத்துக்கொண்டல்லவா நான் சுவாமி சந்நிதிக்குப் போய்க் கொண்டிருக்கிறேன்." அதற்குள் எதையோ, கோபுர வாசல் பக்கம் பார்த்துப் புரிந்து கொண்டவர்போல ஒரு நமட்டுச் சிரிப்புச் சிரித்துக் கொண்டே, "ஓ! அதுவா விஷயம்? தில்லை விஷயம் இப்போதே முடிந்து விட்டது என்று எண்ணிக்கொள்ளலாம் நீங்கள்! இந்தப் பூவணை நல்லூர் மட்டுமில்லை. நேற்று அவள் பொட்டுக்கட்டி உரிமைப்பட்ட சாட்சாத் வேதநாதப்பெருமானே எதிர்த்தாலும் சரி! நீங்கள் அதைப்பற்றிக் கவலைப்பட வேண்டாம். நாளைக் காலை நீங்களும் 'டைரக்டரும்' சென்னை செல்லும் போது உங்கள் காரில் 'தில்லை'யும் இருப்பாள். இந்த வடிவேலுப் பிள்ளையின் சாமர்த்தியம் அப்போது தான் தெரியும் உங்களுக்கு!"

"அதற்குச் சொல்லவில்லை சார்! நீங்கள் செய்வீர்கள், உங்களால் கண்டிப்பாக முடியும். இந்தப் பெண்ணினுடைய உருவத்தை நடனம் என்ற ஜீவகலைக்காகவே பிடித்துப் பிடித்து சிருஷ்டித்திருக்கிறான் சார் பிரமன்! எங்கள் மூவிடோனில் ஆறு நடன ஜோடிகள் தண்டத்திற்குச் சம்பளம் வாங்கிக் கொண்டிருக்கிறார்கள். பூமி நடுங்கும்படி குதிக்கிறார்கள் சார். இவள் ஒருத்தி இருந்தால் போதும்; கலை உலகமே எங்கள் கைப்பொம்மையாகி விடும்!" பத்ரிநாத் என்று அழைக்கப்பட்ட அந்த நடன டைரக்டர் வடிவேலுப்பிள்ளையைத் தூக்கிவைத்துப் பேசினார். தில்லையின் இன்றியமையாமை டைரக்டர் பத்ரிநாத்தின் பேச்சில் ஒவ்வொரு 'டிகிரி'யாக ஏற ஏற, அவரிடம் பேச வேண்டிய தரகுத் தொகையின் இலக்கத்திற்குப் பின்னால் ஒவ்வொரு ஸைபராகச் சேர்த்து எழுதிக்கொண்டிருந்தார் வடிவேலுப்பிள்ளை தம் மனத்திற் குள்ளே. உண்மையில் பிள்ளை மனம் வைத்துச் செய்ய முற்பட்டுவிட்டாரானால்

நடக்காது என்பது இல்லை. அவரே சொல்லிக் கொண்டு பெருமைப்பட்டதுபோல, பூவணை நல்லூரும் ஈசுவரனாகிய வேதநாதனுமே எதிர்த்தாலும்கூட அவரால் அது முடியும். ஆனால், ஸ்ரீமான் வடிவேலுப்பிள்ளை அதற்காக ஒரு சில 'பச்சை நோட்டுக்களை' பத்ரிநாத்திடமிருந்து எதிர்பார்த்ததும் அவ்வளவு 'பெரிய குற்றம்' என்பதற்கில்லையே! பத்ரிநாத்தும் அதை அப்படிக் குற்றமாக எடுத்துக் கொள்ளப் போவதில்லை. வடிவேலுப்பிள்ளை கொடுத்திருந்த உறுதிமொழியின் பேரிலேயே, டைரக்டரை உடனே அழைத்து வருமாறு டாக்ஸியோடு டிரைவரை அவசரமாகக் கும்பகோணத்திற்கு அனுப்பியிருந்தார் பத்ரிநாத்.

சென்னையிலுள்ள அவர்களது மூவிடோனின் தலைமை டைரக்டர் ஒரு படத்திற்கான புறக்காட்சிகளை எடுப்பதற்காகக் குறிப்பிட்ட சில நடிகர்களோடு கும்பகோணத்தில் 'கேம்ப்' போட்டிருந்தார். பத்ரிநாத்தும் அவரோடு வந்திருந்தவர்தான். பூவணைநல்லூர், கும்பகோணத்திலிருந்து, ஏழரை மைலில் உள்ள இயற்கை அழகு வாய்ந்த சிற்றூர். சிற்பங்கள் மிகுந்த வேதநாதப் பெருமான் கோவில் உள்ள இடம். பரம்பரையாக நிருத்திய கலையை வளர்த்துவரும் நட்டுவனார்களும், நடனமணிகளும் நிறைந்த இடம் என்றெல்லாம் கேள்விப்பட்டுச் சென்னையிலிருந்து கொண்டு வந்திருந்த ஸ்டுடியோ டாக்ஸியில் தாம் மட்டும் வந்திருந்தார், நடன டைரக்டர் பத்ரிநாத். மறுநாள் எல்லோரும் சென்னை திரும்புவதாக ஏற்பாடு.

மாலை நாலு மணிக்குக் கும்பகோணத்திலிருந்து டாக்ஸியில் புறப்பட்ட பத்ரிநாத் எப்படியும் ஏழு மணிக்குத் திரும்பிவிடுவது என்று திட்டமிட்டிருந்தார். ஆனால் அங்கே, பூவணை நல்லூரில், தில்லைவடிவு என்ற ஒரு பெண் தம்மை, தம் திட்டத்தை எல்லாம் மாற்றிப் புதிதாக எதை எதையோ நடத்திவிடப் போகிறாள் என்பதைப் புறப்படும்போது அவர் கண்டாரா என்ன?

"எனக்கு இவர் சிநேகிதர்" - என்று சமத்காரமாக ஒரு பொய்யை வீசி எறிந்து, தனக்குத் தில்லை முதலியவர்களை அறிமுகப்படுத்தியதும் 'நாளைக் காலை நீங்களும் டைரக்டரும் சென்னை செல்லும்போது உங்கள் காரில் தில்லையும் இருப்பாள்' என்று உறுதி கூறியதுமாகிய வார்த்தைகளைக் கொண்டே, வடிவேலுப்பிள்ளை ஏதோ கொஞ்சம் 'வெள்ளையப்'பனுக்கு அடிபோடுகின்றார் என்பதைப் புரிந்து கொண்டார் பத்ரிநாத். தில்லை கிடைப்பதாக இருந்தால் மூவிடோனின் தலைமை டைரக்டரிடம் சொல்லி எதற்கும் ஏற்பாடு செய்ய முடியும் என்ற உறுதியான நம்பிக்கை அவருக்கு இருந்தது.

## 3

"**எ**ன்ன அக்கிரமம்? கலி முத்திப் போயிடுத்துண்ணா! முந்தாநாள் தான் ஈசுவரசந்நிதியில் பொட்டுக் கட்டியிருக்கு. நேத்து ராத்திரி ஊரே பிரமிக்கும்படி, நான் எவ்வளவு அவசரப்படுத்தியும் கேட்காமே, சுவாமி புறப்பாட்டுக்கு முன்னே சுத்திச் சுத்தி ஆடினாள்..இன்னிக்கு அந்தச் சினிமாக்காரனோடே பட்டணம் போறாளாமே? பொட்டுக் கட்டின அப்புறம் அவள் சர்வேஸ்வரனுக்கு உரியவள் இல்லையோ? இந்தப்

பாழாப் போவான் வடிவேலுப்பிள்ளைக்கு இருந்திருந்தும் புத்தி இப்படியா போகணும்? இது எல்லாம் 'அவனு'க்குத் துரோகம்! 'அவன்' சும்மா விட்டுவிட மாட்டான்!" அர்த்தநாரீஸ்வர குருக்கள் கோபுரவாசலில் நின்று முத்துக் குமார நட்டுவனாரிடம் இரைந்து பேசி ஆத்திரத்தைத் தீர்த்துக் கொண்டிருந்தார்.

"குருக்களே! இதெல்லாம் தலையெழுத்து. நானும் பொன்னியும் எவ்வளவு முட்டிக்கொண்டோம் என்கிறீர்கள்? இந்த வடிவேலுப்பிள்ளையும், கருப்புக் கண்ணாடிக்காரனும், கும்கோணத்திலிருந்து புதுசா வந்தவனும், ஐம்பமாக வீட்டு வாசலில் காரிலே வந்து இறங்கியவுடன், இந்தப் பெண்ணுக்குத் தலைகால் புரியல்லே! அப்படியே சொக்கி மயங்கிப் போயிடிச்சு. அதுனோட பிடிவாதத்துக்கு முன் எங்க வார்த்தை செல்லுபடியாகல்லே! இதோ, இப்போ மணி ஏழரை ஆறது! இன்னும் ஒரு மணி நேரத்தில் 'தில்லை' புறப்பட்டிடும். வேதநாதனின் விருப்பம் நானும் பொன்னியும் தான் மூச்சுள்ள வரை சேவகம் பண்ண வேணும் என்கிறதாக இருக்கிறதோ என்னவோ? யார் கண்டார்கள்? எல்லாம் அவனுடைய அலகிலா விளையாட்டு!" என்று நட்டுவனார் பதில் சொல்லிக்கொண்டே நகர்ந்தார்.

'ஆட்டுவித்தார் ஆரொருவர் ஆடாதாரே?" என்ற தேவாரப் பாடலைத் தாளவாத்தியங்களோடு இனிமையாக முழங்கிக்கொண்டே சனிக்கிழமைத் தேவார பஜனை கோஷ்டி கோபுர வாசலில் நுழைந்தது. அர்த்தநாரீஸ்வர குருக்கள், பஜனை கோஷ்டிக்கு சுவாமி தரிசனம் செய்து வைப்பதற்காகக் கோபுர வாசலிலிருந்து அவர்களுக்கு முன்னால் உள்ளே நுழைந்து விரைவாகச் சந்நிதியை நோக்கிச் செல்லத் தொடங்கினார். சந்நிதிக்குப் போகிறபோக்கில் தேவஸ்தானத்திற்குள்ளேயிருந்து வந்த சம்பாஷணையைக் குருக்கள் சிறிதே தயங்கி நின்று காதில் வாங்கினார்.

"என்ன பிள்ளைவாள்? நான் ரொம்ப நாளாகச் சொல்லிக்கொண்டே இருக்கேன்? நம்ம பாங்கிலே ஒரு 'டிபாஸிட்' போட்டு வையுங்களேன். ஒண்ணும் கவனிக்கவே மாட்டேங்கிறியளே?"

"இன்னிக்குக் கண்டிப்பாகக் கவனிக்கிறேன் சார்! (இதைத் தொடர்ந்து வடிவேலுப்பிள்ளையின் சிரிப்பொலி) நல்ல நேரம் பார்த்துத்தான் கேட்டிருக்கீங்க. ஆமாம்; அப்படி ஓர் ஐநூறு போட்டு வைத்தால் கிடக்கிறது. நீங்களுந்தான் விடாமே கேக்கிறியளே? அது சரி! இன்னைக்கு சனிக்கிழமை ஆச்சே. பாங்கு எத்தனை மணி வரை உண்டு? எனக்கும் கும்பகோணத்துக்குக் கோவில் காரியமா வரவேண்டியிருக்கு. அப்படியே உங்க பாங்குக்கு வந்து காரியத்தை முடிச்சிடலாம் பாருங்க."

இதற்கு மேல் அர்ச்சகர் அர்த்தநாரீஸ்வர குருக்கள் அங்கே நிற்கவில்லை. "பய! அழுகிப் புழுத்துத்தான் சாகப் போகிறான்" இப்படி முணுமுணுத்த அவர் உதடுகளின் ஒலி இடுப்பில் தொங்கிய சாவிக் கொத்தின் ஒலியில் கலந்து ஐக்கியமாகி விட்டது. காலை எட்டிப் போட்டவராய் இடுப்பிலிருந்து கொத்துச் சாவிகளைக் கையிலே மாற்றிக் கொண்டு நடந்தார் அவர்.

## 4

**கா**லம் என்ற சிமெண்டுத் தரையில் வருஷம் என்ற பந்து பன்னிரண்டு முறை துள்ளிவிட்டது. 'மகள் தில்லை வடிவு, பெற்ற தாயாகிய தான் கூறியதையும் பொருட்படுத்தாமல் சினிமாக்காரர்களோடு சேர்ந்துகொண்டு சென்னைக்குப் போய் விட்டாளே' என்ற ஏக்கத்திலேயே மனமும் உடலும் உடைந்து போன பொன்னி, அதிக நாள் உயிர்வாழவில்லை. மகள் சென்னைக்குப்போன மூன்றாவது வருடமே வேதநாதப் பெருமான் அவளைத் தன் திருவடியில் சேர்த்துக் கொண்டு விட்டார்.

வடிவேலுப்பிள்ளையோ, நட்டுவனாரோ, அர்த்தநாரீஸ்வரக் குருக்களோ, தங்கள் தங்கள் மனநிலையில் பொன்னியின் மரணத்தைப் பெரிதுபடுத்தி அழவோ ஆதங்கப்படவோ இல்லை. அதனால் தானோ என்னவோ, 'லலிதகுமாரி' என்ற புதுப்பெயரில் சென்னையில் சினிமா நட்சத்திரமாக மின்னிக் கொண்டிருந்த பூவணை நல்லூர்த் தேவதாசி தில்லைவடிவிற்கு யாருமே தாயின் மரணத்தைப்பற்றி எழுதவும் இல்லை!

"இந்தப் பொன்னி போனால் இன்னொரு சின்னி! கோவில் தேவதாசி மிராசை ஏற்றுக்கொண்டு பணிபுரிய வேறு தாசிகளுக்குப் பஞ்சமா, என்ன?" - இப்படி நினைத்தது மட்டுமில்லை, பாலாம்பாள் என்ற அந்தப் புதுத் தேவதாசியை நியமித்தேவிட்டார் பிள்ளை. எல்லோரையும் ஆளும் இறைவனையும் அவன் கோவிலையும் தாமே ஆள்பவரில்லையா அவர்? வேதநாதன்கூட அவர் இட்ட படித்தரத்திற்கு அஞ்சித்தானே வாழ்ந்தாக வேண்டும்?

பொன்னியின் காலம் முடிந்தபின் முத்துக்குமார நட்டுவனாரும் பூவணை நல்லூரில் அதிக நாள் தங்கவில்லை. கும்பகோணத்தில் நாலைந்து பெரிய மனிதர்களுக்குத் 'திடீரென்று' நாட்டியக் கலையின் மேல் ஒரு பற்று ஏற்பட்டதன் விளைவாக நாட்டியப்பள்ளிக்கூடம் ஒன்றை ஏற்படுத்தப்போவதாக, நட்டுவனாருக்கு ஒரு செய்தி எட்டிற்று. கும்பகோணத்திற்குப் போய்ச் சம்பந்தப்பட்டவர்களைப் பார்த்தார். காரியம் நட்டுவனாருக்குச் சாதகமாக முடிந்துவிட்டது. நாட்டியப் பள்ளிக்கூடத்தின் ஆசிரியர் பதவியும், தங்கள் குழந்தைகளைப் பள்ளிக்கூடத்திற்கு அனுப்பாமல் வீட்டிலேயே கற்க ஏற்பாடு செய்யவேண்டும் என்று எண்ணிய சிலர் வீட்டு 'டியூஷன்'களும் அவருக்குக் கிடைத்தன. அதன் பிறகு பூவணை நல்லூர்ப் பக்கம் அவரைக் காண்பதே அரிதாகப் போயிற்று. கும்பகோணத்துக் கலாரஸிகர்களுக்கும் பெரிய மனிதர்களுக்கும் இடையில் 'முத்துக் குமார்' என்ற பெயருக்கு 'பிரபலத்துவமும்' 'பிரமுகத்துவமும்' ஒருங்கே கிடைத்துவிட்டன. வருடங்கள் தோன்றி மறைய மறைய, சமூகமும் அவற்றை மறந்துவிடுவது போல, சினிமா நட்சத்திரம் லலிதகுமாரிக்குப் பழைய பூவணை நல்லூர் வாழ்வின் நினைவு அறவே இல்லாமல் மறந்துவிட்டது. அப்படி மறக்கச் செய்தபின் நினைவூட்டி ஆட்கொள்ள வேண்டும் என்பதுதான் வேதநாதனுடைய திருவுள்ளம் போலும்!

அடையாறு - காந்திநகரில் மூன்றடுக்கு மாடிகளோடு பெரிய விசாலமான பங்களா, இரண்டு மூன்று பாங்குகளில் இலட்சக்கணக்கில் கனத்த 'பாலன்ஸ்' துணையாகவோ, பணியாளாகவோ, பீ.ஏ. படித்த ஓர் இளைஞன்! அவனுக்குப் 'பிரைவேட் ஸெகரெட்டரி' என்று பெயர். இந்தப் பதவிப் பெயரைத் தமிழில் மொழி பெயர்த்து எழுதுகிறேன் பேர் வழியே என்று, 'லலிதகுமாரியின் அந்தரங்கக் காரியதரிசி' என இப்படிக் 'கொட்டேஷன்' கொடுத்து எழுதி, சில சினிமாப் பத்திரிகைகள் அந்தப் பதவிப் பெயருக்கு ஒரு புது அர்த்தம் கற்பிக்க ஆரம்பித்தன!

"வாழ்வு என்றால் நாலும் கலந்துதான் இருக்கும்" என்பார்கள். ஆனால், அவள் வாழ்விலோ; 'நாற்பதும்' கலந்திருந்தது என்று கூறிக்கொண்டார்கள்! கலையுலகத்தில் அவளுக்கிருந்த பெருமையும், 'கிராக்கியும்' ஏகப்பட்டதாகவே இருந்தது.

## 5

**வீ**ட்டிற்கு இரண்டு தமிழ்ப் பத்திரிகைகளும், ஓர் ஆங்கிலப் பத்திரிகையும் தினசரி வந்தாலும், செய்திகளைப் படிக்கவோ, அவற்றை லேசாகப் புரட்டிப் பார்க்கவோ கூட லலிதகுமாரிக்கு நேரமே இருப்பதில்லை. செக்குகளைக் கட்ட பாங்கு செல்லவோ, வருமான வரி அதிகாரிகளுக்குப் பதில் சொல்லவோ அவசியமில்லாமல் கொஞ்சம் ஓய்வு ஒழிவு இருக்கின்ற நாட்களில் ரவீந்திரன் (இதுதான் அவளுடைய அந்தரங்கக் காரியதரிசியின் பெயர்) மட்டும் பத்திரிகைகளைப் புரட்டிப் பார்ப்பது வழக்கம்.

வழக்கத்திற்கு விரோதமாக, "மிஸ்டர் ரவீ! அந்தத் தமிழ்த் தினப் பத்திரிகைகள் வந்திருந்தால் இங்கே கொண்டு வாருங்கள்! பொழுது போகவில்லை. அதையாவது பார்த்து வைக்கிறேன்" என்று அவள் கூறியபோது, வியப்போடு பத்திரிகைகளைக் கொண்டு வந்து வைத்தான் ரவீந்திரன். அன்று சரஸ்வதி பூஜையாகையினால் 'ஸ்டூடியோக்கள்' எல்லாவற்றிற்கும் விடுமுறை என்பது அவனுக்கு அப்போது தான் நினைவு வந்தது.

பத்திரிகையை மேலோட்டமாகப் பார்த்துக்கொண்டே வந்த லலித குமாரி, அடுத்தடுத்த தலைப்புக்களாக ஒரே பக்கத்தில் பிரசுரமாகி இருந்த அந்தச் செய்திகளைக் கண்டதும் தன் பார்வையை அப்படியே அதன்மேல் நிலைக்க விட்டுவிட்டாள்.

'கும்பகோணம் நடன ஆசிரியரின் பரிதாபகரமான முடிவு' 'கோவிலில் தர்மகர்த்தா பதவியிலிருந்து விலக்கப்பட்டார்'. தனித்தனியே மேற்கண்ட இரு தலைப்புக்களுடனும் செய்திகள் பிரசுரிக்கப்பட்டிருந்தன.

"கும்பகோணம் - இவ்வூருக்கு அருகிலுள்ள பூவணைநல்லூர்க் கோவில் தர்மகர்த்தா வடிவேலுப்பிள்ளை, வேதநாத சுவாமி கோவில் தோட்டத்தில் ரகசியமாகக் கள்ளச்சாராயம் காய்ச்சுவதாக வந்த மொட்டைக் கடிதம் ஒன்றைப் பரீட்சிப்பதற்காகப் போலீஸ் அதிகாரிகள் திடீரென்று பூவணைநல்லூருக்கு விஜயம் செய்து பிரஸ்தாப இடத்திலே பரீட்சித்தபோது, மொட்டைக் கடிதம் உண்மை என்றே முடிவாயிற்று. மேலும் புலன் விசாரித்ததில் கும்பகோணத்தில் பிரபல நடன ஆசிரியராக இருக்கும் பூவணைநல்லூரைச் சேர்ந்த முத்துக்குமார் என்பவரும்

*திருட்டுச் சாராயம் காய்ச்சுவதில் வடிவேலுப் பிள்ளைக்குத் துணையாக இருந்து வந்திருக்கிறார் என்று தெரியவந்தது.*

*ஆனால், பூவணைநல்லூரில் போலீஸார் சென்று பரிசோதித்த அதே இரவில், கும்பகோணம் மகாமகக் குளத்தின் அருகே நடன ஆசிரியர் முத்துக்குமார் யாராலோ பயங்கரமான முறையில் கொலை செய்யப்பட்டிருக்கிறார். முத்துக்குமாரின் கொலை செய்யப்பட்ட பிரேதத்தைக் கும்பகோணம் போலீஸ் டாக்டர் பரிசோதித்து, கொலை செய்யப்படுவதற்கு முன் முத்துக்குமார் நிறையக் குடித்திருக்க வேண்டுமென்று தெரிவித்தார். பூவணைநல்லூர்க் கள்ளச் சாராய வழக்கிற்கும், முத்துக்குமார் கும்பகோணத்தில் கொலை செய்யப்பட்டதற்கும் ஏதோ நெருங்கிய தொடர்பு இருக்க வேண்டும் என்று போலீஸார் கருதுகின்றனர். வடிவேலுப்பிள்ளை என்பவர் பூவணைநல்லூர்க் கோவில் தர்மகர்த்தா பதவியிலிருந்து விலக்கப்பெற்று, கும்பகோணம் சப்ஜெயிலில் போலீஸ் ரிமாண்டில் இருந்துவருகிறார்."* லலிதகுமாரி பத்திரிகையை அப்படியே படித்துக் கீழே எறிந்தாள். அவள் மனத்தில் நினைவிலிருந்து எழுந்த ஒரு பழக்கமான கவிச்சித்திரம் தோன்றியது.

**"நின்றும் நிலைத்தும் நிலமார**
**நெடும் புகழ்தான் நிதம் பெற்றுங்**
**குன்றின் விளக்கென்னவே வாழ்மாந்தர்**
**குலவுமுறை விதியணுகத்**
**தின்றும் திளைத்தும் சிறியனவே**
**செய்துமிக இழிவணுகக்**
**கொன்றும் குலைத்தும் வேதேசா!**
**குவிந்தபுகழ் துறந்திடுவர்**
**துன்றும் தூவடியாம் நின்னடியைத்**
**தொடல் மறந்த தொல்லை ஐயோ!"**

பூவணைநல்லூர் வேதநாதப்பெருமான் மீது குமரேசப் பாவலர் பாடிய இந்தப் பாட்டிற்கு இளமையில் 'தில்லைவடி'வாக, இருந்தபோது எத்தனையோ முறை அபிநயம் பிடித்து ஆடியிருக்கும் நினைவு 'லலிதகுமாரிக்கு' ஏற்பட்டது. அவள் கண்களில் காரணமின்றிக் கண்ணீர் துளித்தது. நெஞ்சில் ஏதோ ஓர் உருக்கம் வேகமாக ஏற்பட்டுக்கொண்டிருந்தது. வடிவேலுப்பிள்ளை காலத்தில் தனக்கு 'மிகவும் பிடித்த பாட்டு இது' என்ற அவர், கோவிற் சுவரில் இதை எழுதி வைத்ததையும், 'தில்லை! நீ இந்தப் பாட்டைப் பாடி அபிநயமும் பிடித்துவிட்டால் எனக்கு அழுகையே வந்துவிடுகிறது, அம்மா!" என்று வாயாரப் பன்முறை நட்டுவனார் கூறியதும் லலிதகுமாரிக்கு நினைவு வந்தன. 'இந்தப் பாடலை அவ்வளவு தூரம் உணர்ந்த வடிவேலுப்பிள்ளையும் முத்துக்குமார நட்டுவனாருமே இப்படி ஆகிவிட்டார்களே? இது விதியா? அல்லது வேதநாதனுடைய திருவிளையாடலா? நம்மை இப்படியெல்லாம் ஆக்கக்கூடிய புகழை, அது நம்மை இக்கோலங் காண்பதற்குள் நாமாகவே

துறந்து தியாகம் செய்துவிட்டால்? புகழும் பவிஷுபம் நம்மை விலகுவதற்குள் நாமாக அவைகளை விலக்கி 'அவன்' அடிப்பணி பூண்டால் தொல்லை இல்லையா - லலிதகுமாரி (பழைய தில்லை வடிவு) மனங் குழப்பும்படி சிந்தித்தாள். சிலையாக உட்கார்ந்து சிந்தித்துக் கொண்டே இருந்தாள்.

## 6

சரஸ்வதி பூஜைக்கு மறுநாளைக்கு மறுநாள். பூவணைநல்லூர்க் கோவில் சந்நிதி வாசலில் யாரோ ஓர் 'இளம்பெண்' கோலம் போட்டுக்கொண்டிருந்தாள். அவள் தூய வெள்ளை உடை அணிந்திருந்தாள். வாரி முடித்த கருங்குழல்; உடலில் வேறு எந்த அணிகலனும் அலங்காரமும் கிடையாது.

பூட்ஸ் போட்டுக் கொண்டிருக்கிறோமே என்பதையும் மறந்து யாரோ ஒரு நகரத்து மனிதன் காரிலிருந்து இறங்கி நேரே சந்நிதி வாசலுக்கு வேகத்தோடு நடந்துவந்தான்.

"லலிதா! உன் முடிவு இதுதானா? வாழ்வின் பெரும் பகுதியை வீணாகவே கழித்துவிட உனக்கு அவ்வளவு திடமான விரக்தி என்ன வந்தது? நீயாகப் புகழை வேண்டி அன்று இதே கோவிலிலிருந்து யார் சொல்லியும் கேட்காமல் என் வேண்டுகோளுக்கு இணங்கிச் சென்னைக்கு வந்தாய்! இன்று சொல்லாமல் கொள்ளாமல் ஓடிவந்து இங்கே கல் தரையில் கைதேயக் கோலம் போடுகிறாய்! புகழைச் சுலபமாக அடையமுடியாது லலிதா! துறந்துவிடலாம் சுலபமாக."

கோலம் போட்டுக்கொண்டிருந்த பெண், கோலப் பொடியினாலேயே சந்நிதிக்கு முன் ஏதோ எழுத்துக்களைத் தூவினாள்.

**"கொன்றும் குலைத்தும் வேதேசா!**
**குவிந்தபுகழ் துறந்திடுவர்**
**துன்றும் தூவடியாம் நின்னடியைத்**
**தொடல் மறந்த தொல்லை ஐயோ!"**

"மிஸ்டர் பத்ரிநாத்! வடிவேலுப் பிள்ளையையும், நட்டுவனாரையும் போல என்னையும் ஒரு நாள் என் புகழ் சந்தி சிரிக்கச் செய்துவிடும். நானே முந்திக்கொண்டு வந்துவிட்டேன். என்னை மன்னித்து விடுங்கள்!" கோலம் போட்டுக் கொண்டிருந்த பெண் தலை நிமிர்ந்து கூறினாள். வந்தவர் பதில் பேசாமல் வந்த வழியே திரும்பி நடந்தார்!

(1978-க்கு முன்)

## 134. நினைத்ததும் நடந்ததும்

தபால்காரன் வீசி எறிந்துவிட்டுச் சென்ற கடிதத்தை எடுத்துப் பிரித்தான் ரகுநாதன். கடிதம், அவன் எதிர்பார்த்தது போலவே, அவன் மாமாவிடமிருந்து வந்திருந்தது. பொழுது விடிந்தால், அவருக்கு வேறு வேலையே கிடையாது போலிருக்கிறது. கலியாணம்! கலியாணம்!... கடிதம் தவறாமல் அதே பல்லவிதான்.

கடிதத்தைப் படித்ததும், அசட்டையாக அதை மேஜை மேல் வீசியெறிந்துவிட்டு, ஈஸிசேரில் சாய்ந்தான் ரகுநாதன். மேஜையில், கடிதம் விரித்தவாறே கிடந்தது.

கீழத்தேரூர்.

அன்புள்ள ரகுநாதன்!

நீ இங்கிருந்து போனபின், இதுவரை கடிதமே எழுதவில்லை. இப்படி நீ நடந்துகொள்ளும்படியாக நான் என்ன தவறு செய்துவிட்டேன்? நாள் தவறாமல் உன் கடிதம் வரும் வருமென்று எதிர்பார்த்து ஏமாற்றம் அடைந்த நிலையில், இன்று இக்கடிதத்தை எழுதுகிறேன். நீ வந்திருந்தபோது உன்னிடம் நேரில் கூறியவாறு வருகின்ற சித்திரையில் கலியாணத்தை முடித்துவிடவேண்டும். நீயுந்தான் எத்தனை நாள் பம்பாயில், இப்படி ஓரியாகக் கடத்தமுடியும்.. இது விஷயமாக நீ ஏன் தயக்கப்படுகிறாய் என்பதுதான் எனக்குப் புரியமுடியாத ஒன்றாக இருக்கிறது. காரணம் கேட்டதற்கு 'ஏதோ மேலே படிக்கப் போகிறேன் என்றும், பிரைவேட்டாக எம்.ஏ. எழுதப்போகிறேன்' என்றும் சொன்னாய்! மாலதி உன்னுடன், உன் பக்கத்தில் இருப்பது உன் படிப்புக்குத் தடையாக இருக்குமென்ற எண்ணமா? அப்படியானால், அது வீண் பிரமை என்பதை உனக்குச் சொல்ல ஆசைப்படுகிறேன். உங்கள் மாமி வீட்டிற்கு வந்த இரண்டு வருடங்கள் கழித்துச் சட்டக் கல்லூரியில் பி.எல். பரீட்சையில் முதல் வகுப்பில் தேறியிருக்கிறேன் நான். கடிதம் வளர்ந்துவிட்டது. விவரமாகப் பதில் எழுது. கல்யாண விஷயமாக உன் பதில் அனுகூலமாக இருக்குமென்று நினைக்கிறேன்.

உன் மாமா,
வைத்தியநாதன்

இளமையில் தாய், தந்தையரை இழந்த ரகுநாதன், மாமாவிடமே வளர்ந்தவன். திண்ணைப் பள்ளிக்கூடத்திலிருந்து சென்னையில் கல்லூரிப் படிப்புவரை அவருடைய ஆதரவினால் படித்தவன் அவன். தம் ஒரே மகளாகிய மாலதியையும் அவனையும் இரண்டு கண்மணிகளாகப் போற்றிப் பேணி வந்தார் வக்கீல் வைத்தியநாதன். தம்முடைய வக்கீல் வாழ்க்கையில் பேரும் புகழும் செல்வமும் மிகுதியாகப் பெற்றிருந்தும் சில ஆண்டுகளிலேயே அந்த வாழ்க்கை அவருக்கு வெறுத்துப் போய்விட்டது. கீழத்தேரூரில் காவிரிப் பாசனத்தில் ஒரு சிறு

மிராசுதாரராக வாழ்வதற்கு வேண்டிய நிலபுலன்கள் அவருக்கு இருந்தன. வக்கீல் தொழிலில் வெறுப்புத் தட்டியதும் திருச்சியிலிருந்து கீழத்தேரூரில் தமது பழைய வீட்டைச் செப்பனிட்டுவிட்டுக் குடியேறினார். திருச்சியில் ஐந்து ஆண்டுகள் நடத்திய வக்கீல் தொழிலில் அவருக்கு ஒரு நொடிகூட அமைதி கிடைக்கவில்லை. காவிரிக் கரையில் பசுமை சூழ விளங்கும் கீழத்தேரூர் வாழ்வை அவர் மனம் நாடியதுதான் அவர் அங்கே செல்லக் காரணம். மனைவி, மகள், ரகு இவர்கள் சகிதம் கீழத்தேரூரில் குடியேறிய வைத்தியநாதன் நிலங்களை மேற்பார்ப்பதிலும் தமக்குரிய இரண்டொரு தென்னந்தோப்புக்களைக் கம்பி வேலியிட்டுப் பாதுகாப்பதிலுமாகப் பொழுதைக் கழித்து வந்தார். விரைவில் அவர் வேண்டுகோளின்படி ரகுநாதன் சென்னைக்குக் கல்லூரிப் படிப்புக்குச் சென்றான். திருச்சியிலுள்ள போதே அவன் எஸ்.எஸ்.எல்.ஸியை முடித்திருந்தான். மாலதியை நான்காம் பாரத்தோடு நிறுத்திவிட்டார் வைத்தியநாதன். நாட்கள் வேகமாக ஓடி வாரங்களாய், மாதங்களாய், வருடங்களாய்க் கழிந்து கொண்டே இருந்தன. ரகுநாதன் பி.ஏ. படித்துக்கொண்டிருந்தான். கீழத்தேரூரில் வைத்தியநாதன் இந்த மூன்று வருடங்களில் எவ்வளவோ வேலைகளைச் செய்திருந்தார். திருச்சியில் வக்கீலாக இருந்தபோது பல பெரிய மனிதர்கள், அரசியல் தலைவர்கள் இவர்களோடு நல்ல அறிமுகம் பெற்றிருந்த அவர் இந்த வேலைகளைச் செய்ததில் வியப்பில்லை. ஊரார் தனி மதிப்புடன் அவரைப் போற்றி வந்தனர். தபாலாபீஸ், செகண்டரி பள்ளிக்கூடம், மின்சார வசதி முதலியவைகளைக் கீழத்தேரூர் அவரால் பெற்றது. பொதுத் தொண்டுகளுடன் இவ்வாறு அமைதியாகக் கழிந்து வந்தது அவருடைய வாழ்வு.

பி.ஏ. பாஸ் செய்ததும் ஊரோடு நிலபுலன்களை மேற்பார்த்துக்கொண்டு இருக்கும்படியாகச் சொன்னார் வைத்தியநாதன். ரகுநாதன் எங்கேயாவது வேலை பார்க்க விரும்பினான். வைத்தியநாதன் எவ்வளவோ மறுத்துச் சொல்லியும் அவன் கேட்கவில்லை. கடைசியில் பம்பாயில் தென்னிந்தியர் ஹைஸ்கூல் ஒன்றிற்கு 'அஸிஸ்டெண்டாக' வந்து சேர்ந்தான். மாலதிக்கும் அவனுக்கும் கலியாணத்தை முடித்து ஊரோடு கட்டிப்போட்டு விடலாம் என்று எண்ணிய வைத்தியநாதனுக்குப் பெரிய ஏமாற்றமாகப் போயிற்று. அதற்கு மேல் மறுத்துச் சொல்ல அவருக்குத் தெரியவில்லை. 'சரி! போகட்டும் அவன் போக்கில் விட்டுப் பிடிப்போம்' என்று இருந்துவிட்டார்.

மாமாவின் வேண்டுகோளைத் தவிர்க்கமுடியாமல் விடுமுறைகளுக்கு வந்து போய்க்கொண்டிருந்தான் ரகுநாதன். இப்போது மாலதிக்கு வயது பதினைந்து. கொடிபோல வளர்ந்திருந்தாள். காலம் தான் வளர்ந்தது போலவே அவள் உடலும் அழகின் பொலிவு பெற்று வளருமாறு செய்திருந்தது. குதிகால்வரை தொங்கும் சாட்டைப் பின்னலுடன், அதன் நுனியில் குஞ்சலங்கள் ஆட, அவள் நடந்து செல்லும் காட்சி ஒரு பெரிய காவியம். காதில் புதிதாக அழகான முத்துச் சிமிக்கிகளை வாங்கி அணியச் செய்திருந்தார் தந்தை. நீண்ட நாசியும் அதன் கீழ் ரோஜா இதழ்களின் விரிவும், மாம்பழக் கன்னங்களுமாக - கன்னிப்பருவத்து அழகு பூர்ணமுற்று விளங்கின.

கண்களில் ஏதோ ஒரு புதிய குறுகுறுப்பு. அந்தக் குறு குறுப்பை வெளியேற விட்டுவிடாது காப்பது போன்ற, கட்டும் வரிசையும் குலையாத இமையும் புருவமும் தனிச் சோபை பெற்றிருந்தன. வாய்க்கு வாய் 'ஏண்டா ரகு கலியாணத்தை வருகிற வைகாசியில் வைத்துக் கொள்வோமாடா?' என்று கேட்டுக் கொண்டிருந்தார் வைத்தியநாதன். அப்படிக் கேட்ட ஒரு சந்தர்ப்பத்திலேதான் பிரைவேட்டாக எம்.ஏ. எழுதப்போவதாகவும் அதற்குப் படிக்கவேண்டுமென்றும் கூறிவைத்தான் ரகுநாதன். அதற்கு மேல் வைத்தியநாதனும்அவனைக் கிண்டிக் கிளறி வற்புறுத்தவில்லை. "கிணற்று நீரை ஆற்று வெள்ளமா அடித்துக்கொண்டு போகப்போகிறது. தானாகச் சம்மதிக்கிறான்!" என்று இருந்துவிட்டார். ஆனால், ஒன்றுமட்டும் அவருக்குப் புரியாமலே இருந்தது. தங்கப்பதுமைபோல வளைய வளைய வரும் மாலதியை ஏன் பாராமுகமாக இருக்கிறான் ரகு? இந்தப் புதிரை விடுவிக்க அவரால் முடியவில்லை. இதற்குள் ஒருவழியாக விடுமுறை முடிந்து ரகுநாதன் பம்பாய் கிளம்பினான். மாமாவும் மாலதியும் ஸ்டேஷனுக்கு வந்திருந்தார்கள். நூறு தரமாவது உடம்பைக் கவனித்துக் கொள்ளும்படியாகச் சொல்லியிருப்பார் மாமா. கண்ணீர்த் துளிகள் உருண்டு திரண்டு கொண்டிருந்த மாலதியின் கூரிய விழிகளின் கோணக்கடை நோக்கு ரகுநாதன் நெஞ்சை ஊடுருவ முயன்று கொண்டிருந்தது. வண்டி ஒரு முறை கூவிவிட்டுக் கிளம்பியது! ரகுநாதனின் கண்களும் அவள் பார்வையைச் சந்தித்தன. ஆனால், அந்தச் சந்திப்பில் அவள் மேல் அவனுக்கு அனுதாபம் ஏற்பட்டதேயன்றி, ஆர்வமில்லை, அவாவில்லை. நூற்றி ஒன்றாவது தடவையாக மாமா உடம்பைக் கவனித்துக் கொள்ளும்படியும் அடிக்கடி கடிதம் போடும்படியும் சொல்லி விடை கொடுத்தார். வண்டித்தொடர் வேகமாக மறைந்துகொண்டே வந்தது, வாழ்வின் நியதித் தொடர்போல.

தாதரில் இறங்கிய ரகுநாதனை ஒரு ஜோடி மலர்விழிகள் தேடிக் கண்டு கொண்டன. வண்டியிலிருந்து இறங்கிய அவனைக் கைலாகு கொடுத்து இறக்கினாள் அந்த யுவதி. "சரோ! நீ ஸ்டேஷனுக்கு வருவாய் என்று நான் எதிர்பார்க்கவே இல்லை" என்றான் ரகுநாதன். "அப்படியானால் இன்று வருகிறேன் என்று ஏன் கடிதம் போட்டீர்களாம்?" குறும்புப் புன்னகை ஒன்றை இதழ்க் கடையிலே நெளிய விட்டுக் கொண்டே கேட்டாள் அந்த யுவதி. "சூரியன் மலர்ந்துவிடு என்று சொல்லி அனுப்பியா தாமரை மலர்கிறது?" என்று பதிலளித்தவாறே அவள் தயாராகக் கொண்டுவந்து நிறுத்தியிருந்த காரில் ஏறினான் ரகுநாதன். அவள் டிரைவர் ஸ்தானத்தில் அமர்ந்துகொண்டாள். ஸ்டியரிங்கைப் பிடித்து வளைத்தவாறே "ஏது பெரிய கவியாகி விடுவீர்கள் போலிருக்கிறதே?" என்றாள் அவள். அதன் பிறகு ஏதேதோ பேசினார்கள். வேகமாகத் தார் ரோட்டைக் கடந்து செல்லும் காரைப்போலத் தொடர்ந்து மேற்சென்று கொண்டிருந்தது அவர்கள் பேச்சு. இது காதலர்கள் விஷயம்! இதில் இதற்கு மேல் தலையிடுவது நியாயமில்லை. எனவே, கதாசிரியனாகிய என்மேல் நேயர்கள் கோபித்துக் கொள்ளக்கூடாது. உங்கள் கோபத்தைப் பொறுத்துக்

கொண்டாலும் பொறுத்துக் கொள்ளலாம். ரகுவும் சரோஜாவும் இப்படி நாகரிகமில்லாமல் நடந்து கொண்டதற்காக என்னைக் கோபித்துக்கொண்டால் அது பொறுத்துக்கொள்ள முடியாதது. ஆகையால், இப்போது இந்த நிலையில் அவர்களை இப்படியே விட்டு விடுகிறேன்.

ரகுநாதன் பம்பாய் வந்து மூன்று, நான்கு மாதங்கள் ஆகிவிட்டன. மாமாவிடமிருந்து வாரம் தவறாமல் கடிதம் வந்துவிடும். கலியாண விஷயத்தைப் பற்றியும் குறிப்பிடத் தவறியிருக்காது. பதில் ஏதாவது எழுத வேண்டும் என்று நினைத்துக் கடிதத்தை எடுப்பான் ரகு; உடனே ஏதாவது நினைவில் அப்புறம் பார்த்துக் கொள்ளலாம் என்று இருந்துவிடுவான். மலபார்ஹில்ஸ் பார்க்கில் சரோஜாவுடன் சுற்றி வருவதற்கே அவனுக்கு நேரம் காண்பதில்லை. இந்த அசட்டையில் மூன்று மாதங்களாக மாமா எழுதியிருந்த கடிதங்களுக்குப் பதிலே போடவில்லை அவன். அந்த நிலையில்தான் அன்று அக்கடிதம் வந்தது. ரகுநாதன் துணிவடைந்தான். இனியும் மாமாவை ஏமாற்றுவதில் பயனில்லை. கலியாண விஷயமாக அவருக்குத் தெளிவாக எழுதிவிட வேண்டும். சரோஜாவுக்குத் தன் உள்ளத்தை ஒப்படைத்திருக்கும் செய்தியை மாமாவுக்கு எழுதிவிட வேண்டுமென்றுதான் அவன் முடிவு செய்தான். ஆனால், உடனடியாக என்னவோ எழுதத் தோன்றவில்லை. சோர்வுடன் ஈஸிசேரில் சாய்ந்து கொண்டிருந்தான். அப்போது 'வாய்ஸ் ஆப் இந்தியா' ஆசிரியர் சோமநாத சர்மாவின் கார் டிரைவர் உள்ளே நுழைந்தான். "ஐயா உங்களைக் கையோடு அழைத்து வரச் சொன்னார்கள்! ஏதோ முக்கிய விஷயமாகப் பேசவேண்டுமாம், ஆபீஸில்தான் இருக்கிறார்கள் - என்று கூறி முடித்துவிட்டு நின்றான் வந்தவன். ரகுநாதன் கடிதத்தை மடித்து உள்ளே வைத்துவிட்டு உடைமாற்றிக்கொண்டு கிளம்பினான். அவன் முகத்தோற்றத்தில் பலவித உணர்ச்சிகளுக்கு ஒரே நேரத்தில் அவன் ஆட்பட்டிருக்கவேண்டும் என்பது மட்டும் நன்றாகத் தெரிந்தது. "சரோஜாவின் தகப்பனார் இப்படித் திடீரென்று கூப்பிடுவதற்குக் காரணம்? அவள் ஏதாவது சொல்லி அப்பாவைக் கனிய வைத்திருக்க வேண்டும்... அல்லது கண்டித்து அனுப்பத்தான் கூப்பிட்டிருக்கிறாரோ?' சிந்தனை, காரின் வேகத்தோடு போட்டியிடுவதுபோல வளர்ந்து கொண்டிருந்தது. கார் 'வாய்ஸ் ஆப் இந்தியா' காரியாலயத்தின் வாசலில் வந்து நின்றது. பம்பாயிலிருந்து வெளிவரும் ஆங்கிலத் தினசரிகளில் முன்னணி இடத்தைப் பெற்றது வாய்ஸ் ஆப் இந்தியா. அதன் காரியாலயமும் முன்னணிப் பெருமைக்கு ஏற்றதுபோல வானளாவ அமைந்திருந்தது. டாக்டர் எஸ்.என்.சர்மா எம்.ஏ.பி.எச்டி. என்ற போர்டு தொங்கிக் கொண்டிருந்த ஓர் விசாலமான அறை வாசலில் வந்து நின்றான் ரகுநாதன். வெளியே இருந்த பியூனிடம் சொல்லி அனுப்பினான். .. உள்ளே சென்ற பியூனுடன் சர்மாவும் வந்தார்.

"வா! வா. உன்னைத்தான் எதிர்பார்த்துக் கொண்டிருந்தேன் ரகு. டிரைவரைக் காருடன் அனுப்பியிருந்தேனே! வந்தானோ?..."

"ஆமாம்! அவன் வந்து சொன்னான். உடனே வந்தேன். முக்கியமான விஷயமாகப் பேச வேண்டுமென்று சொன்னதாகச் சொன்னான்..." ரகு நிறுத்தினான்.

சர்மாவின் முகத்தில் என்றுமில்லாத குறுகுறுப்பான புன்னகை தவழக் கண்டான் ரகுநாதன். இருவரும் நாற்காலிகளில் எதிரும் புதிருமாக அமர்ந்தனர்.

"ஆமாம் மிஸ்டர் ரகுநாதன்! உங்களை என் பெண்ணுக்கு டியூஷன் மட்டும்தானே சொல்லிக் கொடுக்கச் சொன்னேன். அதற்கு ஏற்ற பீஸும் கொடுத்துவிட்டேன். நீர் என்னைக் கேட்காமலே என் பெண்ணின் மனத்தைத் திருடிக் கொண்டது பெரிய குற்றம் அல்லவா?" அதே குறுகுறுத்த புன்னகையுடன் சர்மா பேசினார். ரகுநாதன் ஆடு திருடின கள்ளன் போல விழித்துக் கொண்டிருந்தான்.

"எல்லாம் சரோஜா சொன்னாள்! போகிறது; நீர் ஒரு புதிய பில்ஹணீயம் நடத்திவிட்டீர். இந்தப் பள்ளிக்கூடத்து வேலைக்கு ஒரு முழுக்குப்போட்டுவிட்டு இங்கே என்னோடு வந்து விடும். அடுத்த மாதம் சரோஜா பி.ஏ. எழுதியானதும் உங்கள் திருமணத்தை முடித்துவிடலாமென்றிருக்கிறேன்! ஓய்! சும்மா கூச்சப் படாதேயும்! பேசுங்கள், மாப்பிள்ளை ஸார்!" - சர்மா கிண்டலும் கேலியுமாக ரகுநாதனைத் திகைக்க வைத்தார். யாரோ தன் தலையில் அமுதத்தை மழையாகப் பொழிந்தது போலிருந்தது ரகுநாதனுக்கு. சோமநாதசர்மா இவ்வளவு பரந்த உள்ளம் உடைத்தவராக இருப்பாரென்று ரகுநாதன் கனவில்கூட நினைத்திருக்க மாட்டான். எதிர்பாராத மகிழ்ச்சியில் அதிர்ச்சியடைந்து, சிலைபோலக் குனிந்த தலை நிமிராமல் உட்கார்ந்து கொண்டிருந்த அவனைப் பார்த்து, சர்மாவே மீண்டும் பேசினார். பேச்சில் அதே குறுகுறுப்பும் கேலியும் இருந்தது.

"சரி! மாப்பிள்ளை. இப்பொழுது நீர் போய் வரலாம். எனக்கு ஒரு முக்கியமான தலையங்கம் எழுத வேண்டியிருக்கிறது. தவிர சரோவும் வீட்டில் உம்மைத் தேடிப் போயிருக்கலாம்! அவளுடைய ஏமாற்றத்தை நான் சம்பாதித்துக் கொள்வானேன்?... கூடிய சீக்கிரம் இப்படி நீங்கள் ஒருவரை ஒருவர் தேடிப் போகாதபடி பார்த்துக்கொள்ள வழி செய்துவிடுகிறேன்." கூறியவாறு சர்மா வாய்விட்டுச் சிரித்தார். கூச்சமும் நாணமும் மேலிட்டதனால் அவர் முகத்தை ஏறிட்டுப் பார்க்காமலே விடைபெற்றுக் கொண்டான் ரகுநாதன்.

வீட்டிற்கு வந்த ரகுநாதன் திடீர் மகிழ்ச்சியால் பித்தனாகி விடுவான் போலிருந்தது. டிராயரைத் திறந்த அவன் அவசரமாக அதனுள் திணித்திருந்த கீழத் தேரூரிலிருந்து வந்த கடிதம் மேலாகக் கிடக்கக் கண்டான்.

மீண்டும் ஒரு முறை அதைப் படித்த பின் அவன் மனம் ஒரு பெரிய போராட்டத்தில் இறங்கியது. பிள்ளைப் பருவத்திலிருந்து தாயாகவும் தந்தையாகவும் இருந்த மாமாவின் வேண்டுகோளுக்கு என்ன விடை சொல்வது? சரோஜாவின் உயிர்க் காதல், அவள் தந்தை சர்மாவின் பரந்த அன்பு, 'வாய்ஸ் ஆப் இந்தியா' வின் துணையாசிரியர் பதவி. இவ்வளவும் அவனுக்காக இங்கே காத்திருந்தன. இந்த வாழ்க்கை எதிர்காலக் கனவாக அவனிடம் ஊறிப் போய் இருந்தது. இதை விட்டுவிட்டுக் கீழத் தேரூரின் இருட்டு நிறைந்த சூனிய வாழ்வை நினைத்தால் அவனுக்கு எங்கோ மயானத்திற்குப் போவது போல இருந்தது.

மாமா நன்றி செலுத்தத் தகுந்தவர்தான். அதற்காகப் பேரும் புகழுமாக வாழும் இந்த பம்பாய் வாழ்வும் அகில உலகப் புகழ் பெற்ற ஒரு பத்திரிகையின் உதவி ஆசிரியர் பதவியும் பலியிடப் படத்தான் வேண்டுமா? அப்படியே எல்லாம் செய்துவிட்டாலும், சரோவை மறந்து அவனும், அவனை மறந்து சரோவும் வாழ முடியாது என்ற நிலை இருக்கும்போது, அவன் எப்படி மாலதியை எண்ண முடியும்? ரகு சிந்தித்துக் கொண்டே இருந்தான்.

இறுதியில் அவன் மனம் கல்லாகி விட்டது. நன்றி உணர்ச்சி, உறவு முதலிய யாவும் இறுகி மரத்துப்போன நிலையில் அவன் தன்னை இருக்கச் செய்துகொண்டான். அதோடு இருந்திருந்தாலும் பரவாயில்லை. தன்னைப் பற்றி தன் மாமாவும் கீழத் தேரூரும் சற்றும் நினைவே கொள்ள முடியாதபடி ஏதாவது செய்ய விரும்பினான். எவ்வளவோ பெரிய பெரிய திட்டங்கள் அவன் மனத்தில் உருவாயின. இறுதியில் ஏதோ முடிவிற்கு வந்தவன்போல் தபாலாபீஸிலிருந்து தந்தி பாரம் ஒன்றை வாங்கி வருமாறு கீழே இருந்த பையன் ஒருவனை அனுப்பினான். பையன் தந்தி பாரத்துடன் வந்தான்.

தந்தி பாரத்தில் ரகு எழுதியவை இவைதான். தன்னுடைய நண்பன் ஒருவன் கொடுத்திருப்பதாக அத்தந்தியை அமைத்து, 'ஒரு வாரத்திற்கு முன்பு தாதரிலிருந்து வரும் வழியில் மின்சார ரயில் விபத்தில் சிக்கி, ரகு இறந்து விட்டான்' என்பதாய்ச் செய்தியை நண்பனுக்காக அனுதாபப்பட்டு எழுதுவதுபோல எழுதிக்கொண்டான். இதை எழுதும்போது அவன் கைகள் நடுங்கின. எழுத்தில் தன்னைக் கொன்று கொண்டாலும் நடுக்கம் நடுக்கம்தானே? இதிலுள்ள அசட்டுத்தனத்தைப்பற்றிச் சிந்திக்க நேரமில்லை அவனுக்கு. எவ்வளவோ நாள் எப்படியெல்லாமோ இருக்கும் மனநிலைகள் சூழ்நிலைக்கு ஏற்ப வருகின்ற முடிவுகளுக்கு அடி பணிந்துவிடுகிறது.

ரகுநாதன் மட்டும் இதற்கு விதிவிலக்கா என்ன? தந்தியை நண்பன் கொடுத்திருப்ப தாக அமைத்துள்ளமையினால், அந்த நண்பன் எந்தப் போஸ்டாபீஸிலிருந்து அதைக் கொடுக்க முடியுமோ, அங்கிருந்து கொடுப்பதற்காக எழுந்தான் ரகு.

மின்சார ரயிலில் ஏறிய அவன் தந்தி பாரம், பணம் எல்லாம் சரியாக இருக்கிறதா என்று ஒரு முறை சரி பார்த்துக் கொண்டான். இரயில் வேகமாகச் சென்று கொண்டிருந்தது. இன்னும் சற்று நேரத்தில் அவன் குறிப்பிட்ட போஸ்டாபீஸ் உள்ள இடத்தில் இறங்கிக் 'காரியத்தை' முடித்து விடுவான்... அதற்குப் பின் ஏதோ கீழத் தேரூரில் நிகழும் நிகழ்ச்சிகளைப் பற்றிய கற்பனைகள், இங்கே தானும் சரோவும்... இப்படி ஓடிக்கொண்டிருந்தது அவனுடைய நினைவு.

சடசடவென்று ஆயிரம் பேரிடிகள் இடித்தாற்போல ஒரு பேரோசை. ஒரு பெரிய விபத்து. பலர் தூக்கி எறியப்பட்டனர். முன் ஸீட்டில் அமர்ந்திருந்த ரகு சரியாக இரண்டு இரயில்களுக்கும் நடுவே தூக்கி வீழ்த்தப்பட்டான்.

இரும்புச் சட்டங்களுக்கு இடையே நொறுங்கிக் கொண்டிருந்தது அவன் உடல். மோதிய வேகத்தில் அதிர்ச்சி தாங்காது எதிர்ப்புறமாக வந்த வண்டி ஒன்று சரியாக

*அவனை நோக்கிக் குடை சாய்ந்து கொண்டிருந்தது. சட்டைப் பையிலிருந்து பிதுங்கி வெளியே தெரிந்தது அவன் எழுதிய தந்தி பாரம். தான் சுமந்திருக்கும் செய்திகளை உண்மையாக்கிய மகிழ்ச்சியில் அவனைப் பார்த்து நகைப்பது போலிருந்தது அதன் தோற்றம்.*

*மூன்று நாட்களுக்குப் பிறகு ஆஸ்பத்திரியிலிருந்து வெளியேறிய ரகுநாதனின் நண்பன் தந்தி பாரத்துடன் அதே போஸ்டாபீஸை நோக்கிப் போய்க் கொண்டிருந்தான். அந்தப் பாரத்தில் எழுதிய செய்திகள் ரகுநாதன் ஏற்கனவே எழுதியபடி எழுத்துக்கு எழுத்து வித்தியாசமின்றி அமைந்திருந்தன. சோமநாத சர்மாவுக்கோ சரோஜாவுக்கோ இதுவரை விஷயம் தெரியாது. தந்தியை முன் அனுப்பிவிட்டு நேரில் ஆறுதல் அளிக்க அடுத்த வண்டியில் கீழத் தேருக்குப் புறப்பட்டான் ரகுவின் நண்பன்.*

(1978-க்கு முன்)



## 135. மல்லிகையும் மருக்கொழுந்தும்

'**வை**கறைப் பனியின் பூங்காற்று மெல்ல வீசிக்கொண்டிருந்தது. கீழ் வானம் இளஞ்சிவப்பில் முழுகி நீராடி மேலெழுந்தது போல விளங்கிற்று. காலை நேரத்தின் சக்தி அற்புதமானதாகத் தோன்றியது ரங்கநாதனுக்கு. அதுவும் அந்தக் கொள்ளிடங் காவேரிக் கரையில் நேரமும் இடமும் சேர்ந்து அவன் மனத்தில் மன நிம்மதியையும் சந்துஷ்டியையும் உண்டாக்குவதை நாள்தோறும் அவன் உணர்ந்துதான் இருந்தான். காலை நேரத்தில் பூக்கள் மலருவதுபோல மனங்களும் நாள்தோறும் மலரும்படியான மகத்துவம் இருக்க வேண்டுமென்று அவனுக்குத் தோன்றியது. அவன் மனம், காலத்தின் சுவடுகளில், நாட்கிளையின் அரும்பு போன்ற காலை நேரத்தைப் பற்றி இப்படி எண்ணுவதற்குக் காரணம் இருக்கத்தான் இருந்தது. அந்தக் காரணம்தான் அவனுடைய சொந்த வாழ்க்கை அனுபவம்.

மார்கழி மாதத்துப் பனியில் இப்படி அவனை நாள் தோறும் கொள்ளிடக் கரைக்கு வந்துபோகச் செய்தது ஜானகியால் வந்த வினை என்றுதான் சொல்ல வேண்டும். அவன் மனமும் அவளைப் பொறுத்த வரையில் அப்படிப்பட்ட ஒரு தீர்மானத்திற்குத்தான் வந்திருந்தது. இவ்வளவு ஏன்? அவனை ஏகாங்கியாக்கிவிட்டுத் துணிந்து சென்ற நெஞ்சுரம் அவளைத் தவிர வேறு யாருக்கு இருக்க முடியும்?

அன்று தன் தகப்பனார் ஜகந்நாதாச்சாரியார், தானும் ஜானகியும் காதல் மணம் செய்து கொள்ளப் போவதை மறுத்து ஆத்திரத்தோடு பேசிய பேச்சு இப்போதுகூட அவன் காதுகளில் ஒலித்துக்கொண்டிருக்கிறார்போல இருந்தது. ஆனால், ஒரே ஒரு வேறுபாடு. அன்று அந்தப் பேச்சு, காதல் புரியும் இளம் ஆண் பெண்களைப் பயமுறுத்துவதையே கடமையாகக் கொண்ட தகப்பனார் வர்க்கத்தின் கொடிய சொற்களாக அவன் காதில் விழுந்தது. இன்றோ...? தகப்பனாரின் அந்த வார்த்தைகளில் விவரித்து உரைக்கத்தக்க அனுபவ உண்மைகள் கலந்திருப்பதாக அவனுக்கே தோன்றுகிறது. அன்று அவரை எதிர்த்தும் இரைந்து பேசியும் தான் கொண்டுவிட்டதாகக் கருதியிருந்த வெற்றி மனக்கோட்டை இன்று தனக்கே முழுத் தோல்வியாக இடிந்து போனதை அவன் காண்கிறான்.

ஜானகி இப்படி மாறுவாள் என்று கனவில்கூட அவன் நினைத்தது இல்லை. 'பி.ஏ. படித்த ஒரு பெண்ணிடம் காதலும் பெண்மையும் இருப்பதைவிடச் சுதந்திர உணர்ச்சியும், அடங்காத இயல்பும் இவ்வளவு தூரம் அளவு கடந்து இருக்கும் என்று அன்றே தோன்றியிருந்தால் எவ்வளவு நன்றாக இருந்திருக்கும்?' என்று இப்போது அவன் எண்ணினான். "ரோஜாப் பூ அதன் செடியில் மலராக இருக்கும்போது காட்சிக்கும் நாசிக்கும் அளவுக்கு உட்பட்ட கவர்ச்சியைத் தருகின்றது. ஆனால், அதே

ரோஜாப் பூவை அத்தராக மாற்றி நுகரும்போது மனத்தை வரம்பு கடந்த போதைக்கு ஆளாக்கி விடுகிறதல்லவா? படித்த பெண்களின் காதலும், காதலுக்குப் பின்னுள்ள வாழ்வும் அத்தகையதுதான் போலும்." இந்தத் தத்துவ உணர்ச்சி அவனுக்கு இன்று ஏற்படுகின்றது.

அன்று காலேஜில் படித்தபோது மாலை நேரத்தில் எத்தனையோ நாட்கள் அவன் ஜானகியோடு அதே காவேரிக் கரைக்கு வந்திருக்கிறான். அப்போது அவள் உள்ளத்தில் மலரின் மென்மையும் அன்பு மணமும் இருப்பது கண்டு அவன் வண்டானான். பால் பொழியும் எண்ணற்ற வெண்ணிலாக்கள் அவர்களை அந்த மணல் வெளியில் எத்தனை எத்தனையோ காதல் பேச்சுக்களைப் பேசச் செய்திருக்கின்றன. சலசலவென்று ஓடும் தண்ணீரின் ஜலதரங்க நாதத்தோடு அவர்களுடைய அளவற்ற ஜோடிச் சிரிப்பொலிகளையும் கேட்டு மகிழ்ந்த இரவுகளும் பல. இப்போதோ, அவை யாவும் வெறும் கனவுகளாயின.

சிந்தனையிலிருந்து விடுபட்ட ரங்கநாதன், நன்றாக விடிந்து விட்டதைக் கண்டு அவசர அவசரமாகக் குளித்து விட்டுப் புறப்பட்டான். அரையிலும் தோளிலும் இருந்த ஈரத் துணிகள் குளிரின் மிகுதியால் உடலை 'வெடவெட' என்று நடுக்க, வடக்கு அடையவளைந்தானை நோக்கி நடந்தான் அவன். சரியாக மணி பத்துக்கு அவன் காலேஜில் இருக்க வேண்டும். அதற்குள் அடுப்புடனே போராடிச் சமையலை முடித்துச் சாப்பிட அன்று நேரம் காணாதுபோல இருந்தது. காலேஜுக்குக் கொஞ்சம் நேரம் தாமதித்துச் சென்றால் அந்த பிரின்ஸிபால் முகத்தைப் பொறித்த அப்பளம் மாதிரிக் கடுகடு என்று வைத்துக்கொண்டு 'புரொபஸர்களுடைய ஸ்டாஃப் ரூம் வாசலில் தயாராக வந்து நின்று கொண்டிருப்பார். இரண்டொரு நாள் தீராத குறையாக அவன் தாமதித்துச் சென்ற குற்றத்திற்காக, முதல் 'பீரியடு' 'லீஷராக' இருந்த அவன் டயம்டேபிளை மாற்றி முதல் பீரியடில் சீனியர் இண்டர் பொயடரி வகுப்பை அவன் தலையில் ஏற்கெனவே சுமத்தியிருந்தார் அவர். ஒன்பதே முக்காலுக்குள் காரியங்களை எல்லாம் முடித்துக்கொண்டு அவன் பஸ் ஸ்டாப்பிற்கு ஓடினால் சில சமயங்களில் பஸ்ஸில் இடம் பிடிப்பதற்குள்ளே தாமதம் ஆகிவிடுகிறது. அன்று தன் ஏகாங்கியான வாழ்க்கையின் நிலையைப் பற்றியும், ஜானகி தன்னை இந்தக் கதிக்கு உள்ளாக்கிச் சென்றதையும் பற்றிய எண்ணங்களினால் பீடிக்கப்பட்டுக் காவேரிக் கரையில் வழக்கத்தை விட அதிக நேரம் தங்கிவிட்டான் அவன்.

## 2

**அ**டுப்பிலே சமையலுக்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்துவிட்டு அன்று நடத்த வேண்டிய லெக்சர்களுக்கு முன்னோட்டமாக ஒருமுறை புஸ்தகங்களைப் புரட்டினான், முதன் முதலாக அவன் கையெடுத்துப் பார்த்த பக்கத்திலேயே, "வாழ்க்கை என்பது இரண்டு கரைகளுக்கு அடங்கி ஓடும் ஓர் ஆறாக இருந்தால் வெள்ளமில்லாத காலத்தில் அதிலுள்ள மேடுபள்ளங்களை முன்பே அறிந்து கொள்ளலாம்; வெள்ளம் வருவதற்கு முன்பும் அறிகுறிகள் தெரியும். ஆனால், வாழ்க்கை கரைகளற்ற அலை பாயும் ஆழ் கடலாக அல்லவா இருக்கிறது? நீர் வற்றவோ, குறையவோ செய்யாத

அந்தக் கடலுக்குள் நுழைந்த பிறகுதான் அதிலுள்ள இன்ப துன்ப அனுபவங்களைப் பிரத்தியட்சமாகத் தெரிந்து கொள்ள முடிகிறது" என்ற பொருளுக்குரிய அந்த ஆங்கிலக் கவிதை ரங்கநாதனின் கண்களில் பட்டது. 'புரொபஸர் ரங்கநாதன் எம்.ஏ.' என்ற திறமைக்கு இருப்பிடமாகிய பெயர் பெற்ற அவன், இந்தப் பாடலை வைத்துக் கொண்டு ஒன்றரை மணி நேரம் மாணவர்கள் பிரம்மிக்கும்படி பேசிவிடமுடியும். ஆனால், இன்று அப்படி முடியாது. வாழ்க் கையைப் பற்றி அந்தப் பாடல் கூறும் கருத்து அவனுடைய சொந்த அனுபவத்தில் மறு பிரதியாக இருந்ததுதான் அதற்குக் காரணம்.

இராமன் பிரிவு தசரதனைத் துன்பங் கொள்ளச் செய்த நிலையைக் கவிகள் நூற்றுக்கணக்கான உவமை உருவகங்களால் வர்ணித்துப் பாடுவதும், மேடைப் பேச்சாளர்கள் அந்தப் பாடல்களில் இரண்டொன்றை வைத்துக்கொண்டே மூன்று மணி நேரம் மூச்சு விடாமல் பேசுவதும் சாத்தியம்தான். ஆனால், தசரதனே அந்தத் துன்பத்தை அப்படி வாய் திறந்து பேசுவதுதான் சாத்தியமில்லை. உண்மைத் துன்பம் என்பது உள்ளத்தோடும் உணர்வுகளோடும் ஒடுங்குவது. அது மென்மையும் தனிமையும் கலந்த முறையில் தன்னில் மட்டும் வெளிப்படும். கொந்தளிக்கும் கடலில் ஒரு சிறு படகை நம்பிக் கரையிலிருந்து துணிவோடு புறப்பட்டுவிட்டது போல ஜானகியின் காதலை நம்பிப் பெற்றோர்களின் உறவை அறுத்துக்கொண்டது எவ்வளவு பெரிய தவறு என்று இப்போது அவனுக்குத் தெரிகிறது. இதே உண்மை அன்று ஜானகியை ரிஜிஸ்தர் கலியாணம் செய்துகொள்ளும் போது சிறிதளவும் மனத்தில் தோன்றாமலிருந்துவிட்டது அவனுக்கு வேடிக்கையாக இருந்தது. இளமை நெஞ்சத்திற்குச் சிந்திப்பதில் வேகம் இருப்பதுபோல மோகத்திற்கு அடிமைப் படுவதிலும் வேகம் இருக்கும் போலும்.

"ஜானகியோடு ரிஜிஸ்தர் மணம் செய்துகொள்ளப்போகும் செய்தி காதில் விழுந்த உடனேயே பரம வைதிகரான ஜகந்நாதாச்சாரியார், "இனி இந்த வீட்டு வாயிற்படியில் காலை வைக்கக்கூடாது. உன் முகத்தில்கூட விழிக்க மாட்டேன். உன் மேல் படிப்பிற்காக என்னிடமிருந்து ஒரு சல்லியும் எதிர்பார்க்கக் கூடாது" - என்று கண்டிப்பாகச் சொல்லிவிட்டார். அவன் தாய் அவனுக்காக எவ்வளவோ பரிந்து பேசியும் பயனில்லாமற் போயிற்று. இவ்வளவிற்கும் தன் மனம் கலங்காமல் துணிவோடு இருக்குமாறு செய்த அவ்வளவு தூரம்அல்லவா, ஜானகி நம்மைக் கவர்ந்து நம் மனத்தில் மோகத்தை விதைத்திருந்தாள்! பி.ஏ. இரண்டாம் வகுப்பில் தேறியிருந்த நாம் காலை மாலை நேரங்களில் ஒரு டியூடோரியல் காலேஜில் டியூடராக இருந்து அப்போதும் ஜானகியோடு வாழ்க்கையை நடத்தினோமே. இதே வீட்டில் அந்தப் புது வாழ்விலிருந்த இன்பம் இப்போது எங்கே போயிற்று? பகல் நேரங்களில் 'எம்.ஏ.' வகுப்பில் காலேஜுக்கு ஆஜராகியும், காலை மாலைகளில் டியூடராகியும் நாம் சம்பாதித்துக் கொண்டே மேல் படிப்புப் படிக்கும் அளவிற்கு அவள் அன்று துணிவைக் கொடுத்திருந்தாள்!"

ஆனால் ... ஆனால் இன்றல்லவா தெரிகிறது. காதல் என்ற அந்தப் புது மணமலர் உதிர்ந்து காய்ந்து போகவும் முடியும் என்ற பயங்கர உண்மை! புத்தம் புதிய வார்ப்பில்

உருவாகிய நாதக் கட்டு மிக்க வெண்கல மணியாக இருந்தது அன்றைய வாழ்க்கை. இன்றோ? அதன் ஒரு பகுதி கீறிப் பிளவுபட்டு விட்டது. இப்போது அதில் பழைய நாத லாவண்யம் இல்லை. அடித்தால் நாராசம்போலக் கடுமையாக ஒலிக்கிறது. வாழ்க்கையின் நாதத்தில் லயசுகம் கெட்டுப்போகும்படி செய்துவிட்ட அந்தச் சம்பவம் கோடை விடுமுறை முடியும் தருணத்தில் நடந்தது. தன்னை ஒரு பொருட்டாக மதிக்காமல் அவள் அப்படி ஏற்பாடு செய்து கொண்டதைக் கூட அவன் பொறுத்து மன்னிக்கத் தயாராக இருந்தான். ரங்கநாதன், காதலைக் கவிகளின் காவியத்தில் படித்தது போலவே தன் வாழ்க்கையிலும் நம்பி எதிர்பார்த்தது அவனுடைய முழுப் பெருங்குற்றம் என்பதை நிரூபித்துவிட்டாள் ஜானகி. சகுந்தலையும் துஷ்யந்தனும், சாருதத்தனும் வசந்த சேனையும், ரோமியோவும் ஜூலியட்டுமாக, ரங்கநாதனையும் ஜானகியையும் எதிர்காலத்தில் அவன் எண்ணிப் பார்த்து மயங்கிவிட்டது அவளுடைய குற்றமில்லை; தன் குற்றம்தான் என்பதை ரங்கநாதன் புரிந்து கொண்டான். அதை அவனுக்குப் புரிய வைத்த நிகழ்ச்சி!...

## 3

**கோ**டை விடுமுறை முடிவதற்கு இன்னும் பதினைந்துநாட்களே சரியாக இருந்தன. 'குற்றாலத்தில் நல்ல 'சீஸன்' ஆரம்பமாகியிருக்கிறது' என்று அன்றைய காலைப் பத்திரிகையில் தான் படித்ததைச் சாப்பிடும்போது ஜானகியிடம் ரங்கநாதன் மகிழ்ச்சியோடு கூறினான். 'குற்றாலம்' என்று கூறினவுடனே வழக்கமாக அவள் காட்டும் ஆவலுக்கு மாறாக அன்று அசுவாரஸ்யமான மௌனத்துடன் இருந்துவிட்டாள். இரண்டோர் நாட்களாகவே ஜானகி தன்னோடு அதிகம் பேசாமல் இருப்பதையும், ஏதோ பறிகொடுக்க முடியாத - பறிகொடுக்கக் கூடாத - ஒன்றைத் தான் பறிகொடுத்து விட்டதைப்போல அடிக்கடி ஏங்கிப் பெருமூச்சு விடுவதையும் அவன் கண்டிருந்தான். அவள் சாதாரணமாகத் தன் மனைவி என்ற அளவிற்கு மட்டும் ரங்கநாதன் அவளைக் குறைவான மதிப்பீடு செய்ததில்லை. "பி.ஏ.வரை படித்த பெண், தன் ஆருயிர்க் காதலி" - என்ற பெருமிதத்தை அவள் வரையில் அவன் கொண்டிருந்ததனால் "இரண்டோர் நாளாக அவள் இப்படி இருப்பதற்குக் காரணம் என்ன?" - என்று வெளிப்படையாக அவளை வாய்விட்டுக் கேட்க விரும்பவில்லை. குற்றாலத்திற்குப் புறப்படும் ஆவலைச் சொல்லியாவது அவளது இந்தப் 'புதிர் நிலையை' விடுவிக்க முயன்றுவிடலாம் என்று அவன் முடிவு செய்திருந்ததும் ஏமாற்றத்தையே அளித்தது. அவள் அதே ஏக்கமும் மௌனமும் திகழவே இருந்தாள். ரங்கநாதன் திகைத்தான். 'துயரம் படிந்துள்ள அவள் நிலையின் காரணம் என்ன சூட்சுமத்தை உண்டுபண்ணி விடமுடியும்?' அவனுக்கு ஒன்றும் புரியவில்லை. "தனக்கு அன்புடையவர்களை நெஞ்சு கலங்கவைக்கும் சக்தி மௌனத்திற்கு எவ்வளவு தூரம் இருக்கின்றது!" என்று சிந்தித்து ஏதும் தெளிவாகாமல் மயங்கினான் ரங்கநாதன்.

சாப்பாடு முடிந்ததும், விடுமுறையானாலும் காலேஜ் வரை சென்று வரவேண்டிய காரியம் அன்று அவனுக்கு இருந்தது. டிரெஸ் செய்துகொண்டு காலேஜுக்குப் புறப்பட வாசற்படியில் காலை வைத்த ரங்கநாதன் எதிரே தபால்காரன் கவருடன் வருவதைக்

கண்டு அப்படியே நின்று கொண்டான். ஜானகியின் பேருக்கு வந்திருந்த அந்தக் கவரை வாங்கி உறையைக் கவனித்தபோது அது அவனுடைய வியப்பை மேலும் வளரச் செய்தது. பெண்கள் கல்லூரி ஒன்றின் பிரின்ஸிபாலிடமிருந்து வந்திருந்தது அந்தக் கவர். 'அதை அங்கேயே உடைத்துப் பார்க்க வேண்டும்' என்ற ஆசை அடக்க முடியாமல் எழுந்தும்கூடச் சட்டைப் பையிலே வைத்துக்கொண்டு காலேஜுக்குப் புறப்பட்டுவிட்டான் அவன்.

'ஜானகியின் அந்த ஏக்கங் கலந்த மௌனப் புதிரை விடுவிக்கும் உண்மை ஏதாயினும் இந்தக் கவரில் இருக்காதா?' என்ற ஆவலோடு தான் ரங்கநாதன் அந்தக் கவரைக் கையோடு கொண்டு போனான். வேறு தவறான நோக்கம் எதுவும் அவனுக்குக் கிடையாது. பின்னால் அவள் அதையும் ஒரு குற்றச்சாட்டாக அவன் மேல் சாட்டியபோதுதானே அதை அவன் தெரிந்துகொள்ள முடிந்தது?

காலேஜுக்கு வந்த காரியம் பிரின்ஸ்பாலைச் சந்தித்த சற்று நேரத்திற்கெல்லாம் முடிந்துவிட்டது. வந்த காரியம் முடிந்ததும் அங்கேயே தனியாக ஓரிடத்தில் அமர்ந்து ஜானகிக்கு வந்திருந்த அந்தக் கவரை ரங்கநாதன் உடைத்தான். ஏதோ ஒரு பெரிய மறைந்த உண்மையைப் புரிய வைத்துக்கொள்ள முயலும் ஆராய்ச்சியாளனை ஒத்திருந்தது துடிதுடிக்கும் அவன் மனநிலை.

கவருக்குள் இருந்தது அவன் எதிர்பார்த்தபடியே, மிகவும் வியப்பிற்குரிய செய்திதான். அவன் கனவில்கூட எதிர்பார்த்திராதது அது! 'அப்ளிகேஷன்' கூட அவனைக் கேட்காமலே போட்டு விட்டாள். அவளுடைய அப்ளிகேஷனை ஏற்றுக் கொண்டு லெக்சரராக ஆர்டர் அனுப்பியிருந்தாள் பிரின்ஸிபால் அம்மாள். ஒரு வாரத்திற்கு முன் மாலையில் சாவகாசமாக அன்றைய 'ஹிந்து' பத்திரிகையைப் புரட்டினபோது 'எஜுகேஷனல் வாண்டட்' காலத்தில் ஒரு சிறு பகுதி கத்திரிக்கப்பட்டிருந்ததன் காரணம் இப்போது ரங்கநாதனுக்கு நினைவு வந்தது.

'எனக்குச் சிறிதும் அறிவியாமல் அவள் இவ்வளவு பெரிய காரியத்தை ரகஸ்யமாகச் செய்வானேன்? ஜானகி லெக்சரராகிச் சம்பாதிக்க வேண்டும் என்று என்ன குறை இப்போது நமக்கு வந்துவிட்டது? தனக்கு இப்படிப்பட்ட நோக்கம் இருக்கிறது என்பதனை இது நாள் வரை குறிப்பாகக் கூட அவள் என்னிடம் சொன்னதில்லையே? பி.ஏ. பட்டம் பெற்றபின் இரண்டரை வருடங்களாக இல்லாத ஆசை இப்போது திடுதிப்பென்று இவளுக்கு எப்படி வந்தது? அப்படித்தான் இவள் லெக்சரராகி எந்தப் பெரிய காரியத்தைச் சாதித்துவிடப் போகிறாளாம்? என்னிடம் கூட மறைக்கும் படியான உண்மைகள் இவள் உள்ளத்தில் நிறைந்திருக்கின்றனவே? வரட்டும்.. வீட்டிற்குப் போய்க் கேலி செய்யலாம்.'

வியப்போடு சிரித்துக்கொண்டே ஆர்டரைக் கவருக்குள் செருகிப் பையில் வைத்துக்கொண்டு எழுந்தான் ரங்கநாதன். ஜானகியின் இந்த மௌன வேதனையோடு கூடிய துயர நாடகத்திற்கு இந்த ஆர்டர் ஒன்று மட்டும் முழுக் காரணமாக இருக்க முடியாது. அதன் காரணங்களில் வேண்டுமானால் முக்கியமான ஒன்றாக இதுவும் இருக்கலாம். ஆனால், இதைத் தவிர வேறு சிலவும் உண்மைதான். இவ்வாறு எண்ணிக்

கொண்டே பிரின்ஸிபாலிடம் விடை பெற்றுக் கொண்டு பஸ் ஸ்டாப்பிற்கு வந்தான் ரங்கநாதன்.

## 4

ரங்கநாதன் வீட்டிற்குத் திரும்பி வந்தபோது பகல் ஒரு மணி ஆகியிருந்தது. ஜானகி அவனுடைய அறையிலேயே நாற்காலியில் அமர்ந்து ஒரு புஸ்தகத்தைப் படித்துக் கொண்டிருந்தாள். படிப்பில் மிகுதியான சுவாரஸ்யத்தோடு ஈடுபட்டிருந்த அவள் அவன் வந்ததைக் கூடக் கவனிக்கவில்லை. வேண்டுமென்றே கவனமின்றி இருக்கின்றாளோ என்று எண்ணினான் ரங்கநாதன். அன்று வெள்ளிக்கிழமை. அவள் எண்ணெய் தேய்த்துக் குளித்திருந்ததனால் ஈரக் கூந்தல் மேகக் கூட்டம் போல நாற்காலியின் பின்புறம் அவிழ்ந்து தொங்கிக் கொண்டிருந்தது. வைரத்தோடு, மூக்குத்திகளைக் கழற்றியிருந்தும் பௌர்ணமிச் சந்திரன்போல விளங்கும் அவள் முகத்தில் அமைதி நிறைந்த ஒருவித அழகை ரங்கநாதன் கண்டான். புஸ்தகத்தையே இமையாமல் நோக்கிக் கொண்டிருக்கும் அந்த ஒரு ஜோடி மலர் விழிகள் கூட இன்று அவனுக்குப் பழைய காவியமொன்றின் புதிய பொருள் நயம் போலக் காட்சி அளித்தன.

கனைத்துக்கொண்டே புன்னகை தவழ அறைக்குள் நுழைந்த ரங்கநாதனைத் தலை நிமிர்ந்து பார்க்காவிட்டாலும் ஜானகி பரபரப்போடு எதையோ மறைக்க முயலுபவளைப் போலப் புஸ்தகத்தை மூடினாள். அவள் மூடின வேகத்தில் புஸ்தகத்தில் இருந்து பறந்து வந்த அந்தத் துண்டுக் காகிதம் சொல்லிவைத்தாற்போல ரங்கநாதன் காலருகே வந்து விழுந்தது. அவன் குனிந்து எடுக்க யத்தனிப்பதற்குள் ஜானகி விருட்டென்று நாற்காலியிலிருந்து எழுந்து வந்து அதைக் கையில் எடுத்துக் கொண்டாள். எடுத்ததை மீண்டும் புஸ்தகத்திற்குள்ளேயே வைத்துக் கொண்டு அவள் அறையிலிருந்து வெளியேறிச் சென்றுவிட்டாள். காகிதத்தை எடுத்துப் பார்க்க முடியாவிட்டாலும், அது ‘அந்த ஹிந்துப் பத்திரிகை’ விளம்பரக் ‘கட்டிங்’ என்பதும் அதன் ஓரத்தில் தான் அப்ளிகேஷன் அனுப்பிய தேதியை ஜானகி குறித்திருந்ததையும் ரங்கநாதன் கண்டு கொண்டான்.

அறையை விட்டு வெளியே சென்ற ஜானகியைப் பின்பற்றி அவனும் சமையலறைக்குச் சென்றான். பையிலிருந்து கவரை வெளியே எடுத்துக் கொண்டு, ஒரு விஷமச் சிரிப்புடனே, “ஏதேது! காலேஜ் ‘லெக்சரர்’ ஆவதற்கு ஏற்பாடுகள் எல்லாம் பிரமாதமாக நடக்கிறது போலிருக்கிறதே? ஆமாம்...! இதையெல்லாம் தெரிந்துகொள்வதற்கு ‘அடியேனுக்கு’ உரிமை கிடையாதோ?” என்று கூறியவாறே கவரை அவளிடம் நீட்டினான். அவள், தனக்குத் தெரியாமல் வேலைக்கு மனுச் செய்தது, தன்னிடம் பாராமுகமாக நடந்து கொள்வது, இதையெல்லாம் எண்ணி வருந்துவது ஒரு புறம் இருந்தாலும், மகிழ்ச்சியுடனேயே அவன் அதை அவளிடம் கொடுத்தான். அவளுக்கு காலேஜ் ‘லெக்சரராவதில்’ ஆர்வம் இருக்கும் பட்சத்திலே அதைத் தடுக்க வேண்டும் என்று அவன் நினைத்தது கூட இல்லை.

ஆனால், கவரை வாங்கிக்கொள்ளும்போது எரித்துவிடுவதுபோல அவனை அவள் பார்த்த அந்தச் சினங்கவிந்த பார்வையும், “எம்.ஏ.படித்துக் காலேஜில்

புரொபஸராக இருக்கும் ஒருவருக்கு மற்றவர் கடிதத்தை வாங்கிச் செல்லும் அளவிற்கு உரிமை இருக்கும்போது. இது இருக்கக்கூடாதா என்ன?'' என்று மூன்றாம் மனிதரிடம் வார்த்தைகளை அள்ளிக் கொட்டுவதுபோல 'வெடுக்கென்று' அவள் பேசிய வார்த்தைகளும் அவன் ஆத்திரத்தைச் சட்டென்று தூண்டி விட்டன. ஆயினும் அவன் தன்னை அடக்கிகொண்டான்.

படித்த பெண்களைப் பற்றிய இரண்டு நிலையான உண்மைகளை ரங்கநாதன் நன்கு அறிந்திருந்தான், 'அந்த உண்மையில் ஒன்று நிகழவேண்டிய சந்தர்ப்பம் அப்போது தன் வாழ்விலும் வந்து கொண்டிருக்கிறதோ?' என்று எண்ணிப் பார்க்கும்போது அந்த எண்ணமே கசப்பு நிறைந்த உணர்வை அவனிடம் உண்டாக்கியது. "வாழ்க்கையில் ஈடுபட விரும்பாமல் படிப்பின் வழியிலே துடிதுடிப்போடு முன்னேறும் படித்த பெண் என்றாவது ஒரு நாள் திடீரென்று எதிர்பாராத விதமாக வாழ்க்கையில் வந்து விழுந்துவிடுகிறாள். படிப்பில் தேர்ச்சி பெற்றும் வாழ்வில் ஈடுபட்ட படித்த பெண், என்றாவது அதிலிருந்து சலிப்புக் கொண்டு விலகி விடுகிறாள்.'' - இந்தப் பயங்கர உண்மை ஜானகியின் விஷயத்தில் உண்மையாகவே முடியும் என அன்றைக்கு அவன் நம்பியிருக்கவில்லை. வெறுமனே சந்தேகித்தான் அவ்வளவுதான். ஆனால் இன்றோ?....

அன்று மாலை ஜானகிக்குத் தெரியாமல் அவள் கையிலிருந்து புஸ்தகத்தை எடுத்துப் புரட்டிய ரங்கநாதன் அவளுடைய மௌன ஏக்கத்திற்கும் அந்தப் பெருமூச்சிற்கும் மறைமுகமான இந்த முயற்சிகளுக்கும் என்ன காரணம் என்பதனைப் புரிந்துகொண்டான். "படித்த பெண்களும் சமூகமும்'' என்ற பெயரையுடைய அந்தப் புஸ்தகத்தில் அவள் அடையாளம் செய்திருந்த பகுதிகள் அவளது அப்போதைய நெஞ்சத்தைத் திறந்து அவனுக்குத் தெளிவாகக் காட்டிவிட்டன.

"படித்த பெண்கள் இன்றைய சமூகத்தில், சாறு பிழிந்த கருப்பஞ் சக்கையைப் போலப் பயன்பட்டுத் தங்கள் படிப்பை வீணாக்கி விடுகிறார்கள். 'காதல்' என்பது எத்தனையோ படித்த பெண்களைக் கவர்ந்துவிடுகிறது. அது வெறும் கவர்ச்சி வலை என்பதை அறிந்துகொள்ள முடியாமல் அகப்பட்டுக்கொண்டு வாழ்வை வீணாக்கி விடுவது பல படித்த பெண்களுக்குப் பெரும்பாலும் ஒரு வழக்கமாகிவிட்டது.

"ஒவ்வொரு படித்த பெண்ணும் தன் போன்ற படித்த பெண்களின் சமூகத்தை வளர்க்கும் பணியில் தன்னைப் பங்கு கொள்ளச் செய்யவேண்டும். படித்த பெண் காட்டுப் பூவாக யாரும் காணாமல் நுகராமல் வாழ்விலோ, காதல் வலையிலோ சிக்கி அழிந்துவிடக்கூடாது. அவள் சமூகக் கோவிலின் கோபுர விளக்காகக் குன்றாத ஜோதியுடன் விளங்கவேண்டும்.''

இப்படி எத்தனையோ பகுதிகளை அடையாளமிட்டு வைத்திருந்தாள் ஜானகி. ரங்கநாதனே அந்த வாக்கியங்களைப் படிக்கும்போது அதுவிளைவிக்கும் உருக்கம் மிகுந்த உணர்ச்சியைத் தவிர்க்க முடியவில்லை. ஆனால், ஒருபெண் அதுவும் படித்த அதே அனுபவத்திற்கு ஆளான பெண், அந்த உருக்கத்தில் எவ்வளவு தூரம் ஆழ்ந்து

தோய்ந்து போயிப்பாள்? அவளை அந்த நிலையில் வைத்து ஆழமாகச் சிந்தித்து அவளுடைய மனம் செல்லும் வழியை ஓரளவு ஊகித்துக்கொள்ள ரங்கநாதனால் முடிந்தது. அவள் அவனிடமே விண்டு சொல்லியிருந்தால் உள்ளூர்ப் பெண்கள் காலேஜ் ஒன்றில் ஏற்பாடு செய்து மகிழ்வித்திருப்பான். அவளைப் பிரைவேட்டாக 'எம்.ஏ.'க்குத் தயார் செய்ய வேண்டுமென்று வெகுநாளாக அவனுக்கே இருந்த ஆசையையும் நிறைவேற்றிக் கொள்ளத் தொடங்கியிருப்பான். அப்படியெல்லாம் சொல்லாமல் மறைமுகமாக அவள் செய்து வந்த இம்முயற்சிகளினால், 'எதிர்பாராமல் அன்பு பொண்டு இணைந்ததைப் போலவே இன்றும் எதிர்பாராமலே அவள் தன்னிடமிருந்து அணுஅணுவாக விலகிக் கொண்டிருப்பது' அவன் உணர்வில் மலர்ந்து தெரிந்தது.

இந்தச் சம்பவம் நிகழ்ந்த அன்றிலிருந்து தகராறுகள் வாக்குவாதங்கள் அவர்களுக்குள் சர்வ சாதாரணமாயின. ரங்கநாதன் அவள் நன்மைக்காக என்று எண்ணிச் சொன்னவைகளை எல்லாம் சூழ்ச்சி என்று எண்ணிக்கொண்டாள் ஜானகி. ஜானகி தன்னை அளவுமீறி வெறுப்பது போன்ற ஒரு பொய்யுணர்வைத் தனக்குள் வளர்த்துத் தழும்பேற விட்டுவிட்ட ரங்கநாதனும் சில சமயங்களில் பழைய அன்பையும் பொறுமையும் மீறி ஏதாவது ஆத்திரத்தோடு சொல்லிவிடுவது சகஜமாகிவிட்டது. ஒரு சாதாரணப் புத்தகத்திலுள்ள அச்செழுத்துக்களை நம்பி ஜ்ானகி வழி விலகுவதை அவன் மறைமுகமாக எதிர்ப்பது அவனுடைய வார்த்தைகளாலேயே புலப்பட்டு விட்டது. அவன் தன்னை வேண்டுமென்றே அடக்கி ஒடுக்குவதாக எண்ணிக் கொண்ட அவள் தன் பிடிவாதத்தைப் பெருக்கிக் கொண்டே போனாள்.

இறுதியில் ஒரு நாள் அவன் எதிர்பார்த்த அதுவே நடந்துவிட்டது "என்னைக் கொஞ்ச நாள் என் போக்கில் விடுங்கள்! என்றைக்காவது நம்முடைய இரண்டு மனங்களும் பழையபடி ஒன்றுபட்டால் நாமும் ஒன்று படுவோம். அதுவரை நான் இந்தக் காலேஜ் வேலையை ஏற்றுக்கொண்டு சமூகப் பணி செய்யப்போகிறேன்" - என்று கூறிவிட்டு அவள் அந்த லெக்சரர் வேலையை ஒப்புக்கொள்ளப் புறப்பட்டு விட்டாள். விளையாட்டுப் போல எல்லாம் கனவேகமாக நடந்துவிட்டது. அவளைத் தடுத்து நிறுத்தவோ, எதிர்த்து அடக்கவோ அப்போது ரங்கநாதனால் முடியவில்லை. அவளை அவள் சொன்ன மாதிரி விட்டுவிட்டான். உள்ளூரிலேயே தாய் தந்தையர் இருந்தும் ஜானகியைக் காதல் மணம் செய்துகொண்ட குற்றத்தால் வளர்ந்திருந்த பகை அவனுக்கும் அவர்களுக்கும் இடையே இருந்தது. ஏகாந்த வாழ்க்கை ரங்கநாதனுடைய தலையில் விழுந்தது. விரக்தியோடு அவன் அதை மேற்கொண்டான்.

"படித்த பெண்களின் முதற் காதல், மணமும் கவர்ச்சியும் வெள்ளை நிறமும் உடையதாகிய மல்லிகைப் பூப்போலச் சிறந்ததாக இருந்தாலும், அது ஒரு முறை மலர்ந்தால் அதன்பின் விரைவில் வாடி உதிர்ந்து போகக் கூடியதே. அதன் அழகு, மலர்ச்சி, மணம், வண்ணம் முதலிய யாவும் சாசுவதமானவைகள் அல்ல. குறுகியகால எல்லைக்குள் அழிந்து போகக்கூடியவை. ஆனால், பெற்றோர்கள் கூட்டி வைத்த காதல் தம்பதிகளோ வாழ்க்கை முழுவதும்கூட ஒன்றுபட்டிருக்கிறார்கள். மருக்கொழுந்துச்

செடியில் ஒரு கொழுந்தைக் கிள்ளி விட்டாலும் செடி முழுவதும் மணம் இருந்துகொண்டுதான் இருக்கிறது! மல்லிகையிலோ, அந்த மலரில் தோன்றிய எல்லாம், ஏன்? அந்த மலரே அதோடு அழிந்து போய்விடுகிறது. பெற்றோர் முன்பின் அறியாத ஆண் பெண் உள்ளங்களில் திருமணம் என்ற பெயரால் உண்டாக்கிவிடும் காதல், மருக்கொழுந்துச் செடியைப்போலவே சிதைவுகளுக்குப் பின்னும் நிலைத்த மணத்துடனே தழைத்து வளருகிறது. இளம் நெஞ்சங்கள் தாமாக அடையும் காதல் கவர்ச்சியுடனே விரைவாக வளர்வதுபோலவே விரைவாக அழிந்தும் போய்விடுகிறது. மல்லிகையைப் போலத் தோன்றிமறையும் காதலில் தொடக்க இன்பம் பெரிதாயினும் மருக்கொழுந்துபோல நிலைத்த மணம் இரண்டாவது வகைக் காதலில் மட்டும் தான் இருக்கிறது".

இந்தப் பேருண்மையை அவள் பிரிவுக்குப் பின்னால்தான் புரொபஸர் ரங்கநாதன் உணர்ந்துகொள்ள முடிந்தது! தகப்பனார் என்ன நோக்கத்தோடு அன்று அவனுடைய காதல் மணத்தை எதிர்த்தாரோ அதை அவன் அறிய மாட்டான். ஆனால், அந்த எதிர்ப்பில் மேற்கண்ட மல்லிகைக்கும் மருக்கொழுந்திற்கும் இடையே உள்ள தத்துவ உண்மையும் ஏதோ ஒரு கோடியில் கலந்திருக்க வேண்டும் என்று அவன் அறிந்துவிட்டான் இப்போது!

5

"என்ன ஸார், மணி பத்தாயிற்று! இன்னும் நீங்கள் காலேஜுக்குப் புறப்படத் தயாராகவில்லையா?... அடேடே! இதென்ன? ஈர வேஷ்டியோடு நாற்காலியில் உட்கார்ந்து யோசனை? நன்றாயிருக்கிறது நீர் லெக்சருக்கு நோட்ஸ் எடுக்கிற லட்சணம்!" உள்ளே வந்து இப்படிக் கூறிக் கொண்டே, தன் எதிரே உடன் வேலை பார்க்கும் சமஸ்கிருத புரொபஸர் சாம்பசிவ சர்மா நிற்பதைக் கண்டதும், ரங்கநாதன் சிந்தனையை விட்டு மீண்டும் இந்த உலகிற்கு வந்து சேர்ந்தான்.

சமயலறையில் அடுப்பு இதற்குள் அணைந்துபோயிருந்தது. போகும்போது ஹோட்டலில் சாப்பிட்டுக்கொள்வதைத் தவிர இன்றைக்கு வேறு வழியில்லை என்றெண்ணியவாறே விரைவாக டிரெஸ் செய்துகொண்டு சர்மாவுடன் புறப்பட்டான் ரங்கநாதன்.

ஜானகி அவனை விட்டு உதிர்ந்த மல்லிகைபோலப் பிரிந்து சென்றுவிட்டாலும் காலையில் கொள்ளிடக் கரையிலும், வேறு சில சமயங்களிலும் அவனை நினைவு வடிவாகப் பற்றிக் கொண்டு வருத்தி வருகிறாள்.

அவள் தன் லெக்சரர் வேலையில் கசப்பு ஏற்பட்டு அடுத்தபடியாக ரங்கநாதனைத் தேடி வருகின்றபோதாவது, அவர்கள் வாழ்க்கை மருக்கொழுந்தாக இருக்க வேண்டும். மீண்டும் மலர்ந்து உதிர்ந்து வாடும் மல்லிகையாகுமானால் அவள் வரவை எதிர்பார்த்து ரங்கநாதன் இனிமேல் ஆசையுறவே மாட்டான்.

**(1978-க்கு முன்)**

## 136. ஆனால்...?

'**மு**ல்லை மலர்' இலக்கிய மாதப் பத்திரிகையின் ஆசிரியர் வேங்கடரத்னம் தீர்மானமாக முடிவு செய்துவிட்டார். அவரும்தான் மூன்று வருடங்களாக முயற்சி செய்து பார்க்கிறார். எல்லா ஏற்பாடுகளும் செய்த பின் கைக்கெட்டியது வாய்க் கெட்டாமற் போவது போல் கடைசி சந்தர்ப்பத்தில் பிரயாணம் நின்று போய்விடும். ஆனால், இந்த வருடம் எப்படியும் குற்றாலத்துக்குப் போயே தீருவது என்று உறுதியான தீர்மானத்தோடு பிரயாணத் தேதியும் குறிப்பிட்டு வைத்துவிட்டார் அவர்.

"குற்றாலத்தில் பதினைந்து நாளாவது தங்குவேன். அதுவரை எல்லாம் உம்முடைய பொறுப்பிலேயே ஜாக்கிரதையாக நடத்தும். என்ன ராமசாமி, கவனமாகக் கேளும்! நம்முடைய அடுத்த தொடர் கதையை இந்தப் பதினைந்து நாட்களில் அங்கேயே முடிந்தவரை எழுதிவிடலாம் என்று உத்தேசித்திருக்கிறேன். போன மறுநாளே கதையின் தலைப்பை உமக்கு எழுதிவிடுகிறேன். இந்த மாத இதழிலேயே கடைசிப் பக்கத்தில் விளம்பரம் செய்துவிடும்."

"ஆகட்டும் சார்!" - துணையாசிரியர் ராமசாமி அடக்கமாகப் பதில் கூறினார்.

"வந்து இன்னொரு விஷயம்... இப்போதுதான் நினைவுக்கு வருகிறது. அந்தச் சுப்பராமன் எழுதிய நாவல், மதிப்புரைக்கு வந்தால் கொஞ்சம் பார்த்து எழுதும்... அநேகமா இந்த இதழுக்குள்ளே புஸ்தகம் வந்துவிடும்."

"அதுக்கென்ன சார்? நீங்க இதைச் சொல்லவேண்டுமா என்ன? நம்ம சுப்பராமன் தானே? நானே பார்த்துச் செய்யறேன்."

"அதுக்கு இல்லை ராமசாமி! உமக்கு ஞாபகப்படுத்தினேன். அவ்வளவுதான். 'புரூப்'களை ஒன்றுக்கு இரண்டு தடவையாகக் கொஞ்சம் கவனமாகப் பாரும்."

"........................"

"நாளைக்குத் தானே பன்னிரண்டாந் தேதி?"

"ஆமாம் சார்."

"நாளைக்குச் சாயங்காலம் புறப்படலாம் என்று இருக்கிறேன்."

"நல்லபடியாகப் போய்விட்டு வாருங்கள் சார்! இப்பொழுது சீஸனும் அருமையாக இருக்கும்."

"கேமராவிற்கு பிலிம் 'லோட்' பண்ணச் சொல்லி ராஜூவை அனுப்பினேன், அவனைக் கொஞ்சம் பார்த்து இங்கே அனுப்புமேன்."

"சரி சார், பார்க்கிறேன்..." ஆசிரியர் அறையிலிருந்து வெளியே வந்தார் உதவியாசிரியர் ராமசாமி.

## 2

**ப**தின்மூன்றாம் தேதி காலை பத்தரை மணிக்குத் தென்காசி ஸ்டேஷனில் வந்து இறங்கினார் வேங்கடரத்தினம். பன்னீர் தெளிப்பதுபோலச் சாரல் பெய்து கொண்டிருந்தது. குளிர்ந்த தென்றல் காற்று அவருடைய 'சில்க்' ஜிப்பாவை வருடிக் கொண்டு வீசியது.

ஆஹா! இப்படிப்பட்ட சூழ்நிலையிருந்தால் 'கற்பனை' எவ்வளவு 'மனோரம்மியமாக' ஓடும்? என்று தமக்குள் எண்ணிக் கொண்டார் அவர். தென்புறம் குற்றாலத்தின் மேக மூட்டத்துடன் கூடிய நீலநிற மலைச்சிகரங்கள் அவரை மௌனமாகச் சைகைசெய்து அழைப்பது போல விளங்கின. வாடகைக் கார் ஒன்றில் ஏறிக் குற்றாலத்திற்குப் புறப்பட்டார் அவர்.

"குற்றாலத்தில் தங்கியிருக்கும் அந்தப் பதினைந்து நாட்களில் எவ்வளவு எழுத முடியுமோ அவ்வளவையும் எழுதிக் குவித்துவிடவேண்டும்' என்று சங்கல்பம் செய்துகொண்டிருந்தது அவருடைய உள்ளம். டாக்ஸி சென்ற வேகத்தோடு வேகமாகச் சூழ இருந்த இயற்கைக் காட்சிகளை ரஸித்தார் அவர்.

தனிமையும், எழுதுவதற்கு வசதியும் வேண்டுமென்று வாடகை அதிகமாக இருப்பதையும் பொருட்படுத்தாமல் ஐந்தருவி ரோட்டில் ஒரு பங்களாவின் மாடியில் தங்கினார் வேங்கடரத்தினம். ரோட்டின் தெற்குப் புறத்தில் சித்தர் அருவிக்குப் போகிற மலைவழியின் சரிவில், அழகான பெரிய தோட்டத்திற்கும் பூஞ் செடிகளுக்கும் நடுவே வெய்யிலே எட்டிப் பார்க்க முடியாத பசுமைக்குள் மறைந்திருந்தது அந்தப் பங்களா! தம் எழுத்துக்கும் கற்பனைக்கும் சிந்தனைக்கும் பொருத்தமான இடம் கிடைத்ததே என்று திருப்திகொண்டார் வேங்கடரத்தினம். கூப்பிட்ட நேரத்திற்கு என்ன என்று கேட்டு அவர் கட்டளைகளை நிறைவேற்றுவதற்கு அந்தப் பங்களாவின் வாட்ச்மேன் இருந்தான். விஷயம் வேறொன்றுமில்லை! எழுதத் தொடங்கிவிட்டால் அடிக்கடி காப்பியை உள்ளே தள்ளிக் கொண்டிருந்தால்தான் கற்பனை தடையின்றி ஓடும் அவருக்கு. ஹோட்டலில் இருந்து காப்பி வாங்கிக்கொண்டு வரத்தான் 'வாட்ச்மேனின்' உதவி அவருக்கு அடிக்கடி தேவையாயிருந்தது.

வந்த அன்றைக்கு அலுப்பாக இருந்ததனால் மலைமேலிருக்கும் தேனருவி, சண்பக அருவி, முதலிய இடங்களுக்கு அவரால் போக முடியவில்லை. காலையில் வடவருவியில் நீராடி விட்டுப் பங்களாவிற்கு வந்தவர், வாட்ச்மேன் கொண்டு வந்து வைத்திருந்த எடுப்புச் சாப்பாட்டைச் சாப்பிட்டுவிட்டு அலுப்புத் தீர உறங்கினார். மறுபடி அவர் கண் விழித்தபோது மணி நாலரை ஆகியிருந்தது. "அடடா! இவ்வளவு நேரம் உறங்கிக் கழித்துவிட்டோமே? இரவு நேரத்தில் தூக்கம் விழித்தால்தான் தொடர் கதையின் முதல் அத்தியாயத்தையாவது எழுதலாம்" என்றெண்ணிக் கொண்டே வாட்ச்மேனைக் கூப்பிடுவதற்காக வாயைத் திறந்தார்.

அதற்குள் அவனே உள்ளே நுழைந்து ஒரு 'விஸிட்டிங்' கார்டை அவரிடம் கொடுத்தான். 'தாம் வந்திருப்பதே யாருக்கும் தெரிந்திருக்காது தெரியாமலிருப்பது தான் தம்முடைய வேலைக்கு நல்லது!" என்றெண்ணிக் கொண்டிருந்த வேங்கடரத்தினம் விஸிட்டிங் கார்டைப் பார்த்ததும் திகைத்தார். 'முல்லை மலர்' தொடங்கிய நாளிலிருந்து அதன் சந்தாதாரராக இருக்கும் தென்காசி வக்கீல் ஒருவரின் பெயர் விஸிட்டிங் கார்டில் இருந்தது. வேங்கடரத்னம் சம்மதத்துக்கு அறிகுறியாகத் தலையை அசைத்தார். வாட்ச்மேன் வக்கீலை அழைத்து வந்தான்.

சந்திப்பு, முறையான குசலப்ரச்னம் எல்லாம் முடிந்த பின் வக்கீல், வேங்கடரத்னத்தை இரவு தென்காசி வந்து தம் வீட்டில் சாப்பிடவேண்டும் என்று ஆர்வத்தோடு வற்புறுத்தினார்.

"வக்கீல் சார்! உங்கள் அன்புக்கு நன்றி. இப்பொழுதே மணி நாலே முக்கால் ஆகிவிட்டது. நான் நேரே ஐந்தருவிக்குப் போய்க் குளித்துவிட்டு இங்கே வந்து கொஞ்சம் எழுதவேண்டும். முக்கியமான எழுத்து வேலை...." என்று மறுத்தார் வேங்கடரத்தினம்.

வக்கீல் அவரை விடவில்லை!

"அதனால் பரவாயில்லை. கீழே என் கார் இருக்கிறது. அதிலேயே ஐந்தருவிக்குப் போவோம். நானும் கூட வருகிறேன். குளித்துவிட்டு நேரே தென்காசிக்குப் போய் விடலாம், இரவு என் காரிலேயே கொண்டு வந்து விடுகிறேன். பின்பு நீங்கள் எழுதலாமே?" என்றார். வேங்கடரத்தினம் சம்மதித்தார். எல்லாம் திட்டமிட்டபடி நடந்தன. ஆனால், இரவு குற்றாலம் திரும்பும் திட்டம் மட்டும் நிறைவேறவில்லை. தென்காசியிலேயே தங்கும்படி நேர்ந்துவிட்டது. வேங்கடரத்தினத்தை மறுநாள் காலையில்தான் குற்றாலத்தில் கொண்டு வந்து விட்டார் வக்கீல்.

"நீங்கள், நான் வந்திருப்பதை வேறு யாரிடமும் சொல்லிவிட வேண்டாம். உங்களோடு இருக்கட்டும். நான் ஒரு தொடர்கதை எழுதிக்கொண்டு போகலாமென்று இங்கே வந்தேன். பலர் என்னைக் காண வந்தால் என் வேலைக்கு இடையூறு விளையும்" என்று கூறி வக்கீலை விடைகொடுத்து அனுப்பினார் வேங்கடரத்தினம்.

வக்கீல் சென்றபின் காப்பி வரவழைத்து அருந்திவிட்டு எழுதுவதற்கு உட்கார்ந்தார். அப்போது காலை மணி எட்டே கால். கதையை எங்கே ஆரம்பிக்கலாம்? எந்தச் சம்பவத்திலிருந்து ஆரம்பித்து எப்படி வளர்க்கலாம் என்ற சிந்தனையிலேயே ஒன்பதரை மணி வரை கழிந்துவிட்டது. அதற்கு மேல் எழுத்து ஓடவில்லை. கதையின் தலைப்புக்கூட இன்னும் எழுதியாகவில்லை.

"சரி! சாயங்காலம் பார்க்கலாம்! இப்போது ஏதாவது ஓர் அருவிக்குப் போய்க் குளித்துவிட்டு வருவோம்" என்றெண்ணிக்கொண்டு வேலைக்காரனை அழைத்தார். அவன் சண்பக அருவிக்குப் போகலாம் என்றான். வேங்கடரத்னம் அவனைத் துணைக்கு அழைத்துகொண்டு மலைமேல் சண்பக அருவிக்குப் போகும் சாலையில் ஏறினார். பாதித் தொலைவு நடந்தவர் திடீரென்று ஏதோ நினைவு வந்தவர் போல் "ஏனப்பா! இங்கே தபாலாபீஸ் எங்கே இருக்கிறது? வா.. அவசரமாக ஒரு தந்தி

கொடுக்க வேண்டும்... கொடுத்துவிட்டு அப்புறம் மேலே ஏறுவோம்!" என்று வாட்ச்மேனைப் பார்த்துக் கேட்டார்.

"பக்கத்திலே தானுங்க! அடிவாரத்திலேயே இருக்குது" என்று அவரைத் தபாலாபீஸுக்கு அழைத்துச் சென்றான் அவன்.

புதிய தொடர் கதையின் பெயர் "நிலா மோகினி" என்று குறிப்பிட்டு, உதவியாசிரியர் ராமசாமிக்குச் சுருக்கமாக ஒரு தந்தியையே கொடுத்தார் வேங்கடரத்னம். திடீரென்று கீழே இறங்கியதையும் பரக்கப் பரக்கத் தந்தி கொடுத்ததையும் பார்த்து வேலைக்காரன் என்னவோ ஏதோ என்று தனக்குள் நினைத்துக்கொண்டான். தந்தி கொடுத்து முடிந்ததும் மீண்டும் மலைமேல் ஏறினர் இருவரும். வாட்ச்மேன் மௌனமாக அவருக்கு வழியைக் காட்டிக் கொண்டே மேலே ஏறிச் சென்றான்.

அடிக்கடி அவன் மௌனத்தைக் கலைத்து வாயைக் கிண்டினார் வேங்கடரத்னம்.

"என்னப்பா வாட்ச்மேன்! இந்த மலையைப் பற்றிய விசேஷமான சமாசாரங்கள், ஆச்சரியமான நிகழ்ச்சிகள், ஏதாவது இருந்தால் சொல்லேன்?" தம் கதைக்குப் பொருள் தேடவே இப்படிக் கேட்டார் அவர்.

அதுதான் 'சாக்கு' என்று, அவன் வேண்டியது வேண்டாதது என்று பாராமல் பச்சிலை மூலிகையிலிருந்து பலா மரங்களின் காய்ப்பு வரை எதை எதையோ விவரித்துக் கூறத் தொடங்கி விட்டான். வேங்கடரத்னத்திற்கு 'ஏனடா இவன் வாயைக் கிளறினோம்?' என்றாகிவிட்டது.

'மணிபர்ஸ் காலியாகிவிட்டது! அதில் ஒன்றுமிருக்காது' என்ற அவநம்பிக்கையோடு கைவிட்டு வேண்டா வெறுப்பாகத் துழாவினவனுக்கு, அதிலிருந்து ஒரு பத்து ரூபாய் நோட்டே அகப்பட்டது போல கதைக்குதவாத செய்திகளை அதுவரை பேசி வந்த வாட்ச்மேன் அப்போது தான் ஒரு விறுவிறுப்பான நிகழ்ச்சியைத் தொடங்கினான். வேங்கடரத்னம் கவனத்தோடு கேட்கலானார்.

## 3

"**போ**ன வருடம் தேனருவிக்குப் போகிற பாதையில் இரண்டு பேர் அதாவது ஓர் இளம் தம்பதி தற்கொலை செய்து கொண்டதாகப் பேப்பரில் ஒரு சமாசாரம் வந்தது பாருங்கள்..."

"ஆமாம்! அதற்கென்ன?" - வேங்கடரத்னம் கேட்டார். "அது நடந்த இடம் இதுதானுங்க." இப்படிக் கூறிக்கொண்டே கிடுகிடு பாதாளமான ஒரு பள்ளத்தைச் சுட்டிக் காட்டினான் வாட்ச்மேன்.

இடப்பக்கம் திரும்பி அந்த இடத்தைப் பார்த்தார் அவர். தலை சுற்றுவது போலிருந்தது. அவ்வளவு பெரிய பள்ளம். மேலேயிருந்து அசாத்தியமான வேகத்தோடு பாய்ந்துவரும் சித்திரா நதியின் பிரவாகம் மூன்று பெரிய அருவிகளாகப் பிரிந்து அந்தப் பள்ளத்திற்குள் வீழ்ந்து கீழே சென்று கொண்டிருந்தது. 'இயற்கையழகிலும் காணும் கண்களைப் பிரமிக்கவைக்கும் ஒருவிதப் பயங்கரத் தோற்றம் கலந்திருக்க

முடியும்.' என்பதை நிரூபிப்பன போலக் காட்சியளித்தன அந்தப் பள்ளத்தாக்கும், அதிலே பாயும் அருவிகளும். நாற்புறமும் வான முகட்டை அளாவி நிற்கும் பெரிய பெரிய மலைச் சிகரங்களுக்கு நடுவே தனியாக எவராவது அந்தப் பள்ளத்தைப் பார்க்க நேர்ந்தால் அதுவே அவர்களைப் பேயறைந்தது போலப் பயமுறுத்திவிடும். காற்றிலே மரங்கள் ஆடும் 'ஹோ'வென்ற ஓசையோடு அந்தப் பள்ளத்தில் விழும் தண்ணீரின் ஓசையும் சேர்ந்து பயங்கரமான தனிமையுணர்ச்சிக்குப் பின்னணி கீதம் பாடின. வன விலங்குகள், பறவைகள், இவைகளின் ஒலி வேறு இடையிடையே கேட்டன.

எழுதப்போகும் தொடர் கதையில் ஏதாவது ஓர் இடத்தில் இந்தக் காட்சியை வைத்து ஒரு சம்பவத்தைப் பின்னலாமென்று எண்ணினார் வேங்கடரத்னம். கையோடு கொண்டு வந்திருந்த 'கேமராவை' எடுத்துச் சரியான கோணத்தில் அந்தக் காட்சியை ஒரு படம் பிடித்துக் கொண்டார். வேலைக்காரனிடமிருந்து மேலும் கிடைத்த மட்டில் விவரங்களைச் சேகரிப்பதற்காக, அவனைத் தொடர்ந்து சில கேள்விகள் கேட்கத் தொடங்கினார்.

"அது சரி அவர்கள் இதிலே விழுந்து இறந்து போனதற்குக் காரணம் 'தற்கொலை நோக்கம்தான்' - என்று நீ எதைக் கொண்டு நிர்ணயிக்கின்றாய்?"

"வழக்கு நடந்தபோது போலீஸ் தொந்தரவுக்காகச் சில விஷயங்கள் வெளிவரலீங்க! ஆனால், உங்களிடம் அந்த விவரங்களைச் சொல்வதில் இப்போ ஏதும் பிழையில்லை. நான் எங்க பங்களா எஜமானர், நேற்று வந்திட்டுப் போனாரே வக்கீல், மூன்று பேரைத் தவிர வேறே யாருக்கும் இந்த விவரங்கள் தெரிஞ்சிருக்க நியாயமில்லை."

"எனக்குத் தெரிவதனால் உனக்கு ஒன்றும் தீங்கு விளையாது. சும்மா, பொழுது போவதற்காகத்தான் கேட்கிறேன்..." ஆசிரியர் ஆவலோடு கேட்டார்.

"அந்தத் தம்பதி நம்ம பங்களாவிலேதான் தங்கியிருந்தாங்க! முதல் முதலாக இன்றுதான் நாலாவது மனிதராகிய உங்களுக்கு இந்த உண்மையைச் சொல்கிறேன்! அவங்க பேரு கூட எனக்கு நினைவிருக்குது! அந்தப் பெண் பேரு... அதுனோடே அழகுக்கு ஏற்றாற்போலவே அழகான பேருதாங்க... காதம்பரின்னு பேரு. அவரு பேரு ரகுராமன்"... அவன் இப்படிக் கூறிக் கொண்டு வரும்போது மூன்றாவது மனிதர் ஒருவர் 'கேமராவும்' கையுமாக வந்தவர் - நேரே வேங்கடரத்தினத்தினருகே வந்து வணங்கினார். வேலைக்காரன் பேச்சை நிறுத்தினான்.

"அடேடே! சுப்பராமனா?... நீ இங்கே எப்போது வந்தாயாம்? அங்கேயிருந்து புறப்படும்போது கூட உன்னுடைய புத்தக மதிப்புரை விஷயமாக ராமசாமியிடம் சொல்லிவிட்டு வந்தேனே! ஏதேது இந்த வருஷக் குற்றாலம் சீஸனை ஒரே ஜர்னலிஸ்ட்களா முற்றுகையிட்டிருக்கிறோம் போல் அல்லவா தோன்றுகிறது?"

"ஏதோ, திடீரென்று நினைத்துக் கொண்டேன். உன்னிடம் சொல்லிக் கொள்ளக்கூட அவகாசமில்லை. புறப்பட்டு விட்டேன். இங்கே தளவாய் ஹவுஸில் ரூம்

எடுத்துக் கொண்டு தங்கியிருக்கிறேன். எங்கே சண்பக அருவிக்கா? நான் அங்கிருந்துதான் வருகிறேன்..."

"ஆனால் என்ன? இன்னொரு தரம் போகலாமே" - என்றார் வேங்கடரத்னம். மூவரும் மேலே நடந்தனர். மூன்றாவது நபரின் குறுக்கீட்டால் வாட்ச்மேனின் கதை இதற்குமேல் தொடர முகாந்திரமில்லாமல் போயிற்று.

**4**

அன்று பௌர்ணமி, சிவலிங்கத்தின் மேல் பால் அபிஷேகம் செய்கிற மாதிரி மலைச்சிகரங்களின் மேல் நிலவுக் கதிர்கள் பொழிந்து கொண்டிருந்தன.

சண்பகாதேவி கோவிலில் தரிசனம் முடித்துக்கொண்டு கீழே இறங்கும் போதே மாலை ஆறுமணி ஆகிவிட்டது. சுப்பராமன் தனக்குக் கொஞ்சம் எழுத்து வேலையிருப்பதாகக் கூறி வேங்கடரத்தினத்திடம் விடைபெற்றுக்கொண்டு தான் தங்கியிருந்த தளவாய் ஹவுஸிற்குச் சென்றுவிட்டான். பங்களா வாட்ச்மேன் தனக்கு இலஞ்சி வரை போக வேண்டிய வேலை இருக்கிறதென்றும், மறுநாள் காலையில்தான் திரும்ப முடியுமென்றும் கூறி பிளாஸ்கில் காப்பியை வாங்கிக் கொணர்ந்து வைத்துவிட்டுப் போய்விட்டான்.

வேங்கடரத்தினம் பங்களாவில் தனிமையை அடைந்தார். 'நல்லவேளையாக வாட்ச்மேனும் சுப்பராமனும் விடைபெற்றுக் கொண்டு போனார்கள். எனக்கு எழுதுவதற்கு வேண்டுமான தனிமை கிடைத்து விட்டது' - என்ற மனச் சந்துஷ்டியோடு எழுத முற்பட்டார் அவர். நிலாவையும் மலைக்காட்சிகளையும் கண்ணால் கண்டு கொண்டே எழுதலாமென்று நாற்காலியையும் மேஜையையும் பால்கனிக்கு அருகில் எடுத்துப் போட்டுக் கொண்டார். பால்கனிக்கு நேர் எதிரே கீழேயுள்ள தோட்டத்தில் பயிரிடப்பட்டிருந்த பல நிற ரோஜாச் செடிகளில் மலர்ந்து விளங்கும் மலர்களைப் போல, அவர் மனத்தில் கற்பனைகள் விரைவாக மலர்ந்தன.

"காதம்பரியின் மலர்க்கரங்கள் ரகுராமனின் தலையைக் கோதின." இந்த வாக்கியம் இரண்டாவது அத்தியாயத்தின் கடைசி வாக்கியமாக அமைந்திருந்தது. அன்று வாட்ச்மேனிடம் அரைகுறையாகக் கேட்ட சம்பவத்தின் விளைவாகக் 'காதம்பரி', 'ரகுராமன்' - என்றே தம் கதையின் முக்கிய பாத்திரங்களுக்குப் பெயர் வைத்திருந்தார் அவர். குற்றால மலையில் நிலவு பொழியும் இரவு ஒன்றில் ஆரம்பிப்பதாகவே கதையின் சம்பவத்தையும் தொடங்கியிருந்தார். அனுபவத்தின் சாயை சிறிதளவாவது பிரதிபலிக்காமல் கற்பனை பிறவாது அல்லவா?

சரியாக மணி பன்னிரெண்டு! குளிர், சாரல், இரண்டும் அதிகமாகி விடவே நாற்காலியையும், மேஜையையும் உள்ளே எடுத்துப் போட்டுக்கொள்ளலாம் என்று எண்ணி முதலில் நாற்காலியைக் கொண்டு போய்ப் போட்டார்.

"மேஜையைத் தூக்கிக் கொண்டு போகலாம்" - என்று மீண்டும் பால்கனியை அடைந்த வேங்கடரத்னம் அப்படியே திடுக்கிட்டுப்போய் நின்றார்!

மேஜைமேல் எழுதிப் பின் செய்து வைத்திருந்த தொடர்கதையின் இரண்டு அத்தியாயங்களையும், அதனருகே வைத்திருந்த விலையுயர்ந்த அவரது பார்க்கர் பேனாவையும் அங்கே காணோம்.

வேங்கடரத்னம் மலங்க மலங்க விழித்தார். பயப்பிரமை படிந்த விழிகளால் பால்கனியில் நின்றுகொண்டே சுற்று முற்றும் பார்த்தார். நேர் எதிரே ரோஜாச் செடிகளின் பக்கம் திரும்பியபோது மயிர்க்கூச்செறியும்படியான ஒரு காட்சியை அவர் கண்டார். அவருக்கு உடலில் ரத்தம் உறைந்துவிட்டது. கால்கள் அசைய மறுத்தன. கூச்சல் போட வாய் எழவில்லை!

"மோகினிப் பிசாசு!" - அவருடைய செவிகளுக்குக்கூடக் கேட்காத அவ்வளவு மெல்லிய குரலில் உதடசையாமல் முணு முணுத்தது அவருடைய நா.

ரோஜாச் செடிகளின் நடுவே இருந்த சிமெண்ட் மேடையில் அப்ஸர லோகத்து அழகுகளையும் மிஞ்சி நிற்கும் அழகோடு ஒரு பெண் வீற்றிருந்தாள். அவள் கையில் அவர் எழுதி வைத்திருந்த பேப்பர் கற்றைகளும், பார்க்கர் பேனாவும் இருந்தன.

'சந்தேகமில்லை! இவள் மோகினியேதான். இல்லையானால் இவள்அழகில் இவ்வளவு மயக்கும் சக்தியும் கவர்ச்சியும், காண்போர் நடுங்கும் பயங்கரத் தன்மையும் இருக்க முடியாது.' வேங்கடரத்னம் தமக்குள் நினைத்துக்கொண்டார். முடியப்படாத அவளது கருங்குழல், தோள்களிலும் முதுகிலும் அலை அலையாகப் புரண்டு கொண்டிருந்தது. தாழம்பூவின் இரண்டொரு மடல்களையும் சிறு மல்லிகைச்சரம் ஒன்றையும் முடியப்படாத கூந்தலின்மேல் பிறைச் சந்திரனைப் போல வளைத்துச் சூடிக்கொண்டிருந்தாள். அந்த மணம் பால்கனியின் மேலிருந்த அவர் நாசித்துளை களை ஊடுருவி அவரைக் கிறங்க அடித்துக் கொண்டிருந்தது. முகம்! ஈடு இணையற்ற அழகின் இருப்பிடம். மூக்கில் பேசரி, வைரக் கற்கள் நிலா ஒளியில் 'பளிச் பளிச்' என்று மின்னின! காதுகளில் கரிய கூந்தல் வளைவுகளுக்கு இடையே ஆடும் முத்துச் சிமிக்கிகள். அவள் கண்கள்! அவற்றின் நீட்சியும் மருட்சியும், எல்லாவற்றிற்கும் மேல் பார்ப்பவர்களைச் சொக்க வைக்கும் மைதீட்டியது போன்ற இயற்கைக் கருமையும், ஐயமற அவளை 'ஒரு மோகினிப் பிசாசு' - என்றே எண்ணிக் கொள்ளச் செய்தன வேங்கடரத்னத்தை! நல்ல பாம்பு படமெடுத்து நெளிவதுபோன்ற அவளது அந்த இடுப்பு! சிருஷ்டி கர்த்தாவின் ஸௌந்தரியத் தேர்ச்சிக்கு அது ஓர் எடுத்துக்காட்டு.

எல்லாவற்றிற்கும் மேல் அங்கே சிமெண்ட் மேடையில் ரோஜா மலர்களுக்கு நடுவே உட்கார்ந்து அவள் செய்து கொண்டிருந்த காரியம்?...

அதுதான் அவரை நிலைகொள்ள முடியாமல் மனம் பதறச் செய்தது! ஆம்! அவருடைய பேனாவிலேயே அவர் எழுதிவைத்திருந்த தொடர் கதையின் பகுதிகளைப் படித்து, அடித்தும், சிலவற்றைத் திருத்தியும், ஏதேதோ மனம்போன போக்கில் நாசம் செய்து கொண்டிருந்தாள்!

'கீழே இறங்கிச் சென்று அவளிடமிருந்து அதைப் பிடுங்கிக் கொண்டு, திரும்பிப் பாராமல் ஓடிவந்து மாடிக் கதவைத் தாழ்ப்பாள் போட்டுக்கொண்டு விட்டால்

என்ன?' - என்று எண்ணினார். ஆனால், கால்கள் நின்ற இடத்திலிருந்து அசைந்தால் தானே? அவருடைய பாதங்கள் இரண்டுமே உணர்ச்சியற்று மரத்துப் போயிருந்தன.

மின்னல் வேகத்தில் வேறோர் பயங்கரமான அனுமானத்தைச் செய்தது அவர் மனம். 'ஒரு வேளை, சென்ற வருடம் தற்கொலை செய்து கொண்ட காதம்பரியின் ஆவியோ?' - இப்படி நினைக்கும்போதே உடல் முழுவதும் உதறலெடுத்து நடுங்கியது அவருக்கு. காதம்பரியும், ரகுராமனும் அதே பங்களாவில் தங்கியிருந்ததாக 'வாட்ச்மேன்' கூறியது நினைவுக்கு வந்ததும், மேற்படி பயங்கர அனுமானம் அவர் உள்ளத்தில் வலுப்பட்டது. 'காதம்பரி, ரகுராமன்' என்ற அதே பெயர்களை அமைத்து அவர்களுடைய தற்கொலைச் சம்பவத்தையும் இணைக்க முயன்றதனால் தன்மேல் கோபமுற்று, தன் தொடர் கதையை அபகரித்துக்கொண்டு போவதோடன்றித் தன்னையும் பழி வாங்குவதற்கென்றே காதம்பரியின் பேய் அங்கே வந்து உட்கார்ந்திருப்பதாக ஒரு பயப்பிரமை - பிராந்தி - அவர் மனத்தில் அழுத்தமாக உண்டாயிற்று! அந்தப் பிரமை ஏற்பட்டபோதே சுவாசக் குழாய்கள் அடைத்துக் கொண்டு மூச்சுவிடுவதே நின்று போகும்போலிருந்தது அவருக்கு. வேங்கடரத்னம் தன் நினைவை இழந்தார். அவருக்குத் தலை சுற்றியது.

இறுதியாக அவர் நினைவிழந்து மயங்கிக் கீழே விழும்போது, "விடாதே... பிடி... இதோ, இங்கே இந்தப் பங்களாவுக்குள்ளேதான் இருக்கிறாள்... இதோ... இந்த சிமெண்ட் மேடையிலே.. ரோஜாச் செடிகளுக்கு நடுவிலே" - என்று கூப்பாடு போட்டுக்கொண்டு இரண்டு மூன்று பேர் திறந்து கிடந்த பங்களாக் கதவுகளைக் கடந்து உள்ளே ஓடி வருவதையும், அந்த யுவதி காகிதக் கற்றைகளையும், பேனாவையும் வீசி எறிந்துவிட்டு ஓடுவதையும், மங்கிய கண்களால் கண்டார். அதன்பின் அவருக்குத் தன் நினைவில்லை. அப்படியே மூர்ச்சையாகிப் பால்கனியில் விழுந்து கிடந்தார். அதன் பின் நடந்தவை எவையுமே அவருக்கும் ஒன்றும் தெரியாது.

முகத்தில் குளிர்ந்த தண்ணீர்த் துளிகள் அடுத்தடுத்து விழவே வேங்கட ரத்தினத்திற்கு மெல்ல மெல்ல பிரக்ஞை வந்தது. அவர் தன் நினைவோடு கண்களை விழித்துப் பரக்கப் பரக்கச் சுற்றி நின்றவர்களைப் பார்த்தார். சுப்பராமன் கையில் தண்ணீர்ச் செம்புடனே நின்றுகொண்டிருந்தான். 'அவனுக்கு அந்த அர்த்தராத்திரிக்கு மேலே தன் பங்களாவில் நடந்த விஷயம் எப்படித் தெரிந்தது?' என்று வியப்போடு அடுத்து நின்றவர்கள் மேல் பார்வையைச் செலுத்தினார் அவர்.

மறுவிநாடி மீண்டும் மூர்ச்சை வந்து விடும்போல இருந்தது அவருக்கு. கையில் தண்ணீர்ச் செம்போடு நின்ற வேங்கடரத்னத்தின் நண்பர் சுப்பராமனுக்கு அருகே தென்காசி வக்கீல் அந்த மோகினிப் பேயின் கைகளை இறுக்கிப் பிடித்துக் கொண்டு நின்றார். அவருக்குப் பக்கத்தில் காவியுடை அணிந்த தாடிச் சாமியார் ஒருத்தரும் நின்று கொண்டிருந்தார்!

"பயப்படாதே! இவள் என் மச்சினிதான்; பேய் பிசாசு இல்லை! கொஞ்சம் சித்த ஸ்வாதீனம் போதாது. அதுதான் இப்படி நடுராத்திரியில்..." சுப்பராமனிடமிருந்து இந்தச் சொற்களைக் கேட்டிருக்கவில்லையானால் வேங்கடரத்னம் மீண்டும் கட்டாயம் மூர்ச்சை போட்டு விழுந்து இருப்பார்.

ஆனாலும், அந்த நிலையிலும் சில பெரிய திகைப்புக்குரிய சந்தேகங்கள் அவரைத் திக்பிரமை கொள்ளச் செய்திருந்தன. அத்தனை பேருக்கும் நடுவில் வெளிப்படையாகத் தன் சந்தேகத்தை எப்படிக் கேட்பது என்ற சங்கோஜமும் உடன் தோன்றியது.

"சுப்பராமா! நானும் டாக்டரும் இவளைக் கூட்டிக்கொண்டு ஆஸ்பத்திரிக்குப் போகிறோம்! நீ, சாரோடே இங்கே இரு! காலையிலே ஆஸ்பத்திரிக்கு வா! பாவம்! நடுராத்திரியில் சாரை ரொம்ப மனக் கலவரப்படுத்தி அவர் காரியத்தை எல்லாம் கெடுத்துவிட்டாள்!" - தென்காசி வக்கீல் இப்படிக் கூறிவிட்டுச் சுப்பராமனிடமும் ஆசிரியரிடமும் விடை பெற்றுக்கொண்டு, தாடிச் சாமியார் பின் தொடர, அந்த மோகினியைப் பிடித்து இழுத்துக்கொண்டு சென்றார். பால்கனியிலிருந்து, கீழே வக்கீலின் பிடியைத் திமிரிக்கொண்டு ஓட முயலும் அந்த மோகினியைக் கண்டு கொண்டிருந்த வேங்கடரத்னம், 'தன்னைக் காண்பவர்களின் சித்தங்களை எல்லாம் ஸ்வாதீனமில்லாமல் செய்துவிடும் இந்த அழகிக்கா சித்தஸ்வாதீனம் இல்லை!' என்று வியப்பால் வாயைப் பிளந்து கொண்டிருந்தார். நிலா ஒளியில் வானத்திலிருந்து குதித்து ஓடும் தேவ மகள் போல அந்தக் காம்பவுண்டைத் தாண்டி மறைந்தாள் அவள். வேங்கடரத்னம் தன் பார்வையைத் திருப்பியபோது, 'ஏதேது?' மோகினிப் பிசாசு பலமாகப் பிடித்துக்கொண்டு விட்டதோ?' என்று கூறி அவரை நையாண்டி செய்தான் சுப்பராமன். அவன் கையில் கசங்கிய தாள்களும் அவருடைய பேனாவும் இருந்தது!

மறுநாள் பொழுது விடிந்தது!

"வக்கீல்தான் என் மாமனார். இந்தப் பெண் பத்மினி, அவருக்கு இரண்டாவது மகள். என் மனைவியின் தங்கை; சித்தஸ்வாதீனம் இல்லாததனால் இங்கே அடுத்த காம்பவுண்டிலுள்ள பைத்தியக்கார ஆஸ்பத்திரியில் சேர்த்திருக்கிறார்கள். இங்கே அவளைப் பார்த்துவிட்டுப் போகவே நானும் மனைவியும் வந்தோம். வந்த காரணத்தை - 'என் மச்சினி பைத்தியம்' என்பதைச் சொல்ல வெட்கப்பட்டேன் நான். அதனால்தான் நான் இங்கே வந்திருப்பது தெரியாமல் மாமனாரை விட்டு உங்களை விருந்துக்கு அழைத்தேன். ஆனால், இன்று சண்பக அருவிப் பாதையில் எதிர்பாராத விதத்தில் உங்களைக் கண்டு கொண்டபோது என் வரவை மறைக்க முடியவில்லை. எனவே, தனியே நான் மட்டும் வந்து 'தளவாய் ஹவுஸில்' தங்கியிருப்பதாகவும், நீ வந்திருப்பதை நான் அப்போதுதான் அறிந்துகொள்வது போலவும் பொய் சொல்லி நடித்தேன். என்னை மன்னித்துவிடு." - சுப்பராமன் உருக்கமாகக் கூறினான்.

"என்னையும் மன்னிச்சுப்புடணுமுங்க..." வேங்கடரத்னமும், சுப்பராமனும் வியப் போடு மாடிப்படியிருந்த பக்கம் திரும்பிப் பார்த்தனர். 'வாட்ச்மேன்' அங்கே நின்றான்.

"பக்கத்திலே பைத்திய ஆஸ்பத்திரிங்கிறதை மறந்து கவனக் குறைவா பங்களா கேட்டை மூடாமல் நேற்று ராத்திரி தவற விட்டுட்டேங்க..."

"ஆனால்..." என்றார் வேங்கடரத்னம். அதற்கு மேல் அவர் என்ன தான் கூற முடியும்?

(1978-க்கு முன்)

## 137. வேலையும் விசாரணையும்

அன்றுடன் நான் வேலையிலிருந்து நீக்கப்பட்டுச் சரியாக ஒரு வாரமாயிற்று. கையில் கணக்குத் தீர்த்துக் கொடுத்து சம்பளத்துடன் வெளியேறும் போதுகூட எனக்கு இவ்வளவு மன வேதனையில்லை; கிடைத்த பணத்தைக் கொண்டு இரண்டு மூன்று வாரங்களைக் கடத்தி விட்டால் வேறு ஏதாவது 'சான்ஸ்' பிடித்துக் கொண்டு விடலாம் என்ற நம்பிக்கை இருந்தது. ஆனால், அன்றிலிருந்து அந்த நம்பிக்கைக்குத் தலைவலி பிடிக்க ஆரம்பித்தது.

ஏறக்குறைய ஒரு வாரம் வரை என்னுடைய வேலை நீக்கம் ஒருவருக்கும் தெரியாதபடி கடத்தி விட்டேன். அதற்குப் பிறகுதான் ஆரம்பமாயிற்று அந்த அநுதாப விசாரணைகள். அதை 'அநுதாப விசாரணை' என்று நான் கூறுவது விசாரிப்பவர் களுடைய அகராதியில் கண்டது. என்னுடைய வார்த்தையில் சொல்லப் போனால் அதைக் 'கொல்லாமற் கொல்லும் கேள்வி' என்று தான் சொல்வேன். அப்படிச் சொல்லும் அளவுக்கு நான் அநுபவித்துவிட்டேன். நான் மட்டுமென்ன? வேலையில்லாத் திண்டாட்டத்தில் சிக்கிய பட்டதாரிகள், படித்த இளைஞர்கள் எல்லோருமே இதை அநுபவிக்கத் தவறுவதில்லை. பட்டதாரிகளும், படித்தவர்களும் கூட வேலை கிடைக்கவில்லை என்பதற்காகக் கவலைப்படுவதைக் காட்டிலும், வேலையைப் பற்றித் தங்களிடம் இரக்கத்தோடு விசாரிக்கும் 'அநுதாபி'களுக்காகத் தான் கவலைப்படுகிறார்கள். அந்த 'அநுதாபி'களின் வார்த்தைதான் அவர்கள் தைரியத்துக்கும் நம்பிக்கைக்கும் உலை வைத்து உண்ணவும் உறங்கவும் முடியாமல் உருகவைக்கிறது. இவர்கள் தலை தட்டுப்பட்டால் நடுங்கி மறைந்து நடக்கக்கூட வேண்டியிருக்கிறது. இவர்களைச் சந்தித்து விட்டால் அந்தக் கேள்வியைக் கேட்டு விடுவார்களே என்ற பயம்தான் காரணம்.

என்னைப் பொறுத்த வரையில் இந்த அநுதாப விசாரணையை நான் ரூமெடுத்துக் கொண்டிருக்கும் வீட்டுக்காரர்தான் முதன் முதலில் ஆரம்பித்து வைத்தார். 'முடித்து வைத்தது யார்?' என்று கேட்கிறீர்களா? எனக்கு வேலை கிடைக்கிறவரை இந்த விசாரணைக்கு முடிவேயில்லையே!

அது மட்டுமா? இந்த விசாரணையைக் கேட்பதற்குத் தகுதியே வேண்டியதில்லை. என்னுடைய காலேஜ் புரொபஸராகிய ஸ்ரீமான் கண்ணுசாமிப் பிள்ளையிலிருந்து காலையில் என் ரூமைப் பெருக்குவதற்கு விளக்குமாறும் கையுமாக வரும் வேலைக்காரி வடிவாம்பாள் வரை யாரும் கேட்கலாம். அவரவர் தரத்திற்குத் தக்கபடி வார்த்தைகளும் விசாரணையின் தோரணைகளும் தான் வேறுபாடு அடைகின்றன.

"சார், ஏதோ கேள்விப் பட்டேனே! அது நிஜம்தானா? மேற்கொண்டு என்ன செய்யறதாக உத்தேசம்? எங்கேயாவது ஏற்பாடு செய்திருக்கீங்களா? இப்படியே இருந்தாக் கட்டிவரணுமே!"

இது என் வீட்டுக்கார முதலியாரின் அநுதாப விசாரணை.

"ஆமாம், ஸார்! வேறே எங்கேயாவது பார்க்கணும்." இது நான் முதலியாருக்குச் சொன்ன பதில். முதலியார் விசாரிக்கும் போது பதில் சொல்லும் அளவுக்கு என் தைரியமும் நம்பிக்கையும் சோர்வடையாமல் இருந்தனவே, அதை விசேஷமாகச் சொல்லவேண்டும்!

"மிஸ்டர் சாரதி! உங்களை ரிலீவ் பண்ணிவிட்டதாகக் கேள்விப்பட்டேன். நம்ம காலேஜிலேகூட ஒரு 'கிராஜ்வேட் லைப்ரரியன்' வேணும்! ஆனால், அதுக்கு பி.ஏ. பர்ஸ்ட் கிளாஸ் இருக்கணுமே...?"

இது புரொபஸர் ஸார் செய்த அநுதாப விசாரணை. "அப்படியா...?" இவ்வளவு தான் அவருக்கு நான் சொன்ன பதில். அவர் விடை பெற்றுக் கொள்ளும்போது என் கைகள் யந்திரம்போல இயங்கித் தாமாகவே ஒரு வணக்கத்தைச் செய்து வைத்தன. இப்போது என் உறுதியில் அதிர்ச்சியின் 'ஜன்னி' லேசாக ஆரம்பித்தது.

முதுகில் ஓங்கி ஓர் அறை விழுந்தது! அப்போது எனக்கு அது அறையாகத்தான் இருந்தது. "ஏண்டா பழி! ஆந்திர மாகாணம் பிரிஞ்சாலும் பிரிஞ்சது; உன் பாடு ஆபத்தாய்ப் போச்சேடா! அப்புறம் என்னடா செய்யப்போறே!" ஆந்திர மாகாணம் தனியாகப் பிரிந்த பின் - சென்னையிலிருந்த எனது கம்பெனி ஹைதராபாத்துக்குப் போய் விட்டது.

இது கல்லூரி நண்பன் ரகுவின் ஹாஸ்யம் கலந்த அநுதாபம். ரகுவுக்கு நான் பதிலே சொல்லவில்லை. இன்னும் ஒரு வாரமாக என் வேலை போனது பற்றி நடந்த அநுதாப விசாரணைகள் முழுவதையும் எழுதினால் அது உங்கள் பொறுமைக்குப் பரீட்சை நடத்தியதாக ஆகிவிடும்.

சந்தித்தவர்களிடம் எல்லாம் இதே விசாரணை; கண்டவர்கள் ஒன்று கூடிப் பேசி வைத்துக் கொண்டது போல ஒருவர் தவறாமல் இதையே கேட்டார்கள். கேட்டார்களென்றா சொன்னேன்? இல்லை, இல்லை! வார்த்தைகளாகிய ஈட்டிகளை மீண்டும் மீண்டும் பாய்ச்சினார்கள். வெந்த புண்ணில் வேல் கொண்டு எறிந்தார்கள். நான் இனிமேல் ரூமை விட்டு வெளியே போகக்கூடாது என்ற அளவுக்கு 'வேலை நீக்க விசாரணை' பெருகி, வெள்ளமாகப் பரந்து வியாபித்துவிட்டது. நான் வேலையே பார்க்கப் போவதில்லை. முடிந்தால் வாழ்கிறேன், இல்லையானால் ஒரு சாண் கயிறு கூடவா கிடைக்காமற் போய்விடும்?' இந்த வேலையில்லா நிலையும் போதும்; விசாரணையும் போதும்!' - இப்படி ஒரு மயான வைராக்கியம் என் மனத்திற் படியும்படி செய்துவிட்டது இந்த அநுதாப விசாரணை அனுபவம்!

எப்போதாவது எனக்கு வேலை கிடைத்துவிட்டால் அதற்குள் நான் பைத்தியமாகி, அதைப் பார்க்க முடியாமல் கூடப் போகும்படியும் ஆக்கிவிடலாம் இந்த அநுதாபம்.

கடிகாரத்தைப் பார்த்தேன். மணி பன்னிரண்டு; தூக்கத்தைப் பற்றியே நினைவில்லை. பலவந்தமாகக் கண்ணிமைகள் மூட முயன்றன. மூடிய இமைகளுக்குள் இந்த விசாரணைப் பிரமுகர்கள் ஒருவர் விடாமல் வந்து மானஸிக விசாரணையை மறுபடியும் நடத்தினார்கள். தூக்கம் வரவில்லை. போர்வையை நீக்கிவிட்டு எழுந்தேன். அதே சமயத்தில் கதவைத் திறந்து கொண்டு பெட்டி படுக்கை முதலியன சகிதமாக என் அப்பா உள்ளே நுழைந்தார். அப்போதுதான் கதவைத் தாழ்ப்பாள் போடாதது என் நினைவுக்கு வந்தது. ஆச்சரிய மிகுதியினாலோ வேறு எதனாலோ "வாருங்கள் அப்பா" என்று கூடச் சொல்ல வாய் மறுத்துவிட்டது.

"ஏண்டா, இன்னுமா தூங்காமல் இருக்கிறாய்? உடம்பு எதற்கு ஆகும்? வேலை போனவனெல்லாம் செத்தா போய்விட்டான்கள்? நல்ல பைத்தியக்காரத்தனமடா, இது. ஆமாம்! நான் போட்ட கடிதம் உனக்குக் கிடைக்கவில்லையா? மதுரை பாசஞ்சரில் பதினொன்றரை மணிக்கு வருவதாக எழுதியிருந்தேனே."

அப்பா பேசிக்கொண்டே போனார்.

அறையின் ஒரு மூலையில் ஜன்னல் வழியாக எறியப்பட்டிருந்த ஒரு கடிதம் என் கண்ணில் பட்டது. கையில் எடுத்தேன்.

"செங்கற்பட்டில் நண்பரொருவர் வீட்டுக் கல்யாணத்திற்குப் போகவேண்டும். நாளை இரவு பதினொன்றரை பாசஞ்சரில் வருகிறேன். நீ தூக்கம் விழித்து ஸ்டேஷனுக்கு வரவேண்டாம். நானே ரூமுக்கு வந்து விடுகிறேன். உன் வேலை போய்விட்ட விஷயம் ராமு மூலம் அறிந்து கொண்டேன். அதற்காக மனசை அலட்டிக் கொள்ளாதே. வீண் கவலை வேண்டாம். அதை நீ எனக்கு எழுதாததற்கு நான் வருத்தப்படுகிறேன். உள்ளூர் ஹைஸ்கூல் ஒன்றில் எல்.டி.கிடைக்காததால் கிராஜ்வேட் வேண்டுமென்று கேட்டிருந்தார்கள். அதை உனக்கு ஏற்பாடு செய்துவிட்டேன். வாத்தியார் மகன் வாத்தியாராகவே ஆகிவிடு. அங்கே உன்னை யாரும் ரிலீவ் செய்யமுடியாது. உன் அப்பா."

இவ்வளவுதான் கடிதத்தில் என் கண்ணில் பட்டது. அப்பாவின் அநுபவம். என் வேதனையை ஒரு நொடியில் போக்கும் இரண்டு வாக்கியங்களாக அந்தக் கடிதத்தில் எழுதப்பட்டிருந்தது. "வேலை போனவனெல்லாம் செத்தா போய்விட்டான்? வீண் கவலைப்பட்டு மனசை அலட்டிக் கொள்ளாதே." இவைகள்தான் இந்த அமுத வார்த்தைகள். இவைகளைத் திரும்ப இன்னொரு தடவை படித்தேன். அதற்கும் மேலாக அவர் கடைசியில் எழுதியிருந்த இரு தொடர்கள் என்னுள்ளத்திலிருந்த புண்களை நிரந்தரமாக அப்புறப்படுத்திவிட்டன. நான் அன்றிரவு நிம்மதியாகத் தூங்கினேன்.

* * *

மறுநாள் காலை அப்பாவும் நானும் செங்கற்பட்டுக்குப் புறப்பட்டோம். கல்யாணம் முடிந்ததும் இருவரும் சேர்ந்தே ஊர் திரும்புவதாக ஏற்பாடு. கலியாண மாப்பிள்ளை 'ரகு' என்பதை அறிந்ததும் நானும் போக வேண்டிய அவசியம் ஏற்பட்டது. ரகு கொடுத்த பத்திரிகையின் நினைவும் எனக்கு அப்போதுதான் வந்தது.

ரயிலுக்குப் புறப்படும் போது வீட்டுக்காரர் வந்து சேர்ந்தார். "பையனுக்கு நம்ம ஊரிலேயே வேலைக்கு ஏற்பாடு செய்துவிட்டேன். உங்கள் உதவிக்கு நன்றி; இந்தாருங்கள் வீட்டுச் சாவி!"

அப்பாவிடமிருந்து முதலியார் சாவியைப் பெற்றுக் கொண்டார்.

"அப்படிங்களா! ரொம்ப நல்லதுங்க!" என்ற வார்த்தைகள் அவரிடமிருந்து வெளி வந்தன. இனி அவர் வேலையைப் பற்றி என்னிடம் விசாரிக்க முடியாதல்லவா?

(1978-க்கு முன்)



## 138. வாணவேடிக்கை

அந்த நாளில் விநாயக சுந்தரத்துக்கு அப்படி ஒரு பெயர். எந்தத் திருமண ஊர்வலமானாலும் கோவில் உற்சவமானாலும், அதில் விநாயகசுந்தரத்தின் வாணவேடிக்கை ஒரு முக்கியமான அம்சமாக இருக்கும். திருமணப் பத்திரிகைகளிலும், உற்சவ. அழைப்பிதழ்களிலும், இன்னாருடைய பாட்டுக்கச்சேரி, இன்னாருடைய நாதஸ்வரம், இன்னாருடைய சொற்பொழிவு என்று சிறப்பாகக் குறிப்பிடுகிற மாதிரி "இன்னாருடைய வாணவேடிக்கை" என்று போடுகிற அளவிற்கு அவன் ஒரு நல்ல அந்தஸ்தை அடைந்திருந்தான்.

"ஐயா! வாணம் உலகத்துக்கெல்லாம் வேடிக்கை. அதைச் செய்கிறவனுக்கு அது ஒவ்வொரு கணமும் வினை. நீங்கள் என்னமோ கூலிக்காரனுக்குப் பேசுகிற மாதிரிப் பணம் பேசுறீங்க" என்று தன் தொழிலின் அருமையையும் தரத்தையும் சொல்லித் திருமணங்களுக்கும், திருவிழாக்களுக்கும் அழைக்க வருகிறவர்களிடம் அவன் ரேட்டுப் பேசுகிற தோரணையே தனிப்பட்டதாக இருக்கும். சுற்று வட்டாரத்தில் நான்கைந்து ஜில்லாக்களில் அவன் பேர் பிரசித்தம். அந்தத் தொழிலுக்கு அவன்தான் மன்னன். நட்சத்திர வாணம், பூவாணம், அவுட்டு, சரவெடி என்று வகை வகையாக வாணங்கள் உற்பத்தியாகும் அவனிடம். அந்தத் தொழிலுக்கான வெடிமருந்து கந்தக லைசென்ஸ் அவனுக்கு உண்டு. மூங்கில் குழாயும், களிமண்ணும், வெடிமருந்தும், உலகெங்கும்தான் இருக்கின்றன. ஆனால், அவை விநாயக சுந்தரத்தின் கையில் அபூர்வ வாணங்களாக உருவாகி விட்டால் என்னென்ன அற்புதங்களை ஆகாய வெளியில் உண்டாக்கிக் காட்டி வியப்பூட்டுகின்றன?

அவ்வப்போதுள்ள சூழ்நிலைக்கேற்ப அவன் வாணங்களுக்குப் பெயர் வைப்பான். ராக்கெட்டையும், ஸ்புட்னிக்கையும் பற்றிப் பத்திரிகைகளில் அடிபட்டால் ராக்கெட் வாணமும், ஸ்புட்னிக் வாணமும் அவனுடைய கைகளில் உருவாகிவிடும். தமிழ்ப் பண்டிதருக்குத் தொல்காப்பியம் படித்ததிலுள்ள கர்வம் தன் வாணக் கலையில் அவனுக்கும் உண்டு.

"இதென்னடா தறுதலைப்பய வேலை? வெடி மருந்தையும், குழாயையும் வச்சுக்கிட்டு மாரடிக்கிறது? வருடத்துக்கு மூணு நாலு தடவை எவனாவது வாணவேடிக்கைக்குக் கூப்பிடுகிறான். இதை நம்பிப் பொழைக்க முடியுமா? வேறே ஏதாவது உருப்படியான வேலையாப் பாரப்பா!" என்று அவனுடைய தகப்பனார் ஆரம்பத்தில் அவனைக் கண்டித்ததுண்டு.

நாளாக ஆக அந்த வித்தையில் அவன் சம்பாதிக்கத் தொடங்கிய புகழையும் பொருளையும் கண்டு பின் அவன் போக்குப்படி விட்டுவிட்டார் அவர்.

அந்தக் கலை கொடுத்த வருவாயிலேயே விநாயக சுந்தரம் உள்ளூரில் இரண்டு மாடி வீடு கட்டி விட்டான். நிலமும் நீச்சும் வேண்டியது வாங்கிச் சேர்த்துக் கொண்டான். பெருங்கலைஞர்களிடம் வந்து அண்டிக்கொண்டு வித்தை பழகும் இளங்கலைஞர் மாதிரி அவனிடமும் இரண்டு மூன்று ஆட்கள் அந்தக் கலையைப் பழகிக் கொண்டிருந்தனர். விநாயக சுந்தரத்துக்குத் தன் சீடர்களிடம் பரம விசுவாசம் உண்டு. ஊருக்கு மேற்கே புளியந்தோப்பில் தனியாக ஓர் ஓட்டுக் கட்டிடம் ஒதுங்கி நிற்கிற பெருமையில் துறவி போலக் காவி நிறம் போர்த்திக் காட்சியளிக்கும். அதுதான் விநாயக சுந்தரத்தின் வாணத் தயாரிப்புத் தொழிற்சாலை.

புளியந்தோப்பும், கட்டிடமும் விறகு கரிமூட்டை வியாபாரமும் கண்ணுசாமிக்குச் சொந்தம். அதை விநாயக சுந்தரத்துக்கு மாதம் இருபது ரூபாய் வாடகைக்குக் குடக்கூலிக்கு விட்டிருந்தான் கண்ணுசாமி.

"வேய்! நீர் கரியைக் காசாக்குகிறீர். நான் காசைக் கரியாக்குகிறேன். என்னிடத்தில் இந்தப் பக்கா கிராமத்தில் மாதாமாதம் இருபது ரூபாய் அடிச்சு வச்சு வாங்குறீரே, இது உமக்கு அடுக்குமா?"- என்று ஒவ்வொரு தடவையும் வாடகை கொடுக்கும்போது கண்ணுசாமியை வம்புக்கு இழுப்பான் விநாயகசுந்தரம்.

"என்னங்க தம்பீ! நமக்கும் உனக்கும் நிகராகுமா? ஒரு கலியாணத்திலே, ஒரு திருவிழாவிலே, ஒருநாள் இராத்திரிப் போய் வாணம் விட்டு முந்நூறு நானூறு கொண்டு வந்திடறே நீ. பாழாப்போன பய கிராமத்திலே எவன் கரிமூட்டை வாங்கறேங்குறான்? மாசம் மூணு ஆனா இரண்டு கரிமூட்டை விலைக்குப் போகுது!" என்று கண்ணுசாமி பதிலுக்குச் சடைத்துக் கொள்ளுவான். விநாயக சுந்தரம் ஹாஸ்ய புருஷன்; எதையும் வேடிக்கையாகப் பேசுவான். வாணத்தைப் போலவே ஓர் அவுட்டுச் சிரிப்பு. அவனுக்கு மட்டும்தான்அந்த மாதிரிச் சிரிக்கத் தெரியும். காசும் பணமுமாகப் பெருவாழ்வு வாழ்ந்தான் அவன். நாடகக் கலைஞர்களையும், இசைக் கலைஞர்களையும்போல ஐந்து விரல்களிலும் மோதிரம் மின்ன, சரிகைத் துப்பட்டாகவும், மல்வேஷ்டியுமாக உல்லாச வாழ்வு வாழும் வசதியை அவன் தனது வாணத் தொழிலால் தேடிக்கொண்டிருந்தான். ஆனாலும் வாழ்வில் அவனுக்கு ஒரு பெரிய குறை. அவனுக்குத் திருமணம் நடந்தபோதே திருமணம் நடந்த மற்றவர்களெல்லாம் குழந்தையும் குட்டியுமாகக் குடும்பம் பெருகி வாழ்ந்தார்கள். இருபத்தாறாவது வயதில் அவனுக்குத் திருமணம் நடந்தது. நாற்பத்திரண்டு வயதுவரை அவன் வீடு குழந்தைகள் தவழும் பாக்கியத்தைப் பெறவில்லை.

"ஏலே ஐயா! எனக்கு நெய்ப்பந்தம் பிடிக்க ஒரு பேரப் பயல் பிறக்காமலே என்னைப் போக விட்டிடுவே போலிருக்கே" என்று அடிக்கொரு தரம் அவனுடைய கிழத்தந்தை பெருமூச்சு விட்டுக்கொண்டே அவனிடம் குறைப்பட்டுக் கொள்ளுவார். ஊர்க் குழந்தைகள் எல்லாம் தீபாவளி, கார்த்திகைப் பண்டிகைகளின்போது அவனுடைய தொழிற்சாலையில் உற்பத்தி செய்த மத்தாப்புப் பெட்டிகளை வைத்துக் கொண்டு திரியும். அவன் வீட்டில் மத்தாப்புக் கொளுத்த ஒரு குழந்தையில்லை. வெளிக்குச் சிரிப்பும் குதூகலமுமாக வாழ்ந்தாலும் நீறுபூத்த நெருப்புப் போல அவன்

மனத்தை அது தீராக் குறையாக அரித்தெடுத்துக் கொண்டு வந்தது. கார்த்திகையன்றும், தீபாவளியன்றும், ஒரு கூடை நிறைய மத்தாப்புப் பெட்டிகளை அள்ளிவைத்துக் கொண்டு ஊர்க்குழந்தைகளை எல்லாம் கூப்பிட்டுக் கொடுப்பான் அவன். இதனால் மழலை மாறாத ஊர்க் குழந்தைகளிடம், 'மத்தாப்பு மாமா' என்றொரு செல்லப் பெயர்கூட அவனுக்கு ஏற்பட்டிருந்தது. அவனுக்கு முதல் முதலாகப் பேரும், புகழும் ஏறியது கண்ணுடைய நாயகி அம்மன் திருவிழாவில் வாண வேடிக்கை விட்ட போதுதான். அதனால் பழைய நன்றி மறவாமல் வருடா வருடம் அந்த அம்மனுக்கு அவன் வாண வேடிக்கை உபயம் செய்து வந்தான். "தாயே! என் தொழில் ஒளி நிறைந்தது. ஒளியால் வேடிக்கை காட்டுவது. என்னுடைய வாணங்கள் வானத்து இருளெல்லாம் போக்குகின்றன. ஆனால், என் வீட்டு இருளை நீ இன்னும் போக்கவில்லையே!" என்று அம்மனிடம் அவன் பிரார்த்தித்துக் கொள்ளுவான்.

'குழந்தையில்லையே' என்ற ஏக்கம் விநாயக சுந்தரத்துக்கும், அவன் மனைவிக்கும் நாளுக்கு நாள் அதிகமாகிக் கொண்டு வந்தது. இராமேசுவரம், காசி என்று தல யாத்திரை போய்வந்தார்கள் அவர்கள். பழைய கால நம்பிக்கைகளையும் புறக்கணிக் காமல் அரசமரத்துக்கும், வேப்பமரத்துக்கும் கலியாணம் செய்யும் சடங்கைக்கூடச் செய்தார்கள்.

என்ன செய்தும் பயனில்லை. கடவுளும், விதியும், நல்வினையும் அவர்கள் மட்டில் கண்களைத் திறந்து கருணையோடு பார்க்கவேயில்லை.

கடவுளுக்குத்தான் என்ன ஓரவஞ்சனை? வைத்துப் பேண முடியாத ஏழைக் குடும்பங்களில் அவர்களால் கட்டிக்காக்க இயலாத அத்தனை குழந்தைகள்! இல்லையே என்று ஏங்குபவனுக்குப் பேருக்கு ஒரு குழந்தைகூட இல்லையாகவே போய்க் கொண்டிருக்கிறது.

விநாயக சுந்தரம் அவன் கண்காணப் பார்த்துக்கொண்டு தானே இருக்கிறான்? காய்ப்பில்லாத புளியந்தோப்பும், இருபது ரூபாய் வாடகை வருமானமும் தவிர, வேறு வக்கில்லாத விறகு கரிமுட்டைக் கடைக் கண்ணுசாமிக்கு ஐந்து பெண் குழந்தைகள், மூன்று ஆண் குழந்தைகள். மனிதன் சமாளிக்க முடியாமல் திண்டாடுகிறான். சண்டைக் கெடுபிடி ஓய்ந்து ரேஷன் கட்டுப்பாடுகளையும் எடுத்தபின் கரி, விறகு வியாபாரம் படுத்துவிட்டது. சுற்றிலும், மலையும் காடும் உள்ள கிராமத்தில் எந்தப் பயல் காசு கொடுத்து விறகு வாங்குவான்? எப்போதோ பாரஸ்ட்காரன் கண்ணில் மண்ணைத் தூவி மலையை மொட்டையடித்து அடுக்கிய விறகுகளும், கரி மூட்டைகளும் ஆண்டாண்டுக் கணக்காகக் குவிந்து கிடக்கின்றன. பெரிய குடும்பம், கண்ணுசாமி சமாளிக்க முடியாமல் திணறுகிறான்.

கண்ணுசாமிக்கு விநாயகசுந்தரத்தின் சொத்துச் சுகங்களில் ஒரு கண் இருந்தது. எட்டுக் குழந்தைகளின் பாரத்தை எவன் தாங்குவது? கடைசிப் பையனை (மூன்றுவயது) விநாயக சுந்தரத்துக்குத் தத்துக் கொடுத்துவிடலாமா என்று அவனுக்கு ஒரு நப்பாசை உள்ளூற உண்டு. இவன் ஆசைப்பட்டால் மட்டும் போதுமா? விநாயக சுந்தரத்துக்கு அந்த எண்ணம் உண்டாக வேண்டாமா? உண்டாகவில்லையே?

பேச்சுப் போக்கில் அந்த விஷயம் நாலு பெரியவர்கள் மூலம் விநாயகசுந்தரத்தின் காதில் விழும்படி தானே ஏற்பாடு செய்தான் கண்ணுசாமி. விநாயகசுந்தரம் அதைப் பொருட்படுத்தினதாகவே தெரியவில்லை. அலட்சியமாக இருந்துவிட்டான். நெய்ப்பந்தம் பிடிக்கப் பேரன் கிடைக்காமலே அவன் தந்தையும் இறந்து போய்விட்டார்.

அவனுக்கு வயது கிட்டத்தட்ட ஐம்பதுக்கு மேலாகி விட்டது. விநாயக சுந்தரத்தின் மனைவிக்குக்கூட 'இனிமேல் இல்லை' என்கிற மாதிரி ஓர் அவநம்பிக்கை ஏற்பட்டு விட்டது. "என்னங்க... இனிமேலும் இப்படி இருந்தா நல்லா இல்லே! ஏதாவதொரு வழியைப் பண்ணுங்க. சொந்தப் பிள்ளை நமக்குக் கொடுத்து வைக்கலை. தத்துப்பிள்ளைதான் கொடுத்து வச்சிருக்குப் போலிருக்கு" என்று சுவீகாரத்தைப் பற்றி அவனுக்கு நினைவு படுத்தினாள் அவள்.

"பார்க்கலாம்! அம்மன் திருவிழா முடிந்து விடட்டும். ஓர் ஏற்பாடு செய்வோம்!" என்றான் விநாயக சுந்தரம். கரிமூட்டைக் கண்ணுசாமியின் மனைவி அடிக்கடி தன் கடைக்குட்டிப் பயலை இழுத்துக்கொண்டு விநாயக சுந்தரத்தின் வீட்டுக்கு வந்துபோக ஆரம்பித்தாள்.

"அடே பயலே! அவங்க வீட்டுக்குப் போனா அந்த ஆச்சிகிட்ட ஒட்டிப் பழகுடா, அவங்கதான் இனி உனக்கு அம்மாடா" என்று பாதி வேடிக்கையாகவும், பாதி உண்மையாகவும் தன் கடைசிப்பையனை உற்சாகப்படுத்திக் கொண்டிருந்தான் கண்ணுசாமி. விநாயக சுந்தரம் அந்த வருடம் கண்ணுடைய நாயகி அம்மன் விழாவுக்காகப் பிரமாதமான முறையில் வாண வேடிக்கை உபய ஏற்பாடுகள் செய்வதில் ஆழ்ந்திருந்தான்.

அவன் மனைவிக்குக்கூட வரவர இதெல்லாம் நம்பிக்கை குறைந்துவிட்டது. "இது ஏன் இவரு இப்பிடிக் கைக்காசைக் கரியாக்கி வாண வேடிக்கை விடறேன் பேர்வழியே என்று வருசந்தவறாமே அலையறாரு. இவ்வளவு செய்தப்பறமும் அந்த அம்மன் இவர் பக்கம் கண் திறந்து பார்த்தாளா?" என்று நினைக்கவும், அக்கம் பக்கத்துப் பெண்களிடம் சொல்லவும் தலைப்பட்டாள்.

"இந்தாங்க! இந்த வாணவேடிக்கை உபயத்துக்குச் செலவழிக்கிற காசை நாலு ஏழைப் பிள்ளைகளுக்குச் சோறு போட்டாலும் பிரயோசனமுண்டு. எதுக்காக இப்படி அலைஞ்சு இந்த வயசுலே உடம்பைக் கெடுத்துக்கணும்? எல்லாம் இத்தனை வருடம் செய்து கட்டிக் கிட்ட புண்ணியம் போதும்." என்று ஒருநாள் அவனிடமே அவள் துணிந்து அதைச் சொல்லிவிட்டாள்.

முகத்தில் சினம் பொங்கத் தன் மனைவியை ஏறிட்டுப் பார்த்தான் விநாயகசுந்தரம். "இனிமேல் என்னிடம் இப்படிப் பேசாதே! இந்த வீடு வாசல் சொத்து சுகம் எல்லாம் அந்த அம்மன் கொடுத்ததடி! எனக்கு நன்மை செய்தாலும் செய்யாவிட்டாலும் அவள் என் கண்கண்ட தெய்வம். என்ன வினைப்பயனோ? இவ்வளவு பெருமைகளையும் எனக்குக் கொடுத்திருக்கும் அவளுக்கு என் வீட்டில் ஒரு குழந்தையைக் கொடுக்க

மட்டும் மனம் வரவில்லை. அதற்காக நான் சோர்ந்து விடமாட்டேன். அவளையே என் குழந்தையாகப் பாவித்து வாணவேடிக்கை காட்டிக்கொண்டு வருகிறேன்" என்று பக்தி தொனிக்க, நாத் தழுதழுக்கக் கூறினான் விநாயக சுந்தரம். அப்போது அவன் முகத்தில் தான் எவ்வளவு ஒளி? எத்தனை நம்பிக்கை?

அவன் மனைவிக்குப் பதில் பேசுவதற்கே வாய் இல்லாமல் போய்விட்டது.

கோவில் உற்சவ அழைப்புப் பத்திரிகையில் விநாயக சுந்தரத்தின் வாணவேடிக்கை உண்டு என்பதைப் பிரமாதமாக விளம்பரப்படுத்தியிருந்தார்கள். அந்தப் பெயர் உற்சவத்தில் எவ்வளவு பெரிய கூட்டத்தைக் கூட்டுவதற்குப் பயன்படும் என்பது எல்லோருக்கும் தெரிந்ததுதான்.

எல்லா வருடங்களையும்போல் இல்லாமல் அந்த வருடம் புதுப் புது வாணங்களாகச் செய்திருந்தான் விநாயகசுந்தரம். பத்து நாள் திருவிழா. முதல் ஒன்பது நாட்கள் அவனுடைய ஆட்கள் வாணவேடிக்கையைக் கவனித்துக் கொண்டார்கள். அவன் சுவாமி புறப்பாட்டு ஊர்வலத்தில் தர்மகர்த்தாவோடு நடந்து கொண்டே வாணவேடிக்கை ஏற்பாடுகளை மேற்பார்த்து வந்தான். விநாயகசுந்தரம் தன் ஆட்களை அதிகாரம் பண்ணி வேலை வாங்குகிற மிடுக்கே தனி.

"ஏ! அப்பா ஏழுமலை! சுற்றிக் குழந்தைப் புள்ளைங்களா நிக்கிது. வாணத்தைப் பார்த்து விடு."

"டேய் சுதரிசனம், ஏரோப்ளேன் வாணத்தைத் தலை கீழாப் பிடிச்சுக் கொளுத்தி விடாதே! மூக்கிலே முகரையிலே பாய்ஞ்சு அடிச்சிடப்போவுது."

"யப்பா தீவட்டி, தள்ளி நில்லு! வாணம் விடறது தெரியலே?" - இது சாமிக்குத் தீவட்டி பிடிக்கிறவனை நோக்கிச் சொன்னது.

"ஏ கிழவி! ஒதுங்கி நின்னு பாரு! அப்பிடி வாயைத் திறக்காதே. வாணம் வாயிலே வந்து விழுந்துடப்போவுது."

-அதிகாரமும், அதட்டலும், சிரிப்பும், செயலுமாக அம்மன் புறப்பாட்டை நடத்திக்கொண்டு போவான் விநாயகசுந்தரம். வாணவேடிக்கையைவிட அவன் வாய் வேடிக்கை பிரமாதமாக இருக்கும். சில சமயங்களில் அவனது நகைச்சுவைப் பேச்சே வாணமாக இருக்கும்.

பத்தாவது நாள் கடைசித் திருவிழா. எள் போட்டால் கீழேவிழ இடமில்லை. ஒரே கூட்டம். அக்கம் பக்கத்து ஊர் மக்களெல்லாம் வந்திருந்தார்கள். அம்மன் புறப்பாடாகிக் கோவில் வாசலைக் கடந்து வீதியில் வந்துவிட்டாள். கடைசி நாள் அன்றைக்கு மட்டும் விநாயகசுந்தரம் தன் கையாலேயே வாணம் விட்டுக்கொண்டு வருவான். அரை வேஷ்டியை முழங்காலுக்குமேல் தார்ப் பாய்ச்சிக் கட்டிக்கொண்டு திறந்த மார்போடு திருநீற்றுக் கோலங்களுடன் அன்று அவன் பரம பக்தனாகக் காட்சியளிப்பான். அவன் பக்கத்தில் ஓர் ஆள், கூடை நிறைய வாணத்தோடு வருவான்.

விநாயக சுந்தரம் கூடையிலிருந்து ஒவ்வொரு வாணமாக எடுத்துத் தீப்பொருத்தி மேலே விடுவான். அந்தக் கலையை வைத்துக் கொண்டு அற்புதமான வேடிக்கையைக் காட்டுவான் அவன். தரையில் நின்றுகொண்டு வானில் ஒளியைச் சிதறி விளையாடும் அந்த விந்தை அவனுடைய தனித்திறமை.

அதனால்தான் கடைசி நாளில் அத்தனைக் கூட்டம் கூடியிருந்தது. வாண வேடிக்கை பார்ப்பதற்காகத் தெருவின் இரு சிறகிலும் கூட்டம். வீடுகளின் மொட்டை மாடிகளிலும் கூட்டம். அன்றைக்கு ஒருநாள் மட்டும் யாரும் யாரையும் கண்டிக்க முடியாது. யார் வீட்டு மாடியில் எவர் நிற்பதென்ற உரிமைப் பேச்செல்லாம் கிடையாது. உள்ளூர் ஆட்கள், வெளியூர் ஆட்கள், வேறு தெரு ஆட்கள், எல்லோரும், எல்லோர் வீட்டு மாடியிலும் சுவாதீனமாக வாண வேடிக்கை பார்க்க ஏறி நின்று கொள்ளுவார்கள்.

அம்மன் புறப்பாடாகித் தெருவில் இறங்கிய சிறிது நேரத்திற்கெல்லாம் வாண வேடிக்கை ஆரம்பமாயிற்று. அம்மன் ஒவ்வோரிடத்திலும் நின்று மெல்ல நகர்ந்தாள். விநாயக சுந்தரத்தின் கைவரிசைகள் விண்ணின் இருள் நீலப்பரப்பில் பல வண்ண ஒளிகளை உமிழ்ந்து கொண்டிருந்தன. ‘எடுத்தது கண்டார் இற்றது கேட்டார்’. என்று இராமன் வில் ஒடித்த பெருமையைக் கவிஞர் கம்பர் பாடின மாதிரி விநாயக சுந்தரம் வாணம் எடுத்ததை எல்லோரும் கண்டார்கள். சர்ரென்று அது மேல்நோக்கி எழுந்ததைக் கண்டு வியக்குமுன் ஒளி மலர்களாக வானில் மலர்ந்து வியப்பூட்டியது அந்த வாணம்.

கட்டாந்தரையில், மொட்டைப் புளியமரத் தோப்பில், ஓட்டுக்கட்டிடத்தில் இத்தனை விந்தைகளை அவனால் எப்படிப் படைத்து வித்தை காட்ட முடிகிறதென்று பட்டிக்காட்டு ஜனங்களுக்கு ஒரே ஆச்சரியம்.

அம்மன் ஊர்வலம் மெதுவாக நகர்ந்து தெருவைக் கடந்து கொண்டிருந்தது. மேளக்காரரும், நாதசுரக்காரரும் வெளுத்து வாங்கினார்கள். பொய்க்கால் குதிரைக்காரர்கள் நிஜக்குதிரை மாதிரியே ஆடிக் காட்டினார்கள். ஆனால், அதையெல்லாம் யார் கவனித்தார்கள்?

விநாயகசுந்தரத்தின் வாணவேடிக்கை ஒன்றைத்தானே அத்தனைக் கூட்டமும் ஆவலோடு எதிர்பார்த்துக் கொண்டிருந்தது.

பாதித் தெரு வருவதற்குள்ளேயே தன்னைப்பற்றிப் பிரமாதமான புகழ் வார்த்தைகள் அவன் காதுகளில் விழுவதற்குத் தொடங்கிவிட்டன.

“அடேயப்பா! இதற்கு முன் எந்த வருடத்திலும் வாண வேடிக்கை இவ்வளவு பிரமாதமாக அமைந்ததில்லை. விநாயக சுந்தரம் ஜமாய்த்துவிட்டார்!”

தர்மகர்த்தா அவன் காதில் கேட்கும்படியாகவே யாரிடமோ அவனைப் புகழ்ந்து கொண்டிருந்தார். அவனுடைய மனத்திலும் கைகளிலும் உற்சாகம் முறுக்கு ஏறியிருந்தது. தர்மகர்த்தா ஒருவருடைய புகழ்ச்சிக் குரல்தான் அவனால் அந்தக்

கூட்டத்தில் அடையாளம் புரிந்துகொள்ள முடிந்த குரல். அடையாளம் புரியாத இன்னும் எத்தனையோ குரல்கள் அவனை - அவன் வித்தையை அவன் காது கேட்கும்படியே புகழ்ந்து கொண்டிருந்தன.

ஊர்வலம் தெருத் திரும்பிவிட்டது. ஒரு மூலையில் ஏழெட்டுக் குடிசைகள். அதற்கருகில் ஒரு பாழ்மண்டபம். அது ஊரின் சேரி. மாடி வீட்டுக் குழந்தைகளுக் கெல்லாம் வாணவேடிக்கை பார்க்க மொட்டைமாடி இருந்தது. சேரிக் குழந்தைகள் என்ன செய்யும் பாவம்? கிட்டவும் வரமுடியாது. எட்டி நின்று பார்க்க மாடியும் அங்கே இல்லை.

மேலே ஏறிச் செல்லப் படியுடன் இருந்த அந்தப் பாழ்மண்டபம் சேரிக் குழந்தைகளின் குறையைப் போக்கியது. அந்த இருட்டில் அதன் மேலே ஏறி நின்று திருவிழா வாணவேடிக்கை பார்ப்பதற்காக அந்தக் குழந்தைகளை யாரும் ஏன் என்று கண்டிக்கப் போவதில்லை. பார்க்காவிட்டாலும் ஏன் போய்ப் பார்க்கவில்லை என்று யாரும் கேட்கப் போவதில்லை.

அந்தச் சிறு குழந்தைகளுக்கு ஆசையில்லாமலா போகும்? உலகத்திலுள்ள எல்லாக் குழந்தைகளுக்கும் ஆசை ஒரே மாதிரித்தானே இருக்க முடியும்? குஞ்சும் குளுவானு மாகச் சேரியைச் சேர்ந்த ஏழெட்டுக் குழந்தைகள் அந்தப் பாழ் மண்டபத்தின் மேல் வந்து நின்று கொண்டிருந்தன.

அம்மன் ஊர்வலம் பாழ் மண்டபத்தை அணுகியபோது கட்டிடங்கள் குறைந்து பெரும்பகுதி திறந்த வெளியாக இருந்ததனால் அதிகம் சக்தியுள்ள புது மாதிரி வாணம் ஒன்றை முதல் தடவையாகக் கொளுத்தி விட்டான் விநாயகசுந்தரம்.

வாணம் அவன் கையிலிருந்து புறப்பட்ட மறு விநாடி பாழ்மண்டபத்தின் உச்சியிலிருந்து வீல் என்று பயங்கரமாக ஒரு குழந்தையின் அலறல் ஒலித்தது. "என்ன? என்ன?" என்று பதறிய குரல்களும் பரபரப்பும் கலவரமுமாகக் கூட்டம் அலை மோதியது. ஒருவருக்கும் ஒன்றும் புரியவில்லை, ஆனால், விநாயக சுந்தரத்துக்கு உடனே புரிந்துவிட்டது. கூட்டத்தை வகிர்ந்துகொண்டு மனம் பதறி ஓடினான். பாழ்மண்டபத்தில் ஏறினான். அங்கே தென்பட்ட காட்சியைக் கண்டதும் அவனுக்குக் குடல் பதறியது. சரீரம் கிடுகிடுவென்று நடுங்கியது. சிறு குழந்தை மாதிரி விக்கி விக்கி அழுதான்.

பாழ் மண்டபத்தில் நின்று கொண்டிருந்த சேரிக் குழந்தைகளில் ஓர் ஐந்து வயதுப் பெண் குழந்தையின் கண்களில் அவனுடைய வாணம் பாய்ந்து கோரப்படுத்தியிருந்தது. மற்றக் குழந்தைகளும் பயந்து போய் மிரண்டு அழுதன.

அப்படியே அந்தக் குழந்தையை வாரி எடுத்துக் கொண்டு உள்ளூர் லோகல் பண்டு ஆஸ்பத்திரிக்கு ஓடினான் அவன்.

குழந்தைக்குக் கண் போய்விட்டது. மூன்று நாள் வரை 'பார்க்கலாம், பார்க்கலாம்' என்று சொல்லிக் கொண்டிருந்த டாக்டர் நான்காம் நாள் கண் போய்விட்டதென்று

*தீர்மானமாகச் சொல்லிவிட்டார். சேரி ஆட்களை விசாரித்ததில் அது தாய் தந்தையற்ற அநாதைக் குழந்தையென்று தெரிவித்தனர்.*

*குழந்தையை வண்டியில் போட்டுக் கொண்டு ஆஸ்பத்திரியிலிருந்து வீட்டுக்குத் திரும்பினான் அவன். வீட்டுக்குப் போகிற வழியில் கண்ணுடைய நாயகி அம்மன் கோவில் வந்தது. அவன் கை கூப்பினான். "தாயே! இந்த அநாதைக் குழந்தையின் கண்ணை என் கையால் பிடுங்கி எறிய வேண்டுமென்பதுதான் உன் சித்தமா? இதற்குக் கண் போயிற்று! எனக்குக் கண் கிடைத்துவிட்டது" அவன் குரல் தழுதழுத்தது. அதே சமயம், அவன் மனத்தில் ஒரு மின்னல் மின்னியது. இது அநாதைக் குழந்தையல்ல! தாய் தந்தையற்றதல்ல! இது நீதான். கண்ணுடைய நாயகியாகிய நீயேதான் கண்ணிழந்து என் வீட்டுக்கு வர இப்படி ஒரு குழந்தையாகப் பிறந்து தந்திரம் செய்திருக்கிறாய்!" பித்தனைப் போல் முணுமுணுத்தான் விநாயகசுந்தரம்.*

*குழந்தையை வண்டியிலிருந்து வீட்டுக்குள் சுமந்து கொண்டு போகும் போது அம்மன் சிலையையே தூக்கிக்கொண்டு போகிற மாதிரி பயபக்தியுடனே தூக்கிக் கொண்டு போனான் விநாயகசுந்தரம்.*

*ஆம்! வாணம் உலகத்துக்கெல்லாம் வேடிக்கை. அதைச் செய்கிறவனுக்கு அது ஒவ்வொரு கணமும் வினைதான்.*

(1978-க்கு முன்)



## 139. புகழ் என்னும் மாயை

நடிகமணி நாவுக்கரசனுக்கு அன்று அப்படி ஒரு விநோதமான ஆசை ஏற்பட்டது. தன்னைப்பற்றி வெளியில் ஆண்களும், பெண்களும், சிறுவர்களும், சிறுமிகளும் என்ன பேசிக் கொள்கிறார்கள், எப்படிப் புகழ்கிறார்கள், எவற்றைத் தனது பெருமைகளாகச் சொல்லி வியக்கிறார்கள், எவற்றைத் தமது சிறுமைகளாகச் சொல்லி இகழ்கிறார்கள் - என்றெல்லாம் தானே நேரில் கேட்டுத் தானே நேரில் பார்த்துத் தெரிந்து கொள்ள வேண்டும்போல நடிக மணிக்கு விந்தையானதொரு விருப்பம் உண்டாயிற்று.

நேரில் தம்மைச் சுற்றிலும் காதில் கேட்கிற - கேட்ட - கேட்கும் புகழை அவர் நம்பத் தயாராயில்லை. பத்திரிகைகளும் நண்பர்களும் திறமைக்காக அல்லாமல் நட்புக்காகவும், தயவுக்காகவும் புகழுகிறார்களோ என்று நீண்ட நாட்களாக அவருடைய மனத்தில் ஒரு சந்தேகம் உறுத்தியது. தற்பெருமையையும், செல்வக்-குவியலின் சுகபோக வீறாப்பையும், எண்ணி எண்ணி மனத்திற்கே அந்த எண்ணம் சலித்துப் போய், ‘இன்னும் ஏதோ உன்னிடம் இல்லையே, ஏதோ குறைகிறதே’ என்று உள் மனமே தன்னை இடித்துக் காட்டி எதற்காகவோ தவிக்கும் சமயங்களில் எல்லாம் நடிக மணிக்கு இந்த ஆத்ம விசாரம் தவிர்க்க முடியாமல் உண்டாகும்.

“உண்மையாகவே இந்த உலகம் என்னைப் பற்றி என்னதான் நினைக்கிறது? என்ன பேசுகிறது? இவ்வளவு புகழையும், செல்வத்தையும் சுகபோகக் கட்டுக் காவலையும் கடந்து வந்து என் செவிகளை எட்ட முடியாத அபிப்ராயங்களுக்கும் என் கவனம் செலுத்தப்பட வேண்டுமல்லவா? ஆசையவலங்களும், பொறாமை போட்டிகளும், வறுமை வாட்டங்களும் மண்டிக் கிடக்கும் உயிருள்ள உலகத்தின் அழுக்கு நிறைந்த வீதிகளிலும், சந்துகளிலும், பொந்துகளிலும், மூலை முடுக்குகளிலும், பயங்களற்ற தனிமையில், தயக்கங்களற்ற துணிவில் மனிதர்கள் என்னைப்பற்றி என்ன பேசிக் கொண்டிருக்கிறார்கள்? என்ன நினைத்துக் கொண்டிருக்கிறார்கள்? எப்படிப் புரிந்து கொண்டிருக்கிறார்கள்?” - நடிக மணியின் சிந்தனை புரண்டது.

தன்னை யாரும் தெரிந்து கொள்ள முடியாமல், தான் எல்லோரையும், எல்லாவற்றையும் தெரிந்து கொள்ளவும் புரிந்து கொள்ளவும் முடிந்த மாதிரியில் வெளியே ஒரு சுற்றுச் சுற்றிவிட்டு வந்துவிட வேண்டுமென்று தீராத தாகம் கொண்டார் அவர்.

அப்போது இரவு ஏழு மணி. அன்றிரவு ஒன்பது மணிக்கு ஏதோ ஒரு படப்பிடிப்புக்குக் ‘கால்ஷீட்’ இருந்தது. முதல் வேலையாக டெலிபோனை எடுத்து உடல் நலமில்லாததால் அன்று படிப்பிடிப்புக்கு வர இயலாதென்று ‘கால்ஷீட்’டை

ரத்துச் செய்தார். அடுத்துத் தனக்கு மிக நெருங்கிய நண்பரான 'மேக்-அப்' நிபுணர் ஒருவருக்கு டெலிபோன் செய்து சில சாதனங்களோடு தன் பங்களாவுக்கு உடனே வருமாறு அவரை வேண்டிக் கொண்டார். கால் மணி நேரத்தில் 'மேக்-அப்' நிபுணர் டாக்ஸியில் வந்து சேர்ந்துவிட்டார்.

"யாரும் என்னை அடையாளம் கண்டுகொள்ள முடியாதபடி தாராளமாக வெளியில் சுற்றிவிட்டு வர வேண்டும். அதற்கேற்ற மாதிரியில் எனக்கு ஒரு மேக்-அப் போட்டு விடுவீரா?"

நடிக மணியின் விருப்பத்தைக் கேட்டு மேக்-அப் நிபுணர் திகைத்தார். ஆனாலும் மறுக்காமல் ஒப்புக் கொண்டார்.

முக்கால் மணி நேரத்தில் நடிக மணியை அவரது வீட்டிலுள்ளவர்களே அடையாளம் கண்டு கொள்ள முடியாதபடி உருமாற்றி விட்டார் மேக்-அப் நிபுணர். தாடியும், மீசையும், நரைத்த தலையும், மூக்குக் கண்ணாடியுமாக ஏதோ ஓர் ஏழைக் குடும்பத்து நடுத்தர வயது மனிதனைப் போல் மாறியிருந்தார் நடிகமணி. காரியம் காதும், காதும் வைத்தாற் போல் பரம ரகசியமாக நடந்தது. 'யாரிடமும் இதைப் பற்றி மூச்சுவிடக் கூடாதென்று' மேக்-அப் நிபுணரிடம் உத்தரவாதம் வாங்கிக் கொண்டிருந்தார் நடிகர். வெளியே புறப்படுமுன் கண்ணாடியில் பார்த்துச் சரி செய்து, குரலை மாற்றிக்கொண்டு பேசவும் பழகிக் கொண்டார். நடிகரிடம் விடை பெற்றுக் கொண்டு மேக்-அப் நிபுணர் புறப்பட்டுப் போய்விட்டார்.

இரவு மணி எட்டே கால். படங்களில் நடித்துப் புகழ் பெற்ற நடிகமணி, வாழ்க்கையில் நடித்துப் பார்க்க வீட்டை விட்டு வெளியேறினார். மூக்குக் கண்ணாடியணிந்த கிழவராக அவர் புறப்பட்டார்.

"உலகத்துத் துன்பங்களே தெரியாமல் அரண்மனைச் சுகங்களில் மயக்கப்-பட்டிருந்த புத்தர் அங்கிருந்து யாருக்கும் தெரியாமல் மௌனமாக உண்மை உலகை அறிய வெளியேறினபோது அவருடைய மனத்திலும் இப்படித்தானே ஆவல்கள் துடித்திருக்கும்? உயிரும் சதையுமாக உண்மை உலகத்தைக் காண விரும்புவதில்தான் எத்தனை சுகம்!"

அவரது அந்தப் பிரம்மாண்டமான அரண்மனைபோன்ற மாளிகையின் வாயிலுக்கு அப்பால் வெறும் கால்களால் நடந்து தெருவில் இறங்குவது நடிகமணியின் வாழ்வில் முதல் முதலாகப் புதிய அநுபவம். பங்களா வாயிற்படியில் இருந்தவாறே அழகிய பெரிய காரில் ஏறிச் செல்லும் வழக்கத்தை இப்போதுதான் முதல் முறையாக அவர் மீறுகிறார்.

'சே!சே!' பங்களா வாயிலுக்கு இந்தப் பக்கம் தெரு இத்தனை அழுக்காகவா இருக்கும்? செருப்பாவது போட்டு கொண்டு வந்திருக்கலாமே! - வீட்டில் இருந்தவை எல்லாம் உயர்ந்த ரகத்துப் புதுச் செருப்புக்கள். அவற்றைக் காலில் அணிந்துகொண்டு புறப்பட்டால், போட்டுக் கொண்டிருக்கும் வேடத்துக்குப் பொருந்தாது. சேறும்

சக்தியுமாக இருந்த தெருவில் கூச்சத்தை விட்டுத் துணிந்து விரைவாக நடந்தார். வெறுங்கால்களால் மண்ணை மிதித்தறியாத பட்டுப் பாதங்கள் சிறிது நொந்தன. கால்கள் இலேசாக உறுத்தி வலிப்பது போலிருந்தது.

தெருவின் இரு புறத்துச் சுவர்களிலும் தான் நடித்த படங்களின் பெரிய பெரிய சுவரொட்டிகள் அழகாகவும் கவர்ச்சியாகவும் ஒட்டப்பட்டிருப்பதைப் பார்த்துக் கொண்டே நடந்தார் நடிகர்.

மேக்-அப் நிபுணரை அவருடைய வீட்டில் கொண்டு போய் விடுவதற்குச் சென்றிருந்த நடிமணியின் கார் எதிரே வீதியில் திரும்பி வந்து கொண்டிருந்தது. கப்பல் போல நீளமாக, அகலமாக, அழகாக, எத்தனை பெரிய கார்! வீதியையே நிறைத்துக்கொண்டு கம்பீரமாகப் பாய்ந்து வந்தது. அவர் விலகிக்கொண்டு காருக்கு வழி விடவில்லை. கொஞ்சம் நடு வீதியிலேயே தயங்கி நின்று விட்டார். கார் கிறீச்சிட்டு நின்றது.

"கிழட்டுப் பொணமே! கண்ணு அவிஞ்சு போச்சா? காரிலே விழுந்து சாவாதே. பார்த்து நட!" காரை நிறுத்தி அவருடைய டிரைவரே ஒரு நிமிடம் அவரைத் திட்டிவிட்டுப் போனான்.

"கண் அவிந்து போகிறதாவது? இப்போது தானே கொஞ்சம் கொஞ்சமாகக் கண்ணே திறக்கத் தொடங்கியிருக்கிறது!"

மேலே நடந்தார் நடிகர். காஸ் விளக்குகளும் பாண்டு வாத்திய முழக்கமுமாகச் சினிமா விளம்பர வண்டிகள் எதிரே வந்தன. முன்னால் ஓர் ஆள் எல்லோருக்கும் விளம்பர நோட்டீஸ் கொடுத்துக் கொண்டு வந்தான். சிறு குழந்தைகள் நோட்டீசுக்காக அவனைச் சூழ்ந்துகொண்டு மொய்த்தன. அவனோ குழந்தைகளை விலக்கித் தள்ளிவிட்டு, ஒதுங்கி நடந்து கொண்டிருந்த அவர் கையில் ஒரு நோட்டீஸைக் கொண்டு வந்து திணித்து விட்டுப் போனான். சிரித்துக் கொண்டே தெருவிளக்கு வெளிச்சத்தில் நோட்டீஸை விரித்துப் படித்தார் அவர். "நடிகமணியின் சிறந்த நடிப்புக்காக யாவரும் அவசியம் பார்க்க வேண்டிய படம்" என்ற வாக்கியத்தைப் படித்தபோது சிரிப்புப் பொங்கிக் கொண்டு வந்தது அவருக்கு.

நடிகமணி மிகச்சிறந்த - இதுவரை எந்தப் படத்திலுமே நடித்திராத நடிப்பை - இன்று இந்த வீதியின் இருளில் அல்லவா நடித்துக் கொண்டிருக்கிறார்? இதைப் பார்க்க யாரும் காசு கொடுத்து டிக்கெட் வாங்கிக் கொண்டு வரக் காணோமே!-

"தாத்தா! தாத்தா! அந்த நோட்டீஸை எனக்குக் குடு!" ஒரு சிறு பெண் குழந்தை ஓடி வருகிறது. எவ்வளவு அழகான பிஞ்சு முகம் இந்தக் குழந்தைக்கு?

"நீயே வச்சுக்க, பாப்பா! எனக்கெதுக்கு?" என்று குழந்தையின் பிஞ்சுக் கைகளில் அந்த நோட்டீஸைக் கொடுத்துவிட்டு முதுகில் செல்லமாகத் தட்டிக்கொடுத்து அனுப்பினார் நடிகமணி. எதிரே இரண்டு கல்லூரி மாணவர்கள் வேகமாகப் பேசிக்கொண்டே வருகிறார்கள்.

"செகண்ட் ஷோவுக்கு நேரமாச்சு; வேகமாக நட. இப்பவே போனாத்தான், 'க்யூ'விலே நின்னு டிக்கெட் வாங்கலாம்."

"நாளைக்குப் பரீட்சையாச்சேடா! நீயானால் சினிமாவுக்கு வாடான்னு உசிரை வாங்கிறியே?"

"சரிதான் வாடா, சொல்கிறேன். உலகத்திலேயே இல்லாத பிரமாதமா இன்னிக்குத்தான் பரீட்சை புதுசா வருதா என்ன? நடிக மணி இந்தப் படத்திலே 'ஏ ஒன்' ஆக நடிச்சிருக்காண்டா! எல்லோரும் பிரமாதமாச் சொல்றாங்க!"

- அந்த இளைஞனுக்கு இருந்த உற்சாகத்திலே நடிக மணியை ஏக வசனத்திலே ஒருமையாகப் பேசிப் புகழ்ந்து கொண்டு போகிறான் அவன்.

நடிகமணி இதைக் கேட்டுச் சிரித்துக்கொண்டே மேலே நடந்தார். ஏதோ ஒரு கிராமத்திலிருந்து கொண்டு நெற்றி வேர்வை நிலத்தில் விழப் பாடுபட்டு, அந்தப் பையனின் படிப்புக்காகச் சுளை சுளையாய்ப் பணம் அனுப்பிக் கொண்டிருக்கும் அவனது ஏழைத் தகப்பனின் முகத்தை நடிக மணி இப்போது தன் மனக்கண்களில் கற்பனை செய்ய முயன்றார். நெஞ்சின் மெல்லிய பரப்பில் முட்கள் பாய்வதுபோல் ஏதோ ஒரு வலி உண்டாயிற்று. ஒரு வேதனை கால் கொண்டது.

நடந்து நடந்து அமைதியான தெருக்களைக் கடந்து கலகலப்பான ஒரு வீதிக்குள் புகுந்தார் அவர். தெருத்திருப்பத்தில் ஒளிமயமான மின் விளக்கு அலங்காரங்களோடு ஒரு சினிமாத் தியேட்டர்- அதில் அவர் நடித்த படம் நூறாம் நாள் விழாக் கொண்டாடி முடித்தும் இன்னும் கூட்டம் குறையாமல் வெற்றிகரமாக ஓடிக் கொண்டிருந்தது. தியேட்டருக்கு எதிர்த்தாற் போல் அங்கே ஒரு பொதுப் பூங்கா அமைந்திருக்கிறது.

பூங்காவில் உள்ளே நுழைந்து கூட்டத்தோடு கூட்டமாகப் புல் தரையில் ஓரிடத்தில் அமர்ந்து கொண்டார் அவர். பின்புறம் யாரோ இரண்டு வயதான மனிதர்கள் பேசிக் கொள்ளும் உரையாடல் கேட்கிறது.

"என்ன ஐயா, ராமரத்னம்! எங்கே இந்த நேரத்திற்கு இப்படிப் பார்க்கில் உட்கார்ந்து கொண்டிருக்கிறீர்?"

"ஒய்ப் சினிமாவுக்குப் போயிருக்கிறாள். ஆட்டம் விட்டதும் இருந்து கூட்டிக்கொண்டு போகணும்! அதான் உட்கார்ந்து காத்துக் கொண்டிருக்கேன்..."

"ஏன் ஐயா நீயும் கூடப் போயிருக்கக் கூடாதோ?"

"தெரிந்தால்தானே சார் போகலாம்? சாயங்கலாம் ஆபிஸ் விட்டு வீட்டுக்கு வந்து பார்த்தால் பக்கத்து வீட்டிலே சாவியைக் கொடுத்து விட்டுப் போயிருக்கிறாள். 'அடுப்பிலே பால் காய்ச்சி வைத்திருக்கிறது. டிகாக்ஷன் போட்டுக் காபி கலந்து கொள்வீர்களாம் - திரும்பக் கூட்டிக் கொண்டுவர ஒன்பதரை மணிக்குத் தியேட்டருக்கு வருவீர்களாம்' என்று பக்கத்து வீட்டில் விவரம் சொல்லிச் சாவியைக் கொடுக்கிறார்கள்..."

"சினிமாவில் அப்படி ஒரு பைத்தியமா?"

"இரைந்து கேட்காதீர் இந்தக் கேள்வியை! யார் காதிலாவது விழுந்தால் பிறகு உம்மைத்தான் பைத்தியம் என்பார்கள். முந்தாநாள் பக்கத்து வீட்டிலே ஒரு சங்கதி நடந்தது. பள்ளிக்கூடத்திலே பத்தாங் கிளாஸோ, என்னமோ படிக்கிற பையன் ஒருத்தன் அப்பா அம்மாவுக்குத் தெரியாமல் வெள்ளி டம்ளரை வீட்டிலிருந்து கிளப்பிக் கொண்டுபோய் விற்று விட்டான். 'எதுக்குடா இப்படிச் செய்தே?' என்று தகப்பனார் நாலு அறை வைத்துக் கேட்டபோது 'சினிமாவுக்குப் போகக் காசு இல்லே, டம்ளரை விற்றேன்' என்றான் பயல்!"

"அந்தப் பையனாவது அப்படிச் செய்தான்! எங்கள் தெருவில் ஒரு பையன் மாதாமாதம் பள்ளிக்கூடச் சம்பளத்தைக் கட்டாமல் சினிமாவிற்குக் 'க்யூ'வில் நின்று தகப்பனிடம் உதை படுகிறான்."

"இதெல்லாம் சினிமாவுடைய தப்பென்று சொல்ல முடியாது சார்! சினிமாவிலே எவ்வளவோ நல்ல அம்சம் எல்லாம் காட்டறாங்க. 'நடிக மணி நாவுக்கரசன்'னு ஒருத்தர் படத்துக்குப் படம் அற்புதமாக நடித்திருக்காரு. நம்ம ஆளுங்கதான் கலையை ஒரு கட்டுப்பாட்டோடு இரசிக்கத் தெரியாமே தாறுமாறாகப் பைத்தியம் பிடிச்சுப் போயிடறாங்க" என்று முதலில் பேசிய இருவருக்கும் நடுவே வேறு ஒரு குரல் நுழைந்து சமாதானம் கூறுகிறது.

உட்கார்ந்து கேட்டுக்கொண்டே இருந்த நடிக மணிக்கு மனத்தை என்னமோ பண்ணுகிறது. கணவனை மறந்து சினிமாவுக்கு ஓடும் மனைவி, வெள்ளி டம்ளரை வெள்ளித் திரைக்காக விற்கும் பையன், பள்ளிச் சம்பளத்தைப் படம் பார்க்கச் செலவழிக்கும் சிறுவன் எல்லாரும் மனத்தில் தங்கி முள்ளாகக் குத்தினார்கள். அவ்வளவுக்கும் நடுவில் தன் நடிப்புத் திறமையைப் புகழ்ந்த மூன்றாம் மனிதரின் குரல் மனத்துக்குச் சிறிது ஆறுதலும் தந்தது அவருக்கு.

நடிகமணி பூங்காவிலிருந்து நடந்தார். திரைப்படக் கொட்டகை வாசலில் 'க்யூ'வில் ஏதோ கலவரம். எல்லோருமாகச் சேர்ந்து கும்பலாகக் கூடிக்கொண்டு யாரோ ஒருவனை அடிக்கிறார்கள்: உதைக்கிறார்கள். அருகில் நெருங்கி விசாரித்ததில் யாரோ 'பிக்பாக்கெட்' அடித்து விட்டானாம். அவனைத் தண்டிக்கிறார்களாம்.

சினிமாத் தியேட்டரிலிருந்து சிறிது தள்ளி ஒரு மரத்தடியில் கூலிக்காரிகள் போல் தோற்றமளித்த இரண்டு எளிய பெண்கள் பேசிக்கொண்டு நின்றார்கள்.

"என்னடி அங்கம்மா; உம் புருசன் வீட்டுக்கு இன்னிக்காச்சும் வந்தானா? கஞ்சி காய்ச்சக் காசு கொடுத்தானா?"

"அதையேன் கேட்குறே? என் தலையெழுத்து. கூலியை வாங்கிட்டு முதலாட்டத்துக்கு ஒரு படம். இரண்டாவது ஆட்டத்துக்கு இன்னொரு படம்னு அது பாட்டுக்குப் போயிடுது. நான் கெடந்து திண்டாடுகிறேன். குழந்தை குட்டிங்க எல்லாம் பட்டினி. வீடு நெனைவில்லாமே திரியுற மனுசனை என்னா செய்யிறது?"

"என்னமோ, காளியாத்தா பார்த்து உம் புருசனுக்கு நல்ல புத்தியைக் குடுக்கணும். கலியாணம் கட்டின நாளிலேருந்து நீயும் இந்தக் கஸ்டம்தான் படுறே-" இந்தப் பேச்சைக் கேட்டதும் பரட்டைத் தலையும், பீடிப் புகையுமாக ஒரே படத்துக்கு ஏழு தரம் நாலரையணா 'க்யூவில்' நிற்கும் ஆண்முகம் ஒன்று நடிக மணியின் கற்பனைக் கண்களில் தோன்றுகிறது. கண்களில் நீர் மல்க, நெஞ்சு வேதனையால் துடிக்க, அந்தப் பஞ்சைப் பெண்ணை ஒருகணம் நின்று பார்த்துவிட்டு மேலே நடந்தார் நடிகமணி.

இன்னும் சிறிது தூரம் சென்றதும் ஐந்தாறு குடிசைகள் சேர்ந்தாற்போல் தெரிந்தன. அந்தக் குடிசைகளில் ஏதோ ஒன்றில் இருக்கும் சிறுமி ஒருத்தி நடு வீதியில் நின்று யாரையோ எதிர்பார்த்துக் காத்திருக்கிறாள். நடிகமணி கேட்கிறார்.

"இருட்டிலே ஏன் தனியா நின்னுக்கிட்ருக்கே, பாப்பா?"

"தனியா நிக்காமே வேறே என்னா செய்யிறது தாத்தா? நாயினா சினிமாவுக்குப் போயிடுச்சு. கஞ்சிகாய்ச்சக் காசு குடுக்கலே. நாயினாவைத் தேடிக்கினு அம்மாவும் போயிடிச்சு. குடிசைலே வெளக்கு இல்லே. பயமாயிருக்கு. அங்கே குந்தியிருந்து அலுத்துப் போச்சு."

"உங்க நாயினா என்னா வேலை செய்யிது?"

"கை வண்டி இழுக்குது."

"உங்க நயினா தெனம் தெனம் சினிமாவுக்குப் போகுதே, உன்னை என்னிக்காச்சும் கூட்டிக்கிட்டுப் போயிருக்குதா?"

"நாயினா சம்பாரிக்கிற காசு அது சினிமாவுக்குப் போறதுக்கே காணலியாம். என்னை எங்கே கூப்பிடப்போகுது? அம்மா சொல்லுது."

"உன்னை நான் சினிமாவுக்குக் கூட்டிக்கிட்டுப் போறேன் வர்ரியா பாப்பா?"

"சினிமாக் கொண்ணும் நா வரலை. பசி வவுத்தைக் கிள்ளுது. அம்மாவை இன்னும் காணலியே தாத்தா?"

"எங்கூட வா, ஓட்டல்லே சாப்பிடலாம்..."

குழந்தை கூச்சமோ, பிகுவோ இல்லாமல் நடிக மணியைப் பின் தொடர்கிறது. சினிமாத் தியேட்டர் அருகிலிருந்த ஓர் ஓட்டலுக்குக் கூட்டிக்கொண்டு போய்க் குழந்தைக்கு விதவிதமான பலகாரங்கள் வாங்கிக் கொடுக்கிறார் அவர். குழந்தை முகம் மலர்ந்து சாப்பிடுகிறது.

இன்னும் ஒரு பெரிய பலகாரப் பொட்டலத்தை வாங்கி அதன் கையில் கொடுத்து, "வீட்டிலே போய் இதை உங்கம்மா கிட்டக் கொடுக்கணும்" என்று கூறி அழைத்துப் போகிறார்.

வீதியில் குடிசைகள் உள்ள இடம் அருகே வந்ததும், "நீ வீட்டுக்குப் போ, பாப்பா! நான் போய் வருகிறேன்" என்று நடிக மணி விலகிக் கொள்கிறார்.

"நீங்க ரொம்ப நல்லவரா இருக்கீங்களே தாத்தா! எங்க நாயினாவுக்கு ரொம்பக் கோபம் வரும். பொல்லாதவரு. 'கஞ்சி காச்சக் காசு தராமே இப்படிச் சினிமா சினிமான்னு அலையறிங்களே'ன்னு அம்மா கேட்டா நாயினா அம்மாவை இழுத்துப் போட்டு அடிக்கும், உதைக்கும். அம்மா அழுவா; அம்மாவைப் பார்த்தா எனக்கும் பாவமா இருக்கும்."

"இனிமே சினிமாவுக்குப் போகப்படாதுன்னு உங்க நாயினாவுக்கு நீ சொல்லேன்."

"அம்மாடி! நான் சொன்னா அது என்னையே அடிச்சுக் கொண்ணுடும் தாத்தா! நாளைக்கி வேணா நீயே வந்து சொல்லேன் தாத்தா."

"சரி; வந்து சொல்றேன் நீ வீட்டுக்குப் போ!"

"கட்டாயம் வரணும் தாத்தா! நீங்க ரொம்ப நல்லவரு."

குழந்தை பலகாரப் பொட்டலத்தோடு குடிசைக்குள் போகிறது. நடிக மணி மேலே நடந்தார்.

அவர் மேலே ஏறிவிடுகிறார்போல் ஒரு கார் மிக அருகில் வந்து நிற்கிறது. மேக் - அப் நிபுணர் சிரித்துக்கொண்டே ஸ்டுடியோ காரிலிருந்து கீழே இறங்குகிறார்.

"என்ன; உலகம் எப்படி இருக்கிறது?"

"நான் நினைத்துக் கொண்டிருந்த மாதிரி இல்லை."

"நீங்கள் எதற்கு இந்த உலகத்தைப் பற்றி நினைக்கவேண்டும்? கலை உலகிற்கு நீங்கள்தான் முடி சூடா மன்னர். அந்த உலகைப் பற்றி மட்டும் நினையுங்கள் போதும். அங்கே உங்களுக்குப் புகழ்தான் உண்டு. இன்பம்தான் உண்டு. துன்பமே இல்லை."-

இதைக் கேட்டுவிட்டு நடிக மணி நகைத்தார்.

"ஒவ்வொருவருடைய புகழுக்கும் எங்கோ பலர் துன்பப்பட வேண்டியிருக்கிறது. உயிருள்ள உலகத்தில் எத்தனையோ பிரச்னைகள். அதை மறந்து விட்டோ, மறைத்து விட்டோ கலை உலகில் நான் மட்டும் சுகமான தந்தக் கோபுர வாசியாக வாழ்வது நியாயமாகப் படவில்லை எனக்கு."

உள்ளம் உருகி நடிக மணி நாவுக்கரசு இவ்வாறு கூறி விட்டு நிதானமாகப் பெருமூச்சு விட்டார். அவருடைய ஞானோதயம் புரியாமல் மேக்-அப் நிபுணர் திகைத்தார்.

**(1978-க்கு முன்)**

## 140. கடைசியாக ஓர் ஆண்பிள்ளை

**ப**த்திரிகை ஆபீஸ் காண்டீனில் மாதம் நானூறு ரூபாய் சம்பளம் வாங்குகிற ஒரு சரக்கு மாஸ்டர் எதிர்கொண்டு அழிக்க முடியாத பகையாக இருந்தது அது. அடுப்படியில் வேர்வை சொட்டச் சொட்ட மாடாக உழைக்கும் ஒரு சரக்கு மாஸ்டருக்கு இத்தனை அழகான மகள் பிறந்திருக்கக் கூடாது தான்.

மன எரிச்சலாலும் எதுவுமே செய்ய முடியாத கையாலாகாத்தனத்தினால் பிறந்த வேதனையினாலும் பல சமயங்களில் அனந்த பத்மநாபன் என்ற முழுப் பெயரை உடைய அனந்துவுக்கே இப்படித் தோன்றியது. அந்தப் பிரச்னை அவர் மனத்தை வாட்டி எடுத்தது.

ஒரே பெண், அதுவும் தாயில்லாப் பெண். அவளுக்கு இப்படிப்பட்ட துன்பங்கள் நேருவதை அவரால் பொறுத்துக் கொள்ள முடியாமல் இருந்தது. இந்த வேதனையினால் அனந்துவுக்குத் தொடர்ந்து பல நாட்களாக இராத்தூக்கமில்லாமல் போய்விட்டது. வேலையை விட்டு விட்டுப் பெண்ணின் கல்லூரிப் படிப்பையும் பாதியில் நிறுத்திக் கொண்டு சென்னையை விட்டு ஊரோடு திரும்பிப் போய்விடலாமா என்று கூட அவர் யோசித்தார்.

திருவல்லிக்கேணி வேங்கடரங்கம் பிள்ளைத் தெரு என்பது, இப்பால், கடலோரத்துக் குடிசைப் பகுதிகளுக்கும் அப்பால் மேற்குப் பக்கம் சம்பிரதாயமான பார்த்தசாரதிப் பெருமாள் கோயிலைச் சுற்றிய தெருக்களுக்கும் இடையே அமைந்திருந்தது.

அந்தத் தெருவிலுள்ள பல ஒண்டுக் குடித்தனங்கள் அடங்கிய ஒரு வீட்டில் ஒரு போர்ஷனில்தான் அனந்து குடியிருந்தார். அந்த வீட்டில் நடுவே நடப்பதற்குச் சிமெண்டுத் தளமிட்ட பாதையின் இருபுறமும் எதிரெதிராக மூன்றும் மூன்றும் ஆறு ஒண்டுக் குடித்தனப் போர்ஷன்கள் இருந்தன. அதை ஒரு வீடு என்று சொல்வதை விட ஒண்டுக் குடித்தனப் போர்ஷன்கள் அடங்கிய ஸ்டோர்ஸ் என்றே சொல்லிவிடலாம்.

அனந்து வேலை பார்த்த காண்டீன் இருக்கும் பத்திரிகைக் காரியாலயம் மவுண்ட்ரோடில் இருந்தது. காலை ஐந்து மணிக்குச் சைக்கிளில் வீட்டை விட்டுப் புறப்பட்டாரானால் மறுபடி அனந்து வீடு திரும்ப இரவு ஒன்பது ஒன்பதரை மணிக்கு மேலாகிவிடும்.

வீட்டில் கல்லூரிக்குப் போகிற நேரம் தவிர மற்ற நேரங்களில் இருக்கிறவள் சாரதா மட்டுந்தான். காலையில் அவளே சமைத்துச் சாப்பிட்டு விட்டுக் கல்லூரிக்கு ஓட

வேண்டும். கூட்டத்தில் இடிபட்டுப் பஸ்ஸில் இடம் பிடித்துக் கமாண்டர் இன் சீஃப் சாலையிலுள்ள கல்லூரிக்கு நேரத்துக்குப் போயாக வேண்டும்.

அப்படிப் பரக்கப் பரக்கப் போகிற போதுதான் ஒரு நாள் பஸ்ஸில் அந்த வம்பு வந்து சேர்ந்தது. வம்பு ஒரு நாளோடு போகாமல் வாடிக்கையாக மாறிவிடவே சாரதா வேதனைக்குள்ளானாள். தன்னை இத்தனை அழகாகவும், பிறருடைய கவனத்தைக் கவரும்படியும் படைத்த தெய்வத்தின் மேலேயே அவளுக்குக் கோபம் கோபமாக வந்தது.

விளையாட்டாக ஆரம்பித்து, தொந்தரவாக மாறி விபரீதமான எல்லைக்கு வந்திருந்தது அது. பஸ்ஸில் அரும்பு மீசையும், சுருட்டை முடியுமாகத் தமிழ்ச் சினிமாக் கதாநாயகனின் களையோடு ஒரு மாணவன் அவள் கையிலிருந்த புத்தகப் பையில் ஒரு கடிதத்தை மடித்துப் போட்டான். பஸ்ஸில் நாலுபேர் முன்னால் வீண் கலாட்டா வேண்டாமென்று முதல் நாள் பேசாமல் இருந்துவிட்டாள் சாரதா.

கல்லூரிக்குப் போய் அதைப் பிரித்துப் பார்த்தாள். அப்போது மிகவும் பிரபலமாகியிருந்த ஓர் இளம் சினிமா கதாநாயகியைப் போல் அவள் அழகாயிருப்பதாகப் புகழ்ந்துவிட்டு அவளைத் தான் காதலிப்பதாக எழுதியிருந்தான் அந்த அசடு. அதைச் சுக்கல் சுக்கலாகக் கிழித்தெறிந்து விட்டு மறந்து போனாள் சாரதா.

ஆனால், அவன் அப்படி அவளை மறந்துவிடவில்லை என்பது மறுநாளும் சரியாக அதே நேரத்துக்கு அவன் பஸ் ஸ்டாண்டில் வந்து முளைத்ததிலிருந்து தெரிந்தது. இன்று முன்னைவிடப் பெரிய கத்தையாக ஒரு கடிதம் வந்து சாரதாவின் பையில் விழுந்தது. சாரதா கோபமாக ஏதோ சொல்ல வாயைத் திறக்குமுன் அவன் பஸ்ஸின் முன் பக்கமாக விரைந்து நடந்து போய்க் கும்பலில் கலந்து கொண்டான்.

அவள் கையில் அவன் கடிதத்தைப் போடுவதைப் பக்கத்தில் நின்றிருந்த ஒரு நடுத்தர வயது மனிதரும் பார்த்துக் கொண்டுதான் இருந்தார். ஆனால், பார்க்காதது போல் இருந்துவிட்டார். வரவரப் பெரிய நகரங்களில் தவறுகளை ஆண்மையோடு தலையிட்டுக் கண்டிக்க முன்வரும் ஆண்பிள்ளைகளே இல்லையோ என்றுகூடச் சாரதாவுக்குத் தோன்றியது.

தங்களுக்குச் சம்பந்தமில்லாத நல்லதோ கெட்டதோ எதிலும் பட்டுக் கொள்ளாமல் நடுவாகப் போய்விட வேண்டும் என்ற நாசூக்கு மனப்பான்மையில் நகரங்களில் முக்கால்வாசி ஆண்பிள்ளைகள் கோழைகளாக இருப்பதையும் அவள் கண்டாள். இரண்டாம் நாள் எழுதிய கடிதத்தில் ஒரேயடியாகப் பிதற்றியிருந்தான் அவன்.

"கண்ணே! சொந்தக் காரில் கல்லூரிக்குப் போகிற நான் உன் பொருட்டுப் பஸ்ஸில் ஏறிவந்து கால் கடுக்க அலைகிறேன். உனக்காக நான் படும் சிரமங்கள் ஏராளம்.

இன்று நாம் ஒரு திரைப்படம் பார்க்கப் போகலாமா? உன்னைக் காரிலேயே அழைத்துச் சென்று காரிலேயே பத்திரமாகக் கொண்டு வந்து விட்டு விடுகிறேன்" என்பதாக எழுதியிருந்தது அந்தக் கடிதத்தில்.

கடிதத்தைக் கூடச் சொந்தமாக எழுதாமல் ஏதோ சினிமாக் காதலில் வருகிற வசனம் போல் எழுதியிருந்தான். சொந்தமாக அவனுக்கு எதுவுமே தெரியாதோ-வென்று சாரதாவுக்குத் தோன்றியது. காதலைக் கூடப் பல திரைப்படங்களைப் பார்த்ததன் இமிடேஷனாக அவன் செய்து கொண்டிருப்பதாகப் பட்டதே ஒழிய உணர்ந்து ஈடுபட்டதாகத் தெரியவில்லை. அவனுக்கு வெட்கம், மானம், ரோஷம் எதுவும் இருந்ததாகவும் தெரியவில்லை.

வேறொரு நாள் பஸ்ஸிலிருந்து கீழே இறங்கி அவளை அவன் பின் தொடர்ந்த போது கோபத்தோடு தன் கால் செருப்பைக் கழற்றி அடிக்கப் போவதுபோல் காண்பித்தாள் அவள். சாரதாவின் அந்தச் செயல்கூட அவனை அவமானப்படுத்தவோ எரிச்சலூட்டவோ செய்யவில்லை.

“கோபத்தில்கூட நீ அழகாயிருக்கிறாய். உன் பட்டுப் பாதங்களை நாள் தவறாமல் சுமக்கும் செருப்பு செய்த புண்ணியத்தைக் கூட நான் செய்யவில்லையா?” என்று புலம்பினானே ஒழியக் கோபப்படவில்லை. அவன் சரியான கல்லடிமங்கனாக இருந்தான். அவனை எரிச்சலூட்டவும் முடியவில்லை அவளால்.

ரோஷமில்லாதவனை, மான உணர்ச்சியில்லாதவனை, ஆண்பிள்ளையாகவே மதிக்கத் தோன்றவில்லை சாரதாவுக்கு. செருப்பைக் கழற்றிக் காண்பித்த மறுநாளிலிருந்து அவன் தன்னைப் பின்பற்றி வரமாட்டான் என்றே அவள் நினைத்திருந்தாள்.

ஆனால், அவள் நினைத்தபடி நடக்கவில்லை. மறுநாள் காலையில் பஸ்ஸிலும் திரும்பி வரும் போதும் அவன் தட்டுப்படவில்லை. என்றாலும், அவள் மாலையில் வீடு திரும்பிக் கொண்டிருந்தபோது தெருமுனையில் ஒரு கார் அவள் அருகே வந்து மெல்ல நின்றது. அவன்தான் ஓட்டிக் கொண்டு வந்திருந்தான்.

“மிஸ், ஏறிக்குங்க! உங்களை வீட்டிலே விட்டுடறேன்.”

அவள் அவன் வார்த்தைகளைக் காதில் போட்டுக் கொண்டதாகவே காண்பித்துக் கொள்ளவில்லை. விடுவிடுவென்று நடந்தாள். காரும் மெதுவாக அவளைத் தொடர்ந்தது.

அதிகபட்சம் வீட்டு வாசல்வரை பின் தொடர்வான். அதற்கு மேல் துணிய-மாட்டான் என்றே சாரதா நினைத்தாள். ஆனால், அவள் ஸ்டோருக்குள் நுழைந்து தன் போர்ஷன் கதவைத் திறந்தபோது, மற்ற ஐந்து போர்ஷன் ஆட்கள் பார்க்கும்படி உள்ளே வந்து, “இந்தாங்க, உங்களுக்காகவே வாங்கினேன்!” என்று ஒரு மல்லிகைப் பூப் பொட்டலத்தை நீட்டினான் அவன். சாரதாவுக்குச் சர்வநாடியும் ஒடுங்கினாற்போல ஆகிவிட்டது.

பூப்பொட்டலத்தை வாங்காமலே “முட்டாள்! பண்பில்லாத ஜடமே!” என்று அவள் கூப்பாடு போடவே, மற்றப் போர்ஷன் வாசலில் நின்று பார்த்தவர்களின் கவனம் இன்னும் அதிகமாகவே இவர்களிடம் திரும்பியது.

ஐந்து போர்ஷன்களில் இரண்டில் ஆண்கள் கூட ஆபீஸிலிருந்து திரும்பி-யிருந்தனர். எட்டியும் பார்த்தனர். ஆனால், சாரதாவின் உதவிக்கு யாரும் துணிந்து முன் வரவில்லை. என்னவென்று விசாரிக்கக் கூடப் பயப்பட்டார்கள்.

அவள் வாங்கிக் கொள்ளாமல் மறுக்கவே பூப்பொட்டலத்தை வாசற்படியில் வைத்துவிட்டுச் சினிமாக்களில் வருகிறமாதிரி முன்புறம் வலக்கையை நீட்டி, உள்ளங்கையை மறுபடி முகத்துக்குக் கொண்டு போய் முத்தம் கொடுக்கிறார் போல உதடுகளில் பதித்துவிட்டு, விசிலடித்துப் பாடியபடியே திரும்பிப் போய் வாசற்படிக்கு நேரே நிறுத்தியிருந்த காரைக் கிளப்பிக் கொண்டு சென்றுவிட்டான் அவன்.

அவன் முயற்சி என்ன என்பதை எரிச்சலோடு புரிந்து கொண்டாள் அவள். அக்கம்பக்கத்தார் தன்னையும் அவனையும் சம்பந்தப்படுத்திப் பேசிக்கொள்ளச் செய்துவிட வேண்டுமென்று ஆசைப்பட்டே இப்படி அவன் நடந்து கொண்டிருப்பதாகத் தோன்றியது.

ஆத்திரத்தோடு அவன் வைத்து விட்டுப் போன பூப்பொட்டலத்தை வாயிற்புறம் வீசி எறிந்தாள் அவள்.

இரவில் தந்தை வீட்டுக்கு வந்ததும் அழுது கொண்டே நடந்ததைச் சொன்னாள் சாரதா. அவன் ஓட்டிக் கொண்டு வந்த காரின் நம்பரையும் ஞாபகமாகக் குறித்துக் கொடுத்தாள்.

இரவு அகாலமென்றும் பாராமல் பக்கத்துப் போர்ஷனில் குடியிருந்த ஏ.ஜி. ஆஃபீஸ் கிளார்க் ஒருத்தரையும் துணைக்கு அழைத்துக்கொண்டு போலீஸ் ஸ்டேஷனில் புகார் கொடுக்கச் சென்றார் அனந்து. இப்போதே புகார் செய்துவிட்டால் காலையில் சாரதா கல்லூரிக்குப் புறப்படும்போதே பஸ் நிறுத்தத்தில் வந்து அந்தப் பையனைப் போலீஸார் பிடிக்க முடியும் என்று அனந்து எண்ணியிருந்தார்.

போலீஸ் நிலையத்தில் புகார் செய்தபோதும் அவ்வாறே காலையில் பஸ் நிறுத்தத்தில் வந்து கவனிப்பதாக அவர்கள் கூறினார்கள்.

போலீஸ் நிலையத்திலிருந்து திரும்பும்போது, "ஓய் அனந்து! இதை என்ன பண்ணியாவது நிறுத்தியாகணும். இப்படித் தினம் ஒரு பையன் பூவையும் வளையலையும் தூக்கிண்டு உம்ம பெண்ணைத் தேடிண்டு வந்தா ஸ்டோர்லே மத்தக் குடித்தனக்காரர் ஒரு மாதிரி நினைக்க ஆரம்பிச்சுடுவா. தெருவிலேயும் பேர் கெட்டுப் போயிடும். தாறுமாறாகப் பேச்சுக்கள் வேற கிளம்பும்" என்று உடன் வந்தவர் அனந்துவை எச்சரித்தார்.

அனந்துவுக்கும் அது நியாயமென்றே பட்டது. எதிர் பார்த்தது போல் மறுநாள் காலையில் போலீஸ்காரர் ஒருவர் அனந்துவைத் தேடி வந்தார். வந்தபோது அனந்து வீட்டில் இல்லை. முதல்நாள் போலீஸ் நிலையத்துக்கு உடன் சென்ற பக்கத்து போர்ஷன்காரர் இருந்தார். அவரைத் தனியே கூப்பிட்டுக் கொண்டு போய் இரண்டு நிமிஷம் பேசியபின் அவரிடமே தேநீர் குடிக்கச் சில்லறையும் வாங்கிக் கொண்டு போய்ச் சேர்ந்தார் கான்ஸ்டபிள். அவர் பஸ் நிறுத்தத்துக்கே வரவில்லை.

வழக்கமான தொல்லை தொடர்ந்தது. இளைஞன் வந்தான். பஸ்ஸில் ஜாடைமாடையான அர்த்தமுள்ள சில சினிமாப் பாடல்களைச் சாரதாவின் காதருகே முணுமுணுத்தான். 'மெதுவா மெதுவாத் தொடலாமா?' என்று சீட்டியடித்துக் கொண்டே அவள் தோளைத் தொட்டான். பின்னலைப் பிடித்து இழுத்தான். அவளைச் சுற்றி நின்ற இளைஞர்களும் மாணவர்களைப் போல் தோன்றவே, பஸ்ஸிலிருந்த மற்றவர்கள் இதில் தலையிட்டுச் சண்டையை விலைக்கு வாங்கப் பயந்தார்கள். பேசாமல் இருந்தார்கள்.

சாரதாவுக்கு நாக்கைப் பிடுங்கிக் கொண்டு சாகலாம் போலிருந்தது. இருபதாம் நூற்றாண்டில் இராமாயணம் நடந்தால் சீதையைப் பறிகொடுத்த இராமர்கள் எல்லாம் இராவணன் மேல் போலீஸில் புகார் கொடுத்துவிட்டு அப்புறம் சும்மா இருந்துவிடுவார்கள் போல் தோன்றியது. போலீஸ் விசாரிக்க வருவதற்குள் இராமனும் கிழவனாகிவிடுவான், சீதையும் கிழவியாகிவிடுவாள். உடனடியாகக் கோபம் கொண்டு பொங்கியெழ வேண்டிய விஷயங்களில் எல்லாம் கையாலாகாமல் சோர்ந்து உட்கார்ந்துவிடும் ஆண்பிள்ளைகளை ஆண்களாகவே சாரதா நினைக்கவில்லை.

'புதுமணத் தம்பதிகளிடம் கடற்கரையில் நகைகள் கொள்ளை. கணவனும் இளம் மனைவியும் இரவு கடற்கரையில் தனியே உலாவச் சென்றபோது ரெளடி ஒருவன் கணவனிடம் பேனாக் கத்தியைக் காட்டி மிரட்டி மனைவியின் நகையை அவனே கழற்றித் தருமாறு செய்த திருட்டு. கணவன் கொடுத்த புகாரின் பேரில் போலீஸ் புலன் விசாரித்து வருகிறது' என்பன போன்ற தினசரிப் பத்திரிகைச் செய்திகளைப் படிக்கும்போது எல்லாம், "கேவலம் ஒரு ரெளடியின் பேனாக் கத்தியிலிருந்து மனைவியைக் காக்க தோள் வலியில்லாத ஓர் ஆண்பிள்ளையா வாழ்நாள் முழுவதும் அவளைக் கட்டிக் காக்கப் போகிறான்? இன்றைக்கு முக்கால்வாசி ஆண்பிள்ளைகள் ஆண்களைப்போல் தோன்றுகிறார்களே ஒழிய ஆண்மையுள்ளவர்களாக இல்லேடி! ஆண்களைப் போல தோன்றுகிறவர்கள் எல்லாம் ஆண்மையுள்ளவங்க இல்லை. இது மாதிரி செய்ததிலேருந்து நாம அதைத்தான் தெரிஞ்சுக்கணும்" என்று தன் தோழிகளிடம் சொல்லி விமரிசித்திருக்கிறாள் சாரதா. முதல் நாளிரவே அப்பாவும் பக்கத்து போர்ஷன்காரரும் போலீஸில் புகார் செய்திருந்தும் அவர்கள் இன்றும் வராதது அவளுக்கு எரிச்சலூட்டியது. பொறுமை இழக்கச் செய்தது.

மாலையில் வீடு திரும்பியதுமே போலீஸ் வராததன் மர்மம் அவளுக்குப் புரிந்தது.

"நீ குடுத்த கார் நம்பரை வச்சு விசாரித்ததுலே அந்தப் பையன் ஐ.ஜி.யோட தங்கை புள்ளைன்னும், அவன் ஐ.ஜி. வீட்டிலேயே தங்கி மாநிலக் கல்லூரியிலே படிக்கறான்னும் தெரிஞ்சிருக்கு. அதுனாலேதான் போலீஸ்காரர் தயங்கறா அம்மா" என்று பக்கத்துப் போர்ஷன்காரர் சாரதாவுக்குத் தகவல் சொன்னார்.

"பையன் பேரு தங்கப்பாண்டியன். முன்னாலேயும் இது மாதிரி இரண்டு மூணு புகார்கள் வந்து மேலே இருந்து 'பிரஷர்' வந்ததாலே ஒண்ணும் பண்ணாமே சும்மா

விட வேண்டியிருந்ததாம், அதுனாலே இந்தப் புகார் விஷயத்திலேயே போலீஸ் தயங்கறாங்க."

சாரதாவுக்கு என்ன செய்வதென்றே புரியவில்லை. மறுநாள் ஞாயிற்றுக்கிழமை, அத்தனைக் குடித்தனக்கார ஆண்களும் வீட்டில் இருந்தபோதே பகல் ஒன்றரை மணிக்குச் சரியாக வாசலுக்கு நேரே காரைக் கொண்டு வந்து நிறுத்தி, ஏதோ தாலி கட்டின மனைவியைக் கூப்பிடற மாதிரி, "ஏய் சாரதா! இன்னிக்கு மாட்னி ஷோவுக்கு ரெண்டு டிக்கெட் வாங்கியிருக்கேன். வம்பு பண்ணாமே எங்கூட உடனே புறப்படு" என்று இரைந்து கூப்பிட்டுக் கொண்டே அட்டகாசமாக வந்தான் அவன்.

எல்லாப் போர்ஷனின் வாசலிலும் ஆண்கள், பெண்கள், குழந்தைகள் உட்பட அத்தனை பேரும் நின்று வேடிக்கை பார்த்தார்களே ஒழிய, "நீ யார்டா ராஸ்கல் அவளைக் கூப்பிட?" என்று ஒருத்தனாவது தைரியமாகக் கேட்க முன்வரவில்லை. ஏ.ஜி. ஆபீஸ் கிளார்க், ரிடயர்டு போஸ்ட் மாஸ்டர் கேசவையர், எவர்பிரைட் ஸ்டீல் கம்பெனி ஸ்டெனோ நாகராஜன், ரெவின்யூ போர்டு ஆபீஸ் ரங்கராமானுஜம், எல்.ஐ.சி. லோகநாதன் ஒருத்தராவது தம் போர்ஷன் முகப்பிலிருந்து ஒரு முழங்கூட முன்னுக்கு நகர்ந்து வரவில்லை.

முந்தா நாள் சிங்கராசாரி தெரு டிரஸ்ட் கல்யாண மண்டபத்தில் பதினைந்து ஏழைப் பையன்களுக்குத் தர்ம உபநயனம் பண்ணி வைத்துப் புண்ணியம் கட்டிக் கொண்ட ரிடயர்ட் போஸ்ட் மாஸ்டர்கூட வாயைத் திறக்காமல் நின்று கொண்டு வேடிக்கை பார்த்ததைக் கண்டு சாரதாவுக்குப் பற்றிக் கொண்டு வந்தது கோபம்.

அன்றிரவு அப்பா திரும்பி வந்ததும், "வேறு வீடு பாருங்கள்! அல்லது இந்த ரௌடியைத் தடுத்து நிறுத்த வழி சொல்லுங்கள்" என்று கண்டிப்பாகக் கேட்க வேண்டும் என்று முடிவு செய்தாள் சாரதா.

ஆனால், அப்பா அன்றிரவு திரும்பி வந்த நிலையில் சாரதா அவரிடம் அதிரப் பேசுவதற்கே முடியாது போயிற்று. காலிலும் கையிலும் அடுப்புச் சரிந்து கொதிக்கிற எண்ணெய் கொட்டிப் புண்ணும் ரணமுமாக, கூட வேலை பார்க்கிற ஆள் டாக்ஸியில் அவரைக் கொண்டு வந்து விட்டுப் போனான். இந்த நிலையில் அவளே நாலு நாள் லீவு போட வேண்டியதாயிற்று.

கல்லூரிக்கு லீவு போட்டுவிட்டு அவள் அப்பாவுக்குச் சிச்ருஷை செய்த நாட்களிலும் அந்த ரௌடியின் தொல்லை ஓயவில்லை. சாரதா அப்பாவிடம் அழுது புலம்பினாள்.

"சூரியனைப் பார்த்து நாய் குறைக்கறதுன்னு நெனைச்சுண்டு பேசாம இரும்மா. அவனை எதிர்த்துக்க நமக்குப் பலமும் மனுஷா துணையும் இல்லே. அவன் பெரிய இடத்துப் புள்ளையாம்! தெய்வத்துக்குக் கண் இருந்தா அவனைக் கேக்கட்டும் நம்மாலே வேற ஒண்ணும் பண்ண முடியாது சாரதா" என்றார் அனந்து.

சென்னையிலேயே அனந்துவின் கூடப் பிறந்த சகோதரிகள் இருவர் இருந்தனர். ஒருத்தி அவருக்கு மூத்தவள், மற்றொருத்தி இளையவள். இருவருக்கும் வயது வந்த

மகன்கள் இருந்தனர். அந்த மருமகன்களில் ஒருத்தருக்குச் சாரதாவைக் கொடுக்கலாமா என்று கூட அனந்துவுக்கு ஒரு நினைப்பு இருந்தது.

அனந்து கொதிக்கிற எண்ணெய் கொட்டித் தீப்புண்களோடு படுத்த படுக்கையான மறுநாள்அவருடைய தங்கையும் ஸ்டேட் பாங்கில் ஆபீஸராக வேலை பார்க்கும் அவளுடைய மகனும் பார்க்க வந்திருந்தனர். அவர்கள் வந்திருந்த சமயம் பார்த்து அந்தக் காதல் ரௌடியும் வந்து சேர்ந்தான்.

அனந்து உடனே முழு விவரத்தையும் தன் மருமகனிடம் சொல்லி, "இந்தச் சண்டாளனைக் கொஞ்சம் விசாரியேன்! வயசு வந்த பொண்ணுகிட்ட நாள் தவறாமல் வந்து வம்பு பண்றான். அக்கம் பக்கத்திலே பேரைக் கெடுத்துடுவான் போலிருக்கு" என்று கேட்டுக் கொண்டார்.

"இந்த மாதிரி ரௌடிகிட்ட எல்லாம் நேரே வம்பு பண்ணினாக் கையிலே பிளேடு, கத்தி கித்தி வச்சிருப்பான் மாமா! நம்ம கௌரவம் என்ன ஆறது? அவன் அளவுக்கு நம்மாலே எறங்க முடியாது. நான் வேணா ஒண்ணு பண்றேன். போறப்போ போலீஸ்லே ஒரு 'ஈவ்டீஸிங்'குன்னு புகார் கொடுத்துட்டுப் போறேன்" என்றான், அந்த மீசை முளைத்த ஆண்பிள்ளை. சாரதாவுக்கு 'சை' என்றாகிவிட்டது.

மூன்றாம் நாள் அனந்துவின் மற்றொரு சகோதரி வந்திருந்தாள். அவள் பிள்ளை ரகுவுக்கு ஒரு கம்பெனியில் ஸேல்ஸ் மானேஜர் உத்தியோகம். அவன் நல்ல விளையாட்டு வீரன்; உடற்கட்டுள்ள பலசாலி. கொஞ்சம் கராத்தே, ஜூடோ பயிற்சி கூட உண்டு. அவனைக் கொஞ்ச நேரம் அங்கேயே தங்கச் சொல்லி அந்தக் காதல் ரௌடியிடம் மோத விட வேண்டும் என்று முயன்றார் அனந்து; அவனும் சம்மதித்தான். அதற்குள் ஏதோ பேச்சுவாக்கில் சாரதாவுக்குத் தொல்லை கொடுக்கிற அந்த இளைஞன் ஐ.ஜி.யின் தங்கை பிள்ளை என்பதால் போலீஸில் எவ்வளவு புகார் செய்தும் பயனில்லை என்று அவரே சொல்லிவிடவே அவனுக்குப் பயம் வந்து விட்டது.

"மாமா, யாரோ எவனோன்னாப் பரவாயில்லை. நாலு உதை உதைச்சுத் தெருவிலே தூக்கி எறிஞ்சிடலாம். நீங்க சொல்ற மாதிரியாயிருந்தா யோசிச்சு திட்டம் போட்டுத்-தான் ஏதாவது செய்யணும். அவசரப்படாதீங்கோ. சாரதாவைக் கூடக் கொஞ்சம் பொறுமையா இருக்கச் சொல்லுங்கோ" என்று உபதேசம் செய்துவிட்டு நழுவி விட்டான். இந்தத் தொல்லைக்கு விடிவே இல்லை என்ற முடிவுக்குச் சாரதா வந்துவிட்டாள்.

"இரண்டு பேருக்கும் ஏதாவது பழைய சம்பந்தம் இருக்கும். இல்லாட்டா ஒருத்தன் இப்படி விடாமத் துரத்திண்டு கார்லே நாள் தவறாம வருவானா? முதல்லே கொஞ்சம் வருமானத்துக்கு ஆசைப்பட்டிருப்பாள். அப்புறம், 'இப்போ வராதே, போடா'ன்னு ஒதுக்கினா அவன் எப்படிப் போவான்?' என்றுகூட அக்கம் பக்கத்தில் அபாண்டமாகப் பேச்சுக் கிளம்பிவிட்டது. நாக்கில் நரம்பில்லாத சில அயோக்கியன்கள் விதவிதமாகப் பேசத் தலைப்பட்டனர்.. "பணத்துக்கு ஆசைப்பட்டு அனந்துவே

பொண்ணைப் பெரிய பெரிய பணக்காரப் பையன்களோட பழக விட்டுட்டான். அதுனாலே வந்த வம்புதான் இதெல்லாம். இப்பக் குறைப்பட்டுண்டா அதுக்கு யார் என்ன பண்ண முடியும்?" என்று ரகசியமாகத் தம் மனைவியிடம் கூறினார், பக்கத்துப் போர்ஷனைச் சேர்ந்த சமஷ்டி உபநயன தர்மப் புகழ் போஸ்ட் மாஸ்டர்.

இப்படிச் சாரதாவால் வெறுக்கப்பட்டும், சாரதாவைப் பாதிக்காமலுமே அவளுக்கு எல்லா விதத்திலும் கெட்ட பெயரை உண்டாக்கிவிட்டான், அந்த ரௌடிப் பையன்.

கொதிக்கும் எண்ணெய் பட்டு உண்டான தீப்புண்களைவிட இந்தப் மனப்புண் அனந்துவை வாட்டியது.

நாலைந்து நாள் கழித்து ஒரு மாலை வேளையில் முன்பு அவரை டாக்ஸியில் வீட்டுக்குக் கொண்டு வந்து விட்டுப் போன அதே சக ஊழியன் அவர் எப்படி இருக்கிறார் என்று பார்த்து நலன் விசாரித்துவிட்டுப் போக வந்தபோது அனந்து கண்களிலிருந்து மாலை மாலையாக நீர் வடிய மௌனமாக அழுது கொண்டிருந்தார்.

"ஏன் மாமா அழறேள்?"

"வாடா ராஜு! நான் பொறந்த பொறப்பை நெனைச்சு அழறேன். காண்டீனெல்லாம் எப்படி இருக்கு? சரக்கெல்லாம் யார் போடறா?" என்று கண்ணில் வழிந்த நீரைத் துடைத்துக் கொண்டு அவனை வரவேற்றார் அனந்து.

"அதெல்லாம் அப்புறம் சொல்றேன் மாமா! நீங்க ஏன் இப்போ அழுதுண்டிருக்கேள்னு மனசிலே உள்ளதை மறைக்காமே நிஜத்தை எங்கிட்டச் சொல்லணும், பொய் சொல்லப்படாது."

அனந்து சிறிது தயங்கிய பின் உண்மையை விவரித்தார். முதலில் அவர் தயங்கியதற்குக் காரணம் ஒரு காண்டீனில் தனக்குக் கீழ்ப்பட்டவனாக மாவரைக்கிற உத்தியோகம் பார்க்கும் எழுதப் படிக்கத் தெரியாதவனான ஒருத்தனிடம் நாசூக்கான தன் குடும்ப அந்தரங்கத்தைச் சொல்வதா வேண்டாமா என்று எண்ணியதுதான். அவர் அதைச் சொல்லி முடிக்கவும் காய்கறிக் கடைக்குப் போயிருந்த சாரதா திரும்பி வரவும் சரியாயிருந்தது.

"சாரதா, இவன் ராஜு! எங்ககூட வேலை பார்க்கிறான். சொந்த ஊர் மானாமதுரை. மாவரைக்கிறதிலே நிபுணன். அன்னிக்கி என்னைக் கொண்டு வந்து விட்டப்போ அவசரத்திலே நான் உனக்கு இவனைப் பத்திச் சொல்லலே. இவனுக்கு ஒரு காபி கலந்து குடு" என்றார் அனந்து.

சாரதா அவனைப் பார்த்தாள். ஆள் ஒற்றை நாடியாக, ஊதினால் விழுந்து விடுகிற மாதிரி இருந்தான். ஆனால், நல்ல உயரம். உழைத்து இறுகி உரம் பாய்ந்த தோள்கள். தோளில் சமையல் கைக்காரியத்துக்குப் பயன்படுகிற மாதிரி பிடிதுணியையே துண்டாகப் போட்டுக் கொண்டிருந்தான். அழுக்குப் பனியன். அழுக்கு வேஷ்டி. ஆளே நல்ல கறுப்பு. கறுப்பு முகத்தில் இடுங்கிப் போய் மின்னும் ஒளிமிக்கக் கண்கள். எந்த

ஊரிலும், எந்த வீட்டிலும் எவ்வளவு உயரமான நிலைப்படியும் நிச்சயம் இவன் நிமிர்ந்தால் இடிக்கும் என்பதுபோல் அத்தனை உயரம். கறுத்த உதடுகளும், மூக்கும், வசிகரமற்ற முகமுமாக இருந்தான் அவன். சிரித்தால் மட்டும் தேங்காய்ச்சில்லு மாதிரி வெள்ளை வெளேரென்று பற்கள் மின்னின. அப்பாவின் அறிமுகத்தை ஏற்பதுபோல் அவனை நோக்கிக் கை கூப்பி விட்டுக் காபி கலப்பதற்காகச் சமையற்கட்டுக்குள் சென்றாள் சாரதா. அப்போது வாசலில் வெறுப்பூட்டும் குரல் கேட்டது.

“ஹலோ மை டியர் சாரதா!” என்ற அழைப்பைத் தொடர்ந்து சினிமாப் பாடல்; ‘உன்னை நான் சந்திப்பேன் என்னை நீ கொஞ்சிவிட்டால்...’ என்று பாதியில் நின்றது. சீட்டியடிக்கிற ஒலி தொடர்ந்தது.

“இவன்தாண்டா ராஜு! நாள் தவறாமே வந்து மானத்தை வாங்கறான். யாரோ பெரிய போலீஸ் ஆபீஸருக்கு உறவாம். அதனாலே எல்லாரும் பயப்படறா. கோயில் காளை மாதிரி பொம்பளைகள் பின்னால் ஒவ்வொரு திறந்த விடா நுழைஞ்சிடுவான் போலிருக்கு.”

“சித்தே இருங்கோ மாமா, வரேன்!” ராஜு வெளியே போக எழுந்திருந்தான்.

“உனக்கெதுக்குடா வந்த இடத்திலே வம்பு? பேசாமே உக்காரு.”

“நான் ராமநாதபுரம் ஜில்லாக்காரன் மாமா! கண்ணெதிரே நடக்கிற அக்கிரமத்தைப் பார்த்துண்டு கையைக் கட்டிண்டு ஆம்புள்ளையா நின்னுண்டிருக்க என்னாலே முடியாது.”

அவன் அவர் தடுத்ததையும் மீறி வெளியே பாய்ந்தான்.

அடுத்த நிமிஷம் என்ன நடக்கிறது என்பதை அனந்து உள்ளிருந்தே கேட்கவும் அனுமானிக்கவும் முடிந்தது. ராஜுவின் குரல்தான் முதலில் விசாரித்தது.

“நீங்க யாரு சார்? உங்களுக்கு என்ன வேணும் இங்கே?”

“நானா? நான் சாரதாவின் ஆருயிர்க் காதலன்.”

இதற்கப்புறம் உரையாடல் இல்லை. பளீரென்று ஓர் அறை விழுகிற ஓசை கேட்கிறது.

“டேய்! என்னையா அறையறே? நான் யார் தெரியுமா?”

“தெரியுமே! பொம்பளைப் பொறுக்கிகளிலே ஒருத்தன். போடா! உனக்குப் பெருமை ஒரு கேடு.”

இன்னொரு பலமான அடி விழுகிறது. “நீங்க யாராயிருந்தாலும் தெருவிலே போய் அடிச்சுக்குங்கோ. இங்கே சண்டை கூடாது. இது கௌரவமா நாலு பேர் குடியிருக்கிற இடம்!” இப்படிக் குறுக்கிட்டது சமஷ்டி உபநயன தர்ம போஸ்ட் மாஸ்டரின் குரல்.

“சும்மா வாயை மூடுங்க சார். உங்க கௌரவந்தான் நல்லாத் தெரியுதே. வீட்டோட இருக்கிற பொம்பிளையைத் தேடி வந்து எவனோ ஒரு கிறுக்கன் நாள் தவறாம வம்பு பண்றதைப் பார்த்துக்கிட்டுப் பொறுமையா இருக்கிற கௌரவத்தையே தான் சொல்றேன் சார்!” இது அவரைச் சாடும் ராஜுவின் குரல்.

அனந்துவால் எழுந்திருந்து நடமாட முடியாத நிலை. ஓடிப்போய் ராஜுவைத் தடுக்க முடியவில்லை அவரால். படுத்த இடத்திலிருந்தே, "ராஜு" என்று பலங்கொண்ட மட்டும் அவர் கத்தினார். ஆனால், ராஜு அப்போது அதைக் காதில் வாங்கும் நிலையில் இல்லை. தெருவில் நிறுத்தியிருந்த தன் காரை நோக்கி ஓடத் தொடங்கியிருந்த காதல் ரௌடியைத் துரத்திப் போய் பிடித்து மேலும் உதைத்துக் கொண்டிருந்தான் அவன்.

பத்து நிமிஷத்தில் கார் சர்ரென்று சீறிக் கொண்டு கிளம்பும் ஓசையும், "போடா ராஸ்கல்! இனிமே இந்தப் பக்கம் திரும்பிப் பார்த்தியோ தொலைச்சுப்பிடுவேன் தொலைச்சு. சொந்த அக்கா தங்கையோட பிறந்ததில்லையாடா நீ?" என்று ராஜு அவனை எச்சரித்து அனுப்பும் ஓசையும் உள்ளே படுத்திருந்த அனந்துவுக்குக் கேட்டன.

ராஜு உள்ளே திரும்பி வந்தபோது சாரதா காபி கலந்து கொண்டு வந்திருந்தாள்.

"வந்த இடத்திலே ஏண்டா வம்பை விலைக்கு வாங்கினே? காப்பியைக் குடிச்சிட்டு எங்கேயாவது ஓடிப்போயிடு. அவன் போய்ப் போலீஸோட வரப் போறான்" என்றார் அனந்து.

"ஓடிப்போறது எதுக்கு மாமா? கோழைன்னா பயந்து ஓடிப்போவான். நான் ஏன் போகணும்? போலீஸ் வரட்டுமே? வந்தா என்ன? நடந்தைச் சொல்றேன். கேக்கலேன்னா ஜெயிலுக்கு உள்ளே போறேன். நீங்க என் சம்பளத்தை வாங்கி எனக்காக ஒரு வக்கீல் வச்சு வாதாடுவேளா இல்லியா? சொல்லுங்கோ?"

"சாரதா, முதல்லே அவனுக்குக் காப்பியைக் கொடு சொல்றேன்!" சாரதா காப்பியைக் கொடுத்தாள். ராஜு அதை வாங்கிப் பருகி முடிக்கவும் வாசலில் போலீஸ் ஜீப் வந்து நிற்கவும் சரியாயிருந்தது.

'அஸால்ட் அண்ட் அட்டெம்டட் ஃபார் மர்டர்' என்று எஃப் ஐ ஆர் தயாரித்து அவனை இழுத்துச் சென்றார்கள் போலீஸார். அவன் புன்முறுவலுடன் நடந்து போனான்.

காபி டவரா டம்ளருடன் தெரு வாசல் வரை அவனை வழியனுப்ப வந்த சாரதா முதல் முதலாக முழுப் பௌருஷம் நிறைந்த ஓர் பூரண ஆண்மகனுக்குத் தன் கையால் காபி கலந்து கொடுத்த பெருமையோடு கண்களில் நீர் மல்க நின்றாள்.

பட்டினத்தில் ஆண்கள் குறைவாகவும், ஆண்களைப் போல் தோன்றுப்வர்கள் அதிகமாகவும் இருந்தார்கள் என்ற அவளது நெடுநாளைய மனத்தாங்கல் இன்று ஒரு சிறிது குறைந்திருந்தது. கடைசியாக அவள் ஓர் ஆண்பிள்ளையைப் பார்த்து அவனுக்குத் தன் கைகளால் காபியும் கலந்து கொடுத்திருந்தாள்.

அவன் அழகாக இல்லைதான். ஆனால், நிச்சயமான ஆண்பிள்ளையாக இருந்தான். ஜாமீன் கேட்டு அவனை விடுவிக்க வக்கீலைத் தேடிச் செல்வதற்கு அப்பாவிடம் யோசனை கேட்பதற்காக உள்ளே விரைந்தாள் சாரதா.

**(கலைமகள், தீபாவளி மலர், 1978)**

# 141. பூக்களை யாரும் மிதிக்கக் கூடாது

மிஸஸ் மாத்யூ அந்தக் கான்வென்ட் பள்ளியிலிருந்து வெளியேறித் தனக்கென்றே சொந்தமாக ஒரு பள்ளிக்கூடத்தைத் தொடங்குவதென்று முடிவு செய்து விட்டாள். கன்னிமாடங்களையும், மத சம்பந்தமான நிறுவனங்களையும் சார்ந்து வேலை பார்ப்பதில் சொந்தமாக அதிக லாபம் சம்பாதிக்க முடியாமலிருந்தது. சேவை மனப்பான்மை என்பது மிஸஸ் மாத்யூவுக்கும் அவள் குடும்பத்தினருக்கும் என்றுமே ஒத்து வந்ததில்லை. அளவற்றுப் பெருகும் ஆசைகளுக்கும், சேவை மனப்பான்மைக்கும் பொருத்தமில்லாதிருந்தது. சேவை மனப்பான்மையால் வருமானம் ஒன்றும் பெருகவில்லை.

'புதிய நர்ஸரி பள்ளிக்கூடம், எல்.கே.ஜி., யூ.கே.ஜி. வகுப்புக்கள் தொடங்கப்படும்' என்று போர்டு மாட்டிவிட்டு நகரில் எந்த மூலையில் தொடங்கினாலும் சேருவதற்குக் குழந்தைகள் இருப்பார்கள் என்பதை மிஸிஸ் மாத்யூ புரிந்து வைத்திருந்தாள்.

அரசியல்வாதிகள் இங்கிலீஷை எதிர்க்க எதிர்க்க ஜனங்களிடம் தங்கள் குழந்தைகளுக்கு இங்கிலீஷ் சொல்லிக் கொடுக்க வேண்டுமென்ற ஆர்வம் பெருகி வருவதையும் அவள் கவனித்திருந்தாள்.

தங்கள் வருமானத்தில் மிகவும் மேல் நிலையில் உள்ளவர்கள் உதகமண்டலம், கோடைக்கானல், கூனூர் என்று மலை வாசஸ்தலங்களில் இருக்கும் ஹாஸ்டல் வசதியோடு கூடிய ரெஸிடென்ஷியல் பள்ளிக்கூடங்களுக்குக் குழந்தைகளை அனுப்பிவிடுவார்கள். செலவைப்பற்றி அவர்களுக்குக் கவலையில்லை.

மத்தியதர வருமானம் உள்ளவர்களும், குறைந்த வருமானம் உள்ளவர்களும் வாயைக் கட்டி வயிற்றைக் கட்டி, வேறு செலவுகளைக் குறைத்துக் கொண்டு தங்கள் குழந்தைகளை இங்கிலீஷ் படிக்க வைக்க வேண்டுமென்று ஆசைப்பட்டால் மிஸஸ் மாத்யூ போன்றவர்கள் தெருவுக்குத் தெரு, பேட்டைக்குப் பேட்டை திறந்து வைத்துக் கொண்டு காத்திருக்கும் நர்ஸரி பள்ளிக்கூடங்களை விட்டால் வேறு வழியில்லை. பல பேர் இதே போல நடத்திக் கொண்டிருந்த நர்ஸரி பள்ளிகளில் எப்படி எல்லாம் பணம் பண்ணினார்கள் என்பதை மிஸஸ் மாத்யூ நன்றாகத் தெரிந்து வைத்திருந்தாள். சொல்கிற தொகைக்குக் கையெழுத்துப் போடவும் கொடுக்கிற தொகையை மறுபேச்சுப் பேசாமல் வாங்கிக் கொண்டு போகவும் வாத்தியாரம்மாக்கள் தயாராகக் காத்திருந்தார்கள். வேலை கிடைத்தால் போதாதா?

மே மாதம் பள்ளிக்கூடம் தொடங்க வேண்டும் என்றால் பிப்ரவரியிலேயே தான் தொடங்க இருக்கும் புதிய நர்ஸரிப் பள்ளியைப் பற்றி விளம்பரம் செய்யத் தொடங்கியிருந்தாள் மிஸஸ் மாத்யூ.

பரங்கிமலையில் பழைய நாளில் 'ஒயின் ஸ்டாக்' செய்கிற ஸெல்லர் கிடங்காக இருந்து சிதிலமடைந்து சுவர்களில் அரசும் ஆலும் முளைக்கத் தொடங்கியிருந்த கட்டிடம் ஒன்று மிஸஸ் மாத்யூவின் கண்ணில் பட்டது. கட்டிடத்தைச் சுற்றித் தோட்டத்திற்கும் விளையாட்டு மைதானத்திற்கும் பயன்படுத்த ஏற்றபடி நிறையக் காலி இடம் புதர் மண்டிக் கிடந்தது.

மிஸஸ் மாத்யூ கட்டிடத்திற்குச் சொந்தக்காரரைத் தேடிப்பிடித்து விசாரித்ததில், "அது உபயோகப்படாதும்மா. ரொம்பப் பழசாப்போச்சு. சீக்கிரமே அதை இடிச்சுப் போட்டு காலிமனையைப் 'பிளாட்' பண்ணி வித்துடலாம்னு இருக்கேன். நீங்க வேற இடம் பாருங்க" என்று அவரிடமிருந்து பதில் வந்தது.

ஆனால், மிஸஸ் மாத்யூவா விடுகிறவள்? "ஒரு வருஷத்துக்கு மட்டும் வாடகைக்கு விடுங்கோ. புதரை வெட்டிச் செதுக்கிக் கட்டிடத்தை உபயோகத்துக்கு ஏத்ததா நானே பண்ணிக்கறேன். நல்ல காரியத்துக்காக நான் கேட்கிறேன். அங்கே ஒரு நர்ஸரி ஸ்கூல் போடலாம்னு உத்தேசம். மறுத்துச் சொல்லக்கூடாது நீங்க..."

சுவர்களும், விதானமும் ஈரம் பாய்ந்து உப்புப் பரிந்து உளுத்துப்போன அந்தக் கட்டிடத்தை 'டெமாலிஷ்' பண்ண இருந்த சமயத்தில் அதற்கு இப்படி ஒரு யோகம் அடிக்கும் என்று வீட்டுக்கு உரியவர் எதிர்பார்க்கவே இல்லை. கிடைத்த மட்டில் லாபம் என்று சம்மதித்து மாதம் ஐநூறு ரூபாய் வாடகையும், மூன்று மாத அட்வான்ஸும் கேட்டார் வீட்டுக்காரர். மிஸஸ் மாத்யூ உடனே ஒப்புக் கொண்டாள். மூன்று மாத அட்வான்ஸ் கொடுத்து ஒப்பந்தமும் செய்து கொண்டாள். மார்ச் மாதம் முழுவதும் அந்தப் பாழடைந்த கட்டிடத்தைச் செப்பனிடும் பணிக்குச் சரியாகப் போய்விட்டது.

மிஸஸ் மாத்யூவின் கருத்துப்படி ஐநூறு ரூபாய் அந்த இடத்திற்கு மிக மிகக் குறைவு. நர்ஸரி, எல்.கே.ஜி., யூ.கே.ஜி. மூன்று வகுப்புக்களிலும் இரண்டு இரண்டு செக்ஷன்கள் வீதம் நடத்துவதற்குப் போதுமான இடம் அந்தக் கட்டிடத்தில் இருந்தது. இது தவிர ஆபீஸ் ரூமுக்கும் மாடியில் இடம் கிடைக்குமென்று தோன்றியது.

பழைய நாளில் ஒயின் ஸ்டாக் செய்வதற்காக பேஸ்மெண்ட்டில் ஒரு பெரிய ஹால் பாதாளக் கூடமாகப் பூமி மட்டத்திற்கு அடியில் இருந்தது. அதற்கு அப்புறம் முதல் ஃப்ளோரின் கூடம், மாடி என்று மூன்று இடங்கள் ஆகிவிட்டன. மிஸஸ் மாத்யூவுக்கு ஒரே கொண்டாட்டம். நடுவே ஒரு கீற்றுத் தட்டி வைத்து மறித்தால் மூன்று, இடத்திலுமாக ஆறு கிளாஸ் ரூம்கள் கிடைத்துவிடும்.

பாழடைந்து போய்ப் புதர் மண்டி இன்றோ நாளையோ இடிந்து விழப் போகிறது என்ற நிலையிலிருந்த கட்டிடத்தை முப்பதே நாளில் மயன் மாளிகை போல் வெளிப்பூச்சால் மாற்றியிருந்தாள் மிஸஸ் மாத்யூ. விளையாட்டு மைதானத்திற்கு இடம் விட்டது தவிர மீதி இடங்களில் அழகான தோட்டம் போட்டிருந்தாள். பசுமை கொழிக்கும் நல்ல செழிப்பான மண். அதிக நாள் எதுவும் பயிரிடப்படாமல் கிடந்த கன்னி நிலமாகையினால் எல்லாம் நன்றாகக் கொழித்து வளர்ந்தன. பூங்கா, காய்கறி, செடி கொடிகள் எல்லாமே நன்றாக வளர்ந்திருந்தன.

'நியூ ஃபீல்டு நர்ஸரி ஸ்கூல்' என்று அழகாகக் கட்டிடத்தின் நான்கு பக்கங்களிலும் பெரிய பெரிய போர்டுகள் எழுதி மாட்டப்பட்டிருந்தன. கட்டிடத்தின் அருகே புதிதாக விரைந்து வளர்ந்து பூவும், பசுமையுமாக உருவான பூங்கா அதற்குத் தனி அழகைக் கொடுத்தது. வந்து பார்த்தபோது வீட்டுக்காரருக்கே அது தன் பழைய கட்டிடம்தானா என்று பிரமிப்பு ஏற்படும்படி மேல் பூச்சால் அதை மாற்றியிருந்தாள் மிஸஸ் மாத்யூ. ஆசிரியைகளுக்காக விளம்பரம் கொடுக்கப்பட்டதும், ஆயிரக்கணக்கில் அப்ளிகேஷன்கள் குவிந்தன. பி.ஏ.யும், எம்.ஏ.யும் பி.எட்டும், எம்.எட்டும் படித்துவிட்டு வேலை கிடைக்காமல் வீட்டில் அடைந்து கிடந்த பெண்கள் எல்லாரும் விண்ணப்பித்திருந்தார்கள். முறையான பள்ளிக்கூடங்களுக்கோ அரசாங்கப் பள்ளிக்கூடங்களுக்கோ போனால் பயிற்சி, முன் அனுபவம், அதிகத் தகுதி என்றெல்லாம் கேட்டுத் தொந்தரவு செய்த காரணத்தால், அந்தத் தொந்தரவெல்லாம் இல்லாத இம்மாதிரித் தனியார் பள்ளிக்கூடங்களில் கைச்செலவுக்குக் கிடைத்தது. போதும் என்று பலர் வேலைக்கு வந்தார்கள். சிலர் இந்த வேலைக்கே மிஸஸ் மாத்யூவுக்கு ஏதாவது லஞ்சம் கொடுத்துக்கூட வரத் தயாராயிருந்தார்கள். வாங்குபவருக்கு அப்படி எண்ணமேகூட இல்லாத சமயத்தில் கொடுப்பவரால் ஆசையூட்டப்பட்டுத்தான் முக்கால்வாசி லஞ்சங்கள் இந்த தேசத்தில் தொடங்குகின்றன. வாங்குபவர் கேட்டு வற்புறுத்தும் லஞ்சத்தைவிட, "ஏதாவது பணம் கிணம் ஆகும்னாலும் தந்துடறேன். காரியத்தை முடிச்சுக் குடுங்க போதும்" என்று கொடுப்பவர் முந்திக் கொண்டு சரணாகதியாகும் தேசத்தில் லஞ்சம் மரபாகவும், சம்பிரதாயமாகவும் ஆவதைத் தவிர வேறு வழியில்லை. அப்படி ஆகியும் இருந்தது.

இங்கே மிஸஸ் மாத்யூவிடம் ஆசிரியை வேலைக்காக அப்படிச் சரணாகதியடைந்தவர்கள் பலர் இருந்தனர். மொத்தம் ஆறே ஆறு பேரைத்தான் அவள் ஆசிரியைகளாகத் தேர்ந்தெடுத்தாள். தன்னையும் சேர்த்து ஏழு பேர் என்று வைத்துக்கொண்டாள்.

மாதம் முன்னூறு ரூபாய் சம்பளம் என்று ஆர்டர் கொடுக்கப்பட்டிருப்பவர்களுக்கு 75 ரூபாயும், நானூறு ரூபாய் சம்பளம் என்று ஆர்டர் கொடுக்கப்பட்டிருப்பவர்களுக்கு 100 ரூபாயும்தான் கைக்கு வரும் என்றும், ஆனால், அவர்கள் முந்நூறு ரூபாய்க்கும், நானூறு ரூபாய்க்கும் கையெழுத்துப் போட்டுக் கொடுத்தாக வேண்டுமென்றும் முதலிலேயே சொல்லியாயிற்று; அவர்களும் அதற்குச் சம்மதித்தாயிற்று.

மிஸஸ் மாத்யூவின் தம்பி ஒருவன் ஊரில் வேலையில்லாமல் சுற்றிக் கொண்டிருந்தான். அவனை வரவழைத்து 'நியூபீல்டு நர்சரி ஸ்கூல்' மானேஜர் என்று நியமித்தாயிற்று. காஷியர், கிளார்க், சமயா சமயங்களில் ப்யூன் எல்லாம் அவன் தான். 'ஸ்கூல் வேன்' என்ற பெயரில் வாங்கியிருந்த ஓர் ஓட்டை டீஸல் வாகனத்தைச் செலுத்திப் போய்க் குழந்தைகளை அழைத்து வருகிற டிரைவரும் அவன்தான். மிஸ்டர் மாத்யூவுக்குப் பப்ளிக் ரிலேஷன்ஸ் ஆஃபிசர் என்றொரு நர்சரி பள்ளிக்குத்

தேவையில்லாத உத்தியோகம். தோட்ட வேலையையும் வாட்ச்மேன் உத்தியோகத்தையும் சேர்த்துப் பார்ப்பதற்கு ஒரு வேலைக்காரனும் போடப்பட்டிருந்தான்.

அட்மிஷன் மிஸஸ் மாத்யூ எதிர்பார்த்ததை விடப் பிரமாதமாக இருந்தது. கிட்டத்தட்ட ஐநூறு குழந்தைகளுக்கு மேல் சேர்ந்துவிட்டார்கள். குழந்தைகளுக்கு ரூ.30, ரூ.40, ரூ.50 என்று வகுப்புக்கு ஏற்றபடி சம்பளம் நிர்ணயித்தாள். அட்மிஷனின்போது ரசீது கொடுக்காமல் 'பில்டிங் ஃபண்ட்' என்று ஒவ்வொரு பெற்றோரிடமும் ஒரு நூறு ரூபாய் நன்கொடையும் வற்புறுத்தி வாங்கினார்கள். ஸ்கூல் வேனில் வருகிற குழந்தைகளுக்கு 'வேன்' கட்டணம் ரூ.20 என்று நிர்ணயித்தாள். ஸ்கூலில் டெலிவிஷன் வாங்குவதற்காக என்று தலைக்கு ஐந்து ரூபாய் வீதம் குழந்தைகளிடம் கட்டாயமாக வசூலித்தார்கள். இப்படியே ஒரு ரேடியோ ஸெட்டுக்கும் வசூல் நடந்தது.

"பள்ளிக்கூடம் நடக்கிற நேரத்தில் டெலிவிஷனில் ஒரு புரோகிராமும் கிடையாதே?" என்று கொஞ்சம் விழிப்பு உணர்ச்சியுள்ள ஒரு தந்தை கேட்டபோது, "சம்மதமானால் இங்கே சேருங்கள். இல்லாவிட்டால் வேறு ஸ்கூல் பார்த்துக் கொண்டு போங்கள்" என்று முகத்திலறைந்தாற் போல் பதில் சொன்னாள் மிஸஸ் மாத்யூ. மெடிகல் ஃபீஸ், ஸ்பெஷல் ஃபீஸ், அது இது என்று ஒரு குழந்தையின் அட்மிஷனுக்குக் கிட்டத்தட்ட நூறு முதல் நூற்றியிருபது ரூபாய் வரை ஆயிற்று. தினசரி ஒரு நிமிஷம் அரை நிமிஷம் லேட்டாய் வருகிற குழந்தையிடம்கூட லேட் ஃபைன் என்று எட்டணா வசூலிக்கப்பட்டது.

'அம்மாடி காலேஜ் ஃபீஸை விட அதிகமாயிருக்குதே' என்று குறைப்பட்டுக் கொண்டேயாவது பணத்தைக் கட்டிக் குழந்தையை நியூ ஃபீல்டு நர்ஸரி ஸ்கூலில் சேர்த்தார்களே ஒழிய, ஒரு பெற்றோராவது மிஸஸ் மாத்யூவிடம் முறைத்துக் கொண்டு திரும்பிப் போய்விடவில்லை. கிராக்கி அதிகமாக அதிகமாக மிஸஸ் மாத்யூ ஓர் அட்டை இரத்தத்தை உறிஞ்சுவதுபோல் பெற்றோர்களிடம் பணத்தை உறிஞ்சினாள்.

நியூ ஃபீல்டு நர்ஸரி ஸ்கூலின் பரீட்சையில் பெரும்பாலான குழந்தைகளுக்கு மார்க்கைக் குறைத்துப்போட்டு, அப்படிக் குறைந்த மார்க் வாங்கிய குழந்தைகளுக்கு எல்லாம் காலையில் ஸ்கூல் தொடங்குவதற்கு முன்போ அல்லது மாலையில் ஸ்கூல் விட்ட பிறகோ ஸ்கூலிலுள்ள டீச்சர்களே 'ஸ்பெஷல் கோச்சிங்' அல்லது டியூஷன் சொல்லிக் கொடுப்பார்கள் என்றும் அதற்குத் தனியே பதினைந்து ரூபாய் கட்டிவிட வேண்டுமென்றும் மிஸஸ் மாத்யூ ஏற்பாடு செய்தாள். அந்தப் பதினைந்து ரூபாயில் பத்து ரூபாயைத் தான் எடுத்துக்கொண்டு ஐந்து ரூபாயை டியூஷன் சொல்லிக் கொடுக்கும் ஆசிரியைகளுக்குத் தந்தாள்.

முதல் இல்லாத ஒரு வியாபாரமாக அந்த நியூ ஃபீல்டு நர்ஸரி ஸ்கூல் நடந்து கொள்ளை லாபம் தரத் தொடங்கியிருந்தது. முதல் வருஷம் முடிவதற்குள்ளேயே சுமார் நாற்பதினாயிரம் ரூபாய் வரை ஸ்கூலிலிருந்து வந்த வருமானம் மிஸஸ் மாத்யூவின் பெயரில் 'டெபாசிட்' ஆகி பாங்கில் பத்திரமாக இருந்தது.

இரண்டாவது வருஷம் வந்தது. பூமிக்கு அடியிலிருந்த நிலவறையில் மின் விளக்கு, மின்விசிறி எல்லாம் போட்டு இரண்டாகத் தடுத்து நர்ஸரி வகுப்புக்கள் நடந்தன. முதல் ஃப்ளோரில் எல்.கே.ஜி. மாடியில் யூ.கே.ஜி. என்று ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. ஒவ்வொரு ஹாலும் பல வகுப்புக்களாகத் தடுக்கப்பட்டிருந்தன.

பணம் பண்ணுவதில் மிஸஸ் மாத்யூவின் நிபுணத்துவம் நாளுக்கு நாள் வளர்ந்து கொண்டிருந்தது. பக்கத்தில் ஒரு ஜவுளிக் கடையில் ஒரு குறிப்பிட்ட நீல நிறத்துக் கனரகத் துணி ரொம்ப நாளாக விற்காமல் ஸ்டாக் கிடந்து தேங்கியிருந்தது. ‘நியூ ஃபீல்டு நர்ஸரி ஸ்கூலில், எல்லாக் குழந்தைகளுக்கும் அந்த நீலநிறக் காக்கித் துணியை யூனிஃபார்ம் துணியாக அறிவித்து, அந்தத் துணியையும் அதே கடையில் வாங்கச் சொல்லி ஏற்பாடு பண்ணினால் மிஸஸ் மாத்யூவுக்கு இரண்டாயிரம் ரூபாய் தருவதாக அந்தக் கடைக்காரனே வந்து ஆசை காட்டினான்.

மூவாயிரம் தந்தால் அப்படியே செய்வதாக மிஸஸ் மாத்யூ பேரம் பேசினாள். கடைக்காரன் மறுபேச்சுப் பேசாமல் மூவாயிரம் ரூபாயை எடுத்துக் கொடுத்துவிட்டான். முந்தின வருஷத்து ப்ரௌன் யூனிஃபாரத்துக்கு ஏற்பப் பழுப்புநிற ஷூ போட்டுக் கொள்ளச் சொல்லியிருந்தார்கள். “இந்த வருஷம் ப்ளு யூனிஃபாரத்துக்குக் கறுப்பு நிற ஷூவை அத்தனை குழந்தைகளும் உங்கள் கடையிலேயே வாங்கச் செய்கிறோம். ஸ்கூலுக்கு இரண்டாயிரம் ரூபாய் டொனேஷன் தர முடியுமா?” என்று பக்கத்தில் இருந்த ஷூ மார்ட்டுக்கு மிஸஸ் மாத்யூவே சொல்லி அனுப்பினாள். ஷூ மார்ட் ‘ஓனர்’ வந்தான். குறிப்பிட்ட ஷூ மார்ட் ஓனரும் ஒரு விடாக்கண்டன் ஆகையால் கறாராக ரூ. 1800க்குப் பேரம் பேசிக் கொடுத்துவிட்டுப் போனான். நோட்டுக், புத்தகங்களில் கூட இதே மாதிரி கமிஷன் வந்தது.

இரண்டாம் வருஷம் இப்படி ஸ்கூல் தொடங்குவதற்கு முன்பே சுமார் ஐயாயிரம் ரூபாய் சுளையாக லாபம் வந்து விட்டது. முந்தின வருஷத்துக்கு ப்ரௌன் யூனிஃபாரமும் ப்ரௌன் ஷூவும் பல குழந்தைகளிடம் புதிதாக அப்படியே இருந்தும் அதை மூலையில் எறிந்து விட்டுப் புதிய நீல நிற யூனிபாரமும் ப்ளாக் ஷூவும் வாங்க வேண்டியதாயிற்று. பழைய யூனிபாரத்தோடு வரும் குழந்தைகளுக்கு ஃபைன் போட்டுத் துன்புறுத்திப் புதிய யூனிப்பாரம் வாங்க நிர்ப்பந்தம் செய்தாள் மிஸஸ் மாத்யூ. ஆகவே, அவள் வாக்களித்தபடி ஜவுளிக்கடைக்காரருக்கும், ஷூ மார்ட்-காரருக்கும் உடனடியாக நல்ல வியாபாரமாயிற்று.

எலும்பும் தோலுமான க்ஷயரோகக்காரனுக்கு சில்க் சட்டையைப் போட்டு அலங்கரித்து உட்கார வைத்த மாதிரி க்ஷீணித்துப் போய்விட்டிருந்த அந்தக் கிழட்டு மாளிகையின் வெளியே சுத்தமான கச்சிதமான பூந்தோட்டமும், ‘பூக்களை யாரும் மிதிக்கக்கூடாது’ என்று குழந்தைகளுக்கும் பகலில் குழந்தைகளுக்கு உணவு கொடுக்க வரும் ஏராளமான பெற்றோர்களுக்கும் எச்சரிக்கையாக ஒரு பளீரென்ற போர்டும் விளங்கிக் கொண்டிருந்தன.

நியூஃபீல்டு நர்ஸரி ஸ்கூலில் இரண்டாவது வருஷ நடுவில் ஒரு சிறிய சலனம் ஏற்பட்டது. அதைத் தொடர்ந்து...

மே, ஜூனில் முறையான அட்மிஷன் இருந்தாலும், அக்டோபரில் விஜயதசமியின் போதும் மிஸஸ் மாத்யூ குழந்தைகளைச் சேர்த்துக் கொள்ளும் வழக்கத்தைக் கொண்டிருந்தாள். நிறைய இந்துக்கள் அப்படிச் சேர்க்க வந்ததே காரணம்.

அந்த வருஷ விஜயதசமிக்கு முதல்நாள் கல்கத்தாவில் ஒரு என்ஜினியரிங் கன்ஸ்ட்ரக்ஷன் கம்பெனியில் பல வருடங்கள் வேலை பார்த்துவிட்டுச் சமீபத்தில் அதன் சென்னைக் கிளைக்கு மாறுதலாகி வந்திருந்த ஒருவர் தன் பையனைச் சேர்க்க நியூ ஃபீல்டு நர்ஸரி ஸ்கூலுக்கு வந்தார். அவருக்கு அந்த ஸ்கூல்தான் அவரது வீட்டுக்குப் பக்கத்தில் இருந்தது.

அட்மிஷன் ஃபாரங்களைப் பூர்த்தி செய்து பணத்தைக் கட்டிய அவரிடம் மிஸஸ் மாத்யூவின் தம்பி ரசீது தராமல் பில்டிங் ஃபண்டுக்குத் தனியே நூறு ரூபாய் நன்கொடை தருமாறு கேட்டான். அவர் தருவதற்கு மறுத்து விவாதித்தார். "நன்கொடை என்பது நானாக விரும்பிக் கொடுப்பது. நீங்கள் அதை வற்புறுத்தக்கூடாது. அது முறையில்லை."

"கண்டிப்பாக நீங்கள் கொடுத்தாக வேண்டும். மறுத்துப் பிரயோசனமில்லை."

"கண்டிப்பாகத் தர முடியாது."

தகராறு இப்படி நடந்து கொண்டிருந்தபோதே மிஸஸ் மாத்யூ ஏதோ வேலையாக ஆபீஸுக்குள் வந்தாள். அந்தத் தந்தை அவளிடமே அதை முறையிட்டார். மிஸஸ் மாத்யூ, "ஐ டோண்ட் ப்ரெஃப்ர் பேரண்ட்ஸ் லைக் யூ. பீ ஜெனரஸ்" என்று ஏதோ ஆரம்பித்தாள். முக்கால்வாசி வேளைகளில் மத்திய தர கீழ்மட்டத்துப் பெற்றோர்களிடம் நாலு வார்த்தை ஆங்கிலத்தில் பேசினால் அவர்கள் பெரும்பாலும் பயந்து மசிந்து வழிக்கு வருவதைக் கவனித்து அப்படிப் பேசுவதை ஒரு 'சீப் டெக்னிக்காக' அவள் எப்போதும் கையாண்டு வந்தாள். ஆனால், இப்போது இந்த விநாடியில் இந்தக் கல்கத்தாவில் இருந்து டிரான்ஸ்ஃபரில் வந்திருந்த தந்தையிடம் அந்த டெக்னிக் பலிக்கவில்லை.

"இட் இஸ் நாட் எ க்வஸ்ச்சின் ஆஃப் ஜெனராஸிட்டி. யூ ஆர்... ஃபோர்ஸ்ஃபுல்லி ஆஸ்க்கிங் மீ" என்று அவர் வெடித்துச் சீறினார்.

உடனே மிஸஸ் மாத்யூ "தென் வொய் டு யூ கம் ஹியர் அண்ட் டிஸ்டர்பிங் அஸ்? கோ அண்ட் ஆஸ்க் ஃபார் அட்மிஷன் இன் எ சீப் கார்ப்பொரேஷன் ஸ்கூல்..."

"பார் தட் ஐ டோண்ட் நீட் யுவர் அட்வைஸ். ஸீ, ஐ யாம் கம்மிங் ஃப்ரம் எ ஸிடி ஆஃப் டெய்லி குவாரல்ஸ் அண்ட் ஃபைட்டிங்ஸ். கீப் யுவர் லிமிட்ஸ்" என்று இரைந்து கத்திவிட்டுப் போனார் அந்தத் தந்தை. அவருடைய குழந்தையை அவர் மிஸஸ் மாத்யூவின் நர்ஸரியில் சேர்க்கவில்லை.

ஆனால், இரண்டுநாள் கழித்து அரசாங்கத்தின் பி.டபிள்யூ.டி. இலாகாவைச் சேர்ந்த "சேஃப்டி அண்ட் செக்யூரிடி ஆப் பப்ளிக் பில்டிங்ஸ்" பிரிவில் இருந்து நியூ ஃபீல்டு நர்ஸரி ஸ்கூலுக்கு அவசரமாக ஒரு ரிஜிஸ்தர் நோட்டீஸ் வந்தது.

பொது உபயோகத்துக்கு இலாயக்கில்லாத, இடிந்து விழத்தக்க நிலையிலுள்ள ஒரு பாழுங் கட்டிடத்தில் பள்ளிக்கூடம் நடத்துவதைக் கண்டித்து ஷோ காஸ் நோட்டீஸ் மாதிரி அது விடப்பட்டிருந்தது. இன்ஸ்பெக்ஷனுக்காக வரப்போவதாகவும் அதில் குறிப்பிடப்பட்டிருந்தது.

இந்த நோட்டீஸ் கிடைத்ததும் மிஸஸ் மாத்யூவுக்கும் அவள் தம்பிக்கும் அந்தக் கல்கத்தா ஆசாமி மேல்தான் சந்தேகம் வந்தது. "சண்டையையும் எதிர்த்துப் போரிடுவதையும் தினசரி வழக்கமாகக் கொண்டிருக்கும் ஒரு நகரத்திலிருந்து நான் வருகிறேன்" என்று அந்த ஆள் சவால் விட்டதும் நினைவு வந்தது.

பயத்தோடு அவசர அவசரமாக ஒரு மேஸ்திரியையும், கொத்தனாரையும் கூப்பிட்டுக் கட்டிடத்தில் கொஞ்சம் மராமத்து வேலையையும், மேல் பூச்சு, வெள்ளையடித்தல் முதலிய வேலைகளையும் தொடங்கினாள் மிஸஸ் மாத்யூ.

இரண்டு மூன்று நாளாக அடை மழை வேறு பிடித்துக் கொண்டு கொட்டியது. மைதானத்தில் காலை ப்ரேயரைக்கூட நடத்த முடியவில்லை. ஆகவே, மூன்று வகுப்புக்களின் ப்ரேயரையும் சேர்த்து நடு ஹாலில் அஸெம்பிள் பண்ணச் சொல்லி அங்கே நடத்தினார்கள். நடு ஹால் என்பது ஒயின் ஸெல்லர் நிலவறைக்கு மேலேயும் மாடிக்குக் கீழேயும் இருந்த தரை. அந்த ஃப்ளோரின் நிலைமைதான் மிகமிக மோசமாயிருந்தது. மூன்று தினங்களாக அந்தத் தரை தாங்க முடிந்ததற்குமேல் எண்ணிக்கையுள்ள கூட்டம் அங்கே கூடி அழுத்தவே அடைமழை ஈரத்தில் நசிந்திருந்த சுவரும் தளமும் மேலும் பலமிழந்திருந்தன. அதேசமயம் வேலையாட்கள் அந்த மழை ஈரத்தில் மராமத்துக்காகக் கட்டிடத்தை வேறு இடிக்கவும், கொத்தவும் செய்து கொண்டிருந்தனர்.

நான்காவது நாள் ப்ரேயர் நடந்து பாதிக் குழந்தைகள் நிலவறையில் வகுப்புக்கு இறங்கியிருந்தார்கள். பாதிக் குழந்தைகள் ப்ரேயர் ஹாலிலேயே நின்றார்கள். அப்போதுதான் அது யாரும் எதிர்பாராமல் திடீரென்று நடந்தது.

சடசடவென்று பூகம்பம் போல் நிகழ்ந்த அந்த நிகழ்ச்சியில் தளம் சரிந்ததைக் கவனிக்கக்கூட யாருக்கும் நேரமில்லை. மாடியேறிய குழந்தைகள் மட்டுமே பிழைக்க முடிந்தது. கீழே நிலவறையில் அதிகாலையின் மென்மையான பட்டு ரோஜாப் பூக்களாக இறங்கிய நர்ஸரி வகுப்புக் குழந்தைகள் அப்படியே அமுங்கிச் சமாதியாகிவிட்டன. சரிந்த தளத்தின் ஹாலில் நின்ற குழந்தைகளில் சுவரோரமாக நின்றவை தப்பின. நடுவில் நின்றவற்றில் கை கால் இழந்து நசுங்கிக் குற்றுயிரும் குலையுயிருமாகப் போனவை பல. டீச்சர்களில் சிலரும் நிலவறையில் நசுங்கி மாண்டிருக்க வேண்டும்.

ஒரே ஓலம், அலறல், அழுகை, கதறல், கண்ணீர், சாவு, ரத்தம், காயம், அடைமழை வேறு. நல்லவேளையாகப் பிழைத்த குழந்தைகளும் மற்றவர்களும் வெளியேற்றப்பட்டுப் பத்திரமான இடத்துக்கு அனுப்பப்பட்டார்கள். காயமுற்றவர்கள் ஆஸ்பத்திரிக்கு அனுப்பப்பட்டார்கள். ஆம்புலன்ஸும், தீயணைக்கும் படையினரும் வந்தனர். ஸ்கூல் காம்பவுண்ட் கதறல்களினாலும், ஓலங்களினாலும், துயரமும் கொதிப்பும் கொந்தளிப்பும் நிறைந்த ஜனங்களாலும் நிறைந்திருந்தது.

மிஸ்டர் மாத்யூவும் மிஸஸ் மாத்யூவும், அவள் தம்பியும் கீழே படியிறங்கி வந்தால் என்ன ஆகுமோ என்று பயந்து மாடியிலிருந்த ஆபீஸ் அறையிலேயே கதவை உட்புறமாகத் தாழிட்டுக் கொண்டு விட்டார்கள். போலீஸும், ஆம்புலன்ஸும், தீயணைக்கும் படையினருமாகச் சேர்ந்து மாடியறைக் கதவைத் திறந்து அவர்களைக் கீழே கொண்டு வந்து நிறுத்தியபோது தன் குழந்தையைப் பறி கொடுத்த ரிக்ஷாக்காரன் ஒருவன் ஆத்திரம் தாங்காமல் தரையில் பூங்காவினிடையே 'பூக்களை யாரும் மிதிக்கக்கூடாது' என்று போர்டு எழுதி ஊன்றியிருந்த இரும்புச் சட்டத்தைப் பிடுங்கிக் கொண்டு அடிப்பதற்காக மிஸஸ் மாத்யூவின் மேல் பாய்ந்தான். அவன் கண்களில் அப்போது குரூரமான கொலை வெறி மின்னியது.

அப்போது நாகரிகமாக உடை அணிந்திருந்த ஒருவர் குறுக்கே பாய்ந்து அவன் கையிலிருந்த இரும்புச் சட்டத்தைப் பறித்து அவனைத் தடுத்தார். "அவசரப்படாதே. சட்டம் அவர்களைக் கவனித்துக் கொள்ளும்" என்றார். மிஸஸ் மாத்யூ நிமிர்ந்து பார்த்தாள். இப்படிச் சொன்னது வேறு யாருமில்லை. அந்தக் கல்கத்தா ஆசாமிதான்.

"உடம்பைச் செருப்பாக்கி உழைச்சிக் கிடைக்கிற கூலியிலே பையனை இங்கிலீசு படிக்க வச்சுடணும்னு ஆசைப்பட்டேனே பாவி. இப்போ உலகத்தை விட்டே போயிட்டியேடா என் தங்கமே" என்று தடுக்கப்பட்ட அந்த ரிக்ஷாக்காரன் கதறிக் கொண்டிருந்தான்.

"பூக்களை விடச் சிரேஷ்டமானவற்றை எல்லாம் மிதித்து நசுக்கிக் கொன்றபின் இங்கே இந்த போர்டு ஒரு கேடா?" என்று ஆத்திரத்தோடு கையிலிருந்த 'பூக்களை யாரும் மிதிக்கக்கூடாது' என்ற போர்டைத் தலையைச் சுற்றி வீசி எறிந்தார் கல்கத்தாவிலிருந்து டிரான்ஸ்ஃபர் ஆகி வந்திருந்த அந்த மனிதர்.

அந்த போர்டு தோட்டத்தின் ஒரு பகுதியில் பூத்திருந்த பட்டு ரோஜாப் பாத்தியின் மேல் விழுந்து பூக்களை எல்லாம் அழுத்திச் சின்னாபின்னமாக்கி விட்டுக் கிடந்தது. விழுந்த வேகத்தில் போர்டும் ஸ்டாண்டும் வேறு வேறாய்த் தனித்தனியே கழன்று போயிருந்தன.

**(அமுதசுரபி, தீபாவளி மலர், 1978)**

## 142. பாக்கிப் பணம்

**க**டைசி வாடிக்கைக்காரர் வரையில் அவர் நினைத்தது நடக்கவில்லை. இந்தக் கடைசி வாடிக்கைக்காரரையும் தவறவிட்டுவிட்டால் அப்புறம் நாளை விடிகிறவரை பணத்துக்கு வேறு வழியே இல்லை. நல்லவேளையாகக் கடைசி வாடிக்கைக்காரன் ஓர் ஆந்திராக்கார ஆளாக இருந்தான். கடையிலும், கேஷ் மேஜை அருகிலும் கூட்டம் குறைவாக இருந்தது. வந்து சிக்கிய ஆளும் சரியான இளிச்சவாயனாக இருப்பான் போலத் தோன்றியது. கொஞ்சம்கூடப் பயமோ அடக்கமோ இல்லாமல் ஒரு கத்தை நூறு ரூபாய் நோட்டுக்களை மடித்தும், பிரித்தும், கலைத்தும் திரும்பத் திரும்ப எண்ணிப் பார்த்துக் கொண்டிருந்தான் அந்த வாடிக்கைக்காரன். நடுநடுவே எண்ணிக்கை மறந்துபோய்விட்டதனாலோ? படிப்பறிவின்மையினாலோ, அல்லது பணத்தைப் பற்றிய அலட்சியத்தாலோ எதனாலென்று தெரியவில்லை - அந்த வாடிக்கைக்காரன் அப்படி அப்பாவியாக நடந்து கொண்டான்.

சிமெண்ட், கட்டிட சாமான்கள், சானிடரி பொருள்கள், இரும்புச் சாமான்கள் மொத்த விற்பனை செய்யும் வியாபாரக் கடை அது. வடிவேலு அங்கே விற்பனை நிர்வாகி. பல ஆண்டுகளாகப் பழந்தின்று கொட்டை போட்டவர். வேறு வார்த்தைகளில் சொல்லலாமானால் பழைய பெருச்சாளி. இப்படி யாராவது அப்பாவிகள் சிக்கிக் கொண்டால் நூறு இருநூறு பணம் பண்ணத் தயங்காத ஆள். எப்படி ஏமாற்றுவது என்பதிலும் அத்துபடி ஆனவர்.

வடிவேலுவுக்குத் தோதாகக் கேஷியரோ, பில் போடுகிற ஆளோ அருகில் இல்லை. கடை மூடுகிற நேரம். கேஷியர் முகம் கைகால் கழுவிப் புறப்படத் தயாராவதற்காகக் கடைக்குப் பின்புறமுள்ள கிணற்றடிக்குப் போயிருக்க வேண்டும். பில் போடுகிற பஞ்சாட்சரம் பக்கத்தில் காப்பி குடிக்கப் போயிருந்தான். சாமான் எடுத்துத் தருகிற ஆட்கள் மட்டும் வாடிக்கைக்காரருக்காகச் சாமான்களை எடுத்து வைத்துக் கொண்டிருந்தார்கள்.

வடிவேலுவின் மனம் 'நயினார்' வந்து இரகசியமாகச் சொல்லிவிட்டு போன 'புது உருப்படி'யைப் பற்றிய கற்பனையில் ஈடுபட்டிருந்தது. 'நயினார்' சொல்லிவிட்டுப் போன வேளையோ அல்லது வடிவேலுவின் பலவீனமான நிலையோ தெரியவில்லை. அதே ஞாபகமாக இருந்தது. எப்போது கடையைப் பூட்டிவிட்டுப் பணத்தோடு அங்கே போய் அந்த 'எவளோ ஒருத்தி'யின் மடியில் தலையைச் சாய்க்கப் போகிறோம் என்று உள்ளே நைப்பாசை அரித்துக் கொண்டிருந்தது.

எப்போதுமே இந்த விவகாரங்களில் 'நயினார்' எக்ஸ்பெர்ட். வடிவேலுவின் பிரியம், டேஸ்ட், எல்லாம் அவனுக்கு அத்துபடி. எப்போதாவது வந்து போகும்

கம்பெனி மானேஜிங் டைரக்டர், வடக்கே இருந்து வரும் வியாபாரப் பெரும் புள்ளிகளுக்கு 'ஏற்பாடு' செய்ய நயினாரின் தயவை நாடப் போக முடிவில் அது வடிவேலுவுக்கும் பழக்கமாகிவிட்டது. அவ்வப்போது ஆசைத் தீயை மூட்டிவிட 'நயினார்' இருக்கவே கேள்விமுறை யில்லாமல் ஆசையும் கொடிகட்டிப் பறந்தது வடிவேலுவுக்குள்ளே.

தங்கள் கம்பெனி விருந்தாளியாக வந்து தங்கும் பெரும்புள்ளிகளுக்குப் 'புட்டிகளும் குட்டி'களும், ஏற்பாடு செய்யவென்று தான் பழக்கப்படுத்திக் கொண்ட நயினார் நாளடைவில் அதே ஏற்பாட்டை வடிவேலுவுக்கும் செய்யத் தொடங்கிவிட்டான். பெரிய வாடிக்கை தருபவர் என்ற முறையில் வடிவேலுவுக்குக் கொஞ்சம் தாராளமாகவே இதில் சலுகையும் காண்பித்தான்.

வடிவேலுவின் சிந்தனை கலைந்தது.

"பில்லு வேண்டியதில்லே... டோட்டல் சொல்லுப்பா" என்றான் அந்த வாடிக்கைக்காரன். அதையும் இதையும் எழுதிக் கூட்டிக் கழிப்பதுபோல் பாவனை செய்துவிட்டு வந்த கூட்டல் தொகையோடு மேலும் ஒரு நூற்றிருபது ரூபாய் சேர்த்து, இரண்டாயிரத்திப் பதினேழு ரூபாய் இருபத்தேழு காசு ஆவதாகத் தெரிவித்தார் வடிவேலு. உண்மையில் ஆன தொகை ஆயிரத்துத் தொள்ளாயிரத்துச் சொச்சம்தான். ஒரு நம்பிக்கை வருவதற்காகத் துல்லியமாகக் கூட்டிச் சொன்னதுபோல் இரண்டாயிரத்துப் பதினேழு ரூபாய் இருபத்தேழு காசு என்பதாகச் சொல்லியிருந்தார்.

ஆந்திரா ஆள் கையிலிருந்த பணத்தை வடிவேலுவின் முன் வைத்து விட்டு, அதை வடிவேலுவே எண்ணுகிறவரை காத்திருந்தான்.

வடிவேலுவின் சாமர்த்தியம் எப்போதுமே சோடை போனதில்லை.

"நீ என்னா கொடுத்தே?"

"ரெண்டாயிரத்துப் பத்து இருக்கு... தய சேசி... கொஞ்சம் கமிஷன் ஈவண்டி...."

"சரி! போப்பா... ஏழு ரூபா இருபத்தேழு பைசா உனக்குக் கமிஷனா வச்சுக்க... நீ அதைத் தர வேண்டாம்."

– உண்மையில் அவன் கொடுத்த நோட்டுக் கற்றைகளை எண்ணினால் இரண்டாயிரத்து முப்பத்தைந்து ரூபாய் இருந்தது. அவனே இரண்டாயிரத்துப் பத்து என்று சொல்லியதனால் வடிவேலுவுக்கு மிகவும் வசதியாகப் போயிற்று. ஞாபக மறதியாலோ, அல்லது எண்ணிக்கை தவறுதலினாலோ அந்த ஆள் இருபத்தைந்து ரூபாயைக் குறைத்துக் கணக்கிட்டிருக்க வேண்டும். சரியான வாத்து மடையன்...

மனச்சாட்சி உறுத்தியதாலோ என்னவோ மறுபடியும் எண்ணினார் வடிவேலு. சந்தேகமே இல்லை. இரண்டாயிரத்து முப்பத்தைந்து ரூபாய்தான் இருந்தது. நூற்று இருபத்தைந்து ரூபாய்க்கு மேல் சுளையாக லாபம்.

"பாக்கி..." வாடிக்கைக்காரன் இப்படித் தொடங்கி என்ன சொல்ல வந்தானோ தெரியவில்லை. அதற்குள் வடிவேலுவே முந்திக் கொண்டு அவனை இடைமறித்து,

"பாக்கியாவது ஒண்ணாவது? ஏமி... பாக்கி? பாக்கி லேது சாமி!" - என்று தனக்குத் தெரிந்த அரைகுறைத் தெலுங்கில் முடித்துவிட்டார்.

"நமஸ்காரமண்டி" - என்று ஒரு பெரிய கும்பிடாகப் போட்டுவிட்டு அந்த ஆந்திராக்காரன் விடைபெற்றுப் போய்ச் சேர்ந்தான்.

அவன் தலை மறைந்ததும் பில் எழுதிக் கிழித்துப் போட்டுவிட்டுக் கடைக்குச் சேரவேண்டிய பணத்தை ஒழுங்காகக் கல்லாவில் எண்ணிப் போட்டுவிட்டு மீதியைச் சட்டைப் பைக்குள் திணித்துக் கொண்டார் வடிவேலு.

கடைக்கணக்கு முடித்து அக்கவுண்ட் புக், டே புக், கேஷ் ரிஜிஸ்தர் எல்லா-வற்றிலும் கையெழுத்துக்கூடப் போட்டாயிற்று. கடையையும் பூட்டிவிட்டார்கள். வடிவேலு கம்பெனியின் மானேஜர் என்ற முறையில் சாவிக் கொத்தும் அவர் கைக்கு வந்துவிட்டது.

மனத்தில் இன்பக் குறுகுறுப்பும் ஆசைத் தவிப்பும் தாங்கமுடியவில்லை. கடையிலிருந்து கிளம்பிய குமாஸ்தா கேஷியர் முதலியவர்களோடு சேர்ந்து போகாமல் நயினாரைத் தேடிச் செல்வதற்காக வேண்டுமென்றே பின் தங்கினார் வடிவேலு.

"சார்! வேற யாரும் வரலேன்னா என்னைக் கொஞ்சம் ராமபவன் வாசல்லே விட்டுடறீங்களா?" - என்று வடிவேலுவின் ஸ்கூட்டரில் லிஃப்ட் கேட்டுக் குழைந்தார் பில்போடுகிற பஞ்சாட்சரம்.

"நான் இன்னைக்கி ராமபவன் பாதையாப் போகலே. இங்கே ஒருத்தரைப் பார்க்கணும். வெயிட் பண்ணப் போறேன்..."

"அப்பிடியானா வேண்டாம் சார்! நான் வரேன்!" பஞ்சாட்சரம் சொல்லி விடைபெற்றுக் கொண்டு போய்விட்டார். வடிவேலு ஸ்கூட்டர் அருகே தயங்கி நின்றார்.

பத்து நிமிஷத்தில் நயினாரே அவரைத் தேடி அங்கு வந்தான். கையைப் பாட்டில் மாதிரி அடையாளம் காட்டி "அதுகூடக் கிடைச்சுது சார்! கொண்டாந்திருக்கேன்" என்றான் நயினார்.

"சபாஷ்" என்றார் வடிவேலு.

"அங்கே அந்த வீட்டுக்குப் போக வேணாம் சார்! மாசக் கடைசி... திடீர்னு போலீஸ் ரெய்டு வந்தாலும் வரும். ரெய்டு இல்லாட்டியும் அதைச் சொல்லி மிரட்டியே அதிகப் பணம் பறிச்சுடுவாளுவ. கடைச்சாவி உங்ககிட்டத்தானே இருக்கு?... நீங்க கடையைத் திறந்து உள்ளார இருங்க... நான் போயி ஒரு டாக்ஸியிலே இட்டாந்துடறேன்... சோடா வாங்கிக் குடுத்துட்டுப் போறேன். சிப்ஸும் கொண்டாரேன்; பாட்டிலை... முடியுங்க... அதுக்குள்ளே உருப்படி வந்துடும். என்னா, நான் சொல்றது... சரிதானே?"

"ரொம்ப சரி நயினார்! நான் இங்கே கடையிலேயே இருக்கேன். இந்தா டாக்ஸிக்குப் பத்து ரூபா வச்சுக்க. உள்ளே வந்து பாட்டிலைக் கொடுத்தப்புறம் கிளம்பு..."

வடிவேலு கடைக் கதவைத் திறந்தார். நயினார் சோடாவும், வறுவலும் வாங்கப் போனான். ஐந்து நிமிஷத்தில் வாங்கிக் கொண்டு திரும்பியும் வந்துவிட்டான்.

"பாட்டில்காரன் தெருமுனையிலே காத்திருப்பான் சார்! முதல்லே அதைக் கணக்குத் தீர்த்துக் குத்துடு சார்" - என்றான் நயினார். அவன் ஃபாரின் பிராந்தி குவாட்டர் பாட்டிலுக்காகக் கேட்ட அதிகத் தொகையை மறு பேச்சுப் பேசாமல் எண்ணிக் கொடுத்தார் வடிவேலு.

"சிப்ஸு, சோடா, எனக்கு டீக்காசு" - என்று தரகனுக்கே உரிய குணத்தோடு விடாமல் மேற்கொண்டு அரித்த நயினாரிடம் மேலும் ஒரு ஐந்து ரூபாய் நோட்டை நீட்டினார் வடிவேலு. பொறுமையிழந்து கொண்டிருந்தார் அவர். நயினார் புறப்பட்டுப் போனான்.

வடிவேலு கடைக் கதவைத் தாழிட்டுவிட்டுக் குடிக்கத் தொடங்கினார்.

மணி இரவு ஒன்பதரை. முன்பனிக் காலமாகையினால் தெரு வெறிச்சோடி விட்டது. எப்போதாவது ஊடறுத்துச் செல்லும் ஒரு பஸ், லாரி, கார் ஓசையைத் தவிர அந்தச் சாலையில் அதிகச் சத்தமில்லை.

வாசலில் டாக்ஸி வந்து நிற்கும் ஓசையை வடிவேலுவின் செவிகளும் மனமும் ஆவலோடு எதிர்பார்த்துக் காத்திருந்தன. உடலின் வெறி ஏறிய சூடு. குடிபோதை ஒன்றோடொன்று சேர்ந்து கொண்டால் கேட்கவா வேண்டும்?

மணி பத்தடிக்க ஐந்து நிமிஷம் இருக்கும்போது வாசலில் டாக்ஸி வந்து நின்றது. நேரே வாயிற்கதவைத் திறந்து பார்க்கத் தயங்கி ஜன்னல் வழியாக முதலில் எட்டிப் பார்த்தார் வடிவேலு. முதலில் நயினார்தான் டாக்ஸியின் முன் ஸீட் - அதாவது டிரைவர் பக்கத்து ஆசனத்தின் கதவைத் திறந்து கொண்டு கீழே இறங்கினான்.

முகப்பருகே வந்து நயினார் மெதுவாகவும், இரகசியமாகவும் கடைக் கதவைத் தட்டினான். வடிவேலு கதவைத் திறந்தார்.

"வந்தாச்சு... இட்டாரட்டா சார்?"

"சட்னு கூட்டிக்கிட்டு வா... அக்கம் பக்கம் கவனிச்சு யாரும் பார்க்கிறதுக்குள்ளே உள்ளே அனுப்பு..."

"சார்... வந்து...?"

"என்ன வந்து...?"

"டாக்ஸிக்குப் பணம் பத்தலே... ஒரு ரெண்டு ரூவா இருந்தாக் குடு சார்..."

"தெரியுமே...? உன் வழக்கம்..." இரண்டு ரூபாயை நயினாரிடம் நீட்டினார் வடிவேலு. டாக்ஸியிலிருந்து இறங்கி உயரமும் செழிப்புமாய் வளைகுலுங்க வாசனைகள் கட்டியங்கூற ஒரு பெண்ணுருவம் அவசரமும், பதற்றமுமாக ஓடிவந்து நின்று போர்த்திக் கொண்டிருந்த சால்வையை நீக்கியதும் பாதாதி கேச பரியந்தம் விழுங்கி

விடுவதுபோல் அந்த உருவத்தைப் பார்த்தார் வடிவேலு. திருப்தியாயிருந்தது. ஓடத் தயாராக நிற்கும் பந்தயக் குதிரை போல் திமிறி நிற்கும் வாளிப்பான உடல். வீங்க வேண்டிய இடங்களில் அளவாக வீங்கித் தணிய வேண்டிய இடங்களில் அளவாகத் தணிந்த அங்கங்கள், வடிவேலுவின் நரம்புகள் முறுக்கேறின. அவளது முகமும், இதழ்களும், சிரிப்பும்கூட நல்ல வசீகரம்தான். தோற்றத்தை எடுத்துக்காட்டுவது போல் வடிந்த கூரிய நாசி. காமவேட்கை நிரம்பி வழியும் கருவிழிகள். அவள் நின்றாள் - அல்ல, அந்த வசீகரத்தேர் நின்றது.

"உனக்காக எவ்வளவு நேரம் காத்திருப்பது?"

"நாகு அரவம் தெலீது..."

(எனக்குத் தமிழ் தெரியாது)

அவள் குரல் சன்னமாக இனிதாகத் தெலுங்குச் சங்கீதம் போலிருந்தது. பாஷை தெரியாமல் அவளோடு சகஜமாகப் பேச முடியாது என்று தெரிந்தது. ஆனால் என்ன? அவள் உடலோடு விதம் விதமாகப் பேச முடியுமே. பேசிச் சரசமாடிச் சிரித்துக் குலாவ அவருக்கும் நேரம் இல்லை. வாயால் பேச வேண்டிய அவசியமும் இல்லை.

டாக்ஸியை அனுப்பி விட்டு நயினார் உள்ளே வந்தான்.

"நா போறேன் சார்! எனக்கு வேறே கிராக்கிங்க காத்துக் கிட்டிருக்கும்... எனக்குக் குடுக்கிறதைச் சட்டுனு குடுத்தனுப்புங்க... அதுக்கு அதே கேட்டு வாங்கிக்கும், தகராறு பண்ணாது... ரொம்ப நல்ல மாதிரி... ஒன் அவருக்குச் சொல்லி இட்டாந்திருக்கேன்... இப்பத்தான் புதிசு சார்... சூது வாது எதுவும் தெரியாது. ஊர் கடப்பை..."

வடிவேலு நயினாருக்குப் பணத்தைக் கொடுத்தார். அவன் மேலும் தலையைச் சொறிந்து கொண்டு நின்றான். மேலும் ஏதோ போட்டுக் கொடுத்தார் வடிவேலு. அப்புறமும் விடாமல் அரித்தான் அவன்.

மேலும் தலையைச் சொறிந்து கொண்டு நின்றான். மேலும் ஏதேதோ சில்லறைக் காசுகளைக் கையில் வந்தபடி வாரி அவன் கையில் திணித்தார் வடிவேலு. அவன் வாங்கிக் கொண்டு ஒருவழியாகப் புறப்பட்டான்.

"நா வரேன் சார்... ஒன் அவுருக்கு மேலே வேண்டாம்... கரீக்டா அனுப்பிடுங்க... அதுவே ரிக்ஷா பார்த்துப் போயிக்கும்..."

நயினாரை அனுப்பிவிட்டுக் கதவுகளையும் ஜன்னல்களையும் அடைத்துத் தாழிட்டார் வடிவேலு. கடையிலேயே பின் பகுதியில் வியாபார சம்பந்தமாக வருவோர் போவோர் தங்க ஓர் அறை உண்டு. அதில் டன்லப் பில்லோ மெத்தையோடு கூடிய கட்டில் - வாஷ்பேஸின் எல்லாம் உண்டு.

அவளைத் தழுவினாற் போல அந்த அறைக்குத் தள்ளிக் கொண்டு போனார் வடிவேலு. தகராறு, முரண்டு. மறுப்பு எதுவுமில்லாமல் இழுத்த இழுப்புக்கு விளையாடக் கிடைத்த ஒரு மிருதுவான ரப்பர் பொம்மை போலச் சிரித்தபடி தாராளமாகப் பழகினாள் அவள். உண்மையிலேயே புதுசு என்றுதான் தெரிந்தது.

நாணமும், கூச்சமும்கூட அப்படி அப்படியே மெருகு குன்றாமல் இருந்தன. வடிவேலுவுக்கு ஒரே கும்மாளம்தான். அவளை அவருக்கு மிகவும் பிடித்துப் போய்விட்டது.

இரவு பதினொரு மணி. வடிவேலு உடைகளைப் பழையபடி அணிந்து கொண்டு முகம் கழுவியபின் கடையின் முன்புறம் கேஷ் மேஜை அருகே வந்தார். அதற்கு முன்பே அங்கு வந்து தயாராக நின்றிருந்த அவளிடம், "இந்தா வேணுங்கிறதை எடுத்துக்க..." என்று தம் மணி பர்ஸை நீட்டினார் வடிவேலு. அவள் மேல் அவருக்கு மிகவும், பிரியமும் அனுதாபமும் ஏற்பட்டு இருந்தன. மணிபர்ஸிலும் அறுபத்தைந்து ரூபாயோ என்னவோதான் இருந்தது. அவர் கூறியது அவளுக்குப் புரியவில்லை. மேலும் ஜாடை செய்து ஒருவிதமாகப் புரிய வைத்தார்.

ஒருவாறு புரிந்து கொண்ட அவள் மணிபர்ஸை எடுத்து ஐந்து பத்து ரூபாய் நோட்டுக்களை மட்டும் சரியாக எண்ணி எடுத்துக் கொண்டு, "இதிகோ பாக்கி டப்புலு தீஸு கோண்டி" (இதோ பாக்கிப் பணம்! எடுத்துக்கொள்ளுங்கள்) என்று அவரிடம் திருப்பிக் கொடுத்தாள்.

"எனக்குப் பாக்கிப் பணம் எதுவும் வேண்டியதில்லை. பூராவும் நீயே எடுத்துக்க" என்று வார்த்தையால் சொல்லவும் சொல்லிச் சைகையும் வேறு செய்தார் அவர்.

அவள் பிடிவாதமாக மறுத்தாள். "தீனிகி பைஸா தீஸுகோனிலேவு." (இதுக்குமேலே நான் பைசா வாங்கமாட்டேன்) இப்படிச் சொல்லியபடியே அதே கேஷ் மேஜையில் பாக்கிப் பணத்தை மணிபர்ஸோடு மீண்டும் திருப்பி வைத்தாள் அவள்.

வடிவேலுவுக்கு என்னவோ போல் இருந்தது. யாரோ ஒருவருக்குத் தர வேண்டிய பாக்கியை ஏமாற்றி மீதம் பிடித்துத்தான் அவளுக்குக் கொடுக்கிறார் அவர். அவளோ அவருக்கு ஒழுங்காக ஏமாற்றாமல் பாக்கியைத் திருப்பித் தந்து கொண்டிருக்கிறாள்!

தன்னிடம் சிறிதும் பாக்கி இல்லாமல் தீர்ந்து போய்விட்ட ஏதோ ஒரு நல்ல குணம் அவளிடம் அப்படியே இன்னும் இருப்பது புரிந்தது அவருக்கு.

அதுதான் நாணயம். எந்த மேஜையருகே அவர் தம் நாணயத்தை இழந்தாரோ அந்த மேஜையருகிலேயே ஒரு சிறிதும் அதன் மாற்றுக் குறையாமல் நின்றாள் அவள். உடலை விற்பவளானாலும் மனத்தில் நாணயத்தோடு நின்றாள் அவள். இதில் 'யார் செய்வது விபசாரம்?' என்று தம்மைத் தாமே கேட்டுக் கொண்டார் வடிவேலு.

**(குங்குமம், 1979)**

## 143. சுயமரியாதைக்கும் ஒரு விலை

**தா**னா அப்படி எல்லாம் வளைந்து கொடுத்து அங்கே வந்து அடங்கித் தங்கியிருக்கிறோம் என்று மறுபடி நினைத்தபோது அவனுக்கே ஆச்சரியமாக இருந்தது. தன்னை அந்தப் பெரிய மாளிகைக்குள் சிறை வைத்துவிட்டார்களோ என்று பயமாகவும் இருந்தது. எரிச்சலாகவும் இருந்தது.

கூண்டிற்குள் எலியைப் பிடிப்பதற்காக மாட்டி வைக்கும் வடைத் துண்டு போல் தான் தனக்கும் அதில் ஆசை காட்டப்பட்டு விட்டதோ என்று அவனுக்குத் தோன்றியது. வறுமையின் கொடுமை தன்னையும் அதற்குத் துணியச் செய்துவிட்டதோ என்று தன்மேலேயே கோபமாகவும் கழிவிரக்கமாகவும் இருந்தது அவனுக்கு.

சுகமான ஏர்க்கண்டிஷன் அறையின் குளுமை, கட்டிலில் புரளுவதற்கு இதமாக இருந்த டன்லப் பில்லோ மெத்தை எதுவும் அவன் மனத்தை மகிழ்விக்கவில்லை. உடம்பைச் சுகப்படுத்தவில்லை, உணர்வைக் குளிர வைக்கவில்லை.

"காபி, ஓவல் எதினாச்சும் வேணுமா?"

என்று சமையற்காரன் வந்து கேட்டபோது அவனுடைய அந்தக் கேள்வியைப் பொருட்படுத்திப் பதில் சொல்வதே கேவலம் என்பது போல் பேசாமல் இருந்தான் இவன். வறுமையையும் மீறி இவனுடைய அறிவுத் திமிர் இருந்ததுதான் காரணம்.

எழுத்தாளன் சங்கர் வறுமையில் வாடலாம். பெரிய குடும்பத்தை வைத்துக் கொண்டு பணத்துக்குச் சிரமப்படலாம். ஆனால், தன்னையே விலைக்கு விற்கலாமா?

இந்தக் கேள்வி திரும்பத் திரும்ப அவன் மனத்துள் சுழன்றது; கலக்கியது; குடைந்தது.

மடியில் வெண் பஞ்சுப் பொம்மை போன்ற பொமரேனியன் நாய்க்குட்டியை வைத்துக் கொண்டு ஒயிலாக சோபாவில் சாய்ந்தபடி தன்னிடம் நடிகை ஜெயசரோஜா தெலுங்கின் ஒலிச் சாயலுடன் கூடிய மழலைத் தமிழில் காலையில் செல்லமாகப் போட்ட உத்தரவு அவனுக்கு இப்போது நினைவுக்கு வந்தது. அவனைத் தான் விலைக்கோ வாடகைக்கோ வாங்கியிருக்கிறோம் என்ற தொனி அவளது அந்த உத்தரவில் இருந்தது.

வெறும் ஐந்து நாள் வாடகைக்கோ கூலிக்கோ தன்னை விற்றுக் கொள்ளும் அளவுக்கு அவன் வறுமைப்பட்டுத்தான் போயிருந்தான். வறுமை வேறு, சுயமரியாதை வேறு என்பதும் அவனுக்குப் புரிந்துதான் இருந்தது. வறுமைக்காக நேர்மையை

விற்கலாமா? வறுமைக்காகச் சுயமரியாதையை விற்கலாமா? வறுமைக்காக மான ரோஷத்தை விற்கலாமா? என்பதெல்லாம் வறுமை என்னவென்று தெரியாதவர்கள் மேடைகளிலும் தலையங்கங்களிலும் கேட்கக்கூடிய நாசுக்கான கேள்விகள். வறுமை என்னவென்று அறிந்து உணர்ந்து அனுபவிப்பவனுக்குக் கேள்விகள் கேட்கவும் ஆராயவும் கூடத் திராணி இராது. வறுமையே அவனைக் கொன்றுவிடப் போதுமானதாக இருக்கும்.

இங்கே ஏழ்மையையும் வறுமையையும் பற்றி உருகிப் போய் உரத்த குரலில் பேசுவதற்குக்கூட ஓரளவு வசதி வேண்டும். வசதியில்லாத வெங்கம் பயல் ஏழ்மையையும், வறுமையையும், பசியையும், பட்டினியையும் பற்றிப் பேசினால் கூட அதை யாரும் பொருட்படுத்த மாட்டார்கள். வறுமையைப் பற்றிப் பேசப் போதுமான வசதியும், வசதியை விமர்சித்துப் பேசப் போதுமான வறுமையும் வேண்டுமென்று இந்நாட்டு அரசியல் கட்சிகள்தான் ஒரு நிலையான மாமூலை இங்கே ஏற்படுத்தி வைத்திருக்கின்றனவே!

சங்கர் அரசியல் கட்சிகள் எதிலுமே இல்லை. ஆனாலோ அல்லது அதனாலோ வறுமை அவனிடம் நீக்கமற நிறைந்திருந்தது. வறுமை மட்டுமில்லை. வறுமையும் திறமையும் சேர்ந்தே நிறைந்திருந்தன.

'பூங்கொத்து' பத்திரிகை ஆசிரியரை அவன் சந்திக்கப் போயிருந்த போது தான் முதன்முதலாக இந்த நூதன யோசனையை அவர் அவனிடம் தெரிவித்திருந்தார்.

சங்கரன் அந்த வாரத்து வீட்டுச் செலவுக்குப் பணம் வேண்டுமே என்ற வேதனையில் ஓர் அருமையான குறு நாவலுடன் பூங்கொத்து ஆசிரியரைச் சந்திக்கப் போயிருந்தான்.

பூங்கொத்து ஆசிரியர் சினிமா உலகில் உதவி டைரக்டராகப் பல காலம் இருந்து சலித்துப் போய்ப் பத்திரிகைத் துறைக்கு வந்திருந்தவர். பத்திரிகைத் துறைக்கு சினிமாவும் பயன்பட வேண்டுமென்பதைவிடச் சினிமாத்துறைக்குப் பத்திரிகையை அதிகமாகப் பயன்படுத்தினால் பாமரர்கள் ஏமாறுவார்கள் என்று நம்புபவர். எதை விற்றும் எப்படி விற்றும் பணம் பண்ணுவது பாவமில்லை என்று எண்ணிச் செயல்படுபவர்.

"இந்தா பாருங்க சங்கர்! குறுநாவல் தொடர் கதை அது இதுன்னு நீங்களே எழுதிச் சிரமப்படறதை விட இன்னும் சுலபமா ஒரே வாரத்திலே நாலாயிரம் ஐயாயிரம் சம்பாதிக்க வழி பாருங்க... எத்தினி நாள்தான் இப்பிடிக் கஷ்டப்பட்டுக்கிட்டுத் தெருத் தெருவா அலையப் போறீங்க...?"

"இப்ப நீங்க சொல்றது புரியலே சார்!"

"அறிவுள்ளவங்களா யிருக்கிறவங்க பிரபலமாறதை விட ஏதோ காரணத்தாலே ஏற்கனவே பிரபலமாகி இருக்கிறவங்களையே அறிவுள்ளவங்கன்னு ஜனங்களை நாம நம்ப வச்சா ஒரு 'த்ரில்' இருக்கும்."

"நீங்க என்ன சொல்றீங்கன்னு இன்னும் எனக்குப் புரியலே சார்!"

"புரியும்படியாச் சொல்றேன் கேளுங்க... கோடிக் கணக்கான சினிமா விசிறிகளை எங்க பத்திரிகைப் பக்கம் கவனத்தைத் திருப்பறதுக்காக ஒரு புதிய திட்டம் போட்டிருக்கோம். பிரபல நடிகைகளைத் தொடர்கதை எழுத வைக்கறதுன்னு முடிவு பண்ணியிருக்கேன்..."

"அதெப்படி சார் முடியும்? இங்கே முக்கால்வாசி ஸ்டார்ஸுங்களுக்குத் தமிழே தெரியாதே?... தெலுங்கோ, கன்னடமோ, மலையாளமோ தானே அவங்க தாய்மொழி...?"

"தமிழ்லே எழுதறதுக்குத் தமிழ் தெரிஞ்சாகணும்னு உமக்கு எந்தக் கபோதி சொன்னான்?"

"இதெல்லாம் தெரியறத்துக்குக் கூட ஒருத்தர் வந்து சொல்லிக் கொடுக்கணுமா என்ன?"

"வீண்வாதம் வேணாம்... இப்ப ஃபீல்டிலே இருக்கறதிலேயே டாப் ஹீரோயினான 'குமாரி ஜெயசரோஜா' நம்ப மேகஸீன்லே ஒரு தொடர்கதை எழுதறதா ஒப்புத்துக்கிட்டிருக்காங்க..."

"'ஜெயசரோஜா'வை டாப் ஹீரோயின்னீங்களா? 'டாப் லெஸ்' ஹீரோயின்னீங்களா? என் காதிலே சரியா விழலே...?"

இதைக் கேட்டு பூங்கொத்து ஆசிரியர் சிரித்துக் கொண்டார்.

"சரி! சரி! இந்தக் குத்தல் கிண்டல் எல்லாம் வேணாம். அப்பர் கூனூர்லே அவுங்களுக்கு அருமையான பங்களா இருக்கு. அவுங்க கூடப் போயி நாலு நாளு அங்கே தங்கி அவுங்க பேரிலே அந்த நாவலை எழுதிக் குடுத்தா நாலாயிரமோ ஐயாயிரமோ கிடைக்கும். நாய் வித்த காசு ஒண்ணும் குரைக்கப் போறதில்லை...?"

"அதாவது பச்சையாகச் சொல்லணும்னா உடம்பை வித்த காசை அறிவை வித்து வாங்கணுமாக்கும்...?"

"இந்த விதண்டாவாதம்லாம் வேண்டாம். உமக்குப் பெரிய குடும்பம். மனைவி நிரந்தர நோயாளி. ஏழெட்டுக் குழந்தைகள், ஐந்து பெண், ரெண்டு பையன்கள். செலவும் சிரமங்களும் நிறைய இருக்கும். உம்ம கஷ்டத்துக்குப் பணம் நிறையத் தேவை. அது எப்படி வந்தால் என்ன?"

"ஒரு சத்தியவாதிக்குப் புகழும் பணமும் வர வேண்டும்தான். ஆனால், அவை வருகின்றன என்பதைவிட எப்படி எங்கிருந்து வருகின்றன என்பதுதான் மிக மிக முக்கியம்."

"நீர் உருப்படப் போறதில்லே. வாதப் பிரதிவாதங்களிலேயே சாகப் போகிறீர்..."

"வாதப் பிரதிவாதங்கள்தான் அறிவு வளர்ச்சிக்கு உரம்..."

"இப்ப நான் பொருளாதார வளர்ச்சியைப் பற்றிப் பேசுகிறேன்."

"அறிவுக்கும் பொருளுக்கும் சம்பந்தமேயில்லை என்கிறீர்களா?"

"நான் எதுவும் சொல்லப் போறதில்லே. உங்க இஷ்டம்... பணம் அவசியம்னு தோணித்துன்னா மறுபடி என்னை வந்து பாரும்..."

சாகக் கிடக்கும் மனைவி. தாங்க முடியாத வைத்தியச் செலவுகள், குழந்தைகளின் காலேஜ் ஃபீஸ், பள்ளிக்கூடச் சம்பளங்கள், வீட்டுச் சாமான்களின் செலவுகள், எல்லாமாகக் கிடுக்குப் பிடி போட்டு இறுக்கியதால் இரண்டு நாள் கழித்துச் சங்கரே ஒரு விரக்தியில் மனம் மாறி மறுபடியும் பூங்கொத்து ஆசிரியரைப் போய்ப் பார்த்துத் தெலுங்கு நடிகை ஜெயசரோஜாவின் பெயரில் தமிழ்ப் பத்திரிகை 'பூங்கொத்தில்' தொடர் கதை எழுத ஒப்புக் கொண்டுவிட நேர்ந்தது. ஆனால், சங்கர் கூனூர் போக மட்டும் இசையவில்லை. சென்னையிலேயே அடையாறில் இருந்த அந்த நடிகையின் பங்களாவில் ஓர் ஏ.சி. அறையில் தங்கி அதை எழுத ஒப்புக் கொண்டிருந்தான். நோயாளி மனைவியையும் அன்றாடம் காய்ச்சிக் குடும்பத்தையும் விட்டுவிட்டுக் கூனூர் போக அவன் விரும்பவில்லை.

அங்கே அவனுக்கு ராஜோபசாரம் நடந்தது. நடிகை பெயரில் அவன் எழுதிய நாவலின் பெயர் 'கசங்காத ரோஜா'.

ஏறக்குறைய நாவல் எழுதி முடிக்கப்பட்டுவிட்டது. 'ஃபினிஷிங் டச்' கொடுக்க வேண்டியதுதான் பாக்கி.

நாளை எல்லாம் முடித்துக் கொடுத்துவிட்டுப் பணத்தை வாங்கிக் கொண்டு புறப்பட்டுவிடலாம். அதற்குள் எழுத்தாளன் சங்கருக்கு ஓர் ஆசை எழுந்தது. தனது எழுத்துக்களை எல்லாம் வழக்கமாக அச்சுக்கு அனுப்புமுன் படித்துப் பார்த்து அபிப்பிராயம் சொல்லும் ஓர் ஆத்ம சிநேகிதனிடம் இதையும் படித்துப் பார்க்கச் சொல்லி அபிப்பிராயம் கேட்கலாமா என்று தோன்றியது. 'யார் பேரிலோ வெளி வரப்போகிற ஓர் எழுத்தைப் பற்றி இத்தனை அக்கறை தேவைதானா?' என்றும் தயக்கமாகவும் இருந்தது. முடிவில் ஆசைதான் வென்றது.

அன்றாட வழக்கம்போல் மாலையில் நடிகையின் பங்களாவிலிருந்து வெளியேறி, வீட்டுக்குப் போய் மனைவியை டாக்டரிடம் அழைத்துச் சென்று காட்டிவிட்டுத் திரும்பக் கொண்டு போய் வீட்டில் விட்டுவிட்டுத் திருவல்லிக்கேணி பெரிய தெருவில் ஒரு மாடியில் தனிக்கட்டை வாழ்வு வாழ்ந்து கொண்டிருந்த தனது அந்த நண்பனிடம் தன் புதிய கையெழுத்துப் பிரதியோடு போனான் சங்கர்.

சங்கர் நண்பனின் அறைக்குப் போனபோது மாலை ஏழு மணி. நண்பன் சங்கரின் புதிய நாவலைப் படித்து முடித்தபோது இரவு பதினொன்றரை. நண்பன் உணர்ச்சிவசப்பட்டு சங்கரைப் பாராட்டினான்.

"இதை உன் 'மாஸ்டர் பீஸ்' எனறு நான் துணிந்து சொல்வேன். நாவல் பிரமாதமாக வந்திருக்கிறது. இந்த நாவலிலிருந்து தமிழ்நாவல் இலக்கிய

வரலாற்றிலேயே ஒரு பொற்காலம் ஆரம்பமாகும். இது வெளிவந்தால் பரிசும், பாராட்டும், புகழும் உன்னைத் தேடி வரும்!" - அது எதற்காக, யார் பெயரில் வெளியிடுவதற்காக எழுதப்பட்டது என்பதை நண்பனிடம் வெளியிடத் தயக்கமாக இருந்தது சங்கருக்கு. யோசித்தான்; தயங்கினான். மனம் குழம்பினான். தெளிவு பிறக்கச் சிறிது நேரம் பிடித்தது. பின்பு நிதானமாக நண்பனைக் கேட்டான். இப்போது சங்கரின் குரலில் குழப்பமில்லை.

"ரூம் சர்வீஸ், உணவு இவற்றோடு ஒரு முதல் தர ஹோட்டல்ல ஏ.ஸி. ரூமுக்கு ஐந்து நாளைக்கு என்ன சார்ஜ் செய்வார்கள், சொல்ல முடியுமா?"

"ஏன்? அதற்கு இப்போது என்ன அவசியம் வந்தது?"

"இல்லை! உடனே அது எனக்குத் தெரிந்தாக வேண்டும்."

சங்கரிடம் சில விவரங்களை விசாரித்த பின் ஏதோ ஒரு கணக்குப் போட்டு ஐந்து நாளைக்கு ரூ.525 செலவாகும் என்று தெரிவித்தான் நண்பன்.

"உன்னிடம் இப்போது அவ்வளவு பணம் இருக்குமா?"

"ரொக்கமாக இல்லை. பேங்கில் இருக்கிறது. காலையில் எடுக்கலாம்."

"இப்போதே செக் தர முடியுமா?"

"அவசியமானால் தருகிறேன்."

"உடனே நடிகை ஜெயசரோஜா பெயருக்கு ரூ.525க்கு ஒரு செக் எழுது."

நண்பன் செக் புத்தகத்தை எடுத்து எழுதிச் செக் லீஃபைக் கிழித்துச் சங்கரிடம் நீட்டினான்.

"சகோதரி ஜெயசரோஜாவுக்கு,

ஐந்து நாட்களாக நான் எழுத இடம் கொடுத்து, உணவு - உறையுள் அளித்ததற்கு நன்றி. அதற்கான செலவுகளை ஈடு செய்வதற்காக இதனுடன் உங்கள் பெயருக்கு ஒரு செக் இணைத்துள்ளேன். செக்கைப் பெற்றுக் கொள்ள வேண்டுகிறேன்."

என்று பொருள்பட ஆங்கிலத்தில் எழுதிய கடிதத்துடன் அந்த செக்கையும் இணைத்து நண்பனிடம் ஒரு தபால் கவரும் ஸ்டாம்பும் வாங்கி உடனே ஒட்டிப் போஸ்ட் செய்துவிட்டான் சங்கர்.

இருவருமாக நடந்தே போய் மவுண்ட்ரோட் போஸ்ட் ஆபீஸில் அதைச் சேர்த்துவிட்டுத் திரும்பிக் கொண்டிருந்த போது ஸ்டார் டாக்கீஸிலும் பாரகனிலும் இரவு இரண்டாவது ஆட்டம் சினிமா விட்டுவிட்டார்கள்.

தெரு தற்காலிகமாகக் குரல்களாலும், ஜனங்களாலும் கலகலப்படைந்திருந்தது. நண்பன் சங்கரைக் கேட்டான் :

"இதெல்லாம் என்னப்பா கூத்து?"

"பின்னால் எல்லாம் விவரமாகச் சொல்கிறேன். இப்போது நான் சொல்வது புரிந்தாலும் புரியாவிட்டாலும் கேட்டுக் கொள்."

"சொல்லு..."

"இந்த ஐநூத்தி இருபத்தஞ்சு ரூபாயைப் பத்தி உன் டைரியிலே எழுதறப்போ... 'நண்பன் சங்கரின் சுயமரியாதை அவசர அவசரமாக விலைபோக இருந்தபோது தக்க சமயத்தில் அதைத் தடுக்கக் கொடுத்து உதவிய கடன்' என்று மட்டும் சுருக்கமாக எழுதிக் கொள். பின்னால் முடிகிறபோது நான் உனக்கு இதைத் திருப்பிக் கொடுத்து விடுகிறேன். உனக்கு ஆட்சேபணை இல்லேன்னா இன்னொரு நானூறு ரூபாய்க்கு என் பெயருக்கு ஒரு செக் கடனாகக் கொடு. அதையும் முடிகிறபோது திருப்பித் தந்துவிடுகிறேன். என்னைப் போல் ஒரு அறிவாளி கடனாளியாயிருக்கலாம். ஆனால், ஏமாளியாகவோ கோமாளியாகவோ ஆகிவிடக்கூடாது. அப்படி ஆகாமல் தக்க சமயத்தில் நீதான் என்னைத் தடுத்தாய். உனக்கு நன்றி."

தனக்காகத் தன் நண்பன் சங்கரால் மனம் திறந்து கூறப்பட்ட நன்றியின் காரணம் அவ்வளவு தெளிவாகவும் உடனடியாகவும் விளங்கவில்லை என்றாலும், மேலும் நானூறு ரூபாய்க்குச் செக் தர அவன் உடனே இணங்கினான்.

தெருக்களில் தியேட்டர்கள் வெளித்தள்ளிய ஜனக்கூட்டம், அதன் குரல்கள்; சலசலப்புகள் எல்லாம் குறைந்து மௌனமும் சலனமற்ற சந்தடியற்ற - நடமாட்டமற்ற நள்ளிரவின் சுகமான அமைதியும் மீண்டும் திரும்பி வந்திருந்தன.

**(தினமணிக் கதிர், தீபாவளி மலர், 26.10.1979)**

## 144. துறவு

**அ**ம்பேத்கார் நகரில் போய் வைத்திய உதவிகளைச் செய்தபின் வழக்கமாக முதியோர்களுக்காக அங்கே நடத்தும் கீதை, குறள் வகுப்புகளையும் முடித்துக் கொண்டு சுவாமி பரிசுத்தானந்தர் ஆசிரமத்துக்குத் திரும்பும்போது இரவு ஒன்பது மணி ஆகியிருந்தது. நல்ல நிலா பகல் போலிருந்தது.

அப்போது ஆசிரமத்துக்கு எதிர் வரிசையில் இருந்த அந்த லாட்ஜிலிருந்து ஒரே கூச்சலும் சத்தமுமாக ரகளையாயிருந்தது, அவர் கவனத்தைக் கவர்ந்தது.

வழக்கமாக அமைதியாயிருக்கும் அங்கே என்றாவது ஒரு நாள் இப்படிக் கலவரமும் ரகளையும் நடப்பது உண்டுதான். ஆனால், வெளியிலிருந்து பிறர் தலையிடும் படியான ரகளையாக அது இராது. கேட்டைத் திறந்து சைக்கிளை உள்ளே கொண்டு போய் நிறுத்தி விட்டு மீண்டும் தெருவுக்கு வந்து நின்று கொண்டு காது கொடுத்துக் கேட்டார் சுவாமி. ஆளரவமற்ற நடுத்தெருவில் இருபுறத்து மரங்களின் பசுமைக்கிடையே அந்த நிலவொளியில் காவி உடைகளோடு எரியும் ஜ்வாலையாக நின்றார் அவர். “ஐயோ கொல்றாங்களே! கேட்பாரில்லையா? ஈவு இரக்கம் இல்லாத கொலைகாரப் பாவிங்களா!” என்று ஈனமான ஒரு பெண் குரல் காற்றில் வந்தது.

கேட்ட குரலின் பரிதாப நிலையில் மனம் உருகிக் கால்கள் அந்தத் திசையை நோக்கி விரையத் துடித்தன. ஆனால், அறிவு தயங்க வைத்தது.

பரிசுத்தானந்தர் அந்த லாட்ஜைப் பற்றிக் கேள்விப்பட்டிருந்த செய்திகளே அவருடைய தயக்கத்துக்குக் காரணமாயிருந்தன.

ஊரின் ஒதுக்குப்புறமான அந்தப் பகுதியில் தோன்றிய முதல் கட்டிடமே அவருடைய ஆசிரமந்தான். ஆசிரமம் தோன்றிய சில ஆண்டுகளுக்குப் பின்னே ‘லாட்ஜ்’ கட்டிடம் தோன்றியது. ‘போர்டிங்’ வசதிகள் எதுவும் இல்லாமல் இருந்தும், ஊரிலிருந்து விலகி ஒதுக்குப் புறமாயிருந்தும் அந்த லாட்ஜில் கூட்டம் பொங்கி வழிந்தது. லாட்ஜ் நடத்துகிறவரும் நிறைய லாபம் சம்பாதித்தார். நாளாக நாளாக அங்கே என்ன நடக்கிறது என்பது புரிந்தது. சட்டத்தின் காவலர்களும் அதற்குத் துணை என்றும் அவர்களுக்கு அதற்காக மாமூல் உண்டு என்றும் சொன்னார்கள்.

சுவாமி பரிசுத்தானந்தரின் நண்பர்கள் எவ்வளவோ முயன்றும் அந்த லாட்ஜ் வழியில் அங்கே இயங்குவதைத் தடுக்க முடியவில்லை.

ஒரு ரிக்ஷா காலியாக அந்த லாட்ஜ் பக்கமிருந்து வந்தது.

சுவாமி அந்த ரிக்ஷாக்காரனைக் கைதட்டிக் கூப்பிட்டார். ரிக்ஷா அவரருகே வந்து யாரோ யாருடைய குரல் வளையையோ நெரிக்கிற மாதிரி கிறீச்சிட்டு நின்றது.

"என்னப்பா, அங்கே கூப்பாடு?..."

"ஒண்ணும் இல்லீங்க, சாமி. லாட்ஜ்காரன் கிராதகனுங்க. ஒரு சின்னப் பொண்ணுக்கு அம்மை போட்டிருக்குதுங்க... ஈவு இரக்கம் இல்லாமே அதெப் போயி தொந்தரவு பண்றானுவ. 'கஸ்டமர்' தான் முக்கியம்னு அடிச்சுக் கொல்றானுவ. கேள்வி கேப்பர்ர் இல்லே."

சொல்லிவிட்டு அவன் போய்விட்டான். இப்போது சுவாமியின் கால்களும் தயங்கவில்லை; அறிவும் தயங்கவில்லை. அம்பு பாய்வதுபோல் நேர் எதிர்ப் பக்கம் லாட்ஜுக்குள் போய் நுழைந்தார். வாசலில் உயரமும் பருமனுமாக இருந்த நாலைந்து அடியாட்கள் கூட அவரைத் தடுக்க முடியவில்லை. கூப்பாடு வந்த திசையை அடையாளம் வைத்து நடந்ததில் ஓர் அறைக்குக் கொண்டு போய் விட்டது. கைலியை மடித்துக் கட்டிக் கொண்டு, முரட்டு ஆள் ஒருவன். கொடி போல் அழுக்குப் பாயில் துவண்டு கிடந்த இளம்பெண் ஒருத்தியைக் கையில் இருந்த பிரம்பால் விளாசிக் கொண்டிருந்தான். அவள் முகத்தில் அம்மை முத்துக்கள் தெரிந்தன.

தேஜஸ் நிறைந்த கம்பீரமான தோற்றமும் காவி உடையுமாக ஒருவர் உள்ளே நுழைந்ததைக் கண்டதும் அவன் திகைத்துத் திரும்பினான்.

அவர் அவனிடம் எதுவும் பேசவில்லை. எரித்து விடுவது போல் பார்த்தார். அடுத்த கணமே யாருடைய அனுமதியையும் எதிர்பாராமல் ஒரு குழந்தையை வாரி எடுப்பது போல் பாயில் கிடந்த அந்தப் பெண்ணை எடுத்துக் கொண்டு வெளியேறினார் சுவாமி. யார் என்ன செய்கிறார் என்று சுதாரித்துக் கொண்டு அவர்கள் தடுப்பதற்குள் விடுவிடுவென்று சுவாமி தெருவுக்கு வந்து தமது ஆசிரமத்துக்குள்ளே நுழைந்துவிட்டார்.

ஆசிரமத்துத் தோட்டத்திலிருந்து ஒரு தலைவாழை இலையை அறுத்து எண்ணெயைத் தடவி அதில் அந்தப் பெண்ணைக் கிடத்தினார். நல்ல செவ்விளநீராகப் பறிக்கச் செய்து வெட்டிப் பருகச் செய்தார். அம்மை தணிவதற்குரிய சிகிச்சைகளைச் செய்தார். ஆசிரமப் பணியாளர்களிடம் ஒப்படைத்துக் கவனிக்கச் செய்தார்.

அம்மை போட்டுச் சுயநினைவில்லாமல் சாகக் கிடக்கும் ஒரு பெண்ணையே நிர்ப்பந்தப்படுத்தும் அளவுக்குப் பணத்தாசை மனிதனை மிருகமாக்கியிருப்பதை வெறுத்தார். மனிதனை மிருகமாக்கும் இச்சைகளை வளர்த்து அதையும் வியாபாரமாக்கி நடத்துபவர்களை எண்ணிக் குமுறியது அவர் உள்ளம். அவருடைய ஆசிரம நிர்வாகி முன் ஜாக்கிரதையாக இருக்கட்டும் என்பதற்காக எந்த நிலையில், எங்கிருந்து, எதற்காக ஒரு பெண்ணைச் சுவாமி பரிசுத்தானந்தர் மீட்க நேர்ந்தது என்பதை விளக்கி போலீஸுக்கு ஃபோன் செய்தார்.

ஆனால், எதிர்த்தரப்பில் போலீஸ் ஸ்டேஷனிலிருந்து கேட்ட ஹெட் கான்ஸ்டபிள், "ஒருபெண்ணை உங்க சாமியார் மீட்டுக் கொண்டாந்து சிகிச்சை செய்யறாருங்கறதை நியூஸ் பேப்பர் ஆபீஸுக்கு வேணும்னாச் சொல்லுங்க. அது எங்க

சம்பந்தப்பட்ட விஷயம் இல்லே. ரிட்டன் கம்ப்ளெயிண்ட் இருந்தாக் குடுங்க'' என்றாரோ ஒழியச் சுவராசியம் காட்டவில்லை. லாட்ஜுக்காரர் மேல் அவருக்கு என்ன கருணையோ?

ஆசிரம நிர்வாகியும் இதற்கு மேல் இதைப் பற்றி அலட்டிக் கொள்ளவில்லை; சுவாமி பரிசுத்தானந்தரின் செல்வாக்கு அவரைக் காக்கும் என்று நம்பினார்.

இரவு பதினொன்றரை மணிக்கு ஆசிரம வாசலில் போலீஸ் ஜீப் வந்து நின்றபோதுதான் அப்படியில்லை என்பது நிரூபணமாயிற்று. ஜீப்பிலிருந்து சப் இன்ஸ்பெக்டரும் இரண்டு கான்ஸ்டபிள்களும் கீழே இறங்கினர். ஆசிரம நிர்வாகியைத் தூக்கத்திலிருந்து எழுப்பினர்.

எதிர்ப்பக்கத்து லாட்ஜிலிருந்து ஒரு பெண்ணை அந்த லாட்ஜுக்குள் 'டிரஸ்பாஸ்' செய்து கடத்தி வந்ததாகச் சுவாமி பரிசுத்தானந்தர் மீது வாரண்ட்டுடன் கைது செய்ய வந்திருந்தார்கள். நிர்வாகி எல்லா விவரங்களையும் ஆதியோடந்தமாகக் கூறி விளக்கியும் பயன் இல்லை.

லாட்ஜ் உரிமையாளர்களிடமிருந்தும் பெண்ணின் சகோதரனிடமிருந்தும் முறையான புகார்கள் எழுத்து மூலம் வந்திருப்பதாகவும் அதன் அடிப்படையில் செயல்பட வேண்டியிருப்பதாகவும் போலீஸ் இன்ஸபெக்டர் கூறினார்.

ஆசிரம நிர்வாகி சுவாமியை எழுப்பினார். சுவாமி இன்ஸ்பெக்டரிடம் எல்லாவற்றையும் விளக்கிவிட்டு, அந்த இளம்பெண் அம்மைக் கொப்புளங்களோடு வாழை இலையில் கிடத்தப்பட்டிருந்த அறைக்கே அழைத்துப் போய்க் காட்டினார். இன்ஸ்பெக்டர் திருப்தி அடையவில்லை.

"மன்னிக்க வேண்டும்! உங்கள் செல்வாக்கை நான் அறிவேன். ஆனாலும் சட்டம் செல்வாக்கு முன்னால் கூடத் தயங்க முடியாது."

"தயங்க வேண்டும் என்று நானும் கோரவில்லை. ஆனால், தவறு செய்தவர்களை அல்லவா உங்கள் சட்டம் தயங்காமல் தண்டிக்க வேண்டும்? அப்பாவிப் பெண் ஒருத்தியைக் காப்பாற்றப் போனதைத் தவிர நான் வேறு எந்தத் தவறும் செய்யவில்லையே."

"அது ருசுப்பிக்கப்படுகிறவரை நீங்கள் எங்கள் பொறுப்பில் இருந்துதானாக வேண்டும்."

சுவாமி புன்முறுவல் பூத்தார். நிர்மலமாக ஒரு குழந்தை சிரிப்பதைப் போலிருந்தது.

"அம்மையோடு துடித்துக் கொண்டிருக்கும் இந்தக் குழந்தையைத் தொந்தரவு செய்ய வேண்டாம். நான் எங்கு வேண்டுமானாலும் வருகிறேன்" என்றார் சுவாமி.

"இவளைக் கவனித்துக் கொள்ளுங்கள்" என்று கூறிவிட்டுப் போலீஸாரோடு புறப்பட்டார்.

மறுநாள் காலைத் தினசரிகளில் எல்லாம் "லாட்ஜிலிருந்து இளம்பெண்ணைக் கடத்தியதாகச் சுவாமி பரிசுத்தானந்தர் கைது" என்று தலைப்புச் செய்தி வந்துவிட்டது. யாராலும் அதை நம்ப முடியவில்லை. ஊரே குமுறியது. சுவாமியின் தொண்டுகளால் பயனடைந்த ஏழை எளியவர்கள் போலீஸ் ஸ்டேஷன் முன்னால் கூடிவிட்டார்கள்.

மிக மிகச் சிலர் மட்டும் புரளி பேசினார்கள். "இந்தக் காலத்திலே குடும்பஸ்தரை விடச் சாமியாருங்க தான் அதிகமாத் தப்பு பண்றாங்க."

சட்டம் தீமையைத் தடுக்கவும் , நல்லதைப் பாதுகாக்கவுமே இருந்தாலும் பல வேளைகளில் அது தீமைக்குச் சேவை செய்கிறது. நன்மையைக் கொடுமைப்படுத்துகிறது. சுவாமி பரிசுத்தானந்தர் விஷயத்தில்கூட அப்படித்தான் ஆகிவிட்டது.

ஆனால், பொதுமக்கள் எல்லாருக்கும் அந்த லாட்ஜுக்காரனைப் பற்றி நன்றாகத் தெரியும். பெண்களையும் சாராயத்தையும் பக்கத்து மாநிலங்களிலிருந்து கள்ளத்தனமாகக் கடத்தி வந்து விற்கும் முரடனுடைய புகாரை நம்பிச் சுவாமி பரிசுத்தானந்தரைக் கைது செய்தது அநியாயம் என்றே பலரும் கருதினார்கள். அம்பேத்கார் நகரிலிருந்தும், சுவாமி வைத்தியப் பணி, கல்விப்பணி புரிந்த குப்பங்கள்,சேரிகளிலிருந்தும் போலீஸ் ஸ்டேஷன் முன்பு பல்லாயிரக்கணக்கான மக்கள் கூடிவிட்டனர்.

சுவாமியை விடுவிக்காவிட்டால் ஸ்டேஷனையே தகர்த்துவிடுவார்கள் போலிருந்தது. தகவல் போலீஸ் மந்திரி வரை போய் மந்திரியோடு ஐ.ஜி.யே நேரில் வந்து இன்ஸ்பெக்டரைப் பற்றி விசாரித்தறிந்து, லாட்ஜுக்காரனுக்கு உடந்தையாயிருந்த சுவாமி பேரில் தவறான குற்றம் சுமத்தியதற்காக அவரைச் சஸ்பெண்டு செய்துவிட்டுச் சுவாமியை விடுதலை செய்தார்.

விடுதலையான சுவாமி பரிசுத்தானந்தர் முதலில் மிக மிக ஆவலோடு அந்தப் பெண்ணின் உடல்நிலை பற்றித்தான் விசாரித்தார். மந்திரி அவரிடம் மன்னிப்புக் கேட்டார்.

"எங்களைப் பெரிய மனசு பண்ணி மன்னிச்சிடனும் சாமீ! தப்பு நடந்து போச்சு. பிரதிபலனை எதிர்பாராமே பொதுக்காரியங்களைப் பண்ணிக்கிட்டிருக்கிற உங்களைப் பத்தி பேப்பருங்கள்ளே தாறுமாறா நியூஸ் வர்ராப்பல ஆயிடுச்சு."

"பரவாயில்லை! கருங்கல் கோடை மழையில் கரைந்துவிடாது. ஒரு சத்தியவாதியை வெறும் பழி மட்டுமே சீரழித்துவிட முடியாது."

"உங்க புகழுக்கு எங்களால் இப்படி ஒரு களங்கம் நேர்ந்ததுக்கு இலாகாவின் சார்பில் நானே மன்னிப்புக் கேட்டுக்கறேன் சுவாமி.பேப்பருங்களிலேயும் இலாகாவின் தவறுகளால்தான் இப்படி நேர்ந்திடிச்சுன்னு நானே ஓர் அறிக்கையும் விட்டுடறேன்" என்றார் ஐ.ஜி.

சுவாமி மறுபடியும் குழந்தையைப் போலச் சிரித்தார். முகத்தில் எந்தவிதச் சலனமும் இன்றி ஐ.ஜி.க்குப் பதில் சொன்னார்.

"இதில் கவலை எங்கிருந்து வந்தது? உண்மையில் இன்றுதான் என் சந்நியாசத்தில் இன்னும் பெரிய பரீட்சையில் ஜயிக்க முடிந்திருக்கிறது. எல்லா ஆசைகளையும் துறக்க முடிந்த எனக்குப் புகழ், செல்வாக்கு, பிராபல்யம், இவற்றின் மேலிருந்த ஆசைகளை இதுவரை விடமுடியாமல் இருந்தது. 'பழியின்மேல் வெறுப்பும், புகழின்மேல் நாட்டமும் இருக்கிறவரை துறவுகூடப் பூர்ணமாக முடியாது. முழுப் பக்குவம் என்பது புகழ், பழி, எதையும் லட்சியம் பண்ணாமல் சிரித்தபடி சேவையில் ஒன்றிவிடுவதுதான்' என்பதாக என் குரு அடிக்கடி கூறுவார். அந்தப் பக்குவ நிலைமையை நான் இன்றுதான் அடைந்தேன். புகழையும் துறக்கத் துணிகிற மனப்பக்குவத்தை நான் அடைய ஒரு சந்தர்ப்பத்தை ஏற்படுத்தித் தந்ததற்காக நான்தான் உங்களுக்கு நன்றி சொல்ல வேண்டும்."

மந்திரியும், ஐ.ஜி.யும் இதைக் கேட்டு அப்படியே பிரமித்துப் போய் நின்றார்கள். 'கோடை மழையில் கருங்கல் கரைந்துவிடாது' என்ற வாக்கியந்தான் மீண்டும் மீண்டும் அவர்களுக்கு நினைவு வந்தது. சுவாமியோ அம்மை போட்டிருந்த பெண்ணுக்கு இளநீர் பறித்துக் கொடுப்பதற்காகக் கூட்டத்தை விலக்கிக் கொண்டு விரைந்தார்.

(கலைமகள், தீபாவளி மலர், 1979)



# 145. பின்னக் கணக்கில் தகராறு

எனக்குச் சந்தேகமாயிருந்தது. நேருக்கு நேர் கேட்டுவிடலாம் போலவும் தோன்றியது. அப்படிக் கேட்பது நாகரிகமாகவும் நாசூக்காகவும் இருக்காதோ என்று தயக்கமாகவும் இருந்தது. மனசு குழம்பியது. இரண்டு மூன்று ஆபரேஷனுக்குப் பின் இப்போது எனக்குக் கண் பார்வை மங்கிவிட்டது.

அந்த இடமோ புதுடில்லியின் ராஷ்டிரபதி பவன் அசோகா ஹால். இன்னும் சிறிது நேரத்தில் தேசம் முழுவதுமிருந்து வந்திருக்கும் பத்துத் தலைசிறந்த சமஸ்கிருத பண்டிதர்களைக் கௌரவித்து அவார்டு வழங்கும் விழா நடக்கப் போகிறது. விருது வாங்க வந்திருக்கும் கல்வி மந்திரியும் விசேஷமாக அழைக்கப்பட்ட பிரமுகர்களுமாக அசோகா ஹால் நிரமபியிருக்கிறது. ராஷ்டிரபதியின் வரவை எதிர்பார்த்துத் தேசிய கீதமும் அவர்களும் காத்திருக்கிறார்கள்.

முதலில் வரிசையில் விருது வாங்க வந்திருப்பவர்களின் அணியில் இடமிருந்து வலமாக மூன்றாவது அமர்ந்திருக்கும் அந்த மனிதரைப் பற்றித்தான் என் சந்தேகம். விருதுக்குரியவர்களின் பட்டியல் பத்திரிகையில் வந்திருந்தது. அந்தப் பட்டியலில் 'ராம் மனோகர் ராவ்' என்ற பெயரும் இருக்கத்தான் செய்தது.

இவர் அதே ராம் மனோகர் ராவ்தானா, வேறொருவரா என்பது தெரியவில்லை. முகமும் தோற்றமும் முதுமையால் மாற்றமடைந்திருக்கலாம். அல்லது உண்மையிலேயே இவர் வேறு ஒரு ராம் மனோகர் ராவாகவும் இருக்கலாம்.

யாராயிருந்தாலும் எனக்கு என் பழைய நண்பன் ராம் மனோகரின் நினைவு வராமலில்லை. நானும் அவனும் தஞ்சாவூர் உயர்நிலைப் பள்ளியில் படிக்கும் நாளிலிருந்தே சிநேகிதர்கள். பள்ளியில் இருந்து கல்லூரி வரை இருவருமே சமஸ்கிருத மாணவர்கள். சரஸ்வதி மகாலைச் சேர்ந்த சமஸ்கிருத பண்டிதர் ஒருவரின் மகனாதலால் வீட்டிலேயே கற்பித்துக் கற்பித்து இளவயதிலேயே அவனைச் சமஸ்கிருத மேதையாக்கியிருந்தார் அவனுடைய தந்தை.

பள்ளி நாளிலும் சரி, பிற்காலத்தில் கும்பகோணம் அரசாங்கக் கல்லூரியில் இருவரும் சேர்ந்து படித்த நாளிலும் சரி, ராம் மனோகருக்குக் கணக்கு வராது, கணக்கைப் பிடிக்கவும் பிடிக்காது.

ஒன்று, இரண்டு என்பது போல் முழு எண்களைக் கூட்டுவதிலும், கழிப்பதிலுமே தகராறு. கூட்டல் வரும் - முழு எண்ணைப் பொறுத்தவரை கழித்துப் பார்க்கத் தெரியாது அவனுக்கு. பின்னக் கணக்கு என்றாலோ எதுவுமே வராது. பின்னப்படுத்திப் பார்ப்பதே அவனுக்குப் பிடிக்காது.

பள்ளிக்கூடத்தில் வாங்கித் தின்பதற்கு அல்லது வேறு எதற்காவது முழு ரூபாயோ முழு அணாவோ எதைக் கொண்டு வந்தாலும் அதை அவன் மாற்றவே மாட்டான். அதை அப்படியே வைத்துக்கொண்டு என்னிடமாவதோ வேறு யாரிடமாவதோ கடன் கேட்பான். முழுசை மாற்ற அவனுக்குத் தெரியாது. பிடிக்காது. காரணம் பின்னக் கணக்கில் அவனுக்கு எப்போதுமே குழப்பம்.

ஹாலில் அசாதாரண நிசப்தம் நிலவியது. ராஷ்டிரபதி வந்துவிட்டார். தேசிய கீதம் முழங்கியது. எல்லோரும் எழுந்து நின்றார்கள்.

மீண்டும் என் ஆவல் அதிகமாகியது. இன்று பரிசு வாங்கும் ராம் மனோகர் ராவ் என்னோடு கூடப் பள்ளி மாணவனாக இருந்த அதே ராம் மனோகரன் தானா வேறு யாராவதா?

எலி வால் பின்னலும் நடு நெற்றியில் ஒரு கறுப்புச் சாந்துப் பொட்டும் கூடவே பொன்னிறத்தில் ஒரு சந்தனப் பொட்டுமாக மந்த நடை நடந்து மூன்று கெஜ தூரத்தை நான்கு நிமிஷங்களில் கடக்கும் சிறுவன் ராம் மனோகரனின் ஞாபகம் என் மனக்கண்ணில் படியத் தொடங்கியது. அந்தப் பள்ளிப் பையனின் தோற்றத்தையும் இன்றைய இந்த எழுபது வயதுத் தோற்றத்தையும் ஒப்பிட்டு அடையாளம்கூடக் காணமுடியாமல் இருந்தது. பிய்த்தெடுத்துப் பக்கத்துக்கு ஒன்றாகப் பொருத்தின மாதிரி இந்த மீசை பழைய முக அடையாளத்துடன் புரியவிடாமல் குழப்புவதற்கே பெரிதும் உதவியது.

'ஒரு ரூபாயிலிருந்து கால் ரூபாயை மாற்றி விட்டால் மீதம் என்ன?' என்று அந்த நாளில் ராம் மனோகரனைக் கேட்டால் மீதத்தைச் சொல்வதற்குப் பதில், 'ஒரு முழு ரூபாயை ஏன் மாற்ற வேண்டும்? அது அப்படியே ஒரு முழு ரூபாயாகவே இருந்து தொலைத்து விட்டுப் போகட்டுமே' என்றுதான் பதில் சொல்வான். முழுமையைப் பின்னப்படுத்துவது அவனுக்கு எப்போதுமே பிடிக்காது.

கும்பகோணம் கல்லூரியில் படிக்கிற காலத்தில் காவேரியைக் கடந்து அக்கரைக்குப் போக என்று காலேஜில் சேர்ந்த முதல் நாள் ஒரு முழு வெள்ளி ரூபாய் கொண்டு வந்தான் அவன். எனக்குத் தெரிந்தவரை அந்த முழு வெள்ளி ரூபாயை காலேஜ் படிப்பு முடிந்து வெளியேறி டி.ஸி. வாங்கிக் கொண்டு போகிற வரை ராம் மனோகரன் மாற்றவே இல்லை. நானோ வேறு சிநேகிதர்களோதான் 'போட்'டுக்கு அவனுக்காகச் சில்லறை கொடுத்துக் கொண்டிருந்தோம்.

"ஒரு முழு வெள்ளி ரூபாயை மாத்தறதுக்கு மனம் வரலேடா... நீயோ சுப்புணியோ, ராமசேஷனோ இன்னிக்குக் கொடுத்துடுங்கோ!" ஒவ்வொரு நாளும் இதே வாக்கியத்தைத்தான் கிளிப்பிள்ளை போலச் சொல்லுவான் ராம் மனோகரன். கும்பகோணம் காலேஜில் இண்டர் மீடியட்டோடு நிறுத்தித் திருச்சி போய்விட்டான் அவன். காரணம் அவன் தந்தை சரஸ்வதி மஹாலை விட்டு விட்டுத் திருச்சியில் ஒரு கல்லூரியில் சமஸ்கிருத விரிவுரையாளராகப் போனதுதான்.

அவன் திருச்சியில் இருந்தபோது ஒரு சமயம் நான் ஸ்ரீவைகுண்ட ஏகாதசிக்காகப் போயிருந்தேன். அவன் செயிண்ட் ஜோஸப்பில் தொடர்ந்து படித்துக் கொண்டிருந்தான். நான் போயிருந்த சமயம் லீவு நாளாகையினால் என்னோடுகூடச் சுற்றினான். நான் அங்கே அவனுடைய விருந்தாளி என்று பேர். ஆனால், டவுன் பஸ் ஏறும்போது, ஹோட்டலின் டிபனுக்குப் பில் கொடுக்கும்போது எல்லாச் சமயங்களிலும், "டேய் எங்கிட்ட முழு அஞ்சு ரூபா நோட்டா இருக்குடா... சில்லறையா இல்லே... நீயே கொடுத்திடு" என்று வழக்கம் போல் ராம் மனோகர் செலவையெல்லாம் என் தலையில் கட்டிவிட்டான். அவனுடைய முழு நோட்டை மாற்றவேயில்லை.

முழுசை மாற்றக்கூடாது என்னும் அவனுடைய வாழ்க்கைத் தத்துவம் திருச்சிக்குப் போன பின்னும்கூட மாறியதாகத் தெரியவில்லை. பலமுறை "என்னிடம் முழுப் பத்துரூபாய் நோட்டாகத்தாண்டா இருக்கு. பத்தை மாத்தறதைவிட அஞ்சை மாத்துவதே தேவலை. நீயே உன்னோடதை மாத்து" என்று அவனிடம் சொல்ல நினைத்துச் சொல்ல நினைத்துச் சொல்ல முடியாமலே போய் விட்டது எனக்கு.

அவனையும் அவன் குடும்பத்தையும் பார்த்து சாஸ்திர ஞானமும் கஞ்சத்தனமும் உடன் பிறந்தவையோ என்றுகூட எனக்குச் சந்தேகமாகப் போய்விட்டது. ராஜா சரபோஜி காலத்தில் மகாராஷ்டிரப் பிரதேசத்தைக் கலாசாரத் தலைநகரமாகிய புனாவிலிருந்து தஞ்சைக்குக் குடியேற்றிய புகழ் பெற்ற சித்பவன் மரபினரான முன்னோர்களின் வம்சாவளியைச் சேர்ந்தவர்கள் என்று ராம் மனோகர் தன் குடும்பத்தைப் பற்றிப் பெருமையாகச் சொல்லிக் கொள்வதுண்டு.

ராம் மனோகரின் முன்னோர்கள் தஞ்சையில் குடியேறியதுமே முழுசைக் குறைப்பதில்லை - முழுசைக் குறைத்தால் புரியாது என்று பின்னக் கணக்கை ஆசாரக் குறைவாகவே கருதிவிட்டார்களோ என்றுகூட மேலும் எனக்குச் சந்தேகமாக இருந்தது.

அவார்டு விழா தொடங்கப்பட்டு ராஷ்டிரபதி சமஸ்கிருதத்தின் முக்கியத்துவம் பற்றியும், அதன் பழமை பற்றியும் அதன் கலாசாரப் பின்னணி பற்றியும் உயர்வைப் பற்றியும் - தேசத்தில் சமஸ்கிருத ஞானம் புறக்கணிக்கப்படுவதால் ஏற்படும் அறிவுபூர்வமான நஷ்டம் பற்றியும் தமது உரையைப் படித்துக் கொண்டிருந்தார்.

விருதுகளுக்கான ஸைட்டேஷனையும் அவார்டுகள் அடங்கிய பேழையையும் அதிகாரி ஒருவர் படிப்பதற்கும் கொடுப்பதற்கும் ஏற்ற முறையில் வரிசைப்படுத்தி அடுக்கிக் கொண்டிருந்தார். ஹாலில் இருந்தவர்கள் ராஷ்டிரபதியின் உரை வாசிப்பை அமைதியாகச் செவி மடுத்துக் கொண்டிருந்தார்கள். என் நினைவு மறுபடியும் பின்னோக்கி ஓடியது.

ஸ்ரீரங்கம் வைகுண்ட ஏகாதசி சந்தர்ப்பத்துக்குப் பின் பல வருடங்கள் நான் என் சிநேகிதன் ராம் மனோகரனைப் பார்க்க முடியவில்லை.

பல ஆண்டுகளுக்குப் பின் எனக்குக் கல்யாணமாகி நான் டெல்லியில் பெரிய உத்தியோகத்துக்கு மாற்றலாகிக் குடும்பஸ்தனான பின் ஏதோ பிரார்த்தனைக்காகத் திருப்பதி போயிருந்தேன்.

அங்கே தற்செயலாக ராம் மனோகர் ராவை அவருடைய மனைவி சகிதம் சந்தித்தேன். மந்த்ராயலத்துக்குப் போய் விட்டுத் திரும்புகிற வழியில் திருப்பதி தரிசனத்துக்கு வந்ததாகவும் சாயங்காலம் ரேணிகுண்டாவிலிருந்து, ஒன்றாகவே சேர்ந்து சென்னைக்குப் போகலாம் என்றும் ராவ் கூறினார். திருச்சியிலேயே தன் தகப்பனார் வேலை பார்த்து ஓய்வு பெற்ற அதே கல்லூரியில் தான் சமஸ்கிருதம் கற்பிப்பதாக ராவே கூறக் கேட்டுத் தெரிந்துகொண்டேன்.

நான் திருப்பதி தரிசனம் முடிந்ததும் சென்னைக்குத் திரும்பி அங்கிருந்து குடும்பத்தோடு டில்லி போக இருந்தேன். ராவும் மனைவியோடு சென்னை திரும்பி அங்கு சில உறவினர்களைப் பார்த்துவிட்டு அப்புறம் திருச்சி செல்லப் போவதாகத் தெரிவித்தார்.

மாலையில் சென்னை ரயிலுக்காக இருவரும் அவரவர் குடும்பத்தோடு ரேணிகுண்டா ஸ்டேஷனுக்கு வந்தபோது, "என்னிடம் முழு நூறு ரூபாய் நோட்டா இருக்கு! அதைப் போயி மாத்த வேண்டாம்னு பார்க்கறேன். நீயே எனக்கும் என் ஒய்ஃபுக்கும் சேர்த்து டிக்கட் எடுத்திடு" என்றார்.

எக்காரணம் கொண்டும் முழுசை மாத்தக் கூடாது என்னும் கொள்கை புரொபஸராகி சம்பாதிக்கும் இன்றும் ராம் மனோகர் ராவை விட்டுப் போகவில்லை என்று தெரிந்தது.

அது ஒரு ரூபாயோ, ஐந்து ரூபாயோ, நூறு ரூபாயோ, எதுவானாலும் அதை மாற்றிப் பின்னமாக்கிச் செலவழித்துவிடக் கூடாது என்பதில் ராவ் அப்படியேதான் இருந்தார். ஒவ்வொரு மனிதனுக்குள்ளும் மைதாஸூம் ஷைலக்கும் மறைந்திருக்கிறார்கள். சிலரிடம் அந்தக் குணச்சித்திரங்கள் எப்போதுமே வெளிப்படுகின்றன. சிலரிடம் சில சமயங்களில் மட்டுமே வெளிப்படுகின்றன என்று தோன்றுகிறது.

இதன்பின் மீண்டும் பல வருஷங்கள் எங்களுக்குள் சந்திப்பே நிகழவில்லை.

அதிகாரி ஒருவர் விருதுக்கானவரைப் பற்றிய ஸைட்டேஷனைப் படிக்க - அது முடிந்ததும் ஏ.டி.ஸி. எடுத்து நீட்டிய பேழையையும் ரூபாய் பத்தாயிரத்துக்கான செக் அடங்கிய கவரையும் ராஷ்டிரபதி உரியவருக்கு வழங்கினார். எல்லாருமே குடுகுடு கிழங்கள். பார்வை மங்கிய சோடாபுட்டி கண்ணாடிகள். ஒரு பக்கம் நூலால் கட்டிய பிரேம் போன கண்ணாடிகள். சிலர் பதற்றத்தால் ராஷ்டிரபதி நின்ற மேடையில் ஏறியதுமே தள்ளாடினர். சிலர் தடுக்கி விழுந்தனர். சிலர் விருது வாங்கியதும் ராஷ்டிரபதியை வணங்குகிற மறதியில் கையில் இருந்த பேழையையோ கவரையோ நடுக்கத்தில் கீழே நழுவ விட்டனர்.

இதெல்லாம் சகஜம்தான். சில 'காட்டரேட்' ஆப்பரேஷன்களுக்குப் பின் எனக்கே கண்பார்வை மங்கிச் சற்றுத் தள்ளி இருப்பவர்களை அடையாளம் புரியாதபோது மற்றவர்களுக்கு இப்படி நேர்வதைப் பற்றி அதிசயம் ஒன்றும் இல்லை. விருதுகளுக்குச் சிபாரிசு செய்யும் கமிட்டியில் சம்ஸ்கிருதம் தெரிந்தவர்கள் என்ற முறையில் எனக்குத் தெரிந்தவர்கள் சிலர் இருந்தனர். அவர்கள் அழைப்பு அனுப்பியே நான் இன்று இங்கு வர நேர்ந்திருக்கிறது. அவர்களைக் கேட்டால்கூட இது அந்த ராம் மனோகர் ராவ்தானா என்பது புரிந்துவிடும்.

விழா முடியட்டுமே அப்புறம் கேட்கலாம் அல்லது ஸைட்டேஷனலிருந்தாவது புரிகிறதா என்று பார்க்கலாமே! ஸைட்டேஷன் மிகவும் சுருக்கமாக இருந்தது. 'முப்பது வருஷமாக சம்ஸ்கிருதம் கற்பிக்கிறார். இவ்வளவு நூல்கள் எழுதியிருக்கிறார்' என்பதுபோல் இருந்த அக்குறிப்புக்களை வைத்து அது என் பால்ய நண்பன்தானா இல்லையா என்பதை உறுதி செய்து கொள்ள முடியவில்லை.

முப்பது வருஷமாகப் புத்தகம் எழுதுவதும் வேலை பார்ப்பதும் எல்லோருக்கும் பொருந்தக்கூடிய பொது விவரங்கள்தான். அவற்றில் என் பள்ளித் தோழனை அடையாளம் காட்ட எதுவுமே இல்லை. நான் விழா முடிகிறவரை பொறுமையாகக் காத்திருக்க வேண்டியதாயிற்று...

விழா முடிந்து மறுபடி தேசிய கீதம் ஒலித்து நிறைந்தது. ராஷ்டிரபதி பரிவாரம் புடைசூழ உள்ளே போனார். வந்திருந்தவர்களுக்கு ஊழியர்கள் டீயும் பிஸ்கட்டுகளும் வழங்க ஆரம்பித்தார்கள்.

நான் விருது வாங்கியவர்களிடையே இவர்தான் ராம் மனோகர் ராவோ என என் மனத்தில் சம்சயப்பட்ட நபரைக் குறி வைத்து நடந்தேன். அருகில் நெருங்கியும் விட்டேன். அவர் பக்கத்திலிருந்த மற்றொரு விருது வாங்கிய சமஸ்கிருத பண்டிதரிடம் ஏதோ பேசிக் கொண்டிருந்தார். இல்லை, விசாரித்துக் கொண்டிருந்தார் - ஏதோ கேட்டுக் கொண்டிருந்தார்.

"சாஸ்திரிகளே! நான் கரோல் பாக் போயாகணும். எங்கிட்ட நூறு ரூபாய் நோட்டாக இருக்கு. அதை மாத்த வேண்டாம்னு பார்க்கறேன்... சில்லறையா ஒரு ரெண்டு ரூபா இருந்தாக் கொடுங்கோ... மெட்ராஸ் போறப்போ ரயில்லே திரும்பத் தந்துடறேன்."

நான் விசாரிக்க வேண்டிய அவசியமே நேரவில்லை. அது சத்தியமாக என் பால்ய சிநேகிதன் ராம் மனோகர் ராவ்தான். நிச்சயமாக வேறு யாரும் இல்லை. வேறு யாராகவும் இருக்க முடியாது. எழுபத்தேழு வயதான பின்பும் இன்றும் பின்னக் கணக்கில் அவருக்குத் தகராறு இருந்தது. முழுசை மாற்றினால் குழப்பம் என்ற அவருடைய நிரந்தர வாழ்க்கைத் தத்துவமும் அப்படியேதான் இருந்தது.

நல்ல வேளை யார் செய்த புண்ணியமோ! தேசிய கீதம் முடிந்ததும் ராஷ்டிரபதியையே ஒரு நிமிஷம் நிறுத்தி வைத்துக் கொண்டு, "சார்! எங்கிட்ட நூறு ரூபாயா இருக்கு. நீங்களும் 'செக்'காவே குடுத்துட்டேள், மாத்த முடியாது. தயவு

பண்ணி ஆட்டோ ரிக்ஷாக்காரனுக்கு அல்லது பட்பட்காரனுக்கு குடுக்க ஒரு ரெண்டு ரூபாய் சில்லறையாக் குடுத்துட்டுப் போங்கோ. நான் 'கரோல்பாக்' போகணும்' என்று மன்றாடாமல் விட்டாரே என்பதில் எனக்குத் திருப்தியாக இருந்தது. இதற்கு மேலும் நானே போய் அவரிடம் என்னை அறிமுகப்படுத்திக் கொண்டு விவரம் சொல்லலாமா என்று தயங்கினேன்.

என் மணிபர்ஸில் அப்போது முழுசாக ஒரு பத்து ரூபாய் நோட்டும் என் ஒருவனுக்கு மட்டும் வீடு போவதற்குப் பட்பட் சார்ஜும் மட்டுமே இருந்தன.

நான் ராவிடம் அறிமுகப்படுத்திக் கொண்டு அவரையும் என்னோடு அழைத்துச் செல்வதாக இருந்தால் முழுசாக இருக்கும் பத்து ரூபாயைக் கண்டிப்பாக மாற்ற வேண்டி நேரிடலாம். அது மட்டுமில்லை. அவரைக் கூட அழைத்துக் கொண்டு என் வீட்டுக்குப் போன பின் நான் மேலும் பல முழு பத்து ரூபாய்களை மாற்றும்படி ஆனாலும் ஆகிவிடக்கூடும்.

அதற்கு நான் தயாராக இல்லை. முதல் முதலாக எனக்கும் உடனே பின்னக் கணக்குப் பிடிக்காமல் போய் முழுமையை மாற்றாமல் அப்படியே கட்டிக் காக்க வேண்டும் என்ற ஆசை தவிர்க்க முடியாமல் திடீரென்று ஏற்பட்டுவிட்டது. அந்தத் தத்துவத்தின் குருநாதருக்கு முன்னிலையிலேயே அந்த வாசனா ஞானம் என்னுள் பிறந்ததுதான் ஆச்சர்யம்.

**(கல்கி, தீபாவளி மலர், 1979)**



# 146. ஒரு வெறுப்பின் மறுபுறம்

என்ன காரணத்தாலோ முதலிலிருந்தே அவன் மேல் அவர் மனத்தில் ஒரு வெறுப்புத் தோன்றிப் படர்ந்துவிட்டது. நாளுக்கு நாள் அந்த வெறுப்பு அதிகமாகியதே ஒழியக் குறையவில்லை. அந்த வெறுப்பின் காரணத்தையோ மூலத்தையோ அவர் ஆராய்ந்ததில்லை.

சமய சந்தர்ப்பங்களும் அவள் காண்பித்த திறமைகளும்கூட அந்த வெறுப்பைத் தளர்த்தவோ மாற்றி அமைக்கவோ முடியவில்லை. அவளது அபரிமிதமான அழகையும் மிஞ்சிய வெறுப்பாயிருந்தது அது. ஒரு பிரபலமான தினசரியில் திரைப்படம், நாடகம், நாட்டியம் போன்ற நுண்ணிய கலைகளுக்கு விமர்சனம் எழுதும் 'ஆர்டர் க்ரிடிக்' அவர். அவருடைய விமர்சனங்களுக்கு ஒரு மரியாதை இருந்தது. அவர் இரண்டு வார்த்தைகள் புகழ்ந்து எழுத மாட்டாரா என்ற ஏக்கமும் கலைஞர்களிடையே இருந்து வந்தது. பெரும்பாலான கலைஞர்கள் அவரை அண்ணா என்றே பவ்யமாக அழைத்தனர்.

அதற்கு அவர் எழுதி வந்த தினசரியும் ஒரு காரணம். தேசிய அளவில் பரந்த செல்வாக்கும், சர்வ தேச மரியாதையும் உள்ளதாயிருந்தது அது. அவரும் மூத்த அனுபவசாலியாயிருந்தார்.

புதிதாக வந்த சுகுணகுமாரியின் மேல் மட்டும் அவர் ஏன் அத்தனை வெறுப்பைக் காண்பித்து வந்தார் என்பது பெரும் புதிராயிருந்தது. பலருக்கு அது விளங்கவே இல்லை. படிப்படியாக முன்னேறிச் சுகுணகுமாரி நாடகத்தில் நடித்தபோது, "இவள் நடிப்பது நாடகக் கலைக்கே அவமானம் உண்டாக்கக் கூடியது" என்று எழுதினார் அவர்.

பின்பு அவள் நடனம் கற்று அரங்கேறியபோது, "காக்கை வலிப்பு வந்த மாதிரி மேடை மேல் உதடு நடுங்கிக் கை கால்களை விதிர் விதிர்ப்பது எல்லாம் நடனம் ஆகிவிடுவதில்லை" என்று சுடச்சுட வெளுத்துக் கட்டியிருந்தார்.

நாடக அனுபவம், நாட்டியத் தகுதியாகிய இரண்டும், இளமையும் வனப்பும் கவர்ச்சியும் நிறைந்த உடலழகும் அவளைச் சினிமாவில் நாயகியாக நடிக்க வாய்ப்பளித்த போது, "இன்றைய சினிமா உலகம் எந்தத் தீமையையும் எந்த மோசத்தையும் எந்தச் சுமார் ரகத்தையும் ஏற்க முடியும். அது இப்போது சுகுணகுமாரியையும் ஏற்றிருக்கிறது" என்று கடுமையாக எழுதினார் அவர்.

பிற இளம் விமர்சகர்கள் சிலரும், இளம் கலைஞர்களும், "எல்லாவற்றையும் கடுமையாகத் தாக்கி எழுதினால் மற்றவர்களுக்குத் தம்மேல் பயமும் மரியாதையும்

இருக்கும் என்ற எண்ணத்தில்தான் அவர் தாக்கி எழுதுவதை வழக்கமாகக் கொண்டிருக்கிறார்" என்று தங்களுக்குள் பேசிக் கொள்வது கூட உண்டு. அவர்கள் தம்மைப் பற்றி அப்படிப் பேசிக் கொள்வது அவருக்குத் தெரிந்துதான் இருந்தது. ஆனால், பெரும்பாலான இளம் பத்திரிகையாளர்கள் அவரை மதித்தனர். அவருக்கு அஞ்சினர்.

சில துணிச்சலான இளம் விமர்சகர்களும் கலைஞர்களும் அவருக்குக் 'கிழட்டுப் புலி' என்றுகூட ஒரு பட்டப் பெயர் சூட்டியிருந்தார்கள். சமயா சமயங்களில் தமக்குத் தாமே நினைத்துப் பார்க்கும் போதுகூட அந்தக் காரணம் பொய் அல்ல என்று அவருக்கே தோன்றியது. ஆனால், உள்ளூறச் சில சந்தேகங்களும் அவருக்கே உண்டுதான். தாமாகவே மற்றவர்களிடம் பேசும்போது சவடாலாக ஏதாவது சொல்லி வந்தார். தம்முடைய பெருமையையும் மரியாதையையும் உயர்த்திக் கொள்வதற்காகப் பிறருடைய பெருமையைக் குறைத்துச் சொல்லவும் அவர் தயங்கியதில்லை. அது ஒரு பழக்கமாகவே கூட ஆகியிருந்தது.

"இப்போ, புதுசா யாரோ ஒரு அழகான குட்டி, அவ பேரென்ன? சுகுண குமாரியோ, சகுண குமாரியோ.யாரோ ஒருத்தி, அவ என்னைப் 'பர்ச்சேஸ்' பண்ணிடனும்னு ப்ளாங் செக் கொடுத்து ரகசியமா ஆளனுப்பினா. ஓய்! நானா மசிவேன்?" என்பார்.

"என்னைத் தனியா மகாபலிபுரம் கோல்டன் ஸாண்ட்ஸ் பீச் ஹோட்டலில் போய் வீக் எண்டுக்குத் தங்கலாம்னு அவளே ஒரு தினுசாச் சிரிச்சுக்கிட்டே கூப்பிட்டாங்காணும்! அதுக்கு வேறே ஆள் பாருடீன்னுட்டேன்" என்று இன்னொரு சமயம் கூறுவார்.

ஐம்பத்தேழு வயது நிறைந்த தலை பூரணசந்திரன் மாதிரி பளீரென்று வழுக்கையாகிப் போன 'ஆர்ட் கிரிட்டிக்' ஜம்புநாதனா இப்படிப் பேசுகிறார் என்று பலருக்கு நம்ப முடியாமல் கூட இருக்கும்.

எந்தச் சமயத்தில் எப்படி மனநிலை இருக்கிறதோ அப்படி மற்றவர்கள் அவர் வாயில் அரைபடுவார்கள். சிலர் அவருடைய வாய்க்குப் பயந்தே அவரிடம் மரியாதையாக நடப்பதுபோல் நடித்தார்கள். பலர் நிஜமாகவே மதித்ததும் உண்டு.

ஆனால், உண்மையில் இளைஞர்கள் அவரைப் பற்றிக் கோபமாக இருந்தார்கள். சுகுணகுமாரியை அவர் கறுப்பா, சிவப்பா என்று கூட நேரில் பார்த்ததில்லை. படங்களில் பார்த்தபோது மிகமிக அழகாயிருந்தாள். அபரிமிதமான அழகுள்ளவர்கள் மேலெல்லாம் அவருக்கு இனம் புரியாததொரு புகைச்சல் உண்டு. காரணம் அவர் குரூபி. தெற்றுப் பல், முகம் நிறைய அம்மை வடு. ஒரு கண் கொஞ்சம் பூ விழுந்தாற் போல் மாறு கண்ணாகத் தெரியும்.

தம் அழகினால் பிறரைக் கவர்ந்து மயக்க முடியாத காரணத்தால் அவருக்குள் அடங்கிப் போன தாகங்கள், தாபங்கள் எல்லாம் பேச்சுக்களாகவும் வம்புகளாகவும்

வாயிலிருந்து புறப்பட்டன. யாரை அவர் அதிகமாகத் தாக்குகிறாரோ அவர்களைப் பற்றியே நினைத்து நினைத்து அவர் உருகுகிறார் என்பது பிறருக்குத் தெரியாவிட்டாலும் அவருக்கே தெரியும். அவர் அந்தரங்கத்துக்கு அது மிக மிக நன்றாகத் தெரியும்.

கோடிக்கணக்கான ரசிகர்களை மகிழ்விக்கும் கனவுக்கன்னியான சுகுணகுமாரியை அவர் தாக்கி விமர்சித்தாலும் உள்ளூற அவர் மனம் அவளுக்காக ஏங்கியது. அவளையே நினைத்து, அவள் என்னைச் சரிக்கட்டுவதற்காக மகாபலிபுரத்தில் தனியே அந்தரங்கமாகத் தங்க அழைத்துப் போவதாகக் கூறினாள் என்று கற்பித்து மகிழ்ந்து அதைப் பிறரிடமும் வாயரட்டை அடித்தார் அவர்.

இனிய அவரது அடிமன ஓட்டம் இப்படித்தான் இருந்தது. ஆனால், பிறர் என்னவோ அவரைப் பற்றி அப்படி நினைக்கவே இல்லை, காரணம் அவரது வயதுதான்; அவரது முதிர்ச்சிதான்.

அவரது முழுப் பெயர் வி.வி.ஜம்புநாதன். பத்திரிகை உலகில் வி.வி.ஜே. என்று இனிஷியல் எழுத்துக்களைச் சொன்னாலே போதும். அவ்வளவு தூரம் அவர் பிரபலமாகியிருந்தார். எல்லாருக்கும் அவரைத் தெரிந்திருந்தது.

"வி.வி.ஜே.யை நேரே பார்த்தால் சுகுணகுமாரி அப்படியே கதறி அழுதுவிடப் போகிறாள்" என்று சகப் பத்திரிகையின் விமர்சகர்கள் அவரிடம் கிண்டலாகக் கூறுவதும் உண்டு.

அதனால் அவருக்கு உள் மனதில் ஒரு பிரமை. என்றாவது எங்காவது சுகுணகுமாரியைச் சந்திக்க நேருவது போலவும், அவள் தன் முன் கதறியழுது, "நான் உங்களுக்கு ஒரு கெடுதலும் பண்ணலீங்களே! ஏன் இப்படி என்னைக் கரிச்சுக் கொட்டறீங்க?" என்று மன்றாடுவது போலவும் கற்பனை செய்தே மகிழத் தொடங்கிவிட்டார்.

ஆனால், அந்தக் கற்பனை நீண்டகாலம் நீடிக்கவில்லை. சில மாதங்கள் கழித்துச் சினிமா உலகுடன் தொடர்பு உள்ள வி.வி.ஜேக்குப் பிடித்தமான ஒரு சங்கீத வித்துவான் காலமானார். வி.வி.ஜே.யும் வேறு சில பத்திரிகையாளர்களும் அந்த வித்துவானின் வீடு சென்று அவருடைய மனைவியிடம் துக்கம் விசாரித்துக் கொண்டிருந்தபோது, அந்த இழவு வீட்டிலும் முண்டியடித்துக் கொண்டு நெருக்கும் ஒருகூட்டம் புடைசூழ சுகுணகுமாரியும் அங்கே துக்கம் கேட்க வந்து சேர்ந்தாள்.

அன்று அப்போது வி.வி.ஜே.யை அவள் கண்டு கொள்ளவே இல்லை. அவள் சரியாகப் பார்க்கவில்லையோ என்ற தயக்கத்தில் உடன் இருந்த ஓர் இளம் பத்திரிகையாளன், "சுகுணா அம்மா! சாரைத் தெரியுமில்லே? ஸார்தான் பிரபல..."

"ஸார் யாரு? தெரியாதுங்களே!"

"ஸார் பிரபல விமர்சகர். வி.வி.ஜே.இவர்தான்!"

"..............."

"........விலே ஆர்ட் கிரிட்டிக்கா இருக்கார்."

"அப்படிங்களா? எனக்குத் தமிழ் பேச வர மாதிரி படிக்க வராது. இங்கிலீஷும் படிக்கிற பழக்கம் வரலே. தெலுங்கு மட்டும் எழுத்துக் கூட்டிப் படிப்பேன்."

"..............."

"ரொம்ப வணக்கமுங்க."

உண்மையிலேயே பணிவாகத்தான் அவரை அவள் வணங்கினாள்.

படத்தில் பார்த்ததைவிட நேரில் அதிரூப சுந்தரியாக விளங்கினாள் அவள்.

அதனால் ஏற்பட்ட மயக்கத்தை விட அவள் தம் விமர்சனங்களையோ தம்மையோ பற்றி அறிந்திராதவள் என்ற அதிர்ச்சியில் அயர்ந்தே போனார் வி.வி.ஜே.

அவளைப் பற்றி துணிந்து தாம் தம்மைச் சுற்றியிருக்கும் இளம் பத்திரிகையாளர்களிடம் அடித்து வைத்திருந்த 'டூப்'களை எல்லாம் அவர்கள் முன்னாலேயே தற்செயலாகப் பொய்யாக்கி விட்டாளே என்ற எரிச்சலும் கையாலாகாத் தனமானதொரு வெறுப்பும் மனத்தில் மூண்டன அப்போது.

அந்த அழகின் முன் அவர் மனமும், அவரும் குன்றிப் போவதைத் தவிர வேறு வழியில்லை. பத்திரிகை உலகில் அவரைப் போல ஜாம்பவனாக இருக்கும் ஓர் 'ஆர்ட் கிரிட்டிக்' இருப்பதே அவளுக்குத் தெரிந்திருக்கவில்லை.

அவள் 'ப்ளாங்க் செக்' அனுப்பித் தம்மை 'பர்ச்சேஸ்' செய்ய முடியாதது பற்றியும், மகாபலிபுரத்துக்குத் தனியே உடன் வரக் கூப்பிட்டது பற்றியும் தாம் கற்பனை செய்து அளந்த கதைகளுக்காக வெட்கப்பட்டு நண்பர்கள் முன்னால் அந்தக் கணமே தாம் செத்துவிட்டது போல உணர்ந்தார், அவர்.

ஒரு சௌந்தரியத்தை நிந்தாஸ்துதி செய்தே வேறொரு விதமாக வழிபட்டு வந்திருக்கும் பலவீனத்தின் விளைவாகக் கட்டி விட்டு மகிழ்ந்த கதைகள் அவரையே இப்போது கூனிக் குறுகிக் கூச வைத்தன. அவரையே திரும்ப வந்து தாக்கிப் புடைத்தன. 'விமர்சகர் என்பவர் நடப்பது எப்படி என்று கற்றுக் கொடுக்க முயல்கிற ஒரு நொண்டி' என்று யாரோ எங்கோ கூறியிருப்பது வி.வி.ஜே.க்கு நினைவு வந்தது இப்போது.

தமது வெறுப்பின் மறுபக்கச் சுவர் அப்போது மடமடவென்று சரிவதை அக் கணத்தில் அவரே உணர்ந்தார்.

யாருடைய மறைவுக்கோ துக்கம் கேட்க வந்த இந்த இடத்தில் தமக்குத் தாமே அந்தரங்கமாகத் துக்கம் கேட்டுக் கொண்டு உள்ளூற அழுது ஒப்பாரி வைக்க வேண்டும் போலிருந்தது அவருக்கு. ஆனால், வீம்பும் ஜம்பமும் அவரை அப்படி அழவிடாமல் இப்போதைக்குத் தடுத்துக் காப்பாற்றி வைத்தன.

**(கலைமகள், தீபாவளி மலர், 1980)**

## 147. ஹை பவர் கமிட்டி

**ஜா**திக்காய் மலைத்தொடரில் வாழும் 'பகடர்' என்னும் பழங்குடி இனத்தவர் பற்றித் திடீரென்று அரசாங்கத்துக்கு மகத்தான அக்கறை ஏற்பட்டிருந்தது.

"பகடர் இன நல்வாழ்வுக்கும், முன்னேற்றத்துக்கும் பாடுபடுவோம். அவர் தம் மொழியையும் கலாசாரத்தையும் கட்டிக் காப்போம்" என எல்லாத் தினசரிகளிலும் முதலமைச்சரின் படத்தோடு (பகடர்களின் படத்தோடு அல்ல) பெரிய பெரிய விளம்பரங்கள் வெளிவந்திருந்தன.

சமூக சீர்திருத்தக்காரர்களும், ஆந்த்ரபாலஜீக்காரர்களும், ஸோஷியலாஜிஸ்ட்டு-களும், புகைப்படக்காரர்களும், பத்திரிகை நிருபர்களும் ஜாதிக்காய் மலைத் தொடருக்கு ஓடி அலைந்தார்கள். பத்திரிகைகளில் பகடர் இன ஆண், பெண்களின் படங்கள் தடபுடலாகப் பிரசுரமாயின. பகடர் வீடு, பழக்க வழக்கங்கள், கலாசாரம் பற்றிக் கட்டுரைகள் எல்லாம் பிரசுரமாயின.

பகடர் இன முன்னேற்றத்துக்காக அரசாங்கம் 'ஹைபவர் கமிட்டி'ஒன்றை நியமித்திருந்தது. மலைவாழ் மக்களும் பழங்குடி மரபினரும், பின் தங்கிய ஏழ்மை நிலையிலிருப்போரும், மக்கள் தொகை எண்ணிக்கையில் மிகமிகக் குறைந்து வருவோரும் ஆகிய பகடர்களின் வளர்ச்சிக்கானவற்றை அந்த 'உயர் அதிகாரக்குழு' உடனடியாகக் கவனித்து ஆவன செய்ய வேண்டும் என ஏற்பாடாகியிருந்தது.

மலைஜாதியினரான பகடர்களின் பசிப்பிணியையும் ஏழ்மையையும் வேலையில்லாத் திண்டாட்டத்தையும் போக்குவதற்காக அமைக்கப்பட்ட 'உயர் அதிகாரக் குழுவின்' முதல் கூட்டம் தலைநகரில் 'ஏஷியா இண்டர் காண்டினெண்டல்' ஐந்து நட்சத்திர ஹோட்டலில் ஏ.ஸி. கான்ஃபரன்ஸ் ஹாலில் ஆடம்பரமாக நடைபெற்றது.

ஹோட்டலின் ஏ.ஸி. கான்ஃப்ரன்ஸ் ஹாலில் பகடர் முன்னேற்றக் குழுவின் முப்பது உறுப்பினர்களும் சந்தித்தார்கள். கூட்டம் நெடுநேரம் நடந்தது. உறுப்பினர்களின் பகல் உணவு. மாலைக் காபி, சிற்றுண்டி எல்லாம் 'ஏஷியா இண்டர் காண்டினெட்ட'லிலேயேதான். முதல் கூட்டத்துக்கே ஹோட்டல் பில், உறுப்பினர் களின் டி.ஏ. தினப்படி எல்லாம் ஒன்றே கால் லட்சரூபாய் செலவாயிற்று.

ஆறு, ஏழு மணி நேர விவாதத்துக்குப் பின்னர் ஒரு குறிப்பிட்ட தீர்மானத்தைக் குழுவின் தலைவர் முன்மொழிந்த போது அதை அனைவரும் ஏகமனதோடு உடனே வரவேற்று ஒப்புக் கொண்டனர்.

குழுத் தலைவர் முன்மொழிந்த தீர்மானம் இதுதான் :

"அருகி வரும் 'பகடர்' இனத்தை வளர்த்து அவர்களுடைய மொழியையும், கலாசாரத்தையும் கட்டிக்காக்க வேண்டிய பெரும் பொறுப்பு நம் தலைகளில் சுமத்தப்பட்டிருக்கிறது.

ஜாதிக்காய் மலைத் தொடரில் சிவநந்தி நதி உற்பத்தியாகுமிடத்தை ஒட்டி இப்போது எஞ்சியிருக்கும் 'பகடர்' குடும்பங்களின் எண்ணிக்கை மொத்தம் பத்துதான். இந்தப் பத்துக் குடும்பங்களினுடைய அபிவிருத்திக்காக நமது அரசாங்கம் திட்ட ஒதுக்கீட்டில் 2 கோடி ரூபாய் ஒதுக்கி இருக்கிறது. அந்த 2 கோடி ரூபாயை எப்படிப் பயனுள்ள விதத்தில் செலவழித்துப் பகடர் மக்களை முன்னேற்றலாம் என்று தீர்மானிக்கும் பொறுப்பு நம்மிடம் இருக்கிறது என்பதை நாம் மறந்துவிடலாகாது என்று தொடக்கத்திலேயே நினைவூட்டினேன். மீண்டும் அதையே வற்புறுத்திச் சொல்ல விரும்புகிறேன்.

இந்தப் பகடர் மொழி, இனம் பற்றிய நூல்கள் சில லண்டனிலுள்ள இந்தியா ஹவுஸ் லைப்ரரியிலும், அரும்பொருள்கள் சில பிரிட்டீஷ் மியூஸியத்திலும் உள்ளதாகத் தகவல் கிடைத்திருக்கிறது. குழுவின் தலைவர் என்ற முறையில் நான் மட்டுமே லண்டனுக்குப் போய் இந்த விவரங்களை அறிந்து வந்தால் போதும் என்றாலும் என் சுயநலத்துக்காக மட்டும் அந்த வாய்ப்பைப் பயன்படுத்திக் கொண்டு மற்றவர்களை ஒதுக்கிவிட நான் விரும்பவில்லை. குழுவின் அடுத்த கூட்டத்தையே லண்டனில் கூட்டலாம் என்று முன் மொழிகிறேன்."

தலைவர் கூறிய இந்த முன்மொழிதலை மற்ற இருபத்தொன்பது பேரும் அப்படியே கோரஸ் பாடுவது போன்ற குரலில் வழி மொழிந்தனர். ஒரு சின்ன ஆட்சேபணை கூடக் கிளம்பவில்லை.

கூட்டத்து நிகழ்ச்சிகளை மினிட்ஸ்ஸுக்காகக் குறிப்பெடுத்த கிளார்க் "60 மைல் தூரத்தில் இருக்கிற ஜாதிக்காய் மலையில் போய்ப் பகடர்களை நேரில் பார்த்துவிட்டு வரத் துப்பில்லை! 6000 மைல் கடந்து போய் லண்டனிலுள்ள மியூஸியத்தைப் பார்க்கப் போகிறார்களாம். இந்தக் கமிட்டி உருப்பட்டாற் போலத்தான்" என்று தனக்குள் வெறுப்புடன் முணுமுணுத்துக் கொண்டான்.

அடுத்த வாரமே பகடர் நல்வாழ்வுக்கான 'ஹைபவர் கமிட்டி' லண்டன் போவதற்கான ஏற்பாடுகளைத் தொடங்கிற்று.

பயணத்துக்கு சுமார் முப்பது லட்ச ரூபாய் செலவாகும் என்று கணக்கிடப்பட்டது. பரம இரகசியமாக ஏற்பாடுகள் வைக்கப் பட்டிருந்தாலும் எப்படியோ தகவல்கள் வெளியேறிவிட்டன.

பயமேயில்லாத ஓர் இடதுசாரி தினசரி "பகடர்கள் புண்ணியத்தில் பாமரர்கள் உல்லாசப் பயணம்" என்று தலைப்பிட்டு இதைக் கண்டித்தது. மிக மிக ஏழ்மையிலும் பின் தங்கிய நிலையிலும் இருக்கும் பகடர்களை முன்னேற்றுவதற்காக முதல்

ஐந்தாண்டுத் திட்டத்தில் ஒதுக்கப்பட்டிருக்கும் இரண்டு கோடி ரூபாயில் ஒரு பைசாக்கூட பகடர்களுக்குப் போய்ச் சேர முடியும் என்று தோன்றவில்லை - என்பதையும் அந்தப் பத்திரிகை கடுமையாகச் சுட்டிக் காட்டியிருந்தது.

ஆனால், அந்தப் பத்திரிகையை யாரும் பொருட்படுத்தவில்லை. கமிட்டியின் முடிவுப்படி லண்டன் பயணம் உறுதி செய்யப்பட்டது. முப்பது உறுப்பினர்களும் இரண்டு ஐ.ஏ.எஸ். அதிகாரிகளும் லண்டன் புறப்பட்டனர்.

லண்டனில் பத்து நாட்கள் தங்கி ஒரு முதல்தரக் கமிட்டிக்குரிய வசதிகளை அனுபவித்தார்கள் உறுப்பினர்கள். அவர்கள் தங்கியிருந்த லண்டன் நகர ஐந்து நட்சத்திர ஹோட்டல் ஒன்றிலேயே குழுவின் ஆலோசனைக் கூட்டமும் நடைபெற்றது.

குழுவின் உறுப்பினர்களின் அதிபுத்திசாலியான ஒருவர் அப்போது அபூர்வமான சமயோசித யோசனை ஒன்றைத் தெரிவித்தார்.

"லிங்விஸ்டிக் சர்வே ஆஃப் இண்டியா என்னும் நூலில் கிரியர்ஸன் பகடர் மொழியைப் பற்றி எதுவுமே குறிப்பிடாதது மிகவும் வருந்தத்தக்கது. அதிர்ஷ்டவசமாக இன்று பிரிட்டிஷ் லைப்ரரியில் புதையல் கிடைத்ததுபோல் ஒரு நூலைப் பார்க்க நேர்ந்தது. பென்ஸில் வேனியா பல்கலைக் கழகத்தைச் சேர்ந்த ஆராய்ச்சியாளர் ஒருவர் ஏழாண்டுகளுக்கு முன் பகடர் இனத்தினரை நேரில் சந்தித்து அவர்களோடு தங்கி வாழ்ந்து ஆராய்ந்து 'லாங்வேஜ் - கஸ்டம்ஸ் அண்ட் பிலீவ்ஸ் ஆஃப் பகடாஸ்' என்ற அருமையான புத்தகத்தை எழுதியிருக்கிறார். பகடர்களிடம் பதிவு செய்த டேப்புக்களும் பகடர் பற்றிய செய்திகள் அடங்கிய பல இரகசியக் கோப்பு (ஃபைல்)களும் அவரிடம் இருப்பது நூலின் முன்னுரையிலிருந்து தெரிகிறது. இந்தக் குழு சிரமத்தைப் பாராமல் இப்படியே அமெரிக்கா சென்று பென்ஸில் வேனியாவிலுள்ள அந்த ஆராய்ச்சிப் பேராசிரியரை உடனே சந்தித்தாக வேண்டியது மிக மிக அவசியம்."

"மார்வலெஸ் ஐடியா! இதைக் கண்டிப்பாகச் செய்தாக வேண்டும்..." என்று குழு ஒரு சிறு முணுமுணுப்பும் இல்லாமல் உடனே முடிவு செய்தது. ஹைகமிஷன் மூலம் பயணத் திட்ட மாறுதல், அதிகப்படித் தொகை சாங்ஷன், பாஸ்போர்ட் விஸ்தரிப்பு, விஸா ஏற்பாடுகளை லண்டனில் இருந்தபடியே செய்து முடித்தார்கள் அவர்கள்.

மேலும் எழுபது லட்ச ரூபாய் செலவில் ஏழை எளியவர்களாகிய பகடர்களை முன்னேற்றும் புனிதயாத்திரை அமெரிக்காவுக்கும் தொடர்ந்தது. 'பென்ஸில்வேனியா' - சென்றபின் அங்கே அவர்களுக்கு ஏமாற்றமளிக்கும் செய்தி காத்திருந்தது. பகடர்களைப் பற்றி அவர்களோடு தங்கி வாழ்ந்து ஆராய்ந்திருக்கும் அந்தப் பேராசிரியர் அப்போது பென்ஸில்வேனியாவில் இல்லை என்றும் அவர் ஹவாயில் உள்ள ஈஸ்ட்வெஸ்ட் சென்டர் - பல்கலைக்கழகத்தில் இருப்பதாகவும் தெரியவந்தது.

அட்லாண்டிக் ரூட்டில் புறப்பட்டுத் திரும்புவதற்கும் அதே டிக்கெட் வாங்கியிருந்த குழுவினர் பஸிபிக் ரூட்டில் திரும்ப முடிவு செய்து டிக்கெட்டை

கலிஃபோர்னியா - ஹோனலூலூ - டோக்கியோ - ஹாங்காங் - கோலாலம்பூர் - இந்தியா என்பதாக மாற்றினர். இந்த மாறுதலுக்காகச் சில லட்சங்கள் அதிகம் செலவாகுமென்று தெரிந்தாலும் அவர்கள் அதைப் பொருட்படுத்தவில்லை. குழுவினர் சான்பிரான்ஸிஸ்கோ சென்று அங்கிருந்து 'ஹவாய்' பயணமானார்கள்.

ஈஸ்ட்வெஸ்ட் சென்டரில் வில்லியம் புரூஸ் என்ற அந்த அமெரிக்க அறிஞரை அவர்கள் சந்தித்துத் தங்களை அறிமுகம் செய்து கொண்டபோது அவர் ஆச்சரியமும் திகைப்பும் அடைந்தார்.

"உங்கள் ஹெட் குவார்ட்டர்ஸ்ஸிலிருந்து அறுபதாவது மைலில் ஒரே இடத்தில் கூட்டாக இணைந்து வாழும் பத்து டிரைபல் ஃபேமிலீஸைப் பற்றி ஆராய அங்கே நேரில் போகக்கூட நினைக்காமல் இவ்வளவு தூரமா அலைந்தீர்கள்? வேஸ்ட் ஆஃப் மணி, வேஸ்ட் ஆஃப் டைம்!" என்று பொரிந்து தள்ளினார் அந்த அமெரிக்க அறிஞர்.

அந்த அறிஞரின் அசௌகரியமான ஒளி மறைவில்லாத கேள்விகள் சங்கடப்படுத்தினாலும் பொறுத்துக் கொண்டு டேப்புகளையும், கோப்புகளையும் பற்றி அவரிடம் விசாரித்தார்கள் அவர்கள். அறிஞர் ஒருபுறம் அவர்களைச் செல்லமாகக் கண்டித்திருந்தாலும் மறுபுறம் பண்புடன் உபசரித்து டேப்புகளைப் போட்டுக் காட்டினார். கோப்புகளைப் பிரித்து விவரித்தார். விடை கொடுக்கும்போது ஞாபகமாக, "முதலில் பகடர் ஏரியாவிற்குப் போய் அவர்களை நேரில் சந்தியுங்கள்" என்று அவர்களுக்கு அறிவுரையும் கூறி அனுப்பினார்.

ஜப்பான், ஹாங்காங், மலேசியா எல்லாம் சுற்றி விட்டுக் குழுவினர் இந்தியா திரும்பிய போது ஏறக்குறைய ஒன்றறை மாதம் கழிந்திருந்தது.

அதற்குள் நாட்டிலும் சில மாறுதல்கள் நடந்திருந்தன. சிலர் கூட்டாகக் கட்சி மாறியதால் ஒரு மந்திரிசபை கவிழ்ந்து மற்றொரு மந்திரிசபை பதவி ஏற்றிருந்தது. புதிய மந்திரி சபைக்கு இப்படி ஒரு 'ஹைபவர்' கமிட்டி நியமிக்கப்பட்டிருப்பது பற்றி அறியவே வாய்ப்பில்லை.

பகடர் ஹைபவர் கமிட்டியின் மூன்றாவது கூட்டத்தில் ஃபைனான்ஷியல் அட்வைஸர் நிதி நிலைமை பற்றிக் கவலை தெரிவித்தார்.

"திட்ட ஒதுக்கீட்டில் ஒதுக்கப்பட்ட 2 கோடி ரூபாயில் இதுவரை ஏறக்குறைய ஒரு கோடி ரூபாய்க்கு மேல் செலவாகிவிட்டது. எஞ்சிய ஒரு கோடியாவது திட்டத்தின் பட்ஜெட் காலவரையறைக்குள் பகடர் நல்வாழ்வுக்காகச் செலவழித்தாக வேண்டும்" என்றார்.

பகடர் மொழி, கலைகள், கலாசாரம், பழக்க வழக்கங்கள் பற்றிய 'என்ஸைக்ளோபீடியா' ஒன்று வெளியிட வேண்டும் என்ற ஓர் உறுப்பினரின் யோசனை ஏற்கப்பட்டது.

"எப்படி என் யோசனை? வெறும் நல்வாழ்வுத் திட்டங்கள் என்று உடனே பகடர்களுக்கு எதையாவது செய்து முடித்து விட்டால் இந்தக் கமிட்டியை நாளைக்கே

கலைத்து விடுவார்கள். கமிட்டி கலைக்கப்பட்டால் நாம் தெருவில் நிற்போம். 'என்ஸைக்ளோபீடியா' என்றால் அது இந்த ஜன்மத்தில் முடியாது. ஐவ்வு மிட்டாய் மாதிரி வேலை இழுபடும். நம் கமிட்டியும் அதுவரை நீடிக்கும். அதற்காகத் தான் இப்படி ஒரு போடு போட்டேன்."

"பிரமாதமான ஐடியா" என்று அதைப் பாராட்டினார் மற்றொரு சக உறுப்பினர்.

என்ஸைக்ளோபீடியாவுக்கு ஆசிரியராக மாதம் ஐயாயிரம் ரூபாய் சம்பளத்தில் 'லெக்ஸிகோகிராபி'யில் பி.எச்.டி. பண்ணிய ஒரு நிபுணர், மாதம் ரூ. 2000 சம்பளத்தில் ஆறு உதவியாசிரியர்கள், ரூ.800 சம்பளத்தில் நான்கு புரூஃப் ரீடர்கள் எல்லாம் நியமிக்கப்பட்டனர். மாதம் பத்தாயிர ரூபாய் வாடகையில் ஓர் எடிட்டோரியல் அலுவலகம் அமர்த்தப்பட்டது. 'ஹைபவர் கமிட்டி' சந்திப்பதற்கான நிரந்தர கமிட்டி ரூமை 'ஏர்க்கண்டிஷன்' மற்றும் இண்டீரியர் டெகரேஷன் செய்து முடிக்கவும் பெருந்தொகை ஒதுக்கப்பட்டது.

"அந்த அமெரிக்க அறிஞர் சொல்லியது போல் பகடர்களை இன்னும் நம் கமிட்டி நேரில் போய்ச் சந்தித்து அவர்கள் குறைகளை அறியவில்லையே?" என்று அவசரக் குடுக்கையாகக் கேள்வி கேட்டார் ஓர் உறுப்பினர்.

"அதற்கென்ன இப்போது அவசரம்? என்ஸைக்ளோபீடியா வேலை முடிந்து அதன் வெளியீட்டு விழாவில் ஒரு பகடரையே வரவழைத்து அவரிடம் முதல் பிரதியை வழங்கினால் போயிற்று" என்று குழுவின் தலைவர் அதற்குச் சமாதானம் சொல்லிவிட்டார். என்ஸைக்ளோபீடியாவுக்கான பேப்பர் வாங்குவது, பிரிண்டிங் பைண்டிங் காண்ட்ராக்ட்டுகள் விடுவதில் தலைவருக்கும் உறுப்பினர்களுக்கும் கொஞ்சம் வகையாகவே கிடைத்தது. இப்படி முதல் திட்டக்காலத்திலேயே - அந்தக் காலம் முடிவதற்கு முன்பாகவே 'ஹைபவர்கமிட்டி' ஒதுக்கீட்டுத் தொகையான 2 கோடி ரூபாயையும் விழுங்கி ஏப்பம் விட்டு விட்டது.

ஜாதிக்காய் மலை - மலேரியா உள்ள இடமாகையினால் அங்கு எஞ்சியிருந்த 40 பேர் அடங்கிய 10 பகடர் குடும்பங்களிலுமாக அந்தத் திட்டத்தின் கால எல்லைக்குள் 12 பேர் மலேரியாக் காய்ச்சலில் உயிர் துறந்திருந்தார்கள். எஞ்சிய இருபத்தெட்டுப் பேரில் 4 பேர் மூப்பினால் இயற்கை மரணம் அடைந்திருந்தனர்.

ஆக, இரண்டாவது திட்டகாலத்துக்கு முன்பே 40ஆக இருந்த பகடர் இனத்தின் மொத்த எண்ணிக்கை குறைந்து போய் இரண்டு டஜனுக்குள் வந்திருந்தது.

இரண்டாது திட்ட காலத்தில் பகடர் என்ஸைக்ளோபீடியா முதலிய வேலைகளைப் பூர்த்தி செய்யவும் பகடர் இன முன்னேற்றத்துக்கான பிற சாதனைகளைப் புரியவும் ரூபாய் ஆறுகோடிக்குக் குறையாமல் ஒதுக்க வேண்டும் என்று 'ஹைபவர் கமிட்டி' கூடித் தீர்மானம் போட்டு அதை அரசுக்கு அனுப்பியிருந்தது. அந்த மழைக்காலத்தில் இடைவிடாமல் தொடர்ந்து ஒரு வாரமாகப் பெய்த அடைமழையின் போது ஏற்பட்ட பயங்கரமான மலைச் சரிவில் ஜாதிக்காய்

மலைத் தொடரில் ஒரே பகுதியில் மீதமிருந்த பகடர் குடியிருப்புகள் முழுவதுமே மண்மூடி அமிழ்ந்து விட்டது.

உலகில் கடைசியாக மீதமிருந்த சில பகடர்களுமே கூண்டோடு அழிந்து போயிருந்தனர். முதலில் பகடர்களைப் பற்றித் தலையங்கம் எழுதிய அதே இடது சாரித் தினசரி இதை எட்டுக் காலம் தலைப்புக் கொடுத்து முதல் பக்கச் செய்தியாகத் தலைப்பிலேயே துணிந்து பிரசுரித்து விட்டு உள்ளே 'பகடர்' நல்வாழ்வுக்கான ஹைபவர் கமிட்டியைப் பற்றிச் சாடுசாடென்று சாடித் தலையங்கமும் எழுதியிருந்தது.

உடனே ஆட்டு மந்தைகளைப்போல அத்தனைப் பெரிய தினசரிகளும் பகடர் பற்றி முதல் திட்டக்காலத்தில் அந்த இன அபிவிருத்திக்காக ஒதுக்கப்பட்ட 2 கோடி ரூபாயில் ஒரு பைசாக்கூட அதற்காகச் செலவிடப்படாமலேயே துஷ்பிரயோகம் செய்யப்பட்டிருப்பது பற்றியும் குறிப்பிட்டிருந்தன. விஷயம் வெளிச்சத்துக்கு வந்தது. பார்லிமெண்டில் கேள்விக் கணைகள் பறந்தன. அதன் விளைவு 'ஹைபவர் கமிட்டி' கலைக்கப்பட்டு அதன்மேல் ஒரு விசாரணைக் கமிஷன் போடப்பட்டது. 'என்ஸைக்ளோபீடியா' ஆபிஸ் 'கமிட்டி ஹால்' யாவும் பூட்டி ஸீல் வைக்கப்பட்டன. "மலைச்சரிவில் இறந்து போன ஒவ்வொரு பகடர் குடும்பத்துக்கும் பத்தாயிரம் ரூபாய் நஷ்டஈடு தர முடிவு செய்துள்ளேன்" என்று சபையில் அறிவிக்க இருந்த அமைச்சரை உரிய நேரத்தில் அவரது காரியதரிசி எச்சரித்துத் தடுத்தார்.

"சார், பஸ் விபத்துக்கும், ரயில் விபத்துக்கும் இப்படி அறிவிச்சு அறிவிச்சு பழகின பழக்க தோஷத்திலே இதுக்கும் அதுமாதிரி அறிவிச்சுப்பிடாதிங்க. எதிர்க்கட்சிங்க கேலி பண்ணிச் சிரிப்பாங்க! உங்க நஷ்டஈட்டை யாரிட்ட கொடுக்கப் போறீங்க! இனிமே உலகத்திலே பகடர் இனமே கிடையாது. அந்த இனத்திலே கடைசியா மிச்சமிருந்த 24 பேருமே மலைச்சரிவிலே கூண்டோட போயிட்டாங்க" என்று காரியதரிசி ஞாபகப்படுத்தி அமைச்சரைத் தக்க தருணத்தில் காப்பாற்றினார்.

ஆனாலும் அமைச்சர் விடவில்லை.

"இறந்த பகடர் இனத்துக்கு அந்த மலைச்சரிவில் உலகமே வியக்கும் வண்ணம் ஆறு கோடி ரூபாய் செலவில் ஒரு நினைவுச் சின்னம் எடுத்து வரலாறு காணாத உலகப் பெருவிழா நடத்தி அதைத் தொடங்கி வைக்கப் பிரதமரையே அழைக்கப் போகிறோம். பிரதமர் வரமாட்டார் என எங்கள்எதிரிகளிலே யாரும் மனப்பால் குடிக்க வேண்டாம். எங்களுக்காக இல்லாவிடினும் மறைந்த பகடர்களுக்காகப் பிரதமர் அவசியம் வருவார்" என விளாசித் தள்ளினார்.

நாட்டின் பத்திரிகைகள் 'பகடர்' ஹைபவர் கமிட்டி ஊழல்கள் பற்றி விரிவாக வெளியிடத் தொடங்கியிருந்தன. பகடர்கள் எங்கே எப்படி வாழ்கிறார்கள் என்று அறுபது மைல் தொலைவில் இருந்த அவர்களைப் போய்ப் பார்க்காமலே 'பகடர் நல அபிவிருத்திக் கமிட்டி' இங்கிலாந்துக்கும், அமெரிக்காவுக்கும் ஊதாரிப் பயணங்கள் போய் வந்தது பற்றிய சுவையான தகவல்களும், 'என்ஸைக்ளோபீடியா' பற்றி

துணுக்குகளும் பத்திரிகைகயில் 'கவர் ஸ்டோரியாகவும்' ஸ்பேஸ் ஃபில்லர்களாகவும் வெளிவந்தன.

அந்த நிலையில் மறுபடி சிலர் கட்சி மாறியதால் மந்திரி சபை கலைக்கப்பட்டுத் தேர்தல் வந்தது. ஹைபவர் கமிட்டிக்கு வேண்டியவர்களும் தேர்தலில் நின்றார்கள்.

எதிர்க்கட்சிகள் 'பகடர் கமிட்டி' ஊழலைப் பற்றி ஊரூராகப் பிரசாரம் செய்து அதை நியமித்த கட்சியை முறியடிக்க முயன்றனர்.

ஆனால், என்ன துரதிர்ஷ்டம்? பகடர் கமிட்டிக்கு வேண்டிய கட்சியே தேர்தலில் பெருவாரியாக ஜெயித்தது. அது ஆட்சிக்கு வந்ததும் செய்த முதல் வேலையாகப் 'பகடர் கமிட்டி' மேல் நியமிக்கப்பட்ட விசாரணைக் கமிஷனைக் கலைத்தது. கமிட்டி மீண்டும் உயிர் பெற வழி செய்தது.

மீண்டும் 'என்ஸைக்ளோபீடியா' ஆபீஸ் திறக்கப்பட்டது. அதன்பின் பல ஐந்தாண்டுத் திட்டங்கள் தொடர்ந்தன. பகடர் நல அபிவிருத்திக் குழுவும் தொடர்ந்தது. குழுக் கூட்டங்கள் ஏஷியா இண்டர் கான்டினென்டல் ஏ.ஸி. கான்ஃபாரன்ஸ் ஹாலிலேயே தொடர்ந்து நடந்தன. இங்கிலாந்து-அமெரிக்க விஜயங்களும் 'என்ஸைக்ளோபீடியா' சாக்கில் தொடர்ந்தன. என்ஸைக்ளோபீடியா வேலைகள் முடிவற்று நீண்டன.

அவ்வப்போது ஆண்மையை இரவல் வாங்கிப் பின் நிரந்தர நபும்ஸகர்களாகி விடும் பல பத்திரிகைகள் அது பற்றி அடிக்கடி எழுதவும் செய்தன. எதிர்க்கட்சிகள் சீறின.

என்ன செய்தும் பிரயோசனமில்லை! எங்குமே இல்லாத பகடர் இனத்தின் என்ஸைக்ளோபீடியா இன்னும் வெளிவரவும் இல்லை. முடியவும் இல்லை. கமிட்டி கலைக்கப்படவும் இல்லை. செயல் தீவிரப்படுத்தப் பெறவும் இல்லை.

'செத்தும் கொடுத்தான் சீதக்காதி' என்பது போலச் செத்துப் போன பகடர் இனத்தின் பேராலே ஒரு 'ஹைபவர்கமிட்டி' இன்னும் சாகாமல் பயன்பெற்று வாழ்ந்து கொண்டிருந்தது.

ஒரு விஷயத்தை யுகக் கணக்கில் செயல்படவிடாமல் இழுத்தடிக்கக் கமிட்டிகளாலேயே முடியாவிட்டால் பின் வேறு யாரால்தான் முடியப் போகிறது?

**(தினமணிக் கதிர், 30.10.1981)**

## 148. விசிறி

மனத்தில் புழுக்கமாக இருந்த ஒரு வேதனையான சூழ்நிலையில் மிகவும் வேண்டிய நண்பர் ஒருவர் அவளை அறிமுகம் செய்து வைத்தார். அறிமுகம் பதிவதாக அமைந்திருந்தது.

அந்த மன நிலையில், அந்தச் சூழ்நிலையில் அவளுடைய அறிமுகம் இதமாகவும், மனப் புழுக்கத்தைத் தணிப்பதாகவும் இருந்தது. உணர்வில் உல்லாசத்தைக் கலந்தது.

"இவள் மாதவி, கல்லூரியில் படித்துக் கொண்டிருக்கிறாள். உங்கள் விசிறி."

அவளிடமிருந்து மனத்தைக் கிறங்க அடிக்கிற ஒரு புன்னகை, ஒரு கை கூப்பல் ஆகியவை இந்த அறிமுகத்தோடு உடன் நிகழ்ந்தன. அவளே அழகாக இருந்ததால் புன்னகையும் கை கூப்பலும் அந்த அழகை அதிகமாக்கிக் காண்பித்தன.

"ரசிகை என்று செல்லுங்கள். விசிறி என்ற வார்த்தை எனக்கு அவ்வளவாகப் பிடிப்பதில்லை. சினிமா நாடக அன்பர்கள் வேண்டுமானால் அப்படிச் சொல்லிக் கொள்ளட்டும்; இலக்கியத்திற்கு விசிறிகள் வேண்டாம், ரசிகர்கள்தாம் வேண்டும். ரசிகன் கண் மூடித்தனமானவன் இல்லை; ஆனால் விசிறி கண் மூடித்தனமானவன்."

"உங்கள் எழுத்துக்களைப் பொறுத்தவரை இவளும் கண்மூடித்தனமானவள் தான்."

அவருடைய அறிவு இந்தக் கண்மூடித்தனத்தை வெறுத்தது. உணர்வு அதை விரும்பி வரவேற்றது.

"உங்கள் எழுத்துக்களை விமர்சனம் செய்ய முயலுபவர்களோடு செய்பவர்களோடும் கூட இவர் சண்டை போட்டிருக்கிறாள்."

"சண்டைகள் சந்தைகளில் நடக்கலாம். ஆனால், இலக்கியத்தில் எவ்வளவு பெரிய கருத்து வேறுபாடானாலும் அது அபிப்ராய பேதம் என்ற எல்லையைத் தாண்டிச் செல்ல முடியாது; செல்லக் கூடாது."

"உங்கள் மேலுள்ள அபரிமிதமான பிரியத்தின் காரணமாக உங்களை எதிர்ப்பவர்களே இருக்கக் கூடாது என்று நினைக்கிற அளவுக்குப் பிடிவாதம் உள்ளவள் இவள்."

கேட்பதற்குக் கர்வமாக இருந்தது அவருக்கு. அறிவுக்கு உவப்பளிக்காத இந்தக் குருட்டுப் பக்தி - உணர்வுக்கு இதமாக இருந்தது.

அடுத்த தடவை முதலில் அறிமுகப்படுத்திய நண்பர் இல்லாமல் மாதவியே கல்லூரியிலிருந்து வீடு திரும்பும்போது தானாக அவரைத் தேடிக் கொண்டு வந்தாள்.

அவர் எழுதிப் புத்தகமாக வெளிவந்திருந்த புதிய நாவலின் பிரதி ஒன்றைக் கையோடு விலைக்கு வாங்கிக் கொண்டு வந்திருந்தாள்.

"இதில் உங்கள் கையெழுத்து ஒன்று வேண்டும்."

"எல்லாப் புத்தகங்களும் வாங்கி வைத்திருக்கிறீர்களா?"

"உங்கள் புத்தகங்கள் எல்லாவற்றையும் கையெழுத்தோடு சேர்த்து வருகிறேன் இதற்கு முன் உங்களிடம் அறிமுகம் இல்லாமலே பல பொது இடங்களிலும், கூட்டங்களிலும் உங்களிடம் கையெழுத்தை வாங்கியிருக்கிறேன். அறிமுகமான பின் இப்போதுதான் உங்களிடம் நேரில் கையெழுத்து வாங்குகிறேன்."

"வேறு யார் யாருடைய புத்தகங்கள் உங்களுக்குப் பிடிக்கும்?"

"மற்றவர்களுடைய எழுத்துக்களைக் கிடைத்தால் படிப்பேன். படிப்பதோடு விலைக்கு வாங்கி அலமாரியில் சேர்ப்பது உங்கள் எழுத்துக்களை மட்டுந்தான்."

இவள் அப்படிக் கூறியது மிகவும் பிடித்திருந்தது. இப்படி ஒரு பதிலைத்தான் அவர் அவளிடமிருந்து எதிர்பார்த்தார். ஆனாலும் நேர்மாறான சொற்களை அப்போது அவருடைய வாய் பேசியது.

"ஒரு விசிறி கண்மூடித்தனமாக வீர வணக்கம் புரியலாம். ரசிகைக்கு அது கூடாது. ரசனைக்குரிய எல்லாவற்றையும் சமதிருஷ்டியோடு பார்க்க வேண்டும்."

"நான் ரசிகையாக இருக்க விரும்பவில்லை. உங்களுடைய கண்மூடித்தனமான வசிறியாகவே இருக்க விரும்புகிறேன்."

புழுக்கத்தைத் தணித்து இதம் அளிக்கும் தென்றலாக இந்தப் பதில் அவரைக் குளிர்வித்தது.

விமர்சகர்களின் தாக்குதல், எதிரிகளின் புகைச்சல், எழுத்தினால் தொட முடியும் உயரத்தை வாழ்க்கைக் கவலைகளால் இழக்கும் வேதனை. எல்லாவற்றிலிருந்தும் தம்மை மீட்டு ஆசுவாசப்படுத்தும் காற்றை அந்த 'விசிறி' தனக்கு மட்டுமே அளிக்கத் தயாராயிருந்தது என்ற எண்ணமே அப்போது அவர் கர்வப்பட்டுக் கொள்ளக் காரணமாயிருந்தது.

வெளி உலகத்துக்கு ஜனநாயகம், பெருந்தன்மை, சமத்துவம் பொது நோக்கு விருப்பு வெறுப்பின்மை எல்லாவற்றையும் தாராளமாக எழுதுகிற, பேசுகிற பிரமுகன் அத்தனை பேருக்கும் அந்தரங்கமாக இப்படி ஒரு கண்மூடித்தனமான விசிறிதான் தேவை இப்படி விசிறிகளுக்குத்தான் அவர்கள் உள்ளூரத் தவிக்கிறார்கள். இந்த விசிறிகள் தங்களை மட்டுமே குருட்டுத்தனமாக வழிபட வேண்டும் என்ற சர்வாதிகார ஆசைதான் அவர்களைக் கீறிப் பார்த்தவர் உள்ளே தெரியும். ஆனால் வெளியே பேசும்போது "வீர வணக்கம். தனிநபர் வழிபாடு, தனிநபர் ஆதிக்கம் எல்லாம் ஒழிக்கப்பட வேண்டும்" என்று நாகரிகமாகப் பாசாங்கு செய்ய ஒவ்வொருவரும்

கற்றிருக்கிறார்கள். அவரும் அதைக் கற்றிருந்தார். தங்களை மட்டுமே புகழ்கிறவர்கள் மேல் புகழப்படுகிறவர்களுக்கு ஓர் இனிய அக்கறையே ஏற்பட்டு விடுகிறது.

மூன்றாவது முறை அவள் அவரைச் சந்தித்தது அவருடைய அலுவலகத்தில் அவர் ஆசிரியராக இருந்த பத்திரிகைக் காரியாலயத்தில் அவருடைய ஏ.சி. அறையில் அச் சந்திப்பு நடந்தது.

அன்று அவள் வேண்டும் என்றே சாரமில்லாத கேள்விகளாகக் கேட்பதாக அவருக்குத் தோன்றியது.

"கதை கட்டுரைகளுக்குப் பத்திரிகைகளில் எந்த விகிதாசாரத்தில் சன்மானம் கொடுக்கிறீர்கள்?"

"ஒவ்வொரு பத்திரிகை ஒவ்வொரு மாதிரி கொடுக்கிறது. ஒரு காலத்தில் எங்கள் பத்திரிகையில் ஒவ்வோர் இதழிலும் வெளியாகிற சிறந்த கதைக்கு ஒரு பவுன் கொடுத்து வந்தோம். இப்போது பவுன் விலை ஏறிவிட்டது. வருஷத்துக்கு ஒருமுறை மட்டும் மிகச் சிறந்த கதைக்கு ஒரு பவுன் கொடுக்கிறோம்."

"பத்திரிகைகளில் போட்டிகள் வைக்கிறார்களே? போட்டிகளின் மூலம் நல்ல கதைகளோ நல்ல எழுத்தாளர்களோ கிடைப்பதுண்டா?"

"உண்டு என்றும் சொல்வேன், இல்லை என்றும் சொல்வேன். சாதாரணமாக நமக்குத் தபாலில் கிடைக்கும் பிரமாதமான கதைகளும் இருக்கும். பிரமாதமாக அறிவிக்கப்பட்டுச் சாதாரணமான தேர்வைப் பெறும் போட்டிகளும் இருக்கும். போட்டியா? போட்டியில்லையா என்பது அல்ல முக்கியம். எழுதுகிறவனுக்கு எழுத்து என்பது பசியாகவும் தாகமாகவும் அடக்க முடியாத உணர்வாகவும் இருக்க வேண்டும். இல்லாவிட்டால் தேறாது."

பேச்சு இப்படியே தொடர்ந்தது.

அந்த வாரம் வெளியாகியிருந்த அவரது புதிய சிறுகதையைப் பற்றி அவள் ஏதாவது பிரஸ்தாபித்துப் புகழ்வாள் என்று எதிர்பார்த்தார் அவர். அவள் அதைப் பார்த்தாகவோ, படித்ததாகவோ காண்பித்துக்கொள்ளவில்லை. வேறு லௌகீகங்களையே மேலும் விசாரித்துக் கொண்டிருந்தாள்.

அநாவசியமாக அவள் தம்மை எதிர்பார்க்கவும், ஏங்கவும், காக்கவும் வைக்கிறாள் என்று அவருக்குத் தோன்றியது.

"புகழை எதிர்பார்த்து ஏங்கித் தவிக்கும் பழுத்த ஞானிகூட அந்த விநாடிகளில் சாதாரணச் சிறுபிள்ளையாகி விடுகிறான். புகழை எதிர்பார்த்து ஏங்காத சிறுபிள்ளைகூட அந்தக் கணத்திலேயே அந்த விநாடியிலேயே பழுத்த ஞானி ஆகிவிடுகிறான் என்கிற தத்துவம் அவருக்கு ஞாபகம் இருந்துங்கூட அவளுடைய அழகில் இளமை பொங்கும் அந்த விசிறி அவரைக் கோமாளி போலப் பித்துப் பிடித்துப் போகச் செய்திருந்தாள். அவள் விசாரணையிலிருந்து மீண்டும் தம்மைப் புகழ இருக்கும் நிமிஷங்களுக்காகக் காத்திருந்தபடியே அந்தச் சாரமற்ற

விசாரணைகளைப் பொறுத்துக் கொண்டிருந்தார் அவர். அவளோ அவருடைய ஏக்கத்தைப் பற்றிக் கவலைப்படாமலே சாரமற்ற கேள்வியைக் கேட்டாள்.

"உங்களுக்கு ஃபுல்ஸ்கேப் பேப்பரில் எழுதப் பிடிக்குமா? அதையே இரண்டாக மடித்து எழுதப் பிடிக்குமா?"

"பேப்பர் முக்கியம் இல்லை. எழுத வேண்டும் என்கிற உணர்வுதான் முக்கியம். அந்த உணர்வு வரும்போது, முழுத்தாள், அரைத்தாள், ஒன்ஸைட் பேப்பர், எது கிடைத்தாலும் எழுதிவிடுவேன்."

"மூட் வந்தால்தான் எழுதுவீர்களா?"

"செய்ய இயலாமையை நியாயப்படுத்தவும், செய்யத் தவறியவற்றுக்குக் காரணம் கற்பிக்கவும் சினிமாக்காரர்கள் கற்பித்த வார்த்தை அது."

"எங்க காலேஜ் ட்டுடன்ஸ் யூனியனில் கவிதைப் போட்டி என்று வைத்திருக்கிறார்கள். ஒரு வாரமாக எழுத முயற்சி செய்கிறேன், முடியவில்லை."

அவருக்குச் சுரீரென்று தன்னுடைய இயலாமையைச் சொல்வதற்குமுன் அவள் தம்முடைய மனநிலை பற்றி விசாரித்திருக்கிறாள் என்பதையே அவரால் பொறுத்துக் கொள்ள முடியாமல் இருந்தது. அந்த சமப்படுத்தல் அவருக்குக் கொஞ்சம் எரிச்சல் ஊட்டியது. ஆனால் 'விசிறி' என்பதற்காகப் பொறுத்துக் கொண்டார். ஆசை வெட்கமறியாது என்பார்களே? அப்படி வெட்கத்தை விட்டுவிட்டு அவரே அவளைக் கேட்டார்.

"என்னுடைய சமீபத்தியக் கதையை நீங்கள் இன்னும் படிக்கவில்லை போல் இருக்கிறதே!"

"இல்லை; ஒரு வாரமாக வேலை அதிகம். கொஞ்சம் நேரம் கிடைச்சதும் படித்து விடுவேன்."

இந்தப் பதிலும் அவருக்கு அவ்வளவாகத் திருப்தியளிக்கவில்லை. எழுத்துக்களைப் படிப்பதைவிட அவளுக்கு வேறு ஒரு வேலை இருக்க முடியும் என்பதையே அவரால் ஏற்க முடியவில்லை.

முதல் இரண்டு சந்திப்புகளில் அவள் காட்டிய குருட்டுப் பக்தியும் அந்நியோன்யமும் அவரை அப்படி ஆக்கி வைத்திருந்தன. புகழ்கிறவரின் அடிமைத்தனத்தைவிட அபாயகரமானது புகழப்படுகிறவரின் அடிமைத்தனம். புகழப்படுகிறவனே புகழ்கிறவரிடம் அடிமைப்படுவது பரிதாபகரமானது. அவர் அப்போது இப்படிப் பரிதாபகரமான நிலையில் இருந்தார்.

இரண்டு நாட்கள் கழித்து அவள் அவரை நான்காவது முறையாகச் சந்திக்க வந்தாள். அப்போது வெளியில் மழை பெய்து கொண்டிருந்தது.

கையில் ஒரு கற்றைக் காகிதங்களுடனும் பைண்டு செய்த நோட்டுப் புத்தகங்களுடனும் வந்திருந்தாள்.

"தப்பாக எடுத்துக் கொள்ளக்கூடாது. உங்கள் விசிறிக்கு நீங்கள் உதவி செய்யணும்."

"என்ன செய்ய வேண்டும்?"

"இது காலேஜ் போட்டிக்கு நான் எழுதிய கவிதை. இதெல்லாம் நான் பல சமயங்களில் எழுதிய கதைகள், குறுநாவல்கள். சிரமத்தைப் பாராமல் நீங்க கொஞ்சம் படிச்சுத் திருத்திக் கொடுக்கணும்."

பற்றிக் கொண்டு வந்தது அவருக்கு. 'நான் இவளுக்கு புக் ரீடரா என்ன?' என்ற எரிச்சலோடு எண்ணிக் கொண்டே அதை முகத்தில் காட்ட முடியாமல் அசடு வழிய முகமலர்ந்து சிரித்தார். எதிரிகளைவிட விசிறிகள் அபாயகரமானவர்கள் என்று புரிந்தது அவருக்கு. தம்முடைய கதையைப் படித்தது பற்றி அவள் ஏதாவது கூறுவாள் என்று எதிர்பார்த்தது வீணாயிற்று.

அவள் தன் கவிதையை அவர் திருத்திக் கொடுத்து வாங்கிக் கொள்வதற்காகக் காத்திருந்தாள். "மத்ததை எல்லாம் நீங்க அப்புறமாகக்கூடப் படிச்சுக் கொள்ளலாம். கவிதை மட்டும் கொஞ்சம் அவசரம், போட்டிக்குக் கொடுக்கணும்."

கவிதையைப் பிரித்து அவள் முன்னிலையிலேயே படிக்கத் தொடங்கினார்.

'செந்தமிளில் கவிபாட ஸிந்தித்தேன்' என்று கவிதை ஆரம்பமாகியது. 'தமிழ்' என்பதற்கு எந்த எழுத்துச் சரியானது என்பதுகூடத் தெரியாமல் எழுதப் புறப்பட்டுவிட்ட அந்த விசிறியை அவர் ஏறிட்டுப் பார்த்தார். குறை சொன்னால், என் மேல் உங்களுக்குப் பொறாமையா, ஸார்? என்று மேலும் தன்னோடு அவளைச் சமப்படுத்திக் கொண்டு அவமானப்படுத்திக் கொச்சையாக்கிவிடுவாளோ என்று பயமாயிருந்தது அவருக்கு. அதனால் அவளை எதுவும் கேட்கவில்லை.

அது ஏசி அறையாயிருந்தும் வெளியே மழைக் குளிர்ச்சி இருந்தும் திடீரென்று புழுக்கம் அதிகமாவது போல் உணர்ந்து குளிர்ச்சித் திரிப்பானை அதிகமாக்கினார். அவர் முகத்தில் வியர்த்துவிடும் போலிருந்தது.

முதல் தடவையாக விசிறி அருகே இருந்தும் அதிலிருந்து காற்று வராமல் புழுக்கம் மட்டுமே வருவதை உணர்ந்தார் அவர்.

**(கலைமகள், தீபாவளி மலர், 1981)**

## 149. ஞானச் செருக்கு

சமூக சீர்திருத்தவாதியும் பிரமுகருமான சுகவனம் அந்த விஷயத்தில் மிகவும் குரூரமான கொள்கைப் பிடிவாதம் உள்ளவராக இருந்தார். வயது முதிர்ந்தும் பிடிவாதத்தைத் தளரவிடவில்லை அவர்.

எவ்வளவு வேண்டியவர்கள் வீட்டுத் திருமணமாயிருந்தாலும் வரதட்சிணை, சீர்செனத்தி என்று பெண்ணைப் பெற்றவர்களைக் கசக்கிப் பிழியும் கல்யாணங்களுக்கு அவர் போவதில்லை. அப்படி ஒரு விரதம் வைத்திருந்தார். சம்பந்தப்பட்டவர்களே நேரில் வந்து பத்திரிகை கொடுத்து அழைத்தாலும் அத்தகைய திருமணங்களை மதித்துப் போகாமல் புறக்கணித்தார். பெண்ணுரிமை இயக்கத்துக்காக கடந்த முப்பது ஆண்டுகளாக அலுக்காமல் சலிக்காமல் போராடி வந்தார் அவர். இந்தப் போராட்டம் அவரை வெகுஜன விரோதியாக்கி இருந்தது.

"பத்தாயிரம், இருபதாயிரம் என்று விலை கொடுத்து வரதட்சிணைக்கு மாப்பிள்ளை தேடுவது என்பது சந்தையில் காளைமாடு பிடிப்பது போல அநாகரிக-மாக நடந்து வருகிறது. இது சாஸ்திரங்களின் படியும் சரி அல்ல. மனிதாபிமானப்-படியும் சரியல்ல. பெண்ணடிமைத்தனத்தின் அடையாளங்களில் முதன்மையானது வரதட்சிணை" என்று அவர் முழங்கிய மகாநாடுகளும் கூட்டங்களும் கணக்கில் அடங்காதவை. வரதட்சிணை வாங்கிய ஒரு கல்யாணத்தில் மறியல் செய்து ஜெயிலுக்குக் கூடப் போய்விட்டு வந்தார்.

இப்படி அவரும் அவரைப் போன்ற சமூக சீர்திருத்தவாதிகளும் எவ்வளவோ கரடியாகக் கத்தியும் நாடு திருந்திவிடவில்லை. பழக்கங்கள் மாறிவிடவில்லை. அதுதான் அவரைக் கூடச் சற்றே விரக்தியடைய வைத்தது.

"தன் பெண்ணுக்கு வரதட்சிணை கொடுத்து, ரிஸ்ட் வாச்சிலிருந்து பாத்திரம் பண்டம்வரை சகலமும் வாங்கிக் கொடுத்துச் சிரமப்பட்ட ஒரு தாயோ் தந்தையோ, அதை மனத்தில் வைத்துக் கொண்டு தன் பிள்ளைக்கு மணமகளாக வருகிற பெண்ணிடம் கருணையாக நடந்து கொள்வதில்லை. அந்தப் பெண்ணையும் அவளுடைய பெற்றோரையும் கசக்கிப் பிழியவே தயாராயிருக்கிறார்கள். இதை எல்லாம் தவிர்க்க ஒரே வழி படித்த பெண்ணே துணிந்து முன்வந்து 'வரதட்சிணை வாங்கிக் கொள்ளும் எந்த மணமகனையும் நான் திருமணம் செய்து கொள்ள மாட்டேன்' என்று மறுப்பதுதான். இப்படி மறுக்கத் துணியாமல் பெண் ஆணுக்குப் பணிந்து பயந்து போகிறவரை சமூகத்தில் எந்த மாறுதலும் ஏற்படப் போவதில்லை. நாம் எதிர்பார்க்கிற பெண்ணுரிமையும் கிடைக்கப் போவதில்லை" என்று அவர் கூறிய

யோசனையை யாரும் பொருட்படுத்தியதாகத் தெரியவில்லை. உலகம் எப்போதும் போல்தான் நடந்து கொண்டிருந்தது.

"சுகவனத்துக்கென்ன? பிள்ளையா? குட்டியா? ஒன்றும் இல்லை. அவர் என்ன வேண்டுமானாலும் பேசலாம்" என்று அவருக்குக் குழந்தை குட்டிகள் இல்லாததால் தான் அவர் இப்படி எல்லாம் மேடைகளில் முழங்குவதாகச் சிலர் பேசிக் கொண்டார்கள். யார் என்ன பேசினாலும், எப்படிக் கிண்டல் செய்தாலும் பெண்ணுரிமை இயக்கத்திலும், வரதட்சிணை ஒழிப்பு இயக்கத்திலும் அவருடைய தீவிரம் குறையவே இல்லை. வயது முதிர்ந்த பின்னும் அவரைப் பொறுத்தவரை இளமையின் வேகத்துடனேயே செயற்பட்டுக் கொண்டிருந்தார் அவர். அவ்வப்போது சிறு சலிப்பு ஏற்படுவது மட்டும் தவிர்க்க முடியாததாயிருந்தது.

ஒரு சமயம் பக்கத்து வீட்டில் குடியிருந்த சிவன் கோயில் குருக்களின் கடைசிப் பெண் குழந்தையான சிறுமி காமு, தெருவில் பாண்டி விளையாடினாள். அப்போது பாண்டி விளையாட்டுக்கான கட்டங்களையும், கோடுகளையும் ஒரு பையன் காலால் அழித்தான். அவனை நோக்கி ஆத்திரத்தோடு, "உங்க மாதிரி திமிர் பிடிச்ச ஆம்பளைக் கடங்காரங்களோட கொட்டத்தை ஒடுக்கறேன் பாரு!" என்று அவள் பதில் சொன்னதற்காக அவளைப் பாராட்டித் திண்ணையிலிருந்தே கரகோஷம் செய்து சாக்லேட் வாங்கிக் கொடுத்திருந்தார், சுகவனம். பெண்ணுரிமை இயக்கத்தில் அவருக்கு இருந்த வெறி காரணமாக. யார் ஆண்களைத் திட்டினாலும், ஆண்களின் கொடுமையைப் புரிந்து கொண்டு திட்டினாலும், புரியாமலே திட்டினாலும் அவர்களுக்கு அவருடைய பாராட்டுக் கிடைத்தது; பரிசும் கூடக் கிடைத்தது.

"மாமா, இப்ப நீங்க எதுக்காகக் கைதட்டினீங்க? எதுக்காக என்னைக் கூப்பிட்டுச் சாக்லேட் வாங்கித் தர்றீங்க?" என்று அன்றைக்கு அந்த அறியாப் பருவத்துச் சிறுமி காமு கேட்டபோது, "உனக்கு அதெல்லாம் இப்பப் புரியாது அம்மா! உன் மாதிரி ஒவ்வொரு பெண்ணும் நெனைவு தெரிந்து வயசு வந்த பின்பும் அந்த மாதிரி தைரியமா ஒவ்வொரு ஆம்பளைக் கடங்காரனின் கொட்டத்தையும் ஒடுக்கறதுன்னு துணிஞ்சிட்டீங்கன்னா, அன்னியிலேருந்து பெண் குலம் உருப்பட ஆரம்பிச்சுடும்" என்று பதில் சொல்லியிருந்தார் அவர்.

பல வருஷங்களுக்கு முன்பு நடந்தது இது. ஆண்களையும் அவர்கள் கொடுமைகளையும் அஞ்சாமல் எதிர்க்கும் பெண்கள் உருவாக வேண்டும் என்பது சுகவனத்தின் ஆசை. நாடு முழுவதும் ஓடியாடி நகரங்களிலும் சிற்றூர்களிலும், சமயம் வாய்த்த போதெல்லாம் இந்தக் கருத்துக்களைப் பிரசாரம் செய்தார் சுகவனம். பெண்கள் மகாநாடுகளைக் கூட்டி தீர்மானம் போட்டார். என்ன பிரசாரம் செய்தும் பயன் இல்லை. அவருடைய மனைவியே அவரைக் கேலி செய்தாள்.

"உங்களுக்கு எதுக்கு இந்த வம்பெல்லாம்? யார் எப்படி வேணும்னாலும் போயிட்டுப் போகட்டும். குடுக்கிறவா குடுக்கறா, வாங்குக்கிறவா வாங்கிக்கிறா. நீங்க பிரசாரம் பண்ணி யாரும் எதையும் விட்டுட்டதாகத் தெரியலியே!"

"நான் அதைப் பத்திக் கவலைப்படலே. நாடு பூரா என்னுடைய நல்ல கருத்துக்களை விதைக்கிறேன். எங்கேயாவது ஒரு சின்ன விதை தப்பித் தவறி முளைக்காமலியா போயிடப் போறது?"

"எப்படி முளைக்கும்? நீங்க முளைக்கும்னு சொப்பனம் கண்டுண்டு திண்ணையிலே உட்கார்ந்திருக்க வேண்டியதுதான். உங்க சொந்தத் தம்பியே நீங்க புலம்பறதைக் காதுலே போட்டுக்கலியே! அவரோட மூத்த புள்ளை கல்யாணத்துக்கு இருபத்தையாயிரம் கையிலே, வைரத்தோடு, வெள்ளிப்பாத்திரம், முப்பது சவரன் நகை, புள்ளைக்கு ஸ்கூட்டர்னு பெண் வீட்டாரைக் கொள்ளையடிச்சார், போன மாசந்தான் நடந்தது. உங்க தங்கை அடுத்த மாசம் தன் பெண்ணுக்குக் கலியாணம் பண்ணப் போறா. பெண் பி.காம். படிச்சுப் பாங்க்லே ஆபீஸரா இருக்கா. மாசம் ஆயிரம் ரூபாய் வரை சம்பாதிக்கறா. ஆனாலும் உங்க தங்கை அவளுக்குக் கைநிறைய வரதட்சிணையைக் கொடுத்துத்தான் மாப்பிள்ளையைத் தேடப்போறா. உங்க உபதேசங்களை உங்களோட சொந்தத் தம்பி தங்கைகளே கேட்டுக்கத் தயாராயில்லாத போது ஊராரா கேட்கப் போறா?"

அவள் சொன்னவை எல்லாம் உண்மைதான்; மனைவியை மறுத்துப் பேச அவரிடம் எந்த வாதமும் இல்லை.

"நீங்க சொல்ற லட்சியங்களை நீங்களே கடைப்பிடிச்சு மத்தவாளுக்கு முன்மாதிரியா நடந்து காமிக்கலாம்னா உங்களுக்கு பகவான் குழந்தை குட்டிகளையே குடுக்கலை."

மனைவி இதையும் சிரித்துக் கொண்டேதான் சாதாரணமாகச் சொன்னாள். ஆனாலும் அவருக்கு இது உறைத்தது. ஆசார்ய சுவாமிகளிடம் போய் ஆசி பெற்றுத் திருமணம் செய்யும் பெரிய மனிதர்கள்கூட அவருடைய உபதேசங்களான, 'வரதட்சிணை கூடாது, ஆடம்பரங்கள், ஜானவாசம் எல்லாம் வேண்டாம்' என்ற அறிவுரைகளைப் பொருட்படுத்துவதில்லை. வரவரக் கல்யாணம் என்ற புனித உறவு ஒரு வியாபாரம் போல ஆகிவிட்டது. ஆண், பணத்தின் துணையோடு ஒரு பெண்ணைத் தேடிப் போனால் அது பாவமாகவும், குற்றமாகவும் கருதப்படுகிறது. சமூகப் பழிக்கும் இழிவுக்கும் கூட ஆளாகிறது. ஆனால், ஒரு பெண் எத்தனை அழகியாயிருந்தாலும் அவருடைய பெற்றோர் அநியாய விலை கொடுத்துத்தான் அவளுக்குக் கணவனைத் தேட வேண்டியிருக்கிறது. அதை யாரும் பாவமாகவோ குற்றமாகவோ கருதுவதில்லை. சமூகமும் பழிப்பதில்லை.

நினைக்க நினைக்க அவர் மனம் குமுறியது. நாட்டில் ஒரு படித்த பெண்ணாவது இதை எதிர்த்துப் போர்க்கோடி உயர்த்த மாட்டேனென்கிறாளே! சுயமரியாதையுள்ள, மானமுள்ள, ரோஷமுள்ள, ஒரு புதுமைப்பெண்கூட இன்னும் இங்கே பிறக்கவே இல்லையா? ஒரு புருஷனின் துணைக்காகவும் சுகத்துக்காகவும், பாதுகாப்புக்காகவும் பெண் கொள்ளை விலை கொடுப்பது அவளுக்கே உறைக்கவில்லையா?

இவ்வளவு அவமானமும், பணப் பேரமும், தாழ்வும் ஏற்பட்டும் குனிந்த தலை நிமிராமல் இதை எல்லாம் பொறுத்துக் கொண்டு எப்படியாவது புக்ககத்தில்

*நுழைந்துவிடத் தயாராயிருக்கும் பெண்கள் உள்ளவரை இந்நாட்டில் பெண்ணுரிமையாவது வெங்காயமாவது!*

*பெரிய நகரங்களில் பெண்ணுரிமை மகாநாடு என்று போட்டுப் பந்தல் நிறையப் படித்த பெண்களைக் கூடச் செய்து, அவர்களின் உற்சாகமான கரகோஷத்துக் கிடையே முப்பது வருஷமாகத் தாம் முழங்கிய முழக்கங்கள் ஒரு பயனும் அளிக்கவில்லையே எஃறு எண்ணியபோது சுகவனத்துக்கும் தம் மேலேயே வெறுப்பாயிருந்தது; கோபம் கோபமாக வந்தது.*

**“நிமிர்ந்த நன்னடை**
**நேர்கொண்ட பார்வையும்**
**நிலத்தில் யார்க்கும்**
**அஞ்சாத நெறிகளும்**
**நிமிர்ந்த ஞானச்**
**செருக்கும் இருப்பதால்**
**செம்மை மாதர்**
**திறம்புவ தில்லையாம்”**

*என்று பாடிய மகாகவி பாரதியின் புதுமைப் பெண் ஒருத்தியை இந்த இருபதாம் நூற்றாண்டில் தமது எழுபதாவது வயதில் கூட அவரால் எங்கும் காணமுடியவில்லை. மிகவும் ஏமாற்றமாயிருந்தது அவருக்கு. முதுமையும் மனத்தளர்ச்சியும் அவரைப் படுக்கையில் தள்ளி விட்டன. கூட்டங்களுக்குப் போவது குறைந்தது. பெண் விடுதலை, பெண்ணுரிமை பற்றி முழங்கி வந்த அவர், தமது கொள்கைகளில் எந்தத் தவறும் இல்லை என்று இன்னும் திடமாக நம்பினாலும் நாட்டில் அந்தச் சிந்தனைகள் அறவே முளைக்க மறுப்பதை எண்ணி வெதும்பினார். பன்னிரண்டு வருஷங்களுக்கு முன்னால் துடுக்குத்தனம் நிறைந்த பேதைச் சிறுமியாயிருந்த போது, ‘உங்க மாதிரி ஆம்பிளைக் கடங்காரங்களோட கொட்டத்தை ஒடுக்கறேன் பாருடா!’ என்று ஒரு பையனைப் பார்த்துச் சவால் விட்ட பக்கத்து வீட்டுக் குருக்களின் பெண்ணுக்கு இப்போது கல்யாண வயது. காமு படித்து ஒரு தனியார் கம்பெனியில் வேலை பார்த்தாள். மாதச் சம்பளம் அறுநூறு வந்தது. ஆனாலும் அவளுக்குத் திருமணம் ஆக முடியவில்லை. கிட்டத்தட்ட ஐம்பதினாயிரம் ரூபாய் வரை தேவைப்பட்டது. பாவம்! குருக்கள் அவ்வளவு தொகைக்கு எங்கே போவார்? சிரமப்பட்டார்; திணறினார்.*

*அதை எல்லாம்விட வேடிக்கை; படித்துப் பட்டம் பெற்றும் தங்கள் பையனுக்கு வேலை கிடைக்காததால் பெண் வேலை பார்க்கிறாள், பையன் வேலை கிடைக்காமல் சும்மாயிருக்கிறான் என்று கேவலமாகப் பேசுவார்கள். ஆகவே, கல்யாணத்துக்கு முன்னால் பெண் வேலையிலிருந்து விலகிவிட வேண்டும் என்று குருக்களிடம் நிபந்தனை போட்டிருக்கிறார் ஒரு தந்தை. அது ஒன்று மட்டும் நிபந்தனை அல்ல. கையில் ரொக்கம் பத்தாயிரம், இருபது சவரன் நகை, வைரத்தோடு. பாத்திரம் பண்டங்கள் என்று செலவுள்ள பெரிய பட்டியல் வேறு!*

படித்து வேலை பார்க்கத் துப்பில்லாத பையனுக்காக இவ்வளவு சீர் செனத்திகளும் பண்ணி, ஏற்கனவே தான் பார்த்துக் கொண்டிருக்கிற வேலையையும் விட்டுவிட்டுத் திண்டாடக் காமு தயாராயில்லை. அந்த ஏற்பாடு பிடிக்காததால் கல்யாணம் தட்டிப் போயிற்று. சில பையன்கள் சம்பாதிக்கிற, வேலை பார்க்கிற பெண்தான் வேண்டுமென்று வந்தார்கள். ஆனால், பெண் சம்பாதிக்கிறாள் என்பதற்காக வரதட்சிணை, இருபது சவரன் வகையறாக் கோரிக்கைகளில் எதையும் அவர்கள் குறைத்துக் கொள்ளத் தயாராயில்லை.

இந்த விவரங்களை எல்லாம் மனைவி மூலந்தான் அறிந்து கொண்டார் சுகவனம். அவரைப் பொறுத்தவரை வெளி நடமாட்டமே இல்லாமற் போயிற்று. படுக்கையோடு படுக்கையாகக் கிடக்கும் நோயாளியாகி விட்டார் அவர்.

இப்படிப் பக்கத்து வீட்டுக்குச் சுமார் ஆறு மாத காலத்தில் பத்துப் பன்னிரண்டு பேர் வந்து பார்த்துத் தட்டிப் போயிற்று. 'காமுவுக்கு ராசியில்லை' என்று கெட்ட பேர் வேறு உண்டாகி விட்டது. படித்த பெண்ணாகிய காமுவுக்கு எரிச்சல் எரிச்சலாக வந்தது. தடியன் தடியனாக ஆண்பிள்ளைகள் பெற்றோர், சகோதர சகோதரிகளுடன் வந்து இனிப்பு, காரம், காபி சாப்பிட்டுவிட்டுத் தாறுமாறாகக் கேள்வி கேட்டு விட்டுப் பாட்டுப் பாடச்சொல்லி ரசித்துவிட்டுப் போவது ஒரு நடைமுறையாகி விட்டது.

கண்காட்சியில் விற்பனைக்கு ஊதுவத்திக் கடை வைப்பது போல் இந்தியப் பெண்கள் ஆகிவிட்டார்களே! எவன் வேண்டுமானாலும் வந்து மோந்து பார்த்துப் பேரம் கூடப் பேசிவிட்டு வாங்காமலே போய்விட வசதி இருந்தது. காமு உள்ளூர மனம் குமுறினாள்; கொதித்தாள்.

பதின்மூன்றாவது ஆளாக அன்று இன்னொரு பிள்ளை பார்க்க வரப்போவதாகக் குருக்கள் சொல்லியிருந்தார். அலுவலகத்தில் அரை நாள் லீவு போட்டுவிட்டுப் பிற்பகலிலேயே வீடு வந்துவிட்டாள் காமு. தாய் காமுவைச் சிங்காரித்தாள். பெண் பார்க்கும் நாடக விழாவுக்குத் தயாராக்கினாள். இனிப்பு, காரம், காபி எல்லாம் தயாராயின.

பிளட்பிரஷர், பலவீனம், அசதி எல்லாமாகச் சேர்ந்து அன்று சுகவனத்தை மிகவும் தளரச் செய்திருந்தன. அடித்துப்போட்டது போல் படுக்கையில் கிடந்தார். வீட்டுக்கு வெளியே நடமாட்டம் இல்லாது போய் மாதக் கணக்காகிவிட்டது.

மாலை ஏழுமணி இருக்கலாம். படுக்கையருகே யாரோ விசும்பி விசும்பி அழும் ஒலி கேட்டு சுகவனம் கண்விழித்தார்.

நன்றாக அலங்கரித்த கோலத்தில் பக்கத்து வீட்டுக் குருக்களின் மகள் காமு கண்ணீரும் கம்பலையுமாக நின்று கொண்டிருந்தாள்.

"மாமா, நீங்கதான் என்னைக் காப்பாத்தணும், அப்பா என்னை அடிக்க வரா..."

"ஏன்? நீ என்ன தப்புப் பண்ணினே?"

"ஒரு தப்பும் பண்ணலே மாமா! இன்னிக்குச் சாயங்காலம் என்னை ஒருத்தன் பெண் பார்க்க வந்தான். அவனோட அப்பா அம்மாவும் கூட வந்திருந்தா, எல்லாம் முடிஞ்சு வரதட்சிணை பேரம் பேசறப்போ ஒரு ஸ்கூட்டர் கண்டிப்பா வாங்கித் தரணும்னு அந்தப் பையனே வற்புறுத்தினான்.

'இப்ப உடனே முடியாது. கலியாணம் ஆகட்டும், ஆடிக்கு அழைக்கறப்ப ஸ்கூட்டர் விஷயம் கவனிக்கிறேன்'னு அப்பா பணிவாகக் கெஞ்சிப் பார்த்தார்.

அவன் கேட்கலே. இப்பவே வாங்கியாகணும்னு பிடிவாதம் புடிச்சான். இந்தக் கல்யாணத்தையே, அப்பா பரம்பரை பரம்பரையா ஆண்டு அனுபவிச்ச வீட்டை விலைக்கு வித்துத்தான் பண்ணப் போறார். அதுலே ஸ்கூட்டரும் சேர்ந்ததுன்னா அவராலே தாங்க முடியாது. என்னோட போகலே. இன்னும் எனக்கு ரெண்டு தங்கைகள் வேறே இருக்கா, எங்க வீட்டிலே.

நிலைப்படி ஓரமா நின்னு இந்தப் பேரத்தைக் கவனிச்சிண்டிருந்த எனக்கு ஆத்திரம் ஆத்திரமாக வந்தது. நானும் எவ்வளவோ அடக்கிப் பார்த்தேன். முடியலை. திடீர்னு முன்னாலே போய் நின்னு, 'அப்படீன்னா நீ ஸ்கூட்டரையே தாலி கட்டிக் கல்யாணம் பண்ணிக்கோடா! எனக்குத் தாலி கட்ட வேண்டாம். போடா வெளியிலே!' என்று கூப்பாடு போட்டு அவர்களை எல்லாம் துரத்திட்டேன்.

'காரியத்தைக் கெடுத்திட்டியேடி பாவி! நான் கடனோ உடனோ வாங்கி ஸ்கூட்டரைக் குடுத்துட்டுப் போறேன். நீ ஏண்டி குறுக்கே வந்து பேசினே?' என்று அப்பா கையை ஓங்கிண்டு என்னைத் துரத்தறார். நீங்களே சொல்லுங்கோ நான் செஞ்சது தப்பா மாமா?"

"ஒரு தப்பும் நீ பண்ணலே, குழந்தை. நீ பண்ணினதுதான் சரி. உன்னை, இதுக்காக மனப்பூர்வமாப் பாராட்டறேன், இந்தா, இதை வச்சுக்கோ" என்று படுக்கைக்கு அருகே ஸ்டூலில் இருந்த பழக்கூடையிலிருந்து ஆப்பிள் ஒன்றை எடுத்துக் காமுவிடம் கொடுத்தார் சுகவனம்.

அவள் பல வருடங்களுக்கு முன்னால் பேதைப் பருவத்துச் சிறுமியாகத் தெருவில் பாண்டி விளையாடும்போது, 'உன்னை மாதிரி ஆம்பிளைக் கடங்காரங்களோட கொட்டத்தை ஒடுக்கறேனா இல்லையா பாரு!' என்று ஒரு பையனிடம் சவால் விட்டபோது கரகோஷம் செய்து சாக்லேட் வாங்கியளித்து அவளைப் பாராட்டிய அதே உற்சாகத்தோடு இப்போதும் படுக்கையில் எழுந்து உட்கார்ந்தார் சீர்திருத்தவாதி சுகவனம்.

அப்போது அவருடைய மனைவி அவருக்குக் காபி கொடுக்க வந்தாள். சுகவனத்துக்கு மகிழ்ச்சி பிடிபடவில்லை. ஒரே உற்சாக மயம்.

"இதோ பாருடீ காமுவை! நான் தூவிய சிந்தனை விதைகள் எங்குமே முளைக்கலேன்னியே, இங்கே பக்கத்திலேயே முளைச்சிருக்குடி. ஸ்கூட்டர் வாங்கித் தந்தால்தான் தாலி கட்டுவேன்னு சொன்ன பேடிப் பயலைப் பார்த்து, 'நீ

ஸ்கூட்டரையே கட்டிக்கோ; போடா'ன்னு மூஞ்சியிலே துப்பிட்டு வந்திருக்கா" என்று மனைவியிடம் காமுவை வியந்து பாராட்டினார். அவர் மனைவி வருத்தப்பட்டாள்.

"ஐயையோ! திமிர் பிடிச்ச பொண்ணுன்னு, கண்டபடி யாரையும் எதிர்த்துப் பேசும்னு கெட்ட பேராயிடப் போறதே!"

"போடீ பைத்தியம்! இது திமிர் இல்லே. இந்தியப் பெண்களுக்கு இப்படி ஒரு ஞானச் செருக்கு வரணும்னு தான் அன்னிக்கே பாரதியார் ஏங்கினார். நானும் ஏங்கினேன். பாரதியாரை விட நான் அதிர்ஷ்டசாலிடி! இதோ என் கண் முன்னாலேயே அப்படி ஒரு பெண்ணை நான் நேரே பார்த்தாச்சு" என்று கூறியபடியே காமுவின் பக்கம் திரும்பி, "நீ கவலைப்படாதே, குழந்தை! பெண்மையின் சுதந்திர உணர்வுகளைப் புரிந்து கொண்டு மதிக்கும் உண்மையான நல்ல ஆண்பிள்ளை ஒருவனைத் தேடி உனக்கு நானே கல்யாணம் பண்ணி வைக்கிறேன்" என்று உறுதியளித்தார் சுகவனம்.

"ராத்திரிக்குக் கஞ்சியா? கேப்பைக் களியா?" என்று அவருடைய இரவு உணவைப் பற்றி விசாரித்தாள் மனைவி.

"ரெண்டுமே வேண்டாம். வடை பாயாசத்தோடு சமையல் பண்ணு. உடனே இதைக் கொண்டாடியாகணும்" என்று காமுவை நோக்கிப் புன்னகை புரிந்தபடி மனைவிக்கு மறுமொழி கூறினார் சுகவனம்.

**(கலைமகள், தீபாவளி மலர், 1982)**



## 150. கூபே

**ம**ந்திரி தம்முடைய தனி உதவியாளரைக் கூப்பிட்டு மிகவும் அக்கறையாக விசாரித்தார்.

"முதல் வகுப்பில் கூபே கம்பார்ட்மெண்ட் கிடைத்தால்தான் இன்று ரயிலில் பயணம், இல்லையானால் இரயில் பயணத்தைக் கேன்ஸல் செய்துவிட்டு, பிளேனில் டிக்கெட் வாங்குங்கள்!"

"கண்டிப்பாக 'கூபே' கிடைத்துவிடும் சார்! எப்படியும் எமர்ஜென்ஸி கோட்டா ரிலீஸ் செய்யப் போகிறார்கள். இன்னிக்குக் 'கூபே'க்கு ஏகப்பட்ட டிமாண்ட் என்கிறார்கள். ஆனாலும் நமக்கு உறுதியாகக் கிடைக்கும்."

"கூபே கிடைக்காவிட்டால் பிரயாணமே இல்லை! ஞாபகமிருக்கட்டும்."

"கவலையே வேண்டாம்; பிரயாரிட்டி இருக்கிறது, கட்டாயம் கிடைத்துவிடும்."

"அவசரமாகப் பார்ப்பதற்கு ஏகப்பட்ட ஃபைல் எல்லாம் கட்டி வைத்திருக்கிறது. எல்லாமே அவசரம். பொது முதல் வகுப்புப் பெட்டியில் வைத்து ஃபைல் பார்க்க முடியாது. கூபேயானால் தூக்கம் வருகிறவரை உங்கள் உதவியோடு ஃபைல்களை 'டிஸ்போஸ்' செய்துவிட முடியும்."

"நீங்கள் வற்புறுத்தி சொல்ல வேண்டிய அவசியமே இல்லை. பெண்டிங் பேப்பர்ஸ் எல்லாம் டிஸ்போஸ் ஆக வேண்டும் என்பதில் எனக்கே அதிக அக்கறைதான் சார் -"

"சிரமமாயிருந்தால் நானே இரயில்வே டிவிஷனல் ஆபிஸருக்கோ சூப்பிரண்டெண்டுக்கோ ஃபோன் செய்யத் தயார்."

"ஏற்கனவே உங்கள் பெயரைச் சொல்லி அவர்களுக்கெல்லாம் நானே டெலிபோன் செய்தாயிற்று."

"சீஃப் செகரட்டரி மூலமாகவும் சொல்லலாம்."

"அவரும் பிரஷர் கொடுத்திருக்கிறார்."

"சுலபமா காலையில் பிளேனில் போயிடலாம். ஓவர் நைட் ஜர்னி எல்லாம் நான் ரயிலிலேயே வைத்துக்கொள்வதற்கு ஒரே காரணம், பெண்டிங் ஃபைல் டிஸ்போஸ் செய்யலாம் என்பது தான். வீட்டிலானாலும் செகரடேரியட்டிலானாலும் பார்க்க வருகிறவர்களின் கூட்டம் மொய்க்கிறது. ஒரு வேலை நடப்பதில்லை. பிளேனில் ஃபைல் பார்க்க முடியாது."

உதவியாளருக்கு மந்திரியின் சுபாவம் நன்கு தெரியும். முக்கியமான பைல்களும், பெண்டிங் பேப்பர்களும் இரயில் பயணத்தின்போதுதான் தீர்மானமாகும். பயணத்துக்கு எப்படியும் 'கூபே' கம்பார்ட்மெண்ட் ஏற்பாடு செய்தாக வேண்டும். இல்லாவிட்டால் தொலைந்தது. மந்திரி எதை வேண்டுமானாலும் தியாகம் செய்துவிடுவார். இரயிலில் பயணம் செய்ய நேரும்போது 'கூபே'யை மட்டும் அவரால் தியாகம் செய்ய முடியாது; தியாகம் செய்ய விரும்பவும் மாட்டார்.

அன்றோ எக்கச்சக்கமான நிலைமை, கவர்ன்மெண்ட் கோட்டா ஏறக்குறைய தீர்த்துபோய் விட்டிருந்தது. அவரது அந்தஸ்திலுள்ள வேறு பல பிரமுகர்களும் வி.ஐ.பி.களும் அதே இரயிலில் பயணம் செய்தார்கள். மொத்த இரயிலிலும் கூபே இணைத்த பெட்டிகள் ஒன்றோ இரண்டோ தான் இருந்தன.

கூபே அலாட் ஆகவில்லை என்றால் இரயில்வே பிளாட்பாரத்திலேயே இரைந்து கூப்பாடு போட்டுவிட்டுப் பயணத்தை ரத்து செய்து வீடு திரும்பவும் அவர் தயங்கமாட்டார் என்பது பி.ஏ.வுக்கும் செக்யூரிட்டி அதிகாரிக்கும் நன்கு தெரியும். பலமுறை அப்படித்தான் நடந்திருக்கிறது.

முன்பு எப்போதோ ஒருமுறை கோபத்தில் 'கூபே'க்கு ஏற்பாடு செய்யத் தவறிய ஓர் உதவியாளரை வேலையிலிருந்தே சஸ்பெண்ட் செய்திருக்கிறார் அவர். அவருடைய முன்கோபமும் ஆத்திரமும் பிரசித்தி பெற்றவை. தமது அதிகார வரம்புக்கு அப்பால் இருப்பவர்கள் என்று பாராமல் இரயில்வேக்காரர்களைக்கூட வாட்டி எடுத்துவிடுவார் அவர். கோபத்தில் கண்மண் தெரியாது அவருக்கு.

மாலை ஏழேகால் மணிக்கு இரயில் புறப்படுகிறது என்றால் ஆறரை மணிக்கே மந்திரியின் உதவியாளரும் செக்யூரிட்டி அலுவலரும் ஸ்டேஷனுக்கு வந்து விட்டார்கள். ஃபைல்கள் அடங்கிய அரசாங்கப் பெட்டிகளும் வந்துவிட்டன. மந்திரி ஏதோ ஒரு திறப்பு விழாவுக்காகப் போய் இருந்தார். விழாவை முடித்துக்கொண்டு அங்கிருந்தே நேராக இரயில் புறப்படுகிற நேரத்துக்கு ஸ்டேஷனுக்கு வந்துவிடுவதாக ஏற்பாடு.

ஆனால், அன்று மிகவும் சோதனையாகிவிட்டது. பி.ஏ.வுக்கும் செக்யூரிட்டி அலுவலருக்கும் என்ன செய்வதென்றே தெரியவில்லை. அந்த இரயிலின் பதினேழு பெட்டிகளிலுமாக நாலைந்து முதல் வகுப்புப் போகிகள்தான் இருந்தன. அதில் மூன்றே மூன்று 'கூபே'கள்தான் உண்டு. ஒரு 'கூபே' மத்திய உதவி மந்திரி ஒருவருக்கு அலாட் ஆகியிருந்தது. அதை ஒன்றும் செய்ய முடியாது. மற்றொரு 'கூபே' இரயில்வே போர்டில் மிகவும் செல்வாக்குள்ள உறுப்பினர் ஒருவருக்கு அலாட் ஆகியிருந்தது. மூன்றாவது 'கூபே'தான் தனியாருக்கு அலாட் ஆகியிருந்தது. அன்றுதான் திருமணம் முடிந்து தேனிலவுக்கு வெளியூர் புறப்படும் புதுமணத் தம்பதிகளுக்காக அந்தக் 'கூபே' ஏற்பாடாகி இருந்தது.

இரயில் புறப்பட இருபது நிமிஷம்தான் இருந்தது, அந்தப் புதுமணத் தம்பதிகள் 'கூபே'யில் வந்து அமர்ந்தும் விட்டார்கள். இன்னும் மந்திரி வரவில்லை. பி.ஏ.யும் அதிகாரிகளும் காத்திருந்தனர்.

மந்திரிக்காக ஏதாவது செய்வதாயிருந்தால் புதுமணத் தம்பதிகள் வந்து அமர்ந்திருக்கும் இந்த மூன்றாவது 'கூபே'யைத்தான் மாற்ற வேண்டியிருக்கும் என்றும், மத்திய உதவி மந்திரி, இரயில்வே போர்டு அங்கத்தினர் ஆகியோருக்கு ஒதுக்கப்பட்டிருக்கும் 'கூபே'யை எதுவும் செய்ய முடியாது என்றும் இரயில்வேக்காரர்கள் கையை விரித்துவிட்டார்கள். புதுமணத் தம்பதிகளுக்கு வழியனுப்ப வந்தவர்கள் போட்ட ரோஜா மாலைகள் கூபேயை நிரப்பிக் கொண்டிருந்தன. பிளாட்பாரத்தின் அந்தப் பகுதியெல்லாம் ரோஜா இதழ்கள் சிதறிவிட்டன. ஒரே கூட்ட மயம். உற்சாகச் சிரிப்புகள், ஜோக்குகள்.

அவர்களை எப்படி 'டிஸ்டர்ப்' செய்வதென்று தெரியாமல் இரயில்வே அதிகாரிகள் தயங்கினர்.

"இந்த மந்திரிங்களாலே எப்பவுமே தொந்தரவுதான் சார்! கடைசி நிமிஷத்திலே வந்து கழுத்தை அறுப்பாங்க..." என்று துணிந்து சொன்னார் ஒரு இரயில்வே அதிகாரி.

அந்தப் புதுமணத் தம்பதிகளைத் தவிர உற்சாகமாக அவர்களை வழியனுப்ப வந்திருக்கும் உறவினர்களிடமும் வாங்கிக் கட்டிக் கொள்ள வேண்டியிருக்குமே என்று இரயில்வே அதிகாரிகள் பயந்தார்கள்.

"கூபே ஏற்பாடு செய்யவில்லை என்றால் மந்திரி என்னைத் தொலைத்துவிடுவார்" என்றார் பி.ஏ. உடனே அந்தப் புதுமணத் தம்பதிகளிடம் போய் அவர்களுக்குக் கூபே கிடையாது என்றும் முதல் வகுப்பில் இரண்டு லோயர் பெர்த்துக்கள்தான் கிடைக்கும் என்றும் தெரிவிக்கப்பட்டது.

அவர்கள் தங்களுக்கு ரிசர்வ் ஆகியிருப்பதைச் சொல்லி இரைந்தார்கள். வெளியே வழியனுப்ப வந்திருந்த உறவினர்களும் கூப்பாடு போட்டார்கள்.

"என்னய்யா அக்கிரமம் இது? ரிஸர்வ் ஆகி 'சார்ட்'ல கூடப் பேர் போட்டப்புறம் இடத்தைத் தட்டிப் பறிக்கிறார்களே? மந்திரின்னா என்ன கொம்பா முளைச்சிருக்கு! நாங்க சொந்தக் காசிலே செலவழிச்சுப் பிரயாணம் செய்யறோம். மந்திரியைப்போல அரசாங்கச் செலவிலே பிரயாணம் பண்ணலே. மந்திரிக்கு ஒரு நியாயம் ஜனங்களுக்கு ஒரு நியாயமா?"

இந்தக் குழப்பத்துக்கு நடுவே மந்திரி பிளாட்பாரத்துக்கு வந்து விட்டார். பதவியில் இருப்பவர்களுக்கே உரிய சுறுசுறுப்புடன் உடனே சுற்றி நடப்பதைப் புரிந்து கொண்டு உஷாராகிவிட்டார். பி.ஏ.யும் அருகில் வந்து காதோடு நிலைமையை விவரித்தார்.

ஒன்றுமே செய்ய முடியாதபடி ஒரு கையாலாகாத நிலை உருவாகும்போது அதையே ஒரு தியாகமாக மாற்றிக் காண்பித்துவிடும் தேர்ந்த அரசியல்வாதியின் சாமர்த்தியத்தைக் கையாண்டு விரைந்து செயல்பட்டார் மந்திரி.

மந்திரிக்குத் திறப்பு விழாவில் போட்டிருந்த இரண்டு சந்தன மாலைகளும் அவர்கள் வழங்கியிருந்த இரண்டு ஆப்பிள்களும் கைவசம் இருந்தன. கூடவே

வந்திருந்த இரண்டொரு பத்திரிகை நிருபர்களும் புகைப்படக்காரர்களும் உடனிருந்தார்கள்.

மந்திரி திடீரென்று ஒரு ஸ்டண்ட் அடித்தார். கூபே கம்பார்ட்மெண்டில் நுழைந்து சந்தன மாலைகளை அந்த ஊர் பேர் தெரியாத மணமகனிடம் அளித்துத் தம்பதிகளை மாலை மாற்றிக் கொள்ளச் செய்தார். இருவரிடமும் கைவசம் இருந்த ஆப்பிள் பழங்களைக் கொடுத்து வாழ்த்தினார். உடனிருந்த நிருபர் ஒருவர் அதைப் புகைப்படம் எடுத்துக் கொள்ள முடிந்தது.

"உங்களைப் போன்ற மணமக்களுக்கு இடையூறாக நான் வரவிரும்பவில்லை. என் பயணத்தை நான் உங்களுக்காகவே இரத்துச் செய்கிறேன். இந்த 'கூபே'யை நீங்களே வைத்துக் கொள்ளுங்கள். முப்பது வருஷங்களுக்கு முன் திருமணமான முதல் இரவிலேயே இரயிலில் இடவசதி கிடைக்காத காரணத்தால் நானும் என் இளம் மனைவியும் மூன்றாம் வகுப்புப் பெட்டியில் 'பாத்ரூம்' ஓரமாக வராந்தாவில் ஒண்டி ஒதுங்கிப் பயணம் செய்த அந்தக் கொடுமையான அனுபவத்தை நான் இன்னும் மறந்துவிடவில்லை.

"அப்படி ஒரு துயரம் உங்களுக்கு இன்று நேர நான் காரணமாகி விடக்கூடாது. நீங்கள் மகிழ்ச்சியாகத் தேனிலவு சென்று வாருங்கள்" என்று கண்களில் நீர் பனிக்கக் கூறினார். இரயில் கம்பார்மெண்டில் உள்ளே வெளியே கூடியிருந்த அனைவரும் ஒரு நிமிஷம் அப்படியே உருகிப் போய் விட்டார்கள்!

கையிலிருந்து தவறிக் கீழே விழுந்துவிட்ட ஆப்பிளை எடுக்க மணமக்கள் இருவரும் ஒரே சமயத்தில் குனியவும் விழுந்த ஆப்பிள் மந்திரியின் காலடிக்கு ஓடி உருளவும் சரியாயிருந்தது. மணமக்கள் மந்திரியைக் காலில் விழுந்து வணங்குவதுபோல் தோன்றிய அந்தக் காட்சியைப் புகைப்பட நிபுணர் கச்சிதமாகப் படம் பிடித்துக் கொண்டார்.

மறுநாள் காலைப் பத்திரிகைகளில் எல்லாம் மந்திரியின் தியாகம் முதல் பக்கத் தலைப்புச் செய்தியாகிவிட்டது. தடபுடல் பட்டது.

'மந்திரியின் தியாகம்! பெருந்தன்மையோடு தமக்கு ஒதுக்கப்பட்ட 'கூபே' கம்பாட்மெண்டைத் தேனிலவு செல்லும் புதுமணத் தம்பதிகளுக்கு விட்டுக்கொடுத்து விட்டு வீடு திரும்பினார். மணமக்கள் ஆசி கோரி அமைச்சரைக் காலில் விழுந்து வணங்கினர். முப்பது வருடங்களுக்கு முன்பு தமது சொந்தத் தேனிலவுப் பயணத்தில் ஏற்பட்ட சிரமத்தை நினைத்து அமைச்சர் கண்ணீர் சிந்தினார்.'

என்பதுபோல் புகைப்படங்களுடன் தலைப்புச் செய்திகள் வெளியாகியிருந்தன. கீழே விழுந்த ஆப்பிளை எடுக்க மணமக்கள் குனிந்தது காலில் விழுந்து வணங்கிய படமாகப் பிரசுரிக்கப்பட்டிருந்தது. உண்மையில் புதுமணத் தம்பதிகளுக்கென்று ஒதுக்கப்பட்டிருந்த 'கூபே'யைத் தட்டிப் பறிக்க மந்திரி முயன்றதும், அது பலிக்காத போது வேறு வழியில்லாமல் தியாகியாகியதையும் பற்றி ஒரு பத்திரிகை கூட மூச்சு விடவில்லை.

புதுமணத் தம்பதிகளுக்கும் அவர்களை வழியனுப்ப வந்திருந்தவர்களுக்கும் கூட உண்மை மறந்து போய் மந்திரி தியாகம் செய்தது போலத்தான் நினைவிருந்தது. பி.ஏ., செக்யூரிட்டி அலுவலர், இரயில்வே ஆட்கள் எல்லாருமே அமைச்சரின் சமயோசித திறமையை வியந்து பிரமித்துப் போயிருந்தார்கள்.

இரண்டு மூன்று தினங்களுக்குப் பிறகு ஒருநாள் மாலை வேளையில் மந்திரி தம் வீட்டில் ஓய்வாக இருந்தபோது அவருக்குக் காப்பி ஆற்றிக் கொடுத்துக் கொண்டே அவருடைய மனைவி அவரைக் கேட்டாள் :

"ஏங்க, இதென்ன பச்சைப் பொய்? நம்ம கலியாணம் நடந்த இலுப்ப மரத்துப்பட்டியிலே ரயிலே கிடையாதே? கலியாணம் முடிஞ்சு அங்கிருந்து கிளம்பறப்பக் கூட நம்ம ரெண்டு பேரும் ரெட்டை மாட்டு வண்டியில தானே உங்க கிராமமான கும்மத்தான் பூண்டிக்குப் போனோம்? என்னமோ ரயிலு, தேனிலவு அது இதுன்னு எல்லாம் பேப்பர்ல நீங்க பாட்டுக்கு அடிச்சு விட்டிருக்கீங்களே?"

"சரி! சரி! உன்னை யாரும் கேட்கலே இப்போ! வாயை வெச்சுக்கிட்டுச் சும்மா கிட" என்று கடுமையாக இரைந்து அவளைக் கோபித்துக் கொண்டார் மந்திரி.

**(கல்கி, தீபாவளி மலர், 1982)**



## 151. ஊமைக் காயம்

அவளுடைய நூறாவது பட விழாவைக் கொண்டாட ஊரெல்லாம் ஆளுயரச் சுவரொட்டிகள் ஒட்டப்பட்டிருந்தன. பத்திரிகைகளில் அவளுடைய படங்கள், திரை உலக வரலாறு, துணுக்குகள், பெட்டிச் செய்திகள் எல்லாம் பெரிதாக அமர்க்களப்பட்டன.

நகரின் எல்லாத் திரையரங்குகளிலும் அவள் நடித்த படங்களில் ஏதாவது ஒன்று சிறப்பாக ஓடிக் கொண்டிருந்தது. எங்கும் அவள் மயமாயிருந்தது.

அந்த ஞாயிறன்று டெலிவிஷனில் சிறப்பு நிகழ்ச்சியாக அவள் நடித்த மிகச் சிறந்த படங்களின் தொகுப்புச் சித்திரம் ஒன்றை ஒளிபரப்ப ஏற்பாடு நடந்தது.

தினசரிகளும், வார இதழ்களும், பளீரென்று கவர்ச்சியாய்க் காட்சி அளித்த சினிமா இதழ்களும் டீப்பாயில் குவிந்து கிடந்தன. எல்லாவற்றிலும் அவள் படங்கள், புகழ்மாலைகள், சிறப்புக் கட்டுரைகள் சாதனையின் பெருமிதத்தில் மகிழ்ச்சி பொங்கித் ததும்பியது. அவள் களிப்பின் நிறைவில் இருந்தாள்.

"நடிகையர் ரத்தினம் குமாரி கலாதேவிக்குத் திருமணம் ஆகவில்லை என்றாலும் அவர் கலையையே மணந்து வாழ்க்கைப் பட்டிருப்பது, அவர் நடித்திருக்கும் இந்த நூறு படங்களிலிருந்து நிதரிசனமாகத் தெரிகிறது" என்றும் அவர் மணத்தையே மறந்து வாழ்கிறாள் என்றும் விளக்கி எழுதியிருந்தது ஒரு பத்திரிகை. அவளோ அதைப் படித்துச் சிரித்துக் கொண்டாள்.

"அம்மா ஜூஸ் தயார்!" வேலைக்காரி செல்லம்மாள் அழகிய பூ வேலைப்பாடு அமைந்த கிளாஸ் நிறைய ஆப்பிள் ரசத்துடன் தட்டைக் கொண்டு வந்து வைத்தாள்.

கதாநாயகி நடிகை கலாதேவி பழரசத்தைப் பருகி முடிக்கவும் வேலைக்காரி செல்லம்மா விடைபெற்றுக் கொண்டு போக வந்து நிற்கவும் சரியாயிருந்தது.

"வரேன்மா! தயிர் 'பிரிஜ்'லே இருக்கு. மத்த வேலையெல்லாம் முடிஞ்சிது!"

"ஏண்டி செல்லம்மா, என்னமோ இப்பத்தான் கல்யாணமான சின்னஞ்சிறிசு மாதிரி புருஷனுக்குப் பயந்து நடுங்கி வீட்டுக்கு ஓடறியே! ஒருநாள்தான் கொஞ்சம் தாமசமாய்ப் போயேன்; குடியா முழுகிடும்?"

"ஐயோ, என் புருஷன் பொல்லாது. அடிச்சுக் கொன்னுடும். வூட்லே என்னைக் காணாட்டித் திரும்பவும் போயிச் சாராயக் கடையிலே பூந்துடும்."

செல்லம்மாளின் குரலிலும் முகத்திலும் தெரியும் நடுக்கத்தையும் பயத்தையும் பார்த்துக் கலாதேவிக்கு வியப்பாகவும் வேடிக்கையாகவும் இருந்தது. சிரிப்புக்கூட வந்தது.

நிலையான வருமானம் இல்லாத மனைவியின் சம்பாத்தியத்தில் காசு திருடிச் சாராயக் கடைக்குப் போகக்கூடிய ஒரு புருஷனுக்கு அத்தனை தூரம் அவள் நடுங்கிச் சாவதைப் பார்த்துக் கலாதேவி சிந்திக்கத் தொடங்கினாள், பரிதாபங்கூடப் பட்டாள்.

கல்லானாலும் கணவன், புல்லானாலும் புருஷன் என்ற பழமொழி பெண்ணடிமைத்தனத்தை வளர்க்க விரும்பியவர்கள் இந்நாண்டில் உண்டாக்கியது என்று அவளுக்குத் தோன்றியது. சராசரி இந்தியப் பெண்களும் இந்தப் பழமொழிக்கு ஏற்பத்தான் நடந்து கொள்கிறார்கள் என்று எண்ணினாள் கலாதேவி.

புருஷன், குடும்பம், குழந்தை குட்டிகள் எதுவுமே இல்லாமல் புகழும் பணமுமாக உயர்ந்து வாழும் தன்னையும் செல்லம்மாளையும் மனத்துக்குள் ஒப்பிடத் தொடங்கினாள் அவள்.

செல்லம்மாளை விடத் தான் பல மடங்கு புகழோடும் பணத்தோடும் செல்வாக்கோடும் வாழ முடிந்திருக்கிறது. அதற்குப் புருஷனோ குடும்ப வாழ்க்கையோ தனக்கு இல்லாதது எந்த விதத்திலும் தடையாக இருக்க நேர்ந்தது இல்லை. ஒருவேளை தான் இந்தக் கலைத்துறைக்கு வராமல் திருமணம் செய்து கொண்டு குடும்ப வாழ்க்கை வாழ்ந்து கணவனுக்கு அடங்கிய மனைவியாக இருந்திருந்தால் இப்படிப் புகழ் பெற்றிருக்க முடியாது. நட்சத்திரமாக ஜொலித்திருக்க முடியாது என்பதை எல்லாம்கூட அவள் நினைத்தாள்.

தன்னையும் தன் வேலைக்காரி செல்லம்மாளையும் பெண் என்ற பொது அடிப்படையில் மனத்தராசில் நிறுத்துப் பார்த்தபோது கலாதேவிக்குத் தன் பங்குக்கு எடை கூடியிருப்பது தெரிந்தது.

இன்று வானத்து நட்சத்திரங்களைவிட என் ஆற்றல் அதிகம். அந்த நட்சத்திரங்கள் இரவில் மட்டுமே ஜொலிக்க முடியும், நானோ இரவில் மட்டும் அல்லாமல் பகலிலும் ஜொலிக்க முடிந்தவள். அந்த அப்பாவிப் பத்திரிகைக்காரன் திறமையாகக் கற்பனை செய்து எழுதுவதாக எண்ணிக் கொண்டு நான் கலையையே மணந்து கொண்டு வாழ்வதாக எழுதியிருந்தான். அப்படியானால் கலை எனக்குக் கணவனா? இல்லை; கலை என்னை ஆளவில்லை; நான் கலையை ஆளுகிறேன். அப்பாவி வேலைக்காரி செல்லம்மாளைப் போலவோ அவளைவிடச் சமூகத்தின் மேல் தட்டைச் சேர்ந்த வேறு ஒரு குடும்பத் தலைவியைப் போலவோ நான் ஒரு சாதாரணப் பெண்மணி அல்ல. பிற பெண்கள் பின்பற்ற ஆசைப்படும் லட்சிய அழகி நான்; பிற ஆண்களைக் கனவு காண வைக்கும் கவர்ச்சிக்காரி.

'பாவம், செல்லம்மாள்! கேவலம் குடும்பம் என்கிற மாட்டுத் தொழுவத்தில் தாலி என்கிற கயிற்றால் கட்டப்பட்டவள் அவள். எனக்கு இருக்கும் இந்த அளவற்ற சுதந்திரம் அவளுக்குக் கிடையாது.'

இப்படி நினைத்துவிட்டு நோக்கியபோது வேலைக்காரி செல்லம்மாள் சாராயக் குடிகாரனாகிய கணவனிடம் அடிபடும் ஒரு புழு போலத் தென்பட்டாள். குடித்துவிட்டு வீடு திரும்பும் கணவனிடம் கண்மண் தெரியாமல் அடிபட்டு

அடிபட்டுச் செல்லம்மாளின் உடம்பெல்லாம் காயமாயிருப்பதுபோல் அப்போது அவளுக்கு நினைக்கவும் கற்பனை செய்யவும் தோன்றியது.

கலாதேவிக்குச் செல்லம்மாள் மேல் அனுதாபம் பொங்கியது. அவருக்காக இரக்கப்பட்டாள். பட்டுப்போல மென்மையும் தந்தம் போல் வெளேரென்ற நிறக் கவர்ச்சியும் உள்ள தன் மேனியழகையும் அம்மை வடுக்களும் காயங்களும் நிறைந்த செல்லம்மாளின் முற்றிய உடம்பையும் மனக்கண்ணில் ஒப்பிட்டுப் பார்த்தாள் அவள். அந்த ஒப்பீட்டில் செல்லம்மாளைப் பற்றிப் பெருமைப்பட எதுவுமே இல்லை.

'நல்லவேளை! யார் செய்த புண்ணியமோ, வாழ்க்கைத் தொழுவத்தில் சிக்காமலே புகழ் ஏணியின் உச்சியில் இருக்கிறேன். இன்று ஏதோ தேர்த் திருவிழா கொண்டாடுவதுபோல் எனது நூறாவது படவிழாவை மக்கள் கொண்டாடுகிறார்கள்.'

பொழுது விடிந்ததும் செல்லம்மாள் வேலைக்கு வந்தபோது அவள் முகம் முதல்நாள் இரவு முழுவதும் அழுது அழுது வீங்கினாற்போல் இருந்தது. கலாதேவி அவளைக் கேட்டாள். "என்னடீது? ராத்திரி உம் புருஷனோட ஏதாவது சண்டையா?"

"சாராயமும் சண்டையும் இல்லாத நாளே கெடையாதும்மா?"

"அப்படியாவது அந்தப் புருஷனுக்காக ஏண்டி உயிரை விடறே? 'டைவர்ஸ்' பண்ணிக்கிறதுதானே?"

"ஐயே! அதெப்பிடீம்மா முடியும்?"

"ஏன் முடியாது?"

"ஆயிரம் இருந்தாலும் அது எம் புருஷனாச்சே?"

"அப்படியானா உனக்கு வேற வழியே இல்லை. திண்டாட வேண்டியதுதான்."

"இன்னிக்கு விழாவுக்கு அதுகூட வரணும்னிச்சு. உங்க யசமானிம்மாகிட்டச் சொல்லி ஒரு பாஸ் வாங்கியாந்து குடுன்னு கேட்டிச்சும்மா."

"சாயங்காலமானால் சாராயக்கடைக்குப் போறவன், நூறாவது படவிழாவுக்கு எங்கேடி வரப்போறான்? வந்தாலும் குடிச்சுட்டு கலாட்டா பண்ணாம இருப்பானா?"

"அதெல்லாம் ஒண்ணும் பண்ணாதும்மா, உங்க நடிப்புன்னா அதுக்குப் பிரியம்."

அடிபட்டு உதைப்பட்டு மாடாகத் தேய்ந்தாலும் செல்லம்மாளுக்குத் தன் குடிகாரப் புருஷன் மேலுள்ள பிரியத்தின் மர்மத்தைப் புரிந்து கொள்ள முடியாமல் திணறினாள் திருமணமாகாத நட்சத்திரம் கலாதேவி. மணவாழ்க்கையால் பெண் அடிமைப்படுகிறாள் என்பதே அந்த விநாடி வரை மணவாழ்க்கையைப் பற்றி அவள் கணிப்பாயிருந்தது. அதற்குமேல் 'புருஷன்' என்ற வார்த்தையின் அர்த்தம் அவளுக்குப் புரியவில்லை.

அன்று மாலை அவளுடைய நூறாவது படவிழா ஆடம்பரமாகத் தொடங்கியது. பயங்கரமான ரசிகர்கள் கூட்டம். கூட்டத்திலும் ஜனநெருக்கடியிலும் சிலர் நசுக்குண்டு மிதிப்பட்டு இறந்து போய்விடுவார்களோ என்னுமளவு ஒரே மக்கள் வெள்ளம்.

விழா நாயகி நடிகையர் ரத்தினம் கலாதேவிக்குத் துணையாக வேலைக்காரி செல்லம்மாளும் சென்றிருந்தாள். வேறு பல நடிகைகள், நடிகர்கள் திரளாக வந்திருந்ததால் எல்லோரையும் ஒரு சேரக் காணலாம் என்ற ஆவலில் கூட்டம் அலை மோதியது.

விழா மேடைக்குப் பின்னால் கையில் வீட்டிலேயே போட்டு எடுத்துச் சென்றிருந்த காபி பிளாஸ்க்குடன் அடக்க ஒடுக்கமாக நின்றிருந்தாள், செல்லம்மாள். கலாதேவிக்கு அவுட்டோர் ஷூட்டிங் நாட்களில் காபி சிற்றுண்டி, சாப்பாடு எல்லாமே வீட்டிலிருந்து செல்லம்மாள்தான் எடுத்துச் செல்வாள். அதேபோல் இன்று விழாவுக்கும் காபி எடுத்துக் கொண்டு வந்திருந்தாள்.

விழா மேடையில் அழகு ராணியாக வீற்றிருந்த கலாதேவி கூட்டத்தைக் கம்பீரமாக நிமிர்ந்து பார்த்தாள்.

தனக்கு எதிரே தெரிந்த பறட்டைத் தலையும் களைந்த முகமுமான பல ஆண்களில் யாராவது ஒருவன்தான் செல்லம்மாளின் கணவனாயிருக்க வேண்டுமென்று ஏளனமாகத் தன் மனத்துக்குள் நினைத்துக் கொண்டாள் கலாதேவி.

நிலைகொள்ளாமல் மோதும் அந்தப் பெரிய கூட்டத்தில் மின்சாரத் தடங்கலால் ஒரு நிமிஷம் திடீரென்று இருள் சூழ்ந்தது. இருட்டில் கூட்டம் மேலும் தடுமாறவே, கலாதேவி முதலிய பெண் நட்சத்திரங்கள் அமர்ந்திருந்த மேடை சரிந்துவிட ஒரே அமளி. கூச்சல் குழப்பம் உண்டாயிற்று. விளக்குத் திரும்ப வந்தும்கூடச் சந்தடி சாக்கில் நடிகைகள் மேல் ரசிகர்கள் மோத ஆரம்பிக்கக் கூக்குரல் எழுந்தது. பரபரப்பிலும் குழப்பத்திலும் நடிகை கலாதேவியே கூட்டத்தில் சிக்கித் தடுமாறி கீழே விழுந்துவிட அவளைத் தூக்க வேலைக்காரி செல்லம்மாள் ஓடிவந்தாள்.

செல்லம்மாளையும் முந்திக் கொண்டு வேறு இரண்டொரு ரசிகர்கள் கலாதேவியைத் தூக்கிவிட ஓடி வரவே, செல்லம்மாளும் அவர்களும் எதிரெதிராக மோதிக் கொள்ளும்படி நேரிட்டுவிட்டது.

செல்லம்மாள் மேல் மோதியர்கள் ஆண்பிள்ளைகளாயிருப்பதைப் பார்த்தபடி தூரத்தில் நின்றியிருந்த அவள் கணவன், "டாய்! யார்ரா பேமானி! கீச்சுப்புடுவேன் கீச்சு" என்று கத்தியோடு கூட்டத்தில் அவர்கள் மேல் பாய்ந்தான்.

"கண்ட கஸ்மாலம்லாம் கையைப் புடிச்சு இஸ்த்துக்கினு போக இது சினிமா எக்ஸ்ட்ரான்னு நினைச்சியா? என் பொஞ்சாதிடா இது! ஜாக்கிரதை!" என்று அந்த ஆண்களை எச்சரித்து மிரட்டிவிட்டுச் செல்லம்மாளை மட்டும் ஒதுக்கி அழைத்துச் சென்றான் அவள் கணவன்.

தடுமாறிக் கீழே விழுந்து கிடந்த விழா நாயகியாகிய தன்னைத் திரும்பிக்கூடப் பார்க்காமல் தனக்கு உதவ வந்த ஆண்கள் செல்லம்மாளைத் தீண்டிவிட்டார்கள் என்பதற்காகவே அவர்களிடம் கத்தியைக் காட்டி மிரட்டும் அந்த முரட்டு ஆண்மை கலாதேவியை ஒரு கணம் பிரமிக்கச் செய்துவிட்டது.

"யார்ராவன்? விழா நாயகியே இங்கே கீழே விழுந்துட்டாங்க? என்னடான்னா, யாரோ ஒரு அம்மாவேட விழுந்த பொம்பளையைத் தொட்டுப்புட்டோம்னு கத்தியைக் காட்டி மிரட்டறான்?" என்று பேசிய இரண்டு சினிமா உலகப் பிரமுகர்கள் பக்கம் திரும்பி, "இந்தய்யா! அதெல்லாம் வேற இடத்துல வச்சுக்க! நம்ப கையில் வாண்டாம். சினிமாக்காரியை இன்னா வேணாப் பண்ணிக்க. இது குடும்பப் பொண்ணு. எம் பொஞ்சாதி! எவனாவது தொட்டே கொடலை வுருவிடுவேன்" என்று மீண்டும் கத்தியைக் காட்டிச் சீறினான் செல்லம்மாளின் புருஷன். பாதி குடிபோதை வேறு.

அந்தக் கணத்தில் மின்வெட்டுப் போல் கலாதேவியின் மனத்தில் ஒரு பொறி தட்டியது.

சதா சாராயத்தையே கட்டிக் கொண்டு அழும் அந்தக் குடிகாரக் கணவனைச் செல்லம்மாள் விடாமல் கட்டிக் காத்துப் பணிவிடை செய்யும் மர்மமும் இரகசியமும் கலாதேவிக்கு இப்போது புரிவது போல் இருந்தது.

இந்த அளவு முரட்டுப் பிரியத்தைத் தருகிற ஓர் ஆண்பிள்ளையிடம் ஒரு பெண் எத்தனை தடவை அடிபட்டாலும் அவனால் தன் உடல் முழுவதும் காயமானாலும் அவனை விட்டுப் பிரியமாட்டாள் என்று தோன்றியது.

யாரோ வந்து சமாதானப்படுத்தி அவனைத் தனியே அழைத்துக் கொண்டு போனார்கள். செல்லம்மாளும்கூட வந்தால்தான் போவேன் என்றான் அந்த முரடன்.

செல்லம்மாள் தயக்கத்தோடு எஜமானி கலாதேவியின் முகத்தைப் பார்த்தாள். எஜமானி பிளாஸ்கை வாங்கிக் கொண்டு, 'நீ போ; பரவாயில்லை' என்பதுபோல் அவளுக்கு உத்தரவு கொடுத்தாள். அவள் கணவனோடு போனாள்.

குடித்துவிட்டு வீடு திரும்பும் முரட்டுக் கணவனிடம் அடிபட்டு அடிபட்டுச் செல்லம்மாளின் உடம்பெல்லாம் காயம் பட்டிருப்பதாகத் தான் முன்பு கற்பனை செய்திருந்த காயங்களை விட ஆழமான, ஆனால் வெளியே தெரியாத ஊமைக்காயம் தன்னைத்தானே தாங்கி நிற்பதுபோல் அந்தக் கணத்தில் விழா நாயகியான நடிகையர் ரத்தினம் கலாதேவிக்குத் தோன்றியது.

"சினிமாக்காரியை இன்னா வேணாப் பண்ணிக்க, இது குடும்பப் பொண்ணு, எம் பொஞ்சாதி!" என்ற அந்த முரட்டுக் குடிகாரக் கணவனின் கொச்சை வார்த்தைகள், அவன் உருவி நீட்டிய கத்தியைவிடக் கூராயிருந்தன. அந்தக் கூர்மை தொலைவிலிருந்தே எங்கோ அவளைக் காயப்படுத்தியிருந்தது.

**(கலைமகள் பொன்விழா மலர், 1982)**

## 152. கடைசியாக ஒரு வழிகாட்டி

**ப**ல்கலைக்கழக ரிஜிஸ்திரார் ஆபீசில் அவன் தெரிந்து கொண்ட தகவல் கவலையளிக்கப் போதுமானதாக இருந்தது. எதிர்காலமே இருண்டு போகும் போல் இருந்தது. விளக்கடியில் தேங்கி நிற்கும் இருட்டைப் போல ஒவ்வொரு பேராசிரியரிடமும் தேங்கியிருந்த விருப்பு வெறுப்புக்களும் பழி வாங்கும் மனப்பான்மையும், சுய சாதி அபிமானமும் பயங்கரமாயிருந்தன; அநாகரிகமாகவும் இருந்தன.

இப்போதைய இந்த வெள்ளத்தில் எதிர் நீச்சலிட்டுக் கரைசேர முடியுமா என்று பல போராட்டங்களை நடத்தியிருந்த அவளுக்கே மலைப்பாயிருந்தது. இத்தனை விருப்பு வெறுப்புக்களுக்கும், சூதுவாதுகளுக்கும், கள்ளம் கபடுகளுக்கும், குரோத விரோத மனப்பான்மைகளுக்கும் நடுவே கல்வி எப்படி வளர முடியும் என்று அவளுக்கே சந்தேகமாகக்கூட இருந்தது. அரசாங்கமே அங்கீகரித்திருந்த வகுப்புவாதப் பிரதிநிதித்துவ முறைகளைத் தவிர, ஒவ்வொரு பேராசிரியரும் தனியே தமது விருப்பு வெறுப்புக்கு ஏற்ப ஒரு பிரதிநிதித்துவ முறையை வைத்துக்கொண்டிருந்தார்.

"அந்தப் புரொபஸரா? அவருக்கு இன்ன இன்ன ஆட்களுக்குக் 'கெய்டாக' இருக்கப் பிடிக்காது. ஏதாவது சாக்குப்போக்குச் சொல்லித் தட்டிக் கழித்து விடுவார்" என்று ஒருவரைப் பற்றிச் சொன்னார்கள்.

"இவரா? ஒவ்வொரு ஸ்டேஜிலும் ரிஸர்ச் ஸ்டூடண்டைப் பணம் கேட்பார். கொடுத்து மீள்வது கடினம்."

"அவரா? ஆபத்தான பேர்வழி. பெண்கள் அவரிடம் போவது நல்லதில்லை. ஒருமாதிரி சபலபுத்திக்காரர்."

அவள் ஆராய்ச்சி செய்ய இருந்த துறையில் 'கெய்டு' ஆகப் பல்கலைக்கழகம் அங்கீகரித்திருந்த பேராசிரியர்களின் எண்ணிக்கையே நாலு ஐந்துதான் இருந்தது. அவள் முழு நேர மாணவியாகக் கற்க விரும்பியதால் பல்கலைக்கழகம் 'ரிஸர்ச் சென்ட்ட'ராக அங்கீகரித்திருக்கக் கூடிய ஒரு கல்வி நிறுவனத்தில் அங்கீகாரம் பெற்ற வழிகாட்டியாகக் கூடிய ஒரு பேராசிரியரைக் 'கெய்டா'க் கொண்டு தான் அந்த ஆராய்ச்சி செய்ய வேண்டும்.

இந்த நிபந்தனைகளாலும், படிக்கிற நாளில் பல்வேறு மாணவர் போராட்டங்களில் கலந்து கொண்டு போதுமான அளவு கெட்ட பெயர் எடுத்திருந்ததாலும் அவளுக்கு இடமும், 'கெய்டும்' கிடைப்பது சிரமமாக இருந்தது. சில இடங்களில்

உள்ள சிரமங்களைச் சொல்லி மற்றவர்கள் அவளைப் பயமுறுத்தினார்கள். ஆக உயர் கல்வியும் ஆராய்ச்சித் துறைகளும் எல்லாம் பயத்துக்கும் பயமுறுத்தல்களுக்கும் நடுவே இருந்தன.

அவளைப் போல் புதுமைப் பெண்ணாக வளர்ந்துவிட்ட ஓர் இளம் பெண்ணுக்கு மற்றெல்லாத் தகுதிகளும் இருந்தும் கூட ஆராய்ச்சிக்காக அங்கீகரிக்கப்பட்ட ஓர் வழிகாட்டி கிடைக்கவில்லை. இடமும் அகப்படவில்லை.

"சுகுணா, நீ கல்லூரி நாட்களில் மறியல், போராட்டம் என்று நிறையச் செய்துவிட்டாய். சில பேராசிரியர்களைக்கூட விரோதித்துக் கொண்டுவிட்டாய். அதனால்தான் இப்போது இந்தச் சிரமம் எல்லாம். அடங்கிய பெண்ணாகக் கல்லூரி நாட்களைக் கழித்திருந்தால் இந்தச் சிரமமெல்லாம் இப்போது உனக்கு ஏற்படாது" என்றாள் சுகுணாவின் தோழி ரத்னா.

"தெரியாமல் சொல்கிறாய் ரத்னா! அடங்கிய பெண்ணாக இருந்திருந்தால் நான் படித்து மேலே வந்திருக்கவே முடியாது. போராடுகிறவர்களுக்கு மட்டுமே, இந்த உலகம். பயப்படுகிற உலகத்தில் தான் இன்று நாமும் வாழ்கிறோம்."

இதற்கு ரத்னாவால் பதில் எதுவும் சொல்ல முடியவில்லை. தாராள மனப்பான்மையும், பெருந்தன்மையும் உதவுகிற குணமும் இல்லாதவர்கள்தாம் கல்வித்துறையில் பெரியபெரிய பதவிகளில் ஒட்டிக் கொண்டிருந்தார்கள். நிறையப் பேர் நன்றாகப் படிக்க வேண்டும், பட்டங்கள் பெற வேண்டும் என்று நினைப்பதற்குப் பதிலாக, நிறைய பேர் படிக்க வேண்டாம், பட்டங்கள் பெற வேண்டாம் என்று நினைக்கிற மனப்பான்மையே பல ஆசிரியர்களிடம் இருந்தது.

புரொபஸர் ரத்னவேல்ராஜ் என்பவரிடம் ஒதுக்கப்பட்டிருந்த 'கோட்டாவில்' ஓர் இடம் மீதமிருக்கிறது என்று கேள்விப்பட்டு அவரைச் சந்திக்கப் போனாள் சுகுணா.

வியர்வை ஆறாக ஓடுகிற கடுமையான கோடைக் காலத்திலும் சூட், கோட், டை உட்பட அணிந்து, பைப் புகைத்துக் கொண்டிருந்தார் அவர். கறுப்புத் துரையாகக் காட்சி அளித்தார்.

சுகுணாவின் நேரத்தில் ஒரு மணிக்குமேல் எடுத்துக் கொண்டுவிட்ட அவர், தாம் ஆக்ஸ்போர்டில் படிக்கப் போனது, வந்தது, எல்லாவற்றையும் விவரித்துவிட்டு அவளுடைய ஆராய்ச்சி பற்றி யோசித்து முடிவு செய்து பிறகு சொல்வதாக நழுவிவிட்டார். நாசுக்காக அவள் என்ன சாதி என்றறியும் முயற்சியிலும் இறங்கினார் அவர்.

அடுத்து அவள் பார்த்த மனிதர் டாக்டர் தாமஸ். அவர் தம்மிடம் இருந்த ஒரே இடத்தை யாரோ மந்திரி சிபாரிசு செய்த ஒரு மாணவருக்காகப் பதிவு செய்து-விட்டதாகவும், தம்மைத் தேடியலைந்து இனி அவள் நேரத்தை வீணாக்க வேண்டியதில்லை என்றும் கூறி முகத்தில் அடித்தது போல் மறுத்துவிட்டார்.

மூன்றாம் மனிதராக அவள் சந்தித்தவர் இளைஞரான டாக்டர் வீரபத்திரன்.

"இதோ பார் அம்மா! நான் கூடியவரை பெண்களை ரிஸர்ச் ஸ்டூடண்ட்ஸா எடுத்துக்கொள்ள வேண்டாம்னு கொள்கை வைத்துக் கொண்டிருக்கிறேன். நான் கொஞ்ச வயசுக்காரன்; திருமணமாகாதவன்; பெண்களுக்குக் 'கெய்டா' இருந்தா வீண் கதை கட்டி விட்டுடுவாங்க. மனம் விட்டுச் சொல்றதுக்காக நீங்க வருத்தப்படக்கூடாது. மன்னிக்க வேணும், ஸாரி" என்று பயந்து ஒதுங்கினார் வீரபத்திரன்.

அடுத்துப் பார்த்த புரொபஸர் கனி என்பவரும் ஏதோ சாக்குப் போக்குச் சொல்லிக் கத்தரித்து அனுப்பி விட்டார்.

இந்தப் பேராசிரியர்கள் எல்லாரும் நவநாகரிகமாக உடை அணிந்திருந்தார்கள். ஆனால், இவர்கள் மனம் மிகவும் அநாகரிகமாக இருப்பதை அவள் உணர்ந்தாள். அவர்கள் மிக அழகாக ஆங்கிலம் பேசினார்கள், ஆனால், ஆங்கிலேயர்களிடம் உள்ள தாராள மனமும், பெருந்தன்மையும் கிஞ்சித்தும் இவர்களிடம் இல்லை. ஆங்கில நடை பாவனைகளும் குறுகிய இந்திய மனமுமாக இவர்கள் உலவினார்கள்.

சுகுணாவுக்குப் படிப்பிலேயே வெறுப்பு வந்துவிட்டது. பி.எச்.டி.யே வேண்டா-மென்று கூட விரக்தி ஏற்பட்டது. ஆராய்ச்சிக்கு விருப்பமும் தகுதியும் உள்ளவர்களுக்கு ஆராய்ச்சி செய்ய வாய்ப்பில்லை. விருப்பமும் தகுதியும் அற்றவர்கள் மீது ஆராய்ச்சிகள் திணிக்கப்படுகின்றன. ஆராய்ச்சித் துறைகளையும் ஆராய்ச்சிக்கு வழிகாட்ட வேண்டிய பேராசிரியர்களையும், அவர்களின் ஊழல்களையும் பற்றியே ஒரு பெரிய ஆராய்ச்சி செய்ய வேண்டும்போல இருந்தது. ஆனால், எந்தப் பல்கலைக்-கழகமும் அப்படி ஓர் ஆராய்ச்சியை ஏற்று அதற்குப் பட்டம் வழங்கத் தயாராயிராது.

ஏமாற்றமும், விரக்தியோடு கூடிய கசப்பு உணர்ச்சியுமாக அவள் ஆராய்ச்சி செய்யும் எண்ணத்தையே கைவிட்டு விட்டு, ஏதாவது குமாஸ்தா வேலைக்குப் போய்த் தொலைக்கலாம் என்று இருந்தபோது, கடைசியாக விசாரிப்பதற்கு இன்னும் ஒரே ஒருவர் மீதமிருப்பது தெரிய வந்தது. பெரிய நம்பிக்கை ஒன்றும் இல்லை. அதையும் பார்த்துவிடலாம் என்று தான் தேடிப் போனாள்.

"பொன்மலர்க் கல்லூரியிலிருந்து ஓய்வுபெற்று மறுபடி அங்கேயே யூ.ஜி.ஸி. ஆராய்ச்சிப் பேராசிரியராக இருந்த ஒரு வயதானவரிடம் யாருமே இன்னும் ரிஜிஸ்தர் செய்து கொள்ளவில்லை. காரணம், அந்தப் பேராசிரியர்'ஸ்டிரிக்ட் டிஸிப்ளினேரியன்'. நிரம்ப கர்நாடகமான ஆள். பத்தாம் பசலி ஆசாமி என்று நிறைய மாணவர்கள் போகப் பயப்படுகிறார்கள். 'மெத்தடாலஜி டெஸ்ட்' முடிவதற்குள்ளேயே கசக்கிப் பிழிந்து விடுவாராம்" என்று தோழி ரத்னா வந்து சொன்னதிலிருந்து தான் அந்தத் தகவலே சுகுணாவுக்குத் தெரிந்தது.

"அந்த மனிதரின் பேர் என்னடி ரத்னா?" என்று சுகுணா கேட்டதற்கு, "பேர் நினைவு இல்லை. ஏதோ பழங்காலப் பேர். மறந்து போச்சு. கடைசிலே நாயுடுன்னு முடியும். ஆனால், கண்டுபிடிக்கிறது ரொம்பச் சுலபம். அந்த டிபார்ட்மெண்ட்டிலே அவர் ஒருத்தர்தான் யூ.ஜி.ஸி. புரொபஸராம். எல்லாரும் டாக்டர் நாயுடுன்னுதான் கூப்பிடுவாங்க."

புறநகரில் அவர் குடியிருக்கும் வீட்டு விலாசத்தையும் ரத்னாவே குறித்துக் கொடுத்திருந்தாள்.

கடைசியாக முயன்று பார்த்துவிடலாம் என்று சுகுணா, டாக்டர் நாயுடுவைத் தேடிப் போனாள். அமைந்தகரைக்கும் அப்பால் கோயம்பேடு போகிற வழியில் ஒரு தென்னந்தோப்பிற்கு நடுவில் இருந்தது அந்தப் பழங்கால வீடு. வீடே கோவில் போல் இருந்தது. முகப்புக் கதவின் மரநிலைப்படியில் நாமமும் இருபுறமும் சங்கு சக்கரமும் இருந்தன. டாக்டர் சந்தானகிருஷ்ணநாயுடு எம்.ஏ., பி.எச்.டி., என்று சிறிய பிளாஸ்டிக் போர்டும் இருந்தது.

முன் திண்ணையில் பட்டையாக நாமம் தீட்டிக் கொண்டு காதில் சங்கு சக்கரக் கடுக்கண் அணிந்த கிழவர் ஒருவர் கிழிந்து போன காஞ்சீபுரம் பழுக்காக்கரை வேஷ்டி ஒன்றை ஊசி நூலில் கவனமாகத் தைத்துக் கொண்டிருந்தார்.

பக்கத்தில் தடிமனாக நாலாயிர திவ்யப் பிரபந்தம் என அட்டையில் அச்சிட்ட பெரிய புத்தகம் ஒன்று கிடந்தது.

இதைப் பார்த்ததும், கல்லூரி நாட்களில் நாமம் விபூதிப் பட்டை அணிந்த பேராசிரியர்களைத் தானும் சக மாணவ மாணவிகளும் விதவிதமாகக் கிண்டல் செய்திருப்பது அவளுக்கு நினைவுக்கு வந்தது. ஒரு சமயம் நாமம் போட்ட ஹிஸ்டரி புரொபஸர் ஒருவர் கலந்து கொண்ட வரலாற்றுக் கழகத் தொடக்க விழாவில் அவளும் சக மாணவர்களில் ரெளடிகளான சிலரும் அழுகிய தக்காளி, முட்டைகளை எறிந்து கலாட்டா செய்திருந்தனர். பஞ்சாங்கக்காரர்கள் போலவும் புரோகிதர்கள் போலவும் தோற்றமளித்த சில பழங்கால ஆசிரியர்களை வகுப்புகளில் கிண்டல் செய்த சம்பவங்களும், "புரோகிதரா, புரெபஸரா?" என்று சுவர்களில் எழுதி வைத்ததும் நினைவுக்கு வந்தன.

"யாரும்மா? என்ன வேணும்?" பழைய வேஷ்டி தைத்துக் கொண்டிருந்த நாமக்காரக் கிழவர் அவளை நிமிர்ந்து பார்த்துக் கேட்டார்.

சுகுணா சிந்தனை கலைந்து இந்த உலகிற்கு வந்தாள்.

"புரொபஸர் சந்தானகிருஷ்ண நாயுடு அவர்களைப் பார்க்க வேணும்" என்று ஆங்கிலத்தில் சொன்னாள்.

"திண்ணையில் உட்கார் அம்மா."

அந்தக் கிழவருக்கு ஆங்கிலத்தில் பேச வராததால்தான் தனது ஆங்கில வினாவுக்குத் தமிழில் பதில் சொல்கிறார் என அவளாக நினைத்துக் கொண்டாள். கிழவர் புரொபஸரின் அண்ணாவாகவோ, தந்தையாகவோ இருக்க வேண்டும் என்பது அவள் அனுமானம்.

நாமக்காரக் கிழவர் உள்ளே எழுந்து போனார். அவள் திண்ணையில் உட்கார்ந்தாள்.

உபதேச ரத்னமாலை. நித்யாநு சந்தானம், திவ்யார்த்த தீபிகை என்று சமய நூல்களாகத் திண்ணையில் அடுக்கியிருந்தன. ஒரு வர்த்தகத் துறைப் படிப்பின் பேராசிரியர் வீட்டு முகப்பில் ஒரே சமய சம்பந்தமான புத்தகங்களாக இருந்ததைக் கண்டு அவளுக்கு என்னவோ போல் இருந்தது. இதற்கு முன்னால் அவள் தேடிச் சென்றிருந்த டாக்டர் ரத்னவேல்ராஜ், தாமஸ், கனி ஆகிய பேராசிரியர்கள் வீட்டில் புதியவையாக வந்துள்ள பொருளாதார நூல்கள் போன்றவற்றைத் தான் கண்டிருந்தாள். இங்கோ எல்லாமே கோவிந்த நாம சங்கீர்த்தனமாகவே இருந்தன. வேஷ்டி தைத்துக் கொண்டிருந்த கிழவரின் புத்தகங்களாக இருக்கலாம் என்று தன்னைத் தானே சமாதானப்படுத்திக் கொண்டாள் அவள்.

பத்து நிமிஷங்கள் ஆயின.

“என்ன காரியமாக வந்தாய் அம்மா?”

குரலைக் கேட்டு நிமிர்ந்து பார்த்தவளுக்கு ஆச்சரியம் காத்திருந்தது. வேஷ்டி தைத்துக் கொண்டிருந்த அதே கிழவர் தாம் இப்போது ஒரு கதர் அரைக் கைப் பனியனோடு மீண்டும் எதிரே வந்து உட்கார்ந்திருந்தார்.

“புரொபஸரைப் பார்க்க முடியுமா?” என்று ஆங்கிலத்திலேயே மீண்டும் கேட்டாள்.

“நான்தான் அம்மா; வந்த காரியத்தைச் சொல்லு!” கிழவர் சிரித்துக் கொண்டே இதைக் கூறினார்.

தான் ஆங்கிலத்திலேயே பேச அவர் தமிழிலேயே பதில் சொல்வது அவளுக்கு உறைத்தது. மறுபடி ஆங்கிலத்தில் தொடங்கி உதட்டைக் கடித்துக் கொண்டு நடுவே ‘ஸாரி ஸார்’ போட்டு ஆங்கிலத்தை முறித்து மீண்டும் தமிழில் பேச முயன்றாள் அவள்.

“என் பெயர் சுகுணா. முதல் வகுப்பில் டிஸ்டிங்ஷனோட போஸ்ட் கிராஜுவேட். ரிஸர்ச்சுக்கு ஒரு ‘கெய்டு’க்காக அலையறேன். நீங்கதான் பெரிய மனசு பண்ணணும்.”

“எந்த வருஷம் எம்.ஏ. முடிச்சே? எந்தக் காலேஜ்?”

வருஷத்தையும், படித்த காலேஜின் பெயரையும் கூறினாள் அவள்.

“வம்பு தும்புக்குப் பெயர் போன காலேஜ் ஆச்சே அது?”

அவள் இதற்குப் பதில் சொல்லவில்லை.

“அந்தக் காலேஜிலே பசங்க படிக்கிறதை விடப் போராடறத்துக்கும், ஊர்வலம் போறதுக்குமே வருஷம் பூராச் செலவழிஞ்சு போயிடுமே!”

இதற்கும் அவள் பதிலே கூறவில்லை.

“உங்களுக்கு எல்லாம் யாரு புரொபஸரா இருந்தா?”

“கண்ணபிரான் ஸார்தான் புரொபஸர்.”

“அவன் நல்ல படிப்பாளி, பாவம்! அந்தக் காலேஜிலே போய் மாட்டிக் கொண்டான்.”

இதற்கும் அவள் பதில் எதுவும் கூறவில்லை.

“என்கிட்டக் கட்டுப்பாடு பார்க்கிற குணம் அதிகம். நீயோ ‘கட்டுப்பாடு கிலோ என்ன விலை’ என்று கேட்கிற காலேஜிலே படிச்சு வந்திருக்கே. ஒரு வருஷத்திலே ‘மெத்தடாலஜி’ முடிக்கணும். அப்புறம் நிறைய ‘லைப்ரரி ரெஃபரன்’ஸுக்கு அலையணும், சிரமப்பட்டு உழைச்சுப் படிக்கணும். இதுக்கெல்லாம் சம்மதமானால் சொல்லு. இப்பவே உனக்குக் ‘கெய்டா’ இருக்கச் சம்மதிச்சு யூனிவர்ஸிடி ஃபாரத்துலே கையெழுத்துப் போட்டுத் தரேன்.”

“நீங்க சொல்றபடி கேக்கறேன் ஸார்.”

“ரிஜிஸ்டிரேஷன் ஃபாரம் இருக்கா? கொண்டு வந்திருக்கிறாயா?”

அவள் அடக்க ஒடுக்கத்தோடு கைப்பையைத் திறந்து ஃபாரத்தைத் தேடி எடுத்து அவரிடம் அளித்தாள்.

அவர், “ஸ்ரீமதே ராமாநுஜாய நம:” என்று கூறிக் கண்களை மூடி ஒரு நிமிஷம் தியானிப்பது போல் செய்துவிட்டு, அவளுடைய பி.எச்.டி. ரிஜிஸ்திரேஷன் பாரத்தில் கையெழுத்துப் போட்டுக் கொடுத்தார். அவள் சாதி சமய கோத்திர விசாரணையில் நேரடியாகவோ மறைமுகமாகவோ அவர் இறங்கவில்லை.

‘மூன்றாவது உலக நாடுகளின் வளமும் பொருளாதார வளர்ச்சியும்’ என்று அவள் கொடுத்திருந்த ஆராய்ச்சித் தலைப்புத் தொடர்பாக நடுவே அவர் இரண்டு வாக்கியங்கள் ஆங்கிலத்தில் பேசியபோது அவரது அந்த ஆங்கில உச்சரிப்பும் கம்பீரமும் அவளை மெய்சிலிர்க்கச் செய்தன. ‘இவ்வளவு பிரமாதமாக ஆங்கிலம் பேசக்கூடிய இவரா இதுவரை தமிழிலேயே பேசினார்?’ என்றெண்ணி வியந்தாள் சுகுணா.

“ரிஸோர்ஸஸ் அண்ட் டெவலப்மெண்ட் ஆஃப் த தேர்ட் வோர்ல்ட் கண்ட்ரீஸ் என்கிற தலைப்பை இன்னும் சுருங்கிய எல்லைக்குக் கொண்டுவர வேண்டும்” என்று அவரே யோசனையும் கூறினார்.

“நீ நாளைக்குக் காலையில் காலேஜுக்கு வா. பிரின்ஸிபாலிடமும் ஒரு கையெழுத்து வாங்கிக்கணும். அப்புறம் ஃபாரத்தை யூனிவர்ஸிடிக்கு அனுப்பனும், அதுக்கு முன்னாலே தலைப்பைப் பத்தி நாம் விவாதிச்சு முடிவு பண்ணிக்கலாம்.”

“சரி ஸார், நாளைக்கு வரேன்” அவரை வணங்கி விட்டு மீண்டும் நன்றி கூறியபின், புறப்பட்டாள் சுகுணா.

கம்பீரமான ஆங்கிலேயரின் உடையில் தமிழ்நாட்டு மனத்தோடு கூடிய குறுகிய உள்ளம் படைத்த பல பேராசிரியர்களையே நேற்று வரை அவள் சந்தித்து ஏமாந்து போயிருந்தாள். அவர்கள் தாராளமாக ஆங்கிலம் பேசி விட்டுக் காரியத்தில் மட்டும்

தமிழர்களாக நடந்து கொண்டார்கள். நாயுடுவோ தமிழில்தான் பேசினார். ஆனால், செயலில் ஆங்கிலேயராக நடந்து கொண்டார்.

இன்று கடைசியாகத் தமிழ்நாட்டு உடையில், ஆங்கிலேயர்களின் தாராள மனமுள்ள ஒரு பேராசிரியரை அவள் சந்தித்து விட்டாள். தனக்குச் சுலபமாக ஒரு வழிகாட்டி - கெய்டு கிடைத்து விட்டார் என்பதை நம்புவதே கடினமாக இருந்தது அவளுக்கு.

நவநாகரிகமான உடைக்குள்ளே நுழைந்திருக்கும் அநாகரிகமான பல பத்தாம்பசலி மனிதர்களைவிட, அநாகரிகமான பத்தாம்பசலி உடையில் ஒளிந்திருக்கும் நவநாகரிகமான மனிதர் ஒருவரை எதிர்பாராத வகையில் வழிகாட்டியாக அடைந்ததைத் தன் பாக்கியம் என்றே கருதினாள் சுகுணா.

(கலைமகள், தீபாவளி மலர், 1983)



# 153. ராஜ தந்திரிகள்

**அ**ந்த விருந்து அதற்காகத்தான் ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. ஏற்பாடு செய்து அழைத்தவருக்கு நோக்கம் இருந்தது. அழைப்பை ஏற்று வந்தவருக்கும் அது இலைமறை காயாகப் புரிந்துதான் இருந்தது.

இவருக்கு அவரிடமிருந்து ஓர் இரகசியம் தெரிந்தாக வேண்டும். அவருக்கு அந்த இரகசியம் இவருக்குத் தெரியாமல் காப்பாற்றியாக வேண்டும்.

இவருடைய அழைப்பின் பேரில் அவர் வந்திருந்தார். சில ராஜ தந்திரக் காரணங்களுக்காக அந்த விருந்தை இவருடைய வீட்டிலோ, தூதரகத்திலோ தர முடியாமலிருந்தது. அவருக்கும் இவருடைய வீட்டுக்கோ தூதரகத்திற்கோ வரமுடியாத தர்ம சங்கடம் இருந்தது. ஆனால், இருவரும் சந்திக்க ஏற்பாடாகிவிட்டது.

இருவரும் தூதரக வேலைகளுக்கு வந்திருந்த நாடு பல ஆயிரம் மைல்களுக்கு இப்பால் இருந்தது. பல ஆயிரம் மைல்களுக்கு அப்பால் இந்த இரு தூதர்களுடைய நாடுகளும் அண்டை நாடுகள். இவர்கள் இன்று இருப்பதோ மற்றொரு பெரிய வல்லரசு நாடு.

அவருடைய நாடு வேறு ஒரு பெரிய நாட்டுடன் அணு ஆயுத உடன்படிக்கையோ அல்லது 'நியூகிளியர் அம்பர்லா' போன்ற ஓர் ஏற்பாடோ செய்துகொள்ளப் போவதாக - அல்லது ஏற்கனவே செய்து கொண்டுவிட்டதாக ஓர் இரகசிய தகவல். எந்த நாட்டுடன் அப்படி ஒப்பந்தம் அல்லது பாதுகாப்பு ஏற்பாடு உண்டாகி இருப்பதாகச் சொல்லப்பட்டதோ அந்த நாட்டில்தான் அதன் தலைநகரில் இவர்கள் இருவரும் தங்கள் தங்கள் நாடுகளின் சார்பில் தூதர்களாக இருந்து வந்தார்கள்.

தலைநகரிலிருந்து நூறு மைல் தள்ளி இருந்த ஓர் ஆடம்பரமான பீச் ஹோட்டலின் லக்சுரி சூட் ஒன்றில் அந்த விருந்து ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. வேறு யாரும் அழைக்கப்படவில்லை. விருந்து இன்ஃபார்மல், ஃபிரண்ட்லி என்றெல்லாம் பரஸ்பரம் வர்ணித்துக் கொள்ளப்பட்டன. தங்கள், தங்கள் தூதரகங்களுக்கும் இந்த விருந்துக்கும் சம்பந்தமில்லை - இது பிரைவேட் - பியூர்லி பிரைவேட் - வீக் எண்ட் கர்ட்டிஸி - என்றெல்லாம் இளகிய வார்த்தைகள் பயன்படுத்தப்பட்டன. நெகிழ்ந்த தொடர்கள் உபயோகப்படுத்தப் பெற்றன.

விருந்தைத் தொடங்கும்போது "யுவர் இன்ஃபர்மேஷன் கேன் எலோன் பிரேக் த ஐஸ்" என்ற இரகசியக் கேபிள் அவருடைய கோட் உள் பாக்கெட்டில் இருந்தது.

இருவருடைய நலனுக்காகவும் இருவருடைய குடும்பங்களின் நலனுக்காகவும் குடிப்பதற்காக 'சீர்ஸ்' சொல்லிக் கொண்டாயிற்று. ஆரம்ப உபசாரங்கள் முடிந்தன.

முதல் ரவுண்ட் முடிகிறவரை லேடஸ்ட் ப்ளூ பிலிம் - நாட்டில் எந்தப் பெண்ணுடைய 'அங்க அசைவுகள்' அழகியவை - எந்த ஸெண்ட் ரொம்ப வாசனை - என்று இப்படி இருந்தது பேச்சு. வேறு திசையில் திரும்பவே இல்லை, திரும்ப மறுத்தது, சண்டித்தனம் பண்ணியது.

இரண்டாவது ரவுண்டில் நியூ கிளியர் சயின்ஸில் நோபல் பரிசு பெற்ற நபரைப் பற்றி மெல்லப் பிரஸ்தாபித்து நிறுத்தினார் இவர். அப்படியே அந்தச் சிறு நூலேணியில் ஏறி 'நியூ கிளியர் அம்பர்லா' வரையில் போய் விடலாம் என்பது இவரது நோக்கமாயிருந்தது.

அவரும் விடவில்லை. சுதாரித்தார். "யு நோ... பேஸிகலி ஐ யாம் எ லிட்டரரி மேன்... ஐ யாம் நாட் இன்ட்ரஸ்டட் இன் ஸயின்ஸ்."

"மே பி. பட் நௌ எ டேய்ஸ் ஸயின்ஸ் டிஸைட்ஸ் எவ்வரிதிங்..."

"டிட் யூ ரீட் ஜான் கிமென்ஸ் லேடஸ்ட் புக் ஆன் எக்ஸிஸ்டென்ஷியலிஸம்?"

இதற்குப் பதில் சொல்லாமல் டேபிளில் இருந்த சீஸ் கட்டிகளில் ஒன்றை எடுத்து வாயில் போட்டுக் கொண்டு, "நீங்கள் டேனிஷ் சீஸ் சாப்பிட்டிருக்கிறீர்களா? சீஸ் என்றால் அதைத்தான் சொல்ல வேண்டும்" என்றார் அவர்.

"எனக்கு சீஸ் அதிகம் பிடிக்காதே, நான் எப்படி இதற்குப் பதில் சொல்ல முடியும்?"

இரண்டாவது பாட்டில் திறக்கப்பட்டது. இவருடைய முயற்சிக்கான நுனிகூட இன்னும் இவருக்குக் கிடைக்கவில்லை.

மாலையில் கடற்கரை பீச் அம்பர்லாவின் கீழ் இருவரும் அமர்ந்திருந்தனர். இவர் நம்பிக்கை இழக்காமல் மீண்டும் ஆரம்பித்தார்.

"இப்போது நாம் இருவரும் சேர்ந்து அமர்ந்திருக்க இந்தக் குடை பயன்படுவதுபோல் நாடுகள் சேர்ந்து பாதுகாப்பாக அமரவும் 'குடை ஏற்பாடு' தேவைப்படலாம் அல்லவா?"

அவர் இதற்குப் பதிலே சொல்லவில்லை. ஓரிரு நிமிஷ இடைவெளிக்குப் பின், "ஆப்பிள் உற்பத்தி மிகுதியால் மலை மலையாகக் குவிந்து போயிற்றாம். மார்க்கெட்டில் விலை குறையாமலிருக்க - அப்படிக் குவிந்த ஆப்பிள் மலைகளைக் கடலில் கொண்டு போய்த் தள்ளிச் சமாளிக்கிறார்களாம்!" என்று வேறு எதையோ ஆரம்பித்தார் அவர்.

"அணு ஆயுத ஏற்பாடுகளையும், அணு ஆயுதம் மூலமான தற்காப்புத் தேடலையும் உலகிலிருந்து ஒழித்தாலொழிய நாடுகள் சமாதானமாகவும் பயமின்றியும் வாழ முடியாது" என்றார் அவர்.

ஒரு 'ஸிப்' குடித்துவிட்டு அவர் கேட்டார்.

"ஹரே கிருஷ்ணா மூவ்மெண்ட் ரஷ்யாவுக்குள் கூட நுழைந்துவிட்டது பார்த்தீர்களா?".

மீண்டும் ஒரு சீஸ் துண்டை எடுத்து வாயில் போட்டுக் கொண்டு அது கரைந்து முடிந்ததும், "ராணுவக்கூட்டு ஏற்பாடுகள் இரண்டாவது உலக மகாயுத்த நாளில் பயன்பட்டதுபோல இப்போதெல்லாம் பயன்படுவதில்லை. கூட்டு ஏற்பாடுகளே பரஸ்பரம் ஏமாற்றிக் கொள்ளத்தான் பயன்படுகின்றன" என்று மெதுவாகத் தொற்றினார் இவர். அவர் பதில் உடனே வந்தது:

"என் தந்தை இரண்டாவது உலக யுத்தத்தில் இராணுவ வீரராகப் பணியாற்றியவர். நிறையச் சொல்லியிருக்கிறார்."

"இரண்டு பக்கத்து நாடுகளே தங்களுக்குள் நேசமாகவும், சகஜபாவத்துடனும் இருந்துவிட முடியாமலும், கூடாமலும் வல்லரசுகள் இரகசியமாகத் தலையிட்டு அவற்றில் ஒரு நாட்டைத் தன் ராணுவ ஆதரவு வலையில் சிக்க வைக்கிறது. இதனால் உருவாகும் டென்ஷன் உலக சமாதானத்தையே பாதிக்கிறது."

"ஆமாம்! உலக சமாதானம் என்பது மந்திரம் போல் அடிக்கடி உச்சரிக்கப்படும் ஓர் அழகிய வார்த்தை."

ஏதடா கொஞ்சம் பிடி கொடுக்கிறானே என்ற நம்பிக்கையுடன்,

"மந்திரங்கள் எல்லாமே பயன் கருதி - பயனை உடனே எதிர்பார்த்தே உச்சரிக்கப்படுகின்றன."

"இருக்கலாம். பட்... நெவர் பிலீவ் வேர்ட் டெகரேஷன். டெகரேடட் வேர்ட்ஸ் வில் ஸெர்வ் நோ பர்ப்பஸ்."

"சமாதானம் என்பதோ - உலக சமாதானம் என்பதோ ஓர்அலங்கரிக்கப்பட்ட வார்த்தையில்லை. அழகு ஊட்டப்பட்ட சொற்றொடரும் இல்லை."

"செயல் ரீதியாகக் காண்பிக்க வேண்டிய பலவற்றை அலங்கரிக்கப்பட்ட சொற்றொடர்களால் பேசியே தீர்த்துக் கொண்டிருப்பது உலகில் ஒரு வழக்கமாகவே ஆகியிருக்கிறது."

"அந்த வழக்கத்தை நாமாவது போக்க முற்பட வேண்டாமா?"

"வழக்கங்கள் இயல்பாகப் போகும் - வரும். நாமாகப் போக்க முடியாது."

இதோடு ஒரு சுற்றுப் பேச்சுவார்த்தை முடிந்துவிட்டது. இவரால் ஒன்றும் தெரிந்துகொள்ள முடியவில்லை. அவர் களைப்பாயிருப்பதாகச் சொல்லி தூங்கப் போய்விட்டார். மறுநாள் காலையில் 'ஏர்பொல்யூஷன்' பற்றிப் பேச்சை ஆரம்பித்தார் அவர். அது பல்வேறு 'பொல்யூஷன்கள்' பற்றி வளர்ந்து கிளைபரப்பி முடிந்தது. பகலில் கடற்கரையில் 'சன்பாத்' எடுத்தார்கள். அப்போது 'ஐஸ் பிரேக்' ஆகவில்லை.

இவருக்குத் தெரிய வேண்டியது தெரியவில்லை. அவர் தெரிவிக்க விரும்பாததைத் தெரிவிக்க நேரவே இல்லை.

அன்று மாலையில் இருவருமே ஹெட் குவாட்டர்ஸுக்குத் திரும்பி ஆக வேண்டும். மறுநாள் இருவரது தூதரகங்களுக்கும் வாரத்தின் முதல் வேலை நாள். அவரவர் தலைகளிலிருந்தும் 'டிப்ளமேடிக் பேக்' கனமாக வந்து குவிந்திருக்கும்.

லக்சுரி சூட்டுக்கும் பீச் ரெஸ்டாரெண்டுக்கும் பில் ஸெட்டில் பண்ண வேண்டிய நேரம் வந்தது. இவர் கிட்டத்தட்ட ஆறாயிரம் டாலர் கொடுத்துக் கணக்குத் தீர்த்தார். அவர் இவருக்குச் சம்பிரதாயமாக நன்றி கூறிவிட்டு அடுத்த 'வீக் எண்ட்'டிற்குத் தம் பங்காக எழுபது மைல் தொலைவிலுள்ள ஒரு ஹில் ஸ்டேஷனுக்கு அழைப்பு விடுத்தார். இவர் ஒப்புக் கொண்டார். ஒப்புக் கொள்ளாமல் தவிர்க்க முடியாது. மரியாதையில்லை.

அந்த வாரம் நிமிஷமாக ஓடிவிட்டது. 'வீக் எண்ட்'டும் வந்தது. 'எமரால்ட் ஹில்ஸ்' ட்ரிப் ஆரம்பமாயிற்று. வழக்கம் போல் இருவர் நலனுக்காகவும் டோஸ்ட் கூறி இருவரும் சியர்ஸ் பரிமாறிச் சிரிப்புகளையும் பரிமாறிக் கொண்டு பேச ஆரம்பித்தால் பேச்சு கார்டனிங், பாட்னி, ஃப்ளோரா அண்ட் ஃபௌனா ஆகியவற்றைச் சுற்றிச் சுற்றியே வந்தது. இருவரும் அந்த மலைநகரின் கதகதப்பான ஸெண்ட்ரல் ஹீட்டிங் உள்ள அறையில் மரம் செடி கொடிகள், பூக்கள் ஆகியவற்றில் சிக்கித் திணறினார்கள்.

இரண்டாவது ரவுண்ட் டிரிங்ஸ்கூட உருப்படியான 'உளவு' விவகாரத்தைத் தரவில்லை. கிரீக் மித்தாலஜி, அக்ரோ போலிஸ் ஆகியவற்றைப் பற்றியே பேச்சு வளர்ந்தது.

மூன்றாவது 'ரவுண்டில்' ஸ்காட்ச் விஸ்கியின் விசேஷ குணம் ஒட்காவுக்கு வருமா இல்லையா என்பது பற்றிய விவாதத்திலேயே சுகமாகக் கழிந்துவிட்டது.

ஏழாயிரத்து முந்நூறு டாலர் ஐம்பது செண்ட்ஸுக்குப் பில் வந்தது. அவர் முகமலர்ச்சியோடு கொடுத்தார். இவர் நன்றி கூறிவிட்டு அடுத்த 'ஹோஸ்ட்' ஆகத் தாம் இருக்கப் போவதை அறிவித்து இடமும் குறிப்பிட்டார். அவரும் முகமலர்ச்சியோடு ஒப்புக் கொண்டார். 'அம்பர்லா' பற்றி மட்டும் ஒரு சிறு நுனிகூடப் புலப்படவில்லை. இரு ஏழை நாடுகளின் சிக்கனமான அந்நியச் செலாவணியில் இன்னும் எவ்வளவு ஆயிரம் இரகசியத்தை அறியவும் அறியவிடாமல் காக்கவும் செலவிட வேண்டுமோ தெரியவில்லை.

"விண்டர் கண்டின்யூஸ் - ஸம்மர் எலோன் கேன் பிரேக் த ஐஸ்" என்ற 'கோட் வேர்ட்' டெலக்ஸைத் தலைமை அகத்துக்கு அனுப்பிவிட்டு, அடுத்த 'வீக் எண்ட்'டை எதிர்பார்த்தார் அவர்.

**(தீபம், தீபாவளி மலர், 1983)**

## 154. ஒரு நட்சத்திரத்தின் தோல்வி!

அவள் 'ஜோக்' அடித்தபோது எல்லோரும் சிரித்தார்கள். அவன் மட்டும் சிரிக்கவில்லை. 'செட்'டில் அவள் நடுநாயகமாக அரசி போல் வீற்றிருந்ததையே அவன் பொருட்படுத்தியதாகவோ, இலட்சியம் செய்ததாகவோகூடத் தெரியவில்லை.

அங்கிருந்த மற்ற எல்லாரும் - புரொட்யூஸர், டைரக்டர் உட்பட அவள் கவனிக்க வேண்டுமென்று நினைத்தபோது கவனித்து, சிரிக்க வேண்டுமென்று நினைத்தபோது சிரித்து, பதற வேண்டுமென்று நினைத்தபோது பதறி, உருக வேண்டுமென்று நினைத்த போது உருகி நடந்து கொண்டார்கள்.

'மூட் அவுட்' ஆகி அவள் ஒத்துழைக்க மறுத்தால், கிட்டத்தட்ட முக்கால் கோடி ரூபாய் முடங்கியுள்ள படம் மேலும் ரீலிசுக்குத் தாமதமாகிவிடும். அவளைப்போல ஒரு சூப்பர் ஸ்டாரைப் புகழ்ந்து தன்னைக் கட்டிக் காரியத்தை முடித்துக்கொள்ள வேண்டிய நிலையில்தான் அவர்கள் எல்லாரும் இருந்தார்கள்.

அவள் மனம் வைத்தால், தன்னுடைய ஜோக்குக்குச் சிரிக்காத - தன்னைப் பொருட்படுத்தாத அந்த இளைஞனை வேலையை விட்டே துரத்திவிட முடியும்... அவன் ரொம்பவும் திமிர் பிடித்தவனாக இருக்க வேண்டும். இல்லாவிட்டால், ஒரு பெண்ணிடம் - அதுவும் பல பேருடைய கனவுகளில் நிறைந்திருக்கும் ஓர் அழகிய சூப்பர் ஸ்டாரிடம் இப்படி அவன் அலட்சியமாக நடந்து கொள்ள முடியாது. கூடாது.

தன்னைப்பற்றி அதிகம் பொருட்படுத்தாத அந்த இளைஞனைப் பற்றி நடிகை விஜயநளினி அதிகம் பொருட்படுத்திச் சிந்தித்தாள். மனத்தை அலட்டிக் கொண்டாள். அவனைப் பற்றி யாரிடமாவது விசாரிக்க வேண்டும் என்று தோன்றியது அவளுக்கு.

"வாட்டர் ப்ரூஃப் கடிகாரத்திலே தண்ணி நுழையாத மாதிரிச் சில பேரோட மனசிலே 'ஹ்யூமரே' நுழையாது. அப்படிப்பட்டவங்களுக்கு 'ஹ்யூமர் ப்ரூஃப்'னு அடைமொழி குடுத்திடவேண்டியதுதான்..." என்று அவன் காதுபடவே ஜாடையாக அவள் கிண்டல் செய்த போதுகூட அங்கிருந்த மற்றவர்கள்தான் அதற்காக நகைத்தார்கள்.

அவன் பிடித்து வைத்த பதுமையைப் போல் கருமமே கண்ணாக, அன்றைய ஷூட்டிங்குக்கான ஸ்கிரிப்ட் கத்தையைச் சரிபார்த்து அடுக்கிக் கொண்டிருந்தான். அவ்வளவிற்கும் அவன் அதிக வயதானவன்கூட இல்லை. நல்ல உயரம், எடுப்பான நாசியோடு கூடிய முகம். கருந்திராட்சைக் குலைகளைத் தலையில் கவிழ்த்தாற் போலச் சுருள் சுருளாக முடி.

தன்னைவிட இரண்டொரு வயது கூடவா, குறையவா என்பதை விஜயநளினியால் அனுமானிக்க முடியாமல் இருந்தது. அவன் அவளைப் பொறுத்தவரை ஒரு புதிராகவே தோன்றினான்.

'இந்த வயதிலேயே இத்தனை மண்டைக் கனமா?' என்று வியப்பாயிருந்தது அவளுக்கு. ஒரு பக்கம் அது கர்வத்தின் விளைவு என்று தோன்றினாலும், மறு பக்கம் 'செட்டில்' தன்னிடமோ மற்றவர்களிடமோ அவன் ஒரு போதும் ஒரு சிறிதும் மரியாதைக் குறைவாக நடந்து கொண்டதில்லை என்பதும் நினைவு வந்தது. நல்லவன், ஆனால், ஜம்பக்காரன் போலும்.

பின் ஏன் அவன் தன்னைப் பொருட்படுத்தவில்லை? சாதாரண முகதாட்சண்யத்திற்காகக் கூட அவன் ஏன் சிரிக்கவில்லை? எல்லாருடைய மரியாதைக்கும், பயபக்திக்கும் உரிய தான் சொல்கிற ஓர் நகைச்சுவையைச் சபை நாகரிகம் கருதியாவது அவன் ஏன் ரசித்திருக்கக் கூடாது? ரசிக்கவே முடியாவிட்டாலும் ரசிப்பதாக ஏன் நடித்திருக்கக் கூடாது.

வாழ்க்கை வசதிகளையும், முகதாட்சண்யத்தையும் கருதி எத்தனை பேர் எத்தனை பிடிக்காத விஷயங்களை விரும்புவதாகவும், ரசிப்பதாகவும் நடிக்கிறார்கள்? அவனும் அப்படி ஏன் சமாளித்திருக்கக் கூடாது? ஏன் சமாளிக்கவில்லை?

மிகவும் புகழ்பெற்ற - செல்வாக்கு நிறைந்த தன்னுடைய கோபத்துக்கு ஆளானால், பார்த்துக் கொண்டிருக்கிற வேலையை இழந்து தவிக்க நேரிடுமே என்கிற தற்காப்பு உணர்ச்சிகூட அவனுக்கு ஏன் இல்லை? அவளைப் பொறுத்தவரை அந்த அழகிய முகத்தில் சிரிப்பற்ற - சீரியஸான இளைஞன் ஓர் ஆச்சரியமாகிப் போனான்.

தனியாக புரொடக்ஷன் மானேஜரிடம் விசாரித்தாள் அவள். அவ்வளவு பெரிய நட்சத்திரம், ஸ்கிரிப்ட் அஸிஸ்டெண்டாகச் சேர்ந்திருக்கும் அந்தப் புதிய பையனைப் பற்றி விசாரித்தபோது, புரொடக்ஷன் மானேஜர் பதறிப் போனான்.

"ஏன் கேட்கிறீங்க மேடம்? அவன் உங்க கிட்ட ஏதாவது தப்பா நடந்துகிட்டானா?"

"நோ... நோ... அப்பிடியெல்லாம் ஒண்ணுமில்லே... ரொம்ப 'ரிஸர்வ்ட் டைப்' போல இருக்கு... எப்பவும் மூஞ்சியை 'உம்'னு வச்சுக்கிட்டு..."

"பெரிய படிப்பாளி... ரொம்ப விஷயம் தெரிஞ்ச பையன்... வேற வேலை கிடைக்காததாலே நம்ம வசனகர்த்தா சாரிட்ட அஸிடெண்டா சேர்ந்திருக்கான். கொஞ்சநாள் எங்கியோ காலேஜ்லே புரொபஸாராக்கூட இருந்தான். பழகத் தெரியாததுனாலே தான் அங்கேயும் தகராறு. சூதுவாது கள்ளங்கபடமில்லாமே - ஒளிவு மறைவு தெரியாம - மனசுலே பட்டதைப் பட்டுன்னு சொல்லிடறவங்க... எப்படி மேடம் முன்னுக்கு வர முடியும்?"

"அவர் பேரு... என்ன?"

அந்தப் பையனை மேடம் 'அவர்' போட்டு அழைத்தது புரொடக்ஷன் மானேஜருக்கு வியப்பை அளித்திருக்க வேண்டும்.

"நீங்க 'அவன்'னே சொல்லுங்க மேடம்; உங்க அனுபவத்துக்கும் ஃபீல்டு எக்ஸ்பீரியன்சுக்கும் முன்னாடி... அவன் பேரு அழகியநம்பி. இங்கே எல்லாரும் 'நம்பீ'ன்னு கூப்பிடுவோம்... வேற ஏதாவது..."

"ஒண்ணுமில்லே... சும்மாத்தான் விசாரிச்சேன்... அந்த ஆளு ஒரு மாதிரி எப்பவும் 'மொரோஸா' இருக்கிறதைப் பார்த்து யாருன்னு விசாரிக்கத் தோணிச்சு..."

"ஏதாச்சும் தப்புத் தண்டாவா நடந்துக்கிட்டா உடனே சொல்லுங்க... கணக்குத் தீர்த்து வீட்டுக்கு அனுப்பிச்சுடலாம் மேடம்!"

இது நடந்து நாலைந்து தினங்களுக்குப்பின், கோவளத்தில் ஓர் அவுட்டோர் ஷூட்டிங்கில் இடைவேளை 'லஞ்ச்' டயத்தின் போதும் முன்பு நடந்தது போலவே ஒரு சம்பவம் நடந்தது. விஜயநளினிக்கு வீட்டிலிருந்து சுடச்சுட மணக்க மணக்கப் பகலுணவு கேரியரில் வந்திருந்தது.

அதில் எல்லா முக்கிய அயிட்டங்களையும் சிக்கன் ரோஸ்ட் உட்பட ஒரு பிளேட்டில் எடுத்து வைத்து, அவளேஅந்த ஸ்கிரிப்ட் அஸிஸ்டெண்ட் நம்பியைக் கூப்பிட்டு, "எடுத்துக்குங்க... ப்ளீஸ்..." என்று புன்முறுவலோடு வேண்டினாள்.

கெஞ்சாத குறையாக இருந்தது அவளுடைய குரல். ஆனால், அவன்தான் கையோடு கொண்டு வந்திருந்த அலுமினியம் டிபன் டப்பாவைக் காண்பித்து, "நோ, தேங்க்ஸ், நான் கொண்டு வந்திருக்கேன்" என்று மறுத்து விட்டான்.

அவள் அப்படித் தனக்கு வந்த சாப்பாட்டை தங்களுக்கு அவள் கையாலேயே பகிர்ந்து கொடுக்க மாட்டாளா என்று தயாரிப்பாளரும் - டைரக்டரும் கூட ஏங்கித் தவித்துக் கொண்டிருந்தார்கள். அவனோ மறுத்துவிட்டான்!

"மேடம்! அவனுக்குக் குடுத்து வைக்கலே... இங்கே குடுங்க! நான் காத்துக்கிட்டிருக்கேன்..." என்று டைரக்டர் அந்தப் பிளேட்டைப் பவ்யமாகக் கைநீட்டி வாங்கிக் கொண்டு, அவள் அருகே அமர்ந்து சாப்பிடத் தொடங்கினார். அயிட்டங்களின் ருசியைப் பற்றிப் புகழ் மாலை சூட்டிய வண்ணமே உண்டு முடித்தார்.

அப்படிச் சாப்பிடும்போதும், சாப்பிட்டு முடித்த பின்பும் விஜயநளினி உதிர்த்த ஜோக்குகளுக்காக எல்லாரும் விழுந்து விழுந்து சிரித்தனர். அந்தச் சிரிப்பு வெள்ளத்தில் அவன் மட்டும் ஒரு தனித் தீவாக அசையாமல் இருந்தான். தனியே பக்கத்தில் ஒரு மரத்தடியில் அமர்ந்து தீவிரமாக ஸ்கிரிப்டுகளை என்னவோ செய்து கொண்டிருந்தான்.

அவன் எங்கே என்ன செய்து கொண்டிருக்கிறான் என்பதில் தவறாமல் ஒரு கண் வைத்திருந்த விஜயநளினி அந்தப் பக்கம் கையை நீட்டி, வசனகர்த்தாவிடம் "உங்க அஸிஸ்டெண்ட்டுக்குக் காது கேட்குமா இல்லையா?" என்று குத்தலாக வினவினாள்.

"காதெல்லாம் நல்லாக் கேடகும்! அதுலே ஒண்ணும் கோளாறு இல்லே... ஆள்தான் ஒரு மாதிரி ரிஸர்வ்ட் டைப். கலகலன்னு பழகமாட்டான்... மெத்தப் படிச்ச மேதாவிகள்ளாம் அப்படித்தான் இருப்பாங்க போலிருக்கு!"

என்று வசனகர்த்தா, விஜயநளினிக்குச் சொல்லிய பதில் உட்பட எல்லாமே அவன் காதில் தெளிவாக விழுந்தும் அவன் அவர்களை - அவற்றைப் பொருட்படுத்தியதாகவே காட்டிக் கொள்ளவில்லை.

ஆனால், அவள் மனத்திலே அவன் தான் இருந்தான். சுற்றி அருகிலமர்ந்து பேசிச் சிரித்துக் கொண்டிருந்த யாரும் அவளைப் பாதிக்கவே இல்லை. பேசாமலும் சிரிக்காமலும் ஒதுங்கியிருந்த அவன்தான் அவளைப் பாதித்து ஏங்க வைத்திருந்தான்.

எரிச்சல் எரிச்சலாக வந்தது அவளுக்கு. புரொடக்ஷன் மானேஜரிடம் சொல்லி ஒரே நிமிஷத்தில் அந்தத் திமிர் பிடித்தவனை வேலையிலிருந்து துரத்திவிட அவளால் முடியும். ஆனால், அதைச் செய்ய அவள் மனம் ஒப்பவில்லை. அந்த அழகிய இளைஞனை அவள் அழிக்க விரும்பவில்லை. ஜெயிக்கவே விரும்பினாள்.

ஒன்றை அழிப்பது வேறு; ஜெயிப்பது வேறு. அவனை ஜெயிப்பதிலுள்ள சந்தோஷம் அழிப்பதில் கிடைக்க முடியாது. ஒரு சிங்கத்தை அதற்குத் தெரியாமல் மறைந்திருந்து சுட்டு வீழ்த்தி அழிப்பதைவிட - உயிரோடு பிடித்துக் கூண்டிலடைத்து ஜெயிப்பதும், 'இதை நான்தான் ஜெயித்தேன்' என்று பலரறியப் பெருமிதப்படுவதுமே அதிக மரியாதைக்குரியவை. அவள் அந்த இளஞ்சிங்கத்தை அழிக்க விரும்புவதற்குப் பதில் ஜெயிக்கவே விரும்பினாள்.

சௌந்தரிய தேவதைபோல் தான் ஒருத்தி அங்கு இருப்பதை உடனிருக்கும் அத்தனை பேரும் உணர்ந்து, ஒப்புக்கொண்டு, மதித்துப் பயந்து பதறிக் கொண்டிருக்கும்போது - அவன் ஒருத்தன் மட்டும் அதை உணராமலும், ஏற்காமலும், பயப்படாமலும், பதறாமலும் பணியாமலும் இருந்தது அவளை என்னவோ செய்தது...

அவள் வேறு எதைப் பற்றியும், யாரைப் பற்றியுமே நினைக்காமல் அதைப் பற்றியும் - அவனைப் பற்றியுமே நினைத்துத் தவித்தாள். எவ்வளவோ முயன்றும் அவளால் அவனை மறக்க முடியவில்லை. மறக்க முயன்றாலும் அவன்தான் நினைவுக்கு வந்தான். அவனைத் தவிர வேறெதுவுமே நினைவில் இல்லை.

இரண்டு மூன்று நாட்கள் கழித்து ஓர் இன்டோர் ஷூட்டிங்கிற்காக, மேக்-அப் அனெக்ஸிலிருந்து செட்டுக்குள் நுழையும் குறுகலான இடைவழியில் அவள் அவனை நேருக்கு நேர் சந்தித்தாள். தற்செயலாக நேர்ந்த தவிர்க்க முடியாத அந்தச் சந்திப்பின் போது அவளும் தனியாயிருந்தாள், அவனும் தனியாயிருந்தான்.

அவனை ஜெயித்து மடக்கிப் போட இதுதான் சரியான சமயம் என்று அவளுக்குத் தோன்றியது. கொஞ்சம் துணிந்தே செயல்பட்டாள் அவள். கருந்திராட்சைக் குலைகளாகச் சுருண்டு மின்னிய அவன் தலையில் வலது கரத்தைக் கொடுத்து அளைந்தபடி, "மிஸ்டர் நம்பீ! உங்களுக்கு என் மேல் என்ன கோபம்?" என்று இதமான கனிவான குரலில் கேட்டாள்.

அவளது அழகிய சண்பகப்பூ விரல்களைத் தன் தலையிலிருந்து விலக்கியபடி, "மிஸ் விஜயநளினி! இதெல்லாம் என்ன...? யாராவது பார்த்தால் தப்பாக நினைக்கப் போகிறார்கள்?" என்று கடிந்து கொள்கிற குரலில் அவளைக் கேட்டான் அவன்.

"சொன்னால் தான் விடுவேன். சொல்லுங்க... என் மேல் உங்களுக்கு என்ன கோபம்?"

"எனக்கா? உங்க மேலேயா...? இதென்ன பைத்தியக்காரத்தனமான கேள்வி? உங்க மேலே கோபப்பட நான் யார்?"

"பின்னே ஏன் சிரிக்கமாட்டேங்கிறீங்க...?"

"நான் காரணமில்லாமச் சிரிக்கிறதில்லே... மத்தவங்க சிரிக்கிறப்ப ஒப்புக்காகக் கூடச் சேர்ந்து சிரிக்கிற வழக்கமும் எங்கிட்டக் கிடையாது. அதை நீங்க தப்பா புரிஞ்சிக்கக்கூடாது..."

"என்னோட ஜோக் அவ்வளவு சுமாராவா இருக்கு?"

"உங்க ஜோக் மத்தவங்களுக்குப் பிரமாதமாகவே இருக்கலாம்..."

"உங்களுக்கு?"

"எனக்கா...? ஐயாம் நாட் ஸோ சீப்..." என்று சொல்லத் தொடங்கி, வாக்கியத்தை முடிக்காமல் பாதியிலேயே நிறுத்தினான் அவன்.

"மத்தவங்க அத்தனை பேரும் சிரிக்கிறதும் பாராட்டறதும் எனக்குப் பெரிசா படலே. நீங்க சிரிக்காததும் பாரட்டாததும் தான் பெரிசா மனசை உறுத்துது..."

"இஸ் இட்...? ஐயாம் ஸோ ஸாரி மிஸ் விஜயநளினி!"

மற்றவர்களைப்போல் அவன் செயற்கையான மரியாதையை அளித்துத் தன்னை 'மேடம்' என்று கூப்பிடாமல் பேரைச் சொல்லியே கூப்பிட்டது, அப்போது அவளுக்கு மிகவும் பிடித்திருந்தது.

படப்பிடிப்பிற்காக மேக்-அப் அனெக்ஸிலிருந்து அவள் செட்டுக்குள் நுழைந்தாள். சிறிது நேரத்தில் அவனும் அதே செட்டுக்குள் ஸ்கிரிப்ட் கத்தைகளுடன் வந்தான்.

படப்பிடிப்பு நிற்காமல் தொடர்ந்து பகல் ஒரு மணி வரை நடந்து கொண்டிருந்தது. சோக உணர்ச்சி நிறைந்த சில கட்டங்களை அன்று எடுக்க வேண்டியிருந்தது. விஜயநளினி பிரமாதமாக நடித்தாள். ஷாட் எல்லாம் கச்சிதமாக ஓ.கே. ஆயின.

செட்டில் இருந்தவர்கள் மூக்கில் விரலை வைத்து ஆச்சரியப்படும் வண்ணம் அற்புதமாகத் தன் திறனை வெளிப்படுத்தினாள் சூப்பர் ஸ்டார் விஜயநளினி. ஒன்றரை மணிக்கு மேல் பகல் உணவு இடைவேளைக்காக வழக்கம்போல் ஷூட்டிங் நின்றது. எல்லாரும் கும்பல் கும்பலாகச் சாப்பாட்டுக்குப் பிரிந்து போனார்கள்.

விஜயநளினி, டைரக்டர், தயாரிப்பாளர், வசனகர்த்தா, அவரது உதவியாளனான நம்பி என்ற அந்த இளைஞன் ஆகியோர் மட்டும் எஞ்சினார்கள். தன்னுடைய டிபன் டப்பாவை எடுத்துக்கொண்டு வெளியே புறப்பட இருந்த நம்பியை அவள் கவனித்துவிட்டாள்.

“மிஸ்டர் நம்பீ! எங்கே கிளம்பிட்டீங்க...? சும்மா இங்கேயே உட்கார்ந்து சாப்பிடுங்க...” என்று அவனுக்காகத் தானே ஒரு மடக்கு நாற்காலியை எடுத்து விரித்துப் போட்டாள்.

ஏற்கனவே நொந்து போயிருக்கும் அவள் மனத்தை மேலும் நோகச் செய்யக்கூடாது என்று கருதியோ என்னவோ, அவன் மறுக்காமல் அந்த நாற்காலியில் அமர்ந்தான்.

எல்லாரும் சாப்பிட்டுக் கொண்டிருக்கும் போது தயாரிப்பாளர், “சாப்பாட்டை-விட உங்க ஜோக்ஸ் தான் ரொம்ப சுவையா இருக்கும். எங்கே...தொடங்குங்க... பார்க்கலாம்” என்று ஆரம்பித்தார்.

எல்லாரும் அதை ஒப்புக் கொண்டு வரவேற்பதுபோல் சிரித்தார்கள். அவள் ஓரக் கண்ணால் அவன் பக்கம் பார்த்தாள். அவன் சிரிக்கவில்லை.

வேண்டா வெறுப்பாகத் தட்டுத் தடுமாறி எதையோ சொல்லத் தொடங்கி, “மன்னிச்சுக்குங்க! ஜோக் எதுவும் வரலே...” என்று அவள் ஆற்றாமையோடு முடித்தாள்.

அதற்குப் பதிலாக தயாரிப்பாளர் ஏதோ ஜோக் அடித்தார். அதற்கு எல்லாரும் சிரித்தார்கள். அவளுக்குச் சிரிக்க வரவில்லை. அவன் சிரிக்கவில்லை.

“சோக நடிப்பினாலே மேடத்துக்கு இன்னிக்கு ‘மூட்’ அவுட்டாயிடிச்சு!” என்றார் தயாரிப்பாளர். சொல்லிவிட்டு அவளைக் கேட்காமலே பிற்பகல் ‘ஷெட்யூல்’களையும் ரத்துச் செய்தார். செட்டிலிருந்து காருக்குச் சென்றபோது அவள் அந்த இளைஞனின் அருகே சென்று மலர்ந்த முகத்தோடு ஒரு நாளுமில்லாத புது வழக்கமாகப் “போய் வருகிறேன்!” என்று சொல்லிக் கொண்டாள்.

அவனை அழிக்கவும் முடியாமல், ஜெயிக்கவும் இயலாமல், தானே அவனுக்குத் தோற்றுப் போயிருப்பதை இப்போது அவள் தனக்குத் தானே அந்தரங்கமாக உணர்ந்தாள்.

**(இதயம் பேசுகிறது, தீபாவளி மலர், 1983)**

## 155. வசதியாக ஒரு வேலை

துபாயிலோ, குவைத்திலோ வேலை வாங்கித் தருவதாக மாத்யூ செய்திருந்த பத்திரிகை விளம்பரத்தைப் பார்த்துத்தான் அகல்யா அவனைச் சந்திக்கச் சென்றாள்.

நொடித்துத் தளர்ந்து நோயில் விழுந்து விட்ட வயதான பெற்றோரையும், படித்துக் கொண்டிருந்த தம்பி தங்கைகளையும் காப்பாற்ற அவளுக்கு ஓர் உத்தியோகம் தேவைப்பட்டது. உத்தியோகமாக மட்டுமில்லை, கை நிறையப் பணம் சம்பாதிக்கிற உத்தியோகமாகத் தான் தேடினாள் அவள். ஆனால், குறைவாகச் சம்பாதிக்க முடிந்த வேலை கூடக் கிடைக்கிற வழியாயில்லை.

மாத்யூவை அவள் சந்தித்தது தன்னுடைய அதிர்ஷ்டம் என்று அவனே நினைத்தான். முதலில் அவளும் அப்படித்தான் நினைக்க நேர்ந்தது.

வியாபாரத்தில் மகத்தான பேராசைகளும், அதற்குத் தேவையான திட்டங்களும் முனைப்பும் உள்ள நடுத்தர வயது மனிதனை நமக்குள் கற்பித்துப் பார்த்துக் கொண்டால் அவன்தான் 'மாத்யூ'வாக இருப்பான். மாத்யூவின் நினைப்பிலும் அகராதியிலும் 'சாத்தியமில்லை; முடியாது' என்ற வார்த்தைகளே கிடையாது.

அவன் ஒருவனுடைய அகராதியில் மட்டுமில்லை. பணம் சம்பாதிக்க விரும்புகிற எவருடைய அகராதியிலும் அந்த வார்த்தைகள் இருக்க முடியாதுதான். மனமிருந்தால் மார்க்கம் உண்டு என்பதுதான் வியாபாரம்.

மாத்யூவோ சகலகலா வல்லவனாக இருந்தான். அரண்மனைக்காரன் தெருவாகி விட்ட அர்மேனியன் தெருவின் கட்டடம் ஒன்றின் மூன்றாவது மாடியில் 'மாத்யூ டிராவல்ஸ்' என்று போர்டு தொங்கினாலும் போர்டில் அறிவிக்கப்படாத வேறு பல லாபகரமான வியாபாரங்களையும் அவன் செய்தான். அவனுடைய நிறுவனத்தில் ஆண்களை விடப் பெண்கள் - அதுவும் இளம் பெண்கள் அதிக எண்ணிக்கையில் வேலை பார்த்தார்கள்.

அகல்யாவைப் பார்த்தவுடன் மாத்யூவுக்குப் பிடித்துவிட்டது.

"துபாய் வேலை ஒன்றும் லட்டு மாதிரி உடனே கையில் கிடைத்துவிடாது. அதற்கு நிறைய முன் பணம் செலவழிக்க வேண்டும். உன்னை எனக்குப் பிடித்திருக்கிறது. இங்கேயே வேண்டுமானால் ஒரு வேலை தருகிறேன்" என்று வார்த்தைகளையும் புன்னகையையும் சேர்த்து அவள் முன் வழங்கினான் மாத்யூ.

அகல்யா சம்மதித்தாள். அவளுக்கு மலையாளம், தமிழ், ஆங்கிலம் ஆகிய மூன்று மொழிகள் தெரிந்திருந்தது வசதியாகப் போயிற்று. அவளுடைய உயர்நிலைப் பள்ளிப்

படிப்புக் காலம் வரை அவர்கள் குடும்பமே பாலக்காட்டில்தான் இருந்தது. பின்புதான் சென்னைக்குப் பிழைப்பைத் தேடிக் குடியேறியது.

மாத்யூவைப் போன்ற கெட்டிக்கார வியாபாரிக்கு இப்படி மூன்று மொழிகள் தெரிந்த பெண் எத்தனையோ விதங்களில் பயன்படக் கூடியவளாகவும் அவசியமாகவும் இருந்தாள்.

எப்படியோ மாதம் இருநூறு, முந்நூறு ரூபாய் கிடைக்கிற மாதிரி ஒரு வேலை கிடைத்தால் கூடப் போதும் என்று தேடி அலைந்தவளுக்கு, 'முதலில் மாதம் ஐநூறு ரூபாய் தர முடியும்! அப்புறம் போகப் போக ஏதாவது பார்த்துச் செய்யலாம்' என்று மாத்யூ கூறிய சொற்கள் அமிர்தமாகக் காதில் ஒலித்தன.

'மாத்யூ டிராவல்ஸ்' அலுவலகத்தில் ஏற்கனவே அகல்யாவின் வயதை ஒத்த வயதுடைய வேறு சில பெண்களும் வேலை பார்த்து வந்தார்கள். துணைக்கு இன்னும் இரண்டு மூன்று பெண்கள் இருக்கிறார்கள் என்பதை நினைத்த போது அகல்யாவுக்கு ஆறுதலாக இருந்தது.

வீட்டில் அப்பளமும், சீடையும், முறுக்கும் தயாரித்துக் கடைகளுக்கும், ஸ்டால்களுக்கும் தேடிக் கொண்டு போய் விற்றுப் பிழைத்து வந்த குடும்பத்தில் ஒரு நபர் உத்தியோகத்துக்குப் போய் மாதச் சம்பளம் வாங்கப் போவதை எண்ணினால் மகிழ்ச்சியாகத்தான் இருந்தது.

"அகல்யாவுக்கு வசதியாக ஒரு வேலை கிடைச்சால் தான் நம்ம குடும்பம் தலை தூக்க முடியும்" என்று அடிக்கடி அவள் தந்தை பெருமூச்சுடனும் ஏக்கத்துடனும் கூறுவது உண்டு. அந்தப் பெருமூச்சுக்கும் ஏக்கத்துக்கும் இனி அவசியமில்லை என்பதை நினைத்தபோது ஒரு விநாடி அகல்யாவுக்கே நிம்மதியாயிருந்தது.

"இது மிஸ் அகல்யா. நாளையிலிருந்து இங்கே வேலைக்கு வரும். டெலக்ஸ் அனுப்பறது, ரெஸீவ் பண்றதெல்லாம் கத்துக் குடுக்கணும்" என்று மற்ற இரண்டு பெண்களிடம் மாத்யூ அவளை மலையாளத் தமிழில் அறிமுகப்படுத்திய போது அவர்கள் சிரித்த ஒரு தினுசான சிரிப்பும், நடந்து கொண்ட தினுசும் அகல்யாவுக்கு என்னவோ போல் இருந்தன.

ஒரு வேளை தான் அவர்களை விட அழகாகவும் நிறமாகவும் இருப்பதால் அவர்கள் பொறாமை அப்படி வெளிப்பட்டிருக்கலாம் என்று அவளாகக் கற்பனை செய்து கொண்டாள்.

தன் வீட்டில் போய் அகல்யா இந்த விவரங்களைச் சொல்லியபோது எல்லோருக்குமே திருப்தியாகத்தான் இருந்தது. சின்னஞ்சிறு குழந்தைகளை முறுக்குடனும், சீடையுடனும் கடற்கரைக்கும், கடைவீதிகளுக்கும் துரத்துவதை இனியாவது குறைத்துக்கொள்ள முடியும் என்று நினைத்து அந்த ஏழைக் குடும்பம் நிம்மதியடைந்தது.

மாத்யூ டிராவல்ஸில் வேலை பார்க்கச் சென்ற முதல் நாளே அங்கிருந்த மற்றவர்கள் தன்னிடம் அவ்வளவு சுமுகமாகவும் கலகலப்பாகவும் பழகவில்லை என்பது அகல்யாவுக்கே புரிந்தது. பொறாமையா, அசூயையா... எது காரணம் என்பதும் தெரியவில்லை.

அவர்கள் அவளைச் சுட்டிக்காட்டித் தங்களுக்குள் கண்களைச் சிமிட்டி ஏதோ மெல்லிய தணிந்த குரலில் பேசிக் கொண்டார்கள். நமட்டுச் சிரிப்புச் சிரித்தார்கள். அகல்யாவின் குடும்ப வறுமையும், சிரமங்களும் இவற்றை எல்லாம் பொருட்படுத்தாமலும் கண்டு கொள்ளாமலும் இருக்க அவளுக்குக் கற்றுக் கொடுத்திருந்தன.

போகப் போகப் பல விவரங்கள் அகல்யாவுக்குப் புரிந்தன.

மாத்யூ டிராவல்ஸில் வாடிக்கைக்காரர்கள் பயணம் செய்ததைவிட மாத்யூதான் அதிகமாகப் பிரயாணம் செய்தான். இன்று சிங்கப்பூர், நாளை ஹாங்காங், நாளன்றைக்கு பாங்காக், துபாய் என்று மாத்யூ மாதத்தில் முக்கால்வாசி நாட்கள் வெளியேதான் இருந்தான். வெளிநாடுகளுக்கும், வெளிநாடுகளிலிருந்தும், பூடகமான டெலக்ஸ் செய்திகள் பறந்தன. டிக்கட்டுகள் விமானப் பயண ஏற்பாடுகள் மூலம் வந்த வருவாயை விடப் பல லட்சக்கணக்கில் வேறு வகை வருமானம் குவிந்தது.

கடத்தல், கொல்லைப்புற வழியில் மணி எக்ஸ்சேஞ்ஜ் என்று பல விவகாரங்கள் அங்கே காதும் காதும் வைத்தாற்போல் நடந்து கொண்டிருந்தன. சூதுவாதில்லாத ஏழைக் குடும்பம் ஒன்றின் அப்பாவிப் பெண்ணாகிய அகல்யா கபடங்களையும், கள்ளங்களையும் புதிதாக மெல்ல மெல்லக் கற்றுத் தேற வேண்டியிருந்தது. கலையாகப் பழக வேண்டியிருந்தது.

சில நாட்கள் காலை ஏழரை மணிக்கே வர வேண்டியிருந்தது. வேறு சில நாட்களில் வீடு திரும்பவே இரவு பத்து மணிக்குமேல் ஆயிற்று. இரவு பத்தரை மணிக்குமேல் சிட்னி, சிங்கப்பூர் மார்க்கமாகச் சென்னையில் இறங்கும் விமானத்தில் அவர்கள் எதிர்பார்க்கிற பிரயாணி அல்லது பிரயாணிகள் இருந்தால் மீனம்பாக்கம் விமான நிலையத்துக்கே போக வேண்டியிருக்கும்.

'மாத்யூ டிராவல்'ஸின் மர்மங்களும், உள் விவகாரங்களும் இரகசியங்களும் அவளுக்குப் புரியப் புரிய அவளது சம்பளத்தில் ஒவ்வொரு நூறாகக் கூடிக் கொண்டே போயிற்று. கம்பெனியில் அவள் தவிர்க்க முடியாதவள் ஆனாள்.

'ஹண்ட்ரட் கோகனட்ஸ்' - என்று தொடங்கி 'நூறு தேங்காய்கள் அனுப்பவும்' என ஒரு தந்தியோ டெலக்ஸோ வந்தால் அந்தச் சொற்களின் அன்றைய அர்த்தம் என்ன என்பது மாத்யூவுக்கு அல்லது அகல்யாவுக்கு மட்டுமே தெரியும். நூறு தேங்காய்களைப் போலப் பல இரகசிய வாக்கியங்கள் இவர்கள் அனுப்பும் டெலக்ஸிலும், பெறும் டெலக்ஸிலும் சர்வ சகஜமாக அன்றாடம் புழங்கிக் கொண்டிருக்கும்.

'டிராவல்ஸ்' என்பது பெயருக்கு ஒரு முக மூடியாக - அங்கீகரிக்கப்பட்ட பெயராக இருந்ததே ஒழிய அங்கு லாபம் தருகிற - சட்ட விரோதமான பல காரியங்கள் நடந்தன.

சிங்கப்பூரிலும், ஹாங்காங்கிலும் மாத்யூவுக்கு ஆட்களும், ஏற்பாடுகளும் உண்டு. இரண்டாயிரம் சிங்கப்பூர் டாலரை சிங்கப்பூரில் மாத்யூவின் ஆளிடம் இந்தியாவுக்குப் பயணம் செய்கிற ஒருவர் கொடுத்துவிட்டால் அதன் அதிகாரப் பூர்வமான இந்திய மதிப்பை விடக் கூட ரூபாய்கள் உள்ள ஒரு தொகையை மாத்யூ டிராவல்ஸ் இங்கே அவருக்கு ரொக்கமாகக் கொடுத்துவிடும். நம்பிக்கை அடிப்படையிலும் சில அடையாளக் குறியீடுகளை வைத்தும் இந்தச் சட்ட விரோதமான இரகசியப் பொருளாதாரப் பரிமாற்றம் நடைபெற்று வந்தது. மிக மிக அந்தரங்கமாக அதில் இந்திய ரூபாய்களை வாங்கிக் கொண்டு டாலர், ஸ்டெர்லிங் நோட்டுக்களைக் கூட விற்று வந்தார்கள்.

தேச விரோதமான அபாயகரமான இந்தக் காரியங்களைச் சாதாரணமான தொரு டிராவல் ஏஜென்ஸி என்ற முகமூடி அணிந்து செய்து வந்தான் மாத்யூ.

'ஆபத்தான இந்த வேலையை விட்டு விட வேண்டும். குறைந்த சம்பளம் கிடைத்தாலும் வம்பில்லாத ஒரு நல்ல வேலையைப் பார்க்க வேண்டும்' - என்று நடுநடுவே அகல்யாவுக்குத் தோன்றும். அம்மாதிரி மனநிலையையோ... அதைப் பிரதிபலிக்கும் பேச்சையோ அவளிடம் கண்டால் உடனே சற்றும் தயங்காமல் அவள் சம்பளத்தில் நூறு ரூபாயை உயர்த்தினான் மாத்யூ.

ஒரு சில மாதங்களில் அவள் மாதச் சம்பளம் ஆயிரத்தைத் தாண்டிவிட்டது. இம்மாதிரி வியாபார நிறுவனங்களில் பரஸ்பர நம்பிக்கையும் உள் இரகசியங்களைக் காப்பாற்றுவதுமே முக்கியத் தகுதி. அது ஆண்களைவிடப் பெண்களிடம் அதிகமாக இருப்பதை மாத்யூ அனுபவத்தில் அறிந்திருந்தான். பெண்களிடம் ஒரு சௌகரியம் இருந்தது. தங்கள் இரகசியங்கள் காப்பாற்றப்பட வேண்டும் என்று நினைப்பவர்கள் அதைக் காப்பாற்ற வேண்டிய பெண்களின் சில இரகசியங்களைத் தங்களோடு வைத்திருந்தால் பரஸ்பரம் இருதரப்பு இரகசியங்களும் பிழைத்துவிடும். ஆண்களிடம் வேறு தொல்லை இருந்தது. கோவாவிலிருந்து 'டிஸௌஸா' என்றொரு வாலிபன் ஆரம்பத்தில் 'மாத்யூ டிராவல்'ஸில் வேலை பார்த்தான். ஒரு வருடத்துக்குள் தொழில் இரகசியங்களை எல்லாம் புரிந்து கொண்டு பக்கத்துப் பிராட்வேயில் 'டிஸௌஸா டிராவல்ஸ்' என்று ஆரம்பித்துப் பிரிந்து போய் விட்டான். இந்தக் கசப்பான அனுபவத்துக்குப் பின் மாத்யூ - பெண்களை மட்டுமே அதிக அளவில் வேலைக்குச் சேர்த்தான்; அதுவும் அதிக அளவு பொருளாதார வசதியில்லாத ஏழைக் குடும்பங்களைச் சேர்ந்த பெண்களை விவரமறிந்து வேலைக்குச் சேர்த்தான்.

பொதுவான பயமும் - பண ஆசையும் - விசுவாசமும் இணைந்திருக்கும் நபர்களாகப் பொறுக்கி எடுத்துக் கூட வைத்துக் கொண்டான் மாத்யூ. டிஸௌஸா போன்றவர்களை மீண்டும் உள்ளே விட அவன் தயாராயில்லை.

முதல் இரண்டு வருடங்கள் வரை எல்லாம் பிரமாதமாயிருந்தன. சம்பளத்தைத் தவிர திடீர் திடீரென்று வெளிநாட்டுக் கடிகாரம், நைலெக்ஸ் புடவை, துணிமணிகள், ஸெண்ட் என்று அகல்யா வீட்டில் கொண்டு வந்து குவித்தாள். தம்பி, தங்கைகள் கையில் எல்லாம் 'டிஜிட்டல் வாட்ச்கள்' டாலடித்தன. கைக்கடிகாரம் கட்டிக் கொண்டு பழக்கமே இல்லாத கர்நாடகமான அம்மா கையில் கூட வற்புறுத்தி ஒரு 'டிஜிட்டல்' கைக்கடிகாரத்தை மாட்டிவிட்டிருந்தாள் அகல்யா. இனிமேல் வீட்டில் கடிகாரம் கட்டுவதற்குக் கைகள் மீதமில்லை என்ற அளவுக்கு ஆகிவிட்டது.

வேலை பார்ப்பவர்களின் நம்பிக்கையையும், விசுவாசத்தையும் அடைய மாத்யூ பல நல்ல காரியங்களைச் செய்தான். ஒவ்வொரு மாதமும் கடைசி வேலை நாளன்று சுளை சுளையாகச் சலவை நோட்டுக்களை எண்ணிச் சம்பளம் கொடுத்தான்.

அகல்யா அங்கு வேலைக்குச் சேர்ந்த மூன்றாவது வருடம், நான்காவது மாதமாகிய ஏப்ரல் மாதம் முப்பதாம் தேதி. அன்று காலை 10 மணிக்கே வழக்கம்போல் மாத்யூ எல்லாருக்கும் சம்பளப் பட்டுவாடா செய்து கொண்டிருந்தான். அந்தச் சமயத்தில் திடீரென்று எதிர்பாராதவிதமாக மப்டியில் நுழைந்த ஒரு போலீஸ் பார்ட்டி மாத்யூவிடம் அடையாளங்களையும், ஆர்டரையும் காண்பித்து விட்டு அலுவலகத்தைச் சோதனை போட ஆரம்பித்தார்கள்.

சம்பளப் பணத்துக்காகப் பிரித்துத் திறந்து வைக்கப்பட்டிருந்த மாத்யூவின் கைப்பெட்டியில் இருந்து பச்சை நிற ஸ்டெர்லிங் நோட்டின் கட்டு ஒன்று சரிந்தது. வந்திருந்த போலீஸ் ரெய்டு பார்ட்டியின் முக்கிய இன்ஸ்பெக்டர் அதை கவனித்து விடவே தலைவலி ஆரம்பமாயிற்று. பெட்டியை முழுவதும் குடைந்ததில் ஸ்டெர்லிங் டாலர் என்று மேலும் பல கத்தைகள் அகப்பட்டன. இன்ஸ்பெக்டர் விவரங்களை விசாரித்தபோது "தங்கள் கஸ்டமர்களாகிய பிரயாணிகள் சிலருக்காகப் பாங்கிலிருந்து எடுத்த எக்ஸ்சேஞ்ஜ் தொகையே அது" என்று துணிந்து புளுகினான் மாத்யூ. இன்ஸ்பெக்டர் உடனே அதற்கான 'டாகுமெண்ட்ஸ்' எங்கே என்று கேட்டபோது அவனால் சமாளிக்க முடியவில்லை. தடவினான். பூசி மெழுகினான். கடைசியாகக் கைதானான். அவன் கண் முன்பே 'மாத்யூ டிராவல்ஸ்' போலீஸாரால் பூட்டி ஸீல் வைக்கப்பட்டது.

தனது செயல்களுக்கும் தன்னிடம் வேலை பார்ப்பவர்களுக்கும் எந்தச் சம்பந்தமும் இல்லை - அவர்கள் அப்பாவிகள் என்று மாத்யூவே கூறிவிட்டான். என்றாலும் அகல்யா முதலியவர்களைச் சோதனையிட்டு அவர்கள் எதையும் வெளியே கொண்டு போகவில்லை என்று உறுதி செய்து கொண்டே போக அனுமதித்தனர் போலீஸார்.

அகல்யாவும் அங்கு உடன் வேலை பார்த்த 'கிரேஸி' என்னும் மற்றோர் ஆங்கிலோ இந்தியப் பெண்மணியும் வீடு செல்வதற்காக பீச் ஸ்டேஷனை நோக்கி மௌனமாக நடந்து கொண்டிருந்தார்கள். சேர்ந்து அருகருகே நடந்து போய்க் கொண்டிருந்தாலும் இரண்டு பேரும் ஒருவருக்கொருவர் எதுவும் பேசிக் கொள்ளவில்லை.

முதலில் அகல்யாதான் ஆரம்பித்தாள். "கோடி ரூபாய் கிடைச்சாலும் இனிமே இது மாதிரி டிராவல் ஏஜென்ஸிலே வேலை பார்க்க மாட்டேன்."

"பம்பாயிலே என் பிரதர் கம்பெனி 'எக்ஸிகியூடிவ்' ஆக இருக்கிறான். அவன் சிபாரிசிலே எங்கேயாவது 'ஸ்டெனோ' ஆகப் போயிடலாம்னு பார்க்கிறேன். இந்த ஊரே எனக்குப் பிடிக்கலே. ஐயாம் டயர்ட்டு ஆஃப் திஸ் ஜாப்" என்றாள் கிரேஸி.

"கிரேஸி! நான் எத்தனையோ தடவை இந்த மாத்யூவை வார்ன் பண்ணியிருக்கேன். ப்ரீஃப் கேஸிலே கத்தை கத்தையா ஃபாரின் கரென்ஸியைத் திணிச்சுட்டு அலையாதே... மாட்டிண்டுடுவேன்னு... அவன் கேட்டாத்தானே? இன்னிக்கு மாட்டிண்டாச்சு..."

"இதெல்லாம் 'நத்திங்' மாத்யூவுக்கு. இது கொசுக்கடி மாதிரித்தான். எப்படியாவது சமாளிச்சுத் தப்பி வெளியே ரிலீஸ் ஆகித் தொழில் நடத்துவான் பாரு! டேக் இட் ஃப்ரம் மீ... அகல்யா..."

"அது ரொம்பக் கஷ்டம் கிரேஸி! இது ரொம்பப் பெரிய அஃபென்ஸ். அத்தனை சுலபமாக விட்டுட மாட்டாங்க..."

"எப்படியும் தொலையட்டும், நமக்கு இனிமே இந்த மாதிரி 'ஜாப்' வேண்டாம். ஸ்டிரெயிட் ஃபார்வாடா ஒரு ஜாப், அது வசதிகளே, இல்லாத வேலையானாலும் பரவாயில்லே, போதும்."

"எல்லா வசதியான வேலையிலேயும் இப்படி வசதிக்குறைவான பல அபாயங்கள் இருக்கத்தான் இருக்கும்னு தோண்றது."

"அப்படியானா அந்த வசதி நமக்குத் தேவையில்லே... ஒரு சாதாரண வேலை - நல்ல வேலை போதும்!" மாத்யூவின் மேல் ஏற்பட்ட வெறுப்பில் ஒரு தற்காலிக நெருக்கம் அவர்களிடையே உண்டாகியிருந்தது.

கிரேஸி 'செயிண்ட் தாமஸ் மவுண்ட்'டில் வசித்தாள். அகல்யா மாம்பலத்தில் வசித்தாள். மின்சார ரயிலில் பயணம் செய்யும்போது இனி இந்த ஜன்மத்தில் இப்படிப்பட்ட வம்பான வேலைக்குப் போவது இல்லை என்ற உறுதியில்தான் இருவருமே பரஸ்பரம் பேசிக் கொண்டிருந்தனர்.

மாம்பலம் ஸ்டேஷனில் இறங்கும் போது கூட, "இன்னிக்குத் தேதி முப்பது; வாங்கின சம்பளம் இருக்கு, உடனே வேலை கிடைக்கலேன்னாலும் பத்துப் பதினைஞ்சு நாள் அலைஞ்சு தேடியாவது ஒரு கௌரவமான வேலையாகப் பார்க்கணும்" என்றாள் அகல்யா. இருவருமே கடுமையான வைராக்கிய மன நிலையில் இருந்தார்கள். மாத்யூ நடத்தி வந்த அந்நியச் செலாவணி மோசடி போன்ற தொழில்களில் வேலை பார்க்கவே அருவருப்பு அடைந்திருந்தார்கள் அவர்கள். ஏப்ரல் மாதம் கடைசி நாளான முப்பதாந்தேதி மின்சார ரயிலில் பரஸ்பரம் விடை பெற்றுக் கொண்ட அந்தத் தொழில் சிநேகிதிகள் மறுபடி சந்திக்க எத்தனை மாதங்கள் ஆகுமோ என்ற கவலையோடு பிரிந்தார்கள்.

ஆனால், அடுத்த நாள் காலை ஒன்பது மணிக்கே அதாவது மே முதல் தேதி உழைப்பாளிகள் தினத்தன்றே அகல்யாவும் கிரேஸியும் சந்தித்துக் கொள்ள முடிந்தது.

சந்தித்த இடம் பிராட்வே. சந்திக்க நேர்ந்த அலுவலகம் 'டிஸௌஸா டிராவல்ஸ்.' ஒன்பதே முக்கால் மணிக்கு கிரேஸி அங்கே நுழைந்தபோது 'டெலக்ஸ் டெஸ்க்' அருகே, "மோஸ்ட் இமீடியட் - செண்ட் ஹண்ட்ரட் செர்ரி ஃப்ரூட்ஸ்" - என்று சிங்கப்பூருக்கு ஒரு கேபிள் செய்தி அனுப்பிக் கொண்டிருந்தாள் அகல்யா. எதிர்பாராமல் அங்கே கிரேஸியைப் பார்த்ததும் ஒரு கணம் அகல்யாவுக்கும், அகல்யாவைப் பார்த்ததும் ஒரு கணம் கிரேஸிக்கும் முகத்தில் அசடு வழிந்தது. அடுத்த கணமே சமாளித்துக் கொண்டு,

"ராத்திரி டிஸௌஸா வீட்டுக்கு வந்திருந்தான்" என்ற ஒரு வாக்கியத்தையே 'கோரஸ்' மாதிரிப் பரஸ்பரம் ஒருவருக்கொருவர் சொல்லிக் கொண்டார்கள். அப்போது டிஸௌஸா குறுக்கிட்டுச் சிரித்தபடியே இருவரையும் பார்த்துச் சொன்னான் :

"எங்கே பறந்தாலும் - பறவைகள் பழையபடி பழகிய - தெரிந்த கூடுகளுக்கே திரும்பி வந்தாக வேண்டும்."

அகல்யா, கிரேஸி இருவருமே அவன் கூறியதை ஏற்பது போல் அவனை நோக்கிப் புன்முறுவல் பூத்தனர்.

(அமுதசுரபி, 1983)



## 156. கொத்தடிமைகள்

அடைக்கலத்துக்கும், அவன் குடும்பத்திற்கும் ஊர் பேர் தெரியாத - மொழி புரியாத அந்தப் பிரதேசத்தில் அகர்வால்தான் அடைக்கலம் அளித்திருந்தான். நன்றாக உழைக்கக்கூடிய கணவன் மனைவி. பத்து வயதுச் சிறுவன் ஆகிய மூவரும் சேர்ந்து மாதம் ஐம்பது ரூபாய்க்கு முப்பது நாளும் கல்லுடைப்பது என்பது அநியாயம்தான்.

எந்தச் சலுகையும், எந்த வசதியும், தொழிலாளர் நலச் சட்டங்களின் எந்தப் பிரிவும் அணுக முடியாத காட்டுப்பிரதேசம் அது. விடிந்ததிலிருந்து இருட்டுகிறவரை மாதம் முப்பது நாளும் உழைத்துத்தான் ஆக வேண்டும். நாள் ஒன்றிற்குப் பன்னிரண்டு மணி நேரத்துக்குக் குறையாமல் வியர்வை சிந்தி உழைப்பதைத் தவிர்க்க முடியாது. நேரக் கட்டுப்பாடு ஏதும் கிடையாது.

நாட்டில் விலைவாசி எவ்வளவுதான் ஏறினாலும் பணத்தின் மதிப்பு எவ்வளவுதான் குறைந்தாலும் கடந்த மூன்று ஆண்டுகளாக அங்கு வந்ததிலிருந்து அந்தக் குடும்பத்தின் ஒட்டு மொத்தமான மாதச் சம்பளம் ஐம்பது ரூபாயைத் தாண்டியதே இல்லை.

இவர்கள் குடும்பம் மட்டுமில்லை. ஆந்திரப் பிரதேசத்திலிருந்தும், பீகாரிலிருந்தும் குடியேறியிருந்த வேறு சில குடும்பங்களும் இப்படித்தான் ஆண்டுக் கணக்கில் கைக்கும் வாய்க்கும் போதாத குறைந்த வருமானத்துக்காக மாண்டு மாண்டு கல்லுடைத்துக் கொண்டிருந்தன.

எழுதப் படிக்கத் தெரியாத இந்தக் கைநாட்டுப் பேர்வழிகள் தங்களுக்காகவும், தங்களுடைய வளர்ச்சிகள், மறுவாழ்வுகளுக்காகவும் போடப்படும் திட்டங்கள், நிதி ஒதுக்கீடுகள் பற்றியும் அறிந்திருக்க நியாயமில்லை.

தாங்கள் யாருக்கோ கொத்தடிமைகளாக இருக்கிறோம் என்பது தெரியாமலே கொத்தடிமைகளாக வாழ்ந்து வந்தவர்கள் அவர்கள். ஆண்டுக்கணக்கில் தொடர்ந்து அப்படி அடிமைகளாக இருப்பது அவர்களுக்குப் புரிந்ததுமில்லை, உறுத்தியது-மில்லை, உறைத்ததுமில்லை.

அடிமையாயிருக்கிறோம் என்பதே புரியாதவனுக்குச் சுதந்திரமாயிருக்க வேண்டியதன் அவசியம். புரியாது. அடிமைத்தனத்தின் சிரமங்களும், அவலங்களும் யாருக்குப் புரியுமோ அவர்களுக்குத் தான் சுதந்திரத்தின் சௌகரியங்களும், சுகங்களும் கூடப் புரிய முடியும்.

அடைக்கலத்துக்கு அவன் அடிமையாயிருப்பதும் புரிந்ததில்லை; சுதந்திரமா-யிருக்க வேண்டும் என்பதும் தோன்றியதில்லை. சொல்லப் போனால் சுதந்திரமா-

யிருப்பது என்றால் என்னவென்றே அவனுக்கும் அவனைச் சேர்ந்தவர்களுக்கும் தெரியாது. அதை எல்லாம் தெரிந்து கொள்கிற அளவுக்கு அகர்வால் அவர்களை அனுமதித்ததே இல்லை.

கல்லுடைக்கிற அந்த மலைச் சரிவிலேயே புறம்போக்கு நிலத்தில் இலவசமாகக் குடிசைகள் போட்டுக் கொள்ள முடிந்திருந்தது. பக்கத்தில் இருந்த மிகப் பெரிய வனாந்தரம் அடுப்பெரிக்க விறகு சுள்ளிகள் பொறுக்கிக் கொள்ள வாய்ப்பளித்தது. காய்கறி, கீரைகள் பயிரிட்டுக் கொள்ள முடிந்தது.

இவர்கள் உடைத்துக் கொடுக்கும் கருங்கல் ஜல்லியைப் போபால், இந்தூர், குவாலியர் என்று லாரிகளில் ஏற்றி அனுப்பி காண்ட்ராக்டர் அகர்வால் லட்சாதிபதியாகிக் கொண்டிருந்தான்.

நகரங்களில் காங்கிரீட் கட்டிடங்களும், பல அடுக்குமாடிகளும், சிமெண்ட் நாகரிகமும் பெருகப் பெருக அகர்வாலின் லாபம் பெருகிக் கொண்டே இருந்தது. ஏறக்குறைய முதல் இல்லாமல் லாபம் சம்பாதிக்கும் வியாபாரமாக அகர்வால் அதை வளர்த்திருந்தான்.

தேர்தல் சமயத்தில் ஆளும் கட்சிக்குப் பத்து ஜீப்களும் சில லட்ச ரூபாய் நன்கொடையும் தந்து விட்டால் அடுத்த ஐந்து ஆண்டுகளுக்குக் கவலையில்லாமல் பணம் பண்ணிக் கொள்ள முடியும் என்கிற இரகசியம் அகர்வாலுக்குத் தெரிந்திருந்தது.

அவனிடம் கல்லுடைத்துக் கொண்டிருந்த கொத்தடிமைகளோ, பிறரோ வெகுண்டு எழ முடியாத அளவு பலமும், செல்வாக்கும், ஆள்கட்டும் அகர்வாலுக்கு இருந்தன. அவனிடம் அடிமைப்பட்டுப் பழகியவர்களுக்குச் சுதந்திரமாயிருக்க முயல வேண்டும் என்கிற ஞாபகம் கூட வரமுடியாது.

இந்தச் சமயத்தில் அகர்வாலின் துரதிர்ஷ்டமோ அல்லது அடைக்கலம் குடும்பத்தாரின் அதிர்ஷ்டமோ, ஒரு சம்பவம் நேரிட்டது. தமிழ்நாட்டில் சினிமா செல்வாக்குள்ள ஓர் ஆட்சியின் பிடியில் மக்கள் இருந்த காலம் அது.

உருப்படியான பொருளாதாரத் திட்டங்கள் எதுவுமே இல்லாமல் திடீர் ஸ்டண்டுகள் மூலமே வெறும் கவர்ச்சியை நம்பிக் காலந்தள்ளி வந்த அந்தக் கட்சியின் எம்.பி. ஒருவர் போபாலுக்கு ஒரு விழாவுக்காக வந்தவர் மலைப் பகுதிகளையும் ஆதிவாசிகளையும் சுற்றிப் பார்க்கக் கிளம்பினார்.

அந்தச் சமயத்தில் அடைக்கலம் முதலியவர்களின் முதலாளியான அகர்வால் எங்கோ வெளியூர் போயிருந்தான். அடைக்கலம், அவன் மனைவி சூசையம்மாள், மகன் ஆரோக்கியம் - மூவரும் கல்லுடைத்துக் கொண்டிருந்த பகுதியினருகே வந்ததும் முத்தரசு எம்பி., அவர்கள் தற்செயலாகத் தங்களுள் தமிழில் பேசிக் கொண்டிருந்ததைக் கேட்டு ஆச்சரியப்பட்டு நின்றார்.

*கண்காணாத மத்தியப் பிரதேச வனாந்தரத்தில் தமிழ்க்குரல் ஒலிக்கக் கேட்ட வியப்புடன், "அடடே! நீங்கள்ளாம் நம்ம ஊருதானா? தமிழ்நாட்டுலே உங்களுக்கு எந்தப் பக்கம்?" என்று வினவினார் எம்.பி.*

"சேலத்துப் பக்கம் ஐயா! இங்கே வந்து ரெண்டு மூணு வருசம் ஆவுது..."

"இந்த வேலைக்கா இத்தினி தூரம் தேடி வந்தீங்க...? மூணு பேருக்குமா மாசம் என்ன கெடைக்கும்?"

"வந்தண்ணைக்கிலேருந்து மொத்தம்மா அம்பது ரூபா தர்ராங்க... அங்கே ஒண்ணும் கெடைக்காமப் பட்டினி கெடந்தோம். இங்கே இந்த அம்பதாவது கெடைக்குதேன்னு காலந்தள்ள வேண்டியிருக்குங்க..."

"மூணு பேருக்கும் தனித்தனியா அம்பது ரூபாய் தானே?"

"இல்லிங்க... மொத்தமே அம்பது ரூபாய்தான்!"

"எப்படிப் போதும்,..?"

"போதுமோ போதாதோ, அவ்வளவுதாங்க... ஒண்ணும் பேச முடியாது."

"உங்களுக்காகக் கொத்தடிமை ஒழிப்பு - இருபதம்சத் திட்டம் அது இதுன்னெல்லாம் வந்திருக்கே தெரியுமா?"

"அதெல்லாம் எங்களுக்கொண்ணும் தெரியாதுங்க... தெரிஞ்சாலும் பிரயோசனமில்லிங்க... பாஷை தெரியாத வேத்தூரிலே நாங்க எப்பிடி யாரை எதிர்த்துக்க முடியும்?"

"உங்க முதலாளி பேரு..."

அடைக்கலம் பதில் சொல்லத் தயங்கினான். அவன் முகத்தில் பீதியும் கலவரமும் படர்ந்தன.

"சும்மா சொல்லுப்பா! என்னாலே உனக்கு ஒண்ணும் கெடுதல் வராது..."

மறுபடியும் தயக்கத்துக்குப் பின் அக்கம் பக்கம் பார்த்துக் கொண்டு தணிந்த குரலில், "அகர்வால் ஐயா தாங்க" என்று அடைக்கலம் பதில் சொன்னான்.

முத்தரசு அங்கே எதுவும் குறித்துக் கொள்ளவில்லை என்றாலும், இடம், அடைக்கலம் குடும்பத்தினரின் பெயர்கள் அகர்வாலின் பெயர் எல்லாவற்றையும் தங்கியிருந்த இடத்துக்குத் திரும்பியதும் ஞாபகமாக டைரியில் குறித்துக் கொண்டார்.

அவருடைய அரசியல் மூளையில் ஒரு திட்டம் உதித்திருந்தது. சுயநலமில்லாத எந்தத் திட்டமும் சராசரி இந்திய அரசியல்வாதியின் சிந்தனையில் உதிப்பதில்லை.

மிக விரைவில் பார்லிமெண்ட் தேர்தல் வர இருந்தது. தன்னைப் பற்றித் தொகுதி மக்கள் போதுமான அளவு சலிப்பும் வெறுப்பும் அடைந்துவிட்டார்கள் என்பது முத்தரசுக்குத் தெரிந்துதான் இருந்தது. அவர்கள் நம்பும்படியாக ஏதாவது புதிய

ஸ்டண்ட் அடித்துத்தான் மீண்டும் வெற்றி பெற முடியும் என்பதும் முத்தரசுக்கே தெரிந்திருந்தது. மனத்திற்குள் இது பற்றி ஓர் இரகசியத் திட்டம் போட்டுக் கொண்டார் முத்தரசு.

பார்லிமெண்ட் கலைக்கப்பட்டுப் புதிய தேர்தல்கள் அறிவிக்கப்படுவதற்கு முன் திடீரென்று எல்லாத் தினசரிகளும், சுதந்திரம் பெற்று முப்பதாண்டுகளுக்கு மேலாகியும் நாட்டில் கொத்தடிமை முறை நீடிப்பதைக் கண்டு மனம் நொந்து முத்தரசு குமுறிப் பேசியிருந்த பேச்சைப் பிரசுரித்திருந்தன.

அதற்கு அடுத்த வாரமே வட மாநிலங்களில் தமிழர்கள் கொத்தடிமைகளாக இருப்பதைப் பற்றிய விவரங்களை ஆதாரங்களோடு முத்தரசு வெளியிட்டிருந்தார். தனது உயிரைத் தியாகம் செய்ய நேர்ந்தாலும் கவலைப்படாமல் துணிந்து சென்று கொத்தடிமைகளை மீட்டுத் தமிழகத்திற்கு அழைத்து வந்து உணவும் உதவியும் அளிக்கப் போவதாகச் சவால் விட்டிருந்தார் முத்தரசு. சுவரொட்டிகள், பானர்கள், விளம்பரங்கள் தடபுடல் பட்டன.

தேர்தல் அறிவிக்கப்பட்டு எல்லோரையும் போல் அவரும் வேட்பு மனு தாக்கல் செய்தார். மத்திய மாநிலங்களின் போலீஸ் உதவியுடன் ஒரு பிரஸ் போட்டோ கிராபரையும் உடனழைத்துக் கொண்டு போபால் சென்றார். அவர் சென்னையிலிருந்து கிளம்பிய வினாடி முதல் போட்டோ கிராபர் அணுஅணுவாகப் படம் பிடித்துவர ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது.

கொத்தடிமைகளை மீட்க முத்தரசு புறப்பட்ட செய்தி, கொத்தடிமை மீட்புப் பயணம் பற்றிய விவரங்கள், மீட்கப்பட்ட கொத்தடிமைகளோடு அவர் தமிழகம் திரும்பும் நாள் எல்லாம் படங்களோடு பத்திரிகைகளில் வெளிவந்த வண்ணம் இருந்தன. இந்த முயற்சியைப் பற்றிய தகவல் எட்டி அகர்வால் தலைமறைவாகி விட்டான்.

மத்தியப் பிரதேசக் காட்டில் இரண்டு மாநிலக் காவல் துறையினரின் உதவியோடும் மத்திய காவல் துறையினரின் பாதுகாப்போடும் முத்தரசு அடைக்கலம் குடும்பத்தினரை மீட்க முயன்றபோது, "ஐயா! எங்க மேலே நீங்க காட்டற அக்கறைக்கு ரொம்ப நன்றிங்க! ஆனா எங்களை இப்படியே விட்டுடுங்க. ஏதோ எங்களாலே முடிஞ்சவரை காலந் தள்ளிட்டுப் போறோம். உங்களுக்குப் புண்ணியமாப் போவுது. எங்களை இட்டுக்கிட்டுப்போய் நாங்க இதுநாள் வரை இப்படி மோசமா இருந்தோம்னு விளம்பரப்படுத்தறது எங்களுக்கே பிடிக்கலே" என்று கெஞ்சிப் பார்த்தான் அடைக்கலம்.

முத்தரசு விடவில்லை.

"உன்னையும் உன் குடும்பத்தையும் இந்த நரகத்திலிருந்து மீட்காவிட்டால் நான் மனிதனே இல்லை. மாதம் அறுநூறு ரூபாய்க்கு மேல் சம்பாதிக்க முடிந்த உங்களை வெறும் அம்பது ரூபாய்க்கு அடிமைகளாக வச்சிருக்கிற அவலத்தை நினைச்சு நாடே வெட்கப்படுது."

எப்படியோ நயமாகவும் பயமாகவும் சொல்லி அடைக்கலம் குடும்பத்தினரை முத்தரசு தமிழகத்திற்கு அழைத்துச் செல்ல முடிந்தது.

"பல்லி விழாத பகல் உணவு - பாம்பு கடிக்காதபடி பரிவுடன் மருந்து - தேள் தீண்டாதபடி சிகிச்சை - பல்லைக் காக்க பற்பொடி என்று திட்டம் பல கண்ட செம்மலின் ஆட்சி கொத்தடிமைகளைக் காக்கவும் மீட்கவும் முன்நிற்கும். இது சத்தியம். சாசுவதம், எம் கவர்ச்சித் தலைவர் மீது ஆணை" என்று அழகிய வார்த்தைகளில் முழங்கினார் முத்தரசு.

அடைக்கலம் குடும்பத்தினருக்கு முத்தரசு அபயமளித்து வருவதைப் போல எடுக்கப்பட்ட புகைப்படங்கள் பத்திரிகைகளின் முதற்பக்கத்தை அலங்கரித்தன.

"முப்பத்தைந்து ஆண்டுகளுக்கு முன்பு இந்தியா அடிமைத்தனத்திலிருந்து மீட்கப்பட்டது. இன்று இந்தியர்களை அடிமைத்தனத்திலிருந்து மீட்கிறார் முத்தரசு..."

என்ற வாக்கியங்களுடன் முத்தரசு படத்தையும், காந்தியடிகள் படத்தையும் அச்சிட்டு வாக்காளர்களை வேண்டுவது போல் பத்திரிகை விளம்பரங்களும் சுவரொட்டிகளும் வெளியிட்டன. முத்தரசு காந்தியடிகளோடு ஒப்பிடப்பட்டார்.

தமிழகத் தலைநகரில் நடத்தப்பட்ட ஒரு மாபெரும் பொதுக் கூட்டத்தில் தான் மீட்டு வந்த கொத்தடிமைகளை அறிமுகப்படுத்தி, "என்னைப் போன்ற பொதுநலத் தொண்டன் இனி இப்படி அவலம் நடைபெற அனுமதிக்க முடியாது. இதற்காகவே என் வாழ்வை அர்ப்பணிக்கப் போகிறேன்" என்று முத்தரசு முழங்கிய போது ஆயிரக்கணக்கான மக்கள் கடலலை போல் கை தட்டி ஆரவாரித்தனர்.

அதே கூட்டத்தில் பொதுமக்கள் சார்பில், 'கொத்தடிமை மீட்ட கோமான்' என்ற பட்டமும் முத்தரசுக்கு வழங்கப்பட்டது.

தேர்தல் முடிகிறவரை முத்தரசின் பங்களா அவுட்ஹவுஸில் அடைக்கலம் குடும்பத்தினரைத் தங்க வைத்து உபசரித்தார்கள். பிரச்சாரத்துக்கு அவர்கள் தேவைப்பட்டனர்.

தினசரி மாலை தேர்தல் பிரச்சாரக் கூட்டங்களுக்குப் புறப்படும்போது முத்தரசின் காருக்குப் பின் மற்றொரு ஜீப்பில் அடைக்கலம் குடும்பத்தினரும் அழைத்துச் செல்லப்படுவதும், பிரச்சாரத்தின் நடுவே திடீரென்று ஒரு டிராமாவைப் போல் அவர்களை மேடை ஏற்றுவதும் வழக்கமாகி இருந்தது.

இந்தக் கொத்தடிமை மீட்பு விவகாரம் வாக்காளர்களிடையே ஒரு புதுக் கவர்ச்சியை உண்டாக்கியிருப்பது போல் தோன்றியது. முத்தரசுக்குப் பயங்கரமாகக் கூட்டம் கூடியது.

அடைக்கலம் எந்தப் பிரிவைச் சார்ந்திருந்தானோ அந்தப் பிரிவு மக்கள் முத்தரசின் தொகுதியில் கணிசமாக இருந்தனர். அது ஒரு வசதியாகப் போயிற்று.

'வடக்கே கொத்தடிமையாய்ப் போன தமிழனை மீட்ட தனிப் பெருந்தலைவா வருக!' என்று தொகுதி முழுவதும் முத்தரசை வரவேற்கும் சுவரொட்டிகள் முத்தரசின் செலவில் முத்தரசின் ஆட்களால் அடித்து ஒட்டப்பட்டன. விளம்பரம் வேண்டிய அளவு தாராளமாகச் செய்யப்பட்டது.

தேர்தல் முடிகிறவரை அடைக்கலம் குடும்பத்தினருக்கு ராஜோபசாரம் நடைபெற்றது. காலைச் சிற்றுண்டி, பகலுணவு, மாலைத் தேநீர், இரவு உணவு என்று வாழ்நாளில் கனவுகூடக் கண்டிராத சுகங்களை அந்தக் குடும்பத்தினர் அனுபவித்தனர். தேர்தல் முடிந்த பின்னும் கௌரவமான வேலை வாய்ப்புக் கிட்டும் என நம்பினர்.

தேர்தல் முடிந்தது. முத்தரசு பெருவாரியான வாக்குகள் அதிகம் பெற்று வெற்றி வாகை சூடினார். அவரது கவர்ச்சிக் கட்சியும் வெற்றி பெற்றது. வெற்றிவிழா அன்று அடைக்கலம் குடும்பத்தினரின் மேடைத் தோற்றம் முத்தரசுக்கு அவசியமாக இல்லை.

இனி ஐந்து வருடம் கவலையில்லாமல் காலந்தள்ளலாம். முத்தரசு தன்னுடைய கவர்ச்சித் தலைவரை அழைத்து வெற்றி விழாவைக் கொண்டாடினார். வெள்ளம் போல் பெருங்கூட்டம். கொத்தடிமை ஒழிப்பைப் பற்றிப் பேச்சே இல்லை.

"இன்று நான் பெற்றிருக்கும் வெற்றி என் கவர்ச்சித் தலைவர் தந்தது. மக்கள் அவர் ஆணைக்குக் கட்டுப்பட்டு என்னைத் தேர்ந்தெடுக்கிறார்கள்" என்று முத்தரசு அதே மேடையில் பேசியதைக் கூட்டத்தின் ஒரு மூலையிலிருந்து அடைக்கலமே தன் செவிகளால் கேட்டான்.

கூட்டம் முடிந்ததும் கவர்ச்சித் தலைவர் குடித்துவிட்டு மீதம் வைத்த சோடாவைக் கெஞ்சிக் கேட்டுக் குடிப்பதற்குப் போட்டி போட்டு முண்டியடித்து நெருங்கிய பெண்கள் கும்பலைப் பார்த்துவிட்டு வியந்த சூசையம்மாள் அதைத் தன் கணவன் அடைக்கலத்திடம் வந்து சொன்னாள். அடைக்கலம் பதிலுக்கு அவளை நோக்கிக் கேட்டான்.

"நாமதான் ரொம்பக் கேவலமான கொத்தடிமைகளா இருந்தோம்னாங்க. இங்கே வந்து பார்த்தா எச்சில் சோடாவுக்குப் பறக்கற இந்த அப்பாவி ஜனங்க அதைவிடப் பெரிய கொத்தடிமைங்களாவில்ல இருப்பாங்க போலிருக்கு!"

அந்த வெற்றி விழா நடந்த மூன்றாம் நாள் மொத்தமாக நூறு ரூபாய் பணத்தைக் கையில் கொடுத்து, "நீங்க போகலாம். உங்க உதவிக்கு ரொம்ப நன்றி" என்று அடைக்கலத்தையும் அவன் குடும்பத்தையும் அவுட்ஹவுஸிலிருந்து வெளியேற்றினார் முத்தரசு.

"வேலை எதினாச்சும் பார்த்துக் குடுங்க."

"அரசு ஆவன செய்யும்! கவலைப்படாதே!"

இதற்குப் பின் அவனால் முத்தரசைப் பார்க்கவே முடியவில்லை.

அடைக்கலம் மேலும் மூன்று மாதம் தமிழ்நாட்டில் தங்கி உண்ண உணவின்றி இருக்க இடமின்றி தெருக்களில் குடும்பத்தோடு நாயாக அலைந்தான். எந்த வழியும் புலப்படவில்லை. யாரும் ஆதரிக்க முன்வரவில்லை. முத்தரசும் அவனது கவர்ச்சித் தலைவரும் பல் தேய்க்கப் பல்பொடியும், பாம்புக் கடிக்கு மருந்தும் கொடுத்தார்களே ஒழிய வேலையற்றோருக்கு வேலை கொடுக்க எதுவும் செய்யவில்லை. கொடுப்பதாகப் பிரச்சாரம் மட்டுமே நடந்தது.

'இனியும் தொடர்ந்து இங்கேயே இருந்தால் செத்தே போவோம்' என்ற நிலைமை ஆகிவிட்டது. அடைக்கலமும் அவன் குடும்பத்தினரும் ரயிலில் வித்தவுட் ஆக போபால் திரும்பினர்.

மறுபடியும் அகர்வாலிடம் போய் அவன் காலைக் கையைப் பிடித்துக் கெஞ்சிய போது முதலில் அடி உதை அவமானம் எல்லாம்தான் கிடைத்தன. கடைசியில் போனால் போகிறதென்று மறுபடி கல்லுடைக்கிற வேலையை அவர்களுக்குக் கொடுத்தான் அவன். ஆனால், ஒரு தண்டனையாக இருக்கட்டுமென்று அவர்கள் மூவரும் அடங்கிய குடும்பத்தின் மாதச்சம்பளத்தை ஐம்பதிலிருந்து நாற்பது ரூபாயாகக் குறைத்துவிட்டான் அகர்வால்.

ஆனாலும் என்ன? குடியிருக்க இடம் கிடைத்தது. அடுப்பெரிக்க விறகு கிடைத்தது. குடிசையைச் சுற்றிக் காய்கறி, கீரை பயிரிடத் தடையில்லை. அடைக்கலம் குடும்பத்தினர் மறுபடி 'சுதந்திரமாக' வாழ வழி பிறந்தது. அவர்களைப் பொறுத்தவரை முத்தரசோடு கழித்த சில நாட்களில் மட்டுமே தாங்கள் கொத்தடிமைகளாக இருந்திருப்பதாய் உணர்ந்தனர்.

**(1984-க்கு முன்)**

## 157. ஒருமைப்பாட்டைக் காக்க ஒரு மாநாடு

திடீரென்று அரசாங்கத்துக்கு அவசர அவசரமாகப் புத்தி வந்து விட்ட மாதிரி இருந்தது. வருமுன் காப்பது என்கிற விவகாரமே அரசாங்க மூளையில் எந்தக் காலத்திலும் எந்த விஷயத்திலும் இடம் பெற்றதாக வரலாறே கிடையாது. பெரும்பாலும் கண் கெட்ட பிறகு சூரிய நமஸ்காரத்துக்கு ஏற்பாடு செய்வதுதான் வழக்கம். ஆனால், இம்முறை ஒரு சிறு வித்தியாசத்தோடு, காரியம் நடந்திருந்தது. அதாவது கண் கெட்ட பிறகு என்பதற்குப் பதில் கொஞ்சம் முன்கூட்டியே, அதாவது கண் கெடத் தொடங்கிய போது, அல்லது கெட்டுக் கொண்டிருக்கும் போது சூரிய நமஸ்காரத்துக்கு ஏற்பாடு செய்திருந்தார்கள்.

நாட்டின் மாநிலங்களுக்கு இடையே மொழி ரீதியாகவோ நதி நீர்ப் பிரச்னையாலோ, இன ரீதியாகவோ, வேறுபாடுகள் தோன்றுவதைத் தடுக்க ஆவன செய்யும்படி ஒரு கமிட்டியை அரசாங்கமே நியமித்திருந்தது. கமிட்டியில் எல்லாவிதமான இன-மொழி-பிரதேச உறுப்பினர்களும் இடம் பெற்றிருந்தனர். ஆறு வாரக் காலத்துக்குள் கமிட்டி தன் சிபாரிசுகளை எழுத்து மூலம் அரசாங்கத்துக்கு அனுப்பி வைக்க வேண்டுமென்று அவசர உத்தரவும் பிறப்பிக்கப்பட்டிருந்தது. கமிட்டியின் உச்சகட்ட மகாநாடு விரைந்து உடனே கூட இருந்தது.

முதல் கூட்டம் சிம்லாவில் கூட வேண்டும் என்று ஏற்பாடாகியிருந்தது. மகாராஷ்டிர மாநிலத்தைச் சேர்ந்த நரசிம்ம கர்லேகர் அக் கமிட்டியின் தலைவராகவும், ஹரியானாவைச் சேர்ந்த ஹரி கேசவலால் காரியதரிசியாகவும் நியமிக்கப்பட்டிருந்தனர். மாநிலத்துக்கு மாநிலம் மொழிக் கலவரங்கள், இனக் கலவரங்கள், எல்லைத் தகராறுகள் பூதாகரமாக உருவெடுப்பதைத் தடுக்க அவசரமாக கமிட்டி யோசனை கூறியாக வேண்டுமென்பது அரசாங்கக் கட்டளையாயிருந்தது. அக் கமிட்டிக்காக அரசு பல லட்சம் ஒதுக்கியிருந்தது.

அடுத்த நிதியாண்டின் முதல் நாளாகிய ஏப்ரல் முதல் தேதி சிம்லாவில் கூட்டத்துக்கு ஏற்பாடு ஆயிற்று. கோடையின் தொடக்கமாதலால் சிம்லா என்கிற இடக்கவர்ச்சி பெரிதாயிருக்கும் என்று நம்பினார்கள். பிரதேச உறுப்பினர்களைத் தங்க வைப்பதிலிருந்து எல்லா ஏற்பாடுகளிலும் ஒருமைப்பாட்டைப் புகுத்தியிருந்தனர். மகாநாடு நடக்க இருந்த அரசாங்க விருந்தினர் விடுதி அறைகளில் வேறு வேறு பிரதேசங்களைச் சேர்ந்த வேறு வேறு மொழிகள் பேசும் இருவரை ஒவ்வோர் அறையிலும் இணைத்துப் போட்டிருந்தனர். ஒன்றுபட அது உதவும் என்று கருதினர்.

நாட்டின் எல்லா மொழிகளையும் எல்லாப் பிரதேசங்களையும், எல்லா நதிகளையும் சிலாகித்து வாழ்த்துகிற தாகூரின் பாடல் ஒன்றை மகாநாட்டின்

தொடக்கத்தில் பாட, ஏற்பாடாகியிருந்தது. 'சர்வே ஜனோ சுகினோ பவந்து' எல்லா மக்களும் நன்றாயிருக்கட்டும் - என்பது மகாநாட்டின் முத்திரை வாக்கியமாக - 'மோட்டோ'வாக இருந்தது. உணவில் கூட ஒருமைப்பாட்டு ஏற்பாடு இருந்தது. ஒரு நாள் தமிழ்நாட்டுக் காலைச் சிற்றுண்டியாக இட்லி, இடியாப்பம், மறுநாள் பகலுணவுக்குக் கன்னட வகை, அன்று இரவு உணவுக்குப் பஞ்சாபி ஏற்பாடு. அடுத்த நாள் காஷ்மீரி கபாப்-புலவு என்றெல்லாம் ஒழுங்கு செய்திருந்தார்கள். மகாநாட்டுக் கூடத்தில் எல்லாப் பிரதேசத்துக் கலைஞர்கள், கவிஞர்களின் படங்களையும் கலந்து வைத்திருந்தார்கள். ஆனாலும் என்ன? பிரதிநிதிகள் தங்கும் போதே தகராறு ஆரம்பமாகி விட்டது. சர்ச்சை கிளம்பி விட்டது.

"எங்களுக்குக் காவிரி நீரைப் போதுமான அளவு தர மறுக்கும் கன்னடப் பிரதேசப் பிரதிநிதியோடு ஓர் அறையில் நான் இணைந்து தங்குவதென்பது நடவாத காரியம். எனக்குத் தனி அறை வேண்டும்" என்றார் தமிழ்நாட்டுப் பிரதிநிதி கணியூர் மணிமாறன்.

சரி, தொலையட்டும்; மராத்தியப் பிரதிநிதியையும் கன்னடப் பிரதிநிதியையும் சேர்த்துத் தங்க வைக்கலாம் என முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டன.

'கர்நாடக - மகாராஷ்டிர எல்லைப் பிரச்னை தீரந்து 'பெல்காம்' யாருக்கு என்பது முடிவானால் ஒழிய நான் மராத்தியரோடு தங்குவது முடியாத செயல்' எனச் சவால் விட்டு ஒதுங்கிவிட்டார் கன்னடப் பிரதிநிதி புல்லூர் புட்டப்பா.

பஞ்சாப்-ஹரியானா பிரதிநிதிகள் ஒருவரோடொருவர் சேர்ந்து தங்கவே பயந்து நடுங்கினார்கள், ஒதுங்கினார்கள்.

காஷ்மீர்-இமாசலப் பிரதேசப் பிரதிநிதிகளும் அவ்வாறே விலகினார்கள். கடைசியில் ஒவ்வொரு பிரதிநிதியையும் தனித்தனியாகவே தங்க வைப்பது என்று முடிவாயிற்று. முதல் முயற்சியே இப்படி ஆகிவிட்டது. அடுத்து ஒவ்வொன்றிலும் கூட இப்படியே ஆயிற்று.

மூன்று நாள் மகாநாட்டின் முதல் நாள் தொடக்கத்தின் போதே தாகூரின் பாட்டைப் பாடியதும் தமிழ்ப் பிரதிநிதி அதைக் கடுமையாக எதிர்த்தார்.

"இந்தித் திணிப்பை இந்தப் பாட்டு உறுதிப்படுத்துகிறது. இதைத் தமிழகம் ஒருபோதும் ஏற்காது - ஏற்க முடியாது. 'யாதும் ஊரே யாவரும் கேளிர்' என்பதையே இம்மாநாட்டின் தொடக்கப் பாடலாக ஏற்க வேண்டுகிறேன்" என்று தமிழில் அவர் முழங்கியதை யாரும் சீரியஸ்ஸாக எடுத்துக் கொள்ளவில்லை. மலையாளப் பிரதிநிதிக்கு மட்டுமே அது இலேசாகப் புரிந்தது. அவர் உடனே தமிழ்ப் பிரதிநிதியிடம் "இப்போது பாடிய பாட்டு இந்தி இல்லை! வங்காளி" என்றார். இந்திக்கும் வங்காளிக்கும் கூட வித்தியாசம் புரியாதவராகத் தமிழ்ப் பிரதிநிதி இருப்பது அவருக்கு அதிர்ச்சியளித்தது. "சரி! அதுதான் தொலையட்டும். 'சர்வே ஜனோ சுகினோ பவந்து' என்று மகாநாட்டின் கொள்கை வாக்கியத்தை இந்தியில் எழுதியிருக்கிறார்களே அதற்கு என்ன சொல்கிறீர்கள்?" என்று சீறினார் கணியூர் மணிமாறன்.

"அது இந்தியில்லை, சமஸ்கிருதம் மிஸ்டர் மணியூர் கணிமாறன்!"

"தவறு! கணியூர் மணிமாறன் என்று சொல்ல வேண்டும்!" என்று தம் பெயரைச் சரியாகச் சொல்லும்படி மலையாளப் பிரதிநிதியைத் திருத்தினார் மணிமாறன். மகாநாட்டை ஆங்கிலத்தில் நடத்துவதா இந்தியில் நடத்துவதா என்ற சர்ச்சை எழுந்தபோது வட இந்திய மாநிலங்கள் ஒரே குரலில் ஆங்கிலம் கூடாது என்று முரண்டு பிடித்தன. இந்தி கூடவே கூடாது என்றன தென்னிந்திய மாநிலங்கள். உடனே போர் மூண்டது.

"மாநாட்டை இந்தியில் நடத்தினால் அதை எதிர்த்து இன்றே இங்கேயே இப்போதே தீக்குளிக்கவும் தயங்கமாட்டேன்" என்றார் தமிழ்ப் பிரதிநிதி. இந்தியிலும் கூடாது, ஆங்கிலத்திலும் கூடாது என்றால் எப்படித்தான் மகாநாட்டை நடத்துவது என்று திணறியபின், "எல்லா மொழிப் பிரதேசங்களையும் சமமாக நடத்துவதுதான் இந்த மகாநாட்டின் நோக்கம். ஆகவே, அவரவர்கள் தாய்மொழியில் அவரவர்கள் விரும்பியபடி பேசலாம்" என்று ஒருவர் கூறிய யோசனை ஏற்கப்பட்டது. அதன்படி தலைவர் நரசிம்ம கர்லேகர் மராத்தியில் பேசினார். காரியதரிசி ஹரி கேசவலால் இந்தியில் பேசினார். கணியூர் மணிமாறன் "கல்தோன்றி மண் தோன்றாக் காலத்தே முன் தோன்றி மூத்தது தமிழ்! அது உலக மொழி. அதற்கு இணையான மொழிகளே இல்லை. காதலையும், வீரத்தையும் போற்றியது தமிழ். அதை எதிர்ப்போர் தூசுதூசாகப் போய்விடுவது திண்ணம்" - என்று தமிழில் முழங்கினார்.

"வெகுமானப்பட்ட அத்யட்சகருக்கும், சோதரன்மாருக்கும் என்ட நமஸ்காரம்" என்று மலையாளத்தில் ஆரம்பித்ததார் கேரளப் பிரதிநிதி.

"ஒரு ஹரியானாக்காரரை பொதுக் காரியதரிசியாக நியமித்ததன் மூலம் பஞ்சாபியர்களை இம்மாநாடு அவமதித்து விட்டது" என்று சீறிப் பாய்ந்தார் பஞ்சாப் பிரதிநிதி.

"ஒரு மராத்தியரைத் தலைவராகக் கொண்ட இக்குழுவிலிருந்து கன்னடியர்களுக்கு நியாயம் எதுவும் பிறக்க முடியாது" என்பதைக் கன்னடப் பிரதிநிதி முழங்கினார்.

மொழி பெயர்ப்புக்கு ஏற்பாடு செய்யப்பட்டிருந்த போதிலும் ஒருவர் பேசியது முழுமையாக மற்றவருக்குப் புரியவில்லை.

பஞ்சாப் நதிகளின் நீரைப் பங்கிடும் விஷயத்தில் ஹரியானா மாற்றாந்தாய் மனப்பான்மையோடு நடத்தப்படுவதாக ஹரியானாப் பிரதிநிதி குறைப்பட்டுக் கொண்டார்.

காஷ்மீரைப் பாரதத்தின் மற்ற மாநிலத்தினர் சந்தேகக் கண்களோடு பார்ப்பதைக் கைவிட வேண்டும் என்று கடுமையாகச் சொன்னார் காஷ்மீரப் பிரதிநிதி.

தகராறுக்கிடம் இல்லாமல் உணவு மேஜையருகே கூடும் போதுதான் எல்லா மாநிலப் பிரதிநிதிகளும் ஒத்துப் போனார்கள். எந்த விமர்சனமும் எழவில்லை. பஞ்சாப்

பிரதிநிதி, தமிழக இட்லியைப் பிரமாதமாக இரசித்தார். தமிழகப் பிரதிநிதி காஷ்மீர் 'காப்'பை விரும்பி உண்டார். உ.பி. பிரதிநிதி கன்னட பிஸி - பேளிஹோளா பாத்தை ஏற்றுச் சுவைத்தார்.

மூன்று நாள் கூட்டத்துக்குப் பின்னரும் எந்த உருப்படியான யோசனையும் உருவாகவில்லை. மறுபடி அடுத்த கூட்டத்தை எங்கே கூட்டுவது என்ற பிரச்னை தான் எழுந்தது.

முடிவில் அதை ஒட்டிப் பெரிய சர்ச்சையே மூண்டது. "எந்த மாநாடானாலும் அதை வடக்கே தான் கூட்டியாக வேண்டுமா என்ன? வந்தாரை வாழவைக்கும் செந்தமிழ் நாடு தெற்கே இருப்பதை மறைப்பானேன்? வடக்கே தொடர்ந்து வாழ்வதா? தெற்குத் தேய்வதா?" என்றார் கணியூர் மணிமாறன்.

அடுத்த கூட்டத்தைக் கோவாவில் கூட்ட வேண்டும் என்றார் கொங்கணிப் பிரதிநிதி.

"பீகார் தான் பிற்பட்ட மாநிலம். அங்கே கூட்டுவது தான் சரி" என்றார் பீகார் பிரதிநிதி.

இப்படி ஒவ்வொரு மாநிலத்துப் பிரதிநிதியும் அடுத்த உச்சக்கட்ட மகாநாடு, தம் மாநிலத்திலேயே கூட்டப்பட வேண்டும் என்று ஒற்றைக் காலில் நின்றார்கள். மகாநாட்டுத் தலைவரால் எந்த ஒரு முடிவுக்கும் வர முடியவில்லை.

மகாநாட்டை முடித்தபின் அவர் முன் இரு முக்கிய பிரச்னைகள் இருந்தன. ஒன்று, மூன்று நாட்களாக சிம்லாவில் கூடி என்ன செய்தோம் என்று உள்துறை அமைச்சகத்துக்குச் சொல்வதற்கு எதுவுமே இல்லை. இரண்டாவது, அடுத்த மகாநாட்டை எங்கே கூட்டுவது என்பது பற்றிய கடுமையான சர்ச்சை.

பிரதிநிதிகளை வழியனுப்பிய பின் சுலபமாகப் பிரச்னைக்கு முடிவு ஒன்று காண வழி பிறந்தது. இந்த மூன்று நாள் உச்சகட்ட மகாநாட்டின் செலவே பிரதிநிதிகளின் T.A., D.A. உள்பட ஆறு லட்ச ரூபாய்க்கு மேல் ஆகியிருந்தது. ஆறு அங்குலம் கூட ஒருமைப்பாடு வளரவில்லை. திரும்பத் திரும்ப யோசித்த போது மகாநாட்டை ஏப்ரல் முதல் தேதி கூட்டியதால் தான் இப்படி ஆகிவிட்டதோ என்று கூடத் தோன்றியது. எந்த மாநிலமும், மொழி, இன, ஆணவங்களையும் பிரதேச ஈகோவையும் விட்டுக் கொடுத்து ஒற்றுமைக்கு முன்வரத் தயாராயில்லை. விரக்தியிலும் எரிச்சலிலும் கமிட்டியின் தலைவர் பின்வரும் சிபாரிசை அரசாங்கத்துக்கு எழுதி அனுப்பினார்.

"ஒருமைப்பாட்டை இப்போது இருக்கிற அளவாவது காப்பாற்றிக் கொள்ள வேண்டுமானால் அதைப் பற்றி மேலும் விவாதிக்கவோ, கலந்து பேசவோ செய்யாமல் அதை அப்படியே விட்டு விடுவது நல்லது. நாம் ஒருமைப்பாட்டை வளர்க்க எடுக்கும் எந்த முயற்சியும், 'கவுண்டர் புரடக்டிவ்' ஆக நேர் எதிரான விளைவையே தருகிறது. ஒருமைப்பாட்டைப் பற்றிப் பல வேறு மொழி இன மக்கள் சேர்ந்து அமர்ந்து பேச ஆரம்பிக்கும் போதே வேற்றுமைகள்தான் தலை தூக்குகின்றன. ஒவ்வொரு மொழி-

இன-பிரதேச-மக்களும் விலகி இருக்கிற நேரங்களை விட நெருங்கி இருக்கிற நேரங்களிலேயே அதிகம் வேறுபடுகின்றனர். நெருங்கி உட்காரும் போதே முதலில் வேற்றுமைகள் தான் தலை தூக்குகின்றன.

எனவே, குற்றுயிரும் குலையுயிருமாக மீதமிருக்கும் ஒருமைப்பாட்டைக் கொல்லாமல் காப்பாற்ற வேண்டுமானால் நாம் செய்ய வேண்டிய முதல் காரியம் இந்தக் கமிட்டியை உடனே கலைப்பதுதான்."

என்று துணிந்து எழுதிக் கையொப்பமிட்டு 'கான்ஃபிடென்ஷியல்' என்று சீல் வைத்து உள்துறை அமைச்சகத்துக்கு அனுப்பினார் கமிட்டியின் தலைவர்.

'தான் செய்தது சரிதானா' என்று உறுத்தல் அவருள்ளேயே எழுந்தது. சரியில்லையானாலும் அது தவறில்லை என்றும் அவருக்கே உறுதியாகத் தோன்றியது அப்போது.

(கல்கி, விடுமுறை மலர் - 1984)



## 158. குணம் நாடிக் குற்றமும் நாடி...

**கா**லையிலிருந்து வந்த டெலிபோன் கால்கள் எல்லாம் மணிக்குத் தான். தேடி வந்தவர்களில் பலரும் அவனைத் தான் தேடி வந்து விட்டுப் போயிருந்தார்கள். டாக்டர் சாமிநாதனுக்கு எரிச்சலாக மட்டுமில்லை, பொறாமையாகவும் இருந்தது. அங்கு வந்த சில நாட்களிலேயே மணி எல்லோரையும் கவர்த்து விட்டான். அவன் ஒரு கால் மணி நேரம் காணவில்லை என்றாலும் மற்றவர்கள் அவனை விசாரிப்பது அதிகமாயிருந்தது. அவனைத் தேடுவது மிகுதியாயிருந்தது.

இந்த அறுபத்தேழு வயதில் தனக்கு ஏற்படாத உறவுகளும், நெருக்கமும், பப்ளிக் ரிலேஷனும் இருபத்து ஏழு வயதில் அவனுக்கு ஏற்பட்டிருப்பது போல் தோன்றியது. வந்து போகிற ஆட்களையும், பழகுகிற மனிதர்களையும் எப்படியோ சொக்குப் பொடி போட்டு மயக்கினாற் போல மயக்கியிருந்தான் அவன்.

இவ்வளவிற்கும் மணி அங்கே வந்து சேர்ந்து முழுமையாக மூன்று மாதங்கள் கூட முடியவில்லை. யாரிடமும் இவர் அந்நியர் புதியவர் என்று வித்தியாசமோ, மருட்சியோ இன்றி சகஜமாக உடனே ஒட்டிக் கொள்ள அவனால் எப்படி இயல்பாக முடிகிறது என்று ஆச்சரியமே அடைந்தார் அவர்.

அறிவின் உச்சியிலிருந்து அவர் சாதிக்க முடியாத பல காரியங்களை உணர்வின் கனிவினால் அவன் சுலபமாகச் சாதித்தான்.

'இன்ஸ்டிடியூட் ஆஃப் கம்பேரிட்டிவ் ஸ்டடீஸ்' - வரலாற்றிலேயே இப்படி ஒரு மாணவனை அவர் பார்த்ததில்லை. பயந்தபடியே குனிந்த தலை நிமிராமல் வருவார்கள். முப்பத்தாறு மாதம் எப்பொழுது முடியப் போகிறதென்று எண்ணிக் கொண்டிருந்து விட்டுத் தீஸிஸை ஸப்மிட் செய்து முடிப்பார்கள். கருமமே கண்ணாயினார் என்பது போல் காரியத்தில் மட்டுமே கண்ணாயிருப்பார்கள். சமயங்களில் முடுக்கி விட்ட இயந்திரங்களைப் போல் நடந்து கொள்வார்கள். தப்பித்தவறி ஒரு புன்முறுவல் பூத்தால்கூட ரிஸர்ச்சின் சீரியஸ்நெஸ் கெட்டுவிடுமோ என்று பயந்து சிரிப்புக்குப் பஞ்சம் வந்தாற் போல் தோன்றுவார்கள். டாக்டோரல் கமிட்டியின் கேள்விக் கணைகளிலிருந்து தப்பி மெத்தடாலஜி டெஸ்ட் முடித்துக் கொள்ளப் பறப்பார்கள். மணியும் அவற்றுக்காக அநாயாசமாக உழைத்தான். ஆனால், அநாகரிகமாகவும், அருவருப்பாகவும் அவசரம் காட்டவில்லை. டாக்டர் சுவாமிநாதன் தமது பேராசிரிய வாழ்க்கையில் இப்படி ஒரு ரிஸர்ச் மாணவனைச் சந்திக்க நேர்ந்ததே இல்லை. எதைப் பற்றியும் அது நடக்காது என்ற அவநம்பிக்கை அவனுக்கு இராது போலத் தோன்றியது. எதையும் ஒரு தீர்க்கமான நம்பிக்கையோடு அணுகுவதற்குப் பழகியிருந்தான் அவன். நம்பிக்கை உள்ளவர்களால் எதையும் இப்படிச் சுறுசுறுப்பாகச் செய்ய முடியும் போலிருக்கிறது.

சுவாமிநாதன் எதையாவது கண்டித்தால் எதிர்த்துப் பதில் சொல்லியோ அல்லது தான் செய்ததுதான் சரி என்று விளக்க முயன்றோ நேரத்தையும், விவாதத்தையும் வளர்க்காமல் மௌனமாகப் புன்முறுவலோடு சமாளித்தான் மணி. இந்த வயதில் இப்படி ஓர் இங்கிதமும் குறிப்பறிதலும் உள்ளவனைப் பார்க்கவே முடியாதென்று வியப்பாயிருந்தது அவருக்கு.

சோம்பல் மருந்துக்கூட அவனிடம் இல்லை. காலையில் ஐந்து மணிக்கு எழுந்தான். இரவு பதினொரு மணி வரை உழைத்தான். அவனிடம் என்ன குறை கண்டுபிடிப்பதென்று தெரியாமல் தவித்தார் அவர்.

இன்ஸ்டிடியூட் வளாகத்திலேயே ஒரு கோடியில் டைரக்டருக்கு வீடு கொடுத்திருந்தார்கள். எல்லா மாணவர்களையும் போல் ஃபுல் டைம் ரிஸர்ச்சராகப் பதிவு செய்து கொண்டு வந்திருந்த மணி ஹாஸ்டலில் தங்குவதாகத்தான் இருந்தான். அவனுடைய அதிர்ஷ்டம் இன்ஸ்டிடியூட்டின் இயக்குநர் டாக்டர்சுவாமிநாதன் வீட்டில் எல்லோருக்கும் அவனைப் பிடித்துப் போயிற்று. சுவாமிநாதனே தயங்கியும் கேட்காமல் திருமதி. சுவாமிநாதனும் மற்றவர்களும் அவனை அந்த வீட்டிலேயே இருக்கும்படி அனுமதித்து விட்டார்கள்.

"ரிஸர்ச் ஸ்காலராக வந்திருப்பவனை ஹாஸ்டலில் தங்க விடுவதுதான் முறை. எவ்வளவுதான் அனுசரணையாக இருந்தாலும் வீட்டில் வைத்துக் கொள்வது சரிப்பட்டு வராது" என்றார் அவர்.

"உங்களை மாதிரி ஒரு ஆஃப்ஸண்ட் மைண்ட்டட் புரொஃப்பஸரைக் கட்டிண்டு நான் படற கஷ்டத்தை அவனாவது கொஞ்சம் புரிஞ்சிண்டிருக்கான். அவன் ஒரு நிமிஷம் இல்லேன்னா இந்த வீடு நாறிப்போயிடும்" என்றாள் திருமதி சுவாமிநாதன். அவரால் மறுத்துச் சொல்ல முடியவில்லை. "ரேஷன் கார்டு தொலைஞ்சு போய் நாலு வாரமாகச் சர்க்கரை, ரவை, பாமாயில் இல்லாமத் திண்டாடினேன். ஊரெல்லாம் தெரிஞ்சவா இருந்தும் உங்களாலே மறுபடி கார்டு வாங்கித் தர முடியலே. மணி போனான், என்ன செஞ்சானோ, யாரைப் பார்த்தானோ நிமிஷமாப் புதுக்கார்டு வாங்கிண்டு வந்துட்டான். மிக்ஸி ரிப்பேராயி மூலையிலே கிடந்தது. அவனே ஸ்கூரு டிரைவரைக் கையிலே எடுத்துண்டு உட்கார்ந்தான். அரைமணி நேரத்திலே சரிப்படுத்தி ஓட வச்சுட்டான்."

என்று அவள் மணியின் பிரதாபங்களை மேலும் அடுக்கியபோது அவரால் எதிர்த்துப் பேச முடியாமல் போயிற்று. அவருடைய மனைவி மட்டுமின்றிப் பெண்களும் மணியைக் கொண்டாடினார்கள். தினசரி காலையில் இன்ஸ்டிடியூட்டைப் பெருக்கிச் சுத்தம் செய்ய வரும் பதினாலு வயதுப் படிப்பறிவற்ற குப்பாயி முதல் சந்திரஹாசன் ஐ.ஏ.எஸ்.ஸின் மகள் நந்தினி வரை அனைவருமே மணியிடம் கலகலவென்று சிரித்துப் பேசிக் கொண்டு நின்றார்கள். நெருங்கிப் பழகினார்கள். அவனைக் கொண்டாடினார்கள்.

சந்திரஹாசன் ஐ.ஏ.எஸ்.ஸின் மகள் இங்கிலிஷ் லிட்டரேச்சர் எம்.ஏ. முதல் வகுப்பில் தேறியவள். இன்ஸ்டிடியூட்டில் 'இப்ஸனையும் பாஸனையும்' ஒப்பிட்டு

ஆராய்ச்சி செய்கிறாள். கல்யாண வயது. நல்ல அழகி. அவளிடமிருந்து தினசரி மணியைக் கேட்டு ஏழெட்டு முறையாவது டெலிபோன் வருகிறது. நேரில் வந்து விட்டாலோ இன்ஸ்டிடியூட் வாயிற்படியில் புத்தகங்களை மார்போடு அணைத்தபடி மணியை எதிரே நிறுத்தி வைத்துக்கொண்டு மணிக்கணக்கில் அரட்டையடிக்கிறாள். எதிரே தான் இரண்டு நிமிஷம் நிற்கச் சொல்லி ஏதாவது கேட்டால் கூச்சமும் பயமுமாக நடுங்குகிற அதே நந்தினிதான் மணிப்பயலோடு நேரம் போவது தெரியாமல் சிரித்துப் பேசுகிறாள் என்பதை அவரால் நம்பக்கூட முடியவில்லை. பத்துநிமிஷம் ஏதிரே உட்கார்த்தி வைத்துப் பேசிக் கொண்டிருந்தாலே மனம் உல்லாசமும், கிளுகிளுப்பும் அடையும். அவ்வளவு வசீகரமான பெண் நந்தினி. எதையாவது ஒரு சாக்காக வைத்துத் தானே அவளை அழைத்து ரிஸர்ச் ப்ராக்ரஸ் பற்றி எல்லாம் விசாரிப்பது போல் பாசாங்கு செய்திருக்கிறார் அவர். அம்மாதிரி வேளைகளில் ஒருமுறைகூட அவளிடம் சிரிப்பையோ புன்முறுவலையோ - உல்லாசத்தையோ அவர் பார்க்க முடிந்ததில்லை. 'மோஸ்ட் ஒபீடியண்ட் ஸ்டூடண்ட்' என்பதுபோல் பயபக்தியோடு கேட்ட கேள்விக்கு அளவாகப் பட்டும் படாமலும் பதில் சொல்லிவிட்டுப் போய்விடுவாள். கொஞ்சம் சிரித்தால்கூட முத்து உதிர்ந்துவிடுமோ என்று பயந்து அதிஜாக்கிரதையாய்ப் பழகுவது போலிருக்கும்.

இதெல்லாம் போதாதென்று இன்ஸ்டிடியூட்டிற்கு வருகிற தபால்களில் எண்ணிக்கையில் முக்கால்வாசி மணியின்பெயருக்குத்தான் இருந்தன. புதுக்கவிதைகள் எழுதுகிறானாம். தபாலில் அவன் பெயருக்கு வந்திருந்த 'முத்திரை' என்கிற ஒரு புதுக்கவிதைப் பத்திரிகையைப் பிரித்து அதில் அவன் எழுதியிருந்த புதுக்கவிதை வரிகளைக் கண்டவுடன் டாக்டர் சுவாமிநாதனுக்கு எரிச்சல் பொத்துக்கொண்டு வந்தது. கவிதையின் தலைப்பு 'ரோஜா தோட்டத்தில் ஒரு குழப்பம்' என்பது.

**"ஆஜானுபாகுவாய் நின்றுன்னை**
**அடிமுதல் முடிவரை பார்த்து மயங்குகின்றேன் அடியே**
**ரோஜா தோட்டத்தில் பூப்பறிப்பாய்**
**ரோஜாவும் உன் கைமலரும் இணைகையிலே**
**ரோஜா எது கைஎது எனத் தெரியாமல்**
**ஆஜானுபாகுவாய் நின்றுன்னை**
**அடிமுதல் முடிவரை பார்த்துக் குழம்புகின்றேன்**
**அழகுக் குழப்பம் ஆமாம் இது அழகுக் குழப்பம்."**

படித்ததும் தப்புக்கள்தான் முதலில் அவருக்குத் தெரிந்தன. பாடுகிறவன் தன்னைத்தானே 'ஆஜானுபாகு' என்று பெருமையாக வர்ணித்துக் கொள்வது சரியில்லை என்றும் மரபுக்கு ஒத்துவராது என்றும் தோன்றியது. மரபை இலட்சியம் செய்யாமல் பாடப்படுவதுதானே புதுக்கவிதை என்றும் கூடவே எண்ண முடிந்தது. கவிதை ஆஜானுபாகு வாயிருந்ததோ இல்லையோ மணி ஆஜானுபாகுவாயிருந்தான். இப்படி இலக்கணப் பிழைகளோடு கூடிய கவிதையை எழுதியதற்காக அந்த இன்ஸ்டிடியூட்டின் மாணவன் என்ற முறையில் அவனுக்கு ஏன் ஒரு மெமோ கொடுக்கக்கூடாதென்று எண்ணி மெமோவை எழுதக் கடிதத் தாளை எடுத்தார்.

இன்ஸ்டிடியூட் கடிதத்தாளில் நிறுவனத்தின் முத்திரா வாக்கியமாக அச்சிடப்பட்டிருந்த 'குணம் நாடிக் குற்றமும் நாடி அவற்றுள் மிகை நாடி மிக்க கொளல்' என்ற குறள் கண்ணில் பட்டுத் தொலைத்தது. ஆராய்ச்சியின் இலக்கணமே அந்தக் குறள்தான் என்று இந்த இன்ஸ்டிடியூட்டின் ஸ்தாபகர்கள் அதைக் கொள்கை வாக்கியமாக அமைத்திருந்தார்கள். திடீரென்று மனசு மாறியது. கை மெமோ எழுதுவதற்குத் தயங்கியது. அழகிய சிவந்த கைகளை ரோஜாப் பூக்களோ எனக் குழப்பம் அடைந்தது பற்றிய சிந்தனை மின்னலில் கவிதை வீச்சு இருப்பதை மன்னிக்கலாமென்று தோன்றியது. குணமும் நாடிக் குற்றமும் நாடினால் கவிதையில் குணம்தான் ஒரு மாற்று அதிகமாயிருக்கும் போல் தோன்றியது. சிரிப்பும், மலர்ச்சியும் நிறைந்த மணியின் முகம் நினைவுக்கு வந்து அவரை மெமோ எழுதுவதிலிருந்து தடுத்துவிட்டது. அவனுக்கு ஒரு மெமோ கொடுத்தால் வீட்டில் அவருடைய மனைவியே அதற்காக அவரைக் கோபித்துக் கொள்ளலாம். அவர் மனத்தில் வெறுப்பு ஒரு பக்கமும் அனுதாபம் ஒரு பக்கமுமாக மணியைப் பற்றி அபிப்பிராயம் மாறி மாறி அலைமோதியது. கடைசியில் போனால்-போகிறதென்று மரபு வழியில் தீவிரப் பற்றுள்ள அவர் அவனுடைய புதுக்கவிதையை மன்னித்துத் தொலைக்க வேண்டியிருந்தது.

ஆனாலும் அவர் மன்னித்தாலும் அந்தப் பாவி தன்னுடைய அதிகப்பிரசங்கித் தனத்தால் தானே வேறு ஒரு வம்பில் மாட்டிக் கொண்டு விட்டான்.

"பிரியமுள்ள நந்தினி! நீ சென்ற மாதம் நம்முடைய இன்ஸ்டிடியூட் தோட்டத்தில் ரோஜாப்பூப் பறித்தபோது என் மனத்தில் தோன்றிய கற்பனையைக் கவிதையாக எழுதி 'முத்திரை' இதழுக்கு அனுப்பினேன். பிரசுரமாகியிருக்கிறது. இத்துடன் இணைத்து அனுப்பியுள்ளேன். உன்னுடைய ரோஜாக் கைகளினால் பிரித்துப் படிக்கவும்" என்று எழுதிக் கையெழுத்துப் போட்டு நந்தினியின் வீட்டுக்கு அனுப்பியிருக்கிறான் மணி. அந்தத் தபாலை நந்தினியின் தந்தை சந்திரஹாசன் ஐ.ஏ.எஸ். வாங்கிப் பிரித்துப் படித்துவிட்டார். அவருக்குக் கோபம் பொத்துக் கொண்டு வந்தது. அதேசமயம் தமிழ் சரியாகத் தெரியாததால் அதிகம் விளங்கவும் இல்லை...

"டியர் டாக்டர் சுவாமிநாதன்... ப்ளீஸ் லுக் இன்டு த மேட்டர் பெர்ஸனலி அண்ட் டேக் நெஸஸ்ஸரி ஆக்ஷன்..." என்பதுபோல் ஐ.ஏ.எஸ். பாணியில் ஒரு நோட்டு எழுதி அந்தக் கடிதத்தையும் கவிதையையும் சுவாமிநாதனுக்கே அனுப்பி வைத்தார் சந்திரஹாசன். சுவாமிநாதன் அவருக்கு மிகவும் வேண்டியவர், நண்பர். அதனால் ஏதாவது தப்பாக இருந்தால் அவரே பர்த்துச் சம்பந்தப்பட்டவன் மேல் உரிய நடவடிக்கை எடுக்கட்டும் என்ற கருத்தில் கடிதம், கவிதை, நோட் மூன்றையும் அவருக்கு ஓர் உறையில் இட்டு 'கான்பிடன்ஷியல்' என்று எழுதி அனுப்பியிருந்தார் நந்தினியின் தந்தை. சுவாமிநாதனுக்கு இந்தத் தகவல் தெரிந்ததும் முதலில் எரிச்சலாகத்தான் இருந்தது. 'வகையாக மாட்டிக் கொண்டுவிட்டான். இந்த அதிகப்பிரசங்கி மணிக்கு ஒரு பாடம் கற்பித்துத்தான் ஆக வேண்டும் என்று ஆத்திரம் அடைந்திருந்தார் அவர். பெண்களிடம் பல்லிளித்துக் கொண்டு நிற்கும் அவனுக்கு இனிமேலாவது புத்தி வரட்டும் என்று எண்ணியது சுவாமிநாதனின் உள்ளம். ஆனால், அதில் ஒரு சிறிய சந்தேகமும் உள்ளூற இருந்தது. பெண்களிடம் அவன் பல்லை

இளித்துக் கொண்டு நிற்கிறான் என்பதைவிடப் பெண்கள்தான் அவனிடம் பல்லை இளித்துக் கொண்டு நிற்கிறார்கள் போலிருந்தது. மணியை இன்ஸ்டிட்யூட்டிலிருந்து சஸ்பெண்ட் செய்யலாமா என்று யோசித்தார் டாக்டர் சுவாமிநாதன்.

இதற்குள் நந்தினியே பரபரப்பாக அவரைத் தேடி வந்தாள். பதற்றத்தோடு அவரிடம் மன்றாடினாள் :

"சார்! அப்பாவே என்னிடம் சொன்னார். 'யாரோ கவிதை ரோஜாப்பூ - அது இதுன்னு உன் பெயருக்கு எழுதி இங்கே வீட்டுக்கு ஒரு லெட்டர் அனுப்பியிருந்தான் அம்மா, அந்த லெட்டரை அப்படியே டாக்டர் சுவாமிநாதனுக்கு மேல் நடவடிக்கை எடுக்கச் சொல்லியிருக்கிறேன்' என்றார். நீங்க தயவுசெய்து மணி சார் மேலே - எந்த நடவடிக்கையும் எடுக்கக்கூடாது. அவர் ரொம்ப நல்ல மாதிரி சார்! பூப்போல மனசு அவருக்கு... என்னாலே அவருக்குக் கெடுதல் வரக்கூடாது சார்..."

"சரி! நீ சொல்கிறபடியே மணி மேலே நான் எந்த நடவடிக்கையும் எடுக்கல்லேன்னே வச்சுக்கலாம். உங்க அப்பாவுக்கு நான் என்ன பதில் சொல்றது?"

"இனிமே இதுமாதிரி எதுவும் நடக்காதுன்னு பொதுவா ஒரு வரி எழுதுங்கோ போதும். அப்பாவை எனக்கு நன்னாத் தெரியும். மேலே இதுபற்றி உங்களிடம் எதுவும் கேட்கமாட்டார்."

"என்னமோ அம்மா, ரிஸர்ச் ஸ்டூடண்ட்ஸ்னு சேர்ந்துட்டு நீங்கள்ளாம் கவிதை, காதல் கத்திரிக்காய்ன்னு இப்படி அலையறது கொஞ்சங்கூட நல்லா இல்லே."

"இந்த ஒரு தடவை பெரிய மனசுபண்ணி மன்னிச்சுடுங்கோ சார். இனிமே இப்பிடி எதுவும் நடக்காது."

"சரி... பார்க்கலாம்... போ!" - பிடி கொடுக்காமல் பதில் சொல்லி அவளை அனுப்பினார் சுவாமிநாதன். அன்றிரவு மணி வீட்டில் இல்லாத நேரமாகப் பார்த்து மனைவியிடம் இந்த விஷயத்தைப் பிரஸ்தாபித்தார் அவர்.

"மணிக்குக் கெடுதல் எதுவும் பண்ணாதீங்கோ... அவனுக்குச் சூது வாது எதுவுமே தெரியாது. பூப்போல வெள்ளை மனசு. கள்ளங்கபடு தெரியாதவன்... தப்பா எதுவும் பண்ணியிருக்கமாட்டான்" என்று உடனே மணிக்குப் பரிந்து கொண்டு வந்தாள் அவர் மனைவி.

"ஒரு கலியாண வயசுப் பெண்ணைப் பார்த்து உன் கைக்கும், ரோஜாப்பூவுக்கும் வித்தியாசம் தெரியாமல் குழம்பறேன்னு ஒரு கலியாண வயசுப் பையன் சொன்னால், அது தப்பில்லையோ?"

"அதிலே என்ன தப்பிருக்கு? தினம் பூஜையறையிலே அம்பாளுக்குப் பூஜை பண்றப்போ 'சரோஜதளநேத்ரி'ன்னு நீங்ககூட ஸ்தோத்திரம் பண்றேள், அது தப்பா?"

"நந்தினியோட அப்பா கம்ப்ளெயின்ட் பண்ணியிருக்காரே..?"

"தப்பா ஒண்ணும் நடந்துடலேன்னு சமாதானமா அவருக்குப் பதில் எழுதுங்கோ. குழந்தை ஒரு பாவமுமறியாதவன்... அவனைக் காமிச்சுக் குடுக்காதீங்கோ..."

"'சரோஜதளநேத்ரி'ன்னு நான் ஸ்லோகம் சொல்றதும் இதுவும் ஒண்ணாயிடாது. அதுலே ஒரு 'பொயடிக் ஜஸ்டிஸ்' - கவிதா நயம் இருக்கு."

"அதே பொயடிக் ஜஸ்டிஸ் மணியோட கவிதையிலும் இருக்கத்தான் இருக்கும் போங்கோ..."

அவளிடம் என்ன வாதிட்டும் பயனில்லை என்று தோன்றியது அவருக்கு. இரவு முழுவதும் யோசித்தார். மணி செய்தது சரியா இல்லையா என்பது ஒருபுறமிருக்க, இதைச் சாக்காக வைத்து அவனைப் போல் ஓர் இளங்குருத்தை வாடச் செய்துவிட அவருக்கே தயக்கமாக இருந்தது. குணம் நாடிக் குற்றமும் நாடி ஒப்பிட்டு ஆராய்வது என்பது அந்த இன்ஸ்டிடியூட்டிற்கு மட்டுமில்லாமல் அதை நடத்துபவர்கள், அதில் கற்பவர்கள் எல்லோருக்குமே பொருந்தும் போல் தோன்றியது. தனது சொந்த விருப்பு, வெறுப்புகள், பொறாமைகள், அசூயைகளை எல்லாம் ஒதுக்கி வைத்துவிட்டு அந்த விஷயத்தைப் பற்றி மிகவும் நடுநிலையோடு சிந்தித்து ஒரு முடிவுக்கு வர முயன்றார் டாக்டர் சுவாமிநாதன். மணியின் கவிதை உணர்ச்சியைச் சராசரிக் கல்லூரி மாணவனின் ஈவ்டீஸிங்காக எடுத்துக் கொள்ள முடியாதென்றே அவருக்கும் தோன்றியது. அவனது கவிதையால் பாதிக்கப்பட வேண்டிய நந்தினியோ அவனுக்காக உருகி ஏங்குகிறாள். 'பொயடிக் ஜஸ்டிஸ்' பற்றித் தன் மனைவியே தன்னைக் கேட்ட கேள்வி அவருக்கு நினைவு வந்தது. கள்ளங்கபடமில்லாத பக்தனும், காதலனும் ஏதோ ஓர் இடத்தில் ஒரே மாதிரியான பொதுத்தன்மையால் இணைவதாக அவர் நம்பித்தானாக வேண்டியிருந்தது.

சந்திரஹாசன் ஐ.ஏ.எஸ்.ஸிற்கு இனி இது மாதிரி எதுவும் நேராமல் பார்த்துக் கொள்வதாகப் பொதுவில் ஒரு கடிதம் எழுதிவிட்டு மணியை நேரில் கூப்பிட்டுக் கண்டித்தார் அவர். அவன் அவரை எதிர்த்துப் பேசவில்லை. தான் செய்ததே சரி என்று முரண்டு பிடிக்கவும் இல்லை. தன் கவிதையை அவர் படித்துவிட்டதை அறிந்து நாணினாற்போல் கூசி நின்றான். அவனது இங்கிதமான அடக்கம் அவரைச் சமாதானப்படுத்தியது.

"படிப்பைக் கவனி, பேரைக் கெடுத்துக் கொள்ளாதே... போ..." என்று சொல்லி அவர் அவனை அனுப்பிய சிறிது நேரத்திற்கெல்லாம் நந்தினி அவரைத் தேடி வந்து நன்றி சொல்லிவிட்டுப் போனாள். அடுத்த கால் மணி நேரத்தில் மணியையும், அவளையும் ஜோடியாக இன்ஸ்டிடியூட் பூங்காவில் பார்த்தார் அவர்.

முதலில் ஏற்பட்ட கோபத்தில் அந்த அதிகப்பிரசங்கிக்கு இதன் மூலம் ஒரு பாடம் கற்பித்துவிடத்தான் துடித்தார் அவர். மணியை மன்னிக்க முதலில் அவர் மனம் தயாராயில்லை.

ஆனால், ஆழமாகச் சிந்தித்தபோது அவனுக்குக் கற்பிப்பதைவிடப் பல விஷயங்களில் அவனிடமிருந்து தான் கற்க வேண்டியிருக்கும் போல் தோன்றியது அவருக்கு. சின்னஞ்சிறுசுகளின் விஷயத்தில் பெருந்தன்மையாக நடந்து கொண்டோம் என்ற முழுத் திருப்தியோடு தம் மனைவியிடம் அந்த நல்ல முடிவைத் தெரிவித்து அவளை மகிழ்விக்க வீட்டை நோக்கி விரைந்தார் டாக்டர் சுவாமிநாதன்.

**(கல்கி, தீபாவளி மலர் 1984)**

## 159. சந்தேகங்களின் முடிவில்...

**வி**யன்னா விமான நிலையத்தில், ஆளரவமற்று வெறிச்சோடிப் போன அந்த நள்ளிரவில் - சந்தேகப்படத்தக்க சூழ்நிலையில், அந்த இளம் பெண் எனக்கு வற்புறுத்தி உதவ முன் வந்த போது, என்னுள் மகிழ்ச்சிக்குப் பதில் பயமும்- தற்காப்பு உணர்ச்சியுமே அதிகமாயின. ஹாம்பர்க்கிலும், பெர்லினிலும் என் நண்பன் பாஸ்டின் ராய்ஸ் எச்சரித்திருந்தது நினைவுக்கு வந்தது.

என்னுடைய கோட்பாக்கெட்டில் உள்பக்கமாகப் பத்திரமாயிருந்த ஆயிரத்து இருநூறு டாலர் ரொக்கத்தையும், ஐநூறு டாலர் மதிப்புள்ள டிராவலர்ஸ் செக்கையும் காப்பாற்றிக் கொள்ள வேண்டும் என்ற பதற்றம் அதிகமாயிற்று; கேள்விப்பட்டிருந்த கதைகள், அனுபவங்கள் ஒவ்வொன்றாக நினைவுவந்தன. வெளிநாட்டில் - கண்காணாத தேசத்தில் பணத்தை இழந்து நடுத்தெருவில் நிற்கும் பயங்கர அனுபவத்துக்கு ஆளாகி விடுவோமோ என்று பயமாகக் கூட இருந்தது. கோடைக்காலமாதலால், லண்டனிலும் - பாரிஸிலும் போல வியன்னாவிலும் இரவு பத்துமணிக்கு மேல்தான் இருட்டும் என்று ஜெனீவாவிலிருந்து புறப்படும்போது நினைத்திருந்தேன்.

என் துரதிர்ஷ்டம் மாலை ஆறு மணிக்கு மேல் ஜெனீவாவிலிருந்து வியன்னாவுக்கு நேரடியாக ஃபிளைட் எதுவும் இல்லை. ஜெனீவாவிலிருந்து ஜுரிச் வரை ஸ்விஸ் ஏர் ஃபிளைட் ஒன்று இருந்தது. அப்புறம் ஜுரிச் விமான நிலைய டிரான்ஸிட் லவுன்ஜில் இரண்டு மணி நேரம் காத்துக் கிடந்து, மறுபடி அங்கிருந்து ஆஸ்டிரியன் ஏர்வேஸ் ஃபிளைட் ஒன்றைப் பிடித்து வியன்னா போய்ச் சேர வேண்டிய மாதிரி, என் பயணத் திட்டம் அமைந்து விட்டிருந்தது. வேறு வழியில்லை. அன்று ஞாயிற்றுக்கிழமை வேறு!

வீக்எண்ட் - அதாவது, வார இறுதி விடுமுறை நாட்களில் அந்த நாட்டவர்களை வெளியே பார்ப்பது துர்லபம். தெருக்கள் வெறிச்சோடிக் கிடக்கும் தெருவோரங்களிலும் வீட்டு முகப்புக்களிலும் வரிசையாகப் பார்க் செய்த கார்களைத் தவிரத் தெருக்களும், கடை வீதிகளும் ஆளரவமற்று மக்கள் காலி செய்துவிட்டு ஓடின நகரம் மாதிரி இருக்கும்.

வியன்னாவில் விமானம் தரையிறங்கும்போதே இரவு ஒன்பது மணிக்கு மேலாகியிருந்தது. பாஸ்போர்ட் கண்ட்ரோல், கஸ்டம்ஸ் ஆகிய இடங்களில் 'க்யூ'வில் நின்று முடித்துக் கொண்டு - எக்ஸ்சேஞ்ஜ் கவுண்டரில் மறுபடியும் வரிசையில் நின்று, தேவையான அளவு ஆஸ்ட்ரியன் ஷில்லிங்ஸ் மாற்றிக் கொண்டு வெளியே வந்தபோது இரவு மணி பத்து. நன்றாக இருட்டிவிட்டது.

மேற்கு ஜெர்மனியில் பத்துப் பேரில் ஐந்து பேர் ஆங்கிலத்தில் உரையாடக் கிடைப்பார்கள் என்றால், இங்கே ஆஸ்திரியாவில் பத்தில் ஒருவர் கூட ஆங்கிலம்

பேசுவது அபூர்வமாயிருந்தது. தேடி அலைந்து விமான நிலையக் கூடத்தில் இங்கும் அங்கும் ஓடி, ஆங்கிலம் பேசுகிறவரைக் கண்டுபிடித்து, அப்புறம் அந்த நிலையத்தின் 'லெஃப்ட் லக்கேஜ்' சாமான்களை விட்டுச் செல்லும் இடம் எங்கிருக்கிறது என்று கண்டுபிடித்து, அரைவல் லவுன்ஜிற்கும் டிபார்ச்சர் லவுன்ஜிற்குமாக - எஸ்கலேட்டரில் ஏறி இறங்கிக் கடைசியாகச் சாமான்களை ஒப்படைத்து ரசீது பெற்றுக் கொண்ட போது, மணி பத்தே முக்கால். வியன்னாவில் தங்குவதற்கும், உபயோகிப்பதற்கும் தேவையான சாமான்களை ஒரு கைப்பையில் எடுத்துக் கொண்டாயிற்று...

விமான நிலைய வாயிலிலிருந்து புறப்படும் லக்சுரி கோச் நகர ஏர் டெர்மினல் ஆகியவை வியன்னா ஹில்டன் ஓட்டல் வரை போகிறதென்றும், அதில் போக ஐம்பது ஷில்லிங் ஆகும் என்றும், அதே விமானநிலையத்தின் கீழ்த்தளத்தில் இருந்து புறப்படும் அண்டர்கிரவுண்ட் ரயிலில் போக இருபத்து நாலு ஷில்லிங் ஆகுமென்றும் தெரிந்தது. ஏறக்குறைய அப்போதே விமானநிலையம் வெறிச்சோடிப் போய்விட்டது.

பாதாள ரயிலில் போவதையே விரும்பினேன். காரணம், இருபத்தாறு ஷில்லிங் அந்நியச் செலாவணி மிச்சப்படும் என்பதுதான்!

விமான நிலையக் கூடத்திலிருந்தே கீழே இறங்கி, பாதாள ரயில் பிளாட்பாரத்தில் கொண்டு போய்விடும். எஸ்கலேட்டரில் இறங்கிக் கீழே பார்த்தால் துணுக்கென்றது! ஜெகஜ்ஜோதியாக ஸோடியம் வேப்பர் மின்விளக்குகள் எரிந்து கொண்டிருந்தன. ஒரு ரயிலும் புறப்படுவதற்குத் தயாராக நின்று கொண்டிருந்தது. ஆனால், பிளாட்பாரத்திலும் ரயிலுக்குள்ளேயும் ஈ காக்கை இல்லை! பயங்கர மௌனம். டிக்கெட் கவுண்டரில் மட்டும் ஒரே ஒரு நடுத்தர வயதுப் பெண் உட்கார்ந்திருந்தாள். அவளிடம் விசாரித்ததில் மழலை ஆங்கிலத்தில் பதில் கிடைத்தது... "ரயில் போகும். நீங்கள் விரும்பினால் டிக்கெட் தருகிறேன். ஏன் கூட்டமில்லை என்பதற்கெல்லாம் இப்போது நான் காரணம் சொல்லிக் கொண்டிருக்க முடியாது. பொதுவாக அகாலத்தில் கூட்டமே இராது. இன்று ஞாயிற்றுக்கிழமை வேறு. கோச் எங்குமே நிற்காமல் நேரே சிட்டி ஏர் டெர்மினலுக்குப் போய்விடுவதால், பெரும்பாலான விமானப் பயணிகள் டாக்ஸிக்கு அடுத்தபடி கோச்சிலேயே போய்விடுவார்கள். ஸப்வே ட்ரெயின் எல்லா ஸ்டேஷன்களிலும் நின்று நின்று ஸிட்டி சென்ட்ரல் பகுதிக்குப் போய்ச் சேர அதிக நேரமாகும் என்பதால், பெரும்பாலோர் ரயிலில் போவதை விரும்பமாட்டார்கள்" என்றாள் அவள். டிக்கெட்டை வாங்கிக் கொண்டு ரயிலுக்குப் போனேன். அடுத்தடுத்து இரண்டு மூன்று கோச்களில் ஏறி இறங்கியும், எந்தக் கோச்சிலும் ஆள் நடமாட்டமே இல்லை. பயமாயிருந்தது. அவ்வளவு பெரிய ரயிலில் நான் ஒரே ஒருவன் மட்டும் தானா பயணம் செய்யப் போகிறேன்? ஏறத்தாழ ஒன்பது பெட்டிகளுக்கு மேலுள்ள சுத்தமான அந்த அண்டர்கிரவுண்ட் ரயிலில், தனியாக நான் ஒருவன்தான் பயணம் செய்யப் போகிறேன் என்றெண்ணியபோது, என்னவோ போலிருந்தது. யோசனையும் தயக்கமும் ஏற்பட்டன.

எதற்கும் மேலும் இரண்டொரு பெட்டிகளில் தேடிப் பார்க்கலாம் என்று, உள்ளேயே ஒரு கோச்சிலிருந்து இன்னொரு கோச்சிற்கு நடந்து போக வசதி

செய்யப்பட்டிருந்த அந்த ரயிலில் மேலும் முன்னோக்கி நடந்தேன். வெள்ளைக் குழல் விளக்குகளின் ஒளியில் ரெக்ஸைன் ஸீட்கள் காலியாக மின்னின.

கடைசியாக - அதாவது, ரயிலின் முன்பக்கத்திலிருந்து எண்ண ஆரம்பித்தால், முதல் கோச்சில் அவளைக் காண முடிந்தது. முதல் பார்வையிலேயே பழைய இத்தாலிய நடிகை 'ஜினாலோலா பிரிகிடா'வை அவளது இளம் வயதில் பார்த்தாற்போன்ற தோற்றத்தோடு அவள் தென்பட்டாள்.

ஓரிரு நிமிடங்கள் தயங்கிய பிறகு, "டு யூ ஸ்பீக் இங்கிலீஷ்?" என்று நான் கேட்டவுடன், 'எஸ்' என்று முகமலர்ந்தாள். அப்பாடா! நாற்பது ஐம்பது நிமிடங்கள் போரடிக்கிற தனிமையில் பயணம் செய்ய நேராமல் ஒரு துணையாவது கிடைத்ததே என்று மகிழ்ச்சியும் நிம்மதியும் ஏற்பட்டன. கட்டழகு மையங்கள் விட்டுத் தெரிகிற வகையில் சம்மர் டிரஸ்ஸில் இருந்தாள் அவள். நேரடியாகப் பார்ப்பதற்குத் தயக்கமாகவும் கூச்சமாகவும் இருந்தது. திருட்டுத்தனமாகப் பார்ப்பதற்குப் பயமாக இருந்தது. ரயில் புறப்பட்டது. மணி பதினொன்றே கால். அவள் தன் கையிலிருந்த புத்தகத்தை மடக்கி வைத்துவிட்டு "நீங்கள் டூரிஸ்டா? எந்த நாட்டிலிருந்து வருகிறீர்கள்?" என்று ஆங்கிலத்தில் கேட்டாள். அந்த நள்ளிரவில் ரயில்பெட்டியில் தன்னந்தனியாக வந்து அமர்ந்திருந்த அழகுத் தேவதையாக ஜொலித்தாள் அவள். நான் அவளுக்குப் பதில் சொன்னேன். மேலும் உற்சாகமாக எதிர் ஸீட்டில் என்னருகே வந்து உட்கார்ந்து சிரித்துப் பேச ஆரம்பித்தாள் அவள். தன் பெயர் அங்கெலிகா என்று அறிமுகமும் செய்து கொண்டாள். வெண்ணெய் திரண்டாற் போன்ற அவள் மேனி நிறமும், திரட்சியும் வளமும் மினுமினுக்கும் கட்டழகும், இளமையும் மருளச் செய்தன. அந்த உடலிலிருந்து கிளர்ந்த மெல்லிய மயக்கும் தன்மை வாய்ந்ததொரு பெர்ஃப்யூம் என்னை வசப்படுத்தியது. அழகிய வசீகரமான கண்கள், சொக்க வைக்கும் பல் வரிசை, மயக்கும் சிரிப்பு, சிவந்த செந்நிற உதடுகள். அவள் என்னைக் கேட்டாள் :

"வியன்னாவில் எங்கே தங்கப் போகிறீர்கள்?"

"அது ஒன்றும் பிரச்னை இல்லை. பாரிஸிலிருந்தே அமெரிக்கன் எக்ஸ்பிரஸ் மூலம் ஒரு ஓட்டலில் இடம் ரிஸர்வ் செய்திருக்கிறேன்."

"அது சரி! எந்த ஓட்டல் என்று தெரிந்தால்தானே போவதற்கு வழி சொல்ல முடியும்? ஒருவேளை வியன்னா சென்ட்ரலில் இறங்கி வேறு ரயில் மாற வேண்டியிருக்கலாம்... அல்லது பஸ் பிடிக்க வேண்டியிருக்கலாம்."

"ஓட்டல் நாய்பவ்... நியுஸ் டிஃப்ட்காஸே - வியன்னா141."

"அது ஏன் இந்த ஓட்டலை ஏற்பாடு செய்தீர்கள்?"

"என்னுடைய பட்ஜெட்டுக்கு இதுதான் முடியும்!"

"அதற்காகச் சொல்லவில்லை. இப்போதே மணி பதினொன்றரைக்கு மேல் ஆகிவிட்டது. ரயிலிலிருந்து இறங்கி இந்த ஓட்டல் உள்ள தொலைவுவரை பஸ்ஸில் போக பஸ் இராது. டாக்ஸியில் போனால் ஓட்டல் வாடகையைவிட அதிகமாக டாக்ஸிக்கே செலவாகிவிடும். நாளை விடிந்ததும் ஊர் சுற்றிப் பார்ப்பதற்காக மறுபடி

நீங்கள் நகரின் மையப்பகுதிக்கு அங்கிருந்து வந்தாக வேண்டும். அதற்காக வேறு போக்குவரத்துச் செலவு ஆகும். உங்கள் பட்ஜெட் முழுவதும் போக வரவே செலவழிந்து விடும்!"

"வேறு வழியில்லை... எப்படியும் நான் அங்கே போய்த் தங்கித்தானாக வேண்டும். அமெரிக்கன் எக்ஸ்பிரஸ்காரர்கள் எனக்காக அதை ரிசர்வ் செய்து விட்டார்கள்!"

"சிக்கனமாக நான் உங்களுக்கு ஒரு யோசனை சொல்ல முடியும்... ஏற்பதும் ஏற்காததும் உங்கள் பாடு!"

"என்ன யோசனை அது?"

"இந்த யோசனையின் மூலம் செலவும் மிச்சப்படும். அநாவசியமாக அகாலத்தில் நீங்கள் நெடுந்தூரம் அலைந்து திரிவதையும் தவிர்க்கலாம். நாம் எந்த இடத்தில் இந்த ரயிலிலிருந்து இறங்குகிறோமோ, அந்த இடத்திற்கு 'லாண்ட் ஸ்ட்ராபே' என்று பெயர். அதற்கு அருகேதான் வியன்னா ஹில்டன் இருக்கிறது. ஆனால், உங்கள் பட்ஜெட்டிற்கு ஹில்டன் ஒத்துவராது. அதற்குப் பக்கத்திலேயே என் சிநேகிதி ஒரு ஓட்டலில் மானேஜராயிருக்கிறாள். நான்கூட அங்கேதான் தங்கப்போகிறேன். விரும்பினால் நீங்களும் அங்கே தங்கலாம்!"

"ஏற்கனவே 'நாய்பவ்' ஓட்டலில் செய்த ரிசர்வேஷன் என்ன ஆவது?"

"பிரச்னை இல்லை! அதை டெலிபோன் மூலம் கான்ஸல் செய்துவிடலாம்..."

- சொல்லியபடி தன் அழகிய கண்களைச் சிமிட்டிக் குறுநகை புரிந்தாள் அங்கெலிகா. பேருக்கேற்றபடி தேவதையாகத்தான் தோன்றினாள் அவள்.

இந்தச் சமயத்தில் நான் அவளுக்கு மறுமொழி கூறுவதற்கு முன் நண்பன் பாஸ்டின் ராய்ஸின் எச்சரிக்கை நினைவு வந்தது...

"ஹாம்பர்க்கிலோ, பெர்லினிலோ அல்லது பாரிஸிலோ ஒரு விஷயத்தில் மிகமிக எச்சரிக்கையாக இருக்க வேண்டும். இந்த எச்சரிக்கை எல்லாருக்குமே பொருந்தும் என்றாலும், குறிப்பாக உங்களைப் போன்ற ஆசியர்களும்- அராபியர்களும் சுலபமாக ஏமாற்றப்பட்டு விடுவீர்கள்! முன்பின் தெரியாத அழகிய இளம்பெண் யாராவது தன்னோடு வந்து தங்குமாறு அழைத்தாலோ, 'ஹாவ் எ கிளாஸ் ஆஃப் பீர் வித் மீ' என்று பீர் அருந்தக் கூப்பிட்டாலோ நம்பிப் போய்விடக் கூடாது. பீரிலோ, பானத்திலோ உங்களுக்குத் தெரியாமல் பிரக்ஞையோ, நினைவோ தவறச் செய்யும் மாத்திரைகளைக் கலக்கிக் கொடுத்து விடுகிறார்கள். அப்புறம் பணத்தையோ, உடமைகளையோ பறித்துக் கொண்டு போய்விடுகிறார்கள். இப்போதெல்லாம் சகஜமாக இப்படி நடக்கிறது. ஜாக்கிரதையாயிருங்கள். முன்பின் தெரியாதவர்களின் அழைப்பை அன்பு காரணமாக அழைப்பதாக ஏற்றுவிடாதீர்கள், ஆபத்து!" என்பது பாஸ்டின் ராய்ஸ் எனக்கு அளித்திருந்த எச்சரிக்கை. ராய்ஸ் மட்டுமின்றி வேறு பலரும் இப்படி எல்லாம் மோசடிகள் சகஜமாக நடக்கின்றன என்று சொல்லி எச்சரித்திருந்தார்கள்.

அவள் சிகரெட் எடுத்துப் பற்ற வைத்துக் கொண்டு, என்னிடமும் புன்முறுவலோடு சிகரெட் பெட்டியை நீட்டினாள்.

"நோ... தேங்க்ஸ்!" என்று நான் மறுத்தேன். அவள் பக்கத்திலிருந்த புத்தகத்தின்மேல் அப்போதுதான் என் பார்வை சென்றது. முக்கால் நிர்வாணக் கோலத்தில் ஓர் அழகிய இளம்பெண், ஓர் ஆணுக்கு மஸாஜ் செய்வதுபோல் அட்டையில் ஒரு படம் 'ஹௌ டு ஸெட்யூஸ் மென்?' ஆண்களை மயக்குவது எப்படி? என்று தலைப்பு.

நிச்சயமாக இவள் பாஸ்டின் ராய்ஸ் எச்சரித்த மாதிரி ஆண்களை மயக்கிப் பணம் பறிக்கும் சாகஸக்காரியாகத்தான் இருக்க வேண்டும்... இவளிடம் ஜாக்கிரதை தேவை என்று உள்மனம் என்னை எச்சரிக்க ஆரம்பித்திருந்தது. இவளைப் பார்த்தால் உள்ளூர்க்காரி மாதிரித்தான் தெரிகிறது. ஆனால், தானும் அதே ஓட்டலில் தங்கப் போய்க் கொண்டிருப்பதாக ஒரு ஓட்டலின் பெயரைச் சொல்லி, அதில் தன் சிநேகிதி மானேஜராயிருப்பதால், நானும் அங்கேயே தங்க வேண்டுமென்கிறாள்... இதெல்லாம் என்ன சூழ்ச்சியோ' என்று உள்ளம் மிரண்டது. மறுபடி அவளே பேசினாள் :

"நான் ரோமன் கத்தோலிக்க மதத்தைச் சேர்ந்தவள். உங்கள் நாட்டில் நிறைய ரோமன் கத்தோலிக்கர்கள் இருக்கிறார்களாமே, கேள்விப்பட்டிருக்கிறேன்... நீங்கள் என்ன மதம்?"

"உண்மைதான். எங்கள் நாட்டில் நிறைய ரோமன் கத்தோலிக்கர்கள் இருக்கிறார்கள். நான் அவர்களில் ஒருவனில்லை, இந்து."

"அப்படியா...? மிஸ்டர் காந்தியும் ஒரு இந்துவாகத்தானே இருந்தார்?"

"ஆனால், சர்வமத சமரச நோக்கில் காந்தி மிகவும் நம்பிக்கைக் கொண்டு பாடுபட்டார்."

"நான் 'காந்தி' படம் பார்த்தேன்."

ரயில் ஒரு ஸ்டேஷனில் நின்றது. அவசர அவசரமாக வெளியே எட்டிப் பார்த்த அவள், "வாருங்கள்! நாம் இங்கேதான் இறங்க வேண்டும்" என்று எழுந்திருந்தாள். நானும் எழுந்து அவளைப் பின் தொடர்ந்தேன்.

கீழே இறங்கியதும் அவள் தன் கைப்பையிலிருந்து 'ரோடு மேப்' ஒன்றை எடுத்து என்னிடம் காண்பித்து, "இதோ பாருங்கள்! நீங்கள் அமெரிக்கன் எக்ஸ்பிரஸ் மூலம் ரிஸர்வ் செய்திருக்கும் 'ஓட்டல் நாய்பவ்' போவதாயிருந்தால் இவ்வளவு தூரம் இங்கிருந்து டாக்ஸியில் போக வேண்டியிருக்கும். மொழியும் இடமும் தெரியாத இந்த அந்நிய நாட்டில் அப்படித் தனியே உங்களால் போக முடியுமா என்பதை நீங்களே முடிவு செய்வதற்கு விட்டுவிடுகிறேன்... நான் இங்கிருந்தே என் தோழியின் ஓட்டலுக்குப் போகப் போகிறேன். எனக்குச் சொந்த ஊர் லின்ஸ். பக்கத்தில் தான் இருக்கிறது. வருடத்தில் குறைந்த பட்சம் நூறு தடவையாவது வியன்னா வருகிறேன். ஒவ்வொரு முறையும் நான் என் சிநேகிதி பணிபுரியும் இதே ஓட்டலில்தான் தங்குவது வழக்கம். நான் சிபாரிசு செய்வதனால் என் சிநேகிதி மிகக் குறைந்த வாடகையில் உங்களுக்கும் ரூம் தருவாள்!" என்றாள்.

அந்த அர்த்த ராத்திரியில் அவள் வற்புறுத்தி என்னைத் தன் முடிவுக்கு இசைய வைக்க முயல்கிறாளோ என்று பட்டது. வியன்னாவில் பயன்படுத்துவதற்கு என்று மாற்றி வைத்துக் கொண்டிருக்கும் 600 ஆஸ்டிரியன் ஷில்லிங்ஸ் தவிர, என்னிடம் மற்ற வகையில் இருக்கும் ஆயிரத்து எழுநூறு டாலரையும், இந்த அழகியிடம் பறிகொடுக்க வேண்டும் என்றுதான் நம் தலையில் எழுதியிருக்கிறது போலும் என்று தோன்ற ஆரம்பித்துவிட்டது!

"கவலைப்படாதீர்கள்! என்னை நம்புங்கள். உங்களுக்கு ஒரு கஷ்டமும் வராது. என் சினேகிதியின் ஓட்டலுக்குப் போனவுடன் டெலிபோன் செய்து அந்தப் பழைய ஓட்டல் ரிஸர்வேஷனைக் 'கான்சல்' செய்துவிடலாம்..." என்று, என் தோளை சகஜமாகத் தொட்டு மெல்லத் தட்டிக் கொடுத்தாள். பூப்போன்ற தன்னுடைய மிருதுவான விரல்களால் எனது வலது கையைப் பற்றி, "வாருங்கள்! போகலாம்" என்றாள். மறுபடியும் ஒரு சிகரெட்டை எடுத்துப் பற்ற வைத்துக் கொண்டாள். என் நண்பன் பாஸ்டின் ராய்ஸ் கூறியிருந்தது எனக்கு நினைவு வந்தது : "இருபது - இருபத்தைந்து வருஷங்களுக்கு முன்னால் பொது இடங்களில் பிறர் முன் புகை பிடிக்கிற ஒரு ஜெர்மானியப் பெண்ணைக் கௌரவமானவளாகச் சமூகமே ஒப்புக் கொள்ளாது. இப்போதெல்லாம் சோஷியலாக இருப்பது, விமன்ஸ் லிபரேஷனைக் காட்டிக் கொள்கிறது ஆகியவற்றின் அடையாளமாகப் பெண்கள் புகை பிடிக்க ஆரம்பித்து விட்டார்கள்!"

'எப்படியோ இவளிடம் சிக்கிக் கொண்டோம்! வேறு வழியில்லை' என்று அவளோடு சென்றேன் நான். நகரின் தெருக்கள் சந்தடியற்றிருந்தன. கட்டிடங்களும், மரம் செடி கொடிகளும், மின்விளக்குக் கம்பங்களும் உறக்கத்தில் ஆழ்ந்திருப்பவை போல் தோன்றின. அகன்ற வீதியில் நானும் அவளும் தனியாக நடந்து போய்க் கொண்டிருந்தோம். தெருக்களின் ஆளரவமற்ற நிலை எனக்குப் பயமூட்டினாலும், அங்கெலிகா கலகலவென்று சிரித்துப் பேசி நடந்து வந்து கொண்டிருந்தாள். சாலையில் டிராம்வே தண்டவாளங்கள் விளக்கொளியில் தரையில் நீளும் மின்னல் கோடுகளாய் ஜ்வலித்துக் கொண்டிருந்தன.

"தாகமாயிருக்குமே... பீர் குடிக்கிறீர்களா?" என்று என்னைக் கேட்டுக் கொண்டே, தன் தோள்பையிலிருந்து மெல்லிய அலுமினிய டப்பாக்களில் அடைக்கப்பட்டிருந்த இரண்டு பீர் கேன்களை எடுத்தாள்.

நான் பதில் சொல்வதற்குள், இரண்டு பீர் டப்பாக்களின் ஊற்று வாயையும் மூடியிருந்த மெல்லிய அலுமினியம் தகடுகளை உரித்தெடுத்துத் திறந்தும் விட்டாள்.

எனக்கு உதறலெடுத்தது. சந்தேகம் பீடித்தது. பிரக்ஞையிழக்கச் செய்யும் மாத்திரைகளை பீர் கேனிலே போட்டிருப்பாளோ...

"இல்லை! எனக்கு வேண்டாம். நீங்கள் குடியுங்கள் அங்கெலிகா..."

"சிகரெட் குடிப்பதிலை. பீர் வேண்டாமென்கிறீர்கள்... உங்களிடம் என்ன கோளாறு...?"

நான் பதில் சொல்லாமல் அவளை ஏறிட்டுப் பார்த்துச் சிரித்தேன். 'பெண்ணே! நீ என்னை அத்தனை சுலபமாக ஏமாற்றிவிட முடியாது' என்று மனத்துக்குள் சொல்லிக் கொண்டேன்.

"புழுக்கமாயிருக்கிறது. நல்ல கோடை இரவு... இந்த உல்லன் கோட்டை வேறு ஏன் சுமக்கிறீர்கள்? விடுங்கள்... கழற்றி நான் கையில் வைத்துக் கொள்கிறேன்" என்று சிரித்துக் கொண்டே, அப்படியே தழுவுவதுபோல் என்னை நெருங்கி, எனது கோட்டைக் கழற்ற முயன்றாள் அங்கெலிகா. உண்மையில் மிகவும் புழுக்கமாக இருந்தும், "பரவாயில்லை, ஓட்டலுக்குப் போனபின் கழற்றத் தானே போகிறேன்..." என்று சமாளித்து, அப்போதைக்கு அவளைத் தடுத்தேன். கோட் பாக்கெட்டிலேயே குறியாக இருக்கிறாள் போலும் என்று என் சந்தேகமும் வலுப்பட்டது.

நான் குடிக்க மறுக்கவே, திறந்துவிட்ட இரண்டு பீர்கேன்களையும் அவளே பருக வேண்டியதாயிற்று. வெறிச்சோடிப் போய் ஆளரவமற்ற தெருக்களில் நடந்து நடந்து, கடைசியாக 'ஓட்டல் பித்தோவன்' வாயிலில் போய் நின்றோம். அதுதான் அவள் தோழியின் ஓட்டலாம்! புகழ்பெற்ற ஜெர்மானிய இசைவாணரின் பெயரில் அமைந்திருந்தது.

ஓட்டலை மூடியிருந்தார்கள். அங்கெலிகா காலிங்பெல்லை அழுத்தினாள். கதவுகள் திறக்கப்பட்டன. அங்கெலிகாவின் தோழிதான் வந்து திறந்தாள்.

"ஹாய்...அங்கெலிகா...வெல்கம்! லின்ஸிலிருந்து புறப்படுமுன் வழக்கமாக டெலிபோன் செய்வாயே... இம்முறை ஏன் மறந்துவிட்டாய்!"

"முடியவில்லை! இதோ என் இந்திய நண்பர்... வழியில் ரயிலில் சந்தித்தேன், கிஸ்லா... வேறு ஏதோ ஓட்டலில் தங்க இருந்த இவரை இங்கு அழைத்து வந்தேன்!" அறிமுகம் நடந்தது. கிஸ்லா என்னோடு கைகுலுக்கினாள்.

"நன்றி. அங்கெலிகா... சரியான டூரிஸ்ட் மாதம். நீயும் முன் தகவல் சொல்லாமல் வந்துவிட்டாய்... இங்கு அறையே காலி இல்லை. என் அறையில் நீ ஒருத்தி தங்கிக் கொள்ளலாம்... உனக்கே தெரியும். அங்கே இரண்டு படுக்கைகள்தான் உண்டு..."

"ஐயையோ! இவர் ஏற்கனவே அமெரிக்கன் எக்ஸ்பிரஸ் மூலம் ரிஸர்வ் செய்திருந்த ஓட்டலுக்குப் போகவிடாமல் தடுத்து இவரை இங்கு அழைத்து வந்தேனே... என்ன செய்வது?"

அவர்கள் இருவரும் சிகரெட் எடுத்துப் பற்ற வைத்துக் கொண்டார்கள். "ஒரு காரியம் செய்யலாம் அங்கெலிகா! இவர் நமது விருந்தினர். நம்மால் இவருக்கு அசௌகரியம் நேர விடக்கூடாது. இவருக்கு ஒரு டாக்ஸி வரவழைத்து, இவரை ஏற்கனவே ரிஸர்வ் செய்தபடி 'நாய்பவ்' ஓட்டலுக்கே அனுப்பிவிடலாமே? இவரை ஏன் சிரமப்பட விட வேண்டும்?"

"வேண்டாம் கிஸ்லா! எனக்காக நீ கொஞ்சம் அசௌகரியத்தைப் பங்கிட்டுக் கொண்டாலே போதுமானது. இந்த அகாலத்தில் இவரைத் தனியே டாக்ஸியில் அவ்வளவு தூரம் போகச் சொல்லித் துரத்துவது எனக்குப் பிடிக்கவில்லை. உன்

அறையில் ஒரு கட்டிலை நீயும், நானும் பகிர்ந்து கொள்வோம். இன்னொன்றில் இவர் உறங்கட்டும்..."

"இவர் அதை அசௌகரியமாக நினைக்காத பட்சத்தில் எனக்கு ஆட்சேபணை இல்லை அங்கெலிகா... தங்கிக் கொள்ளட்டும்!" என்றாள் கிஸ்லா. பேருக்கு ஓட்டல் லெட்ஜரில் எனது பாஸ்போர்ட் எண் முகவரி குறித்தாள்.

'என்னிடமிருக்கும் பணத்தைப் பறிக்க இரண்டு பேருமாகச் சேர்ந்து நாடகமாடு-கிறார்களோ' என்று நான் சந்தேகப்பட்டுப் பயந்தேன். உடனே அவசர அவசரமாகக் குறுக்கிட்டுச் சொன்னேன்.

"தயவு செய்து ஒரு டாக்ஸி மட்டும் ஏற்பாடு செய்து கொடுங்கள், போதும்... உங்களுக்குச் சிரமம் வேண்டாம்! நான் ஏற்கனவே ரிசர்வ் செய்த ஓட்டலுக்கே போய்விடுகிறேன்..."

"இல்லை! நான் இந்த அகாலத்தில் உங்களை அதற்கு அனுமதிக்கமாட்டேன்... ரிஸ்க்!" என்றாள் கிஸ்லா. சொல்லிவிட்டு, உடனே ஓட்டல் 'நாய்பவ்'வுக்கு ஃபோன் செய்து என் அக்காமடேஷனைக் கேன்ஸல் செய்யுமாறு கூறியும் முடித்துவிட்டாள்.

'ரிஸ்க் என்ன ரிஸ்க்? உங்களிடம் பறிகொடுக்கப் போவதை அங்கே தெருவில் யாரிடமாவது பறிகொடுக்கப் போகிறேன். அவ்வளவுதானே?' என்று என் மனம் நினைத்தது. 'பறி கொடுப்பதைப் பெண்களிடமா பறி கொடுக்க வேண்டும்?' என்று மனம் என்னையே ஏளனம் செய்யவும் தொடங்கியது.

உடனே கிஸ்லா அந்த அழகிய சுத்தமான அறையைத் திறந்து ஒரு கட்டிலை எனக்காக ஒழித்துவிட்டாள். அறையின் கோட்ஸ்டாண்ட் மற்றொரு கட்டிலருகே- அதாவது, அங்கெலிகாவும் - கிஸ்லாவும் படுத்துக் கொள்வதற்கு இருந்த கட்டிலருகே இருந்ததனால், எனது கோட்டை நான் அங்கே மாட்டத் துணியவில்லை. என் படுக்கை மெத்தையில் தலையணை அருகிலேயே மடித்து வைத்துக் கொண்டேன். அம்மாதிரி வைத்துக் கொள்வதானால் கோட்டில் மடிப்பும், சுருக்கமும் விழும் என்றாலும் பரவாயில்லை... பாக்கெட்டில் இருக்கிற பணம் பிழைத்தால் போதும் என்ற பாதுகாப்பு உணர்வே அப்படிச் செய்யத் தூண்டியது.

பத்து இருபது நிமிஷம் கழித்து அங்கெலிகா வந்து டின்னருக்கு அழைத்தாள். மறுபடியும் என்னுள் சந்தேகம்.

'சாப்பாட்டில் ஏதாவது கலந்து வைத்து விடுவார்களோ?'

"ஜூரிச்சிலிருந்து வியன்னா வரும்போது ஆஸ்டிரியன் ஏர்வேஸ் ஃபிளைட்டில் கொடுத்த உணவே அதிகம்... மறுபடி எனக்குப் பசிக்கவில்லை" என்று பிடிவாதமாகச் சொன்னேன்.

அங்கெலிகா என்னை உற்றுப் பார்த்துச் சிரித்தாள்.

"நீங்கள் பொய் சொல்லுகிறீர்கள்! பயமும் கூச்சமும் சந்தேகமும் உங்களைப் பொய் சொல்லத் தூண்டுகின்றன... ஆஸ்திரியன் ஏர்வேஸ் ஃபிளைட்டில் என்ன

சாப்பிடக் கொடுப்பார்கள் என்பது எனக்குத் தெரியாதா? இப்போது மணி பன்னிரண்டரை... இந்த நாலு நாலரை மணி நேரத்தில் ஃபிளைட்டில் சாப்பிட்டது எந்த மூலையில் போயிருக்குமோ? உங்களுக்கு நல்ல பசி இருக்கும். வம்புக்கு நீங்கள் புளுகிறீர்கள்..."

"உண்மையைத்தான் சொல்லுகிறேன். எனக்குச் சிறிது கூடப் பசிக்கவில்லை..."

"ரியலி...?"

"நிச்சயமாக..."

"அப்படியானால் நான் உங்களை வற்புறுத்த விரும்பவில்லை" என்று கூறிவிட்டுப் போய்விட்டாள் அங்கெலிகா.

அவள் போனதும் நான் போர்வையை இழுத்துப் போர்த்துக்கொண்டு உறங்க முயன்றேன். என் உடம்பு மட்டும் அல்லாமல், பணம் இருந்த கோட்டுக்கும் சேர்த்துப் போர்வையை போர்த்தியிருந்தேன். அப்போதிருந்த புழுக்கத்தில் போர்வையே தேவைப்படாது. இருந்தாலும், பாதுகாப்புக்காக வலிந்து போர்த்திக் கொள்ள நேர்ந்திருந்தது. இந்தியாவில் இப்படி ஓர் ஆண்பிள்ளையோடு தனியறையில் இரண்டு இளம் பெண்களைத் தங்கச் சொன்னால் - அந்தப் பெண்கள் சந்தேகமும், பயமும், அடைவார்கள். இங்கேயோ நேர்மாறாக இருந்தது! இரண்டு பெண்களோடு தனியறையில் தங்க நேர்ந்து விட்டதற்காக ஓர் ஆண் பயமும், சந்தேகமும், கூச்சமும்பட நேர்ந்திருந்தது. இடமாறுதலாலும், நேரமாறுதல்களாலும் பல நாட்கள் சரியாக உறங்காமல் களைத்துப் போன நான் எப்போது எப்படி அயர்ந்து உறங்கினேனென்றே எனக்குத் தெரியாது. அடித்துப் போட்ட மாதிரி ஒரு தூக்கம்.

மறுபடி கண்விழித்த போது குளிர்ந்த காற்று முகத்தில் வந்து உராய்ந்தது. வெளியே பறவைகளின் குரல்கள் கலந்து ஒலித்தன. அறைக்குள் பகலின் இளங்காலை வெளிச்சம் பரவியிருந்தது.

கண் விழித்ததும் எதிர்க் கட்டிலைப் பார்த்தேன். காலியாயிருந்தது. விரிப்புக்கள் அழகாக மடித்துத் தலையணைகளின் மீது வைக்கப்பட்டிருந்தன. உடனே என் தலை மாட்டோடு அரவணைத்தபடி வைத்திருந்த கோட்டைப் பார்த்தேன். காணவில்லை! நெஞ்சு பதறியது. நழுவிக் கீழேயோ பக்கவாட்டிலோ விழுந்திருக்கலாம் என்ற அனுமானத்தில் பார்த்தால் அங்கேயும் கோட்டைக் காணவில்லை! 'சரி! பணம்-பாஸ்போர்ட் எல்லாவற்றையும் பறிகொடுத்துவிட்டோம். இந்த இரண்டு இரண்டரை மாதப் பயணத்தில் வியன்னாவில் பித்தோவன் ஓட்டலில் வந்து இப்படிச் சகலத்தையும் பறிகொடுக்க வேண்டுமென்று நம் தலையில் எழுதியிருக்கிறது போலும்!' என்று என்னையே நொந்து கொண்டேன். பரபரப்பாக அறை முழுவதும் தேடினேன். கோட்டை எங்கும் காணவில்லை.

ஓட்டல் முழுவதும் வேறு அறையே இல்லாததுபோல் நாடகமாடி இந்த ஒரே அறையில் தங்களோடு தங்கும்படி நிர்ப்பந்தப்படுத்தி, இரண்டு அழகிய ரௌடிப்

பெண்பிள்ளைகள் வஞ்சகமாக நம்மை ஏமாற்றிவிட்டார்களே என்றெண்ணியபோது ஆத்திரம் ஆத்திரமாக வந்தது.

குளியலறையில் போய்ப் பல் துலக்கி முகம் கழுவி உடை மாற்றிக் கொண்டு ஒட்டல் ரிஸப்ஷனுக்குச் சென்றேன். அங்கெலிகாவைக் காணவில்லை. கிஸ்லா மட்டும் ஏதோ எழுதிக் கொண்டிருந்தாள்.

செய்கிற திருட்டைத் திட்டமிட்டு இரண்டு பெண்களுமாகச் சேர்ந்து செய்துவிட்டு, ஒருத்தி எங்கோ போய்விட்டாள்... இன்னொருத்தி, 'இந்தப் பூனையும் இந்தப் பாலைக் குடிக்குமா?' என்பதுபோல் பரமசாதுவாக உட்கார்ந்து ஏதோ எழுதிக் கொண்டிருக்கிறாள்!'

எனக்கு ஒரே கோபம். நேரே ரிஸப்ஷன் கவுண்ட்டர் எதிரே போய் நின்றேன்.

கிஸ்லா தலை நிமிர்ந்தாள். புன்முறுவலோடு, "குட்மார்னிங்! நன்றாக உறங்கினீர்களா?" என்று கேட்ட அவளிடம் பதிலுக்கு நன்றியோ, குட்மார்னிங்கோ கூறாமலே, "என் கோட்டைக் காணவில்லை... படுக்கையில் என்னருகில் வைத்துக் கொண்டிருந்த கோட் எப்படிக் காணாமல் போக முடியும்? யாரோ எடுத்திருக்கிறார்கள்" என்று கடுமையாகப் புகார் கூறுகிற தொனியில் ஆரம்பித்தேன்.

"யாரும் எடுக்கவில்லை! ராத்திரி உங்கள் கோட் படுக்கையிலிருந்து நழுவிக் கீழே விழுந்து சுருக்கமும் மடிப்புமாகக் கிடந்தது. அங்கெலிகாதான் முதலில் அதைப் பார்த்து எடுத்து என்னிடம் கொடுத்தாள். இதை நன்றாகச் சுத்தம் செய்து அயர்ன் பண்ணி இவரிடம் கொடு' என்றாள். இரவு இரண்டரை மணி சுமாருக்கு அவளுக்கு லின்ஸில் இருந்து போன் வந்தது. அவளுடைய வயதான தந்தைக்கு உடல் நிலை மிகவும் சீரியஸ்ஸாகி இருப்பதாகவும், அவள் உடன் தேவை என்றும் கூறி, அவளை உடனே புறப்பட்டு வரச் சொன்னார்கள். வேறு வழியில்லை. அவள் போக வேண்டியிருந்தது. பாவம்! பெரிய பணக்காரக் குடும்பத்துப் பெண். அவள் தந்தைக்கு லின்ஸில் இரண்டு பெரிய ப்ருவரி (பீர் தயாரிக்கும் தொழிற்சாலை)கள் இருக்கின்றன. எங்களுடையதற்கும் வேறு பல ஒட்டல்களுக்கும் அவர்கள் ப்ருவரிதான் பீர் சப்ளை செய்கிறது. வியாபார விஷயமாக அடிக்கடி வியன்னா வருவாள். தந்தைக்கு இவள் ஒரே பெண். இரண்டு மூன்று வருஷங்களாகத் தொழிற்சாலை நிர்வாகத்தை இவள்தான் கவனித்து வருகிறாள். தாயை இழந்து பல வருஷங்கள் ஆகின்றன. உங்களிடம் சொல்லாமல் போக நேர்வதற்காக வருந்தினாள். உங்களிடம் தந்துவிடச் சொல்லி ஓர் உறையைத் தந்து விட்டுப் போயிருக்கிறாள்..."

என்று கூறி, சுத்தமாக அயர்ன் செய்து மடித்து வைத்திருந்த என் கோட்டையும், அதனுள்ளிருந்த மற்றவற்றையும் என்னிடம் பத்திரமாகத் திருப்பிக் கொடுத்தாள் கிஸ்லா. சரிபார்த்ததில், எல்லாம் நான் வைத்தபடி இருந்தன. எனக்கு மிகவும் வெட்கமாகப் போய்விட்டது.

"போய் பிரேக்ஃபாஸ்டை முடியுங்கள்! கீழே பேஸ்மண்ட்டில் டைனிங் ஹால் இருக்கிறது. காலை ஒன்பது மணிக்குப் புறப்படும் 'ஸிடிரமா' டூரிஸ்ட் கோச்சில்

இருநூற்றெண்பது ஷில்லிங் கொடுத்து, உங்களுக்காக ஒரு ஸீட் ரிஸர்வ் செய்து கொடுத்துவிட்டுப் போயிருக்கிறாள் அங்கெலிகா... நீங்கள் எட்டே முக்காலுக்கு இங்கிருந்து புறப்பட்டுவிட வேண்டும்" என்று என்னைத் துரிதப்படுத்தினாள். நான் கிளம்புமுன், "இந்தாருங்கள் அங்கெலிகாவின் கடிதம்!" என்று ஒரு கனத்த உறையையும் என்னிடம் நீட்டினாள் கிஸ்லா. உடல்நலமில்லாத தந்தையைக் காணப் புறப்படுகிற அவசரத்தில், இத்தனை நீண்ட கடிதத்தை நமக்கு இவளால் எப்படி எழுத முடிந்தது என்ற வியப்புடன், அந்த உறையை வாங்கிப் பிரித்தேன் நான்.

"அருமை நண்பரே! முதலில் திடீரென்று சொல்லிக் கொள்ளாமல் புறப்பட நேர்ந்ததற்காக என்னை மன்னிக்கவும். காரணத்தை இதற்குள் கிஸ்லாவே உங்களிடம் கூறியிருப்பாள். பயமும்-கூச்சமும் நிறைந்த உங்களைத் தனியே தவிக்க விடாமல் நானே உடன் வந்து, வியன்னாவில் எல்லாவற்றையும் சுற்றிக்காட்டி உங்களை வியப்பிலாழ்த்த நினைத்திருந்தேன். அது இயலாமல் போய்விட்டது. அதற்காக, ஸிடிரமா டூர் கோச்சில் ஓட்டல் பித்தோவனிலிருந்தே டெலிபோன் மூலம் இரண்டு ஸீட் ரிஸர்வ் செய்திருந்தேன். நான் என் ஸீட்டை கான்சல் செய்துவிட்டு, உங்கள் ஸீட்டை மட்டும் உங்களிடம் தரச்சொல்லி கிஸ்லாவிடம் கூறியிருக்கிறேன். தங்குவதற்காக நீங்கள் ஓட்டல் பித்தோவனுக்கு எதுவும் தரவேண்டியதில்லை. நான் பார்த்துக்கொள்வேன். அந்நியச் செலவாணியின்றிக் கஷ்டப்படும் உங்களுக்கு உதவ ஆசைப்படுகிறேன். மறுக்காது ஏற்றுக் கொள்ளுங்கள். இதனுடன் இணைக்கப்பட்டுள்ள இரண்டாயிரம் ஷில்லிங்ஸை என் அன்பளிப்பாக ஏற்கவும். அப்படி ஏற்க விருப்பமில்லை என்றால், கடனாக ஏற்கவும். கடனை எனக்குத் திருப்பி அனுப்ப வேண்டாம் நீங்கள் இந்தியா திரும்பிய பின் உங்களால் முடியும்போது, இத்தொகைக்கு இணையான இந்திய ரூபாய்களை, ரோமன் கத்தோலிக்கர்கள் சார்புள்ள ஏதாவதொரு சாரிடபிள் இன்ஸ்டிடியூஷனுக்கு நன்கொடையாக வழங்கினால் போதுமானது! நான் இந்தியா வர நேர்ந்தாலோ, மறுபடி நீங்கள் வியன்னா வர நேர்ந்தாலோ சந்திக்கலாம். உங்கள் முகவரி ஓட்டல் லெட்ஜருக்காக நீங்கள் தந்த விவரங்களிலிருந்து குறித்துக் கொண்டேன். என் முகவரி இக்கடிதத்தில் குறித்திருக்கிறேன். நீங்கள் வியன்னாவி-லிருந்து புறப்படுகிறவரை கிஸ்லா உங்களுக்கு ஒரு குறைவுமின்றி உங்களைக் கவனித்துக் கொள்வாள். இந்த இடத்தில் என் இதழ்களால் ஒரு முத்தத்தைப் பதித்த பின் கையொப்பமிடுகிறேன்.

- இப்படிக்கு உங்கள் அன்புள்ள,
அங்கெலிகா"

படித்து முடித்தவுடன் திகைப்பில் மலைத்தே போனேன். உடன் பிறந்தே கொல்லும் சந்தேகம் என்னும் நோயை ஒவ்வோர் இந்தியனிடமும் ஏன் வைத்தாய் என்று என்னை நோந்து கொள்ளத் தோன்றியது. பயத்திலிருந்தும் சந்தேகத்திலிருந்தும் விடுபடாத ஓர் அப்பாவி, காதலுக்கோ - நட்புக்கோ கூடத் தகுதியற்றவனாகத்தான் இருக்க வேண்டும்! நான் அங்கெலிகாவிடம் அப்படித்தான் இருந்திருக்கிறேன்.

**(இதயம் பேசுகிறது, தீபாவளி மலர், 1984)**

## 160. தேய்மானம்

முத்துரங்கத்தை நான் முதன் முதலாகச் சந்தித்தது பாண்டிபஜாரில் ஒரு வெற்றிலை பாக்குக் கடை அருகில். ஐந்து ரூபாய் நோட்டு ஒன்றை எடுத்துக் கொடுத்து ஒரு மாலைத் தினசரி வாங்கிக் கொண்டு நான் கடைக்காரனிடம் பாக்கிச் சில்லறைக்காகக் காத்து நின்றபோது, "வணக்கம், சார். எப்படியிருக்கீங்க? இப்ப 'மணிமலர்'ல வர தொடர்கதை ரொம்ப நல்லாயிருக்கு சார்" என்று புன்முறுவலோடு அருகே வந்தார், அந்த நடுத்தர வயது மனிதர். பாகவதர் கிராப். படர்ந்த முகம். நெற்றியில் குங்குமப் பொட்டு.

எனக்கு முதலில் குழப்பம். அப்புறம் தயக்கம். "வணக்கம்! நீங்க யார்னு தெரியலியே? 'மணிமலர்'ல நான் இப்போ தொடர்கதை எதுவும் எழுதலியே?"

"நீங்க எதிலே எழுதினாலும் உங்க கதைகள்னா எனக்கு உசிர் சார்."

"அது சரி! நீங்க யார்னே சொல்லலியே?"

"நடிகமணி முத்துரங்கம்னு கேள்விப்பட்டிருப்பீங்களே? சின்ன வயசிலே பாஸ்கரதாஸ் பால விநோத சபா நாடகக் கம்பெனியிலே இருந்தேன். அப்புறம் சினிமாத்துறைக்கு வந்து கே.கே.வி. நிறுவனப் படங்களிலே சில்லறை வேஷங்களைப் பிரமாதமாப் பண்ணினேன்."

"அப்படியா? ரொம்ப மகிழ்ச்சி."

"இப்பக்கூட ஏழரை மணிக்குத் தரணி ஸ்டூடியோவில படப்பிடிப்பு இருக்கு. நான் போயாகணும்."

மனிதர் விடாமல் கூடவே நடக்கிறார். மணிபர்சை மூடுகிறேன் நான்.

"அடடே மணியாச்சே?"

"அப்போ நாம இன்னொரு நாள் பார்க்கலாமா?"

"ஒரு சின்ன உதவி. ஒரு கலைஞனோட கஷ்டத்தை இன்னொரு கலைஞன் தான் புரிஞ்சிக்க முடியும்."

"சொல்லுங்கோ..."

"நான் இப்போ வீட்டிலே இருந்தேன்னா பட நிறுவன வண்டி வந்து அழைச்சிண்டு போகும். இப்போ இங்கே இருக்கிறதாலே என் செலவில நான்தான் போயாகணும். நம்மாலே படப்பிடிப்பு நின்னுடப் படாது."

"நியாயந்தான்."

"ஒரு பத்துரூபாய் குடுத்தீங்கன்னா ஆட்டோவில் போயிடுவேன். வீட்டிலேருந்து கிளம்பறப்போ எடுத்துக்க மறந்துட்டேன்.கலைஞர்களுக்கு ஞாபகமறதி கூடவே பிறந்த வியாதி. நீங்களும் அனுபவப்பட்டிருப்பீங்களே?"

"பக்கத்திலே எனக்குத் தெரிஞ்ச ஒருத்தர் கடையிலே டெலிஃபோன் பண்ணிப் பேசி நீங்க இங்கே இருக்கிற தகவலைத் தெரிவிச்சுக் கார் அனுப்பச் சொல்லலாமா?"

"அது கஷ்டம் சார்! டைரக்டர், தயாரிப்பாளர், மானேஜர்லாம் செட்ல இருப்பாங்க. அங்கே போன் கிடையாது."

"டாக்ஸியிலே போய் ஸ்டூடியோவில அவங்களையே டிஸ்போஸ் பண்ணி வாடகை குடுக்கச் சொல்லிவிடலாமே!"

"அது நல்லா இருக்காது சார்."

நான் தயங்கி நின்றேன்.

"நீங்க நாளைக்குச் சாயங்காலம் பேப்பர் வாங்க வரப்ப ஒரு பத்து ரூபா நோட்டோடு இங்கே காத்திண்டிருப்பேன்."

தயங்கித் தயங்கி ஒரு பத்து ரூபாய் நோட்டை எடுத்து நீட்டினேன். வாங்கிக் கொண்டு நன்றி சொல்லி வணங்கி விட்டுப் புறப்பட்டார் அவர். அதற்குப்பின் சொல்லியபடி மறுநாள் அந்தப் பத்து ரூபாயைத் திருப்பிக் கொடுக்க அவர் வரவுமில்லை. அவர் வரவுக்காக நான் காத்திருக்கவுமில்லை. நாளடைவில் எனக்கு அது மறந்து போயிற்று.

ஆறு மாதம் கழித்து உஸ்மான் ரோடில் சிவாவிஷ்ணு கோயில் எதிரே ஒரு சீவல் கடையில் நான் வெற்றிலை சீவல் வாங்கிக் கொண்டு நின்றபோது, "அண்ணா, வணக்கம். முந்தாநாள் உங்களை டி.வி.யிலே பார்த்தேனே? செய்தி மலர்லே ராஜபார்ட் மாதிரி ஜம்னு பேசினீங்களே?" என்று பின்புறம் ஒரு குரல் ஒலித்தது. திரும்பினால் முத்துரங்கம்.

"உங்க தயவுலே ஐம்பது கிராம் சீவலும் எட்டணா வெத்திலையும் வாங்கிக்கறேன்" என்று என் இசைவுக்குக் காத்திராமலே மேற்படி அயிட்டங்களைக் கடைக்காரனிடம் வாங்கி முடித்துவிட்டார் முத்துரங்கம். கேட்டதைவிட அதிகப்படியாக ஒரு பாக்கெட் பன்னீர்ப் புகையிலையும் வாங்கிக் கொண்டிருந்தார்.

"என்ன, ரொம்ப நாளாய்த் தட்டுப்படவே இல்லையே, வெளியூர் போயிருந்தீங்களா?"

"அதையேன் கேட்கறீங்க அண்ணா? ஒரே வெளிப்புறப் படிப்பிடிப்பு மயம். ஏழெட்டுப் படத்தில் மாட்டிக் கிட்டிருக்கேன். முந்தா நாள் ஊட்டி, நேத்து செஞ்சிக்கோட்டை, நாளைக்கி வைகை டாம்னு அலைச்சல்."

இத்தனை வெளியாகிற படங்களிலே நடித்தும் இந்த மனிதருக்கு ஏன் இத்தனை பண வறட்சி என்ற திகைப்பு ஏற்பட்டது. நான் சினிமாப் பார்க்கிற ஆள் இல்லை.

சினிமா இதழ்களையும் அதிகமாக இலட்சியம் செய்து படிக்கிற பழக்கமும் எனக்குக் கிடையாது. அந்த வகையில் நான் ஒரு ஞான சூன்யம்.

அதனால் முத்துரங்கம் ஏற்கனவே நடித்ததாகக் கூறிய பழைய படங்களையும் நான் பார்த்திருக்கவில்லை. நடிக்கப் போகிற புதிய படங்களையும் பார்க்க. நேரப் போவதில்லை. ஆனால், மனிதர் ஏன் கொஞ்சமும் சுயமரியாதையோ மானரோஷமோ இன்றித் தெருவில் பிச்சைக்கு அலைகிறார் என்று வியப்பும் ஆத்திரமும் அடைந்தேன். ஒருவேளை பல சினிமாக்காரர்கள், நாடக நடிகர்களைப்போல் இவருக்கும் இரண்டு மூன்று சம்சாரங்களும் ஏகப்பட்ட குழந்தை குட்டிகளும் இருக்குமோ? அவர் மேல் பரிதாபமாகவும் இருந்தது, ஆத்திரமாகவும் இருந்தது.

அந்த அந்த நேரங்களில் முத்துரங்கம் என்னைப் பற்றி நல்லதாக இரண்டு வார்த்தைகள் புகழ்ந்து சொல்லிவிட்டு ஏதாவது கேட்டால், தட்டாமல் உதவி வந்தேன். பலவீனந்தான்! கடவுளே தோத்திரபிரியர் என்கிறார்கள். பாமர மனிதனான நான் எந்த மட்டும்?

மூன்றாவது முறையாக ஆடிக் கிருத்திகைத் தினத்தன்றோ அல்லது வேறு ஏதாவது ஒரு நாளிலோ, சரியாக ஞாபகம் இல்லை. அதிகாலையிலிருந்து விரதமிருந்து அன்று மாலை பட்டினியோடு வடபழநி கோயிலுக்குப் போய்த் தரிசனம் செய்துவிட்டு வந்தேன். நாள் முழுவதும் பசியாயிருந்தது. திரும்பும்போது ஓர் ஓட்டலில் புகுந்து இட்லி வடைக்கு ஆர்டர் சொல்லிவிட்டுக் காத்திருந்தபோது முத்துரங்கம், திடீரென்று உதயமாகி எதிர் நாற்காலியில் உட்கார்ந்தார்.

"முந்தாநாள் ராஜாஜி ஹால்லே பாரதி விழாவிலே பிரமாதமாப் பேசினீங்க. 'பாரதியைக் காலச் சிமிழில் அடைக்க முடியாது. அவன் நம் தலைமுறைக்கு மட்டுமின்றி வரப் போகிற பல தலைமுறைகளுக்கும் யுகபுருஷனாக விளங்குவான்'னு நீங்க வெண்கலக் குரல்லே முழங்கினப்போ கிளம்பின கரகோஷத்திலே இரண்டு கைகள் என்னோடது ஸார்."

"பாரதி விழாவுக்கு நீர் வந்திருந்தீரா?"

"அண்ணா பேசறதா தெரிஞ்சதும் நான் எப்பிடி வராம இருக்க முடியும்?"

"இன்னும் ஒரு பிளேட் இட்லி வடை கொண்டு வாப்பா" என்று நானே முந்திக் கொண்டு முத்துரங்கத்துக்காகவும் சேர்த்து ஆர்டர் செய்தேன்.

இட்லி வடையைச் சாப்பிட்டுக் கொண்டே, "இந்த ஹோட்டல்லே நெய் ரோஸ்ட் ரொம்ப நல்லா இருக்கும்" என்று என்னிடம் புகழ்ந்துவிட்டு, ஸர்வரைக் கூப்பிட்டு இரண்டு நெய் ரோஸ்ட்டுக்கும் ஆர்டரும் கொடுத்துவிட்டார் முத்துரங்கம்.

சாப்பிட்டு முடித்ததும் பன்னிரண்டு ரூபாய் எண்பது காசு பில் கொடுத்தேன். என்னிடம் இருந்ததே பதினைந்து ரூபாய்தான்.

"அண்ணா மன்னிக்கணும்! உங்ககிட்ட ரெண்டு வார்த்தை நின்னு பேசக்கூட எனக்கு இப்ப நேரம் இல்லே, மூவிடோன் ஸ்டுடியோவில் ரஜனி சாரோட ஒரு ரோல்

பண்றேன். அவசரமாய்ப் போகணும். அப்புறம் பார்க்கலாம்'' என்று மின்னலாய் மறைந்துவிட்டார் முத்துரங்கம். நல்ல வேளை, ஆட்டோவுக்குப் பத்து ரூபாய் கொடு, என்று கேட்காமல் அந்த மட்டில் விட்டாரே என்ற மகிழ்ச்சியில் நான் படியிறங்க இருந்தபோது, "சார், ஒரு நிமிஷம்'' என்று குரல் கேட்டுத் திரும்பினேன். ஹோட்டல் பணப்பெட்டியில் அமர்ந்திருந்தவர்தாம் என்னைக் கூப்பிட்டார்.

திரும்பிப் போனேன்.

"உங்க செல்வாக்கிலே யாரிடமாவது சிபாரிசு பண்ணி இந்த மனுஷனுக்கு ஒரு வேலை வாங்கி வைக்கப்படாதா? இப்படிப் பைத்தியமா அலைகிறானே?''

"யாரைச் சொல்றீங்க?''

"இப்போ உங்க செலவிலே டிபன் சாப்பிட்டுவிட்டுப் போறானே, முத்துரங்கம், அவனைத்தான்.''

"ஏன்? அதான் நிறைய சினிமாவிலே நடிச்சுண்டிருக்காரே?''

"மண்ணாங்கட்டி! அதை எல்லாம் நீங்க நம்பறீங்களா? சினிமாவும் இல்லை; தெருப்புழுதியுமில்லை; நானும் முத்துரங்கமும் ஒரே நாடகக் கம்பெனியிலேதான் இருந்தோம். கம்பெனி கலைஞ்சு போனதும் இனிமே யோக்கியமா வேற ஏதாவது தொழில் செஞ்சுதான் வாழணும்னு நான் கடனை உடனை வாங்கி இந்த ஓட்டலை வச்சேன். அவன் சினிமாவிலே சான்ஸ் தேடி அலைஞ்சான். இன்னிக்கி வரை எதுவும் கிடைக்கல்லே. ஏமாற்றத்திலும் விரக்தியிலும் 'மனநோயாளியா' மாறி, 'இன்னிக்கு அங்கே, நாளைக்கி இங்கே படபிடிப்பு, நேத்திக்கி பெங்களூர் போயிருந்தேன்'னு பார்க்கிறவங்ககிட்ட எல்லாம் பொய் சொல்லிக்கிட்டு முடிவிலே, 'ரெண்டு ரூபா கைமாத்துக் குடுங்க'ன்னு முடிக்கிறது வழக்கம். இப்பல்லாம் பலபேர் இவன் தலையைப் பார்த்தாலே ஓட ஆரம்பிச்சுடறாங்க.''

"ஐயையோ, அப்படீன்னா இவரோட குடும்பம்?''

"குடும்பமா? இவனுக்கு ஏது குடும்பம்? தனிக்கட்டை சார்! அந்த நாளிலே நாடகக்காரனை நம்பி எவன் பெண் கொடுத்தான்?''

"நீங்களே இங்கே இந்த ஓட்டல்லே ஏதாவது ஒரு வேலையைக் கொடுத்து உட்கார்த்தி வைக்கப்படாதோ?''

"அதெல்லாம் ஏற்கனவே செய்து பார்த்தாச்சு. இங்கேயே உட்கார்த்திப் பார்த்தேன். வர்ற வாடிக்கையாளரை எல்லாம் நிறுத்தி வச்சு, 'உங்களுக்குத் தெரியுமோ, சினிமாவிலே கேரெக்டர் ரோல் எல்லாம் பண்ணியிருக்கேன். இதோ இப்பக்கூட தரணி ஸ்டூடியோவில் படப்பிடிப்பு இருக்கு. உடனே போயாகணும்'னு சொல்லுவான். தொந்தரவு தாங்காமப் போச்சு. முத்துரங்கம் நல்ல கலைஞன்தான். ஆனா விரக்தியும் ஏமாற்றமும் அவனை மனநோயாளியாவே ஆக்கிடிச்சு!''

"அவரைப் பத்தி இவ்வளவு தெரிஞ்சும் என்னைக் கூப்பிட்டு அவருக்கு வேலை கொடுக்கச் சொல்றீங்களே?"

"ஒரு நல்ல வேலையாப் பார்த்துக் கொடுத்து, உங்களை மாதிரி ஒருத்தர் படிப்படியா அறிவுரை கூறி மெல்ல மெல்ல மனசை மாத்தினீங்கன்னா, முத்துரங்கத்தோட பைத்தியத்தைத் தெளியப் பண்ணிடலாம்னு நெனைக்கிறேன்."

"அவர் எவ்வளவு காலமா இப்படி இருக்கார்?"

"பத்து வருஷத்துக்கு மேலேயே இருக்கலாம். சொந்தமாப் பாடத் தெரியும். நடிப்போடு சங்கீத ஞானமும் உண்டு."

"பத்து வருஷ காலமாகத் தேய்ந்துபோன ஒரு கலையுணர்ச்சியை இனிமேல் சரிப்படுத்த முடியுமான்னு எனக்கே சந்தேகமாகத்தான் இருக்கு."

"நீங்க படித்தவர்; எழுத்தாளர். மனித மனங்களின் நுணுக்கங்களை அறிந்தவர். உங்க முயற்சி ஒருவேளை பயன் அளிக்கலாம். என்னாலே முடியாதது ஒருவேளை உங்களாலே முடியலாம். ஒரு நல்ல கலைஞன் வீணாப் போயிடக் கூடாதுங்கறதுதான் என்னோட கவலை."

"பார்க்கலாம், முயற்சி செய்யறேன்" என்று அவருக்கு உறுதி கூறிவிட்டுத் திரும்பினேன்.

என் அதிர்ஷ்டமோ, அல்லது துரதிர்ஷ்டமோ தெரியவில்லை. பனகல் பூங்கா அருகே அடுத்த வாரமே முத்துரங்கத்தை நான் சந்திக்க நேர்ந்தது. சாலையோரத்துக் கரும்பு ஜூஸ் வியாபாரியிடம் கரும்புச்சாறு கேட்டுவிட்டு, அவன் பிழிந்து தருவதற்காகக் காத்திருந்தபோது, "அண்ணா வணக்கம்! பூம்பொழில்லே அந்தச் சிறுகதை, ஜமாய்ச்சிருக்கீங்க" என்ற குரலுடன் முத்துரங்கம் உதயமானார்.

"நான் பூம்பொழில்லே கதை எதுவுமே எழுதலியே முத்துரங்கம்."

"நீங்க எதிலே எழுதினாலும் எழுதாவிட்டாலும் உங்க கதைன்னா எனக்கு உசிர் சார்."

இன்னொரு கிளாஸ் கரும்புச் சாறுக்குச் சொல்லிவிட்டு அருந்தி முடித்தபின், "முத்துரங்கம், உங்ககிட்ட கொஞ்சம் தனியாப் பேசணும். எங்கூட ஒரு பத்து நிமிஷம் பார்க்குக்கு வர முடியுமா? அவசரம் ஒண்ணும் இல்லியே உங்களுக்கு?" என்று ஆரம்பித்தேன்.

"அவசரந்தான். பார்க்கவி ஸ்டூடியோவில் நவபாரதி மூவிஸாரின் படத்திலே தகப்பனாரா நடிக்கிறேன். மகன் யார் தெரியுமா? சிவாஜிதான். அதாவது படத்திலே பரவாயில்லே, வாங்கோ, உங்களோட பேசிட்டு அப்புறமாப் போறேன்."

பார்க்கில் கூட்டம் அதிகம் இல்லாத ஒரு மூலை பெஞ்சாகப் பார்த்து அமர்ந்தோம். நான் இதமான குரலில் ஆரம்பித்தேன்.

"இதோ பாருங்கள், முத்துரங்கம்! உங்களுக்கு வயசாச்சு. நீங்க இன்னும் சின்னக் குழந்தை இல்லே. இப்படிச் சுத்தறது உங்களுக்கே நல்லா இருக்கா? உங்களுக்குத் தெரிஞ்ச சங்கீத ஞானத்தில நாலு குழந்தைகளுக்குச் 'சங்கீதம்' சொல்லிக் கொடுத்தாக்கூட மாசம் நானூறு ஐந்நூறு சம்பாதிக்கலாம். சினிமா உங்களைப் பைத்தியமாக ஆக்கி விட்டதைப் பத்தி நீங்களே வருத்தப்படணும். நீங்க மனசு மாறி நல்லபடி வர்றதா இருந்தா, நானே நாலு டியூஷனுக்கு ஏற்பாடு பண்றேன்."

"என் மேலே பொறாமையிலே, யாரோ என்னைப் பத்தி உங்ககிட்ட தப்பாச் சொல்லியிருக்காங்க. டியூஷனாவது ஒண்ணாவது? எனக்கு அதுக்கெல்லாம் எங்கே நேரம் இருக்கு? இன்னிக்கி நவபாரதி மூவிஸ்ல படப்பிடிப்பு இருக்கு. நாளைக்கி சாந்தி சினிடோன்ல, நாளன்னிக்கி ஆர்.கே.வி. பிக்சர்ஸ்ல ஒரு நிமிஷம்கூட மிச்சமில்லே. இதோ பார்க்கவி ஸ்டுடியோவுக்குக் கிளம்பிண்டேயிருக்கேன்" என்று எழுந்திருந்தார் முத்துரங்கம்.

"இந்தாங்க, இதை வச்சுக்குங்க. ஆட்டோவுக்குத் தேவைப்படும்" என்று அவர் கேட்பதற்கு முன் நானாகவே பத்து ரூபாயை எடுத்து நீட்டிவிட்டு விடைபெற்றுக் கொண்டேன். வழக்கம் போல் முதலில் ஆத்திரமும் பின்பு பரிதாபமும் ஏற்பட்டன.

என்றுமே இனிமேல் திருத்த முடியாத மனத்தளவுக்குத் தேய்ந்து போனபின் ஒரு கலைஞனின் மனத்தை மீண்டும் மறுமலர்ச்சியும் முழுமையும் பெறச் செய்ய முடியாதென்று என்னுள் ஒரு தீர்மானமான முடிவே ஏற்பட்டிருந்தது. கொஞ்சம் நஞ்சம் இல்லை. பல வருஷத் தேய்மானம்.

முத்துரங்கத்தை அவருடைய சொந்தக் கற்பனைகளிலும் சுகமான பொய்களிலுமே தொடர்ந்து வாழவிடுவதைத் தவிர வேறு வழியில்லை என்பதை அவருடைய நண்பரான வடபழநி ஓட்டல் உரிமையாளருக்கு டெலிபோன் செய்து கூறினேன்.

எந்தப் படத்திலுமே நடிக்காத முத்துரங்கம் என்னளவில் இன்னும்கூட ஒரு சூப்பர் ஸ்டாராகவே தோன்றினார்.

**(கலைமகள், தீபாவளி மலர், 1984)**

## 161. ஒரு கவியின் உள் உலகங்கள்

**பூ**ங்குன்றத்துக்குத் தந்தி ஆபிஸ் கிடையாது. தந்தி, தபால் எல்லாம் பன்னிரண்டு மைலுக்கு அப்பால் இருந்த பெரிய நகரமான மேலநல்லூரிலிருந்துதான் பட்டுவாடா ஆக வேண்டும். இரயில்வே ஸ்டேஷனும் மேலநல்லூர்தான். அங்கிருந்து பூங்குன்றத்துக்குப் போக ஒற்றையடிப்பாதை அடர்ந்த காட்டை வகிர்ந்து கொண்டு செல்கிறது. வண்டித்தடம் சுற்றுவழியாகப் போகிறது. அதன் மூலமாகப் போனால் மேலும் நாலு மைல் அதிகமாகும். ஒற்றையடிப் பாதையோ, வண்டித்தடமோ, எதுவானாலும் இருட்டியபின் போக்குவரத்துக் கிடையாது. வனவிலங்குகளைப் பற்றிய பயமும் உண்டு. மலையடிவாரத்தில் அடர்ந்த காட்டினிடையே இரண்டு காட்டாறுகளுக்கு நடுவே சிக்கிக் கொண்ட பூங்குன்றம் ஒரு சிற்றூர். அது, நல்ல மழை நாட்களில் சில தினங்கள் உலகத் தொடர்பே அற்றதொரு தீவுபோலாகி விடுவதும் உண்டு.

பூங்குன்றத்தில் மொத்தம் நாற்பது ஐம்பது குடியிருப்புக்கள் இருந்தால் பெரிய காரியம். "என் வாழ்வில் இறுதி ஆண்டுகளை இந்த இயற்கையழகு மிக்க கிராமத்தில்தான் கழிக்கப் போகிறேன்" என்று மகாகவி இளம்பூரணனார், அங்கு குடியேறிய பின்புதான் உலகத்துக்குத் தெரியாத அந்த ஊர் பிரபலமாயிற்று. அதாவது கொஞ்சம் பேர் தெரிந்தது.

மேலநல்லூர் தபாலாபீஸிலிருந்து பூங்குன்றத்துக்குப் பட்டுவாடா ஆக வேண்டிய தபால்களில் பெரும்பாலானவை கவிஞருக்குத்தான் இருக்கும். தபால் பட்டுவாடா செய்யும் பொறுப்பில் இருந்த இளைஞன் குமரகுரு, சுற்று வட்டாரத்துக் கிராமங்கள் எல்லாவற்றிற்கும் போக வேண்டியிருந்தாலும், பூங்குன்றத்துக்குப் போவதிலும், கவிஞரைச் சந்திப்பதிலும் அதிக ஆர்வம் உடையவனாக இருந்தான். காரணம், குமரகுருவே ஓர் இளம் கவிஞன். தனிக்கட்டையான அவன் மேலநல்லூரில் குடியிருக்க அறை என்று எதுவும் கிடைக்காததால், போஸ்ட் மாஸ்டருடைய தயவில் தபாலாபீஸிலேயே, பின்கட்டு அறை ஒன்றில் தங்கிக் கொண்டான். சமயங்களில் அவசரத்தந்தி, பி.சி.ஓ. என்ற வகையில் டிரங்கால் - இவற்றுக்கு மெசஞ்சராகவும் அலைய வேண்டியிருக்கும். வேறு எத்தனையோ தபால் ஊழியர்கள் மேல நல்லூருக்கு வந்த முதல் தினத்திலிருந்து வேறு வசதியான நகரங்களுக்கு மாற்றிக் கொண்டு போவதற்குப் பறப்பார்கள். குமரகுரு அப்படிப் பறக்காததோடு மேலிடத்திலிருந்து தன்னை மாற்றாத வரை அங்கேயே தொடர்ந்து இருக்க விரும்பினான். இரும்புத்துண்டு காந்தத்தால் ஈர்க்கப்படுவது போல் மகாகவி இளம்பூரணரால் அவன் ஈர்க்கப்பட்டிருந்தது தான் காரணம். அவரது அண்மை அவனுக்குப் பிடித்திருந்தது.

குயில்களும், கிளிகளும் ஒலிக்கும் ஓசைகள் தவிர வேறு செயற்கை ஒலிகளே இல்லாத அந்தத் தீவு போன்ற கிராமத்தில் மரம், செடி, கொடிகள் அடர்ந்த ஒரு பெரிய தோட்டத்தின் நடுவாக இருந்த சிறிய ஓட்டு வீட்டில் தான் மகாகவி வசித்து வந்தார். அதில் ஓர் எளிய நாட்டுப்புறத்து விவசாயியைப் போல அவரும், அவருடைய மனைவியும் வாழ்ந்தார்கள். வீட்டில் முக்கால்வாசி இடத்தைப் புத்தகங்கள் அடைத்துக் கொண்டிருந்தன. பாரதியாரின் காணிநிலத்தில் வருவது போன்ற குடியிருப்பு அது.

குமரகுரு தபால்களை எடுத்துக் கொண்டு போகும் போதெல்லாம் பெரும்பாலும் அவரைத் தோட்டத்தில்தான் பார்ப்பான். 'குரு! அந்த முல்லைக்கொடி அரும்பு கட்டியிருக்குத் தெரியுமோ?' என்றோ, 'அன்றைக்கு அந்த ரோஜாப்பதியன் போட்டேனே, அது நன்றாக வேரூன்றிவிட்டது' என்றோ தான் அவனை எதிர்கொள்வார், அவர்.

'இத்தனை வயதிற்கு மேலும் இவரால் எப்படி இத்தகைய குழந்தைத்தனமான அல்ப சந்தோஷங்களால் மகிழ முடிகிறது?' - என்று குமரகுருவிற்குப் பெரிதும் வியப்பாயிருக்கும். ஒருமுறை சிரித்துக் கொண்டே அதை அவரிடமே கேட்டுமிருக் கிறான்.

"இந்தக் குழந்தை மனத்தையும், இப்படிப் பூக்களையும் தளிர்களையும், தாவரங்களையும், இயற்கையையும் பார்த்து மனம் நிறைய மகிழ்ந்து ஆச்சரியப்படும் இயல்பையும் கடைசிவரை நான் இழந்து விடாமலிருக்க வேண்டும் என்பதுதான் என் பிரார்த்தனை குரு! என்று நான் இந்தக் குணங்களை எல்லாம் இழந்துவிடுகிறேனோ, அன்றிலிருந்து நான் கவிஞனாக இருப்பதற்கில்லை..." என்று அப்போது குமரகுருவிற்கு மறுமொழி கூறியிருந்தார் அவர். தம்முடைய மிகப் பணிவுள்ள சீடனைப் போலப் பழகினாலும், அவர் அவனுடைய பெயரின் பின் பகுதியைச் சொல்லிச் செல்லமாகக் 'குரு' என்றே அவனை அழைத்து வந்தார். குரு அவருடைய கவிதைகளின் ரசிகன். கவிதை களைப் போலவே அவருடைய செயல்களையும் ரசித்துக் கவனித்து வந்தான் அவன்.

எங்கு எந்தப் புதுமையைக் கண்டாலும் - அது எவ்வளவு சிறியதாயிருந்தாலும் உடனே ஒரு குழந்தையைப்போல் குதூகலப்படும் அவரை அவனுக்கு மிகவும் பிடித்திருந்தது. அவன் அவருடைய தோட்டத்திற்குள் தபால்களோடு நுழையும் ஒவ்வொரு சமயமும் முதல்முறை அவரைச் சந்தித்தது போன்ற அதே ஆர்வத்தோடு தான் நுழைந்தான். புதுமையை வரவேற்கும், புதுமைக்கு வியப்படையும் அவரது மலர்ந்த உள்ளம் அவனைப் போல ஒரு புதிய இளம் கவிஞனையும் வரவேற்று மகிழத் தயாராயிருந்தது. சகஜமாய் அளவளாவத் தயாராயிருந்தது.

'இந்த மருக்கொழுந்துச் செடிக்கு ஆண்டவன் எங்கிருந்து தான் இத்தனை வாசனையைப் படைத்தானோ?" என்று வியப்பார் ஒரு சமயம்.

'இத்தனை நிறத்தில் இத்தனை விதத்தில், இத்தனை மணங்களோடு பூமிக்குள் மறைந்திருக்கும் அழகுகள் ஒவ்வொன்றும் வெளிப்பட்டுப் பூப்பூவாய்ப் பூக்கிறது பார்த்தாயா?' என்பார் வேறொரு சமயம்.

வானின் ஒரு கோடியில் சாயம் பூசினாற்போல் தெரியும் மங்கலான வானவில், நீலவானின் இளம்பிறை, காலைக் கதிரவன், மலரும் ஏதாவதொரு புதுமலர், முளைக்கும் ஏதாவதொரு புதிய செடி, எல்லாமே அதிசயம்தான் அவருக்கு. அப்படி அவர் வியந்து முகம்மலரச் சிரிக்கும்போது எழுபத்து மூன்று வயது மூப்பிலிருந்தா இந்த மலர்ச்சியும் மகிழ்ச்சியும் என்று நம்ப முடியாமலிருக்கும் அவரது உற்சாகமும் புத்துணர்ச்சியும்.

அவருக்கு பத்மவிபூஷண் விருது வழங்கப்பட்டிருப்பதாக வந்த தந்தியை அவன் சைக்கிளில் ஓடிப்போய் கொடுத்தபோது ரோஜாப் பதியன்களுக்குத் தண்ணீர் ஊற்றிக் கொண்டிருந்த அவர், "இரு! இந்தக் கடைசிச் செடிக்கும் தண்ணீர் விட்டபின் வருகிறேன்" என்றார்.

ஒரு பூவுக்கும், செடிக்கும் வியக்கிறவர் ஒரு பெரிய தேசிய கௌரவம் தன்னைத் தேடி வந்ததற்காகச் சிறிதும் அலட்டிக் கொள்ளாமல் மிகவும் சுபாவமாயிருந்தது. குமரகுருவுக்குப் பெரிதும் வியப்பை அளித்தது.

அவ்வளவு பெரிய நாடறிந்த மகாகவிக்குக் கர்வம் என்பதே என்னவென்று தெரியாது. தபால்கார இளைஞன் குரு எப்போதாவது அவரிடம் நீட்டும் கவிதைகளைப் படித்துத் திருத்தங்கள் செய்து கொடுத்துப் பாராட்டுவார்.

'எவ்வளவு சிரமங்கள் வந்தாலும் எத்தனை வயதானாலும் மனசை மட்டும் மூப்படைய விட்டுவிடாதே. நீ மிகச் சிறந்த கவிஞனாக வரலாம். பழியாலும் மூப்படையாதே! புகழாலும் மூப்படையாதே' - என்றார்.

**"பூப்பூவாய்ப் பூத்திந்தப்**
**பூமி சிரிக்குதப்பா!**
**பாப்பாவாய்ப் பாடியதைப்**
**பரவும் வகையறியாமல்**
**மூப்பாலே சோர்ந்திருந்தார்**
**மூடமனிதர் வீழ்ந்திருந்தார்**
**சாப்பாட்டு ராமர்களே**
**சரணடைவீர் இயற்கையிலே"**

என்று மகாகவி இயற்றியிருக்கும், 'பூமியின் புன்னகை' என்ற தலைப்பிலான கவிதைகளில் ஒன்றை நினைத்துக் கொள்வான் குமரகுரு. பூங்குன்றத்தின் அமைதியில் மூழ்கி விளம்பரமில்லாமல் தம் வாழ்வின் இறுதிப் பகுதியைக் கழித்து வந்தாலும் உலகம் அவரை அவ்வளவு சுலபத்தில் மறந்து விடவில்லை. அதிகமான பொருளாதார வசதி என்றும் சொல்ல முடியாது. பயங்கர வறுமை என்றும் கூற முடியாது. விற்கும் புத்தகங்களின் ராயல்டி வருமானத்தில் எளிய கிராம வாழ்வு நடத்தி வந்தார் மகாகவி.

அந்த ஆண்டு நல்ல அடைமழைக் காலம் தொடங்கியிருந்தது. மழை கொட்டுக் கொட்டென்று கொட்டிக் கொண்டிருந்த ஒரு முன்னிரவில் மேல நல்லூர் அஞ்சல் அலுவலகத்தின் தந்திக் குமாஸ்தா, "அப்பா குமரகுரு! உங்க ஆளு...அதான் அந்தக்

கவிஞருக்குப் பம்பாயிலிருந்து ஒரு தந்தி வந்திருக்குப்பா... 'காவியபீடம்'கிற அகில இந்திய இலக்கிய ஸ்தாபனம், அவருடைய கவிதைப் பணிக்காக இந்த வருஷ விருதையும் ஐந்து லட்ச ரூபாய் ரொக்கத்தையும் அவருக்கு வழங்க முடிவு பண்ணியிருக்கு. அதைப் பத்தின தந்தி இது! எப்படி இந்த அடைமழையிலே போய்க் குடுக்கப் போறே...? பூங்குன்றத்துக்குப் போற வழியெல்லாம் ஒரே காட்டாறு... பயங்கர வெள்ளமா இருக்குமே இப்போ" என்றார்.

"இது ரொம்ப மகிழ்ச்சிகரமான சமாசாரம்! எப்படியும் போய்த் தந்தியைக் குடுத்தாகணும் சார்..."

"சும்மா கர்மயோகி மாதிரித் தந்தியைக் கொடுத்திட்டு வந்திடாதே... முழுசா ஒரு நூறு ரூபாயாவது இனாம் வாங்கியாகணும். அத்தனை அதிர்ஷ்டமான சேதி இது..."

குமரகுரு மகிழ்ச்சி வெள்ளத்தில் திளைத்தான். ஒரே ஆனந்தம். தந்தியை நனைந்துவிடாமல் ஒரு பாலிதின் பையில் பத்திரப்படுத்திக் கொண்டு, அந்த அடை மழையிலேயே அவரைப் பார்த்து எப்படியும் தந்தியைக் கொடுத்துவிட வேண்டும் என்ற பிடிவாதத்துடன் கிளம்பினான். தந்தி குமாஸ்தா கூறியதுபோல் நூறுரூபாய் இனாமுக்காக அல்ல, அந்த மகாகவியின் முகத்தில் ஒரு மலர்ச்சியைப் பார்ப்பதற்காக... அந்த மலர்ச்சியே பல நூறு ரூபாய் இனாமுக்குச் சமம் என்ற மனநிறைவோடு புறப்பட்டிருந்தான் அவன். இருட்டியபின் காட்டு வழியாகப் பூங்குன்றம் போகவே பயப்படுவார்கள். வனவிலங்குகளின் அட்டகாசம் ஒருபுறம், மழைக் கொடுமை மற்றொரு புறம். துணிந்து பூங்குன்றத்தையும் பிரதான நிலப்பகுதியையும் பிரிக்கும் காட்டாறு வரை சைக்கிளில் போய்ச் சைக்கிளை அங்கேயே விட்டுவிட்டு நீந்திப் போய் தந்தியை அவரிடம் அக்கரையில் சேர்த்துவிடலாம் என்ற நம்பிக்கையில் கிளம்பியிருந்தான் குமரகுரு. மின்சாரமும், டெலிபோனும் நுழையாத மலையடி-வாரத்துக் கிராமமான பூங்குன்றத்தை விரும்பி அதில் வந்து தங்கியிருந்த அந்த மகாகவிக்கு அவன் போய்த் தந்தியைக் கொடுக்காவிட்டால் அந்த இனிய செய்தியே தெரியமுடியாது. வேறு உலகத் தொடர்பே அக்கிராமத்துக்குக் கிடையாது.

குமரகுரு காட்டாற்றின் கரையை அடைந்தபோதே இரவு எட்டேமுக்கால் மணி இருக்கும். தற்செயலாக மழை கொஞ்சம் தணிந்திருந்தது. எப்படியும் சைக்கிளில் ஆற்றைக் கடக்க முடியாது. ஆற்றின் இக்கரையையும், அக்கரையையும் இணைத்த கல்பாலம் தணிவானது. அந்தக் கல்பாலத்தின் கீழே அங்கங்கே இருந்த மதகுக் கண்கள் தவிரப் பாலத்தை மீறி அதற்கு மேலேயும் ஓரடித் தண்ணீர் ஓடியது. பாதிப் போய்க் கொண்டிருக்கும் போதே நீரோட்டம் வேகம் அதிகரித்துவிட்டால் சைக்கிள் ஆற்றோடு போய்விடும். நடந்து போனால் இருபுறமும் இருந்த கருங்கல் தூண்களைப் பற்றிப் பற்றி எப்படியாவது அக்கரையை அடைந்து விடலாம்.

இக்கரையிலிருந்த ஒரு பாழ் மண்டபத்து முகப்பில் சைக்கிளை நிறுத்திப் பூட்டிவிட்டுத் தந்தியுடன் ஆற்றைக் கடக்கத் தொடங்கினான் குமரகுரு. வேகமும், இழுப்பும் அதிகமாக இருந்த இடங்களில் கல்தூண்களைப் பிடித்து சமாளித்துச்

சமாளித்து மெல்ல மெல்ல முன்னேறி அக்கரையை அடையப் பத்துமணி ஆகிவிட்டது. நல்ல கும்மிருட்டு.

பூங்குன்றம் அடங்கியிருந்தது. ஊர் நாய்கள் அத்தனையும் ஒன்றாக அவன் வரவை எதிர்த்துக் கோரஸ் பாடின. அவன் கவிஞரின் தோட்டத்தை அடைந்து மூங்கில் படலால் ஆன வாசல் கதவைத் திறந்தபோது அவர் விழித்திருந்தாலும் 'யாரது!' என்று கவிஞரின் மனைவி குஞ்சம்மாள்தான் எதிர்கொண்டு வந்தார். "நான்தான் குமரகுரு... தந்தி வந்திருக்கு..." என்று பதில் குரல் கொடுத்தான் அவன்.

"ஐயா தூங்கலையா! ஏன் இன்னும் முழிச்சிக்கிட்டிருக்காரு?"

"வேலையென்ன? அடைமழையும், ஈரமும் தாங்காமே தோட்டத்தில் இவர் வச்சிருந்த சண்பக மரக்கன்று அழுகிப்போச்சாம். ரெண்டு நாளா அதே புலம்பல்தான்! அது சரி, ஏதோ தந்தீன்னு சொன்னியே...?"

"ஆமாம்மா! ஐயாவுக்கு இந்த வருஷக் காவிய பீடப் பரிசு அஞ்சு லட்ச ரூபாய் கிடைச்சிருக்கு...!"

"நிஜமாவா? எங்கே தந்தியைக் குடு..."

தந்தியைக் கிருக லட்சுமியான அந்த அம்மாளிடம் கொடுத்தான் குமரகுரு. அந்தம்மாள் ஓடிப்போய் அவரிடம் கூறினாள். அவரோ ஒரு சிறிதும் சலனமோ, பரபரப்போ அடையாமல் தலைக்கு மேலே பொழியும் தங்கமழையைக் கவனிக்காமல் காலடியில் உடைந்துவிட்ட மண்பொம்மைக்காக அழும் குழந்தையைப்போல்,

"குமரகுரு! நான் அத்தனை சிரமப்பட்டும் பிரயோசனமில்லே! அந்த செண்பகக் கன்னு ஈரத்திலே அழுகிப் போச்சுப்பா..." என்று அழமாட்டாத குரலில் கலக்கத்தோடு ஆரம்பித்தார். அவர் மனைவி குறுக்கிட்டு அவரைக் கடிந்து கொண்டாள்.

"அஞ்சு லட்ச ரூபாய் அவார்டு வந்திருக்குன்னு இந்த அடைமழையிலே தந்தியோட ஓடிவந்திருக்கான்... நீங்க என்னடான்னா...?"

"மழைக்காலம்னு தெரிஞ்சதும், அந்தச் செடியைத் தொட்டியிலே மாத்தி வீட்டு வராந்தாவிலே வைக்காமப் போன என் புத்தியைத்தான் செருப்பாலடிக்கணும்!"

அவர் அந்தச் செடி அழுகிப் போன இழப்பிலேயே இன்னும் மூழ்கியிருந்தார்.

உலகின் எந்த ஒரு மூலையிலாவது ஒரு சிறு தளிர் வாடுவதையோ, அழுகுவதையோ கூடத் தாங்க முடியாத இந்த இங்கிதமான மெல்லிய கவி உள்ளத்தை எத்தனை பெரிய பரிசுகளும், லட்சங்களும் வந்தாலும் மூப்படையச் செய்ய முடியாதென்று தோன்றியது குமரகுருவுக்கு. 'வாடிய பயிரைக் கண்டபோதெல்லாம் வாடினேன்' என்ற வரிகளை நினைத்தான். அவர் முகத்தை அந்த மங்கலான அரிக்கேன் விளக்கு வெளிச்சத்தில் கூர்ந்து பார்த்தான். அந்த எழுபத்து மூன்று வயதுக் குழந்தையை அப்படியே கையெடுத்துக் கும்பிட்டான், குமரகுரு.

**(சிறுகதைக் களஞ்சியம், 1985)**

## 162. அமெரிக்காவிலிருந்து பேரன் வருகிறான்

கனகசபையிடமிருந்து அந்த விமானத் தபால் கிடைத்த போது கிழவர் வேதகிரிக்கு மிகவும் மகிழ்ச்சியாயிருந்தது. அவர்கள் தன்னைப் பார்க்கக் கிராமத்துக்கு வரப் போவதில்லை என்ற விவரத்தைக் கடிதத்தில் படித்தபோது கூடவே துயரமாகவும் இருந்தது. மகனையும் தான் இதுவரை பார்க்காத மருமகளையும் பேரனையும் பார்க்க வேண்டுமானால் சென்னைக்குப் புறப்பட்டுப் போவதைத் தவிர வேறு வழியில்லை என்பதும் புரிந்தது. அமெரிக்காவிலிருந்து அவர்கள் சென்னைக்கு வருகிறார்கள் என்று கடிதம் சொல்லியது.

வெறும் தனிக்காட்டு மரமாக - ஒற்றைக் கிழட்டு மரமாகப் பல ஆண்டுகளைக் கிராமத்தில் கழித்த துயரங்கள், தனிமை வேதனைகள் எல்லாம் தீர மகனையும், மருமகளையும், பேரனையும் பார்க்கப் போகிறோம் என்று எண்ணியபோதே உள்ளத்தில் பற்றும் பாசமும் உறவும் சிலிர்த்துப் பொங்கின.

தாயில்லாப் பிள்ளையாக மகனை வளர்த்து ஆளாக்கிப் படிக்க வைத்து ஒரு 'ஸ்காலர்ஷிப்' கிடைத்து அவனை அமெரிக்காவிற்கு மேற்படிப்புக்கு அனுப்பிய நாட்கள் நினைவு வந்தன. பின்பு அவன் அங்கேயே தன்னைப் போலப் படிக்க வந்திருந்த ஓர் இலங்கைத் தமிழ்ப் பெண்ணைக் காதலித்ததும், மணந்து கொண்டதும், அமெரிக்காவிலேயே வசதியான வேலை கிடைத்து இருவரும் அங்கேயே தங்கிவிட்டதும் பேரன் பிறந்ததும், கடிதங்கள் மூலமே அவர் அறிந்த செய்திகள்.

'இங்கிருந்தே நீங்கள் வந்து திரும்ப வசதியாக ஒரு விமான டிக்கெட் எடுத்து அனுப்புகிறேன், வருகிறீர்களா?' என்று மகன் கேட்டபோது தம் வயது - தள்ளாமையை நினைத்து, 'நீங்கள் எப்போதாவது விடுமுறையில் வரும்போது பார்த்துக் கொள்கிறேன். டிக்கெட் எடுத்து அனுப்ப வேண்டாம்' என்று பதில் எழுதிவிட்டார் கிழவர் வேதகிரி.

கல்யாணப் புகைப்படம், பேரனின் புகைப்படம் என்று அடுத்தடுத்து மகன் விமானத் தபாலில் அனுப்பிய புகைப்படங்களைப் பார்த்துப் பார்த்தே பூரித்துப் போனார் அவர். ஆற்றிற்குக் குளிக்கப் போகும் போதோ, மாலையில் உலாவச் செல்லும் போதோ தம் வயதுக் கிழவர்கள் இடுப்பில் பேரனுடனோ, பேத்தியுடனோ எதிர்ப்படும்போது இவரது மனம் குறுகுறுக்கும். எங்கோ பல ஆயிரம் மைல்களுக்கு அப்பால் இருக்கும் தம் பேரனை நினைத்துக் கொள்வார். 'பையனுக்கு உங்கள் பெயரைத்தான் வைத்திருக்கிறேன். வீட்டில் செல்லமாகக் குமார் என்று கூப்பிடுகிறோம். பள்ளியில் கே.வி.கிரி என்று பெயர் கொடுத்தாயிற்று' - என்று

பேரனைப் பள்ளிக்கு அனுப்புகிற வயதில் மறுபடி கனகசபை அவருக்கு எழுதியிருந்தான். படிப்பதற்கு மகிழ்ச்சியாயிருந்தது. அவர் பெயரைத் தாங்கிக் கொண்டு அமெரிக்காவில் ஒரு தளிர். பெருமிதப்பட்டார்.

அமெரிக்காவிலிருந்து சென்னை வந்து இரண்டு நாள் தங்கிவிட்டு இலங்கைக்குப் போய் இலங்கையிலிருந்து அப்படியே சிங்கப்பூர் மார்க்கமாகக் கனகசபை திரும்ப திட்டமிட்டிருந்தான். கிழவரைப் பார்ப்பதற்காக அவன் வரகுப்பட்டிக்கு வந்து திரும்ப வேண்டுமென்றால் மேலும் ஐந்தாறு நாட்கள் செலவாகும். பத்துப் பதினைந்து நாள் லீவில் வருகிற மகனுக்குச் சிரமம் வைக்க வேண்டாம் என்று அவரே சென்னைக்குப் போய் அவன் தங்குகிற ஹோட்டலில் அவனையும், மருமகளையும், பேரப்பிள்ளையையும் பார்த்துவரத் திட்டமிட்டிருந்தார்.

எப்போதுமே குழந்தைகள் என்றால் அவருக்குக் கொள்ளைப் பிரியம். பென்ஷன் பணத்திலிருந்து செலவழித்து மிட்டாய் வாங்கிக் காந்தி ஜெயந்தி அன்றைக்கும், சுதந்திர தினத்தன்றைக்கும் வருடம் தவறாமல் பள்ளிக்கூடத்துக் குழந்தைகளுக்குக் கொடுத்து மகிழ்வார் வேதகிரி. சில ஏழைக் குழந்தைகளுக்குத் தம் செலவில் பாடப் புத்தகங்களும், நோட்டுப் புத்தகங்களும்கூட வாங்கியளித்து வந்தார் அவர்.

இப்போது சொந்தப் பேரனையே போய்ப் பார்க்கப் போகிறார். பேரனுக்கு என்ன வாங்கிக் கொண்டு போய்ப் பார்ப்பதென்று யோசித்தார். கை முறுக்கு முதலிய எண்ணெய்ப் பலகாரங்கள் செய்து விற்கும் பணியாரக் கடை ஆச்சியிடம் சொல்லி முறுக்கு, சீடை, வெல்லச்சீடை, பொரிவிளங்காய் எல்லாம் ஸ்பெஷலாகத் தயாரிக்க ஆர்டர் கொடுத்தார். அமெரிக்காவிலிருந்து வந்திருக்கும் பேரனுக்குத் தமிழ்நாட்டின் சுவையான பணியாரங்கள் வாய்க்கு ருசியாக இருக்கும் என்பது அவரது நம்பிக்கையாயிருந்தது.

மொறுமொறுவென்று தேங்காய் எண்ணெய் வாசனை கமகமக்க ஒரு பெரிய எவர்சில்வர் சம்புடம் நிறையப் பட்சணங்களை நிரப்பிக் கொண்டு வந்து கொடுத்துவிட்டாள் ஆச்சி. தனக்குச் சேர வேண்டிய பணத்தையும் கிழவரிடமிருந்து கணக்குத் தீர்த்து வாங்கிக் கொண்டு போய்விட்டாள்.

கிழவர் சென்னைக்குப் போய் மகனையும், மருமகளையும், பேரனையும் சந்திக்கப் போவதைப் பற்றிய கற்பனைகளில் மூழ்கினார். பேரனைக் கபாலீசுவரர் கோயில், மெரீனா கடற்கரை, அடையாறு ஆலமரம் எல்லாவற்றுக்கும் அழைத்துக் கொண்டு போய்க் காட்ட வேண்டும் என்றும் எண்ணினார். மகனுக்கும் மருமகளுக்கும் வேறு வேலையிருந்தாலும் தானே ஓர் ஆட்டோ ரிக்ஷாவில் பேரனை அழைத்துப் போய்ப் பிரியத்தோடு எல்லாம் சுற்றிக் காட்ட வேண்டும் என்று நினைத்துக் கொண்டார். அந்த நினைப்பே படு சுகமாயிருந்தது.

அவர் சென்னைக்கு ரெயிலேற வேண்டிய மாலை நேரமும் வந்தது. பட்சணச் சம்புடம், பேரனுக்குக் காட்டுவதற்காக மகனைப் பெற்ற சில ஆண்டுகளிலேயே காலமாகிவிட்ட தன் மனைவியின் அதாவது அவனுடைய பாட்டியின் படம்,

எல்லாவற்றையும் எடுத்துக்கொண்டு ரெயிலேறினார். மனம் நிறையப் பாசம். வற்றி வறண்டு கிழடு தட்டிய அந்த உடல் நிறைய உற்சாகத்தை உண்டாக்கிக் கொண்டு பயணத்தைத் தொடங்கினார் அவர். தனியாகப் பயணம் செய்வதற்கு ஏலாத வயதுதான். ஆனாலும் பேரனைக் காணும் ஆசையில் துணிந்திருந்தார்.

'நீ என்னை எதிர்கொண்டு வரவேற்க ஸ்டேஷனுக்கு வரவேண்டும் என்ற அவசியமில்லை. நான் புறப்பட்டு வருகிற செங்கோட்டைப் பாஸஞ்சர் எழும்பூருக்கு அதிகாலையில் வருகிறது. அந்த நேரத்துக்கு நீ தூக்கத்தைக் கெடுத்துக் கொண்டு சிரமப்பட வேண்டாம். நானே ரெயிலிலிருந்து இறங்கி ஹோட்டலுக்கு வந்துவிடுகிறேன்' என்று மகன் கனகசபைக்கு அவன் வந்து தங்கப் போவதாகக் குறித்திருந்த ஹோட்டல் விலாசத்துக்கு ஒரு முன் கடிதமும் எழுதிப் போட்டிருந்தார் கிழவர். ஆனாலும் தன் மேலுள்ள மரியாதை காரணமாக அவன் ஸ்டேஷனுக்கு வந்தாலும் வரக்கூடும் என்று அவர் மனம் எதிர்பார்த்தது. தன் மகனை மணந்த பிறகு அந்தப் பெண்ணை - அதாவது புதிய மருமகளை அவர் இப்போதுதான் முதல் முதலாகப் பார்ப்பதால் அவள் தன் கால்களில் விழுந்து வணங்கி ஆசி பெறக்கூடும் என்றும் தோன்றியது. 'ஆல் போலத் தழைத்து அறுகுபோல் வேரோடிப் பதினாறும் பெற்றுப் பெரு வாழ்வு வாழ்க!' என்று அவளை மனம் நிறைய வாழ்த்த வேண்டும் என்று நினைத்துக் கொண்டார்.

அமெரிக்காவிலேயே பிறந்து வளர்ந்ததால் இந்திய மரபுகள், மரியாதைகள், பற்றித் தன் மகனே பேரனுக்கு எடுத்துச் சொல்லி, 'டேய்! தாத்தாவை கால்லே விழுந்து சேவிச்சு ஆசீர்வாதம் வாங்கிக்கணும்டா' என்று வற்புறுத்துவான் என்று நடக்கப் போகும் காட்சிகளைக் கற்பனையில் எண்ணிப் பார்த்துக் கொண்டார் கிழவர். "அமெரிக்காவிலேர்ந்து, பிள்ளையும் மாட்டுப் பெண்ணும் பேரனும் மெட்ராஸ் வரா! போய்ப் பார்க்கணும்" என்று குறைந்தது நூறு பேரிடமாவது தினமும் சொல்லியிருப்பார் அவர்.

சென்னையில் அவர்கள் இருக்கப் போவது வெறும் நாற்பத்தெட்டு மணி நேரங்களே. அதிலும் ஒரு நாள் கழிந்திருக்கும். அவர் போய்ச் சேரப் போவதே இரண்டாம் நாள் காலையில்தான். அவரைச் சந்திக்கிற தினத்தன்று மாலையிலேயே 6 மணிக்கு அவர்கள் கொழும்புக்கு விமானம் ஏற வேண்டும். இரவு 9 மணிக்கு அவர் ஊர் திரும்ப ரெயில் இருந்தது. அவர்களை விமான நிலையத்தில் வழியனுப்பி விட்டு வந்து கிழவர் திரும்பவும் கிராமத்துக்கு ரெயிலேற வேண்டியதுதான். பார்க்கப் போனால் அவர்களோடு அவர் கழிக்கப் போவது பன்னிரண்டு மணி நேரத்துக்கும் குறைவான அவகாசம்தான்! ஆனாலும் என்ன? அமெரிக்க மழலைத்தனம் மாறாத குரலில் அந்தச் சிறுவன் 'தாத்தா' என்று கூப்பிடப் போகும் ஒரு விநாடியின் மகிழ்ச்சி என்பது அப்படியே ஒரு யுகத்துக்கு நீடிப்பதுபோல் தோன்றாதா? அந்த மகிழ்ச்சியில் கால ஓட்டமே திகைத்துத் தேங்கி நின்று போகாதா? இனிய நினைவுகளிலும் கற்பனைகளிலுமாக ரெயில் பெர்த்தில் அவர் புரண்டு புரண்டு படுத்தார். தூக்கமே வரவில்லை. அன்று ரெயில் சென்னையை அடையத் தாமதமாகி விட்டது. எழும்பூரில்

போய் நின்ற போது காலை ஏழு மணி. ஒரு கையில் பட்சணச் சம்புடமும், இன்னொரு கையில் துணி மூட்டையுமாக இறங்கிய இவர், 'மகன் ஸ்டேஷனுக்கு வந்திருப்பானோ' என்ற அச்சானியத்தோடும், ஆதங்கத்தோடும் பத்து நிமிஷம் நின்று, பிளாட்பாரம் காலியாகிற வரை இருபுறமும் கண்களால் துழாவித் துழாவிப் பார்த்தார், ஊஹூம் அவன் வரவில்லை.

தன்னுடைய மகன் தங்குவதாக எழுதியிருந்த இன்டெர் கான்டினென்டல் ஓட்டலுக்குப் போக ஓர் ஆட்டோ ரிக்ஷா வாடகை பேசி ஏறினார் கிழவர்.

நீர்க் காவியேறிய பழுப்பு வேஷ்டியும், சட்டையும், காதில் சிவப்புக் கல் கடுக்கனும், ஒரு பக்கத்துக் கம்பி ஒடிந்து பழைய பூணூல் கயிற்றால் காதில் இழுத்துக் கட்டிய மூக்குக் கண்ணாடியும், துணிமூட்டையும், சம்புடமுமாக வந்து இறங்கிய கிழவரை ஹோட்டல் ரிஸப்ஷனில் வெறித்துப் பார்த்தார்கள். ஆட்டோவில் வராமல் நடந்து மட்டும் வந்திருப்பாரானால், "இது ஓட்டல்! இங்கே பிச்சை போடமாட்டாங்க... போ" - என்று வாட்ச்மேன் சொல்லி வெளியே துரத்தியிருப்பான்.

"அமெரிக்காவிலேருந்து கனகசபைன்னு என் ஸன் இங்கே தங்கியிருக்கான்" என்று அவர் கூறியதும் "வி.கே.சபாய் தானே? ரூம் நம்பர் ஒன் நாட் டூ - தேர்ட் ஃப்ளோர்" என்றாள் ரிஸப்ஷன் பெண்மணி. லிஃப்ட் பாயைக் கூப்பிட்டு அவரை அழைத்துப் போக ஏற்பாடு செய்தாள். அறை முகப்பை நெருங்கியதும் மகிழ்ச்சிப் பரபரப்பு என்பார்களே அதில் முற்றத் திளைத்திருந்தார் அவர். மனம் வேகமாக அடித்துக் கொண்டது. லிஃப்ட் பையன் அறை முகப்பில் இருந்த 'காலிங் பெல்லை' அவருக்குக் காட்டிவிட்டுச் சென்றான். மகிழ்ச்சியின் மிகுதியில் பதறும் கைகளோடு காலிங் பெல்லைஅழுத்தினார் கிழவர்.

நீண்டநேரம் மணியை அழுத்திய பின்பும் உள்ளிருந்து பதிலே இல்லை. தந்தை கிராமத்திலிருந்து வரப்போகிறார் என்ற ஆர்வத்தில் மகனும், பேரனும் சீக்கிரமே விழித்தெழுந்து காத்திருப்பார்கள் என்று எதிர்பார்த்திருந்தார் வேதகிரி. ஏமாற்றம்தான் மிஞ்சியது.

நீண்டநேரத்துக்குப்பின் கடைசியில் மகன்தான் வந்து கதவைத் திறந்தான். முதல் ஒரு விநாடி அவரை அவனுக்குப் புரியவே இல்லை. "யாரைப் பார்க்கணும்?" என்று யாரோ அந்நியமான ஒருவரை விசாரிப்பது போல் விசாரித்த அவனை, "நான் தாண்டா - உங்கப்பா வந்திருக்கேன்" - என்று அவர் முந்திக் கொண்டு சொல்ல வேண்டியதாயிற்று.

"உள்ளே வாங்கோ..." என்று சுதாரித்துக் கொண்டு உள்ளே அழைத்துச் சென்றான்.

உள்ளே 'நைட்டி'யுடன் தூங்கி எழுந்த கோலத்தில் ஓர் இளம் பெண் காபி அருந்திக் கொண்டிருந்தாள். ஜீன்ஸும் 'ஐயாம் ஃப்ரம் டெக்ஸாஸ்' என்ற ஆங்கில வாசகத்தோடு கூடிய பனியனும் அணிந்த பையன் ஒருவன் சோபாவில் சாய்ந்து எதிர்த்த சோபாவில் காலைத் தூக்கிப் போட்டபடி நியூஸ் பேப்பரில் மூழ்கி இருந்தான்.

கால்களில் முரட்டுக் கான்வாஸ் ஷூ. ஜீன்ஸில் அங்கங்கே வட்டவட்டமாகத் தோலில் ஒட்டுத் தையல் வேறு.

"பிரேமா! அப்பா கிராமத்திலேயிருந்து வந்திருக்கார்" என்று நைட்டி அணிந்து காபியருந்திக் கொண்டிருந்த பெண்ணிடம் கனகசபை கூறியவுடன் 'ஹலோ' என்று - கிழவரை நோக்கி முகம் மலர்ந்தாள் அவள். அவன் அவளைப் பெயர் சொல்லிக் கூப்பிட்டதிலிருந்து அவள்தான் அவனுடைய மனைவி என்பதும் புரிந்தது. கலியாணமான பின் முதல் முதலாகக் காணும் தன்னை ஆசி வேண்டி அவர்கள் சேர்ந்து வணங்காததே வியப்பாயிருந்தது அவருக்கு.

"உட்காருங்கோ!" என்று அவரை ஒரு சோபாவில் உட்காரச் சொல்லிவிட்டு இன்டர்காமில் மேலும் ஒரு காபிக்கு ஆர்டர் செய்தான் மகன். சோபாவில் சரிந்தாற்போல் அடுத்த சோபா மேல் கால்களைத் தூக்கிப் போட்டபடி தினசரியில் மூழ்கியிருந்த பேரனின் கான்வாஸ் ஷூப் பாதங்கள் இவரது முகத்தருகே துருத்திக் கொண்டிருந்தன. ஏதோ சகஜமற்ற இறுக்கம் ஒன்று அவர்களுக்கிடையே நிலவியது. நீண்ட காலத்துக்குப் பின்னால் சந்திக்கும் தகப்பனுக்கும் மகனுக்கும் இடையிலான நெகிழ்ச்சியோ, பாசமோ, பந்தமோ, உறவின் இளகலோ அதில் இல்லை. பழுப்பு நிற வேஷ்டியும், ஷேவ் செய்யாத முகமும், ஒடிந்த மூக்குக் கண்ணாடியும், மூட்டை முடிச்சுக்களுமாக அந்த ஃபைவ் ஸ்டார் ஹோட்டல் அறைக்குப் பொருந்தாத ஓர் ஆளை அங்கே எதிர்கொள்ள விரும்பாத தயக்கமே தெரிந்தது.

பேரன் ஒரு நிமிஷம் தினசரியிலிருந்து தலையை நிமிர்த்தி ஓர் அபூர்வ மிருகத்தைப் பார்ப்பதுபோல் கிழவரை வெறித்துப் பார்த்தான். பின்பு கனகசபையின் பக்கம் திரும்பி அமெரிக்க உச்சரிப்பின் கொழகொழப்பான முழுமையோடு, "ஹூ இஸ் திஸ் டர்ட்டி ஓல்ட் மேன் யா?" என்று கேட்கவும் கனகசபை சிறிது பதறி, "டோண்ட் ஸே லைக் தட்.... ஹி இஸ் யுவர் கிராண்ட் ஃபாதர்" - என்று அவசர அவசரமாகக் குறுக்கிட்டான். அதை அறிந்த பின்னும் பேரன் கால்களைத் தூக்கிப் போட்டு அட்டகாசமாக இருந்ததில் மாற்றம் எதுவுமில்லை. கனகசபை கூறியதற்கு ஒரு பதில் "யா..."வு டன் மறுபடி தினசரியில் மூழ்கிவிட்டான் அவன்.

கிழவர் வேதகிரிக்கு ஒரே அதிர்ச்சி. கல்லில் தேடி வந்து தாமே முட்டிக் கொண்டது போலிருந்தது அவருக்கு.

"அப்பா! தப்பா நெனைச்சுக்காதீங்கோ! இந்தக் காலத்துப் பசங்களுக்கு மட்டு மரியாதை எல்லாம் தெரியறதில்லே..." என்று பேரனுக்காக மகன் அவரிடம் மன்னிப்புக் கேட்டான்.

பேரனை அங்கம் அங்கமாகத் தொட்டுக் கொஞ்சும் ஆசையோடு வந்த அவருக்கு நெஞ்சு வலித்தது. கலாச்சார ரீதியான இந்தியத் தன்மையின் பற்று, பாசம் எதுவுமே அவர்களிடம் தெரியவில்லை. மகன் கனகசபை மட்டும் ஏதோ உதட்டளவில் அவரை விசாரித்தான்.

'சரி! எப்படியும் தொலையட்டும். கொண்டு வந்த பட்சணங்களையாவது கொடுப்போம்' என்று சம்புடத்தைத் திறந்து வெல்லச் சீடையையும், பொரிவிளங்காயையும் பேரனின் அருகே சென்று நீட்டினார் கிழவர்.

அந்தப் பையன் தயக்கத்தோடு அதைத் தொட்டுப் பார்த்துவிட்டு, "ஐ கான்ட் ஈட் ஸ்டோன்ஸ்" என்று கதறாத குறையாக அலறி மறுத்தான்.

"சாப்பிட்டுப் பாருடா! அப்புறம் விடமாட்டே.... டேஸ்டா இருக்கும்" என்று கிழவர் கெஞ்சியபோது அந்தச் சொற்கள் புரியாமல் தந்தையின் பக்கம் திரும்பி, "டாட்! வாட் த ஓல்ட்மேன் ஸேய்ஸ்?" - என்று வினவினான் பேரப் பிள்ளையாண்டான். வாய் தவறிக்கூட அவன் தன்னை 'கிராண்ட் ஃபாதர்' என்றோ தாத்தா என்றோ கூறத் தயாராயில்லை என்பதைக் கிழவர் கவனித்தார்.

சீடை முறுக்கு எதையும் பேரன் விரும்பவில்லை. கனகசபையே, "அவனுக்கு இதெல்லாம் பிடிக்காதுப்பா! வற்புறுத்தாதீங்கோ" - என்று கிழவரைத் தடுத்தான். தாத்தாவாயிற்றே என்ற கனிவு, மரியாதை, பாசம், பயபக்தி எதையுமே அந்தச் சிறுவனிடம் அவர் எதிர்பார்க்க முடியவில்லை.

கனகசபையோ, அவன் மனைவியோ கண்டிப்பான குரலில், "டேய் அவர் தாண்டா உன் தாத்தா! அவரைக் கிழவர்னோ, 'ஓலட்மேன்'னோ கூப்பிடாதே. மரியாதையாத் தாத்தான்னோ, கிராண்ட் ஃபாதர்னோ, 'கிராண்ட்பா'ன்னோ கூப்பிடணும்" என்று அவனை ஒருமுறை கூடக் கடிந்து கொள்ளாதது வேறு அவருக்கு எரிச்சலூட்டியது. பேரனைத் தோள் மேல் தூக்கி அமர்த்திக் கொண்டு திருவிழாக் கூட்டத்தில் நடக்கும் கிராமத்துத் தாத்தாவின் பற்றோடும் பாசத்தோடும் புறப்பட்டு வந்திருந்த அவருக்கு மனசு வெடித்துவிடும் போலிருந்தது இப்போது.

மேலே அங்கிருக்கும் ஒவ்வொரு விநாடியும் முள்மேல் இருப்பது போல் உணர்ந்தார் வேதகிரி. கனகசபையை விட உயரமாயிருந்த அந்தச் சிறுவன் பிஞ்சிலே பழுத்த முரண்டுடையவனாகத் தோன்றினான். அவனுக்குத் தமிழ் தெரியாது. அப்பனை மிஞ்சிய வளர்த்தி உடலிலே தெரிந்தது. ஆனால் மனம் வளரவே இல்லை.

செடிகளை ஓரிடத்தில் இருந்து பெயர்த்து இன்னோர் இடத்தில் நடும்போது முந்திய இடத்து மண்ணைக் கொஞ்சம் கொண்டு போய்ப் புதிய இடத்தில் நிரப்பி நடுவார்கள். அதற்குத் 'தன்மண்' போடுதல் என்று பெயர். அமெரிக்காவிலேயே பிறந்து வளரும் இந்தியக் குழந்தைகள் தன் மண் போடாமலேயே வளர்ந்த செடிகள். அவர்களிடம் இந்திய மண்ணின் குடும்பவுணர்வு, பற்று, பாசம், மரியாதை, உறவு எதுவும் இருக்க முடியாதுதான் என்றெண்ணி மனத்தைத் தேற்றிக் கொள்ள முயன்றார் கிழவர். ஆனாலும் மனம் வேதனைச் சுமையால் கனத்தது.

மாலையில் அவர்கள் விமானத்துக்கும், கிழவர் இரயிலுக்கும் புறப்படுகிற நேரம் வரை இந்த இறுக்கம் அப்படியே நீடித்தது. சிறிதும் தளரவே இல்லை. அவர் கிராமத்திலிருந்து பிரியமாகச் செய்து வந்த பட்சணங்களைப் பேரன், மகன், மருமகள்

யாருமே தொடக்கூட இல்லை. எண்ணெய் ஆகாது என்றார்கள். மாவுப் பண்டம் ஒத்துக் கொள்ளாது என்றார்கள்.

"இந்தத் தள்ளாத வயசிலே எங்களை வழியனுப்ப விமான நிலையத்துக்கு நீங்க வர வேண்டாம்! நாங்களே போய்க் கொள்கிறோம். நீங்க ரயிலடிக்குப் போங்கோ! அடுத்த வருஷம் டெல்லியிலே ஒரு ஸெமினாருக்காக நான் மட்டும் தனியா வருவேன். அந்த ட்ரிப்பின்போது நானே வரகுப்பட்டிக்கு வந்து ரெண்டு நாள் உங்களோட தங்கறேன்" - என்று மகன் அவருக்கு விடைகொடுத்தான்.

மருமகளும் பேரனும் அதிகம் பேசவே இல்லை. 'புறப்படு முன் பேரனின் தலையை உச்சி மோந்து அவனைத் தழுவிக் கொள்ளலாம்' என்று துணிந்து அவனருகில் நெருங்கிய அவரைக் கண்டு மிரண்டு, "டோண்ட் டச் மீ! யூ புல் ஷிட்" என்று கத்தியபடியே விலகி ஓடினான் பேரன்.

"வேண்டாம்ப்பா! இதெல்லாம் அவனுக்குப் புரியாது. விட்டுடுங்கோ!" என்று கனகசபையே அவரை விலக்கினான்.

கிழவர் மறுபடி ஒரு ரிக்ஷா பிடித்து அதே மூட்டை முடிச்சுக்கள் சம்புடத்தோடு எழும்பூர் வந்தார். இரயிலுக்கு நிறைய நேரம் இருந்தது. இரவு 9 மணிக்குத்தான் அவருக்கு இரயில்.

ஸ்டேஷனுக்காகப் படியேறுகிற இடத்தில் சுருண்ட தலை முடியும், அழகிய கண்களும் மேலே சட்டையணியாத திறந்த உடம்புமாக ஒரு சிறுவன், "தாத்தா! இந்த மூட்டையை நான் தூக்கியாறேன், நாலணாக் குடுங்க போதும்" என்று அவரைக் கெஞ்சாத குறையாக மன்றாடினான்.

'தாத்தா' என்ற அந்த அழைப்பு நெஞ்சில் பட்டு ரோஜாவால் அர்ச்சித்த மாதிரி மிருதுவாக இருந்தது. கிழவர் அழுக்கும் கிழிசலுமான அரை டிராயர் அணிந்த அந்தச் சிறுவனையே இமையாமல் உற்றுப் பார்த்தார்.

"என்ன தாத்தா! அப்பிடிப் பார்க்கிறீங்க... நான் 'லைசென்ஸ்' உள்ள போர்ட்டர் இல்லே... எங்கிட்டே 'வில்லை' கிடையாது. 'வில்லை' உள்ள லைசென்ஸ் போர்ட்டர்னா உங்ககிட்ட ரெண்டு ரூபா கேப்பானுக... நான் வெறும் நாலணாத்தான் கேட்கிறேன்."

"எங்கிட்ட அதிகச் சுமையே இல்லையேப்பா?"

"இருக்கிறதைக் கொண்டாந்து தாரேன் தாத்தா?"

அவன் ஒவ்வொரு முறை தாத்தா என்று கூப்பிடும்போதும் அவருடைய சுமைகள் மேலும் மேலும் குறைந்து லேசானது போலிருந்தது.

கிழவரின் கண்களிலோ நீர் பனித்தது. கீழே உட்கார்ந்து சம்புடத்தைத் திறந்தார். அப்படியே சிறுவனிடம் நீட்டினார்.

"ஸ்டேஷனுக்கு அப்புறம் போகலாம்! முதல்லே இதைச் சாப்பிடுடா குழந்தை!"

பையன் பயந்து தயங்கியபடியே ஒரே ஒரு வெல்லச் சீடை மட்டும் எடுத்துக் கொண்டான்.

"அவ்வளவும் உனக்குத்தான்! பயப்படாமே நிறைய எடுத்துச் சாப்பிடுடா கண்ணு."

அவன் மேலும் எடுத்துக் கொண்டான். இப்போது பரட்டைத் தலையும் கிழிசல் பாவாடையுமாக ஒரு சிறுமி அருகே நிழலாடினாள்.

"தாத்தா, எனக்கில்லையா?"

"நீயும் எடுத்துக்கோம்மா..." மூக்குச்சளி ஒழுக மற்றொரு சிறுவன் வந்தான்.

"தாத்தா... தாத்தா..." பல குழந்தைகள் அவரை மொய்த்தன.

சம்புடம் காலியாகிற வரை எல்லாக் குழந்தைகளுக்கும் வாரி வாரி வழங்கினார் கிழவர் வேதகிரி.

செவி நிறையத் 'தாத்தா... தாத்தா' என்று பிஞ்சுக் குரல்கள் ஒலித்து அவரை மகிழ்வித்தன.

அமெரிக்காவிலிருந்து வந்த சொந்தப் பேரனை இப்போது அவர் மறந்து போய்விட்டார். எழும்பூர் இரயில் நிலையப் பிளாட்பாரத்தில் தற்செயலாகச் சந்தித்த இந்தப் புதிய பேரன்கள் பேத்திகள் அவரை மனநிறைவோடும் நன்றி விசுவாசத்தோடும் பிரியமாக இரயிலேற்றி ஊருக்கு வழி அனுப்பி வைத்தார்கள்.

**(கலைமகள், தீபாவளிமலர், 1985)**

## 163. களவும் கற்று...

நண்பர்கள் எல்லாரும் விடை பெற்றுச் சென்ற பின் புலவர் அவனைக் கண்டித்தார்.

"இவ்வளவு வெளிப்படையா எல்லாத்தையும், எல்லாரிடமும் மனந் திறந்து பேசிக்கிட்டிருந்தா அரசியல்லே உங்க எதிரிங்க உங்களை ரொம்ப சுலபமா நசுக்கிப்பிடுவாங்க, ஜாக்கிரதை."

"அது சரிதான்! ஆனா அதுக்காக ஒரு நேர்மையான அரசியல்வாதி தனக்கு வேண்டியவங்க கிட்டக்கூட வஞ்சகமாகவும், கபடமாகவும், நடந்துக்கலாங்கிறதை நான் ஒப்புக் கொள்ள முடியாது புலவரே! உண்மையைப் பேசப் பயமும் தயக்கமும் எதற்காக?"

"வஞ்சகம் வேண்டாம்கிறது எனக்கும் உடன்பாடு தான். ஆனாக் கபடம் வேணும்! கபடமே இல்லாட்டி அரசியலில் ஆளையே முழுங்கி ஏப்பம் விட்டுடுவாங்க."

"அப்புறம் நமக்கும் - நாம் யாரை எல்லாம் எதிர்க்கிறோமோ அவங்களுக்கும் என்ன வித்தியாசம்?"

"வேற்றுமை வித்தியாசம்லாம் ஒரு பக்கம் இருக்கட்டும். எல்லாத் தரப்பு அரசியல்வாதிக்கும் 'ராஜதந்திரம்' அவசியம் வேணும். இல்லாட்டி மேலே போகப் போகச் சிரமம்! இன்னிக்கி நிலமை அப்படி ஆயிப்போச்சு."

வயது முதிர்ந்தவரும் அனுபவம் நிறைந்தவருமான புலவர் திரும்பத் திரும்பத் தான் முதலில் கூறியதையே வற்புறுத்தினார். திருக்குறள் படித்த புலவரா இப்படிப் பேசுகிறார்? கண்ணப்பனுக்கே வியப்பாயிருந்தது.

இன்று அரசியலில் முன்னணியில் இருப்பவனும் ஒருகாலத்தில் புலவரின் மாணவனுமாகிய கண்ணப்பன் ஒழுக்கமும் நேர்மையும் நிறைந்தவன். அரசியலில் லஞ்சமும், ஊழலும் ஒழிந்து ஏழை எளியவர்களுக்கு நலங்களும், நியாயங்களும் கிடைக்க வேண்டும் என்று பாடுபடுகிறவன். அப்படிப் பட்டவனுக்குக் கபடம் இல்லாத அரசியல் இன்று பயன்படாது என்று தன் ஆசிரியரான புலவரே கூறியது மீண்டும் வியப்பை அளித்தது. அவன் புலவரோடு கடுமையாக எதிர்வாதம் செய்தான்.

"அவங்க பொதுச் சொத்தை திருடறாங்க, ஊரைக் கொள்ளையடிச்சு உலையிலே போடறாங்கன்னு சொல்லித்தானே நாமே இந்தப் புது இயக்கத்தையே ஆரம்பிச்சோம்? இப்போ நாமே கபடமா இருக்கணும்னா எப்படி?"

"அதெல்லாம் சரிதான்! 'களவும் கற்று மற'ங்கிற பழமொழி உங்களுக்கு நினைவிருக்கணும் தம்பீ! அந்தப் பழமொழியே அரசியலுக்காகவும் அரசியல்வாதிகளுக்காகவும் தான் ஏற்பட்டதுங்கறதை நீங்க ஞாபகம் வச்சுக்கணும்."

"ஒண்ணைக் கற்றால் அதைக் கடைசி வரை ஞாபகம் வச்சுக்கிட்டுக் கடைப் பிடிக்கணும் புலவர் ஐயா! மறக்க வேண்டிய ஒண்ணைச் சிரமப்பட்டுக் கத்துக்கிறதோ, சிரமப்பட்டுக் கத்துக்கிட்ட ஒண்ணை மறக்கிறதோ எனக்குப் பிடிக்காதுங்கிறது உங்களுக்கே நல்லாத் தெரியுமே!"

புலவர் இதைக் கேட்டு பதில் எதுவும் சொல்லாமல் புன்முறுவல் பூத்தார். கண்ணப்பனுடைய உறுதி அவருக்கே வியப்பை அளித்தது. உண்மையிலேயே இதே கொள்கைகளையும் உறுதியான இலட்சியங்களையும் எல்லா நாட்களிலும் அவன் விடாப்பிடியாகக் கடைப்பிடிக்க முடியுமானால் அவருக்கும் மகிழ்ச்சியாய்த்-தானிருக்கும். கபடமும் வஞ்சகமும் லஞ்சமும் ஊழலும் கொழுத்துப்போன ஒரு கட்சியிடமிருந்து பிரிந்து வந்துதான் அவன் இந்தப் புதுக்கட்சியைத் தொடங்கியிருந்தான். இதற்கு மக்கள் ஆதரவு பெருகியிருந்தது. கண்ணப்பன் போகிற இடமெல்லாம் வெள்ளமாய்க் கூடினர் மக்கள். லஞ்ச ஊழல்களை ஒழிக்க வந்த அவதார புருஷனாக அவனை எல்லாரும் மதித்தார்கள். விரைவில் வர இருந்த பொதுத் தேர்தலில் கண்ணப்பனின் புதிய கட்சியே பெருவாரியாக வெற்றி பெற்று மாநிலத்தின் ஆட்சியைக் கைப்பற்றிவிட முடியும் என்கிற அளவு பரவலாக ஒரு நம்பிக்கை எல்லார் மத்தியிலும் ஏற்படத் தொடங்கியிருந்தது. ஆட்சியிலிருந்த கண்ணப்பனின் எதிரிகள் கதிகலங்கிப் போயிருந்தனர். பத்திரிகைகள் எல்லாமே ஒட்டு மொத்தமாக அடுத்து ஆட்சியைப் பிடிக்கப்போவது கண்ணப்பனின் புதிய கட்சிதான் என்று எழுதத் தொடங்கியிருந்தன. நிலைமையும் கண்ணப்பனுக்குச் சாதகமாகத்தான் இருந்தது.

ஆட்சியில் இருந்த கண்ணப்பனின் எதிரிகள் அவனையும் அவனைச் சேர்ந்தவர்களையும் அடிப்பது, உதைப்பது,வெட்டுவது, கைது செய்து பொய்க்குற்றம் சாட்டிச் சிறையிலடைப்பது போன்ற காரியங்களைஅளவு கடந்து செய்ததால் மக்களின் பரிவும், அனுதாபமும் வேறு கண்ணப்பன் பக்கமே திரும்பின.

அவனுடைய வெற்றிக்கு அவன் பாடுபட்டதைவிட அவனுக்கு அதிக இடையூறுகளைச் செய்வதன் மூலம் அவன் எதிரிகளும் கூடப் பாடுபட்டனர்.

ஒரு வழியாகத் தேர்தலும் வந்தது. பரபரப்பான பிரச்சார நாட்களும் கழிந்தன. அடிதடிகள், வன்முறைகள், குத்து, வெட்டு, சாராயப் பெருக்கு, பரஸ்பரம் சேற்றை வாரி இறைத்தல், எல்லாவற்றிற்கும் பின் தேர்தலும் முடிந்தது. முடிவுகள் வெளிவர ஆரம்பித்தன.

யாருமே நம்ப முடியாத அளவு இருநூற்று ஐந்து மொத்த இடங்களில் இருநூற்று ஒன்றைக் கண்ணப்பனின் கட்சி பிடித்துவிட்டது. முன்னாள் ஆளும் கட்சியும் கண்ணப்பனின் எதிரிகளும் மொத்தம் மூன்றே மூன்று தொகுதிகளில்தான் வெற்றி பெற முடிந்திருந்தது. மீதி ஓர் இடத்தில் சுயேச்சை வேட்பாளர் ஒருவர் வெற்றி பெற்றுவிட்டார் - ஒரே ஓர் இடத்தில்தான்.

வெற்றி பெற்ற கண்ணப்பனைச் சந்தித்துப் புலவர் மாலையணிவித்து வாழ்த்தினார். "எதிர்பார்த்ததை விட மகத்தான வெற்றி இது! மக்களின் நம்பிக்கைக்குப்

பாத்திரமாக நடந்து தொடர்ந்து நல்ல பெயர் எடுக்க வேண்டும், தேர்தல் வாக்குறுதிகளில் கூறியபடி லஞ்ச ஊழலற்ற ஆட்சி நடத்த வேண்டும்! சாராய வெள்ளத்தைத் தடுக்க வேண்டும். எளிமையைக் கடைப்பிடிக்க வேண்டும்."

"அது மட்டுமில்லை புலவரே! எங்கள் தேர்தல் மேடைகளில் நாங்கள் பேசினாற் போலவே எளிமையையும் சிக்கனத்தையும் கடைப்பிடிக்கக் கருதி இனி மந்திரிகள் ஐநூறு ரூபாய்க்கு மேல் சம்பளம் வாங்க மாட்டோம். சைக்கிளில்தான் அமைச்சரவைக்கும் அலுவலகங்களுக்கும் செல்வோம். பள்ளிக் குழந்தைகளுக்கு இலவசப் பால், குடிசைகளுக்கு இலவச மின்சாரம், குறைந்த சம்பளக்காரர்களுக்கு இலவச வீடுகள், ஒரு ரூபாய்க்கு இரண்டு கிலோ அரிசி எல்லாம் தரப்போகிறோம்."

புலவர் இதைக் கேட்டு விட்டுச் சிரித்தார்.

"ஏன் சிரிக்கிறீர்கள் புலவரே?"

"வேறொன்றுமில்லை! விளிம்பில் நிற்கிற யாருக்கும் கால் இடறும்! ரொம்ப யோக்கியமாக இருப்பது என்பது திடீரென்று விளிம்பில் ஓடிவந்து நிற்கிற மாதிரித்தான். ஏற்கனவே ஆண்டவன் ரொம்ப அயோக்கியத்தனமாயிருப்பது என்ற மற்றொரு விளிம்பில் இருந்தான். விழுந்தான். அதிலிருந்து நீங்கள் இன்னொரு விளிம்பிற்கு ஒரே தாவாகத் தாவி இடறி விழுந்து விடாமல் படிப்படியாக நல்லதுகளைச் செய்யத் தொடங்கினாலே போதுமானது. பிரமாதமாக ஆரம்பித்து மிகவும் சுமராக முடிந்துவிடக் கூடாது. சுமாராக ஆரம்பித்து மிகவும் பிரமாதமாக முடியலாம். தவறில்லை."

"நீங்கள் எங்களை நம்பவில்லை புலவரே! போகப் போகத் தெரிந்து கொள்வீர்கள்."

"சரி, பார்க்கலாம்" என்றார்.

கண்ணப்பன் சொன்னபடியே நடந்தது. மந்திரிகள் சைக்கிளில் போனார்கள். வெறும் ஐநூறு ரூபாய்தான் சம்பளம் வாங்கினார்கள். இலவச மின்சாரம், இலவசப் பால், இலவச உணவு, இலவச உடை எல்லாம் தடபுடல் பட்டது.

இடையே மரூஷியஸ் தீவுகளில் உள்ள தமிழர்களுக்குத் தமிழ் கற்பிக்கப் பொருத்தமான ஓர் ஆசிரியர் வேண்டும் என்று கல்வி இலாகா தேடியது. புலவரையே அனுப்பலாம் என்றார் முதலமைச்சர் கண்ணப்பன். புலவரும் அதற்கு இசைந்தார். ஓர் ஐந்தாண்டு ஒப்பந்த அடிப்படையில் புலவர் மரூஷியஸ் செல்ல நேர்ந்தது. கண்ணப்பனே புலவருக்கு ஒரு பிரமாதமான வழியனுப்பு உபசாரவிழா நடத்தி ஆளுயர மாலை போட்டு அவரை அனுப்பி வைத்தான். புலவர் வெளிநாட்டுக்குப் போய்ச் சேர்ந்தார்.

கண்ணப்பனின் ஆட்சியில் முதல் இரண்டு ஆண்டுகள் எல்லாம் சுமுகமாகவே நடந்தன. புதிய கட்சிக்கும், புதிய ஆட்சிக்கும் மக்கள் மத்தியில் பெரும் புகழும் போதுமான அளவுக்கு நீடித்தன. அவர்களது சிக்கனம், எளிமை, லஞ்ச ஊழலற்ற

நிர்வாகம், ஏழைகளுக்கான இலவசத் திட்டங்கள் எல்லாமே நல்ல பேர் வாங்கித் தந்து கொண்டிருந்தன.

மூன்றாவது ஆண்டின் தொடக்கத்தில் மந்திரிகளின் சம்பளத்தை ஆயிரத்தைந்நூறு ரூபாயாகச் செய்தார்கள். விலைவாசி உயர்வு காரணமாகச் சொல்லப்பட்டது. சைக்கிளில் போவதில் 'செக்யூரிட்டி ரிஸ்க்' இருப்பதாகக் காவல்துறையினர் சொல்வதாகக் கூறி மந்திரிகளுக்குக் கார்கள் ஒதுக்கப்பட்டன. பெரிய பெரிய கார்களே கிடைத்தன.

குடிசைவாசிகள், ஏழைகள், எளியவர்களின் மேம்பாட்டுக்கான திட்டங்களை நடத்தப் பணம் தேவை என்று கள், சாராயம், போதைப் பொருட்கள் விற்கும் கடைகளை அரசாங்கமே திறந்தது. கட்சி ஆட்களே அவற்றைக் குத்தகைக்கு எடுத்தார்கள்.

"என் தாய் மேலாணை! தமிழ் மேலாணை! ஏழைகளின் வாழ்வைப் பாழாக்கும் கள், சாராயக் கடைகளை நிரந்தரமாக மூடுவதே எங்கள் கொள்கை" - என்று தேர்தல் உறுதி மொழியில் வாக்களித்திருந்த கண்ணப்பனே இப்போது அதை மறந்திருந்தான். சாராயக் கடைகளை மூலைக்கு மூலை திறந்திருந்தான்.

எப்படியோ ஆண்டுகள் ஓடி முடிந்தன. அடுத்த பொதுத் தேர்தலும் வந்தது. மறுபடியும் கண்ணப்பனின் கட்சியே பெருவாரியாக வெற்றி பெற்றது.

இம்முறை கட்சி வளர்ச்சிக்காக வியாபாரிகளிடமும், தொழிலதிபர்களிடமும் பணம் வாங்குவது தவறில்லை என்ற முடிவைக் கண்ணப்பனே இரகசியமாக மற்றவர்களுக்கு அறிவித்தான். கட்சியை நடத்த, எதிர்க்கட்சியின் பலத்தைக் குலைக்க எல்லாவற்றுக்கும் நிறையப் பணம் தேவைப்பட்டது. மெல்ல மெல்ல மந்திரிகளும், கட்சி முக்கியஸ்தர்களும் கூடப் பணவேட்டையில் இறங்கினார்கள். மெடிகல் காலேஜ் சீட் முதல் பாலிடெக்னிக் அட்மிஷன் வரை எல்லாவற்றிற்கும் 'ரேட்'கள் ஏற்பட்டன. கோடிக்கணக்கான அயிட்டங்களைக் கண்ணப்பனே நேரில் வாங்கினான். லட்சங்களை மற்றவர்கள் பார்த்துக் கொண்டார்கள். ஸ்விஸ் பாங்கில் கணக்கு ஏற்பட்டது. லஞ்சம் வாங்குவதிலும், பணம் பண்ணுவதிலும் இதற்கு முந்திய எல்லா அரசுகளையும் விடப் படுவேகத்தில் முன்னேறிவிட்ட பெருமை கண்ணப்பனின் அரசிற்குக் கிடைத்தது.

ஐந்தாண்டு ஒப்பந்தத்தில் முன்பு மருஷியஸ் சென்றிருந்த புலவர் மேலும் சில ஆண்டுகள் ஒப்பந்தம் நீடித்தபின் அதுவும் முடிந்து ஓய்வுபெற்றுத் தாய்நாடு திரும்பினார்.

தாய்நாடு திரும்பியதும் முதல் வேலையாகத் தனது பணிவுள்ள மாணவனும், மாநிலத்தை ஆள்பவனுமாகிய கண்ணப்பனைச் சந்திக்க விரும்பினார். சந்திப்பது அவ்வளவு சுலபமாயில்லை. நாட்கள் கடந்தன. கேள்விப்பட்ட விஷயங்கள் அவருக்கு எரிச்சலூட்டின. கண்ணப்பனும், சக அமைச்சர்களும், கட்சிக்காரர்களும் லஞ்சத்தையே ஒரு வாழ்க்கை முறையாக்கி விட்டதாகத் தெரிந்தது. மனம் வெதும்பினார் புலவர்.

அரும்பாடுபட்டுப் பல நாள் காத்திருந்து எப்படியோ முதல்வர் கண்ணப்பனிடம் ஒரு நிமிஷ இண்டர்வியூவுக்கு நேரம் வாங்கிவிட்டார் புலவர். அதற்கே முதல்வரின் காரியதரிசி, பி.ஏ. எல்லாரிடமும் தங்களது ஆதிநாளைய அந்தரங்க நட்பைச் சொல்லிக் காலில் விழாத குறையாகக் கெஞ்ச வேண்டியிருந்தது. ஒரு நிமிஷத்தில் கண்ணப்பனிடம் கேட்க வேண்டியவற்றை எல்லாம் வரிசையாக நினைவுபடுத்திக் கொண்டார் புலவர்.

கண்ணப்பன் அவரைக் கட்டித் தழுவி வரவேற்றான். அட்டகாசமாக நலம் விசாரித்தான். அவருக்கோ எவ்வளவோ முயன்றும் அவன் முன் சிரிப்பே வரவில்லை. அவன் நடிப்பதுபோல் அவருக்கு நடிக்க வரவில்லை. 'அரசியல்வாதிக்கும் கொஞ்சம் கபடம் தேவை - களவும் கற்று மறக்க வேண்டும்' என்று அன்றைக்குத் தான் கூறியதையே தன்னிடம் எதிர்த்துக் கண்டித்த அவன் இன்று எப்படி இருக்கிறான் என்பதை எண்ணியபோது அவனது முகத்தை இயல்பாகப் பார்க்கவே அருவருப்பாய் இருந்தது அவருக்கு. அவனைத் தன் பழைய மாணவனாக எண்ணிடக்கூட வெட்கமாக இருந்தது அவருக்கு.

அவர் அவனைக் கேட்டார்; கடுமையாகவே கேட்டார்.

"முன்னாலே இருந்தவங்க மாதிரி ஆயிடாமே லஞ்ச ஊழலற்ற நேர்மையான ஆட்சி அமைக்கப் போறேன்னு சொன்னது ஞாபகம் இருக்கா?"

"எப்போ சொன்னேன் அப்பிடி?"

"களவும் கற்று மறக்கணும்னு பழமொழி இருப்பதை நினைவூட்டி அரசியலுக்குக் கொஞ்சம் கபடமாவது வேணும்னு நான் சொன்னப்போ எனக்கு அன்னிக்கி நீங்க சொல்லியிருந்த பதில் அது..."

"அது சரி! பழசெல்லாம் விட்டுத் தள்ளுங்க புலவரே! இப்ப என்ன வேலையா வந்தீங்க? உங்களுக்கு நான் என்ன செய்யணும்? சொல்லுங்க..."

அவருக்கு ஒரே பிரமிப்பு! எப்படி மாறிவிட்டான்? 'களவும் கற்றுமற' என்பதுதான் பழமொழி. இவனோ இந்த ஆறேழு ஆண்டுகளில் களவைத் தவிர வேறு எல்லாவற்றையுமே மறந்திருக்கிறான்.

அரசாங்க நாற்காலிகளில் ஏதோ கோளாறு இருக்க வேண்டும். நாற்காலிகளில் போய் உட்காருகிறவரை நியாயம் பேசுகிற ஒவ்வொருவனும் நாற்காலிக்குப் போனதும் மக்களையும், நியாயங்களையும் மறந்துவிடுகிறான்.

முதல்வரின் பி.ஏ. குறுக்கிட்டான். "உங்கள் பேட்டிக்கு ஒதுக்கிய நேரம் முடிந்துவிட்டது."

"நன்றி! வருகிறேன்" என்று முதல்வரையோ பி.ஏ.யையோ திரும்பிப் பாராமல் சரேலென்று உடனே அங்கிருந்து வெளியேறினார் புலவர்.

**(போல்டு இந்தியா, தீபாவளி மலர், 1985)**

# 164. பொய் சொல்லத் தெரியாமல்...

அவனுக்கு ஒரு பாவமும் தெரியாது. காக்கை உட்காரப் பனம்பழம் விழுந்ததுபோல அந்த நிகழ்ச்சி நடந்திருந்தது. கல்லூரி முழுவதும் அவனை ஆதரித்து அவனுக்காகப் போராடக்கூடக் காத்திருந்தது. ஆனாலும் அந்த ஆதரவையும், அனுதாபத்தையும் ஏற்று வசதியாக அவற்றில் குளிர்காய அவனுக்கு மட்டும் விருப்பமில்லை.

அவனுக்கு - அதாவது, சுகுமாரன் என்கிற சுமனுக்குத் தன்னைத் தப்பச் செய்து கொள்ள வேண்டுமென்றோ, காப்பாற்றிக் கொள்ள வேண்டுமென்றோகூட எண்ணமிருந்ததாகத் தெரியவில்லை. தனக்கு ஏற்பட்ட இரண்டு சோதனைகளிலும் அவன் அப்படித்தான் நடந்து கொண்டான். எப்படியாவது அதிலிருந்து தப்ப வேண்டும் என்ற முனைப்பை அவனிடம் காணமுடியவில்லை. அவனைத் தப்புவித்துவிட வேண்டும் என்று எண்ணியவர்களோடு அவன் ஒரு சிறிதும் ஒத்துழைக்கவில்லை. அழகை இரசிக்கும், அமைதியை விரும்பும், சௌந்தரிய உபாசகனாகிய அவன் கொலைகாரனாகவும், கலகப் பேர்வழியாகவும் சித்தரிக்கப்பட்ட போதுகூட, அவற்றை மறுத்துத் தன்னை நிரபராதியாகக் காட்டிக் கொள்ள அவன் முனையவில்லை. முயலவில்லை.

‘எப்பப் பார்த்தாலும் சொப்பனத்திலே மூழ்கிக் கிடக்கிற மாதிரி இருப்பானே சுமன், அவனைப் பத்தியா இந்தக் கம்ப்ளெயின்ட்? நம்ப முடியவில்லையே?’

‘யாரு சுகுமாரனா? ஒரு ஈ எறும்பைக் கொல்லக்கூடப் பயப்படறவனாச்சே?’

‘பேசறதுக்கே கூச்சப்படறவன், பொம்பிளைன்னாலே ஏறிட்டுப் பார்க்கறதுக்குக் கூட வெட்கப்படறவன் இதைச் செஞ்சிருப்பான்னே நம்ப முடியாது.’

‘யார் கண்டாங்க? எந்தப் புற்றிலே எந்தப் பாம்பு இருக்குமோ? நம்ப முடியாதுப்பா!’

‘இவனா? இந்தப் பூனையும் இந்தப் பாலைக் குடிக்குமா?’

இப்படி எல்லாம் பேசிக் கொண்டார்களே ஒழிய, ‘ஊமைக் கோட்டான் மாதிரி இருந்துக்கிட்டு இப்படிப் பண்ணிட்டானே?’ என்று யாரும் துணிந்து அவன்மீது குற்றம் சாட்டத் துணியவில்லை. விவரம் தெரிந்த எவரும் அவனைக் குற்றம் சாட்ட முன்வரவில்லை.

ஆனால், கல்லூரி முதல்வர், விடுதி வார்டன், கரஸ்பாண்டெண்ட் ஆகிய மூவர் அடங்கிய விசாரணைக் குழுவின் முன்னால் சுமன் விசாரணை செய்யப்படும் நாளை எதிர்பார்த்துக் கல்லூரியே காத்திருந்தது. எதிர்பார்த்திருந்தது.

இரண்டு குற்றச்சாட்டுக்களிலும் தடயங்களாகக் கிடைத்த கையெழுத்துப் பிரதிகள் இரண்டுமே சுமனின் சொந்தக் கையெழுத்தில் தான் இருந்தன. அதில் தான் சிக்கலே உண்டாயிற்று.

அந்தக் கல்லூரியில் காமர்ஸ் கற்பிக்க ஆண் பேராசிரியர்கள் யாரும் கிடைக்கவில்லை. திருமணமாகாத முப்பது வயதுக்கு மேலான சுமதி என்ற பெண் காமர்ஸ் பேராசிரியையாகச் சேர்ந்திருந்தாள். அவள் ஒரு மெண்டல் கேஸ். சுகுமாரனின் மேல் அவளுக்கு ஒரு கண். ஏதோ காமர்ஸ் புத்தகம் தருவதாக ஒரு நாள் வீட்டுக்கு அவனை வரச் சொன்னாள்.

காப்பி, சிற்றுண்டி உபசாரம் எல்லாம் செய்து அவனுடைய கவிதைகளை வானளாவப் புகழ்ந்தாள். சுகுமாரன் தன் கவிதைகள் எதையும் அவளிடம் படிக்கக் கொடுத்ததில்லை. படிக்காமலே தன் கவிதைகளை அவள் எப்படித் துணிந்து புகழ முடியும் என்று அதிர்ச்சியடைந்தான் அவன்.

முதலில் இருந்தே அவள் வற்புறுத்தி வீட்டுக்கு அழைத்தது, உபசரித்தது எல்லாமே சற்று மிகையாயிருப்பதை உணர்ந்த அவன், ஏதோ காமர்ஸ் புத்தகம் தரப் போவதாகச் சொல்லி அவள் தன்னை அங்கே வரச் சொன்னது ஒரு சாக்குத்தான் என்பதைப் புரிந்து கொண்டான்.

“மேடம்! என் கவிதைகளை நீங்கள் எப்போது படித்தீர்கள்? அவை எல்லாமே கையெழுத்துப் பிரதியாக என்னிடம்தானே இருக்கின்றன!”

“கவிதையைப் படிக்காவிட்டால் என்ன? உன்னை மாதிரி அழகாகவும் இளமை-யாகவும் இருக்கிற ஒருவர் எழுதுகிற எல்லாமே அழகாகவும், இளமையாகவும்தான் இருக்கும்!”

சுகுமாரனுக்கு அவள் இப்படிப் பேசியது பிடிக்கவில்லை. அவளுடைய சிரிப்பு, பார்வை - அதில் தென்பட்ட சபலம் எதையும் அவன் இரசிக்கவில்லை. அவன் மனத்தில் அவள் தன் ஆசிரியை என்பது மட்டும் நினைவிருந்தது. அவள் மனத்திலும், கண்களிலும், பேச்சிலும், எல்லாவற்றிலும் அவன் தன் மாணவன் என்பது நினைவில்லாததோடு வேறுவிதமான ஆசைகள் தலைநீட்டின.

“என் கவிதை நன்றாக இருக்கிறது என்று நீங்கள் சொல்ல வேண்டுமானால் முதலில் நீங்கள் அவற்றைப் படித்தாக வேண்டும் மேடம்! போலிப் பாராட்டு எனக்குப் பிடிக்காது! முகமன் வார்த்தைகளை நான் நம்புவதில்லை...” என்று கூறிக் கொண்டே தனது கவிதைகள் தன் கையெழுத்திலேயே எழுதப்பட்டிருந்த நோட்டுப் புத்தகத்தை அவளிடம் எடுத்து நீட்டினான் சுகுமாரன். தன் கவிதைகளைப் படிக்காமலே வேறு காரணங்களுக்காக ஒருவர் தன்னைப் பாராட்டுவது அவனது சுயமரியாதையைப் பாதிக்கக் கூடியதாயிருந்தது.

சிறிதுநேரம் பக்கங்களை முன்னும் பின்னுமாகப் புரட்டிவிட்டு, அவன் எதிர்பாராத நிலையில் சில தாள்களைத் தனியே கிழித்து எடுத்துக் கொண்டு விட்டாள் அவள்.

*"ஏன் தனியே கிழித்து எடுக்கிறீர்கள்?"*

*"இவை எனக்கு மிகவும் பிடித்த கவிதைகள்! என்னிடமே வைத்திருந்து திரும்பத் திரும்ப ஆசைப்படுகிற போதெல்லாம் எடுத்துப் படிக்க விரும்புகிறேன்."*

*அவன் அந்தக் கவிதைகளின் மூலப் பிரதி தன்னிடம் தனியே இருந்ததனால், 'தொலைந்து போகிறது' என்று அவள் அடாவடித்தனத்தைப் பொருட்படுத்தாமல் விட்டு விட்டான்.*

*'கவிதைக் காதலிக்கு அந்தரங்கக் கடிதம்' - 'ஒரு நிலாக்காலத்து முன்னிரவில் நீயும் நானும்' - என்ற தலைப்புக்களில் அவன் எழுதியிருந்த கவிதைப் பிரதிகளைத்தான் அவள் கிழித்து எடுத்துக் கொண்டிருந்தாள்.*

*அதன் பின்பும் இரண்டொரு முறை அவள் அவனை வீட்டுக்குக் கூப்பிட்டாள். காப்பி, சிற்றுண்டி உபசரணை செய்தாள். மெல்லத் தான் ஆக்கிரமிக்கப்படுவதுபோல் உணர்ந்தான் சுகுமாரன். அவள் தனது சபலங்களுக்கும், ஆசைகளுக்கும் அவனைப் போன்றதோர் இளந்தளிரைப் பலியிட முயல்வது புரிந்தது. அவன் திமிறினான். கோபித்துக் கொண்டு வெளியேறினான். துணிந்து அவளைப் புறக்கணிக்க முற்பட்டான்.*

*அவள் அடிபட்ட புலியாக மாறினாள். சீறினாள். எங்கே அவன் முந்திக் கொண்டு தன்னைப் பற்றி உள்ளதை உள்ளபடி வெளியே சொல்லி மானத்தை வாங்கிவிடப் போகிறானோ என்று பயந்து, நயவஞ்சகமான தற்காப்பு உணர்ச்சியுடன், "டியூஷன் டியூஷன் என்று என் வீட்டுக்குத் தேடி வந்து என்னிடமே கன்னா பின்னா என்று காதல் கவிதை எழுதி நீட்டிக் கையைப் பிடித்து இழுத்தான்" என்று கல்லூரி முதல்வரிடம் அவனைப் பற்றிப் புகார் செய்துவிட்டாள். சாட்சியங்களாக அவன் கையெழுத்திலேயே இருந்த அந்தக் கவிதைகளையும் இணைத்துக் கொடுத்துவிட்டாள்.*

*ஏறக்குறைய இதே சமயத்தில் மற்றொரு முனையிலிருந்து இன்னொரு பயங்கரமான புகாரும் சுகுமாரன் மீது வந்தது.*

*தீவிரப் புரட்சிக் கருத்துக்கள் அடங்கிய கவிதைகளை அவன் எழுதியிருந்த ஒரு நோட்டுப் புத்தகத்தை, அவனுடைய ரூம் மேட் அடிக்கடி எடுத்துச் சென்று, இரவில் மாந்தோப்பில் நடக்கும் அதி தீவிர மாணவர் குழுவில் படித்துக்காட்டிவிட்டு வருவான். சுகுமாரன், நண்பனின் இந்தச் செயலைத் தடுக்கவில்லை. பக்கத்து ஊரில் விவசாயிகளைக் கொடுமைகள் மூலமும், வட்டிக் கடன் கொடுப்பதன் மூலமும் கசக்கிப் பிழிந்து வந்த ஒரு பணமுதலையைக் கொலை செய்துவிட்டார்கள். அந்த இடத்தில் சுகுமாரனின் கவிதை நோட்டுப் புத்தகமும் சிதறிக் கிடந்தது. பிரித்துக் கிடந்த பக்கத்தில் இருந்த கவிதையிலோ,*

"பொங்கு புதுப்புனல் போல்
புரட்சிப் பெருக்கெடுத்துத்
தங்கு தடையற்ற

**சமதருமம் உருவாக**
**அங்கங்கே தடையாக**
**அறிவற்றோர் முன்வந்தால்**
**தங்காமல் தயங்காமல்**
**தகர்த்திடுவாய் தவிர்த்திடுவாய்!"**

*என்ற வரிகள் இருந்தன. கொலைக்குத் தூண்டியவை இந்தக் கவிதை வரிகளே என்று குற்றப்பதிவு ஆயிற்று.*

*சுமனைக் கல்லூரியை விட்டு வெளியேற்றியபின் போலீஸ் வழக்கு மேற்கொண்டு தொடரும். அவன் தண்டனைக்கோ, அபராதத்துக்கோ உள்ளாவான்.*

*அவனைப் போன்ற சூதுவாதறியாத ஓர் இளங்கவிஞனைக் காப்பாற்றிவிட முயன்ற சில பேராசிரியர்கள், தேர்ந்த கிரிமினல் வக்கீல்கள் சிலரைக் கலந்தாலோசித்து, அவனைத் தப்பித்து விடுவதற்காகச் சில யோசனைகளைச் சொன்னார்கள்...*

**"மேக நெடுங்குழற் காட்டில்**
**தோன்றும்**
**மோக மின்னலடி உன்**
**மதி வதனம்' என்றும்;**
**'நின் கரங்களைத் தீண்டுங்கால்**
**கவிதையெனும் அமுதமணிப்**
**பொன் தருமோர் கற்பகத்தைப்**
**புகழ் தருமோர் நற்சுகத்தை"**

*- என்ற வரிகளையும், கொடுங்கோல் நிலக்கிழாரைக் கொல்லத் தூண்டிய வரிகளையும் நான் சுயமாக எழுதவில்லை. யாரோ எழுதிய அந்தக் கவிதைகளை என் தமிழ்க் கையெழுத்து முத்து முத்தாய் அழகாயிருக்கும் என்பதற்காக என்னைப் பிரதி எடுத்துத் தரச் சொன்னார்கள். மற்றபடி அவற்றுக்கும் எனக்கும் எந்தவிதச் சம்பந்தமுமில்லை' என்று கல்லூரி விசாரணை, நீதிமன்ற விசாரணை எல்லாவற்றிலும் ஒரு சீராகக் கூறுமாறு யோசனை சொல்லிக் கொடுத்தார்கள். 'மற்றதை வக்கீல் கவனித்துக் கொள்வார். தண்டனைகளிலிருந்து நீ தப்பிவிடலாம்' என்ற திட்டத்தை அவன் ஏற்கவில்லை, மறுத்தான்.*

*"இந்தக் கல்லூரி முழுவதும் சல்லடையில் போட்டுச் சலித்துத் தேடினாலும், காதல் கவிதைகளையும், புரட்சிக் கருத்துக்களையும் இவ்வளவு சிறப்பாகப் பாடும் கவிஞன் வேறெவனையும் நீங்கள் காண முடியாது!" என்று நெஞ்சை நிமிர்த்திக் கொண்டு கர்வம் பொங்கும் குரலில் பதில் சொன்னான் சுகுமாரன். அவர்கள் அதைக் கேட்டு அவனைக் கண்டித்தார்கள்.*

*"அதெல்லாம் சரிதாம்ப்பா! இப்போ அந்தக் கவித்திறமைதானே உனக்கு உலைவைத்து, உன்னை உள்ளே தள்ளிக் கம்பி எண்ண வைக்கப் போகுது! அதனாலேதான் சொல்றோம். தப்பிக்கிறத்துக்காகத் தற்காலிகமாக ஒரு பொய்*

சொல்லிக்கோ! கவி எழுதற திறமையே எனக்குக் கிடையாதுன்னு நீ சொல்லிட்டாப் போறும்..."

"அதெப்படி முடியும்? நமக்குக் கெடுதல் வருதுங்கிறதுக்காக நம்ம திறமையை மறைக்க முடியாது. நம்மை நாமே கொலை பண்ணிக்கிறதுங்கிறது அடுத்தவனைக் கொல்றதைவிட மோசமான காரியம். நான் அதைச் செய்யமாட்டேன்..."

அவன் பிடிவாதமாயிருந்தான். அவன் மேல் அனுதாபமுள்ளவர்களாலே கூட அவனைத் திருத்தவோ, மாற்றவோ முடியவில்லை.

கல்லூரி டிபார்ட்மெண்டல் என்குயரி, போலீஸ் என்குயரி, நீதி விசாரணை, எல்லாவற்றிலும் அவன் தனது பிடிவாதப்படியே அந்தக் கவிதைகளை எழுதியவன் தானே என்று கர்வத்தோடு நிமிர்ந்து நின்று சொந்தம் கொண்டாடினான். அடித்துச் சொன்னான். நிரூபிக்கக்கூட முற்பட்டான்.

வக்கிர குணமுள்ள பேராசிரியை அவனை வம்பில் மாட்டி வைத்ததோ; எப்போதோ அவன் எழுதிய புரட்சிக் கவிதையை யாரோ யாரையோ கொலை செய்த இடத்தில் கண்டது அவன் குற்றமில்லை என்பதோ வெளிப்படவே வழி பிறக்கவில்லை. பேராசிரியையிடம் முறைகேடாக நடந்து கொண்டதற்காகவும்; ஒரு கொலைக்குத் தூண்டியதற்காகவும் அவன் பத்து ஆண்டுகள் சிறைத் தண்டனை பெற்றான். விலங்கு மாட்டி அவனை இழுத்துச் சென்றார்கள்.

அவன் ஜெயிலுக்குப் போனான். தலைநிமிர்ந்து கர்வத்தோடு போனான். பத்து ஆண்டுகளுக்குப் பின் அவன் மறுபடி விடுதலையாகி வெளியே வருகிறபோது இந்நாட்டுக்கு அதிர்ஷ்டம் இருந்தால், அவனை ஒரு மகாகவியாக வரவேற்கத் தெரிந்து கொண்டிருக்கும். அதிர்ஷ்டம் இல்லாவிட்டால் அதற்கு அவன் என்ன செய்ய முடியும்? நாட்டின் எத்தனையோ பல துரதிர்ஷ்டங்களில் அதுவும் ஒன்றாயிருக்கும்.

**(சிறுகதைக் களஞ்சியம், 1986)**

## 165. ஒரு சர்வதேசக் கருத்தரங்கு

நகரின் மிகவும் செல்வாக்கு நிறைந்த ஸ்தாபனமாகிய சமூக இலக்கிய சேவா சங்கத்தின் ஜெனரல் பாடி கூடிய போது யாரும் எதிர்பாராதவிதமாக அப்படி ஒரு சர்ச்சை அங்கே கிளம்பியது. எல்லோரும் பயந்தே போனார்கள்.

"உங்கள் சங்கம் மேல் மட்டத்தையும் உயர் வர்க்கத்தையும் சேர்ந்த இலக்கிய கர்த்தாக்களையே கொண்டாடுகிறது. அடித்தளத்து வர்க்கத்தையும், தாழ்த்தப்பட்ட பிரிவினரையும் கண்டு கொள்வதே இல்லை!"

தலித் இயக்கத்தில் ஈடுபாடுள்ள ஒருவர் இந்தக் குற்றச்சாட்டைக் கிளப்பினார்.

கூடவே ஒரு யோசனையையும் தெரிவித்தார்.

"நூறு ஆண்டுகளுக்கு முன் செருப்புத் தைக்கும் தொழிலாளியாகப் பிறந்து, மகத்தான கவிதைகளை இயற்றிவிட்டு மறைந்த குசேல தேவநாயனார் என்பவருடைய கவிதைகளைப் பற்றிய விழாவையும் நூற்றாண்டு விழாவையும் கொண்டாடிக் கருத்தரங்கு ஒன்றையும் நடத்த வேண்டும் - அக்கருத்தரங்கிற்கு இப்போது அக்கவிஞரின் வம்சாவளியினராயிருக்கும் கொள்ளுப்பேரனை அழைத்துக் கௌரவிக்க வேண்டும்."

எப்படியாவது எதிர்ப்புக் குரலை அடக்கக் கருதிய பொதுக் குழுவினர் உடனே அதைச் செய்ய ஒப்புக் கொண்டார்கள்.

"வறுமைக் கோட்டுக்குக் கீழே கல்வி ரீதியாகவும் கலாச்சார ரீதியாகவும், சமுகரீதியாகவும் பிற்பட்ட சமூகம் ஒன்றில் தோன்றிய சித்த புருஷரும், கவிஞரும் ஆகிய குசேல தேவநாயனரின் நூற்றாண்டு விழாவை ஈடு இணையற்ற முறையில் கொண்டாட வேண்டும் என்று 'சமூக இலக்கிய சேவா சங்கம்' ஒரு மனமாக முடிவு செய்கிறது" என்று தீர்மானத்தின் டிராஃப்ட் ரெஸல்யூஷனைப் படித்தார் செயலாளர்.

உடனே கமிட்டியிலிருந்த ஆங்கிலப் பேராசிரியர் ஒருவர், "மெக்ஸிகோவில் தற்போது வாழும் ஸாவ்லோ காப்டா என்ற கவிஞர் நோபல் பரிசு பெற்ற புகழுக்குரியவர். குசேல தேவநாயனார் மாதிரியே செருப்புத் தைக்கும் தொழிலாளியின் மகனாகப் பிறந்து புகழ் பெற்றவர். அவரையும் இந்த நூற்றாண்டு விழாக் கருத்தரங்கிற்கு அழைக்க வேண்டும்" என்று அதற்கு ஒரு திருத்தத்தை முன்மொழிந்தார்.

"ஆமாம்! அப்படியே செய்யலாம்" என்று வேறு பலரும் அதை உடன் வழி மொழிந்தனர்.

உடனே கமிட்டியிலிருந்த வைஸ்-சான்ஸலர் ஒருவருக்குத் தமக்குத் தெரிந்ததைச் சொல்லாவிட்டால் தலையே வெடித்துவிடும் போலிருந்தது.

"லத்தீன் அமெரிக்காவில் சிலி நாட்டில் குழாய் ரிப்பேர்க்காரரான ப்ளம்பர் ஒருவர் - ஸில்வியா பிளம்பர் என்று மிகப்பெரிய புரொக்ரஸிவ் கவிஞராக விளங்கி வருகிறார். இக்கருத்தரங்கிற்கு அவரையும் அழைக்க வேண்டும் என்பது என் கருத்து" என்றார் துணைவேந்தர்.

அந்தக் கூட்டத்தில் அதை யாரும் ஆட்சேபிக்க முன் வரவில்லை. ஒரு துணைவேந்தரை யாராவது ஆட்சேபிக்க முடியுமா, என்ன?

கமிட்டியின் மற்றோர் அங்கத்தினர் ஆன ஜைனுத்தீன்பாய் எழுந்து, "சிறுபான்மை மதப்பிரிவைச் சேர்ந்த வகுப்பினரை இந்தச் சங்கம் நீண்டநாட்களாகவே புறக்கணித்து வருகிறது. 'மஸ்காட்டி'ல் மாமிசக் கடை வைத்திருக்கும் ஹலால்புட்சர் ஒருவர் 'அல்அமீன்' என்று மிகச்சிறந்த அரபுமொழிக் கவிஞராக இன்று விளங்கி வருகிறார். இந்தக் கருத்தரங்கிற்கு 'அல்அமீன்' கண்டிப்பாக அழைக்கப்பட வேண்டும்" என்றார்.

"சங்கத்தின் மதச்சார்பற்ற தன்மையை நிரூபிக்கும் பொருட்டுக் கட்டாயம் அல்அமீன் அழைக்கப்படுவார்" என உறுதி கூறப்பட்டது. ஜைனுத்தீன் பாய் திருப்தியடைந்தார்.

உடனே சங்கத்தின் நிதி நிலைமைகளுக்குப் பொறுப்பாளரான பொருளாளர், மெக்ஸிகோ, சிலி, மஸ்காட் இந்த மூன்று இடங்களிலும் இருந்து விமானத்தில் வந்து போகவும் சென்னையில் தங்கவும் ஆக எல்லாம் சேர்த்து ஒரு லட்ச ரூபாய்க்குக் குறையாமல் ஆகும் என்பதைத் தெரிவித்தார். அவர் குரலில் கவலை தோய்ந்திருந்தது.

"புத்த மதத்தை நாம் புறக்கணித்ததாக ஆகிவிடக் கூடாது. தாய்லாந்திலிருந்து குணசீல தர்மதேரோ என்ற பௌத்தக் கவிஞரை எப்படியும் அழைத்தாக வேண்டும்" என்றார் செல்வாக்குள்ள மற்றொரு கமிட்டி உறுப்பினர்.

அவருடைய விரோதமோ மனஸ்தாபமோ கூடாதென்பதற்காக அதை யாரும் எதிர்க்கத் துணியவில்லை.

"பணத்தைப் பற்றிக் கவலைப்படாதீர்கள்! வசூல் செய்து கொள்ளலாம். மத்திய மாநில அரசாங்கங்களிடம் மான்யம் வாங்கிக் கொள்ளலாம். செருப்புத் தைக்கும் அடித்தளத்து மக்கள் கவிஞரைப் பற்றிய செமினார் என்பதால் மான்யத்தை மறுக்கும் துணிவு எந்த அரசுக்கும் வராது" என்றார் அரசியல் நெளிவு சுளிவு தெரிந்த ஓர் அங்கத்தினர். ஆகவே செலவைப் பற்றிய கவலை தற்காலிகமாக நீங்கியது.

என்ன செலவானாலும் கருத்தரங்கை ஓர் இண்டர்நேஷனல் செமினாராக மூன்று நாள் நடத்தியே தீருவது என்று முடிவு செய்யப்பட்டது. வருகிற விருந்தினர்களுக்கும் சர்வதேசக் கருத்தரங்கு என்கிற நிலைமைக்கும் ஏற்ப ஓர் ஐந்து நட்சத்திர ஹோட்டலில் தான் செமினார் நடத்தப்பட வேண்டும் என்றும் முடிவு செய்யப் பட்டுவிட்டது.

குசேலதேவ நாயனாரின் பாடல்கள் பாமர மக்களுக்கும் புரிகிற எளிய தமிழில் இருப்பதால் சர்வதேசக் கருத்தரங்கை எந்த மீடியத்தில் - எந்த மொழியின் மூலம் நடத்துவது என்ற சர்ச்சை எழுந்தது.

"அவர் தமிழில் தான் பாடியிருக்கிறார். அதுவும் தோல் பதனிடுதல், செருப்புத் தைத்தல் போன்ற தொழிகளில் ஈடுபட்டிருந்த பாமர மக்களின் பேச்சுத் தமிழ் மொழியில் சித்தர் பாடல்களுக்கு இணையாக எழுதியிருக்கிறார். ஆகவே கருத்தரங்கைத் தமிழில் தான் நடத்த வேண்டும். பாடியவருக்குத் தெரியாத மொழியில் - பாடல்கள் பாடப்படாத அந்நிய மொழியில் கருத்தரங்கு நடத்தப்பட வேண்டாம்" என்றார், அந்த யோசனையை முதலில் தெரிவித்த தலித் இயக்கத்தைச் சேர்ந்தவர். அவர் குரலில் கண்டிப்பிருந்தது.

"மெக்ஸிகோவைச் சேர்ந்த ஸாவ்லோ காப்டாவுக்கும், சிலி நாட்டைச் சேர்ந்த ஸில்வியா பிளம்பருக்கும், மஸ்கட்டைச் சேர்ந்த அல்அமீனுக்கும் தாய்லாந்தைச் சேர்ந்த குணசீல தர்மதேரோவுக்கும் தமிழ் தெரியாதே? என்ன செய்யலாம்?" என்று உடனே கேட்டார் மற்றோர் உறுப்பினர்.

"வரப்போகிற விருந்தினர்கள் நாலு பேருக்குத் தமிழ் தெரியாது என்பதற்காகக் கலந்து கொள்ளப் போகிற நானூறு பேருக்கு நன்றாகத் தெரிந்த தமிழை ஏன் புறக்கணிக்க வேண்டும்? உண்மையிலேயே அந்த நாலு அந்நியர்களுக்கும் நன்றாகத் தெரிந்த மொழிகளில் நடத்த வேண்டுமானால் ஸ்பானிஷ், லத்தீன், அராபி, பாலி போன்ற மொழிகளில்தான் நடத்தியாக வேண்டும். ஏனெனில் அவர்களுக்கும் ஆங்கிலம் அந்நிய மொழிதான்."

"உங்கள் வாதம் சரி என்றே வைத்துக் கொண்டாலும் நம் குசேலதேவ நாயனாரைப் பற்றி நாலு பேர் ஆங்கிலத்தில் கட்டுரை படிப்பதும், நானூறு பேர் அவை பற்றி விவாதிப்பதும் பெருமைதானே? அதை ஏன் தடுக்கிறீர்கள்?" என்று சமூக இலக்கிய சேவா சங்கத்தின் செயலாளர் கேட்டபோது தலித்காரர் வழிக்கு வந்தார். ஆங்கிலத்திலேயே நடந்துவிட்டுப் போகட்டும் என்று விட்டுவிட்டார்.

"பாமர மக்களின் பிரதிநிதியான எங்கள் ஏழைக் கவிஞரை உலகளாவிய ஆங்கில மொழியால் கௌரவிக்கப் போகிறீர்கள் என்றால் அதில் எனக்கு ஆட்சேபணை இல்லை. அந்தப் பாட்டாளி மக்கள் கவிஞனின் பரம்பரையில் எஞ்சியிருக்கும் கொள்ளுப்பேரன் மல்லையா இன்று பெரிய பாளையத்தருகே ஒரு குக்கிராமத்தில் செருப்புத் தைக்கும் தொழிலாளியாகக் காலந்தள்ளி வருகிறான். அவனைக் கண்டிப்பாக இந்தக் கருத்தரங்கிற்கு அழைத்துக் கௌரவிக்க வேண்டும்."

"அதைப்பற்றிக் கவலையே வேண்டாம்! அந்த மல்லையாவின் அட்ரஸை மட்டும் விவரமாக எங்களிடம் எழுதிக் கொடுத்து விடுங்கள். அவருக்கு விசேஷ அழைப்பு அனுப்பிக் கௌரவிப்பது சமூக இலக்கிய சேவா சங்கத்தின் முதல் கடமையாக இருக்கும்."

*தலித்காரர் மல்லையாவின் முழு விலாசத்தையும் எழுதிச் சங்கக் காரியதரிசியிடம் கொடுத்தார். காரியதரிசி கோயில் அர்ச்சகர் ஒருவரிடமிருந்து பிரசாதம் வாங்குவது போல அத்தனை பயபக்தியோடும் மரியாதையோடும் அதை வாங்கிக் கொண்டார்.*

*குசேலதேவ நாயனார் தத்துவப் பாடல்கள் என்று 1886ல் அச்சான ஒரு பழைய நைந்த புத்தகத்தை கன்னிமரா நூலகத்திலிருந்து தேடிக் கொண்டு வந்து கொடுத்தார்கள். அந்தப் புத்தகம் தொட்டாலே உதிர்ந்து விடும் நிலைமையிலிருந்தது. அந்தப் புத்தகமே நூறாண்டுகளுக்கு முன் அந்தக் கவிஞரின் இனத்தாருடைய நிதியுதவியால்தான் பிரசுரிக்கப்பட்டு முதற் பதிப்பாக வெளியாகியிருந்தது. ஆறணா விலைக்கு 800 பக்கங்களுக்கு மேல் பெரிய புத்தகம். இன்று வெளியிட்டால் 60 ரூபாய்க்கு மேல் அடக்கவிலையே ஆகும். ஆயிரம் பிரதி அச்சிட அறுபதாயிரம் ரூபாய் ஆகலாம். அதனால் சமூக இலக்கிய சேவா சங்கம் புத்தகத்தை மறுபிரசுரம் செய்யும் வம்பிலேயே இறங்க விரும்பவில்லை. அந்த ஒரு பிரதியை வைத்தே விழாவைச் சமாளித்துவிட விரும்பியது.*

*மிருகங்கள் செத்த பிறகும் தம் தோல்களை மனிதருக்குச் செருப்பு முதலிய பண்டங்களாய் அளித்துப் பயன்படும்; மனிதன் அதற்குக்கூடப் பயன்படமாட்டானே' என்ற அர்த்தத்தில் குசேலதேவ நாயனாரின் ஒரு பாட்டு இருந்தது.*

"பாலின் நிறத்திலும் மேனி
பகட்டு நிறத்திலும் மனிதர்
நாலுவித மாய் வருணம் பெற்றீர்
நல்லவித மாய்த் தோலும் பெற்றீர்
வாலினை ஆட்டும் மிருகங்கள்
வகை வகையான விதங்களிலே
தோலினை அளித்துப் பயன்நல்கும்
துஷ்ட மனிதர் தோலும் பயனில்லை."

*என்று வருகிற குசேலதேவரின் அந்த ஒரு பாட்டையாவது தமிழில் அப்படியே நிகழ்ச்சி நிரலில் அச்சிட வேண்டும் என்றார் குசேலதேவ நாயனாரின் இனத்தைச் சேர்ந்த அந்த தலித் இயக்க ஆள்.*

*நிகழ்ச்சி நிரல் ஆங்கிலத்தில் அச்சிடப்பட இருப்பதால் நடுவே தமிழில் இந்தப் பாடலை இடைச்செருகல் போலப் போடுவது நன்றாக இராது என்று சொல்லிவிட்டார்கள். இதன் அர்த்தத்தை அல்லது கருத்தை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்து நிகழ்ச்சி நிரலின் தலைப்பில் வெளியிட்டு விடுவதாகக் கூறிவிடவே அவருக்குத் திருப்தியாகப் போய்விட்டது.*

*ஏற்பாடுகள் சுறுசுறுப்பாக நடந்தன. செல்வாக்குள்ளவர்கள் முயற்சி செய்து மத்திய அரசிடம் இருந்து இரண்டு இலட்சரூபாயும் மாநில அரசிடம் இருந்து ஓர் இலட்ச ரூபாயும் மான்யமாக இந்த இண்டர்நேஷனல் செமினாருக்கு வாங்கி*

விட்டார்கள். சிறப்பு மலர் விளம்பரங்கள் வசூல்கள் மூலமாக மேலும் ஓர் இலட்சம் தேறியது. எப்படியோ நாலு லட்சம் கையில் சேர்ந்துவிட்டது.

எல்லோருக்கும் அனுப்பப்பட்டது போல் பெரியபாளையத்திலிருந்த குசேலதேவ நாயனாரின் கொள்ளுப் பேரனான மல்லையாவிற்கும் ஒரு சைக்ளோஸ்டைல் செய்த ஆங்கிலக் கடிதம் அழைப்பாகப் போயிற்று. எழுதப் படிக்கத் தெரியாத மல்லையா அதைத் தன்னிடம் வாடிக்கையாகச் செருப்புத் தைக்கும் ஒரு புரொபஸரிடம் கொடுத்துப் படிக்கச் சொல்லி விவரம் தெரிந்து கொண்டான். மூன்று நாள் அங்கும் இங்குமாக வெயிலில் ஓடியாடிச் செருப்புத் தைத்த கூலியை ஒன்று சேர்த்து பஸ் பயணத்துக்கும் மற்றவற்றுக்கும் செலவழித்துச் சென்னை புறப்பட்டான்.

சர்வதேசக் கருத்தரங்கு ஆகையினால் எல்லா நாட்டாருக்கும் ஒத்து வருகிற பொதுத் தலைப்பாக இருக்க வேண்டும் என்று 'ரேர் பொயடிக் வாய்ஸஸ் ஃப்ரம் அப்ரெஸ்ட் கிளாஸ்' என்று செமினாரின் தலைப்பைக் கொடுத்துவிட்டார்கள். முழு நிகழ்ச்சி நிரலிலும் எங்கேயோ ஓரிடத்தில் 'டு மார்க் த (ஹண்ட்ரட்த்) டெத் 100 செண்டினரி ஆஃப் கிரேட் பொயட் குசேலதேவா' - என்று மட்டும் இருந்தது. மற்றபடி அந்தக் கவிஞரின் பெயர் வேறு எங்கும் இல்லை.

ஸாவ்லோ காப்டா, ஸில்வியாபிளம்பர், அல்அமீன், குணசீலதர்மதேரோ ஆகியோருக்குப் போக வரப் பயன்படும் விமான ரிடர்ன் டிக்கெட்டுகள் எடுத்து அனுப்பியாயிற்று. சென்னையில் தங்குவதற்கு ஐந்து நட்சத்திர அந்தஸ்துள்ள ஹோட்டலில் அறைகள் ரிஸர்வ் செய்தாயிற்று. மத்திய கல்வி மந்திரி கருத்தரங்கைத் தொடங்கி வைக்கவும் மாநிலக் கல்வி மந்திரி வெலிடிக்டரி உரை நிகழ்த்தவும் ஸாவ்லோ காப்டாவின் கீ நோட் அட்ரசுடன் உரையைத் தொடங்கவும் ஏற்பாடாகிவிட்டது.

அபூர்வமாகத் தேடிக் கண்டுபிடித்த ஒரே ஒரு பிரதியாகிய குசேலதேவ நாயனாரின் பாடல்கள் அடங்கிய புத்தகப் பிரதியை மேடைமேல் ஒரு கண்ணாடிப் பேழையில் மாலையிட்டுப் பத்திரமாக அலங்கரித்து வைக்க ஏற்பாடு செய்திருந்தார்கள். கிடைத்தது, அந்த ஒரே ஒரு பிரதி புத்தகம்தான்.

கருத்தரங்கின் இடையே காலையிலும், மாலையிலும் பிஸ்கட்டுடன் இரு காப்பி பிரேக். பகலில் லஞ்ச், இரவு டின்னர், எல்லாம் அதே ஐந்து நட்சத்திர ஹோட்டலில் தடபுடலாக ஏற்பாடாகி இருந்தன.

கருத்தரங்கத் தொடக்கத்தில் 'பிரதமரின் எழுபத்தேழு அம்சத் திட்டத்தில் அறுபத்தேழாவது திட்டம் ஒடுக்கப்பட்டவர்களை விடுவித்து உயர்த்துவது ஆகும். இந்தக் கருத்தரங்கில் அதை விளக்க இருப்பதறிந்து நான் மட்டுமின்றிப் பிரதமரும் மகிழ்ச்சியடைவார்' என்று மத்திய கல்வி மந்திரி பேசியதை மறுநாள் காலை எல்லாச் செய்தித்தாள்களும் ஃபிளாஷ் செய்திருந்தன. குசேலதேவரின் பேரோ, அவர் ஒரு தமிழ்க் கவி என்பதோ அதில் வரவே இல்லை, 'இண்டர்நேஷனல் செமினார்

ஆர்கனைஸ்ட் பை ஸோஷியோ லிட்டரரி கல்சுரல் அஸோஸியேஷன்' - என்று மட்டுமே வந்திருந்தது.

செமினார் மூன்று நாளும் தடபுடல்பட்டது. தொடக்கம் முதல் முடிவு வரை எல்லாமே ஆங்கிலத்தில்தான். மாநிலக் கல்வி மந்திரி கூடச் சிரமப்பட்டுத் தமிழ் உச்சரிப்போடு கூடிய ஆங்கிலத்தில் பேசினார். மெக்ஸிகோவிலிருந்து கீ நோட் அட்ரஸ் வழங்க வந்திருந்த கவிஞர் மட்டும் சில வரிகள் சம்பிரதாயமாக ஆங்கிலத்தில் பேசிவிட்டு, "ஐ டோண்ட் வாண்ட் டு ஸ்பீக் இன் எ லாங்வேஜ் விச் இஸ் நெய்தர் யுவர்ஸ் நார் மைன்" என்று திடீரென்று ஸ்பானிஷ் மொழியில் புகுந்துவிட்டார். அது எல்லாருக்கும் அதிர்ச்சியளிக்கக் கூடியதாயிருந்தது. மற்றவர்கள் எல்லாரும் ஆங்கிலத்திலேயே பேசினார்கள். கருத்தரங்கு பிரமாதமாக முடிந்தது. பத்திரிகைகள் பத்தி பத்தியாய்ப் புகழ்ந்து பிரசுரித்திருந்தன. விருந்தினர் நாடு திரும்பினர்.

ஒரு வாரம் கழித்து 'டிஸ்பியூட்' என்ற பிரபல ஆங்கில வார இதழில் இந்தச் சர்வ தேசக் கருத்தரங்கு பற்றி ஒரு தலையங்கமும் சில முக்கிய பேட்டிகளும் வெளிவந்தன. எல்லாவற்றையும் பற்றி மற்றவர்கள் அணுகாத புதிய கோணத்தில் அணுகிப் பரபரப்பாக ஏதேனும் வெளியிடுவதில் மிகவும் புகழ்பெற்ற வார இதழ் இது. பிரச்னைகளை எதிர்மறையாக அணுகும் இதழ் டிஸ்பியூட்.

முதல் பேட்டி குசேலதேவ நாயனாரின் கொள்ளுப் பேரன் மல்லையாவிடம் இருந்து பிரசுரமாகி இருந்தது. அதற்கு ஆசிரியரால் ஒரு முன் குறிப்பும் எழுதப்பட்டிருந்தது.

'பெரியபாளையத்திலிருந்து இந்த இண்டர்நேஷனல் செமினாருக்குக் கௌரவ விருந்தாளியாக அழைக்கப்பட்ட இவர் செமினார் நிகழ்ந்த ஃபைவ் ஸ்டார் ஹோட்டலில் உள்ளே அனுமதிக்கப்படாத காரணத்தால் ஊர் திரும்ப பஸ் சார்ஜ் - வழிச் செலவுக்குப் பணமும் ஏற்பாடும் இன்றித் தவித்துத் 'தம் கையே தமக்குதவி' என்ற முடிவுடன் மவுண்ட்ரோடு புகாரி அருகே பிளாட்பாரத்தில் செருப்புத் தைத்துக் கொண்டிருந்தபோது இப்பேட்டி எடுக்கப்பட்டது' என்ற முன்னுரையுடன் பேட்டி ஆரம்பமாகி இருந்தது.

தாம் இரண்டு மூன்று நாள் வெயிலில் தெருத் தெருவாக அலைந்து பெரியபாளையத்தில் செருப்புத் தைத்துச் சேர்த்த பணத்தைத் திரட்டிப் பஸ்ஸுக்குக் கொடுத்தது போக நாலு பேர் பார்க்கக் கௌரவமாக இருக்க வேண்டும் என்று செலவழித்துப் புதுச்சட்டை வேட்டி எடுத்துத் தயாராகிச் சென்னை வந்தது பற்றியும் எவ்வளவோ மன்றாடியும் கருத்தரங்கு நடந்த ஐந்து நட்சத்திர ஹோட்டலில் தம்மை உள்ளே விட மறுத்துவிட்டதையும் மல்லையா பேட்டியில் கூறியிருந்தார். 'ஊர் திரும்ப பஸ் சார்ஜுக்காகவும் பிற செலவுகளுக்காகவும் நான் செருப்புத் தைச்சுப் பணம் தேட வேண்டியதாப் போச்சு' என்றும் கண்ணீர் மல்கக் கூறியிருந்தார்.

அடுத்த பேட்டியைத் தலித் இயக்கத்தைச் சேர்ந்த ஓர் எழுத்தாளர் கொடுத்திருந்தார்.

"இந்த இண்டர்நேஷனல் செமினாரினால் ஒரு பிரயோஜனமும் இல்லை. குசேலதேவர் எந்த மொழியில் எந்த மொழிக்காரர்களுக்காக எழுதினாரோ அந்த மொழியிலேயே அவரைப் பற்றி இன்னும் சரியாகத் தெரியாதபோது ஆங்கிலத்தில் இந்த செமினார் நடத்தியது எதற்காகவோ?

செமினாரில் குசேலதேவரைப் பற்றி யாருமே எதுவும் சொல்லவில்லை. காரணம் அவரது பாடல்களின் கிடைத்த ஒரே ஒரு பிரதியும் மேடைமேல் பத்திரமாக ஒரு கண்ணாடிப் பெட்டியில் வைத்துப் பூட்டப்பட்டுவிட்டது. கடைசி வரை - செமினார் முடிகிற வரை அது வெளியே எடுக்கப்படவே இல்லை.

இந்தச் சர்வதேசக் கருத்தரங்கை நடத்தி நாலு லட்சத்தை வீணடித்ததற்குப் பதில் குசேலதேவரின் கவிதைகளை மலிவுப் பதிப்பாகத் தமிழில் அச்சிட்டு வெளியிட்டு இருக்கலாம். தமிழ் தவிர ஆங்கிலம், இந்தி, முதலிய மொழிகளில் மொழி பெயர்த்தும் வெளியிட்டிருக்கலாம். இப்போது நடந்த செமினார் வெறும் லஞ்ச், டின்னர், காபி பிரேக், டீ பிரேக் செமினார்தானே ஒழிய இதன் மூலம் எந்தப் பயனும் கிடையாது. இதனால் உள்ளூராருக்கும் பயனில்லை. வெளிநாட்டாருக்கும் என்னவென்று புரியவில்லை. இங்குள்ள சில படித்த மேல்தட்டு மக்களின் 'இண்டலெக்சுவல் அரகன்ஸை' மட்டுமே நிரூபித்தது இந்தக் கருத்தங்கம்" என்று சாடியிருந்தது இந்தப் பேட்டி.

மூன்றாவது பேட்டி ஒரு வாசகருடையது. "சுதந்திரத்திற்குப் பின் கடந்த முப்பதுக்கும் மேற்பட்ட ஆண்டுகளாகச் செயல்திட்டங்களுக்குச் செலவழிப்பதை விடச் செமினார்களுக்கும் விவாதங்களுக்குமே அதிகமாகச் செலவழித்து நஷ்டப்படும் நாடுகளில் இந்தியா இன்று முன்னணியில் நிற்கிறது. ஒரு விஷயத்தைப் புரியவிடாமலும், தெரியவிடாமலும் செய்யப் போதுமான செமினார்கள் நாட்டில் அங்கங்கே ஏராளமாக நடக்கின்றன. இதுவும் அப்படித்தான் நடந்தது. இனியும் இத்தகைய செமினார்கள் வேறு மாதிரி இருக்கப் போவதில்லை. பேசுவதற்குச் செலவழிப்பதை விடச் செயல்படுவதற்கே நேரடியாகச் செலவழித்து விடலாம். யோசிப்பதற்குச் செலவழித்தே நஷ்டப்படும் நாட்டில் செயல்படுவதற்குப் பணமே மிச்சமிருக்காது" என்று கூறியிருந்தார் வாசகர்.

நாலாவது பேட்டி மெக்ஸிகன் பொயட் 'ஸாவ்லோ காப்டா'விடமிருந்து.

அந்தப் பேட்டியில் "தனக்கு யாரென்றே தெரியாத, தான் அறிந்திராத ஓர் இந்தியக் கவிஞர் பற்றிய செமினாருக்குத் தன்னைத் துணிந்து அழைத்ததன் மூலம் இந்திய நண்பர்கள் தனக்கு அளித்த அதிர்ச்சியிலிருந்து தான் இன்னும் மீளவில்லை" என்று சொல்லியிருந்தார் காப்டா. "செமினாருக்குரிய கவிஞரும் நீங்களும் ஒரே ஜாதி - ஒரே இனம் என்பதற்காக உங்களைக் கூப்பிட்டதை நீங்கள் விரும்புகிறீர்களா?"

"அந்த நினைப்பே குமட்டுகிறது எனக்கு. ஜாதி வித்தியாசங்களை விட மோசமானது அவற்றைக் 'காபிடலைஸ்' பண்ண முயல்வது. குசேலதேவரும் நானும் கவிஞர்கள் என்பதால் ஒரே இனம் என்ற நினைப்பு மட்டுமே எனக்குப்

பெருமையளிக்கிறது. வேறு நினைப்புக்கள் இர்ரெலவண்ட்; அவுட் ஆஃப் காண்டெக்ஸ்ட்.”

“இந்த இண்டர்நேஷனல் செமினாரை நடத்தியவர்கள் குசேலதேவர் பற்றிய வாழ்க்கைச் சுருக்கத்தையோ, அவர் கவிதைகளின் சாராம்சத்தையோ உங்களுக்கு எப்போதாவது, இங்கு வந்த பிறகாவது கூறினார்களா?”

“மன்னிக்கவும். எந்த நிலையிலும் அந்தக் கவிஞரைப் பற்றி எனக்கு யாரும் எதுவும் கூறவில்லை. வருத்தப்படுகிறேன். நானாக முயன்று விசாரித்த போதும், “யூ நீட் நாட் கோ இன் டு த ஸப்ஜெக்ட்” - என்று தட்டிக் கழித்துவிட்டார்கள்.”

இந்த நான்கு பேட்டிகளையும் வெளியிட்டுவிட்டு, ‘டிஸ்பியூட்’ வார இதழ் ‘தி டார்க்கர் ஸைட் ஆஃப் த ஸெமினார்’ என்ற தலையங்கம் ஒன்றும் தீட்டியிருந்தது. அந்தத் தலையங்கத்தில் கருத்தரங்கு நடத்தப்பட்ட விதத்தைக் கண்டித்திருந்ததுடன் குசேலதேவரின் கவிதை ஒன்றுக்குரிய விளக்கத்தையும் கூறி நயமாகச் சாடியிருந்தது. அந்தத் தலையங்கத்தின் பிற்பகுதி பின்வருமாறு :

“மனிதர்களின் அறிவு நுண்ணியதாயிருந்த போதிலும் அவர்களில் சிலருக்கு மிருகங்களைவிடத் தடித்த தோல் இருக்கிறதாலோ என்னவோ மானம், வெட்கம், கூச்சம், ரோஷம் எதுவுமே பட்டு உறைப்பதில்லை.”

அவர்கள் இதை ‘வி ஆர் திக் ஸ்கின்ட்’ என்று பெருமையாகக் கூடக் கருதலாம். ஒரு வகையில் நாமும் அதே முடிவுக்குத் தான் வரவேண்டியுள்ளது. கவி குசேலதேவர் மேலே கூறியதுபோல் மனிதர்களில் - இந்தக் கருத்தரங்கை நடத்திய மனிதர்களில் சிலருக்கு எதுவுமே உறைக்காத அளவுக்குக் கனமான தோல் இருந்திருக்க வேண்டுமென்றே இப்போது தோன்றுகிறது நமக்கு.”

**(கல்கி, விடுமுறை மலர், 1986)**

## 166. உண்மையின் நிழல்

**செ**ல்லம்மாள் அப்போது மிகவும் மனம் குழம்பிப் போயிருந்தாள். 'மகளுக்கு வேலை கிடைக்க வேண்டுமானால் செல்வாக்குள்ள சிபாரிசு வேண்டும். செல்வாக்குள்ள சிபாரிசு வேண்டுமானால் நிலாவழகனைத் தேடித்தான் போக வேண்டும்' என்று அறிந்தபோது செல்லம்மாளுக்கு மலைப்பாகவும், அதிர்ச்சியாகவும் இருந்தது. பணம் இல்லாமல் நிலாவழகனிடம் எதுவும் நடக்காது என்று அவனைத் தெரிந்தவர்கள் சொல்கிறார்கள்.

வெறும் அப்பளம், வடாம் இட்டு, நாலு வீடுகளில் விற்றுப் பிழைப்பு நடத்தும் செல்லம்மாளால் மகளுக்கு உத்தியோகம் கிடைக்க வேண்டும் என்பதற்காக ஆயிரக்கணக்கில் லஞ்சம் கொடுப்பதென்பது கற்பனையில்கூட நினைத்துப் பார்க்க முடியாத காரியம். அத்தனை சிரமப்பட்டு மகளைப் படிக்க வைத்து ஆளாக்கியதே பெரிய காரியம். அதற்கு மேல் செல்வாக்குள்ளவர்களைப் பார்த்து, லஞ்சம் கொடுத்து வேலை தேடுவது என்பது செல்லம்மாளால் நிச்சயமாக இயலாது. நிலாவழகன் வீட்டுக்கும் செல்லம்மாள்தான் அப்பளம் கொண்டு போய்க் கொடுக்கிறாள். யாரோ சமையற்கார ஆச்சி ஒருத்திதான் அப்பளத்தைச் செல்லம்மாளிடம் வாங்கிக் கொண்டு பணம் கணக்குப் பார்த்துக் கொடுப்பது வழக்கம். நிலாவழகனை அவள் பார்க்க நேர்ந்ததே இல்லை. முன் பக்க வாசல் வழியாக அந்த வீட்டில் அவள் ஒரு நாளும் நுழைந்ததே இல்லை. பின்பக்க வாசல் வழியாகப் போய்ச் சமையற்கார ஆச்சியைப் பார்த்துவிட்டுத் திரும்புவதுதான் செல்லம்மாளின் வழக்கம். தலைவரின் வீடு என்பதால் அந்த வீட்டின் முன் பக்கத்தில் தேர்க்கூட்டம், திருவிழாக் கூட்டமாக எப்போதும் நிரம்பியிருக்கும். கார்களும், ஸ்கூட்டர்களும், சைக்கிள்களும் வாசலில் மொய்த்திருக்கும். அவளைப் போன்ற நிலையிலுள்ள ஏழைகள் நாட்கணக்கில் காத்திருந்தாலும் தலைவர் நிலாவழகனைப் பார்க்க முடியாது. தர்மதரிசனமே அங்கு கிடையாது. ஏழுமலையான் சந்நிதியில்கூடத் தர்மதரிசனம் கிடைத்து விடலாம். ஆனால், நிலாவழகன் சந்நிதியில் அது முடியவே முடியாது. மாலையோடும், ஆப்பிளோடும், கரன்ஸி நோட்டுக்களின் புத்தம் புதிய கட்டுக்களுடனும் வருகிறவர்களே மணிக்கணக்கில் காத்திருக்க வேண்டும் என்கிற நிலையில் அப்பளம் இட்டு விற்கிற செல்லம்மாள் என்கிற அநாதை விதவைக்கு உடனே எப்படி எதிர்பார்க்க முடியும்? அது நடக்கக்கூடிய காரியமே இல்லை.

அவளைப் பொறுத்தவரை மகளுக்கு வேலை கிடைக்காவிட்டால் எதிர்காலமே இருண்டு போய்விடும். வேலை கிடைப்பது குதிரைக் கொம்பாயிருந்தது. அடுத்த வேளைச் சோற்றுக்கும், அரையில் உடுக்க ஒரு கிழிசலுக்கும் திண்டாடினாலும் அவள் 'ஃபார்வட் கம்யூனிட்டி' என்ற இடையூறு வேறு. வேலை கிடைப்பதைப்

பொறுத்துத்தான் வேறு நல்ல காரியங்களும் நடக்க வேண்டும். மகளுக்குத் திருமணம் ஆவது கூட வேலை கிடைப்பதைப் பொறுத்துத்தான் சாத்தியம். வேலை கிடைக்கா-விட்டால் பையில் அப்பளக் கட்டுக்களுடன் வீடு வீடாக ஏறி இறங்கும் ஏழைச் செல்லம்மாளின் பெண்ணை யார் தேடி வந்து திருமணம் செய்து கொள்ளப் போகிறார்கள்? படித்த பெண் என்றால் தான் என்ன? அப்பளம் விற்கும் செல்லம்மாளின் பெண் என்று கேட்ட பின் எத்தனை பெற்றோர்கள் துணிந்து முன் வருவார்கள்? படிப்பும், அழகும் பணத்திற்கும், அந்தஸ்திற்கும் ஈடாகிவிட முடியுமா? ஒரு கல்யாணம் என்று வந்துவிட்டால் பையன் அழகையும், படிப்பையுமே கவனித்தால் கூடப் பெற்றோர்கள் பணத்தையும், அந்தஸ்தையும் தானே கவனிக்கிறார்கள்?

இப்படி இந்தக் கவலை பீடித்ததிலிருந்து செல்லம்மாளுக்கு இராத்தூக்கமே போய்விட்டது. ஒரு வேலையும் ஓடவில்லை. சதா காலமும் இந்த நினைப்பே பூதாகாரமாக உருவெடுத்து வாட்டியது. அவள் விசாரித்த யாருமே நிலாவழகனைப் பற்றி நல்லபிப்ராயம் சொல்லவில்லை. தாறுமாறாகச் சொன்னார்கள். பயப்படும்படியாக இருந்தது. கேட்கவே கூசியது.

மானமுள்ள, கௌரவமான பெண்கள் யாரும் அவனிடம் சிபாரிசு என்று தேடிப் போய்விட்டுக் கௌரவமாகவும், மரியாதையுடனும் திரும்ப முடியாதென்றார்கள். எதற்கும் அஞ்சாத பஞ்சமாபாதகன் என்றார்கள். எதையும் செய்யத் தயங்காத கிராதகன் என்றார்கள். கேட்கும்போதே நடுங்கினாள் செல்லம்மாள். பக்கத்து வீட்டுப் பரிமளம் வேறு ஏதேதோ சொன்னாள். காது கொடுத்துக் கேட்க முடியாத விஷயங்களாயிருந்தன. செல்லம்மாளுக்குப் பதற்றம் தான் அதிகமாயிற்று.

"இத்தனை பெரிய மனுஷன் நீ சொல்ற மாதிரிகூட இருப்பானா? பேர் கெட்டுப் போகுமேன்னு பயமா இருக்காதா? ஊர் உலகத்துக்கு அஞ்சமாட்டானா?"

"கெடறத்துக்கு இன்னும் என்ன பேரு மிச்சமிருக்கு? அடுத்த தெரு விறகுக் கடை மன்னாரு தன் மச்சினிச்சியை நர்ஸ் ட்ரெயினிங் கோர்ஸிலே சேர்க்கணும்னு கூட்டிக்கிட்டுப் போனராம்.... சிபாரிசு வேணும்னாராம். நிலாவழகன் கண்ணைச் சிமிட்டிக்கிட்டே பேசினானாம். அப்புறம், நாளை ராத்திரி எட்டரை மணிக்கு உன் மச்சினிச்சியை எல்லா சர்ட்டிபிகேட்டும் எடுத்துக்கிட்டு ஹோட்டல் ப்ளுஸ்டாருக்கு வரச் சொல்லுன்னானாம். அடக்க முடியாத ஆத்திரத்தோடப் பொறுத்துக்கிட்டு வந்த மன்னாரு மச்சினிக்கு நர்ஸ் படிப்பே வேணாம்னு விட்டுட்டாரு."

"தட்டிக் கேட்க ஆளில்லே. கை நீட்டிப் பணம் வாங்கறது போறாதுன்னு பொம்பளைங்களோட மானம், மரியாதையைக்கூட விலையாக் கேக்கறாப்பல இருக்கு."

"இந்த லட்சணத்திலே கண்ணகி கற்பு ஒசத்தியா, மாதவி கற்பு ஒசத்தியாங்கற பட்டிமன்றத்துக்குத் தலைமை வகிக்கக் கண்ணகி கற்பே ஒசத்தின்னு தீர்ப்பு வேறே..."

"என்ன செய்யலாம்? அதிகாரம் அவா கையிலே இருக்கே?"

"மஞ்சுளாவை எக் காரணத்தைக் கொண்டும் அவன் கண்ணு மின்னாடிக் கூட்டிக்கிட்டுப் போயிடாதீங்க... வேலை கெடைக்காட்டிக்கூட பரவாயில்லே...நம்ம வீட்டுப் பொண்ணு மானம், மரியாதையோட இருக்கணும்."

"போனாப் போறதுன்னு கடனை, ஒடனை வாங்கி... நூறு ரூபாய் கொடுத்துடலாம்... அதுக்கு மேலே என் நிலைமைக்கு ஏலாது."

"உங்க நூறு ரூபா அவனுக்கு ஒரு வேளைச் சாராயத்துக்குக் கூடப் பத்தாது செல்லம்மா."

"அப்பளம் வித்துப் பொழைப்பு நடத்தற நான் அதுக்கு மேலே எங்கே போறது?"

"எங்கே போவீங்களோ, என்ன பண்ணுவீங்களோ? அவங்க ரேட்டே ஆயிரத்துக்கு மேலேதான் தொடங்குவது செல்லம்மா!"

- செல்லம்மாளுக்குக் கொஞ்சம் சந்தேகமாகக்கூட இருந்தது. பரிமளம் நிலாவழகனைப் பற்றிக் கொஞ்சம் மிகைப்படுத்தியே பயமுறுத்திச் சொல்கிறாளோ என்று அபிப்பிராயப்பட்டாள் செல்லம்மாள். அதற்குக் காரணம் இருந்தது. பரிமளத்தின் அண்ணன்தான் நிலாவழகனை எதிர்த்து அந்தத் தொகுதியில் போட்டியிட்டுத் தோற்றிருந்தான். அந்தத் தோல்விக்குப் பின் பரிமளம் அடிக்கடி நிலாவழகனைப் பற்றி இப்படித்தான் தாறுமாறாக ஏதாவது சொல்லிக் கொண்டே இருப்பாள். சில நம்பும்படி இருக்கும். வேறு சில நம்பும்படியாக இராது. செல்லம்மாள் கேட்டுச் சிரித்துக் கொண்டே போவது வழக்கம். எதையும் முழுக்க நம்பி ஏற்றுக் கொள்ளவும் முடியவில்லை. ஏற்றுக் கொள்ளாமல் தள்ளிவிடவும் முடியவில்லை.

நிலாவழகன் உழைத்துச் சிரமப்பட்டு முன்னுக்கு வந்தவன். நடுத்தெருவில் காய்கறி வண்டி, பழவண்டி தள்ளி, நடைபாதை வியாபாரியாக உழைத்து முன்னுக்கு வந்தவன். ஏழை எளியவர்கள் மேல் இரக்கமுள்ளவன். 'நானும் வீடு வீடாக அலைந்து அப்பளம் விற்கிற ஏழை' - என்று எடுத்துச் சொன்னால் அவனுக்கு இரக்கம் ஏற்படாமல் போகாது என்று எங்கோ ஒரு மூலையில் செல்லம்மாளின் உள் மனத்தில் ஒரு கீற்று அளவு சிறிய நம்பிக்கை ஒளி மின்னிக் கொண்டிருந்தது. சின்ன ஒளிதான். ஆனால், அது இடையறாது மின்னி மின்னி மறைந்தது.

பரிமளம் சொல்லியது போல் நிலாவழகனின் கூட்டத்தினர் லஞ்சப் பேர்வழிகள் என்பதால் அவனையும் அப்படியே கணக்கிட முடிந்தது. அனுமானிக்கவும் ஏதுவாயிற்று. அந்தத் தலைமுறையில் அரசியலில் இருந்த பலர் அப்படித்தான் எதற்கும் துணிந்து ரேட்டுப் போட்டுப் பணம் கை நீட்டி வாங்கினார்கள். ஒழுக்கமின்றி, நாணயமின்றி - மானம், மரியாதை இன்றி நடந்து கொண்டார்கள். அதனால் யாரைப் பற்றி எப்படி அவதூறு சொன்னாலும் மக்கள் நம்பும்படிதான் இருந்தது. அவதூறு சொல்கிறவர்களும் தாராளமாகச் சொன்னார்கள். கேட்கிறவர்களும் தயங்காமல், பயப்படாமல், தாராளமாகக் கேட்டார்கள். எவ்வளவு பெரிதாகச் சொன்னாலும் நம்பும்படித்தான் இருந்தது. தன் மனத்தில் மின்மினியாக மினுக்கிக் கொண்டிருந்த சின்னஞ்சிறு நம்பிக்கை ஒளி தூண்டிவிடச் செல்லம்மாள் மறுநாளே நிலாவழகனின் வீட்டுச் சமையற்கார ஆச்சியைச் சந்தித்தாள். தன் கவலையை எடுத்துச் சொன்னாள்.

ஆச்சி அனுதாபத்தோடும், ஆதரவோடும், செல்லம்மாள் சொன்னதைக் கேட்டாள். பின்பு குரலைத் தணித்துச் செல்லம்மாள் காதருகே அந்தரங்கமாகச் சொன்னாள் : "ஒரு சூட்சுமம் இருக்கு! அதைச் சொல்றேன், கேட்டுக்க. உங்காரியம் நடந்துடும்."

"என்ன ஆச்சி?"

ஆச்சி அவளை ஜாடை காட்டித் தன்னைப் பின் தொடரும்படி சொல்லிவிட்டு நிலாவழகனின் பங்களாவுக்குள் அழைத்துச் சென்றாள்.

பூஜையறை போல் தோன்றிய ஓர் அறையின் முகப்பில் அவளை நிறுத்தினாள். பூச்சரத்தால் அலங்கரித்திருந்த ஒரு மூதாட்டியின் படத்தைச் செல்லம்மாளுக்குக் காட்டினாள் ஆச்சி. செல்லம்மாள் பார்த்தாள். ஆச்சி அவளைக் கேட்டாள்.

"இவங்க யாரு தெரியுதில்லே?"

"காய்கறி மண்டிப் பக்கத்திலே, தெருமுனையிலே ஆப்பக்கடை வச்சிருந்தாங்க..."

"ஆமாம்... நிலாவோட ஆயா... இப்ப இல்லே... செத்திரிச்சு..."

"நான் இவங்களையே நேரில் பார்த்திருக்கேன் ஆச்சி."

"நாளைக்கிக் காலையில உன் மகளையும் கூட்டிக்கிட்டு வா... நிலா குளிச்சு முடிச்சதும் ஆயா படத்துக்குப் பூப்போட்டு, ஊதுவத்தி கொளுத்தி வச்சுக் கும்புடும். அப்போ பார்த்துச் சந்திச்சு, உனக்கு அந்த ஆயாவைத் தெரியும்கிறதையும் சொல்லி, வந்த காரியத்தைக் காதிலே போட்டு. உடனே பலிக்கும் செல்லம்மா! அந்த நேரம் ராசியான நேரம்."

"அப்போ அவரைப் பார்க்க விடுவாளா ஆச்சி?"

"நீ இங்கே வந்து எங்கூடச் சமையலறையிலே அப்பளம் சப்ளை பண்ண வந்தவ மாதிரி இரு! நான் கொண்டு போய் விடறேன். கவலை வேணாம். அதெல்லாம் சரியா நடக்கும்."

"என்னமோ ஆயிரம், ரெண்டாயிரம்னு பயமுறுத்தறாளே ஆச்சி?"

"பயமுறுத்தல் என்ன? நிஜமாக்கூட இருக்கலாம். நிலா சுபாவத்திலே நல்லவன். ஏழை எளியவங்கன்னா இரங்கறவன். அவனைச் சுத்தி ஒரு கூடை செங்கல்லும் பிடாரி. பணம் புடுங்காம உள்ளே போயிப் பார்க்கவே விடமாட்டாங்க செல்லம்மா."

ஆச்சி சொன்னபடியே செய்வதாக ஒப்புக் கொண்டு திரும்பினாள் செல்லம்மாள். அவளுக்கு நம்பிக்கை வந்திருந்தது.

நகரின் கூட்டுறவுப் பால் பண்ணை ஆபீஸில் ஒரு டைப்பிஸ்ட் வேலை காலியாயிருந்தது. அந்தப் பால் பண்ணைக்கு அவன்தான் சேர்மன். அவன் ஒரு வார்த்தை சொன்னால் செல்லம்மாளின் பெண் மஞ்சுளாவிற்கு அந்த வேலை உடனே கிடைத்துவிடும்.

ஆச்சி சொன்னபடி அதிகாலையில் எழுந்திருந்து மஞ்சுளாவை வீட்டில் இருப்பதற்குள் நல்ல புடவை ஒன்றைக் கட்டிக் கொள்ளச் சொல்லி உடனழைத்துக் கொண்டு அப்பளக் கட்டு சகிதம் நிலாவழகன் வீட்டுக்குச் சென்றாள் செல்லம்மாள். பின்புறம் தோட்டத்து வழியாகச் சமையலறைக்குள் நுழைந்து காத்திருந்தாள். சமையற்கார ஆச்சி, செல்லம்மாளுக்கும் அவள் மகளுக்கும் காபி கொடுத்து உபசரித்தாள்.

எம்.எல்.ஏ. நிலாவழகன் அதிகாலையில் எழுந்து காரியங்களைக் கவனிக்கிற பழக்கமுடையவனாக இருந்தான். செல்லம்மாள் உள்ளே நுழைகிறபோதே "நிலா குளிச்சிக்கிட்டிருக்கு" என்றாள் ஆச்சி.

"காபி எல்லாம் எனக்கும், மத்தவங்களுக்கும்தான். நிலா கேழ்வரகுக் கூழ்தான் காலையில் குடிக்கும்" என்று ஆச்சி செல்லம்மாளுக்குக் காபி கொடுக்கும் போது சொன்னாள். 'அசல் சைவச் சாப்பாடு - பீடி, சிகரெட் தொட்டுக்கூடப் பார்க்கமாட்டான். மதுப் பழக்கமோ, மது அருந்துகிறவர்களின் பழக்கமோ அறவே ஆகாது. கிடையாது. வெளியே விளம்பரம் செய்யாத பக்தியும், இளகிய மனமும் உண்டு" என்று நிலாவழகனைப் பற்றிச் சமையற்கார ஆச்சி மேலும் கூறிய தகவல்கள் பரிமளம் பரப்பியிருந்த உண்மைகளோடு மாறுபட்டவையாயிருந்தன. ஆனால், ஆச்சி கூறியதுதான் நிஜமாயிருக்கும் போலிருந்தது. குளித்த ஈர வேஷ்டியோடும், இடுப்பில் கட்டிய துண்டோடும், நெற்றியில் விபூதி, குங்குமத்தோடும் முதலில் விநாயகர், முருகன் படத்துக்கும் பிறகு தாயின் படத்துக்கும் பூப்போட்டு, ஊதுவத்தி கொளுத்தி வைத்துக் கும்பிட்டான் அவன். வெளியே அவனை ஒரு நாள், ஒரு விநாடிகூட இப்படி நெற்றியில் திருநீற்றுடன் செல்லம்மாள் பார்த்ததே இல்லை.

ஆச்சி இவர்களை அவன் முன் அழைத்துச் சென்றாள். அவன் தாயின் படத்தைக் கண்களை மூடித் தியானத்தோடு வணங்கி விட்டுத் தலை நிமிர்ந்து எதிரே பார்த்ததும், "இவங்க நம்ம வீட்டுக்கு அப்பளம் குடுக்கிறவங்க... உங்க ஆயாவைத் தெரியும்... தானே உழைச்சுக் கஷ்டப்பட்டு மகளைப் படிக்க வச்சிருக்காங்க... ஏதோ பால் பண்ணை ஆபீஸ்ல ஒரு டைப்பிஸ்ட் வேலை இருக்காம்... தம்பி ஒரு வார்த்தை சொன்னா அது கெடைச்சிடும்கிறாங்க" - என்று சமையற்கார ஆச்சியே அறிமுகம் செய்துவிட்டாள். செல்லம்மாளும், மஞ்சுளாவும் அவனைக் கைகூப்பி வணங்கினார்கள். அவன் கடுகடுக்கவில்லை, மாறாக முகமலர்ந்தான்.

"ஆயவை உங்களுக்கு நல்லாத் தெரியுமா?"

"தெரியுங்க... நான் உழைச்சு முன்னுக்கு வரணும்னு மறைமுகமாகக் கத்துண்டதே அவங்களைப் பார்த்துத்தான். அவங்க காய்கறி மண்டி முக்குலே..."

அவன் இடைமறித்துக் குறுக்கிட்டான்.

"ஒரு நிமிஷம் இருங்கம்மா, லெட்டர் தரேன். பால் பண்ணை ஆபிஸ் மானேஜரைப் பார்த்து சேர்மன் குடுத்தார்னு குடுங்க... உடனே ஆர்டர் குடுத்துடுவாங்க."

இதைச் சொல்லி விட்டுச் செல்லம்மாளையும், மகளையும் ஏறிட்டுப் பார்த்தான் நிலவழகன். ஆச்சி அவர்கள் இருவரையும் சைகை மூலமே கூப்பிட்டு சமையலறையில் மறுபடி உட்கார வைத்தாள்.

பத்து நிமிஷம் கழித்து ஆச்சி மறுபடியும் இவர்களைச் சமையலறையிலிருந்து கிளப்பி உட்புறம் அழைத்துச் சென்றபோது நிலாவழகன் கையில் ஒரு தாம்பாளத்தில் வெற்றிலை பாக்கு, பழம், பூ, ஒரு ரவிக்கைத்துண்டு, இரண்டு மஞ்சள் கிழங்கு எல்லாம் வைத்து ஏந்தியபடி நின்றிருந்தான். அதில் ஒரு கவரும் இருந்தது.

“இன்னைக்கி வெள்ளிக்கிழமை... எங்க ஆயா இருக்கிறவரை வெள்ளி தவறாமே யாராச்சும் ஒரு கன்னிப்பொண்ணுக்கு ஒரு ரூவா பணமும், பூவும் வெச்சுக் குடுக்கும். ஆயா பேரைச் சொல்லிக்கிட்டுக் காலங்காத்தாலே வந்திருக்கீங்க. உங்களை வெறுங்கையோட அனுப்புறது நல்லா இருக்காது... தங்கச்சியை வாங்கிக்கச் சொல்லுங்க...”

“கும்புட்டுட்டு வாங்கிக்கம்மா” என்று ஆச்சி மஞ்சுளாவின் காதருகே முணுமுணுத்தாள். தாம்பாளத்தில் சிபாரிசுக் கடிதத்தோடு, ஒரு நூறு ரூபாய் நோட்டும், ஒரு முழு ரூபாய் நாணயமுமாக நூற்றியொரு ரூபாய் வேறு இருப்பதைக் கண்டு பதறிய செல்லம்மாள் “இதெல்லாம் எதுக்குங்க? வேலை கிடைக்கிறதே ஒங்க ஆசீர்வாதம்தானே?” என்று தயங்கினாள்.

“இருக்கட்டும்மா, தங்கச்சிக்கி நல்ல சேலையா ஒண்ணு எடுத்துக் குடுத்து வேலைக்கு அழைச்சிட்டுப் போங்க...”

ஆச்சி மறுக்காமல் அப்படியே தட்டை வாங்கிக் கொள்ளச் சொல்லி ஜாடை காட்டினாள். செல்லம்மாள், மஞ்சுளா இருவரும் அப்படியே செய்தனர்.

இருவரும் பலகாரம் சாப்பிட்டுவிட்டுத்தான் போக வேண்டும் என்று ஆச்சி பிடிவாதம் பிடிக்கவே மேலும் கால் மணி நேரம் ஆயிற்று,

அங்கிருந்து வெளியேறும்போது தற்செயலாக வீட்டு முகப்பிலே பார்த்தால் அங்கே நெற்றியில் விபூதி, குங்குமம் இல்லாமல் இடுப்பிலும், தோளிலும் பட்டை பட்டையாகக் கட்சிக் கரையிட்ட ஆடைகளோடும், முகத்தில் கடுகடுப்போடும் நிலாவழகன் யாரைப் பற்றியோ எதிரே இருந்தவர்களிடம் இரைந்து கொண்டிருந்தான்:

“அப்பிடியா சொல்றான் அவன்? இன்னா தெனாவட்டு இருந்தா அவன் அப்பிடிப் பேசணும்...? புக் பண்ணி ஆளை உள்ளத் தள்ளினால்தான் புத்தி வரும்பா அவனுக்கு!”

- செல்லம்மாளுக்கு ஆச்சரியமாயிருந்தது. இந்த இரண்டு தோற்றங்களில் எது அசல், எது நிழல் என்பதைப் புரிந்துகொள்வது சிரமம்தான். அதிர்ஷ்டவசமாக நிழலைத் துரத்துகிற அனுபவமோ, கசப்போ தனக்கு ஏற்படாமல் ஆச்சி தன்னைக் காப்பாற்றியிருக்கிறாள் என்றே செல்லம்மாள் எண்ணினாள்.

**(கலைமகள், தீபாவளி மலர், 1986)**

## 167. தொண்டு நிலைமையைத் 'தூ' எனத் தள்ளி

"'**வெ**ட்ட வெளியே உலகம் என்றிருப்பார்க்குப் பட்டயம் ஏதுக்கடீ குதம்பாய்?'- என்று தாயுமானவர் சொன்ன மாதிரி." - குப்புசாமி காரில் உடன் வந்து கொண்டிருந்தவரிடம் ஏதோ கூறியபோது டிரைவர் குறுக்கிட்டுத் திருத்தினான்.

"அது தாயுமானவர் பாட்டு இல்லீங்க... சித்தர் பாடல் - குதம்பைச் சித்தர் எழுதினது."

"நீ வண்டியைப் பார்த்து ஓட்டுப்பா..." குப்புசாமி அவனைக் கோபித்துக் கடிந்து கொண்டார். அதில் இரட்டைக் கோபமும், இரண்டு மடங்கு கடிந்து கொள்ளுதலும் இருந்தன. மாதச் சம்பளத்துக்கு வேலை பார்க்கும் ஒரு காரோட்டி உள்ளே அமர்ந்திருப்பவர்களின் பேச்சில் கவனம் செலுத்திக் கலந்து கொள்ளக்கூடாது என்ற கண்டிப்பும், தனக்குச் சம்பளம் கொடுக்கிற முதலாளியின் தவறுகளைத் திருத்தத் தொழிலாளிக்கு உரிமையில்லை என்ற இன்னொரு கண்டிப்பும் பிரிக்க முடியாமல் இணைந்திருந்தன. அந்தக் குரலில் கண்டிப்பைவிடக் கோபமே அதிகம் இருந்தது.

கண்ணப்பன் தமிழ்ப் புலவருக்குப் படித்துவிட்டு அந்தப் படிப்புக்கான வேலை கிடைக்காமல் எப்போதோ பொழுது போக்காகக் கற்றுக் கொண்ட 'கார் டிரைவிங்' - ஒரு வேலையைத் தேடித் தர, அதை ஏற்றுச் செயலாற்றி வந்தான். 'புலவருக்குப் படித்தேன், வேலை கிடைக்கவில்லை. ஓட்டுனராக வந்தேன்' - என்று அவன் யாரிடமும் சொல்லிக் கொள்வதில்லை. வேலைக்கு முயன்றபோது இரண்டொரு நபர்களிடத்தில் அப்படிச் சொல்லி அதனால் கிடைக்க இருந்த வேலை கிடைக்காமல் போய்விட்டது. 'படித்தவன் உடம்பு வணங்கி ஓடியாடி வேலை செய்யமாட்டான்' என்ற அபிப்பிராயம் இருந்ததுதான் காரணம். இதிலிருந்து அவன் தெரிந்து கொண்ட உண்மை புலவருக்குப் படித்திருப்பதைச் சொன்னால் கிடைக்கிற டிரைவர் வேலைகூடக் கிடைக்காமற் போய்விடும் என்பதுதான். ஆகவே, அதை யாரிடமும் கூறுவதைத் தவிர்த்தான்.

சென்னையில் கால் ஊன்றிக் கொள்ள வேண்டுமானால் ஒரு வேலை வேண்டும். வதவதவென்று எம்.ஏ.க்களும், பி.எச்.டி.களும் மலிந்து கிடக்கிற ஊரில் வெறும் புலவர் பட்டத்தை மட்டும் வைத்துக் கொண்டு வேலைக்கு அலைவதில் பல சிரமங்கள் இருந்தன. படித்துப் பட்டம் பெற்றுவிட்டு டிரைவர் வேலையா பார்ப்பது என்று கண்ணப்பன் ஆரம்பத்தில் கூசிக் குறுகினாலும் மீன மேஷம் பார்க்காமல் கிடைத்த வேலையைத் துணிந்து ஒப்புக்கொண்டான். பெரும்பாலும் மாலை நேரங்களில் - இரவில் தெரிந்த இலக்கிய நண்பர்கள் மூலம் பட்டிமன்றம் கவியரங்கங்களுக்கு ஒப்புக்

கொண்டான் கண்ணப்பன். பகலில் டிரைவர் வேலை காரணமாக இழக்க நேர்ந்த பெருமிதத்தை இரவில் கிடைத்த கைதட்டல்களும், பாராட்டுக்களும், புகழாரங்களும் மீட்டுக் கொடுத்தன. ஓரளவு 'காம்பன்ஸேட்' செய்தன.

'ஸ்வஸ்திக் ஸ்டீல் புராடக்ட்ஸ் பிரைவேட் லிமிடெட்' - தொழிற்சாலை எண்ணூருக்கும் திருவொற்றியூருக்கும் இடையே இருந்தது. அதன் உரிமையாளர் குப்புசாமிக்கு இராயப்பேட்டை பாலாஜி நகரில் வீடு. கண்ணப்பன் காலை எட்டு மணிக்கு வர வேண்டும், மாலை ஐந்து அல்லது ஆறு மணிக்குப் போய்விடலாம். ஐநூறு ரூபாய் சம்பளம். தினசரி பேட்டா பத்து ரூபாய். காலை எட்டு மணிக்கு முன்னாலோ மாலை ஐந்துமணிக்குப் பின்போ வேலை செய்ய வேண்டியிருந்தால் இன்னொரு பத்து ரூபாய் அதிகம் கிடைக்கும். தொழில் ரீதியாகக் குப்புசாமிக்குப் பல வெளியூர் இரும்பு வியாபாரிகளும், தொழிலதிபர்களும் பழக்கம். அவர்கள் விருந்தினர்களாகச் சென்னை வரவும் போகவுமாக இருப்பார்கள். அப்போதெல்லாம் அவர்களை விமான நிலையத்திலோ, இரயில் நிலையத்திலோ சென்று அழைத்து வரவும், கொண்டு போய்விடவும் வேண்டியிருக்கும். அவர்களில் சிலர் ஐந்து, பத்து அதிகமாகப் போனால் பதினைந்து, இருபது என்று இனாம் கொடுப்பார்கள். முதலில் இப்படி இனாம்களை வாங்கத் தயங்கவும், கூசவும் செய்தான் கண்ணப்பன். ஆனால், நாளாக நாளாக அந்தத் தயக்கமும், கூச்சமும் அவனிடமிருந்து கழன்று போயின. கோடிக்கணக்கில் வரவு செலவு செய்யும் அவர்களுக்கு இது ஒரு கொசுக்கடி மாதிரி. தான் வாங்காததால் அவர்களுக்கும் லாபமில்லை, தனக்கும் லாபமில்லை என்பது புரிந்தது. வாங்கிக் கொள்ளலானான். டிரைவர் என்ற முறையில் இப்படியும் அப்படியுமாகச் சராசரி மாதம் ஆயிரம் ரூபாய் கிடைத்தது கண்ணப்பனுக்கு. ஸ்டீல் கம்பெனி டிரைவர் என்று நியமனமாகி இருந்ததால் வருஷத்துக்கு இரண்டு போனஸ் வேறு வந்தது. 'ஸ்வஸ்திக் ஸ்டீல்ஸ் - டிரைவர்' என்று எம்பிராய்டரி செய்த மூன்று செட் யூனிஃபாரம் வேறு தந்தார்கள். ஊருக்குச் சுளையாக ஐநூறு ரூபாய் அனுப்ப முடிந்தது. அவனது செலவுகளுக்கும் தாராளமாக இருந்தது.

ஆனாலும் கண்ணப்பனுக்கு அந்த வேலையின் மேல் மனத்தாங்கல்களும், கோபங்களும், ஆற்றாமைகளும் இருந்தன. வேலையைப் பற்றி வெளிப்படையாகத் தன்னை 'டிரைவர்' என்று சொல்லிக் கொள்ளத் தயங்கினான் அவன்.

ஒவ்வொரு நாளும் காலையில் தினசரி முதல் வேலை, முதலாளியின் இரண்டாவது மகள் பிரியதர்சினி என்ற பிரியாவைக் கல்லூரியில் கொண்டு போய்விட வேண்டும். மரியாதை பிரச்சனை அங்கேதான் ஆரம்பமாகியது. சொன்னால் எங்கே வேலைக்குச் சேர்த்துக் கொள்ளமாட்டார்களோ என்று புலவர் படிப்பு, பட்டிமன்றம், கவியரங்கம் இவற்றை எல்லாம் அவர்களிடம் சொல்லவில்லை அவன். சொல்லாததால் எல்லா டிரைவரையும் போல அவனையும் ஒரு டிரைவராகவே நடத்தினார்கள் அவர்கள்.

"டிரைவர் காரை எடு! காலேஜுக்கு நேரமாச்சு" - என்று அவன் வேலைக்குச் சேர்ந்த முதல் நாள் முதல் குரலாகப் பிரியாவின் குரல்தான் அவனுக்குக் கட்டளை இட்டது. 'டிரைவர்' என்ற அதட்டலான - அதிகார தோரணையிலான அந்த இளம்

பெண் குரல் அவனுள் எரிச்சலூட்டியது. ஓர் உறுத்தலான தன்மான உணர்வு தூண்டிவிட உடனே, "என் பெயர் கண்ணப்பன் அம்மா!" என்று மிகவும் சாதுரியமாகத் தன்னை டிரைவர் என அவள் விளிப்பது தனக்கு விருப்பமில்லாததைப் புலப்படுத்தியும் பார்த்தாயிற்று. அவள் அதை எல்லாம் புரிந்து கொண்டதாகவே தெரியவில்லை. மறுபடியும் 'டிரைவர்' என்றுதான் கூப்பிட்டாள். சில வேளைகளில் அது, 'ஏய்! டிரைவர்' என்று கூட மாறிற்று.

அங்கே வேலைக்குச் சேர்ந்த இரண்டாம் நாளோ, மூன்றாம் நாளோ குப்புசாமியிடம், "பிரியாவைக் காலேஜிலே கொண்டு போய் விட்டு விட்டு வரேங்க" என்றும், "பிரியா அஞ்சு மணிக்கு யாரோ சிநேகிதி வீட்டுக்குப் போகக் கார் வேணும்னு சொல்லிச்சு" என்றும் இரண்டொரு முறை பேசியிருந்தான் கண்ணப்பன். அடுத்த நாள் காலையில் அவன் வேலைக்கு வந்ததுமே, "நீ வந்ததும் ஐயா உடனே பார்க்கச் சொன்னாரு" என்று பங்களா வாட்ச்மேன் கண்ணப்பனிடம் கூறினான்.

அவன் உடனே முதலாளி குப்புசாமியைப் பார்க்க உள்ளே சென்றான். அவர் முன் ஹாலில் ஊஞ்சலில் உட்கார்ந்து காலைத் தினசரியில் மூழ்கியிருந்தார். அருகே இருந்த சோபாவில் திருமதி. குப்புசாமி தமிழ்ப் பேப்பரைப் பார்த்துக்கொண்டிருந்தாள். அவள்தான் அவன் உள்ளே நுழைந்ததை முதலில் பார்த்தாள். என்ன காரணத்தாலே அவனைப் பார்த்ததும் அவள் முகமே மேலும் கடுமையானாற் போல் இருந்தது. குப்புசாமி பேப்பர் படித்து முடிக்கிறவரை அவன் கால் கடுக்க நிற்க வேண்டியிருந்தது.

துணிந்து ஒரு தடவை "சார்...!" என்று அவன் கூப்பிட்டும் அவர் பேப்பரிலிருந்து கவனத்தைக் கலைக்காமலே "கொஞ்சம் இரு... வரேன்" என்றார். இனி அவன் போகவும் முடியாது. உட்காரவும் கூடாது. நின்றே ஆக வேண்டும். நின்றான். எரிச்சலோடு நின்றான். கால் கடுக்க நின்றான்.

கால் மணி கழித்து அவர் பேப்பரை மடித்து வைத்துவிட்டு அவன் பக்கமாகத் திரும்பினார். "உன்னை வேண்டுமென்றுதான் காத்து நிற்கச் செய்தேன்" என்று கடுப்பைக் காட்டியது அவர் பார்வை.

"நீ என்னவோ உன் வீட்டு வேலைக்காரியைக் கூப்பிடற மாதிரிப் 'பிரியா வந்தா போனா'ன்னு பேர் சொல்லிப் பேசறியாம். பிரியா என் மகள். அதாவது உன் பாஸோடே பொண்ணு. இனிமே மரியாதையா லட்சணமா, 'சின்னம்மா காலேஜ் போகணும்', 'சின்னம்மாவுக்கு வண்டி வேணுமாம்'னெல்லாம் சொல்லணுமே ஒழியப் பேரைச் சொல்லி நீ பேசக்கூடாது, புரிஞ்சுக்கோ! உனக்கு வயசும் அனுபவமும் பத்தாது. இளம் பிராயம், இந்த வேலையிலே எல்லாம் மரியாதைதான் முக்கியம்ப்பா"- என்றார் குப்புசாமி.

அவன் இதை எதிர்பார்க்கவில்லை. திகைத்துப் போய் நின்றான். அதிர்ச்சியாகவுமிருந்தது.

"என்னப்பாது...? நான் கேட்கிறேன்... பதில் பேசாமல் கல்லுளி மங்கன் மாதிரி நிற்கிறே?"

எந்தப் படிப்பறிவும் இல்லாத ஒரு சாதாரணக் கார் டிரைவராயிருந்தால், ‘சரிங்க... இனிமே அப்படியே செய்யறேன்’ என்று அவனும் இசைந்திருப்பான். புலவருக்குப் படித்து ஒருமை, பன்மை, மரியாதை எல்லாம் தெரிந்தவனாக இருந்த காரணத்தால் அவர் கூறியதை அப்படியே ஏற்றுப் பணிந்துவிடாமல் கருத்து வேறுபடும் உரிமை தனக்கு இருப்பதை உணர்ந்தான் கண்ணப்பன். மெல்ல விவாதிக்கத் தொடங்கினான்.

“பேர் சொல்றதினாலே மரியாதை இல்லைன்னு ஆயுடாதுங்க. இராமன், கிருஷ்ணன்னு கடவுளைக் கூடப் பேர் சொல்லிதான் வணங்கறோம். காந்தி, நேருன்னு பெரிய பெரிய தலைவருங்களைக் கூடப் பேர் சொல்லித்தான் குறிப்பிடறோம்.”

“இந்தாப்பா நிறுத்திக்க! உன் அதிகப்பிரசங்கம்லாம் வேணாம். பேர் சொல்லப்படாதுன்னாக் கேட்டுக்க. விளக்கம்லாம் தேவையில்லை. பிடிக்காட்டி இப்பவே வேலையை விட்டு நின்னுக்க.”

இதைக் கூறும்போது அவர் குரல் மிகவும் கறாராகவும் கடுமையாகவும் இருந்தது. அவன் பதில் சொல்லாமல் வேலையைக் கவனிக்கச் சென்றான். ஆனால், மனதுக்குள் அந்த வேலைக்குப் பதில் வேறு ஏதாவது வேலை தேடிக் கொண்டு சொல்லாமலே விட்டு விலகி விடுவது என்று தீர்மானம் செய்து கொண்டான் கண்ணப்பன். தன்னை அவர்கள் மரியாதை இன்றி ‘ஏய் டிரைவர்’ என்று கூப்பிடுவதைத் தான் பொறுத்துக் கொள்ள வேண்டுமாம். தான் அவர்களைப் பேர் சொல்லிக் கூப்பிடுவது மட்டும் மரியாதைக் குறைவாம். இது அவனது புலமைக்கும், சுய மரியாதைக்கும் ஒரு சவாலாக இருந்தது. பல பட்டிமன்றங்களில் அவன் ஆவேசமாகவும், உணர்ச்சி மயமாகவும் முழங்கும் ஒரு பாட்டு,

**‘புல்லடிமைத் தொழில் பேணிப் பண்டு**
**போயின நாட்களுக்கு இனி மனம் நாணித்**
**தொல்லை இகழ்ச்சிகள் தீர – இந்தத்**
**தொண்டு நிலைமையைத் ‘தூ’ என்று தள்ளி’**

என்ற பாரதியார் பாட்டுத்தான். அவமானகரமான இந்தத் தொண்டு நிலைமையைத் ‘தூ’ என்று தள்ளிவிட வேண்டும் என்று இப்போது அவனுக்குத் தோன்றியது. சொல்லாமல் கொள்ளாமல் திடுதிப்பென்று வேலைக்குப் போகாமல் அவர்களைக் கழுத்தறுத்துவிட வேண்டும் என்று எண்ணினான் அவன். ‘நாளையிலிருந்து வர மாட்டேன்’ என்று சொல்லிவிட்டு நின்றால் அவர்கள் வேறு ஆள் ஏற்பாடு செய்து கொள்ள முடியும். அப்படி முடியாமல் டிரைவருக்கு நிறைய வேலைகள் உள்ள ஒரு தினத்தில் திடுதிப்பென்று போகாமல் இருந்துவிட நினைத்தான் கண்ணப்பன்.

அன்றைக்கு மறுநாளேகூட அப்படி நிறைய வேலைகள் இருந்தன. கண்ணப்பனின் அதிர்ஷ்டமோ அல்லது நல்ல வேளையோ அன்று மாலையே தற்செயலாக ஒரு வாய்ப்பு வந்தது. ஓரிடத்தில் வேலை இருப்பதாகக் கேள்விப்பட்டான் அவன்.

மாம்பலத்தில் அடகுக்கடை வைத்திருந்த ஒரு மார்வாரியிடம் டிரைவர் வேலை இருப்பதாகத் தெரிய வந்து விசாரிக்கச் சென்றான். அவன் போனபோது கடையில் மார்வாரியின் மகன்தான் இருந்தான். பெரிய சேட் இல்லை.

"டிரைவர் நம்பள்கி வேணாம், நம்ப ஃபாதர் ஸிக் ஆசாமி. அவருக்குத்தான் வேணும். டெய்லி காலம்பரவும், சாயங்காலமும் பீச்ல நடக்கணும். அதனாலே பீச்சுக்கும் காரிலே போகணும், டாக்டர் வீட்டுக்கு வாரத்துல ஒரு தரமும், வெள்ளிக் கிழமை கோயிலுக்கும் போகணும். வேற வேலை கிடையாது" என்றான் மார்வாரியின் மகன். நிறைய நேரம் மிஞ்சும் போலிருந்தது. படிக்கலாம், எழுதலாம், பட்டிமன்றம், கவியரங்கங்களுக்குப் போகலாம். சம்பளத்தைப் பற்றி விசாரித்தபோது "ஐநூறு ரூபாய்க்கு மேல் ஒரு பைசாக்கூடத் தர முடியாது" என்றான் மார்வாரியின் மகன்.

"உனக்கு வேலையே இல்லை. காலம்பர ஃபாதரோட பீச் வாக்கிங்குக்காக ஓட்டிட்டுப் போனப்புறம் வீட்டில கொண்டாந்து வுட்டியானா மறுபடி நீ ஈவினிங் ஃபைவ் தர்ட்டிக்கி வந்தாப் போறும். மழை நாளுங்கள்ளே அதுகூட இருக்காது" என்றான் சேட்டின் பிள்ளை.

"மாதம் அறுநூறாவது இல்லாட்டி மெட்ராஸ்ல எப்பிடிக் காலந்தள்ள முடியும்? இப்ப நான் இருக்கிற எடத்துல கிட்டத்தட்ட ஆயிரத்துக்கு மேலே வருது" என்று வாதிட்டான் கண்ணப்பன்.

"கம்பெனிகளிலே எவ்வளவு வேணும்னாத் தரலாம்! நம்பளைப் போலப் பாக்கெட்டுல இருந்து குடுக்கிறவங்களுக்கு கட்டாதுப்பா!"

"ஐந்நூத்தி அம்பதாவது இல்லாட்டி எனக்குக் கட்டாது சேட்."

"எதுக்கும் நீ நம்ப ஃபாதரைப் போய்ப் பாரு. அவருக்குப் பிடிச்சா எனக்குச் சம்மதம்..."

"அவரை எங்க பார்க்கிறது?" பகவந்தம் குப்தா தெருவில் வீட்டு விலாசத்தை எழுதிக் கொடுத்தான் சேட்.

கண்ணப்பன் அந்த விலாசத்தை வாங்கிக் கொண்டு போய்ப் பார்த்தான். பெரிய சேட்டுக்கு 60 வயதுக்கு மேல் இருக்கும். நோயாளியாகத் தோன்றினார்.

"எங்கிட்ட வேலை கொறைவு, அம்பது ரூப்யாகூடக் குடுக்கிறது பெரிய விஷயம் இல்லே. நம்பள்கி சம்மதம். ஆனா மனசுக்குப் பிடிச்ச மாதிரி நீ நடந்துக்கணும். பெட்ரோல் விற்கிற விலையில காரை வெளியே எடுக்க முடியிறதே இல்லே. கார் ஓட்டாதபோது மத்த வேலைகளைச் செய்யணும்" என்றார் பெரிய சேட்.

எப்படியாவது ஸ்வஸ்திக் ஸ்டீல் அதிபர் குப்புசாமியையும் அவரது மகள் பிரியாவையும் பழி வாங்கிவிட்டால் போதும் என்றிருந்தது அவனுக்கு. ஒரு சம வயதுக்கும் குறைவான இளம் பெண்ணைச் செயற்கையான மரியாதையுடன் 'சின்னம்மா' என்றழைக்க வேண்டிய அவசியம் இனி இல்லை. மறுநாள் காலை ஸ்வஸ்திக் ஸ்டீல்ஸின் விருந்தினராகப் பெங்களூர் ஃப்ளைட்டில் வர இருக்கிற ஒரு வியாபாரியைக் காலை ஏழரை மணிக்கே மீனம்பாக்கம் போய் அழைத்து வர வேண்டும். அவன் மறுநாள் போகவே போவதில்லை. திண்டாடட்டும். அப்பொழுது தான் புத்தி வரும் அவர்களுக்கு.

காலையில் வேலைக்கு வருவதாகச் சேட்டிடம் சொல்லிவிட்டுப் புறப்பட்டான் அவன்.

"கண்ணப்பன்! நிம்பள் பேரு நம்பள்கி ரொம்பப் பிடிச்சிருக்கு" என்றார் பெரிய சேட். அவர் 'டிரைவர்' என்று தன்னைக் கூப்பிடாமல் பெயரைச் சொல்லியே 'கண்ணப்பன்' என்று கூப்பிட்டது அவனுக்கு மிகவும் பிடித்திருந்தது.

'ஸ்வஸ்திக் ஸ்டீல்ஸ் அதிபர் வீட்டில் அவமானப்படுத்திய மாதிரி இனி அவனை இங்கே யாரும் 'ஏய் டிரைவர்' என்று கூப்பிடமாட்டார்கள். சம்பளம் குறைவுதான். அதனால் பரவாயில்லை. நிறைய நேரம் மீதமிருக்கிறது. முடிந்தால் மாலைக் கல்லூரிகளில் அல்லது கரஸ்பாண்டென்ஸ் கோர்ஸில் சேர்ந்து எம்.ஏ. படிக்கலாம். எம்.ஏ. முடித்துவிட்டால் வேலை நிச்சயம் கிடைக்கும். அப்புறம் டிரைவர் வேலை பார்க்க வேண்டிய அவசியமில்லை என்று எண்ணினான் கண்ணப்பன். எல்லாம் நினைக்கச் சுகமாயிருந்தது.

உடம்பிலேயே டிரைவர் என்றும் அடிமை என்றும் போர்டு எழுதித் தொங்க விட்டுக் கொண்ட மாதிரி 'ஸ்வஸ்திக் ஸ்டீல்ஸ்' என்று காக்கி உடுப்பில் தோள் பட்டையில் எம்பிராய்டரி செய்த யூனிஃபாரத்தை நாளை முதல் அவன் சுமக்க வேண்டியதில்லை. அந்தக் காக்கி உடையில் 'டிரைவர்' என்று வேறு சிவப்பு நூலில் எழுத்துக்கள் இருந்தன.

அவனை மிக மிகக் கூசச் செய்த விஷயம் இதுதான். மாலை சீக்கிரமே வேலை முடிந்து அவன் பட்டிமன்றம், கவியரங்கம் எதற்காவது போக வேண்டுமானாலும் அந்தக் காக்கி உடைகளை மாற்றாமல் போக முடியாது. காக்கி உடைகளைத் தவிர்த்து அவன் இஷ்டம் போல் உடுத்திக் கொள்ள முயன்றதைக் குப்புசாமி தடுத்தார். இனிமேல் சேட்டிடம் அந்த அவஸ்தை எல்லாம் கிடையாது. டீ ஷர்ட், ஸ்போர்ட்ஸ் பனியன், வேஷ்டி ஜிப்பா என்று அவன் எதை அணிந்தாலும் அவர் மறுக்கமாட்டார். சுதந்திர மாயிருக்கலாம்; சுதந்திரமாகப் பழகலாம். மாலை 5 மணிக்கு மேல் கடற்கரையிலிருந்து திரும்பியதும் எங்கு வேண்டுமானாலும் போகலாம். அவன் ஸ்வஸ்திக் ஸ்டீல்ஸி லிருந்து விலகிச் சேட்டிடம் வேலைக்குச் சேர்ந்த பின் நிறைய இலக்கியக் கூட்டங் களுக்குப் பேசப் போக முடிந்தது. நிறையப் பட்டிமன்றங்களில் பேசவும், கவியரங்கங் களில் பாடவும் முடிந்தது. கை தட்டலும் கொஞ்சம் பணமும்கூடக் கிடைத்தன.

'அடிமைத்தனங்களில் மிக மிக மோசமானது கருத்தடிமைப் படுதலா, செயலடிமைப் படுதலா?' - என்ற தலைப்பிலான ஒரு பட்டிமன்றத்தில் செயலடிமைப் படுதலே மோசமானது என்னும் கட்சித் தலைமையை ஏற்று அவன் விவாதிக்கும் போது,

**'தொல்லை இகழ்ச்சிகள் தீர - இந்தத்**
**தொண்டு நிலைமையைத் தூ என்று தள்ளி'**

என்று பாரதி பாட்டை மேற்கோள் கூறுகையில் 'தூ' என்னும் சமயத்தில் மேடைக்கருகே உணர்ச்சிவசப்பட்டுக் காறித் துப்பியே விட்டான். ஸ்வஸ்திக் ஸ்டீல்ஸ் அதிபரை நினைத்துத்தான் காறித் துப்பினான். கூட்டம் கரகோஷம் செய்து ஆர்ப்பரித்தது. விவாத முடிவில் அவன் கட்சி வெற்றியும் பெற்றது. அவன் தமிழ்ப் புலவர் என்பதாலோ, பட்டிமன்றம் பேசப் போகிறான் என்பதாலோ சேட் ஒரு சிறிதும் பாதிக்கப்பட்டதாகத் தெரியவில்லை. இதெல்லாம் அவனுக்குப் பிடித்திருந்தது.

புது இடத்தில் வேலையே இல்லை. போன ஒரு வாரத்திற்கப்புறம் ஒருநாள் சேட் அவனைக் கூப்பிட்டு, "என்னை உன் அப்பா மாதிரி நினைத்துக் கொள். தப்பாக நினைக்காதே! எனக்கு வாத சரீரம். ஒரு வருஷம் இந்த எண்ணெயை அழுத்தித் தேய்த்து மாலீஷ் போட்டு ஒரு மணி நேரம் ஊறிய பின் குளிக்க வேண்டும் என்று கோட்டக்கல் வைத்தியர் கூறியிருக்கிறார். நீ தான் சிரமம் பார்க்காமல் சூடு பறக்க அழுத்தித் தேய்த்துவிட வேண்டும்" என்று ஒரு பாட்டில் 'வாத வேங்கைத்' தைலத்தை அவனிடம் நீட்டிவிட்டு உடம்பில் துண்டுடன் முன் குறுணி அரிசிப் பிள்ளையார் மாதிரி மணைப் பலகையைப் போட்டு உட்கார்ந்துவிட்டார். அவர் என்ன சொல்கிறார் எனப் புரிந்ததும் அவனுக்கு அதிர்ச்சி. கோபத்தோடு கண்ணப்பன் தயங்கினான். மாட்டே னென்று மறுத்து விடலாமா என எண்ணினான். இந்த வேலையையும் விட்டுவிட்டால் சோற்றுக்குத் திண்டாட வேண்டுமே என்று பயமாகவும் இருந்தது. சொல்லாமல் கொள்ளாமல் திடுதிப்பென்று நின்று விட்டதால் பழைய ஸ்வஸ்திக் ஸ்டீல்ஸிலும் இனி முகத்தைக் காட்ட முடியாது. வேறு வழியின்றித் தொந்திக் கணபதியாகத் திறந்த மேனியோடு உட்கார்ந்துவிட்ட சேட்டுக்கு எண்ணெய் தேய்த்து மசாஜ் செய்தான்.

அந்த வயதிலும் மேட்லி ரோட்டில் சேட் ஒரு 'சின்ன வீடு' வைத்திருந்தார். எப்போதாவது சேட்டோடு அங்கே போனால் அவள் ஹோட்டலுக்குக் காபி, டிபன் வாங்கி வா, பட்டுப் புடவையை இஸ்திரி போட்டு வாங்கி வா என்று வேலை ஏவினாள். கஷ்டமாயிருந்தது. கர்மமே என்று தலையிலடித்துக் கொண்டு எல்லாம் செய்துத் தொலைக்க வேண்டியிருந்தது.

'கண்ணப்பா! நீ என் பிள்ளை மாதிரி' - என்று பிரியமாக அழைத்தே அவனைக் கொன்றார் சேட். 'உன் பிள்ளைகூட இதெல்லாம் செய்யமாட்டான்' - என்று மனசுக்குள் கறுவிக் கொள்வான் கண்ணப்பன். இதற்குப் பழைய ஸ்வஸ்திக் ஸ்டீல்ஸே தேவலை என்றுகூடத் தோன்றியது. அவர்கள் அவமானப்படுத்தாமல் கறாராகச் சம்பளம் கொடுத்தார்கள். சேட்டோ மரியாதையாகவும், பிரியமாகவும் வதைத்தான். பேசாமல் ஒரு வேலையும் வேண்டாமென்று ஊருக்கே திரும்பப் போய்விடலாம் என்றால் ஊரில் சோற்றுக்குத் திண்டாட வேண்டியிருக்கும். மாலை நேரப் பட்டி மன்றங்கள், கவியரங்குகள், கை தட்டல்கள் எதுவுமே ஊரில் கிடைக்காது. அதனால் ஊர் திரும்ப மனசு வரவில்லை. சென்னை அவனை விட மறுத்தது.

ஸ்வஸ்திக் ஸ்டீல்ஸில் ஆயிரம் ரூபாய்க்கு மேல் கிடைத்தது. அழகுத் தென்றலான இளம் பிரியாவை உட்கார வைத்துக் காரில் காலேஜிக்குக் கொண்டு போய்விட முடிந்தது. புதுப்புது மனிதர்களைச் சந்திக்க முடிந்தது. பழக முடிந்தது. டிரைவர் என்கிற முறையில் நிறையச் சவாரிகள் இருந்தன. உற்சாகமாக வேலை இருந்தது. டல் அடிக்கவில்லை.

இங்கே சேட் வீட்டிலோ, சேட்டின் நீர்யானை போன்ற உருவத்தையும் அவனது வைப்பாட்டியின் குண்டுமூஞ்சியையும் வட்டி எண்ணி எண்ணியே தேய்ந்து போய் நறுங்கலான சின்ன சேட்டையும்தான் திரும்பத் திரும்பப் பார்க்க முடிந்தது. பெட்ரோல் விலை ஏற ஏறக் காரை வெளியில் எடுப்பதே குறைந்து போயிற்று. 'வாத வேங்கை' எண்ணெய் தேய்த்துப் பிடித்துவிட, கடைக்குப் போய் காய்கறி வாங்கிவர, சின்ன வீட்டுக்குப் பட்டுப் புடவை அயர்ன் பண்ணிவர என்று டிரைவர் வேலை தவிர வேறு வேலைகளையே கண்ணப்பன் செய்ய வேண்டியிருந்தது. எல்லாவற்றிலும் ஒரே திருப்தி அவனை யாரும் டிரைவர் என்றோ 'ஏய் டிரைவர்' என்றோ கூப்பிடுவதில்லை. கம்பெனி பேர் போட்டு டிரைவர் என எழுதிய காக்கி யூனிஃபாரம் அணியும்படி வற்புறுத்தவில்லை. ஜிப்பா வேஷ்டியோடு, டி ஷர்ட் பேண்டோடு எப்படி வேண்டுமானாலும் இஷ்டம் போல மைனராகச் சுற்ற முடிந்தது. சென்னைக்கு வந்த புதிதில் இருந்த அவ்வளவு முனை மழுங்காத ரோஷமும், சுயமரியாதையும் இப்போது அவனிடமும் இல்லை. அவனுக்குச் சென்னையும், சென்னைக்கு அவனும் பழக்கப்பட்டுப் போயிருந்தார்கள். எம்.ஏ. படிக்கிற இலட்சியமும் ஈடேறவில்லை. மாதத்தில் பத்து பட்டி மன்றமும், இருபது கவியரங்கங்களும் கிடைத்தன. பழைய ஆவேசமும் மட்டுப் பட்டுத் தேய்ந்து பாமர நகைச்சுவை அவன் பேச்சில் அதிகம் தலைக்காட்ட ஆரம்பித்திருந்தது. கூட்டங்கள் மூலம் கொஞ்சம் பணமும் வந்தது. பெரிய சேட் ஒரு வருஷத்திலேயே அவன் சம்பளத்தை ஐம்பது ரூபாய் கூட்டி அறுநூறு ரூபாயாக உயர்த்தியிருந்தார். பெட்ரோல் விலை ஏறவே காலை, மாலை இரண்டு வேளையும் வேங்கட நாராயணா ரோடு பார்க் ஒன்றிலேயே தமது வாக்கிங்கை முடித்துக் கொள்ளப் பழகியிருந்தார் சேட். எப்போதாவது டாக்டரிடம் மெடிகல் செக்அப், கோயில், குளம், மிண்ட் தெருவில் உறவினர் வீட்டுக் கல்யாணம் என்று போக மட்டும் காரை வெளியே எடுத்தார்.

கண்ணப்பன் சேட்டை உட்கார்த்தி வழக்கம் போல் எண்ணெய் தேய்த்து விட்டான். சின்ன வீட்டுக்குப் பட்டுப் புடவை அயர்ன் பண்ணிக் கொண்டு வந்து தந்தான். ரங்கநாதன் தெருவுக்குப் போய் சேட் வீட்டுக்குப் புதினா, பச்சைக் காய்கறி எல்லாம் வாங்கி வந்தான். மாலை வேளைகளில் பட்டிமன்றம் பேசினான். கைதட்டல் வாங்கினான். கொஞ்சம் பணமும் பண்ணினான்.

ஒருசமயம் தற்செயலாகத் தெருவில் சந்தித்த ஒரு ரசிகர், "உங்க பேச்சிலேயே எனக்கு ரொம்பப் பிடிக்கிற இடம் உணர்ச்சி கொந்தளிக்கும் சுதந்திர ஆவேசத்தோடு குரலை உச்சஸ்தாயியில் கொண்டு போய்,

புல்லடிமைத் தொழில் பேணிப் - பண்டு
போயின நாட்களுக்கு இனி மனம் நாணித்
தொல்லைகள் இகழ்ச்சிகள் தீர - இந்தத்
தொண்டு நிலைமையைத் தூ என்று தள்ளி

*- ன்னு நீங்க பாரதியார் பாட்டைச் சொல்லுவீங்களே அந்த இடம்தான். முன்பெல்லாம் அடிக்கடி அந்தப் பாட்டை ரிபீட் பண்ணுவீங்க. ஆனா இப்பல்லாம் வர வர அந்தப் பாட்டையே சொல்றதில்லே நீங்க. ஏன்?" என்று கேட்டார். அவரிடம் அப்போது அதற்கு என்ன பதில் சொல்வதென்று ஓரிரு வினாடிகள் தயங்கி, "சொல்லாமல் என்ன? அதற்கு அவசியமிருந்திருக்காது. அதனாலே சொல்லாம விட்டிருப்பேன்" என்று மழுப்பினான் கண்ணப்பன். வெளியே அப்படிப் பதில் சொல்லியிருந்தாலும் உள்ளே அவரது கேள்வி அவனுடைய மனத்திற்குள் கிளப்பி விட்டிருந்த சலனம் மிக மிகப் பெரியதாயிருந்தது. அவர் கேள்வி அவனை ஓர் உலுக்கு உலுக்கியிருந்தது.*

*முன்பு ஒரு காலத்தில் அவனது உணர்வுகளும் அந்தப் பாட்டின் அர்த்தமும் ஒன்றிப் போய்ப் பின்னிப் பிணைந்திருந்தன. இன்றும் அந்தப் பாட்டும், அதன் அர்த்தமும் சுதந்திரத் தன்மான ஆவேசம் நிறைந்துதான் இருந்தன. ஆனால் அவனிடமோ அவன் பிழைப்பிலோ அந்த ஆவேசங்கள் இல்லாமல் அடிபட்டுத் தேய்ந்து போயிருந்தன. பஞ்சம் பிழைக்க வந்த ஆண்டி போல் ஆகியிருந்தான் அவன். ஜனங்கள் அவனை நகைச்சுவைப் பேச்சாளன் என்றார்கள். கை தட்டினார்கள். அவன் எது சொன்னாலும் சிரித்தார்கள். ஆர்ப்பரித்தார்கள்.*

*அப்படி அவர்கள் எதற்காகச் சிரிக்கிறார்கள் என்று புரியாமல் சமயங்களில் அவன் உள்ளூர அழுதான். தானே மெல்ல மெல்லச் சிரிப்புக் கிடமாகிக் கேலிப் பொருளாகிப் போனாற் போல உள்ளூற நலிந்து நாணிக் கூசிக் குறுகினான். ஆனால், பாவம்! மக்களுக்குத்தான் அது தெரியவும் இல்லை. புரியவும் இல்லை.*

**(அமுதசுரபி, தீபாவளி மலர் - 1986)**

## 168. இங்கிதம்

சேர்மன் அந்த வயதில் எவ்வளவுக்கு எவ்வளவு கலகலப்பாகவும், ஜோவியலாகவும், சுமுகமாகவும் பழகினாரோ அவ்வளவுக்கு நேர்மாறாய் முசுடாகவும், முன் கோபியாகவும், கடுகடுப்பாகவும் இருந்தார் எம்.டி. இவர்தான் சேர்மனின் பிள்ளை என்பதைக்கூட நம்ப முடியாமல் இருந்தது. குணங்களில் அப்பாவும், பிள்ளையும் நேர்மாறாக இருந்தார்கள். அவர் வட துருவம் என்றால் இவர் தென் துருவமாக இருந்தார்.

ஆறாவது மாடியில் இருந்த கம்பெனி நிர்வாக அலுவலகத்துக்குப் போக எம்.டி. லிஃப்ட்டில் வந்து நிற்கும்போது அந்த ஒரு ட்ரிப் மட்டும் பன்னிரண்டு பேர் ஒரே சமயத்தில் ஏற முடிந்த அந்த லிஃப்டில் எம்.டி. ஒருவர்தான் அனுமதிக்கப்படுவார். அப்படி லிஃப்ட் ஆப்பரேடரிடம் உத்தரவே இடப்பட்டிருந்தது. மூடி மேன், கோபக் காரர், முகத்தில் சிரிப்பையே பார்க்க முடியாது என்று பெயரெடுத்திருந்தார் எம்.டி.

ஆனால், பெரியவர் என்று ஊழியர்கள் பிரியமாக அழைக்கும் சேர்மன் லிஃப்டில் போகும்போது இன்னும் பதினொரு பேரை உடன் ஏற்றிக் கொள்ளச் சொல்லியும், அவரவர்கள் இறங்க வேண்டிய ஃப்ளோரில் அவரவர்களை விடச் சொல்லியும் தாமே வலிய முன் வந்து லிஃப்ட் ஆப்பரேட்டரை வற்புறுத்துவார். மற்றவர்களிடம் ஜோக் அடிப்பார். க்ஷேம லாபங்களை விசாரிப்பார். புதிதாகக் கல்யாணமான ஓர் இளைஞனிடம், "என்னப்பா! வருஷம் ரெண்டாச்சு? புரொக்டஷனே ஸ்டார்ட் ஆகாமே ஒரு பார்ட்னர்ஷிப் கம்பெனியா?" என்று கேட்டு லிஃப்டையே கலகலக்கச் செய்வார். கம்பெனி ஊழியர்களைத் தட்டிக் கொடுப்பார். சிலரிடம் கைபோட்டுக் குலாவுவார். சகஜமாகப் பழகுவார்.

"இந்த ஆபீஸ்லே எம்.டி. சேர்மன் முதல் எல்லாரும் மேலே போறதுக்கும் கீழே இறங்கறதுக்கும் இந்த லிஃப்ட் ஆப்பரேட்டர் சங்கரன் தான் காரணம்பா?" என்று கிண்டலில் இறங்கி லிஃப்ட் மேனை வம்புக்கு இழுப்பார்.

நேர்மாறாக சின்னவரோ யாரோடும் பேசவே மாட்டார். லிஃப்ட் ஆப்பரேட்டர், குமாஸ்தாக்கள், கீழ்நிலை ஊழியர்களிடம் பெரும்பாலும் சைகைகளைக் கொண்டே வேலை வாங்குவார். முகத்தில் சிரிப்பையே பார்க்க முடியாது. ஹ்யூமர் ப்ரூஃப் மூஞ்சி. தான் சிரிக்காததோடு சிரித்துப் பேசிக் கொண்டிருக்கிற இரண்டு பேரை எதிரில் பார்த்தாலே பிடிக்காது அவருக்கு. உடனே தாங்க முடியாத எரிச்சல் வந்துவிடும். அவர் 'சினிக்' ஆனதற்குப் பலர் பலவிதமான காரணங்களைச் சொன்னார்கள். சிறு வயதிலேயே கல்யாணமாகிச் சிறு வயதிலேயே மனைவியைப் பறி கொடுத்துவிட்டு, அப்புறம் திருமணமே செய்து கொள்ளாமல் தனிக் கட்டையாகவே காலந் தள்ளினார்

எம்டி. அதுதான் காரணம் என்றார்கள். அவர் மனைவியை இழந்து தனிக்கட்டை ஆனதிலிருந்தே இப்படித்தான் முசுடாகிவிட்டார் என்றார்கள். இரண்டாந்தாரம் கட்டிக் கொண்டால் குணமாகிவிடும் என்று யோசனையும் சொன்னார்கள். 'இண்டராவர்ட்' என்று வேறு சிலர் குறை கூறினார்கள்.

பெரியவர் - சேர்மன் ராஜசேகர முதலியார் எழுபது வயதிலும் சஃபாரியில் மாப்பிள்ளை போல ஆபீஸ் வந்தார். மாலையில் கிளப்புக்குப் போனார். பலர் மெச்சும்படி கச்சிதமாகக் காக்டெயில் மிக்ஸ் பண்ணினார். சிரிக்கச் சிரிக்கப் பேசினார். ரம்மி ஆடினார். டென்னிஸ் விளையாடினார், பெண்களிடம் கூச்சமில்லாமல் கலகல என்று பழகினார்.

சின்னவர் சந்திரசேகர் முகவாயில் தேன்கூடு கட்டின மாதிரிக் குறுந்தாடி, சிரிக்கவே மறந்து போய்விட்ட உதடுகள், சிரிக்கிறவர்களைச் சகித்துக் கொள்ளவே முடியாத கடுமை. ஆபீஸ் விட்டால் வீடு, வீட்டை விட்டால் லைப்ரரி. வேறு நண்பர்களோ, கிளப்புக்குப் போய் பழகுவதோ கிடையாது. வீட்டில் ஆள் உயரத்துக்குக் கம்பீரமாக வளர்ந்த இரண்டு 'கிரேட்-டேன்' நாய்களைப் போஷித்தல் சந்திரசேகருக்குப் பிடித்த ஒரே பொழுது போக்கு. மற்றபடி படு சீரியஸ். படு கடுமை. படு தனிமை.

'சேகர் இண்டஸ்ட்ரீஸ்' என்ற அந்த நிறுவனம் கோடிக்கணக்கில் வரவு செலவு செய்தது. கன்ஸ்யூமர் அயிட்டங்கள் முதல் மருந்துகள் வரை பலவற்றைத் தயாரித் தார்கள். சிலவற்றுக்கு மாநில அளவில் ஏஜென்ஸி எடுத்திருந்தார்கள். எல்லாமாய்ச் சேர்ந்து லாபம் கொழித்தது. தொழில் வளர்ந்தது.

ஆறு மாடிகளில் கிரவுண்ட் ஃப்ளோரும், ஃபர்ஸ்ட் ஃப்ளோரும் தவிர மற்ற நான்கு மாடிகளிலும் அலுவலக ஊழியர்கள், கெமிக்கல் என்ஜினியர்கள், சேல்ஸ் மானேஜர்கள், பர்ச்சேஸ் ஆபீஸர், ப்ராஜெக்ட் ரிஸர்ச் இலாகா, ஃபைனான்ஸ் மானேஜர், எம்.டி., சேர்மன், முக மலர்ச்சியுள்ள அழகிய துறுதுறுப்பான இளம் பெண்களான ஸ்டெனோ கம் டைப்பிஸ்டுகள் என்று நிரம்பியிருந்தார்கள். ஆயிரம் பேருக்கு மேல் இருந்த ஊழியர்கள் யார் யார் என்ன போக்கு, எப்படிப்பட்டவர்கள் என்பதெல்லாம் சேர்மனுக்கு அத்துபடி. ஒன்றையுமே கவனிக்காதவர் போல் கவனித்துப் பலரிடம் சகஜமாகப் பேசியே விஷயங்களைக் கிரகித்துக் கொள்வார் சேர்மன் ராஜசேகர முதலியார். நடுவாக வந்து போனாலும் ஆபீஸில் எந்த மூலையில் என்ன நடக்கிறது என்பது அத்துபடி அவருக்கு.

ஒருநாள் லிஃப்டில் உடன் வந்த ரவீந்திரன் என்ற இளம் கெமிக்கல் என்ஜினியரிடம் "என்னப்பா! உன் ஃப்ராஜெக்ட் ரிப்போர்ட் எப்பக் கிடைக்கும்? கிடைச்சா உடனே ஒரு தேதி முடிவு பண்ணி நல்ல முகூர்த்தமாய்ப் பார்த்து எல்லாம் செய்துடலாம்" என்றார் பெரியவர். அவன் பவ்யமாகப் பதில் சொன்னான்.

"கெமிக்கல் போர்ஷன் ஆப் த ரிப்போர்ட் இஸ் வித் மீ சார். எக்ஸ்பெக்டிங் அதர் அயிட்டம்ஸ் ப்ரம் த ரெஸ்பெக்டிவ் டிபார்ட்மெண்ட்ஸ்..."

*"அட நீ ஒண்ணு! நான் கேட்டது கம்பெனி ப்ராஜெக்ட் ரிப்போட் இல்லேப்பா. உனக்கும் ஸ்டெனோ மிஸ். மல்லிகாவுக்கும் காதல்னு கேள்விப்பட்டேனே. அதைப் பத்தித்தான் விசாரிச்சேன்! எப்ப முகூர்த்தம் வெச்சுக்கலாம்?"*

*இதைக் கேட்டு அவன் நாணினான். முகம் சிவந்தது. "ஜமாச்சுடலாம்! சீக்கிரம் ஒரு முடிவு பண்ணு. மல்லிகா ரொம்ப ஸ்மார்ட் கேள்... யூ ஆர் லக்கி..."*

*இதே காதலைச் சின்னவர் எப்படி எதிர்கொண்டார் என்பதை அறிய அடுத்த நாளே மற்றொரு நிகழ்ச்சி நடந்தது.*

*அன்று ஏதோ ஒரு முக்கியமான லெட்டர் டிக்டேட் செய்து அவசரமாக டைப் ஆகி டெல்லிக்கு அனுப்ப வேண்டியிருந்தது.*

*எம்.டி. சந்திரசேகர் ஸ்டெனோ மல்லிகாவுக்காகக் காலிங்பெல்லை அமுக்கினார். பிரயோசனமில்லை. டெலிபோனை எடுத்தார். கீ போர்ட்டில் ஆளே இல்லை. கடிகாரத்தைப் பார்த்தார். பகல் ஒன்றேகால் மணி. அந்த ஆபீஸில் ஒரு மணி முதல் இரண்டு மணி வரை லஞ்ச் இண்டர்வெல். லெட்டரோ படு அவசரமான விஷயம். அவரே எழுந்து ஏ.சி. அறைக் கதவைத் திறந்து கொண்டு வெளியே வந்து பார்த்தால் ஸ்டெனோ மல்லிகா அவள் நாற்காலியில் இல்லை. கெமிக்கல் என்ஜினியர் ரவீந்திரனின் டேபிளில் எதிரெதிரே அமர்ந்து மல்லிகா சிரிப்பும் கும்மாளமுமாகப் பகல் உணவு சாப்பிட்டுக் கொண்டிருந்தாள். இருவருக்கும் இடையே ஒரே காதல் கிளுகிளுப்பு. இந்த உலக நினைவே இல்லை அவர்களுக்கு.*

*ஏதோ ஒரு கோபத்தில் ஆத்திரமும் எரிச்சலுமாகத் தூண்டப்பட்டு நேரே அங்கே போய் முகத்தில் எள்ளும் கொள்ளும் வெடிக்க, "இதென்ன? ஆபீஸா, சினிமாக் கொட்டகையா? வர வர இங்கே யாருக்கும் விவஸ்தையே கிடையாது. அரைமணி நேரமாக் காலிங்பெல்லை அமுக்கிக்கிட்டிருக்கிறேன். கேள்வி முறை இல்லையா? உன் டேபிளிலேயே உட்கார்ந்து சாப்பிட்டாக் குடியா முழுகிடும்?" என்று மல்லிகாவைப் பார்த்துக் கூப்பாடு போட்டார் எம்.டி.*

*"சாரி சார்! மன்னிக்கணும்" என்று வாரிச் சுருட்டிக் கொண்டு பதறிப் போய் எழுந்திருந்தாள் மல்லிகா. ரவீந்திரனும் எழுந்திருந்தான். ஆனால், எதுவும் பேசவில்லை. அவனுக்கு உள்ளூர ஒரே எரிச்சல்.*

*"உடனே அறைக்கு வந்து பார்! ஒரு அவசர லெட்டர்... டிக்டேட் பண்ணி டைப் ஆகிப் போகணும்!" மல்லிகாவை நோக்கி இரைந்துவிட்டு உள்ளே திரும்பினார் எம்.டி.சந்திரசேகர். மல்லிகா பாதிச் சாப்பாட்டிலேயே எழுந்து எம்.டி. ரூமுக்கு ஓடுவதற்குப் பறந்தாள்.*

*அவர் தலை ஏ.சி. அறைக்குள் மறைந்ததும் ரவீந்திரன் அவளிடம் சொன்னான்.*

*"முதலில் பதறாமல் சாப்பிட்டு முடி. நீ போகக்கூடாது. கொஞ்சம்கூட இங்கிதமே இல்லாத மனுஷன். லஞ்ச் டயத்துலே யார் எங்க உட்கார்ந்து சாப்பிட்டால் இவருக்கு என்ன? காட்டுமிராண்டி மாதிரி வந்து கத்திட்டுப் போறதைப் பாரு."*

"அந்த மனுஷன் சுபாவம் அவ்வளவுதான்! நாமதான் அட்ஜஸ்ட் பண்ணிட்டுப் போகணும் ரவி! அஞ்சே நிமிஷத்திலே அந்த வேலையை முடிச்சுக் குடுத்துட்டு வந்துடறேன்."

"மல்லிகா... நான் வெளையாட்டுக்குச் சொல்லலே. சீரியஸ்ஸாவே சொல்றேன். என் மேல் ஆணையா இப்ப நீ போகக்கூடாது. லஞ்ச் டயம் முடியறவரை நீ இங்கே பேசிண்டுதான் இருக்கணும்."

- ரவீந்திரனின் குரல் கடுமையாயிருந்தது. மல்லிகா கெஞ்சிப் பார்த்தாள். அவன் பிடிவாதமாக அவள் லஞ்ச் டயம் முடிகிற வரை எம்.டி. ரூமுக்குப் போகக்கூடாது என்று அவளைத் தடுத்தான்.

மணி ஒன்றே முக்கால். எம்.டி.யின் அட்டெண்டர் வந்து அவளை மறுபடி எம்.டி. அவசரமாய்க் கூப்பிடுவதாகச் சொன்னான்.

அவள் கெஞ்சுகிற பாவனையில் ரவீந்திரன் முகத்தை ஏறிட்டுப் பார்த்தாள்.

"ரெண்டு மணிக்கு வருவாங்கன்னு போய்ச் சொல்லுப்பா... இன்னும் கால் மணி நேரம்தானே இருக்கு..." என்று அட்டெண்டரிடம் ரவீந்திரனே அவளுக்காகப் பதில் சொல்லி அனுப்பினான்.

அதன் பிறகு யாரும் அவளைக் கூப்பிட வரவில்லை. சரியாக இரண்டு மணிக்கு ரவீந்திரனின் மேஜையிலிருந்து அவள் தன் இருக்கைக்குப் போய்ச் சுருக்கெழுத்துப் பேடும் பென்ஸிலுமாக எம்.டி. அறைக்குள் நுழைந்தாள்.

அங்கே வேறு ஒரு டைப்பிஸ்ட் எம்.டி.யின் டிக்டேஷனை சுருக்கெழுத்தில் நின்றபடியே குறித்துக் கொண்டிருந்தாள்.

அவளை உள்ளே பார்த்ததும் எம்.டி. சீறினார்.

"இப்போ உன்னை யாரும் இங்கே கூப்பிடலியே? போய் யாராவது சிரித்துப் பேசி அரட்டை அடிக்க ஆளு கிடைச்சாப் பேசிட்டிருக்கலாமே? ஆபீஸ் வேலையா முக்கியம்?"

இதைக் கேட்டு அவள் துணுக்குற்றாள். நெஞ்சம் வேகமாக அடித்துக் கொண்டது பதற்றத்தோடு ஸீட்டுக்குத் திரும்பி வந்ததும் அழுதுவிடுவாள் போலிருந்தது.

சுற்றி இருந்த எல்லோரும் அவளையே பார்த்தனர். பதினைந்து நிமிஷத்தில் எம்.டி. ரூமிலிருந்து அட்டெண்டர் அவள் ஸீட்டுக்குத் தேடி வந்து ஒரு கவரை அவளிடம் கொடுத்துக் கையெழுத்தும் வாங்கிக் கொண்டு போனான். பிரித்தால் அது 'ஷோ காஸ்' நோட்டீஸ். 'க்ராஸ் நெக்லிஜன்ஸ், இன்ஸ்பார்டினேஷன், காரணமாக அவளை ஏன் வேலையிலிருந்து நீக்கக்கூடாது?' என்று கேட்டிருந்தது. அவள் அதை எடுத்துக் கொண்டு கண்களில் நீர் தளும்ப ரவீந்திரனின் மேஜைக்குப் போனாள். அவனிடம் நடுங்கும் கைகளால் அதை நீட்டினாள்.

அதை வாங்கிப் படித்த அவன், அவளைப் பார்த்துப் புன்னகை பூத்தான், கேட்டான் :

"இவர்கள் என்ன நீக்குவது? நாமே விட்டுவிட்டால் போச்சு. -"

சொல்லிக் கொண்டே இருவருமே இந்த ஆபீஸிலிருந்து ராஜிநாமா செய்வதாகக் கூட்டுக் கடிதமாக ஒரு லெட்டர் டைப் செய்தான் ரவீந்திரன். முதலில் தன் கையெழுத்தைப் போட்டுவிட்டு அவளிடம் நீட்டினான்.

அதை அவள் படித்துப் பார்த்துவிட்டு, "சேர்மனுக்கு அட்ரஸ் பண்ணியிருக்கீங்களே? ரெஸிக்னேஷன் லெட்டர் எம்.டி.க்கு அல்லது பெர்ஸனல் மேனேஜருக்குன்னு அட்ரஸ் பண்ணனும்?" என்று கேட்டாள்.

"காரணத்தோடு வேணும்னுதான் சேர்மனுக்கு அட்ரஸ் பண்ணியிருக்கேன். நீ முதல்லே கையெழுத்தைப் போடு. சேர்மன் வெளியில் போறதுக்குள்ளே அவரையே பார்த்து நேரில் குடுத்துடணும்."

அவள் கையெழுத்தைப் போட்டாள். ரவீந்திரன் உடனே தன் மேஜையிலிருந்த ஃபோனை எடுத்து ஆப்பரேட்டரிடம் சேர்மனுக்குக் கனெக்ஷன் கேட்டான். கனெக்ஷன் கிடைத்தது.

"சார் குட்மார்னிங். நான் ரவி பேசறேன். நானும் மல்லிகாவும் உங்களை ஒரு நிமிஷம் நேர்ல பார்க்கணும்."

"பேஷாப் பார்க்கலாம். உடனே வாங்க. நான் அன்னிக்குக் கேட்ட பிராஜக்ட் ரிப்போர்ட் தயாராயிரிச்சின்னு நினைக்கிறேன். எப்ப முகூர்த்தம்? என்னிக்குக் கல்யாணச் சாப்பாடு போடப் போறீங்க?"

உற்சாகமாகப் பேசினார் சேர்மன். மல்லிகாவையும் அழைத்துக் கொண்டு உடனே சேர்மனைப் பார்க்கச் சென்றான் ரவீந்திரன்.

அந்த அறைக்குள் நுழைந்ததுமே அவனைப் பாசத்தோடு தோளில் தட்டிக் கொடுத்து எழுந்து வந்து வரவேற்று அமரச் சொன்னார் சேர்மன்.

"வாம்மா! நீயும் உட்காரு!" மல்லிகாவையும் குஷியாக வரவேற்றார். "எப்பக் கல்யாணம்?"

அவர்கள் இருவருமே ஒருவர் முகத்தை ஒருவர் கூச்சத்தோடு பார்த்துக் கொண்டனர்.

ஒரு நிமிஷ இடைவெளிக்குப் பின், "எங்களை மன்னிக்கணும். இதை உங்க கிட்ட நேரில் குடுத்துட்டுப் போலாம்னு தான் ரெண்டு பேரும் வந்தோம்" - என்று ராஜிநாமாக் கடிதம் இருந்த உறையை ரவி அவரிடம் நீட்டினான். வாங்கிப் பிரித்துப் படித்த அவர் கோபத்தோடு,

"வாட் நான்ஸென்ஸ்... என்னது இதெல்லாம்?"

"இல்லே! கௌரவமா விலகிக்கலாம்னு பார்க்கிறோம்! அதான் நாங்களே ரிஸிக்னேஷன் எழுதி எடுத்துட்டு வந்தோம்?"

"ரவீ! வாட் இஸ் ராங் வித் யூ மை பாய்! கமான் டெல் மீ த ரீஸன்..."

ரவீந்திரன், மல்லிகா இருவருமே தயங்கினர். மணியை அமுக்கி அட்டெண்டரை வரவழைத்து மூணு கப் காபிக்கு ஆர்டர் செய்தார் சேர்மன்.

"தா பாரு, காபி பிரமாதமா இருக்கணும். புதுசாக் கல்யாணம் ஆன பொண்ணு மாப்பிள்ளையை உபசாரம் பண்ற மாதிரி காபி... ஆமா..." என்று வழக்கம் போல அட்டகாசமாக ஆர்டர் செய்தார்.

"இவன் கிடக்கிறான். இப்படித்தான் கல்லுளி மங்கன் மாதிரிப் பேசாமல் இருப்பான். நீ சொல்லும்மா! என்ன காரணத்தாலே ரெண்டு பேரும் இங்கே வேலையை விடறீங்க...?" என்று சேர்மன் மல்லிகாவைக் கேட்டார். அவள் தயங்கித் தயங்கித் தன்னிடம் அளிக்கப்பட்ட ஷோ காஸ் நோட்டீஸை எடுத்து நீட்டினாள்.

அவர் வாங்கிப் படித்தார். "எதனால் இப்படி நடந்ததும்மா?"

அவள் நடந்ததைச் சொல்ல ஆரம்பித்தாள். பாதியில் உணர்ச்சிவசப்பட்டுக் குரல் உடைந்து அழுகையாகிவிடுமோ என்ற நிலைக்கு அவள் வந்ததும் மீதத்தை அவன் தொடர்ந்து சொன்னான்.

சேர்மன் பொறுமையாகக் கேட்டார். காபி வந்தது, அவர்களைப் பருகச் சொல்லி உபசரித்தபடியே தாமும் பருகினார். சிறிதுநேர மௌனத்துக்குப்பின், "நீங்க சொல்றது நிஜமா இருந்தால் தப்பு எம்.டி.மேலேதான். லஞ்ச் இண்ட்டர்வெல்லே நீங்க ரெண்டு பேரும் சிரிச்சுப் பேசிட்டிருந்தா இவனுக்கென்ன வந்தது? இட் இஸ் நன் ஆஃப் ஹிஸ் பிஸினஸ்..." என்று உறுதியான குரலில் பதில் சொன்னார்.

தன் அருகே இருந்த ஃபோனை எடுத்து, "எம்.டி.க்குப் போடுப்பா" என்று ஆப்பரேட்டரை வேண்டினார் சேர்மன்.

லயனில் எம்.டி. வந்திருக்க வேண்டும். "சந்தர்! தமிழ்லே இங்கிதம்னு ஒரு வார்த்தை இருக்கே, அது உனக்குத் தெரியுமா?"

"..........................."

"நீ அவசியம் தெரிஞ்சுக்கணும்பா. ஒருவேளை எது இங்கிதம்கிறதைத் தெரிஞ்சுக்கிற ஆசை உனக்கு இல்லைன்னாலும் எதெது இங்கிதக் குறைவுங்கிறதையாவது நீ அவசியமாகத் தெரிஞ்சுக்கிட்டாகணும்."

"..............................."

"சிரிச்சுப் பேசற ரெண்டு பேரைப் பார்த்துப் பொறுக்க முடியாமே வயித்தெரிச்சல் படறதும், வயித்தெரிச்சல் பட்டுத் தவிக்கிற ரெண்டு பேரைப் பார்த்து சிரிக்கிறதும் தான் உலகத்திலேயே தலைசிறந்த இங்கிதக் குறைவான காரியங்கள்."

"..............................."

"இதிலே முதல் ரக இங்கிதக் குறைவை உங்கிட்ட நான் அடிக்கடி பார்க்கிறேன். இன்னிக்குக்கூட மல்லிகா விஷயத்திலே அதே தப்பை நீ பண்ணியிருக்கே..."

"..............................."

"நோ— நோ— நான் ஒத்துக்க முடியாது. உன்னாலே ஒரு பிரமாதமான எதிர்காலமுள்ள இளம் கெமிக்கல் என்ஜினியரையும், படு ஸ்மார்ட்டான ஒரு ஸ்டெனோவையும் நான் இழக்க முடியாது. நீ ஒரு பத்து நிமிஷம் கழிச்சு இங்கே வந்து என்னைப் பாரு. நேரே பேசலாம்."

சேர்மன் ஃபோனை வைத்தார். பின்பு அவர்கள் கொடுத்த கூட்டு ராஜிநாமாக் கடிதத்தையும், ஷோகாஸ் நோட்டீஸையும் அவர்கள் இருவர் முன்னிலையிலுமே கிழித்துக் குப்பைக் கூடையில் போட்டுச் சொன்னார்.

"இந்த ராஜிநாமாவை நான் ஏத்துக்கலே ரவீ! உன்னையும் மல்லிகாவையும் இந்த இன்ஸ்டிடியூஷன் இழக்கத் தயாராயில்லே. தயவுசெய்து இந்த வயசானவனின் வார்த்தைக்கு மரியாதை குடுங்க. போய் நீங்க ரெண்டு பேரும் யாராவது ஒருத்தரோட ஸீட்லே சேர்ந்தாப்ல இருங்க. ப்ளீஸ்..."

அவர்கள் இருவருக்கும் அவர் ஏன் அப்படி வேண்டுகிறார் என்று புரியாவிட்டாலும் அதை மறுக்கத் தோன்றவில்லை. இருவரும் திரும்பி வந்து ரவீந்திரனின் ஸீட்டில் எதிரும் புதிருமாக அமர்ந்தனர், காத்திருந்தனர்.

பத்து நிமிஷத்தில் எம்.டி. புறப்பட்டுச் சேர்மன் அறைக்குள் செல்வதை, இருந்த இடத்திலிருந்தே ரவீந்திரனும், மல்லிகாவும் காண முடிந்தது.

மாலை மணி நான்கு. நாலரை, ஐந்து... என்று நேரம் வளர்ந்தது. ஆபீஸ் நேரம் முடிந்து எல்லோரும் வீட்டுக்குப் போயாயிற்று. ரவீந்திரனும் மல்லிகாவும் மட்டும் தனியாகக் கொட்டக் கொட்ட உட்கார்ந்திருந்தனர். சேர்மன் அறைக்குள் போன எம்.டி. இன்னும் திரும்பவில்லை.

மாலை ஐந்தேகால் மணிக்குச் சேர்மனின் அறை கதவைத் திறந்து கொண்டு வெளியே வந்தார் எம்.டி. நேரே அம்பு போல அவர்கள் இருவரும் அமர்ந்திருந்த இடத்துக்கு வந்து, "ஐயாம் சாரி! நீங்க ரெண்டு பேரும் பெரிய மனசு பண்ணி என்னை மன்னிக்கணும். இங்கேயே கன்டின்யூ பண்ணணும்" என்றார். பிறகு தன் அறைக்குச் சென்றார்.

வீடு திரும்ப லிஃப்டில் கீழே இறங்கிக் கொண்டிருந்தபோது, "நம்ப சேர்மனோட பெரிய அஸெட் என்ன தெரியுமா?" என்று மல்லிகாவைக் கேட்டான் ரவீந்திரன். மல்லிகா ஒன்றும் புரியாமல் விழித்தாள்.

"நானே சொல்லிடட்டுமா?"

"சொல்லுங்களேன்..."

"அவரோட இந்த இங்கிதம் தான் அவர்கிட்ட இருக்கிற மிகப் பெரிய சொத்து."

"சரி! அஸெட் என்னன்னு சொல்லியாச்சு... லயபிலிட்டி எதுன்னும் நீங்களே சொல்லிடுங்க."

"அது உனக்கே தெரியும்! லயபிலிட்டிதான் சற்று முன் நம்மிடம் தேடி வந்து மன்னிப்புக் கேட்டுக் கொண்டதே!"

இதைக் கேட்டு மல்லிகா சிரித்தாள்.

**(அமுதசுரபி, ஜனவரி, 1987)**

## 169. ‘கேபினட் டெசிஷன்ஸ்’*

**த**லைமை செயலாளர் தண்டல் நாயகம் இ.ஆ.ப. கை கட்டி வாய் பொத்தி மெய் குழைந்து முதுகு வணங்கி முதல்வர் முகஸ்துதிப் பிரியர் - மன்னிக்கவும் - டாக்டர் - தரணி காவலர் - முதல்வர் முகஸ்துதிப் பிரியரிடம் மறுபடியும் வினாவினார். பவ்யமாகத் தணிந்த குரலில்தான் வினாவினார்: “வெள்ளிக்கிழமை காலை பத்து மணிக்குக் கேபினட் மீட்டிங் போடச் சொல்றீங்களே? அன்னிக்கு நீங்க மௌன விரதமாச்சே? எப்படி முடியும்?”

“அன்னிக்கே போட்டுடுங்க! பரவாயில்லே. நான் சமாளிச்சுப்பேன். நம்ம அமைச்சருங்க நான் ஜாடையில் சொன்னாலே புரிஞ்சுப்பாங்க... மீட்டிங் போட்டு ரொம்ப நாளாச்சி... கேபினட் அமைச்சருங்க யாருன்னு எனக்கே முகம் மறந்துகூடப் போச்சு. சந்திச்சு அத்தனை நாளாகுது.”

“மீட்டிங் முடிச்சப்புறம் பிரஸ்ஸுக்கு யார் ப்ரீஃப் பண்ணுவாங்க? சீஃப் செகரெட்டிரிங்கிற முறையிலே பாலிஸி மேட்டர்ஸ், கவர்மெண்ட் டெஸிஷன்ஸ், ஆக்ஷன் இது பற்றித்தான் நான் ப்ரீஃப் பண்ணலாம். உங்க உள் கட்சி விவகாரம் “புது மந்திரிகள் உண்டா? பதவி விலகல் இருக்குமா? புதிய மாவட்டங்கள் பிரிக்கப்படுமா?”ங்கிற மாதிரிக் கேள்விக்கெல்லாம் எப்படி யார் பதில் சொல்வாங்க? நான் அதெல்லாம் சொல்றது நல்லாயிருக்காதே?”

“கேபினட்ல நம்பர் டூ யாரு? படு ஞாயிறு பம்மல் - பாவளவனார்தானே? அவர் பிரஸ்ஸுக்கு ஃப்ரீப் பண்ணிப்பாரு. என் ஜாடைக் குறிப்புக்கள் அவருக்குப் புரியும். சந்தேகம் வர்ர மாதிரி விவகாரங்களை நான் ஒரு துண்டுத்தாளிலே எழுதியே அவரிட்டக் காமிச்சிடுவேன்.”

“சரிங்க! அப்போ வெள்ளிக்கிழமை காலை 10 மணிக்குக் கேபினட் மீட்டிங் மாண்புமிகு - முதல்வர் தலைமையில் நடக்கும்னு அமைச்சருங்களுக்கு விவரம் அனுப்பிடறேங்க...”

“செஞ்சுடுங்க...”

தண்டல் நாயகம் உடனே டாக்டர் - முதல்வரின் அறையிலிருந்து தம் அறைக்குத் திரும்பிக் காபினட் மீட்டிங் பற்றிய சுற்றறிக்கையை அனுப்ப ஆயத்தம் செய்தார்.

சட்டப்படி முதல்வர் மௌன விரதம் என்பதை சர்க்குலரில் டைப் செய்ய முடியாதாகையினால் - ஒவ்வோர் அமைச்சராக ஃபோன் செய்து கூறினார்.

---

* இது, கடல் கொண்ட லெமூரியாவில் இருந்த ஒரு தமிழ் மந்திரி சபை பற்றிய கற்பனை.

"அன்னிக்கு சி.எம்.மோட என்.எஸ்.டே. அதுனாலே நீங்கதான் அவரை ரொம்ப சிரமப்படுத்தாமே எல்லாம் குறிப்பறிஞ்சு நடந்துக்கணும்."

"அதென்னங்க என்.எஸ்?"

"அதாவது நோ ஸ்பீச் - அல்லது நான்... ஸ்பீக்கிங் - எப்படி வேணா வச்சுக்கலாம்."

"பேசாட்டி என்னங்க? அவர் தான்ங்க எங்க இதயதெய்வம். இறுதித் தெய்வம் - உறுதித் தெய்வம் - ஒரே தெய்வம் - உலகத் தெய்வம்..." என்று முடிக்காமல் சொற்பொழிவு போலத் தொடர்ந்த அமைச்சரை இடைமறித்து, "சார்! இது பப்ளிக் மீட்டிங் இல்லே... நீங்க சீஃப் செகரட்டரி கிட்டதான் இப்ப போன்ல பேசிக்கிட்டிருங்கீங்க" என்றார் தலைமைச் செயலாளர்.

"சாரி சார்! சி.எம். பேரை எடுத்தாலே பக்தி உணர்ச்சியிலே மெய்மறந்து பகுத்தறிவுக் கிளர்ச்சி பெற்று உணர்ச்சி வசப்பட்டுப் போயிடுது. அதான் இப்பிடி" என்று அசடுவழிந்தார் அமைச்சர். த.செ. தொடர்ந்தார்.

"அதோட டாக்டர் - முதல்வர் விருப்பப்படி நீங்கதான் மீட்டிங் முடிஞ்சப்புறம் பிரஸ்ஸுக்கு எல்லாம் ப்ரீஃப் பண்ணணும்கிறாரு."

"அந்தத் தங்கத் தலைவனின் சங்கத் தமிழ் வாயினாலா அதைக் கூறினார்? என் பாக்கியமே பாக்கியம். அவர் தம் முகமண்டலத் திருக்குறிப்பை வைத்தே நான் யாவும் புரிந்து கொள்வேன்."

சீ.செ.த. நாயகம் இ.ஆ.ப.வுக்கு அத்தனை மந்திரிகளிடமும் முதல்வரது மௌனவிரத நாளில் கேபினட் மீட்டிங் நடக்கப் போவதைச் சொல்லி முடிக்கக் காலை 10 மணியிலிருந்து இரவு 10 மணி ஆயிற்று. அதாவது முழுசாக 12 மணி நேரம் கழிந்துவிட்டது.

காரணம் ஒவ்வொரு காபினட் அமைச்சரும் - அந்தத் தகவலுக்கு நன்றி சொல்லி தரணி காவலர் - டாக்டர் முதல்வரின் சிறப்புக்களையும் அவருக்குத் தாங்கள் கடன் பட்டிருப்பதையும் விவரித்து முடிக்க இருபது முதல் நாற்பதுவரை நிமிஷங்களை ஃபோனிலேயே எடுத்துக் கொண்டுவிட்டனர்.

மாண்புமிகு கூடுவிட்டுக் கூடுபாய்ந்தான் பட்டி ஆடுகாத்தான் என்றொரு அமைச்சர் - ட்ரைபல் வெல்ஃபேர் மந்திரி 'கேபினட் மீட்டிங்' என்றதுமே "எந்தக் கேபினட்?" என்றார்.

"என்னங்க இப்படிக் கேட்கிறீங்க" என்று த.செயலாளர் பதிலுக்கு உறுத்திக் கேட்டதும் "அதுக்கில்லே! நம்ம கேபினட்டா? மத்திய கேபினட்டான்னு சந்தேகம் வந்திருச்சு" என்றார்.

த.செ. அதிர்ச்சியடைந்தவராக, "மத்திய கேபினட்டுக்கு நீங்க எப்படிப் போக முடியும்?" என்று வினவினார்.

"ஏன் முடியாது? மத்தியில் ஆள்வோர் நம் சங்கத் தலைவர் - சங்கத் தமிழ்க் காவலர் தரணி நாயகர் - உலக வள்ளல் - தயவு இன்றி அங்கு ஆண்டிட இயலாது என்பதால்

சிறப்பு அழைப்பாக நம்மவரையும் அங்கே அழைத்திடலாமன்றோ?" என்று பதில் வந்தது. உடனே தலைமைச் செயலாளர் மயக்கம் போட்டு விழாமல் சமாளித்துக் கொண்டார். மாண்புமிகு காட்டினக் காப்புத்துறை (ட்ரைபல் வெல்ஃபேருக்கு அரசு மொழி பெயர்ப்பு) அமைச்சர் கூ.கூ.ஆ.காத்தான் தான் கடைசியாகத் தலைமைச் செயலாளர் போனில் பேசி முடித்த அமைச்சர். த.செ.க்கு வேர்த்து விறுவிறுத்துப் போயிற்று.

இதன் பின் ஸ்பெஷல் கூரியர் மூலம் எல்லா அமைச்சர் வீடுகளுக்கும் தகவல் அறிக்கையாக அனுப்பப்பட்டது. அன்று த.செ. தம் வீடு செல்லும்போது இரவு பதினோரு மணி.

ஒரு வழியாக வெள்ளிக்கிழமை விடிந்தது. காபினட் கூட்டத்துக்காக அமைச்சர்கள் வந்து விட்டார்கள். மணி பதினொன்றரை ஆகியும் தரணி காவலர் டாக்டர் மாண்புமிகு முதல்வர் வரவில்லை. முக்கியமான வேலையாக நித்யா ஸ்டுடியோவில் இருப்பதாகத் தகவல் வந்தது. விசாரித்ததில் குசல்ராஜ் நடித்த 'குடும்பத்து விபசாரி' என்ற படத்தை வீடியோவில் சுவாரஸ்யமாகப் பார்த்துக் கொண்டிருப்பதாகத் தகவல் வந்தது.

த.செ.மந்திரிகள் எல்லாரும் காத்திருந்தார்கள். பகல் பன்னிரண்டு மணியும் ஆகிவிட்டது. தரணி காவலர் - டாக்டர் - முதல்வர் வந்து சேர்ந்தார்.

தற்செயலாக அப்போது கேபினட் மீட்டிங் ஹாலில் ஒரு சுண்டெலி ஓடியது. உள்ளே நுழைந்த தரணி காவலர் கண்களில் அது பட்டதும் அவர் பாவளவனாரைப் பார்த்து அந்த எலியைச் சுட்டிக்காட்டி முகம் சுளித்தார். பாவளவனார் உடனே அதைத் தமது தாளில் குறித்துக் கொண்டார்.

த.செ.அஜெண்டாவை முதல்வரிடம் நீட்டினார்.

1. வறட்சி பிரதேசங்களுக்கு நிதி ஒதுக்கீடு.

2. உலக உப்பு விற்போர் சங்கத் தலைமை.

3. காபினட் ரிஷஃபில்

4. புதிய மாவட்டங்கள்; புதிய பல்கலைக் கழகங்கள்.

இது மாதிரி இருந்தன அவை. 'வாரியங்களை ஏற்படுத்தலாம்' என்று மொட்டையாக ஒரு துண்டுத் தாளில் எழுதிப் படுஞாயிறிடம் நீட்டினார் தரணிகாவலர்.

முதல் அஜெண்டாவுக்கு இதுதான் பதில் போலும் என்று நினைத்துக் கொண்டார்கள்.

அடுத்து மாண்புமிகு முதல்வர் 'பெரியவர் க.பொ.சி.யைப் பயன்படுத்தவும்' - என்று மற்றொருத் துண்டுத்தாளில் எடுத்து எழுதி நீட்டினார். மூன்றாவதாக எதுவும் எழுதாமல் ஐந்து விரல்களையும் விரித்துக் காட்டினார் தரணிகாவலர். நாலாவதாக

மறுபடி ஒரு துண்டுத்தாளில் 161 - என்று எழுதிக் காட்டினார். 1330 என்றும் குறித்துக் கொடுத்தார்.

அதற்கு அப்புறம் புறப்பட்டுப் போய் விட்டார். வீடியோவில் மீதிப் படத்தையும் பார்க்கப் போக வேண்டியிருந்தது அவருக்கு.

அங்கிருந்து அவரை அழைத்துச் செல்வதற்குச் செவ்வாய் மண்டலத் தரணி காவலர் இரசிகர் மன்றத் தலைவர் விசிறிவித்தகனும் சந்திர மண்டலத் தரணி காவலர் மன்றத் தலைவர் ஜெயவந்தனாவும் காத்திருந்து அழைத்துச் சென்றனர்.

பகல் சாப்பாட்டுக்குப் பின்னர் பத்திரிகையாளர்களைச்சந்திப்பதாக - அமைச்சர் படுஞாயிறு பாவளவனார் கூறினார். அந்த வேளைக்குள் முதல்வர் டாக்டர் தரணி காவலரின் ஜாடைகளையும், சமிக்ஞைகளையும் அர்த்தப்படுத்திக் கொண்டு பிரஸ் பிரீஃபிங்கிற்குத் தான் தயாராகிவிடலாம் என்பது அவருடைய உத்தேசமாயிருந்தது. முதலில் தான் சொல்ல வேண்டியதைச் சொல்லிவிட்டால் அப்புறம் பத்திரிகையாளர்கள் கேட்கும் கேள்விகளுக்குப் பதில் சொல்லலாம் என்பதும் அவரது திட்டமாயிருந்தது இப்போது.

மாண்புமிகு டாக்டர் முதல்வர் தரணிகாவலர் செய்த ஜாடைகளையும், அனுப்பிய சமிக்ஞைகளையும், எழுதிக்காட்டிய குறிப்புக்களையும் கொண்டு பலவற்றைப் புரிந்து விளங்கிக் கொண்டு அமைச்சர் படுஞாயிறு பாவளவனார் பிற்பகலில் பத்திரிகையாளர்களைச் சந்தித்தார்.

சாயங்கால ஹெட்லைனுக்கு ஏதாவது 'ஹாட் நியூஸ்' கிடைக்குமா என்றே காத்துக் கிடந்த பத்திரிகை நிருபர்கள் எல்லாருடைய ஏகோபித்த முதல் கேள்வியும் ஒரே தினுசாக இருந்தது.

"மந்திரிசபை மாற்றம் உண்டா?" படுஞாயிறு இந்த முதல் கேள்வியிலேயே எரிச்சல் அடைந்தார். ஆனாலும் நிருபர்கள் விட்டுவிடவில்லை. அமைச்சரும் மசியவில்லை.

"உங்கள் கேள்விக்கு இறுதியில் வரலாம். தலைவர் - தரணிகாவலர் - சொன்ன முறைப்படி முதலில் எது, இரண்டாவது என்ன, மூன்றாவது என்ன என்று வரிசைப்படுத்தி வைத்துள்ளேன். அவற்றை நான் கூறியபடி குறித்துக்கொண்டு பின்பு உங்கள் கேள்விகளைக் கேட்டால் கடமையும் கண்ணியமும் கட்டுப்பாடும் காக்கப்படும் என நான் நம்ப முடியும்."

"சரி" என்று நிருபர்கள் சம்மதித்துத் தொலைத்தார்கள். மாண்புமிகு படுஞாயிறு தொடங்கினார் :

"தரணி காவலர் மந்திரி சபைக் கூட்டம் நடக்கிற இடத்தில் நுழைந்ததுமே ஒரு சுண்டெலி குறுக்காக ஓடியதைக் கண்டு முகம் சுளித்தார்.

"விரைவில் அரசு சார்பில் உடனடி நடவடிக்கை எடுத்து, 'எலி ஒழிப்பு வாரியம்; பூனை வளர்ப்பு வாரியம்' - ஆகிய இருபெரும் வாரியங்களைத் தலா நாலாயிரம் கோடி

ரூபாய் செலவில் தரணி காவலர் அரசு தொடங்கும் என அறிவிக்கிறேன்..." 'எலிக்கும், பூனைக்கும் நாலாயிரம் கோடியா?' எனப் பிரமித்து வாயைப் பிளந்தார் ஒரு நிருபர்.

இன்னொரு நிருபர் கிண்டலாக, "செகரெட்டேரியட்டில் காபினட் மீட்டிங் நடக்கிற அறையில் ஓடிய எலியைப் பார்த்து முதல்வருக்கு இந்த ஐடியா உதித்த காரணத்தால் இதில் பெரும் பகுதி செகரெட்டேரியட்டில் உள்ள 'திருட்டு எலிகளை' ஒழிக்கவே பயன்படுத்தப்பெறும் என்று பொருள் கொள்ளலாமா?" என்று கேட்டார்.

"செகரெட்டேரியட்டில் எலிகளைவிடப் பெருச்சாளிகளே அதிகம் இருப்பதால் முதல்வர், தனியாக இன்னொரு சிறப்பு வாரியமாகப் 'பெருச்சாளி ஒழிப்பு வாரியம்' ஏற்படுத்துவார் என எதிர்பார்க்கலாமா?" எனக் குறுக்கே புகுந்தார் மற்றொரு எதிர்க்கட்சிப் பத்திரிகைக்காரர்.

படுஞாயிறு பத்திரிகையாளர்களை அதிகம் விரோதித்துக் கொள்ள விரும்பவில்லை. எனவே மேலும் கொதிப்படையாமல் - நிதானமாக மறுமொழி கூறினார். "அவசியம் ஏற்பட்டால் மாண்புமிகு டாக்டர், முதல்வர், தரணிகாவலரின் அரசு அப்படிச் சில சிறப்பு வாரியங்களை ஏற்படுத்தவும் தயங்காது, மயங்காது, உறங்காது, துவளாது, தொய்யாது என்பதைத் தாழ்மையாக வேண்டி விரும்பித் தெரிவித்துக் கொள்ளக் கடமைப்பட்டிருக்கிறேன்."

"எலிகளை ஒழிப்பதற்காகப் பூனைகளை வளர்க்கப் போய் பூனைகளின் தொல்லை அதிகமாகிவிட்டால் அரசு அந்த நிலைமையை எதிர்கொள்ள எவ்வாறு செயல்படும் என்பதை அறியலாமா?"

"அப்படி ஒரு நிலைமை ஏற்படுமானால் மாண்புமிகு, டாக்டர் தரணி காவலரின் அரசு உடனே பூனைகளை ஒழிக்க ஒரு 'நாய் வளர்ப்பு வாரியம்' தொடங்கத் தயங்காது."

"தரணிகாவலரின் அரசு எலிகள், பூனைகள் தவிர மக்களை வளர்க்க ஏதாவது செய்யுமா?"

"நாங்கள் வளர்வதிலிருந்தே மக்கள் வளர்வது தெரியவில்லையா?"

"எலி, ஒழிப்பு வாரியத்தின் தலைவர் பதவியையாவது கலம்பகச் செல்வர் க.பொ.சி.க்குக் கொடுப்பார்களா என்பதை அறியலாமா?"

"பூனை வளர்ப்பு வாரியத்தின் தலைவர் யார்?"

"இரண்டு வாரியங்களுக்குமான தலைவர் பதவிகளை உரிய வேளையில் ஊரறிய உலகறிய நாடறிய - நல்லவர்கள் அறியத் தரணிகாவலர் அவர்கள் அறிவிப்பார் என்பதைப் பணிவோடு கனிவோடு செறிவோடு - இறுதியாக அறுதியாக, உறுதியாக, மறதியாக அறிவோடு கூறிக் கொள்ள விரும்புகிறேன்."

"நீண்டகாலமாகப் பதவியின்றித் தவிக்கும் கலம்பகச் செல்வர்....."

"மாண்புமிகு டாக்டர் முதல்வர், தரணி காவலர் அவர்கள் விருப்பப்படி க.பொ.சி. அவர்களின் நன்றி விசுவாசங்களைப் பாராட்டும் முகமாக அவரை நன்றியின் அடையாளமாகத் தமிழ் இலக்கண இலக்கியங்கள் கருதுகின்ற உப்பு - அதாவது உலக

உப்பு விற்போர் சங்கத்தின் தலைவராகப் போடும் எண்ணம் மாண்புமிகு முதல்வருக்கு இருப்பதாகத் தெரிய வருகிறது."

"நன்றியின் சின்னமாகக் கருதப்படும் நாய் வளர்ப்பு வாரியத்திற்குத் தலைவராகவே க.பொ.சி. அவர்களைக் கடமையாற்றச் செய்யலாமே?"

"தரணிகாவலர் அவர்கள் விரும்புகிற பட்சத்தில இரு பெரும் பதவிகளையுமே அவர் கலம்பகச் செல்வருக்கு அளிக்கத் தயங்கமாட்டார் என்று சொல்லுவேன்."

"உங்கள் கட்சி இளைஞர்கள் பலர் பதவிகள் இன்றிப் பரிதவித்திருக்கையில் 97 வயது க.பொ.சிக்குத் திரும்பத் திரும்பப் பதவிகளை அளிப்பது கட்சி மட்டத்தில் கசப்பை ஏற்படுத்தாதா? வெறுப்பை வளர்க்காதா?"

"கசப்பு ஒழிப்பு வாரியம் என்ற ஒன்றை ஏற்படுத்துவதன் மூலம் மாண்புமிகு முதல்வர் டாக்டர் தரணி காவலர் அதைச் சமாளிக்க முடியும் என்பதில் யாரும் ஐயப்பட இடமில்லை. ஐயப்பட்டால் அவன் நரகத்துக்குப் போவான் என நம்பும் பகுத்தறிவாளர்களிலே நான் முதலாமவனாக இருப்பேன்."

"மந்திரி சபை மாற்றம் பற்றி...?"

"முதல்வர் டாக்டர் மாண்புமிகு தரணி காவலர் பரணிபாடும் தம் வலக்கரத்தைத் தூக்கி ஐந்து விரல்களையும் காட்டி இன்னும் ஐந்தாண்டுகளுக்கு மந்திரிசபை மாற்றம் எதுவும் இல்லை என்பதை அழுத்தமாகத் தெரிவித்தார்."

"அது எப்படி? ஒருவேளை ஊழல் புரிந்த ஐந்து மந்திரிகளைக் கட்சியிலும் ஆட்சியிலுமிருந்து தூக்கி எறிவேன் என்ற அர்த்தத்தில்கூட அவர் ஐந்து விரல்களைக் காட்டியிருக்கலாம்" என்று இடைமறித்த ஒரு குறும்புக்கார நிருபர் ஆரம்பித்தார்.

"அதெல்லாம் இல்லை. இன்னும் ஐந்து நிமிஷம்தான் என்னால் இந்தக் கூட்டத்தில் இருக்க முடியும். அதன்பின் 'வீடியோ'வில் 'தேடிய குமரி' படம் பார்க்கப் போக வேண்டும் என்ற அர்த்தத்திலும் கூறி இருக்க முடியும்" என்றார் எதிர்க்கட்சிப் பத்திரிகை நிருபர்.

இதைக் கேட்ட உடனே மாண்புமிகு, படுஞாயிறுக்கு சினம் மூண்டுவிட்டது.

"எம் தங்கத்தலைவன் - சங்கத் தமிழ்மகன் - சிங்கக் குருளைகளின் சீரிய மன்னன் - வீரிய வேந்தன் - ஆரியப்படை கடந்தோன் எதைக் கூறினாலும் எப்படிக் கூறினாலும் அதை ஏற்க நான் சித்தமாய் இருப்பேன் என்பதையும் மொத்தமாகவும் சில்லறையாகவும் கூறிக் கொள்ள விரும்புகிறேன். பதவி நீக்கப்படுகிற ஐந்து பேரில் முதல் நபராக நானே இருந்தாலும் தலைவணங்கித் தாள் பணிந்து அதனைக் கனிவோடு பாதங்களில் விழுந்து ஏற்பேன் என்பதைத் துணிவோடு உங்கள் முன்னே தெரிவித்துக் கொள்கிறேன்."

அந்த நிருபரின் கேள்வியைத் தவறாகப் புரிந்து கொண்ட அமைச்சர் 'ஊழல் மந்திரிகள் ஐவர்' என்று சொன்னதுமே அவர் தன்னைத்தான் குறிப்பிடுவதாக எரிச்சலடைந்து குரலை உயர்த்தினார். பதவி நீக்கம் என்றதுமே அமைச்சரின் குரல்

ஓங்கி உயர்ந்தது. அதேசமயம் பேசிய சொற்களில் ஒருவகைச் செயற்கைப் பணிவும் காட்டப்பட்டது.

"இந்தப் பதவி அந்தத் தலைவன் தயவிலே கிடைத்த பிச்சை. கொடுத்ததெல்லாம் கொடுத்தவனுக்கு எடுக்க விரும்பியதை என்னிடமிருந்து எடுத்துக் கொள்ளத் தாராளமாக உரிமை உண்டு. தரணி காவலர் பரணி பாடும் அணியிலே ஒரு கடைக்கோடித் தொண்டனாக வாழ்ந்து என் மீதி நாட்களைச் செலவிடுவேன் என்று குன்றாத - குலையாத - உலையாத - அசையாத - அரளாத - ஆடாத - ஓடாத - விசுவாசத்துடன் தெரிவித்துக் கொள்ளக் கடமைப்பட்டிருக்கிறேன் என்பதை உறுதியுடன் கூறிக் கொள்ள உரிமை பெறுகிறேன் என்பதை..."

மந்திரியை அடுத்த வாக்கியத்துக்கு நகர்ந்த விரும்பிய ஆங்கிலப் பத்திரிகை நிருபர் ஒருவர் புல்டோஸர் போல் குறுக்கே பாய்ந்து 'கபால்' என்று அவர் சொற்களை அமுக்கினார். "புதிய பல்கலைக் கழகங்கள் - புதிய மாவட்டங்கள், ஏதேனும் அறிவிக்கப்படுமா?"

இக்கேள்வி அமைச்சரை நிதானமான நிலைக்குக் கொண்டு வந்தது, 'மந்திரி சபை மாற்றம் - ஊழல் மந்திரிகள் ஐவர் நீக்கம்' - என்பதை எல்லாம் விட்டு 'சப்ஜெக்ட்' வேறு திசைக்குத் திரும்பியதே அந்த வேளையில் அமைச்சருக்கு ஆறுதலாக இருந்தது. நிமிர்ந்து உட்கார்ந்தார். பி.எ. ஒரு டம்ளரில் சுடச்சுட அமைச்சருக்கும் - நிருபர்களுக்கும் காபி வழங்கினார். எல்லாருமே காபி குடித்து முடிக்கப் பதினைந்து நிமிஷங்கள் ஆயின. மறுபடி மாண்புமிகு அமைச்சர் 'மூடில்' வந்து 'செட்டில்' ஆனார். "புதிய மாவட்டம் நிச்சயமாக உண்டு. 161 புதிய மாவட்டங்களை ஏற்படுத்திப் பல மறந்துபோன பெயர்களைச் சூட்டி மகிழ்விக்கும் மாபெரும் புரட்சியைத் தரணி காவலர் - டாக்டர் முதல்வர் மாண்புமிகு தங்கத் தலைவர் அரசு சாதிக்க இருக்கிறது."

"ஐயையோ! 161 மாவட்டமா? திடீர்னு கலெக்டர்ப் பஞ்சம் வந்துடுமே? நூற்றுக்குமேலே கலெக்டர்கள் கிடைப்பாங்களா?"

"மாறாக - வேலையில்லாத் திண்டாட்டத்தை ஒழிக்கும் நடுவண் அரசின் புதிய எழுபதம்சத் திட்டத்தில் அறுபதாவது திட்டத்தை எங்கள் தரணி காவலர் அரசு இப்படிப் புதுப்புது மாவட்டங்களை ஏற்படுத்தித் தருவதன் மூலம் நிறைவேற்றுவது நிருபருக்குப் புரிய வேண்டும். எம் அரசு பல கலெக்டர்களுக்கு வேலை தரும் என்பதே உண்மை. மேலும் மறைந்த மேதைகள் - இறந்த தலைவர்கள் - மறந்த பெரியோர்கள் - சிறந்த சான்றோர்கள் பெயர்களைச் சூட்ட வாய்ப்பளிக்க வேண்டாமா? அத்தகு நல்லெண்ணத்தை உட்கொண்டே எம் தங்கத் தலைவன் - இத்தகு திட்டத்தை இதயத்தில் கொண்டுள்ளதை அறிய வேண்டும்."

"ஒவ்வொரு பட்டி தொட்டியும் ஒரு மாவட்டம் ஆயிடுங்களே...?"

"இதற்கு முந்திய இருட்டடிப்பு ஆட்சியிலே கஞ்சத்தனமாக ஏழே ஏழு மாவட்டங்கள் தான் இருந்தன. எம் தலைவர் தங்கத் தலைவர் தரணி - காவலர் - புரளியை வென்ற புரட்சி மன்னன் ஆட்சிக் கட்டிலில் (கட்டில் என்பது இங்கு

படுக்கையைக் குறிக்காது) அமர்ந்த பின்பே 154 புதிய மாவட்டங்கள் உருவாகவும் வழி பிறந்தது.''

''புதிய மாவட்டங்களுக்குப் பெயர் சூட்டுவதில் கலம்பகச் செல்வர்... நாமம் பரிசீலிக்கப்படுகிறதா?''

''மாண்புமிகு டாக்டர் முதல்வர் தரணி காவலர் கருத்துப்படி காலஞ்சென்ற பெரியோர் தவிர வாழும் பெரியோர் யாரையும் மாவட்டத்தின் பெயர் ஆக்குவதில்லை எனப் பணிவோடு தெரிவித்துக் கொள்கிறேன்.''

''காலஞ்சென்ற என்ற தொடருக்கு 'வயது முதிர்ந்த' என்பதாகவும் ஒரு பொருள் கொள்ள வழி இருக்கிறதாக அரசு வார்த்தை வார்ப்படப் பட்டறை இயக்க - இயக்குநர் டாக்டர் கவ்வை கஜராஜன் ஒரு சொற்பொழிவில் கூறியுள்ளபடி பார்த்தால் கலம்பகச் செல்வர் க.பொ.சி.யின் பெயரையும் மாவட்டத்துக்குச் சூட்ட இடம் உண்டு எனத் தெரிகிறதே...?''

''சொற்பொழிவில் சொல்வது எல்லாம் அதிகாரப்பூர்வ அரசு ஆணை ஆகிவிடாது.''

''மேற்படி வார்த்தை வார்ப்படப்பட்டறை இயக்க இயக்குநர் பட்டிமன்றம் - பாட்டிமன்றம் - கவியரங்கம் - கருத்தரங்கம் - வழக்காடுமன்றம் ஆகிய மேடை-களிலேயே முழு நேரமும் கழிந்துவிடுவதால் அரசு ஆணையாக எதை அறிவிக்கிறார், சொற்பொழிவாக எதைப் பேசுகிறார் என்பதை எல்லாம் பிரித்துப் பார்க்க முடியவில்லையே?''

''யார் எதைச் சொன்னாலும் 'காலஞ்சென்ற' என்ற தொடருக்குத் தரணி காவலர் மாண்புமிகு டாக்டர் மௌனவிரதம் முடித்தபின் என்ன விளக்கம் சொல்கிறாரோ அதுவே சரியானதாயிருக்கும் என்பதைப் பணிவுடன் கூறிக் கொள்ள விரும்பிச் சொல்லும் அதே வேளையில்.....''

''சரிங்க! இந்தப் புதிய பல்கலைக்கழகங்கள் விஷயம்...?''

''தாய்மேல் ஆணையாகத் தமிழ் மேல் ஆணையாகத் திருக்குறளை நினைவூட்டும் வகையில் ஆயிரத்து முந்நூற்று முப்பது புதிய பல்கலைக் கழகங்களை நடப்பு ஆண்டில் புதிதாகத் தொடங்க இருக்கிறார் தரணிகாவலர். இது மக்களுக்குப் பொங்கல் பரிசாக அமையும்.''

''என்னங்க இது? புதிய பல்கலைக்கழகங்களின் எண்ணிக்கை புதிய மாவட்டங்களைத் தூக்கிச் சாப்பிட்டுடும் போலிருக்கே?''

''ஆம்! புதிய பல்கலைக்கழகங்கள் என்று நாங்கள் ஆரம்பித்ததுமே தரணி காவலர் ஒண்ணே முக்கால் விரலை மடக்கிக் காட்டி அதாவது ஆள்காட்டி விரலையும் சுண்டுவிரலையும் - குறிப்பாக ஒண்ணே முக்கால் அடியில் பாட்டுப் பாடிய குறளில் உள்ளதுபோல் 1330 பல்கலைக்கழகங்கள் என்பதைப் புலப்படுத்தினார். தரணிகாவலர்

மாண்புமிகு டாக்டரின் தமிழ்ப் புலமையைக் குறைத்து மதிப்பிடும் குள்ளநரிகள் இந்த நிகழ்ச்சிக்குப் பின்பாவது தங்கள் குறுமதியினைத் தவிர்த்திடுதல் நலம் பயக்கும் என வேண்டி விரும்பி மன்றாடி..."

"மானாவாரியாகப் பல்கலைக்கழகங்கள் உண்டாக்கப்படுவதன் நோக்கம்...?"

"புதிய மாவட்டங்கள், புதிய பல்கலைக்கழங்கள் அனைத்துமே வேலையில்லாத் திண்டாட்டத்தைப் போக்கும் நடுவண் அரசின்..."

"புதிய பல்கலைக்கழகங்களின் ஒன்றிற்காவது கலம்பகச் செல்வரின் பெயர் சூட்டப்படுமா?"

"ஆயிரத்து முந்நூற்று முப்பது பல்கலைக்கழகங்களுக்குப் பெயரிடுகையில் கொடுத்துச் சிவந்த எம் தலைவனின் பொற்கரம் - ஒரு பெயரை எப்படி எங்கு சூட்ட முடியும் - சூட்ட வேண்டும் என்பதை நன்கு அறியும்."

"ஒரு ஜில்லாவுக்கு அஞ்சாறு யூனிவர்ஸிடி வீதம் போட்டாலும் மிச்சமிருக்கும் போலிருக்கே சார்!"

"அப்படி ஒரு பற்றாக்குறைப் பிரச்னை எழுமானால் தங்கத் தலைவர் தரணி காவலரின் அரசு அதை எப்படிச் சமாளிப்பது என்பதை அறிந்தே இருக்கிறது. மாவட்டங்களின் எண்ணிக்கையை விடப் பல்கலைக்கழகங்களின் எண்ணிக்கை அதிகமாயிருக்கிறதே என்ற கவலை உங்களுக்கு வேண்டாம். பல்கலைக்கழகங்களின் எண்ணிக்கையைப் போல் மாவட்டங்களின் எண்ணிக்கையை நான்கு மடங்காக உயர்த்த இந்த அரசு ஒரு சிறிதும் தயங்காது என்பதை இந்தச் சிக்கலான நேரத்தில் தன்மானத் தலைவர் சன்மானமாகத் தந்த துணிவின் பேரால் உங்களுக்குத் தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன்."

"பல்கலைக்கழகத்திற்குப் பெயராக சூட்டாவிடினும் க.பொ.சி.யை ஒரு துணைவேந்தராகவாவது நியமிக்க அரசு முன் வருமா?"

"முட்டைக் கானல் மலையில் அரசு தொடங்க இருக்கும் 'தள்ளாடும் முதியோர்களுக்கான தண்டமிழ்ப் பல்கலைக் கழகத்திற்குக் கலம்பகச் செல்வரைத் துணைவேந்தராக நியமிக்கத் தரணி காவலர் அரசு யோசித்து வருவதை இங்கு நான் பணிவுடன் சொல்லிவிடக் கடமைப்பட்டிருக்கிறேன்." -

மந்திரியாகப் பிரஸ் ப்ரீஃபிங்கை முடித்து விடை கொடுக்க மாட்டார் என்பதுபோல் தோன்றவே நிருபர்கள் தாங்களே ஒவ்வொருவராக மெல்ல மெல்லக் கழற்றிக் கொள்ளத் தலைப்பட்டார்கள்.

அன்றைய மாலைப் பத்திரிகைகளிலும், மறுநாள் காலைத் தினசரிகளிலும் மந்திரிசபை முடிவுகள் பற்றி ஒரே 'பிளாஷ்' மயம்.

- புதிதாக 1330 பல்கலைக்கழகங்கள் - 161 புதிய மாவட்டங்கள் -

தள்ளாடும் பல்கலைக்கழகத் தலைவர் பதவி கலம்பகச் செல்வருக்கு - 'எலிகளை ஒழிக்கப் புது வாரியம்' 'கசப்பை ஒழிக்க இனிப்பு வாரியம்' என்று தலைப்புக்கள் தடபுடல் பட்டன. கவர்னர் பத்திரிகைகளைப் படித்துவிட்டு அதிர்ச்சியடைந்தார். 'மத்திய அரசுக்கு ரிப்போர்ட் பறந்தது. எந்த வாரியம் வேண்டுமானால் வைக்கட்டும் - நமக்குச் சலாம் போடுகிறவரை சும்மா இருப்போம்' என நடுவண் அரசு கண்டுகொள்ளவில்லை. பேசாமல் சிரித்துவிட்டுச் சும்மா இருந்துவிட்டனர்.

மறுநாள் சனிக்கிழமை முதல்வர் தரணி காவலர் மாண்புமிகு டாக்டரின் மௌனவிரதம் முடிந்ததும் சில நிருபர்கள் அவரது கிருஷ்ணாவரம் தோட்டத்திற்குச் சென்று அவரை அரும்பாடுபட்டு முயன்று சந்தித்தனர். காலை எட்டு மணிக்கு அங்கே போன நிருபர்கள் மாலை இரண்டரை மணிவரை காத்திருந்து இரண்டே முக்கால் மணிக்கு மாண்புமிகு தரணி காவலரைச் சந்தித்தனர்.

'கிஸ்கோ-காந்தி' என்கிற பாவாடை தாவாணி அணிந்த பருவத்துக் கவர்ச்சிக் குழந்தையுடன் தீவிரமாகக் கேரம்போர்டு விளையாடிக் கொண்டிருந்த தரணி காவலர் அவசரமாக அதை ஒத்தி வைத்துவிட்டு வந்து நிருபர்களைச் சந்தித்தார்.

"கேபினட் டெசிஷன்ஸ் எல்லாம் ரொம்ப டிராஸ்டிக்காக... இருக்கே...?"

"கேபினட்டா? அப்பிடி மீட்டிங் எதுவுமே நடக்கலீங்களே?"

நிருபர்கள் ஒரேயடியாக 'ஷாக்' அடைந்து,

"அமைச்சர் படுஞாயிறு பாவளவனார்..."

"அதெல்லாம் பெரிசா ஒண்ணும் பொருட்படுத்தாதீங்க... கொஞ்ச நாளா அவரு 'மெண்டல்' ஆயிட்டாரு..."

"அப்பிடியே போட்டுக்கலாங்களா?"

"முதல்வர் வருத்தம்னும் சேர்த்துப் போட்டுக்குங்க. விரைவில் படு ஞாயிறு மூளைச் சிகிச்சைக்காக அமெரிக்காவுக்கு அரசு செலவில் அனுப்பி வைக்கப்படுவார். முதல்வர் அதற்கான ஏற்பாடுகளில் முனைந்துள்ளார்னும் போட்டுக்குங்க."

அடுத்தடுத்து இரண்டு மாலை வேளைகளில் 'ப்ளாஷ்' கிடைத்ததில் நிருபர்களுக்கு ஒரே குஷி.

"அதிர்ச்சி தரும் செய்தி. கேபினட் கூட்டமே நடக்கவில்லை. முதல்வர் தகவல். அமைச்சர் படுஞாயிறு மூளைச் சிகிச்சைக்காக அரசு செலவில் அமெரிக்கா செல்கிறார்" என்று மாலைத் தினசரிகள் தடபுடல் பட்டன. ஒரே ஒரு நிருபர் மட்டும் இதுபற்றிப் படுஞாயிறுவின் ரியாக்ஷன் என்ன என்று அறிவதற்காக அவருக்கு ஃபோன் செய்தார். முதல்வர் கூறிய கேபினட் கூட்டமே நடக்கவில்லை என்பது பற்றி அவரது ரியாக்ஷனைக் கேட்டார்.

"டாக்டர் முதல்வர் மாண்புமிகு தரணி காவலர் எது புகன்றாலும் அதுதான் உண்மையாக இருக்கும் என்பதைப் பணிவுடனும் பவ்யத்துடனும் கண்ணியத்துடனும்,

கடமையுடனும் தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன். அவர்தாங்க என் இதய தெய்வம், தன்மானத் தந்தையின் நாத்திக இயக்கத்திலே வளர்ந்து உரமேறி இதயதெய்வத்தின் அருளிலே வழிபட்டுக் கிளர்த்து அந்தத் தங்கத் தலைவனின் பொன்னார் திருவடிகளே சரணமென்று புகலடைந்து விழுந்து கிடக்கும் இந்த ஏழைத் திருத் தொண்டனின் எளிய சொற்கள் என்னவென்றால் அவர் புகல்வதே மெய் அவரே எங்கள் இதயதெய்வம் - இறுதித் தெய்வம் - உறுதித் தெய்வம் - ஒரே தெய்வம் - உலகத் தெய்வம் - 'ஒப்பற்ற தெய்வம்..."

- உரையாடலை அமைச்சர் இன்னும் முடிக்கவில்லை. ஃபோனில் அவரைக் கூப்பிட்டிருந்த நிருபர் அலுப்படைந்து போய் 'கட்' செய்துவிட்டார். இந்த விநாடி வரை மாண்புமிகு முதல்வர் டாக்டர் தரணி காவலர் அடுத்துக்கூறிய படுஞாயிறு பற்றிய உண்மையில் சந்தேகமிருந்தாலும் இப்போது அந்தச் சந்தேகம் இந்த விநாடி தீர்ந்துவிட்டாற் போலிருந்தது. படுஞாயிற்றின் மூளை பற்றி நிருபருக்கே சந்தேகமாகி விட்டிருந்தது.

மாண்புமிகு டாக்டர் முதல்வர் தரணி காவலர் கூறியபடி படுஞாயிறு நிச்சயமாக 'மெண்டல்' ஆகிவிட்டதாகவே நிருபருக்குத் தோன்றியது இப்போது.

மறுநாள் கவர்னரும் சீஃப் செகரெட்டரியும் தங்களுக்குள் பேசிக் கொண்டார்கள்.

"என்னங்க ஒரே குழப்பமா இருக்கு? யார் மெண்டல்? யார் தெளிவா இருக்காங்கன்னே புரியலியே!"

"உஷ்! ஒண்ணும் மூச்சு விடாதீங்க! நமக்கு எதுக்கு வீண் வம்பு? ஏதாவது பேசினோம்னா நம்மையும் 'மெண்டல்'னு சொல்லிடப்போறாங்க?"

இந்தப் பயம் வந்தவுடன் பேசாமல் இருவருமே அந்த விஷயத்தை அப்படியே விட்டுவிட்டு அவரவர்களுடைய வீடியோவில் சினிமாப் பார்த்துப் பொழுது போக்கச் சென்றார்கள்.

**(தீபம், தீபாவளி மலர், 1987)**

## 170. சமர்ப்பணம்

கவிஞர் பிரேமதாசன் ரொம்பவும் 'சென்ஸிடிவ்', 'டச்சி', 'மூடிமேன்' - என்றெல்லாம் பலவிதமாக அவரைப் பற்றி அபிப்ராயங்கள். அன்பிற்காகவும், பிரியத்திற்காகவும் எதையும் செய்யக்கூடியவர் என்றும் அவரை நன்றாக அறிந்தவர்கள் கூறினார்கள். வேறு சிலர் 'முசுடு' என்றனர். காலத்தின் கண்ணாடியாகவும் புதுயுகத்து இலக்கியப் பிரதிநிதியாகவும் விளங்கிய பிரேமதாசன் நாட்டு மக்களிடையே புகழ், பிராபல்யம் மரியாதை அனைத்தையும் ஒரு சேரப் பெற்றிருந்தார். அவரோடு நின்று ஒரு புகைப்படம் எடுத்துக்கொள்ளப் பலர் தவித்தார்கள். ஓர் ஆட்டோகிராப் வாங்க மணிக்கணக்கில் காத்துக் கிடந்தார்கள். நேரில் கண்டு இரண்டு வார்த்தை பேசப் பலர் ஏங்கினார்கள்.

அந்தக் கோடையில் ஒரு பெரிய காவியம் எழுதுவதற்காகப் பிரேமதாசன் கூனூரில் ஒரு மாசம் போய்த் தங்கப் போவதாகத் தகவல் பரவியது. பத்திரிகைகளிலும் செய்தி வந்தது.

அவ்வப்போது பிரேமதாசன் திரைப்படங்களுக்கும் பாடல்கள் இயற்றி வந்ததால் இந்தக் கூனூர் 'டிரிப்' பற்றிய சேதி சினிமா வட்டாரத்திலும் கிசுகிசுவாகப் பரவியது. வியாபாரம், திரைப்படத் தயாரிப்பு, தியேட்டர்கள், எஸ்டேட், தொழில், கனரக இண்டஸ்ட்ரிஸ், மணி லெண்டிங் ஆகிய அனைத்திலும் ஈடுபட்டிருந்த 'மிட்டாபுரம் ஃபேமிலி' என்ற பணக்காரக் குடும்பம் கவிஞர் பிரேமதாசன் கூனூர் செல்லும் திட்டத்தைக் கேள்விப்பட்டுத் தங்கள் எஸ்டேட் பங்களாவிலேயே அவர் தங்கி எழுத வேண்டுமென்று ஆசைப்பட்டது. மிட்டாபுரம் குடும்பத்திற்கு விருந்தோம்பலிலும் உபசரிப்பதிலும் அப்படி ஒரு வெறி. யாரை உபசரிப்பது, எதற்காக உபசரிப்பது, என்பதில்கூட அக்கறை இருந்தது என்று சொல்லிவிட முடியாது. உபசரிக்க வேண்டும், பேர் வாங்க வேண்டும், அவ்வளவுதான்.

நகருக்கு வரும் கிரிக்கெட் வீரர் முதல், கிருமி நாசினிகளைப் பற்றிய நிபுணர் வரை, நாட்டியக் கலை மணி முதல் நாதஸ்வர வித்துவான் வரை யாரையும் அவர்கள் விட்டு வைப்பதில்லை. 'பப்ளிக் ரிலேஷன்ஸுக்காக' இதைப் பிரமாதமாகச் செய்து வந்தார்கள் அந்தக் குடும்பத்தினர். நாலு பேர் தங்களைப் பற்றிப் புகழ்ந்து பேச வேண்டும் என்பதே அவர்கள் ஆசை.

எங்கோ லத்தீன் அமெரிக்க நாடு ஒன்றிலிருந்து வரும் வாயில் பெயர் நுழையாத ஒரு குத்துச் சண்டை வீரரானாலும், ஜிம்பாப்வேயிலிருந்து வரும் ஒரு கறுப்புப் பாடகரானாலும், மிட்டாபுரம் 'கெஸ்ட் ஹவுஸில்' தான் பார்க்கலாம்.

தங்கள் விருந்தினர் ஊர் சுற்றிப் பார்க்க ஒரு ஏ.சி. செய்த பென்ஸ் கார். அவருக்குப் பிடித்த சமையல் என்றும் ஏற்பாடு செய்துவிடுவார்கள். தங்கள் விருந்தினரைப் பார்க்கவும், ஆட்டோகிராப் வாங்கவும் கெஸ்ட்ஹவுசுக்குத் தேடிவரும் கூட்டமும், அவர் மிட்டாபுரம் கெஸ்ட் ஹவுஸில் தங்கியிருப்பதாகப் பத்திரிகைகளில் வரும் ஒரு வரி அரை வரி நியூஸும், "மிட்டாபுரம், மிட்டாபுரம்தான் ஐயா! பாரி வள்ளல் மாதிரி யார் வந்தாலும் உபசரிக்கிறாங்க!" என்று ஜனங்கள் புகழும் பாமரப் புகழ்ச்சியுமே அவர்களுக்குப் போதுமானவை. வேறெதுவும் வேண்டாம்.

தங்களால் எந்தெந்த ஊர்களில் விருந்தினர்களை உபசரிக்க முடியுமோ அந்தந்த ஊர்களில் இப்படி விருந்தினர்களை வேறு யாரும் போட்டி வள்ளல்கள் கொத்திக் கொண்டு போய்விடாமல் தடுத்துத் தங்களிடமே தங்க வைத்துக் கொள்வதிலும் மிட்டாபுரம் குடும்பத்தார் நிபுணத்துவமே பெற்றிருந்தார்கள். பழைய நாளில் ஜமீன்தாராக இருந்த அந்தக் குடும்பத்தின் முன்னோர் தமிழ்நாட்டின் முக்கிய ஊர்களில் தர்மசத்திரங்களும், கட்டளைகளும் நடத்தியதுபோல் இப்போது 'கெஸ்ட் ஹவுசுகளை' வைத்து உபசரித்து வந்தார்கள்.

அதற்காகக் கண்ட கண்ட குப்பன், சுப்பனை எல்லாம் உபசரித்துவிட மாட்டார்கள். ஊர், உலகத்தில் பிரபலமானவர்களை மட்டுமே தேடி அழைத்து உபசரிப்பார்கள்.

கவர்ச்சி நடிகை கனககுமாரி ஊட்டியில் வெளிப்புறக் காட்சி படப்பிடிப்பிற்காகச் சென்றால்கூட மிட்டாபுரம் விருந்தினர் மாளிகை அவளை வரவேற்று உபசரிக்கும். கர்நாடக சங்கீத வித்வான் கானாம்ருத சக்ரவர்த்தி கந்தசாமி பாகவதர் வந்தாலும் மிட்டாபுரம் கெஸ்ட் ஹவுஸில் இதே உபசரிப்பைப் பெறலாம். பேதாபேதம் எதுவும் கிடையாது.

இதைக் கொண்டு மிட்டாபுரம் குடும்பத்தார் கனககுமாரியின் விசிறிகள் என்றோ கானாம்ருத சக்கரவர்த்தியின் சங்கீத ரசிகர்கள் என்றோ நீங்கள் அவசரப்பட்டு அனுமானம் செய்துவிட முடியாது. இரண்டிற்குமே அவர்களுக்கு நேரமில்லை. எந்த சிமெண்டிற்கு ஏஜென்சி எடுக்கலாம், எந்த இரும்பிற்கு டீலராகலாம், எந்தப் பெரிய ஊரில் இன்னும் சினிமா தியேட்டர் கட்ட இடமிருக்கிறது எந்தப் புது இண்டஸ்ட்ரிக்கு லைசென்ஸ் பெறலாம் என்பன போன்றவற்றை யோசிக்கவே அவர்களுக்கு நேரமில்லை.

அவற்றைச் செய்வதற்கே ஐயாயிரம் - பத்தாயிரம் என்று சம்பளத்தை அள்ளிக் கொடுத்து நிபுணர்களை நியமித்திருந்தார்கள். அவர்கள் எப்போதோ கிரீஸ் போட்டு முதல் தரமான பால்பேரிங்குகளைப் பொருத்தி முடுக்கிவிட்ட சக்கரங்கள் நிற்காமல் ஓடிக் கொண்டிருந்தன. நேரடியாக அந்தக் குடும்பத்தார் விருந்துபசாரத்தில் இறங்காவிடினும் நாடு முழுவதும் அந்தக் குடும்பத்தாரிடம் பி.ஆர்.ஓ.க்களாகவும், லையஸான்களாகவும், ஹோஸ்டெஸ்களாகவும் (உபசரணை அழகிகள்) இருந்தவர்கள் அதை வெற்றிகரமாகச் செய்தனர். பேர் வாங்கிக் கொடுத்தனர்.

'மிட்டாபுரம்' ஊழியர்கள் கவனமாகத் தேர்ந்தெடுக்கப்பட்டிருந்தனர். தங்கள் விருந்தினராக வரும் ஒருவரை விமான நிலையத்தில் வரவேற்கிற பி.ஆர்.ஓ முதல் விருந்தினர் விடுதியிலுள்ள ஏவல் ஆள் வரை - ஏதாவதொரு விதத்தில் எப்படியாவது விருந்தினர்களிடம் தங்கள் பெருமையைச் சொல்லிக் கொண்டிருக்குமாறு ஏற்பாடு செய்யப்பட்டிருக்கும் திறனை அந்தக் குடும்பத்தினர் பெற்றிருந்தனர்.

மிட்டாபுரம் டிரைவர்கள்கூட இதற்குப் பயிற்சி அளிக்கப்பட்டிருந்தனர். விமான நிலையத்திலிருந்து நகருக்குள் விருந்தாளியை அழைத்து வருகிறபோதே சாலையில் திடீரென்று ஒரு விநாடி காரை ஸ்லோ செய்து வலது பக்கமுள்ள ஓர் ஆறுமாடிக் கட்டிடத்தைச் சுட்டிக்காட்டி, "இது நம்ம முதலாளியோட பில்டிங்தாங்க... ஒரு இங்கிலீஷ் கம்பெனிக்காரன் இப்ப வாடகைக்கு இருக்கான்" என்பான் டிரைவர். அல்லது சம்பந்தமில்லாமல், "இப்ப முதலாளி ஊர்ல இல்லீங்க! மெர்க்காராவிலே புதுசா ஒரு நாலாயிரம் ஏக்கர் காபி எஸ்டேட் வாங்கியிருக்காரு. அங்கே போயிருக் காங்க" என்பான். இப்படி அடிக்கடி பெருமையாகச் சொல்லவும், போதிக்கவும் எல்லா மட்டத்திலும் பழக்கப்பட்டிருந்தனர். எல்லாரும் பயிற்றப்பட்டிருந்தனர்.

"மிட்டாபுரமா? அவங்களை எவனும் அசைச்சுக்க முடியாது! அவங்க கவர்மெண்ட் ஆஃப் இந்தியாவுக்குப் போட்டியா பாரலெல் டூரிஸம் 'டிபார்மெண்ட்டே' ரன் பண்றாங்க அப்பா" என்று ஜனங்கள் பேசிக் கொள்ளும் அளவுக்கு ஓர் அந்தஸ்து அவர்களுக்கு வந்திருந்தது. சமூக அந்தஸ்துள்ள விளையாட்டு வீரர், கலைஞர்கள், பிரமுகர்கள் ஆகிய பல துறையினரிடம் தங்களைப்பற்றிய இப்படிப் பேச்சுக்களை நன்கு பயிற்றப்பட்ட தங்கள் ஆட்கள் மூலமே பரப்ப இந்த விருந்துபசாரங்களை அவர்கள் பொறுத்துக் கொண்டு செய்து வந்தனர். இன்றுவரை 'மிட்டாபுரம்' குடும்பத்தாரின் இந்த நிர்வாக யந்திரம் பழுதுபட்டதில்லை. இதில் ஐந்தாம் படைகளும், துரோகிகளும் தோன்றியதில்லை. விசுவாசம் தப்பியதில்லை. இது பக்காவான ஏற்பாடாக இருந்து வந்தது.

ஒரு டிரைவரையோ, சமையற்காரனையோ, விருந்தினர் புகழ்ந்தால் அவர்கள் உடனே ஜென்டிலாக "எல்லாம் முதலாளி ஏற்பாடுங்க! அவங்க பெருமையாலே அத்தனையும் ஒரு குறையுமில்லாமே நடக்குது. நாம் வெறும் கருவிதானுங்களே" என்று மறுத்துவிட வேண்டும். இதை அனைவரும் செய்கிறார்களா இல்லையா என்பதைக் கவனிக்க அங்கங்கே முதலாளியின் ஒற்றர்கள்கூட இருந்தார்கள்.

"பணத்தை எவ்வளவு வேண்டுமானாலும் செலவழி! கவலையில்லை. அதனால் கிடைக்கிற புகழும், பெருமையும், கித்தாப்பும் மிட்டாபுரம் குடும்பத்துக்குத்தான் போக வேண்டுமே ஒழிய நடுவே யாரும் தட்டிப் பறிக்கக்கூடாது." இதுதான் அங்கு நிலவிய தத்துவம்.

இந்தத் தத்துவத்துக்குக் கட்டுப்பட்டுத்தான் அனைவரும் வேலை பார்த்தார்கள். முதலாளிக்கு முதுகு சொரியும் இந்த வேலையை நன்றாகவும் இதமாகவும் செய்கிறவர்களுக்கு விசேட கவனிப்பு, சலுகை, சம்பள உயர்வு எல்லாம் தாராளமாகவே கிடைத்தன.

பொதுவாகவே மிட்டாபுரம் குடும்பம் பண விஷயத்தில் கஞ்சத்தனம் பார்ப்பதில்லை. தாராளமாகவே கொடுத்தார்கள். பிடித்தவர்களுக்கு மேலும் தாராளம் காட்டினார்கள்.

**"ஏழை யென்றொருவன் - மீதமாக**
**இங்கிருக்கும் வரையிலே**
**கோழையாக நாமிருந்தால் – ஒரு**
**கொடுமையாகு மல்லவோ**
**தோழனே எழுந்து நில் - இத்**
**துயர்துடைத்து நம்மவர்**
**வாழவேணும் போரிடு! இதில்**
**வர்க்கஞானம் தேறிடு!"**

என்றெல்லாம் கவிதை எழுதியிருக்கும் பிரேமதாசனை மிட்டாபுரத்தாருக்குப் பிடிக்காதுதான். ஆனால், இதையெல்லாம் அவர்கள் படித்திருந்தால்தானே? "ஏழை எளியவர்களிடம் பேர் உள்ள கவிஞர். வளைத்துப் போட்டு உபசரிப்போம்" என்று முடிவு செய்தார்கள். உபசரிக்க ஆளனுப்பியும் வைத்தனர்.

கவிஞர்களைப் பற்றி - அவர்கள் எதை எப்படிப் பாடியிருந்தாலும் - மது-மாது இரண்டிற்கும் வசப்படுகிறவர்கள் - என்று மிட்டாபுரத்தாருக்கு மொத்தையாக ஓர் அபிப்பிராயம் உண்டு. அனுமானம்தான். ஆனாலும் அது உயர்வாக இல்லை.

மிட்டாபுரம் பி.ஆர்.ஓ. டிபார்ட்மெண்டின் சூப்பர் ஸ்டார் என்று பெயர் பெற்ற ஓமனே என்ற பதினெட்டு வயது இளம் வாளிப்பைக் கோயம்புத்தூருக்கு இரண்டு ஏர்-டிக்கெட்டுடன், பிரேமதாசனிடம் அனுப்பி வைத்தார்கள் அவர்கள்.

குமாரி ஓமனே பேரழகி. சிரித்தால் முத்து உதிரும். கிறங்க வைக்கிற சண்பகப்பூ மேனி. சதா எதையோ தேடித் துருவிக் கொண்டிருப்பதுபோல் பார்க்கும் கருவண்டுக் கண்கள். ஆடவும், ஆளவும் பிரியப்படும் செழிப்பான உடற்கட்டு அவளுடையது.

வாழ்வில் மிகவும் கட்டுப்பாடும் கொள்கையுமுள்ள கவிஞரான பிரேமதாசனே ஒருகணம் ஓமனேயை எதிரே பார்த்ததும் திணறிப் போனார். பொதுமாதிரி இவர்களைப் பீடித்துவிட்டது. நீங்கள் யார்? என்ன எழுதியிருக்கிறீர்கள்? ஏன் மக்களால் ஓகோ என்று கொண்டாடப்படுகிறீர்கள் என்பதை எல்லாம் சிந்தித்து அவரவர்கள் தராதரம் பார்த்து இவர்கள் உங்களையோ பிறரையோ உபசரிப்பதில்லை. மக்கள் கொண்டாடுகிறவர்களை நாமும் கொண்டாடிவிட வேண்டும் என்ற ஒரே குருட்டு நோக்கம்தான். உங்களுக்கும் - புகழ்பெற்ற குத்துச்சண்டை வீரர் ஒருவருக்கும் இவர்களிடம் உபசரணையில் வித்தியாசம் இராது. இன்று நீங்கள். நாளை யாரோ ஒரு சாமியார். நாளன்றைக்கு ஒரு சங்கீத வித்வான். அடுத்த நாள் ஒரு கிரிக்கெட் ஆட்டக்காரர். அதற்கு அடுத்த நாள் ஒரு நடிகர் - அதற்கும் அடுத்த நாள் ஒரு கம்பெனி டைரக்டர் - என்று இந்த உபசரணைகள் தொடர்ந்து கொண்டே போகும். தங்களை

மதிக்கவும், வியக்கவும், புகழவும்,கொண்டாடவும் மிட்டாபுரம் குடும்பம் தன்னிடம் தாராளமாயுள்ள அதிகப் பண வசதியை இப்படி எல்லாம் செலவழிக்கிறது. அவ்வளவுதான்'' என்று ஒமனே உள்ளதைச் சொல்லிவிட்டாள்.

இதைக் கேட்டுக் கவிஞர் பிரேமதாசனுக்கு ஆத்திரமே வந்துவிட்டது.

“இப்படி டம்பாச்சாரிகளிடம் நான் பலியாக முடியாது ஒமனே!” என்று கத்தினார் அவர். தான் ஏமாற்றப்பட்டு விட்டோம் என்பதுபோல் உணர்ந்து கொதித்தார் அவர்.

தன் கவிதைகள் - அவற்றின் சிறப்பு பெருமை ஆகியவற்றைப் பற்றி ஒரு சிறிதும் அறியாத ஒரு பணக்காரன் விருந்தாளியாகத் தான் மாட்டிக் கொண்டோம் என்று உணர்ந்தபோது மனம் கொதித்தது. ஒமனே அவரைச் சமாதானப்படுத்தினாள்.

“கோபப்படாதீர்கள்! இப்படி ஒரு வாய்ப்புக் கிடைத்ததால்தானே நான் உங்கள் இரசிகையாக முடிந்தது?”

“உன் முகதாட்சண்யம் தான் என்னைத் தடுக்கிறது ஒமனே! இன்னும் சில நாட்களில் இந்தக் காவியம் முடிந்துவிடும்! பிறகு இந்த மிட்டாபுரம் ஆட்களின் பக்கம் தலைவைத்துக்கூடப் படுக்கமாட்டேன். இப்போது இந்த உபசரிப்பைப் பெற்ற கடனைத் தீர்க்கப் புத்தகம் அச்சானதும் ஒரு பிரதியை ‘மிட்டாபுரம்’ உரிமையாளருக்கு அனுப்பி வைக்கப் போகிறேன். என் ஆட்டோகிராப்புடன் எனது காவியத்தின் முதல் பிரதியைப் பெற ஐயாயிரம் பத்தாயிரம் தந்து வணங்கி நிற்கக் காத்திருக்கிறார்கள். என் கவிகளின் அருமையை அறியாதவருக்கு முதல் பிரதியை நான் அனுப்புவது என் பெருந்தன்மை என்றுதான் கூற வேண்டும்.”

தொடர்ந்து நாட்கள் ஓடின. கூனூரில் வேலை முடிந்து பிரேமதாசன் ஊர் திரும்பும்போது ஒமனேயும் திரும்பினாள்.

கவிஞர் பிரேமதாசன் எழுதிய புதுக்காவியத்தில் முதற்பிரதி கவியின் சொந்தக் கையெழுத்தில் ‘இதை எழுதுவதற்கான லௌகீக வசதிகளைச் செய்து கொடுத்த மிட்டாபுரம் குடும்பத்தாருக்கு’ என்று எழுதப்பட்டுக் கையொப்பத்துடன் வந்தது.

ஆனால், உள்ளே வலது கைப்பக்கம் மூன்றாம் பக்கத்தில் சமர்ப்பணம் என்ற தலைப்பின் கீழ் ஒமனே சிரித்துக் கொண்டிருப்பது போன்ற ஒரு புகைப்படத்தைப் பிரசுரித்து, “இந்தப் புன்முறுவலின் சொந்தக்காரிக்கு இக்காவியத்தைப் படைக்கிறேன்'' - பிரேமதாசன் என்று கொட்டை எழுத்துகளில் அச்சிட்டிருந்தது. மிட்டாபுரத்தார் செய்த உதவிகள் பற்றி எங்குமே இல்லை.

புத்தகம் வந்து சேர்ந்த பதினைந்தாவது நிமிஷம் ‘பாஸ்’ கூப்பிடுவதாக ஒமனேயிடம் பியூன் வந்து சொன்னான்.

அவள் எதிர்பார்த்த அழைப்புத்தான். போய் நின்றாள். நிறுத்தி வைத்தே விசாரணை நடந்தது. சீஃப் பி.ஆர்.ஓ.வும் கூட இருந்தார். புத்தகம் அவள் முன் பிரித்து எறிவது போல் போடப்பட்டது.

"கம்பெனிக்கு அல்லது இந்த மிட்டாபுரம் ஃபேமிலிக்கு நல்ல பேர் வாங்கித் தர்றதுக்குத்தானே உன்னை மாதிரி ஹோஸ்டெஸ் எல்லாம் மாசச் சம்பளத்துக்கு வச்சிருக்கோம்?"

வீசி எறிந்த புத்தகத்தை எடுத்து ஒன்றிரண்டு பக்கங்களை விரித்த ஓமனேயின் விழிகள் வியப்பால் விரிந்தன.

"அவரா இப்படி எழுதிட்டாரு. நான் சொல்லி அவர் செய்யலே... சொல்லப் போனால் ரெண்டொரு வாட்டி ஜாடை மாடையா 'மிட்டாபுரம் குடும்பத்தாருக்கு இந்நூல் சமர்ப்பணம்'னு எழுதுங்கன்னு கூட நான் சொல்லிப் பார்த்தேன்."

"உன் படம் எப்படி அவருக்குக் கிடைச்சுது?"

"கேட்டார்!நானே பிரியப்பட்டுக் குடுத்தேன்... கேக்கறப்போ எதுக்குன்னு அவரும் சொல்லலே... நானும் விசாரிக்கல்லே."

"அதாவது மிட்டாபுரம் ஃபேமிலியைவிட அவருக்கு நீ ரொம்ப நெருக்கம்னு உலகத்துக்குக் காமிச்சிக்கணும்னு உனக்கு ஆசை."

"நிச்சயமா இல்லை..."

"பின்னே எப்பிடி இந்த மாதிரி நடந்தது?"

"ஒரு கவிஞரை இப்பிடி எழுது, அப்பிடி எழுதுன்னு யாரும் வற்புறுத்த முடியாதுன்னு அவரோட பழகினப்ப நான் புரிஞ்சுக்கிட்டேன்."

"ஆல்ரைட்! நெள யூ கேன் கோ" பத்து நிமிஷத்தில் ஓமனேயின் டெர்மினேஷன் ஆர்டரும் மூன்று மாதச் சம்பளத்துக்கான செக்கும் அவள் மேஜையைத் தேடி வந்தன.

நோயாளித் தந்தையையும், வயதான தாயையும், பள்ளியில் படிக்கும் தங்கை, தம்பிகளையும் காப்பாற்ற இனி என்ன செய்யப் போகிறோம் என்ற கேள்வி பூதாகாரமாக எழுந்து அவளை வழிமறித்தது. பழைய நாளில் இப்படி நடந்திருந்தால் காலைக் கையைப் பிடித்து மன்றாடிக் கெஞ்சியிருப்பாள். கவிஞர் பிரேமதாசனோடு ஒரு மாத காலம் பழகி அவர் கவிதைகளை இரசித்ததின் விளைவு - அவளுக்குள் அவளது உத்தியோகத்துக்குச் சிறிதும் ஒத்துவராத மானம் ரோஷம் எல்லாம் ஏற்பட்டிருந்தன. கண் கலங்கி நின்றாள். நேரே கவிஞர் பிரேமதாசனைச் சந்திக்கச் சென்றாள்.

"சிரிப்புச் சக்கரவர்த்தினியே! செளந்தரியப் பெட்டகமே வா!" - என்று உற்சாகமாக அவளை வரவேற்றார் கவிஞர்.

"ஏன் இப்படிச் செய்தீர்கள்?"

"எதைப் பற்றிக் கேட்கிறாய் ஓமனே?"

"புத்தகத்தில் என் படத்தைப் போட்டு - 'இந்தப் புன்முறுவலின் சொந்தக்காரிக்குப் படையல்' - என்று ஏன் எழுதினீர்கள்?"

“எனக்குப் பிடித்தது, எழுதினேன். எந்தப் புன்னகை என் பேனாவுக்கு உல்லாசமும் உற்சாகமும் தந்ததோ அந்தப் புன்னகையை நான் கௌரவிப்பதை அதன் உரிமைக்காரி கூட தடுக்க முடியாது.”

“நீங்கள் ‘மிட்டாபுரம் வள்ளல்களுக்கு நன்றியுடன்’ என்று ஒரு வரி எழுதினால் கூடப் போதும் என்று நானே சொல்லியிருந்தேனே?”

“உன் முதலாளிக்குப் புத்தகம் அனுப்பியிருந்தேனே? கிடைத்ததா? பார்த்தாரா?”

“கிடைத்தது, பார்த்தார். உடனே என்னைக் கூப்பிட்டு மூன்று மாதச் சம்பளத்தையும் கையில் கொடுத்து வேலையைவிட்டுப் போகச் சொல்லியும் ஆயிற்று.”

“சபாஷ்... ஒரு கவியின் வாக்குக்கு எத்தனை சக்தி பார்த்தாயா ஓமனே?”

“நான் தெருவில் அநாதையாக நிற்பதில் உங்களுக்கு ஏன் இத்தனை சந்தோஷம்?”

“அநாதையாவது ஒன்றாவது? புலம்பாதே இன்று முதல் - இந்த விநாடி முதல் நீ என் அந்தரங்கக் காரியதரிசியாகிறாய்.”

“சம்பளம்...”

“நான் சம்பாதிக்கும் புகழ், பொருள், சுகம், துக்கம், மகிழ்ச்சி, இன்னல் எல்லாவற்றிலுமே சரி பாதி உனக்கு...”

“அப்படிக்கூட ஓர் உத்தியோகம் உலகத்தில் உண்டா? என்ன?”

“உண்டு ஓமனே! உலகத்தின் மிகமிகப் பழைய உத்தியோகம் அது. ‘சகதர்மிணி’ என்பது அந்த உத்தியோகத்தின் பெயர். பெண் தோன்றியபோதே அவளுக்கென்று ஏற்பட்டுவிட்ட உத்தியோகம் அது.”

சொல்லிவிட்டு ஓமனேயை நெஞ்சாரத் தழுவினார் கவிஞர் பிரேமதாசர்.

“இதுதான் இந்த உத்தியோகத்திற்கு ஜாயினிங் ரிப்போட்டாக்கும்” என்று சொல்லிச் சிரித்தாள் ஓமனே.

**(அமுதசுரபி, தீபாவளி மலர், 1987)**

## 171. பிள்ளைப் பூச்சிகள்

**சு**ற்றி இருந்தவர்கள் அவளை இலட்சியம் செய்ததாகவே தோன்றவில்லை. அங்கிருந்த மேஜை, நாற்காலி, சுவர், தரை எல்லாவற்றையும் போல அவளையும் ஒரு ஜடப்பொருளாகவே நினைத்து மறந்துவிட்ட மாதிரி இருந்தது. அவளுக்கும் மனம் உண்டு, உணர்வுகள் உண்டு, மூளை உண்டு, கண்களும் பார்வையும் உண்டு என்பதை அவர்கள் ஏனோ மறந்துதான் போயிருந்தார்கள்.

எல்லாருடைய அலட்சியத்துக்குக்கும் முக்கியமான காரணம் அவளுக்காகத் தட்டிக் கேட்பவர் யாருமில்லை என்பதுதான். அவள் ஏறக்குறைய ஓர் அநாதை மாதிரிதான்.

மேலேயிருந்து கீழ்வரை யார் எவர் என்ற பேதா பேதமின்றி அந்த அலுவலகத்தில் அனைவருடைய ஏளனத்திற்கும் எகத்தாளத்திற்கும் இலக்கானாள் அவள்.

இடது கையில் முழங்கைக்குக் கீழே எதுவுமில்லாதபடி ஒரு விபத்தில் உடல் ஊனமுற்றது அவளது மைனஸ் பாய்ண்ட். அதுவே ஒரு வகையில் ப்ளஸ் பாயிண்ட் ஆகியிருந்தது.

சிறு வயதிலேயே இந்த விபத்து நிகழ்ந்துவிட்டதால் அவளைத் திருமணம் செய்து கொள்ள யாரும் முன்வரவில்லை. முக வசீகரம், எடுப்பான உடற்கட்டு, மூன்றாவது ஃபாரம் வரை படிப்பு எல்லாம் இருந்தும் உடல் ஊனம் அவளை மூலையில் பிடித்துத் தள்ளிவிட்டது. வேலை கிடைத்தாலும் மனக்குறை குறைதான்.

சர்வதேச உடல் ஊனமுற்றோர் ஆண்டில் அவளுக்கு ஒரு யோகம் அடித்தது. அந்த ஆண்டு முழுவதும் உடல் ஊனமுற்றோருக்கு வேல வாய்ப்புக்கள் தாராளமாக அளிக்கப்பட்டன. தேடித் தேடி வேலை கொடுத்தார்கள்.

மிஸ். மாரியம்மாளுக்கும் ஒரு பெரிய சர்க்கார் அலுவலகத்தில் குடி தண்ணீர் நிரப்பி வைக்கும் வேலை கொடுக்கப்பட்டது. அந்த அலுவலகத்தின் மூன்று மாடிகளிலும் இருந்த பதினெட்டுப் பானைகளிலும் தண்ணீர் தீரத் தீர நிரப்ப வேண்டும். டம்ளர்கள், பானைகளை அன்றாடம் நன்கு கழுவிச் சுத்தமாக வைத்துக் கொள்ள வேண்டும். அலுவலகத்தைக் குப்பை நீக்கிச் சுத்தம் செய்து பெருக்கும் வேலையையும் அவளே கவனித்து வந்தாள். காலை பத்து மணிக்கு அலுவலகம் என்றால் எட்டரை மணிக்கே அவள் போயாக வேண்டும். அலுவலகம் தொடங்குவதற்கு முன்பே, பெருக்குதல், தண்ணீர் நிரப்புதல் போன்ற வேலைகளை முடித்தாக வேண்டும்.

வேலை செய்யும் பெண்களுக்கான ஹாஸ்டல் ஒன்றில் தங்கிக் கொண்டிருந்த மாரியம்மாள் இங்கும் இதே வேலையைச் செய்ய வேண்டியிருந்தது. காலை 8 மணி வரை ஹாஸ்டலிலும் பின்பு எட்டரை முதல் ஐந்து வரை அலுவலகத்திலுமாக அவள் வேலை செய்ய வேண்டியிருந்தது. மறுபடி மாலை ஐந்தரை முதல் இரவு ஒன்பது, பத்து வரை ஹாஸ்டலில் வேலை சரியாயிருக்கும். அவளும் அந்த ஹாஸ்டலிலேயே 'செர்வண்ட்ஸ் குவார்ட்டர்ஸ்' போன்ற ஒரு பகுதியில் தங்கிக் கொண்டதால் அங்கிருப்பவர்கள் நேரம் காலம் பார்க்காமல் வேலை ஏவினார்கள்.

எல்லாரும் மாரியம்மாளை ஓர் இயந்திரமாகச் சொன்னதைச் செய்ய ஓடியாடும் கருவியாக நினைத்தார்களே ஒழியத் தன்மானமுள்ள மனுஷியாகவே நினைக்கவில்லை. அவளைப் பொருட்படுத்தவுமில்லை. அவளுக்காகக் கவலைப்படவுமில்லை. பயப்படவுமில்லை. எதை ஏவினாலும், எப்போது ஏவினாலும் செய்யக் கடமைப்பட்டவள் என்றே அவளைப் பற்றி எண்ணினார்கள். அலுவலகத்திலும், ஹாஸ்டலிலுமாக இரட்டை வருமானம் வந்தாலும் இரண்டிடங்களிலும் தன்னை யாரும் ஒரு சிறிதும் மதிக்கவில்லை என்பது உறுத்தியது. வேலியில்லாத பயிரைப் போலிருந்தாள் அவள். அலட்சியத்தைக் கூடப் பொருட்படுத்தாமல் விட்டுவிடலாம். அவமானத்தை அப்படிப் பொருட்படுத்தாமல் இருக்க முடியாது.

அவள் வேலை பார்த்த அந்த அலுவலகத்தின் மூன்று மாடிகளிலுமாக அறுநூறு, எழுநூறு பேர் பணி புரிந்தாலும், தினசரி காலையில் அவள் தன் காரியங்களைத் தொடங்கும்போது வெறிச்சோடிக் கிடக்கும்.

அலுவலகத்தின் வாட்ச்மேனும் சார்ஜெண்ட்டும், அந்த வளாகத்திலேயே ஒரு மூலையில் குடியிருந்த சூப்பிரண்டெண்டும் தான் அவள் தன் பணியைத் தொடங்கும்போது பார்க்க முடிந்தவர்கள்.

சூப்பிரெண்டெண்டு அவ்வளவாக நல்ல மனிதர் இல்லை. சார்ஜெண்டு, வாட்ச்மேன் எல்லாரும் சூப்பிரெண்டெண்டுக்கு அடங்கியவர்கள்.

ஒரு நாள் காலையில் மாரியம்மாள் முதல் மாடியைப் பெருக்கிச் சுத்தம் செய்து தண்ணீர் நிரப்பிக் கொண்டிருந்த போது, சார்ஜெண்டும் வாட்ச்மேனும் வந்தார்கள். அவளை நைச்சியமாக வேண்டினார்கள்:

"இந்தா மாரியம்மா! சூப்பிரண்டெண்டு ஐயா வீட்டிலே எல்லாரும் ஒரு கல்யாணத்துக்காக வெளியூர் போயிருக்காங்க. ஐயா மட்டும்தான் இருக்காரு... சிரமத்தைப் பாராமே, பெருக்கிச் சுத்தம் பண்ணிறனும், பாத்திரங்களையும் கழுவிக் குடுத்துடணும்... இன்னிக்கி ஒரு நா மட்டும்தான்..."

மாரியம்மாள் பதில் எதுவும் சொல்லாமல் தயங்கினாள். அவளுடைய மௌனம் உடன்பாடாகத் தோன்றவில்லை என்பதோடு எதிர்மறையாகத் தோன்றவும் செய்தது. அவர்கள் விட்டுவிடவில்லை. வற்புறுத்தினர்கள். வேறு வழியின்றி வேண்டா வெறுப்பாக அவள் சம்மதிக்க வேண்டியதாயிற்று.

"முதல்லே ஆபீஸ் வேலையெல்லாம் முடிச்சுப்போட்டு அப்பாலே வாரேன்."

“ஐயையோ அது முடியாது மாரியம்மா! சூப்பிரெண்டு ஐயா ஆபீஸுக்குக் கிளம்பியாகணுமே! முதல்லே அங்கே வந்து வீட்டு வேலையை முடிச்சுக் கொடுத்தால்தான் அவரு கிளம்ப முடியும்” என்றார் சார்ஜெண்ட்.

ஆபீஸ் காம்பவுண்டிலும், அலுவலகத்திற்குள்ளும் ஆள் நடமாட்டமே இல்லாமல் வெறிச்சோடிக் கிடந்த அந்த வேளையில் இன்னும் ஒதுக்குப்புறமாக விலகி இருந்த சூப்பிரெண்டெண்டின் வீட்டுக்குள் போக அவளுக்குத் தயக்கமாயிருந்தது. சூப்பிரெண்டெண்டின் குடும்பத்தார் எல்லாரும் ஏதோ கல்யாணத்துக்காக வெளியூர் போயிருப்பதாக வேறு சார்ஜெண்டே சொல்லுகிறார். மாரியம்மாளின் தயக்கத்துக்கு இவை எல்லாம்தான் காரணமாயிருந்தன.

சாதாரணமாக அந்த சூப்பிரரெண்டெண்டின் பார்வையே நன்றாக இராது. அந்த மனிதரின் அலுவலக அறையைச் சுத்தம் செய்யப் போன இரண்டொரு வேளைகளில் கூட அவருடைய பேச்சும், நடத்தையும் பிடிக்காமல் மிரண்டு பதறி அவசர அவசரமாக வெளியேறியிருக்கிறாள் மாரியம்மாள்.

அந்த சூப்பிரண்டெண்டு மாதிரி முரடர்களைப் பொறுத்தவரை - கொட்டாதவர்கள் எல்லாம் பிள்ளைப் பூச்சிகள். கொட்டுகிறவர் கள் அல்லது கொட்ட முடிந்தவர்களென்று தோன்றுகிறவர்களுக்குத்தான் அவர் பயப்படுவார். தன்னையும் அவர் பிள்ளைப் பூச்சியாய் நினைப்பது இருக்கட்டும். தான் தேள் இல்லை. தன்னால் யாரையும் கொட்ட முடியாது என்பது அவளுக்கே புரிந்துதான் இருந்தது.

பிள்ளைப் பூச்சிகள்-தேள்களைப் போல நடந்து கொள்ள முடியாதென்று அவள் உணர்ந்துதான் இருந்தாள்.

அவள் சூப்பிரெண்டெண்டின் அவுட் ஹவுஸிற்குள் நுழைந்ததும் முதலில் வாசற் கதவருகேயே தரையைப் பெருக்கிச் சுத்தம் செய்யத் தொடங்கினாள்.

உள்ளே போக அவளுக்குப் பயமாயிருந்தது.

“உள்ளே வாயேன் மாரியம்மா.”

“இல்லீங்க! முதல்லே இங்கே வாசல்பக்கத்தைச் சுத்தம் பண்ணி முடிச்சிடறேன்.”

“அட, சும்மா உள்ளே வா - சொல்றேன்.”

இந்த வார்த்தைகளைச் சொல்லும்போது சூப்பிரெண்டெண்டின் முரட்டுக் கை அவளது தோள்பட்டையை அழுத்திக் கொண்டிருந்தது. அந்த மனிதரின் சூடான மூச்சுக்காற்று அவள் உணர்வில் பதிய முடிந்த அளவு நெருக்கமாக உறைத்தது.

அவ்வளவுதான்! உடல் பதறி வியர்க்க அவள் அப்படியே துடைப்பத்தை வீசி விட்டு வெளியே ஓடிவிட்டாள். மாரியம்மாள் பிள்ளைப் பூச்சியானாலும் அவளுக்கு முன்ஜாக்கிரதையுணர்ச்சி அதிகம். அந்த நிலைமைக்கு மேல் அங்கே இருப்பது அபாயம் என்று உள்ளுணர்வு கூறியதால் தான் அவள் வெளியேறி ஓடியிருந்தாள்.

மறுநாள் காலை அவள் ஆபீஸுக்குள் நுழைந்தபோது சார்ஜெண்ட் அவளிடம் தமிழில் டைப் செய்யப்பட்ட ஒரு ‘மெமோ’வை நீட்டினான்.

முந்திய தினம் காலையில் அவள் அலுவலகக் காம்பவுண்டிலிருந்த சூப்பிரெண்டெண்டின் வீட்டில் நுழைந்து பாத்திரங்களைத் திருட முயன்றதாகவும், சூப்பிரெண்டெண்டு அவளைக் கையும் களவுமாகப் பிடிக்க முயன்றபோது அவர்மீது துடைப்பத்தை வீசிவிட்டு ஓடியதாகவும் குற்றம் சாட்டி அவளை ஏன் வேலையிலிருந்து நீக்கக்கூடாது எனக் கேட்டிருந்தது. அவள் அவுட்ஹவுஸில் திருட முயன்றதை வாட்ச்மேனும், அலுவலக சார்ஜெண்டும் பார்த்ததாக வேறு சாட்சியங்கள் ஜோடிக்கப்பட்டிருந்தன.

பிள்ளைப்பூச்சியாகவே தொடர்ந்து இருப்பது எவ்வளவு அபாயகரமானது என்பது மாரியம்மாளுக்கு இப்போது புரிந்தது. பிள்ளைப்பூச்சியாக இருந்தே அழிய வேண்டும் அல்லது தேளாக மாற வேண்டும். தொடர்ந்து பிள்ளைப்பூச்சியாகவே இருந்து பிழைக்க முடியாதென்று தெரிந்தது.

மாரியம்மாள் உஷாரானாள். இந்த அலுவலகத்தில் வேலைக்குச் சேர்வதன் முன் தான் பணிபுரிந்த ஒரு தொழிலதிபரின் வீட்டைத் தேடிச் சென்றாள். அந்தத் தொழிலதிபர் ஒரு வக்கீலும் ஆவார். சூப்பிரெண்டெண்டு வீட்டில் நடந்ததைக் கூறி அந்த மெமோவை அவரிடம் காட்டினாள்.

"இதெல்லாம் வெளியே பேசி விவகாரம் பண்ணி ஜெயிக்கிற விஷயமில்லே. நீ பெண்பிள்ளையா இருக்கிறதாலே உன் பேரும் இரசாபாசமாக அடிபடும்."

"அது சரிதாங்க! ஆனா அதுக்காக அபாண்டமாய்ப் பழி சுமத்தினாங்கன்னா எப்பிடி ஒத்துக்க முடியும்? நாம செய்யாததைச் செஞ்சதாக் குத்தம் சொல்றாங்களே?"

"என்ன கெடுதல் பண்ணினாலும் பதிலுக்கு எதிர்க்கிற சக்தி உங்கிட்ட இல்லேங்கிற துணிவிலேதான் இப்பிடி எல்லாம் பண்றாங்க..."

"நியாயம் ஒண்ணு இருக்குங்களே...?"

"இருக்கா? இருந்துதுன்னு சொல்லு மாரியம்மா! முன்னாள் மந்திரி, முன்னாள் தலைவர் மாதிரி நியாயம், தருமம்லாம்கூட முன்னாள் விவகாரம் ஆயிரிச்சே...?"

"அந்த இராவணன் எம் பொழைப்பிலே மண்ணைப் போட்டுருவான் போலிருக்கே ஐயா?"

"யாரு அந்த இராவணன்?"

"அதான் சூப்பிரண்டோட பேரு."

"பேருக்குப்பொருத்தமா ரொம்ப மனுசங்க வாழ மாட்டாங்க... இந்த ஆளு இராவணன் வேலையே பண்றாரு...?

சொல்லிவிட்டுச் சிரித்தார் அவர்.

"என்னை விட்டுடுங்க. ஆபீஸ்ல கிளார்க்கு, டைப்பிஸ்ட்னு இருக்கிற வேற பல குடும்பப் பொண்ணுங்களும் இந்த ஆளாலே தவிக்குதுங்க ஐயா..."

வக்கீல் பதில் ஏதுவும் சொல்லாமல் யோசனையில் ஆழ்ந்தார். பின்பு சிரித்துக் கொண்டே மாரியம்மாளிடம் சொன்னார்.

“இப்ப ஒரு வேடிக்கை காண்பிக்கிறேன் பாரு... இராவணன் திணறும்படி ஒரு ராமசாமியை வரவழைக்கிறேன்... அது சரி... அந்த ஆபீஸ்லியோ, சூப்பிரண்டெண்ட் குவார்ட்டர்ஸிலேயோ போன் இருக்கா...?”

“குவார்ட்டர்ஸிலேயே இருக்குங்க.”

“உனக்கு நம்பர் தெரியுமா?”

“தெரியாதுங்களே...?”

அவரே அவள் எடுத்துக் கொடுத்திருந்த மெமோ கடிதத்திலே இருந்த அலுவலகப் பேரைப் பார்த்து டெலிஃபோன் டைரக்டரியை எடுத்துப் பக்கங்களைப் புரட்டிப் புரட்டி நம்பரைக் கண்டுபிடித்தார்.

டெலிஃபோனைச் சுழற்றினார். இது வேறு ஒரு நம்பருக்கு. எதிர்ப்புறம் யாரோ எடுத்தார்கள். இவர் கேட்டார் :

“மாநில பொதுச் செயலாளர் ராமசாமி வீடுங்களா?”

“..........”

“ராமசாமிதான் பேசறதா? நான் வக்கீல் கண்ணபிரான் பேசறேன். ஒரு அர்ஜெண்ட் மேட்டர். கொஞ்சம் உடனே இங்கே வர முடியுமா?”

“........”

“சரி, உடனே வந்துடுப்பா... உனக்காக வேறொருத்தரைக் காக்க வச்சிட்டிருக்கேன்...”

பத்து நிமிஷங்களில் போர்டிகோவில் ஒரு கார் சீறிப் பாய்ந்து கொண்டு வந்து நின்றது. கருகருவென்று அடர்ந்த தலைமுடியும், அரும்பு மீசையும் களையான முகமுமுள்ள ஓர் உயரமான இளைஞர் இறங்கி வக்கீலை நோக்கிக் கை கூப்பியபடி வந்தார். மாரியம்மாள் இந்த ஆளைப் பல இடங்களில் பார்த்திருக்கிறாள். தினசரிகளிலும் புகைப்படங்கள் வந்திருக்கின்றன. ஆளும் கட்சியின் முக்கியப்புள்ளி. ‘கிங் மேக்கர்’ என்று கூட மக்கள் பேசிக் கொள்வது உண்டு. அவளும் வந்தவரைக் கும்பிட்டாள். கண்ணபிரான் இராமசாமியின் குடும்ப வழக்கறிஞர் என்பது தவிர மிகவும் நெருங்கிய நண்பர் போலிருக்கிறது.

உள்ளூர மாரியம்மாளிடம் நம்பிக்கை ஊற்றுக் கண் திறந்தது.

அவளையும் வைத்துக் கொண்டே கண்ணபிரான் இராமசாமியிடம் விவரிக்கலானார் :

“என்னப்பாது? உங்க ஆட்சியிலே உடல் ஊனமுற்றோர் ஆண்டிலே உடல் ஊனமுற்ற பெண்களை மேலும் ஊனப்படுத்தறாங்க... இதுதான் நீங்க உடல் ஊனமுற்றோர் ஆண்டைக் கொண்டாடற லட்சணமா?”

“என்ன நடந்திச்சுன்னு சொல்லுங்கண்ணே! உடனே கவனிக்கிறேன்...”

கண்ணபிரான் மாரியம்மாளுக்குக் கொடுக்கப்பட்ட மெமோவைக் காட்டி இராமசாமிக்கு எல்லாவற்றையும் விளக்கிச் சொன்னார்.

கேட்டுவிட்டு ஆத்திரமடைந்த இராமசாமி, "தாய்க்குலத்துக்கு இப்படிக் கேடு சூழ்ந்த கயமை எதுவாயிருந்தாலும் அது தண்டிக்கப்படும் அம்மா! நீங்க கவலைப்படாதீங்க" என்று சொற்பொழிவுப் பாணியில் மாரியம்மாளிடம் கூற, இராமசாமியை இடைமறித்து,

"இந்தா பாரு ராமசாமி! இது ரொம்ப நாசூக்கான விஷயம். முள் புதரிலே விழுந்த வேஷ்டியை எடுக்கிற மாதிரி. கையிலேயும் முள் குத்தப்படாது, வேஷ்டியும் கிழியக்கூடாது. ஜாக்கிரதையாச் சமாளிக்கணும்" என்றார்.

"என்ன செய்யலாம்னு நீங்களே சொல்லுங்கண்ணே!"

"இதான் அந்த சூப்பிரண்டோட ஃபோன் நம்பர்..."

இராமசாமி அந்த நம்பரை வாங்கிக் கொண்டு கண்ணபிரானின் முகத்தைப் பார்த்தான். அவர் அவனிடம் சொன்னார்.

"இவளுக்கு அவன் கெடுதல் பண்ணக்கூடாது. அதை அவனுக்குப் புரிய வைப்பதற்காக நாம் அவனுக்குக் கெடுதல் பண்ணித்தான் ஆகணும்கிறது இல்லே! மறுபடி இவங்ககிட்டே வாலாட்டினா - இது பிள்ளைப்பூச்சியா இராது... தேளாகத்தான் மாறவேண்டியிருக்கும். மாறும்னு - புலப்படுத்தினால் போறும்..."

"கவலைப்படாதீங்கண்ணே! உங்க முன்னாடி இப்பவே கச்சிதமா முடிக்கிறேன் பாருங்க..."

இராமசாமி டெலிபோனைச் சுழற்றினான்.

எதிர்ப்புறம் போன் எடுக்கப்பட்டது.

"ஆபீஸ் சூப்பிரரெண்டு இராவணனோட பேசணும். நான் மாநிலப் பொதுச் செயலாளர் - தலைமை நிலையத்திலிருந்து பேசறேன்..."

எதிர்ப்புறம் போனை எடுத்திருந்த சார்ஜெண்ட் அல்லது வாட்ச்மேன் போனை இராவணனிடம் கொடுத்திருக்க வேண்டும்.

"மிஸ்டர் இராவணன்! நான் மாநிலப் பொதுச் செயலாளர் இராமசாமி பேசறேன். உங்க ஆபீஸ்ல மாரியம்மாள்னு ஒரு ஸ்வீப்பர் இருக்காங்களா...? அவங்களை - அவங்க சேவைக்காக இந்த உடல் ஊனமுற்றோர் ஆண்டில் எங்க கட்சி சார்பிலே கௌரவிக்கணும்னு ஒரு பங்ஷன் அரேன்ஜ் பண்ணிக்கிட்டிருக்கோம்... நோ... நோ... நீங்க இதுக்காக என்னைப் பார்க்க வரணும்ங்கிறது இல்லே... அந்தம்மாவைப் பார்த்து என் சார்பிலே பாராட்டையும் மரியாதையையும் தெரிவியுங்க போதும்."

மேற்கொண்டு எதுவும் பேசாமல் போனை வைத்தான் இராமசாமி.

"போதுமா அண்ணே...?"

"நீ எமகாதகன் அப்பா..."

"நீங்க எப்பவும் போல ஆபீசுக்குப் போங்கம்மா... ஒண்ணும் கண்டுக்காதீங்க. நான் பேசினேன்கிறது ஆபீஸ் பூராப் பரவிடும். ஒரு பய உங்ககிட்டே வாலாட்ட மாட்டான் இனிமே..."

"நன்றிங்க..."

மாநிலக்கட்சிப் பொதுச் செயலாளர் இராமசாமியையும் வக்கீல் கண்ணபிரானையும் வணங்கி விடைபெற்றுக் கொண்டு புறப்பட்டாள் மாரியம்மாள்.

அவள் துடைப்பமும் கையுமாகச் சூப்பிரெண்டெண்டின் அறையைப் பெருக்கிச் சுத்தம் செய்ய நுழைந்தபோது, சார்ஜெண்ட் பயபக்தியோடு ஓடிவந்து, "வணக்கம் அக்கா! சூப்பிரெண்டு உங்களைப் பார்க்கணும்னாரு" என்றாள். வணக்கமும் புதிது. அக்காப் பட்டமும் புதிது. அவள் எதையும் காண்பித்துக் கொள்ளாமல் சகஜமாகத் தன் பணியில் ஈடுபட்டாள்.

"வணக்கம் அண்ணி!"

இது சூப்பிரெண்டெண்ட் இராவணன். அவள் பதில் வணக்கம் சொல்லக்கூட இல்லை. அவராகவே மேலும் பேசிக் கொண்டே போனார். "என்ன இருந்தாலும் நீங்க வயதுல மூத்தவங்க... உங்களை அண்ணின்னு கூப்பிடறதுதான் முறை."

அவள் பதில் எதுவும் சொல்லாமல் கருமமே கண்ணாகத் தன் வேலையைச் செய்துகொண்டிருந்தாள்.

அவளைவிடச் சற்று மூத்த வாட்ச்மேன், "இப்பவே லேட்டாயிரிச்சு. நீ பெருக்கி முடிக்கவே ஒம்பதரைஆயிரும். அப்பாலே தண்ணீ ரொப்ப முடியாது. உனக்குப் பதிலா இன்னிக்கி நானே தண்ணி ரொப்பிடலாம்னு பார்க்கிறேன்" - என்று அனுசரணையாகக் குரல் கொடுத்தான்.

இதற்கும் அவள் பதில் சொல்லவில்லை. குனிந்த தலை நிமிராமல் தரையைப் பெருக்கிக் கொண்டிருந்தாள். தன்னளவில் இன்னும் பிள்ளைப்பூச்சியாகத்தான் இருந்தாள். ஆனால், மற்றவர்களுக்குத் தேளாகத் தோன்றினாள் போலிருக்கிறது... அது போதுமே.

"டீ குடிக்கிறியா மாரியம்மா..." - வாட்ச்மேனின் குரல் பாசத்தோடு ஒலித்தது.

"வேண்டாம்..."

தன் வேலையில் குறிப்பாக அவள் தொடர்ந்து தரையைப் பெருக்கிக் கொண்டிருந்தாள்.

அந்த ஆபீஸில் காலம் காலமாகத் தொடர்ந்து சுத்தம் செய்ய வேண்டிய குப்பை கூளம் அத்தனையும் அன்று ஒரு நாளிலேயே சுத்தமாகிவிட்டாற் போன்ற அவ்வளவு நிம்மதியோடும் திருப்தியோடும் பெருக்கிக் கொண்டிருந்தாள் மாரியம்மாள்.

**(கல்கி, தீபாவளி மலர், 1987)**

## 172. ஸ்ரீ ராமனைக் காட்டிலும்

**எ**வ்வளவுதான் படித்திருந்தாலும், என்னதான் நாகரிகம் அடைந்திருந்தாலும்; மனிதர்கள் இதில் மோசமாகத்தான் இருப்பார்கள் என்று தோன்றியது. அவதார புருஷனாகிய இராமனே விதிவிலக்காக நடந்து கொள்ளவில்லை என்றால் சாதாரண மனிதர்கள் எம்மாத்திரம்?

'அவன்' முதல் தடவை டெலிஃபோன் பண்ணி ஐந்நூறு ரூபாய் ரொக்கத்தோடு லால்பாக் தோட்டத்தில் சந்திக்கும்படி சொன்னான். நீண்ட தயக்கத்துக்குப் பின் கௌரி யாருக்கும் தெரியாமல் ஓர் ஆட்டோ வைத்துக் கொண்டு போய்ப் பணத்தை அழுதுவிட்டு வந்தாள்.

உண்மையில் அந்த முறை அவன் தனக்கு வறுமை, பண முடை, சோற்றுக்கே இல்லை என்றுதான் பண உதவி கேட்டதாகச் சொன்னான். வேறு பயமுறுத்தல் எதுவும் இல்லை.

"பள்ளிப் பருவத்துப் பால்ய சிநேகிதத்துக்காகவும் கூடப் படித்தவன், சொந்த ஊர்க்காரன் சிரமப்படுகிறானே என்ற இரக்கத்துக்காகவும், இந்தத் தடவை எப்படியோ உதவி பண்ணிட்டேன்! இனிமேல் நீ என்னைத் தொந்தரவு பண்ணக் கூடாது சங்கர்!" - என்று கௌரி அவனிடம் மன்றாடிய போது, "பிராமிஸ்ஸா சொல்றேன்! எனக்கு வேலை கிடைச்சு முதல் மாதச் சம்பளம் வாங்கினதும் இந்த ஐந்நூறை உனக்கு நான் வட்டியோடு திருப்பிக் குடுத்துடறேன்" என்றான் சங்கர்.

ஒரு நாள் கணவன் ஆபீஸ் புறப்பட்டுப் போனதும் மல்லேசுவரத்துக்கு வீடு தேடி வந்து காலிங் பெல்லை அழுத்தினான் சங்கர். அவளுக்குத் திக்கென்றது.

"என்னைத் தப்பா நெனைச்சுக்காதே கௌரீ! நான் ஒரு ஆபத்துலே சிக்கிண்டிருக்கேன்; தப்பணும்னா உடனே 'ஒரு தவுஸண்ட் ருபீஸ்' வேணும். நீதான் கொஞ்சம் பெரிய மனசு பண்ணணும்! இந்த ஊர்லே எனக்கு வேற யாரையும் தெரியாது."

அவன் துணிந்து வீடு தேடி வந்ததைக் கண்டவுடனே கௌரியின் ஆத்திரமும் பதற்றமும் அதிகமாயின. நிஜமாகவே கஷ்டம் பொறுக்க முடியாமல் வருகிறானா அல்லது மெல்ல மெல்லத் தன்னை 'பிளாக் மெயில்' செய்து பணம் பறிக்கும் முயற்சியா? சாமார்த்தியமாக அவனைப் பங்களாவுக்குள் விடாமலே முகப்பில் தோட்டத்தை ஒட்டி இருந்த வராந்தாவிலேயே ஒரு நாற்காலியைப் போட்டு உட்கார வைத்துவிட்டு, "இரு! காபி கொண்டு வருகிறேன்" என்று உள்ளே சென்றவளைப் பின்னாலேயே ஓடிவந்து வழி மறித்து, "இந்த ட்ரிக் எல்லாம் எங்கிட்ட வச்சுக்காதேடீ

கௌரி! போலீசுக்கு ஃபோன் அது இதுன்னு முயற்சி பண்ணினா, எல்லாம் ரசாபாசமாய்ப் போயிடும். 'என் உயிரினுமினிய சங்கர்! நீயின்றி நானில்லை. நாம் இன்றுபோல் என்றும் இணைபிரியாமல் வாழ்வோம்'னு நீ உன் கைப்பட எழுதின லெட்டர் இன்னும் என்னிடம் தான் இருக்கு" - என்று மிரட்டினான் அவன். இதை அவள் எதிர்பார்க்கவில்லை.

அவள் மனத்தில் எழுந்த சந்தேகம் உறுதிப்பட்டது. இது 'பிளாக் மெயில்' தான். ஃபோனில் பணம் கேட்டுப் புலம்பிக் கொண்டிருந்தவன் வீட்டுக்கே வந்து விட்டான் இன்று. கௌரி தன் கோபத்தையும், எரிச்சலையும் உள்ளூற அடக்கிக் கொண்டு சமையற்காரப் பெண்மணியிடம் சொல்லி அவனுக்கு ஒரு காபி கலந்து கொண்டு போய்க் கொடுத்த பின் இதமாகவும், தன்மையாகவும், சுபாவமான குரலில், "இத பாரு சங்கர்! நீ அவர் வீட்டிலே இருக்கிறப்போ வா... உன்னை அவருக்கு இண்ட்ரொடியூஸ் பண்ணி விட்டுடறேன். உன் கஷ்டம் தீர உனக்கு ஒரு நல்ல 'ஜாப்' கூட அவராலே தேடித் தர முடியும்" - என்று ஆரம்பித்தாள்.

கௌரி தன் கணவனைப் பற்றிப் பேச்சை ஆரம்பித்ததும் சங்கரின் முகத்தில் கலவரமும் பதற்றமும் தென்பட்டன.

"என்னை எப்படியாவது வளைச்சுப் பிடிச்சு மாட்டி வைக்கலாம்னு பார்க்கிறியா கௌரீ? அதெல்லாம் நடக்காது. நான் ஒண்ணும் ஏமாளி இல்லே. எனக்கு வேண்டியதை எப்படிக் கறக்கிறதுன்னு தெரியும் எனக்கு" - என்று கடுமையாகவும் கறாராகவும் பதில் வந்தது அவனிடமிருந்து.

இப்போது உண்மை மிகவும் கசப்பானதாக அவளுக்குப் புரிந்தது.

சினிமாக்களிலும் நாடகங்களிலும் பத்திரிகைக் கதைகளிலும் படித்திருந்த, பார்த்திருந்த கற்பனைகள் இன்று அவள் வாழ்விலேயே நடக்கின்றன. அவளே பரிதாபத்திற்கும், பரிதவிப்பிற்கும் உரிய கதாநாயகியாகி இருந்தாள் இன்று.

அவள் அவனோடு பள்ளி இறுதி வகுப்புப் படிக்கும் போது விளையாட்டாக எழுதிய ஒரு கடிதம் - அதன் வாக்கியங்கள் கூடச் சங்கர் டிக்டேக் செய்தவைதான். அவனுடைய கையெழுத்து முத்து முத்தாக இருக்கும். தன் கையெழுத்து அப்படித் திருந்துவதற்கு என்ன செய்ய வேண்டும் என்று அவள் சக மாணவனான அவனிடம் யோசனை கேட்டதற்கு அவன் கொடுத்த பயிற்சிப் பாடங்களில் ஒன்று இந்த மாதிரிக் கடிதம் எழுதுவது. அந்த அறியாப் பருவத்தில் அவள் அதை நம்பினாள்.

"எதையும் பிரியப்பட்டுச் செய்தால் நன்றாக வரும். நீ எனக்குப் பிரியமாக ஒரு கடிதம் எழுதுவதாக நினைத்துக் கொண்டு எழுது. நல்லா வரும். எழுத்தும் அச்சுக் குண்டா இருக்கும்."

"நான் உனக்கு அப்பிடி எழுதறது தப்புடா?"

"தப்பு ஒண்ணுமில்லேடி! தமிழ் சார் கிளாஸ்ல அடிக்கடி சொல்றதை நீ கேட்டதில்லையா? பிரியப்பட்டு அக்கறை காட்டி மனசு வச்சு எழுதினால் எந்த

எழுத்தும் முத்து முத்தா இருக்கும். நான் உனக்கு எழுதறதெல்லாம் முத்து முத்தா இருக்கே, அதுக்கு என்ன காரணம்னு யோசிச்சியா?''

கௌரி இப்படி அன்று எழுதிய கடிதம், விளையாட்டுத்தனமாக அவனோடு கைகோத்தபடி எடுத்துக் கொண்ட ஒரு புகைப்படம் இரண்டும்தான் இன்று அவளுக்குத் தலைவலிகள் ஆகி இருந்தன. அவளைப் பயமுறுத்த அவனுக்கு ஆயுதங்களாயின.

திடீரெனப் புற்றிலிருந்து பாம்பு படமெடுப்பதுபோல் இத்தனை ஆண்டுகளுக்குப் பின் அவற்றை வைத்துக் கொண்டு தன்னை சங்கர் 'பிளாக்மெயில்' செய்ய முடியும் என்று, அவள் அன்று - அந்தப் பழைய நாட்களில் கனவு கூடக் கண்டிருக்கவில்லை. சூது வாது தெரியாத பேதைப் பருவம் அது.

இன்று கௌரியின் கணவன் பெங்களூரில் ஒரு கம்பெனி 'எக்ஸிகியூட்டிவ்'. மிக மிக நல்லவன். கண்ணுக்கு அழகும் பண்பும் ஒரு சேர அமைந்த ஒரு கணவன் என்று கௌரியே அவனைப் பற்றிப் பெருமிதம் கொண்டிருந்தாள். கார், டிரைவர், சமைக்க ஆள் என்று அவளை மகாராணி போல் வைத்துக் கொண்டிருந்தான் அவன். அவர்களுக்குக் கல்யாணமாகி ஒரு வருடம்கூட முழுமையாக முடியவில்லை. ராமசந்திர கிருஷ்ண குமார் என்ற முழுப்பெயர் ராம்.கே. குமார் என்ற சுருங்கியிருந்தது. கௌரியின் பெற்றோர்கள் சென்னை அடையாற்றில் இருந்தனர். குமாரின் பெற்றோர்கள் மயிலாப்பூரில் இருந்தனர்.

இளசுகள் இரண்டும் பெங்களூரில் ஹனிமூன் அனுபவிப்பதுபோல் ஹாயாக இருக்கட்டும் என்று அவர்களைத் தனியாக விட்டிருந்தனர் பெற்றோர்.

குமார் அவளை மிக மிகச் சுதந்திரமாக நடத்தினான். "கௌரி! கட்டுப் பெட்டித் தனமாகப் பழைய கிராமாந்தரத்து மனைவிபோல் 'அவர் இவர்லாம்' தேவையில்லை. நீ ஸ்ட்ரெயிட்டா எந்தத் தயக்கமும் இல்லாமல் குமார் என்றே என்னைக் கூப்பிடலாம். நான் உன்னை எப்பிடிக் கௌரி என்று வாய் நிறையக் கூப்பிடறேனோ அப்படியே நீயும் என்னைக் கூப்பிட உரிமை உண்டு'' என்று அவனே அவளை வற்புறுத்திச் சொல்லியிருந்தான்.

"என்னை மாதிரி ஒரு கம்பெனி எக்ஸ்ஸிக்யூடிவ் நேரம் காலம் பார்க்காமல் அலைய வேண்டியிருக்கும். வேற யாருக்காவது 'ட்ரீட்' குடுக்க வெளியிலேயே லஞ்ச்சையோ, டின்னரையோ முடிச்சுக்க வேண்டியிருக்கும். அதுனாலே நீ 'அவர் வந்ததும் சாப்பிட்டுக்கலாம்'னு எந்த வேளையிலும் எனக்காக வீணாக் காத்திருக்கக்கூடாது. அது உன் ஹெல்த்தைப் பாதிக்கும். இதிலே எல்லாம் நாம பத்தாம் பசலியாயிருக்க வேண்டாம்'' என்று செல்லமாக அவளைக் கடிந்து கொள்வான் குமார். அத்தனை தங்கமான குணம்.

இராமன் கிருஷ்ணன் இருவரையும் இணைத்த பெயர் அவனுக்கு. இருந்தாலும் அவன் கிருஷ்ணனைப் போல் பல கோபிகைகளின் சகவாசமுள்ளவனோ, இராமனைப் போல் பிறருக்காகச் சொந்த மனைவியையே நெருப்பில் நுழையச்

சொல்கிறவனாகவோ இல்லை. இது பொதுவான கணிப்புத்தான். ஆனால் இராமனின் சந்தேகம் என்பது ஒவ்வோர் ஆண்பிள்ளையுடனும் கூடப் பிறந்தது. கிருஷ்ணனின் பலரைக் கவரும் குணம் ஒவ்வோர் ஆணுக்கும் உண்டோ இல்லையோ, இராமனின் சந்தேகம் ஒவ்வோர் ஆணுக்கும் நிச்சயமாக உண்டு. தெய்விக அவதாரம் என்று கொண்டாடப்படும் இராமனையே கேவலம் ஒரு சிறிய சந்தேகம் வெறும் மிருக குணமுள்ள சாதாரண மனிதனாக்கி விட்டதென்றால் மற்றவர் எம்மாத்திரம்!

அவர்களுடைய உயர்நிலைப் பள்ளி நாளில் எழுதியது எடுத்தது என்றாலும் - அந்தப் பழைய கடிதங்கள், புகைப்படங்களுடன் சங்கர் தன் கணவன் குமாரைச் சந்தித்து இல்லாததும், பொல்லாததுமாக அளந்தான் என்றால் குமாரின் மனநிலை எப்படி மாறக்கூடும்? கற்பனை செய்த போதே கௌரியின் உடல் நடுங்கியது.

இரண்டாவது தடவையும் அவள் அவனுக்கு - அவனது மிரட்டலுக்கு அடிபணிந்தாள். மூச்சுவிடாமல் லாக்கரைத் திறந்து புத்தம் புதிய நோட்டுக்களாக எண்ணிப் பத்து நூறு ரூபாய் நோட்டுக்களை சங்கரிடம் கொண்டு வந்து கொடுத்தாள்.

"எல்லா நோட்டையுமே இப்பிடி முழுசு முழுசாக் குடுத்தா எப்படி? இங்கேருந்து நான் போக வேண்டிய இடத்துக்கு ஆட்டோவில் போகப் பத்து ரூபாயாவது ஆகுமே? அதுக்குச் சேஞ்ஜ் வேணாம்?"

மறு பேச்சுப் பேசாமல் மேலும் ஒரு பத்து ரூபாய்த் தாளை எடுத்து வந்து இயந்திரமாக இயங்கி, அவனிடம் நீட்டினாள் கௌரி. எப்படியாவது அவன் அங்கிருந்து தொலைந்தால் போதும் என்றிருந்தது அவளுக்கு.

இன்னொருவனுடன் கடிதத் தொடர்பு இருந்தது, இருக்கிறது என்ற சந்தேகம் ஏற்பட்டுவிட்டதன் காரணமாக மனைவியைக் கணவன் குரூரமாகக் கொலை செய்ததாகப் பத்திரிகைகளில் வெளிவந்த செய்திகள் ஒவ்வொன்றாக அவளுக்கு நினைவு வந்தன.

அவள் முகத்தில் மலர்ச்சி பறிபோனது. இரவில் உறக்கம் பறிபோனது. சதா எதையோ பறி கொடுத்தது போல் அவள் இருந்ததைக் கண்டு குமாரே அன்றிரவு சாப்பிடும்போது அவளை விசாரித்தான்.

"கௌரி! உனக்கு என்ன வந்தது? ஏன் என்னமோ மாதிரி இருக்கே? உடம்பை ஏதாவது பண்றதா? இல்லே, நான் ஏதாவது என்னையறியாமலே உன்னைக் கடிந்து சொல்லிட்டேனா? உன் வாட்டத்துக்கு என்னதான் காரணம்?"

"அதெல்லாம் ஒண்ணுமில்லே! நான் எப்பவும் போலத்தான் இருக்கேன்."

அவள் மழுப்பினாள். அவன் நம்பவில்லை. மறுநாள் அதிகாலையிலேயே பம்பாயிலிருந்து வருகிற கம்பெனி எம்.டியை வரவேற்க விமான நிலையம் போயாக வேண்டும் என்று குமார் விடிந்ததுமே புறப்பட்டுப் போய்விட்டான்.

அன்று பதினொரு மணிக்கு மேல் கௌரிக்கு மறுபடி சங்கர் ஃபோன் செய்தான். இந்தத் தடவை அவனுடைய கோரிக்கையில் தொகை ஏறியிருந்தது. ஐயாயிரம் ரூபாய்

வேண்டுமாம். போனால் போகிறதென்று கௌரியின் மேல் கருணை கூர்ந்து இரண்டு நாள் தவணை கொடுத்திருந்தான்.

"இப்படி வதைப்பதற்குப் பதில் நேரே வந்து என்னைக் கழுத்தை நெரித்துக் கொலை பண்ணிவிட்டுப் போயிடு" - என்று கௌரியே ஃபோனில் அவனிடம் குமுறினாள்.

அவன் அவள் குமுறலைப் பொருட்படுத்தவேயில்லை.

"மறந்துடாதே! நாளன்னிக்கிக் காலையிலே பதினொரு மணியிலேருந்து பன்னிரண்டு மணிக்குள் அதே பழைய லால்பாக் கார்டன்ல கிளாஸ் ஹவுஸ் அருகே எதிர்பார்த்துக் காத்திருப்போன்" - என்று காரியத்தை மீண்டும் வற்புறுத்திவிட்டு ஃபோனை வைத்துவிட்டான்.

இப்படிச் சித்திரவதையை அநுபவிப்பதற்குப் பதில், தானே கணவனிடம் எல்லாவற்றையும் தெளிவாகச் சொல்லிவிட்டு, 'அவன் விட்ட வழி விடட்டும்' என இருக்கலாமா என்று கூட அவளுக்குத் தோன்றியது.

குமார் அவள் பேருக்கு ஒரு 'ஸேவிங்ஸ்' கணக்கு வைத்துக் கொடுத்து அவ்வப்போது இரண்டாயிரம் மூவாயிரம் என்று வீட்டுச் செலவுக்காக அதில் டெபாஸிட் செய்வான். இது அநேகமாக ஒவ்வொரு மாதத் தொடக்கத்திலும் நடக்கிற வழக்கம். அப்போது மாதத் தொடக்கமும் இல்லை. அதில் இருந்ததை எடுத்து, ஏற்கெனவே அவனுக்கு - அதுதான் அந்தக் கிராதகன் சங்கருக்கு - அழுதாயிற்று.

'இப்போது இனி மேல் ஸேவிங்க்ஸ் அகௌண்டில் விட வேண்டிய மினிமத்தை விட்டு விட்டு எடுத்தால் கூட இரண்டாயிரம்தான் தேறும். பாக்கி மூவாயிரத்துக்கு எங்கே போவது? கணவனுக்குத் தெரியாமல் மார்வாரி கடையில் நகை எதையாவது அடகு வைக்கலாமா? அவருக்குத் தெரிந்து விட்டால் என்ன செய்வது?' ஒரேயடியாக மனம் குழம்பினாள் அவள். மண்டையே வெடித்துச் சிதறிவிடும் போலிருந்தது. கெடுவுக்கு நடுவே ஒரு நாள் தான் மீதமிருந்தது. நாளை மட்டும்தான். நாளன்றைக்குக் காலையில் பதினொரு மணிக்கு அவனைப் பார்த்துப் பணம் கொடுத்தாக வேண்டும்.

அன்று இரவு மணி பதினொன்றரை. கணவன் அயர்ந்து தூங்கிக் கொண்டிருந்தான். அவள் படுக்கையில் புரண்டு கொண்டிருந்தாள். டெலிஃபோன் மணி அடிக்க ஆரம்பித்தது. வெளியே ஹாலில் இருந்த டெலிஃபோனுக்குப் படுக்கை அறையில் ஒரு எக்ஸ்டென்ஷன் இருந்தது. ஒரு பட்டனை அமுக்கினால் உள்ளே இருந்தே டயல் செய்து பேசலாம். வெளியே ஒருவர் - உள்ளே ஒருவராக இருவர் ஒரே சமயத்தில் ஒரு 'இன்கம்மிங்' காலைக் கேட்கவும் வசதி இருந்தது.

பதற்றத்தோடு கௌரி வெளியே ஓடிப் போய் ஹாலில் ஃபோனை எடுத்தாள். எதிர்ப்புறத்து ஆளை - தன்னோடு பேசுகிற ஆளைக் குரல் மூலம் உறுதிப் படுத்திக் கொள்ளாதவரை வாய் திறக்கத் தயங்குவது போல மௌனம் சாதித்தாள்.

"யெஸ்... கௌரி ஹியர்" - என்று அவள் குரல் கொடுத்த பின்பே எதிர்ப் பக்கத்திலிருந்து பதில் வந்தது.

"நான்தான் சங்கர்! நாளன்னிக்கிக் காலையிலே பதினொரு மணியிலேருந்து பன்னிரண்டு மணிக்குள் - நேரத்திலே மாறுதல் இல்லே. ஆனால் இடத்தை மாத்தறேன். லால்பாக் - கார்டன்ல நாளன்னிக்கி கிளாஸ் ஹவுஸ்லே என்னமோ லிங்காயத் கான்பரன்ஸ்னு பேப்பர்ல பார்த்தேன். அதனாலே ஏகப்பட்ட போலீஸ் நிற்கும். அந்த இடம் சரிப்படாது. அதனால் நீ விதான் சௌதா எதிர்த்தாப்ல கப்பன் பூங்கான்னு இருக்கே, அங்கே அதுக்குள்ளே ஒரு 'சில்ரன்ஸ் பார்க்' இருக்கு. அதுனோட முகப்புக்கு வந்துடு! உனக்கு இன்னொரு ஆப்ஷன் கூட ஆஃபர் பண்றேன். நாளன்னிக்கே மொத்தமா இருபத்தையாயிரம் கொண்டு வந்து தர்றதா இருந்தா எங்கிட்ட இருக்கிற உன்னோட லெட்டர்ஸ், போட்டோ எல்லாத்தையுமே திருப்பிக் குடுத்துடலாம். முடிஞ்சா இருபத்தையாயிரத்தோடு வா..."

அவள் பதிலை எதிர்பார்க்காமலே எதிர்ப் பக்கம் ஃபோன் துண்டிக்கப்பட்டுவிட்டது. இருபத்தையாயிரத்தைக் கொண்டு போய் அழுது எல்லாவற்றையும் திருப்பி வாங்கிக் கொண்டு வந்து விட்டால் இந்த 'பிளாக் மெயிலில்' இருந்து நிரந்தரமாக விடுதலை கிடைக்குமே என்றுகூடத் தோன்றியது.

'இவனைப் போல ஓர் அயோக்கியனை எப்படி நம்புவது? எல்லாவற்றுக்கும் ஜெராக்ஸ் காப்பி எடுத்து வைத்துக் கொண்டு நம்மை ஏமாற்றினாலும் ஏமாற்றிவிடுவான் என்று பயமாகவும் தயக்கமாகவும் கூட இருந்தது. நல்ல வேளை! குமார் அயர்ந்து உறங்கிய பின்பு இந்த ஃபோன் வந்து தொலைத்தது. இல்லாவிட்டால், அவரே எடுத்துப் பேசும்படி ஆகியிருக்கும். என் குட்டும் உடைபட்டு நாறியிருக்கும்.

மறுநாள் பூராவும் ஐயாயிரரூபாய் பணம் தயார் செய்து கொள்ளுவதில் கழிந்து விட்டது. காலையில் காபி யருந்தும் போது குமார் மறுபடி அவளைச் செல்லமாகக் கடிந்து கொண்டான்.

"வர வர நீ புதிராக மாறிண்டிருக்கே கௌரி! ராத்திரியெல்லாம் நீ தூங்காமப் புரண்டு புரண்டு படுத்தது எனக்குத் தெரியும். ராத்திரி தூக்கம் இல்லாததாலே தான் உன் முகம் இப்பப் பேயறைஞ்ச மாதிரி இருக்கு." -

அவன் அவளைக் கூர்ந்து நோக்கிப் புன்னகை புரிந்தான். பின்பு மெல்லச் சொன்னான்; "என்னை நீ ஏமாத்த முடியாது கௌரீ! உன் முகத்திலே பழைய சிரிப்பையும், மலர்ச்சியையும் காணலியே? சில சமயம் புரியாத்தனத்தினாலயும் நமக்குள் நாமே ஒரு நரகத்தைப் படைத்துக் கொண்டு சிரமப் படுகிறோம். மனசு திறந்து பேசினால் முக்கால்வாசி வேதனை போயிடும்."

"........"

"சரி! உங்கிட்ட பேசிப் பிரயோஜனமில்லே. ராத்திரித் தான் தூக்கமில்லே. பகல்லியாவது தூங்கு..." - என்று கூறிவிட்டு அலுவலகம் புறப்பட்டான் குமார்.

இப்படி இன்று கணவன் தூண்டித் தூண்டிக் கேட்டதிலிருந்து நள்ளிரவில் ஃபோன் கால் வந்தது-தான் வெளியே ஹாலில் உள்ள மற்றொரு ஃபோன் மூலம் பேசியது எல்லாம் அவனுக்குத் தெரிந்திருக்குமோ என்று முதலிலே

சந்தேகமாயிருந்தாலும் அப்புறம் அவன் தன்னிடம் பேசிய தோரணையிலிருந்து அவனுக்கு எதுவும் தெரிந்திருக்க வழியில்லை என்ற முடிவுக்கு வந்தாள் கௌரி.

கப்பன் பார்க்கில் போய் ஆட்டோவிலிருந்து இறங்குகிற போது உடம்பெல்லாம் வேர்த்துக் கொட்டியிருந்தது. கையில் எப்போதோ பட்டுப் புடவை வாங்கிய இடத்தில் கொடுத்த பாலிதின் பையில் அதிக கனமில்லாமல் இருப்பதற்காக ஐம்பது நூறு ரூபாய்களாக மாற்றித் தயாராயிருந்த ரூபாய் ஐயாயிரம் சில்லறையாக ஒரு பத்து அல்லது இருபது வேண்டுமென்று அவன் கொசுறுக்கு மன்றாடினால் - அதையும் கொடுப்பதற்கு ஐந்து ரூபாய் நோட்டுக்கள் நாலு இவற்றோடு கப்பன் பூங்கா சில்ரன்ஸ் கார்னரில் அவள் இறங்கும்போது மணி பத்து ஐம்பத்தைந்து. அதிக ஆள் நடமாட்டமில்லை. ஒரு மரத்தடியில் மோட்டார் சைக்கிளை நிறுத்திவிட்டு யாரோ இரண்டு மூன்று முரட்டு ஆட்கள் சிகரெட் புகைத்தவாறே பேசிக் கொண்டிருந்தனர்.

சங்கர் சொல்லியிருந்தபடி குழந்தைகள் பூங்கா முகப்பில் நின்று கொண்டிருந்தான். அவளைக் கண்டவுடன், "என்ன கொண்டு வந்திருக்கே கௌரி? சின்ன அமவுண்டா? பெரிய அமவுண்டா? இதோ, இந்தக் கவர்ல அந்த லெட்டர்ஸ் போட்டோல்லாம் தயாராகப் போட்டு வச்சிருக்கேன். உனக்கு நம்பிக்கையில்லேன்னா நீயே இதைப் பிரிச்சு எல்லாம் சரியாயிருக்கான்னு பார்த்துட்டு அப்புறம் அமவுண்டை எங்கிட்ட குடு! போதும்" என்று தன் கையிலிருந்த தடித்த கவரை அவளிடம் நீட்டினான் அவன்.

"வேண்டாம் சங்கர்! இப்ப எங்கிட்ட அவ்வளவு இல்லே! இந்த 'அஞ்சுக்கே' கைவளையலை மார்வாரி கடையிலே வச்சிருக்கேன்." -

இதைக் கேட்டு அவன் ஏளனமாகச் சிரித்தான். "யார் கிட்ட கதை அளக்கிறே! என்னைக் கிறுக்கன்னு நினைச்சியா நீ? மாசம் பத்தாயிரத்துக்கு மேலே சுளை சுளையாச் சம்பாதிக்கிற புருஷன். புத்தம் புது பென்ஸ் கார். மல்லேசுவரத்திலே தோட்டத்தோட பெரிய பங்களா. இவ்வளவையும் வைத்துக் கொண்டு மார்வாரி கடையிலே கைவளையை அடகு வச்சு ஐயாயிரம் வாங்கினேன்னு கப்ஸா அடிச்சா... பைத்தியம் கூட நம்பாது அதை."-

"காரு, வீடு, எல்லாம் கம்பெனி அரேன்ஜ் பண்ணிக் கொடுத்தது. சொந்தமில்லே."

"சரி! பிஸினசுக்கு வரேன். அப்போ நீ வெறும் ஐயாயிரம் தான் கொண்டாந்திருக்கே... ரைட்... பின்னாலே பார்த்துக்கலாம். பொன் முட்டை இடற வாத்தை இப்பவே வயிற்றைக் கிழிக்க வேணாம்... கொண்டாந்திருக்கிறதைக் குடு... இஃப் யூ டோண்ட் மைண்ட்... ஹாவ் ஏ கிளான்ஸ்" - என்று அந்தக் கவரை அவளிடம் அவசர அவசரமாக நீட்டினான். அவள் அதை வாங்கினாள். நடுங்கும் கைகளால் ஏதோ ஓர் ஆவலைத் தவிர்க்க முடியாமல் உறையைப் பிரித்தாள். முதல் கடிதத்திலிருந்து, "என் உயிரினு மினிய சங்கர்!" என்ற அவளது பள்ளிப் பருவக் கையெழுத்து எட்டிப் பார்த்தது. புகைப்படங்களும் இருந்தன.

அவற்றை அரைகுறையாகப் பார்த்த பயமும் ஆற்றாமையுமாக அவள் மறுபடி உறையிலிட்டுத் திருப்பிக் கொடுக்க இருந்த போது மிக அருகே காலடி ஓசை கேட்டது.

நிமிர்ந்தால் சற்று முன் மரத்தடியில் சிகரெட் பிடித்துக் கொண்டிருந்த இரண்டு (போலீஸ்காரர்கள் - மப்டியில் இருந்தவர்கள் என அறிய முடிந்தது) முரடர்களும் அவள் கணவன் குமாரும் நின்றனர். சூழ்ந்து கொண்டது போல வளைத்து நின்றனர்.

உடனே சங்கர் ஓட முயன்றான். முடியவில்லை. பிடிபட்டான். அவனிடமிருந்து கிடைத்த உறை இன்னும் கௌரியிடம் தான் இருந்தது. இன்னும் அவனிடம் திருப்பிக் கொடுக்கப் படவில்லை.

"நீ ஒண்ணும் பயப்படாதே! எனக்கு எல்லாம் தெரியும் கௌரீ! அன்னிக்கி ராத்திரி இவனோட நீ ஃபோன்ல பேசினதை நானும் பெட்ரூம் டெலிபோன் மூலம் எடுத்துக் கேட்டேன்" - என்றான் குமார்.

சற்றுத் தள்ளி நிறுத்தப் பட்டிருந்த போலீஸ் ஜீப் அருகே வந்தது. சங்கரைப் பிடரியில் பிடித்துத் தள்ளி ஜீப்பில் ஏற்றிவிட்டு, "சார்! 'அவங்க' வாக்கு மூலம் தேவை! அப்புறம் 'அவங்களோட' நீங்களும் ஸ்டேஷனுக்கு வந்து எழுதிக் குடுத்துட்டுப் போயிடுங்க" என்று குமாரிடம் சொல்லி விட்டு ஜீப்பைக் கிளப்பிக் கொண்டு போனார்கள் அவர்கள்.

"என்னை மன்னிச்சுடுங்கோ! நான் முதல்லேருந்தே உங்ககிட்ட எல்லாத்தையும் சொல்லாமலிருந்தது என் தப்புத்தான்... மனசறிய நான் ஒரு பாவமும் பண்ணலே..."

இப்போது அவள் குரலில் குற்ற உணர்வு தொனித்தது. கணவன் தன் மேல் என்னென்ன சந்தேகப் படப் போகிறானோ, எதிர் கால வாழ்வு எப்படி எப்படி நரகமாகப் போகிறதோ என்று மனம் உள்ளூறப் பதை பதைத்துக் கொண்டிருந்தது அவளுக்கு.

"அசடே! நீ பண்ணினது ஒண்ணும் தப்பில்லே. உன்னை மாதிரி நெலைமையிலே நான் இருந்தாக்கூட இப்படி இதைத் தான் செய்திருப்பேன். அவன் தான் பெரிய ரோக். அவனை மாதிரிப் புல்லுருவிகள் தான் சமுதாயத்திலிருந்தே களையப்பட வேண்டும். என்னுடைய காலேஜ் டேஸ்லகூட என்னோடு படித்த ஒரு பெண் எனக்கு அசட்டுப் பிசட்டென்று லெட்டர் போட்டிருக்கா. இன்னிக்கு அவ ஒரு மினிஸ்டரோட மனைவி. நான் அவளைப் போயி மிரட்டலாமா? கூடாது. உறவுகள் புனிதமானவை என்றால் அவற்றை விலை பேசக் கூடாது. சர்வ சாதாரணமானவை என்றால் அவற்றை மறந்துவிட வேண்டும். இரண்டையும் செய்யாமல் இந்தப் பயல் 'பிளாக் மெயிலில்' இறங்கியதுதான் சமூகக் கொடுமை. இவனைப் போன்றவர்களே இதில் குற்றவாளிகள்."

"என்னிடம் உங்களுக்குத் தெரியக் கூடாதது எதுவுமில்லை. இந்தாருங்கள்! நீங்களே இதெல்லாம் படிச்சுடறது நல்லது" என்று அந்த உறையைக் குமாரிடம் நீட்டினாள் கௌரி.

குமார் புன்முறுவல் பூத்தபடி அவளைப் பார்த்தான். தயங்கியபடி அதை வாங்கினான். பிரித்தான்.

அங்கே பக்கத்தில் கப்பன் பூங்காவின் இலையுதிர் காலத்துச் சருகுகளைக் குவித்து எரித்துக் கொண்டிருந்த தோட்டக்காரனின் தீ மூட்டத்தருகே சென்று

உறையிலிருந்தவற்றைத் தனித் தனியே பிரித்து அதில் ஒவ்வொன்றாகப் போட்டான். கடைசியாக உறையையும் போட்டான்.

"திருப்திதானே கௌரி?"

"இல்லை! நீங்கள் அவற்றைப் படித்திருக்க வேண்டும். அப்போதுதான் வீண் சந்தேகங்கள் தவிர்க்கப்படும். இந்தக் கடிதங்கள் என் கையெழுத்துத் திருந்துவதற்காக என்று அவனாலேயே எனக்கு டிக்டேட் செய்யப்பட்டவை."

"குப்பைகளை நான் படிப்பதில்லை."

"என் மேல் உங்களுக்குக் கோபமா?"

"கோபமில்லை! ஆனால் வருத்தம் உண்டு!"

"என்ன வருத்தம், குமார்?"

"அல்ப காரணங்களுக்காக எல்லாம் நான் வீணாகச் சந்தேகப்படுவேன் என்று நீ என்னைப் பற்றித் தவறாக அனுமானம் செய்திருந்தாயே, அதற்காகத்தான் வருத்தம்." -

"மன்னித்து விடுங்கள் குமார்!"

"தவறு உன்னுடையதில்லை. சராசரி மனிதர்கள் பெரும்பாலும் சந்தேகங்களால் உருவாக்கப்பட்டிருக்கிறார்கள். தெய்வமாகிய ஸ்ரீராமனே மனிதர்களுக்கே உரிய கொச்சையான சந்தேகத்துடன் சீதா தேவியைத் தீக்குளிக்கச் சொல்லி இருக்கிறான்! இராமாயணம் சொல்லுகிறது. அரசரான ஸ்ரீராமன் அவதூறுகளுக்காகச் சீதையைத் தீக்குளிக்க வைத்துச் சிரமப் படுத்தியிருக்கிறான். நான் அந்த அவதூறுகளையே தீக்குளிக்க வைத்து விட்டேன் கௌரி!"

"நீங்கள் அந்தக் கடிதங்களைப் படிக்காமல் நெருப்பில் போட்டிருக்கக் கூடாது குமார்!"

"வீண் சந்தேகங்களால் என் மனத்தினாலேயே என்னைச் சுற்றி ஒரு நரகம் படைக்கப்படுவதை நான் வெறுக்கிறேன் கௌரி."

அப்போது எதிரே இருந்த தீ மூட்டத்தில் மேலும் ஒரு கூடை சருகுகளைத் தோட்டக்காரன் கொண்டுவந்து கொட்டினான்.

"கௌரி! இதை நன்றாகப் பார்த்துக் கொள்! குப்பைகளை அவை எங்கிருந்தாலும் எரித்து விட வேண்டும். உடனே எரித்து விடவேண்டும்" - என்று அவளருகே வந்து கைகோத்துக் கொண்டு உற்சாகமாக நடந்தான் குமார்.

"நீங்கள் ஸ்ரீராமனைக் காட்டிலும் சிரேஷ்டமானவர்!" - கௌரி அவன் காதருகே கிளுகிளுத்தாள்.

"அபசாரம்! நாம் மனிதர்கள்!" - என்றான் குமார். பக்கத்தில் வந்த பூக்காரி ஒருத்தியிடம் அப்போது கௌரிக்காகச் சண்பகப்பூ வாங்கினான் குமார்.

**(கலைமகள், தீபாவளி மலர், 1987)**

காலவரிசைப்படுத்தப்பட்ட
நா.பாவின் முழுமையான
சிறுகதைத் தொகுப்பு




தமிழ்ப்புத்தகாலயம்
34.சாரங்கபாணி தெரு
தி.நகர்.சென்னை...17
Ph-044-28340495